சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

ஸ்ரீ திருஞானசம்பந்த சுவாமிகள் அருளிச் செய்த

# தேவாரத் திருப்பதிகங்கள்

முதல் திருமுறை (தொகுதி - 2)

(தமிழிலும் ஆங்கிலத்திலும் உரைநடையில் விரிவான விளக்கங்களுடன்)

வெளியீடு


**சமூக சமயச் சங்கம்**

"அப்பர் இல்லம்", 21-ஐந்தாம் குறுக்குத் தெரு,
மகாராஜ நகர், திருநெல்வேலி - 627 011
தமிழ் நாடு, இந்தியா.
தொலைபேசி : 0462-2574468


# THĒVAARAM

Divine outpourings of Saint Thiru-Gnaana-Sambandar

First Thirumurai (Volume - 2)

(With Elaborate Commentary both in Tamil and English)

PUBLISHERS


**SOCIO RELIGIOUS GUILD**

"APPAR ILLAM", 21, FIFTH CROSS STREET,
MAHAARAAJA NAGAR, TIRUNELVELI - 627 011
TAMIL NADU, INDIA.
Phone: 0462-2574468
E-Mail: apparva@yahoo.com

2008


சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ

சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

ஸ்ரீ திருஞானசம்பந்த சுவாமிகள் அருளிச் செய்த

# தேவாரத் திருப்பதிகங்கள்

முதல் திருமுறை (தொகுதி - 2)

(தமிழிலும் ஆங்கிலத்திலும் உரைநடையில் விரிவான விளக்கங்களுடன்)

வெளியீடு

**சமூக சமயச் சங்கம்**

"அப்பர் இல்லம்", 21-ஐந்தாம் குறுக்குத் தெரு,
மகாராஜ நகர், திருநெல்வேலி - 627 011
தமிழ் நாடு, இந்தியா.
தொலைபேசி : 0462-2574468

# THĒVAARAM

## Divine outpourings of Saint Thiru-Gnaana-Sambandar
## First Thirumurai (Volume - 2)

(With Elaborate Commentary both in Tamil and English)

PUBLISHERS

**SOCIO RELIGIOUS GUILD**

"APPAR ILLAM", 21, FIFTH CROSS STREET,
MAHAARAAJA NAGAR, TIRUNELVELI - 627 011
TAMIL NADU, INDIA.
Phone: 0462-2574468
E-Mail: apparva@yahoo.com

2008

சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ

சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

ஸ்ரீ திருஞானசம்பந்த சுவாமிகள் அருளிச் செய்த

# தேவாரத் திருப்பதிகங்கள்

## முதல் திருமுறை (தொகுதி - 2)

(தமிழிலும் ஆங்கிலத்திலும் உரைநடையில் விரிவான விளக்கங்களுடன்)


வெளியீடு

**சமூக சமயச் சங்கம்**

"அப்பர் இல்லம்", 21-ஐந்தாம் குறுக்குத் தெரு,
மகாராஜ நகர், திருநெல்வேலி - 627 011
தமிழ் நாடு, இந்தியா.
தொலைபேசி : 0462-2574468


# THĒVAARAM

## Divine outpourings of Saint Thiru-Gnaana-Sambandar
## First Thirumurai (Volume - 2)

(With Elaborate Commentary both in Tamil and English)


PUBLISHERS

**SOCIO RELIGIOUS GUILD**

"APPAR ILLAM", 21, FIFTH CROSS STREET,
MAHAARAAJA NAGAR, TIRUNELVELI - 627 011
TAMIL NADU, INDIA.
Phone: 0462-2574468
E-Mail: apparva@yahoo.com

2008


சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ

# BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title | : | **Thēvaaram – First Thirumurai Volume I and II** |
| General Editor | : | Senthamil Sivaneri Chelvar<br>**V. Arumugam** |
| Content | : | Hymns in praise of Lord Civan |
| Language | : | Tamil and English |
| Edition | : | First |
| Year of Edition | : | July 2008 |
| Size of the Book | : | 11" X 8.5" |
| Paper | : | 80 GSM MAP LITHO |
| Binding | : | Hard Binding |
| Type | : | 12 Point |
| Total Pages | : | 1804 |
| Copies | : | 1500 |
| Typesetting | : | Siva Computers,<br>12, Paranjudar Street,<br>Palayamkottai, Tirunelveli - 627 002<br>Tamil Nadu, India.<br>✆ 91 - 462 - 2579673 |
| Printed by | : | The Sudarsan Offset Printers,<br>Old No. 153-A, New No. 358, Mundaga Nadar Street,<br>Sivakasi - 626 123.<br>Tamil Nadu, India.<br>✆ 91 - 4562 - 220780 |
| Publishers | : | SOCIO RELIGIOUS GUILD,<br>'APPAR ILLAM'.<br>21- Fifth Cross Street,<br>Maharajanagar, Tirunelveli - 627 011.<br>Tamil Nadu, India.<br>✆ 91 - 462 - 2574468 |

உ
சிவமயம்

# 65. காவிரிப்பூம்பட்டினத்துத் திருப்பல்லவனீச்சரம்

## திருத்தலவரலாறு:

காவிரிப்பூம்பட்டினத்துத் திருப்பல்லவனீச்சரம் என்ற திருத்தலமானது சோழ நாட்டுக் காவிரி வடகரைத் தலம் ஆகும். பூம்புகாரில் உள்ளது. மயிலாடுதுறை, சீகாழி நகர்களில் இருந்து பேருந்து வசதி உள்ளது. இத்தலம் காவிரிபூம்பட்டினத்துப் பல்லவனீச்சரம் எனப் பெயர் பெறும். பல்லவ ராசன் பூசித்துப் பேறு பெற்ற தலம். இயற்பகை நாயனாரும், பட்டினத்துப் பிள்ளையும் அவதாரம் செய்தருளிய தலம். இறைவன் பல்லவனேசுவரர். இறைவி சௌந்தர நாயகி. தீர்த்தம் காவிரி சங்கம தீர்த்தம்.

## பதிக வரலாறு:

திருவலம்புரத்தை வணங்கித் திருச்சாய்க்காடு செல்லத் திருவுளம் பற்றிய பிள்ளையார், வழியில் பல்லவனீச்சரத்தை அடைந்தார். அங்கு எழுந்தருளியுள்ள பன்கைப் பூணினாரைப் பணிந்து போற்றி 'அடையார்தம் புரங்கள் மூன்றும்' என்னும் இப்பதிகத்தை அருளிச் செய்தார்.

# 65. KAAVIRI-P-POOM-PATTINATH-THUTH THIRU-P-PALLAVA-NEECH-CHARAM

## THE HISTORY OF THE PLACE

This sacred place is to the north of river Cauvery in Chola Naadu at Poompukaar. Buses ply from Mayilaaduthurai and Seekaazhi to this place. It is also known as Pallavaneechcharam of Kaaverippoompattinam.

Pallavanesuvarar is the name of the God and Soundharanaayaki is that of the Goddess. The sacred ford is the Kaaveri Sangama Theerththam.

A Pallava king worshipped Lord Civan here, to attain salvation. It is the birthplace of the saints Iyarpakai Naayanar and Pattinaththup Pillai.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 65. காவிரிப்பூம்பட்டினத்துத் திருப்பல்லவனீச்சரம்

## 65. KAAVIRI-P-POOM-PATTINATH-THUTH THIRU-P-PALLAVA-NEECH-CHARAM

பண் : தக்கேசி
ராகம் : காம்போதி

*Pann: Thakkēsi*
*Raagam: Kaambothi*

அடையார் தம்புரங்கள் மூன்று மாரழலிலழுந்த
விடையார் மேனியராய்ச் சீறும் வித்தகர் மேயவிடங்
கடையார் மாடநீடி யெங்குங்கங்குல் புறந்தடவப்
படையார் புரிசைப் பட்டினஞ்சேர் பல்லவனீச்சரமே. 1

அடை ஆர் தம் புரங்கள் மூன்றும் ஆர் அழலில் அழுந்த,
விடை ஆர் மேனியராய்ச் சீறும் வித்தகர் மேய இடம் -
கடை ஆர் மாடம் நீடி எங்கும் கங்குல் புறம் தடவப்,
படை ஆர் புரிசைப் பட்டினம் சேர் பல்லவனீச்சுரமே.

aTaiyAr tam puragkaL mUn2Rum Ar azalil azunta,
viTai Ar mEn2iyarAyc cIRum vittakar mEya iTam--
kaTai Ar mATam nITi egkum kagkul puRam taTava,
paTai Ar puricaip paTTin2am cEr pallavan2IccuramE.

**பொருள்:** காவிரிப் பூம்பட்டினத்தைச் சேர்ந்த திருப்பல்லவனீச்சரம் என்னும் தலம், வானவெளியைத் தொடும் மதில்களால் சூழப்பட்டுள்ளது. இங்கு, வாயில்களோடு கூடிய உயர்ந்த மாடவீடுகள் எங்கும் உள்ளன. இத்தலத்தில் சிவபெருமான் எழுந்தருளியுள்ளார். இப்பெருமான், பகைவர்களாகிய அசுரர்களின் மூன்று நகரங்களையும் பெருந்தீயில் அழுந்தி அழிக்க இடப வாகனத்தில் ஏறிவரும் திருமேனியராய்ச் சென்று சினந்த வித்தகர் ஆவார்.

**குறிப்புரை:** திரிபுரங்கள் தீயில் அழுந்தச் சீறும் வித்தகர் இடம் பல்லவனீச்சரம் என்கின்றது. அடையார் – பகைவர். விடையார் மேனியர் – இடபத்தில் ஆரோகணித்த திருமேனியார். கங்குல் – ஆகாயம். படை – ஆயுதம் பல அடுக்கு.

Lord Civan, the knower of every thing (*வித்தகர்*) got wild with the Asura foes. He came riding on HIS bull, majestically and destroyed the three citadels in an uncontrollable fire. HE abides in Thiru-p-pallava-neech-charam which has tall

thresholded mansions surrounded by strong fort walls which brush through the skies above.

**Note:** Pukaar was a commercial mart for many nations. It was the summer capital of the Cholas. In the shrine Civa is entempled majestically.

எண்ணா ரெயில்கள் மூன்றுஞ்சீறு மெந்தை பிரானிமையோர்
கண்ணா யுலகங்காக்க நின்றகண் ணுதனண்ணுமிடம்
மண்ணார் சோலைக்கோல வண்டு வைகலுந் தேனருந்திப்
பண்ணார் செய்யும் பட்டினத்துப் பல்லவனீச்சரமே. 2

எண்ணார் எயில்கள்மூன்றும் சீறும் எந்தைபிரான், இமையோர்
கண் ஆய உலகம் காக்க நின்ற கண்ணுதல், நண்ணும் இடம்-
மண் ஆர் சோலைக் கோல வண்டு வைகலும் தேன் அருந்தி,
பண் ஆர் செய்யும் பட்டினத்துப் பல்லவனீச்சுரமே.

eNNAr eyilkaL mUn2Rum cIRum entaipirAn2, imaiyOr
kaN Ay ulakam kAkka nin2Ra kaNNutal, naNNum iTam--
maN Ar cOlaik kOla vaNTu vaikalum tEn2 arunti,
paN Ar ceyyum paTTin2attup pallavan2IccuramE.

**பொருள்:** எம் தந்தையாகிய சிவபெருமான், பகைவர்களாகிய அசுரர்களின் திரிபுரங்களையும் சினந்து அழித்தவர் ஆவார். இவர் தேவர்களுக்குக் கண்களாக விளங்குபவர். இவ்வுலகைக் காக்கின்ற சிவபெருமான், விரும்பி அமர்ந்திருக்கின்ற தலம் காவிரிப் பூம்பட்டினத்துப் பல்லவனீச்சரம் ஆகும். இத்தலத்தில் நன்கு அமைக்கப்பட்ட சோலைகள் உண்டு. இந்தச் சோலைகளில் நாள்தோறும் அழகிய வண்டுகள் தேனை உண்டு இசைபாடுகின்றன.

**குறிப்புரை:** முப்புரஞ்சீறிய முதல்வன் தேவர்கட்குக் கண்ணாய் உலகம் காக்கும் கண்ணுதலும் ஆவான்; அவனது இடம் இது என்கின்றது. எண்ணார் – பகைவர். கண்ணுதல் – சிவன். மண் – பூமி. மண்ணுதல் – உண்டாக்குதல். பண்ஆர் செய்யும் – பாடும்.

Lord Civan, our Father, got wild with the hostile Asuraas and destroyed their three fortresses. HE protects and bestows HIS grace on Devaas and therefore is known as Eye of Devaas. Also HE sustains this earth through HIS third eye in HIS forehead. This Lord Civan abides in Thiru-p-pallava-neech-charam, wherein well-formed gardens

flourish. Here the bees daily suck honey from the flowers and create music by their humming noise.

**Note:** Verse one speaks of Civa as Vittakan - the One altogether different from any other. HIS third eye in the forehead is symbolic of HIS peculiar uniqueness.

மங்கையங் கோர்பாகமாக வாணிலவார் சடைமேற்
கங்கையங் கேவாழவைத்த கள்வனிருந்தவிடம்
பொங்கயஞ் சேர்புணரியோத மீதுயர்பொய் கையின்மேற்
பங்கயஞ்சேர் பட்டினத்துப் பல்லவனீச்சரமே. 3

மங்கை அங்கு ஓர்பாகம் ஆக, வாள்நிலவு ஆர் சடை மேல்
கங்கை அங்கே வாழ வைத்த கள்வன் இருந்த இடம் -
பொங்கு அயம் சேர் புணரி ஓதம் மீது உயர் பொய்கையின்மேல்
பங்கயம் சேர் பட்டினத்துப் பல்லவனீச்சுரமே.

magkai agku Or pAkam Aka, vAL nilavu Ar caTaimEl
kagkai agkE vAzavaitta kaLvan2 irunta iTam--
pogku ayam cEr puNari Otam mltu uyar poykaiyin2 mEl
pagkayam cEr paTTin2attup pallavan2IccuramE.

**பொருள்:** பள்ளங்கள் நிறைந்த ஆழமான கடலின் வெள்ள நீரால், அண்மையில் உள்ள நீர்நிலைகளில் உள்ள தண்ணீர் மட்டம் உயர்ந்துள்ளன. அந்த நீர் நிலைகளில் தாமரை மலர்கள் பூத்துக் குலுங்குகின்றன. இத்தகைய செழிப்பான தலம் காவிரிப் பூம்பட்டினத்துப் பல்லவனீச்சரம் ஆகும். இந்தத் தலத்தில் எழுந்தருளியுள்ள சிவபெருமான் உமையம்மையை ஒருபாகமாகக் கொண்டுள்ளார். ஒளிபொருந்திய பிறையைத் தன் சடையில் சூடியிருக்கின்றார். கங்கை நதி என்ற நங்கையையும் தன் சடையின்மேல் வாழ வைத்துள்ள கள்வர் இவர்.

**குறிப்புரை:** மங்கை ஓர் பாகத்து இருக்கவும் சடைமேற் கங்கையையும் வைத்த கள்வனிடம் இது என்கின்றது. வாள் நிலவு – ஒளி பொருந்திய நிலவு. பொங்கு அயஞ்சேர் புணரி – மிகுந்த பள்ளம் பொருந்திய கடல். அயம் – பள்ளம். 'அயமிழியருவி' என்னும் கலியிலும் இப்பொருட்டாதல் தெளிக. பங்கயம் – தாமரை.

Lord Civa allows lady Ganga also to thrive in HIS bright matted hair along with the crescent moon, despite the fact that HIS consort Umaa Devi also forms part of HIS body. This Lord Civan abides in Thiru-p-pallava-neech-charam where natural pool

waters rise with the level of the sea due to the floodwaters of the sea. In these pools lotus flowers are in full bloom.

தாரார் கொன்றை பொன்றயங் கச்சாத்திய மார்பகலம்
நீரார் நீறுசாந்தம் வைத்த நின்மலன் மன்னுமிடம்
போரார் வேற்கண் மாதர் மைந்தர் புக்கிசை பாடலினாற்
பாரார்கின்ற பட்டினத்துப் பல்லவனீச்சரமே. 4

தார் ஆர் கொன்றை பொன்தயங்கச் சாத்திய மார்பு-அகலம்
நீர் ஆர் நீறு சாந்தம் வைத்த நின்மலன் மன்னும் இடம் -
போர் ஆர் வேல்கண் மாதர் மைந்தர் புக்கு இசை பாடலினால்
பார் ஆர்கின்ற பட்டினத்துப் பல்லவனீச்சுரமே.

tAr Ar kon2Rai pon2 tayagkac cAttiya mArpu-akalam
nIr Ar nIRu cAntam vaitta nin2malan2 man2n2um iTam--
pOr Ar vElkaN mAtar maintar pukku icaipATalin2Al,
pAr Arkin2Ra paTTin2attup pallavan2IccuramE.

**பொருள்:** மாலையாகவே பூக்கும் கொன்றை மலர்கள் பொன் போல் விளங்குமாறு சிவபெருமான் தன் திருமார்பில் சூடியுள்ளார். திருமார்பின் பரப்பில் நீரில் குழைத்த சாம்பலை சந்தனத்தைப் போல பூசியுள்ளார். இந்தக் குற்றமற்ற சிவபெருமான் எழுந்தருளிய இடம் காவிரிப் பூம்பட்டினத்துப் பல்லவனீச்சரம். இங்கு போரில் பொருந்திய கூரிய வேல் போன்ற கண்களை உடைய மாதர்களும் இளைஞர்களும் சேர்ந்து இசை பாடுகின்றனர். அதனைக் கேட்க மக்கள் வெள்ளம் போல் திரண்டுள்ள தலமாகும்.

**குறிப்புரை:** கொன்றை சாத்திய மார்பில் நீறும் சாந்தும் சாத்திய நிமலனிடம், மாதரும் மைந்தரும் பாடலினால் பூமிக்கண் இன்பம் நுகரும் தலமாகியது இது என்கின்றது. தாரார் கொன்றை – மாலையாகவே பூக்கும் கொன்றை. போரார் வேற்கண் – போரில் பொருந்திய வேல் போலும் கண்.

Lord Civan, the flawless Supreme Being wears in HIS chest garlands made of cassia flowers that glitter like gold. HE smears HIS chest with holy ashes mixed with water forming sandalwood like paste. HE abides in Thiru-p-pallava-neech-charam where young girls whose eyes are sharp like martial spears, and valiant lads assemble and sing the divine songs tunefully. People gather in strength to hear the concert.

**Note:** Pukaar is a place of festivity. Singing and dancing characterise the material and spiritual prosperity of this divine places.

மைசேர் கண்ட-ரண்ட வாணர்வான வருந்துதிப்ப
மெய்சேர் பொடியரடி யாரேத்த மேவியிருந்தவிடங்
கைசேர் வளையார் விழைவினோடு காதன்மை யாற்கழலே
பைசேரர வாரல்குலார் சேர்பல்லவ னீச்சரமே. 5

*மை சேர் கண்டர், அண்டவாணர், வானவரும் துதிப்ப,*
*மெய் சேர் பொடியர், அடியார் ஏத்த மேவி இருந்த இடம் -*
*கை சேர் வளையார், விழைவினோடு காதன்மையால், கழலே,*
*பை சேர் அரவு ஆர் அல்குலார், சேர் பல்லவனீச்சுரமே.*

mai cEr kaNTar, aNTavANar, vAn2avarum tutippa,
mey cEr poTiyar, aTiyAr Etta mEvi irunta iTam--
kai cEr vaLaiyAr, vizaivin2OTu kAtan2maiyAl, kazalE,
pai cEr aravu Ar alkulAr, cEr pallavan2IccuramE.

***பொருள்:*** கருமை நிறம் பொருந்திய கண்டத்தை உடையவர். மண்ணின் மக்களும் விண்ணின் தேவர்களும் துதிக்கத் தக்கவர். மேனிமிசைத் திருநீறு பூசிய நிமலன். அடியார்கள் புகழ விரும்பி எழுந்தருளிய இடம் காவிரிப் பூம்பட்டினத்துப் பல்லவனீச்சரம் ஆகும். பாம்பின் படம்போன்ற அல்குலை உடைய இளமகளிர் கைகளில் நிறைய வளையல்களை அணிந்து ஆசையோடும் காதலோடும் சிவபெருமானின் திருவடிகளைச் சேர இங்கு வந்து கூடுகிறார்கள்.

***குறிப்புரை:*** நீலகண்டரும், நீறு பூசியவருமாகிய சிவபெருமான் அடியார்கள் ஏத்த அமர்ந்திருந்த இடம் இத்தலம் என்கின்றது. மை – விடம். மேவி – விரும்பி. கைசேர் வளையாராகிய அல்குலார், ஆசையோடும் காதலோடும் கழலைச்சேரும் பல்லவனீச்சரம் எனக்கூட்டிப் பொருள் காண்க. விழைவு – பற்று. காதல் – பற்றுமுற்றி இன்றியமையாத தன்மையால் எழுந்த விருப்புள்ளம். பை – படம்.

The neck of Lord Civa, the pure Supreme Being, is dark blue in colour. To enable the devotees on earth as well the heavenly Devaas to offer worship and to adore Him, HE has smeared HIS body with holy ashes, and is enshrined in Thiru-p-pallava-neech-charam. Here in this city, young girls whose fore lap is like that of the hood of cobra and who have worn a good number of bangles in their hands, gather to offer worship to Lord Civan's Holy Feet with warm attachment and intense desire.

Note: This verse gives an inkling of the Kundalini yoga rife in Pukaar.

குழலினோ சைவீணை மொந்தை கொட்ட முழவதிரக்
கழலினோ சையார்க்க ஆடுங்கட வுளிருந்தவிடஞ்
சுழியிலாருங் கடலிலோ தந்தெண்டி ரைமொண்டெறியப்
பழியிலார்கள் பயில்புகாரிற் பல்லவனீச்சரமே. 6

குழலின் ஓசை, வீணை, மொந்தை கொட்ட, முழவு அதிர,
கழலின் ஓசை ஆர்க்க, ஆடும் கடவுள் இருந்த இடம் -
சுழியில் ஆரும் கடலில் ஓதம் தெண்திரை மொண்டு எறிய,
பழிஇலார்கள் பயில் புகாரில் பல்லவனீச்சுரமே.

kuzalin2 Ocai, vINai, montai koTTa, muzavu atira,
kazalin2 Ocai Arkka, ATum kaTavuL irunta iTam--
cuziyil Arum kaTalil Otam teNtirai moNTu eRiya,
pazi ilArkaL payil pukAril pallavan2IccuramE.

**பொருள்:** குழலோசைக்கு ஏற்ப வீணை ஒலிக்கின்றது. மொந்தை கொட்டுகிறது. முழவு ஒலிக்கிறது. காலில் அணிந்துள்ள வீரக்கழல், நடனத்துக்கு ஏற்பச் சதங்கை போல் இசைக்கிறது. இத்தகைய இசை ஒலிகளோடு ஆடும் கடவுளாகிய சிவபெருமான் எழுந்தருளிய இடம் புகார் நகரில் உள்ள பல்லவனீச்சரம் ஆகும். இங்கு சுழிகள் நிறைந்த கடலில், காவிரி ஆற்றின் வெள்ள நீர் தெளிந்த நீரை முகர்ந்து எறிகின்றது. இந்நகரில் பழியற்ற நன்மக்கள் வாழ்கின்றனர்.

**குறிப்புரை:** குழல் முதலிய வாத்தியங்கள் ஒலிக்க ஆடும் கடவுள் அமர்ந்த இடம் இத்தலம் என்கின்றது. மொந்தை என்பது ஒருவகைப் பறையாதலின் கொட்ட என்றார். பயில்புகார் – பழகுகின்ற காவிரிப்பூம்பட்டினம்.

In tune with the music of the flute, the Veena, the one sided drum (open at one end - மொந்தை) and similar instruments resound. Also the general drum roars; the warrior's anklets (*வீரக்கழல்*) on the legs with small bells, resound in tune with the dance. With all these different musical notes Lord Civa enshrined in Thiru-p-pallava-neech-charam dances merrily. In this town, efficient well-versed people, all of them above board, live. The crystal clear waters of the river Cauvery out of the floodwater, gush into the whirling sea of this town.

**Note:** Veena is a stringed instrument dear to Lord Civa. Monthai and drum are percussion instruments.

வெந்தலாய வேந்தன் வேள்வி வேரறச்சாடி விண்ணோர்
வந்தெலா முன்பேண நின்றமைந்தன் மகிழ்ந்த இடம்
மந்தலாய மல்லிகையும் புன்னைவளர் குரவின்
பந்தலாரும் பட்டினத்துப் பல்லவனீச்சரமே. 7

*வெந்தல்ஆய வேந்தன் வேள்வி வேர்அறச் சாடி, விண்ணோர்*
*வந்து எலாம் முன் பேண நின்ற மைந்தன் மகிழ்ந்த இடம் -*
*மந்தல் ஆய மல்லிகையும், புன்னை, வளர் குரவின்*
*பந்தல் ஆரும் பட்டினத்துப் பல்லவனீச்சுரமே.*

ventaI Aya vEntan2 vELvi vEr aRac cATi, viNNOr
vantu elAm mun2 pENa nin2Ra maintan2 makiznta iTam--
mantal Aya mallikaiyum, pun2n2ai, vaLar kuravin2
pantal Arum paTTin2attup pallavan2IccuramE.

***பொருள்:*** தகுதியில்லாத கூட்டத்தை உடைய தக்கன் என்னும் வேந்தன் செய்த வேள்வியை அழித்தவர். அதன்பின் தேவர்கள் எல்லோரும் தன்னை விரும்பி வழிபட நின்ற பெருவீரனாகிய சிவபெருமானது இடம் காவிரிப் பூம்பட்டினத்துப் பல்லவனீச்சரம் ஆகும். இங்கு மென்மையான மல்லிகைக் கொடி, வளர்ந்து பரவியுள்ள புன்னை, குராமரம் ஆகியவற்றின்மீது படர்ந்துள்ளது.

***குறிப்புரை:*** தக்கன் யாகத்தை அழித்துத் தேவரெல்லாரும் வழிபட நின்ற இறைவனது இடம் இத்தலம் என்கின்றது. மந்தல் – மென்மை.

King Dhakkan (*தக்கன்*) once arranged for a big oblation and invited a large number of undesirable celestial folks to partake in it (As Civa's consort Daakshaayani was dishonoured in this sacrifice). Civa commandeered HIS aide Veerabadrar to destroy the sacrifice. Arising out of this calamity, all the Devaas came very eagerly to Lord Civa and offered worship in Thiru-p-pallava-neech-charam where HE is entempled. In this town the tender jasmine vine spreads all over the Punnai tree (*புன்னை மரம்*) as well in the shrubs that are found in barren lands (*குராமரம்*).

Note: The devastation of Daksha's sacrifice affirms the supremacy of Civa. Saivism frowns at pride and haughtiness. Devastation was actually carried out by Veerabadra as per orders of Civa.

தேரரக்கன் மால்வரையைத் தெற்றியெடுக் கவவன்
தாரரக்குந் திண்முடிகளூன் றியசங்கரனூர்
காரரக்குங் கடல்கிளர்ந்த காலமெலாமுணரப்
பாரரக்கம் பயில்புகாரிற் பல்லவனீச்சரமே. 8

*தேர் அரக்கன் மால்வரையைத் தெற்றி எடுக்க, அவன்*
*தார் அரக்கும் திண் முடிகள் ஊன்றிய சங்கரன் ஊர் -*
*கார் அரக்கும் கடல் கிளர்ந்த காலம் எலாம் உணர,*
*பார் அரக்கம் பயில் புகாரில் பல்லவனீச்சுரமே.*

tEr arakkan2 mAlvaraiyait teRRi eTukka, avan2
tAr arakkum tiN muTikaL Un2Riya cagkaran2 Ur--
kAr arakkum kaTal kiLarnta kAlam elAm uNara,
pAr arakkam payil pukAril pallavan2IccuramE.

***பொருள்:*** சிறந்த தேரை உடைய இராவணன் பெருமை மிக்க கயிலை மலையைக் கைகளைப் பின்னி அகழ்ந்து எடுக்க முயன்றான். அவனது மாலைகள் அழுத்தும் வலிமையான பத்துத் தலைகளையும் தனது கால் விரலால் ஊன்றி நெரித்தவர் சங்கரன் என்று சொல்லப்படும் சிவபெருமான். இவரது ஊர் புகார் நகரைச் சேர்ந்த பல்லவனீச்சரம் ஆகும். இங்கு மேகங்கள் வந்து அழுந்துவதால், மேலெழுந்து வரும் கடல்நீரால் எக்காலத்திலும் அழியாது உணரப்படும் சிறப்புடையது இத்தலம். மக்கள் அக்கு மணி மாலை பூண்டு போற்றி வாழும் பெருமையை உடையது இத்தலம்.

***குறிப்புரை:*** இராவணன் முடிகள் நெரியத் தாளூன்றிய சங்கரன் ஊர் இத்தலம் என்கின்றது. தெற்றி எடுக்க – கைகளைப் பின்னி எடுக்க. தார் அரக்கும் – மாலைகள் அழுத்துகின்ற. அரக்குதல் – பதித்தல். கார் அரக்கும் – மேகங்கள் முகக்கும். பாரர் அக்கம் பயில் புகார் – மக்கள் உருத்திராக்கங்களைப் பயில்கின்ற காவிரிப்பூம்பட்டினம்.

Raavanan who was riding on his elegant chariot once tried to lift by his hands, the highly famed mount Kailas. Lord Sankaran (Civan) pressed HIS toe and crushed his ten mighty heads, adorned with weighty wreaths. This Lord Sankaran (Civan) abides in Thiru-p-pallava-neech-charam. This city thrives without any destruction even when the sea from which clouds suck water, rising up and raging fiercely. Devotees in this town wear the necklace of sacred beads (*அக்குமணிமாலை* or *உருத்திராக்க மாலை* – Eloeocarpus ganitrus tree), dwell here and hail Lord Civan therein.

**Note:** Civa metes out punishment when necessary and it is but an act of HIS grace (*மறக்கருணை*).

அங்கமாறும் வேதநான்குமோ துமயன்நெடுமால்
தங்கணாலும் நேடநின்ற சங்கரன்றங்குமிடம்
வங்கமாரு முத்தமிப்பிவார் கடலூடலைப்பப்
பங்கமில்லார் பயில்புகாரிற் பல்லவனீச்சரமே. 9

*அங்கம் ஆறும் வேதம் நான்கும் ஓதும் அயன், நெடுமால், -*
*தம் கணாலும் நேட நின்ற சங்கரன் தங்கும் இடம் -*
*வங்கம் ஆரும் முத்தம் இப்பி வார்கடல்ஊடு அலைப்ப,*
*பங்கம் இல்லார் பயில் புகாரில் பல்லவனீச்சுரமே.*

agkam ARum vEtam nAn2kum Otum ayan2, neTumAl,
tam kaNAlum nETa nin2Ra cagkaran2 tagkum iTam--
vagkam Arum muttam ippi vAr kaTal UTu alaippa,
pagkam illAr payil pukAril pallavan2IccuramE.

***பொருள்:*** ஆறு அங்கங்களையும், நான்கு வேதங்களையும் முறையே ஓதும் பிரமனும் திருமாலும் தம் கண்களால் தேடுமாறு உயர்ந்து நின்றவர் சங்கரன் என்று சொல்லப்படும் சிவபெருமான். இவர் தங்கும் இடம் புகாரில் அமைந்துள்ள பல்லவனீச்சரம் ஆகும். இங்கு மரக்கலங்கள் வந்து போய்க் கொண்டிருக்கும் கடலானது முத்துக்களையும் சங்குகளையும் அலைகளால் அலைத்துத் தருகின்றது. இங்கு குற்றமற்ற சான்றோர்கள் வாழ்கின்றனர்.

***குறிப்புரை:*** வேதனும் நெடுமாலும் கண்ணால் தேட நின்ற பெருமான் உறையுமிடம் இது என்கின்றது. கண்ணாலும் என்ற உம்மை கருத்தால் தேட வேண்டியதை அவர்கள் அறியாமையால் கண்ணால் தேட அதற்கும் வெளிப்பட்டு நின்ற இறைவன் என உயர்வைச் சிறப்பித்து நின்றது. வங்கம் – கப்பல்.

Lord Sankaran (Civan) is enshrined in Kaaviri-p-poom-pattinaththu Thiru-p-pallava-neech-charam whose inhabitants are blameless people. Brahma and Thirumaal recite regularly the four Vedas and the six auxiliaries of Vedas. Even this Brahma and Thirumaal could not find out and see Lord Civan, in spite of search with their own eyes, though Civa was standing near to them as a tall and big flame of fire. Ships are plying now and then in the nearby sea. The sea waves carry pearls and shells and deposit them on the shores.

Note: Pukaar is the habitat of the blemishless. Here flourish devotees flawlessly.

உண்டு டுக்கையின்றியே நின்றூர்நக வேதிரிவார்
கண்டு டுக்கைமெய்யிற் போர்த்தார் கண்டறியாதவிடந்
தண்டு டுக்கைதாளந் தக்கைசார நடம்பயில்வார்
பண்டி டுக்கண் தீரநல்கும் பல்லவனீச்சரமே. 10

*உண்டு உடுக்கை இன்றியே நின்று ஊர் நகவே திரிவார்,*
*கண்டு உடுக்கை மெய்யில் போர்த்தார், கண்டு அறியாத இடம் -*
*தண்டு உடுக்கை, தாளம், தக்கை, சார நடம் பயில்வார்*
*பண்டு இடுக்கண் தீர நல்கும் பல்லவனீச்சுரமே.*

uNTu uTukkai in2RiyE nin2Ru Ur nakavE tirivAr,
kaNTu uTukkai meyyil pOrttAr, kaNTu aRiyAta iTam--
taNTu, uTukkai, tALam, takkai, cAra naTam payilvAr
paNTu iTukkaN tIra nalkum pallavan2IccuramE.

**பொருள்:** சமணர்கள் அளவுக்குமீறி உண்டு ஆடையின்றி ஊரார் சிரிக்கத் திரிகின்றனர். புத்தர்கள் அவர்களைக் கண்டு தாமும் அவ்வாறு திரியாது ஆடையை உடலில் போர்த்துக் கொண்டு உழலுகின்றனர். இவர்கள் கண்டு அறியாத இடம் பல்லவனீச்சரம் ஆகும். இங்கு தண்டு, உடுக்கை, தாளம், தக்கை போன்ற வாத்தியங்கள் முழங்க நடனம் புரிபவர் சிவபெருமான். இவர் அடியவர்களின் துன்பங்களைப் பண்டு முதல் தீர்த்து அருளுபவர்.

**குறிப்புரை:** நிறையத் தின்று ஆடையின்றியே திரியும் சமணரும், ஆடையைப் போர்த்துத் திரியும் புத்தரும் கண்டறியாத இடம் இது என்கின்றது. முன்னிரண்டடியிலுள்ள உடுக்கை என்பது ஆடை என்ற பொருளிலும், மூன்றாமடியில் உள்ள உடுக்கை என்பது வாத்தியம் என்னும் பொருளிலும் வந்துள்ளன. இடுக்கன் – துன்பம்.

The Samanars over eat and roam about nacked, derided by the citizens. Though the Buddhists observe the behaviour of these Samanars, they cover their body with some clothes but wander in the streets aimlessly. Both of them could not observe and realise the greatness of the city Thiru-p-pallava-neech-charam. Here in this town Lord Civan has been wiping out the inconvenience of HIS devotees since long. HE is ever dancing here to the orchestration of four musical instruments viz.,

1. The Indian Lute (Thandu - *தண்டு - வீணை*)
2. A Kind of Tambourine (Udukkai - *உடுக்கை* - இடைசுருங்கு பறை)
3. Cymbal (Thaalam - *தாளம்*) and
4. Tabour (Thakkai - *தக்கை*).

**Note:** Tandu is tambura; udukkai is the little drum (tudi); talam is a pair of cymbals; takkai is a percussion instrument.

பத்தரேத் தும்பட்டினத்துப் பல்லவனீச்சரத்தெம்
அத்தன் றன்னை யணிகொள் காழிஞான சம்பந்தன்சொல்
சித்தஞ் சேரச்செப்பு மாந்தர் தீவினைநோயிலராய்
ஒத்த மைந்தவும் பர்வானிலுயர் வினொடோங்குவரே. 11

*பத்தர் ஏத்தும் பட்டினத்துப் பல்லவனீச்சுரத்து எம்
அத்தன் தன்னை, அணி கொள் காழி ஞானசம்பந்தன் சொல்
சித்தம் சேரச்செப்பும் மாந்தர் தீவினைநோய் இலராய்,
ஒத்து அமைந்த உம்பர்வானில் உயர்வினொடு ஓங்குவரே.*

pattar Ettum paTTin2attup pallavan2Iccurattu em
attan2tan2n2ai, aNi koL kAzi njAn2acampantan2 col
cittam cErac ceppum mAntar tIvin2ai nOy ilarAy,
ottu amainta umparvAn2il uyarvin2oTu OgkuvarE.

***பொருள்:*** பக்தர்கள் போற்றும் காவிரிப் பூம்பட்டினத்துப் பல்லவனீச்சரத்தில் எம் தலைவனாகிய சிவபெருமான் விளங்குகின்றார். இப்பெருமானை, அழகிய சீகாழிப் பதியில் தோன்றிய ஞானசம்பந்தன் போற்றி இப்பதிகத்தைப் பாடினார். இப்பதிகத்தை மனம் ஒன்றிச் சொல்லும் மக்கள், தீவினையும், நோயும் இல்லாதவராய், அமைந்த ஒப்புடையவர்கள் ஆவார்கள். இவர்கள் தேவர் உலகில் உயர்வோடு ஓங்கி வாழ்வர்.

***குறிப்புரை:*** ஒத்தமைந்த – தம் இயல்புகளுக்கு ஏற்ப அமைந்த. சம்பந்தன் பல்லவனீச்சரத்துப் பல்லவன நாதரைத் தோத்திரித்த இப்பாடல் பத்தையும் மனம் ஊன்றிச் சொல்லும் மக்கள் தீவினையும் நோயும் இலராய் வானுலகில் வாழ்வார் என்கின்றது.

Lord Civan, our Chief of Thiru-p-pallava-neech-charam is ever adorned by HIS devotees. Gnaanasambandan hailing from the famed city of Seekaazhi sang this hymn on this Lord in chaste Tamil. Those who can offer worship to this Lord by chanting this hymn with sincere devotion will get rid of their evil karma, will have good health without any ailment and will live with fame and respect in the world of the Devaas.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*65ஆம் பதிகம் முற்றிற்று*
End of 65th Hymn

உ
சிவமயம்

# 66. திருச்சண்பைநகர்

## திருத்தலவரலாறு:

முதலாம் பதிகம் பார்க்க.

## THE HISTORY OF THE PLACE

See First Hymn.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 66. திருச்சண்பைநகர் 66. TIRU-CH-CHANBAI-NAGAR

பண் : தக்கேசி *Pann: Thakkēsi*
ராகம் : காம்போதி *Raagam: Kaabothi*

பங்கமேறு மதிசேர் சடையார் விடையார்பல வேதம்
அங்கமாறு மறைநான் கவையு மானார் மீனாரும்
வங்கமேவு கடல்வாழ் பரதர் மனைக்கே நுனைமூக்கின்
சங்கமேறி முத்தமீனுஞ் சண்பை நகராரே. 1

பங்கம் ஏறு மதி சேர் சடையார், விடையார், பலவேதம்
அங்கம் ஆறும் மறை நான்கு அவையும் ஆனார் - மீன் ஆரும்
வங்கம் மேவு கடல் வாழ் பரதர் மனைக்கே நுனைமூக்கின்
சங்கம் ஏறி முத்தம் ஈனும் சண்பைநகராரே.

pagkam ERu mati cEr caTaiyAr, viTaiyAr, palavEtam
agkam ARum maRai nAn2ku avaiyum An2Ar--mIn2 Arum
vagkam mEvu kaTal vAz paratar man2aikkE nun2ai mUkkin2
cagkam ERi muttam In2um caNpai nakarArE.

**பொருள்:** கடற்கரை ஊராகிய சண்பை நகரில் சிவபெருமான் எழுந்தருளியுள்ளார். இவர் கலைகுறைந்த பிறைமதி சேர்ந்த சடையையும், விடை ஊர்தியை உடையவராகவும் விளங்குகின்றார். அவரே பலவாக விரிந்த நான்கு வேதங்களாகவும் ஆறு அங்கங்களாகவும் விளங்குபவர். இங்கு, மீன்களும் தோணிகளும் நிறைந்த கடலருகே பரதவர்கள் வாழுகின்றனர். அவர்களின் வீட்டு முற்றங்களில் கூரிய மூக்கினை உடைய சங்குகள் முத்துக்களை ஈனும்.

**குறிப்புரை:** கூன்பிறை அணிந்த சடையாரும், விடையாரும், வேதம் அங்கம் ஆனாரும் சண்பை நகரார் என்கின்றது. பங்கம் – கூனல்; குற்றம் என்பாரும் உளர். சிவன் சடை சேரத்தகும் பிறைக்குக் குற்றமின்மை தெளிவு. வங்கம் – தோணி. பரதர் – செம்படவர். நுனை மூக்கின் சங்கம் – கூரிய

மூக்கினை உடைய சங்குகள். கடல் வாழ் சங்கு பரதர் மனையேறி முத்தமீனும் என்றது பிறவிக் கடலில் ஆழ்வாரும் வினை நீங்கும் காலம் வரின் சண்பை நகர் சார்ந்து பேரின்பம் எய்துவர் என்று குறிப்பித்தவாறு.

Lord Civan has the crescent moon in His matted hair. The Bull is His vehicle for transport. He is indeed the author of the four Vedas and its six subsidiaries which diverged further into several chapters. This Lord Civan abides in Tiru-ch-chanbai-nagar where, in the nearby sea, ships are plying now and then. Fishes thrive here in plenty. Fishermen live near the seashore. The sharp nosed shells carried by the waves dash into the front yard of these fishermen and burst, dropping pearls.

**Note:** Civa is the live-form of the four Vedas and the six angas. Cultivation of these is indeed adoration of Lord Civa.

சூதகஞ்சேர் கொங்கையா ளோர்பங்கர் சுடர்க்கமலப்
போதகஞ்சேர் புண்ணியனார் பூதகணநாதர்
மேதகஞ்சேர் மேகமந்தண் சோலையில் விண்ணார்ந்த
சாதகஞ்சேர் பாளைநீர் சேர்சண்பை நகராரே. 2

*சூது அகம் சேர் கொங்கையாள் ஓர் பங்கர், சுடர்க் கமலப்-*
*போது அகம் சேர் புண்ணியனார், பூதகண நாதர் -*
*மேதகம் சேர் மேகம் அம் தண்சோலையில், விண் ஆர்ந்த*
*சாதகம் சேர், பாளை நீர் சேர் சண்பைநகராரே.*

cUtu akam cEr kogkaiyAL Orpagkar, cuTark kamalap--
pOtu akam cEr puNNiyan2Ar, pUtakaNa nAtar--
mEtakam cEr mEkam am taNcOlaiyil, viN Arnta
cAtakam cEr, pALai nIr cEr, caNpai nakarArE.

*பொருள்:* சண்பை நகர் இறைவராகிய சிவபெருமான், சூது ஆடும் காயைப் போன்ற தனங்களை உடைய உமையம்மையை ஒருபாகமாகக் கொண்டிருக்கிறார். அவர், ஒளிபொருந்திய தாமரை மலரைச் சூடிய புண்ணிய வடிவினர். பூதகணங்களுக்குத் தலைவர். இங்கு, வானகத்தே பறந்து திரிந்து வாழும் சாதகப் பறவைகள் உண்ணும் பொருட்டு, மேன்மை பொருந்திய மேகங்கள் மழைநீரைப் பெய்விக்கும். அழகிய குளிர்ந்த சோலைகளில் உள்ள தென்னை மற்றும் கமுகு மரங்களின் பாளைகளில் தேன் சேரும்.

*குறிப்புரை:* உமையொரு பாகர், செங்கமலப் போதில் வீற்றிருக்கும் புண்ணியனார் சண்பையார் என்கின்றது. சூதகம் சேர் – சூதாடும் காயை ஒத்த. பங்கர் – பாகத்தை உடையவர். சுடர் கமலப் போது அகஞ்சேர் – ஒளிவிடுகின்ற செந்தாமரையில் எழுந்தருளியுள்ள. மேதகம் – மேன்மை. விண்ணார்ந்த –

மேகநீரை உண்ட. சாதகம் – சாதகப்புள். பாளை நீர்சேர் – தென்னை கமுகு முதலியவற்றின் பாளைகளில் தேன் சேர்ந்த.

Lord Civan of Tiru-ch-chanbai-nagar abides in the dazzling lotus flower as an embodiment of virtue. He keeps His consort in the left half of His body whose breasts are similar to the gambling dice. He is the Chief of goblin hosts. For the chakara birds to subsist the rain falls from the selfless clouds (These birds subsist only on rain water and absorb it direct from the sky and they were always flying above the mid ocean area. Whenever ships pass by, they settle down in the deck for sometime). There are cool shady groves near the seacoast. Honey accumulates in the spathe (*பாளை*) of areca and coconut trees tht flourish in the beautiful and cool groves.

**Note:** In classical Tamil, the breasts of a woman are compared to a dice. We do not know how the dice looked like in those days. The Chakara, it is said, subsisted on raindrops before they reached the land or sea.

Lord Civan abiding in the Lotus - *போதகம் சேர்* - Note a similar description in *திருக்குறள் - மலர்மிசை ஏகினான்.*

மகரத்தாடு கொடியோ னுடலம் பொடிசெய் தவனுடைய
நிகரொப்பி ல்லாத்தேவிக் கருள்செய் நீலகண்டனார்
பகரத்தாரா வன்னம்பகன் றில்பாதம் பணிந்தேத்தத்
தகரப்புன்னை தாழைப்பொழில் சேர் சண்பை நகராரே. 3

*மகரத்து ஆடு கொடியோன் உடலம் பொடி செய்து, அவனுடைய*
*நிகர் ஒப்பு இல்லாத் தேவிக்கு அருள்செய் நீலகண்டனார் -*
*பகரத் தாரா, அன்னம், பகன்றில், பாதம் பணிந்து ஏத்த,*
*தகரப் புன்னை தாழைப் பொழில் சேர் சண்பைநகராரே.*

makarattu ATu koTiyOn2 uTalam poTi ceytu, avan2uTaiya
nikar-oppu illAt tEvikku aruLcey nIla kaNTan2Ar--
pakarat tArA, an2n2am, pakan2Ril, pAtam paNintu Etta,
takarap pun2n2ai tAzaippozil cEr caNpai nakarArE.

**பொருள்:** தகரம், புன்னை, தாழை முதலிய மரங்கள் உள்ள பொழில்களால் சூழப்பட்ட சண்பை நகரில் சிவபெருமான் எழுந்தருளியுள்ளார். இவரது திருவடிகளை நாரை, அன்னம், அன்றில் போன்ற பறவைகள் பணிந்து போற்றுகின்றன. இவர், மகர மீன் வரையப்பட்ட ஆடும் கொடியை உடைய மன்மதனின் உடலை எரித்து அழித்தவர். தனக்கு ஒப்பில்லாத

அழகுடைய, மன்மதனின் மனைவியான இரதிதேவிக்கு, அருள் செய்த நீலகண்டரும் இவரே ஆவார்.

**குறிப்புரை:** மன்மதனை எரித்து, அவன் மனைவியாகிய இரதிக்கு அருள் செய்தவன் சண்பையான் என்கின்றது. மகரத்து ஆடு கொடியோன் – மகரமீன் எழுதிய வெற்றி பொருந்திய கொடியுடையோன். நிகர் ஒப்பு; ஒருபொருட் பன்மொழி, தேவி என்றது இரதியை. அவளுக்கு மட்டும் மன்மதனை எழுப்பித் தந்ததை உணர்த்துவது. தாரா – சிறுநாரை. பகன்றில் – அன்றில். தகரப்புன்னை – தகரமும் புன்னையும்.

Lord Civan, 'Neela Kandar' (*நீலகண்டர்* – one whose neck is dark blue in colour) is entempled in Tiru-ch-chanbai-nagar where birds such as heron, swan and the nightingale of India (*அன்றில் பறவை*) worship Lord Civan's Holy Feet to the astonishment of everyone. The city is full of thick groves where fragrant and flowering trees such as wax flower dog-bane (*தகரம்* – Tabernae montana), mastwood also known as Alexandrian barrel (*புன்னை* – Calophyllum inophyllum) and screw pine (*தாழை* – a wild plant pandanas oderatissoma) flourish. Lord Civan once burnt the body of the god of love called Kaaman or Manmathan (*காமன் அல்லது மன்மதன்* – comparable to Cupid, the Roman God of Love, son of Venus; also comparable to Eros, the Greek God of Love) whose ever flying flag has the shark fish (*மகர மீன்*) as insignia of his flag. His wife Rathi Devi (*இரதி தேவி*) of incomparable beauty prayed to Lord Civan to restore life to her husband. Civan graced her request partially ordering that her husband will be visible only to her and not to anyone else.

மொய்வல் லசுரர்தேவர் கடைந்த முழுநஞ்சதுவுண்ட
தெய்வர் செய்வுருவர் கரியகண்டர் திகழ்சுத்திக்
கையர் கட்டங்கத்தர் கரியினுரியர் காதலாற்
சைவர் பாசுபதர்கள் வணங்குஞ் சண்பை நகராரே. 4

*மொய் வல்அசுரர் தேவர் கடைந்த முழு நஞ்சு அது உண்ட*
*தெய்வர், செய்யஉருவர், கரிய கண்டர், திகழ் சுத்திக்*
*கையர், கட்டங்கத்தர், கரியின்உரியர் - காதலால்*
*சைவர், பாசுபதர்கள், வணங்கும் சண்பைநகராரே.*

moy val acurar tEvar kaTainta muzu nanjcu atu uNTa
teyvar, ceyya uruvar, kariya kaNTar, tikaz cuttik
kaiyar, kaTTagkattar, kariyin2 uriyar--kAtalAl,
caivar, pAcupatarkaL, vaNagkum caNpai nakarArE.

**பொருள்:** சைவர்களும், பாசுபதர்களும் அன்போடு வழிபடுகின்ற இறைவர் சண்பை நகர்ச் சிவபெருமான் ஆவார். இவர், வலிமை பொருந்திய அசுரர்களும், தேவர்களும், கடலைக் கடைந்தபோது எழுந்த நஞ்சு முழுவதையும் உண்டு அருளிய தெய்வம் ஆவார். இவர் சிவந்த திருமேனியை உடையவர். கருநிறம் பொருந்திய கண்டத்தை உடையவர். திருநீறு கொண்டுள்ள சிப்பியைக் கையில் வைத்திருப்பவர். மழுப்படையை உடையவர். யானைத் தோலைப் போர்த்தி இருப்பவர்.

**குறிப்புரை:** நஞ்சமது செய்த தெய்வர், செய்யர், கண்டங்கரியர், சுத்திக்கையர், மழுப்படையர் சண்பை நகரார் என அடையாளம் அறிவிக்கின்றது. கட்டங்கம் – மழு. சுத்தி – திருநீறு கொடுப்பதற்குத் தலையோட்டினால் இப்பி (Pearl Oyster Shell – சிப்பி) வடிவமாகச் செய்யப்பட்டது.

Lord Civan is the Supreme Lord who swallowed the entire poison that came out of the sea when the mighty Asuras and Devas churned it. The complexion of Civan's holy body frame is crimson. His neck is of dark blue colour. In one of His hands He holds the Suththi (*சுத்தி* – a small shell shaped container made of human skull, to keep holy ashes, in). In another hand He holds the battle-axe. He covers His body with the skin of an elephant.

**Note:** Kattangkam: Civa's battle-axe.

கலமார் கடலுள் விடமுண்ட மரர்க்கமுத மருள்செய்த
குலமார் கயிலைக்குன்ற துடையகொல்லை யெருதேறி
நலமார் வெள்ளை நாளிகேரம் விரியாநறும்பாளை
சலமார் கரியின் மருப்புக் காட்டுஞ் சண்பை நகராரே. 5

கலம் ஆர் கடலுள் விடம் உண்ட அமரர்க்கு அமுதம் அருள் செய்த
குலம் ஆர் கயிலைக்குன்றுஅது உடையர், கொல்லை எருது ஏறி -
நலம் ஆர் வெள்ளை, நாளிகேரம், விரியா நறும்பாளை
சலம் ஆர் கரியின் மருப்புக் காட்டும் சண்பைநகராரே.

kalam Ar kaTaluL viTam uNTu amararkku amutam aruL ceyta
kulam Ar kayilaikkun2Ru atu uTaiyar, kollai erutu ERi--
nalam Ar veLLai, nALikEram, viriyAr naRumpALai
calam Ar kariyin2 maruppuk kATTum caNpai nakarArE.

***பொருள்:*** மக்களுக்கு நன்மை தரும் மரம் தென்னையாகும். இதில் இருந்து மணம் மிக்கதும் வெண்மை நிறத்தோடு கூடியதுமான பாளை வெளிவரும். இந்தப் பாளை வஞ்சனைமிக்க யானையின் தந்தத்தைப் போலத் தோன்றும். இத்தகைய சோலை வளம் மிகுந்த சண்பை நகர் இறைவன், சிவபெருமான் ஆவார். இவர் மரக்கலங்கள் நிறைந்த கடலினுள் தோன்றிய விடத்தை உண்டு, அமரர்களுக்கு அருள் செய்தவர். எல்லா மலைகளுக்கும் மேம்பட்ட கயிலை மலைக்கு உரியவர். முல்லை நிலத்து இடபத்தில் ஊர்ந்து வருபவர்.

***குறிப்புரை:*** தான் நஞ்சுண்டு அமரர்க்கு அமுதம் அருள் செய்தவர் சண்பையார் என்கின்றது. கொல்லை எருது – முல்லை நிலத்து இடபம். நாளிகேரம் – தென்னை. நாளிகேரம் வெள்ளை விரியா நறும் பாளை கரியின் மருப்புக் காட்டும் எனக் கூட்டுக. கரியின் மருப்பு – யானைக் கொம்பு. சலம் – வஞ்சனை. யானைக்கபடம் என்பது வழக்காதலின் சலமார் யானை என்றார்.

Lord Civan of Tiru-ch-chanbai-nagar swallowed the poison that surged out of the sea, but gave the nectar to the Devas and graced them. In this sea a good number of ships ply now and then. Civa is the Lord of Mount Kailas which is the most renowned of all the mountains. He rides on a Bull. In this city of Tiru-ch-chanbai-nagar, a number of dense gardens flourish having coconut trees in plenty which are a munificent gift to humanity. From these coconut trees spinout white and fragrant spatha that bear a likeness to the tusk of deceptive elephant.

மாகரஞ் சேரத்தியின் தோல்போர்த்து மெய்ம்மாலான
சூகரஞ் சேரெயிறு பூண்ட சோதியன் மேதக்க
ஆகரஞ் சேரிப்பிமுத் தையந்தண் வயலுக்கே
சாகரஞ் சேர்திரைக ளுந்துஞ்சண்பை நகராரே. 6, 7

மா கரம் சேர் அத்தியின் தோல் போர்த்து, மெய்ம் மால் ஆன
சூகரம் சேர் எயிறு பூண்ட சோதியன் - மேதக்க
ஆகரம் சேர் இப்பி முத்தை அம் தண்வயலுக்கே
சாகரம் சேர் திரைகள் உந்தும் சண்டைநகராரே.

mA karam cEr attiyin2 tOl pOrttu, meym mAl An2a
cUkaram cEr eyiRu pUNTa cOtiyan2--mEtakka
Akaram cEr ippimuttai am taNvayalukkE
cAkaram cEr tiraikaL untum caNpainakarArE.

**பொருள்:** கடலில் வாழும் சிப்பிகள் முத்துக்களைத் தருகின்றன. இந்த முத்துக்களை, அழகிய குளிர்ந்த வயல்களுக்குக் கடல் அலைகள் நகர்த்திக் கொண்டு வருகின்றன. இத்தகைய செழிப்புள்ள சண்பை நகர் இறைவன், சிவபெருமான் ஆவார். இவர் நீண்ட கையினை உடைய யானையின் தோலை உரித்து தம் திருமேனியில் போர்த்தி உள்ளார். திருமாலின் பத்து அவதாரங்களின் ஒன்றான பன்றியின் பல்லை அணிகலனாகப் பூண்டவர். இவர் ஒளிவடிவினர் ஆவார்.

**குறிப்புரை:** யானைத் தோலைப் போர்த்துப் பன்றிக் கொம்பை அணிந்த சோதியான் சண்பையான் என்கின்றது. மாகரம் – பெரிய கை. அத்தி – யானை. சூகரம் – பன்றி. ஆகரம் – கடல். திரைகள் முத்தை வயலுக்கே உந்தும் சண்பை என்க.

Lord Civan who is enshrined in Tiru-ch-chanbai-nagar cloaked His divine body with the skin of an elephant that has a long trunk. Thirumaal, in one of his ten Avataars took the form of a hog. Civa adorns His divine dazzling body with the tusk of this hog. The waves of the sea near this town carry shells with embedded pearls splash on the shores and reach the cool fields nearby. In these fields shells open up and drop their pearls.

**Note:** Pearl-diving is undertaken in many places. Kaazhi is a holy place towards which pearls are sent by the sea-waves.

இருளைப் புரையுநிறத் திலரக்கன் றனையீ டழிவித்து
அருளைச் செய்யுமம் மான்னோரா ரந்தண் கந்தத்தின்
மருளைச் சுரும்புபாடி யளக்கர் வரையார் திரைக்கையால்
தரளத்தோ டுபவளமீ னுஞ்சண்பை நகராரே. 8

இருளைப் புரையும் நிறத்தின் அரக்கன் தனை ஈடு அழிவித்து,
அருளைச் செய்யும் அம்மான் - ஏர் ஆர் அம் தண்கந்தத்தின்
மருளைச் சுரும்பு பாடி, அளக்கர் வரை ஆர் திரைக்கையால்-
தரளத்தோடு பவளம் ஈனும் சண்பைநகராரே.

iruLaip puraiyum niRattin2 arakkan2 tan2ai ITu azivittu,
aruLaic ceyyum ammAn2--Er Ar am taNkantattin2
maruLaic curumpu pATi, aLakkar varai Ar tiraikkaiyAl-
taraLattOTu pavaLam In2um caNpai nakarArE.

**பொருள்:** மலை போன்றத் தோற்றமுடைய கடல் அலைகள், தன் கைகளால், முத்துக்களையும் பவளங்களையும் கொண்டு வந்து சேர்க்கும் சண்பை நகரின் இறைவன், சிவபெருமானாகும். இங்கு, அழகிய குளிர்ச்சி தரும் வாசனையோடு மருள் என்னும் பண்ணை வண்டுகள் பாடுகின்றன. இந்தப் பெருமான், இருளைப் போன்ற கரிய நிறத்தை உடைய இராவணனின் வீரத்தை அழித்தவர் ஆவார். அதன்பின் அவன் வருந்திய போது, அவனுக்கு அருள் செய்த அம்மானும் தலைவனும் இவரே ஆவார்.

**குறிப்புரை:** இராவணனை ஈடழித்து, ஈடேற்றும் அம்மான் இவர் என்கின்றது. ஈடு – பெருமை. ஏரார் – அழகிய. மருளைச் சுரும்பு பாடி – மருள் என்னும் பண்ணை வண்டு பாடி. அளக்கர் – கடல். வரை ஆர் திரை – மலையொத்த அலை. தரளம் – முத்து.

Lord Civan is enshrined in Tiru-ch-chanbai-nagar. In this city honey bees are humming in the gardens that are full of flowers creating a pleasant aroma all around. The humming noise of the bees is similar to the musical melody called Marul (மருள் – a secondary melody type of the Kurinji class; one of eight Kurinji-yaal-thiram; *குறிஞ்சி நிலத்து யாழ்த்திறம் எட்டனுள் ஒன்று*). The mountain like waves of the sea bring corals and pearls and splash them on the shores. Lord Civan of this town annihilated the might of Raavanan who is as black as darkness. Later when he repented and begged for pardon, Civan graced him with boons.

Note: The pann Marul chases away irul (darkness) which is Anava mala.

மண்டான் முழுதுமுண்ட மாலுமலர் மிசைமேலயனும்
எண்டா னறியாவண் ணநின்ற இறைவன் மறையோதி
தண்டார் குவளைக்கள் ளருந்தித்தாம ரைத்தாதின்மேற்
பண்டான் கொண்டு வண்டு பாடுஞ்சண்பை நகராரே. 9

மண் தான் முழுதும் உண்ட மாலும், மலர்மிசை-மேல் அயனும்,
எண் தான் அறியா வண்ணம் நின்ற இறைவன், மறை ஓதி -
தண்டு ஆர் குவளைக் கள் அருந்தி, தாமரைத்தாதின் மேல்
பண் தான் கொண்டு வண்டு பாடும் சண்பைநகராரே.

maNtAn2 muzutum uNTa mAlum, malarmicai-mEl ayan2um,
ENtAn2 aRiyA vaNNam nin2Ra iRaivan2, maRai Oti--
taNTu Ar kuvaLaik kaL arunti, tAmaraittAtin2 mEl
paN tAn2 koNTu vaNTu pATum caNpainakarArE.

**பொருள்:** தண்டிலே மலர்ந்த குவளை மலர்களின் தேனை உண்டு, தாமரை மலர்களில் நிறைந்துள்ள மகரந்தங்களில் தங்கி, பண் பாடுகின்ற வண்டுகள் நிறைந்த சண்பை நகரின் இறைவன், சிவபெருமான் ஆவார். இவர், உலகங்கள் முழுதும் உண்ட திருமால், தாமரை மலர்மேல் வீற்றிருக்கும் நான்முகன் ஆகியோரின் மனத்தாலும் அறியாவண்ணமாக நின்ற இறைவனாவார். வேதங்களை ஓதி வெளிப்படுத்தியவரும் இவரே ஆவார்.

**குறிப்புரை:** மண்ணுண்ட மாலும் மலரோனும் அறியா வண்ணம் நின்ற இறையோன் சண்பை நகரார் என்கின்றது. எண் தான் அறியா – எள்ளளவும் அறியாத. வண்டு குவளைத் தேனை அருந்தித் தாமரையின் மகரந்தத்தை உண்டு பாடும் சண்பை நகர் என்க.

Lord Civan of Tiru-ch-chanbai-nagar stood beyond the ken of the mental perception of Vishnu who once swallowed the whole earth and of Brahma seated in the Lotus. Civa is the author and reciter of the Vedas. Lord Civa presides over Tiru-ch-chanbai-nagar city where bees suck honey from the lily flowers that stem out of long stalks, rests in the pollen filled bed of lotus flowers and tunefully hum melodies that reverberate all around.

போதியா ரும்பிண்டியா ரும்புகழல சொன்னாலும்
நீதியா கக்கொண்டங் கருளுநிமல னிருநான்கின்
மாதி சித்தர் மாமறையின் மன்னியதொன்னூலர்
சாதி கீதவர்த்த மானர் சண்பை நகராரே. 10

போதியாரும் பிண்டியாரும் புகல் அல சொன்னாலும்,
நீதி ஆகக் கொண்டு அங்கு அருளும் நிமலன், இரு-நான்கின்-
மாதி சித்தர், மாமறையின் மன்னிய தொன்-நூலர்,
சாதி கீத வர்த்தமானர் - சண்பைநகராரே.

pOtiyArum piNTiyArum pukaz ala con2n2Alum,
nIti Akak koNTu agku aruLum nimalan2, iru-nAn2kin2-
mAti cittar, mAmáRaiyin2 man2n2iya tol-nUlar,
cAti kIta varttamAn2ar--caNpai nakarArE.

**பொருள்:** சண்பை நகரார் ஆன சிவபெருமான் அணிமா முதலிய எண்வகை சித்திகளில் வல்ல சித்தராவார். பழமையான நூல்களாகிய வேதங்களின் பொருளாக நிலைத்து நிற்பவர். சாகரம் முதலாகப் பாடப்படுகின்ற பாட்டுகளில் நிலைத்திருப்பவர். புத்தர்களும் சமணர்களும் புகழ் இல்லாதவைகளைக் கூறினாலும், அவைகளைப் புகழ் மொழிகளாகக் கொண்டருளும் மாசற்றவர் இவர்.

**குறிப்புரை:** புறச் சமயிகள் இகழ்ந்து பேசினாலும் அவற்றைப் புகழாகக் கொண்டருளும் சண்பை நகரார் இவர் என்கின்றது. போதியார் – புத்தர். பிண்டியார் – சமணர். மாதி சித்தர் – அணிமாதி சித்திகளை உடையவர். சாதி கீத வர்த்தமானர் – சகாரம் முதலாகப் பாடப்படுகின்ற பாட்டில் நிலைத்திருப்பவர். 'எரிவினாற் சொற்றாரேனும் எம்பிராற்கு ஆகும்' என்னும் அப்பர் வரிகளும் நோக்கற்பாலன.

Lord Civan is pure Supreme Being (NImalan - *நிமலன்*). Though Buddhists and Samanars abuse Him, He ignores their evil comments and takes it in a good spirit. He is a Super Siddhar (*சித்தர் - அட்டமாசித்திகளை ஆக்கி நடத்துபவர்* - An authoritarian of the eight super natural powers). He is the author of the age old Vedas. He is the Supreme God (*வர்த்தமானர்*) absorbed in the music of divine songs especially those songs which commence from the letter 'Sa' (*ச - சகாரம்*).

**Note:** Civan cannot be spoken of lightly. Even stones became flowers in Civa-puja.
'Sa' is the first of the seven svaras.

வந்தியோடு பூசையல்லாப் போழ்தின் மறைபேசிச்
சந்திபோதிற் சமாதி செய்யுஞ் சண்பை நகர்மேய
அந்திவண்ணன் தன்னை யழகார் ஞானசம்பந் தன்சொற்
சிந்தைசெய்து பாடவல்லார் சிவகதி சேர்வாரே. 11

*வந்தியோடு பூசை அல்லாப் போழ்தில் மறை பேசி,*
*சந்திபோதில் சமாதிசெய்யும் சண்பைநகர் மேய*
*அந்தி வண்ணன்தன்னை, அழகு ஆர் ஞானசம்பந்தன் சொல்*
*சிந்தைசெய்து பாட வல்லார் சிவகதி சேர்வாரே.*

vantiyOTu pUcai allAp pOztil maRai pEci,
cantipOtil camAti ceyyum caNpai nakar mEya
anti vaNNan2 tan2n2ai, azaku Ar njAn2acampantan2 col
cintai ceytu pATa vallAr civakati cErvArE.

**பொருள்:** அடியவர்கள், வந்தனையோடு பூசை செய்யும் காலங்களைத் தவிர்த்த மற்ற நேரங்களில், வேதப் பொருட்களை விசாரணை செய்கின்றனர். மாலைக் காலம் போன்ற செம்மேனியனை, சண்பை நகர் மேவிய சிவபெருமானை, சந்தியா காலங்களில் அடியவர்கள் தியானம், சமாதி நிலைகளில் நின்று வழிபடுகின்றனர். ஞானசம்பந்தன் அருளிய அழகிய இப்பதிகத்தின் பொருளை, மனதில் நிறுத்திப் பாட வல்லவர்கள், சிவகதியைச் சேர்வார்கள்.

**குறிப்புரை:** சண்பை நகர்ச் சிவபெருமானைப்பற்றிச் சொன்ன ஞான சம்பந்தனது சொல்லைத் தியானத்தோடு பாடவல்லவர்கள் சிவகதி சேர்வர் என்கின்றது. வந்தி – வந்தித்தல். வந்தி – அடியவருடைய வந்தித்தல். முதல் நிலைத் தொழிற்பெயர். மறை – இரகசியம். சந்தி – காலை மாலை. இறைவன் பூசைக்காலம் அல்லாத காலங்களில் அம்மையோடு வேத விசாரணை செய்து சந்தியா காலங்களில் சமாதி செய்கின்றார் என்ற அனுபவம் அறிவிக்கப்படுகிறது.

Gnaanasambandan hails from Tiru-ch-chanbai-nagar. Here devotees offer sincere worship to Lord Civan regularly and at the appropriate time. In their spare time they discuss about the greatness of the Vedas. During the three divisions of the day - viz., sunrise - midday - sunset - they perform the rituals such as meditation (Diyaanam - *தியானம்* - fixed and undivided attention to an object), Samaathi (*சமாதி* - the last of the eight stages of yoga and modes of silent contemplative worship). Lord Civan of this famed city has the complexion of the evening twilight (crimson colour). Gnaanasambandan hymned this impressive and appealing poem on Lord Civan of this place. Those who can perceive the meaning of this hymn and sing them will get deliverance from the cycle of birth and death (*சிவகதி*).

**Note:** Civa-gati: Deliverance.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

***66ஆம் பதிகம் முற்றிற்று***
**End of 66th Hymn**

உ
சிவமயம்

# 67. திருப்பழனம்

## திருத்தலவரலாறு:

திருப்பழனம் என்ற திருத்தலமானது சோழ நாட்டுக் காவிரி வடகரைத் தலம் ஆகும். கும்பகோணம் – திருவையாறு பேருந்துச் சாலையில் திருவையாற்றுக்கு அருகில் உள்ளது. இது திருவையாற்று ஸப்தஸ்தானத் தலங்களுள் ஒன்று. அப்பூதி அடிகளுடைய அவதாரத் தலமாய திங்களூர் இதற்கு அண்மையில் இருப்பதால் இங்கு வழிபட வந்த அப்பர் சுவாமிகள் இத்தலப் பதிகத்து அப்பூதிநாயனார் திருப்பெயரை அமைத்துத் திருப்பதிகம் அருளிச்செய்தார்கள். விடந்தீர்த்த பதிகமாகிய ‘ஒன்று கொலாம்’ என்ற பதிக நிகழ்ச்சிக்கு இடமான தலம் இது. இறைவன் பெயர் ஆபத்சகாயர். அம்மையின் பெயர் பெரிய நாயகி. தீர்த்தம் காவிரி.

## கல்வெட்டு:

இத்தலத்தைப் பற்றிய கல்வெட்டுக்கள் 29 உள்ளன. இவைகளும் முதற்பராந்தகன் காலம் முதல் கொண்டே தொடங்குகின்றன. இவற்றால் அரசர்களும் அரசியர்களும் அவர்களது தோழிமார்களும் தண்டத் தலைவர்களும் விளக்கிற்காக நிலமும் நெய்யும், பொன்னும் வழங்கியமை அறியலாம். திரிபுவன வீரதேவனான மூன்றாம் குலோத்துங்கன் சிந்திநல்லூரில் உள்ள நிலங்களை 15500 காசுகளுக்கு விற்று, அதைக் கோயிலுக்குக் கொடுத்தான். இராஜராஜன் மூன்று காணி ஒரு முந்திரி நிலம் அளித்தான் என்பதால் அரசர்களின் அன்பின் நுணுக்கம் அறியப்பெறுகிறது. கோஇராஜகேசரிவர்மன் காலத்தில் ஒரு வேளாளன் கல்மண்டபம் ஒன்றை எழுப்பித் தந்தான்.

## பதிக வரலாறு:

திருவடகுரங்காடுதுறையில் வாலியார் வழிபட்ட அருமையை அமைத்துப் பாடிப்பரவி, பிற தலங்களையும் வழிபட எழுந்தருளிய காழிவேந்தர், முத்தலைச் சூலம் ஏந்திய முதல்வர் எழுந்தருளிய திருப்பழனத்தைச் சேர்ந்தார். கோயிலைக் குறுகி உருகிய மனத்துடன் திருப்பழனநாதரை வணங்கி ‘வேதமோதி’ என்னும் இப்பதிகத்தை அருளிச் செய்தார். இதனை ‘விழைசொற் பதிகம்’ என விசேடிப்பர் சேக்கிழார் பெருமானார்.

## 67. THIRU-P-PAZHANAM

### THE HISTORY OF THE PLACE

The sacred city of Thiru-p-pazhanam is to the north of river Cauvery in Chola Naadu. It is near Thiruvaiyaaru on the Kumbakonam – Thiruvaiyaaru bus route.

The Lord's name is Aabathsahaayar and that of the Goddess is Periyanaayaki. The sacred ford is the river Cauvery. This is one of the seven 'sapthasthaanam' temples of Thiruvaiyaaru. Thingkaloor, the birthplace of Appoothi Adigal is near here. For that reason, Saint Appar, who came here for worship, introduced the name of Appoothi Naayanaar in everyone of the ten verses he composed for this temple. This place was also the scene of the episode of the cure from snake poison (the theme of the hymn that begins with 'onRu kolAm' – the hymn sung by St. Appar).

There are 29 inscriptions regarding this temple, starting from the time of Paraanthakan I. Grants by various kings, queens and their friends, and officials of the land and gifts of gold for lamps, are described. Kuloththungkan III sold a land for 15500 'kaasu' and donated the money to the temple. Raajaraajan gifted land, for three 'kaanis'; and one 'mundhiri' in area. A farmer had a stone mandapam built during the reign of Koraajakesarivarman.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 67. திருப்பழனம்

## 67. THIRU-P-PAZHANAM

பண் : பழந்தக்கராகம்
ராகம் : ஆரபி

*Pann: Pazhanthakka Raagam*
*Raagam: Aarabi*

வேதமோதி வெண்ணூல் பூண்டு வெள்ளை யெருதேறிப்
பூதஞ்சூழப் பொலியவரு வார்புலியி னுரிதோலார்
நாதா எனவும் நக்கா எனவும் நம்பா எனநின்று
பாதந் தொழுவார் பாவந்தீர்ப்பார் பழன நகராரே. 1

வேதம் ஓதி வெண்நூல் பூண்டு, வெள்ளைஎருது ஏறி,
பூதம் சூழ, பொலிய வருவார்; புலியின் உரி-தோலார்;
"நாதா!" எனவும் "நக்கா!" எனவும், "நம்பா!" என நின்று,
பாதம் தொழுவார் பாவம் தீர்ப்பார் - பழனநகராரே.

vEtam Oti, veNnUl pUNTu, veLLai erutu ERi,
pUtam cUza, poliya varuvAr; puliyin2 uri-tOlAr;
"nAtA!" en2avum, "nakkA!" en2avum, "nampA!" en2a nin2Ru,
pAtam tozuvAr pAvam tIrppAr--pazan2anakarArE.

***பொருள்:*** திருப்பழனத்து இறைவரான சிவபெருமான் வேதங்களை உண்டாக்கியவர். மார்பில் வெண்மையான பூணூலை அணிந்து இருப்பவர். வெண்மையான எருதின்மீது ஏறிப் பூதகணங்கள் புடைசூழப் புலியின் தோலை அணிந்து பொலிவு பெற வருபவர். இப்பெருமானை முழுமுதற்பொருள் (நாதனே) எனவும், இரவலனே (நக்கனே) எனவும், நம்பப்படத்தக்கவனே (நம்பனே) எனவும், போற்றி நின்று திருவடிகளைத் தொழுகின்ற அடியவர்களின் பாவங்களைத் தீர்த்து அருளுவார்.

***குறிப்புரை:*** நாதா நக்கா எனத் தோத்திரிப்பவர்களின் பாவந்தீர்ப்பவர் பழன நகரார் என்கின்றது. நக்கன் – நிர்வாணி. நம்பன் – நம்பப்படத் தக்கவன்.

Lord Civan of Thiru-p-pazhanam will appear in a celebrated manner, clad in a tiger skin, wearing in His chest the white sacred thread, riding on the White Bull, followed by His goblin hosts. All the while He chants the four Vedas. He annuls the sins of those who adore His Holy Feet hailing Him as "Oh! You are our Supreme Being! (*நாதா எனவும்*) Oh! You are the divine mendicant asking us to shed ignorance! (*நக்கா எனவும்*) Oh! You are our Supreme Being! (*நம்பா எனவும்*) Kindly shower Your grace upon us".

கண்மேற் கண்ணுஞ் சடைமேற்பிறை யுமுடையார்காலனைப்
புண்ணாறு திரமெதிராறோடப் பொன்றப் புறந்தாளால்
எண்ணா துதைத்த எந்தைபெரு மானிமவான் மகளோடும்
பண்ணார் களிவண்டறை பூஞ்சோலைப் பழன நகராரே. 2

கண்மேல் கண்ணும், சடைமேல் பிறையும், உடையார்; காலனைப்
புண் ஆர் உதிரம் எதிர் ஆறு ஓடப் பொன்றப் புறம்தாளால்
எண்ணாது உதைத்த எந்தைபெருமான் - இமவான்மகளோடும்,
பண் ஆர் களி வண்டு அறை பூஞ்சோலைப் பழனநகராரே.

kaN mEl kaNNum, caTaimEl piRaiyum, uTaiyAr; kAlan2aip
puN Ar utiram etir ARu OTap pon2Rap puRamtALAl
eNNAtu utaitta entai perumAn2--imavAn2 makaLOTum,
paN Ar kaLi vaNTu aRai pUnjcOlaip pazan2a nakarArE.

**பொருள்:** தேனை உண்ட வண்டுகள் பண்ணின் இசைபோன்று ஒலி செய்யும் அழகிய சோலைகள் சூழ்ந்த தலம் திருப்பழன நகராகும். இந்நகரில் இமவான் மகளான பார்வதி தேவியோடு சிவபெருமான் எழுந்தருளியுள்ளார். இவர் இயல்பாக உள்ள இரண்டு கண்களுக்கு மேலாக நெற்றியில் மூன்றாவது ஒரு கண்ணையும் உடையவர். சடைமுடியின்மேல் பிறையையும் உடையவர். காலனை உதைத்து, அவன் உடலில் தோன்றிய புண்களில் இருந்து இரத்த வெள்ளம் ஆறாக ஓடும்படி செய்தவர். அவனை ஒரு பொருளாக மதியாது தோல்வி அடைந்து அழிய உதைத்த எந்தை பெருமானார் இவர் ஆவார்.

**குறிப்புரை:** காலனை இரத்த ஆறு பெருக்கெடுத்தோடப் புறந்தாளால் உதைத்த பெருமான் பழனநகரார் என்கின்றது. இதுவும் ஆபத்சகாயர் என்ற இத்தலத்திறைவனுக்கு ஏற்ற செயலாதல் அறிக. கண்மேல்கண் – நெற்றிக்கண். புண்ணார் உதிரம் – புண்ணை வழியாகக் கொண்டு வெளிப்படுகின்ற இரத்தம். பொன்ற – இறக்க. எண்ணாது – அவனை ஒரு பொருளாக மனத்து எண்ணாது.

Lord Civan has a third eye in His forehead in addition to His two normal eyes. He has the crescent moon in His matted hair. Without having any consideration to Yama (Kaalan), He nonchalantly kicked and routed (புறந்தாளார்) him out. From the wound created by His kicking, blood gushed out and was running like a red river. This our Lord Civan is happily enshrined in the town Thiru-p-pazhanam along with His consort, the daughter of the Himaalayan king. This town is girt with many flowering gardens. Here the bees having over sucked the honey, get intoxicated and hum tunefully in delight.

**Note:** Civa is the Lord of trinocular vision. Yama, the mighty, was powerless in the presence of Civa.

பிறையும்பு னலுஞ்சடை மேலுடையார் பறைபோல் விழிகட்பேய்
உறையுமயா னமிடமாவுடையா ருலகர் தலைமகன்
அறையுமலர் கொண்டடியார் பரவியாடல் பாடல்செய்
பறையுஞ்சங் கும்பலியுமோ வாப்பழன நகராரே. 3

*பிறையும் புனலும் சடைமேல் உடையார்; பறை போல் விழி கண் பேய்*
*உறையும் மயானம் இடமா உடையார்; உலகர் தலைமகன் -*
*அறையும் மலர்கொண்டு அடியார் பரவி, ஆடல் பாடல் செய்*
*பறையும் சங்கும் பலியும் ஓவாப் பழனநகராரே.*

piRaiyum pun2alum caTaimEl uTaiyAr; paRai pOl vizi kaN pEy
uRaiyum mayAn2am iTamA uTaiyAr; ulakar talaimakan2--
aRaiyum malarkoNTu aTiyAr paravi, ATal pATal cey
paRaiyum cagkum paliyum OvAp pazan2a nakarArE.

***பொருள்:*** திருப்பழன நகர் இறைவர் சிவபெருமான் ஆவார். இவரை, அடியவர்கள் உயர்ந்த நறுமண மலர்களால் அருச்சித்துத் துதிக்கின்றனர். ஆடல் பாடல்களைச் செய்தும், பறையும் சங்கும் ஆகிய வாத்தியங்களை முழக்கியும், பணிந்தும், இடைவிடாது வழிபடுகின்றனர். இவ்விறைவர் தன் சடைமேல் பிறையையும், கங்கையையும் சூடியிருக்கிறார். பறையின் வாய் போன்ற வட்டமான விழிகளை உடைய, பேய்கள் வாழும் மயானத்தைத் தமக்கு இடமாகக் கொண்டிருக்கிறார். இவர் அனைத்து மக்கட்கும் தலைவர் ஆவார்.

***குறிப்புரை:*** கங்கையும் பிறையும் சூடியவர், மயனாத்துறைபவர் பழனத்தார் என்கின்றது. அறையும் – ஒலிக்கின்ற. அடியார் பரவி, பாடல் செய் ஓவாப்பழனம் எனக் கூட்டுக.

Lord Civan presides over Thiru-p-pazhanam. Devotees adorn Him with choice elegant flowers. They dance, sing divine songs before Him. They beat the drums, blow the chanks and with humility they worship Him always without any break. He has in His matted hair the crescent moon as well as the Ganges river. He prefers to have the 'burning ghat' also, as His dwelling place where ghouls with eyes like the round drum also do live. He is the Chief Universal Lord for one and all.

**Note:** Civa indeed is the cosmic Lord.

உரமன் னுயர்கோட் டுலறுகூகை யலறுமயானத்தில்
இரவிற் பூதம்பாட ஆடியெழி லாரலர் மேலைப்
பிரமன் றலையின றவமேற்ற பெம்மானெமையாளும்
பரமன் பகவன் பரமேச்சுவரன் பழனநகராரே. 4

*உரம் மன் உயர்கோட்டு உலறு கூகை அலறு மயானத்தில்,*
*இரவில் பூதம் பாட ஆடி, எழில் ஆர் அலர்மேலைப்*
*பிரமன் தலையில் நறவம் ஏற்ற பெம்மான்; எமை ஆளும்*
*பரமன்; பகவன்; பரமேச்சுவரன் - பழனநகராரே.*

uram man2 uyarkOTTu ulaRu kUkai alaRu mayAn2attil,
iravil pUtam pATa ATi, ezil Ar alarmElaip
piraman2 talaiyil naRavam ERRa pemmAn2; emai ALum
paraman2; pakavan2; paramEccuvaran2--pazan2a nakarArE.

**பொருள்:** திருப்பழன நகர் இறைவர் சிவபெருமான் ஆவார். இவர், நள்ளிரவில் வலிமையான உயர்ந்த வற்றிய மரக்கிளைகளில் அமர்ந்து, ஆந்தை அலறும் மயானத்தில், பூதகணங்கள் பாட நடனம் ஆடுகின்றார். அழகிய தாமரை மலர்மேல் உறையும் பிரமனது தலையோட்டில் பலியேற்பதுமான திருவிளையாடல்களைப் புரிகின்றார். இப்பெருமான் எம்மை ஆளும் பரமர் ஆவார். அவர் பகவன், பரமேச்சுவரன் போன்ற பெயர்களையும் உடையவர்.

**குறிப்புரை:** மயானத்துப் பூதம் பாட, நள்ளிருளில் நடனமாடுபவர் இந்நாதர் என்கின்றது. உரம் – வலிமை. உலறு கோட்டு – வற்றிய கிளைகளில், கூகை – கோட்டான். அலர் மேலைப் பிரமன் – தாமரை மலர்மேல் உள்ள பிரமன். நறவம் – கள், தேன்; என்றது உணவு என்னும் பொதுமையில் நின்றது. பரமன் – உயர்ந்தவற்றிற்கெல்லாம் உயர்ந்தவன். பகவன் – ஆறு குணங்களை உடையவன்.

Lord Civan sings and dances in the dead of night in the burning ground where owls perched on sturdy, lofty and leafless dried branches screech and make heavy noise; where the goblins also sing and dance. He receives alms in the skull of Brahma who is seated in the elegant lotus flower. He engages Himself in such divine sports. This Lord is our Chief Ruler. He is known by different names such as Bhaghavan (*பகவன்*), Parameswaran (*பரமேஸ்வரன்*) and other names.

**Note:** Paraman: The loftiest of the lofty.

Bhaghavan: The Originator.

Parameswaran: The God of gods.

குலவெஞ் சிலையான் மதில்மூன் றெரித்தகொல் லேறுடையண்ணல்
கலவமயிலுங் குயிலும்பயிலுங் கடல்போற் காவேரி
நலமஞ்சுடைய நறுமாங் கனிகள்குதி கொண்டெதிருந்திப்
பலவின்கனிகள் திரைமுன் சேர்க்கும் பழன நகராரே. 5

*குல வெஞ்சிலையால் மதில் மூன்று எரித்த கொல் ஏறு உடை அண்ணல் -*
*கலவமயிலும் குயிலும் பயிலும் கடல் போல் காவேரி*
*நல மஞ்சு உடைய நறு மாங்கனிகள் குதிகொண்டு எதிர் உந்தி,*
*பலவின் கனிகள் திரை முன் சேர்க்கும் பழனநகராரே.*

kula venjcilaiyAl matil mUn2Ru eritta kol ERu uTai aNNal--
kalavamayilum kuyilum payilum kaTal pOl kAvEri
nala manjcu uTaiya naRu mAgkan2ikaL kutikoNTu etir unti,
palavin2 kan2ikaL tirai mun2 cErkkum pazan2a nakarArE.

***பொருள்:*** திருப்பழன நகரில் தோகைகளை உடைய மயில்களும் குயில்களும் வாழுகின்றன. காவிரி ஆறு கடல்போல் பரந்தும் விரிந்தும் இருக்கின்றது. இந்த ஆற்றின் அலைகள் மாங்கனிகளையும், பலாவின் கனிகளையும் ஏந்திக் குதித்து உந்தி வந்து கரையில் சேர்க்கின்றன. இத்தகைய வளமான திருப்பழன நகரின் இறைவர் சிவபெருமான் ஆவார். இவர், உயர்ந்த மலைவில்லால் அசுரர்களின் முப்புரங்களையும் எரித்தவர். பகைவரைக் கொல்லும் இடபத்தை வாகனமாக உடைய அண்ணலும் இவரே ஆவார்.

***குறிப்புரை:*** வில்லால் திரிபுரமெரித்த சிவன் பழனத்தான் என்கின்றது. பின்னிரண்டடிகளில் கடல்போன்ற காவிரியின் அலைகள் மாங்கனிகளையும் பலாக்கனிகளையும் எதிர் உந்திச் சேர்க்கும் பழமை என வளம் கூறப்பெற்றுள்ளது. கடல்போற் காவிரி என்றது வற்றாமையும் பரப்பும்பற்றி. கலவம் – தோகை.

Lord Civan of Thiru-p-pazhanam burnt the three citadels of Asuraas by His fierce mountain bow. He is the great one who rides on the murderous bull. He presides over Thiru-p-pazhanam where flourish the fantailed peacocks and the Indian cuckoos; here the Cauvery river vast and wide like the sea, carries sweet mango fruit and jack fruits; water leaps ahead and washes ashore the fruits on the banks of this river.

Note: Peacocks dance. Kuyils sing. In Pazhanam dancing and singing take place for ever in honour of Civa.

வீளைக்குரலும் விளிசங்கொலியும் விழவினொலியோவா
மூளைத்தலை கொண்டடியா ரேத்தப்பொடி யாமதிளெய்தார்
ஈளைப்படுகில்லை யார்தெங்கிற் குலையார் வாழையின்
பாளைக்கமுகின் பழம்வீழ் சோலைப் பழன நகராரே. 6

வீளைக் குரலும், விளி சங்கு ஒலியும், விழவின்(ன்) ஒலி ஓவா,
மூளைத்தலை கொண்டு, அடியார் ஏத்த, பொடியா மதிள் எய்தார் -
ஈளைப் படுகில் இலை ஆர் தெங்கின், குலை ஆர் வாழையின்,
பாளைக்கமுகின், பழம் வீழ் சோலைப் பழனநகராரே.

vILaik kuralum, viLi cagku oliyum, vizavin2(n2) oli OvA,
mULaittalai koNTu, aTiyAr Etta, poTiyA matiL eytAr--
ILaip paTukil ilai Ar tegkin2, kulai Ar vAzaiyin2,
pALaikkamukin2, pazam vIz cOlaip pazan2a nakarArE.

**பொருள்:** ஈரத் தன்மை உடைய ஆற்றுப் படுகைகளில், பசுமையான மட்டைகளோடுகூடிய தென்னை மரங்களின் குலைகளில் தேங்காய்கள் விளைந்துள்ளன. வாழை மரத்தில் பழுத்த வாழைப் பழங்கள் உள்ளன. பாளைகளை உடைய கமுகு மரங்களில் இருந்து பழுத்த பாக்குப் பழங்கள் கீழே விழுகின்றன. இத்தகைய செழிப்பான சோலைகளால் சூழப்பட்ட திருப்பழன நகரின் இறைவர் சிவபெருமான் ஆவார். இவர், அழைக்கும் சீழ்க்கை ஒலியும், சங்கொலியும், விளையாட்டின் ஆரவாரங்களும் ஓயாத ஊரகத்தே சென்று, மூளை பொருந்திய தலையோட்டில் பலியேற்பவர் ஆவார். அடியவர்கள் போற்றி வாழ்த்த முப்புரங்களையும் அழித்தவர் ஆவார்.

**குறிப்புரை:** கையில் கபாலம் கொண்டு அடியார்கள் வழிபட நின்ற இறைவன் இந்நகரார் என்கின்றது. வீளைக்குரல் – அழைக்கும் குரல். மூளைத் தலை கொண்டு மூளையோடு கூடிய பிரமகபாலத்தைக் கொண்டு. ஈளைப் படுகு – உலராத சேற்றோடு கூடிய ஆற்றுப்படுகை. படுகையில் தென்னை, வாழை, கமுகு இவற்றின் பழம் விழுகின்ற பழனம் என வளம் கூறியது.

Fully ripe coconut fruit bunches and their spathes of well grown and green coconut trees, fully ripe banana fruits of the plantain trees and ripe areca-nuts - all grown in the wet fertile river bed gardens, full of mire, are falling down in the ground now and then. Thiru-p-pazhanam is such a fertile town where our Lord Civa is enshrined. In this town the summoning noise of the whistle and chanks and the noise of festivities never ceases. Lord Civa roams about in this town, to get alms, by holding

in His hand Brahma's skull with its brain muscles still sticking. Devotees praise and adore Him for His help in destroying the three citadels of Asuraas along with the inhabitants.

பொய்யா மொழியார் முறையா லேத்திப்புகழ்வார் திருமேனி
செய்யார் கரியமிடற்றார் வெண்ணூல் சேர்ந்த அகலத்தார்
கையாட லினார்புன லான்மல்கு சடைமேற் பிறையோடும்
பையாட ரவமுடனே வைத்தார் பழனநகராரே. 7

*பொய்யா மொழியார் முறையால் ஏத்திப் புகழ்வார்; திருமேனி*
*செய்யார்; கரிய மிடற்றார்; வெண் நூல் சேர்ந்த அகலத்தார்;*
*கை ஆடலினார்; புனலால் மல்கு சடைமேல் பிறையோடும்*
*பைஆடு அரவம் உடனே வைத்தார் - பழன நகராரே.*

poyyA moziyAr muRaiyAl Ettip pukazvAr; tirumEn2i
ceyyAr; kariya miTaRRAr; veN nUl cErnta akalattAr;
kai ATalin2Ar; pun2alAl malku caTaimEl piRaiyOTum
pai ATu aravam uTan2E vaittAr--pazan2a nakarArE.

**பொருள்:** திருப்பழனத்து இறைவரான சிவபெருமானை பொய் கூறாத உண்மை அடியவர்கள் முறைப்படித் துதித்துப் புகழ்வார்கள். இவர் சிவந்த திருமேனி உடையவர். கரிய கண்டத்தை உடையவர். முப்புரிநூல் அணிந்த மார்பை உடையவர். கைகளைவீசி ஆடல் புரிபவர். கங்கை கூடிய சடைமுடிமீது பிறையையும், படப் பாம்பையும் ஒரு சேர வைத்தவர்.

**குறிப்புரை:** உண்மை அடியார்களால் வணங்கி வாழ்த்தப்படுமவர் பழனத்தார் என்கின்றது. பொய்யாமொழியார் – உண்மையே பேசும் அடியார்கள். மிடற்றார் – கழுத்தினை உடையவர். அகலத்தார் – மார்பினை உடையவர். பை – படம்.

Lord Civan of Thiru-p-pazhanam is duly and gloriously hailed and praised by devotees who never utter any falsehood in their lifetime. His body is ruddy; His neck is of dark blue colour. His chest is adorned with a white sacred thread. He dances by swaying His hands. He keeps in His matted hair the river Ganges, the crescent moon as well the hooded snake (all juxtaposed to each other).

மஞ்சோங் குயரமுடையான் மலையை மாறாயெடுத்தான்தோள்
அஞ்சோடஞ் சுமாறுநான்கு மடர வூன்றினார்
நஞ்சார் சுடலைப் பொடிநீ றணிந்த நம்பான் வம்பாரும்
பைந்தா மரைகள் கழனிசூழ்ந்த பழனநகராரே. 8

மஞ்சு ஓங்கு உயரம் உடையான் மலையை மாறுஆய் எடுத்தான் தோள்-
அஞ்சோடு அஞ்சும் ஆறும் நான்கும் அடர ஊன்றினார்;
நஞ்சார் சுடலைப் பொடி - நீறு அணிந்த நம்பான் - வம்பு ஆரும்
பைந்தாமரைகள் கழனி சூழ்ந்த பழனநகராரே.

manjcu Ogku uyaram uTaiyAn2 malaiyai mARu Ay eTuttAn2 tOL--
anjcOTu anjcum ARum nAn2kum aTara Un2Rin2Ar;
nanjcAr cuTalaip poTi-nIRu aNinta nampAn2--vampu Arum
paintAmaraikaL kazan2i cUznta pazan2a nakarArE.

**பொருள்:** மணம் கமழும் புதிய தாமரை மலர்களையுடைய வயல்களால் சூழப்பட்ட திருப்பழன நகரின் இறைவர் சிவபெருமான் ஆவார். ஆகாயம் அளவு உயர்ந்த தோற்றம் உடைய இராவணன், தனது பயணத்திற்கு இடையூறாக இருந்த கயிலை மலையைப் பெயர்த்த போது, இவர் அவனுடைய இருபது தோள்களும் நெரியுமாறு தனது கால்விரலை ஊன்றியவர் ஆவார். சுடலையில் எரிந்த நச்சுத் தன்மை பொருந்திய சாம்பலை அணிந்த சிவபெருமான் இவரே ஆவார்.

**குறிப்புரை:** இராவணனுடைய இருபது தோள்களும் வருந்த ஊன்றியவர் இவர் என்கின்றது. மஞ்சோங்கு உயரம் உடையான் – ஆகாயம் அளாவிய உயரம் உடையவன். மாறாய் – விரோதித்து அஞ்சோடு அஞ்சும் ஆறும் நான்கும் – இருபது. அடர – நெருங்க.

Lord Civan is entempled in Thiru-p-pazhanam which is encircled by fertile fields and pools where sweet smelling fresh lotus flowers blossom. Raavanan's stature is so tall and gigantic as to make it appear that his hand touches the clouds in the sky. Once he tried to uproot mount Kailas that was on his way. Lord Civa pressed the mountain by His toe whereby Raavanan's twenty shoulders were crushed. He smears His body with the poisonous ashes of the cremation ground.

கடியார் கொன்றைச் சுரும்பின் மாலைகமழ் புன்சடை யார்விண்
முடியாப் படிமூவடியா லுலகமுழு துந்தாவிய
நெடியான் நீள்தாமரை மேலயனும் நேடிக்காணாத
படியார் பொடியாட கலமுடையார் பழன நகராரே. 9

கடி ஆர் கொன்றைச் சுரும்பின் மாலை கமழ் புன்சடையார்; விண்
முடியாப் படி மூ அடியால் உலகம் முழுதும் தாவிய
நெடியான்; நீள் தாமரை மேல் அயனும் நேடிக் காணாத
படியார்; பொடி ஆடு அகலம் உடையார் - பழனநகராரே.

kaTi Ar kon2Raic curumpin2 mAlai kamaz pun2 caTaiyAr; viN
muTiyAp paTi mU aTiyAl ulakam muzutum tAviya
neTiyAn2, nIL tAmaraimEl ayan2um, nETik kANAta
paTiyAr; poTi ATu akalam uTaiyAr--pazan2a nakarArE.

**பொருள்:** திருப்பழன நகர் இறைவர் சிவபெருமான் ஆவார். இவர் மணம் கமழ்வதும், வண்டுகள் மொய்ப்பதுமான கொன்றை மாலையை மணம் கமழும் சிவந்த சடைமுடியில் அணிந்திருக்கின்றார். விண்ணை முடிவாகக் கொண்ட இவ்வுலகம் முழுவதையும் மூவடியில் அளந்த திருமாலும், நீண்ட தண்டின் மேல் வளர்ந்த தாமரை மலர் மேல் விளங்கும் நான்முகனும் தேடிக் காண முடியாத தன்மையை உடையவர் சிவபெருமான் ஆவார். திருநீற்றுப்பொடி அணிந்த மார்பினை உடையவர்.

**குறிப்புரை:** உலகத்தை மூவடியால் அளந்த திருமாலும் அயனும் தேடிக் கண்டுபிடிக்க முடியாத திருநீற்றழகர் இவர் என்கின்றது. கடி – மணம். கரும்பு – வண்டு. விண்முடியாப்படி – விண்ணை முடிவாகக் கொண்ட பூமி. நெடியான் – திருவிக்கிரமனாகிய திருமால். நேடி – தேடி. காணாதபடி ஆர் பொடி ஆடு அகலமுடையார் எனப் பிரித்து அவர்கள் காணாதவண்ணம் நிறைந்த திருநீற்றோடு அளாவிய மார்பை உடையவர் எனப் பொருள் காண்க.

Lord Civan of Thiru-p-pazhanam wears on His ruddy and fragrant matted hair the odorous cassia flower garlands buzzed by bees. Thirumaal once measured by his three steps the entire world for which the sky is the top. Brahma seated in the lotus flower which has bloomed on the top of long tubular stalk, and Thirumaal could not trace Lord Civa in spite of their serious search for Him. He smears His chest with holy ashes.

கண்டான் கழுவாமுன் னேயோடிக் கலவைக்கஞ்சியை
உண்டாங் கவர்களுரைக்குஞ் சிறுசொல்லோரார் பாராட்ட
வண்டா மரையின் மலர்மேல் நறவமது வாய்மிகவுண்டு
பண்டான் கெழும வண்டி யாழ்செய்யும் பழனநகராரே. 10

*கண் தான் கழுவாமுன்னே ஓடிக் கலவைக்கஞ்சியை*
*உண்டு ஆங்கு அவர்கள் உரைக்கும் சிறுசொல் ஓரார், பாராட்ட,*
*வண்தாமரை இன்மலர்மேல் நறவம் அது வாய் மிக உண்டு,*
*பண்தான் கெழும வண்டு யாழ் செய்யும் பழனநகராரே.*

kaN tAn2 kazuvA mun2n2E OTik kalavaik kanjciyai
uNTu Agku avarkaL uraikkum ciRu col OrAr, pArATTa,
vaN tAmarai in2malar mEl naRavam atu vAy mika uNTu,
paN tAn2 kezuma vaNTu yAz ceyyum pazan2a nakarArE.

**பொருள்:** வளமையான தாமரை மலர்மேல் சொரியும் தேனை வண்டுகள் வாயால் மிகுதியாக உண்ணுகின்றன. அவை பண்பொருந்த யாழ்ஒலி போன்று ஓசை எழுப்புகின்றன. இத்தகைய வளமான கழனிகளை உடைய திருப்பழன நகரில் சிவபெருமான் எழுந்தருளி உள்ளார். சமணர்கள், தங்களின் கண்களைக்கூடக் கழுவாமல், முந்திச் சென்று, கலவைக் கஞ்சியை உண்பவர்கள். இவர்கள் உரைக்கும் சிறுசொல்லைக் கேட்காத சான்றோர்கள் இங்குள்ள சிவபெருமானைப் பாராட்டிப் போற்றி வழிபடுகின்றனர்.

**குறிப்புரை:** கண்களைக் கூடக் கழுவாது கஞ்சி குடிக்கும் புறச்சமயிகளுடைய சிறுசொல்லை ஓராத அடியார்கள் பாராட்ட இருப்பவன் பழனத்தான் என்கின்றது. கலவைக் கஞ்சி – கலந்த கஞ்சி. வண்டு நறவமது உண்டு பண்கெழும யாழ்செய்யும் பழனம் எனக் கொண்டு கூட்டுக.

Lord Civan is entempled in Thiru-p-pazhanam. This city has fertile fields and pools where elegant lotus flowers blossom. Bees suck much honey from these flowers by their mouth, and hum their tunes. The humming noise of the bees is similar to the tuneful music of the lute. The Samanars without washing their eyes and face in the morning hours rush to and drink the mixed gruel. Devotees without listening to the baseless talk of Samanars, praise and worship Lord Civan always.

**Note:** The precepts of the Jains and the Buddhists are baseless words that convey no meaning.

வேய்முத் தோங்கிவிரை முன்பரக்கும் வேணுபுரந் தன்னுள்
நாவுய்த் தனையதிற லால்மிக்க ஞானசம்பந்தன்
பேசற்கினிய பாடல் பயிலும் பெருமான் பழனத்தை
வாயிற் பொலிந்த மாலை பத்தும் வல்லார் நல்லாரே. 11

*வேய் முத்து ஓங்கி, விரை முன் பரக்கும் வேணுபுரம் தன்னுள்*
*நா உய்த்தனைய திறலால் மிக்க ஞானசம்பந்தன்,*
*பேசற்கு இனிய பாடல் பயிலும் பெருமான் பழனத்தை*
*வாயில் பொலிந்த மாலை பத்தும் வல்லார் நல்லாரே.*

vEy muttu Ogki, virai mun2 parakkum vENupuram tan2n2uL
nA uyttan2aiya tiRalAl mikka njAn2acampantan2,
pEcaRku in2iya pATal payilum perumAn2 pazan2attai
vAyil polinta mAlai pattum vallAr nallArE.

**பொருள்:** வேணுபுர நகரில் மூங்கில் மரங்கள் ஓங்கி வளர்ந்து முத்துக்களை ஈன்று மணம் பரப்புகின்றன. இந்நகரில் உள்ளவர் ஞானசம்பந்தன். வல்ல திறன்மிக்க நாவினர். இவர் தன் வாயால், பேசுவதற்கு இனிமையான பாடல்களால், திருப்பழனப் பெருமான்மீது இப்பதிகத்தைப் பாடினார். பாமாலையாகிய இப்பதிகப் பத்துப்பாட்டையும் இசையுடன் பாடவல்லவர்கள் நல்லவர் ஆவார்கள்.

**குறிப்புரை:** பேசற்கு இனிய இப்பாடல் பத்தையும் வல்லார் நல்லார் என்கின்றது. வேய்முத்து – மூங்கிலில் தோன்றிய முத்து. விரை – மணம்.

In the city of Venupuram, bamboo trees grow very tall and yield pearls in their knuckles, spreading their aroma all around. Gnaanasambandan is an adept in singing divine music with his tongue. He has sung by his mouth these superb-songs on Lord Civa of Thiru-p-pazhanam. Those who can tunefully sing this garland of ten musical verses are indeed noble folks.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*67ஆம் பதிகம் முற்றிற்று*
End of 67th Hymn

உ
சிவமயம்

# 68. திருக்கயிலாயம்

## திருத்தலவரலாறு:

திருக்கயிலாயம் என்ற திருத்தலமானது வட நாட்டுத் தலம் ஆகும். இந்திய அரசு ஆண்டுதோறும் கயிலாய தரிசனம் விரும்பும் அன்பர்களைக் கட்டணத்துடன் தேர்வு செய்து அழைத்துச் சென்று இந்திய எல்லையில் கொண்டு வந்து சேர்க்கிறது. நேபாளம் திபெத்து வழியும் பயணம் செய்யலாம். சுந்தரர் வெள்ளை யானையின் மேல் ஏறி கயிலை சென்றதும் அப்பர் சுவாமிகள் உடலுறுப்புக்கள் தேய்ந்தொழியும் அளவு மன உறுதியோடு கயிலாய யாத்திரை புரிந்ததும் புராண வரலாறுகளிலே இடம் பெற்றுள்ளன. ஸ்ரீகயிலாயம் இமய மலையின் வடசாரலில் மேற்குத் திபெத்தில் அமைந்துள்ளது. அம்மலையின் தென்பகுதியில் திருக்கேதாரம் போன்ற தலங்கள் அமைந்துள்ளன. தேவாரம் பாடிய மூன்று சமயாசாரியர்களுள் சுந்தரர் சுவாமிகள் கயிலைக்கு இறுதியாக வெள்ளையானை மீது ஏறிச் சென்றார். அப்பர் சுவாமிகள் வடதிசைப் பெருந்தலங்களாக வழியில் உள்ள திருப்பருப்பதம் முதலான தலங்களை தரிசித்ததுக்கொண்டு தெலுங்கு, கன்னடம், மாளுவம், இலாடதேசம், மத்தியப்பிரதேசங்களைக் கடந்து காசியை அடைந்து விசுவேசனைத் தரிசித்து இன்புற்றார். திருநாவுக்கரசர் அடியார்களைக் காசியில் தங்க வைத்துவிட்டு தனியே இரவுபகலாய் காடுமேடு மலை மணற்பரப்புகளில் நடந்து சென்றார். இரவுபகலாய் நடந்து சென்றதால் நாவுக்கரசரின் திருவடிகள் பரடு வரை தேய்ந்தன. கால்களால் நடக்கலாற்றாது கைகளால் தாவிச் சென்றார். கைகளும் மணிக்கட்டு வரை தேய்ந்தன. மார்பினால் உந்திச் சென்றார். என்புகளும் தேய்ந்து முரிந்தன. எப்படியும் கயிலைநாதனைக் கண்டு இன்புறவேண்டும் என்ற வேட்கையால் புரண்டு புரண்டு சென்று உடலுறுப்புகள் முழுதும் தேய்ந்து ஓரிடத்தில் செயலற்று தங்கிக் கிடந்தார்.

பெருமான் திருநாவுக்கரசரை இன்னும் சிலகாலம் இவ்வுலகில் தீந்தமிழ்ப் பாமாலை பாடவேண்டும் என்று திருவுளங்கொண்டு அவர் கிடந்த இடத்தின் அருகே தடாகம் ஒன்று தோற்றுவித்து தாம் ஒரு முனிவர் வேடம் பூண்டு எதிரே நின்று நோக்கினார். "அங்கம் சிதைய இவ்வருங்கானில் வந்தது என்கருதி" என்று முனிவர் கேட்க, அப்பரும் இறைவனை திருக்கயிலையில் கண்டு தரிசித்து இன்புற வேண்டும் என்ற விருப்பத்தால் வந்ததைக் கூறினார். முனிவர் வடிவில் வந்த சிவபெருமான் "திருக்கயிலை மானிடர் சென்றடைதற்கு எளிதோ? திரும்பிச் செல்லும்; இதுவே தக்கது" என்று கூற, அப்பர், "என்னை ஆளும் நாயகன் கயிலையில்

இருக்கை கண்டல்லால் மாளும் இவ்வுடல் கொண்டு மீளேன்" என்று உறுதி மொழிந்தார். முனிவராய் வந்த பெருமான் மறைந்து அசரீரியாய் "நாவினுக்கரசனே! எழுந்திரு" என்று கூறினன். அப்பொழுதே உடல் நலம் பெற்று நாவுக்கரசர் எழுந்து பணிந்து "அண்ணலே கயிலையில் நின் திருக்கோலம் நண்ணி நான் தொழ நயந்தருள் புரி" எனப் பணிந்தார். பெருமான் மீண்டும் அசரீரியாய் "இத்தடாகத்தில் மூழ்கித் திருவையாற்றை அடைந்து நாம் திருக்கயிலையில் வீற்றிருக்கும் காட்சியைக் காண்க" என்று கூறினான். அவ்வாறே அப்பரும் திருவைந்தெழுத்தை ஓதிக் கொண்டே அத்தடாகத்தில் மூழ்கினார்.

இமயத்தில் உள்ள தடாகத்தில் மூழ்கியவர் திருவையாற்றில் உள்ள தடாகத்தில் எழுந்தார். உலகம் வியப்பக் கரையேறி ஆனந்தக்கண்ணீர் சொரிந்தார். ஐயாற்றிறைவரை வணங்கப் புகுமளவில் அங்குள்ள உயிர்கள் அனைத்தும் சத்தியும் சிவமுமாம் காட்சிகளைக் காட்டின. அப்பெருங்கோயில் கயிலையங்கிரியாகக் காட்சி அளித்தது. திருமால், பிரமன், இந்திரன் முதலானோர் போற்ற வேதம் முழங்க விண்ணவர், சித்தர், வித்யாதரர்களுடன் மாதவர் முனிவர் போன்ற இறைவன் அம்பிகையோடு எழுந்தருளியிருக்கும் அருட்காட்சி கண்டு ஆனந்தக் கூத்தாடினார்; பாடினார்; பல்வகைப் பாமாலைகளாலும் போற்றிப் பரவிப் புகழ்ந்து மகிழ்ந்தார்.

பெருமான் கயிலைக்காட்சியை மறைத்தருளினான். திருநாவுக்கரசர் திகைத்து இதுவும் இறைவன் திருவருளே என்று எண்ணித் தெளிந்து "மாதர் பிறைக்கண்ணியானை" என்ற திருப்பதிகம் பாடித்தொழுதார். பின்னும் பல பதிகங்கள் பாடித் திருவையாற்றில் பலநாள் தங்கி உழவாரப்பணி புரிந்து இன்புற்று இருந்தார்.

திருஞானசம்பந்தர் திருக்காளத்தி மலையில் இருந்தே திருக்கேதாரத்தையும், திருக்கயிலாயத்தையும் பாடியதாகச் சேக்கிழார் சுவாமிகள் குறிப்பிடுகிறார்.

**கயிலையின் அமைப்பு:**

இமய உச்சியின் வடபாகத்தில் சமுத்திர மட்டத்திற்கு 22,980 அடி உயரத்தில், தென் திசையை நோக்கியதாகக் கயிலை அமைந்து உள்ளது. வெள்ளியங்கிரி என்றதற்கேற்ப அம்மலை பனிபடர் மலையாகக் காணப்பெறுகின்றது. 47 கி.மீ. சுற்றளவு உடையதாய்ச் சமதளமாய் அமைந்து உள்ளது. பிராகாரம் போன்ற மலைச் சுவர்கள் செங்குத்தாக உள்ளன. அம்மலையில், சதுரம், முக்கோணம், வட்டம் போன்ற சித்திர வேலைப்பாடுடைய மேடைகளும் கைபுனைந்தியற்றாக் கவின்பெறு வனப்புடையனவாய்க் காட்சியளிக்கின்றன. இந்தியாவில் தென்குமரி முதல் இமயம் வரையுள்ள கோபுரங்கள் எத்தனை வகையுண்டோ அத்தனை மாதிரிக் கோபுரங்களும் கயிலையில்

காணக்கிடக்கின்றன. இறைவன் அம்மையப்பராய், தக்ஷிணாமூர்த்தியாய் எழுந்தருளிய திருக்கோலங்களும் இருக்கின்றன. தீர்த்தங்கள்: கௌரி குளம், மானசரோவர் போன்ற தீர்த்தங்களும் உள்ளன.

**பதிக வரலாறு:**

திருக்காளத்தியைத் தொழுது பாடிய காழிப்பிள்ளையார், அதற்கு அப்பால் வடக்கிலும் மேற்கிலும் தமிழ் வழங்கும் நாடின்மையால், காளத்தியிலிருந்தபடியே தேவர் வழிபாடு செய்யும் திருக்கயிலையை நினைந்து 'பொடிகொள் உருவர்' என்னும் இப்பதிகத்தை அருளிச் செய்தார்.

## 68. THIRU-K-KAILAAYAM

### THE HISTORY OF THE PLACE

This sacred place is located on the northern slope of the Himalayas in western Tibet. Every year, Government of India select pilgrims interested in visiting this place and conducts them to the border of India. One can take the route via Nepal and Tibet. In the southern reaches of the mountain are such temples as Thiruk Kethaaram etc.

Kayilai is at one of the peaks of the Himalayas at an elevation of 22980 ft. It faces the south, being located on the northern part of the mountain. Befitting its name, the silver mountain, the peak is laden with snow. It is in a plateau and has a circumference of 47 km. Around it are rocky mountain walls giving the impression of an ambulatory. In this mountain natural formations appear like square, triangular or circular platforms and give the impression of all kinds of gopurams (Temple Towers) found all over India. Formations resembling the Ammaiyappar image and the Dhakshinaa-murthi image could be seen.

According to legends, Saint Sundharar rode a white elephant to Kayilai. Of the three great Thevaaram hymnists, he was the only one who reached it directly. Saint Appar attempted to reach it even as his body wore out, as he crawled towards it with great determination. But the Lord gave Appar the vision of Kayilai in Thiruvaiyaaru. The poet-saint Sekkizhaar states that Saint Thirujnaanasambandhar sang about

Thiruketharam and Thiruk Kayilaayam, while being in Thiruk Kaalaththi hill. The sacred fords here include Gowrikulam and Manasarovar.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 68. திருக்கயிலாயம் 68. THIRU-K-KAILAAYAM

பண் : தக்கேசி *Pann: Thakkēsi*
ராகம் : காம்போதி *Raagam: Kaabothi*

பொடிகொளுருவர் புலியினதளர்புரி நூல்திகழ்மார்பில்
கடிகொள் கொன்றை கலந்தநீற் றர்கறை சேர்கண்டத்தர்
இடியகுர லாலிரியு மடங்கல் தொடங்கு முனைச்சாரல்
கடியவிடை மேற்கொடியொ ன்றுடையார் கயிலைமலையாரே. 1

*பொடி கொள் உருவர், புலியின் அதளர், புரி நூல் திகழ் மார்பில்*
*கடி கொள் கொன்றை கலந்த நீற்றர், கறை சேர் கண்டத்தர்,*
*இடிய குரலால் இரியும் மடங்கல் தொடங்கு முனைச்சாரல் -*
*கடிய விடை மேல் கொடி ஒன்று உடையார் - கயிலைமலையாரே.*

poTi koL uruvar, puliyin2 ataLar, purinUl tikaz mArpil
kaTi koL kon2Rai kalanta nIRRar, kaRai cEr kaNTattar,
iTiya kuralAl iriyum maTagkal toTagku mun2aiccAral--
kaTiya viTai mEl koTi on2Ru uTaiyAr--kayilai malaiyArE.

**பொருள்:** சிங்கங்கள் மேகங்களின் இடிக்குரல் கேட்டு பயந்து, நிலைகெட்டு ஓடத் தொடங்கும் சாரலை உடையது கயிலை மலை. இக்கயிலை மலையைத் தன் இருப்பிடமாகக் கொண்டு வாழுகின்றார் இறைவனாகிய சிவபெருமான். இவர் திருநீறு பூசிய திருமேனியை உடையவர். புலியின் தோலை உடுத்தியிருப்பவர். முப்புரி நூல் விளங்கும் மார்பில் மணம் கமழும் கொன்றை மாலையோடு திருநீற்றையும் அணிந்திருப்பவர். விடக்கறை பொருந்திய கண்டத்தை உடையவர். விரைந்து செல்லும் விடைமீது ஏறி, அவ்விடை எழுதிய கொடி ஒன்றையே தம் கொடியாகவும் கொண்டிருப்பவர்.

**குறிப்புரை:** கயிலைநாதனின் திருமேனிப்பூச்சு, உடை, ஆடை, அணி, ஊர்தி முதலியவற்றைக் கூறுகின்றது. பொடி – விபூதி. அதள் – தோல். பொடிகொள் உருவர் என்றது திருமேனி முழுதும் பூசப்பட்டதைக் குறித்தது. நீற்றர் என்பது மார்பில் அணிந்ததைக் குறித்தது. கறை – விடம். இடிய குரலால் – இடிக்குரலால். இரியும் – நிலைகெட்டு ஓடுகின்ற. மடங்கல் – சிங்கம். கடிய விடை – வேகமான இடபம்.

Lord Civan's abode is mount Kailas (Thiru-k-kailaayam) in the Himalayan range. Here the lions run helter-skelter in the sides and foot of the mountain on hearing the heavy noise of thunder. He smears His entire body with holy ashes. He is clad in a tiger skin. In His 'holy ash smeared' chest the triple sacred thread is seen along with the fragrant cassia flower garland. His neck is dark blue in colour. He rides on the fast running bull while the same bull figure is the insignia of His flag.

**Note:** Kailas is of two types. It is Bhu Kailas which is in the Himalayas. Sri Kailas is invisible to mortals.

புரிகொள் சடையாரடி யர்க்கெளியார் கிளிசேர்மொழி மங்கை
தெரியவுரு வில்வைத் துகந்த தேவர் பெருமானார்
பரியகளிற் றையரவு விழுங்கி மழுங்க இருள்கூர்ந்த
கரியமிடற் றர்செய்ய மேனிக்கயிலை மலையாரே. 2

*புரி கொள் சடையார்; அடியர்க்கு எளியார்; கிளி சேர் மொழி மங்கை*
*தெரிய உருவில் வைத்து உகந்த தேவர்பெருமானார்; -*
*பரிய களிற்றை அரவு விழுங்கி மழுங்க, இருள் கூர்ந்த -*
*கரிய மிடற்றர், செய்யமேனி; - கயிலைமலையாரே.*

puri koL caTaiyAr; aTiyarkku eLiyAr; kiLi cEr mozi magkai
teriya uruvil vaittu ukanta tEvar perumAn2Ar;--
pariya kaLiRRai aravu vizugki mazugka, iruL kUrnta--
kariya miTaRRar, ceyyamEn2i;--kayilaimalaiyArE.

**பொருள்:** பெரிய யானையை மலைப்பாம்பு விழுங்கி மறைகின்ற இருள் மிகுந்த இடம் கயிலை மலை. இங்கு விடம் உண்ட கரிய கண்டத்தை உடையவராகவும், சிவந்த திருமேனியராயும் சிவபெருமான் விளங்குகின்றார். இவர், வளைத்துக் கட்டிய சடைமுடியை உடையவர். அடியவர்க்கு எளிமையானவர். கிளிபோன்ற மெல்லிய மொழி பேசும் உமை மங்கையைப் பலருக்கும் தெரியுமாறு ஒருபாகமாகக் கொண்டு மகிழ்ந்திருப்பவர். இவர் தேவர்களுக்குத் தலைவராவார்.

**குறிப்புரை:** இதுவும் அது. கிளிசேர்மொழி மங்கை – கிளியையொத்த மொழியினை உடைய உமாதேவி. தெரிய – விளங்க. பரிய களிற்றை அரவு விழுங்கி மழுங்க இருள்கூர்ந்த கயிலை – பெரிய யானையை மலைப்பாம்பு விழுங்கி மறைய இருள்மிகுந்த கயிலை.

Lord Civan abides in mount Kailas in the deep darkened Himalayan range – Darkness, as brought about by the mountain snake swallowing a huge elephant. His

neck is of dark blue colour while His body frame is ruddy. He ties round on His head, His matted hair. He is easily accessible to His devotees. He is the Supreme Lord of Devas. He is happily and visibly concorporate with His consort Umaa Devi who speaks with a melodious voice like that of a parrot.

**Note:** On either side of the main entrance of the Big Temple in Thanjavur is an immense icon of Dvaarapaalakaa. The one on the right has a huge python. A close scrutiny of this python will reveal its act of swallowing alive, a huge elephant.

மாவினுரி வைமங்கை வெருவமூடி முடித்ன்மேல்
மேவுமதி யுநதியும் வைத்த இறைவர் கழலுன்னும்
தேவர்தே வர்திரிசூலத் தர்திரங்கன் முகவன்சேர்
கரவும்பொ ழிலுங்கடுங்கற் சுனைசூழ் கயிலைமலையாரே. 3

*மாவின் உரிவை மங்கை வெருவ மூடி, முடிதன்மேல்*
*மேவும் மதியும் நதியும் வைத்த இறைவர்; கழல் உன்னும்*
*தேவர்தேவர்; திரிசூலத்தர் - திரங்கல் முகவன் சேர்*
*கரவும் பொழிலும் கடுங்கல்சுனை சூழ் கயிலைமலையாரே.*

mAvin2 urivai magkai veruva mUTi, muTitan2 mEl
mEvum matiyum natiyum vaitta vin2aivar; kazal un2n2um
tEvar tEvar; tiricUlattar--tiragkal mukavan2 cEr
kAvum pozilum kaTugkal cun2ai cUz kayilaimalaiyArE.

**பொருள்:** குரங்குகள் வாழும் காடுகளும், பொழில்களும் மலைகளுக்கு இடையே இயற்கையாக அமைந்த சுனைகளும் சூழ்ந்த தலம் கயிலை மலையாகும். இங்கு, சிவபெருமானார், உமையம்மை அஞ்ச, யானையின் தோலை உரித்துப் போர்த்தியிருக்கின்றார். திருமுடியின்மீது பிறை, கங்கை ஆகியவற்றைக் கொண்டு இருக்கின்றார். திரிசூலத்தை உடையவர். தம் திருவடிகளை நினைந்து போற்றும் தேவர்கட்குத் தலையாய தேவராவார்.

**குறிப்புரை:** இதுவும் அது. மங்கை வெருவ மாவின் உரிவை மூடி – உமாதேவியார் அஞ்ச யானைத் தோலைப் போர்த்து. கழல் உண்ணும் – திருவடியைத் தியானிக்கின்ற. திரங்கல் முகவன் – குரங்குகள்.

Lord Civan abides in mount Kailas holding a trident in one of His hands. Here in the woods, and groves and near the natural springs monkeys having puckered face have a meaningful existence. Umaa Devi was terrified to see an elephant approaching

her; Civa killed it and wrapped His body with its skin. He retains the crescent moon as well the river Ganges on His matted hair. He is the Supreme Lord of all Devas who hail and adore His Holy Feet.

முந்நீர்சூழ் ந்தநஞ்சமுண் டமுதல்வர்ம தனன்றன்
தென்னீரு ருவமழியத் திருக்கண் சிவந்த நுதலினார்
மன்னீர்மடு வும்படுகல்ல றையினுழுவைசினங் கொண்டு
கன்னீர்வரை மேலிரைமுன் தேடுங்கயிலை மலையாரே. 4

முந்நீர் சூழ்ந்த நஞ்சம் உண்ட முதல்வர், மதனன்தன்
தென் நீர் உருவம் அழியத் திருக்கண் சிவந்த நுதலினார் -
மன் நீர் மடுவும், படு கல்லறையின் உழுவை சினம் கொண்டு
கல்-நீர் வரைமேல் இரை முன் தேடும் கயிலைமலையாரே.

munnIr cUznta nanjcam uNTa mutalvar, matan2an2 tan2
ten2 nIr uruvam aziyat tirukkaN civanta nutalin2Ar--
man2 nIr maTuvum, paTu kallaRaiyin2 uzuvai cin2am koNTu
kal-nIr varaimEl irai mun2 tETum kayilai malaiyArE.

**பொருள்:** இயற்கையாகத் தோன்றிய கயிலை மலைக் குகைகளில் புலிகள் வாழுகின்றன. இவைகள் பசியினால் சினமடைந்து, கல்லால் இயன்ற மலைமேல் இரையையும், அருந்துவதற்கு நிலைபெற்ற நீரினை உடைய சுனைகளையும் தேடுகின்றன. இந்தக் கயிலை மலையில் நம் தலைவராகிய சிவபெருமானார் உறைகின்றார். இவர் கடலில் பரவித் தோன்றிய நஞ்சினைத் திரட்டி உண்டவர். மன்மதனின் அழகிய உருவம் அழிய, நெற்றியில் சிவந்த கண்ணை உடையவர்.

**குறிப்புரை:** தென்நீர் உருவம் – அழகிய நீர்மையோடு கூடிய வடிவம். சிவந்த – கோபத்தாற் சிவந்த. மன்னீர் மடு – நிலைபெற்ற நீரினையுடைய சுனை. கல்லறை – குகை. உழுவை – புலி.

Lord Civan abides in mount Kailas where dwell tigers in the natural caves. They become angry because of hunger and roam all round the rocky range in search of prey and of springs to quench their thirst. The Lord once collected the pervasive poison that came out of the sea and swallowed it. He burnt the fair looking god of love Manmathan (*மன்மதன்*) by fire that came out of His reddish third eye in His forehead.

**Note:** Manmatha is symbolic of Kaaman which is desire. Desire breeds births.

Valluvar proclaimed thus "Desire the desire of Him who is without desire; in

order to renounce desire, desire that desire". The only One who is without desire is Civa.

ஒன்றும் பலவுமாய வேடத் தொருவர்கழல் சேர்வார்
நன்று நினைந்து நாடற்குரியார் கூடித்திரண் டெங்கும்
தென்றி யிருளில் திகைத்த கரிதண்சாரல் நெறியோடிக்
கன்றும் பிடியுமடி வாரஞ்சேர் கயிலை மலையாரே. 5

ஒன்றும் பலவும் ஆய வேடத்து ஒருவர், கழல் சேர்வார்
நன்று நினைந்து நாடற்கு உரியார் - கூடித் திரண்டு எங்கும்
தென்றி இருளில் திகைத்த கரி தண்சாரல் நெறி ஓடிக்
கன்றும் பிடியும் அடிவாரம் சேர் கயிலைமலையாரே.

on2Rum palavum Aya vETattu oruvar, kazal cErvAr,
nan2Ru nin2aintu nATaRku uriyAr--kUTit tiraNTu egkum
ten2Ri iruLil tikaitta kari taNcAral neRi OTi,
kan2Rum piTiyum aTivAram cEr kayilai malaiyArE.

**பொருள்:** யானைகள், இரவில் எங்கும் திரண்டு கூடிச் சிதறித் திகைக்கின்றன. இவைகள் குளிர்ந்த மலைச்சாரல் வழியே விரைந்து சென்று கயிலை மலையின் அடிவாரத்தில் கன்றும், பெண் யானையுமாக ஒன்று சேருகின்றன. இந்தக் கயிலை மலைக்கு உரிய இறைவர் சிவபெருமானாவார். இவர், ஒருவராக இருந்தே, ஒன்றாயும், பற்பலவாகிய வடிவங்களைக் கொண்டவருமான ஒப்பற்ற பரம்பொருளாவார். பேரின்பத்தை நாடுதற்கிடமான சிவபெருமானை, விரும்பித் தியானிப்பவர்கள், அவர் திருவடியைச் சேர்வார்கள்.

**குறிப்புரை:** ஒன்றும் பலவும் ஆய வேடத்தார் – ஒன்றாயும் விரிந்து பலவாயும் ஆகிய வேடத்தை உடையவர். கழல் சேர்வார் – திருவடியைத் தியானிப்பவர்கள். நன்று நினைந்து – பேரின்பத்தை விரும்பி. தென்றி – சிதறி. திகைத்த யானை மலைச்சாரல் வழியாக ஓடி, கன்றும் பிடியுமாக அடிவாரத்துச் சேரும் கயிலை என இயற்கை எடுத்துக் காட்டப் பெறுகிறது.

The Supreme Lord Civa who has no parallel abides in mount Kailas. Though He is a single supreme entity He takes many different forms as He desires, as and when necessitated. To those who sincerely adore and worship (His Holy Feet with a view to enjoy eternal Bliss), Civa is the only Supreme Being to approach for total redemption. In the Kailas mountain, female and calf elephants got separated from their male elephant and go astray in the dark night hours. Knowing this, male elephants rush

through the cool mountain ranges searching for them and finally succeed and get united. Such is the scenarieo at the foot hills of Kailai.

**Note:** Civa assumes many forms. He does so to help souls.

தாதார் கொன்றை தயங்குமுடியர் முயங்குமடவாளைப்
போதார் பாகமாக வைத்த புனிதர் பனிமல்கும்
மூதாருலகின் முனிவருடனாயற நான்கருள்செய்த
காதார் குழையர் வேதத்திரளர் கயிலைமலையாரே. 6, 7

*தாதுஆர் கொன்றை தயங்கும் முடியர், முயங்கு மடவாளைப்*
*போதுஆர் பாகமாக வைத்த புனிதர், பனி மல்கும்*
*மூதார் உலகில் முனிவர் உடன்ஆய் அறம் நான்கு அருள் செய்த*
*காதுஆர் குழையர், வேதத் திரளர் - கயிலைமலையாரே.*

tAtu Ar kon2Rai tayagkum muTiyar, muyagku maTavALaip
pOtu Ar pAkam Aka vaitta pun2itar, pan2i malkum
mUtAr ulakil mun2ivar uTan2 Ay aRam nAn2ku aruL ceyta
kAtu Ar kuzaiyar, vEtat tiraLar--kayilai malaiyArE.

**பொருள்:** கயிலை மலை இறைவர், மகரந்தம் நிறைந்த கொன்றை மாலை விளங்கும் முடியினை உடையவர். தம்மைத் தழுவிய உமையம்மையை மென்மையான இடப்பாகமாக ஏற்ற தூயவர். குளிர்ந்த இவ்வுலகின்கண் வயதால் முதிர்ந்த சனகர் முதலிய முனிவர்களுக்கு அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய நான்கையும் அருளிச் செய்தவர். வலக்காதில் குழை அணிந்தவர். வேத வடிவாய் விளங்குபவர்.

**குறிப்புரை:** தாது – மகரந்தம். போதார் பாகம் – மெல்லிய இடப் பாகம். உலகின் மூதார் முனிவர் – உலகத்தில் மிக வயது முதிர்ந்த முனிவராகிய சனகாதியர்.

The Lord of mount Kailas wears on His crest the garland of cassia flowers full of pollen grains. He is the pure and holy one who has accommodated in His soft left half of His body, His consort Umaa Devi who hugged Him. He imparted the divine knowledge of 'virtue', 'wealth', 'happiness', final emancipation from mortal existence and the attainment of eternal beatitude (அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கு உறுதிப் பொருள்கள்) to the aged saint Janakar (*சனகர்*) and his three associates. He wears in His right ear the ear jewel (*குழை*) (He is an embodiment of Vedas).

**Note:** Saiva Siddhantha declares that Civa assumes a human form for transmitting the shastra to humanity. Civa is the Guru of all the gurus.

தொடுத்தார் புரமூன்றெரியச் சிலைமேலெரி யொண்பகழியார்
எடுத்தான் திரள்தோள் முடிகள் பத்துமிடிய விரல்வைத்தார்
கொடுத்தார் படைகள் கொண்டாரா ளாக்குறுகி வருங்கூற்றைக்
கடுத்தாங் கவனைக்கழலா லுதைத்தார் கயிலைமலையாரே. 8

*தொடுத்தார், புரம் மூன்று எரியச் சிலைமேல் அரிஒண்பகழியார்;*
*எடுத்தான் திரள்தோள் முடிகள் பத்தும் இடிய விரல் வைத்தார்;*
*கொடுத்தார் படைகள்; கொண்டார், ஆளா; குறுகி வரும் கூற்றைக்*
*கடுத்து, ஆங்கு அவனைக் கழலால் உதைத்தார் - கயிலைமலையாரே.*

toTuttAr, puram mUn2Ru eriyac cilaimEl ari oN pakaziyAl;
eTuttAn2 tiraL tOL muTikaL pattum iTiya viral vaittAr;
koTuttAr, paTaikaL; koNTAr, ALA; kuRuki varum kURRaik
kaTuttu, Agku avan2aik kazalAl utaittAr--kayilai malaiyArE.

***பொருள்:*** கயிலை மலை இறைவர் முப்புரங்களை மேருவில்லை வளைத்து எரியாகிய ஒளி பொருந்திய அம்பைத் தொடுத்து எரித்து அழித்தவர். கயிலை மலையைப் பெயர்த்த இராவணனின் திரண்ட தோள்கள் பத்துத் தலைகள் ஆகியன நெரியுமாறு கால்விரலை ஊன்றியவர். அவன் பிழையுணர்ந்து வருந்த அவனை அடிமையாக ஏற்று வாள் முதலிய படைகள் கொடுத்தவர். மார்க்கண்டேயனின் உயிரைக் கவர அவன்மேல் நெருங்கி வந்த எமனைச் சினந்து அவனைக் காலால் உதைத்தவர்.

***குறிப்புரை:*** இராவணனை அடக்கி, வாள் கொடுத்தாண்டார் என்ற வரலாறு காட்டப்படுகிறது. எரிய, சிலைமேல், ஒண்பகழியார் தொடுத்தார் எனக் கூட்டுக. படை – வாள். ஆளாக்கொண்டார் – அடிமையாக ஆட்கொண்டார். கடுத்து – கோபித்து.

Lord Civan of mount Kailas fixed in His mountain bow the bright red dart of fire and burnt the three citadels of hostile Asuraas. He crushed the ten mighty shoulders and the ten heads of Raavanan who tried to uproot mount Kailas by pressing His toe on the mountain. When Raavanan realised his fault and begged for pardon, Civan enslaved him and gifted to him the divine sword and other missiles. Civa got enraged when Yama went near His devotee Maarkandeya to snatch away his life, and kicked him down with His ankleted foot.

**Note:** During Tripura Samhara Vishnu became this dart and Agni its tip.

ஊணாப் பலிகொண் டுலகிலேற் றாரிலகுமணி நாகம்
பூணா ணாரமாகப் பூண்டார் புகழுமிருவர்தாம்
பேணா வோடிநேட எங்கும் பிறங்கு மெரியாகிக்
காணா வண்ணமு யர்ந்தார்போலுங் கயிலைமலையாரே. 9

ஊணாப் பலி கொண்டு உலகில் ஏற்றார்; இலகு மணிநாகம்
பூண், நாண், ஆரம், ஆகப் பூண்டார்; புகழும் இருவர்தாம்
பேணா ஓடி நேட, எங்கும் பிறங்கும் எரி ஆகி,
காணா வண்ணம் உயர்ந்தார்போலும் - கயிலைமலையாரே.

UNAp pali koNTu ulakil ERRAr; ilaku maNi nAkam
pUN, nAN, Aram, Akap pUNTAr; pukazum iruvartAm
pENA OTi nETa, egkum piRagkum eri Aki,
kANA vaNNam uyarntAr pOlum--kayilai malaiyArE.

**பொருள்:** கயிலை மலை இறைவரான சிவபெருமானார், உலகில் மகளிர் இடும் பலியை உணவாகக் கொண்டு அதனை ஏற்பவர். விளங்கும் மணிகளைக் கொண்டுள்ள நாகங்களை அணிகலனாகப் பூண்டவர். எல்லோராலும் புகழப்பெறும் திருமால் பிரமர்கள் ஆகிய இருவரும் அடிமுடி காண விரும்பிச் சென்று தேடியும், அவர்கள் காண முடியாதபடி, எங்கும் விளங்கும் எரிஉருவோடு உயர்ந்து நின்றவர் இவர்.

**குறிப்புரை:** உலகில் பலி ஊணாக் கொண்டு ஏற்றார் எனக் கூட்டுக. பூண் நாண் ஆரமாக – பூணத்தகும் மாலையாக இருவர் – பிரம விஷ்ணுக்கள்.

Lord Civa, of mount Kailas accepts and receives the alms given by worldly folks as His food. He adorns Himself with serpents endowed with gems, as His jewels. When Thirumaal and Brahma (the two praised by all the world) went out searching for Him, He stood as a tall and mighty column of fire beyond their comprehension.

விருதுபகரும் வெஞ்சொற் சமணர்வஞ் சச்சாக்கியர்
பொருதுபகரு மொழியைக் கொள்ளார் புகழ்வார்க் கணியராய்
எருதொன்று கைத்திங்கிடுவார் தம்பாலிரந் துண்டிகழ்வார்கள்
கருதும் வண்ணமு டையார்போலுங் கயிலைமலையாரே. 10

விருது பகரும் வெஞ்சொல் சமணர், வஞ்சச் சாக்கியர்,
பொருது பகரு மொழியைக் கொள்ளார் புகழ்வார்க்கு அணியராய்,
எருது ஒன்று உகைத்து, இங்கு இடுவார் தம்பால் இரந்து உண்டு, இகழ்வார்கள்
கருதும் வண்ணம் உடையார் போலும் - கயிலைமலையாரே.

virutu pakarum venjcol camaNar, vanjcac cAkkiyar,
porutu pakarum moziyaik koLLAr pukazvArkku aNiyarAy,
erutu on2Ru ukaittu, igku iTuvAr tampAl irantu uNTu, ikazvArkaL
karutum vaNNam uTaiyAr pOlum--kayilai malaiyArE.

**பொருள்:** சமணர்கள் கொடுஞ்சொல் பேசுபவர்கள். தாம் பெற்ற விருதுகளைப் பலரிடமும் சொல்லிப் பெருமை கொள்ளும் இயல்பு உடையவர்கள். சாக்கியர் என்னும் பௌத்தர்கள் வஞ்சனையான மனமுடையவர்கள். இவர்கள் பிறசமயத்தாரிடம் சண்டையிடும் குணம் உடையவர்கள். அவர்கள் கூறும் நற்சொற்களைக் கேளாத குணமுடையவர்கள். கயிலை மலை இறைவரான சிவபெருமானார், தம்மைப் புகழ்ந்து போற்றித் துதிப்பவர்களுக்குச் சமீபமாக இருப்பவர். விடை ஒன்றைச் செலுத்துபவர். உணவிடுவார்பால் இரந்து உண்பவர். இகழ்பவரும் தம் பெருமையை நினைந்து போற்றும் இயல்பினை உடையவராய் விளங்குபவர்.

**குறிப்புரை:** விருது – பட்டங்கள். பொருது – மோதுதல் காரணமாக. எருது ஒன்று உகைத்து – ஓர் இடபத்தில் ஏறிச் செலுத்தி.

Jain folks are ever prone to boast about their accomplishments and broadcast their achievements to everyone. The cunning minded Buddhists quarrel against other religionists using harsh words. Lord Civa ignores these two sects, and comes closer to grace those who hail Him in all sincerity. He rides on His bull and accepts the alms given by willing persons and eats it. He is the Lord of mount Kailas with such a glorious nature that even those who tend to side line Him are forced to give proper consideration to Him.

Note: Lord Civa cannot be ignored. He is above praise and abuse.

போரார் கடலிற்புனல் சூழ்காழிப் புகழார்சம்பந்தன்
காரார் மேகங்குடி கொள்சாரற் கயிலைமலையார்மேல்
தேராவு ரைத்தசெஞ் சொன்மாலை செப்புமடியார்மேல்
வாரா பிணிகள் வானோருலகின் மருவுமனத்தாரே. 11

போர் ஆர் கடலில் புனல் சூழ் காழிப் புகழ் ஆர் சம்பந்தன்,
கார் ஆர் மேகம் குடிகொள் சாரல் கயிலைமலையார்மேல், -
தேரா உரைத்த செஞ்சொல்மாலை செப்பும் அடியார்மேல்
வாரா, பிணிகள்; வானோர் உலகின் மருவும் மனத்தாரே.

pOr Ar kaTalil pun2al cUz kAzip pukaz Ar campantan2,
kAr Ar mEkam kuTikoL cAral kayilai malaiyAr mEl,--
tErA uraitta cenjcol mAlai ceppum aTiyAr mEl
vArA, piNikaL; vAn2Or ulakil maruvum man2attArE.

**பொருள்:** கரையோடு போர் செய்வது போன்ற தோற்றத்தை உடைய கடல் நீரால் சூழப்பட்ட தலம் சீகாழிப் பதி. இப்பதியில் தோன்றியவர் புகழ் பொருந்திய ஞானசம்பந்தன். இவர், கரிய மேகங்கள் நிலையாகத் தங்கியுள்ள கயிலைமலை இறைவர்மேல், இத்திருப்பதிகத்தைத் தெளிந்து உரைத்தார். இச்செஞ்சொல் மாலையை ஓதும் அடியவர்க்குப் பிணிகள் வாரா. அவர்கள் வானோர் உலகத்தில் கலந்துவிடும் மனதை உடையவர்கள் ஆவார்கள்.

**குறிப்புரை:** கயிலைமலையாரைச் சொன்ன செஞ்சொல் மாலை வல்லார்மேல் பிணிகள் வாரா; வானோர் உலகத்தில் மருவுவர் என்கின்றது. தேரா – தெளிந்து.

The far-famed and pre-eminent Gnaanasambandan of Seekaazhi, which is close to the sea that besieges its shores, has sung these lucid hymn on the Lord of mount Kailas. Here in the Himalayan ranges thick clouds rest permanently, making the area dark, on the slopes of the range. Diseases will not affect those who can recite this garland of elegant verses. Their minds are set towards joining the world of the supernal.

**Note:** The hymns of our saint are in themselves living and vivifying benediction.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*68ஆம் பதிகம் முற்றிற்று*
End of 68th Hymn

உ
சிவமயம்

## 69. திரு அண்ணாமலை

### திருத்தலவரலாறு:

பத்தாம் பதிகம் பார்க்க.

### பதிக வரலாறு:

திருஅறையணி நல்லூரை வழிபட்ட புகலிப் பிள்ளையார் தேவரும் முனிவரும் வணங்கும் திருவண்ணாமலையை அன்பர்கள் காட்டக் கண்டார். அண்ணாமலை, சிவனுருவாகக் காட்சி வழங்குதலும், தமது கண்களால் அக்காட்சியைப் பருகி, பெருமானை வழிபட்டு இப்பதிகத்தைப் பாடினார்கள்.

## 69. THIRU-ANNAAMALAI

### THE HISTORY OF THE PLACE

See Tenth Hymn.

### INTRODUCTION TO THE HYMN

The godly child adored the Lord-God at Araianinallur from where Thiruvannaamalai was visible. When devotees brought this to his notice our saint beheld it as the very form of Civa. Then he sang the following hymn in adoration of the holy mountain.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 69. திருவண்ணாமலை — 69. THIRU-ANNAAMALAI

பண் : தக்கேசி — *Pann: Thakkēsi*
ராகம் : காம்போதி — *Raagam: Kaabothi*

பூவார் மலர்கொண் டடியார் தொழுவார் புகழ்வார் வானோர்கள்
மூவார் புரங்க ளெரித்த வன்று மூவர்க் கருள்செய்தார்
தூமா மழைநின் றதிர வெருவித் தொறுவின் னிரையோடும்
ஆமாம் பிணைவந் தணையுஞ் சார லண்ணா மலையாரே. 1

பூ ஆர் மலர் கொண்டு அடியார் தொழுவார், புகழ்வார், வானோர்கள்;
மூவார் புரங்கள் எரித்த அன்று மூவர்க்கு அருள் செய்தார் -
தூ மாமழை நின்று அதிர, வெருவித் தொறுவின் நிரையோடும்
ஆமாம்பிணை வந்து அணையும் சாரல் அண்ணாமலையாரே.

pU Ar malar koNTu aTiyAr tozuvAr; pukazvAr, vAn2OrkaL;
mUvAr puragkaL eritta an2Ru mUvarkku aruL ceytAr--
tU mAmazai nin2Ru atira, veruvit toRuvin2 niraiyOTum
AmAm piNai vantu aNaiyum cAral aNNAmalaiyArE.

**பொருள்:** நீர்த்துளிகளைத் தூவும் கரிய மேகங்கள் வானத்தில் நின்றவாறு இடி முழக்கம் செய்கின்றன. அதனைக் கேட்டு அஞ்சிய ஆட்டு மந்தைகளும் காட்டுப் பசுக்களும் வரிசையாக வந்து திருவண்ணாமலையின் அடிவாரத்தில் ஒதுங்குகின்றன. இத்திருவண்ணாமலையின் இறைவரான சிவபெருமானை, அடியவர்கள் பொலிவு மிக்க நறுமலர்களைத் தூவி வழிபடுகின்றனர். வானோர்கள் புகழ்ந்து போற்றுகின்றனர். அழியாவரம் பெற்ற அசுரர்களின் முப்புரங்களையும் எரித்து அழித்தவர் இவர். அவ்வசுரர்களில் மூவர்க்கு அருளையும் இப்பெருமான் வழங்கியவர்.

**குறிப்புரை:** அடியார்கள் மலர்கொண்டு அடிவணங்குவார்கள்; தேவர்கள் தோத்தரிப்பார்கள்; இங்ஙனமாகத் திரிபுரம் எரித்த பெருமான் அண்ணாமலையார் ஆவர் என்கின்றது. பூஆர் மலர் – போதும் விரிந்த பூவும். மூவார் – அழியாதவர்கள். மூவர் – திரிபுராதிகள். தொறுவின் நிரையோடும் – ஆட்டு மந்தை வரிசையோடும். ஆமாம் பிணை – காட்டுப் பசுக்கள்.

The black clouds over Thiru-annaa-malai hills create thunder and precipitate water particles from the sky. By hearing this thunderous noise, rows of sheep and forest cows move on and reach the foothill of this mountain. Lord Civa who is entempled in this place is worshipped devotees by offering elegant and aromatic flowers. The Devaas praise and adore Him. This Lord Civa destroyed the three citadels of hostile Asuraas, who once before had received the boon of deathlessness from Him. However, Civa saved and graced three Asuraas among the group who were sincere to Him and gave them protection under His custody.

**Note:** Even today Annaamalai is rich in pastures.

மஞ்சைப் போழ்ந்த மதியஞ் சூடும் வானோர் பெருமானார்
நஞ்சைக் கண்டத் தடக்கு மதுவும் நன்மைப் பொருள்போலும்
வெஞ்சொற் பேசும் வேடர் மடவா ரிதண மதுவேறி
அஞ்சொற் கிளிக ளாயோ வென்னு மண்ணா மலையாரே. 2

*மஞ்சைப் போழ்ந்த மதியம் சூடும் வானோர் பெருமானார் -*
*நஞ்சைக் கண்டத்து அடக்குமதுவும் நன்மைப் பொருள் போலும் -*
*வெஞ்சொல் பேசும் வேடர்மடவார் இதணம்அதுஏறி,*
*அம்சொல் கிளிகள், "ஆயோ!" என்னும் அண்ணாமலையாரே.*

manjcaip pOznta matiyam cUTum vAn2Or perumAn2Ar--
nanjcaik kaNTattu aTakkumatuvum nan2maip poruL pOlum--
venjcol pEcum vETar maTavAr itaNam atu ERi,
am col kiLikaL, "AyO!" en2n2um aNNAmalaiyArE.

**பொருள்:** வேடர்கள் கொடிய சொற்களான, 'வெட்டு, குத்து, கொல்லு' என்பனவற்றையே பேசுவர். அவர்களின் பெண் மகளிர், தினைப்புனங்களில் பரண்மீது ஏறி இருப்பர். அங்கிருந்து தினைகளை உண்பதற்கு வருகின்றதும், அழகிய சொற்களைப் பேசுவதுமாகிய கிளிகளை 'ஆயோ' என ஒலி எழுப்பி விரட்டுவர். இப்படிப்பட்ட அழகிய நிலத்தை உடைய திருவண்ணாமலையின் இறைவர் சிவபெருமானார் ஆவார். இவர், மேகங்களைக் கிழித்துச் செல்லும் பிறைமதியைச் சூடியிருப்பவர். வானோர்களின் தலைவரும் இவரே. கடலிடைத் தோன்றிய நஞ்சை உண்டு அதைக் கண்டத்தில் அடக்கியவர். உலகத்தை அழியாது காக்கும் நன்மை கருதிச் செய்தவர் ஆவார்.

**குறிப்புரை:** அண்ணாமலையாராகிய பிறைசூடிய பெருமான் நஞ்சையுண்டதும் நன்மை கருதியேயாம் என்கின்றது. மஞ்சு – மேகம். வெஞ்சொல் பேசும் வேடர் – பிடி எறி குத்து கொல்லு என்ற கொடிய சொற்களையே பேசுகிற வேடர்கள். மடவார் – வேட்டுவத்தி. இதணம் – பரண். ஆயோ என்பது கிளி ஓட்டும் ஒலிக் குறிப்பு.

In Thiru-annaa-malai area millet (Panicum italicum) fields are in plenty. The young girls of hunters who own these fields, look after the gardens mainly to drive away the parrots that make pleasant sounds resembling like human voice. The parrots come to these fields to eat the grains. The girls sitting on the raised platform in the centre of the fields and shout, making a sound Aayoo (ஆயோ) to chase the parrots, that fly away then. Normally the hunter speak using cruel words such as 'stab', 'kill', etc.,

(குத்து, வெட்டு முதலின), but their girls do not. Lord Civan of this place - the Chief of Devaas - retains in view in His matted hair, the crescent moon that passes through cleaving the clouds. He swallowed the poison that came out of the sea and retained it in His throat. Lo! He did this to save the world from total annihilation.

Note: In olden days the crops of millet-fields were tended with care by lasses.

ஞானத் திரளாய் நின்ற பெருமான் நல்ல அடியார்மேல்
ஊனத் திரளை நீக்கு மதுவு முண்மைப் பொருள்போலும்
ஏனத் திரளோ டினமான் கரடி யிழியு மிரவின்கண்
ஆனைத் திரள்வந் தணையுஞ் சாரலண்ணா மலையாரே. 3

ஞானத்திரள்ஆய் நின்ற பெருமான் - நல்ல அடியார்மேல்
ஊனத்திரளை நீக்குமதுவும் உண்மைப்பொருள்போலும் -
ஏனத்திரளோடு இனமான் கரடி இழியும் இரவின்கண்
ஆனைத்திரள் வந்து அணையும் சாரல் அண்ணாமலையாரே.

njAn2attiraL Ay nin2Ra perumAn2--nalla aTiyAr mEl
Un2attiraLai nIkkumatuvum uNmaip poruL pOlum--
En2attiraLOTu in2amAn2 karaTi iziyum iravin2kaN
An2aittiraL vaŋtu aNaiyum cAral aNNAmalaiyArE.

**பொருள்:** இரவில், பன்றிகளின் கூட்டமும், மான் இனங்களும், கரடிகளும், யானைகளின் கூட்டமும், மலைச்சாரலில் ஒருங்கே இறங்கி வருகின்றன. இந்தத் திருவண்ணாமலையின் இறைவர், ஞானப்பிழம்பாய் நிற்கும் சிவபெருமானார் ஆவார். நன்மைகளையே கருதும் அடியவர்களின் ஊனுடலோடு பிறக்கும் பிறவித் தளைகளை நீக்குபவர். இவ்வருட்செயல், வேதாகம நூல்கள் உணர்த்தும் உண்மைப் பொருளாகும்.

**குறிப்புரை:** ஞானப் பிழம்பாய் நிற்கும் அண்ணாமலையார் நல்ல அடியார்மேல் வருங்குற்றங்களை நீக்குவதும் உண்மையே போலும் என்கின்றது. திரள் - பிழம்பு. ஊனத்திரள் - குறைகளின் குவியல். உடம்பு என்றுமாம். உண்மைப்பொருள் - சத்தியம் போலும் என்பது ஒப்பில் போலி. ஏனத்திரள் - பன்றிக் கூட்டம். ஆனை - யானை.

Lord Civan entempled in Thiru-annaa-malai is an embodiment of wisdom. For those sincere devotees who always think good and adore Him, grants relief from the cycle of birth and death. This divine act is praised in the Vedas and Aagamaas, for

which He is the author. In this town Thiru-annaa-malai, during night hours herds of hogs, deer and bear descend down from the top of the hill to the slopes where the elephants also come and join these animals.

**Note:** The mountain of Annaamalai was once a jungle where wild animals flourished in large numbers.

இழைத்த இடையா ளுமையாள் பங்க ரிமையோர் பெருமானார்
தழைத்த சடையார் விடையொன் றேறித் தரியார் புரமெய்தார்
பிழைத்த பிடியைக் காணா தோடிப் பெருங்கை மதவேழம்
அழைத்துத் திரிந்தங் குறங்குஞ் சார லண்ணா மலையாரே. 4

இழைத்த இடையாள் உமையாள் பங்கர், இமையோர்பெருமானார்,
தழைத்த சடையார், விடைஒன்று ஏறித் தரியார் புரம் எய்தார் -
பிழைத்த பிடியைக் காணாது ஓடிப் பெருங்கை மதவேழம்
அழைத்துத் திரிந்து, அங்கு உறங்கும் சாரல் அண்ணாமலையாரே.

izaitta iTaiyAL umaiyAL pagkar, imaiyOr perumAn2Ar,
tazaitta caTaiyAr, viTai on2Ru ERit tariyAr puram eytAr--
pizaitta piTiyaik kANAtu OTip perugkai matavEzam
azaittut tirintu, agku uRagkum cAral aNNAmalaiyArE.

**பொருள்:** பெரிய தும்பிக்கையை உடைய மதம் பொருந்திய ஆண் யானை, தன்னை விட்டுப் பிரிந்த பெண் யானையைக் காணாது, குரல் கொடுத்து அழைக்கிறது. தேடித் திரிந்து, அலுப்படைந்து மலைச் சாரலில் உறங்குகின்றது. இந்தத் திருவண்ணாமலை இறைவர் சிவபெருமானார் ஆவார். இவர், நூல் போன்ற நுண்ணிய இடையினை உடைய உமையம்மையை ஒரு பாகமாக உடையவர். தேவர்களுக்கு தேவரானவர். தளைத்த சடையினை உடையவர். விடைமீது ஏறிச் சென்று பகைவரின் முப்புரங்களை எரித்தவர்.

**குறிப்புரை:** உமைபங்கர், தேவதேவர், தாழ்சடையார், விடையேறி, திரிபுரம் எய்தவர் இவர் என்கின்றது. இழைத்த – நூலிழையின் தன்மையையுடைய, தரியார் – பகைவர். பிழைத்த – தவறிய, பெரிய களிறு தன்னை விட்டுப் பிரிந்த பெண் யானையைக் காணாமல் அழைத்துச் சுற்றி அலுத்துப்போய் உறங்கும் சாரல் என மலையியற்கை கூறியவாறு.

In the hills of Thiru-annaa-malai, the rutting male elephant (*மதயானை*) with long trunk trumpets aloud to find out the whereabouts of its mate which has gone astray. It roams all over the hills unsuccessfully, becomes tired and falls down to sleep in the

slopes of the mountain. Lord Civan of this place concorporates on the left side of His body, His consort Umaa Devi whose waist is as narrow as a thread. He has luxuriant matted hair. He is the Supreme Lord of all the celestials. Riding on His bull, Civa went and destroyed the three citadels of the hostile Asuraas.

**Note:** The love of the male elephant for its mate is proverbial. The bull on which Civa went and destroyed the citadels in this case is Thirumaal.

உருவிற் றிகழு முமையாள் பங்க ரிமையோர் பெருமானார்
செருவில் லொருகால் வளைய வூன்றிச் செந்தீ யெழுவித்தார்
பருவிற் குறவர் புனத்திற் குவித்த பருமா மணிமுத்தம்
அருவித் திரளோ டிழியுஞ் சார லண்ணா மலையாரே. 5

உருவில்-திகழும் உமையாள் பங்கர், இமையோர்பெருமானார்,
செரு வில் ஒரு கால் வளைய ஊன்றிச் செந்தீ எழுவித்தார் -
பரு வில் குறவர் புனத்தில் குவித்த பரு மா மணி முத்தம்
அருவித்திரளோடு இழியும் சாரல் அண்ணாமலையாரே.

uruvil-tikazum umaiyAL pagkar, imaiyOr perumAn2Ar,
ceru vil oru kAl vaLaiya Un2Ric centI ezuvittAr--
paru vil kuRavar pun2attil kuvitta paru mA maNi muttam
aruvittiraLOTu iziyum cAral aNNAmalaiyArE.

**பொருள்:** குறவர்கள் பெரிய வில்லை ஏந்தியிருக்கின்றனர். அவர்களின் விளைநிலங்களின் வரப்புக்களின்மேல் குவித்து வைத்திருக்கும் பெரிய முத்துக்களும் மணிகளும் அருவித் திரளோடு மலைச்சாரலில் இறங்குகின்றன. இந்தத் திருவண்ணாமலையின் இறைவர் சிவபெருமானார் ஆவார். இவர், உருவத்தால் அழகிய உமையவளை ஒருபாகமாகக் கொண்டவர். இமையவர்களுக்குத் தலைவர். பெரிய போர் வில்லை ஒரு காலால் வளைத்துக் கணை எய்து, முப்புரங்களையும் செந்தீயால் எரித்து அழித்தவர்.

**குறிப்புரை:** ஒரே உருவில் விளங்கும் உமையொருபாகர், வில் வளைத்துத் திரிபுரத்தைச் செந்தீயாட்டியவர் இவர் என்கின்றது. செரு – போர். வில் ஒருகால் வளைய ஊன்றி – வில்லினது ஒரு தலையை வளைவதற்காகக் காலிற் பெருவிரலால் ஊன்றி. பருவில் குறவர் – பருத்த வில்லையுடைய குறவர்கள். குறவர் குவித்த முத்தங்கள் அருவியோடு இழியும் சாரல் அண்ணாமலை என்க.

The Kuravars (*குறவர்கள்* – mountain tribes who live by hunting) carry big bows in their hands. They heap on the ridges of their farmland big pearls and ruby gems.

These gems are washed away by the waterfalls and reach the plains in Thiru-annaa-malai. Such indeed is the fertile land where Lord Civa is entempled. He is concorporate here with His radiant consort Umaa Devi. He is the Chief of the celestial. By pressing His foot on the big martial bow and causing it to bend, He shot the arrow emitting fire, destroying the three citadels of hostile Asuraas.

**Note:** Pearl-yielding bamboos flourished here in the past.

எனைத் தோரூழி யடியா ரேத்த இமையோர் பெருமானார்
நினைத்துத் தொழுவார் பாவந் தீர்க்கும் நிமல ருறைகோயில்
கனைத்த மேதி காணா தாயன் கைம்மேற் குழலூத
அனைத்து ஞ்சென்று திரளுஞ் சார லண்ணா மலையாரே. 6

*எனைத்து ஓர் ஊழி அடியார் ஏத்த, இமையோர் பெருமானார்,*
*நினைத்துத் தொழுவார் பாவம் தீர்க்கும் நிமலர், உறை கோயில் -*
*கனைத்த மேதி காணாது ஆயன் கைம்மேல் குழல் ஊத,*
*அனைத்தும் சென்று திரளும் சாரல் அண்ணாமலையாரே.*

en2aittu Or Uzi aTiyAr Etta, imaiyOr perumAn2Ar,
nin2aittut tozuvAr pAvam tIrkkum nimalar, uRai kOyil--
kan2aitta mEti kANAtu Ayan2 kaimmEl kuzal Uta,
an2aittum cen2Ru tiraLum cAral aNNAmalaiyArE.

**பொருள்:** மலைச்சாரலில் புல் மேயச் சென்ற எருமைகளைக் காணாததால், ஆயன் தன் கையிலிருந்த குழலினை ஊதுகிறான். அந்த ஒலியைக் கேட்டவுடன் அனைத்து எருமைகளும் வீடுதிரும்பும் விருப்பத்துடன் மலையடிவாரத்தில் ஒன்று சேருகிறது. இந்தத் திருவண்ணாமலை இறைவர் சிவபெருமானார் ஆவார். இவர் பல ஊழிக்காலங்களைக் கண்ட பழையோன் ஆவார். அடியவர்கள் தன்னைத் துதிக்க இமையவர் தலைவனாய் விளங்குகின்றார். தன்னை நினைத்துத் தொழும் அன்பர்களின் பாவங்களைத் தீர்த்தருளுகின்ற நிமலன் இவர். இந்த நிமலர் உறையும் கோயில் திருவண்ணாமலை ஆகும்.

**குறிப்புரை:** நினைத்துத் தொழுவார் பாவந்தீர்க்கும் நிமலர் உறைகோயில் அண்ணாமலையார் என்கின்றது. எனைத்து ஓர் ஊழி – எத்தகையதோர் ஊழியிலும், கனைத்த – ஒலித்த. மேதிகளைக் காணாத ஆயன் குழலூத அவைகள் எல்லாம் திரளும் சாரல் என்க. மேதி – எருமை.

**குருவருள்:** 'எனைத்தோ ரூழி அடியார் ஏத்த இமையோர் பெருமானார் நினைத்துத் தொழுவார் பாவம் தீர்க்கும் நிமலர் உறை கோயில்' என்ற தொடரில் நினைத்தால் முத்தி தரும் தலம் திருவண்ணாமலை என்ற குறிப்பு காணப்படுகிறது. நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் 'அண்ணாமலையார் துணை' என்றே

கையெழுத்திடுவர் கடிதங்களில். அதுபற்றி விசாரித்தபொழுது, நினைத்தால் முத்தி தரும் தலம் அண்ணாமலை என்பதால், 'அண்ணாமலையார் துணை' என்று போடுகிறார்கள் என்று ஒரு நகரத்தார், கருப்பன் செட்டியார் என்பவர் குறிப்பிட்டார். இது இப்பாடல் கருத்திற்கு அரணாகவே உள்ளமை காண்க.

The cowherd who took his buffaloes to the mountain area (Annaamalai) for grazing, could not locate them at the end of the day, though they were roaring and grazing all through the day. He, therefore, played music in his flute. By hearing the musical tone, all the buffaloes moved towards the foot of the hills with a desire to return home. Such indeed is Thiru-annaa-malai where Lord Civan who is ever pure and Supreme (நிமலன்) is enshrined. He is the Chief of all celestials. Devotees adore and worship Him. He is for ever in existence for aeons without any beginning or end. He annihilates the sins of His devotees who merely think and adore Him in their minds. The huge temple in Thiru-annaa-malai is the place where this Lord Civa is enshrined showering graces on all.

**Note:** The power of the music in the flute of the cowhred is beautifully described in this verse.

Mere thinking on Thiru-annaa-malai and Lord Civa therein, will give one final emancipation from mortal existence and the attainment of eternal beatitude (நினைத்தால் முத்தி தரும் தலம் திருஅண்ணாமலை). This fact is broughtout in this verse.

வந்தித் திருக்கு மடியார் தங்கள் வருமேல் வினையோடு
பந்தித் திருந்த பாவந் தீர்க்கும் பரம னுறைகோயில்
முந்தி யெழுந்த முழவி னோசை முதுகல் வரைகள்மேல்
அந்திப் பிறைவந் தணையுஞ் சார லண்ணா மலையாரே. 7

வந்தித்திருக்கும் அடியார் தங்கள் வரு மேல்வினையோடு
பந்தித்திருந்த பாவம் தீர்க்கும் பரமன் உறை கோயில் -
முந்தி எழுந்த முழவின் ஓசை முதுகல்வரைகள்மேல்
அந்திப் பிறை வந்து அணையும் சாரல் அண்ணாமலையாரே.

vantittirukkum aTiyAr tagkaL varu mEl vin2aiyOTu
pantittirunta pAvam tIrkkum paraman2 uRai kOyil--
munti ezunta muzavin2 Ocai, mutu kal varaikaL mEl
antip piRai vantu aNaiyum cAral aNNAmalaiyArE.

**பொருள்:** விழா நிகழ்ச்சிகளை முன்னதாக அறிவித்து எழும் முழவின் ஓசை இடைவிடாமல் கேட்கும் தலம் இது. பழமையான மலைப் பாறைகளுக்கு இடையே, அந்திக் காலத்துப் பிறை வந்து அணையும் மலை இதுவாகும். இத்திருவண்ணாமலை இறைவர் சிவபெருமான் ஆவார். தன்னை வழிபட்டு வேறு எண்ணங்கள் இல்லாமல் இருக்கும் அடியவர்களின் ஆகாமிய வினைகளையும், அவர்களைப் பந்தித்திருக்கும் சஞ்சித வினைகளையும் போக்கி அருளும் பரமனாவார். அவரது கோயில் திருவண்ணாமலை ஆகும்.

**குறிப்புரை:** தொழும் அடியார்களின் ஆகாமிய சஞ்சித வினைகளைத் தீர்க்கும் பரமன் உறை கோயில் அண்ணாமலை என்கின்றது. வந்தித்து இருக்கும் – வழிபட்டுச் சோகம் பாவனையில் இருக்கும். பந்தித் திருந்த – ஆன்மாவின் அறிவை மறைத்திருந்த பெரிய பாறைகளில் அந்திப் பிறை அணையும் சாரல் என்பது அண்ணாமலையே பிறை சூடிய பெருமானாகக் காட்சியளிப்பதைக் கருதி.

In the Thiru-annaa-malai town the loud proclamation about the on coming festivals by beats of drums never ceases. The crescent moon makes its appearance in the cleft of the hoary rocky mountain at dusk (The hidden meaning of this line is that the mountain represents Lord Civa while the crescent moon at dusk is the one He wears in His matted hair). Lord Civa is the Supreme who annuls annihilates the two kinds of sins of His devotees - one, accumulated in all the previous births minus that which is being undergone, called Sanchitham (*சஞ்சிதம்*); and the second is the present sin committed during the present birth called Aahaamiyam (*ஆகாமியம்*). This Lord Civan's temple is in Thiru-annaa-malai town.

மறந்தான் கருதி வலியை நினைந்து மாறாயெடுத் தான்றோள்
நிறந்தான் முரிய நெரிய வூன்றி நிறைய வருள்செய்தார்
திறந்தான் காட்டி யருளா யென்று தேவ ரவர்வேண்ட
அறந்தான் காட்டி யருளிச் செய்தா ரண்ணா மலையாரே. 8

*மறம்தான் கருதி, வலியை நினைந்து, மாறுஆய் எடுத்தான் தோள்*
*நிறம்தான் முரிய, நெரிய ஊன்றி, நிறைய அருள் செய்தார் -*
*"திறம் தான் காட்டி அருளாய்!" என்று தேவர்அவர் வேண்ட,*
*அறம்தான் காட்டி அருளிச் செய்தார் அண்ணாமலையாரே.*

maRam tAn2 karuti, valiyai nin2aintu, mARu Ay eTuttAn2 tOL
niRam tAn2 muriya, neriya Un2Ri, niRaiya aruL ceytAr--
"tiRam tAn2 kATTi aruLAy!" en2Ru tEvar avar vENTa,
aRamtAn2 kATTi, aruLic ceytAr aNNAmalaiyArE.

**பொருள்:** திருவண்ணாமலை இறைவர் சிவபெருமான் ஆவார். தேவர்கள், இவரைத் தனது வலிமையை வெளிப்படுத்தித் திரிபுர அசுரர்களை அழித்து அருள்புரியுமாறு வேண்டினர். தீயவர்களை ஒறுப்பது அறச்செயல் என்று உணர்த்த, அசுரர்களை அழித்துத் தேவர்களுக்கு அருள் செய்த பெருமான் இவர். இராவணன் தனது வலிமையையும், வெற்றிகளையும் பெரிதாக எண்ணி, சிவன் உறையும் கயிலை மலையைப் பெயர்த்து எடுத்தான். அவனது மார்பு, தோள் ஆகியன நெரியுமாறு தன் காலை ஊன்றினார். பின்பு, இராவணன் பணிந்து வேண்ட, அவனுக்கு அருள் செய்த பெருமானும் இவரே.

**குறிப்புரை:** இலங்கை மன்னனது தோள் நெரிய, விரல் ஊன்றிய இறைவன் அண்ணாமலையான் என்கின்றது. மறம் – வீரம். நிறம் – மார்பு. தேவர் திறங்காட்டியருளாய் என்று வேண்ட, அறங்காட்டி அருள் செய்தார் என முடிக்க.

The Devaas prayed to Lord Civa to protect them from the havoc inflicted on them by the Asuraas by revealing His might. To establish the truth of the principle that punishing the wrong doers is not a sin, but a virtue, Lord Civa destroyed in toto the three citadels of the hostile Asuraas and thereby showered His grace on the Devaas to a fearless in future life. The egoistic Raavanan had owing to his physical strength, and valorous accomplishments in various walks of his life, prompted him uproot mount made Kailas, the abode of Lord Civa; but Raavanan got his chest and shoulders crushed when Lord Civa who pressed the mountain by His toe. Raavanan repented and begged pardon for his misdeed. Lord Civa pardoned him and graced him by a few boons. He is indeed that Lord now abiding in Thiru-annaa-malai.

**Note:** Doing away with hostile forces leads to the restoration of dharma. This is done by Civa alone.

தேடிக் காணார் திருமால் பிரமன் தேவர் பெருமானை
மூடி யோங்கி முதுவே யுகுத்த முத்தம் பலகொண்டு
கூடிக் குறவர் மடவார் குவித்துக் கொள்ள வம்மினென்
றாடிப் பாடி யளக்குஞ் சார லண்ணா மலையாரே. 9

தேடிக் காணார் திருமால் பிரமன் தேவர்பெருமானை;
மூடி ஓங்கி முதுவேய் உகுத்த முத்தம் பலகொண்டு,
கூடிக் குறவர் மடவார் குவித்து, "கொள்ள வம்மின்!" என்று
ஆடிப் பாடி அளக்கும் சாரல் அண்ணாமலையாரே.

tETik kANAr, tirumAl piraman2 tEvar perumAn2ai;
mUTi Ogki mutuvEy ukutta muttampala koNTu,
kUTik kuRavar maTavAr kuvittu, "koLLa vammin2!" en2Ru,
ATip pATi aLakkum cAral aNNAmalaiyArE.

**பொருள்:** பழமையான மூங்கில் மரங்கள் மலையை மூடி இருக்கும்படியான அளவுக்கு ஓங்கி வளர்ந்துள்ளன. அவைகளில் இருந்து உதிர்ந்த முத்துக்களை குறவர் குலப்பெண்கள் ஓரிடத்தில் குவித்து வைக்கின்றனர். அவற்றை வாங்கிட வருக என மக்களை அழைத்து, ஆடிப்பாடி அவர்களுக்கு அளந்து கொடுக்கின்றனர். இந்தத் திருவண்ணாமலைத் தேவர் பெருமானான, சிவபெருமானைத் திருமால் பிரமன் தேடியும் காணாதவர் ஆயினர்.

**குறிப்புரை:** மாலும் அயனும் பெருமானைத் தேடிக் காணாராயிருக்கக் குறத்தியர் மூங்கில் முத்துக்களைக் குவித்து, வாங்கிக் கொள்ள வாருங்கள் என்றழைக்கும் அண்ணாமலை என்கின்றது. வேய் உகுத்த முத்தம் – மூங்கிலில் பிறந்த முத்துக்கள்.

In the foothill vegetation of Thiru-annaa-malai, there are plenty of very old bamboo trees. They are so thick and tall as to cover the mountain from one's view. The Kurava girls (*குறவர் ஜாதி பெண்கள்*) collect the pearls dropping from the age-old trees and heap them in the market place. They sing and dance and invite the passers by to come and buy their pearls, they sell them not in numbers but in measures by measuring the quantity as needed by the buyers. Such a fertile place is Thiru-annaa-malai where our Supreme Lord Civa who could not be found by Thirumaal and Brahma in spite of their serious search for Him abides.

தட்டையி டுக்கித்தலை யைப்பறித்துச் சமணேநின் றுண்ணும்
பிட்டர்சொ ல்லுக்கொள்ள வேண்டாபே ணித்தொழுமின்கள்
வட்டமுலை யாளுமையாள் பங்கர்மன்னி யுறைகோயில்
அட்டமாளித் திரள்வந்த ணையுமண்ணா மலையாரே. 10

தட்டை இடுக்கித் தலையைப் பறித்துச் சமணே நின்று உண்ணும்
பிட்டர் சொல்லுக் கொள்ள வேண்டா; பேணித் தொழுமின்கள்! -
வட்டமுலையாள் உமையாள் பங்கர் மன்னி உறை கோயில்,
அட்டம் ஆளித்திரள் வந்து அணையும் அண்ணா மலையாரே.

taTTai iTukkit talaiyaip paRittuc camaNE nin2Ru uNNum
piTTar colluk koLLa vENTA; pENit tozumin2kaL!--
vaTTa mulaiyAL umaiyAL pagkar man2n2i uRai kOyil,
aTTam ALittiraL vantu aNaiyum aNNAmalaiyArE.

**பொருள்:** சமணர்கள், தங்களின் தடுக்குகளை, அக்குளில் இடுக்கிக் கொண்டிருக்கின்றனர். தங்களது தலை மயிரை ஒவ்வொன்றாகப் பறித்து நீக்கிய மொட்டைத் தலையர்கள். ஆடையின்றி இருப்பவர்கள். நின்று கொண்டு உண்ணுபவர்கள். இந்தப் பிரட்டர்களின் சொற்களைப் பொருளெனக் கொள்ள வேண்டாம். மலைச் சாரலில் சிங்கக் கூட்டங்கள் வந்து ஒன்று சேரும் தலம் திருவண்ணாமலை. இத்திருவண்ணாமாலையில் சிவபெருமான், வட்டமான தனங்களைக் கொண்ட உமையம்மையை ஒரு பாகத்தில் கொண்டு வீற்றிருந்து அருளுகின்றார். இப்பெருமான் நிலையாக எழுந்தருளி உறையும் கோயில் இதுவே. இக்கோயிலை விரும்பித் தொழுவீராக.

**குறிப்புரை:** சமணர் புத்தர் சொல்லைக் கேளாதே. இறைவனைத் தொழுங்கள். அவ்விறைவன் உறையுங்கோயில் அண்ணாமலையாகும் என்கின்றது. தட்டு – அடுக்கு. பிட்டர் – பிரட்டர்கள். அட்டம் – குறுக்கு. தக்க – உரை.

Samanars hold their mats on their arm pits. They pluck out their hair one by one and make their heads bald. They eat in standing posture. Ye companions! do not listen to the words of these mad Samanars. Worship Lord Civa with all sincerity who is concorporate with His young and lovely consort Umaa Devi and who is enshrined for ever at the temple in Thiru-annaa-malai where, in the slopes of the mountain lions roam in full strength.

**Note:** Samanars, like the Buddhists, are intrasignant, recalcitrant folks.

அல்லா டரவ மியங்குஞ் சார லண்ணா மலையாரை
நல்லார் பரவப் படுவான் காழி ஞான சம்பந்தன்
சொல்லான் மலிந்த பாட லான பத்து மிவைகற்று
வல்லா ரெல்லாம் வானோர் வணங்க மன்னி வாழ்வாரே. 11

அல் ஆடு அரவம் இயங்கும் சாரல் அண்ணாமலையாரை
நல்லார் பரவப்படுவான் காழி ஞானசம்பந்தன்
சொல்லால் மலிந்த பாடல்ஆன பத்தும்இவை கற்று
வல்லார் எல்லாம் வானோர் வணங்க மன்னிவாழ்வாரே.

al ATu aravam iyagkum cAral aNNAmalaiyArai,
nallAr paravappaTuvAn2 kAzi njAn2acampantan2
collAl malinta pATal An2a pattum ivai kaRRu
vallAr ellAm vAn2Or vaNagka man2n2i vAzvArE.

**பொருள்:** இரவு வேளைகளில் படம் எடுத்தாடும் பாம்புகள் இயங்கும் சாரலை உடையது திருவண்ணாமலை. இத்திருவண்ணாமலையில் சிவபெருமான் உறைகின்றார். இப்பெருமானை நல்லவர்களால் போற்றப்படும் சீகாழிப்பதி ஞானசம்பந்தன் போற்றிப் பாடினார். இப்பதிகப் பாடல்களுள் அருள்சொல் அமைப்புக்கள் நிறைந்துள்ளன. இப்பதிகத்தின் பத்துப் பாடல்களையும் கற்ற, வல்லவர்கள் எல்லாரும், வானோர் வணங்க நிலைபெற்று வாழ்வர்.

**குறிப்புரை:** அண்ணாமலையாரை ஞானசம்பந்தன் சொன்ன இப்பாடல் வல்லார் தேவர் வணங்க வாழ்வார்கள் என்கின்றது. அல் – இரவு. மன்னி – நிலைபெற்று.

The hooded snakes roam about during night hours in the slopes of the Annaamalai hills. Gnaanasambandan of Seekaazhi - praised by the righteous ones of this place - has sung in praise of Lord Civa of Thiru-annaa-malai ten verses in these rare chaste words. All those who master these ten verses will be hailed by celestials and will shine happily for ever.

**Note:** The divine hymns of our saint assuredly confer divinity on them who recite them.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*69ஆம் பதிகம் முற்றிற்று*
End of 69th Hymn

உ
சிவமயம்

# 70. திருவீங்கோய்மலை

## திருத்தலவரலாறு:

திருவீங்கோய்மலை என்ற திருத்தலமானது சோழ நாட்டுக் காவிரி வடகரைத் தலம் ஆகும். திருச்சிராப்பள்ளி – நாமக்கல் பேருந்து வழியில் அகண்ட காவிரியின் வடகரையில் உள்ளது. தற்காலம் திருவிங்கநாத மலை என மருவி வழங்குகின்றது. அகத்தியர் ஈஉருவாய்ப் பூசித்துப் பேறு பெற்றமையின் இப்பெயர் எய்தியது. காவிரி தென்கரையில் உள்ள கடம்பந்துறையைக் காலையிலும், திருவாட் போக்கியை நண்பகலிலும் இத்தலத்தை மாலையிலும், ஒரே நாளில் வழிபடுதல் மிக்க பயனைத் தரும். ‘காலைக் கடம்பர் மத்தியானச் சொக்கர் மாலைத் திருவிங்க நாதர்’ என்பது பழமொழி. கோயில் சிறிய குன்றின் மேல் அமைந்துள்ளது. இறைவன் மரகதாசலர். இறைவி மரகதவல்லி. தீர்த்தம் அமிர்த தீர்த்தம்.

## கல்வெட்டு:

திரிபுவனச் சக்கரவர்த்தி வீரதேவனது 36ஆம் ஆண்டில் இராஜராஜ வளநாட்டுத் திருவாலிநாட்டுத் திருவீங்கோய்மலை என வழங்கப்பட்டது. இறைவன் பெயர் திருவீங்கோய் ஊருடையார் என்று கல்வெட்டு கூறும். இக்கோயிலில் ஆளுடைய பிள்ளையார்க்கும், திருநாவுக்கரசு தேவர்க்கும், ஆலால சுந்தரப் பெருமானுக்கும், நக்கீர தேவர்க்கும், திருப்படி மாற்றுக்கும், வியஞ்சநத்துக்கும் வடகரை இராஜராஜ வளநாட்டு மலை ஸ்ரீஜயங்கொண்ட சோழ சதுர்வேதி மங்கலத்துப் பெருங்குடி மகாசபையார் நிலம் விற்றுக் கொடுத்தார்.

## பதிக வரலாறு:

திருப்பைஞ்ஞீலியை வணங்கி மண்பரவுந் தமிழ்மாலைகளைப் பாடிப் பிறதலங்களையும் வழிபட எண்ணிய சண்பை நாடர், திருவீங்கோய்மலையை அடைந்தார். அங்கு, கங்கைச் சடையர் கழல்பணிந்து, ‘வானத்துயர் தண்’ என்னும் இசைப் பதிகம் பாடினார்.

## 70. THIRU-EENGOI-MALAI

### THE HISTORY OF THE PLACE

The sacred city of Thiru-eengoi-malai is on the north bank of river Cauvery in Chola Naadu. It is on the bus route from Thiruch-chiraappalli to Naamakkal. Since sage Agaththiyar worshipped the Lord here, taking the form of a fly ('ee') the place got the above name. Nowadays, the name got corrupted to Thiruvinganaathamalai. The temple is located atop a small hill.

The God's name is Marakathaachalar and the Goddess's name is Marakathavalli. The sacred ford is Amirtha Theerththam.

It is considered meritorious to offer worship at Kadambanthurai (on the south shore of Cauvery) in the morning, at Thiruvaatpokki at midday, and here in the evening on the same day.

According to inscriptions, the village assembly of Sree Jayangkonda Chola Chathurvedhimangalam, sold some land to make a gift for the shrines of saints Aaludaiya Pillaiyaar, Thirunaavukkarasar, Aalaalasundharapperumaan, Nakeera-dhevar and for 'Thiruppadimaarru' and condiments (viyanjchanam).

### INTRODUCTION TO THE HYMN

It is from Thiruppaigngneeli that our saint arrived at Thiruveengkoimalai and sang the following hymn.

**Note:** It is unfortunate that the Emerald Lingam in the shrine of Eengoi-malai and worth five hundred crores of rupees, is missing. Let us pray for the recovery and reinstallation of this rare Lingam!



கொடிமாடச் செங்குன்றூர் / திருச்செங்கோடு – அர்த்தநாரீஸ்வரர் – கொங்கு நாட்டுத்தலம்
**Arthanariswarar Temple - Kodimatacchengkundur, Tiruchengodu, Tamil Nadu.**



திருப்பூவணம் – பூவணநாதர் – பாண்டிய நாட்டுத் தலம்
**Puvana Nathar Temple - Tiruppuvanam - Tamil Nadu**



திருமாற்பேறு (திருமால்பூர்) – மால்வணங்கீசர் – தொண்டை நாட்டுத் தலம்
**Malvanangku Eesar Temple - Tirumalperu (Tirumalpur), Tamil Nadu**



திருஊறல் (தக்கோலம்) – உமாபதீசர் – தொண்டை நாட்டுத் தலம்
**Umapatisurar Temple - Tiruural (Takkolam), Tamil Nadu**

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

# 70. திருவீங்கோய்மலை 70. THIRU-EENGOI-MALAI

பண் : தக்கேசி
ராகம் : காம்போதி

*Pann: Thakkēsi*
*Raagam: Kaabothi*

வானத் துயர்தண் மதிதோய் சடைமேல் மத்த மலர்சூடித்
தேனொத் தனமென் மொழிமான் விழியாள் தேவி பாகமாக்
கானத் திரவி லெரி கொண் டாடுங் கடவு ளுலகேத்த
ஏனத் திரள்வந் திழியுஞ் சார லீங்கோய் மலையாரே. 1

வானத்து உயர் தண்மதி தோய் சடைமேல் மத்தமலர் சூடி,
தேன் ஒத்தன மென்மொழி மான்விழியாள் தேவி பாகமா,
கானத்து இரவில் எரி கொண்டு ஆடும் கடவுள் - உலகு ஏத்த,
ஏனத்திரள் வந்து இழியும் சாரல் ஈங்கோய்மலையாரே.

vAn2attu uyar taNmati tOy caTaimEl mattamalar cUTi,
tEn2 ottan2a men2mozi mAn2viziyAL tEvi pAkamA,
kAn2attu iravil eri koNTu ATum kaTavuL--ulaku Etta,
En2attiraL vantu iziyum cAral IgkOy malaiyArE.

**பொருள்:** பன்றிகள் கூட்டமாக இறங்கி வரும் சாரலை உடைய திருஈங்கோய் மலையில் சிவபெருமான் உலக மக்கள் உணர்ந்து போற்றுமாறு எழுந்தருளி உள்ளார். இவர், வானத்தில் உயர்ந்து விளங்கும் குளிர்ந்த சந்திரன் உறையும் சடைமுடியில் ஊமத்தம் மலர்களைச் சூடி இருக்கின்றார். தேன் போன்ற இனிய மொழிகளையும் மான்விழி போன்ற கண்களையும் உடைய உமையம்மையை ஒருபாகமாகக் கொண்டு இருக்கின்றார். இவர், இடுகாட்டில் இரவில் எரியேந்தி ஆடும் இறைவர் ஆவார்.

**குறிப்புரை:** பிறை, மத்தம் இவற்றைச்சூடி, தேவியைப் பாகமாகக் கொண்டு, நள்ளிரவில் நடமாடும் பெருமான் ஈங்கோய் மலையார் என்கின்றது. கான் – சுடுகாடு. ஏனத்திரள் – பன்றியின் கூட்டம்.

Lord Civan retains in His matted hair the cool crescent moon, shining bright in the sky. Along with it, He wears the datura flowers also in His matted hair. He is concorporate with His consort Umaa Devi whose voice is as sweet as honey and her eyes are like the long and lovely eyes of deer. He dances in the burning ground during night hours. He is adored by people all over the world. This Lord Civa is enshrined in Thiru-eengoi-malai where herds of hogs descend on the slopes of the mountain.

**Note:** In the past Eengoi-malai was the habitat of wild animals. Nakkirar's Eengoi Ezhupathu forms part of the Eleventh Thirumurai.

சூலப் படையொன் றேந்தி யிரவிற் சுடுகா டிடமாகக்
கோலச் சடைகள் தாழக் குழல்யாழ் மொந்தை கொட்டவே
பாலொத் தனைய மொழியாள் காண ஆடும் பரமனார்
ஏலத் தொடு நல் லிலவங் கமழு மீங்கோய் மலையாரே. 2

*சூலப்படை ஒன்று ஏந்தி இரவில் சுடுகாடு இடம்ஆக,*
*கோலச் சடைகள் தாழ, குழல், யாழ், மொந்தை கொட்டவே,*
*பால் ஒத்தனைய மொழியாள் காண, ஆடும் பரமனார் -*
*ஏலத்தொடு நல்இலவம் கமழும் ஈங்கோய்மலையாரே.*

cUlap paTai on2Ru Enti, iravil cuTukATu iTam Aka,
kOlac caTaikaL tAza, kuzal, yAz, montai koTTavE,
pAl ottan2aiya moziyAL kANa, ATum paraman2Ar--
ElattoTu nal ilavam kamazum IgkOy malaiyArE.

***பொருள்:*** மணம் கமழும் பொருட்களான ஏலம், நல்ல இலவங்கம் ஆகியன நிரம்பியுள்ள திருஈங்கோய் மலையில் சிவபெருமான் எழுந்தருளி உள்ளார். இவர் முத்தலை ஆயுதமான சூலம் ஒன்றைத் தமது படைக்கலனாக ஏந்தியுள்ளார். இரவில் சுடுகாட்டைத் தம் இடமாகக் கொண்டு உள்ளார். அவரது அழகிய சடைகள் தாழ்ந்து தொங்குகின்றன. குழல், யாழ், மொந்தை ஆகிய இசைக் கருவிகள் முழங்க, பால் போன்ற இனிய மொழியினை உடைய பார்வதி தேவி காண நடனமாடும் பரமனார் இவர்.

***குறிப்புரை:*** சுடுகாட்டில் குழலும் யாழும் முழவும் கொட்ட, பாகம் பிரியாள் காண ஆடும் பெருமான் இவர் என்கின்றது. கோலச்சடை – அழகியசடை. குழல், யாழ், மொந்தையைக் கொட்ட என்றாலும், குழலை ஊத, யாழை வாசிக்க, மொந்தையைக் கொட்ட எனக் கருவிகளுக்கேற்பப் பொருள் கொள்க.

Lord Civa holds in one of His hands the trident as His war weapon. His beautiful matted hair dangles. In this posture He dances in the burning ground during night hours in the presence of His consort Paarvathi Devi whose voice is as sweet as milk, to the accompaniment of music from the musical instruments such as flute, lute, and the drum (drum open at one end). This Lord Civa is enshrined in Thiru-eengoi-malai where the aroma of cardamom seed and the flower bud of clove plant fills the air all around.

Note: This shrine, once not easy of access, was a place of festivity.

கண்கொள் நுதலார் கறைகொள் மிடற்றார் கரியி னுரிதோலார்
விண்கொள் மதிசேர் சடையார் விடையார் கொடியார் வெண்ணீறு
பெண் கொள் திருமார் பதனிற் பூசும் பெம்மா னெமையாள்வார்
எண்கும ரியுந் திரியுஞ் சார லீங்கோய் மலையாரே. 3

*கண் கொள் நுதலார் கறை கொள் மிடற்றார், கரியின் உரி-தோலார்,*
*விண் கொள் மதி சேர் சடையார், விடை ஆர் கொடியார், வெண் நீறு*
*பெண்கொள் திருமார்பு அதனில் பூசும் பெம்மான், எமை ஆள்வார் -*
*எண்கும் அரியும் திரியும் சாரல் ஈங்கோய்மலையாரே.*

kaN koL nutalAr, kaRai koL miTaRRAr, kariyin2 uri-tOlAr,
viN koL mati cEr caTaiyAr, viTai Ar koTiyAr, veN nIRu
peN koL tirumArpu atan2il pUcum pemmAn2, emai ALvAr--
eNkum ariyum tiriyum cAral EgkOymalaiyArE.

**பொருள்:** எமை ஆள்பவரான சிவபெருமானார், கரடிகளும், சிங்கங்களும் அலைகின்ற சாரலை உடைய திருஈங்கோய் மலையில் எழுந்தருளியுள்ளார். இவர் மூன்றாவது ஒரு நெற்றிக் கண்ணை உடையவர். விடக்கறை பொருந்திய கண்டத்தினர். யானையின் தோலை உரித்துப் போர்த்தியவர். வானில் விளங்கும் மதியைச் சூடிய சடையினர். விடைக் கொடியை உடையவர். உமையம்மையை ஒருபாகமாகக் கொண்டவர். தனது திருமார்பகத்தே திருவெண்ணீற்றை அணிந்தவர்.

***குறிப்புரை:*** இறைவருடைய உடையும் அணியும் பூச்சும் இவை என்கின்றது. நுதல் – நெற்றி. கறை – விடம். மிடறு – கழுத்து. எண்கு – கரடி. அரி – சிங்கம்.

Lord Civan has a third eye in His forehead. His neck is dark blue in colour due to the poison He swallowed. He stripped the skin of an elephant and covered His body with it. He retains in His matted hair the crescent moon of the sky. The figure of bull is the insignia of His flag. He is concorporate with His consort Umaa Devi. He smears on the chest of His holy body holy ashes. He is our Lord who governs us. This Lord Civa is enshrined in Thiru-eengoi-malai where bears and lions roam about in the slopes of the mountain.

**Note:** Eengoi-malai is as great as Mount Kailas.

மறையின் னிசையார் நெறிமென் கூந்தல் மலையான் மகளோடும்
குறைவெண் பிறையும் புனலுந் நிலவுங் குளிர்புன் சடைதாழப்
பறையுங் குழலுங் கழலு மார்ப்பப் படுகாட் டெரியாடும்
இறைவர் சிறைவண் டறைபூஞ் சார லீங்கோய் மலையாரே. 4

*மறையின்(ன்) இசையார், நெறிமென்கூந்தல் மலையான்மகளோடும்,*
*குறைவெண்பிறையும் புனலும் நிலவும் குளிர்புன்சடை தாழ,*
*பறையும் குழலும் கழலும் ஆர்ப்ப, படுகாட்டு எரிஆடும்*
*இறைவர் - சிறைவண்டு அறை பூஞ்சாரல் ஈங்கோய்மலையாரே.*

maRaiyin2(n2) icaiyAr, neRimen2 kUntal malaiyAn2 makaLOTum,
kuRai veNpiRaiyum pun2alum nilavum kuLirpun2caTai tAza,
paRaiyum kuzalum kazalum Arppa, paTu kATTu eri ATum
iRaivar--ciRai vaNTu aRai pUnjcAral IgkOymalaiyArE.

***பொருள்:*** சிறகுகளை உடைய வண்டுகள் ஒலிக்கும் அழகிய சாரலை உடைய திருஈங்கோய் மலையின் இறைவர் சிவபெருமானார் ஆவார். இவர் இனிய இசையோடு பாடும் வேதங்களைத் தோற்றுவித்தவர். வளைவுகளோடு கூடிய மெல்லிய கூந்தலை உடைய மலை அரசன் மகளாகிய பார்வதி தேவியோடு இருப்பவர். தனது சடைமுடியில் கலைகள் குறைந்த வெண்மையான பிறையோடும் கங்கையோடும் விளங்குபவர். குளிர்ந்த மென்மையான சடைகள் தாழ இருப்பவர். பறை, குழல் இவற்றோடு காலில் உள்ள சிலம்பும் ஆரவாரிக்கும். சுடுகாட்டுள் இவர் எரிஏந்தி ஆடுபவர் ஆவார்.

***குறிப்புரை:*** இடுகாட்டில் மலையான் மகளோடு ஆடும் இறைவன் இவர் என்கின்றது. நெறி மென் கூந்தல் – நெறித்துச் சுருண்ட மெல்லிய கூந்தல். குறை வெண் பிறை – சாபத்தால் குறைந்த வெண்மையான பிறைச் சந்திரன். படுகாடு – சுடுகாடு. சிறை வண்டு – சிறகோடு கூடிய வண்டுகள்.

Lord Civan of Thiru-eengoi-malai sings the Vedas tunefully. In the lush slopes of the hill in this place, winged bees are humming. He is concorporate with His consort Paarvathi Devi, daughter of the mountain king, whose soft hair is curly. The curved white crescent moon is retained in His cool and soft matted hair, which is dangling in space . Holding fire in one of His hands, He dances in the cremation ground to the accompaniment of music from the drum and flute whilst His anklet resounds in unison.
Note: This verse celebrates a yogic vision.

நொந்த சுடலைப் பொடிநீ றணிவார் நுதல்சேர் கண்ணினார்
கந்த மலர்கள் பலவு நிலவு கமழ்புன் சடைதாழப்
பந்தண் விரலாள் பாக மாகப் படுகாட் டெரியாடும்
எந்தம் மடிகள் கடிகொள் சார லீங்கோய் மலையாரே. 5

நொந்த சுடலைப் பொடி-நீறு அணிவார், நுதல் சேர் கண்ணினார்,
கந்தமலர்கள் பலவும் நிலவு கமழ் புன்சடை தாழ,
பந்து அண் விரலாள் பாகம் ஆக, படுகாட்டு எரிஆடும்
எம்தம்(ம்) அடிகள் - கடிகொள் சாரல் ஈங்கோய்மலையாரே.

nonta cuTalaip poTi-nIRu aNivAr, nutal cEr kaNNin2Ar,
kanta malarkaL palavum nilavu kamaz pun2caTai tAza,
pantu aN viralAL pAkam Aka, paTukATTu eri ATum
emtam(m) aTikaL--kaTi koL cAral IgkOymalaiyArE.

**பொருள்:** நல்ல மணம் கமழும் பூக்கள் நிறைந்த சாரலை உடைய திருஈங்கோய் மலையில் சிவபெருமான் எழுந்தருளி உள்ளார். இவர், இறந்தார் உடலை எரிக்கும் சுடலையில் விளைந்த சாம்பல் பொடியைத் திருநீறாக அணிந்தவர். நெற்றியில் மூன்றாவது ஒரு கண்ணை உடையவர். இவரது தாழ்ந்து தொங்கும் மணம் கமழும் செஞ்சடைகளில், மணம் பொருந்திய மலர்கள் பலவும் விளங்குகின்றன. பந்து சேரும் மெல்லிய கைவிரல்களை உடைய உமையம்மையை ஒருபாகமாகக் கொண்டு உள்ளார். சுடுகாட்டில் எரியாடுபவர் இவர்.

**குறிப்புரை:** இதுவும் அது. நொந்த – தன் அழிந்த. பந்து அண் விரலாள் – பந்து அணுகும் மெல்லிய விரலை உடையாள். கடி கொள் சாரல் – தெய்வ மணம் கமழும் சாரல்.

Lord Civa is entempled in Thiru-eengoi-malai. Here in the slopes of the hill fragrant smell of the flowers always fills the air. He smears His body with the ashes of the burning ghat. He has a third eye in His forehead. Elegant flowers of different kinds with pleasant smell stay in His dangling ruddy matted hair with spreading pleasing fragrance. He shared the left portion of His body with His consort Umaa Devi, whose fingers are slender and soft touching like flower balls. He dances in the blazing fire of the burning ghat.

**Note:** The shrine is pervaded by spiritual fragrance.

நீறா ரகல முடையார் நிரையார் கொன்றை யரவோடும்
ஆறார் சடையா ரயில்வெங் கணையா லவுணர் புரமூன்றும்
சீறா வெரிசெய் தேவர் பெருமான் செங்கண் டல்வெள்ளை
ஏறார் கொடியா ருமையா ளோடு மீங்கோய் மலையாரே. 6

*நீறு ஆர் அகலம் உடையார், நிரை ஆர் கொன்றை அரவோடும்*
*ஆறு ஆர் சடையார், அயில்வெங்கணையால் அவுணர் புரம் மூன்றும்*
*சீறா எரிசெய் தேவர்பெருமான், செங்கண் அடல் வெள்ளை-*
*ஏறு ஆர் கொடியார் - உமையாளோடும் ஈங்கோய்மலையாரே.*

nIRu Ar akalam uTaiyAr, nirai Ar kon2Rai aravOTum
ARu Ar caTaiyAr, ayilvegkaNaiyAl avuNar puram mUn2Rum
cIRA eri cey tEvar perumAn2, cegkaN aTal veLLai-
ERu Ar koTiyAr--umaiyALOTum IgkOymalaiyArE.

***பொருள்:*** சிவபெருமானார் திருஈங்கோய் மலையில் உமையம்மையோடு எழுந்தருளி உள்ளார். இவர் திருநீறு அணிந்த மார்பினை உடையவர். சரஞ்சரமாக வரிசையாக மலரும் கொன்றை மாலை மற்றும் பாம்பு, கங்கை இவைகளை சடைமுடியில் அணிந்துள்ளார். கூரிய கொடிய கணையால் அசுரர்களின் முப்புரங்களையும் சினந்து எரித்த தேவர்களின் தலைவர் இவர். சிவந்த கண்களையும், வலிமையையும், வெண்மையையும் உடைய விடையைத் தனது கொடியின் சின்னமாக உடையவர்.

***குறிப்புரை:*** கொன்றை, அரவு, கங்கை இவற்றைச் சடையில் உடையவரும், திரிபுரங்களை எரித்தவரும் ஈங்கோய் மலையார் என்கின்றது. அகலம் – மார்பு. அயில் – கூர்மை. அடல் – வலிமை.

Lord Civan is entempled in Thiru-eengoi-malai along with His consort Umaa Devi; He smears His chest with holy ashes. He wears on His matted hair the wreath of cassia flowers, which grow in long rows. Along with this, He retains in His matted hair, the river Ganga as well as a snake. He is the Chief of Devaas. He once got wild with the Asuraas and destroyed their three citadels with a sharp and fierce dart. The insignia of His flag is the figure of the white, valiant and red-eyed bull.

Note: Kondrai flowers, dear to Civa, abound in Eengoimalai.

விளையா யினதீர்த் தருளே புரியும் விகிர்தன் விரிகொன்றை
நனையார் முடிமேல் மதியஞ் சூடும் நம்பர் நலமல்கு
தனையார் கமல மலர்மே லுறைவான் தலையோ டனலேந்தும்
எனையா ளுடையா னுமை யாளோடு மீங்கோய் மலையாரே. 7

வினைஆயின தீர்த்து அருளே புரியும் விகிர்தன், விரிகொன்றை
நனை ஆர் முடிமேல் மதியம் சூடும் நம்பான், நலம் மல்கு
தனை ஆர் கமலமலர்மேல் உறைவான் தலையோடு அனல் ஏந்தும்
எனை ஆள்உடையான் - உமையாளோடும் ஈங்கோய்மலையாரே.

vin2ai Ayin2a tIrttu aruLE puriyum vikirtan2, virikon2Rai
nan2ai Ar muTimEl matiyam cUTum nampAn2, nalam malku
tan2ai Ar kamalamalar mEl uRaivAn2 talaiyOTu an2al Entum
en2ai AL uTaiyAn2--umaiyALOTum IgkOymalaiyArE.

**பொருள்:** என்னை ஆளுகின்ற பிரானான சிவபெருமான், உமையம்மையோடு திருஈங்கோய் மலையில் எழுந்தருளி உள்ளார். இவர், வினைகள் அனைத்தையும் தீர்த்து, பேரருளையே கொடுக்கும் விகிர்தர். விரிந்ததும் கொன்றை அரும்புகள் சூடிய முடிமீது, பிறைமதியையும் சூடுகின்ற கடவுள் ஆவார். அழகு நிறைந்ததும் தலைமை உடையதுமான தாமரை மலர்மேல் உறையும் பிரமனின் தலையோட்டுடன் அனலையும் ஏந்தி இருப்பவர். என்னை அடிமையாகக் கொண்டு அருளுபவரும் இவரே.

**குறிப்புரை:** வினைதீர்க்கும் விகிர்தனாய் என்னை ஆளுடைய பிரான் இவர் என்கின்றது. நனை – அரும்பு. தனையார் கமலம் – தலைமை பொருந்திய தாமரை.

Lord Civan who governs me as His devotee is entempled in Thiru-eengoi-malai along with His consort Umaa Devi. He is the preeminent Supreme Lord (*விகிர்தன்*) who annuls the bad effects of karma and ever graces His devotees. He is the supremely desirable one (*நம்பன்*) who wears the crescent moon along with the blossomed elegant cassia buds in His matted hair. He holds the skull of Brahma who is seated in the elegant and lofty lotus flower, as well as the fire in His hands.

**Note:** The Lord-God is a Vikirtan, the One different from all other gods.

பரக்கும் பெருமை இலங்கை யென்னும் பதியிற் பொலிவாய
அரக்கர் கிறைவன் முடியுந் தோளு மணியார் விரல்தன்னால்
நெருக்கி யடர்த்து நிமலா போற்றி யென்று நின்றேத்த
இரக்கம் புரிந்தா ருமையாளோடு மீங்கோய் மலையாரே. 8

பரக்கும் பெருமை இலங்கை என்னும் பதியில் பொலிவு ஆய
அரக்கர்க்கு இறைவன் முடியும் தோளும் அணி ஆர் விரல் தன்னால்
நெருக்கி அடர்த்து, "நிமலா, போற்றி!" என்று நின்று ஏத்த,
இரக்கம் புரிந்தார் - உமையாளோடும் ஈங்கோய்மலையாரே.

parakkum perumai ilagkai en2n2um patiyil polivu Aya
arakkarkku iRaivan2 muTiyum tOLum aNi Ar viral tan2n2Al
nerukki aTarttu, "nimalA, pORRi!" en2Ru nin2Ru Etta,
irakkam purintAr--umaiyALOTum IgkOymalaiyArE.

***பொருள்:*** திருஈங்கோய் மலை இறைவரான சிவபெருமானார் அங்கு உமையம்மையோடு எழுந்தருளி உள்ளார். இராவணன் அரக்கர்களின் தலைவன் ஆவான். அவன் எங்கும் பரவிய பெருமையை உடைய இலங்கை என்னும் நகரில் புகழோடு விளங்கியவன். சிவபெருமான் அவனது தலைகளையும் தோள்களையும் தமது அழகு பொருந்திய கால் விரலால் நெருக்கி அடர்த்தினார். பின்பு, அவன், "நிமலா போற்றி" என்று துதித்தபோது அவனுக்கு இரக்கம் காட்டி அருள்புரிந்தவரும் இவரே.

***குறிப்புரை:*** இராவணனை விரலால் அடர்க்க, அவன் நிமலா போற்றி என வணக்கம் செய்ய, இரக்கம் காட்டிய பெருமான் இவர் என்கின்றது. பரக்கும் – பரந்த. அணி – காலாழி.

Lord Civan is entempled in Thiru-eengoi-malai along with His consort Umaa Devi. Over the glorious country Sri Lanka of spreading fame, Raavanan, the Lord of Raakshaasas was ruling supreme. Because of his later misdeed, Lord Civa using His ringed toe (*காலாழி அணியப்பெற்ற விரலால்*) crushed Raavanaa's head and shoulders. Later he repented and begged pardon for his wrong doing and hailed Civa by chanting thus "O! ever pure one - the Supreme Being! Glory be to You). Civa then showed mercy and graced him.

Note: Civa is merciful, though a strict disciplinarian.

வரியார் புலியி னுரிதோ லுடையான் மலையான் மகளோடும்
பிரியா துடனா யாடல் பேணும் பெம்மான் றிருமேனி
அரியோ டயனு மறியா வண்ண மளவில் பெருமையோ
டெரியாய் நிமிர்ந்த எங்கள் பெருமா னீங்கோய் மலையாரே. 9

*வரி ஆர் புலியின் உரி-தோல் உடையான், மலையான்மகளோடும்*
*பிரியாது உடன் ஆய் ஆடல் பேணும் பெம்மான், திருமேனி*
*அரியோடு அயனும் அறியா வண்ணம் அளவுஇல் பெருமையோடு*
*எரியாய் நிமிர்ந்த எங்கள் பெருமான் - ஈங்கோய்மலையாரே.*

vari Ar puliyin2 uri-tOl uTaiyAn2, malaiyAn2 makaLOTum
piriyAtu uTan2 Ay ATal pENum pemmAn2, tirumEn2i
ariyOTu ayan2um aRiyA vaNNam aLavu il perumaiyOTu
eri Ay nimirnta egkaL perumAn2--IgkOymalaiyArE.

***பொருள்:*** எங்கள் பெருமானான சிவபெருமான் திருஈங்கோய் மலை இறைவர் ஆவார். இவர், வரிகளோடு கூடிய புலித்தோலை உடையாகக் கட்டியிருக்கின்றார். மலை அரசன் மகளான பார்வதி தேவியோடு பிரியாது உடனாய் இருக்கின்றார். இவர் ஆடுதலை விரும்பும் பெரியோனான கடவுளாவார். தம் திருமேனியின் அடிமுடிகளைத் திருமாலும் நான்முகனும் காண முடியாதபடி அளவற்ற பெருமை உடைய எரி உருவத்தோடு ஓங்கி நின்றவரும் இவரே.

***குறிப்புரை:*** உமையொரு பாதியனாய், அயனும் மாலும் அறியாமல் எரியாய் நிமிர்ந்த பெருமான் இவர் என்கின்றது. வரி – கோடு. எரியாய் – அக்கினிவடிவான அண்ணாமலையாய்.

Lord Civan, clad in the striped skin of a tiger is entempled in Thiru-eengoi-malai. He is the Supreme Being (*தலைமை சான்றவர்*) who never parts with His consort Paarvathi Devi, daughter of the mountain king and likes to dance for ever. He is our noble Divine Being (*பெம்மான் - பெருமான்*) who once rose up aloft, straight as a big and tall column of fire of boundless glory, unknowable to Brahma and Vishnu. Both of them made a Himalayan search to reach the head and feet of His holy body frame but in vain.

பிண்டி யேன்றுபெயரா நிற்கும்பிணங் குசமணரும்
மண்டை கலனாக்கொண் டுதிரியும்ம தியில்தேரரும்
உண்டி வயிறாருரைகள் கொள்ளா துமையோடுடனாகி
இண்டைச் சடையானி மையோர் பெருமானீங்கோய் மலையாரே. 10

*பிண்டி ஏன்று பெயரா நிற்கும் பிணங்கு சமணரும்,*
*மண்டை கலனாக் கொண்டு திரியும் மதிஇல் தேரரும்,*
*உண்டி வயிறார் உரைகள் கொள்ளாது உமையோடு உடன்ஆகி,*
*இண்டைச் சடையான் இமையோர் பெருமான் - ஈங்கோய்மலையாரே.*

piNTi En2Ru peyarA niRkum piNagku camaNarum,
maNTai kalan2Ak koNTu tiriyum mati il tErarum,
uNTi vayiRAr uraikaL koLLAtu, umaiyOTu uTan2 Aki,
iNTaic caTaiyAn2, imaiyOr perumAn2–IgkOymalaiyArE.

***பொருள்:*** சமணர்கள் மாறுபட்ட சமய நெறியில் நிற்கின்றவர்கள். அவர்கள், அசோக மரத்தில் அருகதேவன் வீற்றிருக்கிறான் என்று அம்மரத்தின் பெருமையைக் கூறுகின்றனர். புத்தர்கள் அறிவற்றவர்களாக, மண்டை ஓட்டை உண்ணும் கலமாகக் கையில் ஏந்தித் திரிகின்றனர். இவர்கள் பெருந்தீனி தின்று பருத்த வயிற்றை உடையவர்கள். இவர்கள் கூறும் சொற்களை உண்மை என்று ஏற்றுக் கொள்ளாதீர்கள். உமையோடு உடனாய், இண்டை சூடிய சடைமுடியினராய் இமையோர் தலைவராய், திருஈங்கோய் மலையில் எழுந்தருளியுள்ள எம்பெருமானை வழிபடுவீர்களாக.

***குறிப்புரை:*** சமணரும் புத்தருமாகிய இவர்களின் உரையைக் கொள்ளாத இமையோர் பெருமான் இவர் என்கின்றது. பிண்டி – அசோகந்தளிர். ஏன்று – தாங்கி. மண்டை – பிச்சை ஏற்கும் பாத்திரம். தேரர் – புத்தர். உண்டி வயிறார் – உண்டு பருத்த வயிறை உடையவர்கள். இண்டை – திருமுடியிற் சூடப்படும் வட்டமாகக் கட்டப்பெற்ற மாலை.

The insincere samana ascetics (*போலித்துறவிகள்*) adore and hail the glory of Asoka trees where they say their Lord Aruga Devan (*அருகதேவன்*) is seated. They follow contradicting religious faiths that have no reason or logic. The insincere Buddhist monks are a set of ignorant folks who carry the skull for getting alms in. They over eat and become obese people. Ye companions! do not listen to their preaching. Proceed to Thiru-eengoi-malai and worship our noble Lord Civa who is entempled there along with His consort Umaa Devi. He is the Chief of the celestial and wears a circlet in His matted hair (*இண்டை* - a circular garland made up of leaves and/or flowers).

Note: Civa ignores the denigrating words of the Samanars and the Buddhists who are ignoramuses.

விழவா ரொலியு முழவு மோவா வேணுபுரந் தன்னுள்
அழலார் வண்ணத் தடிக ளருள்சே ரணிகொள் சம்பந்தன்
எழிலார் சுனையும் பொழிலும் புடைசூ ழீங்கோய் மலையீசன்
கழல்சேர் பாடல் பத்தும் வல்லார் கவலை களைவாரே. 11

*விழவு ஆர் ஒலியும் முழவும் ஓவா வேணுபுரம் தன்னுள்,*
*அழல் ஆர் வண்ணத்து அடிகள் அருள் சேர் அணி கொள் சம்பந்தன்,*
*எழில் ஆர் சுனையும் பொழிலும் புடை சூழ் ஈங்கோய்மலை ஈசன்*
*கழல் சேர் பாடல்பத்தும் வல்லார் கவலை களைவாரே.*

vizavu Ar oliyum muzavum OvA vENupuram tan2n2uL,
azal Ar vaNNattu aTikaL aruL cEr aNi koL campantan2,
ezil Ar cun2aiyum pozilum puTai cUz IgkOymalai Ican2
kazal cEr pATal pattum vallAr kavalai kaLaivArE.

**பொருள்:** வேணுபுரம் என்னும் சீகாழிப் பதியில் திருவிழாக்களின் ஓசையும் முழவின் ஓசையும் என்றும் நீங்காது ஒலிக்கின்றன. ஒளி வண்ணனான சிவபெருமானின் அருள் சேரப் பெற்ற அழகிய ஞான சம்பந்தன் இப்பதியிற் போந்தவர். இவர் எழிலார்ந்த சுனையும், பொழிலும் புடைசூழ்ந்து விளங்கும் திருஈங்கோய் மலை ஈசனின் திருவடிகளைப் போற்றிப் பாடிய இப்பாடல்கள் பத்தையும் ஓதவல்லவர்களின் கவலைகள், அவர்களைவிட்டு நீங்கிவிடும்.

**குறிப்புரை:** சம்பந்தன் சொன்ன ஈங்கோய் மலைப் பாடல் பத்தும் வல்லார் கவலை களைவார் என்கின்றது. வேணுபுரம் என்பது சீகாழிக்கு மறுபெயர். எழில் – அழகு.

Gnaanasambandan belongs to Venupuram (another name of Seekaazhi) where the noise of temple festivals and noise of the drums never cease. Gnaanasambandan is endowed fully with the blessings of Lord Civa of this place whose complexion is fire like. He has sung these ten verses adoring the Holy Feet of Lord Civa of Thiru-eengoi-malai which is encircled by attractive springs and gardens. Those who can recite these ten verses with sincere devotion will get rid of their sorrows.

**Note:** Sorrows cease to be if the hymns of our saint are recited in all sincerity.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*70ஆம் பதிகம் முற்றிற்று*
End of 70th Hymn

உ
சிவமயம்

# 71. திருநறையூர்ச் சித்தீச்சரம்

## திருத்தல வரலாறு:

பதிகம் 29ஐப் பார்க்கவும்.

## பதிக வரலாறு:

குடவாயிலில் வணங்கிப் பதிகம்பாடிய பிள்ளையார் 'ஊருலாவு' என்னும் நீடு தமிழ்த்தொடை புனைந்து கொண்டே வழிநடந்து திருநறையூரை அடைந்தார்கள். இதில் 'நறையூர்' என்பது தலத்தின் பெயராகவும், 'சித்தீச்சரம்' என்பது கோயிலின் பெயராகவும் குறிக்கப்படுகிறது. 'சித்தன் சித்தீச்சரம்' என இறைவன் திருநாமம் 'சித்தன்' எனக் குறிக்கப்படுகிறது.

## THE HISTORY OF THE PLACE

See 29th Hymn.

## INTRODUCTION TO THE HYMN

Having adored Lord Civa at Kudavaayil, our saint arrived at Thirunaraiyoor Siddheechcharam temple, and sang the following hymn. The name of the town is '**Narayoor**' and the temple is called '**Siddheechcharam**'.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 71. திருநறையூர்ச் சித்தீச்சரம்

## 71. THIRU-NARAIYOOR-CH-CHIDDHEECH-CHARAM

பண் : தக்கேசி
ராகம் : காம்போதி

*Pann: Thakkēsi*
*Raagam: Kaambothi*

பிறைகொள்சடையர் புலியினுரியர் பேழ்வாய்நாகத்தர்
கறைகொள்கண்டர் கபாலமேந்துங் கையர் கங்காளர்
மறைகொள்கீதம் பாடச்சேடர் மனையின் மகிழ்வெய்திச்
சிறைகொள்வண்டு தேனார்நறையூர்ச் சித்தீச் சரத்தாரே. 1

பிறை கொள் சடையர்; புலியின் உரியர்; பேழ்வாய் நாகத்தர்;
கறை கொள் கண்டர்; கபாலம் ஏந்தும் கையர்; கங்காளர் -
மறை கொள் கீதம் பாடச் சேடர் மனையில் மகிழ்வு எய்தி,
சிறை கொள் வண்டு தேன் ஆர் நறையூர்ச் சித்தீச்சரத்தாரே.

piRai koL caTaiyar; puliyin2 uriyar; pEzvAy nAkattar;
kaRai koL kaNTar; kapAlam Entum kaiyar; kagkALar--
maRai koL kItam pATac cETar man2aiyil makizvu eyti,
ciRai koL vaNTu tEn2 Ar naRaiyUrc cittIccarattArE.

**பொருள்:** திருநறையூரில் பெருமை உடைய மறையவர்கள் தங்கள் இல்லங்களில் வேதப் பொருட்களை உள்ளடக்கிய இசைப்பாடல்களைப் பாடுகின்றனர். அதனைக் கேட்டுச் சிறகுகளைக் கொண்ட வண்டுகள் மகிழ்வெய்திப் பாடித் தேனை உண்ணுகின்றன. இவ்வூரில் சித்தீச்சரத்து இறைவராக விளங்கும் சிவபெருமான் பிறைசூடிய சடையர்; புலித்தோலை உடுத்தியவர்; பிளந்த வாயினை உடைய பாம்பை அணிந்தவர்; விடக்கறை பொருந்திய கழுத்தினை உடையவர்; பிரமனது தலையோட்டை ஏந்திய கையினை உடையவர்; எலும்புகளால் கோர்க்கப்பட்ட மாலையினை அணிந்த கங்காளர் ஆவார்.

**குறிப்புரை:** நறையூர்ச் சித்தீச்சரத்தார் பிறைச்சடையர், புலித்தோலர், அரவார்த்தவர், நீலகண்டர், கபாலி, கங்காளர் என்கின்றது. பேழ்வாய் – பிளந்த வாய். கங்காளம் – முழு எலும்பு. சேடர் – பெருமை உடையவர்.

Glorious Vedic scholars sing songs in their houses, which spell out the deep meaning of the Vedas. By hearing this musical tone, winged bees feel delighted, hum in joy and sip the honey from the flowers that grow in plenty in Thiru-naraiyoor-ch-chiddheech-charam temple gardens. In this temple Lord Civan is enshrined. He retains the crescent moon in His matted hair. He is clad in a tiger skin. He is adorned with the snake whose mouth is wide open. His neck is dark blue in colour. He holds in one of His hands the skull of Brahma. He wears a garland of bones; He is therefore known as Kangaalar (*கங்காளர்*).

**Note:** Kangaalar: Civa who wears on His body the skeletons of Vishnu and Brahma after the Great Deluge.

பொங்கார்சடையர் புனலரனலர் பூதம் பாடவே
தங்காதலியுந் தாமுமுடனாய்த் தனியோர் விடையேறிக்
கொங்கார்கொன்றை வன்னிமத்தஞ் சூடிக் குளிர்பொய்கைச்
செங்காலனமும் பெடையுஞ்சேருஞ் சித்தீச் சரத்தாரே. 2

*பொங்கு ஆர் சடையர்; புனலர்; அனலர் - பூதம் பாடவே,*
*தம் காதலியும் தாமும் உடன்ஆய்த் தனி ஓர் விடை ஏறி,*
*கொங்கு ஆர் கொன்றை வன்னி மத்தம் சூடி, குளிர்பொய்கைச்*
*செங்கால் அனமும் பெடையும் சேரும் சித்தீச்சரத்தாரே.*

pogku Ar caTaiyar; pun2alar; an2alar--pUtam pATavE,
tam kAtaliyum tAmum uTan2 Ayt tan2i Or viTai ERi,
kogku Ar kon2Rai van2n2i mattam cUTi, kuLirpoykaic
cegkAl an2amum peTaiyum cErum cittIccarattArE.

***பொருள்:*** குளிர்ந்த பொய்கைகளில் சிவந்த கால்களை உடைய அன்னம் தன் பெடையுடன் சேர்ந்து விளங்கும் சித்தீச்சரத்தில் சிவபெருமான் எழுந்தருளி உள்ளார். இவர், நீண்டு வளர்ந்த சடையினர். கங்கையை அணிந்தவர். அனல் ஏந்தியவர். பூதகணங்கள் பாடத் தம் காதலியாகிய உமையம்மையும் தாமும் உடனாய், ஒப்பற்ற விடைமீது ஏறிவருபவர். இவர் தேன் நிறைந்த கொன்றைமலர், வன்னிஇலை, ஊமத்தை மலர் ஆகியவற்றைச் சூடிக் கொண்டிருப்பவர் ஆவார்.

***குறிப்புரை:*** இதுவும் அவர் புனலர், அனலர், விடையேறியவர் என்கின்றது. பொங்கு – வளர்ச்சி. கொங்கு – தேன். இறைவன் தம் காதலியும் தானும் விடையேறியிருப்பதால், பொய்கைகளில் அன்னங்களும் பெடையோடு சேர்ந்திருக்கின்றன என்று போகியாய் இருந்து உயிர்க்குப் போகத்தை நல்கும் தன்மை விளக்கியவாறு.

In His luxurious matted hair Lord Civan displays the river Ganges. His palm holds the fire. Along with His beloved consort Umaa Devi He rides on the matchless bull, and is enshrined in Thiru-naraiyoor-ch-chiddheech-charam. His giant hosts (bhuta hosts) accompany Him singing. He wears in His head honey filled cassia flowers, leaves of mesquit (*வன்னி இலை*) and datura flowers. In the cool ponds of this town ruddy footed female swans and their mates join together and play joyfully.

Note: In the past, cobs and pens (male and female swans) along with their young ones throve well in Tamilnadu.

முடிகொள்சடையர் முளைவெண்மதியர் மூவா மேனிமேல்
பொடிகொணூலர் புலியினதளர் புரிபுன் சடைதாழக்
கடிகொள்சோலை வயல்சூழ்மடுவிற் கயலா ரினம்பாயக்
கொடிகொண்மாடக் குழாமார்நறையூர்ச் சித்தீச் சரத்தாரே. 3

முடி கொள் சடையர்; முளைவெண்மதியர்; மூவா மேனிமேல்
பொடி கொள் நூலர்; புலியின் அதளர் - புரிபுன்சடை தாழ,
கடி கொள் சோலை வயல் சூழ் மடுவில் கயல்ஆர் இனம் பாயக்
கொடி கொள் மாடக்குழாம் ஆர் நறையூர்ச் சித்தீச்சரத்தாரே.

muTi koL caTaiyar; muLai veNmatiyar; mUvA mEn2imEl
poTi koL nUlar; puliyin2 ataLar--puripun2 caTai tAza,
kaTi koL cOlai vayal cUz maTuvil kayal Ar in2am pAyak
koTi koL mATakkuzAm Ar naRaiyUrc cittIccarattArE.

**பொருள்:** மணம் கமழும் சோலைகளும் வயல்களும் சூழ்ந்து விளங்கும் திருநறையூரில் உள்ள நீர்நிலைகளில் கயல்மீன்கள் பாய்ந்து விளையாடுகின்றன. இங்கு கொடிகள் கட்டிய மாடவீடுகள் நிறைந்து இருக்கின்றன. இத்திருத்தலத்தில் உள்ள சித்தீச்சரம் என்ற கோவிலில் சிவபெருமான் எழுந்தருளியுள்ளார். இவர் சடையினை உடைய முடியினர். ஒரு கலையோடு தோன்றும் வெண்மையான மதியை அணிந்துள்ளார். மூப்படையாத தம் திருமேனியில் திருநீற்றையும் முப்புரி நூலையும் அணிந்துள்ளார். புலித்தோலை உடுத்தி உள்ளார். இவரது முறுக்கப்பட்ட சடைகள் தாழ்ந்து தொங்கும்படியாக இவர் விளங்குகின்றார்.

**குறிப்புரை:** இதுவும், அவர் சடைமுடியர், வெண்ணீற்றர், புலித்தோலர் என்கின்றது. மூவா மேனி – மூப்படையாத, என்றும் இளைய திருமேனி. அதளர் – தோலை உடையாக உடையவர்.

The city of Naraiyoor is full of gardens where fragrant air fills all places around. In the ponds surrounded by fields the carps leap and play happily. The mansions are many here where the flags are flying majestically. In this glorious town, Lord Civan is enshrined in the Siddhee-ch-charam temple. In the bunches of His matted hair He retains the single phased white crescent moon. In His ever young and never ageing holy body frame, He smears the holy ashes and wears the three-ply sacred thread. He is clad in tiger skin. His twisted matted hair dangles behind His head.

பின்றாழ்சடைமே னகுவெண்டலையர் பிரமன் றலையேந்தி
மின்றாழுருவிற் சங்கார்குழைதான் மிளிரு மொருகாதர்
பொன்றாழ்கொன்றை செருந்திபுன்னை பொருந்து செண்பகம்
சென்றார்செல்வத் திருவார்நறையூர்ச் சித்தீச் சரத்தாரே. 4

*பின் தாழ் சடைமேல் நகுவெண்தலையர்; பிரமன்தலை ஏந்தி,*
*மின்தாழ் உருவில் சங்கு ஆர் குழைதான் மிளிரும் ஒரு காதர் -*
*பொன் தாழ் கொன்றை, செருந்தி, புன்னை, பொருந்து செண்பகம்,*
*சென்று ஆர் செல்வத் திரு ஆர் நறையூர்ச் சித்தீச்சரத்தாரே.*

pin2 tAz caTaimEl nakuveNtalaiyar; piraman2 talai Enti,
min2 tAz uruvil cagku Ar kuzaitAn2 miLirum oru kAtar--
pon2 tAz kon2Rai, cerunti, pun2n2ai, poruntu, ceNpakam,
cen2Ru Ar celvat tiru Ar naRaiyUrc cittIccarattArE.

**பொருள்:** பூசைக்கு உகந்த பொன்போன்ற கொன்றை, செருந்தி, புன்னை வளமான செண்பகம் ஆகியன வானுற வளரும் செல்வச் செழிப்புள்ள தலம் நறையூர் ஆகும். இங்கு சித்தீச்சரம் கோவிலில் சிவபெருமான் விளங்குகின்றார். இவர், தனது பின்புறமாக தாழ்ந்து தொங்கும் சடைமுடிமேல் பிரகாசத்தை உடைய வெண்ணிறமுள்ள தலை மாலையை அணிந்தவர். பிரமனது தலையோட்டைக் கையில் ஏந்தி இருப்பவர். மின்னலையும் மங்கச் செய்யும் ஒளி உருவினர். அவர் தனது வலது காதில் சங்கினால் ஆன குழை அணிந்தவர்.

**குறிப்புரை:** இதுவும் அவர் தலைமாலை அணிந்தவர், கபாலி, சங்கக் குண்டலர் என்கின்றது. சங்கு ஆர் குழை – சங்கினால் இயன்ற காதணி. திருவார் நறையூர் – திருநறையூர். "பின்தாழ் சடை" Phrase used for "புறந்தாழ் சடையன்" – description found in Sangam literature - Vide புறம் 251 referring to a Yogi.

In the glorious Naraiyoor town thick vegetation grows all around. Therein cassia plant with golden yellow flowers useful for divine worship (*சரக்கொன்றை*), panicled golden-blossomed pear tree (*செருந்தி* – also called *செந்தி*), and the chambak tree (*செண்பகமரம்* – Nichelia champaca) are all grown very tall as to touch the sky. In such a fertile and economically prosperous town, Lord Civan is enshrined in Siddheechcharam temple. In His dangling matted hair which hangs on the backside of His head, He wears the gleaming white circlet made up of leaves and/or flowers. He holds in His hand Brahma's skull and gleams bright so as to nullify the brightness of lightning. He wears an ear ring made of chank in His right ear.

**Note:** Civa is a wearer of two types of ear-rings known as todu and kuzhai – because of His consort having occupied the left portion of His body.

நீரார்முடியர் கறைகொள்கண்டர் மறைகணி றைநாவர்
பாரார் புகழாற் பத்தர் சித்தர் பாடி யாடவே
தேரார்வீதி முழவார்விழவி னொலியுந் திசைசெல்லச்
சீரார்கோலம் பொலியுநறையூர்ச் சித்தீச் சரத்தாரே. 5

*நீர் ஆர் முடியர்; கறை கொள் கண்டர்; மறைகள் நிறை நாவர் -*
*பார் ஆர் புகழால் பத்தர் சித்தர் பாடி ஆடவே,*
*தேர் ஆர் வீதி முழவு ஆர் விழவின் ஒலியும் திசை செல்ல,*
*சீர் ஆர் கோலம் பொலியும் நறையூர்ச் சித்தீச்சரத்தாரே.*

nIr Ar muTiyar; kaRai koL kaNTar; maRaikaL niRai nAvar--
pAr Ar pukazAl pattar cittar pATi ATavE,
tEr Ar vIti muzavu Ar vizavin2 oliyum ticai cella,
cIr Ar kOlam poliyum naRaiyUrc cittIccarattArE.

**பொருள்:** திருநறையூரில், உலகம் முழுவதும் பரவிய சிவபெருமானது புகழ் மொழிகளைப் பக்தர்களும் சித்தர்களும் பாடிக் கொண்டும் ஆடிக் கொண்டும் இருக்கின்றனர். தேர் ஓடுகின்ற வீதிகளில் முழவின் ஒலி, விழாக்களின் ஒலியோடு பெருகி எண்திசையும் பரவுகின்றது. இந்தப் புகழ் பொருந்திய அழகோடு கூடிய நறையூர்ச் சித்தீச்சரத்தில் சிவபெருமான் உறைகின்றார். இவர், கங்கையை அணிந்த சடைமுடியினர். கருநீலம் கொண்ட கண்டத்தை உடையவர். வேதங்கள் உற்பவிக்கும் நாவினர்.

**குறிப்புரை:** சித்தீச்சரத்தார் கங்கைமுடியர், நீலகண்டர், மறைநாவர் என்கின்றது. பாரார் புகழ் – உலகம் முழுவதும் வியாபித்த புகழ்.

Devotees and mystics who have acquired supernatural powers (*சித்தர்கள்*) praise Lord Civa, and dance and sing on His glory that has spread all over the world. In the big streets where Lord's chariots ply, the noise of the drums mixed with the noise of festival activities pervades in all the eight directions. In such a glorious and famed city of Thiru-naraiyoor-ch-chiddheech-charam Civa is entempled. He retains the river Ganges in His matted hair. His neck is dark blue in colour. He is the creator of the four sacred Vedas.

**Note:** Singing and dancing are indulged in by devotees when they feel the presence of Civa in their mind.

நீண்டசடையர் நிரைகொள்கொன்றை விரைகொண் மலர்மாலை
தூண்டுசுடர்பொன் னொளிகொள்மேனிப் பவளத் தெழிலார்வந்
தீண்டுமாட மெழிலார்சோலை யிலங்கு கோபுரந்
தீண்டுமதியந் திகழுநறையூர்ச் சித்தீச் சரத்தாரே. 6

*நீண்ட சடையர்; நிரை கொள் கொன்றை விரை கொள் மலர்மாலை*
*தூண்டு சுடர் பொன்ஒளி கொள் மேனிப் பவளத்து எழிலார் - வந்து*
*ஈண்டு மாடம், எழில் ஆர் சோலை, இலங்கு கோபுரம்,*
*தீண்டு மதியம் திகழும் நறையூர்ச் சித்தீச்சரத்தாரே.*

nINTa caTaiyar; nirai koL kon2Rai virai koL malarmAlai
tUNTu cuTar pon2 oLi koL mEn2ip pavaLattu ezilAr--vantu
INTu mATam, ezil Ar cOlai, ilagku kOpuram,
tINTu matiyam tikazum naRaiyUrc cittIccarattArE.

**பொருள்:** ஒன்றோடு ஒன்று நெருங்கி நிற்கும் மாடவீடுகளையும், அழகிய சோலைகளையும், மதியைத் தொடுகின்றவாறு உயர்ந்து விளங்கும் கோபுரங்களையும் உடைய தலம் திருநறையூர். இங்குள்ள சித்தீச்சரத்தில் எழுந்தருளியுள்ள சிவபெருமான் நீண்ட சடைமுடியை உடையவராக விளங்குகின்றார். சரமாகப் பூத்த மணம் நிறைந்த கொன்றை மலரால் தொடுத்த மாலையை அணிந்துள்ளார். பொன் போன்று ஒளிரும் திருமேனியைக் கொண்டவர். சிவந்த பவளம் போன்ற எழில் மிக்கவர்.

**குறிப்புரை:** இதுவும் அது. நிரை கொள் கொன்றை – சரமாகப் பூத்த கொன்றை. தூண்டு சுடர் – ஒரு காலைக்கொருகால் மிகுந்து தோன்றும் ஒளி. பவளத்தெழிலார் – பவளம் போன்ற அழகினை உடையவர்.

In the city of Thiru-naraiyoor-ch-chiddheech-charam the mansions are built very close to one another with many floors lush gardens exist all around the tall temple towers seem to reach the moon. Lord Civan of this city has long matted hair. He wears the garland of rows and rows of long cassia flowers. His entire body frame shines like golden flame. He has the graceful ruddy colour of corals.

குழலார்சடையர் கொக்கினிறகர் கோல நிறமத்தம்
தழலார்மேனித் தவளநீற்றர் சரிகோ வணக்கீளர்
எழிலார்நாகம் புலியினுடைமே லிசைத்து விடையேறிக்
கழலார்சிலம்பு புலம்பவருவார் சீத்தீச் சரத்தாரே. 7

*குழல் ஆர் சடையர்; கொக்கின் இறகர்; கோல நிற மத்தம்*
*தழல் ஆர் மேனித் தவள நீற்றர்; சரி கோவணக்கீளர் -*
*எழில் ஆர் நாகம் புலியின் உடை மேல் இசைத்து, விடை ஏறி,*
*கழல் ஆர் சிலம்பு புலம்ப, வருவார் சீத்தீச்சரத்தாரே.*

kuzal Ar caTaiyar; kokkin2 iRakar; kOla niRa mattam
tazal Ar mEn2it tavaLa nIRRar; cari kOvaNakkILar--
ezil Ar nAkam puliyin2 uTaimEl icaittu, viTai ERi,
kazal Ar cilampu pulampa, varuvAr cittIccarattArE.

**பொருள்:** நறையூர்ச் சித்தீச்சரத்து இறைவரான சிவபெருமான், அழகு பொருந்திய நாகத்தைப் புலித்தோல் ஆடைமேல் பொருந்தக் கட்டி உள்ளார். விடைமீது ஏறி, கழலும், சிலம்பும் கால்களில் ஒலிக்க வருபவர். மாதொரு பாகராதலின் கூந்தலும், சடையும் உடைய திருமுடியினர். கொக்கின் இறகை அணிந்தவர். அழகிய நிறம் அமைந்த ஊமத்தம் மலரைச் சூடியவர். தழல் போலச் சிவந்த திருமேனியில் வெண்ணிறமான திருநீற்றை அணிந்தவர். கோவண ஆடை அணிந்தவர்.

**குறிப்புரை:** அவர் கூந்தலையும் சடையையும் உடையவர், கொக்கின் இறகை அணிந்தவர், கோவண ஆடையர் என்கின்றது. குழல் – கூந்தல். கோலம் – அழகு. தவளம் – வெண்மை. கீள் – கிழித்த ஆடை. புலம்ப – ஒலிக்க.

Lord Civan is clad in tiger skin. He tightens it with a dainty snake. He rides on the bull while the anklet and the string of little bells in His leg tinkle. As He is concorporate with His consort, His crest is half matted and half plain hair. He wears the feather of heron and the pleasing coloured datura flowers on His head. In His 'flame like' ruddy frame, He has smeared His body with white holy ashes. He is enshrined in Thiru-naraiyoor-ch-chiddheech-charam.

**Note:** The left half of Lord Civa's hair displays lovely locks while His right half displays matted hair.

கரையார்கடல்சூ ழிலங்கைமன்னன் கயிலை மலைதன்னை
வரையார்தோளா லெடுக்கமுடிகள் நெரித்து மனமொன்றி
உரையார்கீதம் பாட நல்லவுலப்பி லருள்செய்தார்
திரையார்புனல்சூழ் செல்வநறையூர்ச் சித்தீச் சரத்தாரே. 8

கரை ஆர் கடல் சூழ் இலங்கை மன்னன் கயிலைமலைதன்னை
வரை ஆர் தோளால் எடுக்க, முடிகள் நெரித்து மனம் ஒன்றி
உரை ஆர் கீதம் பாட, நல்ல உலப்பு இல் அருள் செய்தார் -
திரை ஆர் புனல் சூழ் செல்வ நறையூர்ச் சித்தீச்சரத்தாரே.

karai Ar kaTal cUz ilagkai man2n2an2 kayilaimalai tan2n2ai
varai Ar tOLAl eTukka, muTikaL nerintu man2am on2Ri
urai Ar kItam pATa, nalla ulappu il aruL ceytAr--
tirai Ar pun2al cUz celva naRaiyUrc cittIccarattArE.

**பொருள்:** அலைகளோடு கூடிய நீர் நிலைகளால் சூழப்பட்ட செல்வ வளம் மிக்க திருத்தலம் நறையூர் ஆகும். இங்குள்ள சித்தீச்சரத்தில் சிவபெருமான் எழுந்தருளி உள்ளார். கரைகளை வந்து பொருந்தும் கடலால் நாற்புரமும் சூழ்ந்துள்ள இலங்கையின் மன்னன் இராவணன். இவன் கயிலை மலையை மலை போன்ற தன் தோள்களால் நகர்த்த முற்பட்டான். சிவபெருமான், அவனது தலைகளைத் தன் கால்விரலால் நெரிக்க, தன் பிழையை உணர்ந்தான். அதன்பின் மனம் ஒன்றி சாமகானம் இசைத்துப் போற்றினான். இறைவர் அவனுக்கு இரங்கி அளவிட முடியாத நல் அருளை வழங்கினார்.

**குறிப்புரை:** இராவணனை அடர்த்து, அவன் சாமகானம் பாட அருள் செய்தவர் இவர் என்கின்றது. வரையார் தோளார் – மலையையொத்த தோள்களால். உலப்பில் – வற்றாத.

King Raavanan resides in Sri Lanka that is surrounded by the roaring sea in all its four directions. Once he tried to lift and move mount Kailash, the abode of Civan, by his mountain like shoulders, when Lord Civan pressed His toe on the top of the mountain. Lo! Raavana's head and shoulders were crushed. Raavanan realised his folly, begged pardon and sang in the tune called 'Saama Ghaaanam' (*சாமகானம்*) which is dear to Lord Civa; Lord Civa pardoned and blessed him with unlimited boons. This Lord Civan is enshrined at the Siddheechcharam temple in Thiru-naraiyoor. This city is surrounded by ponds where the waves are dashing against its banks. It is a very flourishing town.

நெடியான்பிரமன் நேடிக்காணார் நினைப்பார் மனத்தாராய்
அடியாரவரு மருமாமறையு மண்டத் தமரரும்
முடியால்வணங்கிக் குணங்களேத்தி முதல்வா அருளென்னச்
செடியார்செந்நெல் திகழுநறையூர்ச் சித்தீச் சரத்தாரே. 9

*நெடியான் பிரமன் நேடிக் காணார் - நினைப்பார் மனத்தாராய்,*
*அடியார் அவரும் அருமாமறையும் அண்டத்து அமரரும்*
*முடியால் வணங்கிக் குணங்கள் ஏத்தி, "முதல்வா, அருள்!" என்ன/*
*செடி ஆர் செந்நெல்-திகழும் நறையூர்ச் சித்தீச்சரத்தாரே.*

neTiyAn2 piraman2 nETik kANAr--nin2aippAr man2attArAy,
aTiyAr avarum arumA maRaiyum aNTattu amarum
muTiyAl vaNagkik kuNagkaL Etti, "mutalvA, aruL!" en2n2a,
ceTi Ar cennel--tikazum naRaiyUrc cittIccarattArE.

**பொருள்:** திருமாலும் பிரமனும் தேடிக் காண இயலாதவராக விளங்கிய சிவபெருமான், தம்மை நினைப்பவர் மனத்தில் எளிதில் விளங்கித் தோன்றுகிறார். அடியவரும், அரிய புகழ்மிக்க வேதங்களும், மேலுலகில் வாழும் தேவர்களும், தம் முடியால் அவரை வணங்குகின்றனர். அவரது குணங்களைப் போற்றுகின்றனர். 'முதல்வா! அருள்' என்று கூறி வழிபடுகின்றனர். இவ்வாறு போற்றப்படும் சிவபெருமான், செந்நெல் பயிர்கள் புதர்களாகச் செழித்துத் திகழும், திருநறையூர்ச் சித்தீச்சரத்தில் எழுந்தருளி உள்ளார்.

**குறிப்புரை:** அடியாரும் அமரரும் 'முதல்வா! அருள்' என்று தோத்தரிக்க, இத்தலத்து எழுந்தருளியிருக்கின்றார் என்கின்றது. நெடியான் – திருமால். நேடி – தேடி. பதவிகளில் இருப்பார் தேடிக் காணாத பெருமான், தியானிப்பவர்கள் மனத்தில் இருக்கின்றார் என எளிமை கூறியவாறு. செடி – புதர்.

The tall Vishnu and Brahma went out in search of the holy feet and head of Lord Civa in vain, whereas He is conspicuous in the minds of those who adore Him even mentally. Devotees, the sacred Vedas and the Devaas who live in the upper world – all of them bow their heads, and worship Him and pray thus: "O! Primal Lord, be pleased to bless us!" This Lord Civan is enshrined at the Siddheechcharam temple in Thiru-naraiyoor where the red variety of paddy thrives in plenty, like thick bushes.

நின்றுண்சமண ரிருந்துண்டேரர் நீண்டபோர்வையார்
ஒன்றுமுணரா வூமர்வாயி லுரைகேட் டுழல்வீர்காள்
கன்றுண்பயப்பா லுண்ணமுலையிற் கபால மயல்பொழியச்
சென்றுண்டார்ந்து சேருநறையூர்ச் சித்தீச் சரத்தாரே. 10

நின்று உண் சமணர், இருந்து உண் தேரர் நீண்ட போர்வையார்,
ஒன்றும் உணரா ஊமர் வாயில் உரை கேட்டு உழல்வீர்காள்!
கன்று உண் பயப்பால் உண்ண முலையில், கபாலம் அயல் பொழிய,
சென்று உண்டு ஆர்ந்து சேரும் நறையூர்ச் சித்தீச்சரத்தாரே.

nin2Ru uN camaNar, iruntu uN tErar nINTa pOrvaiyAr,
on2Rum uNarA Umar vAyil urai kETTu uzalvIrkAL!
kan2Ru uN payappAl uNNa mulaiyil, kapAlam ayal vaziya,
cen2Ru uNTu Arntu cErum naRaiyUrc cittIccarattArE.

**பொருள்:** சமணர்கள் நின்று கொண்டே உண்ணுகின்றனர். நீண்ட போர்வையைப் போர்த்த புத்தர்கள் இருந்துகொண்டு உண்ணுகின்றனர். அவர்கள் ஒன்றும் அறியாத ஊமர்கள். அவர்கள் கூறும் சொற்களைக் கேட்டு உழல்பவர்களே! பசுவின் கன்று விரும்பிப் பால் குடிக்க, பசுவின் ஏனைய முலைக் காம்பில் சுரந்த பால் பாத்திரம் நிரம்பி வெளியிலும் பொழிகின்றது. மீண்டும் அக்கன்று தன் தாயிடம் சென்று பாலுண்டு மகிழும் வளமுடைய திருநறையூர் சித்தீச்சரத்தில் எழுந்தருளியுள்ள சிவபெருமானைத் தொழுவீர்களாக.

**குறிப்புரை:** ஒன்றுமறியாத புத்தர் சமணர்களின் உரைகளைக் கேட்டுழலும் மக்களே! இத்தலத்தைச் சேரும் என்கின்றது. கன்று உண்பயப்பால் உண்ண – கன்று உண்ணும் விருப்பால் உண்ண. முலையில் – முலையிலிருந்து. கபாலம் அயல் பொழிய – கறவைப் பாத்திரம் நிறைந்து வழிய. சென்று உண்டு ஆர்ந்து சேரும் – மீளவும் கன்று போய் உண்டு நிறைந்து சேரும் என்க.

Those disgraceful Jain ascetics, among the good many, take their food standing and have no knowledge about the renowned philosophy of Saiva religion. It is the same with the false Buddhist monks also (போலித்துறவிகள்) who are many in number. Ye companions! You remain confused by hearing the false preaching of other faiths. In the town of Thiru-naraiyoor, calves, joyfully suck milk from their mother cows. Then the milkman draws the milk from the other udder of the cow. His container vessel gets filled and the milk overflows. He stops milking and allows the calves to suck milk for a second time. They suck to their stomach full and retire to their cowshed. Such a fertile place is Thiru-naraiyoor, where Lord Civa is entempled.

குயிலார்கோல மாதவிகள் குளிர்பூஞ் சுரபுன்னை
செயிலார்பொய்கை சேருநறையூர்ச் சித்தீச் சுரத்தாரை
மயிலார்சோலை சூழ்ந்தகாழி மல்கு சம்பந்தன்
பயில்வார்க்கினிய பாடல்வல்லார் பாவ நாசமே. 11

குயில் ஆர் கோல மாதவிகள், குளிர்பூஞ்சுரபுன்னை,
செயில் ஆர் பொய்கை, சேரும் நறையூர்ச் சித்தீச்சரத்தாரை
மயில் ஆர் சோலை சூழ்ந்த காழி மல்கு சம்பந்தன்
பயில்வார்க்கு இனிய பாடல் வல்லார் பாவம் நாசமே.

kuyil Ar kOla mAtavikaL, kuLir pUnjcura pun2n2ai,
ceyil Ar poykai, cErum naRaiyUrc cittIccurattArai,
mayil Ar cOlai cUznta kAzi malku campantan2,
payilvArkku in2iya, pATal vallAr pAvam nAcamE.

**பொருள்:** குயில்கள் அழகிய குருக்கத்தி மரங்களில் வாழுகின்றன. குளிர்ச்சியான அழகிய சுரபுன்னைகளும், வயல்களில் நீரைச் செலுத்தும் பொய்கைகளும் நிறைந்துள்ள திருத்தலம் திருநறையூர். இங்குள்ள சித்தீச்சரத்து இறைவரான சிவபெருமானை, மயில்கள் வாழும் சோலைகள் சூழ்ந்த சீகாழிப் பதியில் தோன்றிய, ஞானசம்பந்தன் போற்றிப் பாடிய, பயில்வார்க்கு இனிமையாக இருக்கின்ற, இப்பதிகப் பாடல்களைப் பொருள் உணர்ந்து ஓத வல்லவர்களின் பாவங்கள் அழிந்து போகுமே!

**குறிப்புரை:** இப்பாடல் பாடுவார்க்கு பாவம் நாசம் ஆம் என்கின்றது. மாதவி – குருக்கத்தி.

Gnaanasambandan hails from Seekaazhi that is rich in gardens where peacocks flourish. He has sung on Lord Civan of Thiru-naraiyoor-ch-chiddheech-charam, where natural pools carry water to the fields. The vegetation all around Thiru-naraiyoor is full of lush trees such as 'common delight of woods (*மாதவி* also called *குருக்கத்தி*); also the cool and pretty, long leaved trees (*சுரபுன்னை*); where the Indian cuckoos (*குயில்*) flock in large numbers. Those who can recite in full awareness of the meaning of this hymn which Gnaanasambandan has sung adoring Lord Civan, will get rid of their sins.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*71ஆம் பதிகம் முற்றிற்று*
End of 71st Hymn

உ
சிவமயம்

## 72. திருக்குடந்தைக் காரோணம் (கும்பகோணம்)

### திருத்தல வரலாறு:

தற்காலத்தில் **கும்பகோணம்** என்று வழங்கும் இத்திருத்தலமாகிய திருக்குடந்தைக் காரோணம், சோழ நாட்டில் காவிரியின் வடகரைத் தலங்களில் ஒன்றான பெரிய நகரமாகும். மயிலாடுதுறை – திருச்சி இரயில் வழியில் உள்ள இரயில் வண்டி நிலையம். அனைத்து நகரங்களில் இருந்தும் கும்பகோணம் வரப் பேருந்து வசதி உள்ளது.

இத்தலம் தேவாரங்களில் குடமூக்கு என வழங்கப் பெறும். பஞ்சக்குரோசத் தலங்கள் சூழ்ந்தது. கங்கை யமுனை முதலிய ஒன்பது தீர்த்தங்களும் வந்து வழிபடும் பெருமை உடையது. பதினான்கு கோயில்களையும் பதினான்கு தீர்த்தங்களையும் உடையது. ஒன்பதாம் நூற்றாண்டு முதல் சோழ அரசர்கள் இதனைத் தலைநகராகக் கொண்டனர். சோழர்கள் இருந்த இடமாகிய சோழ மாளிகையும், இடிந்து போன பழங் கோயில்களும் இதன் பழமைக்கு அறிகுறியென்பார் பெர்கூசன் என்னும் அறிஞர். ஏழாம் நூற்றாண்டில் மூலைக்கூற்றம் என வழங்கப்பட்டது என்பார் பர்னல் துரை. இத்தலத்தில் (குரு சிம்ம ராசியில் பிரவேசிக்கும் காலமான) 12 வருஷத்திற்கு ஒருமுறை மகாமக தீர்த்தத்தில் தென்னிந்திய மக்கள் அனைவரும் நீராடுவர். இங்கேயுள்ள பாடல் பெற்ற சிவத்தலங்கள் திருக்குடமூக்கு, குடந்தைக் கீழ்க்கோட்டம், குடந்தைக் காரோணம் என்பன. குடமூக்கு கும்பேசுவர சுவாமி கோயில், கீழ்க்கோட்டம் நாகேசுவரன் கோயில், காரோணம் காசி விசுவநாதர் கோயில். இவையன்றிச் சோமேசம் முதலிய பல கோயில்கள் உள்ளன. இத்தலம் மூர்க்க நாயனார் வாழ்ந்த தலம்.

இறைவன் பெயர் கும்பேசர், அமுத கும்பேசர், ஆதி கும்பேசர். அம்மையின் பெயர் மங்களாம்பிகை. பிரமன், அகத்தியர், கிருத வீரியன், வீரவர்மன், இந்திரன், மாந்தாதா (சந்திரனின் பெயரன்) முதலியோர் வழிபட்டுப் பேறுபெற்றனர்.

### கல்வெட்டு:

இத்தலம் உய்யக்கொண்டான் வளநாட்டு வடகரையம்பூர் நாட்டுத் திருக்குடந்தை என வழங்கும். கல்வெட்டுக்கள் பெரும்பாலும் நாகேச்சரமாகிய கீழ்க்கோட்டத்தைப் பற்றியனவே. குடமூக்கு என்னும் இத்தலத்தைப் பற்றியன அல்லவாதலின் அவை ஈண்டுத் தரப்படவில்லை.

**பதிக வரலாறு:**

உலகத்து உயிர்கள் அனைத்தையும் உடம்பொடு கூட்டித் தோற்றுவித்த கடவுளாகிய பிரமன் வழிபட்டு உய்ந்த சீகாழிப் பதிச் செம்மலாகிய திருஞானசம்பந்தப் பிள்ளையார் சிவபுரத்தைத் தொழுது பதிகம்பாடி, அண்மையில் உள்ள விடையேறும் பெருமான் திருவடியையும் போற்றத் திருவுளங் கொண்டு, திருக்குடமூக்கு என்னும் கும்பகோணத் தலத்தை அடைந்தார். அதனை உணர்ந்த அவ்வூர் அந்தணர்கள் வேத ஒலி விம்ம, மங்கள வாத்தியங்கள் முழங்க, ஊர்ப்புறத்தே வந்து எதிர் கொண்டு அழைத்துச் சென்றார்கள். குடமூக்காலயத்தைக் குறுகினார்கள். பிள்ளையார் 'குடமூக்கை உவந்திருந்த பெருமான் எம்மிறை' என்று பெருகிய இசையாற் பதிகம் பாடினார்கள். பின்னர் குடந்தைக் கீழ்க்கோட்டம் வணங்கிக் கொண்டு குடந்தைக் காரோணம் சென்றார்கள். அங்கே கங்கை முதலாகிய புனித தீர்த்தங்கள் மகாமகத்தில் நீராடுவதற்கு வரும் அக்கோயிலை வணங்கினார்கள். மன்மதனை எரித்த பெருமானது மலரடியைக் கண்டார்கள். கண்டு களித்தார்கள். 'வாரார் கொங்கை' என்னும் பண்ணார்ந்த திருப்பதிகம் பாடினார்கள்.

## 72. THIRU-K-KUDANTHAI KAARŌNAM (KUMBAKONAM)

### THE HISTORY OF THE PLACE

This sacred place presently known as Kumbakōnam is to the north of river Cauvery in Chola Naadu and is a big town. It has a railway station on the Mayilaaduthurai - Thiru-ch-chirappalli train route. The town can be reached by bus from almost all the towns. The temple is referred to as Kudamooku in the Thevaaram. There are two other Civa temples, known as Kudanthai-k-Keezh-k-kottam (Naagesuvaran Koyil), and Kudanthai-k-Kaaronam (Kaasi Visuvanaathar Koyil), that have been sung by the hymnists. Besides these, there are other Civa temples such as Somesam etc., in this town.

The names of the God here are Kumbesar, Amudha-kumbesar and Aadhi Kumbesar. The Goddess is known as Mangalaambikai. Those who attained salvation by offering worship here are: Brahman, Agath-thiyar, Kirutha-veeriyan, Veera-varman, Indhiran and Maan-dhaa-thaa (Grandson of Moon) and many others.

This place has many distinctions. It is surrounded by five other temples known as 'Panchaak Kurosath Thalam'. According to Legend, Nine rivers including the

Ganges and the Yamunai come here to offer worship. The town has fourteen temples and fourteen sacred fords. It was used as the capital of Chola empire from the 9th century CE. The site where the Chola palaces once stood is called Chola Maaligai. This and the ruins of ancient temples speak of the antiquity of this place, according to Ferguson. Once in 12 years, on the occasion when the eighth planet Jupiter (Guru – குரு) enters the fifth sign of the zodiac house of Simma-raasi, very many number of people from all over South India come here and take bath in the sacred ford. The festival is known as Mahaa-magham. This is also the place where the Saint Moorkka Naayanaar lived.

The inscriptions here are mostly about another temple, Keezhkottam and not about this.

### INTRODUCTION TO THE HYMN

Our saint proceeded from Civapuram to Kudanthai at the outskirts of which he was received by the Vedic Brahmins. He adored the Lord at Kudanthai and proceeded to Kudanthai-k-keezhkōttam and thereafter he arrived in Kaarōnam and sang the following hymn. It was here where the Mahaamagam festival is celebrated, once in twelve years.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 72. திருக்குடந்தைக் காரோணம் (கும்பகோணம்)

## 72. THIRU-K-KUDANTHAI-K-KAARŌNAM (KUMBAKONAM)

பண் : தக்கேசி
ராகம் : காம்போதி

*Pann: Thakkēsi*
*Raagam: Kaambothi*

வாரார் கொங்கைமாதோர் பாகமாக வார்சடை
நீரார்கங்கை திங்கள்சூடி நெற்றி யொற்றைக்கண்
கூரார்மழுவொன் றேந்தியந்தண் குழகன் குடமூக்கில்
காரார்கண்டத் தெண்டோளெந்தை காரோ ணத்தாரே. 1

வார் ஆர் கொங்கை மாது ஓர்பாகம் ஆக, வார்சடை,
நீர் ஆர் கங்கை திங்கள் சூடி, நெற்றிஒற்றைக்கண்,
கூர் ஆர் மழு ஒன்று ஏந்தி, அம் தண் குழகன் - குடமூக்கில்,
கார் ஆர் கண்டத்து எண்தோள் எந்தை, காரோணத்தாரே.

vAr Ar kogkai mAtu Or pAkam Aka, vArcaTai,
nIr Ar kagkai tigkaL cUTi, neRRi oRRaikkaN,
kUr Ar mazu on2Ru Enti, am taN kuzakan2--kuTamUkkil,
kAr Ar kaNTattu eNtOL entai, kArONattArE.

**பொருள்:** திருக்குடமூக்குக் காரோணத்தில் எழுந்தருளியுள்ள எந்தையராகிய சிவபெருமான். கார் மேகம் போன்ற கருமை பொருந்திய கண்டத்தினராய், எட்டுத் தோள்களோடு விளங்குகின்றார். இவர் அருள் செய்யும் இளமைக் கோலத்தில் விளங்குகின்றார். கச்சணிந்த கொங்கைகளையுடைய பார்வதி தேவியை ஒருபாகமாகக் கொண்டுள்ளார். நீண்ட சடைமுடியில் நீர் மயமான கங்கையையும் பிறையையும் சூடியுள்ளார். இயல்பான இருவிழிகளோடு நெற்றியில் மூன்றாவது கண்ணுடையவர். கூரிய மழு என்னும் ஓர் ஆயுதத்தை ஏந்தியுள்ளார்.

**குறிப்புரை:** குடந்தைக் காரோணத்தார் உமையொரு பாகமாக, சடையில் கங்கையையும் திங்களையும் சூடி, மழுவேந்திய குழகன் ஆவார் என்கின்றது. வார் – கச்சு, குழகன் – இளமை உடையவன்.

Lord Civan, who is our father conspicuously enshrined at Kaarōnam temple in Kudamookku town, has eight shoulders and a dark blue neck. He is concorporate with His consort Paarvathi Devi who has put on the corset in her breasts (Indian women's breast band). In His long and dangling matted hair, He keeps the river Ganges full of water and the crescent moon. Apart from the two normal eyes, He has a third eye in His forehead. He holds the sharp battle-axe in one of His hands. He is the ever-young (*குழகன்*) beautiful person renowned for bestowing grace on His devotees.

முடியார்மன்னர் மடமான்விழியார் மூவுல கும்மேத்தும்
படியார்பவள வாயார்பலரும் பரவிப் பணிந் தேத்தக்
கொடியார்விடையார் மாடவீதிக் குடந்தைக் குழகாருங்
கடியார்சோலைக் கலவமயிலார் காரோ ணத்தாரே. 2

முடி ஆர் மன்னர் மடமான்விழியார், மூஉலகும்(ம்) ஏத்தும்
படியார்; பவளவாயார் பலரும் பரவிப் பணிந்து ஏத்த,
கொடி ஆர் விடையார் - மாட வீதிக் குடந்தை, குழகு ஆரும்
கடி ஆர் சோலைக் கலவமயில் ஆர் காரோணத்தாரே.

muTi Ar man2n2ar, maTamAn2 viziyAr, mU ulakum(m) Ettum
paTiyAr; pavaLa vAyAr palarum paravip paNintu Etta,
koTi Ar viTaiyAr--mATa vItik kuTantai, kuzaku Arum
kaTi Ar cOlaik kalavamayil Ar kArONattArE.

**பொருள்:** குடந்தை என்னும் தலத்தில் மாடவீதிகளும், மணம் கமழும் சோலைகளும் உள்ளன. இச்சோலைகளில் தோகையோடு கூடிய மயில்கள் உலாவுகின்றன. இங்குள்ள காரோணத்தில் இறைவரான சிவபெருமான், கொடியில் பொருந்திய இடபத்தோடும், இளமைக் கோலத்தோடும் விளங்குகின்றார். இவரை, மணிமுடி சூடிய மன்னர்கள், இளமான் கண்கள் போன்ற விழியினை உடைய பெண்கள், மூவுலகத்திலும் உள்ள மக்கள், தேவர்கள், முனிகணங்கள், பவளத்தைப் போன்ற வாயினை உடைய அரம்பையர்கள் முதலான பலரும் போற்றித் துதித்து வணங்குகின்றனர்.

**குறிப்புரை:** இவர் முடி மன்னர், மான்விழியார், மூவுலகேத்தும் முதல்வர் என்றது. கொடியார் விடை – கொடியில் பொருந்திய இடபம். கடியார் சோலை – மணம் பொருந்திய சோலை.

In the holy city of Kudanthai (*கும்பகோணம்* the shortened name is *குடந்தை*) the Kaarōnam temple exists surrounded by the main streets called Maada Veethi (*மாடவீதி*). A pleasant smell, always fills the air in the gardens, where fan tailed peacocks flourish. The ever-young Lord Civan is enshrined in this temple. He is hailed, adored and worshipped by emperors, kings, damsels having eyes like that of deer, devotees from all the three worlds (Upper, middle and under worlds), the Devaas, the ascetic groups, the courtesans in the world of demigods known as Arambayer (*அரம்பையர்*) whose lips are ruddy like coral gem and by many others. The insignia of His flag is the figure of bull inscribed on it.

மலையார்மங்கை பங்கரங்கை யனலர் மடலாரும்
குலையார்தெங்கு குளிர்கொள் வாழை யழகார் குடமூக்கில்
முலையாரணிபொன் முளைவெண்ணகையார் மூவா மதியினார்
கலையார்மொழியார் காதல்செய்யுங் காரோ ணத்தாரே. 3

*மலையார் மங்கை பங்கர், அங்கை அனலர் - மடல் ஆரும்*
*குலை ஆர் தெங்கு குளிர் கொள் வாழை, அழகு ஆர் குடமூக்கில் -*
*முலையார் அணி பொன், முளை வெண்நகையார், மூவா மதியினார்,*
*கலை ஆர் மொழியார், காதல் செய்யும் காரோணத்தாரே.*

malaiyAr magkaipagkar, agkai an2alar--maTal Arum
kulai Ar tegku, kuLir koL vAzai, azaku Ar kuTa mUkkil--
mulaiyAr aNi pon2, muLai veN nakaiyAr, mUvA matiyin2Ar,
kalai Ar moziyAr, kAtal ceyyum kArONattArE.

**பொருள்:** குடமூக்கு என்னும் திருத்தலத்தைக் குளிர்ச்சி தரும் குலைகளோடு கூடிய வாழை மரங்களும் மட்டைகளுடன் கூடிய தென்னை மரங்களும் சூழ்ந்து அழகு செய்கின்றன. இங்குள்ள சிவபெருமான் காரோணத்தில் மலைமங்கை பங்கராக, கையில் அனலேந்தியவராக எழுந்தருளி உள்ளார். இப்பெருமான் பொன் அணிகளோடு விளங்கும் தனங்களையும், மூங்கில் முளை போன்ற வெண்மையான பற்களையும், இளம்பிறை போன்ற நெற்றியையும் இசை போன்ற மொழியையும் உடைய பார்வதி தேவியால் விரும்பப்படும் இறைவன் ஆவார்.

**குறிப்புரை:** உமையொருபாகர், அனலேந்தியவர், காரோணத்து இறைவன் மலைமங்கை பங்கர் இவர் என்கின்றது. மடல் – மட்டை. மூவா மதியினார் – இளம்பிறை போன்ற நெற்றியினை உடையவர்.

Lord Civan of Thiru-k-kudanthai-k-kaarōnam shares His body with the daughter of the mountain king. He holds the fire in His beautiful palm. This beautiful city of Thiru-k-kudanthai-k-kaarōnam is surrounded by cocoanut groves and plantain gardens. The thick leaf stalks and bunches of fruits in these trees exhibit the richness of the place. The girls of this town wear golden jewellery in their bosom; their teeth are as white as the bamboo sprout; their forehead is like the crescent moon; their speech is like musical tone - all these damsels hail and adore Lord Civan of Thiru-k-kudanthai-k-kaarōnam.

போதார்புனல்சேர் கந்தமுந்திப் பொலியவ் வழகாரும்
தாதார்பொழில்சூழ்ந் தெழிலார்புறவி லந்தண் குடமூக்கில்
மாதார்மங்கை பாகமாக மனைகள் பலிதேர்வார்
காதார்குழையர் காளகண்டர் காரோ ணத்தாரே. 4

போது ஆர் புனல் சேர் கந்தம் உந்திப் பொலிய(வ்) அழகு ஆரும்
தாது ஆர் பொழில் சூழ்ந்து எழில் ஆர் புறவில், அம் தண் குடமூக்கில் -
மாது ஆர் மங்கை பாகம் ஆக மனைகள் பலி தேர்வார்,
காது ஆர் குழையர், காளகண்டர் - காரோணத்தாரே.

pOtu Ar pun2al cEr kantam untip poliya(v) azaku Arum
tAtu Ar pozil cUzntu ezil Ar puRavil, am taN kuTa mUkkil--
mAtu Ar magkai pAkam Aka man2aikaL pali tErvAr,
kAtu Ar kuzaiyar, kALakaNTar--kArONattArE.

**பொருள்:** அழகிய குளிர்ச்சியான குடமூக்கு என்னும் தலம், நிரம்பப் பெற்ற மணம் மிக்க பூக்கள் மகரந்தம் நிறைந்த சோலைகளாலும் எழிலார்ந்த காடுகளாலும் சூழப்பட்டு இருக்கின்றன. இக்காடுகளின் நீர்நிலைகளில் உள்ள தாமரை, கழுநீர், குவளை முதலிய பூக்களின் நறுமணம் முற்பட்டு வந்து பொலிவெய்துகிறது. இத்தலத்தில் விளங்கும் காரோணம் எனப் பெயர் பெறும் திருக்கோவிலில் சிவபெருமான் எழுந்தருளி உள்ளார். இவர், காதல் நிறைந்த உமையம்மையை தன் உடம்பில் ஒரு பாகமாகக் கொண்டு உள்ளார். மனைகள்தோறும் சென்று பலிஏற்கிறார். காதில் குழை அணிந்துள்ளார். காளம் என்னும் நஞ்சைக் கண்டத்தே கொண்டவர்.

**குறிப்புரை:** பலிதேர்வார், குழைக்காதர், காளகண்டர் இவர் என்கின்றது. போது – தாமரை முதலிய பூக்கள். தாது – மகரந்தம். எழில் – அழகு. புறவு – காடு. மாதார் மங்கை – காதல் நிறைந்த உமாதேவி.

The Kaarōnam temple which is in the cool town of Kumbakonam, is encircled by sylvan surroundings, and beautiful gardens full of pollen grains in the abundant flowers therein. In the ponds all around flourish lotus flowers, the red water lily (*கழுநீர்*), the water lily (*குவளை*) – the fragrance of all these flowers fills the air in all these gardens and forests. Lord Civan is enshrined in the temple called Kaarōnam along with His loving consort Umaa Devi. He seeks alms from every house. He wears the ear ring (*குழை*) in His right ear. By not swallowing the poison known as Kaalam He has positioned it in His throat.

**Note:** The alms sought by Civa is that of sincere and un-alloyed devotion and/or ignorance from His devotees.

பூவார்பொய்கை யலர்தாமரைசெங் கழுநீர் புறவெல்லாம்
தேவார்சிந்தை யந்தணாளர் சீரா லடிபோற்றக்
கூவார்குயில்க ளாலும்மயில்க ளின்சொற் கிளிப்பிள்ளை
காவார்பொழில்சூழ்ந் தழகார்குடந்தைக் காரோ ணத்தாரே. 5

பூ ஆர் பொய்கை அலர் தாமரை, செங்கழுநீர், புறவு எல்லாம்
தேவு ஆர் சிந்தை அந்தணாளர் சீரால் அடி போற்ற,
கூ ஆர் குயில்கள், ஆலும் மயில்கள், இன்சொல் கிளிப்பிள்ளை,
கா ஆர் பொழில் சூழ்ந்து அழகு ஆர் குடந்தைக்காரோணத்தாரே.

pU Ar poykai alar tAmarai, cegkazunIr, puRavu ellAm
tEvu Ar cintai antaNALar cIrAl aTi pORRa,
kU Ar kuyilkaL, Alum mayilkaL, in2col kiLippiLLai,
kA Ar pozil cUzntu azaku Ar kuTantaik kArONattArE.

**பொருள்:** தெய்வச் சிந்தனை நிறைந்த மனத்தினராகிய அந்தணர்கள் இறைவனது புகழைக்கூறித் திருவடிகளைப் போற்றி வாழ்கின்ற அழகிய குடந்தைக் காரோணத்தில் சிவபெருமான் எழுந்தருளி உள்ளார். இத்தலம், தாமரை, அல்லி, செங்கழுநீர் போன்ற நீர்ப்பூக்கள் நிறைந்த பொய்கைகளாலும், கூவும் குயில்களும், ஆடும் மயில்களும், இன்சொல் பேசும் கிளிப்பிள்ளைகளும் நிறைந்துள்ள முல்லைவனச் சோலைகளாலும் சூழப்பெற்றதாகும்.

**குறிப்புரை:** தாமரை செங்கழுநீர் முதலிய பூக்களைக் கொண்டு தெய்வத் தன்மை கொண்ட அந்தணர்கள் அடிபோற்ற இருப்பவர் காரோணத்தார் என்கின்றது. பூவார் பொய்கை – கொட்டி அல்லி தாமரை முதலிய நீர்ப்பூக்கள் நிறைந்த பொய்கை. அவற்றுள் தாமரையும், கழுநீரும் இறைவன் வழிபாட்டிற்கு ஏற்றன ஆதலின், பின்னர் விதந்து கூறப்பட்டன. புறவு – முல்லை. தேஆர் சிந்தை – தெய்வத் தன்மை நிறைந்த மனம். சீரால் – இறைவன் புகழால். ஆலும் – அகவும். அந்தணாளர் அடிபோற்றப் பொழில் சூழ்ந்து அழகார் காரோணத்தார் என முடிக்க.

The holy and sacred minded priests praise and adore the holy feet of Lord Civan of Thiru-k-kudanthai-k-kaarōnam, offering lotus flowers obtained from cool beautiful ponds, and also the red coloured water lily. They also collect flowers from the sylvan tracts of the country, (முல்லை நிலம்) the fragrant jasmine, (மல்லிகைப்பூ) and the Mullai flower (முல்லைப்பூ) – and offer all these at the holy feet of Lord Civan. In the gardens all around the city, the Indian cuckoos (குயில்) coo; the peacocks cry and dance (மயில்கள் ஆடிக்கொண்டு அகவுகின்றன); the parrots lisp the pleasing words of others (இன்சொல் பேசுகின்றன) – and such birds flourish in the city, which is well guarded by security men. In such a famed and renowned city Lord Civan is entempled.

**Note:** The presence of joyous birds is an indication of peace and prosperity. Desolation prevails, according to Keats, where no birds sing.

மூப்பூர்நலிய நெதியார்விதியாய் முன்னே யனல்வாளி
கோப்பார்பார்த்தன் நிலைகண்டருளுங் குழகர் குடமூக்கில்
தீர்ப்பாருடலி லடுநோயவலம் வினைகள் நலியாமைக்
காப்பார்கால னடையாவண்ணங் காரோ ணத்தாரே. 6

மூப்பு ஊர் நலிய நெதி ஆர் விதி ஆய், முன்னே அனல்வாளி
கோப்பார், பார்த்தன் நிலை கண்டு அருளும் குழகர், குடமூக்கில் -
தீர்ப்பார், உடலில் அடுநோய் அவலம் வினைகள் நலியாமை;
காப்பார், காலன் அடையா வண்ணம்; - காரோணத்தாரே.

mUppu Ur naliya neti Ar viti Ay, mun2n2E an2al vALi
kOppAr, pArttan2 nilai kaNTu aruLum kuzakar, kuTamUkkil--
tIrppAr, uTalil aTunOy avalam vin2aikaL naliyAmai;
kAppAr, kAlan2 aTaiyA vaNNam;--kArONattArE.

**பொருள்:** சிவனடியார்களுக்கு மூப்பு ஊர்ந்து வந்து நலியுங்காலத்து நியதி தத்துவத்தின் வழியே நெறியாய் நின்று அவர்களைக் காப்பவர் குடமூக்கில் உள்ள காரோணத்து இறைவர். முற்காலத்தில் அனலையே அம்பாக வில்லில் கோர்த்து முப்புரங்களை அழித்தவரும் அவரே. அருச்சுனன் செய்த தவத்தின் நிலை கண்டு இரங்கிப் பாசுபதாத்திரம் என்ற ஒப்பற்ற தெய்வீக அம்பை வழங்கி அருளிய குழகர். நம் உடலை வருத்தும் நோய்கள், நம்மைப் பற்றிய வினைகள், மனத்தை வருத்தும் துன்பங்கள் ஆகியவற்றைத் தீர்ப்பவர். காலன் அடையா வண்ணம் காப்பவர் - எல்லாம் அவரேயாவார்.

**குறிப்புரை:** திரிபுரம் எரித்த காலத்து அம்பைக் கோப்பவரும் விசயன் நிலை கண்டு அருள் செய்தவருமாகிய குழகரது குடமூக்கில் அடியார்களைக் காலன் குறுகாதவாறு காப்பவர் காரோணத்தார் என்கின்றது. மூப்பு ஊர் நலிய – முதுமை ஊர்ந்து வருத்த. நெதியார் விதியாய் – நியதியின் வழியே நடக்கும் நெறியாய். பார்த்தன் – அருச்சுனன். அடுநோய் – வருத்துகின்ற நோய்கள். அவலம் – துன்பம். மூப்பு ஊர் நலிய, நெதியார் விதியாய் முன்னே கோப்பார், குழகர் குடமூக்கில், வினைகள் நலியாமை உடலில் அடுநோய் அவலம் தீர்ப்பார், காலன் அடையாவண்ணங் காப்பார் காரோணத்தார் எனக் கூட்டுக.

When old age creeps in and causes grief, Lord Civa protects us according to fate and reasoned doctrine (நியதி தத்துவம்). In the days of yore He fixed fire in the tip of His dart and burnt the citadels of the Asuraas. He is the ever young one who took note of the penance done by Arjunan, and blessed him by giving the invincible missile (பாசுபதாஸ்திரம்). He annuls the physical ailments, the evil effects of karma, and the mental miseries of His devotees. He forefends the advent of Kaalan (காலன்) the regent of death. This Lord Civan is entempled in Thiru-k-kudanthai-k-kaarōnam.



இலம்பையங்கோட்டூர் – சந்திரசேகரர் – தொண்டை நாட்டுத் தலம்
**Chandrasekarar Temple - Ilampaiyangkottur, Tamil Nadu**



திருஇடைச்சுரம் – இடைச்சுர நாதர் – தொண்டை நாட்டுத் தலம் – திருவடைச்சூலம்
**Idaichurar Nathar Temple - Thiruidacchuram (Tiruvadaichulam) Tamil Nadu**

திருக்கழுக்குன்றம் – பக்தவத்சலேஸ்வரர் (மலைமருந்து ஈசர்) – தொண்டை நாட்டுத்தலம்
**Malaimaruntu Eesar Temple - Tirukkazhukkundram, Tamil Nadu.**

திருக்கானூர் – ஶ்ரீ செம்மேனி நாதர் – சோழநாட்டு வடகரைத் தலம்
**Sri Semmeni Naathar Temple - TIrukkanur, Tamil Nadu**

**Note:** 'Niyati' is the second item of (*அசுத்த மாயா தத்துவம்*) Asuddha Maya tatvas. When one undergoes hardships as a result of karma one should feel happy that one's debts are being discharged. At the hour of death, one will be greeted by an emissary of Civa. St. Appar warns Yama not to approach a Civa bhaktha.

ஊனார்தலைகை யேந்தியுலகம் பலிதேர்ந் துழல்வாழ்க்கை
மானார்தோலார் புலியினுடையார் கரியின் னுரிபோர்வை
தேனார்மொழியார் திளைத்தங்காடித் திகழுங் குடமூக்கில்
கானார்நட்ட முடையார்செல்வக் காரோ ணத்தாரே. 7

*ஊன் ஆர் தலை கை ஏந்தி உலகம் பலி தேர்ந்து உழல் வாழ்க்கை,*
*மான் ஆர் தோலார்; புலியின் உடையார்; கரியின்உரி போர்வை -*
*தேன் ஆர் மொழியார் திளைத்து அங்கு ஆடித் திகழும் குடமூக்கில்,*
*கான் ஆர் நட்டம் உடையார், செல்வக் காரோணத்தாரே.*

Un2 Ar talai kai Enti ulakam pali tErntu uzal vAzkkai,
mAn2 Ar tOlAr; puliyin2 uTaiyAr; kariyin2 uri pOrvai--
tEn2 Ar moziyAr tiLaittu agku ATit tikazum kuTamUkkil,
kAn2 Ar naTTam uTaiyAr, celvak kArONattArE.

**பொருள்:** விளங்கும் குடமூக்கில் உள்ள செல்வவளம் மிக்க காரோணத்து இறைவர், ஊன் பொருந்திய தலையோட்டைக் கையில் ஏந்தி, உலகம் முழுவதும் திரிந்து பலி ஏற்று உழலும் வாழ்க்கையர், மான் தோலைப் பூணூலில் அணிந்தவர். புலித்தோலை ஆடையாக அணிந்தவர்; யானைத்தோலால் உடம்பைப் போர்த்தவர். சுடுகாட்டில் நடம் புரிகிறவர். அவர் தேனார் மொழி அம்மையோடு குடமூக்கில் கூடி மகிழ்ந்து உறைபவர்.

**குறிப்புரை:** கபாலம் ஏந்திப் பலி ஏற்று உழலும் இறைவன் காரோணத்தார் என்கின்றது. கரியின் உரிபோர்வை - யானைத் தோலால் ஆகிய போர்வையை உடையவர், திளைத்து - கூடி, தேனார் மொழியாள் என்பது இத்தலத்து அம்மையின் திருநாமம்.

In the famed city of Kumbakonam Lord Civan is enshrined in the Kaarōnam temple. His economic resources are unlimited. Yet, He leads the life of a mendicant roaming about all over the world, holding in His hand a skull which He uses as His begging bowl to which the flesh is still sticking. A small piece of deerskin is fastened to His sacred thread. He is clad in the skin of a tiger. He covers His body with the skin of

an elephant, which he killed. He is happily enshrined with His consort named here as "Thēn Mozhi Ammai" (தேன்மொழியம்மை). He dances in the burning ghat.

**Note:** To the sacred thread of a Brahmacchaari, the deer-skin is fastened.

வரையார்திரள்தோள் மதவாளரக்க னெடுப்ப மலைசேரும்
விரையார்பாத நுதியாலூன்ற நெரிந்து சிரம்பத்தும்
உரையார்கீதம் பாடக்கேட்டங் கொளிவாள் கொடுத்தாரும்
கரையார்பொன்னி சூழ்தண்குடந்தைக் காரோ ணத்தாரே. 8

வரை ஆர் திரள் தோள் மதவாள் அரக்கன் எடுப்ப மலை, சேரும்
விரை ஆர் பாதநுதியால் ஊன்ற, நெரிந்து சிரம்பத்தும்,
உரை ஆர் கீதம் பாடக் கேட்டு, அங்கு ஒளிவாள் கொடுத்தாரும் -
கரை ஆர் பொன்னி சூழ் தண் குடந்தைக்காரோணத்தாரே.

varai Ar tiraL tOL matavAL arakkan2 eTuppa malai, cErum
virai Ar pAtanutiyAl Un2Ra, nerintu ciram pattum,
urai Ar kItam pATak kETTu, agku oLivAL koTuttArum--
karai Ar pon2n2i cUz taN kuTantaik kArONattArE.

***பொருள்:*** கரைகளோடு கூடிய காவிரி ஆற்று நீர் சூழ்ந்த குளிர்ச்சியான நகர் குடந்தை ஆகும். இங்குள்ள காரோணத்து இறைவர் சிவபெருமானார் ஆவார். இராவணன் மலைபோன்ற திரண்ட தோள்களை உடையவன். மதம் மிக்க வாள்போரில் வல்லவன். அவன் கயிலை மலையைப் பெயர்க்க எத்தனித்தபோதே, அவ்வளவில் மணம் கமழும் தம் திருவடியின் நுனிவிரலால் அம்மலையின் உச்சியில் ஊன்றினார். இராவணனின் பத்துத் தலைகளும் நெரிந்தன. இராவணன், பணிந்து, புகழ்மிக்க சாமகீதம் பாடினான். அப்பாட்டைக் கேட்டு மகிழ்ந்து, அப்பொழுதே அவனுக்கு ஒளி பொருந்திய சந்திரஹாசம் என்னும் வாளைக் கொடுத்து அருளியவர் இவரே.

**குறிப்புரை:** இராவணன் கயிலையை எடுக்கப் பெருவிரலை ஊன்றி நெரித்த சிரங்கள் பத்திலிருந்தும், சாமகானங்கேட்டு அருள் செய்தவர் இவர் என்கின்றது. இவன் மதத்தால் இருக்கிறான், ஆதலால் அடக்குண்டான் என்பார், மதவாள் அரக்கன் என்று உரைத்தார். விரை – மணம். உரையார்கீதம் – புகழ் நிறைந்த சாமகீதம்.

Raavanan, the king of Sri Lanka was a valiant monarch adept in fierce sword fights. His ten shoulders were as broad and strong as that of a hill. He once tried to lift and keep aside mount Kailash, the abode of Lord Civan. At that moment Civan pressed the mountain by the toe of His fragrant holy feet, by which Raavana's ten heads were

crushed. Raavanan repented for his folly, begged for pardon, and sang the very renowned musical note known as 'Saama Ghaanam'. By hearing this superb music Lord Civa pardoned him, and then and there, graced him by giving him a dazzling divine sword known as 'Chandrahaasam' (*சந்திரஹாஸம்*). It is this Lord Civan who is enshrined at Kaarōnam temple in Kudanthai town on the banks of river Ponni (Cauvery).

**Note:** The Ponni is another name of Cauvery river.

கரியமாலுஞ் செய்யபூமே லயனுங் கழறிப்போய்
அரிய வண்டந் தேடிப் புக்கு மளக்க வொண்கிலார்
தெரிய அரிய தேவர் செல்வந் திகழுங் குடமூக்கில்
கரிய கண்டர் கால காலர் காரோ ணத்தாரே. 9

*கரிய மாலும் செய்யபூமேல் அயனும் கழறிப் போய்,*
*அரிய அண்டம் தேடிப் புக்கும் அளக்க ஒண்கிலார்,*
*தெரிய அரிய தேவர் - செல்வம் திகழும் குடமூக்கில்,*
*கரிய கண்டர், காலகாலர், காரோணத்தாரே.*

kariya mAlum ceyya pUmEl ayan2um kazaRip pOy,
ariya aNTam tETip pukkum aLakka oNkilAr,
teriya ariya tEvar--celvam tikazum kuTamUkkil,
kariya kaNTar, kAlakAlar, kArONattArE.

**பொருள்:** செல்வ வளம் மிக்க குடமூக்கில் உள்ள காரோணத்து இறைவர் சிவபெருமான் ஆவார். அவர் கருநிறம் பொருந்திய கண்டத்தினர். காலனை அழித்த காலகாலர். கரிய திருமாலும், சிவந்த தாமரை மேல் விளங்கும் நான்முகனும் ஒருவருக்கொருவர் மாறுபட்டு வாதாடி இருவரும் அண்டங்கள் அனைத்திலும் அடிமுடிகளைக் காணத் தேடிச் சென்றும் இயலாத வண்ணம் ஓங்கி உயர்ந்து நின்ற பெருமான். தான் என்கின்ற முனைப்பு உடையவர்களால் அவர் காணுதற்கு அரியவர் ஆவார்.

**குறிப்புரை:** அயனும் மாலும் அறியவொண்ணாத காலகாலர் குடமூக்கின் காரோணத்தார் என்கின்றது. கழறி – ஒருவருக்கொருவர் இடித்துப்பேசி.

The dark-blue hued Thirumaal and Brahma seated on the red lotus flower, raised dispute with each other over their superiority. As decided, they both went out all over the world to reach first the holy feet and head of Lord Civan but in vain. He is

the Maha Deva who stood as a tall big flame of fire. He could not be known / seen easily by any one especially by those egocentric persons. His neck is dark blue in colour. He is the one who kicked away and destroyed Kaalan (*காலன்*) the regent of death and hence is known as 'Kaala Kaalar' (*காலகாலர்*). It is this Lord Civan who is entempled in the prosperous Kudamooku town.

**Note:** Mahadeva means the God of gods - God Supreme.

நாணா ரமணர் நல்ல தறியார் நாளுங் குரத்திகள்
பேணார் தூய்மை மாசு கழியார் பேசே லவரோடுஞ்
சேணார் மதிதோய் மாட மல்கு செல்வ நெடுவீதிக்
கோணா கரமொன் றுடையார் குடந்தைக் காரோ ணத்தாரே. 10

*நாணார் அமணர்; நல்லது அறியார்; நாளும் குரத்திகள்,*
*பேணார் தூய்மை; மாசு கழியார்; பேசேல், அவரோடும்!*
*சேண் ஆர் மதி தோய் மாடம் மல்கு செல்வ நெடுவீதிக்*
*கோணாகரம் ஒன்று உடையார் - குடந்தைக்காரோணத்தாரே.*

nANAr amaNar; nallatu aRiyAr; nALum kurattikaL,
pENAr tUymai; mAcu kaziyAr; pEcEl, avarOTum!
cEN'Ar mati tOy mATam malku celva neTuvItik
kONAkaram on2Ru uTaiyAr--kuTantaik kArONattArE.

*பொருள்:* சமணர்கள் நாணம் இல்லாதவர்கள், நல்லதை அறியாதவர்கள். பெண்பால் சமணக் குருமார்களும் பரிசுத்தத்தைப் போற்றாதவர்கள். அவர்கள் தங்கள் உடலில் இருக்கும் அழுக்கை நீக்கிக் கொள்ளுவதற்கு நாள்தோறும் குளிக்க மாட்டார்கள். அவர்களோடு பேசாதீர்கள். மதி தோயும் வான் அளாவிய மாடவீடுகளைக் கொண்ட செல்வச் செழுமை உடைய வீதிகளோடு கூடிய காரோணமாகிய இருப்பிடத்தை உடையவர் சிவபெருமானார். அவரைச் சென்று வழிபடுவீர்களாக.

*குறிப்புரை:* கோணமாகிய இருப்பிடத்தை உடையவர் இவர் என்கின்றது. குரத்திகள் – பெண்பால் துறவிகள் ஆரியாங்கனைகள். தூய்மை பேணார் – பரிசுத்தத்தைப் போற்றாதவர்கள். சேண் – ஆகாயம்.

The Samanars are shameless people. They know not what is good. Their woman preceptors do not foster purity daily. They do not bathe daily to remove the dirt in their body. Ye companions! Do not speak to them at all. The affluent people live in big and tall mansions in the opulent streets of Kudanthai (*குடந்தை*). Their storied mansions

seem to reach the moon that moves in the sky. Reach this place and worship Lord Civan enshrined in the Kaarōnam temple.

கருவார் பொழில்சூழ்ந் தழகார் செல்வக் காரோ ணத்தாரைத்
திருவார் செல்வ மல்கு சண்பைத் திகழுஞ் சம்பந்தன்
உருவார் செஞ்சொல் மாலை யிவைபத் துரைப்பா ருலகத்துக்
கருவாரி டும்பைப் பிறப்ப தறுத்துக் கவலைகழிவாரே. 11

கரு ஆர் பொழில் சூழ்ந்த அழகு ஆர் செல்வக் காரோணத்தாரை,
திரு ஆர் செல்வம் மல்கு சண்பைத் திகழும் சம்பந்தன்
உரு ஆர் செஞ்சொல்மாலை இவைபத்து உரைப்பார், உலகத்துக்
கரு ஆர் இடும்பைப் பிறப்புஅது அறுத்து, கவலை கழிவாரே.

karu Ar pozil cUzntu azaku Ar celvak kArONattArai,
tiru Ar celvam malku caNpait tikazum campantan2
uru Ar cenjcolmAlai ivaipattu uraippAr, ulakattuk
karu Ar iTumpaip piRappu atu aRuttu, kavalai kazivArE.

**பொருள்:** கருநிறம் பெற்ற அடர்த்தியான சோலைகள் சூழ்ந்த அழகிய செல்வக் காரோணத்து இறைவர் சிவபெருமானார் ஆவார். இப்பெருமானைத் தெய்வ நலத்தால் விளைந்த செல்வம் நிறைந்த சண்பை என்னும் சீகாழிப் பதியில் விளங்கும் ஞானசம்பந்தன் போற்றிப் பாடிய இப்பதிகம் ஓர் செஞ்சொல் மாலையாகும். இப்பாடல்கள் பத்தையும் பொருளுணர்ந்து உரைப்பவர், இவ்வுலகில் மீண்டும் கருவுற்று இடர்ப்படும் பிறப்பினை எய்தாது கவலைகள் நீங்கப் பெறுவர்.

**குறிப்புரை:** குடந்தைக் காரோணத்தாரைச் சண்பை ஞானசம்பந்தன் சொன்ன இம்மாலையைச் சொல்பவர்கள் பிறப்பறுத்துக் கவலையிலிருந்து நீங்குவார்கள் என்கின்றது. கருவார் பொழில் – கரிய சோலை. கரு ஆர் இடும்பைப் பிறப்பு – கருப்பையில் படும் துன்பம் நிறைந்த பிறப்பு.

By the grace of god the town Shanbai (*சண்பை* - another name of Seekaazhi) became very prosperous, wherefrom hailed Gnaanasambandan. He sang this garland of verses in chaste Tamil words, on Lord Civan of beautiful opulent Kaarōnam temple which is surrounded by dense dark forests. Those who can chant these ten verses will be relieved of the cycle of birth and death in the world and get freed of all their worries.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*72ஆம் பதிகம் முற்றிற்று*
End of 72nd Hymn

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# 73. திருக்கானூர்

## திருத்தலவரலாறு:

இத்திருத்தலமாகிய திருக்கானூர் சோழ நாட்டுக் காவிரி வடகரைத் தலமாகும். இது பூதலூர் இரயில் நிலையத்தில் இருந்து வடக்கே 3 கி.மீ. தூரத்தில் உள்ளது. பேருந்தில் வருவோர் திருக்காட்டுப்பள்ளியை அடைந்து அங்கிருந்து செல்ல வேண்டும். உமாதேவியார் சிவயோகத்து எழுந்தருளி யிருந்தபோது இறைவன் செந்தீவண்ணராகத் திருவுருவங்காட்டிய தலம். இதனை அப்பர் சுவாமிகள் 'கானூரில் பரமனாய பரஞ்சுடர் காண்மினே' என்பார்கள். சுவாமி செம்மேனிநாதர். அம்மை சிவயோக நாயகி. தீர்த்தம் கொள்ளிட நதி.

## பதிக வரலாறு:

திருமழபாடியை வணங்கிப் பதிகம் பாடி அங்கு எழுந்தருளிய பிள்ளையார், திருக்கானூரை அடைந்தார்கள். 'வானார் சோதி' என்னும் இந்த வளமார் பதிகத்தைப் பாடி வணங்கினார்கள்.

# 73. THIRU-K-KAANOOR

## THE HISTORY OF THE PLACE

This sacred place lies to the north of the river Cauvery and is at a distance of 3 km to the east of the Boodhaloor railway station. To get here by bus, one needs to go to Thiru-k-kaattu-p-palli first and take the bus from there.

The Lord's name is Semmeni-naathar and the Goddess is known as Sivayoga-naayaki. The Lord showed Himself in the form of a blazing red flame to the Goddess. This performance has been sung by Saint Appar Swaamigal as 'Kanooril paramanaaya paranjchudar kaanmine'. The sacred ford is river Kollidam.

## INTRODUCTION TO THE HYMN

Having praised Civa at Thirumazhapaadi our saint arrived at Thiru-k-kaanoor where he sang this following hymn.

The shrine here was completely covered with sand when once the Kollidam was in spate. It was only about a hundred years ago that the sand was removed and the shrine was recovered.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 73. திருக்கானூர் — 73. THIRU-K-KAANOOR

பண் : தக்கேசி — *Pann: Thakkēsi*
ராகம் : காம்போதி — *Raagam: Kaambothi*

வானார் சோதிமன்னு சென்னிவன்னி புனங்கொன்றைத்
தேனார் போதுதானார் கங்கை திங்களொடுசூடி
மானேர் நோக்கி கண்டங்குவப்ப மாலையாடுவார்
கானூர் மேயகண்ணார் நெற்றியானூர் செல்வரே. 1

**வான் ஆர் சோதி மன்னு சென்னி, வன்னி புனங்கொன்றைத்
தேன் ஆர் போது, தான் ஆர் கங்கை, திங்களொடு சூடி,
மான் ஏர் நோக்கி கண்டு அங்கு உவப்ப, மாலை ஆடுவார் -
கானூர் மேய கண் ஆர் நெற்றி, ஆன் ஊர் செல்வரே.**

vAn2 Ar cOti man2n2u cen2n2i, van2n2i pun2akkon2Rait
tEn2 Ar pOtu, tAn2 Ar kagkai, tigkaLoTu cUTi,
mAn2 Er nOkki kaNTu agku uvappa, mAlai ATuvAr--
kAn2Ur mEya, kaN Ar neRRi, An2 Ur celvarE.

**பொருள்:** திருக்கானூரில் அமர்ந்திருக்கும் சிவபெருமான் நெற்றிக் கண்ணை உடையவர். இடபத்தில் ஊர்ந்து வரும் செல்வர். வானில் ஒளியோடு விளங்கும் சூரிய சந்திரர் போன்ற ஒளி பொருந்திய திருமுடியை உடையவர். திருமுடியில் வன்னிக் காடுகளில் பூத்த தேன் நிரம்பிய கொன்றை மலர், தானே வந்து தங்கிய கங்கை, பிறைச் சந்திரன் ஆகியவற்றைச் சூடி இருப்பவர். மான் போன்ற மருண்ட கண்களை உடைய உமையம்மை கண்டு மகிழ, மாலைக் காலத்தில் நடனம் புரிபவர் ஆவார்.

**குறிப்புரை:** கானூர் மேவிய செல்வர், சென்னியிலே வன்னி, கொன்றை, திங்கள், கங்கை சூடி அம்மை காண ஆடுவார் என்கின்றது. வானார் சோதி – வானில் உள்ள ஒளிப் பொருளாகிய சூரியனும் சந்திரனும். சென்னி – திருமுடி. வன்னி – வன்னிப் பத்திரம். மானேர் நோக்கி – மானை ஒத்த கண்களை உடைய பார்வதி. ஆன் ஊர் செல்வர் – இடபத்தை ஊர்ந்த செல்வர்.

Lord Civan of Thiru-k-kaanoor has a third eye in His forehead. He is our greatest asset who rides on the bull. His head is dazzling like the sun and the moon that shine in the sky. He wears in His matted hair Suma leaves (வன்னி இலை) and the cool and melliferous cassia flowers that blossom in the forest. He also retains in His head, river Ganga that came down by herself and also the crescent moon. He dances in the evening hours, happily witnessed by His consort Umaa Devi whose eyes are like those of a gazelle (a small graceful swift antelope).

நீந்தலாகா வெள்ளமூழ்கு நீள்சடை தன்மேலோர்
ஏய்ந்தகோ ணற்பிறை யோடரவுகொன் றையெழிலாரப்
போந்தமென் சொலின்பம் பயந்தமைந்த ரவர்போலாங்
காந்தள்விம் முகானூர்மேய சாந்தநீற்றாரே. 2

*நீந்தல் ஆகா வெள்ளம் மூழ்கு நீள்சடைதன்மேல், ஓர்*
*ஏய்ந்த கோணல்பிறையோடு அரவு கொன்றை எழில் ஆர,*
*போந்த மென்சொல் இன்பம் பயந்த மைந்தர் அவர் போல் ஆம் -*
*காந்தள் விம்மு கானூர் மேய சாந்தநீற்றாரே.*

nIntal AkA veLLam mUzku nILcaTaitan2 mEl, Or
Eynta kONal piRaiyOTu aravu kon2Rai ezil Ara,
pOnta men2col in2pam payanta maintar avar pOl Am--
kAntaL vimmu kAn2Ur mEya cAnta nIRRArE.

**பொருள்:** திருக்கானூரில் காந்தள் செடிகள் செழிப்பாக நிறைந்து வளர்ந்தும், பூத்தும், மணம் பரப்பியும் உள்ளன. இங்கு சிவபெருமான் சந்தனமும், திருநீறும் பூசிய இறைவராக உறைகின்றார். தடுக்க முடியாதபடி வேகத்தோடு வந்த கங்கையின் வெள்ளம் மூழ்கி மறைந்து போன சடைமுடியை உடையவர். தனது சடைமுடிமேல் ஒரு வளைந்த பிறைச்சந்திரனை பொருந்தியிருப்பவர். அத்துடன், பாம்பு, கொன்றை மலர் ஆகியன சூடி அழகு தர வீதியுலா வருபவர். தன் வாயினின்று வந்த அழகிய மெல்லிய சொற்களால் இன்பம் தரும் மைந்தரும் இவரே ஆவார்.

**குறிப்புரை:** கானூர் மேவிய செல்வர், கங்கையினை உடைய சடையின் மேல் பிறையும் கொன்றையும் பொருந்த, இன்சொல்லால் இன்பம் பயக்கும் இறைவர் போலாம் என்கின்றது. நீந்தலாகா வெள்ளம் மூழ்கும் நீள் சடை – நீந்தமுடியாத அளவு வேகத்தோடு வந்த கங்கை வெள்ளம் மூழ்கி மறைந்து போன சடை. ஏய்ந்த – பொருந்திய. போந்த – தன்வாயினின்றும் வந்த. மென்சொல் – மெல்லிய சொற்களால்;

என்றது நயந்து பின்னிற்றலால் இன்பந்தந்த தலைவர் என்றவாறு. இது வழிநாட் புணர்ச்சிக்கண் பிரிந்த தலைமகன் காலம் நீட்டிக்க. கவன்ற தலைவி தலைநாளில் மென்சொல்லால் இன்பம் பயந்தமை எண்ணி நைகின்ற நிலையை அறிவிக்கின்றது.

Lord Civa of Thiru-k-kaanoor smears His body with holy ashes and sandal paste. In this town the Malabar glory lily, the flowering plant, grows abundantly spreading its fragrance all around the area. The river Ganges that descended with uncontrollable swiftness defying the surroundings was made calm by Lord Civan in His matted hair. He retains in His head the curved crescent moon and the snake; decked with cassia flowers also in His head He moves in the streets majestically diffusing joy by soft and sweet words.

சிறையார் வண்டுந் தேனும்விம்மு செய்யமலர்க் கொன்றை
மறையார் பாடலாட லோடுமால் விடைமேல் வருவார்
இறையார் வந்தெனில்புகு ந்தென்னெழில் நலமுங்கொண்டார்
கறையார் சோலைக் கானூர் மேயபிறையார் சடையாரே. 3

*சிறை ஆர் வண்டும் தேனும் விம்மு செய்ய மலர்க்கொன்றை,*
*மறை ஆர் பாடல் ஆடலோடு, மால்விடைமேல் வருவார்;*
*இறையார்; வந்து, என் இல் புகு ந்து, என் எழில் நலமும் கொண்டார் -*
*கறை ஆர் சோலைக் கானூர் மேய பிறை ஆர் சடையாரே.*

ciRai Ar vaNTum tEn2um vimmu ceyya malarkkon2Rai,
maRai Ar pATal ATalOTu, mAlviTaimEl varuvAr;
iRaiyAr; vantu, en2 il pukuntu, en2 ezil nalamum koNTAr--
kaRai Ar cOlaik kAn2Ur mEya piRai Ar caTaiyArE.

**பொருள்:** இருண்ட சோலைகள் சூழ்ந்த கானூரில் சிவபெருமான் பிறை பொருந்திய சடையினராக எழுந்தருளியுள்ளார். சிறகுகளோடு கூடிய வண்டுகளும், அவைகள் உண்ணும் தேன் நிறைந்ததும், சிவந்ததுமான கொன்றை மலர்களைச் சூடி உள்ளார். வேதப் பாடல்களைப் பாடி ஆடி, பெரிய விடைமேல் வருபவர். இந்த இறைவரான சிவபெருமான், என் இல்லத்தில் புகுந்து, என் அழகையும் நலத்தையும் கவர்ந்து சென்றார். இது முறையோ?

**குறிப்புரை:** கானூர் மேவிய பிறையார், சடையார், விடைமேல் வருவாராய் என் வீட்டில் புகுந்து என் நலத்தைக் கொண்டார் என்று தலைவி அறத்தொடு நிற்பதாக எழுந்தது. சிறை – சிறகு. மறை ஆர் பாடல்

– வேதப் பாடல். மால்விடை – பெரிய இடபம். இறையார் – சிவன். எழில்நலம் என்பது எழிலும் நலமும் என உம்மைத் தொகை. கறை யார் சோலை – இருள் சூழ்ந்த சோலை.

Thick dark gardens encircle Thiru-k-kaanoor town, where Lord Civan is enshrined. He wears in His head fully blown cassia flowers where to winged bees come and buss around sipping the honey that drips out of the flowers. He dances singing Vedic hymns. He rides on His big bull. This Lord appears in this stature enters into my house and snatches away my beauty and virtue (goodness). Is it proper for His dignity? (Note the Sanmargham concept – the Lord and His consort).

விண்ணார் திங்கட்கண் ணிவெள்ளைமா லையதுசூடித்
தண்ணாரக் கோடாமைபூண் டுதழைபுன் சடைதாழ
எண்ணாவந் தெனில்புகுந் தங்கெவ்வ நோய்செய்தான்
கண்ணார் சோலைக் கானூர்மேய விண்ணோர் பெருமானே. 4

*விண் ஆர் திங்கள், கண்ணி, வெள்ளைமாலைஅது சூடி,*
*தண்ஆர் அக்கோடு ஆமை பூண்டு, தழை புன்சடை தாழ,*
*எண்ணா வந்து என் இல் புகுந்து, அங்கு எவ்வம் நோய் செய்தான் -*
*கண் ஆர் சோலைக் கானூர் மேய விண்ணோர்பெருமானே.*

viN Ar tigkaL, kaNNi, veLLai mAlai atu cUTi,
taN Ar akkOTu Amai pUNTu, tazai pun2caTai tAza,
eNNA vantu, en2 il pukuntu, agku evvam nOy ceytAn2--
kaN Ar cOlaik kAn2Ur mEya viNNOr perumAn2E.

***பொருள்:*** விண்ணோர் தலைவரான சிவபெருமான் விசாலமான இடத்தை உடைய சோலைகள் சூழ்ந்த திருக்கானூரில் எழுந்தருளி உள்ளார். இவர் ஆகாயத்தில் பொருந்திய வெண்ணிறமான பிறைமதியைத் தலைமாலையாக அணிந்து உள்ளார். குளிர்ச்சி பொருந்திய எலும்பு மாலையையும் ஆமை ஓட்டையும் அணிந்து உள்ளார். செழித்துள்ள சிவந்த சடைகள் தாழ்ந்து தொங்குகின்றன. அப்பெருமான் என்னை அடைய எண்ணி என் இல்லம் புகுந்து, எனக்கு மிக்க விரக நோயைத் தந்து சென்றார். இது முறையோ?

*குறிப்புரை:* வீட்டில் கன்னம் வைத்துப் புகுந்த கள்வனின் அடையாளம் கூறுவார்போலத் தலைவி, இல்புகுந்து எவ்வஞ்செய்த தலைவனின் கண்ணி அணி அடையாளங்கள் இவற்றைக் கூறுகின்றாள். விண் – ஆகாயம். கண்ணி – தலைமாலை. தண் ஆர் அக்கு – குளிர்ச்சி பொருந்திய எலும்புமாலை. எண்ணாவந்து என்இல் புகுந்து எவ்வ நோய் செய்தான் – யான் அறியாமையால் எண்ணாதிருந்த

போதிலும், வலியவந்து இல்லில் புகுந்து கலந்து பிரிந்த மிக்க துன்பத்தைச் செய்தான்; என்றது ஆன்மா தலைவனை, தானே சென்று அடைதற்கும், கலத்தற்கும், பிரிதற்கும் என்றும் சுதந்திரமில்லாதன என்று அறிவித்தவாறு. கண் – இடம்.

Lord Civan, the Chief of the Supernal, abides in Thiru-k-kaanoor where spacious gardens flourish all around. He puts on in His matted hair the crescent moon as His chaplet. He also wears many garlands made up of white flowers, cool bones and carapace. His ruddy matted hair dangles freely in the air. With these embellishments He entered into my house, provoked lasciviousness in me and returned. Is it proper for His dignity?

**Note:** The carapace: Vishnu incarnated as a very big tortoise. When he grew haughty, Civa tore away his carapace and wore it on His person.

தார்கொள் கொன்றைக் கண்ணியோடுந் தண்மதியஞ்சூடி
சீர்கொள் பாடலாட லோடுசேட ராய்வந்து
ஊர்கள் தோறுமைய மேற்றென்னுள் வெந்நோய் செய்தார்
கார்கொள் சோலைக்கானூர் மேயகறைக் கண்டத்தாரே. 5

*தார் கொள் கொன்றைக்கண்ணியோடும் தண்மதியம் சூடி,*
*சீர் கொள் பாடல் ஆடலோடு சேடராய் வந்து,*
*ஊர்கள்தோறும் ஐயம்(ம்) ஏற்று, என் உள் வெந்நோய் செய்தார் -*
*கார் கொள் சோலைக் கானூர் மேய கறைக்கண்டத்தாரே.*

tAr koL kon2Raik kaNNiyOTum taNmatiyam cUTi,
cIr koL pATal ATalOTu cETarAy vantu,
UrkaL tORum aiyam(m) ERRu, en2 uL vennOy ceytAr--
kAr koL cOlaik kAn2Ur mEya kaRaikkaNTattArE.

**பொருள்:** கறைக் கண்டரான சிவபெருமான், இருள் அடர்ந்த சோலைகள் சூழ்ந்த திருக்கானூரில் எழுந்தருளி உள்ளார். கொன்றை மலர்களால் ஆன மாலையைத் தலையிலும் மார்பிலும் அணிந்து உள்ளார். தலையில் குளிர்ந்த பிறைமதியைச் சூடியுள்ளார். சிறப்பு மிக்க ஆடல் பாடல்களோடு பெருமைக்கு உரியவராய் வந்து, ஊர்கள் தோறும் சென்று பலியேற்கிறார். என் மனத்தகத்தே கொடிய விரக வேதனையைத் தந்து சென்றார் இவர்.

**குறிப்புரை:** பிச்சை ஏற்பார்போல் வந்து என் மனத்திற்குப் பெரு நோய் செய்தார் என்கின்றது. இதுவும் தலைவி கூற்று. தார் – மார்பின் மாலை. கண்ணி – தலையிற் சூடப்படும் மாலை. சேடர் – காதலால் தூது செல்லும் தோழர். உள் – மனம்.

Lord Civan whose throat has a pretty shade of dark blue, is enshrined in Thiru-k-kaanoor which is encircled by gardens that are always dark, due to closeness of big tall trees. He wears a garland of cassia flowers on His chest and also in His head as a wreath. He retains the cool crescent moon in His matted hair. With these glorious embellishments He roams about in many towns dancing and singing splendid songs and accept alms. He came to my house and kindled flames of love in me and returned.

முளிவெள் ளெலும்புநீறு நூலுமூழ் குமார்பராய்
எளிவந் தார்போலைய மென்றெனில்லே புகுந்துள்ளத்
தெளிவு நாணுங்கொண் டகள்வர் தேறலார்பூவில்
களிவண் டியாழ்செய் கானூர்மேய ஒளிவெண் பிறையாரே. 6

*முளிவெள்எலும்பும் நீறும் நூலும் மூழ்கும் மார்பராய்,*
*எளிவந்தார் போல், "ஐயம்" என்று, என் இல்லே புகுந்து, உள்ளத்*
*தெளிவும் நாணும் கொண்ட கள்வர்-தேறல் ஆர் பூவில்*
*களிவண்டு யாழ்செய் கானூர் மேய ஒளிவெண்பிறையாரே.*

muLiveL elumpum nIRum nUlum mUzkum mArparAy,
eLivantAr pOl, "aiyam" en2Ru, en2 illE pukuntu, uLLat
teLivum nANum koNTa kaLvar--tERal Ar pUvil
kaLivaNTu yAzcey kAn2Ur mEya oLiveN piRaiyArE.

**பொருள்:** தேன் நிறைந்த மலர்களில் வண்டுகள் தேனை உண்டு மகிழ்ந்து, யாழ்போல் திருக்கானூரில் ஒலி எழுப்புகின்றன. இங்கு ஒளி பொருந்திய வெண் பிறையை முடியிற்சூடிய இறைவராக சிவபெருமான் விளங்குகின்றார். காய்ந்த வெண்மையான எலும்பும், திருநீறும், முப்புரிநூலும் பொருந்திய மார்பினராய் எளிமையாக வருபவர்போல வருகிறார். வந்து, 'ஐயம் இடுக' என்று கூறிக் கொண்டே என் இல்லத்தில் புகுந்து, எனது உள்ளத் தெளிவையும் நாணத்தையும் கவர்ந்து சென்ற கள்வர் இவர் ஆவார்.

**குறிப்புரை:** இதுவும்; பிச்சை என்று சொல்லிக் கொண்டு வீட்டுக்கு வந்து என்னுடைய தெளிவையும் நாணத்தையும் கொண்ட கள்வர் இவர் என்கின்றது. முளி – காய்ந்த. எளிவந்தார்போல் – இரங்கத்

தக்கவர்போல். உள்ளத் தெளிவும் நாணும் கொண்ட கள்வர் என்றது தன்னுடைய நிறையும் நாணும் அகன்றன என்பதை விளக்கியது. தேறல் – தேன்.

Lord Civan is enshrined in Thiru-k-kaanoor, where the bees suck honey from the flowers and hum. The humming which is like the tune of a lute, pervades all around Thiru-k-kaanoor. He retains the bright moon in His matted hair. He smears His body with white holy ashes. 'Three ply' sacred thread and bones are seen on His chest. He enters into my house as a humble mendicant saying "Give alms please". Lo! He snatched away my resolute firmness and bashful modesty much as a thief and disappeared.

மூவா வண்ணர் முளைவெண் பிறையர்முறுவல் செய்திங்கே
பூவார் கொன்றை புனைந்துவந் தார்பொக் கம்பலபேசிப்
போவார் போலமால் செய்துள்ளம் புக்கபுரிநூலர்
தேவார் சோலைக் கானூர்மேய தேவதேவரே. 7

மூவா வண்ணர், முளைவெண்பிறையர், முறுவல்செய்து இங்கே
பூஆர்கொன்றை புனைந்து வந்தார், பொக்கம்பல பேசிப்
போவார் போல மால் செய்து உள்ளம் புக்க புரிநூலர் -
தேவு ஆர் சோலைக் கானூர் மேய தேவதேவரே.

mUvA vaNNar, muLai veN piRaiyar, muRuval ceytu igkE
pU Ar kon2Rai pun2aintu vantAr, pokkampala pEcip
pOvAr pOla mAl ceytu uLLam pukka purinUlar--
tEvu Ar cOlaik kAn2Ur mEya tEvatEvarE.

**பொருள்:** தேன் நிறைந்த சோலைகளால் சூழப்பெற்ற திருக்கானூரில் தேவ தேவரான சிவபிரானார் எழுந்தருளி உள்ளார். இவர், மூப்பு அடையாத அழகினர். ஒரு கலையோடு முளைத்த வெண்பிறையை அணிந்தவர். கொன்றை மாலையைச் சூடியவர். காமக் குறிப்புத் தோன்றும் புன்சிரிப்புடன் என் இல்லம் நோக்கி வந்தார். பொய் கலந்த வார்த்தைகளைப் பேசிக் கொண்டிருந்து, திரும்பிப் போவார்போல் ஆசை காட்டி என்னை மயக்கினார். என் உள்ளத்தில் புகுந்து கொண்ட இவர் முப்புரிநூல் அணிந்தவர் ஆவார்.

**குறிப்புரை:** இவர் வரும்போது பிறைசூடி, கொன்றை மாலை அணிந்து, புன்சிரிப்புச் செய்து கொண்டே வந்தார்; பல பொய்யைப் பேசிக் கொண்டே போவார்போல என் மனத்தை மயக்கிப் புகுந்து கொண்டார் என்கின்றது. மூவா வண்ணர் – மூப்படையாத அழகை உடையவர். முறுவல் – காமக்குறிப்புத் தோன்றும்

சிரிப்பு. பொக்கம் – பொய். உள்ளம் புக்க புரிநூலர் என்றது புரிநூல் அணிந்ததற்கேலாத செயல் செய்தார் என்னுங்குறிப்பு. தேவு – தெய்வத்தன்மை.

Civan, the Supreme Lord of the Devaas presides over Thiru-k-kaanoor, which is girt with flower gardens where the honey flows all around. He is handsome who never becomes aged. He retains the white single phase moon in His head. Wearing garlands of cassia flowers and twisted sacred thread on His chest, He enters into my house smiling gently and making amorous gestures. He starts talking all sorts of fibs and pretends to depart; but all of a sudden He goes out of my sight, and hides Himself in my heart.

**Note:** Civa is described as a trickster and a fibster by her who feels the pangs of His separation.

தமிழின்நீர் மைப்பேசித்தாளம் வீணைபண்ணி நல்ல
முழவமொ ந்தைமல்கு பாடல்செய் கையிடமோவார்
குமிழின் மேனிதந் துகோலநீர் மையதுகொண்டார்
கமழுஞ் சோலைக் கானூர்மேய பவளவண்ணரே. 8

*தமிழின் நீர்மை பேசி, தாளம் வீணை பண்ணி, நல்ல*
*முழவம் மொந்தை மல்கு பாடல் செய்கை இடம் ஓவார்,*
*குமிழின் மேனி தந்து, கோலநீர்மை அது கொண்டார் -*
*கமழும் சோலைக் கானூர் மேய பவளவண்ணரே.*

tamizin2 nIrmai pEci, tALam vINai paNNi, nalla
muzavam montai malku pATal ceykai iTam OvAr,
kumizin2 mEn2i tantu, kOla nIrmai atu koNTAr--
kamazum cOlaik kAn2Ur mEya pavaLavaNNarE.

**பொருள்:** பவளம் போன்ற நிறத்தினை உடைய சிவபெருமானார் மணம் கமழும் சோலைகள் சூழ்ந்த திருக்கானூரில் எழுந்தருளி உள்ளார். இனிமையான வார்த்தைகளைப் பேசி, தாளத்தோடு வீணையை மீட்டி, முழவம், மொந்தை போன்ற வாத்தியங்களோடு பாடல்களைப் பாடி என் இல்லத்தை அடைந்தார். என் இல்லத்தை விட்டு நீங்காதவராக எனக்குக் குமிழம்பூப் போன்ற பசலை நிறத்தைத் தந்து, என் அழகைக் கவர்ந்து சென்றார்.

**குறிப்புரை:** இவர் பல வாத்தியங்கள் முழங்கப் பாடிக் கொண்டும் இனிமையாகப் பேசிக் கொண்டும் வந்தார்; வந்தவர் இடம் விட்டுப் பெயராதவராய் என்னுடைய அழகைக் கவர்ந்து கொண்டு குமிழம்பூ நிறத்தைக் கொடுத்துவிட்டார் என்கின்றது. தமிழின் நீர்மை - இனிமை. கோலம் - அழகு. பவளவண்ணரே என்றாள். அவர் மேனியின் நிறத்தில் ஈடுபட்டு.

Lord Civan whose body hue is like that of a coral, presides over Kaanoor. This town is surrounded by flower gardens that diffuse a pleasant smell all around. He speaks chaste Tamil language and sings divine songs to the accompaniment of musical instruments such as cymbals (தாளம்), lute (வீணை), large, loud sounding drum (முழவம்) and another one that opens at one end (மொந்தை) and reaches my house. Initially it appeared that He did not want to part from my presence; but His presence created shallowness in my body resembling that of the flower of the small cashmere tree (Gmelina asiatica - குமிழம்பூ). All of a sudden He left my house snatching away my beauty.

**Note:** The phrase "Tamizhin neermai" (தமிழின் நீர்மை) is untranslatable.

Neermai sums up all glorious virtues. It is characterised by redeeming mercy.

Neermai is the peculiar grace word of Tamil.

அந்தமாதி யயனுமாலு மார்க்குமறி வரியான்
சிந்தையுள் ளுநாவின்மேலுஞ் சென்னியு மன்னினான்
வந்தென் னுள்ளம்புகுந் துமாலைகா லையாடுவான்
கந்தமல் குகானூர் மேயஎந்தை பெம்மானே. 9

அந்தம் ஆதி அயனும் மாலும் ஆர்க்கும் அறிவு அரியான்,
சிந்தையுள்ளும் நாவின்மேலும் சென்னியும் மன்னினான்,
வந்து என் உள்ளம் புகுந்து மாலைகாலை ஆடுவான் -
கந்தம் மல்கு கானூர் மேய எந்தைபெம்மானே.

antam Ati ayan2um mAlum Arkkum aRivu ariyAn2,
cintaiyuLLum nAvin2mElum cen2n2iyum man2n2in2An2,
vantu en2 uLLam pukuntu mAlaikAlai ATuvAn2--
kantam malku kAn2Ur mEya entai pemmAn2E.

**பொருள்:** மணம் நிறைந்த திருக்கானூரில் எழுந்தருளிய எந்தையராகிய பெருமானார், அந்தத்தைச் செய்பவரும், யாவர்க்கும் ஆதியாய் இருப்பவரும் ஆவார். அயன், மால் முதலிய

அனைவராலும் அறிதற்கரியவர். என் சிந்தையிலும் சென்னியிலும் நாவிலும் நிலை பெற்று இருப்பவர். அத்தகையோர் யான் காண வெளிப்பட்டு வந்து என் உள்ளம் புகுந்து மாலையிலும் காலையிலும் நடனம் புரிந்து அருளுகின்றார்.

**குறிப்புரை:** அயனுக்கும் மாலுக்கும் அறியப்படாத இறைவன் எனது சிந்தையிலும், நாவிலும், சென்னியிலும் திகழ்கின்றான்; என் மனத்திற் புகுந்து காலையும் மாலையும் உலாவுகின்றான் என்கின்றது. அந்தம் ஆதி – முடிவும் முதலும்.

Lord Civan, my father, who is the creator and dissolver of all souls, presides over Thiru-k-kaanoor, where the atmosphere is always fully charged with pleasing fragrance. He is a rarity for one and all inclusive of Thirumaal and Brahma. But He always makes me feel His presence in my heart; mind and in my tongue. Though He is such a great person, He appears before me, visible to my eyes, enters into my mind and makes me realise His presence therein, both in the morning and in the evening.

ஆமையரவோ டேனவெண் கொம்பக் குமாலைபூண்
டாமோர்கள் வர்வெள்ளர் போலஉள்வெந் நோய்செய்தார்
ஓமவே தநான்முக னுங்கோணா கணையானுஞ்
சேமமாய செல்வர் கானூர்மேய சேடரே. 10

**ஆமை அரவோடு ஏன வெண்கொம்பு அக்குமாலை பூண்டு,**
**ஆம் ஓர் கள்வர் வெள்ளர் போல உள் வெந்நோய் செய்தார் -**
**ஓம வேத நான்முகனும் கோள் நாக(அ)ணையானும்**
**சேமம்ஆய செல்வர், கானூர் மேய சேடரே.**

Amai aravOTu En2a veNkompu akkumAlai pUNTu,
Am Or kaLvar veLLar pOla uL vennOy ceytAr--
Oma vEta nAn2mukan2um kOL nAka(a)NaiyAn2um
cEmam Aya celvar, kAn2Ur mEya cETarE.

**பொருள்:** திருக்கானூரில் எழுந்தருளிய கடவுள் சிவபெருமான் ஆவார். இவரை, வேதங்களை ஓதும் நான்முகனும், வளைந்த பாம்பைப் படுக்கையாகக் கொண்ட திருமாலும் தங்களைப் பாதுகாத்து அருளும் செல்வராகக் கருதுகின்றனர். இவர், ஆமை, அரவு, பன்றியின் வெண்மையான கொம்பு, எலும்பு மாலை ஆகியவற்றை அணிந்தவர். ஒரு கள்வராய், வெள்ளை உள்ளம் படைத்தவர் போல வந்து எனக்கு மன வேதனையைத் தந்தவர்.

**குறிப்புரை:** எலும்பு முதலியவற்றை அணிந்து வெள்ளை உள்ளம் படைத்தவர்போல வந்து கள்வராய் மனவேதனையைத் தந்தார் என்கின்றது. அவர் கொண்ட வேடத்திற்கும் செயலுக்கும் பொருத்தமில்லை என்றபடி. ஓமம் – ஆகுதி. கோண் நாகணையான் – வளைந்த பாம்பைப் படுக்கையாகக் கொண்டவன். சேமம் – பாதுகாப்பு. சேடர் – கடவுள்.

Brahma who chants the Vedas which prescribe the rules and regulations to be observed while conducting the sacrificial fire and Thirumaal who reclines on a coiling snake regard Lord Civan as their protector. This Lord Civan presides over Thiru-k-kaanoor. He adorns Himself with shell of tortoise, snake, the white tusk of the hog and garland of bones. He called on me as an innocuous person appearing to be a pure hearted One, but actually with a furtive mind. He left me in a distressed condition of mind.

கழுது துஞ்சுங்கங் குலாடுங்கானூர் மேயானைப்
பழுதில் ஞானசம்பந்தன் சொற்பத்தும் பாடியே
தொழுது பொழுது தோத்திரங்கள் சொல்லித் துதித்துநின்
றழுதுநக் குமன்பு செய்வா ரல்லலறுப்பாரே. 11

கழுது துஞ்சும் கங்குல் ஆடும் கானூர் மேயானை,
பழுதுஇல் ஞானசம்பந்தன் சொல்பத்தும் பாடியே,
தொழுது பொழுது தோத்திரங்கள் சொல்லித் துதித்து நின்று,
அழுதும் நக்கும் அன்பு செய்வார் அல்லல் அறுப்பாரே.

kazutu tunjcum kagkul ATum kAn2Ur mEyAn2ai,
pazutu il njAn2acampantan2 colpattum pATiyE,
tozutu pozutu tOttiragkaL collit tutittu nin2Ru,
azutum nakkum an2pu ceyvAr allal aRuppArE.

**பொருள்:** திருக்கானூரில் எழுந்தருளியுள்ள சிவபெருமான் பேய்களும் தூங்கும் நள்ளிரவில் நடனம் ஆடுபவர். இப்பெருமானைக் குற்றமற்ற ஞானசம்பந்தன் சொல் மாலையான இப்பதிகத்தால் போற்றிப் பாடினார். இப்பதிகப் பாடல்கள் பத்தையும் முப்பொழுதும் பாடித் தொழுங்கள். இந்தத் தோத்திரங்களைச் சொல்லித் துதித்து நின்று அழுதும் சிரித்தும் அன்பு செய்யுங்கள். அப்படிச் செய்பவர்களின் துன்பங்கள் அறுந்துவிடும்.

**குறிப்புரை:** இத்தோத்திரங்களைச் சொல்லித் துதித்து ஆனந்தத்தால் அழுதும் சிரித்தும் நிற்பவர்கள் துன்பம் அறுப்பார் என்கின்றது. கழுது – பேய். பொழுது – முப்பொழுதிலும்.

Flawless Gnaanasambandan has sung on Lord Civan of Thiru-k-kaanoor. This Lord dances during midnight when even the ghouls slumber. Those who can sing this garland of words comprising the ten verses of this hymn and worship Lord Civan at all times - morning - noon - and in the evening, and weep tearfully in love and laugh in joy will get their troubles snapped altogether.

**Note:** One should recite the hymns of our saint poised in sincere devotion. Only then will one be blessed with abiding welfare and well being.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*73ஆம் பதிகம் முற்றிற்று*
End of 73rd Hymn

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# 74. திருப்புறவம்

## திருத்தல வரலாறு:

முதல் பதிகம் காண்க.

## பதிக வரலாறு:

திருஞானசம்பந்தர் அவதரித்த ஊராகிய சீகாழியின் பன்னிரண்டு பெயர்களில் "புறவம்" என்பதும் ஒன்றாகும். இவர் இத்திருக்கோவில் சென்று அங்குள்ள இறைவன் மீது பாடிய இரண்டாவது பதிகம் இதுவாகும்.

# 74. THIRU-P-PURAVAM

## HYSTORY OF THE PLACE

See First Hymn.

## INTRODUCTION

Thiru-p-puravam is one of twelve names of the birth place of Thiru-Gnaanasambandar, and is commonly called Seekaazhi. This is the second hymn sung by him in the temple at his birth place.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 74. திருப்புறவம்

## 74. THIRU-P-PURAVAM

பண் : தக்கேசி
ராகம் : காம்போதி

*Pann: Thakkēsi*
*Raagam: Kaambothi*

நறவநிறை வண்டறை தார்க்கொன்றை நயந்துநயனத்தாற்
சுறவஞ்செறி வண்கொடி யோனுடலம் பொடியாவிழிசெய்தான்
புறவமுறை வண்பதியா மதியார்புர மூன்றெரிசெய்த
இறைவன றவனிமையோ ரேத்தஉமையோ டிருந்தானே. 1

நறவம் நிறை வண்டு அறை தார்க்கொன்றை நயந்து, நயனத்தால்
சுறவம் செறி வண் கொடியோன் உடலம் பொடியா விழிசெய்தான்,
புறவம் உறை வண்பதியா, மதியார் புரம் மூன்று எரிசெய்த
இறைவன், அறவன், இமையோர் ஏத்த உமையோடு இருந்தானே.

naRavam niRai vaNTu aRai tArkkon2Rai nayantu, nayan2attAl
cuRavam ceRi vaN koTiyOn2 uTalam poTiyA viziceytAn2,
puRavam uRai vaNpatiyA, matiyAr puram mUn2Ru eri ceyta
iRaivan2, aRavan2, imaiyOr Etta, umaiyOTu iruntAn2E.

***பொருள்:*** தேன் நிறைந்த வண்டுகள் ஒலிக்கும் கொன்றை மாலையை விரும்பி அணிந்தவராகச் சிவபெருமான் வீற்றிருக்கின்றார். இவர், தன்னை மதியாத அசுரர்களின் முப்புரங்களை எரித்து அழித்தவர். சுறாமீன் எழுதப்பட்ட கொடியை உடைய மன்மதனின் உடல் பொடியாகும்படி தன் நெற்றிக் கண்ணால் விழித்து அழித்தவர். இந்த இறைவர், சான்றோர்களும், வானோர்களும் போற்றித் துதிக்க உமையம்மையாரோடு புறவம் என்னும் சீகாழிப் பதியில் வீற்றிருந்து அருள் புரிகின்றார்.

***குறிப்புரை:*** மகரக் கொடியோனாகிய மன்மதனது உடலத்தைப் பொடி செய்தவரும், திரிபுரம் எரித்தவரும் ஆகிய உமாபதி நகர் புறவம் என்னும் சீகாழியாம் என்கின்றது. நறவம் – தேன். அறை – ஒலிக்கின்ற, நயந்து – விரும்பி. நயனத்தால் – கண்ணால். கறவம் செறி வண் கொடியோன் – சுறாமீன் எழுதப்பட்ட கொடியை உடையவனாகிய மன்மதன். நயனத்தால் விழித்தலைச் செய்தான் என்க. மதியார் – பகைவர்.

***குருவருள்:*** நறவம் நிறை வண்டறை தார் என்ற பதிகம் ஞானசம்பந்தர் 'தோடுடைய செவியன்' பாடியபிறகு உடன் கோயிலினுட் சென்று உமாமகேசுரரைத் தரிசித்துப் பாடியது. இரண்டாம் பதிகம் 'மடையில் வாளை' என்பதாகவே கற்றோரும் மற்றோரும் எண்ணி வருகின்றனர். இது பொருந்தாது என்பதைப் பின்வரும் சேக்கிழார் வாக்கால் தெளியலாம்.

'அண்ண லணைந்தமை கண்டு தொடர்ந்தெழும் அன்பாலே
மண்மிசை நின்ற மலைச்சிறு போதகம் அண்ணாரும்
கண்வழி சென்ற கருத்து விடாது கலந்தேகப்
புண்ணியர் நண்ணிய பூமலி கோயிலி னுட்புக்கார்'

'பொங்கொளி மால்விடைமீது புகுந்தணி பொற்றோணி
தங்கி யிருந்த பெருந்திரு வாழ்வு தலைப்பட்டே
இங்கெனை யாளுடை யான்உமை யோடும் இருந்தான்என்று
அங்கெதிர் நின்று புகன்றனர் ஞானத் தமுதுண்டார்'

இப்பதிகத்துள் பாடல் தோறும் 'இமையோர் ஏத்த உமையோடிருந்தானே' என்பதால் இதுவே இரண்டாம் பதிகம் என்பதை திரு. சி. கே. சுப்பிரமணிய முதலியார் அவர்கள் தம் பெரிய புராணப் பேருரைக் குறிப்பில் அறிவித்துள்ளார்கள். இஃது இத்துறையில் உள்ளார்க்கும் பெருவிருந்தாம்.

Lord Civan desires and wears garland of cassia flowers, full of honey and in which the bees are humming around. God of love and munificent Manmathan (k‹kj‹) showers all pleasures to all souls. The figure of shark fish is the insigne of his flag. Lord Civan opened His third eye in His forehead and burnt Manmathan into ashes for his folly. Civan also burnt the three citadels of Asuraas who showed disrespect to Him. The Devaas adore and worship Him. This Lord Civan is enshrined along with His consort Umaa Devi in Thiru-p-puravam showering His grace to His devotees.

உரவன் புலியினுரி தோலாடையுடை மேற்படநாகம்
விரவி விரிபூங்கச்சா அசைத்தவிகிர் தனுகிர்தன்னாற்
பொரு வெங்களிறு பிளிறவுரித்துப் புறவம்பதியாக
இரவும் பகலுமிமையோ ரேத்தஉமையோ டிருந்தானே. 2

உரவன், புலியின் உரி-தோல் ஆடை உடைமேல் படநாகம்
விரவி விரி பூங்கச்சா அசைத்த விகிர்தன், உகிர் தன்னால்
பொரு வெங்களிறு பிளிற உரித்து, புறவம் பதிஆக,
இரவும் பகலும் இமையோர் ஏத்த உமையோடு இருந்தானே.

uravan2, puliyin2 uri-tOl ATai uTaimEl paTa nAkam
viravi viri pUgkaccA acaitta vikirtan2, ukirtan2n2Al
poru vegkaLiRu piLiRa urittu, puRavam pati Aka,
iravum pakalum imaiyOr Etta, umaiyOTu iruntAn2E.

**பொருள்:** புறவம் என்னும் சீகாழிப் பதியைச் சிவபெருமான் தன் பதியாகக் கொண்டுள்ளார். இவர் மிகுந்த வலிமை உடையவர். புலித்தோல் ஆடையின் மேல், படம் பொருந்திய நாகத்தைக் கச்சாகக் கட்டிய விகிர்தர். போர் செய்யும் யானை பிளிற, அதன் தோலைத் தன் கைவிரல் நகத்தால் உரித்துப் போர்த்தியவர். இப்பதியில் இரவும் பகலும் தேவர்கள் போற்றித் துதிக்க உமையம்மையாரோடு எழுந்தருளி அருள் புரிந்து வருகின்றார்.

**குறிப்புரை:** புலித்தோல் ஆடையின்மேல் நாகத்தைக் கச்சாக உடுத்து, யானையை உரித்துப் போர்த்து, புறவம் பதியாக உமையோடு இருந்தான் என்கின்றது. உரவன் – வன்மை உடையோன்.

Civan, the Lord Hero, clad in tiger skin and over that He binds and tightens it with a snake using it as a corset. He is our preeminent Supreme Lord (***விகிர்தன்***) who stripped the skin of the trumpeting, exhilarated, and fierce was elephant, by His nail and covered His body with that skin. This Lord Civan is enshrined along with His

consort Umaa Devi in Seekaazhi also called as Thiru-p-puravam, where all the celestials arrive here both day and night and worshipping Him.

**Note:** The skinning of a wild elephant mentioned here is one of the eight celebrated exploits of Lord Shiva.

பந்தமு டையபூதம்பாடப் பாதஞ்சிலம்பார்க்கக்
கந்தமல் குகுழலிகாணக் கரிகாட் டெரியாடி
அந்தண் கடல்சூழ்ந் தழகார்புறவம் பதியாவமர்வெய்தி
எந்தம் பெருமானிமை யோரேத்த உமையோ டிருந்தானே. 3

*பந்தம் உடைய பூதம் பாட, பாதம் சிலம்பு ஆர்க்க,*
*கந்தம் மல்கு குழலி காண, கரிகாட்டு எரி ஆடி,*
*அம் தண்கடல் சூழ்ந்த அழகுஆர் புறவம் பதியா அமர்வு எய்தி,*
*எம் தம்பெருமான் இமையோர் ஏத்த உமையோடு இருந்தானே.*

pantam uTaiya pUtam pATa, pAtam cilampu Arkka,
kantam malku kuzali kANa, karikATTu eri ATi,
am taNkaTal cUzntu azaku Ar puRavam patiyA amarvu eyti,
em tamperumAn2, imaiyOr Etta, umaiyOTu iruntAn2E.

**பொருள்:** புறவம் என்னும் சீகாழிப்பதி, அழகிய குளிர்ந்த கடலால் சூழப்பட்ட எழில் மிகுந்த பதியாகும். இப்பதியைச் சிவபெருமான் தனது இருப்பிடமாகக் கொண்டுள்ளார். இவர், உதரபந்தம் என்னும் அணியை அணிந்துள்ள பூதங்கள் பாட, பாதங்களில் சிலம்பு ஒலிக்க, மணம் நிறைந்த கூந்தலை உடைய உமையம்மை காண, சுடுகாட்டில் எரியேந்தி ஆடுபவர். எம்முடைய தலைவரான இவர், வானோர்கள் போற்றித் துதிக்க உமையம்மையாரோடு இப்பதியில் வீற்றிருந்து அருள்புரிகின்றார்.

**குறிப்புரை:** பூதம் பாட, சிலம்பொலிக்க, உமை காண இடுகாட்டில் நடமாடி இந்நகரை இடமாகக் கொண்டிருந்தான் என்கின்றது. பந்தம் உடைய பூதம் – உதர பந்தம் என்னும் அணியை அணிந்த பூதம். கந்தம் – மணம். கரிகாடு – இடுகாடு. அமர்வெய்தி – விரும்பியிருந்து.

Our Chief Lord Civan dances in the crematory carrying fire in His hand witnessed by Umaa Devi whose mattress diffuse fragrance profusely. His anklets tinkle while the goblin hosts decked with waist bands (*உதரபந்தனம்*) sing. He abides in the beauteous Puravam (*புறவம்* - another name for Seekaazhi) along with His consort Umaa Devi and graces His devotees, while the celestials come down to this place and adore Him. This delightful Puravam is bordered by the beautiful cool sea.

நினைவார் நினையஇனி யான்பனியார் மலர்தூய்நித்தலுங்
கனையார் விடையொன் றுடையான் கங்கைதிங் கள்கமழ்கொன்றை
புனைவார் சடையின்முடி யான்கடல்சூழ் புறவம்பதியாக
எனையாளு டையானிமையோரேத்த உமையோ டிருந்தானே. 4

*நினைவார் நினைய இனியான், பனி ஆர் மலர் தூய், நித்தலும்;*
*கனை ஆர் விடை ஒன்று உடையான்; கங்கை, திங்கள், கமழ்கொன்றை,*
*புனை வார்சடையின்முடியான்; கடல் சூழ் புறவம் பதிஆக,*
*எனை ஆள் உடையான், இமையோர் ஏத்த உமையோடு இருந்தானே.*

nin2aivAr nin2aiya in2iyAn2, pan2i Ar malar tUy, nittalum;
kan2ai Ar viTai on2Ru uTaiyAn2; kagkai, tigkaL, kamazkon2Rai,
pun2ai vArcaTaiyin2 muTiyAn2; kaTal cUz puRavam pati Aka,
en2ai AL uTaiyAn2, imaiyOr Etta, umaiyOTu iruntAn2E.

**பொருள்:** புறவம் என்னும் சீகாழிப் பதி, கடலால் சூழப்பட்டுள்ள பதியாகும். இப்பதியைச் சிவபெருமான் தனது இருப்பிடமாகக் கொண்டுள்ளார். தினந்தோறும் குளிர்ந்த மலர்களைத் தூவித் தன்னை நினைக்கும் அடியவர்களின் நினைப்பிற்கு இவர் இனியவராக இருப்பவர். கனைக்கும் விடை ஒன்றை ஊர்தியாகக் கொண்டவர். கங்கை, திங்கள், மணம் கமழும் கொன்றை ஆகியவற்றை அணிந்தவர். அழகிய நீண்ட சடை முடியை உடையவர். என்னை ஆளுபவரான இவ்விறைவர், வானோர்கள் போற்றித் துதிக்க உமையம்மையாரோடு இத்தலத்தில் வீற்றிருந்து அருள்புரிகின்றார்.

**குறிப்புரை:** என்னை ஆளாக உடையவன் நினைத்ததற்கினியனாய் விடையேறி, கங்கை முதலியவற்றைச் சூடி, புறவம்பதியாக உமையோடு இமையோர் ஏத்த இருந்தான் என்கின்றது. பனியார் மலர் தூய், நினைவார் நித்தலும் நினைய இனியான் எனக் கூட்டுக. கனை – ஒலி.

Lord Civan who has me as His devotee abides in Seekaazhi town called Puravam is which bordered by sea. He sweetens the thought of His devotees who adore Him in their minds daily offering cool flowers. He has a bellowing bull as His vehicle to move about. He displays the Ganges river, the moon and the pleasant smelling cassia flowers in His good looking long matted hair. Abiding in Puravam along with Umaa Devi He graces His devotees while the Devaas come down here and worship Him.

**Note:** The sprinkling of flowers is done by the devotees when they perform their Aathmaarttha Puja (private worship done in one's house). Gnaanasambandar

declares that Lord Civa holds him as His servitor. Our saint, be it known, is hailed as Aaludaiya Pillaiyaar (ஆளுடைய பிள்ளையார்).

செங்கணர வும்நகுவெண் டலையும்முகிழ் வெண்டிங்களுந்
தங்குசடை யன்விடைய னுடையன்சரி கோவணஆடை
பொங்குதி ரைவண்கடல் சூழ்ந்தழகார் புறவம்பதியாக
எங்கும்பர வியிமையோரேத்த உமையோ டிருந்தானே. 5

செங்கண் அரவும் நகுவெண்தலையும், முகிழ்வெண்திங்களும்,
தங்கு சடையன்; விடையன்; உடையன், சரி கோவணஆடை;
பொங்கு திரை வண்கடல் சூழ்ந்த அழகுஆர் புறவம் பதிஆக,
எங்கும் பரவி இமையோர் ஏத்த உமையோடு இருந்தானே.

cegkaN aravum, nakuveNtalaiyum, mukiz veN tigkaLum,
tagku caTaiyan2; viTaiyan2; uTaiyan2, cari kOvaNa ATai;
pogku tirai vaN kaTal cUzntu azaku Ar puRavam pati Aka,
egkum paravi imaiyOr Etta, umaiyOTu iruntAn2E.

**பொருள்:** சிவபிரானுடைய சடை முடியில், சிவந்த கண்களை உடைய பாம்பும், சிரிப்பது போல வாய்விண்டு தோன்றும் வெள்ளிய தலையோடும், இளைய வெண்பிறையும் தங்கியுள்ளன. விடையை ஊர்தியாகக் கொண்டவன். கோவண ஆடையை அணிந்தவன். அப்பெருமான் பொங்கி எழும் அலைகளை உடைய வளம் பொருந்திய கடலால் சூழப்பட்ட அழகிய புறவம் என்னும் சீகாழியைத் தனக்குரிய பதியாகக் கொண்டு இமையோர் எங்கும் பரவி நின்று ஏத்த உமையம்மையோடு வீற்றிருந்து அருள் பாலிக்கின்றான்.

**குறிப்புரை:** அரவு முதலியவற்றை அணிந்து விடையேறி, கோவணம் உடுத்தி, இந்நகரை இடமாகக் கொண்டு இமையோர் ஏத்த உமையோடு இருந்தான் என்கின்றது. முகிழ் – இளைய. சரி – தொங்குகின்ற. திரை – அலை.

Lord Civan holds in His matted hair, a ruddy eyed snake, a white skull with its mouth open, exhibiting the teeth, which gives an appearance as though the skull is laughing, and a young silvery white crescent moon. He has the bull as His vehicle to move around. He wears a hanging forelap cloth in His loins. This Lord Civan abides along with His consort Umaa in the famed Puravam bordered by swelling and billowing sea, while He was hailed by supernal.

Note: Kovanam: Forelap cloth worn on one's loins to protect the sexual organ.

பின்னுசடை கள்தாழக்கேழ லெயிறுபிறழப்போய்
அன்னநடை யார்மனைகள் தோறுமழகாற் பலிதேர்ந்து
புன்னைமட லின்பொழில்சூழ் ந்தழகார் புறவம்பதியாக
என்னை யுடையானிமை யோரேத்தஉமை யோடிருந்தானே. 6

*பின்னுசடைகள் தாழக் கேழல் எயிறு பிறழப் போய்,*
*அன்னநடையார் மனைகள் தோறும் அழகு ஆர் பலி தேர்ந்து,*
*புன்னை மடலின் பொழில் சூழ்ந்து அழகு ஆர் புறவம் பதிஆக,*
*என்னை உடையான், இமையோர் ஏத்த உமையோடு இருந்தானே.*

pin2n2ucaTaikaL tAzak kEzal eyiRu piRazap pOy,
an2n2a naTaiyAr man2aikaL tORum azaku Ar pali tErntu,
pun2n2ai maTalin2 pozil cUzntu azaku Ar puRavam pati Aka,
en2n2ai uTaiyAn2, imaiyOr Etta, umaiyOTu iruntAn2E.

**பொருள்:** புறவம் என்னும் சீகாழிப் பதியானது, புன்னை, தாமரை முதலியன நிறைந்த பொழில்களால் சூழப்பட்ட அழகிய நகராகும். சிவபெருமான், இப்பதியைத் தனது இருப்பிடமாகக் கொண்டிருக்கின்றார். இவரது முறுக்கி விடப்பட்ட சடைகள் தாழ்ந்து தொங்குகின்றன. மாலையாகக் கோத்தணிந்த பன்றியின் பற்கள் இவரது மார்பில் விளங்குகின்றது, அன்னம் போன்ற நடையினை உடைய மகளிரின் இல்லங்கள் தோறும் இவர் சென்று மன நிறைவோடு அவர்கள் தரும் பலியை ஏற்கின்றார். என்னை அடிமையாக உடைய இப்பெருமான், வானோர்கள் துதிக்க இத்தலத்தில் உமையம்மையோடு வீற்றிருந்து அருள்புரிகின்றார்.

**குறிப்புரை:** என்னை உடையான் சடைதாழ, பன்றிக் கொம்பு மார்பில் விளங்க, பெண்கள் மனைதோறும் சென்று பிச்சை எடுத்துப் புறவம் பதியாக இருந்தான் என்கின்றது. கேழல் எயிறு – பன்றிப்பல்.

Lord Civan considers me as His own and protects me. The twisted strands of His matted hair are dangling. The garland of hog's tusk conspicuously sways in His chest. He goes to many houses and accepts gladly the alms given by women whose charming walks are like the movement of swan. He abides along with His consort Umaa Devi in the city of Seekaazhi also known as Puravam and graces His devotees. This city is bordered with gardens full of Alexandrian laural trees (*புன்னை*), fragrant screw pine plants (*தாழை*) and such other trees and make the city fertile and attractive.

**Note:** Civa, the Mendicant, is an enchanter. His exploits in the Taarukaavanam bear eloquent testimony to this:

St. Maanickavaachakar says that on this advent, "Damsels like unto flowery lianas, forfeited of their Buddhi stood like trees, their senses rapt, and wholly obvious of themselves." - Verse 9, Thiruppaandippathikam.

உண்ணற் கரியநஞ்சை யுண்டொரு தோழந்தேவர்
விண்ணிற் பொலியஅமு தமளித்தவிடை சேர்கொடியண்ணல்
பண்ணிற் சிறைவண்ட றைபூஞ்சோலைப் புறவம்பதியாக
எண்ணிற் சிறந்தஇமை யோரேத்த உமையோடி ருந்தானே. 7

*உண்ணற்கு அரிய நஞ்சை உண்டு ஒருதோழம்தேவர்*
*விண்ணில் பொலிய, அமுதம் அளித்த விடை சேர் கொடி அண்ணல்,*
*பண்ணில் சிறைவண்டு அறை பூஞ்சோலைப் புறவம் பதிஆக,*
*எண்ணில் சிறந்த இமையோர் ஏத்த, உமையோடு இருந்தானே.*

uNNaRku ariya nanjcai uNTu, oru tOzamtEvar
viNNil poliya, amutam aLitta viTai cEr koTi aNNal,
paNNil ciRaivaNTu aRai pUnjcOlaip puRavam pati Aka,
eNNil ciRanta imaiyOr Etta, umaiyOTu iruntAn2E.

***பொருள்:*** புறவம் என்னும் சீகாழிப்பதியில், சிறகுகளை உடைய வண்டுகள் பண்ணோடு ஒலிக்கும் பூஞ்சோலைகள் மிகுதியாக உள்ளன. இப்பதியைச் சிவபெருமான் தன் இருப்பிடமாகக் கொண்டுள்ளார். இவர், யாராலும் உண்ண முடியாத நஞ்சைத் தானே உண்டவர். ஒரு தோழம் என்ற எண்ணில் அடங்காத தேவர்கள், விண்ணில் மகிழ்வுடன் வாழ, அவர்களுக்கு அமுதை அளித்தவர். விடை எழுதிய கொடியை உடைய தலைவர். எண்ணிக்கையில் மிகுந்த வானோர்கள் துதிக்க உமையம்மையாரோடு இப்பதியில் வீற்றிருந்து அருள்புரிகின்றார்.

***குறிப்புரை:*** நஞ்சை உண்டு முப்பத்துமுக்கோடி தேவர்கட்கு அமுது அளித்து வாழவைத்த அண்ணல் இந்நகரை இடமாகக் கொண்டிருந்தான் என்கின்றது. உண்ணற்கரிய – பிறரால் உண்ண முடியாத. ஒரு தோழம் தேவர் – ஒரு பேரெண்ணினையுடைய தேவர்கள், தோழம் பேரெண். ஒரு தோழம் தொண்டருளன் (திருவாசகம்) விண்ணிற் பொலிய – விண்ணுலகை இடமாகக் கொண்டு போகத்தில் மூழ்கி விளங்க. பண்ணில் அறை – பண்ணோடு ஒலிக்கின்ற. எண்ணில் சிறந்த – எண்ணிக்கையில் மிகுந்த.

Lord Civan distributed Amrita that came out of the sea to innumerable (*தோழம்* - Zillion) devaas and made them to live happily forever without death. But He swallowed the poison which no one else can consume. The figure of bull is the insigne of Lord Civan's flag who is noble and merciful. Hailed by countless devaas (*முப்பத்து*

முக்கோடி தேவர்கள்) Lord Civan is entempled in Puravam along with Umaa Devi and graces His devotees. This city is bounded by flower gardens where winged bombinate tunefully.

**Note:** The word 'thozham' represents a great unlimited number.

விண்டான திரவியனார் கயிலைவே ரோடெடுத்தான்றன்
திண்டோ ளுடலுமுடியு நெரியச்சிறி தேயூன்றிய
புண்டா னொழிய அருள்செய் பெருமான் புறவம்பதியாக
எண்டோ ளுடையானிமை யோரேத்த உமையோடிருந்தானே. 8

***விண்தான் அதிர வியனார் கயிலை வேரோடு எடுத்தான்தன்***
***திண்தோள் உடலும் முடியும் நெரியச் சிறிதே ஊன்றிய***
***புண் தான் ஒழிய அருள்செய் பெருமான், புறவம் பதிஆக,***
***எண்தோள் உடையான், இமையோர் ஏத்த, உமையோடு இருந்தானே.***

viNtAn2 atira viyan2 Ar kayilai vErOTu eTuttAn2 tan2
tiNtOL uTalum muTiyum neriyac ciRitE Un2Riya
puNtAn2 oziya aruLcey perumAn2, puRavam pati Aka,
eNtOL uTaiyAn2, imaiyOr Etta, umaiyOTu iruntAn2E.

**பொருள்:** எட்டுத் தோள்களை உடைய சிவபெருமான், புறவம் என்னும் சீகாழிப் பதியைத் தனக்குரிய பதியாகக் கொண்டுள்ளார். விண்ணுலகம் அதிரும்படி இராவணன் கயிலை மலையை அடியோடு பெயர்த்து எடுக்க முயற்சித்தான். அவனுடைய வலிமையான தோள்களும், உடலும் தலையும் நெரியுமாறு, தன் கால்விரலால் சிறிதே ஊன்றினார். பின்னர், அவன் தன் செயலுக்கு வருந்தி மன்னித்து அருள வேண்டியதும் அவன் உடலில் தோன்றிய புண்கள் நீங்க அவனுக்கு அருள் செய்து வரங்கள் பலவற்றைக் கொடுத்த பெருமானாவார். அந்த இறைவர் வானோர்கள் போற்றித் துதிக்க உமையம்மையாரோடு வீற்றிருந்து அருள் புரிகின்றார்.

***குறிப்புரை:*** இராவணனை நெரித்த புண் நீங்க. அருள் செய்த பெருமான் இவன் என்கின்றது. வியன் ஆர் கயிலை – இடமகன்ற கைலை. சிறிதே ஊன்றிய – மிகச் சிறிதாக ஊன்றிய. புண் – உடற்புண்ணும், உள்ளப்புண்ணும். எண்தோள் உடையான் – எட்டுத் திக்குகளாகிய தோள்களை உடையவன்.

Raavanan tried to uproot and keep aside mount Kailash, when a great uproar was caused in the sky. The eight shouldered Lord Civan slightly pressed the mountain by His toe, by which Raavanan's mighty shoulders his head and body - all got crushed. Raavanan regretted for his folly and begged pardon. Lord Civan showed compassion

and got his bodily wounds cured; He also gave him all boons that he requested. Hailed by Devaas, this Lord Civan is enshrined in Puravam along with Umaa Devi gracing His devotees.

**Note:** In this verse, as in all the other verses of this hymn, the abidance of Civa with Umaa is stressed.

நெடியாஹ்நீள் தாமரைமேல யனுநேடிக்காண் கில்லாப்
படியாமேனி யுடையான் பவளவரை போல்திருமார்பிற்
பொடியார் கோலமுடையான் கடல்சூழ் புறவம்பதியாக
இடியார் முழவாரிமை யோரேத்தஉமை யோடிருந்தானே. 9

*நெடியான் நீள் தாமரைமேல் அயனும் நேடிக் காண்கில்லாப்*
*படிஆம் மேனிஉடையான், பவளவரை போல்-திருமார்பில்*
*பொடி ஆர் கோலம் உடையான், கடல் சூழ் புறவம் பதிஆக,*
*இடி ஆர் முழவு ஆர் இமையோர் ஏத்த உமையோடு இருந்தானே.*

neTiyAn2 nIL tAmarai mEl ayan2um nETik kANkillAp
paTi Am mEn2i uTaiyAn2, pavaLavarai pOl-tirumArpil
poTi Ar kOlam uTaiyAn2, kaTal cUz puRavam pati Aka,
iTi Ar muzavu Ar imaiyOr Etta, umaiyOTu iruntAn2E.

***பொருள்:*** புறவம் என்னும் சீகாழிப் பதி, கடல்நீரால் சூழப்பட்டு உள்ளது. இப்பதியில் இடிபோன்ற முழக்கத்தை உடைய முழா என்னும் இசைக் கருவி தொடர்ந்து ஒலித்துக் கொண்டே இருக்கின்றது. இப்பதியைச் சிவபெருமான் தனது இடமாகக் கொண்டுள்ளார். இவர், திருமாலும், நீண்டு வளர்ந்த தாமரை மலர்மேல் உறையும் நான்முகனும் இவரைத் தேடிக் காண இயலாத தன்மை உடைய திருமேனியர். பவள மலை போன்ற திருமார்பின்கண் திருநீறு அணிந்த அழகினை உடையவர். இவர் வானோர் போற்றித் துதிக்க உமையம்மையோடு இத்தலத்தில் வீற்றிருந்து அருள்புரிகின்றார்.

***குறிப்புரை:*** அயனும் மாலும் தேடிக் காண முடியாத திருமேனியை உடையவன், திருநீற்றழகன் இவன் என்கின்றது. நெடியான் – திருமால். படியாமேனி உடையான் – அடங்காத அழல் உருவாகிய மேனியை உடையவன். பொடி – விபூதி.

The tall Thirumaal and Brahma seated in the long stalked lotus could not see the divine form of Lord Civan, in spite of their serious search. This comely Civan has smeared the holy ashes in His coral hill like divine chest. Hailed by Devaas this Lord Civan abides along with Umaa Devi in his much desired Puravam (Seekaazhi) and

graces His devotees. This city is bordered by sea. The noise of the large loud sounding drum similar to the noise of thunder is always heard in this city.

ஆலும்மயிலின் பீலியமணர் அறிவில்சிறுதேரர்
கோலும்மொழி களொழியக்குழு வுந்தழலு மெழில்வானும்
போலும்வடி வுமுடையான் கடல்சூழ்புற வம்பதியாக
ஏலும்வகை யாலிமையோரேத்த உமையோடிருந்தானே. 10

ஆலும் மயிலின் பீலி அமணர், அறிவு இல் சிறுதேரர்,
கோலும் மொழிகள் ஒழிய, குழுவும் தழலும் எழில் வானும்
போலும் வடிவும் உடையான், கடல் சூழ் புறவம் பதிஆக,
ஏலும் வகையால் இமையோர் ஏத்த உமையோடு இருந்தானே.

Alum mayilin2 plli amaNar, aRivu il ciRutErar,
kOlum mozikaL oziya, kuzuvum tazalum ezil vAn2um
pOlum vaTivum uTaiyAn2, kaTal cUz puRavam pati Aka,
Elum vakaiyAl imaiyOr Etta, umaiyOTu iruntAn2E.

**பொருள்:** புறவம் என்னும் சீகாழிப்பதி கடல் நீரால் சூழப்பட்டது. இப்பதியைச் செவ்வண்ணம் உடைய சிவபெருமான் தனது இருப்பிடமாகக் கொண்டுள்ளார். சமணர்கள் ஆடுகின்ற மயிலின் தோகையைத் தங்கள் கையில் ஏந்தி இருக்கின்றார்கள். புத்தர்கள் அறிவில் குறைந்தவர்கள். சிவபெருமான், இவர்கள் புனைந்து பேசும் மொழிகளைத் தாழ்ந்து போகுமாறு செய்கின்றார். இவர், கூடி எரியும் தீயையும், அழகிய வானமும் போன்ற வடிவுடையவர். வானோர்கள் பொருந்தும் வகையால் போற்றித் துதிக்க உமையம்மையோடு இத்தலத்தில் வீற்றிருந்து அருள்புரிகின்றார்.

**குறிப்புரை:** புத்தரும் சமணரும் கூறும் மொழிகளைக் கடந்து, விண்ணையும் தீயையும் ஒத்த வடிவமுடையவனாக இருப்பவன் இவன் என்கின்றது. கோலும் மொழிகள் ஒழிய – கோலிச் சொல்லும் மொழிகள் பிற்பட. குழுவும் – கூடி எரிகின்ற. ஏலும் வகையால் – பொருந்தும் வகை. ஆலும் மயில் – உயிர் உள் வழி அடை.

Lord Civan sets at nothing the exaggerated words of Samanars, who hold in their hands the feathers of dancing peacocks and those of addle-brained Buddhists. His hue is ruddy similar to the blazing fire and the red sky. Hailed by Devaas in the proper manner, He is enshrined in Puravam along with Umaa Devi and graces His devotees.

பொன்னார் மாடநீடுஞ் செல்வப் புறவம்பதியாக
மின்னாரி டையாளுமை யாளோடுமிருந்த விமலனைத்
தன்னார் வஞ்செய்தமிழின் விரகனுரைத்த தமிழ்மாலை
பன்னாள் பாடியாடப் பிரியார் பரலோகந்தானே. 11

*பொன் ஆர் மாடம் நீடும் செல்வப் புறவம் பதிஆக*
*மின் ஆர் இடையாள் உமையாளோடும் இருந்த விமலனை,*
*தன் ஆர்வம் செய் தமிழின் விரகன் உரைத்த தமிழ்மாலை*
*பல்-நாள் பாடி ஆட, பிரியார், பரலோகம்தானே.*

pon2 Ar mATam nITum celvap puRavam pati Aka
min2 Ar iTaiyAL umaiyALOTum irunta vimalan2ai,
tan2 Arvam cey tamizin2 virakan2 uraitta tamizmAlai
pal-nAL pATi ATa, piriyAr, paralOkamtAn2E.

***பொருள்:*** புறவம் என்னும் சீகாழிப் பதி, பொன் போன்ற அழகுடைய உயர்ந்த மாடவீடுகளைக் கொண்டுள்ளது. செல்வச் செழுமையும் வாய்ந்தது. இங்கு குற்றமற்ற இறைவரான சிவபெருமான், மின்னல் போன்ற இடையினை உடைய உமையம்மையாரோடு எழுந்தருளி உள்ளார். இந்த இறைவனைத் தன் அன்பால் தமிழ் விரகனாகிய ஞானசம்பந்தன் போற்றிப் பாடினார். இத்தமிழ் மாலையைப் பலநாள்களும் பாடி ஆடுவோர், மேலுலகத்தில் பிரியாது உறைவார்கள்.

***குறிப்புரை:*** புறவம்பதியாக இறைவியோடு இருக்கின்ற விமலனை அன்பு செய்து, தமிழாற் சொன்ன இப்பாடலைப் பாடியாடுவார் பரலோகம் பிரியார் எனப் பயன் கூறுகிறது. ஆர்வம் – அன்பு.

Gnaanasambandan – the adept in Tamil language has sung in deep devotion on the immaculate holy Civan who abides in Puravam along with Umaa Devi whose waist is very slender similar to lightning. This opulent city has many tall and good-looking mansions. Those who can sing and dance this garland of Tamil verses for days will eventually reach the upper world and be there for ever.

**Note:** Devotion and consistency in the cultivation of our saint's hymns are insisted by our saint.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*74ஆம் பதிகம் முற்றிற்று*
End of 74th Hymn

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# 75. திருவெங்குரு

## திருத்தல வரலாறு:

முதல் பதிகம் பார்க்க.

# 75. THIRU-VENGURU

## HYSTORY OF THE PLACE

See First Hymn.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 75. திருவெங்குரு

## 75. THIRU-VENGURU

பண் : தக்கேசி
ராகம் : காம்போதி

*Pann: Thakkēsi*
*Raagam: Kaambothi*

காலைநன் மாமலர்கொண்ட டிபரவிக்
கை தொழுமாமணியைக் கறுத்தவெங்காலன்
ஓலமதிடமுன் னுயிரொடுமாள
வுதைத்தவ னுமையவள் விருப்பனெம்பெருமான்
மாலைவந் தணுகஓதம் வந்துலவி
மறிதிரைசங்கொடு பவளமுனுந்தி
வேலைவந் தணையுஞ்சோலை கள்சூழ்ந்த
வெங் குருமேவியுள் வீற்றிருந்தாரே. 1

காலை நல்மாமலர் கொண்டு அடி பரவி,
கைதொழு மாமணியைக் கறுத்த வெங்காலன்
ஓலம்அதுஇட, முன் உயிரொடு மாள
உதைத்தவன்; உமையவள்விருப்பன்; எம்பெருமான் -
மாலை வந்து அணுக, ஓதம் வந்து உலவி,
மறிதிரை சங்கொடு பவளம் முன் உந்தி,
வேலை வந்து அணையும் சோலைகள் சூழ்ந்த
வெங்குரு மேவி உள் வீற்றிருந்தாரே.

kAlai nalmAmalar koNTu aTi paravi,
kaitozu mANiyaik kaRutta vegkAlan2
Olam atu iTa, mun2 uyiroTu mALa utaittavan2;
umaiyavaL viruppan2; emperumAn2--

mAlai vantu aNuka, Otam vantu ulavi,
maRitirai cagkoTu pavaLam mun2 unti,
vElai vantu aNaiyum cOlaikaL cUznta
vegkuru mEvi uL vIRRiruntArE.

**பொருள்:** சிவபெருமானின் பக்தனான மார்க்கண்டேயன், வைகறைப் பொழுதில் சிறந்ததும் நல்லதுமான மலர்களைக் கொண்டு நாள்தோறும் இறைவனின் திருவடிகளில் பரவி கைகளால் தொழுபவன். இந்த பக்தனின் உயிரைக் கவர, சினந்து வந்தான் யமன். அந்த யமனை, ஓலமிட்டு அலறுமாறு செய்து, தன்முன்னே உயிரோடு மாளுமாறு உதைத்தவர் எம்பெருமானார் சிவபெருமான். இவர் உமையம்மைக்கு விருப்பமானவர். வெங்குரு என்னும் சீகாழிப் பதியில் மாலை நேரத்தில் கடல் அலைகள் சுருளாகக் கரையை அணுகி சங்கையும் பவளங்களையும் தள்ளிக் கொணர்ந்து வந்து கரையிற் சேர்க்கும். கரைகளில் சோலைகள் வளமாக உள்ளன. இத்தகைய வளம் மிக்க வெங்குருவினுள் சிவபெருமான் வீற்றிருந்து அருள் புரிகின்றார்.

**குறிப்புரை:** நாள்தோறும் மலர்கொண்டு அடிபரவும் மார்க்கண்டற்காகக் காலனைக் காய்ந்த பரமன் வெங்குரு என்னும் சீகாழியில் வீற்றிருக்கிறார் என்கின்றது. மாணி – பிரமசாரியாகிய மார்க்கண்டர். கறுத்த – கோபித்த. மாலைக்காலம் வந்ததும் கடல் ஓதம் பெருகி, சங்கையும் பவளத்தையும் உந்திக் கடல்சாரும் சோலைகள் சூழ்ந்த காழி என நெய்தல் வளம் கூறப்பெற்றது.

One of the prime devotees of Civan is the bachelor saint Maar-k-kandēyan (மார்ககண்டேயன்). Every early morning he goes out to the flower gardens, collects the best of elegant flowers, adorns Lord Civan and worships His holy feet with both his hands. As usual one day Maarkkandēyan was worshipping Civan with both his hands. At this moment, with great anger, the ferocious Yama, the regent of death, approached this young lad of sixteen years Maarkkandēyan, to snatch away his life. Civan kicked Yama with His foot. Lo! Yama yelled and fell down dead in His very presence.

In the city of Venguru (வெங்குரு) - another name of Seekaazhi - during evening hours the billowy waves of the sea, carrying chanks and coral beads dash against the shores and even reach the gardens nearby along the coast. In such an affluent city of Venguru, is our Lord Civan deeply loved by His consort Umaa Devi. He kicked Yama to death and showers His grace on His devotees.

பெண்ணினைப் பாகமமர்ந்துசெஞ் சடைமேற்
    பிறையொடு மரவினை யணிந்தழகாகப்
பண்ணினைப் பாடியாடிமுன் பலிகொள்
    பரமரெம் மடிகளார் பரிசுகள்பேணி
மண்ணினை மூடிவான்முகடேறி
    மறிதிரை கடல்முகந்தெடுப்ப மற்றுயர்ந்து
விண்ணள வோங்கிவந்திழி கோயில்
    வெங்குரு மேவியுள் வீற்றிருந்தாரே. 2

பெண்ணினைப் பாகம் அமர்ந்து, செஞ்சடைமேல்
    பிறையொடும் அரவினை அணிந்து, அழகுஆகப்
பண்ணினைப் பாடி ஆடி, முன் பலி கொள்
    பரமர் எம் அடிகளார் - பரிசுகள் பேணி,
மண்ணினை மூடி, வான்முகடு ஏறி,
    மறிதிரை கடல் முகந்து எடுப்ப, மற்று உயர்ந்து
விண் அளவு ஓங்கி வந்து இழி கோயில்
    வெங்குரு மேவி உள் வீற்றிருந்தாரே.

peNNin2aip pAkam amarntu, cenjcaTaimEl
    piRaiyoTum aravin2ai aNintu, azaku Akap
paNNin2aip pATi ATi, mun2 pali koL
    paramar em aTikaLAr--paricukaL pENi,
maNNin2ai mUTi, vAn2mukaTu ERi,
    maRitirai kaTal mukantu eTuppa, maRRu uyarntu
viN aLavu Ogki vantu izi kOyil
    vegkuru mEvi uL vIRRiruntArE.

**பொருள்:** சிவபெருமான் உமையம்மையை இடப்பாகத்தே விரும்பி ஏற்கின்றார். செஞ்சடை மேல் பிறையோடு பாம்பினையும் அணிந்துள்ளார். இனிமையாகப் பண்வகைகளைப் பாடியும் ஆடியும் மகளிர் முன் சென்று பலி ஏற்கிறார். பரமராகிய எம் அடிகளார் தன் தன்மைகளைப் பேணி வீற்றிருந்தார். ஊழிக்காலத்தில் வான்முகம் மறையுமாறு பொங்கி வந்த கடல் அலைகள், விண்ணளாவ வந்து உலகை மூடியது. அந்தக் கடல் வெள்ளத்தில் மோதி மிதந்தவாறு வான்வரை உயர்ந்து, மீண்டும் நில உலகத்திற்கு தாழ்ந்து இறங்கிய கோயில் வெங்குருவாகும். இந்த வெங்குரு என்னும் சீகாழிப் பதியினுள் சிவபெருமான் வீற்றிருந்து அருள்புரிகின்றார்.

**குறிப்புரை:** கடல்கொண்ட ஞான்று உயர்ந்தோங்கிய கோயிலில் உமாதேவியை ஒருபாகத்தில் இருத்தி, பிறைசூடி, பண்ணைப்பாடி, தன் தன்மைகளைப் பேணி வீற்றிருந்தார் என்கின்றது. அமர்ந்து – விரும்பி.

பரிசுகள் பேணி – தன் தன்மையவாகிய கருணையைக் காட்டி. கடல் மோதி, ஏறி – முகந்து எடுப்ப, உயர்ந்து, ஓங்கி, இழி கோயிலாகிய வெங்குருவில் வீற்றிருந்தார் என முடிக்க.

Lord Civan concorporates with His consort Umaa Devi on the left part of His body. In His matted hair He wears a snake and a crescent moon. He dances and sings melodiously in different tunes. He is our great Lord who goes to household ladies and accepts the alms they give and bestows His grace, which is His inherent quality. At the time of final deluge the seawater envelops and swallows the whole world. The billowy waves of the sea reach the top of the sky and fall down. In such a condition, the temple in Venguru floated reaching the top of the sky and then came down to the earth and refixed itself. In this temple Lord Civan is enshrined and He bestows His grace on His devotees.

ஓரியல் பில்லாவுரு வமதாகியொண்
டிறல்வேடன துருவது கொண்டு
காரிகை காணத்தனஞ் சயன்றன்னைக்
கறுத்தவற் களித்துடன் காதல்செய் பெருமான்
நேரிசை யாகஅறுபத முரன்றுநிரை
மலர்த்தாது கள்மூச விண்டுதிர்ந்து
வேரிக ளெங்கும்விம் மியசோலை
வெங்குரு மேவியுள் வீற்றிருந்தாரே. 3

ஓர் இயல்பு இல்லா உருவம் அது ஆகி,
ஒண் திறல் வேடனது உருஅது கொண்டு,
காரிகை காணத் தனஞ்சயன் தன்னைக்
கறுத்து, அவற்கு அளித்து, உடன் காதல்செய் பெருமான் -
நேரிசைஆக அறுபதம் முரன்று,
நிரை மலர்த் தாதுகள் மூச, விண்டு உதிர்ந்து,
வேரிகள் எங்கும் விம்மிய சோலை
வெங்குரு மேவி உள் வீற்றிருந்தாரே.

Or iyalpu illA uruvam atu Aki,
oNtiRal vETan2atu uru atu koNTu,
kArikai kANat tan2anjcayan2 tan2n2aik
kaRuttu, avaRku aLittu, uTan2 kAtal cey perumAn2--
nEricai Aka aRupatam muran2Ru,
nirai malart tAtukaL mUca, viNTu utirntu,
vErikaL egkum vimmiya cOlai
vegkuru mEvi uL vIRRiruntArE.

**பொருள்:** சிவபெருமான் தன் இயல்பிற்குப் பொருத்தமற்ற எந்த ஒரு உருவத்தையும் மேற்கொள்ளும் தன்மை உடையவர். தன் இயல்புக்கு மாறாக, மிகுந்த வலிமையுடைய வேடர் உருத்தாங்கி, உமையம்மை காண, அருச்சுனனோடு ஒரு போலிக் காரணம் காட்டி சண்டையிட்டவர். பின்பு, அவனுக்கு வேண்டிய வரங்களை அருளி அன்பு செய்த பெருமான் இவர். வண்டுகள் நேரிசைப் பண் போன்ற ஒலிகளை எழுப்பி வரிசையாக மலர்ந்த மலர்களின்மேல் புரளுவதால், மகரந்தம் கண்களில் படிந்து, கண்களை மூடச் செய்கின்றன. அதனால் மலர்கள் விரிந்து தேனைச் சொரிகின்றன. அப்படிப்பட்ட தேன் எங்கும் நிறைந்துள்ள சோலைகள் சூழ்ந்த, வெங்குரு என்னும் சீகாழிப் பதியினுள் சிவபெருமான் வீற்றிருந்து அருள்புரிகின்றார்.

**குறிப்புரை:** விசயனைக் கோபித்தது போல் பாவனை செய்து அருளுஞ்செய்த பெருமான் இவர் என்கின்றது. ஓர் இயல்பு இல்லா உருவமது ஆகி – ஒரு தன்மையும் இல்லாத உருவத்தை மேற்கொண்டு. காரிகை – உமாதேவியார். தனஞ்செயன் – அருச்சுனன். கறுத்து அவற்கு அளித்து எனப்பிரிக்க. நேரிசை; ஒருபண். அறுபதம் – வண்டு. முரன்று – ஒலித்து. தாது கண் மூச – மகரந்தம் கண்ணில் மூட. வேரிகள் – தேன்கள்.

Lord Civan assumed the form of a mighty hunter that did not become Him. Projecting a false protest, He fought against Arjunan in the presence of Umaa Devi and defeated him. Thereafter He showed His real form to Arjunan and bestowed his grace on him and also gave him the invincible war weapon (*பாசுபதாஸ்திரம்*), requested by Arjunan. The city of Venguru is bordered by a large number of lush gardens full of flowers. The humming bees - their voice resembling the musical tone called Nērisai (*நேரிசை*) - reach all the blossomed flowers one by one and roll on the pollen grains. The pollen dust covers the eyes of the bees. Plenty of honey drips from the flowers all over the garden. In such a fertile town of Thiru-venguru, Lord Civan abides majestically and blesses His devotees.

வண்டணை கொன்றைவன் னியுமத்த
மருவிய கூவிளமெருக் கொடுமிக்க
கொண்டணி சடையர்விடை யினர்பூதங்
கொடு கொட்டிகுட முழாக்கூடியமுழவப்
பண்டிகழ்வா கப்பாடியொர் வேதம்பயில்
வர்முன்பாய்புனற் கங்கையைச் சடைமேல்
வெண்பிறை சூடியுமை யவளோடும்
வெங்குருமே வியுள்வீற்றிருந்தாரே. 4

வண்டு அணை கொன்றை வன்னியும் மத்தம்
மருவிய கூவிளம் எருக்கொடு மிக்க
கொண்டு அணி சடையர்; விடையினர்; பூதம்
கொடுகொட்டி குடமுழாக் கூடிய, முழவப் -
பண் திகழ்வு ஆகப் பாடி, ஓர் வேதம்
பயில்வர் - முன் பாய் புனல் கங்கையைச் சடை மேல்
வெண்பிறை சூடி, உமையவளோடும்
வெங்குரு மேவி உள் வீற்றிருந்தாரே.

vaNTu aNai kon2Rai van2n2iyum mattam
maruviya kUviLam erukkoTu mikka
koNTu aNi caTaiyar; viTaiyin2ar; pUtam
koTukoTTi kuTamuzAk kUTiyum, muzavap-
paN tikazvu Akap pATi, or vEtam
payilvar--mun2 pAy pun2al kagkaiyaic caTaimEl
veNpiRai cUTi, umaiyavaLOTum
vegkuru mEvi uL vIRRiruntArE.

**பொருள்:** வண்டுகள் சூழும் கொன்றை மலர், வன்னி இலை, ஊமத்தம் மலர், வில்வம், எருக்கம்பூ ஆகியனவற்றை மிகுதியாகக் கொண்டு அணிந்த சடையினரும், விடை ஊர்தியரும், பூத கணங்கள் கொடுகொட்டி குடமுழா முழவு முதலியவற்றை முழக்கப் பண் விளங்க, ஒப்பற்ற வேதங்களைப் பாடிப் பழகியவரும், தமக்கு முன்னே பாய்ந்து வந்த கங்கை வெள்ளத்தை வெண்பிறையோடு சடையில் அணிந்தவரும் ஆகிய சிவபிரானார் உமையம்மையாரோடு வெங்குரு எனப்படும் சீகாழிப் பதியில் வீற்றிருந்து அடியார்களுக்கு அருள் பாலித்து வருகிறார்.

குறிப்புரை: கொன்றை முதலியவற்றை அணிந்த சடையராய், குடமுழா முதலியவற்றைப் பூதங்கள் வாசிக்க. இசையோடு வேதத்தைப் பாடுகிறவர் இவர் என்கின்றது. கூவிளம் – வில்வம். கொடுகொட்டி – ஒருவகை வாத்தியம். இது இப்போது கிடுகிட்டி என வழங்குகிறது. பண்திகழ்வாக – ஒரே ஸ்வரத்தில்.

Lord Civan wears in His matted hair plenty of cassia flowers (கொன்றை) swarmed by bees, leaves of Indian mesquit (வன்னி இலை), datura flowers (ஊமத்தம்பூ), bael leaves (வில்வ இலை) and madar flowers (எருக்கம்பூ - Calotropis gigantea). He rides on a bull as His vehicle. He used to sing tunefully in a single mode the peerless Vedas to the accompaniment of His goblin hosts who play many different kinds of drums known as Kodukotti (கொடுகொட்டி), Kudamuzhaa (குடமுழா) and Muzhavam (முழவம்). He keeps in His matted hair the Ganges river that descended from heaven gushing towards Him and also the crescent moon. This Lord Civan is majestically entempled in Thiru-venguru along with Umaa Devi and showers grace on His deovotees.

சடையினர் மேனிநீறதுபூசித் தக்கை
கொள்பொக் கணமிட்டுடனாகக்
கடைதொறும் வந்துபலியது கொண்டு
கண் டவர்மனமவை கவர்ந்தழகாகப்
படையதுவேந் திப்பங்கயக்கண்ணி
யுமையவள்பாக முமமர்ந்தருள்செய்து
விடையொடு பூதஞ்சூழ்தரச் சென்று
வெங்குரு மேவியுள் வீற்றிருந்தாரே. 5

சடையினர், மேனி நீறு அது பூசி,
தக்கை கொள் பொக்கணம் இட்டு உடன்ஆகக்
கடைதொறும் வந்து பலிஅது கொண்டு,
கண்டவர் மனம்அவை கவர்ந்து, அழகுஆகப்
படைஅது ஏந்தி, பைங்கயல்கண்ணி
உமையவள் பாகமும் அமர்ந்து அருள் செய்து,
விடையொடு பூதம் சூழ்தரச் சென்று
வெங்குரு மேவி உள் வீற்றிருந்தாரே.

caTaiyin2ar, mEn2i nIRu atu pUci,
takkai koL pokkaNam iTTu uTan2 Akak
kaTaitoRum vantu, pali atu koNTu,
kaNTavar man2am avai kavarntu, azaku Akap
paTai atu Enti, paigkayal kaNNi
umaiyavaL pAkamum amarntu, aruLceytu,
viTaiyoTu pUtam cUztarac cen2Ru,
vegkuru mEvi uL vIRRiruntArE.

**பொருள்:** சிவபெருமான் சடைமுடியை உடையவர். திருமேனியில் வெண்ணீறு பூசியிருப்பவர். தக்கை என்னும் இசைக்கருவியை வைத்துக் கட்டியுள்ள துணி-

மூட்டையைத் தோளில் தொங்கவிட்டுக் கொண்டிருப்பவர். வீடுகள் தோறும் வந்து பலி ஏற்பவர். தம்மைக் கண்ட மகளிர் மனங்களைக் கவர்ந்து செல்பவர். அழகிய மழுப்படையைக் கையில் ஏந்தியிருப்பவர். குளிர்ந்த கயல்மீன் போன்ற கண்களை உடைய உமையம்மையை ஒரு பாகமாகக் கொண்டவர். விடையில் ஏறி பூதகணங்கள் சூழ வருபவர். இவர் வெங்குரு என்னும் சீகாழிப் பதியினுள் உமையம்மையாரோடு வீற்றிருந்து அருள்புரிகின்றார்.

**குறிப்புரை:** வீடுகள்தோறும் வந்து பிச்சை ஏற்று, கண்டவர் மனத்தைக் கவர்ந்து, உமையவளை ஒருபாகத்திருத்தியவர் இவர் என்கின்றது. தக்கைகொள்பொக்கணம் – தக்கை என்னும் வாத்தியத்தை வைத்து மறைத்த துணி மூட்டை. இட்டு – புறத்தோளில் தொங்கவிட்டு.

Lord Civan's hair is matted. He smears His body with holy ashes. He carries a cloth bundle on His shoulders in which He keeps a drum called Thakkai (தக்கை). He holds in one of His hands the battle-axe. Having an attractive appearance and a beautiful look He visits many houses and accepts the alms they give; He captures the minds of the people who face Him. He concorporates His consort Umaa Devi whose eyes are cool and are beautiful as the carp fish. With the intention of showering His grace on devotees, He rides on His bull, followed by His goblin hosts; He reaches Thiru-venguru and is enshrined therein.

கரைபொரு கடலில்திரை யதுமோதக்
கங்குல்வந்தேறிய சங்கமுமிப்பி
உரையுடை முத்தமணலி டைவைகி
ஓங்கு வானிருளறத்துரப்ப வெண்டிசையும்
புரைமலி வேதம்போற்று பூசுரர்கள்
புரிந்தவர் நலங்கொளா குதியினில்நிறைந்த
விரைமலி தூபம்விசும்பினை மறைக்கும்
வெங் குருமேவியுள் வீற்றிருந்தாரே. 6

கரை பொரு கடலில்-திரை அது மோத,
கங்குல் வந்து ஏறிய சங்கமும் இப்பி
உரைஉடை முத்தம் மணல் இடை வைகி,
ஓங்கு வான் இருள் அறத் துரப்ப, எண்திசையும்
புரை மலி வேதம் போற்று பூசுரர்கள்
புரிந்தவர் நலம் கொள் ஆகுதியினில் நிறைந்த
விரை மலி தூபம் விசும்பினை மறைக்கும்
வெங்குரு மேவி உள் வீற்றிருந்தாரே.

karai poru kaTalil--tirai atu mOta,
kagkul vantu ERiya cagkamum ippi
urai uTai muttam maNal iTai vaiki,
Ogku vAn2 iruL aRat turappa, eNticaiyum
purai mali vEtam pORRu pUcurarkaL
purintavar nalam koL Akutiyin2in2 niRainta
virai mali tUpam vicumpin2ai maRaikkum
vegkuru mEvi uL vIRRiruntArE.

**பொருள்:** வெங்குரு என்னும் சீகாழியில், கடலின் அலைகள் கரையைத் தாக்குவது போல வந்து மோதுகின்றன. இரவு நேரத்தில் கரையில் வந்து ஏறிய சங்குகளும் சிப்பிகளும் முத்துக்களை ஈனுகின்றன. புகழ்பெற்ற அம்முத்துக்கள் மணலில் இடைகளில் தங்கி, உயர்ந்த வானத்தின் இருளை முற்றிலும் நீக்கி ஒளிமயமாக்குகின்றன. எண்திசைகளிலும் மெய்ப்பொருள் உணர்ந்து வேதங்களைப் போற்றும் அறவோர்கள் நன்மைகளைத் தரும் வேள்விகளைப் புரிகின்றனர். அந்த வேள்வித் தீயில் நெய் விடுவதால் எழுகின்ற மணம் மிகுந்த புகை, வானத்தை மறைக்கின்றது. வானம் மறைக்கப்படுகின்ற வெங்குரு என்னும் சீகாழிப் பதியினுள் சிவபெருமான் வீற்றிருந்து அருள்புரிகின்றார்.

**குறிப்புரை:** கடல் ஓரத்தில் கரையேறிச் சங்குகளும் இப்பிகளும் முத்துக்களை ஈன, அவை இருளை ஓட்ட, அந்தணர்கள் செய்யும் யாகப்புகை ஆகாயத்தை மறைக்கின்ற வெங்குரு என்கின்றது. இருளை ஒளியாக்குவன சங்கும் சிப்பியும் ஈன்ற முத்துக்கள். ஒளியான விசும்பை மறைப்பன யாகப்புகை என்பது கருத்து. பூசுரர் – அந்தணர். புரை – உயர்வு.

On the seashore of Thiru-venguru the waves of the sea dash against the shores during night hours dropping shanks and pearl shells on the sandy beds. The shells open up and the pearls shed their dazzling light all over. They are so bright that the darkness of the sky disappears. Scholars who are well versed in the Vedas, foster and spread them in all directions of the world. They offer in the sacrificial fire the oblations as prescribed and perform rituals for the good of humanity. The fragrant smoke rising from the sacrificial fire envelops the sky above the Venguru city. In this famed city Lord Civan is enshrined along with Umaa Devi and showers His grace on the devotees.

வல்லிநுண்ணி டையாளுமையவள் தன்னை
மறுகிட வருமதகளிற்றி னைமயங்க
ஒல்லையிற்பிடி த்தங்குரித்தவள் வெருவல்
கெடுத்தவர் விரிபொழில் மிகுதிருவாலில்
நல்லறமுரைத்து ஞானமோ டிருப்ப
நலிந்திட லுற்றுவந்த வக்கருப்பு
வில்லியைப் பொடிபடவிழித்தவர் விரும்பி
வெங்குரு மேவியுள்வீற்றிருந்தாரே. 7

வல்லிநுண் இடையாள் உமையவள் தன்னை
மறுகிட வரு மதகளிற்றினை மயங்க
ஒல்லையில் பிடித்து, அங்கு உரித்து, அவள் வெருவல்
கெடுத்தவர் விரி பொழில் மிகு திரு ஆலில்
நல்அறம் உரைத்து ஞானமோடு இருப்ப,
நலிந்திடல்உற்று வந்த அக் கருப்பு-
வில்லியைப் பொடிபட விழித்தவர்-விரும்பி
வெங்குரு மேவி உள் வீற்றிருந்தாரே.

valli nuN iTaiyAL umaiyavaL tan2n2ai
maRukiTa varu matakaLiRRin2ai mayagka
ollaiyil piTittu, agku urittu, avaL veruval
keTuttavar; viripozil miku tiru Alil
nal aRam uraittu njAn2amOTu iruppa,
nalintiTal uRRu vanta ak karuppu--
villiyaip poTipaTa vizittavar--virumpi,
vegkuru mEvi uL vIRRiruntArE.

*பொருள்:* கொடி போன்ற நுண்ணிய இடையினை உடைய உமையம்மை அஞ்சுமாறு வந்த மதயானையை, அது மயங்குமாறு, விரைந்து பிடித்தவர் சிவபெருமான். அந்த யானையின் தோலை உரித்து அம்மையின் அச்சத்தைப் போக்கியவர். விரிந்த பொழிலிடையே அமைந்த அழகிய கல் ஆலமரத்தின் அடியில் அமர்ந்து சனகாதியர் முதலிய நால்வருக்கு நல் அறங்களை சின் முத்திரையின் மூலமாக உணர்த்திவிட்டு யோக நிலையில் ஞான மாத்திரராய் வீற்றிருந்தார். திருமாலும், பிரம்மனும் மன்மதனைக் கடுஞ்சொற்களால் கட்டாயப்படுத்த, கரும்பு வில்லை உடைய அவன் சிவபெருமான்மீது மலர்க்கணை விடுத்து அவரது யோக நிலையைக் கலைத்தான். அதனால் சிவபெருமானின் கோபத்திற்கு ஆளாகினான். சிவபெருமானார் தனது நெற்றிக் கண்ணைத் திறந்து மன்மதனை எரித்து பொடியாக்கியவர். இந்தச் சிவபெருமான் வெங்குரு என்னும் சீகாழிப் பதியினுள் விரும்பி வீற்றிருந்து அருள்புரிகின்றார்.

**குறிப்புரை:** உமையவள் அஞ்ச, யானையை உரித்து அவள் அச்சத்தைப் போக்கியவரும், ஆலின்கீழ் நால்வருக்கு அறம் உரைத்திருந்தபோது வருத்தவந்த மன்மதனை எரித்தவரும் ஆகிய இறைவன் இந்நகரில் இருந்தார் என்கின்றது. வல்லி – கொடி. மறுகிட – மயங்க. ஒல்லை – விரைவாக. வெருவுதல் – அஞ்சுதல். திருஆல் – கல்லால விருட்சம். நலிந்திடலுற்று – வருந்தி. கருப்பு வில்லி – தரும்பை வில்லாக உடைய மன்மதன்.

Umaa Devi, whose waist is as slender as the flexible stem of a vine, got frightened to see a rutting male elephant approaching her. Lord Civan dashed towards the elephant, got hold of it and skinned it thus removed the fear of Umaa Devi. Civan sat down under a stone banyan tree (*கல்லால மரம்*) of the extensive grove and imparted the knowledge of spiritual truth (gnosis) to the group of four saints - Sanakar, Sananthanar, Sanaathanar and Sanarkumaarar (*சனகர், சனந்தனர், சனாதனர், சனற்குமாரர்*). Thereafter, poised in the spiritual perception, He sat in an upright posture for silent meditation (*யோக நிலையில் ஞான மாத்திரராய் வீற்றிருந்தார்*). Brahma and Vishnu rebuked Manmathan, the god of love (*மன்மதன்*) for his inactiveness. Manmathan got distressed over the rebuke and decided to get rather the displeasure of Lord Civan than that of Brahma and Vishnu. As desired by these two demigods, he shot his flower arrow towards Lord Civan and disturbed His meditation. Lord Civan opened His third eye. Lo! Manmathan (also known as Kaaman - *காமன்*) was burnt to death. That Lord Civan, with all eagerness is enshrined in Thiru-venguru.

பாங்கிலா வரக்கன்கயிலை யன்றெடுப்பப்
பலதலை முடியொடு தோளவைநெரிய
ஓங்கிய விரலாலூன் றியன்றவற்கே
ஒளிதிகழ்வாள துகொடுத்தழகாய
கோங்கொடு செருந்திகூவிள மத்தங்
கொன்றை யுங்குலாவிய செஞ்சடைச் செல்வர்
வேங்கை பொன்மலரார் விரைதருகோயில்
வெங்குருமேவியுள் வீற்றிருந்தாரே. 8

*பாங்கு இலா அரக்கன் கயிலை அன்று எடுப்ப,*
*பலதலை முடியொடு தோள்அவை நெரிய,*
*ஓங்கிய விரலால் ஊன்றி, அன்று, அவற்கே*
*ஒளி திகழ் வாள்அது கொடுத்து, அழகுஆய*

கோங்கொடு, செருந்தி, கூவிளம், மத்தம்,
கொன்றையும், குலாவிய செஞ்சடைச் செல்வர் -
வேங்கை பொன்மலர் ஆர் விரை தரு கோயில்
வெங்குரு மேவி உள் வீற்றிருந்தாரே.

pAgku ilA arakkan2 kayilai an2Ru eTuppa,
palatalai muTiyoTu tOL avai neriya,
Ogkiya viralAl Un2Ri, an2Ru, avaRkE
oLi tikaz vAL atu koTuttu, azaku Aya
kOgkoTu, cerunti, kUviLam, mattam,
kon2Raiyum, kulAviya cenjcaTaic celvar--
vEgkai pon2malar Ar virai taru kOyil
vegkuru mEvi uL vIRRiruntArE.

***பொருள்:*** இராவணன் வீரம் நிறைந்த அரக்கர் குல அரசன். அவன் கயிலை மலையை பெயர்த்து எடுத்த போது, அவனது கிரீடங்கள் அணிந்த பத்து தலைகளையும், தோள்களையும் கால்விரலை ஊன்றி நெரித்தவர் சிவபெருமான். அவன், தன் பிழையை உணர்ந்து சாம கானம் பாடிய அளவிலே, ஒளிபொருந்திய சந்திரஹாசம் என்னும் வாளை வழங்கி அருளியவர். அழகிய கோங்கு, செருந்தி, வில்வம், ஊமத்தம் மலர், கொன்றை ஆகியன விளங்கும் செஞ்சடைச் செல்வர். இந்தச் சிவபிரானார் வேங்கை மரங்களின் பொன்போன்ற மலர்களின் மணம் கமழும் வெங்குரு என்னும் சீகாழித் திருக்கோயிலினுள் வீற்றிருந்து அருள்புரிகின்றார்.

***குறிப்புரை:*** இராவணனை அடக்கி அருள்செய்தவர் இவர் என்கின்றது.

Raavanan, the mighty king, due to his vanity, tried to uproot and put aside Mount Kailash, abode of Lord Civan. Civan pressed the mountain with His toe. Raavanan's ten heads and shoulders got crushed. He realised his folly and begged his pardon and sang Saama gaanam. Civan was pleased to hear his song and pardoned him. He also gave him a dazzling divine sword for self-defence. Civan wears in His ruddy matted hair various elegant flowers of red cotton tree (Bambae gossypinum – *கோங்கு*) and panickled golden blossomed pear tree (Ochna squarrosa – *செருந்தி*). Also He wears datura flowers, cassia flowers and Bael leaves and such other things. He is entempled in the shrine of Thiru-venguru where the pleasant aroma of the gold-like flower of East Indian Kino tree (Pterocarpus marsupium – *வேங்கை*) fills the air all around,

ஆறுடைச் சடையெம்மடி களைக்காண
 அரியொடுபிரம னுமளப்பதற்காகிச்
சேறிடைத் திகழ்வானத் திடைபுக்குஞ்
 செலவறத்தவிர்ந் தனரெழிலுடைத் திகழ்வெண்
ணீறுடைக் கோலமேனியர் நெற்றிக்
 கண்ணினர் விண்ணவர் கைதொழுதேத்த
வேறெமை யாளவிரும்பிய விகிர்தர்
 வெங்குருமேவி யுள்வீற்றிருந்தாரே. 9

ஆறுஉடைச் சடை எம் அடிகளைக் காண
 அரியொடு பிரமனும் அளப்பதற்கு ஆகி,
சேறுஇடை, திகழ் வானத்துஇடை, புக்கும்
 செலவு அறத் தவிர்ந்தனர்; எழில் உடைத் திகழ் வெண்-
நீறு உடைக் கோல மேனியர்; நெற்றிக்-
 கண்ணினர்; விண்ணவர் கைதொழுது ஏத்த,
வேறுஎமை ஆள விரும்பிய விகிர்தர்-
 வெங்குரு மேவி உள் வீற்றிருந்தாரே.

ARu uTaic caTai em aTikaLaik kANa,
 ariyoTu piraman2um aLappataRku Aki,
cERu iTai, tikaz vAn2attu iTai, pukkum
 celavu aRat tavirntan2ar; ezil uTait tikaz veN--
nIRu uTaik kOla mEn2iyar; neRRik
 kaNNin2ar; viNNavar kaitozutu Etta,
vERu emai ALa virumpiya vikirtar--
 vegkuru mEvi uL vIRRiruntArE.

**பொருள்:** எம் தலைவராகிய சிவபிரானார் கங்கை நதியைச் சடையில் சூடியவர். அழகுடன் விளங்கும் வெண்ணீறு பூசிய திருமேனியர். நெற்றிக் கண்ணர். அவரது திருவடியை அளந்து காணுதற்கு திருமால் சேற்று நிலத்தை பன்றியாய் அகழ்ந்து சென்றான். திருமுடியைக் காணுதற்கு பிரமன் வானத்திற்கு அன்னமாய்ப் பறந்து சென்றான். இருவரும் அடிமுடிகளைக் காணாமல் தம் செயலில் அழிந்தனர். தேவர்கள் கைகளால் தொழுது ஏத்த, அவர்களை விடுத்து, எம்மைச் சிறப்பாக ஆள விரும்பிய விகிர்தர் இவர். இப்பெருமான் வெங்குரு என்னும் சீகாழிப் பதியினுள் வீற்றிருந்து அருள்புரிகின்றார்.

**குறிப்புரை:** அயனும் மாலும், விண்ணிலும் மண்ணிலும் தேடச் சென்றும் காணாது போக்கொழிந்தனர். அத்தகைய நீறுபூசிய மேனியை உடையவர் இவர் என்கின்றது. சேறு இடைபுக்கும், திகழ்வானத்திடைபுக்கும் எனப் பிரித்துக் கூட்டுக. எழில் – அழகு. விண்ணவர் கைதொழுதேத்த எமை வேறு ஆள விரும்பிய இறைவன்; என்றது, தேவர்கள் தம் போகத்திற்கு இடையீடு வாராமைகுறித்து

வணங்குவர். ஆதலால் அவர்க்கு எளிதில் அருள் வழங்காது, எம்மைச் சிறப்பாக வைத்து ஆள்கின்றார் என்ற நயப்பொருள் தோன்ற நின்றது.

Our Lord Civan holds in His matted hair the river Ganges. He has smeared His body with holy ashes. He has a third eye on His forehead. Thirumaal and Brahma desired to explore on Lord Civan. Thirumaal took the form of a hog and burrowed the miry earth; while Brahma took the form of a swan and flew up into the sky. Both failed in their attempts. The celestial gods adore Civan by raising both their hands above their heads. Ignoring even these gods, the pre-eminent Supreme Lord Civan (விகிர்தன்) set His heart lovingly on us bestowing His grace. This Lord Civan is enshrined in Thiru-venguru.

பாடுடைக் குண்டர்சாக்கியர் சமணர்
பயில் தருமறவுரைவிட்டழகாக
ஏடுடை மலராள்பொ ருட்டுவன்தக்கன்
எல்லையில் வேள்வியைத் தகர்த்தருள்செய்து
காடிடைக் கடிநாய்கலந்து டன்சூழக்
கண்டவர் வெருவுறவிளித்து வெய்தாய
வேடுடைக் கோலம்விரும்பி யவிகிர்தர்
வெங்குரு மேவியுள்வீற்றிருந்தாரே. 10

பாடு உடைக் குண்டர், சாக்கியர், சமணர்,
பயில்தரும் மறஉரை விட்டு, அழகுஆக
ஏடு உடை மலராள் பொருட்டு வன்தக்கன்
எல்லை இல் வேள்வியைத் தகர்த்து, அருள் செய்து,
காடுஇடைக் கடிநாய் கலந்து உடன்சூழ,
கண்டவர் வெருஉற விளித்து, வெய்துஆய
வேடு உடைக் கோலம் விரும்பிய விகிர்தர் -
வெங்குரு மேவி உள் வீற்றிருந்தாரே.

pATu uTaik kuNTar, cAkkiyar, camaNar,
payiltarum maRa urai viTTu, azaku Aka
ETu uTai malarAL poruTTu van2takkan2
ellai il vELviyait takarttu, aruLceytu,
kATu iTaik kaTinAy kalantu uTan2 cUza,
kaNTavar veru uRa viLittu, veytu Aya
vETu uTaik kOlam virumpiya vikirtar--
vegkuru mEvi uL vIRRiruntArE.

**பொருள்:** சமணர்கள் பெருந்தீனி தின்று உடல் பருத்தவர்கள். புத்தர்கள் துன்பத்தை தாங்குதலே தவத்தின் அடையாளம் எனக் கருதுபவர்கள். இவர்கள் கூறும் கருணையற்ற வார்த்தைகளை ஏற்காதீர்கள். தாட்சாயணியாகிய உமாதேவி அழகிய இதழ்களோடு கூடிய தாமரை மலரைப் போன்றவள். அவளின் பொருட்டு வலிமையுள்ள தக்கன் இயற்றிய எல்லை இல்லாத பெரிய வேள்வியை வீரபத்திரரைக் கொண்டு அழிக்கச் செய்தவர். பின்னர் தக்கனுக்கு அருள் செய்தவர். காட்டில் காவல்புரியும் கடிநாய்கள் சூழ்ந்து வரவும், கண்டவர் அஞ்சவும், வேடவர் பயிலும் சொற்களால் விலங்குகளை அழைத்து வேடுவர் போன்ற வேட்டுவக் கோலத்தை விரும்பி ஏற்ற விகிர்தர். இந்த சிவபெருமான் வெங்குரு என்னும் சீகாழிப் பதியினுள் வீற்றிருந்து அருள்புரிகின்றார்.

**குறிப்புரை:** புறச்சமயிகளுடைய பொருந்தா உரைக்கு அப்பாற்பட்டுத் தக்கன் யாகத்தைத் தகர்த்து, வேட்டுவ வடிவந் தாங்கிய விகிர்தர் இவர் என்கின்றது. பாடு – துன்பம். பயில்தரும் மற உரை – சொல்லுகின்ற கருணையற்ற வார்த்தைகள். விட்டு – அவ்வுரைகளுக்கு அப்பாற்பட்டு, ஏடு உடைய மலராள் – தாட்சாயணியாகிய உமாதேவி. தகர்த்து – அழித்து. விளித்து – அழைத்து.

The Jains and Buddhists proclaim that to bear with patience sufferings in life is the symbol of penance. Ye companions! Do not listen to the merciless advice of these people. On behalf of Dakshaayini (*தட்சாயணி* - another name of goddess Umaa Devi) who is as charming a lady as petelled lotus flower, Lord Civan instructed Veerabadran (*வீரபத்திரன்*) to go and destroy the vast and extraordinary sized sacrificial hall built by the mighty Thakkan (*தக்கன்*). He carried out Civan's command and did a great havoc. Later Civan pardoned and blessed Thakkan. Surrounded by watch dogs of the forest, Lord Civan voluntarily took the form of a fierceful hunter and appeared before Arjunan calling the animals in the hunter's language. This preeminent Supreme Lord Civan is enshrined in Seekaazhi also called Thiru-venguru.

விண்ணியல் விமானம்விரும் பியபெருமான்
வெங்குருமேவியுள் வீற்றிருந்தாரை
நண்ணிய நூலன்ஞான சம்பந்தன்
நவின்றஇவ் வாய்மொழி நலமிகுபத்தும்
பண்ணியல் பாகபத்திமை யாலே
பாடியு மாடியும்பயில் வல்லார்கள்
விண்ணவர் விமானங்கொடு வரஏறி
வியனுல காண்டுவீற்றிருப்பவர்தாமே. 11

விண் இயல் விமானம் விரும்பிய பெருமான்
வெங்குரு மேவி உள் வீற்றிருந்தாரை,
நண்ணிய நூலன் ஞானசம்பந்தன்
நவின்ற இவ் வாய்மொழி நலம் மிகு பத்தும்
பண் இயல்புஆகப் பத்திமையாலே
பாடியும் ஆடியும் பயில் வல்லார்கள்,
விண்ணவர் விமானம் கொடுவர ஏறி
வியன்உலகு ஆண்டு வீற்றிருப்பவர்தாமே.

viN iyal vimAn2am virumpiya perumAn2
vegkuru mEvi uL vIRRiruntArai,
naNNiya nUlan2--njAn2acampantan2--
navin2Ra iv vAymozi nalam miku pattum
paN iyalpu Akap pattimaiyAlE
pATiyum ATiyum payila vallArkaL,
viNNavar vimAn2am koTuvara ERi,
viyan2 ulaku ANTu vIRRiruppavar tAmE.

**பொருள்:** சிவபெருமான் வானளாவிய விமானத்தை உடைய கோயிலை விரும்பி, வெங்குரு என்னும் சீகாழிப் பதியினுள் வீற்றிருந்து அருள்புரிகின்றார். அறம், பொருள், இன்பம், வீடு என்ற உறுதிப் பொருளைத் தெரிவிக்கும் நல்ல நூல்களை அறிந்தவர் ஞானசம்பந்தர். இவர் அருளிய இந்த உண்மை மொழிகளாகிய நன்மைகளைத் தரும் இந்தப் பதிகத்தின் பத்துப் பாடல்களையும் பண் இசையோடும், பக்திப் பெருக்கோடும், பாடியும், ஆடியும், பிறருக்கு சொல்லவும் வல்லவர்கள், தேவர்கள் விமானம் கொண்டுவர அதில் ஏறிச் சென்று அகன்ற தேவருலகை அரசாண்டு அதில் வீற்றிருப்பர்.

**குறிப்புரை:** வெங்குரு மேவிய பெருமானைச் சொன்ன இந்த நலமிகு பத்துப் பாடல்களையும் பத்தியோடு பாடியும் ஆடியும் பயில வல்லார், விண்ணவர்கள் விமானங்கொண்டு வர அதில் ஏறிச் சென்று விண்ணரசராய் வீற்றிருப்பார் என்கின்றது. விண்ணியல் விமானம் – ஆகாயத்தை அளாவிய விமானம்.

நண்ணிய நூலன் – தானாகவே அடைந்த வேதத்தை உடையவன். வாய்மொழி – உண்மை உரை. வியனுலகு – அகன்ற உலகம்.

Gnaanasambandan, well-versed in all the scriptures, has praised in Vedic verses, the Supreme God who likes to abide majestically, under the -vaulting tower of the shrine at Venguru. Those who practise perfectly singing these ten verses in musical tone and dancing in ecstasy, will reach the eternal world, ascending the heavenly car, brought by Devaas and stay there in majestic splendour.

**Note:** Our saint announces that his verses are 'Vāimozhi'. The Vedas are known as Vāimozhi in Tamil. A section of Nammāzhwar's verses goes by the name "Thiru-vāi-mozhi".

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*75ஆம் பதிகம் முற்றிற்று*
End of 75th Hymn

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# 76. திரு இலம்பையங் கோட்டூர்

## திருத்தல வரலாறு:

தொண்டை நாட்டுத் தலம். கூவத்துக்குத் தென்மேற்கே 2 கி.மீ. தூரத்தில் உள்ளது. சென்னை, காஞ்சிபுரம், அரக்கோணம் ஆகிய ஊர்களில் இருந்து பேருந்துகள் செல்கின்றன. இங்கு அரம்பையாதியர் பூசித்துப் பேறு பெற்றனர். அரம்பையங்கோட்டூர் என்பது இலம்பையங்கோட்டூர் என மருவியது. இறைவன் சந்திரசேகரர். இறைவி கோடேந்து முலையம்மை. தீர்த்தம் சந்திர தீர்த்தம். இத்தலம் திருவிற்கோலத்தினின்றும் தென்மேற்கே 5 கி.மீ. தூரத்தில் உள்ளது.

## கல்வெட்டு:

பாண்டியன் கோநேரின்மை கொண்டான் திரிபுவனச் சக்கரவர்த்தி ஜடாவர்மன் சுந்தரபாண்டியன் ஆட்சியில் மணவிற் கோட்டத்தின் பகுதியான கான்றூர் நாட்டில் உள்ள இலம்பையங்கோட்டூர் என வழங்கப் பெறும். திரிபுவனச் சக்கரவர்த்தி திரிபுவன வீர தேவனது ஆட்சியில் கான்றூர் நாட்டிலுள்ள சதுர்வேதி மங்கலம் இலம்பையங்கோட்டூர் எனவும் வழங்கப் பெறும். இறைவன் பெயர் இலம்பையங்கோட்டூர் உடைய நாயனார் என்பது.

இராஜாதிராஜதேவன் காலத்தில் தேவநாயக சுவாமி கோயில் சிவபாத சேகர மூவேந்த வேளாளனால் கட்டப்பட்டு உள்ளது. ஏனையவை விளக்கிற்கு நெல், பொன், ஆடுகள், நிலங்கள் முதலியன தானம் கொடுக்கப்பட்டதை அறிவிக்கின்றன.

## பதிக வரலாறு:

திருமாற்பேற்றை வணங்கிச் சிவபெருமான் திருவருள் பெற்ற சீகாழிச் செம்மலார், திருவல்லம் முதலிய தலங்களை வணங்கிக்கொண்டு பாலாற்றுப் பக்கத்தில் வடகரையில் உள்ள தலங்களையும் வணங்கத் திருவுளங்கொண்டு திரு இலம்பையங் கோட்டூரை அடைந்து வணங்கி, ‘மலையினார் பருப்பதம்’ என்னும் இப்பதிகத்தைப் பாடியருளினார்கள்.

## 76. THIRU-ILAM-PAYANG-KOTTOOR

### HISTORY OF THE PLACE

This sacred place is in Thondai Naadu and is 2 km southeast of Koovam. Buses to this place ply from Chennai, Kaanchipuram and Arakkonam. It is 5 km to the southwest of Thiruvirkolam. The name Ilambaiyangkottoor is the corrupted form of Arambaiyangkottoor.

The name of God, here, is Chandhirasekarar and that of the Goddess is Kodenthu Mulaiyammai. The sacred ford is Chandhira Theerththam. Celestial women such as Arambai and others offered worship here and obtained their wishes.

Inscriptions here give the history of the change of the name of the larger administrative division of the land with different kings. Note is made of the building of a shrine for Dhevanaayakaswami by one Sivapaadhasekara Moovendha Velalan. Most of the inscriptions pertain to gift of paddy, gold, sheep and land for lamps.

### INTRODUCTION TO THE HYMN

Having hailed Civa at Thirumārperu, our saint proceeded further on his pilgrimage. Having adored the Lord-God at Thiruvallam, he arrived at Thiru-ilam-payang-kottoor and sang the following peerless hymn:

**Note:** The main message of this hymn is this. Our saint affirms that his utterances are not, but Civas. This is also the affirmation of the Vaishnava saint Nammaazhwar.

c.f. (i) "My radiant one, the first one,
My Lord, sings of himself,
Through me, in sweet Tamil"

Thiruvāimozhi, 7-9-1.

(ii) "He makes my words, the sweet words I say,
seem as if they were mine;
(but) the wondrous one praises himself
through his own words"

Ibid, 7-9-2.

(iii) "Would I forget any day
the father who, through my mouth,
spoke about himself,
to the foremost, pure devotees
in fine sweet verse?"

Ibid, 7-9-3.

(iv) "Will I ever forget my father,
who became me and speaks of himself
in faultless verse?"

Ibid, 7-9-4.

(v) "Making me one with Him,
the great one sang about Himself, through one,
sweet verses that this earth celebrates"

Ibid, 7-9-5.

The above translation is by John Carman and Vasudha Narayanan.

திருச்சிற்றம்பலம்

THIRU-CH-CHITRAMBALAM

## 76. திருஇலம்பையங்கோட்டூர் — 76. THIRU-ILAM-PAYANG-KOTTOOR

பண் : குறிஞ்சி — *Pann: Kurinji*

ராகம் : குறிஞ்சி — *Raagam: Kurinji*

மலையினார் பருப்பதந் துருத்தி மாற்பேறு
மாசிலாச்சீர் மறைக்காடு நெய்த்தானம்
நிலையினா னெனதுரைதன துரையாக
நீறணிந்தேறு கந்தேறியநிமலன்
கலையினார் மடப்பிணைதுணை யொடுந்துயிலக்
கானலம்பெடை புல்கிக்கண மயிலாலும்
இலையினார் பைம்பொழிலிலம் பையங்கோட்டு
ரிருக்கையாப்பேணி யென்னெழில்கொள்வதியல்பே. 1

மலையினார் பருப்பதம், துருத்தி, மாற்பேறு
மாசு இலாச் சீர் மறைக்காடு, நெய்த்தானம்,
நிலையினான், எனது உரை தனது உரைஆக,
நீறு அணிந்து ஏறு உகந்து ஏறிய நிமலன் -
கலையின் ஆர் மடப்பிணை துணையொடும் துயில,
கானல் அம் பெடை புல்கிக் கணமயில் ஆலும்
இலையின் ஆர் பைம்பொழில் இலம்பையங்கோட்டூர்
இருக்கையாப் பேணி, என் எழில் கொள்வது இயல்பே?

malaiyin2Ar paruppatam, turutti, mARpERu,
mAcu ilAc cIr maRaikkATu, neyt tAn2am,
nilaiyin2An2, en2atu urai tan2atu urai Aka,
nIRu aNintu ERu ukantu ERiya nimalan2--
kalaiyin2 Ar maTappiNai tuNaiyoTum tuyila,
kAn2al am peTai pulkik kaNamayil Alum
ilaiyin2 Ar paimpozil ilampaiyagkOTTUr
irukkaiyAp pENi, en2 ezil koLvatu iyalpE?

**பொருள்:** சிவபெருமான் கயிலாய மலையைத் தனது இடமாகக் கொண்டு உறையும் இறைவன் ஆவார். சீபருப்பதம், துருத்தி, மாற்பேறு, குற்றமற்ற சிறப்புடைய திருமறைக்காடு, நெய்த்தானம் ஆகிய தலங்களிலும் நிலையாக எழுந்தருளி இருப்பவர். தனது உரைகளை எனது உரையாக வெளிப்படுத்தி அருள்புரிபவர். திருநீறு அணிந்து ஆனேற்றில் மகிழ்வோடு ஏறிவரும் நிமலன் இவர். ஆண் மான்கள் தம் இளைய பெண் மான்களோடு துயில்கின்றன. சோலைகளில் கூட்டமாக வாழும் ஆண் மயில்கள் தங்கள் தங்கள் பெடைகளைத் தழுவி களிப்புறுகின்றன. அழகிய இலைகள் நிறைந்த பசுமையான பொழில்கள் சூழ்ந்த, இலம்பையங்கோட்டூரைச் சிவபெருமான் தனது இருப்பிடமாகக் கொண்டு உள்ளார். இந்தத் தகுதிகளை உடையவர், என்னைத் தன்னுடன் அழைத்துச் செல்லாமல் என் அழகை மட்டும் கவர்ந்து செல்வது இவருக்கு இயல்பாகுமா? (பிரிவினால் வருந்தும் தலைவியின் நிலையை அநுபவித்துக் கூறுகின்றார்கள் திருஞானசம்பந்தப் பிள்ளையவர்கள்).

**குறிப்புரை:** சீபருப்பதம் முதலிய தலங்களில் எழுந்தருளியிருப்பவனாகிய சிவன், என்னுடைய உரைகள் எல்லாவற்றையும் தனது வாக்காகக் கொண்ட விடையேறிய விமலன் ஆவார். இவர் இலம்பையங்கோட்டூரை இடமாகக் கொண்டு என்னலங்கொள்வதழகா? என்று பிரிவினால் வருந்தும் தலைவியின் நிலையை அநுபவித்துப் பேசுகின்றார்கள் திருஞான சம்பந்தப் பிள்ளையார். துருத்தி – திருத்துருத்தி, திருப்பூந்துருத்தி முதலிய தலங்கள். மாசிலாச்சீர் மறைக்காடு என்றது வேதத்தால் வழிபடப் பெற்றமையானும், கதவந்திறக்கவும் அடைக்கவுமாகப் பாடல் பெற்ற சிறப்புடைமையானும் இவ்வடைமொழி வந்தது. நிலையினான் – பிரியாதே பெயராதே உறைபவன். நித்யவாஸம் செய்பவன் என்பர் வடநூலார். 'எனதுரை தனதுரையாக' ஆன்ம போதங்கழன்று, சிவபோதத்தில் நிற்பார் சொல்லுவனயாவும் சிவத்துரையேயாதலின் இங்ஙனம் கூறினார். கலையின் ஆர் மடப்பிணை – கலைமானோடுகூடிய இளைய பெண்மான். துணையொடு – தன் துணையாகிய முற்கூறிய ஆண்மானோடு. கானல் – சோலை. கணமயில் – கூட்டமாகிய ஆண் மயில். ஆலும் – அகவும். இருக்கை – இருப்பிடம். என் எழில் கொள்வது இயல்பே – என்னழகைக் கவர்வது இத்தகையீர்க்கு இயல்பாமோ என்றாள். மயிலும், மானும்

துணையொடும் பேடையோடும் வதிய, நீர்மட்டும் தனித்திருந்து, காதலித்த அடியாளையும் தனித்திருக்கச் செய்து, அழகைக் கவர்வது அழகா? என்று உரைக்கின்றாள். இதனால் சிவத்தோடு இடையறாமல் இருத்தலாகிய அத்துவித பாவனையிற் பிரிந்து இருக்கின்ற ஆன்மா ஒன்றிய காலத்துண்டாகிய சிவானந்தாநுபவத்தாலுண்டான ஒளி குறைய, அதனை எண்ணி, ஆன்ம நாயகியை வந்தேற்றுக் கொண்ட தேவரீர் இங்ஙனம் இடையறவுபடச் செய்யலாமா என்று வருந்திக் கூறுவதாகிய பேரின்பப் பொருளும் தோன்றுதல் காண்க. இங்ஙனமே ஏனைய திருப்பாடல்கட்கும் கொள்க.

Lord Civan's abode is mount Kailash. However, He also abides in many other shrines such as Parup-patham (பருப்பதம்), Thuruth-thi (துருத்தி), Maar-pēru (மாற்பேறு) flawless and glorious Marai-k-kaadu (மறைக்காடு) and Neith-thaanam (நெய்த்தானம்). He blesses all my recitation as though they have been His own revelations. He has smeared His body with holy ashes. He that is pure - the Supreme Being (நிமலன்) happily rides on His mount Bull and moves about. The Lord of this nature is enshrined in Thiru-ilam-payang-kottoor which is surrounded by lush gardens full of green foliage. Here in these gardens male deer, sleep with their younger female ones; a good number of peacocks hug their peahens and roam about making their peculiar crying noise (அகவுதல்) joyously. Is it proper course of conduct for such a good natured person to snatch away my beauty and virtue? (Note the Sanmargam concept of 'Lord and His Consort').

திருமலர்க் கொன்றையான் நின்றியூர்மேயான்
தேவர்கள்தலை மகன்திருக்கழிப்பாலை
நிருமலனெ னதுரைதனது ரையாக
நீறணிந் தேறுகந்தேறிய நிமலன்
கருமலர்க் கமழ்சுனைநீள் மலர்க்குவளை
கதிர்முலையிளை யவர்மதிமுகத்துலவும்
இருமலர்த் தண்பொய்கை இலம்பையங் கோட்டு
ரிருக்கை யாப்பேணி யென்னெழில் கொள்வதியல்பே. 2

திரு மலர்க்கொன்றையான், நின்றியூர் மேயான்,
தேவர்கள் தலைமகன், திருக் கழிப்பாலை
நிருமலன், எனது உரை தனது உரைஆக,
நீறு அணிந்து ஏறு உகந்து ஏறிய நிமலன் -

கருமலர்க் கமழ் சுனை நீள் மலர்க்குவளை
கதிர் முலை இளையவர் மதிமுகத்து உலவும்
இருமலர்த் தண்பொய்கை இலம்பையங்கோட்டூர்
இருக்கையாப் பேணி, என் எழில் கொள்வது இயல்பே?

tiru malarkkon2RaiyAn2, nin2RiyUr mEyAn2,
tEvarkaL talaimakan2, tiruk kazippAlai
nirumalan2, en2atu urai tan2atu urai Aka,
nIRu aNintu ERu ukantu ERiya nimalan2--
karumalark kamaz cun2ai nIL malarkkuvaLai
katir mulai iLaiyavar matimukattu ulavum
irumalart taNpoykai ilampaiyagkOTTUr
irukkaiyAp pENi, en2 ezil koLvatu iyalpE?

**பொருள்:** சிவபெருமானார் அழகிய கொன்றைமலர் மாலையை அணிந்தவர். திருநின்றியூரில் எழுந்தருளி இருப்பவர். தேவர்களுக்குத் தலைவன் ஆவார். திருக்கழிப்பாலையில் குற்றமற்றவனாக உறைபவர். திருஞானசம்பந்தர் தன்னுடைய உரைகளை சிவனது உரைகளாகக் கூறுபவர். திருநீறு அணிந்து ஆனேற்றில் மகிழ்வோடு ஏறிவரும் நிமலன் ஆவார். பெரிய தாமரை மலர்களால், சுனைகளில் மணம் நிரம்பியிருக்கின்றது. நீண்ட குவளை மலர்கள் பூத்திருக்கின்றன. இந்த மலர்கள் இளம் பெண்களின் மதிபோன்ற முகத்தில் உலாவும் குளிர்ச்சியான இரு கண்களுக்கு நிகராக இருக்கின்றன. இத்தகைய அழகிய இலம்பையங்கோட்டூரைச் சிவபெருமான் தனது இருப்பிடமாகக் கொண்டுள்ளார். இந்தத் தகுதிகளை உடையவர்க்கு என்னைத் தன்னுடன் அழைத்துச் செல்லாமல் என் அழகை மட்டும் கவர்ந்து செல்வது இவருக்கு இயல்பாகுமா?

**குறிப்புரை:** இதுவும் அதுபோலத் தலைவி கூற்று. திருமலர் என்றது மற்றைய மலர்கட்கு இல்லாத பிரணவ வடிவம் இதற்கு இருத்தலின். கருமலர் – கருநெய்தற்பூ குவளை இளையவர் மதிமுகத்துலவும் – குவளை போன்ற கண்கள் முழுமதிபோன்ற முகத்து உலாவுகின்றன என்பதாம். கதிர்முலை – வளர்முலை. இருமலர் – பெரிய மலர் போன்ற கண்கள்.

Lord Civan wears the divine garland of cassia flowers. He abides in Thiru-nintri-oor (திருநின்றியூர்). He is the Supreme Head of Devaas. He is the God of Faultless Perfection free from any blemishes (விமலன்). He abides in Thiru-k-kali-p-paalai (திருக்கழிப்பாலை). He blesses all my recitation as though they have been His own revelations. He who is pure - the Supreme Being (நிமலன்) adorns Himself with holy ashes and happily mounts on His bull, and moves about. This Lord Civan abides in Thiru-ilam-payang-kottoor that is rich in pools full of fragrant lotus flowers. Alongside

the lotus flowers the long Indian water lily flowers also thrive (dark blue in colour - குவளை). These flowers resemble the great flower like eyes of young girls, having growing breasts, and whose eyes roll in their moon-like visages. Is it proper course of conduct for such a person to snatch away my comeliness?

பாலனாம் விருத்தனாம்பசுபதி தானாம்
பண்டுவெங் கூற்றுதைத் தடியவர்க்கருளும்
காலனா மெனதுரைதன துரையாகக்
கனலெரி யங்கை யிலேந்தியகடவுள்
நீலமா மலர்ச்சுனை வண்டுபண்செய்ய
நீர் மலர்க்குவளை கள்தாதுவிண்டோங்கும்
ஏலநா றும்பொழிலி லம்பையங்கோட்டு
ரிருக்கையாப் பேணியென் னெழில்கொள்வதியல்பே. 3

பாலன் ஆம், விருத்தன் ஆம், பசுபதிதான் ஆம்,
பண்டு வெங்கூற்று உதைத்து அடியவர்க்கு அருளும்
காலன் ஆம், எனது உரை தனது உரைஆக,
கனல் எரிஅங்கையில் ஏந்திய கடவுள் -
நீலமாமலர்ச் சுனை வண்டு பண்செய்ய
நீர் மலர்க்குவளைகள் தாது விண்டு ஓங்கும்
ஏலம் நாறும் பொழில் இலம்பையங்கோட்டூர்
இருக்கையாப் பேணி, என் எழில் கொள்வது இயல்பே?

pAlan2 Am, viruttan2 Am, pacupatitAn2 Am,
paNTu vegkURRu utaittu aTiyavarkku aruLum
kAlan2 Am, en2atu urai tan2atu urai Aka,
kan2al eri agkaiyil Entiya kaTavuL--
nIlamAmalarc cun2ai vaNTu paN ceyya,
nIr malarkkuvaLaikaL tAtu viNTu Ogkum
Elam nARum pozil ilampaiyagkOTTUr
irukkaiyAp pENi, en2 ezil koLvatu iyalpE?

**பொருள்:** சிவபெருமானார் பால வடிவோடும், விருத்த வடிவோடும் வரும் பசுபதி எனப் பெயர் பெறுபவர். முன்னொரு காலத்தில் கொடிய கூற்றுவனை உதைத்து, மார்க்கண்டேயருக்கு அருள்புரிந்த காலகாலனார். எனது உரைகளை, தனது உரைகளாக வெளிப்படுத்தி அருளுபவர். எரிகின்ற தீயைத் தனது கையில் ஏந்திய கடவுளாவார். நீலநிறம் கொண்ட சிறந்த மலர்கள் சுனையில் பூத்திருக்கின்றன. அந்த பூக்களின்மேல் சென்று வண்டுகள் பாடுகின்றன. நீரில் பூக்கும் குவளை மலர்களில் மகரந்தம் விண்ணில் பறந்துசென்று மணம் பரப்புகின்றது. பொழில்களில் ஏலக்காயின் மணம் நிறைந்துள்ளது. இத்தகைய அழகிய இலம்பையங்கோட்டூரைச் சிவபெருமானார் தனது இருப்பிடமாகக்

கொண்டுள்ளார். இந்தத் தகுதிகளை உடையவர் என்னைத் தன்னுடன் அழைத்துச் செல்லாமல் என் அழகை மட்டும் கவர்ந்து செல்வது இவருக்கு இயல்பாகுமா?

**குறிப்புரை:** பாலன், விருத்தன், பசுபதி, காலகாலன், அனலேந்தி எல்லாமவன்; அவன் என் எழில் கொள்வதியல்பே என்கின்றது வழிபடும் அடியார்கள் பரிபக்குவத்திற்கு ஏற்ப இத்தகைய வடிவங்களைத் தான் விரும்பியவாறு பெறுகின்றான் என்பதாம். வண்டுபாடக் குவளைகள் மலர்ந்து ஏல முதலியன நாறும் பொழில்சூழ் கோட்டூர் என்றது, தலைவியின் பிரிவாற்றாமையில் இருக்கும் சாதனங்கள் நிரம்பியுள்ளமை குறித்தவாறு.

Lord Civan is known as 'Pasu Pathi', i.e., Lord (god head) of all souls. Such a great person takes the form of an infant as well as the form of an old man according to the needs of the time. During the days of long time past, He kicked the regent of "the death god" known as Kaalan and graced His devotee Maarkkandēyan. Thereby He came to be known as Kaala-kaalan (*காலகாலன்*). He benedicts all my recitation as though they have been His own revelations. He is the god who holds fire in His palm. This Lord Civan is enshrined in Thiru-ilam-payang-kottoor. In the pools of this place blue flowers blossom over in which bees hum their tune. The blue Indian water lily flowers blossom and spill the pollen grains causing a pleasant fragrance all around. The air in the gardens of this place carries the fragrance of cardamom that grows in plenty there. Is it proper course of conduct for Lord Civan who is entempled in such an elegant place, to snatch away my comeliness, when I had been to His temple to worship Him?

உளங்கொள் வாருச்சியார் கச்சியேகம்பன்
　　ஒற்றியூருறையு மண்ணாமலை யண்ணல்
விளம்புவா னெனதுரைதனது ரையாக
　　வெள்ள நீர்விரிசடைத் தாங்கிய விமலன்
குளம்புறக் கலைதுளமலை களுஞ்சிலம்பக்
　　கொழுங்கொடி யெழுந்தெங்குங் கூவிளங்கொள்ள
இளம்பிறை தவழ்பொழிலிலம் பையங்கோட்டூ
　　ரிருக்கையாப்பேணி யென்னெழில்கொள் வதியல்பே. 4

உளம்கொள்வார் உச்சி ஆர் கச்சி ஏகம்பன்,
ஒற்றியூர் உறையும் அண்ணாமலை அண்ணல்,
விளம்புவான் எனது உரை தனது உரைஆக,
வெள்ளநீர் விரிசடைத் தாங்கிய விமலன் -
குளம்பு உறக் கலை துள, மலைகளும் சிலம்ப,
கொழுங்கொடி எழுந்து எங்கும் கூவிளம் கொள்ள,
இளம்பிறை தவழ் பொழில் இலம்பையங்கோட்டூர்
இருக்கையாப் பேணி, என் எழில் கொள்வது இயல்பே?

uLam koLvAr ucci Ar kacci Ekampan2,
oRRiyUr uRaiyum aNNAmalai aNNal,
viLampuvAn2 en2atu urai tan2atu urai Aka,
veLLa nIr viricaTait tAgkiya vimalan2--
kuLampu uRak kalai tuLa, malaikaLum cilampa,
kozugkoTi ezuntu egkum kUviLam koLLa,
iLampiRai tavaz pozil ilampaiyagkOTTUr
irukkaiyAp pENi, en2 ezil koLvatu iyalpE?

***பொருள்:*** கச்சியேகம்பனான சிவபெருமானைத் தனது உள்ளத்தில் தியானிப்பவர்களின் தலைஉச்சியில் சிவபொருமான் வீற்றிருப்பவர். ஒற்றியூர், திருவண்ணாமலை ஆகிய திருத்தலங்களில் விளங்கும் தலைவர் இவர். தன்னுடைய உரைகளை என்னுடைய உரைகளாக வெளிப்படுத்தி அருளுபவர். கங்கை வெள்ளத்தைத் தனது விரிந்த சடையில் தாங்கிய விமலன் இவர். இவர் இலம்பையங்கோட்டூரைத் தனது இருப்பிடமாகக் கொண்டவர். இவ்வூரில் கலைமான்களின் குளம்புகள் நிலத்தில் பதியுமாறு கால்களை அழுத்தித் துள்ளுகின்றன. மலைகள் அவ்விடங்களில் எழும்பும் ஒலிகளை எதிர் ஒலிக்கின்றன. வளமையான கொடிகள் வில்வ மரங்கள் முழுவதும் படர்ந்து பரவியிருக்கின்றன. இளம் பிறையை பிரதிபலிக்கும் குளங்கள் சூழ்ந்திருக்கின்றன. இத்தகைய அழகிய இலம்பையங்கோட்டூரைச் சிவபெருமானார் தனது இருப்பிடமாகக் கொண்டுள்ளார். இந்தத் தகுதிகளை உடையவர் என்னைத் தன்னுடன் அழைத்துச் செல்லாமல் என் அழகை மட்டும் கவர்ந்து செல்வது இவருக்கு இயல்பாகுமா?

***குறிப்புரை:*** தியானிப்பவர்களின் உச்சியில் உள்ள சகஸ்ர கமலத்தில் இருப்பவன் என்பது முதல் கங்கை தாங்கிய விமலன் என்பது வரை கூறப்பெற்ற சிறப்பியல்புடையவன் இவன் என்று கூறி, இத்தகையவன் என் எழில் கொள்ளலாமா என்கின்றாள். உளங்கொள்வார் – தியானிப்பவர். கலை குளம்பு உறத்துள – கலைமான் குளம்பு பதியத்துள்ள, சிலம்ப – ஒலிக்க. கூவிளங் கொள்ள – வில்வமரத்தின்மேல் படிய.

Lord Civan also known as 'Katchi-Ēkamban' (*கச்சி ஏகம்பன்*) comes in view with radiance above the head of His devotees who contemplate on Him in their minds with dedication. He is the merciful god who abides also in the temples in 'Otrioor' (*ஒற்றியூர்*) and in 'Thiru-annaamalai' (*திருஅண்ணாமலை*). He benedicts all my recitation as though they have been His own revelations. He is immaculate (*விமலன்*) and holds the river Ganges in His spreading matted hair. He is enshrined in Thiru-ilam-payang-kottoor, where stags well press the earth by their hoofs while jumping and running; the mountains reverberate with the sounds arising there; the luxuriant vines wind round the entire bael trees growing in the groves. The thick vegetation encircling this town, is full of tall trees which brush the sky where the young moon crawls. Lord Civan who is enshrined in such a lovely city snatched away my comeliness when I went to His temple to worship Him. Is it proper course of conduct for His status?

தேனுமா யமுதுமாய்த்தெய் வமுந்தானாய்த்
        தீயொடுநீருடன் வாயுவாந்தெரியில்
வானுமா மெனதுரைதன துரையாக
        வரியரா அரைக்கசைத் துழிதருமைந்தன்
கானமான் வெருவுறக்கரு விரலூகங்
        கடுவனோடு கஞுமூர்கற் கடுஞ்சாரல்
ஏனமா னுழிதருமிலம் பையங்கோட்டூரி
        ருக்கையாப்பேணி யென்னெழில்கொள் வதியல்பே. 5

தேனும் ஆய் அமுதம் ஆய்த் தெய்வமும் தான்ஆய்த்
        தீயொடு நீர் உடன் வாயு ஆம் தெரியில்
வானும் ஆம் எனது உரை தனது உரைஆக,
        வரிஅரா அரைக்கு அசைத்து உழிதரு மைந்தன் -
கானமான் வெருஉறக் கருவிரல்ஊகம்
        கடுவனோடு உகளும் ஊர் கல்கடுஞ்சாரல்
ஏனம் ஆன் உழி தரும் இலம்பையங்கோட்டூர்
        இருக்கையாப் பேணி, என் எழில் கொள்வது இயல்பே?

tEn2um Ay amutam Ayt teyvamum tAn2 Ayt
        tIyoTu nIr uTan2 vAyu Am teriyil
vAn2um Am, en2atu urai tan2atu urai Aka,
        vari arA araikku acaittu uzitaru maintan2--
kAn2amAn2 veru uRak karuviral Ukam
        kaTuvan2OTu ukaLum Ur kal kaTunjcAral
En2am An2 uzitarum ilampaiyagkOTTUr
        irukkaiyAp pENi, en2 ezil koLvatu iyalpE?

**பொருள்:** சிவபெருமானார் தேனைப் போலவும் அமுதைப் போலவும் இனிமையானவர். தெய்வம் தானே ஆனவர். தீ, நீர், வாயு, வான், மண் ஆகிய ஐம்பூத வடிவினர். தன்னுடைய உரைகளை என்னுடைய உரைகளாக வெளிப்படுத்தி அருளுபவர். வரிகளை உடலில் கொண்ட பாம்பைத் தனது இடையிலே கட்டிக் கொண்டு திரிபவர். காடுகளில் உள்ள மான்கள் அஞ்சும்படி, கரிய விரல்களை உடைய பெண் கருங்குரங்குகள் ஆண் குரங்குகளோடு குதிக்கின்றன. பாறைகளைக் கொண்ட கடுமையான மலைச்சாரலில் பன்றிகளும், காட்டுப் பசுக்களும் திரிகின்றன. இத்தகைய சிறப்புள்ள அழகிய இலம்பையங்கோட்டூரைச் சிவபெருமானார் தனது இருப்பிடமாகக் கொண்டுள்ளார். இந்தத் தகுதிகளை உடையவர் என்னைத் தன்னுடன் அழைத்துச் செல்லாமல் என் அழகை மட்டும் கவர்ந்து செல்வது இவருக்கு இயல்பாகுமா?

***குறிப்புரை:*** தேன் முதலிய இனிய பொருள்களாய், ஐம்பூதமாய், அராப்பூண்டு அலையும் மைந்தன் என் அழகைக் கொள்வது இயல்பாகுமா என்கிறாள். தேன், இதயத்திற்கு வலிவூட்டி உடல் வளர்க்கும் இனித்த மருந்தாவது. அமுதம், அழியாமை நல்கும் மருந்து. இவையிரண்டும் எடுத்த பிறவிக்கு மட்டுமே இன்பம் அளிப்பன. தெய்வம் எடுத்த எடுக்கப் போகின்ற பிறவிகட்கும், பிறவியற்ற பேரின்ப நிலைக்கும் இன்பம் அளிப்பது ஆதலால் தேனுமாய், அமுதமுமாய் என்றருளிய பிள்ளையார் அடுத்து தெய்வ முந்தானாய் என்கிறார்கள். தீயொடு . . . வானுமாம் என்றதால் பூமி யொழிந்த ஏனைய நாற்பூதங்களைக் குறித்தார்கள். பாரிசேடத்தால் பூமியும் கொள்க. கானமான் வெருவுற – காட்டு மான் அஞ்ச. கருவிரல் ஊகம் – கரிய விரலை உடைய பெண் குரங்கு. கடுவன் – ஆண்குரங்கு உகளும் – தாவும். ஏனம் ஆன் உழிதரும் – பன்றியும் காட்டுப்பசுவும் திரியும்.

Lord Civan is Supreme by Himself. He gives happiness to the souls similar to honey and elixir to the body. He is the five elements such as fire, water, earth, air and space. He benedicts all my recitations as though they have been His own revelation. He ties round His waist the striped snake and roams all around. He is also enshrined in Thiru-ilam-payang-kottoor encircled by thick forests. Here the dreadful black fingered female monkeys are jumping and playing with their male counterparts causing a fearful scene to the deer gracing nearby. In the hard rocky mountain slopes hogs and jungle cows roam at will. Lord Civan, who is enshrined in such a lush city snatched away my

comeliness while I had been to His place to offer worship to Him. Is it a proper course of conduct for His status to indulge in such an act?

மனமுலா மடியவர்க்கருள் புரிகின்ற
வகையலாற் பலிதிரிந் துண்பிலான் மற்றோர்
தனமிலா னெனதுரைதன துரையாகத்
தாழ்சடை யிளமதி தாங்கிய தலைவன்
புனமெலா மருவிகளிருவி சேர்முத்தம்
பொன்னொடுமணி கொழித்தீண்டி வந்தெங்கும்
இனவெலா மடைகரை இலம்பையங் கோட்டு
ரிருக்கை யாப்பேணியென் னெழில்கொள் வதியல்பே. 6

*மனம் உலாம் அடியவர்க்கு அருள்புரிகின்ற*
*வகைஅலால் பலி திரிந்து உண்பு இலான், மற்று ஓர்*
*தனம்இலான் எனது உரை தனது உரைஆக,*
*தாழ்சடை இளமதி தாங்கிய தலைவன் -*
*புனம்எலாம் அருவிகள் இருவி சேர் முத்தம்*
*பொன்னொடு மணி கொழித்து, ஈண்டி வந்து எங்கும்*
*இனம்எலாம் அடைகரை இலம்பையங்கோட்டூர்*
*இருக்கையாப் பேணி, என் எழில் கொள்வது இயல்பே?*

man2am ulAm aTiyavarkku aruL purikin2Ra
vakai alAl pali tirintu uNpu ilAn2, maRRu Or
tan2am ilAn2, en2atu urai tan2atu urai Aka,
tAzcaTai iLamati tAgkiya talaivan2--
pun2am elAm aruvikaL iruvi cEr muttam
pon2n2oTu maNi kozittu, INTi vantu, egkum
in2am elAm aTaikarai ilampaiyag kOTTUr
irukkaiyAp pENi, en2 ezil koLvatu iyalpE?

**பொருள்:** சிவபெருமானைத் தங்கள் மனங்களில் உலாவச் செய்கின்ற அடியவர்களுக்கு அருள்புரிபவர். அடியவர்களுக்கு அருள்புரியும் பொருட்டே பலியேற்றுத் திரிபவர். தான் உண்ணும் பொருட்டு பலி ஏற்காதவர். வீடு பேறாகிய செல்வமன்றி வேறு செல்வம் இல்லாதவர். தன்னுடைய உரைகளை என்னுடைய உரைகளாக வெளிப்படுத்தி அருளுபவர். தாழ்ந்து தொங்கும் சடைமீது இளம்பிறையைத் தாங்கியுள்ள தலைவர். தினைப்புனங்களில் அருவிகள் பாய்ந்து வருகின்றன. அந்த அருவிகளில் அரிந்த தினைத்தாள்களில் முத்துக்களும், பொன்னும், மணியும் ஒதுங்குகின்றன. இவைகள் வயல்களில் கரையெங்கும் சேர்கின்றன. இத்தகைய வளமையான அழகிய இலம்பையங்கோட்டூரைச் சிவபெருமானார் தனது இருப்பிடமாகக் கொண்டுள்ளார். இந்தத் தகுதிகளை உடையவர் என்னைத்

தன்னுடன் அழைத்துச் செல்லாமல் என் அழகை மட்டும் கவர்ந்து செல்வது இவருக்கு இயல்பாகுமா?

**குறிப்புரை:** மனத்தின்கண் இறைவனை உலாவச் செய்கின்ற அடியவர்க்கு அருளும் வகையன்றி, பிச்சையேற்றுத் தான் உண்ணாதவன்; வேறு செல்வமில்லாதவன்; என்னுரையைத் தன்னுரையாகக் கொண்டு, பிறைமதி தாங்கிய சடையன்; இத்தகைய் இறைவன் இந்த நகரை இருக்கையாகக் கொண்டு என் எழில் கொள்ளுவது இயல்பா என்கின்றாள். மனம் உலாம் அடியவர் – இறைவனிடம் மனத்தை உலாவச் செய்கின்ற அடியார்கள். பலி – பிச்சை. இறைவன் தான் பலி ஏற்பதும் தன் பொருட்டன்று அடியார்க்காகவே என்பதாம். இருவி – தினை கொய்த்தாள். இனம் எலாம் – இடமாகிய இடங்களில் எல்லாம்.

Lord Civan goes around begging alms not for the sake of consuming them; but for the sake of gracing His devotees who always contemplate in their minds paying obeisance mentally with sincere dedication. He has no visible assets other than His grace and the final beatitude in absorption of the souls. He benedicts all my recitations as though they have been His own revelations. He is the Lord Chief who bears in His dangling matted hair the young moon. Such a Supreme Personality is entempled in Thiru-ilam-payang-kottoor rich in millet fields. The rainwater coming from the mountain falls, flows through the fields carrying the millet foliage in which pearls, gold and other gems are embedded. These are shored up all over the ridges of the millet fields. This Lord Civan snatched away my comeliness when I went to worship Him. Is it a proper course of conduct for His status?

நீருளான் தீயுளானந்த ரத்துள்ளான்
நினைப்பவர்மனத் துளான்நித்தமா ஏத்தும்
ஊருளா னெனதுரை தனதுரையாக
ஒற்றைவெள்ளே றுகந்தேறிய வொருவன்
பாருளார் பாடலோ டாடலறாத
பண்முரன் றஞ்சிறை வண்டினம்பாடும்
ஏருளார் பைம்பொழிலி லம்பையங்கோட்டூ
ரிருக்கையாப்பேணி யென்னெழில் கொள்வதியல்பே. 7

நீர்உளான், தீஉளான், அந்தரத்து உள்ளான்,
நினைப்பவர் மனத்து உளான், நித்தமா ஏத்தும்
ஊர் உளான், எனது உரை தனது உரைஆக,
ஒற்றை வெள்ஏறு உகந்து ஏறிய ஒருவன் -
பார்உளார் பாடலோடு ஆடல் அறாத
பண் முரன்று அஞ்சிறை வண்டுஇனம் பாடும்
ஏர்உளார் பைம்பொழில் இலம்பையங்கோட்டூர்
இருக்கையாப் பேணி, என் எழில் கொள்வது இயல்பே?

nIr uLAn2, tI uLAn2, antarattu uLLAn2,
nin2aippavar man2attu uLAn2, nittamA Ettum
Ur uLAn2, en2atu urai tan2atu urai Aka,
oRRai veL ERu ukantu ERiya oruvan2--
pAr uLAr pATalOTu ATal aRAta
paN muran2Ru anjciRai vaNTu in2am pATum
Er uLAr paimpozil ilampaiyagkOTTUr
irukkaiyAp pENi, en2 ezil koLvatu iyalpE?

**பொருள்:** சிவபெருமான் நீர், தீ, ஆகாயம் ஆகியவற்றுள் இருப்பவர். தன்னை நினைப்பவர் மனத்தில் உறைபவர். நாள்தோறும் அடியவர்கள் வந்து வணங்கும் ஊர்களைத் தனது இடமாகக் கொண்டவர். தன்னுடைய உரைகளை என்னுடைய உரைகளாக வெளிப்படுத்தி அருளுபவர். தனித்த ஒரு வெள்ளேற்றில் விரும்பி ஏறி வருபவர். அத்தகையோன் மண்ணக மக்களின் பாடல்களும் ஆடல்களும் இடைவிடாது நிகழுகின்ற இலம்பையங்கோட்டூரைத் தனது இருப்பிடமாகக் கொண்டுள்ளவர். இங்கு அழகிய சிறகுகளை உடைய வண்டுகள் பண்ணிசை போல ஒலிசெய்து பாடுகின்றன. அழகிய பொழில்கள் சூழ்ந்துள்ளன. இந்தத் தகுதிகளை உடையவர் என்னைத் தன்னுடன் அழைத்துச் செல்லாமல் என் அழகை மட்டும் கவர்ந்து செல்வது இவருக்கு இயல்பாகுமா?

**குறிப்புரை:** நீர், தீ, ஆகாயம், நினைப்பவர் மனம், ஊர் இவை இறைவன் வசிக்கும் இடங்கள். இங்கெல்லாம் உள்ளவன் விடையேறி இவ்வூரை இருக்கையாக்கொண்டு என் எழில் கொள்வது இயல்பா, என்கின்றாள். அந்தரம் – ஆகாயம். நித்தமா ஏத்தும் – நித்திய வழிபாடு செய்யும் மண்ணவர் பாட்டும் ஆட்டும் இடையறாத பொழில். முரன்று வண்டினம் பாடும் பொழில் எனக் கூட்டுக.

Lord Civan is in water, fire and in the sky. He also abides in the minds of those devotees who contemplate on Him. He dwells in the shrines where His devotees gather and adore Him daily. He benedicts all my recitation as though they have been His own revelations. He rides in joy on a white and peerless bull. Such a person is entempled in

Thiru-ilam-payang-kottoor where all earthlings sing and dance continuously. In the lush fields here beautiful winged bees hum their tunes. This Lord Civan snatched away my comeliness when I went to His temple to worship Him. Is it proper course of conduct for His status?

வேருலா மாழ்கடல்வரு திரையிலங்கை
வேந்தனதடக்கை களடர்த்தவனுலகில்
ஆருலா மெனதுரைதனது ரையாக
ஆகமோரா வணிந்துழி தருமண்ணல்
வாருலா நல்லனமாக்களுஞ் சார
வாரணமுழி தருமல்லலங்கானல்
ஏருலாம் பொழிலணிஇலம்பை யங்கோட்டு
ரிருக்கை யாப்பேணியென் னெழில்கொள் வதியல்பே. 8

வேர் உலாம் ஆழ்கடல் வரு திரை இலங்கை
வேந்தன தடக்கைகள் அடர்த்தவன், உலகில்
ஆர் உலாம் எனது உரை தனது உரைஆக,
ஆகம் ஓர் அரவு அணிந்து உழி தரும் அண்ணல் -
வார் உலாம் நல்லன மாக்களும் சார,
வாரணம் உழி தரும் மல்லல் அம் கானல்,
ஏர் உலாம் பொழில் அணி இலம்பையங்கோட்டூர்
இருக்கையாப் பேணி, என் எழில் கொள்வது இயல்பே?

vEr ulAm AzkaTal varu tirai ilagkai
vEntan2a taTakkaikaL aTarttavan2, ulakil
Ar ulAm en2atu urai tan2atu urai Aka,
Akam Or aravu aNintu uzi tarum aNNal--
vAr ulAm nallan2a mAkkaLum cAra,
vAraNam uzitarum mallal am kAn2al,
Er ulAm pozil aNi ilampaiyagkOTTUr
irukkaiyAp pENi, en2 ezil koLvatu iyalpE?

***பொருள்:*** சிவபெருமான், பூமியின் அடிவரை உலாவுகின்ற ஆழ்ந்த கடலின் அலைகள் தவழ்கின்ற இலங்கை வேந்தனான இராவணனின் இருபது கைகளையும் நெரித்தவன். உலகில் நிறைந்து விளங்கும் தன்னுடைய உரைகளை என்னுடைய உரைகளாக வெளிப்படுத்தி அருளுபவன். தன்னுடைய மார்பில் பெரியதொரு பாம்பினை அணிந்து திரியும் தலைவன். இலம்பையங்கோட்டூர் காடுகளில், கழுத்தில் வார்கள் கட்டப்பட்டுள்ள நல்ல வளர்ப்பு விலங்குகளும், யானைகளும் திரிகின்றன. இத்தகைய அழகிய பொழில்கள் சூழ்ந்துள்ள இலம்பையங் கோட்டூரைச் சிவபெருமான் தனது இடமாகக் கொண்டுள்ளார்.

இந்தத் தகுதிகளை உடையவர் என்னைத் தன்னுடன் அழைத்துச் செல்லாமல் என் அழகை மட்டும் கவர்ந்து செல்வது இவருக்கு இயல்பாகுமா?

**குறிப்புரை:** இராவணனை அடர்த்தவன். இந்த உலகில் எனதுரை தனதுரையாக, மார்பில் பாம்பணிந்து திரியும் அண்ணல் இவ்வூரை இடமாகக் கொண்டு என் நலங்கவர்தல் இயல்போ என்கிறாள். வேர் உலாம் – பூமியின் அடிவரை உலாவுகின்ற. ஆருலாம் – நிறைதல் மலிந்த. ஆகம் – மார்பு. வாரணம் – யானை. மல்லல் – வளம். ஏர் உலாம்பொழில் – எழுச்சிமிக்க சோலை. நல்லன மாக்கள் – நல்ல விலங்குகள்.

Lord Civan crushed the twenty long arms of Raavanan, the king of Sri Lanka upon the sea, the waters of which reach the utmost bottom of the earth. He benedicts all my recitations as though they have been His own revelations. He is the Lord Master who goes about decked with a great snake over His chest. He is enshrined in Thiru-ilam-payang-kottoor, which is rich in lush gardens and luxurious forests, where leather collared and domesticated animals and elephants roam about. This Lord Civan snatched away my comeliness when I went to worship Him. Is it proper course of conduct for His status?

**Note:** He owns my utterances that pervade everywhere as His own:

c.f. Nammāzhwar

"Making me one with him,
the great one sang about himself, through me,
sweet verses that this earth celebrates"

Thiruvāimozhi 7-9-5.

கிளர்மழை தாங்கினான் நான்முகமுடை யோன்
கீழடிமேல்முடி தேர்ந்தளக்கில்லா
உளமழை யெனதுரைதன துரையாக
வொள்ளழலங்கை யிலேந்திய வொருவன்
வளமழை யெனக்கழை வளர்துளிசோர
மாசுணமுழிதரு மணியணிமாலை
இளமழை தவழ்பொழிலிலம்பை யங்கோட்டு
ரிருக்கை யாப்பேணியென்னெழில் கொள்வதியல்பே. 9

கிளர் மழை தாங்கினான், நான்முகம் உடையோன்,
கீழ்அடி மேல்முடி தேர்ந்து அளக்கில்லா,
உளம் அழை எனது உரை தனது உரைஆக,
ஒள்அழல் அங்கையில் ஏந்திய ஒருவன் -
வள மழை எனக் கழை வளர் துளி சோர,
மாசுணம் உழி தரு மணி அணி மாலை,
இளமழை தவழ் பொழில் இலம்பையங்கோட்டூர்
இருக்கையாப் பேணி, என் எழில் கொள்வது இயல்பே?

kiLar mazai tAgkin2An2, nAn2mukam uTaiyOn2,
kIz aTi mElmuTi tErntu aLakkillA,
uLam azai en2atu urai tan2atu urai Aka,
oL azal agkaiyil Entiya oruvan2--
vaLa mazai en2ak kazai vaLar tuLi cOra,
mAcuNam uzitaru maNi aNi mAlai,
iLamazai tavaz pozil ilampaiyagkOTTUr
irukkaiyAp pENi, en2 ezil koLvatu iyalpE?

**பொருள்:** இந்திரன் ஆயர்பாடியை அழிக்க மழையை ஏவினான். திருமால் கோவர்த்தனம் என்னும் மலையைக் குடையாகத் தூக்கி மழையைத் தடுத்தான். இந்தத் திருமாலும் நான்முகனும் தனது அடிமுடியை அளந்து அறியமுடியாதபடி அழல் உருவாக ஓங்கி நின்றவர் சிவபெருமான். மனத்தால் அழைத்தற்கு உரியவராக அமைந்த சிவபெருமான் எனது உரைகளை தனது உரைகளாக வெளிப்படுத்தியவன். அழகிய கையில் ஒளி பொருந்திய அழலை ஏந்திய ஒப்பற்ற தலைவன். வளமான மூங்கில் இலைமேல் மழையைப் போல பனிநீர் விழுகின்றது. மலைப் பாம்புகள் ஊர்ந்து வருகின்றன. அழகிய மணிகள் மாலைபோல நிறைந்து தோன்றுகின்றன. மேகக் கூட்டங்கள் தவழ்ந்து வருகின்ற பொழில்கள் சூழ்ந்துள்ளன. இத்தகைய அழகிய இலம்பையங்கோட்டூரைச் சிவபெருமான் தனது இருப்பிடமாகக் கொண்டுள்ளார். இந்தத் தகுதிகளை உடையவர் என்னைத் தன்னுடன் அழைத்துச் செல்லாமல் என் அழகை மட்டும் கவர்ந்து செல்வது இவருக்கு இயல்பாகுமா?

**குறிப்புரை:** மாலும் அயனும் அடிமுடியறியப் பெறாத அழலேந்திய ஒருவன். இவ்வூரை இருக்கையாகக் கொண்டு. இவ்வண்ணம் செய்வதா? என்கின்றாள். கிளர்மழை தாங்கினான் – இந்திரனால் ஏவப்பட்ட மழையைக் கோவர்த்தன மலையைக் குடையாகத் தூக்கித் தடுத்தவனாகிய திருமால். உளம் அழை – மனத்தால் அழைக்கின்ற. மழையைப் போல் மூங்கிலிலைமேல் துளிவிழ. மலைப்பாம்பு திரிகின்ற கோட்டூர் என்க. மாசுணம் – மலைப்பாம்பு.

The place where live the cowherd community is called 'Aayar Paadi' (ஆயர்பாடி); Indira, the king of devaas and lord of clouds, rain, seasons, crops etc., wanted to destroy the 'Aayar Paadi'. He, therefore, commanded the rain bearing clouds to move and destroy the place. Lord Krishna (One of the incarnations of Thirumaal) prevented the torrential cloud burst falling on this place by holding the mountain called 'Kōvardanam' (கோவர்தனம்) as an umbrella and protected the entire place. Such a mighty Thirumaal as well the four-headed Brahma tried hard to reach the holy feet and head of Lord Civan in vain, where Lord Civan stood straight as a tall and big column of flame. He benedicts all my recitations as though they have been His own revelations. He is the unique one who holds the blazing fire in one of His palms. He is entempled in Thiru-ilam-payang-kottoor girt with groves full of tall trees over which the clouds crawl. The dew settled on the bamboo leaves are so plenty, that it looks like a heavy rain when it drops by strong winds. In the hills of Thiru-ilam-payang-kottoor, a large number of mountain snakes are on the move. Plenty of precious gems are scattered all over the place that gives it an appearance like a garland of flowers in different colours. Lord Civan of this lovely place snatched away my comeliness, when I had been to His temple to offer worship to Him. Is it a proper course of conduct for His status?

உரிஞ்சன கூறைகள்உடம் பினராகி
உழிதரு சமணருஞ் சாக்கியப்பேய்கள்
பெருஞ்செல் வனெனதுரைதன துரையாகப்
பெய்பலிக் கென்றுழல் பெரியவர் பெருமான்
கருஞ்சுனை முல்லைநன் பொன்னடைவேங்கை
களிமுகவண் டொடுதேனினமுரலும்
இருஞ்சுனை மல்கியஇலம்பையங் கோட்டூ
ரிருக்கை யாப்பேணியென் னெழில்கொள்வதியல்பே. 10

உரிஞ்சன கூறைகள் உடம்பினர் ஆகி
உழி தரு சமணரும் சாக்கியப்பேய்கள்
பெருஞ்செல்வன், எனது உரை தனது உரைஆக,
பெய் பலிக்கு என்று உழல் பெரியவர் பெருமான் -
கருஞ்சுனை முல்லை நன்பொன் அடை வேங்கைக்
களி முக வண்டொடு தேன்இனம் முரலும்,
இருஞ்சுனை மல்கிய இலம்பையங்கோட்டூர்
இருக்கையாப் பேணி, என் எழில் கொள்வது இயல்பே?

urinjcan2a kURaikaL uTampin2ar Aki
uzitaru camaNarum cAkkiyappEykaL
perunjcelvan2, en2atu urai tan2atu urai Aka,
pey palikku en2Ru uzal periyavar perumAn2--
karunjcun2ai mullai nan2pon2 aTai vEgkaik
kaLi muka vaNToTu tEn2 in2am muralum,
irunjcun2ai malkiya ilampaiyagkOTTUr
irukkaiyAp pENi, en2 ezil koLvatu iyalpE?

**பொருள்:** சமணர்கள் ஆடைகளை உரிந்துவிட்டது போன்ற அம்மண உடம்பினராகத் திரிகின்றனர். புத்தர்கள் பேய்களைப் போன்றவர்கள். இவர்கள் அறியாத பெரும் செல்வந்தர் சிவபெருமானார். என்னுடைய உரைகளை தன்னுடைய உரைகளாக வெளிப்படுத்தி அருளுபவர். பெரியவர்க்கெல்லாம் தலைவராகிய இப்பெருமானார், ஊரார் இடும் பலியை ஏற்பதற்காகத் திரிபவர். இலம்பையங்கோட்டூர் வளாகத்தில் முல்லை மலர்கள் பெரிதான அரும்புகளை உடையதாக விளங்குகின்றன. வேங்கையின் மலர்கள் பொன்போல விளங்குகின்றது. வண்டுகள் மகிழ்ச்சி நிறைந்த முகத்தோடு காணப்படுகின்றன. தேனீக்களும், முரல் மீன்களும் பெரிய சுனைகளும் நிறைந்து இருக்கின்றன. இத்தகைய அழகிய இலம்பையங்கோட்டூரைச் சிவபெருமான் தனது இடமாகக் கொண்டுள்ளார். இந்தத் தகுதிகளை உடையவர் என்னைத் தன்னுடன் அழைத்துச் செல்லாமல் என் அழகை மட்டும் கவர்ந்து செல்வது இவருக்கு இயல்பாகுமா?

**குறிப்புரை:** புறச்சமயிகள் பெறுதற்கரிய பெருஞ்செல்வம் போன்றவன். பலிக்கென்று உழல் பெரியவர் பெருமான், இவ்வூரை இருக்கையாகப் பேணி என் எழில்கொள்வதியல்பா என்கிறாள். உரிஞ்சன கூறைகள் – உரிந்தாற்போன்ற ஆடைகள். உழிதரு – திரிகின்ற. கருஞ்சினை – பெரிய அரும்போடுகூடிய. பொன் அடை வேங்கை – பொன் போன்ற பூக்களை உடைய வேங்கை. இரும்சுனை – பெரிய நீர்ச்சுனை.

The Samanars are naked like the disrobed ones and the Saakkiyars (Buddhists) behave like devils - these two are unable to realise the greatness of Lord Civan who is a great treasure store for all souls. He benedicts all my recitations as though they have been His own revelations. He roams about like a mendicant seeking alms from the public. He is the head of all great virtuous people. Such a great personality selected Thiru-ilam-payang-kottoor as one of His abodes to reside in. Here big Arabian jasmine

buds (*முல்லை அரும்புகள்*) are a sight to see. The flowers of golden coloured Kino tree (Pterocarpus bilobus) are in plenty. With a joyous mood the honeybees are humming. Lord Civan who is entempled in such a luxurious town, snatched away my comeliness when I went there to worship Him. Is it a proper course of conduct for such a great personality?

கந்தனைமலி கனைகடலொ லியோதங்
    கானலங்கழி வளர்கழு மலமென்னும்
நந்தியாருறை பதிநான் மறைநாவன்
    நற்றமிழ்க் கின்றுணைஞான சம்பந்தன்
எந்தையார் வளநகரிலம்பை யங்கோட்டு
    ரிசையொடு கூடியபத்தும் வல்லார்போய்
வெந்துயர் கெடுகிடவிண் ணவரோடும்
    வீடுபெற்றிம்மையின் வீடெளிதாமே. 11

*கந்தனை மலி கனைகடல் ஒலி ஓதம்*
    *கானல் அம் கழி வளர் கழுமலம் என்னும்*
*நந்தியார் உறை பதி நால்மறை நாவன் -*
    *நல்தமிழ்க்கு இன்துணை, ஞானசம்பந்தன் -*
*எந்தையார் வள நகர் இலம்பையங்கோட்டூர்*
    *இசையொடு கூடிய பத்தும் வல்லார், போய்*
*வெந்துயர் கெடுகிட, விண்ணவரோடும்*
    *வீடு பெற்று, இம்மையின் வீடு எளிதுஆமே.*

kantan2ai mali kan2aikaTal oli Otam
    kAn2al am kazi vaLar kazumalam en2n2um
nantiyAr uRai pati nAlmaRai nAvan2--
    nal-tamizkku in2tuNai, njAn2acampantan2--
entaiyAr vaLa nakar ilampaiyagkOTTUr
    icaiyoTu kUTiya pattum vallAr, pOy
ventuyar keTukiTa, viNNavarOTum
    vITu peRRu, immaiyin2 vITu eLitu AmE.

**பொருள்:** கழுமலம் என்னும் பதி சிவபெருமான் உறையும் சீகாழியாகும். இங்குள்ள மலர்களால் எங்கும் மணம் நிறைந்துள்ளது. கடலில் இருந்து தோன்றுகின்ற ஒலி வேதம் ஓதுவது போன்று ஒலிக்கின்றது. கடலில் இருந்து வருகின்ற வெள்ளநீர், கடற்கரையில் உள்ள சோலைகளிலும், உப்பங்கழிகளிலும் நிரம்புகின்றது. இந்தச் சீகாழிப் பதியில் தோன்றியவர் ஞானசம்பந்தன். இவர் நான்மறை ஓதும் நாவினர். நற்றமிழுக்கு உற்ற துணையாக இருப்பவர். இவர், வளமான நகரமாகிய இலம்பையங்கோட்டூரில் உறையும்

எமது தந்தையாகிய சிவபெருமானார்மீது இப்பதிகத்தைப் பாடினார். இப்பதிகத்தின் பத்துப் பாடல்களையும் இசையோடு கூடி, பாடவல்லவர்களின் கொடிய துயரங்கள் விரைவாகக் கெட்டு அழிந்து விடும். அவர்கள் விண்ணவரோடு வீற்றிருப்பர். பின்பு, விண்ணிலிருந்து விடுபட்டு வீடுபேற்றையும், இந்தப் பிறவியிலேயே எளிதாகப் பெற்றுவிடுவார்கள்.

***குறிப்புரை:*** இலம்பையங்கோட்டூரைப் பற்றிய இப்பாடல் பத்தையும் இசையொடு ஓதவல்லவர், துன்பம் நீங்கித் தேவரொடும் உறைந்து, அதினின்றும் விடுதலை பெற்று வீட்டின்பத்தையும் எய்துவர் என்கின்றது. கந்தனை – மணம். நந்தியார் – சிவன். கெடுகிட – கெட.

Lord Civan is enshrined at the temple in Seekaazhi also known as 'Kazhu-malam' (*கழுமலம்*). Pleasant fragrance pervades the air in the town. The roaring sea-waves, fully fills up the seashore groves as well as the saltpans with sea water. From this, Seekaazhi town hails Gnaanasambandan. He is the one who chants all the four Vedas. He is an adept in chaste Tamil language. He sang in the musical mode on our father Lord Civan who is entempled Thiru-ilam-payang-kottoor. Those who can sing these ten verses harmoniously will get rid of their sins and enjoy life in the world of Devaas. Also finally they will get salvation in this birth itself, on return from the Deva Lokha.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*76ஆம் பதிகம் முற்றிற்று*
End of 76th Hymn

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# 77. திரு அச்சிறு பாக்கம்

## திருத்தல வரலாறு:

தொண்டை நாட்டுத் தலம். மயிலாடுதுறை – சென்னை பாதையில் இரயில் நிலையம். திண்டிவனம் செங்கல்பட்டுப் பேருந்து வழியில் உள்ளது. இறைவரின் தேர் அச்சு இற்ற காரணத்தால் இப்பெயர் எய்தியது. சிவபெருமான் திரிபுரதகனம் செய்யும் பொருட்டுத் தேவர்கள் அமைத்த தேரில் எழுந்தருளும்போது, தேவர்கள் விநாயகரை வணங்காமையின் அச்சு முறிந்தது என்பதும், பாண்டியன் ஒருவன் கங்கை மணலை வண்டியில் கொண்டு வரும்போது இத்தலத்திற்கு வந்ததும் வண்டி மேற்கொண்டும் செல்லாமையின் ஊக்கிச் செலுத்த அச்சு முறிந்தது என்பதும் அவன் அசரீரியினால் செய்தியறிந்து ஆலயத் திருப்பணி செய்தான் என்பதும் வரலாறு. கண்ணுவர், கௌதமர் பூசித்துப் பேறு பெற்ற தலம். இறைவன் பாக்கபுரேசுரர். இறைவி சுந்தரநாயகி. தீர்த்தம் வேததீர்த்தம். விருட்சம் கொன்றை.

## கல்வெட்டு:

இத்தலம் இராஜேந்திர சோழ வளநாட்டைச் சேர்ந்ததாகக் குலோத்துங்கன் காலத்துக் கல்வெட்டுக் கூறுகிறது. இத்தலத்து இறைவன் அக்ஷேசுவரர், கல்வெட்டுக் களில் அச்சுக் கொண்டருளிய தேவர் என வழங்கப்படுகிறார். திரிபுவனச் சக்கரவர்த்தி கோனேரின்மை கண்டான் காலத்தில் ஆட்கொண்ட நாயகன் சேதிராயனால் ஒரு சிலை தயாரிக்கப்பட்டது. இது இன்னார் சிலை என்று அறியக்கூட வில்லை. இராஜகேசரி வர்மன் முதலாம் குலோத்துங்கன் 5–ஆம் ஆட்சியாண்டில் குலோத்துங்கன் உருவச்சிலை செய்து வைக்கப் பெற்றது. ஏனைய கல்வெட்டுக்கள் கோயிலுக்கு விளக்கிற்காக ஆடுகளும், பொன்னும், திருவமுதிற்காக நிலமும் விட்ட செய்தியை அறிவிப்பன. மூன்றாம் குலோத்துங்க சோழன் 12ஆம் ஆட்சியாண்டில் பாண்டிய நாட்டைக் கைக்கொண்ட சேங்கணி அம்மையப்பன் வைரங்கள் வழங்கினான். கங்கன் என்பவனால் அர்ச்சனா போகமாக நிலம் அளிக்கப் பெற்றுள்ளது.

## பதிக வரலாறு:

திருக்கழுக்குன்றத்தை வணங்கி எழுந்தருளிய பிள்ளையார் என்பு அணியும் பரமன் இனிதே ஆட்சிசெய்யும் அச்சிறுபாக்கம் என்னும் தலத்தை அடைந்தார். அங்கு எழுந்தருளியுள்ள

ஆதிமுதல்வரை வணங்கினார். 'அச்சிறுபாக்கமது ஆட்சி கொண்டாரே' என்னும் இறுதியான் முடியும் 'பொன் திரண்டன்ன' என்னும் இப்பதிகத்தைப் பாடினார்.

## 77. THIRU-ACH-CHIRU-PAAKKAM

### HYSTORY OF THE PLACE

This sacred place is in Thondai Naadu. It has a railway station in the 'Mayilaaduthurai - Chennai' train route, and lies on the 'Thindivanam - Chengalpattu' bus route. The name of the place derives from an episode of chariot axle (achchu) breaking up (iru) here. There are two different versions of this episode. One is that when Lord Civa rode on the chariot made by the celestials (Dhevaas) for burning down the demonic Thiri-puram, the axle of the chariot broke here because the celestial had failed to worship Vinaayaka. The other is that a Paandiyan king was transporting sand from the river Ganges and that as the cart with the sand was passing through here, its axle broke, even as he tried to drive with some force through the sandy terrain. The king, after being directed by a voice from heaven, built the temple here.

The name of God is Paakkapurēsurar and that of the Goddess is Sundharanaayaki. The sacred ford is Vēdha-theerththam. The sacred tree is Konrai. Sages Kannuvar and Gouthamar offered worship here and got salvation.

The inscriptions here are from the time of Kuloth-thungkan I and other chola kings. During the 5th regal year of Kuloththungkan, an image of his was installed here. During the 12th regal year of Kuloth-thungkan III, a conqueror of Paandiya Naadu, Sengkani Ammaiyappan, gifted dimanonds. One Gangkan donated lands for temple worship services. Other inscriptions talk about the gift of sheep and gold, for lamps, and land for food offering.

### INTRODUCTION TO THE HYMN

From Thiru-k-kazhu-k-kundram our saint arrived at Thiru-ach-chiru-paakkam where he sang the following hymn:

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 77. திருஅச்சிறுபாக்கம் 77. THIRU-ACH-CHIRU-PAAKKAM

பண் : குறிஞ்சி *Pann: Kurinji*
ராகம் : குறிஞ்சி *Raagam: Kurinji*

பொன்றிரண் டன்னபுரிசடை புரளப்
பொருகடற் பவளமொடழல் நிறம்புரையக்
குன்றிரண் டன்னதோளுடைய கலங்
குலாய வெண்ணூலொடு கொழும்பொடியணிவர்
மின்றிரண் டன்னநுண்ணிடை யரிவை
மெல்லியலாளையோர் பாகமாப்பேணி
அன்றிரண் டுருவமாயவெம் மடிக
ளச்சிறு பாக்கமதாட்சி கொண்டாரே. 1

பொன் திரண்டன்ன புரிசடை புரள,
பொருகடல் பவளமொடு அழல்நிறம் புரைய,
குன்றுஇரண்டு அன்ன தோள் உடை அகலம்
குலாய வெண் நூலொடு கொழும்பொடி அணிவர்;
மின் திரண்டன்ன நுண்இடை அரிவை
மெல்லியலாளை ஓர்பாகமாப் பேணி,
அன்று இரண்டு உருவம் ஆய எம் அடிகள் -
அச்சிறு பாக்கம்அது ஆட்சி கொண்டாரே.

pon2 tiraNTan2n2a puricaTai puraLa,
porukaTal pavaLamoTu azal niRam puraiya,
kun2Ru iraNTu an2n2a tOL uTai akalam
kulAya veN nUloTu kozumpoTi aNivar;
min2 tiraNTan2n2a nuN iTai arivai
melliyalALai OrpAkamAp pENi,
an2Ru iraNTu uruvam Aya em aTikaL--
acciRupAkam atu ATci koNTArE.

**பொருள்:** சிவபெருமானார் அச்சிறுபாக்கத்தைத் தாம் ஆட்சிபுரியும் இடமாகக் கொண்டுள்ள இறைவராவார். தமது முறுக்கேறிய பொன் திரண்டாற்போன்ற சடையானது, பெருங்கடலின் அலைகளைப் போலவும், பவளக் கொடியையும், தீ வண்ணத்தையும் ஒத்திருந்தாற் போன்று புரளுகிறது. குன்றுகள் போன்ற இரண்டு தோள்களோடு கூடிய மார்பில் வெண்மையான முப்புரிநூல் விளங்குகின்றது. வளமையான திருநீற்றையும் அணிந்துள்ளார். மின்னல் போன்ற நுண்ணிய இடையினை உடைய மென்மைத் தன்மை வாய்ந்த உமையம்மையை ஒருபாகமாக விரும்பி ஏற்றிருப்பவர். ஓருருவில் ஈருருவாய்த் தோன்றும் அடிகள் ஆவார்.

**குறிப்புரை:** அச்சிறுபாக்கத்தை ஆட்சி கொண்ட சிவன், சடை, பவளக்கொடியையும் தீவண்ணத்தையும் ஒத்துப்புரள, மலை திரண்டால் ஒத்த மார்பில், பூணூலும் பொடியும் அணிந்து, உமாதேவியை ஒருபாகத்துக் கொண்டு, ஆணுருவும் பெண்ணுருவும் வேறாயுள்ள அடிகள் ஆவார் என்கின்றது. குறை இரண்டு அன்ன தோள் எனவும், அன்று இரண்டுருவம் ஆய எனவும் பிரிக்க. கொழும் பொடி – வளப்பமான விபூதி.

Lord Civan's twisted strands of golden matted hair dangle down in space. Its hue is like that of coral gems of the billowy sea and ruddy flame. Along the side of the two hill-like shoulders, the chest is adorned with the white three ply sacred thread smeared with holy ashes. He is concorporate with His young celestial consort Paarvathi Devi in half of His body. Her soft waist is as narrow and thin as lightning. This Lord Civan is displayed in this single manifestation a dual form in Thiru-ach-chiru-paakkam, governs over and graces all His devotees.

**Note:** The form of the Lord of Achchirupaakkam is the form of 'Ammai-appar'. This form is referred to in the second verse as 'as a splendid and triumphant form'. It is interesting to note that all the verses in this hymn are set to resonate in classical Akaval (*அகவல்*) metre, even though there are eight seers (*சீர்*) in each line of this *விருத்தப்பா (எண்சீர் ஆசிரியம்) - அகவல் இசையான அகவல்.*

தேனினுமினியர் பாலனநீற்றர்
தீங்கரும்பனை யர்தந்திரு வடிதொழுவார்
ஊன்நயந் துருகஉவகைகள்
தருவாருச்சிமேலுறை பவரொன்றலாதூரார்
வானகமி றந்துவையகம் வணங்கவயங்
கொளநிற்பதோர் வடிவினையுடையார்
ஆனையி னுரிவைபோர்த்த வெம்மடிக
ளச்சிறு பாக்கமதாட்சி கொண்டாரே. 2

*தேனினும் இனியர், பால் அன நீற்றர்,*
*தீங்கரும்பு அனையர், தம் திருவடி தொழுவார்*
*ஊன் நயந்து உருக உவகைகள் தருவார்,*
*உச்சிமேல்உறைபவர், ஒன்றுஅலாது ஊரார்,*
*வானகம் இறந்து வையகம் வணங்க*
*வயம் கொள நிற்பது ஓர் வடிவினை உடையார்,*
*ஆனையின்உரிவை போர்த்த எம் அடிகள் -*
*அச்சிறு பாக்கம்அது ஆட்சி கொண்டாரே.*

tEn2in2um in2iyar, pAl an2a nIRRar,
tImkarumpu an2aiyar, tam tiruvaTi tozuvAr
Un2 nayantu uruka uvakaikaL taruvAr,
uccimEl uRaipavar, on2Ru alAtu UrAr,
vAn2akam iRantu vaiyakam vaNagka
vayam koLa niRpatu Or vaTivin2ai uTaiyAr,
An2aiyin2 urivai pOrtta em aTikaL--
acciRupAkkam atu ATci koNTArE.

**பொருள்:** அச்சிறுபாக்கத்தை, தான் ஆட்சிபுரியும் இடமாகக் கொண்டுள்ள இறைவர், தேனினும் இனியவர். பால்போன்ற நீறணிந்தவர். இனிய கரும்பு போன்றவர். தம் திருவடிகளை மெய்யுருகி வணங்கும் அன்பர்கட்கு உவகைகள் தருபவர். அவர்களின் தலைமேல் விளங்குபவர். இடப வாகனமாகிய ஓர் ஊர்தியிலேயே வருபவர். வானுலகைக் கடந்து மண்ணுலகை அடைந்து, அங்கு தம்மை வழிபடும் அன்பர்கள் நினைக்கும் செயலை வெற்றி பெறச் செய்து நிற்கும் வடிவினை உடையவர். யானையின் தோலைப் போர்த்தியவர். அவர் எம் தலைவர் ஆவார்.

**குறிப்புரை:** அவர் திருமுடி தொழுவார்க்குத் தேனினும் இனியர், கரும்பனையர், உவகைகள் தருவார், விண்ணுலகினைக் கடந்தும், வையகம் வணங்க நிற்பவர் என்கின்றது. தேனினும் இனியர் – எக்காலத்தும் அள்ளூறிநின்று இனிக்கும் பொருளாக இருத்தலின் நாப்புலனோடு ஒன்றிய கணத்து இனித்துப் பின் புளிப்பதாய தேனினும் இனியராயினர். பால் அன்ன நீறு – பால் உண்டார்க்குப் பித்த நோய் தணிக்குமா போல நீறு கண்டார்க்கும், பூசினார்க்கும் மலமயக்கம் போக்கலின் இங்ஙனம் கூறினார். தீங்கருப்பனையர் – கரும்பு பருவத்திற்கும் முயற்சிக்கும் ஏற்ப நுகரும் முறையில் இனிப்பைக் கொடுக்கும்; இவரும் ஆன்மாக்களின் பரிபக்குவ நிலைக்கு ஏற்ப இனிப்பர். ஊன் நயந்து உருக உவகைகள் தருவார் – சடமாகிய மாயா காரியமாகிய உடல், உயிர் பெறும் இவ்வின்பத்தைப் பெற்றிலமே என்று விரும்பி உருக ஆன்மாவிற்கு மகிழ்ச்சியை விளைவிப்பவர். ஒன்று – இடபம். வானகம் இறந்து – போகபூமியாகிய வானகத்துப் பொருந்தலாகாமையின் அவர்களும் போகிகளாய் இருத்தலின் அவர்களும் அதனைக் கடந்து பொருத்தமாட்டாதவர்களாய் இருப்பர்.

Lord Civan who is entempled in Thiru-ach-chiru-paakkam, governs all. He is more sweet than honey in all their hearts. He smears His body with the milk white holy ashes. He is like the sweet sugarcane. He confers manifold joys on His devotees whose heart would melt while worshipping His holy feet. He is ever manifest

over their heads. He moves about on His bull vehicle. His devotees from upper worlds cross all the distance and reach the earth in order to adore and worship Him. He is of such a divine stature that He bestows grace and makes them all happy by fulfilling their wishes. He has covered His body with the skin of an elephant. He is our prime supreme Lord Chief.

காரிருளுரு வமால்வரை புரையக்
களிற் றினதுரிவைகொண் டரிவைமேலோடி
நீருருமகளை நிமிர்சடைத்தாங்கி
நீறணிந்தேறு கந்தேறியநிமலர்
பேரருளாளர் பிறவியிற் சேரார்
பிணியிலர் கேடிலர்பேய்க் கணஞ்சூழ
ஆரிருண் மாலையாடுமெம் மடிக
ளச்சிறு பாக்கமதாட்சி கொண்டாரே. 3

கார் இருள் உருவ மால்வரை புரையக்
களிற்றினது உரிவை கொண்டு அரிவைமேல் ஓடி,
நீர்உருமகளை நிமிர்சடைத் தாங்கி,
நீறு அணிந்து ஏறு உகந்து ஏறிய நிமலர்;
பேர்அருளாளர்; பிறவியில் சேரார்;
பிணிஇலர்; கேடுஇலர்; பேய்க்கணம் சூழ
ஆர்இருள் மாலை ஆடு எம் அடிகள் -
அச்சிறு பாக்கம்அது ஆட்சி கொண்டாரே.

kAr iruL uruva mAlvarai puraiyak
kaLiRRin2atu urivai koNTu arivai mEl OTi,
nIr urumakaLai nimircaTait tAgki,
nIRu aNintu ERu ukantu ERiya nimalar;
pEr aruLALar; piRaviyil cErAr;
piNi ilar; kETu ilar; pEykkaNam cUza
Ar iruL mAlai ATum em aTikaL--
acciRupAkkam atu ATci koNTArE.

பொருள்: அச்சிறுபாக்கத்தைத் தாம் ஆட்சிபுரியும் இடமாகக் கொண்டுள்ள இறைவர், உமையம்மை பெண் யானை வடிவு கொள்ளத் தாம் காரிருளும், பெரிய மலையும் போன்ற ஆண் யானை வடிவம் தாங்கி அவள் பின்னால் ஓடியவர். நீர் வடிவமான கங்கையை மேல்நோக்கிய சடைமிசைத் தாங்கியவர். நீறு பூசி, விடையேற்றில் மகிழ்ந்து ஏறிவரும் புனிதர். பேரருளாளர். பிறப்பிறப்பிற் சேராதவர். பிணி, கேடு இல்லாதவர். பேய்க்கணங்கள் சூழச் சுடுகாட்டில், இருண்ட மாலை யாமத்தில், எம் அடிகள் நடனம் புரிபவர் ஆவார்.

**குறிப்புரை:** அவர், உமை பெண் யானையின் வடிவங்கொள்ள, ஆண் யானையாய்த் தொடர்ந்து சென்றும், நீர்மகளைச் சடையில் தாங்கியும், விடையேறியும், நீறுபூசியும் விளங்கும் நிமலர். பேரருளாளர். பேய்க்கணம் புடைசூழ நள்ளிருளில் நடமாடுபவர் என்கின்றது. கார் இருள் உருவம் மால் வரை புரைய – கறுத்த இருட்பிழம்பின் உருவத்தையும், கரிய மலையையும் ஒத்த. அரிவை – பெண் யானையாகிய உமாதேவி. இது 'பிடியதன் உரு உமைகொளமிகு கரியது வடிகொடு' நடந்தமையைக் காட்டுவது. நீர் உருமகள் – கங்கையாகிய அழகிய மகள். பிறவியில் சேரார் – இங்ஙனம் நினைத்த வடிவத்தைத் தாமே மேற்கொள்ளுதலன்றி. வினைவயத்தான் வரும் பிறவியில் சேராதவர். ஆர் இருள் மாலை – நிறைந்த இருட்கூட்டம்.

Lord Civan's consort Umaa Devi once in the days of yore, took the form of a female elephant (*பிடி* - Pidi), while Civan took the form of a dense dark and 'big hill like' male elephant (*களிறு* - Kaliru) and ran behind her. He holds the flooding river Ganges in His raised matted hair. He smears His body with holy ashes and joyfully rides on His bull vehicle. He is a pure, holy, as well as a most gracious One. He does not belong to the cycle of birth and death. He is free from any malady. He is the most perfect One. He dances in the cremation ground before midnight, surrounded by His demon hosts. He is our ascetic who is entempled in Thiru-ach-chiru-paakkam and governs one and all there.

மைம்மலர்க் கோதைமார் பினரெனவு
மலைமகளவளொடுமரு வினரெனவுஞ்
செம்மலர்ப் பிறையுஞ்சிறை யணிபுனலுஞ்
சென்னிமேலுடைய ரெஞ்சென்னிமே லுறைவார்
தம்மலரடி யொன்றடியவர்பரவத்
தமிழ்சொலும் வடசொலுந் தாள்நிழற்சேர
அம்மலர்க் கொன்றையணிந் தவெம்மடிக
ளச்சிறு பாக்கமதாட்சி கொண்டாரே. 4

"மைம்மலர்க் கோதை மார்பினர்" எனவும்,
"மலை மகள் அவளொடு மருவினர்" எனவும்,
"செம்மலர்ப் பிறையும் சிறை அணி புனலும்
சென்னிமேல் உடையர், எம் சென்னி மேல் உறைவார்"
தம் மலர்அடி ஒன்று அடியவர் பரவ,
தமிழ்சொலும் வடசொலும் தாள்நிழல் சேர,
அம் மலர்க்கொன்றை அணிந்த எம் அடிகள்
அச்சிறு பாக்கம்அது ஆட்சி கொண்டாரே.

"maimmalarkkOtai mArpin2ar" en2avum,
"malaimakaL avaLoTu maruvin2ar" en2avum,
"cemmalarppiRaiyum ciRai aNi pun2alum
cen2n2imEl uTaiyar, em cen2n2imEl uRaivAr"
tam malar aTi on2Ru aTiyavar parava,
tamizccolum vaTacolum tAL nizal cEra,
am malarkkon2Rai aNinta em aTikaL--
acciRupAkkam atu ATci koNTArE.

***பொருள்:*** அச்சிறுபாக்கத்தில் ஆட்சி கொண்டுள்ள இறைவரான சிவபெருமான், குவளை மலர்களால் தொடுக்கப்பட்ட மாலையை மார்பில் சூடியவர். அழகிய கொன்றை மலர் மாலையை அணிந்தவர். மலைமகளாகிய பார்வதி தேவியை இடப்பாகமாகக் கொண்டுள்ளவர். சிவந்த மலர் போன்ற பிறையையும், தேங்கியுள்ள கங்கை நீரையும் தம் சடைமுடிமேல் உடையவர். எம் தலை உச்சியில் உறைபவர். மலர் போன்ற மென்மையான தம் திருவடிகளை, மனம் ஒன்றி, அடியவர்கள், தமிழ்ச் சொற்களாலும், வடமொழிச் சொற்களாலும் துதிக்கும் தோத்திரங்கள், அவரது திருவடிகளையே சேருகின்றன.

***குறிப்புரை:*** அவர், அடியவர்கள் மாலை மார்பர் எனவும், மலை மகளை மருவினர் எனவும் கங்கையும் பிறையும் சூடிய சென்னியர் எனவும், எம் சென்னிமேல் உறைவார் எனவும் தோத்திரிக்க. தமிழ்ச் சொல்லும் வடசொல்லும் தம் திருவடியைச்சார இருக்கும் அடிகளாவர் என்கின்றது. மை மலர் – நீல மலர். கோதை – மாலை. செம்மலர்ப் பிறை – சிவந்த மலர்போலும் பிறை. தமிழ்ச் சொல்லும் வடசொல்லும் தாள் நிழல்சேர என்றது ஒலிவடிவாய சொற்கள் யாவும் இறைவனிடமிருந்தே தோன்றியனவாதலின் அடையுமிடமும் அவனடியேயாயிற்று என்பதாம்.

Lord Civan's devotees pay obeisance to Him and adore Him by saying:
He is the One whose chest is adorned with blue water lily flower. He is the One who is concorporate with the daughter of the mountain king Paarvathi Devi on the left portion of His body. He is the One who holds the ruddy flower like crescent moon and the river Ganges in His matted hair.

He is the One who manifests Himself over my head and graces me by placing His holy feet on my head. His devotees adore His flowery holy feet with sincere devotion and with oneness of mind and by chanting the devotional songs both in Tamil and Sanskrit. The sound waves of these songs reach the holy feet of Lord Civan. He

wears the good-looking garland made out of cassia flowers. This Lord Civan, our noble One, is entempled in and rules over all from, Thiru-ach-chiru-paakkam.

விண்ணுலா மதியஞ்சூடினரெனவும்
விரிசடையுள்ளது வெள்ளநீரெனவும்
பண்ணுலா மறைகள்பாடின ரெனவும்
பலபுகழ ல்லதுபழியிலரெனவும்
எண்ணலா காதஇமையவர் நாளுமேத்த
ரவங் களோடெழில்பெறநின்ற
அண்ணலா னூர்தியேறுமெம் மடிக
ளச்சிறு பாக்கமதாட்சி கொண்டாரே. 5

"விண் உலாம் மதியம் சூடினர்" எனவும்,
"விரிசடை உள்ளது, வெள்ளநீர்" எனவும்,
"பண் உலா மறைகள் பாடினர்" எனவும்,
"பல புகழ் அல்லது பழிஇலர்" எனவும்,
எண்ணல் ஆகாத இமையவர், நாளும்
ஏத்து அரவங்களோடு எழில் பெற நின்ற
அண்ணல்; ஆன் ஊர்தி ஏறும் எம் அடிகள்
அச்சிறு பாக்கம்அது ஆட்சி கொண்டாரே.

"viN ulAm matiyam cUTin2ar" en2avum,
"viricaTai uLLatu, veLLanIr" en2avum,
"paN ulAm maRaikaL pATin2ar" en2avum,
"pala pukaz allatu pazi ilar" en2avum,
eNNal AkAta imaiyavar, nALum,
Ettu aravagkaLOTu ezil peRa nin2Ra
aNNal; An2 Urti ERum em aTikaL--
acciRupAkkam atu ATci koNTArE.

**பொருள்:** அச்சிறுபாக்கத்தில் ஆட்சி கொண்டுள்ள இறைவரான சிவபெருமான், வானிலே உலவும் திங்களைச் சூடியவர். அவரது விரிந்த சடைமுடியில் கங்கை நீரின் வெள்ளம் தங்கியுள்ளது. இசை அமைதியோடு கூடிய நான்மறைகளைத் தோற்றுவித்தவர். பலவகையான புகழையே உடையவர். பழியே இல்லாதவர். எண்ணற்ற தேவர்களால் நாள்தோறும் தோத்திரிக்கப்படுபவர். அரவு ஆபரணங்களோடு மிக்க அழகுபெற இருப்பவர். எல்லாருக்கும் தலைமையானவர். இடபத்தை வாகனமாகக் கொண்டு அதன் மீது ஏறி வருபவரும் இவரே எம் அடிகள் ஆவார்.

**குறிப்புரை:** அவர் பிறைசூடினர் எனவும், கங்கை அவர் சடைக்கண்ணதெனவும், மறைபாடினர் எனவும், பழியிலர் எனவும் தேவர்கள் நாளும் ஏத்த இருப்பவர் என்கின்றது. எண்ணலாகாத இமையவர் – தாம் நுகரும் போக உள்ளத்தில் மயங்கி இறைவனைத் தியானிக்காத தேவர்களும் கணக்கற்றவர்களாய் உளர்.

Lord Civan wears the crescent moon that strolls in the sky. The waters of the river Ganges are held in His spreading matted hair. He sings the four Vedas tunefully according to the mode. He is the most famous person. He has no aspersions cast on Him. Numberless Devaas adore Him daily. He is our Chief Lord of unmatchful beauty and rides on His bull vehicle. This Lord Civan is the monarch of Thiru-ach-chiru-paakkam and governs everyone from there.

நீடிருஞ்சடை மேலிளம்பிறை துளங்க
நிழல்திகழ் மழுவொடு நீறுமெய்பூசித்
தோடொரு காதினிற்பெய்து வெய்தாய
சுடலையிலாடுவர் தோலுடையாகக்
காடரங்கா கக்கங்குலும் பகலுங்
கழுதொடு பாரிடங்கை தொழுதேத்த
ஆடரவாட ஆடுமெம்மடிக
ளச்சிறு பாக்கமதாட்சி கொண்டாரே. 6

நீடுஇருஞ்சடைமேல் இளம்பிறை துளங்க
நிழல் திகழ் மழுவொடு, நீறு மெய் பூசி,
தோடு ஒரு காதினில் பெய்து, வெய்துஆய,
சுடலையில் ஆடுவர்; தோல் உடைஆகக்
காடு அரங்கு ஆக, கங்குலும் பகலும்,
கழுதொடு பாரிடம் கைதொழுது ஏத்த,
ஆடு அரவு ஆட, ஆடும் எம் அடிகள் -
அச்சிறு பாக்கம்அது ஆட்சி கொண்டாரே.

nITu irunjcaTaimEl iLampiRai tuLagka,
nizal tikaz mazuvoTu, nIRu mey pUci,
tOTu oru kAtin2il peytu, veytu Aya
cuTalaiyil ATuvar; tOl uTai Aka,
kATu aragku Aka, kagkulum pakalum,
kazutoTu pAriTam kaitozutu Etta,
ATuaravu ATa, ATum em aTikaL--
acciRupAkkam atu ATci koNTArE.

**பொருள்:** அச்சிறுபாக்கத்தில் ஆட்சி கொண்டுள்ள இறைவரான சிவபெருமானின் நீண்ட பெரிய சடைமேல் இளம்பிறை விளங்குகின்றது. ஒளிபொருந்திய மழுவோடும், திருநீற்றை

மேனியில் பூசியும், ஒருகாதில் தோடணிந்தும், கொடிய சுடலைக் காட்டில் ஆடுபவர் இவர். புலித்தோலை உடையாக அணிந்தவர். இரவும், பகலும் பேய்க்கணங்களும், பூதகணங்களும் தங்களது கைகளால் தொழுதேத்தப்படுபவர். படமெடுத்தாடும் பாம்புகள் தம்மேனிமேல் பொருந்தி ஆடச் சுடுகாட்டைத் தமது அரங்கமாகக் கொண்டு ஆடும் அடிகள் இவர் ஆவர்.

**குறிப்புரை:** அவர் சடைமேல் பிறைவிளங்க, நீறுபூசி ஒருகாதில் தோடணிந்து, பேயும் பூதமும் கைதொழுதேத்த, சுடலையில் ஆடுவர் என்கின்றது. நீடு இரும் சடை – நீண்ட பெரிய சடை. அரங்கு – கூத்தாடுமிடம். கங்குல் – இரவு. கழுது – பேய். பாரிடம் – பூதம்.

Lord Civan holds the young crescent moon to shine in His long and dense matted hair. He holds the shining battle-axe in one of His hands. He smears His body with holy ashes. He wears an ola-role (தோடு) in His left ear. He dances in the dreadful burning ghat. He wears the tiger skin as His waist-cloth. The theatre for His dance is the burning ghat. Ghouls and goblin hosts hail Him both day and night with folded hands. Decked with hooded and dancing snakes, He dances in the burning ghat. This Lord Civan is our noble One and rules over all people from Thiru-ach-chiru-paakkam.

ஏறுமொன்றேறி நீறுமெய்பூசி
யிளங்கிளை யரிவை யொடொ ருங்குடனாகிக்
கூறுமொன்ற ருளிக்கொன்றை யந்தாருங்
குளிரிள மதியமுங் கூவிளமலரும்
நாறுமல்லி கையுமெருக்கொடு முருக்கு
மகிழிள வன்னியுமிவை நலம்பகர
ஆறுமொர் சடைமேலணிந்த வெம்மடிக
ளச்சிறு பாக்கமதாட்சி கொண்டாரே. 7

ஏறும் ஒன்று ஏறி, நீறு மெய் பூசி,
இளங்கிளை அரிவையொடு ஒருங்கு உடன்ஆகிக்
கூறும் ஒன்று அருளி, கொன்றைஅம்தாரும்
குளிர்இளமதியமும் கூவிளமலரும்
நாறும் மல்லிகையும் எருக்கொடு முருக்கும்
மகிழ் இளவன்னியும் இவை நலம் பகர,
ஆறும் ஓர் சடைமேல் அணிந்த எம்அடிகள்
அச்சிறு பாக்கம்அது ஆட்சி கொண்டாரே.

ERum on2Ru ERi, nIRu mey pUci,
iLagkiLai arivaiyoTu orugku uTan2 Akik
kURum on2Ru aruLi, kon2Rai amtArum
kuLir iLamatiyamum kUviLamalarum
nARum mallikaiyum erukkoTu murukkum
makiz iLavan2n2iyum ivai nalam pakara,
ARum Or caTaimEl aNinta em aTikaL--
acciRupAkkam atu ATci koNTArE.

***பொருள்:*** அச்சிறுபாக்கத்தில் ஆட்சி கொண்டுள்ள இறைவரான சிவபெருமான் இடபம் ஒன்றில் ஏறி வருபவர். தம் திருமேனியில் நீறுபூசியவர். இளைய கிளி போன்ற அழகிய பார்வதி தேவியாருக்குத் தம் உடலில் ஒருகூறு அருளியவர். இருவரும் ஒருவராய் இணைந்து இருப்பவர். தம் திருமுடிமேல் கொன்றை மாலையையும் இளமதியையும் அணிந்தவர். வில்வப்பூ, மணங்கமழும் மல்லிகை, எருக்கு, முருக்கு, மகிழம்பூ, இள வன்னி இலை ஆகியன திருமுடியில் மணம் பரப்புகின்றன. கங்கையாற்றைச் சடைமேல் அணிந்துள்ள எம் அடிகளும் இவரே ஆவார்.

***குறிப்புரை:*** அவர் எருதேறி, நீறுபூசி, பசுங்கிளி ஏந்திய பாவையோடு, கொன்றை, மதியம், வில்வம், மல்லிகை முதலியவற்றைப் புனைந்தவர் என்கின்றது. இளங்கிளை அரிவை – இளைய கிளியை ஏந்திய உமாதேவி. கூவிள மலர் – வில்வப்பூ. பத்திரமே யன்றிப் பூவும் சூடப்பெறும் என்பதறிவிக்கப்பட்டது. மகிழ் – மகிழம்பூ.

Lord Civan rides on His bull vehicle. He smears His body with holy ashes. He shares a portion of His body with the young parrot like comely Paarvathi Devi. They are both bodily joined together as one entity (concorporated). In His holy matted hair He wears cassia garland, cool young crescent moon, Bael leaves and many other ideal flowers such as the sweet smelling jasmine, yadar (எருக்கு), flower of the East Indian coral tree (முருக்கு), ape flower (மகிழம்பூ) and tender sume leaves (இளவன்னி இலை). The aroma of all these flowers and leaves diffuses alround. Along with all these, He holds the Ganges river also in His matted hair. This Lord Civan rules over Thiru-ach-chiru-paakkam.

**Note:** Kuvilam: Vilvam / Bael

Mallikai: Jasmine

Erukku: Madar

Murukku: Palas-tree

Makizha: Vaxulum: Ape-flower tree (Mimysopus elegni)

கச்சுமொள் வாளுங்கட்டிய வுடையர்
கதிர்முடி சுடர்விடக்கவரி யுங்குடையும்
பிச்சமும் பிறவும்பெண்ணணங் காய
பிறைநுதலவர் தமைப்பெரிய வர்பேணப்
பச்சமும் வலியுங்கருதிய அரக்கன்
பருவரையெடுத்த திண்டோள்களை யடர்வித்
தச்சமும ருளுங்கொடுத் தவெம்மடிக
ளச்சிறு பாக்கமதாட்சி கொண்டாரே. 8

*கச்சும் ஒள்வாளும் கட்டிய உடையர்,*
*கதிர் முடி சுடர் விடக் கவரியும் குடையும்*
*பிச்சமும் பிறவும் பெண் அணங்கு ஆய*
*பிறை நுதலவர், தமைப் பெரியவர் பேண,*
*பச்சமும் வலியும் கருதிய அரக்கன்*
*பருவரை எடுத்த திண்தோள்களை அடர்வித்து,*
*அச்சமும் அருளும் கொடுத்த எம்அடிகள்*
*அச்சிறு பாக்கம்அது ஆட்சி கொண்டாரே.*

kaccum oLvALum kaTTiya uTaiyar,
katir muTi cuTarviTak kavariyum kuTaiyum
piccamum piRavum peN aNagku Aya
piRai nutalavar, tamaip periyavar pENa,
paccamum valiyum karutiya arakkan2
paruvarai eTutta tiNtOLkaLai aTarvittu,
accamum aruLum koTutta em aTikaL--
acciRupAkkam atu ATci koNTArE.

**பொருள்:** அச்சிறுபாக்கத்தில் ஆட்சி கொண்டுள்ள இறைவர் ஒளி பொருந்திய வாளைக் கச்சிலே பொருத்தி இடையில் ஆடையாகக் கட்டியுள்ளவர். ஒளி பொருந்திய முடி சுடர்விடக்கவரி, குடை, பீலிக்குஞ்சம் முதலியவற்றோடு பெண்களைக் கவரும் பிறைமதியை முடியிற் சூடி விளங்குபவர். பெருமை உடைய அடியவர் தம்மை விரும்பி வழிபடுமாறு, தம் அன்பு, வலிமை ஆகியவற்றைக் கருதித் தன்னைப் பெரியவனாக எண்ணிப் பெரிய கயிலை மலையைப் பெயர்த்தெடுத்த இராவணனின் தோள்களை அடர்த்து அவனுக்குத் தம்பால் அன்பையும் அருளையும் கொடுத்த எம் அடிகள் ஆவார்.

***குறிப்புரை:*** அவர், இராவணனுக்கு அச்சமும் அருளும் அளித்தவர் என்கின்றது. இராவணனுக்கு வந்த ஏற்றமெல்லாம் கச்சையும் வாளையுங்கட்டி, கவரி, குடை, பிச்சம் முதலியவற்றைத் தாங்கிய பெண்கள்

இவனைப் பெரியவன் என்று பேணியதே ஆகும். அதனால் இவனுக்கு ஆணவம் மிகுந்தது என்ற கருத்து விளக்கப் படுதல் காண்க. அதனாலேயே ஏமாந்து இறைவனின் கயிலையை எடுக்கத் தொடங்கினான் என்பதாம்.

The girl retinue of Raavanan dress themselves in a comely manner tucking a glittering sword in their corset. Their dazzling hair dangles in the air. They adore Raavanan by fly-flapping the bushy tail of the yak. They hold an ornamental umbrella above his head as a mark of honour. They fan him with a bunch of peacock's feather. With all this fan fare, they praise Raavanan as a very great one and a matchless mighty man. Such adulation made Raavanan think about himself as an all powerful and irresistible man in the world. With this egoistic mind he tried to uproot mount Kailash, the abode of Lord Civan, in vain. He got crushed under the mountain. Then he repented and begged for pardon. Lord Civan forgave him and granted him boons. This Lord Civan governs everybody in Thiru-ach-chiru-paakkam.

நோற்றலாரேனும் வேட்டலாரேனும்
நுகர்புகர்சாந்தமொ டேந்தியமாலைக்
கூற்றலாரேனுமின் னவாறென்று
மெய்தலாகாத்தொரி யல்பினையுடையார்
தோற்றலார் மாலுநான்முக முடைய
தோன்றலு மடியொடு முடியுறத்தங்கள்
ஆற்றலாற் காணாராய வெம்மடிக
ளச்சிறு பாக்கமதாட்சி கொண்டாரே. 9

நோற்றலாரேனும், வேட்டலாரேனும்,
நுகர் புகர் சாந்தமொடு ஏந்திய மாலைக்
கூற்றலாரேனும், இன்ன ஆறு என்றும்
எய்தல் ஆகாதது ஓர் இயல்பினை உடையார்;
தோற்றலார் மாலும் நான்முகம் உடைய
தோன்றலும், அடியொடு முடி உற, தங்கள்
ஆற்றலால் காணார் ஆய எம் அடிகள் -
அச்சிறு பாக்கம்அது ஆட்சி கொண்டாரே.

nORRalArEn2um, vETTalArEn2um,
nukar pukar cAntamOTu Entiya mAlaik
kURRalArEn2um, in2n2a ARu en2Rum
eytal AkAtatu Or iyalpin2ai uTaiyAr;

tORRalAr mAlum nAn2mukam uTaiya
tOn2Ralum, aTiyoTu muTi uRa, tagkaL
ARRalAl kANAr Aya em aTikaL--
acciRupAkkam atu ATci koNTArE.

***பொருள்:*** தவம் செய்யாதவர்களாலும் அன்பு செய்யாதவர்களாலும், நுகரத்தக்க நெய்வேத்தியம், சந்தனம் கையில் ஏந்திய மாலை இவற்றின் கூறுகளோடு வழிபாடு செய்யாதவர்களாலும், அடைய முடியாதவராய் அச்சிறுபாக்கத்தில் ஆட்சி கொண்டுள்ள இறைவரான சிவபெருமான் வீற்றிருக்கின்றார். இத்தகையவர் என்று அறியமுடியாத தன்மையும், அடையமுடியாத அருமையும் உடைய இயல்பினர் என்பதறிந்தும் திருமாலும் நான்முகனும் பன்றியும் அன்னமுமாய் மாறி அடியையும் முடியையும் காண முயற்சித்துத் தோற்றனர். அவர்களால் காண இயலாதவராக உயர்ந்து நின்ற எம் அடிகள் இவர் ஆவார். எனவே, தவம் செய்பவர்களுக்கும், அன்பு செய்பவர்களுக்கும் வழிபடுவோர்களுக்கும் எளியவராய் இருப்பவர் சிவபெருமான்.

***குறிப்புரை:*** அவர் தவஞ்செய்யாராயினும் சாந்தும் மாலையுங் கொண்டு தொழாராயினும், என்றைக்கும் இப்படி அடையலாமென்று முயன்றும் அடைய முடியாத தன்மையை உடையவர் இவர் என்கின்றது. நோற்றலார் – தவஞ்செய்யாதவர். வேட்டலார் – யாகஞ் செய்யாதவர்கள். புகர் – உணவு. ஈண்டு – நைவேத்தியம். தோற்றலார் மால் – பிறத்தலை உடைய திருமால்.

Lord Civan is not accessible to (a) those who had not performed any penance. (b) those who had not done the rituals in the sacrificial fire. (c) those who had not worshipped Him in the proper manner by carrying garlands, sandal paste and other offerings such as food etc.

He is of that category that no one knows by what means He could be reached. Thirumaal who belongs to the birth and death cycle, as well as the four-faced Brahman were unable to reach Him by their efforts. Lord Civan of such a nature is enshrined here and governs all from Thiru-ach-chiru-paakkam.

வாதுசெய் சமணுஞ்சாக்கியப் பேய்கள்
நல்வினை நீக்கியவல் வினையாளர்
ஓதியுங்கே ட்டுமுணர்வினை யிலாதா
ருள்கலாகாத தோரியல் பினையுடையார்
வேதமும் வேதநெறிகளு மாகி
விமலவேடத்தொடு கமலமா மதிபோல்
ஆதியுமீறு மாயவெம்மடிக
ளச்சிறுபாக்கமதாட்சி கொண்டாரே. 10

வாதுசெய் சமணும், சாக்கியப்பேய்கள், -
நல்வினை நீக்கிய வல்வினையாளர்,
ஓதியும் கேட்டும் உணர்வினை இலாதார்-
உள்கல் ஆகாதது ஓர் இயல்பினை உடையார்;
வேதமும் வேதநெறிகளும் ஆகி,
விமலவேடத்தொடு கமல மா மதி போல்
ஆதியும் ஈறும் ஆய எம் அடிகள் -
அச்சிறுபாக்கம்அது ஆட்சி கொண்டாரே.

vAtu cey camaNum, cAkkiyappEykaL--
nalvin2ai nIkkiya valvin2aiyALar,
Otiyum kETTum uNarvin2ai ilAtAr--
uLkal AkAtatu Or iyalpin2ai uTaiyAr;
vEtamum vEta neRikaLum Aki,
vimala vETattoTu kamala mA mati pOl
Atiyum IRum Aya em aTikaL--
acciRupAkkam atu ATci koNTArE.

**பொருள்:** அச்சிறுபாக்கத்தில் எம் அடிகளான சிவபெருமான் ஆட்சி கொண்டுள்ளார். சமணர்களும், சாக்கியப் பேய்களும், நல்வினை செய்யாது வல்வினைகள் புரிபவர்கள். ஓதியும், கேட்டும், திருந்தாத உணர்வு உடையவர்கள். வீணாகத் தர்க்க வாதம் புரிபவர்கள். அவர்கள் நினைத்தும் அறிய முடியாத இயல்பினை உடையவர் சிவபெருமான். வேதமும், வேதநெறிகளும் ஆகியவர் தம்மை வழிபடுவார் மலங்களை நீக்கும் வேடம் உடையவர். தாமரை மலரும், திங்களும் போன்ற அழகும், தன்மையும் உடையவர். பிரபஞ்சத்தின் ஆதியும், அந்தமுமாய் இருப்பவர்.

**குறிப்புரை:** அவர் புறச்சமயிகளுடைய நல்வினையைப் போக்கியவர், படித்துங் கேட்டும் உணர்ச்சியற்றவர்களால் தியானிக்கப்படாதவர். வேதமும் அவைகூறும் நெறிகளுமாகி, பரிசுத்த வேடத்தோடு, ஆதியும் ஈறுமாய அடிகள் இவர் என்கின்றது. வாதுசெய் சமண் – விதண்டாவாதமே செய்து பொழுதுபோக்கும் சமணர். அவர்களுக்குத் துணை இருப்பது உலக போகத்திற்குரிய நல்வினை யாதலின்

உண்மை உணராது வாதமே செய்து காலம் கழிக்கின்றனர் என்பதாம். ஆதலால் அவர்களுடைய நல்வினையை நீக்க வேண்டியது இவர் அருளித் திறமாயிற்று.

The Samanars are in the habit of arguing for anything and everything. The ghoul like Buddhists perform evil deeds and do no good to any. They are devoid of understanding despite their direct learning and learning through listening. Lord Civan Himself is manifest as the Vedas and their rules and systems. He is the immaculate holy god. He is a very handsome person like the lotus flower and the cool moon. He is the beginning and end of this world. This great Lord Civan is the sovereign of Thiru-ach-chiru-paakkam.

மைச்செறிகு வளைதவளை வாய்நிறைய
மதுமலர்ப்பொய் கையிற்புது மலர்கிழியப்
பச்சிறவெறி வயல்வெறி கமழ்காழிப்
பதியவரதி பதிகவுணியர் பெருமான்
கைச்சிறுமறியவன் கழலலாற்பேணாக்
கருத்துடைஞான சம்பந்தன் தமிழ்கொண்
டச்சிறுபாக்கத் தடிகளையேத்து
மன்புடையடியவரருவினையிலாரே. 11

மைச்செறி குவளை தவளை வாய் நிறைய
மதுமலர்ப் பொய்கையில் புதுமலர் கிழியப்
பச்சிறவு எறி வயல் வெறி கமழ் காழிப்-
பதியவர் அதிபதி - கவுணியர்பெருமான்,
கைச் சிறுமறியவன் கழல் அலால் பேணாக்
கருத்து உடை ஞானசம்பந்தன் - தமிழ் கொண்டு
அச்சிறுபாக்கத்து அடிகளை ஏத்தும்
அன்புடை அடியவர் அருவினை இலாரே.

maic ceRi kuvaLai tavaLai vAy niRaiya
matumalarp poykaiyil putumalar kiziyap
pacciRavu eRi vayal veRi kamaz kAzip–
patiyavar atipati--kavuNiyar perumAn2,
kaic ciRumaRiyavan2 kazal alAl pENAk
karuttu uTai njAn2acampantan2--tamiz koNTu,
acciRupAkkattu aTikaLai Ettum
an2pu uTai aTiyavar aruvin2ai ilarE.

***பொருள்:*** கருநிறம் பொருந்திய குவளை மலர்களால் பொய்கைகள் நிரம்பியுள்ளன. அந்த மலர்கள் தவளைகளின் வாய்நிறையுமாறு தேனைப் பொழிகின்றன. பசிய இரால் மீன்கள் துள்ளி விழுவதால் பொய்கைகளில் உள்ள புதுமலர்களின் இதழ்கள் கிழிகின்றன. இந்தப் பொய்கைகளை அடுத்து வயல்கள் உள்ள மணம் கமழும் பதி சீகாழியாகும். இந்தச் சீகாழிப் பதியினர்க்கு அதிபதியாக இருப்பவர், கவுணியக் குலத்தலைவரான ஞானசம்பந்தன். இவர், கையின்கண் சிறிய மானை ஏந்திய சிவபெருமானின் திருவடிகளையன்றிப், பிறவற்றைக் கருதாத கருத்தினை உடையவர். இவர் பாடிய இப்பதிகத்தைக் கொண்டு, அச்சிறுபாக்கத்துப் பெருமானைப் போற்றும், அன்புடைய அடியவர்களின் வினைகள் நீங்கி இல்லாமற் போகும்.

***குறிப்புரை:*** இது, இறைவன் திருவடியன்றி வேறொன்றையும் பேணாத ஞானசம்பந்தர் தமிழைக் கொண்டது. இத்தலத்து இறைவனை ஏத்தும் அடியார்கள் வினையிலர் என்கின்றது. குவளைப் பூக்கள் தவளையினுடைய வாய்நிரம்ப மதுவைப் பொழிகின்ற பொய்கை என்க. பச்சு இறவு புதுமலர் கிழிய எறி வயல் – பசிய இறால்மீன் புதுமலர் கிழியத் துள்ளும் வயல். மறி – மான்.

Gnaanasambandan, the lord of the Kauniyas sect and the chief of Seekaazhi town never thinks of hailing any other god except Lord Civan who holds a small deer in one of His hands. Seekaazhi is rich in melliferous pools where dark blue Indian lily flowers grow in abundance. These flowers drain their honey into the mouth of frogs that gather near the flowers. Over the newly blossomed flowers the shrimp and prawn fishes leap and play and tear the petals. Adjoining these ponds lush fields are in plenty. The loving and devoted servitors who hail the great Lord Civan of Thiru-ach-chiru-paakkam with the verses sung by Gnaanasambandan in this hymn, will stand freed of the effect of their bad actions of the past.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*77ஆம் பதிகம் முற்றிற்று*
End of 77th Hymn

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# 78. திரு இடைச் சுரம்

## திருத்தல வரலாறு:

தொண்டை நாட்டுத் தலம். மக்கள் வழக்கில் திருவடிச்சூலம் என வழங்கப்படுகிறது. செங்கற்பட்டில் இருந்து திருப்போரூர் செல்லும் பேருந்தில் திருவடிச்சூலம் செல்லலாம். பேருந்து நிறுத்தத்தில் இருந்து 1 கி.மீ. தூரத்தில் ஆலயம் உள்ளது.

இத்தலம் மலைகளின் இடையில் கற்சுரத்தில் அமைந்தமையின் இப்பெயர் எய்தியது. சனற்குமார முனிவர் பூசித்துப் பேறு பெற்ற தலம். மூல லிங்கம் தீப ஒளி பிரதிபலிக்கக் கூடிய மரகத லிங்கம். சம்பந்த சுவாமிகள் தூரத்தே எழுந்தருளும்போது திருமேனிச் செம்மை கண்டு 'இடைச்சுர மேவிய இவர் வணம் என்னே' என்று வியந்துள்ளார். இறைவன் இடைச்சுர நாதர், ஞானபுரீசுரர். இறைவி இமய மடக்கொடியம்மை.

## கல்வெட்டு:

சோழ அரசன் குலோத்துங்க சோழ தேவன் ஆட்சியில் ஜயங்கொண்ட சோழ மண்டலத்தில் உள்ள களத்தூர்க் கோட்டத்தின் பகுதியான வளநாட்டில் உள்ள திருவிடைச்சுரம் என்று குறிக்கப்பட்டுள்ளது. இறைவன் பெயர் திருவிடைச்சுரமுடைய நாயனார்; திருவிடைச்சுரம் உடையார் என்றும் வழங்கப்பெறும். இங்கு ஜனனபுரீசுவரர் கோயில் ஒன்று உள்ளது. மேலும் கோவர்த்தன அம்பாள் திருக்காமக் கோட்டமுடைய பெரிய நாச்சியார் உருவம் நிறுவ, பெருந்தண்டிலத்தில் உள்ள கருப்பக்கிருகம் கட்டப் பட்டதையும் கூறுகிறது. இந்த இறைவி கருப்பக்கிருகத்திற்கு விளக்குப் போட, ஆவன செய்யப்பட்டு உள்ளது. மகாமண்டலேசுவர குமார ஜலகராஜ திருமலைய தேவ மகாராயரால் விளக்குக்காகவும், படையலுக்காகவும் நிலம் கொடுக்கப்பட்டது. பிள்ளையார் நீலங்க நாயனாரைப் பற்றி விவரிக்கின்றது.

ஏனையவை விளக்கிற்காகவும், பிறவற்றிற்காகவும் பொன், நிலம், ஆடுகள், பசுக்கள் அளிக்கப்பட்டமையை அறிவிக்கின்றன.

## பதிக வரலாறு:

திருவான்மியூரில் சிலநாள் தங்கியிருந்த புகலிப் பிள்ளையார் பல பதிகளை வணங்கத் திருவுளத் தெண்ணி விடையூரும் வித்தகரின் இடைச்சுரத்தைச் சேர்வுற்றார். அங்கே அடியார்கள்

எதிர்கொண்டழைத்துச் சென்றார்கள். கோபுரத்தை வணங்கினார். உட்புகுந்தார். நற்கோயிலை வலங்கொண்டார். இறைவன் திருமுன்பு அடைந்தார். கண்டார். கண்டபொழுதே அன்புமீதூரக் கை தலைமேற்குவிய, நிலத்திடை நீள்மரம்போல் விழுந்து நமஸ்கரித்து எழுந்து அளவற்ற மகிழ்ச்சியுடன் பெருமான் திருமேனி வண்ணங் கண்டு அதிசயித்தார். 'இடைச்சுரம் மேவிய இவர் வணம் என்னே' என்று அருந்தமிழ்த் திருப்பதிகமாகிய 'வரிவளரவிரொளி' என்னும் இதனை அருளிச் செய்தார்கள்.

## 78. THIRU-IDAI-CH-CHURAM

### HISTORY OF THE PLACE

This sacred place is in Thondai Naadu and is known as Thiruvadisoolam in common parlance. The village lies in the bus route from Chengalpattu to Thiru-poroor. The temple is at a distance of 1 km from the bus stop. The place is called churam as the area around is in a desert tract and rocky.

The Lord is known as Idai-ch-churanaathar or Jnaanapureesurar and the Goddess is Imaya Mada-k-kodiyammai. The lingam in the inner sanctury is made of emerald that amplifies lamplight by reflection. This is the reason for Saint Thiru-gnaanasambandar to exclaim "iDaichchurameviya ivar vaNam ennE!" (how amazing is the splendour of the Lord of Idaichchuram) when he had the vision of the dazzling lingam from a distance.

The inscriptions here include those from the reign of Kuloththungka Cholan. There is a note of a Jananapureesuvarar temple here. One inscription speaks of the building of the sancturu at Perunthandilam for Goddess Periya Naach-chiyaar. Necessary grants were made for lamps at this shrine. Another inscription describes the Pillaiyaar Neelangkanaayanaar. The rest describe gift of gold, land, sheep, and cows for lamps and other temple expenses.

### INTRODUCTION TO THE HYMN

It is from Thiru-vaanmiyoor our saint arrived at Thiru-idai-ch-churam, well received by servitors, where he sang the following hymn in ecstasy.

திருச்சிற்றம்பலம்

THIRU-CH-CHITRAMBALAM

## 78. திரு இடைச் சுரம் — 78. THIRU-IDAI-CH-CHURAM

பண் : குறிஞ்சி — *Pann: Kurinji*

ராகம் : குறிஞ்சி — *Raagam: Kurinji*

வரிவளரவி ரொளியர வரைதாழ
 வார்சடை முடிமிசைவளர் மதிசூடிக்
கரிவளர்தரு கழல்கால்வல னேந்திக்
 கனலெரி யாடுவர் காடரங்காக
விரிவளர்தரு பொழிலிள மயிலால
 வெண்ணிறத் தருவிகள்திண் ணெனவீழும்
எரிவளரின மணிபுனமணி சாரலிடைச்
 சுரமேவிய இவர்வணமென்னே. 1

வரி வளர் அவிர்ஒளி அரவு அரை தாழ,
 வார்சடைமுடிமிசை வளர்மதி சூடி,
கரி வளர்தரு கழல்கால் வலன் ஏந்தி,
 கனல்எரி ஆடுவர், காடு அரங்கு ஆக;
விரி வளர்தரு பொழில் இளமயில் ஆல,
 வெண்நிறத்து அருவிகள் திண்ணென வீழும்,
எரி வளர் இனமணி புனம் அணி சாரல்
 இடைச்சுரம் மேவிய இவர் வணம் என்னே?

vari vaLar avir oLi aravu arai tAza,
 vAr caTai muTimicai vaLarmati cUTi,
kari vaLartaru kazalkAl valan2 Enti,
 kan2al eri ATuvar, kATu aragku Aka;
viri vaLartaru pozil in2amayil Ala,
 veN niRattu aruvikaL tiNNen2a vIzum,
eri vaLar in2amaNi pun2am aNi cAral
 iTaiccuram mEviya ivar vaNam en2n2E?

**பொருள்:** மரங்கள் வளர்ந்த விரிந்த பரப்புடைய பொழில்களில் இளமயில்கள் ஆடுகின்றன. வெண்மையான நிறத்துடன், அருவிகள் திண்ணென்ற ஒலியுடன் விழுகின்றன. எரி போன்று ஒளிருகின்ற, ஓரினமான மணிகள் காடுகளில் அழகுற விளங்குவமாய். மலைச்சாரலை உடைய தலம் திருஇடைச்சுரமாகும். சிவபெருமான் வரிகளையும் ஒளியையும் உடைய பாம்பை இடையிலே கட்டியிருக்கின்றார். நீண்ட சடைமுடிமீது வளரும் பிறைமதியைச் சூடியுள்ளார். அத்தியானியின் உருவம் பொறித்த வீரக்கழலைக் காலின்கண் வெற்றி பெறச்

சூடியுள்ளார். கனலை ஏந்தி சுடுகாட்டைத் தனது அரங்காகக் கொண்டு ஆடுகின்றார். இத்தகைய இறைவரது இயல்புதான் என்னே?

**குறிப்புரை:** இப்பதிகம் இறைவனுடைய வீரம் முதலிய பல இயல்புகளை எடுத்துக்கூறி, இடைச்சுரம் மேவிய இவர் வண்ணம் என்னே என்று வினாவுவதாக அமைந்துள்ளது. வரிவளர் அவிர் ஒளி அரவு – வரிகளோடுகூடி விளங்குகின்ற ஒளியினை உடைய பாம்பு. அரைதாழ – திருவரையில் தங்க. கரிவளர் தருகழல் – அத்தியாளியின் உருவம் எழுதப்பெற்ற வீரக்கழல் இவர் இயல்புகளை எத்துணை அறியினும், அறிந்தவற்றிற்கும் அப்பால் பல இயல்புகள் இருத்தலின் இவர்வண்ணம் என்னே எனச் செயலறவு அருளினாராயிற்று.

Lord Civan tightens His waist dress by a striped and bright serpent that hangs down from the waist. He wears the waxing moon on His long matted hair. He wears on His right knee an anklet of heroism inscribed with the sign of 'Aththi Yaazhi' (*அத்தியாழி* – a mythological animal having a lion's body with a trunk like that of an elephant). Using the cremation ground as the stage He dances there (eternally). What natural quality of Lord Civan who abides in Thiru-idai-ch-churam adorning and behaving as above? In the city of Thiru-idai-ch-churam extensive gardens full of stately trees abound. In these gardens peacocks dance and enjoy themselves. Water falls descend creating a dazzling white colour and making a heavy rumbling noise (*திண்ணென்ற ஒலி*). In the jungles bright gems are scattered all around giving an attractive sight to see.

**Note:** Yaali: A mythological beast, which is lion-like and is endowed with a trunk, like that of an elephant.

ஆற்றையுமேற்ற தோரவிர் சடையுடையா
　　ழகினை யருளுவர் குழகலதறியார்
கூற்றுயிர்செகுப் பதோர்கொடுமை யையுடையர்
　　நடு விருளாடுவர் கொன்றையந் தாரார்
சேற்றயல்மிளிர் வனகயலிளவாளை
　　செருச்செயவோர்ப்பன செம்முகமந்தி
ஏற்றையொடுழி தருமெழில்திகழ்சார
　　லிடைச் சுரமேவியஇவர் வணமென்னே. 2

ஆற்றையும் ஏற்றது ஓர் அவிர்சடை உடையார்;
அழகினை அருளுவர்; குழகுஅலதுஅறியார்;
கூற்று உயிர் செகுப்பது ஓர் கொடுமையை உடையர்;
நடுஇருள் ஆடுவர்; கொன்றைஅம்தாரார்;
சேற்று அயல் மிளிர்வன கயல் இளவாளை
செருச் செய ஓர்ப்பன செம்முக மந்தி
ஏற்றையொடு உழிதரும் எழில் திகழ் சாரல்
இடைச்சுரம் மேவிய இவர் வணம் என்னே?

ARRaiyum ERRatu Or avircaTai uTaiyar;
azakin2ai aruLuvar; kuzaku alatu aRiyAr;
kURRu uyir cekuppatu Or koTumaiyai uTaiyar;
naTu iruL ATuvar; kon2Rai amtArAr;
cERRu ayal miLirvan2a kayal iLavALai
ceruc ceya, Orppan2a cemmuka manti
ERRaiyoTu uzitarum ezil tikaz cAral
iTaiccuram mEviya ivar vaNam en2n2E?

**பொருள்:** வயல்களில் உள்ள சேற்றில் வாழும் கயல்மீன்களும் இளவாளை மீன்களும் ஒன்றோடு ஒன்று சண்டையிடுகின்றன. இதைக் கூர்ந்து நோக்கும் பெண் குரங்கோடு, ஆண் குரங்கு கூடித் திரிகின்றன. இத்தகைய அழகிய மலைச் சாரலை உடைய தலம் திரு இடைச்சுரம் ஆகும். இத்தலத்தில், சிவபெருமான் கங்கை நதியைத் தனது விரிந்த சடையில் ஏற்றருளியிருக்கின்றார். அழகும், இளமையும் மாறாதவராய் இருக்கின்றார். இவர் கூற்றுவன் உயிரை மாய்க்கும் கொடுமையை உடையார். நடு இரவில் திருநடனம் புரிபவராக இருக்கின்றார். கொன்றை மலர் மாலையைச் சூடியுள்ளார். இத்தகைய இறைவரது இயல்புதான் என்னே?

**குறிப்புரை:** ஆறு – கங்கை. குழகு – இளமை. கயல்மீனும் இளவாளைமீனும் போர்செய்ய. அதனைப் பெண் குரங்குகள் கூர்ந்து நோக்குகின்றன. செம்முக மந்தி – பெண் குரங்கு. ஏற்றை – ஆண் குரங்கு.

Lord Civan received the roaring descent of the Ganges river in His spreading matted hair. He is the most handsome one and is ever young. He is a most powerful one who in the days of yore, kicked Yama to death. He dances during midnight. He wears the garland made of cassia flowers. He is entempled in Thiru-idai-ch-churam. In the beauteous mountain slopes of this place red faced female monkeys watch intensely the fight between bright carp fish and the swordfish (*கயல்மீன் / வாளைமீன்*). Thereafter,

the female monkeys join hands with the male ones and roam about. Is it not a perplexing one to understand the real nature of Lord Civan?

**Note:** Kayal and Vaalai are fish varieties.

கானமுஞ்சுடலை யுங்கற்படுநிலனுங்
காதலர்தீதிலர் கனல்மழுவாளர்
வானமுநிலமையு மிருமையுமானார்
வணங்கவுமிணங் கவும்வாழ்த்தவும் படுவார்
நானமும்புகையொ ளிவிரையொடுகமழ
நளிர்பொழி லிளமஞ்ஞைமன் னியபாங்கர்
ஏனமும்பிணை யலுமெழில்திகழ்சார
லிடைச்சுர மேவியஇவர் வணமென்னே. 3

கானமும், சுடலையும், கல்படு நிலனும்,
காதலர்; தீதுஇலர்; கனல் மழுவாளர்;
வானமும் நிலமையும் இருமையும் ஆனார்;
வணங்கவும் இணங்கவும் வாழ்த்தவும் படுவார்;
நானமும் புகைஒளி விரையொடு கமழ,
நளிர் பொழில் இளமஞ்ஞை மன்னிய பாங்கர்,
ஏனமும் பிணையலும் எழில் திகழ் சாரல்
இடைச்சுரம் மேவிய இவர் வணம் என்னே?

kAn2amum, cuTalaiyum, kal paTu nilan2um,
kAtalar; tItu ilar; kan2al mazuvALar;
vAn2amum nilamaiyum irumaiyum An2Ar;
vaNagkavum iNagkavum vAzttavum paTuvAr;
nAn2amum pukai oLi viraiyoTu kamaza,
naLirpozil iLa manjnjai man2n2iya pAgkar,
En2amum piNaiyalum ezil tikaz cAral
iTaiccuram mEviya ivar vaNam en2n2E?

**பொருள்:** மணமுள்ள கஸ்தூரி, சந்தனம், அகில் முதலியவை எரிவதால் அவற்றின் புகையும் ஒளியும் மிளிர்கின்றன. மணம் கமழும் பொழில்களிடையே இளமயில்கள் நிறைந்து வாழ்கின்றன. இவற்றின் அருகில் பன்றிகளும் பெண் மான்களும் வாழ்கின்றன. இத்தகைய அழகிய மலைச்சாரலை அடுத்துள்ள தலம் திருஇடைச்சுரம் ஆகும். இத்தலத்தில் சிவபெருமான், காட்டையும், சுடலையையும், கற்கள் நிரம்பிய மலையிடங்களையும் விரும்பியவராக வீற்றிருக்கின்றார். இவர் தீமை இல்லாதவர். அழல் போன்ற வெம்மையான மழுவாயுதத்தை ஏந்தியிருப்பவர். இம்மை, மறுமை ஆகிய இருமை இன்பங்களையும் தருபவர். வணங்கப்படுபவர். இணங்கப்படுபவர். வாழ்த்தப்படுபவர். இத்தகைய இறைவரின் இயல்புதான் என்னே?

**குறிப்புரை:** கானம் – காடும். கற்படுநிலன் – மலை காதலர் – இவற்றை இடமாகக் கொள்ளும் விருப்பினர். வானம் – மறுமை. நிலமை – இம்மை. இருமையும் – இவ்விரண்டின் தன்மையும். நானம் – கஸ்தூரி. ஏனம் – பன்றி. பிணையல் – பெண்மான்.

Lord Civan loves to abide in Thiru-idai-ch-churam where forests, burning ground and the rocky-mountains are His favourite spots. His radiant shrine here is fragrant with the smoke of musk (*நானம்* i.e., *கஸ்தூரி*) and incense. The area is bright due to fire caused by burning the above materials. In the dense gardens on the slopes of the mountain, flourish young peacocks and peahens. Nearby is the habitat of hogs and deers. Lord Civan of this place has no evil in His mind. He wields in one of His hands a fierce battle-axe blazing like fire. In the present birth and in the next birth, He is the only person who can bestow bliss on us. His devotees hail, adore and have familiarity with Him. With all these factors, His nature is still a mystery indeed!

கடமணிமார் பினர்கடல்தனி லுறைவார்
காதலர்தீதிலர் கனல்மழுவாளர்
விடமணிமிட றினர்மிளிர்வதோராவர்
வேறுமோர்சரிதையர் வேடமுமுடையர்
வடமுலைய யலனகருங்குருந்தேறி
வாழையின் தீங்கனிவார்ந்து தேனட்டும்
இடமுலை யரிவைய ரெழில்திகழ்சார
லிடைச் சுரமேவிய இவர்வணமென்னே. 4

கட மணி மார்பினர்; கடல்தனில் உறைவார்
காதலர் தீதுஇலர்; கனல் மழுவாளர்;
விடம் அணி மிடறினர்; மிளிர்வது ஓர் அரவர்;
வேறும் ஓர் சரிதையர்; வேடமும் உடையர்;
வடம் உலை அயலன கருங்குருந்து ஏறி,
வாழையின் தீங்கனி வார்ந்து தேன் அட்டும்
இடம் முலை அரிவையர் எழில் திகழ் சாரல்
இடைச்சுரம் மேவிய இவர் வணம் என்னே?

kaTa maNi mArpin2ar; kaTal tan2il uRaivAr
kAtalar; tItu ilar; kan2al mazuvALar;
viTam aNi miTaRin2ar; miLirvatu Or aravar;
vERum Or caritaiyar; vETamum uTaiyar;
vaTam ulai ayalan2a karugkuruntu ERi,
vAzaiyin2 tImkan2i vArntu tEn2 aTTum
iTam mulai arivaiyar ezil tikaz cAral
iTaiccuram mEviya ivar vaNam en2n2E?

**பொருள்:** ஓங்கி வளர்ந்துள்ள பல மரங்களை உடைய அடர்த்தியான, அழகிய மலைச்சாரலை உடைய தலம் தி இடைச் சுரம் ஆகும். இங்குள்ள மலைச்சாரலில் பெரிய ஆலமரங்கள் காற்றினால் அசைந்து ஆடிக்கொண்டிருக்கின்றன. அதன் அருகே கரிய குருந்த மரங்கள் ஓங்கி வளர்ந்து விளங்குகின்றன. இந்த மரங்களை ஒட்டினாற்போல வாழைத்தோட்டங்கள் உள்ளன. அவைகள் மிகச் செழிப்புடன் வளர்ந்துள்ளன. அவைகளில் மிகப்பெரிய தார்கள் தொங்கிக் கொண்டும், குருந்தமரத்தின் மீது சாய்ந்தும், அமர்ந்தும் மிக நன்றாகப் படுத்துக் கொண்டும் விளங்குகின்றன. மலைச்சாரலில் வாழ்ந்து தோட்டங்களைக் காத்து வரும் பெண்கள் மிகுந்த ஆரோக்கியமாகவும், செழிப்பான, பருத்த தனங்களை உடையவர்களாகவும் உள்ளனர். அவர்கள் குருந்தமரத்தில் உள்ள தேன் அடைகளை எடுத்து வாழைக்கனிகளின் மீது பிழிந்து, பழத்தை உண்டு களித்து இன்பம் பெருக வாழ்ந்து வருகிறார்கள். இத்தலத்தில் உள்ள மலைச்சாரலில் விளைந்த மணிகள் சிவனது மார்பில் அணியப்பட்டுள்ளன. அவர் கடலில் உறைபவராக இருக்கின்றார். அன்புடையவராகத் திகழ்கின்றார். தீமையற்றவராக இருக்கின்றார். கனலும் மழுவும் ஏந்தியிருக்கின்றார். ஆலகால விடத்தை தொண்டைக்குள் அடக்கியதால் நீலமணியின் நிறத்தைப் போன்ற கழுத்தை உடையவர். பாம்பை அணிகலனாகப் பூண்டவர். வேறு வேறான ஒழுக்க நெறிகளை உடையவராய் உள்ளார். பல்வேறு தோற்றங்களை உடைய வேடத்தவர். இத்தகைய இறைவரின் இயல்புதான் என்னே?

**குறிப்புரை:** சுடமணி – மலைச்சாரலில் விளைந்த மணி. சரிதை – ஒழுக்கம். வடமுலை அயலன – அசையும் ஆலக்குப் பக்கத்தனவாகிய. கருங்குருந்து – பெரிய குருந்தமரத்தில், வார்ந்து – ஒழுகி. தேன் அட்டும் – தேனை எடுக்கின்ற இடமுலை அரிவையர் – இடங் கொண்டு வளர்ந்த முலையினை உடைய பெண்கள்.

Lord Civan's chest is adorned with gems obtained from the mountain slopes. He abides in the sea. He loves His devotees. He is ever free from any evil. He wields a fiery battle-axe in one of His hands. Not swallowing the ocean raised poison, Lord Civan has positioned it in His throat, resulting in His neck appearing always dark blue in colour like that of sapphire. He wears on His body, snake as jewelry. He conforms to different kinds of virtuous deeds. He appears in various different forms. He is entempled in Thiru-idai-ch-churam. In the beauteous slopes of the mountain of this

place shapely women do live. They climb on the wild lime tree (Kuruntha tree), which grows near the waving banyan tree and cleave the honeycomb closely and drops the honey over the banana fruits. Then all the girls gather eat the fruits and enjoy them. What is the real nature of such Civan who is enshrined in Thiru-idai-ch-churam?

கார்கொண்ட கடிகமழ்விரிமலர் கொன்றைக்
　　கண்ணியர் வளர்மதிகதிர் விடக்கங்கை
நீர்கொண்ட சடையினர் விடையுயர் கொடியர்
　　நிழல் திகழ்மழுவின ரழல்திகழ்நிறத்தர்
சீர்கொண்ட மென்சிறைவண்டு பண்செய்யும்
　　செழும்புனலனை யனசெங்குலை வாழை
ஏர்கொண்ட பலவினொ டெழில்திகழ்சார
　　லிடைச்சுர மேவியஇவர் வணமென்னே. 5

கார் கொண்ட கடி கமழ் விரிமலர் கொன்றைக்-
　　கண்ணியர்; வளர்மதி கதிர்விட, கங்கை-
நீர் கொண்ட சடையினர்; விடை உயர் கொடியர்;
　　நிழல் திகழ் மழுவினர்; அழல்திகழ் நிறத்தர்;
சீர் கொண்ட மென்சிறைவண்டு பண்செய்யும்
　　செழும் புனல் அனையன செங்குலை வாழை
ஏர் கொண்ட பலவினொடு எழில் திகழ் சாரல்
　　இடைச்சுரம் மேவிய இவர் வணம் என்னே?

kAr koNTa kaTi kamaz virimalark kon2Raik
　　kaNNiyar; vaLarmati katirviTa, kagkai-
nIr koNTa caTaiyin2ar; viTai uyar koTiyar;
　　nizal tikaz mazuvin2ar; azal tikaz niRattar;
cIr koNTa men2ciRaivaNTu paNceyyum
　　cezum pun2al an2aiyan2a cegkulai vAzai
Er koNTa palavin2oTu ezil tikaz cAral
　　iTaiccuram mEviya ivar vaNam en2n2E?

**பொருள்:** சிறப்பு மிக்க மெல்லிய இறகுகளை உடைய வண்டுகள் பண்ணோடு இசை பாடுகின்றன. செழிப்பான நீர்நிலைகளுள்ள நிலத்தில் செவ்வாழைக் குலைகளும் அழகுமிக்க பலாக்கனிகளோடு விளங்குகின்றன. இத்தகைய அழகுமிக்க மலைச்சாரலை உடைய தலம் திருஇடைச்சுரம் ஆகும். இத்தலத்தில், சிவபெருமான், கார்காலத்தில் வளர்ந்த மணம் கமழும் விரிந்த கொன்றை மலர் மாலையை அணிந்துள்ளார். வளரும் பிறை மதி ஒளி வீசவும், கங்கை நீர் கொண்ட சடையினருமாக விளங்குகின்றார். விடை எழுதிய உயர்ந்த கொடியை உடையவர். ஒளி விளங்கும் மழுப்படையை ஏந்தியிருக்கின்றார். அழல் போன்ற சிவந்த நிறத்தினர். இத்தகைய இறைவரது இயல்புதான் என்னே?

**குறிப்புரை:** கார்கொண்ட – கார்காலத்து உண்டான. கடி – மணம். வாழைகள் பலாவினோடு அழகைச் செய்கின்ற சாரல் எனக் கூட்டுக.

Lord Civan wears the garland of well-blown and fragrant cassia flowers, which bloom during the rainy season. On His matted hair shines a waxing and bright crescent moon spreading its rays. The Ganges river also rests there. The bull is the insignia in His flag. He holds the bright battle-axe in one of His hands. His hue is that of the blazing fire. He is entempled in the beautiful Thiru-idai-ch-churam where in the slopes of the mountain, lovely and soft winged bees are humming in musical mode. Here flourish red plantain trees, with bunches of ruddy fruits; also jack trees yielding abundant jack fruits. How great indeed is the wonder of His splendour!

**Note:** The banana trees referred to in this verse are called sevvazhai. They grow in hilly regions.

தோடணி குழையினர் சுண்ணவெண்
ணீற்றார்சுடலையி னாடுவர்தோலுடையாகப்
பீடுயர்செய் ததோர்பெருமை யையுடையர்
பேயுடனாடுவர் பெரியவர் பெருமான்
கோடல்களொ ழுகுவமுழுகுவதும்
பிகுரவமுமரவ முமன்னியபாங்கர்
ஏடவிழ்புது மலர்கடிகமழ் சாரலிடைச்
சுரமேவிய இவர்வண மென்னே. 6

தோடு அணி குழையினர்; சுண்ணவெண் நீற்றர்;
சுடலையின் ஆடுவர்; தோல்உடைஆகப்
பீடு உயர்செய்தது ஓர் பெருமையை உடையர்;
பேய்உடன் ஆடுவர்; பெரியவர் பெருமான்;
கோடல்கள் ஒழுகுவ, முழுகுவ தும்பி,
குரவமும் மரவமும் மன்னிய பாங்கர்,
ஏடு அவிழ் புதுமலர் கடி கமழ் சாரல்
இடைச்சுரம் மேவிய இவர் வணம் என்னே?

tOTu aNi kuzaiyin2ar; cuNNa veN nIRRar;
cuTalaiyin2 ATuvar; tOl uTai Akap
pITi uyar ceytatu Or perumaiyai uTaiyar;
pEy uTan2 ATuvar; periyavar perumAn2;
kOTalkaL ozukuva, muzukuva tumpi,
kuravamum maravamum man2n2iya pAgkar,
ETu aviz putumalar kaTi kamaz cAral
iTaiccuram mEviya ivar vaNam en2n2E?



திருப்பரங்குன்றம் – பாண்டி நாட்டுத் தலம்
**Thirupparankundram, Tamil Nadu.**



திருப்பழனம் – திருஆபத்சகாயர் – சோழநாட்டு வடகரைத் தலம்
**Sri Aapathsakayar Temple - Tirupazhanam - Tamil Nadu.**



திருப்பராய்த்துறை – ஸ்ரீ பராய்த்துறைநாதர் – சோழநாட்டு தென்கரைத் தலம்
**Paraaitthurainathar Temple - Tirupparaaithurai, Tamil Nadu.**



நாகைக்காரோணம் / நாகப்பட்டினம் – காயாரோகணேஸ்வரர் – சோழநாட்டு தென்கரைத் தலம்
**Kayarokanar Temple - Nakaikkaronam (Nagaippattinam) Tamil Nadu**

**பொருள்:** செங்காந்தள் பூக்கள் தேனைச் சொரிகின்றன. அந்தத் தேனில் வண்டுகள் முழுகுகின்றன. குரவ மரம், கடம்ப மரம் ஆகியன சோலைகளில் நிறைந்துள்ளன. இந்தச் சோலைகளில் பூத்த புது மலர்களின் மணம் வீசுகின்ற சாரலை உடைய தலம் திருஇடைச்சுரம் ஆகும். இத்தலத்தில் சிவபெருமான், தோடணிந்த காதுடையவராகவும், திருவெண்ணீறாகிய சுண்ணப் பொடி பூசியவராகவும் விளங்குகின்றார். யானையின் தோலை ஆடையாகப் போர்த்திருக்கின்றார். சுடுகாட்டில் நடனம் ஆடுபவராக இருக்கின்றார். பீடு என்ற சொல் பெருமை பெறுமாறு மிக்க பெருமையை உடையவர். பேய்க் கணங்களோடு ஆடுபவர். பெரியவர் எனப் போற்றத் தக்கவர்க்கு தலைவன் ஆனவர். இத்தகைய இறைவரது இயல்புதான் என்னே?

**குறிப்புரை:** குழை – காது. பீடு – பெருமை. கோடல்கள் ஒழுகுவ – செங்காந்தட்பூக்கள் தேனைச் சொரிவன. அதில், தும்பி முழுகுகின்றன. தும்பி – வண்டு.

Lord Civan wears an ola-roll in His left ear, and an ear ring in His right ear. He smears His body with powdery ashes. Wearing a skin on His waist He dances in the cremation ground. Glory itself stands glorified by reason of His glory. He dances with the ghouls. He is the noble chief for all those who are considered as great virtuous men. He is entempled in Thiru-idai-ch-churam. Here in the slopes of the mountain range fragrant smell emitted by fresh-blown flowers is felt always. Here honey drips from the red November flower (Gloriosa superba - *செங்காந்தள்*) in which the bees immerse themselves and enjoy sipping the honey. The date tree (*குரவம்*), the seaside Indian oak (*கடம்பமரம்*) and other trees flourish in the gardens. What indeed is the real nature of Lord Civan who is enshrined in such a city?

கழல்மல்கு காலினர்வேலினர் நூலர்
கவர்தலை யரவொடுகண் டியும்பூண்பர்
அழல்மல்கு மெரியொடுமணி மழுவேந்தி
யாடுவர் பாடுவரா ரணங்குடையர்
பொழில்மல்கு நீடியஅரவமு மரவ
மன்னியக வட்டிடைப்புணர் குயிலாலும்
எழில்மல்கு சோலையில்வண் டிசைபாடு
மிடைச்சுரமேவிய இவர்வணமென்னே. 7

கழல் மல்கு காலினர்; வேலினர்; நூலர்;
கவர்தலை அரவொடு கண்டியும் பூண்பர்;
அழல் மல்கும் எரியொடும் அணி மழு ஏந்தி
ஆடுவர்; பாடுவர்; ஆர் அணங்கு உடையர்;
பொழில் மல்கு நீடிய அரவமும் மரவம்
மன்னிய கவட்டுஇடைப் புணர் குயில் ஆலும்
எழில் மல்கு சோலையில் வண்டு இசை பாடும்
இடைச்சுரம் மேவிய இவர் வணம் என்னே?

kazal malku kAlin2ar; vElin2ar; nUlar;
kavar talai aravoTu kaNTiyum pUNpar;
azal malkum eriyoTum aNi mazu Enti
ATuvar; pATuvar; Ar aNagku uTaiyar;
pozil malku nITiya aravamum maravam
man2n2iya kavaTTu iTaip puNarkuyil Alum
ezil malku cOlaiyil vaNTu icai pATum
iTaiccuram mEviya ivar vaNam en2n2E?

**பொருள்:** திருஇடைச்சுரம் ஊரைச் சுற்றிலும் இயற்கையாகவே வளர்ந்த காடுகளும் (பொழில்களும்) செயற்கையாக வைத்து வளர்க்கப்பட்ட பூங்காக்களும் (சோலைகளும்) மிகுதியாக உள்ளன. இவைகளில் மிக உயரமான மராமரங்களும் (ஆச்சா மரமும், அரச மரமும்; Sal and Papal Trees) பிற பூக்கள் நிறைந்த மரங்களும் செழிப்பாக வளர்ந்து உள்ளன. இம்மரங்களின் நெருக்கமான கிளைகளில் ஆண் பெண் குயில்கள் இணைந்து பாடுகின்றன. அழகிய சோலைகளில் வண்டுகள் இசைபாடுகின்றன. இத்தகைய அழகிய மலைச்சாரலை உடைய திருஇடைச்சுரத்தில் சிவபெருமான் வீரக்கழல் அணிந்த திருவடியினராகவும், கையில் வேலை ஏந்தியவராகவும் முப்புரிநூலை அணிந்தவராகவும் விளங்குகின்றார். ஐந்தாகப் பிரிந்த தலைகளை உடைய பாம்போடு உருத்திராக்க மாலையையும் அணிந்துள்ளார். ஒரு கையில் சுவாலையோடு கூடிய தீயையும், மற்றுமொரு கையில் அழகிய மழுவையும் ஏந்தியுள்ளார். ஆடுபவராகவும், பாடுபவராகவும், பிறரால் வசீகரிக்கப்படும் அழகுடையவராகவும் திகழ்கின்றார். இத்தகைய இறைவரது இயல்புதான் என்னே?

**குறிப்புரை:** கழல் – வீரக்கழல். வேல் – சூலம். கவர் தலை அரவு – ஐந்தலை நாகம். கண்டி – உருத்திராக்கம். அணங்கு – தெய்வத்தன்மை. மரவம் – மராமரம். கவடு – கிளை.

Lord Civan wears on His holy feet the warrior's trinket which has a string of little bells (*வீரக்கழல்*). He wears on His chest the three ply sacred thread (*முப்புரிநூல்*). He wears garland made of claeocarpus seeds (*உருத்திராக்க மாலை*) along with the five headed and hooded serpent. He sings and dances holding the blazing fire in one of His hands and wielding the good-looking battle-axe in another hand. Every one gets afflicted by His matchless beauty. In the forests of the mountain slopes a good number of tall sal and papal trees (*மராமரம்*) flourish. In the branches of these trees the male and female Indian cuckoos jointly sing. In the lush gardens bees are humming in large numbers creating a musical note. What indeed is the real nature of Lord Civan who is enshrined in this admirable city?

தேங்கமழ்கொன் றையந்திருமலர் புனைவார்
திகழ்தருசடை மிசைத்திங்களுஞ்சூடி
வீந்தவர்சுடலை வெண்ணீறுமெய்பூசி
வேறுமோர் சரிதையர்வேடமு முடையர்
சாந்தமுமகிலொ டுமுகில்பொதிந் தலம்பித்
தவழ்கனமணி யொடுமிகு பளிங்கிடறி
ஏந்துவெள்ளரு விகளெழில்திகழ்சார
லிடைச் சுரமேவிய இவர்வணமென்னே. 8

தேம் கமழ் கொன்றை அம்திருமலர் புனைவார்;
திகழ்தரு சடைமிசைத் திங்களும் சூடி,
வீந்தவர் சுடலை வெண் நீறு மெய்பூசி,
வேறும் ஓர் சரிதையர்; வேடமும் உடையர்;
சாந்தமும் அகிலொடு முகில் பொதிந்து அலம்பி,
தவழ் கன மணியொடு மிகு பளிங்கு இடறி,
ஏந்து வெள் அருவிகள் எழில் திகழ் சாரல்
இடைச்சுரம் மேவிய இவர் வணம் என்னே?

tEm kamaz kon2Rai am tirumalar pun2aivAr;
tikaztaru caTaimicait tigkaLum cUTi,
vIntavar cuTalai veN nIRu mey pUci,
vERum Or caritaiyar; vETamum uTaiyar;
cAntamum akiloTu mukil potintu alampi,
tavaz kan2a maNiyoTu miku paLigku iTaRi,
Entu veL aruvikaL ezil tikaz cAral
iTaiccuram mEviya ivar vaNam en2n2E?

**பொருள்:** சந்தனம், அகில் ஆகியவற்றின் மணம் கலந்து மேகங்களில் இருந்து, இடிமுழங்கி மழை பொழிகின்றது. அந்த மழை வெள்ளத்தில் பெரிய மணிகளும், பளிங்குகளும் அடித்து

உருண்டு வருகின்றன. அவைகள் வெண்மையான உயர்ந்த அருவிகளின் வழியே கீழே விழுகின்றன. இத்தகைய அழகிய மலைச்சாரலை உடைய தலம் திருஇடைச்சுரம் ஆகும். இத்தலத்தில் சிவபெருமான், தேன் மணம் கமழும் அழகிய கொன்றை மலர் மாலையைச் சூடியுள்ளார். விளங்கும் சடைமுடியில் பிறை மதியைச் சூடியிருக்கின்றார். இறந்தவர்களை எரிக்கும் சுடுகாட்டுச் சாம்பலைத் தம் திருமேனியில் பூசியுள்ளார். வேறுபடும் பல புராண வரலாறுகளை உடையவராக இருக்கின்றார். அவ்வாறே வேறுபடும் பலப்பல வேடங்களுடன் காட்சி தருபவருமாய் இருக்கின்றார். இத்தகைய இறைவரது இயல்புதான் என்னே?

**குறிப்புரை:** வீந்தவர் – இறந்தவர். சாந்தம் – சந்தனம். கனமணி – கூட்டமாகிய இரத்தினங்கள். ஏந்து – தாங்கிய. தேம் – தேன்.

Lord Civan wears the elegant garlands of honey fragrant cassia flowers. He wears on His matted hair the crescent moon. He smears on His holy body the ashes of the burning ground where corpses are burnt. His beginningless ancient history is of widely varying nature. Similarly He comes into view in various forms according to the circumstances. The lofty white water falls carry large big gems and crystals. The water is also fragrant with the smell of eaglewood and sandalwood that are broken by the waterfalls due to heavy rain. What indeed is the real nature of Lord Civan who is enshrined in such a famous city?

பலஇலமிடு பலிகையிலொன் றேற்பர்
பலபுகழல்ல துபழி யிலர்தாமும்
தலையிலங் கவிரொளிநெடு முடியரக்கன்
தடக்கைகளடர்த் ததோர்தன் மையையுடையர்
மலையிலங் கருவிகள்மணமுழுவதிர
மழைத வழிளமஞ்ஞை மல்கியசாரல்
இலைஇல வங்கமுமேலமுங்கமழு
மிடைச்சுர மேவியஇவர் வணமென்னே. 9

*பலஇலம் இடுபலி கையில் ஒன்று ஏற்பர்;*
*பல புகழ்அல்லது பழி இலர், தாமும்;*
*தலை இலங்கு அவிர்ஒளி நெடுமுடி அரக்கன்*
*தடக்கைகள் அடர்த்தது ஓர் தன்மையை உடையர்;*

*மலை இலங்கு அருவிகள் மணமுழவு அதிர,*
*மழை தவழ் இள மஞ்ஞை மல்கிய சாரல்,*
*இலை இலவங்கமும் ஏலமும் கமழும்*
*இடைச்சுரம் மேவிய இவர் வணம் என்னே?*

pala ilam iTu pali kaiyil on2Ru ERpar;
palapukaz allatu pazi ilar, tAmum;
talai ilagku avir oLi neTu muTi arakkan2 ta
TakkaikaL aTarttatu Or tan2maiyai uTaiyar;
malai ilagku aruvikaL maNamuzavu atira,
mazai tavaz iLa manjnjai malkiya cAral,
ilai ilavagkamum Elamum kamazum
iTaiccuram mEviya ivar vaNam en2n2E?

**பொருள்:** மலையிலிருந்து அருவிகள் திருமண வாத்தியம் போன்று அதிருமாறு ஒலிக்கின்றன. இங்குள்ள இளமயில்கள் மேகத்தின் இனிமை கண்டு தோகை விரித்து ஆடுகின்றன. இலைகள் நிறைந்த இலவங்க மரங்களும் ஏலக்காய்களின் மணமும் எங்கும் நிறைந்துள்ளது. இத்தகைய அழகிய மலைச்சாரலை உடைய தலம் திருஇடைச்சுரம் ஆகும். இத்தலத்தில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமான் பலர் இல்லங்களுக்கும் சென்று மகளிர் இடும் பலியை ஒரு கையில் ஏற்பவராக இருக்கின்றார். பலவகைப்பட்ட புகழே அல்லாது எவ்வகையான பழியும் இல்லாதவராக இருக்கின்றார். தலையில் ஒளியோடு விளங்கும் நீண்ட மகுடங்களைத் தரித்த இராவணனின் பத்து தலைகளையும் நீண்ட கைகளையும் நெரித்த வலிமையைச் செய்த் தன்மை உடையவராக இருக்கின்றார். இத்தகைய இறைவரது இயல்புதான் என்னே?

**குறிப்புரை:** பல இலம் இடு பலி – பலவீடுகளில் இட்ட பிச்சை. தலை இலங்கு நெடு முடி எனக் கூட்டுக. இலை இலவங்கம் – இவைகளோடு கூடிய இலவங்க மரம்.

Lord Civan visits many houses and receives alms in His hand. His glory is widespread. He is utterly blameless. He crushed the long arms of the ten-headed Raavanan, decked with long and bright crowns. Such is His prowess. He is entempled in Thiru-idai-ch-churam. In the mountain slopes waterfalls descend down with a din, akin to the sound of wedding drums. Also here young peacocks are in good number. The clouds crawl over the mountain slopes. The air is fragrant with the leaves of cinnamon and cardamom. What indeed is the nature of Lord Civan of this place?

பெருமைகள் தருக்கியோர்பே துறுகின்ற
 பெருங்கடல் வண்ணனும் பிரமனுமோரா
அருமைய ரடிநிழல்பரவி நின்றேத்து
 மன்புடை யடியவர்க் கணியருமாவர்
கருமைகொள் வடிவொடுசுனை வளர் குவளைக்
 கயலினம்வய லிளவாளை களிரிய
எருமைகள் படிதரஇள அனமாலு
 மிடைச்சுரமேவியஇவர் வணமென்னே. 10

பெருமைகள் தருக்கி ஓர் பேது உறுகின்ற
 பெருங்கடல் வண்ணனும் பிரமனும் ஓரா
அருமையர்; அடிநிழல் பரவி நின்று ஏத்தும்
 அன்பு உடை அடியவர்க்கு அணியரும் ஆவர்;
கருமை கொள் வடிவொடு சுனை வளர் குவளைக்
 கயல் இனம் வயல் இளவாளைகள் இரிய,
எருமைகள் படிதர, இள அனம் ஆலும்
 இடைச்சுரம் மேவிய இவர் வணம் என்னே?

perumaikaL tarukki Or pEtu uRukin2Ra
 perugkaTal vaNNan2um piraman2um OrA
arumaiyar; aTi nizal paravi nin2Ru Ettum
 an2pu uTai aTiyavarkku aNiyarum Avar;
karumai koL vaTivoTu cun2ai vaLar kuvaLaik
 kayal in2am vayal iLavALaikaL iriya,
erumaikaL paTitara, iLa an2am Alum
 iTaiccuram mEviya ivar vaNam en2n2E?

**பொருள்:** நீலவண்ணக் குவளை மலர்கள் நீர்ச் சுனைகளில் வளர்ந்திருக்கின்றன. வயல்களில் வாளை மீன்களும் கயல்மீன்களும் அஞ்சுமாறு எருமைகள் இறங்குகின்றன. அதனைக் கண்டு இளைய அன்னங்கள் ஆரவாரிக்கின்றன. இத்தகைய காட்சிகளைக் கொண்ட தலம் திருஇடைச்சுரம் ஆகும். இத்தலத்தில் சிவபெருமான் எழுந்தருளியுள்ளார். தன் பெருமைகளை நினைத்துத் தருக்கிப் பேசி மயக்கத்தில் ஆழ்ந்த கடல்நிற வண்ணனாகிய திருமாலும், பிரமனும் ஓர்ந்து காண முடியாத அருமையை உடையவர். ஆனால், தம் திருவடி நிழலில் நின்று போற்றித் துதிக்கும் அன்புடைய அடியவர்க்கு சமீபமாய் இருப்பவர். இத்தகைய இறைவரது இயல்புதான் என்னே?

குறிப்புரை: பெருமைகள் தருக்கி – பெருமைகளால் செருக்குற்று பேதுறுகின்ற – மயங்கிய. ஓரா அருமையர் – அறியமுடியாத அருமைப்பாட்டினை உடையவர். எருமைகள் குவளை கயலினம்

இளவாளைகள் இரிய படிதர இள அன்னம் ஆலும் இடைச்சுரம் எனக் கூட்டுக. இரிய – விலக. படிதர – தோய. ஆலும் – ஒலிக்கும்.

Lord Civan is the rare one who is beyond the comprehension of the ocean-hued Vishnu who became proud by reason of His glory, and also to Brahma. He is of easy access to His loving devotees who hail and adore the salvific shade of His holy feet. He is entempled in Thiru-idai-ch-churam in the pools of which blue lilies bloom and flourish. Here when black buffaloes begin to settle in water, the carp fish (*கயல்மீன்*) and the trichiurus lepturus fish (*வாளைமீன்*) leap about scared; then the young swans raise uproar. What indeed is the real nature of Lord Civan who is enshrined in such a fertile place?

மடைச்சுர மறிவனவாளை யுங்கயலும்
    மருவிய வயல்தனில் வருபுனற்காழிச்
சடைச்சுரத் துறைவதோர் பிறையுடையண்ணல்
    சரிதை கள்பரவி நின்றுருகு சம்பந்தன்
புடைச்சுரத் தருவரைப் பூக்கமழ்சாரற்
    புணர்மடநடை யவர்புடையி டையார்ந்த
இடைச்சுர மேத்தியஇசை யொடுபாட
    லிவைசொலவல்ல வர்பிணியிலர் தாமே. 11

*மடைச்சுரம் மறிவன வாளையும் கயலும்*
*மருவிய வயல்தனில் வருபுனல் காழிச்*
*சடைச்சுரத்து உறைவது ஓர் பிறை உடை அண்ணல்*
*சரிதைகள் பரவி நின்று உருகு சம்பந்தன்,*
*புடைச்சுரத்து அருவரைப் பூக் கமழ் சாரல்*
*புணர் மட நடையவர் புடைஇடை ஆர்ந்த*
*இடைச்சுரம் ஏத்திய இசையொடு பாடல்*
*இவை சொல வல்லவர் பிணி இலர்தாமே.*

maTaiccuram maRivan2a vALaiyum kayalum
    maruviya vayal tan2il varupun2al kAzic
caTaiccurattu uRaivatu Or piRai uTai aNNal
    caritaikaL paravi nin2Ru uruku campantan2,
puTaic curattu aru varaip pUk kamaz cAral
    puNar maTa naTaiyavar puTai iTai Arnta
iTaiccuram Ettiya icaiyoTu pATal,
    ivai cola vallavar piNi ilartAmE.

**பொருள்:** வயல்களில் இருந்து வரும் நீர்மடைகளில் வாளை மீன்களும் கயல்மீன்களும் துள்ளுகின்றன. இத்தகைய நீர்வளம் மிக்கது காழிநகராகும். இங்கு, ஞானசம்பந்தன், தனது விரிந்த சடையில் உறையும் பிறை மதியை உடைய சிவபிரானின் வரலாறுகளை மனம் கரைந்து போற்றிப் பாடுகின்றார். பூக்களின் மணம் கமழும் சாரலை உடைய மலையில் அருகருகே வெற்றிடங்கள் உள்ளன. இங்கு அழகிய மட நடையினை உடைய மகளிர் பல இடங்களில் தங்குகின்றனர். அவர்கள் தங்கி அழகு செய்யும் திருஇடைச்சுரத்தை இப்பதிகத்தில் போற்றிப் பாடினார். இப்பதிகப் பாடலை இசையோடு பாட வல்லவர்கள் பிணிகள் இன்றி வாழ்வார்கள்.

**குறிப்புரை:** ஞானசம்பந்தன், இடைச்சுரத்தைத் துதித்த பாடலை, இசையோடு சொல்ல வல்லவர் பிணியிலர் என்கின்றது. மடைச்சுரம் – நீர்மடைகளின் வழி. மறிவன – மடங்கித் துள்ளுவன. சடைச்சுரத்து – சடைக்காட்டில்.

Gnaanasambandan of Kaazhi which abounds in fields fed by the waters of sluices where leap about, carp fish and trichiurus lepturus fish, melts in love when he sings of the annals of the noble Lord who wears on His crest, the crescent moon. In the interspaces of flowery and fragrant gardens of this town, fair and bashful damsels, foregather and enjoy themselves. Those who can sing tunefully this hymn on the Lord of Idaichchuram will, forever, be freed of maladies.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*78ஆம் பதிகம் முற்றிற்று*
End of 78th Hymn

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# 79. திருக் கழு மலம்

## திருத்தல வரலாறு:

முதல் பதிகம் பார்க்க.

# 79. THIRU-K-KAZHU-MALAM

## HISTORY OF THE PLACE

See First Hymn.

## INTRODUCTION TO THE HYMN

Thiru-k-kazhu-malam is one of the twelve names of Seekaazhi where our saint Thiru-Gnaanasambandar was born.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 79. திருக் கழு மலம் — 79. THIRU-K-KAZHU-MALAM

பண் : குறிஞ்சி
ராகம் : குறிஞ்சி

*Pann: Kurinji*
*Raagam: Kurinji*

அயிலுறு படையினர்விடை யினர்முடிமே
லரவமும்மதி யமும்விரவிய அழகர்
மயிலுறு சாயலவனமு லையொருபால்
மகிழ்பவர்வானி டைமுகில்புல் குமிடறர்
பயில்வுறு சரிதையரெரு துகந்தேறிப்
பாடியுமாடி யும்பலிகொள் வர்வலிசேர்
கயிலை யும்பொதியிலுமி டமென வுடையார்
கழுமலநினைய நம்வினை கரிசறுமே. 1

அயில் உறு படையினர்; விடையினர்; முடிமேல்
அரவமும் மதியமும் விரவிய அழகர்;
மயில் உறு சாயல வனமுலை ஒருபால்
மகிழ்பவர் வான்இடை முகில் புல்கு மிடறர்;
பயில்வுஉறு சரிதையர்; எருது உகந்கு ஏறிப்
பாடியும் ஆடியும் பலிகொள்வர்; வலி சேர்
கயிலையும் பொதியிலும் இடம் என உடையார் -
கழுமலம் நினைய, நம் வினைகரிசு அறுமே.

ayil uRu paTaiyin2ar; viTaiyin2ar; muTimEl
　　aravamum matiyamum viraviya azakar;
mayil uRu cAyal van2amulai orupAl
　　makizpavar; vAn2 iTai mukil pulkum miTaRar;
payilvu uRu caritaiyar; erutu ukantu ERip
　　pATiyu ATiyum pali koLvar; vali cEr
kayilaiyum potiyilum iTam en2a uTaiyAr--
　　kazumalam nin2aiya, nam vin2aikaricu aRumE.

***பொருள்:*** சிவபெருமான் கூர்மை பொருந்திய சூலப்படையை உடையவர். விடை ஊர்தியினர். திருமுடிமேல் அரவையும், பிறைமதியையும் சூடிய அழகினர். மயில் போன்ற சாயலையும் இளமையான தனபாரங்களையும் உடைய உமையம்மையை ஒருபாகமாகக் கொண்டு மகிழ்பவர். மேகத்தை யொத்த கண்டத்தினர். எல்லாராலும் போற்றப்படும் புராண வரலாறுகளை உடையவர். இடபத்தில் மகிழ்ந்து ஏறி பாடியும் ஆடியும் சென்று பலியேற்பவர். வலிமை மிகுந்த கயிலை, பொதிகை போன்ற அழகிய மலைகள் இவைகளைத் தம் இடங்களாக உடையவர். இந்தப் பெருமான் எழுந்தருளியுள்ள கழுமலத்தை நினைத்து அங்குள்ள இறைவனை வணங்கினால், நம் வினைத் தீமைகள் அறுபட்டுப் போகும்.

***குறிப்புரை:*** இப்பதிகம் இறைவனது கழுமலத்தை நினைக்க, நமது வினையின் தீமை அறும் என்கின்றது. அயில் – கூர்மை. மயில் உரு சாயல் – மயில்போன்ற சாயலை உடைய. வனமுலை – இளைய முலையினை உடையாளாகிய உமாதேவி. முகில்புல்கும் மிடறர் – மேகத்தையொத்த கண்டத்தை உடையவர். கரிசு – தீமை.

Lord Civan wields a sharp trident in His hand. He is the handsome One on whose crest rests a serpent as well as the crescent moon. He joyfully concorporates with His consort Umaa Devi who shines like a peacock, having a tender body with charming breasts. His neck is of dark blue in colour like the clouds in the sky. He is adored by one and all as prescribed in the ancient texts (Puraanaas). Singing and dancing, He seeks alms riding on His bull. He loves the strong mount Kailash and the beautiful Pothigai mountain as His abiding places. This Lord Civan is enshrined in Kazhumalam. Those who adore this city and the Lord therein will get their bad karma snapped.

கொண்டலு நீலமும்புரை திருமிடறர்
கொடுமுடி யுறைபவர் படுதலைக்கையர்
பண்டல ரயன்சிரமரிந் தவர்பொருந்தும்
படர்சடை யடிகளார் பதியதனயலே
வண்டலும் வங்கமுஞ்சங் கமுஞ்சுறவும்
மறிகடல்திரை கொணர்ந்தெற் றியகரைமேற்
கண்டலுங் கைதையும் நெய்தலுங் குலவுங்
கழுமலநினைய நம்வினை கரிசறுமே. 2

*கொண்டலும் நீலமும் புரை திருமிடறர்;*
*கொடுமுடி உறைபவர்; படுதலைக் கையர்;*
*பண்டு அலர் அயன் சிரம் அரிந்தவர்; பொருந்தும்*
*படர்சடை அடிகளார் - பதி அதன் அயலே*
*வண்டலும் வங்கமும் சங்கமும் சுறவும்*
*மறிகடல்-திரை கொணர்ந்து எற்றிய கரைமேல்*
*கண்டலும் கைதையும் நெய்தலும் குலவும்*
*கழுமலம் நினைய, நம் வினைகரிசு அறுமே.*

koNTalum nIlamum purai tirumiTaRar;
koTu muTi uRaipavar; paTutalaik kaiyar;
paNTu alar ayan2 ciram arintavar; poruntum
paTar caTai aTikaLAr--pati atan2 ayalE
vaNTalum vagkamum cagkamum cuRavum
maRikaTal-tirai koNarntu eRRiya karaimEl
kaNTalum kaitaiyum neytalum kulavum
kazumalam nin2aiya, nam vin2ai karicu aRumE.

**பொருள்:** சிவபெருமான் மேகம் மற்றும் நீலமலர் போன்ற கருநீல நிறத்தை ஒத்த அழகிய கழுத்தினை உடையவர். கயிலை மலையில் உறைபவர். உயிரற்ற தலைஓட்டைக் கையில் ஏந்தியவர். முற்காலத்தில் தாமரை மலர் மேல் உறையும் பிரமனின் தலைகளில் ஒன்றைக் கொய்தவர். அழகுறப் பொருந்தும் சடைமுடியை உடையவர். இந்தச் சிவபிரானது பதி கழுமலம் ஆகும். இந்தப் பதியின் அருகில் கடலின் அலைகள், வண்டல் மண், தோணி, சங்கு, சுறா ஆகியவற்றைக் கொண்டு வந்து கரையில் சேர்க்கும். கடற்கரைமேல் நீர்முள்ளி, தாளை நெய்தல் ஆகியன பூத்து விளங்கும். இந்த அழகிய கழுமலப் பதியை நினைக்க, நம் வினைத் தீமைகள் அறுபட்டுப் போகும்.

**குறிப்புரை:** கொண்டல் – மேகம். மேகம் மிடற்றிற்கு உவமையானது தேவர்களைக் காத்தமையால். நீலம் ஒப்பானது கண்ணுக்கு இனிமையாய் இருத்தலின். படுதலை – கபாலம். வண்டல் – ஒதுக்கிய மண். வங்கம் – தோணி. கண்டல் – நீர்முள்ளி. கைதை – தாழை. நெய்தல் – நெய்தற்பூ.

Lord Civan has a beautiful neck which resembles in colour like the blue cloud and the blue lily flower. He abides in mount Kailash. He holds in His hand a dried up skull. In the days of yore, He chopped off one of the five heads of Brahma who is normally seated in the Lotus flower. His spreading matted hair is very attractive. He is enshrined in Thiru-k-kazhu-malam. Here in the seashore the round waves of the seawater throw on the shore the fertile soil (வண்டல் மண்) wild cinnamon (இலவங்கம்) seashells etc. On the foreshore gardens of this city flourish the flowers of barberia longifolia (நீர்முள்ளி), screw pine (தாழை), nymphaea alba (நெய்தல் ஆம்பல் - a class of water flower) etc. Those who can contemplate on this city and adore Lord Civan enshrined therein will get their bad karma snapped.

**Note:** Human matted hair is ghastly, but Civa's is beautiful and bewitching.

Kandal: A species of fragrant-screw-pine.

Kaitai: Fragrant screw-pine.

Neithal: White, Indian water lily.

எண்ணிடை யொன்றினர்இரண் டினருருவ
மெரியிடை மூன்றினர் நான்மறையாளர்
மண்ணிடை ஐந்தினராறி னரங்கம்
வகுத்தன ரேழிசை யெட்டிருங் கலைசேர்
பண்ணிடை யொன்பதுமுணர்ந் தவர்பத்தர்
பாடி நின்றடிதொழ மதனனை வெகுண்ட
கண்ணிடைக் கனலினர்கரு தியகோயில்
கழுமலநினைய நம்வினை கரிசறுமே. 3

எண் இடை ஒன்றினர்; இரண்டினர் உருவம்;
எரி இடை மூன்றினர்; நால்மறையாளர்;
மண் இடை ஐந்தினர்; ஆறினர் அங்கம்;
வகுத்தனர் ஏழ்இசை; எட்டு இருங்கலை சேர்
பண் இடை ஒன்பதும் உணர்ந்தவர்; பத்தர்
பாடி நின்று அடிதொழ, மதனனை வெகுண்ட
கண் இடைக் கனலினர் - கருதிய கோயில்
கழுமலம் நினைய, நம் வினைகரிசு அறுமே.

eN iTai on2Rin2ar; iraNTin2ar uruvam;
eri iTai mUn2Rin2ar; nAl maRaiyALar;
maN iTai aintin2ar; ARin2ar agkam;
vakuttan2ar Ez icai; eTTu irugkalai cEr
paN iTai on2patum uNarntavar; pattar
pATi nin2Ru aTi toza, matan2an2ai vekuNTa
kaN iTaik kan2alin2ar--karutiya kOyil
kazumalam nin2aiya, nam vin2aikaricu aRumE.

**பொருள்:** சிவபெருமானார் எண்ணத்தில் அருவாயிருந்த பொழுது ஒன்றாய் இருப்பவர். சிவம் சக்தி என உருவத்தால் இரண்டாக இருப்பவர். நெருப்பில் மூன்றாக இருப்பவர். நான்மறைகளை அருளியவர். மண்ணிடைச் சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்ற ஐந்து தன்மையர். வேதத்தின் ஆறு அங்கங்களாக இருப்பவர். ஏழிசைகளை வகுத்தவர். எண்வகைக் கலைகளில் ஒன்றான இசைத் துறையில் ஒன்பது கலைகளையும் உணர்ந்தவர். பக்தர்கள் பாடிநின்று திருவடிகளை வணங்குமாறு வீற்றிருப்பவர். மன்மதனைக் கண்ணினின்று தோன்றிய கனலால் எரித்தவர். இப்பெருமான் விரும்பி உறையும் கோயில் கழுமலம் ஆகும். இக்கோயிலை நினைத்து, அங்குள்ள இறைவனை வணங்கினால் நம் வினைத் தீமைகள் அறுபட்டுப் போகும்.

**குறிப்புரை:** எண்ணிடை ஒன்றினர் – எண்ணத்தில் அருவாயிருக்கும் பொழுது ஒன்றாய் இருப்பவர். உருவம் இரண்டினர் – சிவமும் சத்தியுமாகி உருவத் திருமேனி கொள்ளுங்காலத்து இரண்டாய் இருப்பவர். எரியிடை மூன்றினர் – நெருப்பில் சத்தமும் ஸ்பரிசமும் உருவமுமாகிய மூன்று தன்மாத்திரைகளாய் இருப்பவர். ஆகவனீயம் முதலிய முத்தீயாய் இருப்பவர் என்றலுமாம். மண்ணிடை ஐந்தினர் – மண்ணில் சத்தம், ஸ்பரிசம், ரூபம், ரசம், கந்தம் ஆகிய ஐந்து தன்மாத்திரைகளாய் இருப்பவர். முல்லை, குறிஞ்சி, பாலை, மருதம், நெய்தல் என்ற ஐந்திணையாய் இருப்பவர் எனலுமாம் ஏழிசை – குரல். கைக்கிளை, துத்தம், இழை, இளி, விளரி, தாரம் என்ற ஏழு. எட்டிருங்கலை – அஷ்டவித்தை.

Lord Civan is One single entity when He is in the state of formlessness (*அருவம்* – devoid of shape). His form is two when He is with His consort - Civan and Sakthi (energy). In Agni He is three fold. He is the author of the four Vedas. He is the five parts (evolutes) that pervade the earth. He is the six auxiliaries of the four Vedas (Sciences subordinate to the Vedas). He is seven fold music. He is the eight sacred sciences (*எட்டு இருங்கலை*). He is the master of nine musical nodes. His feet are hailed

and adored by devotees. He smote Manmathan (God of Love) with the fire of His forehead eye. If we contemplate on the temple of Thiru-k-kazhu-malam where He is enshrined, and worship Him there, our evil karma will snap in full.

**Note:** This hymn is an enn-alangaaram (*எண்அலங்காரம்*). Numbers 1 to 9 are employed in this hymn in an ascending order. It is not easy to comprehend this hymn.

எரியொரு கரத்தினரிமை யவர்க்கிறைவ
ரேறுகந்தேறுவர்நீறு மெய்பூசித்
திரிதரு மியல்பினரய லவர்புரங்கள்
தீயெழ விழித்தனர் வேய்புரைதோளி
வரிதரு கண்ணிணை மடவரலஞ்
சமஞ்சுறநிமிர்ந்த தோர்வடிவொடும்வந்த
கரியுரிமரு வியஅடிகளுக் கிடமாங்
கழுமலநினைய நம்வினை கரிசறுமே. 4

*எரி ஒரு கரத்தினர்; இமையவர்க்கு இறைவர்;*
*ஏறு உகந்து ஏறுவர்; நீறு மெய் பூசித்*
*திரிதரும் இயல்பினர்; அயலவர் புரங்கள்*
*தீ எழ விழித்தனர்; வேய் புரை தோளி,*
*வரி தரு கண்இணை மடவரல், அஞ்ச,*
*மஞ்சு உற நிமிர்ந்தது ஓர் வடிவொடும் வந்த*
*கரிஉரி மருவிய அடிகளுக்கு இடம்ஆம்*
*கழுமலம் நினைய, நம் வினைகரிசு அறுமே.*

eri oru karattin2ar; imaiyavarkku iRaivar;
ERu ukantu ERuvar; nIRu mey pUcit
tiritarum iyalpin2ar; ayalavar puragkaL
tI eza vizittan2ar; vEy purai tOLi,
vari taru kaN iNai maTavaral, anjca,
manjcu uRa nimirntatu Or vaTivoTum vanta
kari uri maruviya aTikaLukku iTam Am
kazumalam nin2aiya, nam vin2ai karicu aRumE.

*பொருள்:* சிவபெருமானார் தனது ஒரு கரத்தில் எரியை ஏந்தி இருப்பவர். தேவர்களுக்கு தலைவன் ஆனவர். விடைமேல் விரும்பி திருநீற்றை மெய்யில் பூசித் திரியும் இயல்பினர். பகைவரான அசுரர்களின் மூன்று புரங்களும் தீயில் அழியுமாறு விழித்தவர். மூங்கில் போன்ற திரண்ட தோள்களையும் வரிபரந்த கண்களையும் உடைய உமையம்மை அஞ்சுமாறு மேகம் திரண்டு நிமிர்ந்து வந்தாற்போல, கரிய வடிவோடு தம்பால் வந்தது ஓர் யானை. அந்த யானையின் தோலை உரித்து தன் முதுகில் அதனை போர்த்தியவர். அந்தப் பெருமான்

வீற்றிருக்கும் இடமாக விளங்குவது கழுமலம் ஆகும். அந்தக் கழுமலத்தை நினைத்து, அங்குள்ள இறைவனை வணங்க நம் வினைத் தீமைகள் அறுபட்டுப் போகும்.

**குறிப்புரை:** எரி – மழு. அயலவர் – பகைவர். தீயெழ விழித்தனர் என முப்புரங்களை விழித்து எரித்ததாகக் கூறப்படுகின்றது. வேய் – மூங்கில். வரி – செவ்வரி. மடவரல் – உமாதேவி. மஞ்சு – ஆகாயம். கரியுரி – யானைத்தோல்.

Lord Civan holds fire in one of His hands. He is the Chief God for all the celestials. He rides happily on His bull. He is in the habit of roaming here and there by smearing His body with holy ashes. He so stared at the three hostile citadels when they were gutted by fire. His consort Umaa Devi who has bamboos like shoulders and red streaked eyes got frightened on seeing a black elephant looking like the globular cloud approaching her; Lord Civan faced the elephant, skinned it and covered His body with its hide. This Lord Civan is enshrined in Thiru-k-kazhu-malam. If we contemplate on the temple in this Thiru-k-kazhu-malam town in our minds and worship Lord Civan therein, the evil effects of our bad karma will cease to affect on us.

ஊரெதிர்ந் திடுபலிதலை கலனாக
வுண்பவர்விண்பொலிந் திலங்கியவுருவர்
பாரெதிர்ந் தடிதொழவிரை தருமார்பிற்
படஅரவாமையக்கணிந் தவர்க்கிடமாம்
நீரெதிர்ந் திழிமணிநித் திலமுத்தம்
நிரைசுரி சங்கமொ டொண்மணி வரன்றிக்
காரெதிர்ந் தோதம்வன் றிரைகரைக் கெற்றுங்
கழுமலநினைய நம்வினை கரிசறுமே. 5

ஊர் எதிர்ந்து இடு பலி, தலை கலன் ஆக
உண்பவர்; விண் பொலிந்து இலங்கிய உருவர்;
பார் எதிர்ந்து அடி தொழ, விரை தரும் மார்பில்
படஅரவு ஆமை அக்கு அணிந்தவர்க்கு இடம்ஆம் -
நீர் எதிர்ந்து இழி மணி, நித்தில-முத்தம்
நிரை சுரிசங்கமொடு, ஒண்மணி வரன்றி,
கார் எதிர்ந்து ஓதம் வன் திரை கரைக்கு ஏற்றும் -
கழுமலம் நினைய, நம் வினைகரிசு அறுமே.

Ur etirntu iTu pali, talai kalan2 Aka
uNpavar; viN polintu ilagkiya uruvar;
pAr etirntu aTi toza, virai tarum mArpil
paTa aravu Amai akku aNintavarkku iTam Am--
nIr etirntu izi maNi, nittila--muttam
nirai cori cagkamoTu, oNmaNi varan2Ri,
kAr etirntu Otam van2 tirai karaikku eRRum--
kazumalam nin2aiya, nam vin2ai karicu aRumE.

***பொருள்:*** சிவபெருமானார், ஊர் மக்கள் இடும் பலியைத் தனது உண்ணும் பாத்திரமான தலையோட்டில் ஏற்று உண்பவர். மண்ணுலகத்தினர் தம் திருவடிகளைத் தொழுமாறு, தனது மணம் கமழும் மார்பில், படத்தை உடைய பாம்பு, ஆமை ஓடு, உருத்திராக்கம் முதலியவைகளை அணிந்தவராகவும், திருக்கழுமலத்தைத் தனது இடமாகவும் கொண்டுள்ளார். கருமையான மேகங்கள் தாழ்ந்து கடலில் படிகின்றன. கடலில் வலிமையான அலைகள் தோன்றுகின்றன. அந்தக் கடல் அலைகளில் நீரில் படிந்து, மணிகள், முத்துக்கள், வளைந்த சங்குகள், ஒளி பொருந்திய பவள மணிகள் ஆகியவை இழுத்து வரப்பட்டு கரையில் சேருகின்றன. இத்தகைய அழகுடைய கழுமலத்தை நினைத்து அங்குள்ள இறவனை வணங்க நம் வினைத் தீமைகள் அறுபட்டுப் போகும்.

***குறிப்புரை:*** ஊர் எதிர்ந்திடு பலி – ஊரவர் இடுகின்ற பிச்சை. கலன் – உண்ணும் பாத்திரம். படஅரவு, ஆமை, அக்கு அணிந்தவர்க்கு இடமாம் எனப் பிரிக்க. அக்கு – உருத்திராக்கம். அக்குமணியுமாம் வன்திரை மணி நித்திலம் முத்தம் சுரிசங்கம் ஒண்மணி வரன்றி கரைக்கு என்றும் கழுமலம் எனக் கூட்டுக. சுரிசங்கம் – மூக்குச் சுரிந்திருக்கின்ற சங்குகள்.

The city folks welcome Lord Civan and offer Him food in the skull bowl, carried by Him. He consumes that food. He comes into view in the sky with radiance. To enable the people on this earth to come and adore His holy feet, He wears on His fragrant chest the hooded snake, tortoise shell and the seed of Claeocarpus (*உருத்திராட்சம் அல்லது அக்கமணி*). He is enshrined in Thiru-k-kazhu-malam near the sea, over which clouds gather and the waves surcharged with abundant waters roll and shore up attractive pearls, rows of curved shells, bright red coral beads, and all kinds of gems. If we contemplate on the temple in Thiru-k-kazhu-malam and adore Lord Civan enshrined therein, the evil effects of our bad karma will leave us.

Note: Civa's ornaments are objects of our constant adoration.

முன்னுயிர்த் தோற்றமுமிறுதியுமாகி
முடியுடை யமரர்களடி பணிந்தேத்தப்
பின்னியசடை மிசைப்பிறை நிறைவித்த
பேரருளாளனார் பேணியகோயில்
பொன்னியல் நறுமலர் புனலொடுதூபஞ்
சாந்தமுமேந்திய கையினராகிக்
கன்னியர் நாள்தொறும் வேடமேபரவுங்
கழுமலநினைய நம்வினை கரிசறுமே. 6

முன் உயிர்த் தோற்றமும் இறுதியும் ஆகி,
முடி உடை அமரர்கள் அடி பணிந்து ஏத்த,
பின்னிய சடைமிசைப் பிறை நிறைவித்த
பேர்அருளாளனார் பேணிய கோயில் -
பொன் இயல் நறுமலர் புனலொடு தூபம்
சாந்தமும் ஏந்திய கையினர் ஆகி,
கன்னியர் நாள்தொறும் வேடமே பரவும் -
கழுமலம் நினைய, நம் வினைகரிசு அறுமே.

mun2 uyirt tORRamum iRutiyum Aki,
muTi uTai amararkaL aTi paNintu Etta,
pin2n2iya caTaimicaip piRai niRaivitta
pEr aruLALan2Ar pENiya kOyil--
pon2 iyal naRumalar pun2aloTu tUpam
cAntamum Entiya kaiyin2ar Aki,
kan2n2iyar nALtoRum vETamE paravum--
kazumalam nin2aiya, nam vin2aikaricu aRumE.

**பொருள்:** சிவபெருமானார் முதலில் உயிர்த் தோற்றத்தையும் பின்னர் இறுதியில் முக்தியையும் வழங்குபவர். முடியணிந்த தேவர் கணங்கள் தம் திருவடிகளைப் பணிந்து போற்ற, முறுக்கிய சடையின்மேல் பிறையை நிறைந்து சூடிய பேரருளாராகத் திகழ்கின்றார். இப்பெருமான் விரும்பிப் போற்றிய கோயில் திருக்கழுமலம் ஆகும். பொன் போன்ற மணம் பொருந்திய மலர்களும், புனல், தூபம், சந்தனம் முதலியன ஏந்திய கையினராய் விளங்குகின்றார். கன்னியர்கள் நாள்தோறும் வந்து இறைவர் கொண்டருளிய வடிவங்களைப் போற்றி வழிபடுகின்றனர். அவர்கள் கழுமலத்தை நினைத்து அங்குள்ள இறைவனை வணங்க, அவர்கள் வினைத் தீமைகள் அறுபட்டுப் போகின்றன.

**குறிப்புரை:** முன் – சர்வ சங்காரகாலத்து. உயிர்த்தோற்றமும் இறுதியும் ஆகி – உயிர்களை உடம்போடு புணர்த்துகின்ற பிறப்பும் அவற்றைப் பிரிக்கின்ற இறுதியும் ஆகிய இரண்டிற்கும் காரணமாகி, கன்னியர் மலர் தூபம் சாந்தம் ஏந்திய கையினராகிப் பரவும் கழுமலம் எனக் கூட்டுக.

Lord Civan evolves human body and also dissolves them; His feet are hailed by the crowned Devaas. He is the immensely merciful One who sports on His plaited matted hair the crescent moon. His cherished shrine is Thiru-k-kazhu-malam, where His Civa form is daily worshipped by virgins who carry in their hands fragrant golden coloured flowers, holy water, sandal paste and articles needed for holy fumigation (burning incense). If we contemplate on the temple in Thiru-k-kazhu-malam and worship Lord Civan therein the bad effects of our evil karma will vanish.

**Note:** Tonipuram: The Ark-shaped shrine in Thiru-k-kazhu-malam.

கொலைக்கணித் தாவருகூற்று தைசெய்தார்
குரைகழல்பணிந் தவர்க்கருளி யபொருளின்
நிலைக்கணித் தாவரநினைய வல்லார்தந்
நெடுந்துயர்தவிர்த் தஎந்நிமலருக் கிடமாம்
மலைக்கணித் தாவரவன்றிரை முரல
மதுவிரிபுன்னைகள் முத்தெனஅரும்பக்
கலைக்கணங் கானலின்நீழ லில்வாழுங்
கழுமலநினைய நம்வினை கரிசறுமே. 7

கொலைக்கு அணித்தா வரு கூற்று உதைசெய்தார்
குரைகழல் பணிந்தவர்க்கு அருளிய பொருளின்
நிலைக்கு அணித்தா வர நினைய வல்லார் தம்
நெடுந் துயர் தவிர்த்த எம் நிமலருக்கு இடம்ஆம் -
மலைக்கு அணித்தா வர வன் திரை முரல,
மது விரி புன்னைகள் முத்து எனஅரும்ப,
கலைக்கணம் கானலின் நீழலில் வாழும்-
கழுமலம் நினைய, நம் வினைகரிசு அறுமே.

kolaikku aNittA varu kURRu utaiceytAr,
kurai kazal paNintavarkku aruLiya poruLin2
nilaikku aNittA vara nin2aiya vallAr tam
neTun tuyar tavirtta em nimalarukku iTam Am--
malaikku aNittA vara van2 tirai murala,
matu viri pun2n2aikaL muttu en2a arumpa,
kalaikkaNam kAn2alin2 nIzalil vAzum--
kazumalam nin2aiya, nam vin2aikaricu aRumE.

பொருள்: சிவபெருமானார், தனது பக்தனான மார்க்கண்டேயரைக் கொலை செய்ய வந்த கூற்றுவனான யமனை உதைத்தவர். ஒலிக்கின்ற கழல் அணிந்த தமது திருவடியைப்

பணிந்தவர்களுக்கு உரியதான, நிலைத்த வீட்டின்பத்தை அருளுபவர். தம்மை நினைய வல்லவர்களுக்கு பிறப்பு இறப்பு என்னும் நெடுந்துயரத்தை தவிர்ப்பவர். இந்த மாசற்ற இறைவர் திருக்கழுமலத்தைத் தம் இடமாகக் கொண்டுள்ளார். மலைகளுக்கு அணிகலனாக விளங்கும் தோணிமலைக்கு அருகில் வலிய அலைகள் ஒலிக்கின்றன. தேன் நிறைந்த புன்னைகள் முத்தென அரும்புகின்றன. கடற்கரைச் சோலைகளின் நிழல்களில் மான் இனங்கள் வாழுகின்றன. இந்த அழகிய கழுமலத்தை நினைத்து அங்குள்ள இறைவனை வணங்க நம் வினைத் தீமைகள் அறுபட்டுப் போகும்.

***குறிப்புரை:*** கொலைக்கு அணித்தாவருகூற்று – கொலையை அணிய தாக்க வருகின்ற யமன். குரைகழல் – ஒலிக்குங்கழல். பணிந்தவர்க்கு அருளிய பொருளின் நிலைக்கு – வணங்கிய அடியார்களுக்கு அருளிச் செய்த வீட்டின்பமாகிய நிலைக்கு. அணித்தாவர – அணுகிவர. மலைக்கு – தோணிமலைக்கு. வன்திரை அணித்தாவர முரல – வலிய அலைகள் அணுகி வரவும் ஒலிக்கவும். மது – தேன். கலைக்கணம் – மான் கூட்டம். கானல் – கடற்கரைச் சோலை.

Lord Civan kicked Yaman to death - Yaman, the messenger of Death who came close to His devotee Maarkandeyan to snatch away His life. He is the Supreme Being ever pure; He is keen to end the miseries of all those who adore His feet - decked with resounding anklets - and granting unto them the gift of eternal beatitude for which they are eligible. He is enshrined in Thiru-k-kazhu-malam where (during the great dissolution days) big waves roar and dash against Thonimalai (hillock temple of this town) making a loud thunderous noise. In the coastal gardens of this town the flowers of Alexandrian laurel (*புன்னைமரப்பூக்கள்*) bloom like pearls and herds of deer thrive. If we contemplate on the temple in Thiru-k-kazhu-malam and adore Lord Civan therein, the bad effects of our evil karma will vanish.

புயம்பல வுடையதென் னிலங்கையர் வேந்தன்
பொருவரை யெடுத்தவன் பொன்முடிதிண்டோள்
பயம்பல படஅடர்த்தரு ளியபெருமான்
பரிவொடுமினி துறைகோயி லதாகும்
வியன்பல விண்ணினும் மண்ணினுமெங்கும்
வேறுவேறு கங்களிற்பெய ருளதென்னக்
கயம்பல படக்கடற்றி ரைகரைக் கெற்றுங்
கழுமலநினைய நம்வினை கரிசறுமே. 8

புயம்பல உடைய தென்இலங்கையர் வேந்தன்,
        பொருவரை எடுத்தவன், பொன்முடி திண்தோள்
பயம்பல பட அடர்த்து, அருளிய பெருமான்
        பரிவொடும் இனிது உறை கோயில் அது ஆகும் -
வியன்பல விண்ணினும் மண்ணினும் எங்கும்
        வேறுவேறு உகங்களில் பெயர் உளது என்ன,
கயம்பல படக் கடல்-திரை கரைக்கு ஏற்றும்-
        கழுமலம் நினைய, நம் வினைகரிசு அறுமே.

puyampala uTaiya ten2 ilagkaiyar vEntan2,
        poruvarai eTuttavan2, pon2muTi tiNtOL
payampala paTa aTarttu, aruLiya perumAn2
        parivoTum in2itu uRai kOyil atu Akum--
viyan2pala viNNin2um maNNin2um egkum
        vERu vERu ukagkaLil peyar uLatu en2n2a,
iyampala paTak kaTal-tirai karaikku eRRum--
        kazumalam nin2aiya, nam vin2aikaricu aRumE.

**பொருள்:** தென் இலங்கை மன்னனான இராவணன் தோள்கள் பலவற்றை உடையவன். கயிலை மலையைப் பெயர்க்கத் துணிந்தவன். அவனது பொன் மயமான கிரீடங்களையும், வலிமையான தோள்களையும் பலவகைகளில் அச்சப்படுமாறு அடர்த்து அருளிய பெருமான் சிவபெருமானாகும். இப்பெருமான் பேரன்போடும் பெரு மகிழ்ச்சியோடும் உறையும் கோயில் திருக்கழுமலம் ஆகும். அகன்ற பல ஆகாயத்திலும், மண்ணுலகு எங்கிலும், வேறு வேறு யுகங்களிலும், இக்கோயில் வேறு வேறு பெயருடையதாக விளங்குகின்றது. நீர்த்துளிகள் பலவாகத் தோன்றவும், கடலின் அலைகள் தொடர்ந்து வந்து மோதுவதுமாக இருக்கின்றன. இந்த அழகிய கழுமலத்தை நினைத்து அங்குள்ள இறைவனை வணங்க நம் வினைத் தீமைகள் அறுபட்டுப் போகும்.

**குறிப்புரை:** புயம் பல உடைய – இருபது தோள்களை உடைய. பயம் பலபட – பல வகையில் அச்சப்பட. பரிவொடும் – விருப்பத்தோடும். வியன் பல விண்ணினும் – அகன்ற பலவாகிய ஆகாயத்தினும் வேறு வேறு உகங்களில் பெயர் உளது என்ன – ஒவ்வொரு யுகத்திலும் ஒவ்வொரு பெயரை உடையதென்று. கயம் – யானை. நீர் எனினும் ஆம்.

The king of southern Sri Lanka who had many heads and shoulders, once tried to lift the mount Kailash, the abode of Lord Civan. Our Lord pressed the mountain by His toe and crushed His golden crowns and mighty shoulders. The king was seized

with considerable dread and repented. Eventually Lord Civan blessed him. This Lord Civan desired to be entempled in Thiru-k-kazhu-malam gladly. In all the four ages of the world (நான்கு யுகங்கள்) this town is known by different names both in this earth and in the expansive eternal world. Because of heavy rain, the waves of the sea continuously dash against the shores. If we contemplate on the temple in Thiru-k-kazhu-malam and adore Lord Civan therein, the bad effects of our evil karma will vanish.

விலங்கலொன் றேந்திவன்மழை தடுத்தோனும்
வெறிகமழ்தா மரையோனு மென்றிவர்தம்
பலங்களால்நே டியுமறிவரிதாய
பரிசினன் மருவி நின்றினிது றைகோயில்
மலங்கிவன்றி ரைவரையெனப் பரந்தெங்கும்
மறிகடலோங்கி வெள்ளிப்பியுஞ் சுமந்து
கலங்கடன்சரக் கொடுநிரக்கவந் தேறுங்
கழுமலநினைய நம்வினை கரிசறுமே. 9

விலங்கல் ஒன்று ஏந்தி வன்மழை தடுத்தோனும்,
வெறி கமழ் தாமரையோனும், என்று இவர் தம்
பலங்களால் நேடியும் அறிவு அரிதுஆய
பரிசினன் மருவி நின்று இனிது உறை கோயில் -
மலங்கி வன் திரை வரை எனப் பரந்து, எங்கும்
மறி கடல் ஓங்கி, வெள்இப்பியும் சுமந்து,
கலங்கள் தன் சரக்கொடு நிரக்க வந்து ஏறும்-
கழுமலம் நினைய, நம் வினைகரிசு அறுமே.

vilagkal on2Ru Enti van2mazai taTuttOn2um,
veRi kamaz tAmaraiyOn2um, en2Ru ivar tam
palagkaLAl nETiyum aRivu aritu Aya
paricin2an2 maruvi nin2Ru in2itu uRaikOyil--
malagki van2 tirai varai en2ap parantu, egkum
maRikaTal Ogki, veL ippiyum cumantu,
kalagkaL tam carakkoTu nirakka vantu ERum--
kazumalam nin2aiya, nam vin2ai karicu aRumE.

**பொருள்:** திருமால், கோவர்த்தன மலையைக் குடையாகப் பிடித்து மழையைத் தடுத்தவன். பிரமன், மணம் கமழும் தாமரையில் தோன்றியவன். இவர்கள் இருவரும் தமது உடல் பலத்தால் தேடியும் அறிய முடியாத வடிவை உடைய சிறப்பினர் சிவபெருமானார். இப்பெருமானார் விரும்பி வந்து, இன்பம் தருமாறு உறையும் கோயில் திருக்கழுமலம் ஆகும்.

வலிமையான கடல் அலைகள் ஒன்றோடு ஒன்று மோதிக் கலங்கி மலைகளைப் போல எங்கும் பரவி, கரையில் மோதி மீளுகின்றன. கடலில் மரக்கலங்கள் வெள்ளிய முத்துச் சிப்பிகளைச் சுமந்து, தன்னிடத்தில் ஏற்றப்பட்ட சரக்கோடு, வரிசையாக கரையை நோக்கி வருகின்றன. இந்த அழகிய கழுமலத்தை நினைத்து அங்குள்ள இறைவனை வழிபட நம் வினைத் தீமைகள் அறுபட்டுப் போகும்.

**குறிப்புரை:** விலங்கல் – கோவர்த்தன கிரி. தம் பலங்களால் – தமது உடற்பலத்தால். மலங்கி – கலங்கி. வரையென – மலையைப் போல. கலங்கள் தன்சரக்கொடு நிரக்க – கப்பல்கள் தன்னிடத்து ஏற்றப்பட்டுள்ள சரக்கோடு வரிசையாக.

In one of the avatars of Thirumaal as Krishna, he lifted up a celebrated hill called as Goverthana Giri (*கோவர்த்தன கிரி*). He holded it up in the shy and sheltered the cows and cowherds from a rain storm sent by Indra. Brahma is normally seated over the fragrant Lotus flower. These two with all their might quested after Lord Civan in vain; such is Lord Civan's stature. With love and joy He abides in Thiru-k-kazhu-malam close to which is the sea. The white waves rising aloft everywhere like a mountain-range, dash against the shore and return back to the sea. Barges carrying goods together with white pearl shells drive in rows towards the shore. If we contemplate on the temple in Thiru-k-kazhu-malam and adore Lord Civan therein, the bad effects of our evil karma will vanish.

ஆம்பலதவ முயன்றறவுரை சொல்லு
மறிவிலாச் சமணருந் தேரருங்கணிசேர்
நோம்பலதவ மறியாதவர் நொடிந்த
மூதுரை கொள்கிலா முதல்வர் தம்மேனிச்
சாம்பலும்பூசி வெண்டலை கலனாகத்
தையலாரிடுபலி வையகத்தேற்றுக்
காம்பனதோளி யொடினிதுறை கோயில்
கழுமல நினைய நம்வினை கரிசறுமே. 10

ஆம் பலதவம் முயன்ற அறஉரை சொல்லும்
அறிவு இலாச் சமணரும், தேரரும், கணி சேர்
நோம் பலதவம் அறியாதவர் நொடிந்த
மூதுரை கொள்கிலா முதல்வர் - தம் மேனிச்

சாம்பலும் பூசி, வெண்தலை கலன் ஆகத்
தையலார் இடு பலி வையகத்து ஏற்று, -
காம்பு அன தோளியொடு இனிது உறை கோயில்
கழுமலம் நினைய, நம் வினைகரிசு அறுமே.

Am palatavam muyan2Ru aRa urai collum
aRivu ilAc camaNarum, tErarum, kaNi cEr
nOm palatavam aRiyAtavar noTinta
mUturai koLkilA mutalvar--tam mEn2ic
cAmpalum pUci, veNtalai kalan2 Akat
taiyalAr iTu pali vaiyakattu ERRu,--
kAmpu an2a tOLiyoTu in2itu uRai kOyil
kazumalam nin2aiya, nam vin2aikaricu aRumE.

**பொருள்:** சமணரும் புத்தரும் அவர்களால் இயன்ற அளவு பல தலங்கள் தோறும் சென்று, அறிவற்ற அறவுரைகளை மக்களிடையே பரப்பி வருகின்றனர். அவர்கள், மெய்யான தவம் பலவற்றின் உண்மையான கருத்துக்களைப் புரிந்து கொள்ளாதவர்கள். ஆதலால் அவர்கள் கூறிவரும் நகைப்புக்கிடமான உரைகளை ஏற்று அருளாதவர் நம் சிவபெருமான். நம் முதல்வரான சிவபெருமான் தம் மேனியில் திருநீற்றைப் பூசியிருப்பவர். வெண்டலையை உண்கலனாகக் கொண்டு மகளிர் இடும் பலியை ஏற்பவர். மூங்கில் போன்ற தோள்களை உடைய உமையம்மையோடு மகிழ்ச்சியாக உறையும் கோயில் திருக்கழுமலம் ஆகும். இந்த அழகிய கழுமலத்தை நினைத்து அங்குள்ள இறைவனை வணங்கினால் நம் வினைத்தீமைகள் அறுபட்டுப் போகும்.

**குறிப்புரை:** ஆம்பலதவம் முயன்று – ஆகிய பலவிதமான தவங்களைச் செய்து. தேரர் – புத்தர். கணிசேர் – எண்ணத்தக்க. நோம்பல தவம் – துன்பத்தைத் தரும் பல தவங்களை. அறியாதவர் – அறியாதவர்களாய். நொடிந்த – சொன்ன. தையலார் – பெண்கள். காம்பு அனதோளியோடு – மூங்கிலையொத்த தோளை உடைய உமாதேவியோடு.

Lord Civan is the One who never concedes with the pseudo words of wisdom uttered by the brainless Samanars who undertake different kinds of austerities and come forward to advise others. Also the Buddhists who are unacquainted with the many forms of taxing austerities, come forward to tell us all sorts of meaningless adages. Lord Civan will not pay heed to any of their sayings. He smears His body with holy ashes, carries a white human skull as His begging bowl and receives alms from

women. He is entempled in Thiru-k-kazhu-malam happily with His consort Umaa Devi whose shoulders are like bamboo. If we contemplate on the temple in Thiru-k-kazhu-malam and adore Lord Civan therein, the bad effects of our evil karma will vanish.

கலிகெழு பாரிடையூரென வுளதாங்
கழுமலம்விரும்பியகோயில் கொண்டவர்மேல்
வலிகெழு மனமிகவைத் தவன்மறைசேர்
வருங்கலைஞான சம்பந்தனதமிழின்
ஒலிகெழு மாலையென்று ரைசெய்தபத்து
முண்மையினால் நினைந்தேத்த வல்லார்மேல்
மெலிகெழு துயரடையா வினைசிந்தும்
விண்ணவராற்றலின் மிகப்பெறுவாரே. 11

கலி கெழு பார் இடை ஊர் என உளதுஆம்
கழுமலம் விரும்பிய கோயில் கொண்டவர்மேல்,
வலி கெழு மனம் மிகவைத்தவன் மறைசேர்-
வரும் கலை ஞானசம்பந்தன தமிழின்
ஒலிகெழுமாலை என்று உரைசெய்த பத்தும்
உண்மையினால் நினைந்து ஏத்த வல்லார்மேல்
மெலி கெழு துயர் அடையா; வினை சிந்தும்;
விண்ணவர் ஆற்றலின் மிகப் பெறுவாரே.

kali kezu pAr iTai Ur en2a uLatu Am
kazumalam virumpiya kOyil koNTavar mEl,
vali kezu man2am mika vaittavan2, maRai cEr-
varum kalai njAn2acampantan2 tamizin2
olikezumAlai en2Ru uraiceyta pattum
uNmaiyin2Al nin2aintu Etta vallArmEl
meli kuzu tuyar aTaiyA; vin2ai cintum;
viNNavar ARRalin2 mikap peRuvArE.

**பொருள்:** ஆரவாரம் மிக்க இந்த உலகத்தில், ஊர் எனப் போற்றப் பெறும் தலம் திருக்கழுமலம் ஆகும். இந்தக் கழுமலத்தை விரும்பிக் கோயில் கொண்டவர் சிவபெருமான். இப்பெருமான் மேல் உறுதியோடு தன் மனத்தை வைத்திருப்பவர் ஞானசம்பந்தன். இவர் வேதங்களிலும் கலைகளிலும் வல்லவர். தமிழ் மொழியின் இசையோடு இப்பதிகத்தை மாலையாகப் பாடினார். இந்தப் பத்துப் பாடல்களின் உண்மைப் பொருளை உணர்ந்து துதித்துப் பாட வல்லவர்கள், மெலிவைத் தரும் துன்பங்களை அடைய மாட்டார்கள்.

அவர்களுடைய வினைகளும் நீங்கிவிடும். அவர்கள் விண்ணவரிலும் மேம்பட்ட ஆற்றலைப் பெறுவார்கள்.

**குறிப்புரை:** கலிகெழுபார் – ஒலிமிக்க உலகம். வலிகெழு மனம் – உறுதியான மனம். ஒலிகெழு மாலை – இசையோடு கூடிய மாலை. மெலிகெழு துயர் – மெலிவைச் சேர்க்கும் துன்பம்.

The mind of Gnaanasambandan is firmly fixed on to Lord Civan who willingly abides in Thiru-k-kazhu-malam - the town of towns in the bustling world. He is an adept in Vedas and in all scriptures. He has sung in tuneful music this hymn in Tamil, a garland of ten verses. Those who can understand and adore Lord Civan with deep devotion singing these ten verses will be relieved of excruciating misery; their bad karma will cease to be and they will achieve valour far greater than that of celestial beings.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*79ஆம் பதிகம் முற்றிற்று*
End of 79th Hymn

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# 80. கோயில் (தில்லை – சிதம்பரம்)

## திருத்தல வரலாறு:

இத்தலம் சிதம்பரம் என வழங்கப்படுகின்றது. சோழ நாட்டுக் காவிரி வடகரைத் தலம். சென்னை – திருச்சி நேர்வழி இருப்புப்பாதையில் சிதம்பரம் இரயில் நிலையம் உள்ளது. தமிழகத்தின் அனைத்து நகர்களில் இருந்தும் பேருந்துகள் உள்ளன. தில்லை, சிதாகாச க்ஷேத்திரம், பெரும்பற்றப்புலியூர் என்பன இதன் மறுபெயர்கள். மைத்ரேய உபநிஷதம் 'இருதயாகாச மயம் கோசம் ஆனந்தம் பரமாலயம்' எனக் குறிப்பிடுகின்றது. திருமந்திரத்தில் திருவம்பலச் சக்கரம், திருக்கூத்து, சிதம்பரம் முதலியன குறிப்பிடப் படுவதால் இதன் தொன்மை விளங்கும். கீஸ்ட் லிச் பேராசிரியர் கி.பி. 5ஆம் நூற்றாண்டு முதல் 10, 11 வரையில் கட்டப்பட்டுள்ள கட்டடங்கள் இங்கு இருக்கின்றன என்கிறார். இத்தலத்தின் கிழக்கே, அண்ணாமலைப் பல்கலைக் கழகம் அமைந்துள்ளது. திருவேட்களம் என்னும் பாடல் பெற்ற சிவத்தலமும் அண்ணாமலைப் பல்கலைக் கழக வளாகத்தினுள் உள்ளது.

### மூர்த்திகள்:

திருமூலட்டானேசுரர், உமையம்மை, முக்குறுணி விநாயகர், கற்பக விநாயகர், பாண்டிய நாயகம், அம்மன், நவலிங்கம், துர்க்கை முதலியன மிக விளக்கம் வாய்ந்தவை. வைஷ்ணவத்தில் திருச்சித்திரகூடம் என வழங்கும், பெருமாள் தில்லைக் கோவிந்தராசர், தாயார் புண்டரீக வல்லித் தாயார். ஐந்து சபைகளுள் இது கனகசபை. இத்தலத்திலேயே ஐந்து சபைகள் உள்ளன. அவை சிற்சபை (இது நடராசப் பெருமான் இருக்குமிடம்). கனகசபை (சிற்சபைக்கு முன்னால் உள்ள பகுதி), ராஜசபை (ஆயிரங்கால் மண்டபம்), நிருத்த சபை (நடராசப் பெருமானின் கொடி மரத்திற்கு அருகில் உள்ளது), தேவசபை (உற்சவமூர்த்திகள் தங்குமிடம்) என்பன. இத்தலத்துச் சிறப்புடைக் கடவுள் ஆனந்த நடராசர். அவருடைய திருமேனி முழுவதும் பஞ்சாக்கர வடிவம். அவருடைய திருக்கூத்து ஒரே காலத்தில் ஐந்து தொழிலையும் குறிப்பிப்பது.

**தீர்த்தங்கள்:**

சிவகங்கை, பரமானந்தகூபம், புலிமடு, வியாக்கிரபாத தீர்த்தம், ஆனந்தத் தீர்த்தம், நாகசேரி, பிரமதீர்த்தம், சிவப்பிரியை, திருப்பாற்கடல் முதலியன. நடராசப் பெருமானோடு உடனாடிய காளிதேவி அவன் ஆடும் ஆட்டத்தையே தானும் ஆடிக்கொண்டிருந்தாள்; இறைவன் ஊர்த்துவ தாண்டவம் ஆடினார். அது சமயம் தரையில் விழுந்த காதணியைத் தன் கால் விரல்களால் பற்றிக் கொண்டு, அந்தக் காலைத் தன் இடுப்பிலிருந்து தூக்கிக் காதணியைக் காதில் மாட்டி நடனத்தை விடாது செய்து வந்தார். காளிதேவி, பெண்மையின் நாணத்தால் அவ்வாறு காலைத் தூக்கி ஆடமுடியாமல், தன் தோல்வியை ஒப்புக் கொண்டு, இறைவனுக்கு முன் தன் ஆணவம் செல்லாது என்பதை உணர்ந்து, வருந்தி, வணங்கி நின்றாள். அந்தக் காளியின் கோயில் இந்தச் சிவப்பிரியைத் தீர்த்தத்தின் கீழ்க்கரையில், சிதம்பரத்தின் வட எல்லையில் இருக்கிறது. தலவிருட்சம் ஆல். இது இன்று இல்லை. தில்லை வனம் என்ற பெயரால் தலவிருட்சம் தில்லை என்பாரும் உளர்.

**கல்வெட்டு:**

சிதம்பரம் ஒரு தனி ஊராக அரசன் நேர் பார்வையில் இருந்து வந்தது. இதனைச் சூழப் பதினான்கு சிற்றூர்கள் இருந்தனவாகக் குறிக்கப்பட்டு உள்ளன. இத்தலத்தின் பழைய பெயர் சிற்றம்பலம், புலியூர், பெரும்பற்றப்புலியூர், பொற்புலியூர், தில்லை, தில்லையூர், கோயில் என்று கல்வெட்டுக்களில் வழங்கப்படுகிறது. தில்லையின் தேவ காரியக் கண்காணிப்பாளர்களே சோழநாடு முழுமைக்கும் தேவாலயக் கண்காணிப்பாளராக இருந்து வந்தனர். சோழ மன்னர்களுக்கு முடிசூட்டும் உரிமை தில்லை தேவகாரியக் குழுவினர்க்கே இருந்தது.

கல்வெட்டுக்களில் மிகப் பழமையானதாகிய இராஜேந்திர சோழ தேவனுடைய 24ஆம் ஆண்டுக் கல்வெட்டும், குலோத்துங்க சோழ தேவனுடைய 47ஆம் ஆண்டுக் கல்வெட்டும் கனகசபையையும் திருமூலட்டானத்தையும் பிரிக்கும் சுவரில் உள்ளன.

கனக சபையைச் சுற்றியுள்ள பிராகாரம் விக்கிரமசோழன் திருமாளிகை என்றும், திருமூலட்டானத்தைச் சேர வருகின்ற இரண்டாம் பிராகாரம் குலோத்துங்க சோழன் திருமாளிகை என்றும், அதற்கும் வெளியிலுள்ள மூன்றாம் பிராகாரம் இராசாக்கள் தம்பிரான் திருமாளிகை என்றும் வழங்கப்பட்டன. இவற்றுள் குலோத்துங்கன் சோழன் திருமாளிகை என்ற பெயரும் விக்கிரமசோழன் திருமாளிகை என்ற பெயரும் மேற்குறித்த சுவரில் உள்ள கல்வெட்டுக் களிலேயே காணப்படுகின்றமையின், விக்கிரமனே தன் தந்தையாகிய குலோத்துங்கன் பெயரால்

உட்பிராகாரத்தையும், தன்பெயரால் இரண்டாம் பிராகாரத்தையும் செய்திருக்க வேண்டும் என்று தெரிகிறது.

சம்பந்தர் முதலிய மூவர் காலத்திலேயே இத்தலம் சிறப்புற்றிருக்கவும், அவர்கள் காலத்திய பல்லவ வேந்தர்களின் கல்வெட்டு ஒன்றும் இதில் காணப்பெறாமை விளங்கவில்லை. சிதம்பரத்தைப் பற்றிய கல்வெட்டுக்கள் 271 உள்ளன. அவைகளுள் பெரும்பாலன கோப்பெருஞ்சிங்க அரசனைப் பற்றியும், ஜடாவர்மன் சுந்தர பாண்டியனைப் பற்றியும் கூறுவன. முதலாம் இராஜேந்திரன் காலத்திலிருந்து மூன்றாம் இராஜராஜன் வரை உள்ள பலருடைய கல்வெட்டுக்களும் விஜயநகர மன்னர்களின் கல்வெட்டுக்களும் நாயக்க மன்னர்களின் கல்வெட்டுக்களும் இருக்கின்றன.

இவைகளுள் பெரும்பாலனவற்றில் நந்தவனப் பணிகளே அறிவிக்கப்பட்டு உள்ளன. மிகச் சிலவற்றுள் பூசை வழிபாட்டுக்கு உரிய நிவந்தங்கள் குறிக்கப்பட்டு உள்ளன. அறச்சாலைகளைப் பற்றியும், அக்கிரகாரங்கள் அமைப்பதைப் பற்றியும், திருப்பாவாடை (மூலவர் முன் ஆடை விரித்து அதில் படைக்கும் அன்னம்) போடுவதைப் பற்றியும் தெரிவிக்கின்றன. சில கல்வெட்டுக்கள். விக்கிரம சோழனது காலம் வரையில் கோயிற் சார்பாக நடைபெற்ற சாசனங்கள் எல்லாம் திருப்புலியூர்ச் சண்டேசுவர தேவ நாயனார் பெயராலேயே நடை.பெற்று வந்திருக்கின்றன. இவன் காலத்துக்குப் பிறகு கோயில் கண்காணிப்புச் சபையின் பெயராலேயே எல்லாச் சாசனங்களும் நடைபெற்று வந்திருக்கின்றன.

அரசாங்கத் தலைமை அதிகாரிகளும், உள் நாயகத்தார்களும், சீகாரியம் செய்வார்களுமாகப் பலர் மேற்கூறிய சபையின் அங்கத்தினர்களாக இருந்து, கோயிற் காரியங்களை மேற்பார்வை செய்து வந்துள்ளார்கள். சிதம்பரம் திருக்கோயிலைக் கண்காணித்தவர்களாக (1) தொண்டைமான்; (2) திருவையாறு உடையான்; (3) மதுராந்தகப் பிரமராயன்; (4) தில்லையம்பல பேரரையன்; (5) விழிஞத்தரையன்; (6) இராஜராஜ விழுப்பரையன்; (7) சித்தரையன்; (8) வில்லவரையன்; (9) அங்கராயன்; (10) சிங்களராயன்; (11) விஜய ராயன்; (12) மூவேந்தரையன்; (13) வாணதரையன்; (14) வயல்நாட்டரையன்; (15) பொத்தப்பிச் சோழன்; (16) காரணை விழுப்பரையன்; (17) குருகுலராயன்; (18) மழவராயன்; (19) காடு வெட்டி; (20) வயிராதிராயன்; (21) விலாடராயன்; (22) விக்ரம சோழப்பிரம ராயன்; (23) விள நாடு உடையான்; (24) நிகரில் சோழப்பல்லவரையன்; (25) குலோத்துங்க சோழவாண கோவரையன்; (26) எதிரில் சோழ வேளான்; (27) நரசிம்மவர்மன்; (28) பாண்டியராயன்; (29) மலையப்பிராயன்; (30) வேணாடுடையான் முதலிய பலர் குறிக்கப்படுகிறார்கள்.

கிழக்கு, தெற்கு, மேற்குக் கோபுரங்களை முடிசூடிய மன்னர்கள் கட்டியதாகவும், வடக்குக் கோபுரத்தைக் கடவுள் தானே கட்டிக் கொண்டதாகவும், எஸ். ஐ. ஐ. 374 – 1913 கல்வெட்டுப் பாட்டொன்று அறிவிக்கிறது. இவ்வடக்குக் கோபுரத்தைக் கிருஷ்ண தேவராயன் தொடங்கி நிலை மட்டம் வரையிலோ, அல்லது அதற்கு மேலுமோ நிறுத்திய தாகவும், அச்சுத தேவராயன் இதனை முற்றுப் பெறுவித்ததாகவும் கல்வெட்டுக்களால் யூகிக்க இடந்தருவதால் கடவுள் தானே கட்டிக் கொண்டார் என்று கல்வெட்டு உபசாரமாகக் கூறுகிறது போலும். தெற்குக் கோபுரம் கோப்பெருஞ்சிங்கனால் கட்டப்பட்டது. இவனுக்கு அழகிய சிங்கன் என்ற மற்றொரு பெயருமுண்டாதலால் இக்கோபுரம் சொக்கசீயம் என்று குறிக்கப்பட்டுள்ளது. இதனைத் தெற்கில் சொக்கச்சீயம், திருநிலை யேழுகோபுரத் திருவாசல் திருப்பணிக்கு உடலாகத் தொண்டை நாட்டு ஆத்தூரில் நிலம் விட்டதாக வரும் ஆத்தூர் முத்தீசுரமுடையார் கல்வெட்டும், கச்சிஏகம்பமுடையார் கல்வெட்டும் தெரிவிக்கின்றன.

மேலைக் கோபுரத்தைத் திருப்பணி செய்த சிற்பிகள் விருத்தகிரி சேவகப் பெருமாளும் அவன் மகன் விச்வமித்துருவும், திருப்பிரைக்குடையாசாரி திருமருங்கனும், அவன் சகோதரன் சாரணாசாரியும் ஆவார்கள் எனக் கல்வெட்டுக் காட்டுகிறது. இன்னும் அதிலேயே கீழ்ப்புறச் சுவரில் காமதேவன், அகத்தியன், சீதேவி, தேவேந்திரன், கணேசன், துர்க்கை, இவ்வுருவங்களும் வடபுறச்சுவரில் ருத்ரதேவர், ராகு கேதுக்கள், நாரதன், அளகேசன், சந்திரன், கிரியாசக்தி, சனி, வாயு இவ்வுருவங்களும் மேல்புறச் சுவரில் க்ஷேத்ர பாலப் பிள்ளையார், கங்காதேவி, தன்வந்திரி, திரிபுரசுந்தரி, சுக்கிரன், வைஜயன், நாகன், யமுனை, பத்ரகாளி, ஆதிசண்டீசர் இவ்வுருவங்களும், தென்சுவரில் புதன், நிருதி, ஞானசக்தி, அக்னிதேவன் இவ்வுருவங்களும் இருப்பனவாக அறிவிக்கிறது. தேவாரம் பாடிய மூவர் முதலிகளாகிய திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் ஆகிய மூவருக்கும் தனித்தனியே ஆலயங்கள் இருந்தனவாகக் கல்வெட்டுக்கள் அறிவிக்கின்றன.

வடக்குக் கோபுரத்தை அடுத்துத் திருத்தொண்டத் தொகையீச்சரம் என்ற ஒன்று குறிப்பிடப்படுகிறது. இதில், திருத்தொண்டத் தொகையில் பாராட்டப் பெற்ற தனிஅடியார் அறுபத்து மூவரும், தொகையடியார் ஒன்பதின்மருமாக உள்ள பெருமக்களில், தனியடியார் களுக்குத் தனித்தனித் திருவுருவம் அமைக்கப் பெற்றமை போலத் தொகையடியார் களாகிய கூட்டத்தினருக்குத் தனித்தனி உருவம் அமைக்க முடியாமையின் ஒவ்வொரு தொகுதிக்கும் ஒவ்வொரு இலிங்கத் திருமேனியாக எழுந்தருளச் செய்திருக்கிறது. முத்தி அடைந்த பெருமக்களை உருவம் தெரிந்தால் உருவம் அமைத்தும், உரு அமைக்க முடியாததற்கு சிவலிங்கம் தாபித்தும், அதுவும் இல்லையானால், பீடங்கள் அமைத்தும் வழிபடலாம் என்று ஆகமம் கூறுகிறது. ஆதலால்,

உருவம் அமைக்க முடியாத தொகை யடியார்களைச் சிவலிங்கத் திருமேனி வாயிலாக வழிபட வேண்டி, திருத்தொண்ட தொகையீச்சரம் என்ற இக்கோயிலை அமைத்து உள்ளார்கள். அன்றியும் தொண்டத் தொகை பாடிய சுந்தரர் வடக்கு வாயில் வழியாக வந்தார் என்பது ஊன்றிக் கருதத் தக்கது. இவ்வாலயம் நவலிங்கம் கோயில் என இப்பொழுது வழங்கப்படுகிறது.

மூர்த்திகளின் திருநாமங்கள்: பொன்னம்பலக் கூத்தன், பொன்னம்பல நாதன், ஆனந்த தாண்டவப் பெருமாள் நாயனார், அழகிய திருச்சிற்றம்பலம் உடையார், ஆளுடைய நாயனார், சிதம்பரேசுவரர், தில்லை நாயகத் தம்பிரானார் முதலான பலபெயர்களால் குறிக்கப்படுகிறார். திருச்சிற்றம்பலக் கோவையில் மாணிக்கக் கூத்தன் என்றும் இறைவன் பெயர் வழங்கப்படுகின்றது. அதற்குப் பேராசிரியர், மாணிக்கம்போலும் கூத்தினை உடையான் என்று உரை கண்டார். ஆனாலும், அது இரத்தின சபாபதியாகிய மரகத நடராஜரைக் குறிப்பது என்பது தெளிவு.

அம்மை சிவகாமசுந்தரி என்றும், திருக்காமக் கோட்டமுடைய பெரிய நாச்சியார் என்றும் வழங்கப்படுகிறார். சிவகாமசுந்தரி என்பது சிற்சபையில் இறைவன் இடப்பாகத்தில் எழுந்தருளி இருக்கும் அம்மையைக் குறிப்பதாகும். முக்குறுணி விநாயகர், முகக் கட்டணத்து விநாயகர் எனவும், குலோத்துங்க சோழ விநாயகர் எனவும் கல்வெட்டுக்களில் குறிப்பிடப் படுகின்றார். முகக்கட்டணம் என்பது முகப்பு. தில்லைக்குத் தெற்குக் கோபுரமே சிறந்த பெருவாயில். அவ்வழியாகவே நடராஜப் பெருமானை வழிபடச் செல்கின்றவர்கள் செல்வது முறையாம். நடராஜப் பெருமானின் திருமுன்பும் இதுவே ஆதலால் முகப்பில் இருக்கும் பிள்ளையார் முகக்கட்டண விநாயகர் எனக் குறிப்பிடப்படுகிறார். முகக் கட்டணம் என்பது முக்கணமாகி – முக்கணம் முக்குணியாக, போலி இலக்கண அறிவு அதனை முக்குறுணியாக்கிவிட்டது. அதன் உருவத்தின் பெருமையையொட்டி, முக்குறுணி அரிசிக்கு ஒரே மோதகம் செய்து நிவேதிக்கப்படுவதால் இப்பெயர் உண்டாயிற்றென்ற செவிவழிச் செய்தியும் கிளைத்து விட்டது.

விக்கிரம சோழன் தெற்குத் திருவீதியில் வடபக்கத்துச் செங்கனி வாயான் திருநந்தவனத்து எழுந்தருளியிருக்கும் திருஞான சம்பந்தப் பிள்ளையார் பண்டார உடலிட்டும் என்ற குறிப்பு காணப் பெறுவதால் விக்கிரமசோழன் திருவீதியில் திருஞான சம்பந்தருக்குத் தனியாகக் கோயில் இருந்தமை தெற்றெனப் புலப்படும். மேலைக் கோபுரத்தை அடுத்து, திருநாவுக்கரசருக்குத் தனிமடம் இருந்ததாகக் காட்டப்பெறுகிறது. முருகன், சுப்பிரமணியப் பிள்ளையார் என்று ஒரு கல்வெட்டில் குறிக்கப் பெறுகிறார். கற்பக விநாயகர், க்ஷேத்திர பாலப் பிள்ளையார் என்றும், குலோத்துங்க சோழ விநாயகர் என்றும் குறிப்பிடப் படுகின்றார். தில்லைக்காளி, தில்லை வனமுடைய பரமேசுவரி என்று குறிப்பிடப் படுகின்றார்.

**விழாக்கள்:**

தில்லையில் திரு ஆனித் திருநாளும், மார்கழித் திருவாதிரைத் திருநாளும் சிறப்பாகக் கோப்பெருஞ்சிங்கன் காலத்து முன்பிருந்தே நடைபெற்று வந்தன. மாசி மாதத்தில் ஒரு திருவிழா நடந்ததாகத் தெரிகிறது. அதில் திருத்தொண்டத் தொகை விண்ணப்பம் செய்யப் பெற்று வந்தது. ஏனைச் சிவத் தலங்களில் அம்மைக்கு ஆடிப்பூர விழா நடைபெற்று வருவது போல இங்கு ஐப்பசிப் பூரவிழா நடைபெற்று வருகிறது. மாசி மக நட்சத்திரத்தன்று நடைபெறும் கடலாட்டு விழாவும் குறிப்பிடப்படுகின்றது. திருப்புதியது விழா என்று ஒன்று காணப்படுகிறது. அதில் அம்மைக்குப் புதிய ஆடை சாத்தியதாகக் குறிப்பிடப் பெற்றுள்ளது. திருப்புடைவையீடுவிழா என்றும் அது வழங்கப் பெற்றுப் பின் திருப்புதியது விழா என்று வந்திருக்கலாமோ என்று கருத இடமுண்டு. அன்றி, திருப்பாலி வளத்திருநாள் என்று ஒரு விழா குறிப்பிடப்பட்டுள்ளது. அது ஐப்பசிப் பூரத் திருநாளைக் குறிப்பதாகுமோ என ஐயந்தருகிறது. இதில் அம்மை நீராடி, வெள்ளணி அணிந்து, பயறு முதலிய நவதானியங்களின் முளையைத் தன்மடியில் தரிக்கும் நாளாதலின் பாலிவளத் திருநாள் எனப்பட்டது போலும் (பாலி – நவதானிய முளை). வசந்தத் திருநாள் என்பது பெருமான் வசந்த உற்சவம் கொண்டாடக் குலோத்துங்கன் தோப்புக்கு எழுந்தருளியதாகத் தெரிகிறது. திருக்கண் சாத்தும் திருநாளும், பெருமான் பரிவார நாயன்மார்களுக்குத் திருவருள் நோக்கம் செய்யும் திருநாளாகும் என அக்கல்வெட்டே குறிப்பிடுகிறது.

இந்த ஒன்பது விழாக்களையுமன்றி, எதிரிலி சோழன் சிவபாத சேகரன் சித்தத் துணைப் பெருமாள் விழா என ஒன்று குறிப்பிடப்படுகின்றது. சிவபாத சேகரன் என்பது, முதல் இராஜராஜனுக்கு வழங்கிய பெயர். எதிரிலி என்பது, முதல் குலோத்துங்கனாகிய இராஜராஜன் வரையில் இருந்த சோழ மன்னர்கட்குச் சித்தத் துணையாகவே இருந்து வந்த நடராஜப் பெருமானுக்கு நடந்த பெருவிழாக்களையே இது குறிப்பிட்டதாகுமென ஊகிக்கலாம். இதுவன்றித் தைப்பூசத்தில் பாவாடையிட்டுப் பெரிய பூசை விழா ஒன்று நடத்தியதாகவும் தெரிகிறது. இத்தகைய திருவிழாக்கள் கல்வெட்டுக்களில் இருந்து அறிய வருகிறது என்பது சிந்திக்கத் தக்கதொன்று.

கீழக்கோபுரத்தின் வாயிலின் வலப்பக்கத்தில் காணப்பெறும் கல்வெட்டு, சோழகுல வல்லியால் நாயன்மார்களுடைய பாமாலையைப் பாராயணம் செய்விப்பதற்காக நிவந்தம் விட்டதை அறிவிக்கின்றது. முதலாம் இராஜேந்திரன் காலத்தில் மாசித் திருவிழாவில் அழகிய திருச்சிற்றம்பலம் உடைய நாயனார் சந்நிதியில் திருத்தொண்டத் தொகை பாராயணம் செய்வாருக்கு நிலம் விட்டதாக உள்ளது. திருஞானசம்பந்தர் தெற்குக் கோபுர வாசல் வழியாக

உட்சென்று நடராசப்பெருமானை வழிபட்டதாகவும், திருநாவுக்கரசர் மேற்கு வாயில் வழியாகவும், சுந்தரர் வடக்கு வாயில் வழியாகவும் சென்று வழிபட்டனர் என்றும் பெரிய புராணம் அறிவிக்கின்றது. மாணிக்கவாசகர் கிழக்கு வாயில் வழியாக சென்று வழிபட்டார் என்று அறியப்படுகிறது. சம்பந்தர் முதலிய மூவருக்கும், தெற்கு, மேற்கு, வடக்கு ஆகிய கோபுரங்களைச் சார இராஜாக்கள் தம்பிரான் திருமாளிகைத் திருவீதியில் தனித்தனியே திருக்கோயில் இருந்ததாகவும், அவற்றுள் சம்பந்தப் பிள்ளையார் திருக்கோயில் பொன்வேயப்பெற்று இருந்ததாகவும் கல்வெட்டுக்கள் அறிவிக்கின்றன. இதனால் திருமுறைகளுக்கும், திருமுறைகளைப் பாடியருளிய சமயாச்சாரியர்களுக்கும் எவ்வளவு சிறப்பு – சிதம்பரத்திலிருந்தது என்பதை ஊன்றி நோக்க வேண்டும்.

அப்பூதியடிகள் நாவுக்கரசர் மீதிருந்த பற்றினால் நிலம் புலம் எல்லாவற்றிற்கும் அவர் பெயரிட்டு வழங்கியது போல, அரசர்கள் ஆனந்தக் கூத்தர் மீதிருந்த பற்றால், குடிஞைக் கல்லுக்கும் (ஒரு வகை எடைக்கல்), மரக்காலுக்கும் ஆடவல்லான் என்று பெயரிட்டு வந்தனர். சிற்றூர்களுக்குத் தில்லை விடங்கன், கூத்தனூர், கோயிற்பூண்டி, சபாநாயகபுரம், தில்லை நாயகபுரம், நடராஜபுரம் என்றும், ஓடைநீர் நிலை முதலியவற்றிற்குக் கூத்தாடு நாயகன் திருவோடை, ஆளுடைய நாயகன் திருவோடை என்றும் பெயரிட்டு இருந்தனர். தம்மிடம் அரசகாரியம் பார்ப்பாருக்குத் தில்லையம்பலப் பல்லவராயன், திருச்சிற்றம்பலம் உடையான் நக்கன், இளைய திருச்சிற்றம்பலம் உடையான், தில்லையம்பலப் பேரரையன் என்றும் பெயர் வைத்திருந்தமை அரசர்கட்கு உள்ள அன்பின் முதிர்ச்சியை எடுத்துக்காட்டும் தக்க சான்றுகளாகும்.

இத்தலத்திற்குப் பணிசெய்த மன்னர்களில் பல்லவர்களில் இரணியவர்மன், கோப்பெருஞ்சிங்கன் முதலியோர்களும் பாண்டியர்களில் மாறவர்மன் சுந்தரபாண்டியன், ஜடாவர்மன் சுந்தரபாண்டியன், மாறவர்மன் வீரபாண்டியன், விக்கிரம பாண்டியன் குலசேகரன் முதலியோர் குறிக்கப்படுகிறார்கள். சோழ மன்னர்களில் முதல் பராந்தகன் முதல் மூன்றாம் இராஜராஜன் வரையிலுமாகப் பதின்மர் குறிப்பிடப்படுகிறார்கள். இவர்களில் இரணியவர்மனும், முதல் பராந்தகனும், மணலில் கூத்தன் காளிங்கனும், அனபாயன் முன்னோர்களும் அனபாயனும் பல காலங்களில் பொன் வேய்ந்தார்கள் என்று கல்வெட்டுக்கள் அறிவிக்கின்றன. இன்னும் விஜயநகர மன்னர்களும், நாயக்க அரசர்களும், சேர அரசர்களும் திருப்பணிகள் மிகச் செய்துள்ளார்கள்.



திருநல்லூர் – பெரியாண்டேஸ்வரர் – சோழநாட்டு தென்கரைத் தலம்
**Periyaandesurer Temple - Tirunallur, Tamil Nadu**



சிதம்பர நடராசர் திருக்கோயில் – நடராசர் – சோழநாட்டு வடகரைத் தலம்
**Chidambaram Nadarasar Temple, Chidambaram - Tamil Nadu.**



திருக்கோளிலி (திருக்குவளை) – கோளிலி நாதர் – சோழநாட்டு தென்கரைத் தலம்
**Kolilee Nathar Temple - Tirukkolilee (Tirukuvalai), Tamil Nadu**



திரிசிராப்பள்ளி – திருச்சிராப்பள்ளி – ஸ்ரீதாயுமானேஸ்வரர் – சோழநாட்டு தென்கரைத் தலம்
**Sri Thaayumanavar Temple - Tirucchiraappalli - Trichy - Tamil Nadu.**

**பதிக வரலாறு:**

சீகாழியினின்றும் புகலிவேந்தர், அடியார்களும், திருநீலகண்ட யாழ்ப்பாணரும் சிவபாத இருதயரும் அவருடன் உடன்வர வேண்டிக்கொண்டனர். தில்லை செல்லத் திருவுளங்கொண்ட பொழுது, அவருடன் அவர்கள் அனைவரும் கொள்ளிடத்தைக் கடந்தார்கள். தில்லையின் தெற்குவீதியை அணுகினார்கள். தில்லை வாழ் அந்தணர்கள் சிரபுரப் பிள்ளையாரை எதிர்கொண்டு அழைக்க, நகரை அலங்கரித்து மங்கள வாத்தியங்கள் முழங்க ஊர்ப்புறத்தே வந்து, அழைத்துச் சென்றார்கள். பிள்ளையார் திருவீதியைத் தொழுதனர். எழுநிலைக் கோபுரத்தையும் வணங்கினர். திருமுன்றில் திருமாளிகையையும் வலம் வந்து வணங்கிக் கொண்டு உட்புகுந்து திருவணுக்கன் திருவாயிலை அடைந்தார்கள். சிந்தையில் ஆர்வம் பெருகிற்று. கண்கள் ஆனந்த பாஷ்பம் பொழிந்தன. செங்கைகள் சிரமீது ஏறிக் குவிந்தன. இவ்வாறு உருகிய அன்பினராய் உட்புகுந்தார்.

இறைவன் தமக்களித்த சிவஞானமேயான திருவம்பலத்தையும், அந்த ஞானத்தால் விளைந்த ஆனந்தமாகிய கூத்தப் பெருமானையும் கண்ணாரக் கண்டு கும்பிட்டார். ஆனந்தக் கூத்தருக்கு உரிமையான தனிச்சிறப்பினையுடைய தில்லை வாழ் அந்தணரை முன் வைத்து 'கற்றாங் கெரியோம்பி' என்னும் இப்பதிகத்தை ஏழிசையும் ஓங்க எடுத்தார். திருக்கடைக்காப்பும் முடித்து, ஊனையும் உயிரையும் உருக்கும் ஒப்பற்ற கூத்தை வெட்ட வெளியிற் கண்டு திளைத்து, சிவானந்தப் பேறமுதுண்ட பிள்ளையார் ஆனந்த மேலீட்டால் அழுதார்.

## 80. KOYIL
## (THILLAI – CHIDAMBARAM)

**HISTORY OF THE PLACE**

This sacred place is to the north of river Cauvery in Chola Naadu. It has a railway station in the mainline train route between Chennai and Thiruchchi. The town is also connected to every major towns and cities of Tamil Nadu by bus. This place has other names such as, Thillai, Chidhaakaasa Ksheeththiram, and Perumparrappuliyoor; additional names such as Chirrambalam, Puliyoor, Porpuliyoor and Thillaiyoor are found in the inscriptions. The Annamalai University is situated to the east of Chidambaram Railway Station, where the Saivite Shrine known as Thiru-Vet-Kalam also stands.

The main deity of this temple is Aanandha Nataraasar. His holy icon itself represents the Five-lettered manthram, Panchaakkaram. His sacred dance represents the simultaneous execution of all the five great acts. His other names, noted in inscriptions are: Ponnambalak-Kooththan, Ponnambalanaathan, Aanandha-Thaandavap-Perumaal, Chidhambaresuvarar, Thillainaayakath-Thampiraan etc. In Thiruchchirrambalakkovai, the Lord is referred to as Maanikkak Kooththan. It seems to refer to the small emerald icon of Nataraja, known as Raththina Sabaapathi.

The Goddess is known by the names of Sivakaama-sundhari and Thirukk Kaamakottamudaiya Periya Naachchiyaar. Sivakaama-sundhari is the name of Goddess standing next to the God on His left side.

The Maithreya Upanishadham refers to this temple in the words, 'hridhayaa-kaasamayam kosam aanandham paramaalayam'. Since Thirumandhiram makes references to Thiruvambalach Chakkaram, Thiruk-k-Kooththu, Chidhambaram etc., the ancient nature of this temple is evident. According to Western scholar, the buildings inside this temple complex date from the 5th century to 10th and 11th centuries CE. Of the five 'sabhai' (pavilion) temples, this is known as the Kanakasabhai (Golden Pavilion). Within this temple there are five pavilions: Chithsabhai (Lord Nataraja's location which is knwon as sanctum-sanctorum), Kanakasabhai (the place in front of Chithsabhai), Raajasabhai (the 1000-pillared Hall), Nriththasabhai (next to the flag-pole for Nataraajar), and Thevasabhai (Perambalam - hall on the northern side of the passage that leads to Kanaka Sabhai).

Besides the main deities, there are many other deities with their own shrines. Thirumoolattaanesurar, Umaiyammai, Mukkuruni Vinaayakar, Karpaga Vinaayakar, Paandinaayakam Amman, Navalingam, and Dhurgai are among the best known. There is also a Vaishnava shrine, known as Thiruch Chiththirakootam with the God known as Thillai Govindharaasar and Mother Goddess known as Pundareekavallith Thaayar in the same precincts.

The sacred fords for this temple are many: Sivagangkai, Paramaanandha-koopam, Pulimadu, Viyaakkirapaadha Theerththam, Aanandha Theerththam, Naagaseri, Birama Theerththam, Sivappiriyai, Thiruppaarkkadal etc. Also a temple of Kaali, who got defeated by the Lord in a dancing competition, situated at the eastern bank of Sivappiriyai Theerththam, at the northern limits of the town of Chidhambaram.

The sacred tree is Aal (ஆலமரம் - Banyan Tree). This tree no longer exists. Some are of the opinion that Thillai (Blinding tree; தில்லை மரவகை - Excoecaria crenulata) is the sacred tree as the name Thillaivanam would seem to suggest.

There are 271 inscriptions about this temple. Most of these speak of the kings, Kopperunjchingkan and Jataavarman Sundharapaandiyan. Many other kings, from Raajendhiran to Raajaraajan III, Vijayanagaram rulers, and Naayakkar kings have caused inscriptions to be made. It is remarkable that although this temple was very distinguished even during the times of the three saints, Sambandhar, Appar and Sundharar, no inscriptions of Pallava kings contemporaneous with them are to be found.

The earliest inscription, from the 24th regal year of Raajendhira Chola Thevan and another one from the 47th regal year of Kuloththungka Chola Thevan are on the wall that divides Kanakasabhai and Thirumoolattaanam.

The ambulatory around Kanakasabhai is known as Vikkirama Cholan Thirumaaligai. The second ambulatory, around the Thirumoolattanam, is called Kuloththungkan Thirumaaligai and the one outer to that is known as Raasaakkal Thampiraan Thirumaaligai. Since the names Vikkirama Cholan Thirumaaligai and Kuloththungkan Thirumaaligai are found in the inscriptions in the wall referred to above, it would seem that Vikkiraman would have built both the ambulatories and named them after his father and himself.

Most of the inscriptions concern flower-garden related endowments. Few of them refer to grants for worship services. Some inform about the alms-houses,

formation of 'akkirahaarams' and arrangements for 'thiruppaavaadai'. Until the reign of Vikkirama Cholan, all the temple administration was performed in the name of Sandesuvara Dheva Naayanaar, but after his time, the temple was administered in the name of an assembly of supervisors. High government officials, insider-officials, and religious officers (Seekaaariyam Seivaar) were among the members of such an assembly. The names of 30 such supervisors are noted.

Among the kings who provided for various services to this temple are the Pallava kings, Iraniyavarman and Kopperunjchingan; Paandiyar kings Maara-varman-Sundharapaandiyan, Jataavarman-Sundharapaandiyan, Maaravarman Veerapaandiyan and Vikkirama-Paandiyan, Kulasekaran; ten Chola kings from Paraanthakan I to Raajaraajan III. Of these kings, Iraniyavarman, Paraanthakan I, one Manavil Kooththan Kaalingan, Anapaayan and his ancestors had paved the temple roof with gold at different times. In addition, many kings of the Vijayanagara, Naayakka and Chera dynasties had performed services for the temple.

Various crowned kings have built the different gopurams. The south gopuram was built by Kopperunjchingan and after one of his names, this tower is called Chokkaseeyam. The construction of the north gopuram seems to have been started by Krishnadhevaraayan and completed by Achchutadhevaraayan. An inscription lists the names of the professional artisans (sirpi) who built the west gopuram. In the eastern wall of that gopuram, the images of Kaamadhevan, Agaththinyan, Sridhevi, Dhevendhiran, Ganesan and Dhurgai have ben installed. In the northern wall, those of Radhradhevar, Raahu and Kethu, Naaradhan, Alakesan, Chandhiran, Kiriyaasakthi, Sani, and Vaayu were installed. In the western wall were the images of Kshethrapaalap Pillaiyaar, Gangadhevi, Danvanthiri, Thiripurasundhari, Sukkiran, Vaijayan, Naagan, Yamunai, Badhrakaali, and Aadhisandeesar. In the southern wall were, Budhan, Niruthi, Jnaanasakthi and Agnidhevan. Inscriptions also reveal that there were separate shrines for the three Thevaram hymnist saints, Thirujnaana-sambandhar, Thirunaavukkarasar and Sundarar.

Next to the north gopuram is a shrine originally known as Thiruththondath thogaiyeechcharam. This houses separate images for the 63 Naayanmaar saints and linga representation for each group of the collection of saints known as 'thogaiyadiyaar onbadhinmar'. In this connection it may be noted that the saint and hymnist, Sundharar, who composed the 'Thiruththondath thogai' entered the temple by the north entrance. This shrine is called these days as Navalingam temple.

The Vinaayagar, now known as Mukkuruni Vinaayakar, was known as Muka Kattanaththu Vinaayakar (முகக் கட்டணத்து விநாயகர்), as his shrine is located near the south entrance which was the front and main entrance. Apparently this meaningful name got corrupted into the current appellation, as Muk-kuruni Vinaayakar.

From an inscription it is clear a separate shrine for Saint Thirujnaanasambandhar once existed in the Vikkirama Cholan Thiruveedhi. Also there was once a monastry for Saint Thirujnaanasambandhar next to the west gopuram.

Of the festivals that are used to be celebrated in Thillai temple, the one in the month of Aani and the other is the Thiruvaadhirai festival in the month of Maargazhi are the most imortant ones. These two go back at least to the times of Kopperunj-chingan. It appears that a festival used to be celebrated in the month of Maasi, during the course of which it was the practice to chant the Thiru-th-thonda-th-thogai hymns. Similar to the Pooram festival for the Goddess, celebrated in the month Aadi in other Siva temples, a festival on Pooram in Aippasi is also celebrated here. The festival held on the Magha asterism in Maasi of seabathing is mentioned in the inscriptions. A festival called 'Thiruppudhiyadhu Vizhaa' in which the Goddess was adorned with new clothes is also referred to. This name is suspected to the corrupted form of 'Thiruppudavaiyeedu Vizhaa'. Also a festival called Thiruppaali Valaththirunaal is noted. One wonders if this might actually be a reference to the Pooram festival in Aippasi. In this festival, the Goddess is ritually bathed and adorned with white clothes and is made to hold in Her lap a container of freshly sprouted grain (Nava Dhaaniyam) seeds, known as 'paali'. It appears that the Lord would visit a grove known as

Kuloththungkan thoppu for the spring festival known as Vasanthath Thirunaal. The same inscription notes that the festival known as 'Thirukkann Saaththum Thirunaal' is the same festival as the one in which He graces the adjacent Naayanmaars with His benign vision.

In addition to those mentioned above, a festival of the name 'Ethirili Cholan Sivapaadhasekaran Chiththath Thunaip Perumaal Vizhaa'. Besides, a festival on the Poosam day in Thai, was celebrated which is known as 'Paavaadai' (பாவாடை - Strewing boiled rice in a big white cloth spread before Civalingam).

Some of the inscriptions pertain to land grants made for the recitation of various hymns and songs on the Lord and His saintly devotes. The three saints, Thirujnaanasambandhar, Appar and Sundharar each had a temple dedicated to them next to the south, west and north gopurams in Raajaakkal Thampiraan Thirumaaligai Street. Of these, the one for Thirujnaanasambandhar had a roof paved with gold. Such devotion on the part of the kings shows the very high regard for the Thirumurai and the authors of the Thirumurai in Chidhambaram.

In further evidence of the devotion of the rulers towards the Lord of Chidhambaram, it may be noted that they named measuring appliances as Aadavallaan; many villages were named after Thillai and its Lord.

## INTRODUCTION TO THE HYMN

Our saint Thiru-gnaanasambandar started his pilgrimage to Thillai along with his father Siva-paatha Irudayar and was accompanied by Nilakanta Yāzhppānar and other devotees. The town is called Chidambaram and also as Thillai, Koil and by a few other names. The holy folks of Thillai received our saint in a fitting manner. With them he reached the shrine, through the south tower entrance and adored the Dancer Lord Natarajar and sang the following hymn:

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 80. கோயில் (தில்லை – சிதம்பரம்)

## 80. KOYIL (THILLAI – CHIDAMBARAM)

பண் : குறிஞ்சி
ராகம் : குறிஞ்சி

*Pann: Kurinji*
*Raagam: Kurinji*

கற்றாங் கெரியோம்பிக் கலியை வாராமே
செற்றார் வாழ் தில்லைச் சிற்றம்பல மேய
முற்றா வெண்டிங்கள் முதல்வன் பாதமே
பற்றா நின்றாரைப் பற்றா பாவமே. 1

*கற்றாங்கு எரி ஓம்பி, கலியை வாராமே*
*செற்றார் வாழ் தில்லைச் சிற்றம்பலம் மேய*
*முற்றா வெண் திங்கள் முதல்வன் பாதமே*
*பற்றா நின்றாரைப் பற்றா, பாவமே.*

kaRRAgku eri Ompi, kaliyai vArAmE
ceRRAr vAz tillaic ciRRampalam mEya
muRRA veN tigkaL mutalvan2 pAtamE
paRRA nin2RAraip paRRA, pAvamE.

**பொருள்:** வேத நூல்களைக் கற்றுணர்ந்து, அவற்றில் கூறப்பட்ட நெறியிலே நின்று, வேள்விகளைச் செய்து, இவ்வுலகில் பாவங்கள் (வறுமையை) வாராது தடுக்கும் சான்றோர்கள் வாழும் தலம் தில்லையாகும். இத்தலத்தில் உள்ள சிற்றம்பலத்தில் எழுந்தருளி இருக்கும் இறைவர் ஆனந்த நடராசர் ஆவார். இவர் இளமையான வெள்ளிய பிறைமதியைச் சூடி உள்ளார். இவர் தேவர்களுக்குத் தலைமையான முதல்வர் ஆவார். இப்பெருமானின் திருவடிகளைப் பற்றுக் கோடாகக் கொண்டு வாழ்பவர்களைப் பாவம் பற்றாது.

**குறிப்புரை:** இப்பாடல் சிற்றம்பலநாதன் திருவடியே பற்றுக் கோடாகக் கொண்டவர்களைப் பாவம் பற்றாது என்கின்றது. கற்று – வேதம் முதலியவற்றை ஓதி. ஆங்கு எரியோம்பி – அந்நெறியிலேயே நின்று வேள்வியைச் செய்து. கலி – பாவம். பற்றா – பற்றுக்கோடாக.

Learned scholars who are living in Thillai have mastered the Vedas and aagamaas. They lead a strict moral and virtuous life as prescribed in the holy scriptures. They foster the sacrificial fire which prevents poverty and other ailments of humanity. In the sanctum sanctorum of this part of the temple in the town of Thillai, is

called 'Chitrambalam' (சிற்றம்பலம்) where the Chief Deity of this temple Lord Aananda Natarajar (ஆனந்த நடராசர்) is enshrined. He is bedecked with the young white crescent moon in His matted hair. The scholar devotees throng to this chief temple in large numbers. They offer worship with sincere devotion to the holy feet of Lord Ananda Nataraajar. He is the God as the First cause in the whole universe (cosmos). He is entempled in the sanctum sanctorum which is known as Chith Sabai or Chitrambalam (சித்சபை அல்லது சிற்றம்பலம்). He showers His grace to all His sincere devotee who never get affected by the bad effects of their past karma.

**Note:** Thillai also called is Chidambaram is the Saivite shrine, par excellence. In the past, three thousand scholars, fostered this holy place. Yagas were performed here conforming to the strict rules enunciated in the scriptures. There are five Sabhas in this temple.

a) Chitsabhai or normally known as Chitrambalam. This is the sanctum sanctorum where Lord Nataraja abides.

b) Raajasabhai – This is the thousand pillars hall.

c) Kanakasabhai – The portion just in front of Chitsabai – (Chitrambalam).

d) Niruththasabhai situated near the Flag staff of Natarajar

e) Thevasabhai – Pērambalam. This hall is the one situated on the south side of the aproaching foot path to Kanaka Sabhai.

Lord Natarajar is the Uruvath-thirumeni (உருவத் திருமேனி) of Lord Civa; He is the main deity in this temple, known as Aananda Natarajar.

பறப்பைப் படுத்தெங் கும்பசுவேட் டெரியோம்புஞ்
சிறப்பர் வாழ்தில்லைச் சிற்றம்பலமேய
பிறப்பில் பெருமானைப் பின்றாழ் சடையானை
மறப்பிலார் கண்டீர் மையல் தீர்வாரே. 2

பறப்பைப் படுத்து, எங்கும் பசுவேட்டு எரி ஓம்பும்
சிறப்பர் வாழ் தில்லைச் சிற்றம்பலம் மேய
பிறப்புஇல்பெருமானை, பின் தாழ்சடையானை,
மறப்புஇலார் கண்டீர், மையல் தீர்வாரே.

paRappaip paTuttu, egkum pacu vETTu, eri Ompum
ciRappar vAz tillaic ciRRampalam mEya
piRappu ilperumAn2ai, pin2 tAzcaTaiyAn2ai,
maRappu ilAr kaNTIr, maiyal tIrvArE.

**பொருள்:** பல இடங்களிலும் வேள்விச் சாலைகளை அமைத்து ஆன்ம போதத்தை அழித்து, சிவாக்கினியை வளர்க்கும் சிறப்பினை உடைய சான்றோர்கள் வாழும் தலம் தில்லை ஆகும். இத்தலத்தில் உள்ள சிற்றம்பலத்தில் எழுந்தருளி இருக்கும் இறைவர் ஆனந்த நடராசர் ஆவார். இவர் தாயின் வயிற்றில் தங்கிப் பிறத்தல் இல்லாதவர். பின்புறம் தாழ்ந்து தொங்கும் சடாபாரம் உடையவர். இப்பெருமானை மறவாதவர்கள் தங்கள் மயக்க உணர்வு நீங்கப் பெறுபவர்கள் ஆவார்கள்.

**குறிப்புரை:** சிற்றம்பலநாதரை மறவாதவர்களே மலமயக்கம் தீர்வார்கள் என்கின்றது. பறப்பை – வேள்விச்சாலை. பசு வேட்டு – ஆன்மபோதத்தைக் கொன்று. எரி ஓம்பும் – சிவாக்கினியை வளர்க்கும். சிறப்பர் – சிறப்பினை உடைய தில்லை வாழ் அந்தணர்கள்.

Vedic scholars living in Thillai build sacrificial halls in many places of the town. Here they foster the special Civaaagni Fire (*சிவாக்கினி*) and kill their egoistic knowledge in the sacrificial fire. In the temple of this town Lord Ananda Natarajar is enshrined in the sanctum sanctorum, called 'Chitrambalam' (*சிற்றம்பலம்*). He is the birthless Supreme God whose matted hair dangles downwards from His head. Those who adore Him for ever, even for a short while, will be freed from their mental delusion.

**Note:** The performance of Yagaas is again celebrated in this verse.

மையாரொண் கண்ணார் மாடநெடு வீதிக்
கையாற்பந் தோச்சுங்கழி சூழ்தில்லையுள்
பொய்யா மறைபாடல் புரிந்தானு லகேத்தச்
செய்யா னுறைகோயில் சிற்றம்பலந்தானே. 3

மைஆர் ஒண்கண்ணார் மாடம் நெடுவீதிக்
கையால் பந்து ஓச்சும் கழி சூழ் தில்லையுள்,
பொய்யா மறை பாடல் புரிந்தான் உலகு ஏத்தச்
செய்யான், உறை கோயில் சிற்றம்பலம்தானே.

mai Ar oNkaNNAr mATam neTuvItik
kaiyAl pantu Occum kazi cUz tillaiyuL,
poyyA maRai pATal purintAn2, ulaku Ettac
ceyyAn2, uRai kOyil ciRRampalamtAn2E.

***பொருள்:*** மை தீட்டப் பெற்ற ஒளி பொருந்திய கண்களை உடைய பெண்கள், நீண்ட வீதிகளில் உள்ள மாடவீதிகளில் தம் கைகளால் பந்து எய்து விளையாடும் அழகுடையதும், உப்பங்கழிகள் சூழ்ந்ததுமான தலம் தில்லையாகும். இத்தலத்தில் உள்ள சிற்றம்பலத்தில் சிவபெருமான் சிவந்த மேனியை உடையவராக எழுந்தருளி உள்ளார். இவர் என்றும் பொய்யாத வேதப் பாடல்களை விரும்பியும் உலக மக்கள் தன்னைத் தோத்தரிக்கவும் இங்கு வீற்றிருக்கின்றார்.

***குறிப்புரை:*** வேதத்தை விரும்பிய சிவபெருமான் உறையுங் கோயில் சிற்றம்பலம் என்கின்றது. மையார் ஒண் கண்ணார் – மைபூசிய ஒளி பொருந்திய கண்களை உடைய பெண்கள். பொய்யா மறை – என்றும் பொய்யாத வேதம். புரிந்தான் – விரும்பியவன்.

Thillai is girt with a number of saltpans. Young girls with bright and attractive eyes painted with collyrium (*அஞ்சனம்*), play with balls in their hands to the enjoyment of everyone in the streets of the town full of mansions. In the temple of this city of Thillai, the red hued Lord Nataraja, the author of the never-failing Vedas is enshrined in Chitrambalam - the sanctum sanctorum.

Note: The Vedaas are the abode of truth. Civa is their author. They merit utmost reverence and are to be construed into the very light of the Civaagamaas.

நிறைவெண் கொடிமாட நெற்றிநேர் தீண்டப்
பிறைவந் திறைதாக் கும்பேரம்பலந் தில்லைச்
சிறைவண் டறையோவாச் சிற்றம்பலமேய
இறைவன் கழலேத்து மின்பமின்பமே. 4

*நிறை வெண்கொடி மாட நெற்றி நேர் தீண்டப்*
*பிறை வந்து இறை தாக்கும் பேரம்பலம், தில்லைச்*
*சிறைவண்டு அறை ஓவாச் சிற்றம்பலம், மேய*
*இறைவன் கழல் ஏத்தும் இன்பம் இன்பமே.*

niRai veNkoTi mATa neRRi nEr tINTap
piRai vantu iRai tAkkum pErampalam, tillaic
ciRaivaNTu aRai OvAc ciRRampalam, mEya
iRaivan2 kazal Ettum in2pam in2pamE.

**பொருள்:** மாடவீடுகளில் வெண்மையான கொடிகள் நிறைந்துள்ளன. இக்கொடிகள் வானத்தில் உள்ள பிறையின் நெற்றியை நேரே தீண்டுவது போலும், சிறிதே தாக்குவது போலும் உள்ளன. இந்தத் தில்லைப் பதியில் சிறகுகளை உடைய வண்டுகளின் ஒலி எப்போதும் ஒலித்துக் கொண்டிருக்கின்றது. பேரம்பலத்தை அடுத்துள்ள சிற்றம்பலத்தில் சிவபெருமானார் எழுந்தருளியிருக்கின்றார். இந்த இறைவரின் திருவடிகளைப் போற்றிப் புகழ்வதே இன்பமாகும்.

**குறிப்புரை:** சிற்றம்பலநாதன் சேவடியை ஏத்தும் இன்பமே இன்பம் என்கின்றது. கொடிவந்து பிறை இறைதாக்கும் பேரம்பலம் எனக் கூட்டுக. அறை – ஒலி.

In the city of Thillai, white flags from the poles fixed in mansions graze straight into the skyway where the crescent moon is scrawling. It appears as though the flags gently dash over the forehead of the crescent moon. In the portion called Perambalam situated in front of and next to Chitrambalam, winged bees are always humming. In Chitrambalam Lord Nataraja is enshrined. It is real happiness (*பேரின்பம்*) indeed to hail the holy feet of Lord Natarajaa in this place.

**Note:** Bliss is ours, here and now. Thillai is truly the embodiment of bliss.

செல்வ நெடுமாடஞ் சென்றுசே ணோங்கிச்
செல்வ மதிதோயச் செல்வ முயர்கின்ற
செல்வர் வாழ்தில்லைச் சிற்றம்பலமேய
செல்வன் கழலேத்துஞ் செல்வஞ் செல்வமே. 5

செல்வ நெடுமாடம் சென்று சேண் ஓங்கிச்
செல்வ மதி தோய, செல்வம் உயர்கின்ற,
செல்வர் வாழ் தில்லைச் சிற்றம்பலம் மேய
செல்வன் கழல் ஏத்தும் செல்வம் செல்வமே.

celva neTumATam cen2Ru cEN Ogkic
celva mati tOya, celvam uyarkin2Ra,
celvar vAz tillaic ciRRampalam mEya
celvan2 kazal Ettum celvam celvamE.

**பொருள்:** செல்வ வளம் மிக்க பெரிய மாடவீதிகள் வானளாவ ஓங்கி உயர்ந்து அழகிய மதியினைத் தோய்கின்றன. இத்தகைய அழகிய நலன்கள் உயர்ந்து விளங்குகின்றதும் ஞானச் செல்வர்கள் பலர் வாழ்கின்றதுமான தலம் தில்லைப் பதியாகும். இத்தலத்தில் உள்ள

சிற்றம்பலத்தில் சிவபெருமானார் எழுந்தருளியுள்ளார். இவர் வீடுபேறாகிய செல்வத்துக்கு உரிய பெருமான் ஆவார். இப்பெருமானின் திருவடிகளை வாழ்த்துதலே ஒருவருக்குச் செல்வம் ஆகும்.

**குறிப்புரை:** சிற்றம்பலத்து எழுந்தருளி இருக்கின்ற செல்வன் கழலை ஏத்தும் இன்பமே இன்பம் என்கின்றது. சேண் – ஆகாயம்.

In the town of Thillai, the lofty, affluent tall mansions brush against the beautiful crescent moon that apparently crawls in the sky. The city is very prosperous having many a different delightful set up. Here dwell many virtuous scholars. Here in the temple Lord Nataraja is enshrined. The real wealth to one is verily to adore the holy feet of the Chief of all wealth Lord Nataraja of this temple.

**Note:** Thillai is the city of opulence – material as well as spiritual.

வருமாந் தளிர்மேனிமா தோர்பாகமாந்
திருமாந் தில்லையுட் சிற்றம்பலமேய
கருமானு ரியாடைக் கறைசேர் கண்டத்தெம்
பெருமான் கழலல்லாற் பேணாதுள்ளமே. 6

*வரு மாந்தளிர்மேனி மாது ஓர் பாகம் ஆம்*
*திரு மாந் தில்லையுள், சிற்றம்பலம் மேய*
*கருமான்உரி-ஆடைக் கறை சேர் கண்டத்து எம்*
*பெருமான் கழல்அல்லால் பேணாது, உள்ளமே.*

varu mAntaLir mEn2i mAtu OrpAkam Am
tiru mAn tillaiyuL, ciRRampalam mEya
karumAn2 uri-ATaik kaRai cEr kaNTattu em
perumAn2 kazal allAl pENAtu, uLLamE.

***பொருள்:*** சிவபெருமானார், மாமரத்தில் இருந்து புதிதாக வெளிவரும் மாந்தளிர் போன்ற மேனியை உடைய உமையம்மையை ஒரு பாகமாகக் கொண்டு இருப்பவர். யானைத் தோலை உரித்து ஆடையாகப் போர்த்தவர். நீலமணி போன்ற கண்டத்தை உடையவர். இப்பெருமான், திருமகள் விளங்கும் தில்லைப் பதியினுள் உள்ள சிற்றம்பலத்தில் எழுந்தருளியுள்ளார். இப்பெருமானின் திருவடிகளைத் தவிர வேறொன்றையும் என் உள்ளம் விரும்பாது.

**குறிப்புரை:** சிற்றம்பலத்து எழுந்தருளியுள்ள பெருமான் திருவடியல்லது என்னுள்ளம் வேறொன்றையும் பேணாது என்கின்றது. திருமாந்தில்லை – திருமகளோடு கூடிய பெரிய தில்லை.

In the Chitrambalam of the big Thillai temple Lord Nataraja is enshrined. Here He is concorporate with His consort Umaa Devi, whose body is like the fresh shoot of mango tree. Goddess Lakshmi (திருமகள்) is reigning her grace on this city for ever. Lord Nataraja covers His body with the black skin of the elephant. His neck is of dark blue in colour similar to the sapphire gem. My mind will never adore anything else except the holy feet of Lord Nataraja of this temple.

அலையார் புனல்சூடியாகத் தொருபாக
மலையான் மகளோடுமகிழ்ந் தானுலகேத்தச்
சிலையா லெயிலெய்தான் சிற்றம்பலந் தன்னைத்
தலையால் வணங்குவார் தலையானார்களே. 7

அலை ஆர் புனல் சூடி, ஆகத்து ஒரு பாகம்
மலையான் மகளோடும் மகிழ்ந்தான், உலகு ஏத்தச்
சிலையால் எயில் எய்தான், சிற்றம்பலம்தன்னைத்
தலையால் வணங்குவார் தலைஆனார்களே.

alai Ar pun2al cUTi, Akattu orupAkam
malaiyAn2 makaLOTum makizntAn2, ulaku Ettac
cilaiyAl eyil eytAn2, ciRRampalam tan2n2ait
talaiyAl vaNagkuvAr talai An2ArkaLE.

**பொருள்:** சிவபெருமான் அலைகள் வீசும் கங்கை நதியை தன் திருமுடியில் சூடியிருப்பவர். தன் திருமேனியில் ஒருபாகமாக மலை அரசன் மகளாகிய பார்வதி தேவியோடு மகிழ்ந்திருப்பவர். உலகம் போற்றும் மேரு மலையை வில்லாக வளைத்து முப்புரங்களை நோக்கி அம்பை எய்து அழித்தவர். தில்லைச் சிற்றம்பலத்தில் எழுந்தருளியுள்ள இப்பெருமானைத் தலைதாழ்த்தி வணங்குபவர்கள் இந்த உலகத்தில் தலையானவர்களாக விளங்குபவர்கள் ஆவார்கள்.

**குறிப்புரை:** சிற்றம்பலத்தைத் தலையால் வணங்குபவர்களே தலையானவர்கள் என்கின்றது. சிலை – மேருமலையாகிய வில்.

Lord Nataraja supports the wavy waters of the Ganges river in His matted hair. He happily holds on His chest His consort Paarvathi Devi, daughter of the mountain king by keeping her in the left half portion of His body. Hailed by all the people of the world, He destroyed the three hostile citadels of Asuraas, utilising the Mēru mountain as His bow. Those who worship this Lord Nataraja enshrined at Chitrambalam in Thillai temple with heads bowed down will ever shine as sovereign Lords.

கூர்வாளரக் கன்றன்வலி யைக்குறைவித்துச்
சீராலேமல் குசிற்றம்பலமேய
நீரார்சடை யானைநித்த லேத்துவார்
தீராநோ யெல்லாந் தீர்தல் திண்ணமே. 8

*கூர்வாள் அரக்கன் தன் வலியைக் குறைவித்து,*
*சீராலே மல்கு சிற்றம்பலம் மேய*
*நீர் ஆர் சடையானை நித்தல் ஏத்துவார்*
*தீரா நோய் எல்லாம் தீர்தல் திண்ணமே.*

kUrvAL arakkan2 tan2 valiyaik kuRaivittu,
cIrAlE malku ciRRampalam mEya
nIr Ar caTaiyAn2ai nittal EttuvAr
tIrA nOy ellAm tIrtal tiNNamE.

***பொருள்:*** சிவபெருமான், கூரிய வாளை உடைய அரக்கனாகிய இராவணனின் வலிமையை அழித்தவர். சிறந்த புகழ்பெற்ற தில்லைச் சிற்றம்பலத்தில் எழுந்தருளி இருப்பவர். கங்கையைத் தரித்த சடையினை உடையவர். இப்பெருமானை நாள்தோறும் துதிப்பவருக்குத் தீராத நோய்கள் எல்லாம் திண்ணமாகத் தீர்ந்துவிடும்.

***குறிப்புரை:*** சிற்றம்பலநாதனை நாள்தோறும் ஏத்துவார் தீராத நோயெல்லாம் தீர்வர் என்கின்றது. கூர்வாள் அரக்கன் என்றது இராவணனை.

Lord Nataraja crushed the prowess of Raavanan who possessed a sharp sword. He is enshrined in the highly famed Chitrambalam holding the river Ganges in His matted hair. Those who adore Him daily with sincere devotion will for sure get rid of all incurable diseases.

Note: Maladies, physical as well as spiritual, cease if one ensouls Civa.

கோணாகணை யானுங்குளிர்தா மரையானுங்
காணார்கழ லேத்தக்கன லாய்ஓங்கினான்
சேணார்வாழ் தில்லைச் சிற்றம்பலமேத்த
மாணாநோ யெல்லாம் வாளாமாயுமே. 9

*கோள் நாக(அ)ணையானும் குளிர்தாமரையானும்*
*காணார் கழல் ஏத்த, கனல்ஆய் ஓங்கினான்,*
*சேணார் வாழ் தில்லைச் சிற்றம்பலம் ஏத்த,*
*மாணா நோய்எல்லாம் வாளா மாயுமே.*

kOL nAka(a)NaiyAn2um kuLirtAmaraiyAn2um
kANAr kazal Etta, kan2al Ay Ogkin2An2,
cENAr vAz tillaic ciRRampalam Etta,
mANA nOy ellAm vALA mAyumE.

***பொருள்:*** வளைந்து சுற்றிய நாகத்தை அணையாகக் கொண்ட திருமாலும், குளிர்ந்த தாமரை மேல் விளங்கும் நான்முகனும் சிவபெருமானின் அடிமுடிகளைக் காண இயலாதவர்கள். தனது திருவடிகளைப் பரவ, அழல்வடிவில் ஓங்கி நின்றவர். இவர் தேவர்களும் உயர்ந்தோர்களும் வாழும் தில்லைப் பதியினுள் உள்ள சிற்றம்பலத்தில் எழுந்தருளி உள்ளார். இப்பெருமானைத் துதிக்க கடுமையான பெரிய நோய்கள் யாவும் துன்பத்தைத் தராமல் மாய்ந்து விடும்.

***குறிப்புரை:*** சிற்றம்பலத்தைத் துதிக்க. பெரிய நோயெல்லாம் மாயும் என்கின்றது. கோண் நாகணையான் – வளைந்த நாகத்தை அணையாகக் கொண்ட திருமால். சேணார் – தேவர்கள். மாணா நோய் – மாட்சிமை தராத நோய்கள்.

Thirumaal who reclines on the coiling snake and Brahma who is seated in the cool lotus flower went out in the search of Lord Civan's holy feet and head in vain. Upon this, Lord Civan soared up as a blazing big column of fire to immeasurable heights. They both failed in their attempts. He is enshrined in Chitrambalam. Those who adore Lord Nataraja of Chitrambalam will get rid of all cruel diseases.

பட்டைத்து வராடைப்படி மங்கொண்டாடும்
முட்டைக் கட்டுரைமொழி வகேளாதே
சிட்டர்வாழ் தில்லைச் சிற்றம்பலமேய
நட்டப் பெருமானை நாளுந்தொழுவோமே. 10

*பட்டைத் துவர் ஆடை, படிமம், கொண்டாடும்*
*முட்டைக் கட்டுரை மொழிவ கேளாதே,*
*சிட்டர் வாழ் தில்லைச் சிற்றம்பலம் மேய*
*நட்டப்பெருமானை நாளும் தொழுவோமே.*

paTTait tuvar ATai, paTimam, koNTATum
muTTaik kaTTurai moziva kELAtE,
ciTTar vAz tillaic ciRRampalam mEya
naTTapperumAn2ai nALum tozuvOmE.

**பொருள்:** புத்தர்கள் மரப்பட்டையில் சாயம் ஏற்றிய ஆடையை அணிபவர்கள். சமணர்கள் நோன்புகளை மேற்கொண்டு திரிபவர்கள். அறியாமையோடு கூடிய இவர்களின் சொற்களைக் கேளாத ஒழுக்கமுடைய தவச்சீலர்கள் தில்லைப் பதியில் வாழ்கின்றனர். இப்பதியினுள் உள்ள சிற்றம்பலத்தில் நடராசப் பெருமான் எழுந்தருளி உள்ளார். இப்பெருமானை நாள்தோறும் நாம் தொழுவோமாக.

**குறிப்புரை:** புறச்சமயிகளின் புல்லுரையைக் கேளாது சிற்றம்பலநாதன் திருவடியைத் தினம் தொழுவோம் என்கின்றது. பட்டைத்துவர் – மரப்பட்டையிலிருந்து தயாரிக்கப்படும் காவி. படிமம் – நோன்பு. முட்டைக் கட்டுரை – அறியாமையோடு கூடிய சொல். சிட்டர் – ஆசாரசீலர். நட்டம் – நடம்.

Ye comrades! Do not listen to the ignorant sayings of Buddhists who wear clothes dyed in tree barks, and of the Samanars who roam about doing all sorts of meaningless penance. Lord Nataraja is enshrined at Chitrambalam in the Thillai temple. In this city, people of great virtue and good manners do live is to go numbers. Let us adore with sincere devotion this Lord Nataraja daily.

ஞாலத்துயர் காழிஞான சம்பந்தன்
சீலத்தார் கொள்கைச் சிற்றம்பலமேய
சூலப்படை யானைச்சொன்ன தமிழ்மாலை
கோலத்தாற் பாடவல்லார் நல்லாரே. 11

*ஞாலத்து உயர் காழி ஞானசம்பந்தன்*
*சீலத்தார் கொள்கைச் சிற்றம்பலம் மேய*
*சூலப்படையானைச் சொன்ன தமிழ்மாலை*
*கோலத்தால் பாட வல்லார் நல்லாரே.*

njAlattu uyar kAzi njAn2acampantan2
cIlattAr koLkaic ciRRampalam mEya
cUlappaTaiyAn2aic con2n2a tamizmAlai
kOlattAl pATa vallAr nallArE.

**பொருள்:** ஞானசம்பந்தன், உலகில் உயர்ந்து விளங்கும் சீகாழிப் பதியில் தோன்றியவர். ஒழுக்கம் உடைய தவச்சீலர்களால் போற்றப்படுவது தில்லைத் தலம் ஆகும். இத்தலத்தினுள் உள்ள சிற்றம்பலத்தில், சூலப்படையுடன் எழுந்தருளி உள்ள சிவபெருமானை, இவர் போற்றிப் பாடினார். இத்தமிழ் மாலையாகிய பதிகத்தை அழகுறப் பாட வல்லவர் நல்லவர் ஆவர்.

**குறிப்புரை:** திருஞானசம்பந்தர் திருச்சிற்றம்பலநாதனைப் பற்றிச் சொன்ன தமிழ்மாலையைப் பாடவல்லவர்கள், நல்லவர் ஆவர் என்கின்றது. சீலத்தார் கொள்கைச் சிற்றம்பலம் - ஒழுக்கம் உடையவர்களால் கொள்ளப்படுகின்ற சிற்றம்பலம். கோலத்தால் – அழகால்.

Seekaazhi is the loftiest town of the world. Here was born Gnaanasambandan who has sung on the Lord who wields the trident and who is enshrined at Chitrambalam in Thillai temple. He is hailed by virtuous and good mannered people, who are steeped in piety. Those who can sing tunefully, this garland of Tamil verses, are truly the holy ones.

**Note:** Civa wields a trident which alone can quell the three malas.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*80ஆம் பதிகம் முற்றிற்று*
End of 80th Hymn

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# 81. சீகாழி

## திருத்தல வரலாறு:

முதல் பதிகம் பார்க்க.

# 81. SEEKAAZHI

## HISTORY OF THE PLACE

See First Hymn.

## INTRODUCTION TO THE HYMN

Note:

Only seven verses of this decad are available.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 81. சீகாழி

## 81. SEEKAAZHI

பண் : குறிஞ்சி
ராகம் : குறிஞ்சி

*Pann: Kurinji*
*Raagam: Kurinji*

நல்லார் தீமேவுந்தொழி லார்நால்வேதஞ்
சொல்லார் கேண்மையார் சுடர்பொற் கழலேத்த
வில்லாற் புரஞ்செற்றான் மேவும்பதிபோலுங்
கல்லார் மதில்சூழ்ந்த காழிந்நகர்தானே. 1

நல்லார், தீ மேவும் தொழிலார், நால்வேதஞ்-
சொல்லார், கேண்மையார், சுடர் பொற்கழல் ஏத்த,
வில்லால் புரம் செற்றான் மேவும் பதிபோலும்-
கல் ஆர் மதில் சூழ்ந்த காழி(ந்)நகர்தானே.

nallAr, tI mEvum tozilAr, nAlvEtanj-
collAr, kENmaiyAr, cuTar pon2kazal Etta,
villAl puram ceRRAn2 mEvum patipOlum-
kal Ar matil cUznta kAzi(n) nakartAn2E.

**பொருள்:** சிவபெருமான் மேருமலையாலான வில்லால் முப்புரங்களையும் அழித்தவர். இப்பெருமான் மலைபோன்ற மதில்களால் சூழப்பட்ட தலமான சீகாழி நகரில் எழுந்தருளி உள்ளார். இங்குள்ள சான்றோர்களாகிய நல்லவர்கள், நாள்தோறும் வேள்வியைச் செய்கின்றனர். நான்கு வேதங்களை ஓதுகின்றனர். அன்புடையவர்களாக விளங்குகின்றனர். இவர்கள் ஒளி பொருந்திய அழகிய சிவபெருமானின் திருவடிகளைப் போற்றுகின்றனர்.

**குறிப்புரை:** வேதம் ஓதி வேள்வி செய்யும் அந்தணர்கள் திருவடியைத் தொழ, வில்லால் புரமெரித்த பெருமான் உறையும் இடம் காழி நகரம் என்கின்றது. தீ மேவும் தொழிலார் – யாகத் தீயை விரும்பும் தொழிலை உடைய அந்தணர். நால்வேதம் சொல்வார் – நான்கு வேதங்களாகிய சொல்லை உடையவர்கள். கல்லார் மதில் – மலையை ஒத்த மதில்.

In the city of Seekaazhi righteous people, who foster the ritual fire daily, those who chant the four Vedas and those who are poised in godly love and others – all these righteous men hail the bright and attractive holy feet of Lord Civan. It is He who destroyed the three citadels by using the mountain Mēru as His bow. This Lord Civan is enshrined at the temple in Seekaazhi girt with strong mountain like walls.

**Note:** Only they that chant the Vedas as ordained in the scriptures and foster the ritual-fire in the Aagamic way are blessed to remain poised in godly love.

துளிவண் டேன்பாயுமிதழி தூமத்தங்
தெளிவெண் திங்கள்மா சுணநீர்திகழ் சென்னி
ஒளிவெண் டலைமாலை யுகந்தானூர் போலுங்
களிவண் டியாழ்செய்யுங் காழிந்நகர்தானே. 2

துளி வண் தேன் பாயும் இதழி, தூ மத்தம்,
தெளிவெண்திங்கள், மாசுணம், நீர் திகழ் சென்னி,
ஒளி வெண்தலைமாலை உகந்தான் ஊர்போலும் -
களி வண்டு யாழ் செய்யும் காழி(ந்)நகர்தானே.

tuLi vaN tEn2 pAyum itazi, tU mattam,
teLi veN tigkaL, mAcuNam, nIr tikaz cen2n2i,
oLi veN talaimAlai ukantAn2 UrpOlum--
kaLi vaNTu yAz ceyyum kAzi(n) nakartAn2E.

**பொருள்:** சிவபெருமான் ஒளிபொருந்திய வெள்ளிய தலைமாலையை விரும்பிச் சூடியிருப்பவர். வண்டுகள் தேனை உண்டு களித்து, யாழ் போன்று ரீங்காரம் செய்கின்ற, சீகாழி நகரில் இப்பெருமான் எழுந்தருளியுள்ளார். இப்பெருமான் சென்னியில் வளமான தேன் துளிபாயும் கொன்றை மலர், தூய ஊமத்தம்பூ, தெளிந்த வெண்மையான பிறைமதி, பாம்பு, கங்கை ஆகியன விளங்குகின்றன.

**குறிப்புரை:** கொன்றை, பிறை, பாம்பு, ஊமத்தம் இவற்றை விரும்பிய இறைவனது இடம் இது என்கின்றது. வண் தேன் துளி பாயும் இதழி என மாற்றுக. இதழி – கொன்றை. மாசுணம் – பாம்பு.

Lord Civan happily supports in His matted hair the pure white crescent moon, cassia flower from which honey is dripping, datura flowers, the snake, the Ganges river as well a garland of blazing white human skulls. This Lord Civan is enshrined at the temple in the Seekaazhi city, where the honeybees, having drunk the nectar are happily humming. This noise resembles the music of the lute.

ஆலக்கோ லத்தின்நஞ்சுண் டமுதத்தைச்
சாலத்தே வர்க்கீந்தளித் தான்தன்மையால்
பாலற்கா ய்நன்றும்பரி ந்துபாதத்தால்
காலற்கா ய்ந்தானூர் காழிந்நகர்தானே. 3, 4, 5, 6, 7

*ஆலக் கோலத்தின் நஞ்சு உண்டு, அமுதத்தைச்*
*சாலத் தேவர்க்கு ஈந்து அளித்தான், தன்மையால்*
*பாலற்குஆய் நன்றும் பரிந்து பாதத்தால்*
*காலற் காய்ந்தான், ஊர் காழி(ந்)நகர்தானே.*

Alak kOlattin2 nanjcu uNTu, amutattaic
cAlat tEvarkku Intu aLittAn2, tan2maiyAl
pAlaRku Ay nan2Rum parintu pAtattAl
kAlaR kAyntAn2, Ur kAzi(n) nakartAn2E.

**பொருள்:** சிவபெருமான் மார்க்கண்டேயன் பொருட்டு கருணை கூர்ந்து தன் பாதத்தால் காலனை உதைத்தவர். இப்பெருமானின் ஊர் சீகாழி நகர் ஆகும். இவர், பாற்கடலில் தோன்றிய ஆலகாலம் எனப்படும் நஞ்சினை விழுங்காமல் தொண்டையில் நிறுத்தி, அமுதம் முழுவதையும் தேவர்கட்கு ஈந்தருளிய தன்மையை உடையவர்.

**குறிப்புரை:** அமுதத்தைத் தேவர்க்கு அளித்தவனும், காலனைக் காய்ந்தவனும் ஆகிய காவலன் ஊர், காழி என்கின்றது. ஆலக் கோலத்தின் நஞ்சு – ஆலகால விஷம். சால – மிக. பாலற்கு – மார்க்கண்டேயற்கு. பரிந்து – கருணை கூர்ந்து. அளித்தான் – உயிர் கொடுத்தான்.

Lord Civan without swallowing the poison, produced at the time of churning the ocean, has positioned it in His throat permanently. This poison is known as 'Aalaalam' (*ஆலால விடம்* or *ஆலகால விடம்*). At the same time He liberally gave the nectar, which also came from the ocean, to the celestials. Such is the nature of Lord Civan. He kicked with His foot (the messenger of Death) i.e., Yama to save His devotee Maarkandeyan. This Lord Civan is indeed enshrined at the temple in Seekaazhi city.

இரவில்திரி வோர்கட்கிறை தோளிணைபத்தும்
நிரவிக்கர வாளைநேர்ந் தானிடம்போலும்
பரவித்திரி வோர்க்கும்பால் நீறணிவோர்க்குங்
கரவில்த டக்கையார் காழிந்நகர்தானே. 8

*இரவில்-திரிவோர்கட்கு இறை தோள்இணைபத்தும்*
*நிரவி, கர வாளை நேர்ந்தான் இடம்போலும் -*
*பரவித் திரிவோர்க்கும் பால்நீறு அணிவோர்க்கும்*
*கரவுஇல்-தடக்கையார் காழி(ந்)நகர்தானே.*

iravil-tirivOrkaTku iRai tOL iNaipattum
niravi, kara vALai nErntAn2 iTam pOlum--
paravit tirivOrkkum pAl nIRu aNivOrkkum
karavu il-taTakkaiyAr kAzi(n) nakartAn2E.

**பொருள்:** சிவபெருமான், இரவில் திரியும் அசுரர்களின் தலைவனான இராவணனின் இருபது தோள்களையும் நெரித்தவர். பின்பு அவன் வருந்திய அளவில் கைகளில் ஏந்தும் வாளை அவனுக்கு வழங்கி அருளிய இடம் சீகாழி நகராகும். இறைவனைப் பரவி வழிபடும் அடியவர்களும், பால் போன்ற திருநீற்றை அணிபவர்களும், ஒளியாமல் வழங்கும் நீண்ட கைகளை உடைய வள்ளன்மை மிக்க அடியார்களும் இச் சீகாழிப் பதியில் வாழ்கின்றனர்.

**குறிப்புரை:** இராவணற்கு வாள் அருளிச் செய்தவன் இடம் காழி நகரம் என்கின்றது. இரவில் திரிவோர் – அசுரர்கள்; நிசாசரர் என்பதன் மொழி பெயர்ப்பு. நிரவி – ஒழுங்குபடுத்தி. கரவாள் – கை வாள். கரவு

இல் தடக்கையார் – ஒளியாமல் வழங்கும் கையை உடையவர். 'நிசிசரர்' என்றும் அசுரர்களைக் குறிப்பது உண்டு. (Vide) "நிசிசரன் மணிமுடி நெறுநெறு நெறுவென" – குமரகுருபரர்.

Lord Civan crushed the twenty shoulders of Raavanan who is the chief of Asuraas who roam about during night hours (They are called 'Nisaasarar' - *நிசாசரர்*). Later when he repented for his misdeed, Civa bestowed grace on Him and presented a mystic sword to be carried in hand. This Lord Civan is indeed enshrined at the temple in Seekaazhi city. Here abide the long armed philanthropists who munificently and unstintingly bestow all that is needed by their fellowmen who adore and follow devotedly Lord Civan and on those who smear their body with holy ashes.

மாலும்பிர மனுமறியா மாட்சியான்
தோலும்புரி நூலுந்துதை ந்தவரைமார்பன்
ஏலும்பதி போலுமிரந் தோர்க்கெந்நாளுங்
காலம்பக ராதார்காழிந் நகர்தானே. 9

*மாலும் பிரமனும் அறியா மாட்சியான்,*
*தோலும் புரிநூலும் துதைந்த வரைமார்பன்,*
*ஏலும் பதிபோலும் - இரந்தோர்க்கு எந்நாளும்*
*காலம் பகராதார் காழி(ந்)நகர்தானே.*

mAlum piraman2um aRiyA mATciyAn2,
tOlum purinUlum tutainta varaimArpan2,
Elum patipOlum--irantOrkku ennALum
kAlam pakarAtAr kAzin(n) nakartAn2E.

**பொருள்:** சிவபெருமானார், திருமால், பிரமன் ஆகியோரால் அறியப்படாத மாட்சிமையை உடையவர். மான் தோலும் முப்புரிநூலும் படிந்த மலை போன்ற மார்பினை உடையவர். இப்பெருமான் எழுந்தருளியிருக்கும் பதி சீகாழி நகராகும். இந்நகரில் வாழும் செல்வர்கள், தம்மிடம் இரந்து வருகின்றவர்களுக்கு, எந்நேரமும், காலம் தாழ்த்தாது, உடனே கொடுக்கும் தன்மையை உடையவர்களாக இருக்கின்றனர்.

**குறிப்புரை:** அயனும் மாலும் அறியாதவனும், பூணூல் அணிந்தவனுமாகிய இறைவன் பதி காழி நகர் என்கின்றது. இரந்தோர்க்கு எந்நாளும் காலம் பகராதார் – யாசிப்பவர்களுக்கு எப்போதும் 'இது காலமல்ல. இது காலமல்ல' என்று சொல்லாது எப்போதும் கொடுப்பவர்கள்.

His Majesty Lord Civan is beyond the comprehension of Thirumaal and Brahma. Lord Civan wears on His hill like chest the three ply sacred thread with a bit of deer skin attached to it. This Lord Civan is enshrined in Seekaazhi city temple. This city is famed for its philanthropists who bestow then and there, what all is needed for those who approach them for help.

தங்கையிட வுண்பார்தாழ் சீவரத்தார்கள்
பெங்கையு ணராதேபேணித் தொழுமின்கள்
மங்கையொரு பாகமகிழ்ந் தான்மலர்ச் சென்னிக்
கங்கைதரித் தானூர்காழிந் நகர்தானே. 10

தம் கை இட உண்பார், தாழ் சீவரத்தார்கள்,
பெங்கை உணராதே பேணித் தொழுமின்கள்!
மங்கை ஒருபாகம் மகிழ்ந்தான், மலர்ச் சென்னிக்
கங்கை தரித்தான், ஊர் காழி(ந்)நகர்தானே.

tam kai iTa uNpAr, tAz cIvarattArkaL,
pegkai uNarAtE pENit tozumin2kaL!
magkai orupAkam makizntAn2, malarc cen2n2ik
kagkai tarittAn2, Ur kAzi(n) nakartAn2E.

**பொருள்:** சமணர்கள், உணவளிப்பவர்கள் கொடுக்கும் உணவை, தங்கள் கையில் வாங்கி உண்பவர்கள். புத்தர்கள் சீவரம் என்னும் கல்லாடையை உடுத்தியிருப்பவர்கள். அவர்களின் தீய ஒழுக்கத்தை மனத்தில் கொள்ளாமல், உமையம்மையை ஒரு பாகமாக மகிழ்ந்து ஏற்றிருப்பவரும், மலரணிந்த, சென்னியில் கங்கையைத் தரித்திருப்பவருமாகிய சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் சீகாழி நகரைப் பேணித் தொழுவீர்களாக.

**குறிப்புரை:** புத்தர் சமணர்களுடைய தீயொழுக்கத்தைச் சிந்தியாமல் காழி நகரைத் தொழுமின்கள் என்கின்றது. தம்கையிட உண்பார் – கையில் பிச்சையிட ஏற்று உண்பவர்கள். சீவரத்தார்கள் – காவியாடை உடுத்தியவர்கள். பெங்கை – தீயொழுக்கம்.

Ye folks! Ignore and do not follow the indecent way of life of Samanars who get alms in their hands and eat it; similarly do not listen to the preaching of Buddhists who wear cloth dyed in red ochre. Instead adore and worship Lord Civan and the city Seekaazhi in which He is entempled. He supports the river Ganges in His flower

decorated head; also He happily accommodated His consort Umaa Devi on the left portion of His body frame.

வாசங்கமழ் காழிமதிசெஞ் சடைவைத்த
ஈசன்நகர் தன்னையிணை யில்சம்பந்தன்
பேசுந்த மிழ்வல்லோர் பெருநீருலகத்துப்
பாசந்த னையற்றுப் பழியில்புகழாரே. 11

வாசம் கமழ் காழி மதி செஞ்சடை வைத்த
ஈசன் நகர் தன்னை, இணை இல் சம்பந்தன்
பேசும் தமிழ் வல்லோர் பெருநீர் உலகத்துப்
பாசம்தனை அற்றுப் பழி இல் புகழாரே.

vAcam kamaz kAzi mati cenjcaTai vaitta
Ican2 nakartan2n2ai, iNai il campantan2
pEcum tamiz vallOr perunIr ulakattup
pAcamtan2ai aRRup pazi il pukazArE.

**பொருள்:** சிவபெருமான் பிறைமதியைச் செஞ்சடையில் வைத்துள்ளார். இப்பெருமான் எழுந்தருளியுள்ள மணங்கமழ்கின்ற சீகாழிப் பதியை, ஒப்பற்ற ஞானசம்பந்தன் போற்றிப் பாடினார். இப்பதிகத்தைப் பாடும் தமிழில் வல்லவர்கள், கடல் சூழ்ந்த இவ்வுலகில், பாசங்கள் நீங்கப் பெற்றுப், பழியற்ற புகழோடு வாழ்வார்கள்.

**குறிப்புரை:** காழிநகரைப் பற்றி சம்பந்தன் சொன்ன இத்தமிழை, வல்லவர்கள் பாட கடல்புடை சூழ்ந்த உலகத்துப் பாசம் நீங்கிப் பழியற்றுப் புகழுடையராய் வாழ்வர் எனப் பயன் கூறுகிறது. பெருநீர் – கடல்.

Gnaanasambandan has no equal to him on earth. He has sung on Lord Civan's fragrant Seekaazhi city. He wears in His ruddy matted crest the crescent moon. Those who are well versed in these Tamil hymns, will thrive in the sea girt world, freed of all fetters and lead a glorious life.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*81ஆம் பதிகம் முற்றிற்று*
End of 81st Hymn

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# 82. திரு வீழி மிழலை

## திருத்தல வரலாறு:

நான்காம் பதிகம் பார்க்க.

## பதிக வரலாறு:

திரும்பாம்புரம் என்னும் தலத்தை வணங்கிக் கொண்டு பிள்ளையார் திருவீழிமிழலைக்கு அப்பருடன் எழுந்தருள அந்தணர்கள் எதிர் கொண்டு அழைத்தார்கள். பிள்ளையார் சிவிகையினின்றிழிந்து அந்தணர்கள் புடைசூழ விண்ணிழிந்த கோயிலை வலங்கொண்டார். வியந்தார். கீழே விழுந்து வணங்கினார். உள்ளத்தில் உணர்ச்சி பொங்கி வழிந்தது. இசை ஆயிற்று. 'இரும்பொன் மலைவில்லா' என்றெடுத்துச் சந்த இசைத் தமிழைச் சாற்றி மணவாளப் பெருமானது திருவடிக்கீழ் ஆனந்த வெள்ளத்தாடினார்.

# 82. THIRU-VEEZHI-MIZHALAI

## HISTORY OF THE PLACE

See Fourth Hymn.

## INTRODUCTION TO THE HYMN

The godly-child and St. Appar arrived at Thiru-veezhi-mizhalai from Thiruppāmpuram. The residents of this town received them fittingly. After completing this circumambulation of the shrine, our saint moved into the temple and sang the following hymn:

திருச்சிற்றம்பலம்

THIRU-CH-CHITRAMBALAM

## 82. திரு வீழி மிழலை — 82. THIRU-VEEZHI-MIZHALAI

பண் : குறிஞ்சி — *Pann: Kurinji*

ராகம் : குறிஞ்சி — *Raagam: Kurinji*

இரும்பொன் மலைவில்லா எரியம்பாநாணில்
திரிந்தபுர மூன்றுஞ்செற்றா னுறைகோயில்
தெரிந்த அடியார்கள்சென் றதிசைதோறும்
விரும்பியெ திர்கொள்வார் வீழிமிழலையே. 1

**இரும் பொன்மலை வில்லா, எரிஅம்பா, நாணில்,-**
**திரிந்த புரம்மூன்றும் செற்றான் உறை கோயில்-**
**தெரிந்த அடியார்கள் சென்ற திசைதோறும்**
**விரும்பி எதிர் கொள்வார் வீழி(ம்)மிழலையே.**

irum pon2malai villA, eri ampA, nANil,-
tirinta puram mUn2Rum ceRRAn2 uRai kOyil--
terinta aTiyArkaL cen2Ra ticaitORum
virumpi etirkoLvAr vIzi(m)mizalaiyE.

***பொருள்:*** சிவபெருமான் பெரிய பொன்மயமான மேரு மலையை வில்லாக வளைத்து, அனலை அம்பாக அந்த வில்லின் நாணில் பூட்டி, வானில் திரிந்து கொண்டிருந்த முப்புரங்களையும் எரித்தவர். இப்பெருமான் உறையும் கோயில் திருவீழிமிழலை ஆகும். இங்கு, கலைகள் பலவற்றைக் கற்று உணர்ந்த அடியவர்கள் செல்லும் திசைகளில் எல்லாம் அவர்களை விரும்பி எதிர்கொண்டு அழைக்கும் மக்கள் வாழ்கின்றனர்.

***குறிப்புரை:*** மேருமலையை வில்லாகவும், அங்கியை அம்பாகவும் கொண்டு திரிபுரமெரித்த சிவன் உறையும் கோயில் திருவீழிமிழலை என்கின்றது. தெரிந்த அடியார்கள் சென்ற திசை தோறும் விரும்பி எதிர்கொள்வார் என்றது, ஞானசம்பந்தப் பெருமான் எழுந்தருளியபோது எதிர்கொண்டதைத் திருவுள்ளத்து எண்ணி எழுந்த உரை போலும்.

Lord Civan destroyed the three citadels that roamed about in the sky by using the golden mountain Mēru as His bow and Agni as the arrow. This Lord Civan is entempled in Thiru-veezhi-mizhalai. The servitors of this town, well-versed in the scriptures, proceed, love impelled, in each and every direction to welcome Civan's devotees.

Note: Thillai scholars number three thousand, and those of Thiru-veezhi-mizhalai five hundred. They are known for their hospitality.

வாதைப் படுகின்ற வானோர் துயர்தீர
ஓதக் கடல்நஞ் சையுண்டா னுறைகோயில்
கீதத் திசையோ டுங்கேள்விக் கிடையோடும்
வேதத் தொலியோ வாவீழிமிழலையே. 2

வாதைப்படுகின்ற வானோர் துயர் தீர
ஓதக்கடல் நஞ்சை உண்டான் உறை கோயில் -
கீதத்து இசையோடும் கேள்விக் கிடையோடும்
வேதத்து ஒலி ஓவா வீழி(ம்)மிழலையே.

vAtaippaTukin2Ra vAn2Or tuyar tIra,
OtakkaTal nanjcai uNTAn2 uRai kOyil--
kItattu icaiyOTum kELvik kiTaiyOTum
vEtattu oli OvA vIzi(m)mizalaiyE.

**பொருள்:** சிவபெருமான், துயரப்படுகின்ற தேவர்களின் துன்பம் நீங்குமாறு வெண்மையான நீரோடு கூடிய கடலில் இருந்து எழுந்த நஞ்சினை தொண்டையில் நிறுத்தியவர். இப்பெருமான் உறையும் கோயில் திருவீழிமிழலை ஆகும். இங்கு இசையமைப்போடு கூடியதும் சுருதிக்கு ஏற்ப, ஒருவர் ஓதக் கேட்டு ஓதப்பட்டு வருவதுமாகிய வேத பாராயணத்தை ஓதும் வேத ஒலி நீங்காமல் ஒலிக்கின்றது.

**குறிப்புரை:** துன்புறுகின்ற தேவர்கள் துயர்தீர, நஞ்சுண்டநாதன் கோயில் திருவீழிமிழலை என்கின்றது. வாதை – துன்பம். கேள்விக் கிடை – வேதத்தை ஓதும் மாணவர் கூட்டம்.

Being the repository of mercy, grace and love, Lord Civan came forward to save the celestial folks from death; HE, without swallowing the poison, positioned it in His throat permanently; He is enshrined in the temple of Thiru-veezhi-mizhalai. Here the literal sounds of the Vedas tunefully chanted by the throng of young students will be heard ceaselessly.

**Note:** One should commence one's cultivation of the Vedas when one is young. The chanting of the Vedas is always enchanting. The chanter chants them aloud in company and does it silently when alone, in the mode of Ajapa.

பயிலும் மறையாளன்தலை யிற்பலிகொண்டு
துயிலும் பொழுதாடுஞ்சோதி யுறைகோயில்
மயிலும் மடமானும்மதி யும்மிளவேயும்
வெயிலும் போல்மாதர் வீழிமிழலையே. 3

*பயிலும் மறையாளன்தலையில் பலி கொண்டு,*
*துயிலும் பொழுது ஆடும் சோதி உறை கோயில் -*
*மயிலும் மடமானும் மதியும்(ம்) இள வேயும்*
*வெயிலும் போல் மாதர் வீழி(ம்)மிழலையே.*

payilum maRaiyALan2 talaiyil pali koNTu,
tuyilum pozutu ATum cOti uRai kOyil--
mayilum maTamAn2um matiyum(m) iLa vEyum
veyilum poli mAtar vIzi(m)mizalaiyE.

**பொருள்:** சிவபெருமான், வேதங்களை ஓதும் பிரமனின் தலையோட்டில் பலி ஏற்பவர். அனைவரும் துயிலும் நள்ளிரவில் நட்டமாடும் ஒளி வடிவினர். இப்பெருமான் உறையும் கோயில் திருவீழிமிழலை ஆகும். மயிலைப் போன்ற சாயலும், மருளுகின்ற மான் போன்ற கண்களும், மதி போன்ற முகமும், இள மூங்கில் போன்ற தோள்களும் இளங்கதிர் போன்ற அழகொளி மிக்க மகளிர் பலர் இங்கு வாழ்கின்றனர்.

**குறிப்புரை:** பிரமகபாலத்தில் பிச்சை ஏற்று, எல்லாம் துயிலும் நள்ளிரவில் நட்டமாடும் பெருமான் கோயில் வீழிமிழலை என்கின்றது. இந்நகரத்து மாதர் மயிலையும் மானையும் மதியையும் மூங்கிலையும் இளவெயிலையும் போல் விளங்குகின்றார்கள். சாயலால் மயில், பார்வையால் மான், நுதலழகால் மதி, தோளால் மூங்கில், கற்பால் வெயில் எனக் கொள்க.

Lord Civan receives alms in one of the skulls of Brahma who is an adept in the Vedas. As a supernal flame He dances in the night when all are sleeping. He is enshrined in the temple in Thiru-veezhi-mizhalai. Here abide damsels whose gait is like the peacock's; whose eyes are like the deer's, whose forehead and face are moon-like; whose shoulders are like tender bamboos; and whose lustre is like the rays of the early sun.

Note: Civa dances when the world sleeps. The human soul is a microcosm. It is in slumber where it is unruffled.

இரவன் பகலோனுமெச் சத்திமையோரை
நிரவிட் டருள்செய்தநி மலன்னுறைகோயில்
குரவஞ் சுரபுன்னைகு ளிர்கோங்கி ளவேங்கை
விரவும் பொழிலந்தண் வீழிமிழலையே. 4

இரவன் பகலோனும் எச்சத்து இமையோரை
நிரவிட்டு, அருள்செய்த நிமலன்(ன்) உறை கோயில் -
குரவம், சுரபுன்னை, குளிர் கோங்கு, இள வேங்கை,
விரவும் பொழில் அம் தண் வீழி(ம்)மிழலையே.

iravan2 pakalOn2um eccattu imaiyOrai
niraviTTu, aruL ceyta nimalan2(n2) uRai kOyil--
kuravam, curapun2n2ai, kuLir kOgku, iLa vEgkai,
viravum pozil am taN vIzi(m) mizalaiyE.

**பொருள்:** சிவபெருமான், தக்கன் செய்த யாகத்தில் சூரியன் சந்திரன் முதலான தேவர்களைத் தண்டம் செய்து அருள் செய்த நிமலன் ஆவார். இப்பெருமான் உறையும் கோயில் திருவீழிமிழலை ஆகும். இங்கு, குரா, சுரபுன்னை, குளிர்ச்சி தரும் கோங்கு, இளவேங்கை ஆகிய மரங்கள் கலந்துள்ள குளிர்ந்த பொழில்கள் பல உள்ளன.

**குறிப்புரை:** தக்க யாகத்தில் சூரியன் சந்திரன் முதலான தேவர்களைச் செப்பஞ் செய்து அருள் செய்த நிமலன் கோயில் இது என்கின்றது. இரவன் – சந்திரன். பகலோன் – சூரியன். எச்சத்து – யாகத்தில். நிரவிட்டு – செப்பஞ்செய்து.

When Dhakshan was celebrating the oblation rituals, Lord Civan, the pure and supreme, commanded Veerabadran (*வீரபத்திரன்*) to go and punish the moon and the sun and other Devaas who were participating in the above oblation. Later He forgave and graced them. He is enshrined in Thiru-veezhi-mizhalai surrounded by gardens having a balanced and comfortable weather. In the cool gardens thrive the date tree (*குரவம்*), Alexandrian laural (*புன்னை*), the cool silk cotton (*கோங்கு*), the young kino tree and other plants.

**Note:** The punishment meted out by Civa is also an act of grace. It is known as Mara-k-karunai. He appears to be cruel. However, actually and factually, He is an embodiment of kindness.

கண்ணிற் கனலாலே காமன்பொடியாகப்
பெண்ணுக் கருள்செய்தபெரு மானுறைகோயில்
மண்ணிற் பெருவேள்விவளர் தீப்புகைநாளும்
விண்ணிற் புயல்காட்டும் வீழிமிழலையே. 5

கண்ணின் கனலாலே காமன் பொடி ஆக,
பெண்ணுக்கு அருள்செய்த பெருமான் உறை கோயில் -
மண்ணில் பெரு வேள்வி வளர் தீப்புகை நாளும்
விண்ணில் புயல் காட்டும் வீழி(ம்)மிழலையே.

kaNNin2 kan2alAlE kAman2 poTi Aka,
peNNukku aruLceyta perumAn2 uRai kOyil--
maNNil peru vELvi vaLar tIppukai nALum
viNNil puyal kATTum vIzi(m)mizalaiyE.

**பொருள்:** சிவபெருமான், தனது நெற்றிக் கண்ணில் தோன்ற கனலால் மன்மதனைப் பொடி செய்தவர். பின்னர் அவனது மனைவியான இரதி தேவி வேண்டுதல் செய்த போது, அவளுடைய கண்களுக்கு மட்டும் புலனாகுமாறு அருள்செய்த நிமலன் இவர். இப்பெருமான் உறையும் கோயில் திருவீழிமிழலை ஆகும். இங்கு, நாள்தோறும் மண்ணில் செய்யும் பெரிய வேள்விகளில் வளரும் தீப்புகையானது வானத்தில் மழை மேகங்களை உருவாக்குகின்றது.

**குறிப்புரை:** மன்மதன் எரிய விழித்து, இரதிக்கு அருள் செய்த பெருமான் கோயில் இது என்கின்றது. பெண் – இரதி. உமையெனப் பொருள் கொண்டு இடப்பாகத்தை அருளிய எனப் பொருள் உரைப்பாரும் உளர். பூமியில் செய்யப்படும் யாகப் புகை, வானத்தில் மேகத்தை வளர்க்கும் என்ற கருத்தைப் பின்னிரண்டடிகளில் காண்க.

Lord Civan burnt Manmathan (Cupid), the God of Love by the fire emanating from His third eye in the forehead. Later He graced Cupid's wife Rathi, to the effect that he will be visible only to her and not to others. This Lord Civan is enshrined in Thiru-veezhi-mizhalai. Here the smoke rising from the fire of the great sacrificial pits soars up daily to form clouds in the sky.

Note: He smote Manmatha. Yet when his wife implored Him, He resurrected him, making him visible to the eyes of his wife only.

மாலாயிரங் கொண்டுமலர்க் கண்ணிடஆழி
ஏலாவலயத் தோடீந்தானு றைகோயில்
சேலாகிய பொய்கைச்செழு நீர்க்கமலங்கள்
மேலாலெரி காட்டும்வீழி மிழலையே. 6

மால் ஆயிரம் கொண்டு மலர்க்கண் இட, ஆழி
ஏலா வலயத்தோடு ஈந்தான் உறை கோயில் -
சேல் ஆகிய பொய்கைச் செழு நீர்க் கமலங்கள்
மேலால் எரி காட்டும் வீழி(ம்)மிழலையே.

mAl Ayiram koNTu malarkkaN iTa, Azi
ElA valayattOTu IntAn2 uRai kOyil--
cEl Akiya poykaic cezu nIrk kamalagkaL
mElAl eri kATTum vIzi(m)mizalaiyE.

**பொருள்:** ஆயிரம் தாமரைப் பூக்களைக் கொண்டு திருமால் அருச்சனை செய்தபோது, ஒன்று குறைந்ததைக் கண்டு, தனது மலர் போன்ற கண்களில் ஒன்றைப் பெயர்த்து சாத்திய அளவில் அவனுக்கு பிறர் சுமக்க முடியாத சக்கராயுதத்தை ஈந்தவர் சிவபெருமான். இப்பெருமான் உறையும் கோயில் திருவீழிமிழலை ஆகும். இங்கு, சேல் மீன்கள் வாழ்கின்ற செழிப்பான பொய்கைகளில் முளைத்த தாமரை மலர்கள் தீப்பிழம்பு போல் காணப்படுகின்றன.

**குறிப்புரை:** திருமால் ஆயிரம் பூவோடு கண் கொண்டு வழிபாடு செய்யச் சக்கரம் ஈந்த பெருமான் கோயில் இது என்கின்றது. இவ்வரலாறு இத்தலத்தில் நிகழ்ந்தது. ஏலாவலயம் – சுமக்கலாற்றாத சக்கரம். கமலங்கள் எரிகாட்டும் – செந்தாமரை தீப்பிழம்பைப் போல விளங்கும்.

Thirumaal used to worship Lord Civan daily by offering 1000 flowers. One day when he was worshipping Lord Civan like this, he found one flower short of one thousand. He immediately plucked one of his two eyes and offered it at the holy feet of Lord Civan. Lord Civan was very pleased by this action of Thirumaal and gave him the most powerful divine weapon Disc (*சக்கரம்*), which is very heavy and impossible to hold for anyone except Thirumaal. This Lord Civan is enshrined in Thiru-veezhi-mizhalai, in the pools of which, formed by nature, carp fish abound and ruddy lotus flowers blaze like fire.

மதியால் வழிபட்டான் வாணாள்கொடு போவான்
கொதியா வருகூற்றைக் குமைத்தா னுறைகோயில்
நெதியான் மிகுசெல்வர் நித்தநியமங்கள்
விதியால் நிற்கின்றார் வீழிமிழலையே. 7

*மதியால் வழிபட்டான் வாழ்நாள் கொடுபோவான்,*
*கொதியா வரு கூற்றைக் குமைத்தான் உறை கோயில் -*
*நெதியால் மிகு செல்வர் நித்தம் நியமங்கள்*
*விதியால் நிற்கின்றார் வீழி(ம்)மிழலையே.*

matiyAl vazipaTTAn2 vAznAL koTupOvAn2,
kotiyA varu kURRaik kumaittAn2 uRai kOyil--
netiyAl miku celvar nittam niyamagkaL
vitiyAl niRkin2RAr vIzi(m)mizalaiyE.

**பொருள்:** சிவபெருமான் தன்னை மெய்யறிவால் வழிபட்ட மார்க்கண்டேயனின் உயிரை எடுத்துச் செல்லச் சினந்து வந்த கூற்றுவனை அழித்தவர். இப்பெருமான் உறையும் கோயில் திருவிழிமிழலை ஆகும். இங்கு நிதியாலும், தியானத்தாலும் மிக்க செல்வர்கள் நாள்தோறும் செய்யும் நியமங்களை விதிப்படி செய்து வாழ்கின்றனர்.

**குறிப்புரை:** காலகாலன் கோயில் இது என்கின்றது. மதியால் வழிபட்டான் – அறிவோடு வழிபட்ட மார்க்கண்டன். கொதியா – கோபித்து. குமைத்தான் – உரு அழியச் செய்தவன், நெதியான் மிகு செல்வர் – தியானத்தால் மிக்க செல்வர். நியமங்கள் – யோக உறுப்புகள் எட்டனுள் ஒன்றாகிய நியமம்.

The wrathful Yama, approached Maarkandan to snatch away his life when he was worshipping Lord Civa with deep devotion and divine knowledge. Yama was then destroyed by the Lord. This Lord Civan is enshrined in Thiru-veezhi-mizhalai where regular servitors of spiritual opulence and excellence, reside and, offer worship to Lord Civan daily as detailed in the scriptures.

**Note:** Civa is Kaalakaalar, the one who smote Yama to death. He was later revived by the even-merciful Civa.

எடுத்தான் தருக்கினை யிழித்தான் விரலூன்றிக்
கொடுத்தான் வாளாளாக் கொண்டா னுறைகோயில்
படித்தார் மறைவேள்வி பயின்றார் பாவத்தை
விடுத்தார் மிகவாழும் வீழிமிழலையே. 8

எடுத்தான் தருக்கினை இழித்தான், விரல் ஊன்றி;
கொடுத்தான், வாள்; ஆளாக் கொண்டான்; உறை கோயில் -
படித்தார், மறை வேள்வி பயின்றார், பாவத்தை
விடுத்தார், மிக வாழும் வீழி(ம்)மிழலையே.

eTuttAn2 tarukkin2ai izittAn2, viral Un2Ri;
koTuttAn2, vAL; ALAk koNTAn2; uRai kOyil--
paTittAr, maRai vELvi payin2RAr, pAvattai
viTuttAr, mika vAzum vIzi(m)mizalaiyE.

**பொருள்:** சிவபெருமான், கயிலைமலையை பெயர்த்து எடுத்த இராவணனின் செருக்கினை தன்கால் விரலை ஊன்றி அழித்தவர். பின்பு, அவன் தன் பிழையை உணர்ந்து வேண்ட, வாள் கொடுத்து அவனை ஆளாகக் கொண்டவர். இப்பெருமான் உறையும் கோயில் திருவீழிமிழலை ஆகும். இங்கு, வேதத்தைப் படித்து, உணர்ந்தவர்களும், வேள்விகளை இடைவிடாது செய்து, பாவத்தினின்று விடுபட்ட அந்தணர்களும் மிகுதியாக வாழ்கின்றனர்.

**குறிப்புரை:** இராவணனது தருக்கினை அழித்து வாள் கொடுத்து ஆளாகக் கொண்ட இறைவன் கோயில் இது என்கின்றது. மறை படித்தார். வேள்வி பயின்றார் என மாறிக் கூட்டுக. வேதம் ஓதி வேள்வி இடைவிடாது செய்து பாபத்தை விட்டவர்கள் வாழ்கின்ற மிழலை என்க.

Raavanan tried to uproot mount Kailash, the abode of Lord Civan. Civan pressed the mountain by His toe and removed his mighty valour. Later Raavanan repented for his misdeed. Civan forgave him and made him His servitor. He also gifted to Him a divine mystical sword and long life. This Lord Civan is enshrined in Thiru-veezhi-mizhalai temple. In this town thrive the learned, the practitioners of Vedic sacrifice and those who have forsaken all sin.

**Note:** Raavana became an ardent Civa-bhaktha. On his forehead and body the holy ashes blaze in brilliance always.

கிடந்தா னிருந்தானுங் கீழ்மேற்காணாது
தொடர்ந் தாங்கவரேத் தச்சுடராய வன்கோயில்
படந்தாங் கரவல்குற் பவளத்துவர் வாய்மேல்
விடந்தாங் கியகண்ணார் வீழிமிழலையே. 9

*கிடந்தான் இருந்தானும், கீழ் மேல் காணாது,*
*தொடர்ந்து ஆங்கு அவர் ஏத்தச் சுடர் ஆயவன் கோயில் -*
*படம் தாங்கு அரவு அல்குல், பவளத்துவர்வாய், மேல்*
*விடம் தாங்கிய கண்ணார் வீழி(ம்)மிழலையே.*

kiTantAn2 iruntAn2um, kIz mEl kANAtu,
toTarntu Agku avar Ettac cuTar Ayavan2 kOyil--
paTam tAgku aravu alkul, pavaLattuvar vAy, mEl
viTam tAgkiya kaNNAr vIzi(m)mizalaiyE.

**பொருள்:** பாம்பணையில் துயிலும் திருமாலாலும், தாமரை மலரில் உறையும் நான்முகனாலும் சிவபெருமானின் அடிமுடிகளைக் காண முடியவில்லை. அவர்கள் திரும்பித் தொடர்ந்து போற்றியபோது, அழலுருவாய் நின்றவர் இப்பெருமான். இவர் உறையும் கோயில் திருவீழிமிழலை ஆகும். இங்கு அரவின் படம் போன்ற அல்குலையும், பவளம் போன்ற வாயினையும், விடம் பொருந்திய கண்களையும் உடைய மகளிர் மிகுதியாக வாழ்கின்றனர்.

**குறிப்புரை:** மாலும் அயனும் அறியாவண்ணம் அழல் உருவானான் இடம் இது என்கின்றது. கிடந்தான் – பாம்பணையில் பள்ளி கொள்ளும் திருமால். இருந்தான் – பூமேல் இருந்த பிரமன். சுடராயவன் – தீ உருவானவன். அரவு போன்ற அல்குலையும், வாயின் மேல் விஷத்தையும் தாங்கிய கண்ணார் என்றது பாம்பு ஓரிடமும் விடம் ஓரிடமும் இருக்கின்றதென்னும் வியப்புத் தோன்றக் கூறியது.

Thirumaal who reclines on snake and Brahma whose seat is the lotus flower, failed to see the holy feet and head of Lord Civan, in spite of their serious search. Then they both realised their vanity and hailed Lord Civan as the Supreme Being. At that moment Lord Civan stood before them as a big and tall blazing column of fire. This Lord Civan is enshrined in Thiru-veezhi-mizhalai temple. In this town abide women whose forelaps are like the hood of cobra; whose lips are like the ruddy coral gem; and whose eyes are suffused with venom.

Note: Civa can be behold only by and through His grace.

சிக்கார் துவராடைச் சிறுதட்டுடையாரும்
நக்காங் கலர்தூற்றுநம்பா னுறைகோயில்
தக்கார் மறைவேள்வித்தலை யாயுலகுக்கு
மிக்கார வர்வாழும்வீழி மிழலையே. 10

*சிக்கு ஆர் துவர் ஆடை, சிறு தட்டு, உடையாரும்*
*நக்கு ஆங்கு அலர் தூற்றும் நம்பான் உறை கோயில் -*
*தக்கார், மறை வேள்வித் தலைஆய் உலகுக்கு*
*மிக்கார் அவர் வாழும் வீழி(ம்)மிழலையே.*

cikku Ar tuvar ATai, ciRu taTTu, uTaiyArum
nakku Agku alar tURRum nampAn2 uRai kOyil--
takkAr, maRai vELvit talai Ay ulakukku
mikkAr avar vAzum vIzi(m)mizalaiyE.

**பொருள்:** சிக்குப் பிடித்த காவி உடையையும் சிறிய ஓலைத் தடுக்குகளையும் உடைய புத்தரும் சமணர்களும் சிவபெருமானை ஏளனம் செய்து சிரிக்கின்றனர். இப்பெருமான் உறையும் கோயில் திருவீழிமிழலை ஆகும். மெச்சத் தக்கவராகவும், வேத வேள்விகள் செய்வதில் தலையாயவராகவும், உலகிற்கே மிகவும் மேம்பட்டவராகவும் உள்ள மறையவர்கள் இங்கு பலர் வாழ்கின்றனர்.

**குறிப்புரை:** புறச்சமயிகள் புறம்பழிக்கும் நமதிறைவன் கோயில் இது என்கின்றது. சிக்கு ஆர் துவர் ஆடை – சிக்கு நாறும் காவியுடை, தட்டு உடை – ஓலைத் தடுக்காகிய உடை, நக்கு – சிரித்து. அவர் தூற்றும் – பழிதூற்றும். தக்காராய், வேதவேள்வியில் தலையானவராய், உலகுக்கே மிக்கவர்கள் வாழுகின்ற வீழிமிழலை என்க.

The Buddhists clad themselves in dirty cloth dyed in red ochre, while the Samanars wear small plaited mats. They defile and defame our Lord Civan who is enshrined in Thiru-veezhi-mizhalai temple. Here in this town flourish many scholars who are competent people in Vedic sacrificial rites and who are world leaders of high repute.

மேனின் றிழிகோயில்வீழி மிழலையுள்
ஏனத்தெ யிற்றானையெ ழிலார்பொ ழிற்காழி
ஞானத்து யர்கின்றநலங் கொள்சம்பந்தன்
வாய்மைத் திவைசொல்ல வல்லோர் நல்லோரே. 11

*மேல்நின்று இழி கோயில் வீழி(ம்)மிழலையுள்*
*ஏனத்து எயிற்றானை எழில் ஆர் பொழில் காழி*
*ஞானத்து உயர்கின்ற நலம் கொள்சம்பந்தன்*
*வாய்மைத்து இவை சொல்ல, வல்லோர் நல்லோரே.*

mEl nin2Ru izi kOyil vIzi(m)mizalaiyuL
En2attu eyiRRAn2ai, ezil Ar pozil kAzi
njAn2attu uyarkin2Ra nalam koL campantan2
vAymaittu ivai colla, vallOr nallOrE.

***பொருள்:*** விண்ணிலிருந்து இழிந்து வந்துள்ள வீழிமிழலைக் கோயிலில், பன்றிப்பல் சூடியவனாய் எழுந்தருளி விளங்கும் சிவபிரானை, அழகிய பொழில்கள் சூழ்ந்த காழிப்பதியில் தோன்றிய ஞானத்தால் மேம்பட்ட அழகிய ஞானசம்பந்தன், உண்மையை உடையவனாய் ஓதிய இப்பதிகத்தைச் சொல்ல வல்லவர் நல்லவர் ஆவர்.

***குறிப்புரை:*** வீழிநாதனைக் காழி ஞானசம்பந்தன் சொன்ன இப்பாடல் பாடவல்லார் நல்லார் என்கின்றது. மேல்நின்று இழிகோயில் – விண்ணிழி கோயில் இது இத்தலத்துச் சிறப்புக்களுள் ஒன்று. ஏனத்து எயிற்றானை – பன்றிக் கொம்பை அணிந்தானை. வாய்மைத்து இவை – உண்மையை உடையனவாகிய இவற்றை.

The Vimaanam in the temple in Thiru-veezhi-mizhalai (*விமானம்*) – the tower above the sanctum sanctorum which is different from the towers on all four directions over the compound wall, descended by itself from heaven and stayed over the sanctum sanctorum of this temple. Lord Civan is enshrined in this temple wearing the teeth of a hog. The handsome Gnaanasambandan of Seekaazhi, which is surrounded by lush gardens, is an adept in divine scriptures. He has sung this hymn which is full of realism and the truth. Those who can recite this hymn are truly the virtuous ones.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*82ஆம் பதிகம் முற்றிற்று*
End of 82nd Hymn

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# 83. திரு அம்பர் மாகாளம்

## திருத்தல வரலாறு:

சோழ நாட்டுக் காவிரித் தென்கரைத் தலம். மயிலாடுதுறை திருவாரூர் வழியில் பூந்தோட்டத்தில் இருந்து காரைக்கால் செல்லும் பேருந்துகளில் செல்லலாம்.

இத்தலம் கோயில் திருமாகாளம் எனவும் வழங்கும். அம்பன், அம்பாசுரன் இருவரையும் கொன்ற காளி, தன் பாவந்தீர, இறைவனை இத்தலத்தில் பூசை செய்தாள். மாகாளரிஷியும் பூசித்த தலம். காளி கோயில் தெற்குப் பிராகாரத்தில் உள்ளது. வைகாசி மாதத்தில் சோமாசிமாறர் யாக உற்சவம் நடைபெறும். சிறிய உருவமுடைய பாணலிங்கம் குவளை சாத்தப்பட்டு உள்ளது. இறைவன் காளகண்டேசுவரர், இறைவி பட்சநாயகி. தீர்த்தம் மாகாளதீர்த்தம். சோமாசிமாற நாயனார் யாகம் செய்த தலம். இத்தலம் பேரளம் திருவாரூர் மார்க்கத்தில் உள்ள பூந்தோட்டம் இரயில் நிலையத்தில் இருந்து கிழக்கே 3 கி.மீ. தூரத்தில் உள்ளது.

### கல்வெட்டு:

இத்தலம் முதல் குலோத்துங்கன் காலத்து உய்யக் கொண்டார் வளநாட்டு அம்பர் நாட்டு அம்பர் திருமாகாளம் என வழங்கப் பெற்றது. இராஜகேசரிவர்மனான குலோத்துங்கன் காலத்து, பூபாலகுலவல்லி வளநாட்டு அம்பர் நாட்டு அம்பர் மாகாளம் எனவும் வழங்கப் பெற்றது. இறைவன் திருமாகாளம் உடையார், திருமாகாளத்து மகாதேவர் என வழங்கப் பெறுகிறார். கோயிலுக்கு முதல் குலோத்துங்கன் காலத்து நுளம்பராசன் வேண்டுகோளுக்காக மாத்தூர் திருச்சிற்றம்பல நந்தராசனால் புரவுவரி விளாகம் என்ற கிராமம் கோயிலுக்கு அளிக்கப் பெற்றது. மேலும் அவனது ஆட்சி 42ஆம் ஆண்டில் வேதந்தூர் என்ற கிராமத்தை அம்பர் உதயமார்த்தாண்டன் அளித்திருக்கிறான்.

சேக்கிழான் வேளான் திருவாய்க்குலம் உடையான் எயினிகுடி கிராமத்தை அளித்தான். முன்னரே அதை அநுபவித்து வந்த காணியாளரைத் தள்ளிவிட்டுப் புதிதாகப் பயிர் செய்ய ஏற்பாடு செய்தான். விக்கிரம சோழன் காலத்தில் (கி.பி. 1118–1135) நிலமளித்த செய்தி அறியப்பெறுகிறது. சிறப்பாக ஆட்கொண்ட நாயகனையும், அம்மையையும் கோயிலுக்கு வார்த்துக் கொடுத்து, திருவமுதுக்கு க்ஷத்திரிய சிகாமணி வளநாட்டுப் பனையூர் நாட்டுச் சிறுவேலூரானான அமுதன்

திருச்சிற்றம்பலம் உடையான் உதய மார்த்தாண்ட மூவேந்த வேளான் நிலமும் அளித்தான். அதே அம்மைக்கு மற்றோர் சிறுவேளூர் உடையான் நிலமும் அளித்திருக்கிறான். இந்த ஆட்கொண்ட நாயகர் என்பது சோமாஸ்கந்தரின் பெயர் போலும். இவரைப் பற்றி விக்கிரம சோழன் காலத்துக் கல்வெட்டும் அறிவிக்கிறது. இறைவனுக்கு முத்துக் கழுத்தணி, வைரமுடி இவற்றைக் காரிபுலியனான சோழமாராயன் அளித்தான். விக்கிரமசோழன் திருமாளிகைப் பத்தியைக் கட்டினான். மற்றும் விளக்கிற்காகவும், விழாவிற்காகவும் பொன்னும், நிலமும் அளித்த செய்தியை அறிவிக்கின்றன. முதுபகவர் என்ற கோயிலொன்று குறிப்பிடப்படுகின்றது.

உமாபரமேஸ்வரி காளி அம்மையாக இருத்தல் வேண்டும். இதனை அமைத்தவன் விக்கிரம சோழன். பூசைக்கும், அமுதுக்குமாக நிலம் வழங்கி இருக்கிறான். இராஜேந்திர சோழனும் அக்கோயிலுக்கு நிலம் வழங்கினான்.

### பதிக வரலாறு:

திருநாவுக்கரசு சுவாமிகளோடும் அடியார்கள் புடைசூழத் திருமாகாளத்தை வணங்கிப் பதிக இன்னிசை பாடிய பிள்ளையார் திருஅம்பர்மாகாளத்தைச் சேர்ந்தார்கள். ‘அடையார் புரம்’ என்னும் இப்பதிகத்தை அருளிச் செய்தார்கள்.

## 83. THIRU-AMBAR-MAAKAALAM

### HISTORY OF THE PLACE

This sacred place is to the south of river Cauvery in Chola Naadu. It can be reached by buses plying from Poonthottam to Kaaraikkaal in the Mayilaaduthurai - Thiruvaaroor bus route. It is at a distance of 3 km east of the Poonthottam railway station in the Peralam - Thiruvaaroor train route. This place is also known as Koyil Thirumaakaalam.

The name of the Lord is Kaalakandesuvarar and that of the Goddess is Patchanaayaki. The icon is of small size known as Baanalingam and is covered with ‘kuvalai’. The sacred ford is Maakalatheerththam.

Goddess Kaali worshipped the Lord here in order to get rid of the sin of killing two demons, Amban and Ambaasuran. Sage Maakaalarishi also offered worship here.

A shrine for Kaali is in the south ambulatory. A festival for Somaasimaarar is celebrated in the month of Vaikaasi.

The inscriptions at this temple pertain to the reign of many Chola monarchs, Kuloththungkan I and Vikkirama Cholan being the most notable. They speak of the grant of many villages for the temple. Note is made of the installation of the icons of Aatkondanaayakar and Consort and the endowment of lands for food offerings for the same. This icon might refer to Somaaskandhar, and is mentioned in an inscription of Vikkirama Cholan also. Donation of ornaments to the Lord and that of gold and lands for lamps is noted.

Vikkirama Cholan had also built a colonnade for the Lord and a shrine for Kaali, known as Umaaparamesuvari. He also made land grants to support the worship services and food offerings.

### INTRODUCTION TO THE HYMN

Having hailed the Lord of Thiru-maakaalam with St. Appar, our saint arrived at Thiru-ambar-maakaalam and sang the following hymn:

திருச்சிற்றம்பலம்

THIRU-CH-CHITRAMBALAM

## 83. திருஅம்பர்மாகாளம் 83. THIRU-AMBAR-MAAKAALAM

பண் : குறிஞ்சி *Pann: Kurinji*

ராகம் : குறிஞ்சி *Raagam: Kurinji*

அடையார் புரமூன்று மனல்வாய் விழவெய்து
மடையார் புனலம்பர் மாகாளம்மேய
விடையார் கொடியெந்தை வெள்ளைப் பிறைசூடும்
சடையான் கழலேத்தச் சாராவினைதானே. 1

அடையார் புரம் மூன்றும் அனல்வாய் விழ எய்து,
மடை ஆர் புனல் அம்பர்மாகாளம் மேய
விடை ஆர் கொடி எந்தை, வெள்ளைப்பிறை சூடும்
சடையான், கழல் ஏத்த, சாரா, வினைதானே.

aTaiyAr puram mUn2Rum an2alvAy viza eytu,
maTai Ar pun2al amparmAkALam mEya
viTai Ar koTi entai, veLLaippiRai cUTum
caTaiyAn2, kazal Etta, cArA, vin2aitAn2E.

**பொருள்:** சிவபெருமான் பகைவர்களாகிய அசுரர்களின் மூன்று கோட்டைகளும் தீயில் எரிந்து அழியுமாறு அம்பை எய்தவர். இப்பெருமான், நீரைத் தேக்கும் மடைகளை உடைய நீர்வளம் மிக்க அம்பர் மாகாளத்தில் எழுந்தருளி உள்ளார். விடை எழுதிய கொடியை உடையவரும், வெண்மையான பிறை மதியை அணிந்தவரும், எம் தந்தையுமாகிய இப்பெருமானின் திருவடிகளைப் போற்றித் துதிப்பவர்களை வினைகள் சேருவதில்லை.

**குறிப்புரை:** இப்பதிகத்தால் அம்பர்மாகாளத்து எழுந்தருளிய இறைவனுடைய திருவடியை ஏத்த வல்லவர்க்கு வினை சாரா, தவம் சாரும், இன்பம் எய்தும் என்பது அறிவிக்கப்படுகின்றது. அடையார் – பகைவர் என்றது திரிபுராதிகள். மடை – வாய்க்கால் மடை.

Lord Civan, our Father, has the insigne of the bull for His flag. He supports the white crescent moon in His matted hair. He fired a shot by an arrow at the three citadels of the hostile Asuraas so that they fell into the jaws of fire and got destroyed. This Lord Civan is enshrined at the temple in Thiru-ambar-maakaalam, which is rich in water-abounding sluices. The bad effects of karma will not attach those who adore the holy feet of Lord Civan of Thiru-ambar-maakaalam.

**Note:** Our saint sang the above hymn for the reduction or annulment of karma of those who recite his verses in all sincerity.

தேனார் மதமத்தந் திங்கள் புனல்சூடி
வானார் பொழிலம்பர் மாகாளம்மேய
ஊனார் தலைதன்னிற் பலிகொண் டுழல்வாழ்க்கை
ஆனான் கழலேத்த அல்லலடையாவே. 2

தேன் ஆர் மதமத்தம் திங்கள் புனல் சூடி,
வான் ஆர் பொழில் அம்பர்மாகாளம் மேய,
ஊன ஆர் தலைதன்னில் பலி கொண்டு உழல் வாழ்க்கை
ஆனான் கழல் ஏத்த, அல்லல் அடையாவே.

tEn2 Ar matamattam tigkaL pun2al cUTi,
vAn2 Ar pozil ampar mAkALam mEya,
Un2 Ar talai tan2n2il pali koNTu uzal vAzkkai
An2An2 kazal Etta, allal aTaiyAvE.

**பொருள்:** சிவபெருமான் தேன் பொருந்திய செழுமையான ஊமத்தம்பூ, பிறைமதி, கங்கை ஆகியவற்றைச் சூடியிருப்பவர். இப்பெருமான் வானளாவிய பொழில் சூழ்ந்த அம்பர்மாகாளத்தில் எழுந்தருளி உள்ளார். ஊன் பொருந்திய தலையோட்டில் பலியேற்றுத் திரியும் வாழ்க்கையை மேற்கொண்ட இப்பெருமானின் திருவடிகளைப் போற்றத் துன்பங்கள் நம்மை வந்தடையாது.

**குறிப்புரை:** ஊனார் தலை – பிரம கபாலம். ஆனான் – இடபத்தை உடையவன். அல்லல் – துன்பம்.

Lord Civan who lives the life of a mendicant roams about on His bull and receives alms in a human skull to which flesh is still sticking. He is adorned with holy dripping rich datura flowers, the crescent moon and the river Ganges - all in His matted hair. This Lord Civan is enshrined in Thiru-ambar-maakaalam, which is surrounded by thick groves full of sky-vaulting tall trees. If we adore this Lord Civan's holy feet, we will not be affected by any affliction in our lifetime.

**Note:** Civa is a mendicant. He annuls our poverty - physical as well as spiritual.

திரையார் புனலோடு செல்வமதிசூடி
விரையார் பொழிலம்பர் மாகாளம்மேய
நரையார் விடையூரும்நம் பான்கழல்நாளும்
உரையா தவர்கண்மே லொழியாவூனம்மே. 3

*திரை ஆர் புனலோடு செல்வமதி சூடி,*
*விரை ஆர் பொழில் அம்பர்மாகாளம் மேய,*
*நரை ஆர் விடை ஊரும், நம்பான் கழல் நாளும்*
*உரையாதவர்கள்மேல் ஒழியா, ஊன(ம்)மே.*

tirai Ar pun2alOTu celvamati cUTi,
virai Ar pozil amparmAkALam mEya,
narai Ar viTai Urum, nampAn2 kazal nALum
uraiyAtavarkaLmEl oziyA, Un2a(m)mE.

**பொருள்:** சிவபெருமான் அலைகளுடன் கூடிய கங்கை நதியோடு கண்டாரை மகிழ்விக்கும் சிறப்பு வாய்ந்த பிறைமதியையும் சூடியிருப்பவர். இப்பெருமான் மணம் கமழும் பொழில்

சூழ்ந்த அம்பர்மாகாளத்தில் எழுந்தருளி உள்ளார். இவர், வெண்மையான விடைமீது ஊர்ந்து வருபவர். இப்பெருமானின் திருவடிப்புகழை நாள்தோறும் உரைக்காவிட்டால் அவர்களின் பழிபாவங்கள் நீங்கமாட்டாது.

***குறிப்புரை:*** திரை – அலை. மேனி குறைதலாகிய வறுமையும் இறைவனைச் சார்ந்து கழிந்தமையின் செல்வமதியாயிற்று. விரை – மணம். நரை – வெண்மை. ஊனம் – பழி. இப்பாடல் எதிர்மறை முகத்தான் வற்புறுத்தியது.

Lord Civan supports in His matted hair the billowing Ganges river, as well the splendorous crescent moon which creates happiness on those who gaze at it. He rides on the white bull. This Lord Civan is enshrined in Thiru-ambar-maakaalam, which is surrounded by thick groves full of fragrance. Those who do not adore daily the holy feet of this Lord Civan, cannot get rid of their fault and crime.

**Note:** Worship of Civa is a must.

கொந்தண் பொழிற்சோலைக் கோலவரிவண்டு
மந்தம்மலி யம்பர்மாகா ளம்மேய
கந்தங் கமழ்கொன்றை கமழ்புன் சடைவைத்த
எந்தை கழலேத்த இடர்வந்த டையாவே. 4

கொந்து அண் பொழில்-சோலைக் கோல வரிவண்டு,
மந்தம், மலி அம்பர்மாகாளம் மேய,
கந்தம் கமழ் கொன்றை கமழ் புன்சடை வைத்த,
எந்தை கழல் ஏத்த இடர் வந்து அடையாவே.

kontu aN pozil-cOlaik kOla varivaNTu,
mantam, mali amparmAkALam mEya,
kantam kamazkon2Rai kamaz pun2caTai vaitta,
entai kazal Etta, iTar vantu aTaiyAvE.

***பொருள்:*** சிவபெருமான் பூங்கொத்துக்கள் நிறைந்த பொழில்களிலும் சோலைகளில் தென்றல் காற்றைப் போன்று அழகிய வரிவண்டுகள் இசைபாடும் மந்தச் சுருதி இசை நிறைந்து விளங்கும் இயற்கை எழில் வாய்ந்த அம்பர்மாகாளத்தில் எழுந்தருளி உள்ளார். மணம் கமழும் கொன்றை மலர்களைத் தமது மணம் வீசுகின்ற சடையின் மேல் வைத்துள்ள எம் தந்தையாகிய இப்பெருமானின் திருவடிகளைப் போற்றினால் இடர்கள் நம்மை வந்து அடைய மாட்டாது.

**குறிப்புரை:** கொந்து அண் பொழில் – கொத்துக்கள் நிறைந்த நந்தவனம். கோலம் – அழகு. மந்தம் – தென்றற்காற்று.

Lord Civan is my father; His ruddy matted hair is naturally sweet smelling. In addition He keeps the fragrant cassia flower in His hair. He is enshrined in Thiru-ambar-maakaalam. In the groves and gardens plenty of different kinds of flowers blossom in bunches. Here pretty and striped bees are humming melodiously but in the lowest pitch (*மந்தம் மலி - மந்தச் சுருதி*). If we adore the holy feet of Lord Civan of this place no calamity will happen to us.

**Note:** The melodious murmur of bees constitutes their prayer.

அணியார் மலைமங்கை யாகம்பாகமாய்
மணியார் புனலம்பர் மாகாளம்மேய
துணியா ருடையினான் துதைபொற் கழல்நாளும்
பணியா தவர்தம் மேற்பறை யாபாவம்மே. 5

*அணி ஆர் மலைமங்கை ஆகம் பாகம்ஆய்,*
*மணி ஆர் புனல் அம்பர்மாகாளம் மேய,*
*துணி ஆர் உடையினான் துதை பொன்கழல் நாளும்*
*பணியாதவர் தம்மேல் பறையா, பாவ(ம்)மே.*

aNi Ar malaimagkai Akam pAkam Ay,
maNi Ar pun2al amparmAkALam mEya
tuNi Ar uTaiyin2An2 tutai pon2kazal nALum
paNiyAtavar tammEl paRaiyA, pAva(m)mE.

**பொருள்:** சிவபெருமான் அழகு பொருந்திய மலைமங்கையாகிய பார்வதி தேவியைத் தமது உடலின் இடப்பாகமாகக் கொண்டவர். இப்பெருமான், முத்துக்களோடு கூடிய நீர்வளம் உடைய அம்பர்மாகாளத்தில் எழுந்தருளி உள்ளார். இவர் துணிக்கப்பட்ட கோவண ஆடையினர். இப்பெருமானின் பொன்னிறம் போன்ற திருவடிகளை, நாள்தோறும் பணிந்து வணங்காதவர்களின் பாவங்கள் குறையமாட்டாது.

**குறிப்புரை:** அணி – அழகு. ஆகம் – உடல். மணியார் புனல் – முத்துக்களோடு கூடிய தண்ணீர். துணி ஆர் உடை – துணிக்கப்பெற்ற கோவண ஆடை. பணியாதவர்மேல் பரவம் பறையா என இதுவும் எதிர்மறை முகத்தான் விளக்கியது.

Lord Civan concorporates His beautiful consort Paarvathi Devi, daughter of mountain king in the left half of His body. He wears a loincloth cut from the big cloth. He is enshrined in Thiru-ambar-maakaalam where water flows abounding in gems. Sins will not leave those who do not adore daily, the golden hued holy feet of Lord Civan of this place.

**Note:** Civa is clad in a loincloth. This is the clothing of a Brahmachaari. Civa who is Bhavan is an eternal Brahmachaari. This indeed is the message of the Sivagnaana Siddhiyaar.

பண்டாழ் கடல்நஞ் சையுண்டு களிமாந்தி
வண்டார் பொழிலம்பர் மாகாளம்மேய
விண்டார் புரம்வேவ மேருச்சிலையாகக்
கொண்டான் கழலேத்தக் குறுகாகுற்றமே. 6

பண்டு ஆழ்கடல் நஞ்சை உண்டு, களி மாந்தி,
வண்டு ஆர் பொழில் அம்பர்மாகாளம் மேய
விண்டார் புரம் வேவ மேருச் சிலைஆகக்
கொண்டான் கழல் ஏத்த, குறுகா, குற்ற(ம்)மே.

paNTu AzkaTal nanjcai uNTu, kaLi mAnti,
vaNTu Ar pozil amparmAkALam mEya
viNTAr puram vEva mEruc cilai Akak
koNTAn2 kazal Etta, kuRukA, kuRRa(m)mE.

பொருள்: சிவபெருமான், முற்காலத்தில் ஆழ்ந்த கடலில் இருந்து தோன்றிய நஞ்சை உண்டு களிப்படைந்தவர். இப்பெருமான், வண்டுகள் தேனை உண்டு களிப்புற்று இருக்கும் சோலைகள் சூழ்ந்த அம்பர்மாகாளத்தில் எழுந்தருளியுள்ளார். மேரு மலையை வில்லாகக் கொண்டு பகைவர்களாகிய அசுரர்களின் முப்புரங்களும் வெந்து போகுமாறு அழித்தவர். இப்பெருமானின் திருவடிகளைப் போற்றக் குற்றங்கள் நம்மை அணுகாது.

குறிப்புரை: பண்டு ஆழ் கடல் நஞ்சை எனப் பிரிக்க. அமுதமுண்டு களிப்பது இயல்பாயினும், இவர், நஞ்சையுண்டு களித்தார் என்றது மிக நயமான பகுதி. அமுதுண்டு களிப்பார் அறிவு மயங்குவார். நஞ்சை உண்டு இவர் களித்த களிப்பு இத்துணைத் தேவர்க்கும் இன்பம் செய்தோமே என்றதால் விளைந்தது. களிமாந்தி – களிப்பையடைந்து. விண்டார் – பகைவர். இது இத்தலவரலாறு. இத்தலத்திறைவன் பெயர் காளகண்டேசுவரர் என்பதும் காண்க.

Being the repository of mercy, grace and love, Lord Civan came forward to save the celestials from death, He, therefore, without swallowing the poison, has positioned it in His throat permanently. He wielded mount Mēru as His bow and gutted with fire the three citadels of the hostile Asuraas. He is enshrined in Thiru-ambar-maakaalam surrounded by gardens where winged bees galore.

மிளிரும் மரவோடு வெள்ளைப் பிறைசூடி
வளரும் பொழிலம்பர் மாகாளம்மேய
கிளருஞ் சடையண்ணல் கேடில்கழலேத்தத்
தளரும் முறுநோய்கள் சாருந்தவந்தானே. 7

மிளிரும்(ம்) அரவோடு வெள்ளைப்பிறை சூடி,
வளரும் பொழில் அம்பர்மாகாளம் மேய
கிளரும் சடை அண்ணல் கேடுஇல் கழல் ஏத்த,
தளரும்(ம்) உறு நோய்கள்; சாரும், தவம்தானே.

miLirum(m) aravOTu veLLaippiRai cUTi,
vaLarum pozil amparmAkALam mEya
kiLarum caTai aNNal kETu il kazal Etta,
taLarum(m), uRu nOykaL; cArum, tavamtAn2E.

**பொருள்:** சிவபெருமான், விளங்குகின்ற பாம்போடு வெள்ளை நிறமுடைய பிறையைச் சூடியிருப்பவர். இப்பெருமான், வளர்கின்ற பொழில்கள் சூழ்ந்த அம்பர்மாகாளத்தில் எழுந்தருளி உள்ளார். விளங்குகின்ற சடைமுடியை உடைய தலைமையாளர் இவர். இப்பெருமானின் குற்றமற்ற திருவடிகளைத் துதிக்க, மிக்க நோய்கள் தளர்வுறும். தவம் நம்மை வந்து அடையும்.

**குறிப்புரை:** மிளிரும் அரவு – விளங்குகின்ற பாம்பு. அரவுக்கு விளக்கம் அடியார்கள் அன்போடு அடைக்கலமாக நோக்கும் இறைவனுடைய திருவடி, கரம், கழுத்து, முடி, செவி இவற்றிலெல்லாம் அணியாக இருந்து அடியார்கள் மனத்தைக் கவர்தல், கேடில் கழல் – அழிந்து படாத்திருவடி. உறுநோய்கள் தளரும், தவம் சாரும் என முடிக்க.

Lord Civan is the merciful Supreme Being. He supports in His shiny matted hair the dazzling serpent as well the white crescent moon. He is enshrined in Thiru-ambar-

maakaalam girt with evergreen gardens. If we hail this Lord Civan's flawless holy feet, our ills will wilt; the good effects of penance will reach us.

கொலையார் மழுவோடு கோலச்சிலையேந்தி
மலையார் புனலம்பர் மாகாளம்மேய
இலையார் திரிசூலப் படையான் கழல்நாளும்
நிலையா நினைவார் மேல்நில்லா வினைதானே. 8

கொலை ஆர் மழுவோடு கோலச்சிலை ஏந்தி
மலை ஆர் புனல் அம்பர்மாகாளம் மேய
இலை ஆர் திரிசூலப்படையான் கழல் நாளும்
நிலையா நினைவார்மேல் நில்லா, வினைதானே.

kolai Ar mazuvOTu kOlaccilai Enti,
malai Ar pun2al amparmAkALam mEya
ilai Ar tiricUlappaTaiyAn2 kazal nALum
nilaiyA nin2aivArmEl nillA, vin2aitAn2E.

***பொருள்:*** சிவபெருமான், நமது பாவங்களைக் கொல்லும் மழுவாயுதத்தோடு அழகிய வில்லையும் கையில் ஏந்தியிருப்பவர். இப்பெருமான், கரையோடு மோதுகின்ற நீர்வளம் மிக்க அம்பர்மாகாளத்தில் எழுந்தருளி உள்ளார். இலை வடிவமான முத்தலைச் சூலத்தைப் படையாகக் கொண்டவர். இப்பெருமானின் திருவடிகளை நாள்தோறும் உறுதியாக நினைப்பவர்கள்மீது வினைகள் சேருவதில்லை.

**குறிப்புரை:** கொலை ஆர் மழு என்றது படைக்கலம் என்ற பொதுமைபற்றி வந்த அடை. இறைவன் மழு யாரையும் கொலை செய்தல் இல்லையாதலின். கோலச் சிலை – அழகுக்காகத் தரிக்கப்பட்ட வில்.

Lord Civan wields a murderous battleaxe, a splendorous bow and a peerless weapon - the three-leaved trident. He is entempled in Thiru-ambar-maakaalam where streams coursing down the hills dash against the shores. Any sin will not affect those who daily adore this Lord Civan's holy feet.

சிறையார் வரிவண்டு தேனுண்டிசைபாட
மறையார் நிறையம்பர் மாகாளம்மேய
நறையார் மலரானும் மாலுங்காண் பொண்ணா
இறையான் கழலேத்த எய்தும்மின்பம்மே. 9

*சிறை ஆர் வரிவண்டு தேன் உண்டு இசை பாட,*
*மறையார் நிறை அம்பர்மாகாளம் மேய*
*நறை ஆர் மலரானும் மாலும் காண்பு ஒண்ணா,*
*இறையான் கழல் ஏத்த, எய்தும், இன்பமே.*

ciRai Ar varivaNTu tEn2 uNTu icai pATa,
maRaiyAr niRai amparmAkALam mEya
naRai Ar malarAn2um mAlum kANpu oNNA,
iRaiyAn2 kazal Etta, eytum, in2pamE.

**பொருள்:** சிவபெருமான், சிறகுகளை உடைய வரிவண்டுகள் தேனை உண்டு இசை பாடுகின்றதும், வேதங்களை ஓதும் சான்றோர்கள் நிறைந்ததுமான அம்பர்மாகாளத்தில் எழுந்தருளி உள்ளார். திருமாலாலும் தேன் நிறைந்த தாமரை மலரில் வீற்றிருக்கும் நான்முகனாலும் காண முடியாத இறைவர் இவர். இப்பெருமானின் திருவடிகளைத் துதிக்க இன்பம் மேலோங்கும்.

**குறிப்புரை:** மறையார் – அந்தணர். நறை – தேன். இறையான் – சிவபெருமான்.

Brahma seated in the lotus flower loaded with honey, as well Thirumaal could not see the Supreme Lord Civan's holy feet or head. This Lord Civan is enshrined in Thiru-ambar-maakaalam where the winged and striped bees are humming after drinking honey. A good number of Vedic scholars do live in this town.

மாசூர்வடி வின்னார்மண் டையுணல்கொள்வார்
கூசாதுரை க்குஞ்சொற் கொள்கை குணமல்ல
வாசார்பொ ழிலம்பர்மா காளம்மேய
ஈசாஎன் பார்கட்கில் லையிடர்தானே. 10

*மாசு ஊர் வடிவி(ன்)னார், மண்டை உணல் கொள்வார்,*
*கூசாது உரைக்கும் சொல் கொள்கை குணம் அல்ல;*
*"வாசு ஆர் பொழில் அம்பர்மாகாளம் மேய*
*ஈசா!" என்பார்கட்கு இல்லை, இடர்தானே.*

mAcu Ur vaTivi(n2)n2Ar, maNTai uNal koLvAr,
kUcAtu uraikkum col koLkai kuNam alla;
"vAcu Ar pozil amparmAkALam mEya
IcA!" en2pArkaTku illai, iTartAn2E.

**பொருள்:** சமணர்கள் அழுக்கடைந்த மேனியர். துன்ப வடிவினர். புத்தர்கள் மண்டை என்னும் வாய் அகன்ற பாத்திரத்தில் உணவு கொள்பவர்கள். இவர்கள் வாய் கூசாது கூறும் பொய்யுரைகள் நன்மை தருவன அல்ல. மணம் கமழும் பொழில் சூழ்ந்த அம்பர்மாகாளத்தில் சிவபெருமான் எழுந்தருளி உள்ளார். இப்பெருமானை 'ஈசனே' என்று உள்ளம் கனிந்து கூறுபவர்களுக்கு இடர் வாராது.

**குறிப்புரை:** மாசூர் வடிவு – அழுக்கடைந்த மேனி. இன்னார் – துன்பமுடையவர்கள். மண்டை – வாயகன்ற உண்ணும் பாத்திரம். கூசாது உரைக்கும் சொல் – பொய் என்றறிந்தும் மனமும் வாயும் கூசாமல் உரைக்குஞ்சொல். வாசு ஆர் பொழில் – நீர் நிறைந்த பொழில். வெட்டி வேரும் ஆம்.

The Buddhists are dirty people; the troublesome Samanars eat their food from human skull. It will do no good to listen and follow the shameless false advices of these two groups. Troubles cannot touch those who affirm thus: – "Oh Lord Civa! You are entempled in Thiru-ambar-maakaalam, which is girt with gardens full of fragrance. Our obeisance to thee".

வெருநீர் கொளவோங்கும் வேணுபுரந்தன்னுள்
திருமாமறை ஞானசம்பந் தனசேணார்
பெருமான் மலியம்பர் மாகாளம்பேணி
உருகாவுரை செய்வாருயர் வானடைவாரே. 11

வெருநீர் கொள ஓங்கும் வேணுபுரம் தன்னுள்-
திருமாமறை ஞானசம்பந்தன சேண்ஆர்
பெருமான் மலி அம்பர்மாகாளம் பேணி
உருகா, உரை செய்வார் உயர்வான் அடைவாரே.

verunIr koLa Ogkum vENupuram tan2n2uL-
tirumAmaRai njAn2acampantan2a cEN Ar
perumAn2 mali amparmAkALam pENi
urukA, urai ceyvAr uyarvAn2 aTaivArE.

**பொருள்:** அஞ்சத்தக்க ஊழி வெள்ளம் உலகத்தை மூட அவ்வெள்ளத்தின் ஓங்கி மிதந்தது வேணுபுரம் என்னும் சீகாழிப் பதி. இங்கு தேன் போன்ற நீர் மிகுந்து விளங்குகின்றது. இப்பதியில் தோன்றியவர் ஞானசம்பந்தன். இவர் அழகியதும் சிறந்ததுமான வேதங்களில் வல்லவர். இவர், விண்ணோர் தலைவனாகிய சிவபெருமான் எழுந்தருளியுள்ள

அம்பர்மாகாளத்தைப் போற்றிப் பாடினார். இப்பதிகப் பாடல்களை விரும்பி, உருகி, சொற்பொருள் உணர்ந்து சொல்பவர்கள் உயர்ந்த வான் உலகத்தை அடைவார்கள்.

**குறிப்புரை:** வெரி நீர் – தேனாகிய நீர். வேரி என்பது வெரி எனத் திரிந்து நின்றது. சேணார் பெருமான் – விண்ணவர் தலைவனாகிய சிவபெருமான்.

Gnaanasambandan, well versed in the divinely sublime Vedas, hailed from Venupuram that rose above every thing during the dreadful deluge period. He has sung this hymn on Lord Civan's sky vaulting Thiru-ambar-maakaalam. Those who can offer worship to Lord Civan of this place with sincere love and deep devotion and understands the meaning of this hymn will gain the sublime supreme world.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*83ஆம் பதிகம் முற்றிற்று*
End of 83rd Hymn

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# 84. திருநாகைக்காரோணம்

## திருத்தல வரலாறு:

சோழ நாட்டுக் காவிரித் தென்கரைத் தலம். தஞ்சை – நாகூர் இருப்புப் பாதையில் இரயில் நிலையம். சென்னை, கும்பகோணம், மயிலாடுதுறை, தஞ்சாவூர், திருவாரூர் ஆகிய ஊர்களில் இருந்து பேருந்துகள் உள்ளன. நாகை மாவட்டத்தின் தலைநகர். இது சப்தவிடங்க ஸ்தலங்களில் ஒன்று. அதிபத்த நாயனார் அவதரித்த நம்பியாங்குப்பம் திருக்கோயிலுக்கு வடகிழக்கில் 1.5 கி.மீ. தூரத்தில் இருக்கிறது. சிவபெருமான் புண்டரீக மகரிஷியை உடலோடு ஏற்றுக்கொண்ட தலமாதலின், காரோணம் எனப் பெயர் பெற்றது. ஆதிசேடன் பூசித்த தலமாதலின் நாகை எனப் பெயர் பெற்றது. அவன் பூசித்த திருக்கோயில் மேற்கே 1.5 கி.மீ. தூரத்தில் நாகநாதர் கோயில் என வழங்குகிறது. முத்தி மண்டபம் என்ற ஒன்று இங்கு உள்ளமை தனிச்சிறப்பு.

இறைவன் பெயர் காயா ரோகணேஸ்வரர்; ஆதிபுராணர் என வழங்குதலும் உண்டு. அம்மை கருந்தடங்கண்ணி. வடமொழியில் நீலாயதாக்ஷி என வழங்குபவர். தல விருட்சம் மா. விநாயகர் மாவடி விநாயகர், நாகாபரணப் பிள்ளையார். தியாகர் திருவுரு தனியே உள்ளது. பாராவாரதரங்க நடனம். தீர்த்தம் புண்டரீக தீர்த்தம், காக தீர்த்தம் முதலியன. இது கீழ்க் கடற்கரை ஓரமாக உள்ள தலம்.

## கல்வெட்டு:

இத்தலத்தைப் பற்றிய கல்வெட்டுக்கள் மிகச் சிலவே. இவ்வாலயத்தைப் பற்றியனவாக ஒன்றும் இல்லை. நாயக்க மன்னர்கள், ஒல்லாந்து நாட்டவருக்கு (Dutch Country) இந்நகரை வழங்கிய வரலாற்றுக் குறிப்பு இதில் காணப்படுகிறது.

## பதிக வரலாறு:

திருச்சாத்தமங்கையில் திருநீலநக்க நாயனார் திருமாளிகையில் தங்கி வழிபட்டுத் திருப்பதிகம்பாடி எழுந்தருளியிருந்த பிள்ளையார், பிற பதிகளையும் வழிபடத் திருவுளம்பற்றி, அடியார் கூட்டங்களோடு நாகப்பட்டினத்தை அடைந்தார்கள். திருநாகைக் காரோணத்தைக் கைதொழுது கலந்த ஓசைச் சொற்றமிழ் மாலையாகிய 'புனையும் விரி கொன்றை' என்னும் இப்பதிகத்தைப் பாடிச் சிலநாள் தங்கியிருந்தார்கள்.

## 84. THIRU-NAAKAI-K-KAARONAM

### HISTORY OF THE PLACE

This sacred place is to the south of river Cauvery in Chola Naadu. It has a railway station on the Thanjai - Naagoor train route. Buses ply to this place from Chennai, Kumbakonam, Mayilaaduthurai, Thanjavoor and Thiruvaaroor. The town is the capital of the Naagai district. It is also on the shore of the eastern sea.

The Lord's names are Kaayaaroganesuvarar and Aadhipuraanar, and the Goddess is known by the name of Karunthadangkanni or Neelaayathaakshi. The sacred fords are Pundareeka Theerththam and Kaaka Theerththam. Mango is the sacred tree. The idol of Vinaayakar consecrated here, is called Maavadi Vinaayakar (Vinaayakar at the foot of the Mango tree). He is also known as Naagaabarana-p-Pillaiyaar. There is a separate icon for Thiyaagar and His dance is known as Paaravaara Tharangka Natanam.

This temple is one of the seven 'vidanga' temples. Nambiyaangkuppam, where Saint Athipaththa Naayanaar was born, is situated at a distance of 1.5 km to the northeast of this temple. This place is called 'Kaaronam' because Lord Civan accepted the sage, Pundareeka Maharishi with his physical body (Matthima Mukthi). As Aadhiseshan worshipped here, the place came to be called also as Naagai. The shrine where he offered worship is called Naaganaathar temple and is at a distance of 1.5 km to the west of this place. A special distinction for this temple is the mandapam known as Muththi Mandapam.

There are very few inscriptions about this temple. None of these is specific to this temple. A historical note about the ceding of this town to the Dutch is found in an inscription. Saint Appar has also sung hymns on this shrine (கடனாகைக் காரோணத் தெஞ்ஞான்றும் காணலாமே).

**INTRODUCTION TO THE HYMN**

At Thiruchaatthamangai, our saint sojourned with Thiruneelanakkar and hailed Civa entempled in that town. From there he arrived in Thiru-naakai-k-kaaronam where he sang the following hymn:

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 84. திருநாகைக்காரோணம் — 84. THIRU-NAAKAI-K-KAARONAM

பண் : குறிஞ்சி
ராகம் : குறிஞ்சி

*Pann: Kurinji*
*Raagam: Kurinji*

புனையும் விரிகொன் றைக்கடவுள் புனல்பாய
நனையுஞ் சடைமேலோர் நகுவெண் டலைசூடி
வினையில் லடியார்கள் விதியால் வழிபட்டுக்
கனையுங் கடல்நாகைக் காரோணத்தானே. 1

புனையும் விரிகொன்றைக் கடவுள், புனல் பாய
நனையும் சடைமேல் ஓர் நகுவெண்தலை சூடி,
வினை இல்(ல்)அடியார்கள் விதியால் வழிபட்டு,
கனையும் கடல் நாகைக்காரோணத்தானே.

pun2aiyum virikon2Raik kaTavuL, pun2al pAya
nan2aiyum caTaimEl Or nakuveN talai cUTi,
vin2ai il(l) aTiyArkaL vitiyAl vazipaTTu,
kan2aiyum kaTal nAkaikkArONattAn2E.

**பொருள்:** சிவபெருமான், தேவ கங்கை பாய்வதால் சடையின்மேல் அழகு செய்யும் விரிந்த கொன்றை மலர் மாலையையும் சிரிப்பது போல் தோன்றும் வெள்ளிய தலை மாலையையும் சூடியுள்ளார். இங்குள்ள சிவபெருமான், விதிப்படி வழிபடும் வினை நீங்கப் பெற்ற அடியார்கள் நிறைந்து விளங்கும் கடலை அடுத்துள்ள நாகைக் காரோணத்தில் எழுந்தருளி உள்ளார்.

**குறிப்புரை:** வினைநீங்கிய அடியார்கள் விதிப்படி வழிபட்டுச் செறியும் கடனாகைக் காரோணத்தானே சிரமாலை அணிந்தவன் என்கின்றது. புனையும் – அழகு செய்யும். கடவுள்புனல் – தேவ கங்கை. வினையில் அடியார்கள் – வினை ஒய்ந்த அடியார்கள். கனையும் – செறியும்.

Lord Civan wears in His matted hair, garlands made up of fully blossomed cassia flowers. His matted hair is fully wet because He holds the river Ganges also there. Along with this He dons a garland of white human skulls, which appears as though it is laughing due to the visibility of the teeth. He is enshrined in Thiru-naakai-k-kaaronam near the sea which has a well secured shore.

பெண்ணா ணெனநின்ற பெம்மான் பிறைச்சென்னி
அண்ணா மலைநாடனா ரூருறையம்மான்
மண்ணார் முழவோவா மாடந்நெடுவீதிக்
கண்ணார் கடல்நாகைக் காரோணத்தானே. 2

பெண் ஆண் என நின்ற பெம்மான், பிறைச் சென்னி
அண்ணாமலைநாடன், ஆரூர் உறை அம்மான் -
மண் ஆர் முழவு ஓவா மாடம் நெடுவீதிக்
கண் ஆர் கடல் நாகைக்காரோணத்தானே.

peN AN en2a nin2Ra pemmAn2, piRaic cen2n2i
aNNAmalai nATan2, ArUr uRai ammAn2--
maN Ar muzavu OvA mATam neTuvItik
kaN Ar kaTal nAkaikkArONattAn2E.

**பொருள்:** சிவபெருமான், பெண்ணும் ஆணுமாய் ஓர் உருவாய் விளங்கும் பெருமானார். இவர் பிறை சூடிய சென்னியனாய், அண்ணாமலை, ஆரூர் ஆகிய தலங்களிலும் எழுந்தருளியுள்ள தலைவர். இப்பெருமான், மார்ச்சனை பொருந்திய முழவின் ஒலி இடைவிடாது கேட்கும் மாடவீடுகளுடன் கூடிய நீண்ட வீதிகளையும், அகன்ற இடப்பரப்பையும் உடைய கடலை அடுத்துள்ள நாகைக் காரோணத்தில் எழுந்தருளியுள்ளார்.

**குறிப்புரை:** சிவமும் சத்தியுமாக நின்றவன். அண்ணாமலையான். ஆரூருறைவான் காரோணத்தானே என்கின்றது. திருமாலின் தருக்கொழித்த தலங்கள் மூன்றினையும் சேர்த்துக் கூறியருளினார். திருவாரூரில் வில் நாணைச் செல்லாக அரித்து நிமிர்த்தித் திருமால் சிரத்தை இடறினார். திருவண்ணாமலையில் தீமலையாய் நின்று செருக்கடக்கினார். நாகையிலும் தியாகர் திருவுருவில் இருந்து திருமாலின் தியான வஸ்துவானார் என்பதுமாம். மண் – மார்ச்சனை என்னும் மண். கண் – இடம்.

Lord Civan comes into view with radiance as both male and female in one body frame. He supports the crescent moon in His head. He is entempled in the towns of Annamalai and Aaroor and other places. He is also enshrined in Thiru-naakai-k-kaaronam where the noise of the 'black paste smeared drums' (*மார்ச்சனை பூசப்பட்ட - மண்ணார்*) will be going on without any break. This town is near to sea, and has broad open space and long streets with mansions.

**Note:** Maarjanam is a black mud-paste applied to mirudangkam to improve its resonance.

பாரோர் தொழவிண் ணோர்பணியம் மதில்மூன்றும்
ஆராரழ லூட்டியடி யார்க்கருள் செய்தான்
தேரார் விழவோவாச் செல்வன் திரைசூழ்ந்த
காரார் கடல்நாகைக் காரோணத்தானே. 3

*பாரோர் தொழ, விண்ணோர் பணிய(ம்), மதில்மூன்றும்
ஆரார் அழலூட்டி, அடியார்க்கு அருள் செய்தான்;
தேர் ஆர் விழவு ஓவாச் செல்வன் - திரை சூழ்ந்த
கார் ஆர் கடல் நாகைக்காரோணத்தானே.*

pArOr toza, viNNOr paNiya(m), matilmUn2Rum
ArAr azalUTTi, aTiyArkku aruL ceytAn2;
tEr Ar vizavu OvAc celvan2--tirai cUznta
kAr Ar kaTal nAkaikkArONattAn2E.

***பொருள்:*** சிவபெருமான், மண்ணில் வாழும் மக்கள் தொழவும், விண்ணில் வாழும் தேவர்கள் பணியவும், அழலைச் செலுத்தி, பகைவர்களின் முப்புரங்களை எரித்து, அடியார்களுக்கு அருள் செய்தவன். இப்பெருமான் அலைகள் நிரம்பிய கரிய கடலை அடுத்துள்ள நாகைக் காரோணத்தில் எழுந்தருளி அங்கு இடைவிடாது நிகழும் தேர்த்திருவிழாவினை ஏற்றருளும் செல்வனாக விளங்குகிறார்.

**குறிப்புரை:** திரிபுரம் எரித்த செயல் விண்ணவர் மண்ணவர் அடியார் எல்லாரும் மகிழுஞ் செயல் ஆயிற்று என்பது உணர்த்துகின்றது. ஆரார் – பகைவர். காரார் கடல் – கரிய கடல்.

Lord Civan is worshipped by people on earth; and the celestials bow before Him submissively. He gutted the three citadels with a strong fire and graced His servitors. He is the opulent one hailed in the car festival, the celebration of which knows no end

in Thiru-naakai-k-kaaronam where He is enshrined. This town is near the billowing sea where the clouds always gather.

**Note:** Time was when each temple owned a car in which the utsava idols were taken out in a procession. The car festivals in the towns of Puri and Aaroor are world famous.

மொழிசூழ் மறைபாடி முதிருஞ்சடை தன்மேல்
அழிசூழ் புனலேற்ற அண்ணல் லணியாய
பழிசூழ் விலராய பத்தர் பணிந்தேத்தக்
கழிசூழ் கடல்நாகைக் காரோணத்தானே. 4

*மொழி சூழ் மறை பாடி, முதிரும் சடைதன்மேல்*
*அழி சூழ் புனல் ஏற்ற அண்ணல்(ல்) அணிஆய*
*பழி சூழ்விலர்ஆய பத்தர் பணிந்து ஏத்த,*
*கழி சூழ் கடல் நாகைக்காரோணத்தானே.*

mozi cUz maRai pATi, mutirum caTaitan2mEl
azi cUz pun2al ERRa aNNal(l) aNiAya
pazi cUzvilar Aya pattar paNintu Etta,
kazi cUz kaTal nAkaikkArONattAn2E.

**பொருள்:** சிவபெருமான், பொருள் பொதிந்த மந்திரச் சொற்கள் நிரம்பிய வேதத்தைப் பாடிக் கொண்டு இருப்பவர். உலகை அழிக்க எண்ணி வந்த கங்கையைத் தன் சடைமுடி மேல் ஏற்றருளிய தலைவன் ஆவார். இப்பெருமான் பழி பாவங்களை மனதிலும் எண்ணாத பக்தர்கள் கூட்டம் பணிந்து போற்ற, உப்பங்கழிகள் சூழ்ந்த கடலை அடுத்துள்ள நாகைக் காரோணத்தில் எழுந்தருளி உள்ளார்.

**குறிப்புரை:** பழியொடு பொருந்தாத பத்தர்தொழும் நாகை என்கின்றது. மொழிசூழ் மறை – மந்திரமொழியாகச் சூழும் வேதம். அழிசூழ்புனல் – அழித்தலை எண்ணி மிடுக்கொடு வந்த கங்கை. பழி சூழ்வு இலராய – பழிசூழாத. பழியும் சூழ்ச்சியும் இலராய என்றுமாம்.

Lord Civan, our Guru, is singing the Vedas which are full of compact divine words. He supports the Ganges river which came to destroy the world, in His holy matted hair. This Lord Civan is enshrined in Thiru-naakai-k-kaaronam surrounded by

saltpans, next to seashore. His devotees having all good manners and who never think in their minds about vengeance or evil, worship and praise Lord Civan of this place.

**Note:** Civa is not only the Author of the Vedas but also their Reciter. St. Sekkizhaar hails Civa as the singer of the Pure Vedas (Thiru Marai Paadum Vaayaar – *திருமறை பாடும் வாயார்*).

ஆணும் பெண்ணுமாய் அடியார்க் கருள்நல்கிச்
சேணின் றவர்க்கின்னஞ் சிந்தைசெய வல்லான்
பேணி வழிபாடுபிரி யாதெழுந்தொண்டர்
காணுங் கடல்நாகைக் காரோணத்தானே. 5

ஆணும் பெண்ணும்ஆய் அடியார்க்கு அருள் நல்கி,
சேண் நின்றவர்க்கு இன்னம் சிந்தைசெய வல்லான் -
பேணி வழிபாடு பிரியாது எழும் தொண்டர்
காணும் கடல் நாகைக்காரோணத்தானே.

ANum peNNum Ay aTiyArkku aruL nalki,
cEN nin2Ravarkku in2n2am cintaiceya vallAn2--
pENi vazipATu piriyAtu ezum toNTar
kANum kaTal nAkaikkArONattAn2E.

**பொருள்:** சிவபெருமான் ஆணும் பெண்ணுமான வடிவோடு காட்சி தருபவர். அடியார்களுக்கு அருள் வழங்குபவர். வானுலகில் வாழும் தேவர்கட்கு மேலும் அருள்புரியும் மனத்தை உடையவர். இப்பெருமான், அன்புடன் வழிபாடு செய்து பிரியாது வாழும் தொண்டர்கள் எப்பொழுதும் தரிசனம் செய்யும் வண்ணமாகக் கடலை அடுத்துள்ள நாகைக் காரோணத்தில் எழுந்தருளி உள்ளார்.

**குறிப்புரை:** அடியார்க்கு அருள் செய்து, விலகி நின்றவருக்கும் திருவுளம் பாலித்துத் தியானிக்கும் செம்மனச் செல்வர் தரிசிக்க நின்றவன் இவன் என்கின்றது. சிவம் சத்தியாக நின்றாலல்லது அருளல் நிகழாமையின் ஆணும் பெண்ணுமாய் அருள் நல்கி என்றார். சேண் நின்றவர் – தூரத்தில் நின்றவர். தேவருமாம், இன்னம் சிந்தை செய வல்லான் – மேலும் திருவருள் உள்ளத்தைப் புரிய வல்லவன். காணும் – அநவரத தரிசனம் செய்யும்.

Lord Civan comes into view with radiance as both male and female in one body frame and graces His devotees. He confers great weal on the celestials. Devotees

Devotees foster love towards Him. They all adore Him with full devotion. He is enshrined in Thiru-naakai-k-kaaronam upon the sea.

**Note:** Civa bestows grace as Ammaiappar.

ஏனத்தெ யிறோடும்மரவ மெய்பூண்டு
வானத்தி ளந்திங்கள் வளருஞ் சடையண்ணல்
ஞானத்து றைவல்லார் நாளும் பணிந்தேத்தக்
கானற் கடல்நாகைக் காரோணத்தானே. 6

ஏனத்துஎயிறோடும் அரவம் மெய் பூண்டு,
வானத்து இளந்திங்கள் வளரும் சடைஅண்ணல் -
ஞானத் துறை வல்லார் நாளும் பணிந்து ஏத்த,
கானல் கடல் நாகைக்காரோணத்தானே.

En2attu eyiROTum aravam mey pUNTu,
vAn2attu iLantigkaL vaLarum caTai aNNal--
njAn2at tuRai vallAr nALum paNintu Etta,
kAn2al kaTal nAkaikkArONattAn2E.

**பொருள்:** சிவபெருமான், பன்றியின் கொம்பையும், பாம்பையும் மெய்யில் பூண்டிருப்பவர். வானகத்தே இயங்கும் இளம்பிறை தங்கும் சடைமுடியை உடைய தலைவர். இத்தலத்தில் வாழும் சான்றோர்கள் சிவஞானத்தை உணர்ந்து, நாள்தோறும் இறைவன் புகழைப் பணிந்து, போற்றி, வழிபாடு செய்து வருகிறார்கள். இவ்வூரில் உள்ள கடலை அடுத்துள்ள சோலைகள் செழிப்புற்று விளங்குகின்றன. இந்த அழகிய நாகைக்காரோணத்தில் சிவபெருமான் எழுந்தருளி அடியார்களுக்கு அருள் புரிந்து வருகிறார்.

**குறிப்புரை:** ஞானிகள் பணிய இருப்பான் இவன் என்கின்றது. ஏனத்து எயிறு – பன்றிக் கொம்பு. அரவம் – பாம்பு. ஞானத்து உரைவல்லார் – சிவஞானத்தோடு செறிந்து இறைவன் புகழையே பேச வல்லவர்கள். கானல் – கடற்கரைச் சோலை.

Lord Civan, the Guru wears on His body a hog's tusk and snakes. Also He supports on His matted hair the young crescent moon, moving on the sky. Surrounded by gardens next to the seashore is Thiru-naakai-k-kaaronam where Lord Civan is enshrined. He is worshipped and praised daily by devotees who well versed in imparting words of divine knowledge.

அரையா ரழல்நாகமக் கோடசைத்திட்டு
விரையார் வரைமார்பின் வெண்ணீற ணியண்ணல்
வரையார் வனபோல வளரும்வங்கங்கள்
கரையார் கடல்நாகைக் காரோணத்தானே. 7

அரை ஆர் அழல்நாகம் அக்கோடு அசைத்திட்டு,
விரை ஆர் வரைமார்பின் வெண்நீறு அணி அண்ணல் -
வரை ஆர்வன போல வளரும் வங்கங்கள்
கரை ஆர் கடல் நாகைக்காரோணத்தானே.

arai Ar azalnAkam akkOTu acaittiTTu,
virai Ar varaimArpin2 veN nIRu aNi aNNal--
varai Arvan2a pOla vaLarum vagkagkaL
karai Ar kaTal nAkaikkArONattAn2E.

**பொருள்:** சிவபெருமான், இடையில் அழல் போலும் கொடிய நாகத்தை சங்கு மணிகளோடு இணைத்துக் கட்டிக் கொண்டுள்ளார். மணம் கமழும் மலை போன்ற மார்பில் திருவெண்ணீறு அணிந்துள்ள தலைவன் ஆவார். இப்பெருமான், மலைகள் மிதந்து வருவன போன்று தோன்றும் மரக்கலங்கள் வந்தடையும் கடற்கரையை அடுத்துள்ள நாகைக் காரோணத்தில் எழுந்தருளி உள்ளார்.

**குறிப்புரை:** சங்குமணியைச் சர்ப்பத்தோடு அணிந்தவன் இவன் என்கின்றது. அரை ஆர் அழல் நாகம் – இடுப்பில் பொருந்திய தீயைப் போல் கொடிய விடப்பாம்பு. அக்கோடு – சங்குமணியோடு. அசைத்திட்டு – கட்டி. விரை – மணம். வரை ஆர்வன போல – மலைகள் நிறைந்திருப்பவை போல. வங்கங்கள் – தோணிகள். வங்கங்கள் வரையார்வன போல வளரும் கரை எனக் கூட்டுக.

Lord Civan, the Guru, smears holy ashes on His fragrant and hill-like chest. He wears a narrow belt on His waist made up of chank beads and a fiery snake. He is enshrined in Thiru-naakai-k-kaaronam near the sea on which hill-like ships ply and arrive at the shore.

Note: Naakai is a coastal town. Time was when it served as a mart of many nations. Referring to ships as 'mount like' vessels indicates the large magnitude of the sea faring trade in the region.

வலங்கொள் புகழ்பேணி வரையாலுயர் திண்டோள்
இலங்கைக் கிறைவாட அடர்த்தங்கருள் செய்தான்
பலங்கொள் புகழ்மண்ணிற் பத்தர்பணிந்தேத்தக்
கலங்கொள் கடல்நாகைக் காரோணத்தானே. 8

வலம் கொள் புகழ் பேணி, வரையால் உயர் திண் தோள்
இலங்கைக்கு இறை வாட அடர்த்து, அங்கு அருள்செய்தான் -
பலம் கொள் புகழ் மண்ணில் பத்தர் பணிந்து ஏத்த,
கலம் கொள் கடல் நாகைக்காரோணத்தானே.

valam koL pukaz pENi, varaiyAl uyar tiNtOL
ilagkaikku iRai vATa aTarttu, agku aruLceytAn2--
palam koL pukaz maNNil pattar paNintu Etta,
kalam koL kaTal nAkaikkArONattAn2E.

**பொருள்:** சிவபெருமான், மென்மேலும் பெற்ற வெற்றிகளால் செருக்குற்ற, மலைபோல் உயர்ந்த திண்ணிய தோள்களை உடைய இலங்கை அரசனான இராவணன் வாடுமாறு அவனை அடர்த்தவன். பின்பு அவனுக்கு அருள் செய்தவனும் இவரே ஆவார். இப்பெருமான், வாழ்க்கையின் குறிக்கோளை அடைந்த பலத்தால் வந்த புகழை உடையவர்களாகிய அடியார்கள் மண்ணுலகில் தன்னைப் பணிந்து போற்றுமாறு, மரக்கலங்கள் வந்து அடையும் கடலை அடுத்துள்ள நாகைக் காரோணத்தில் எழுந்தருளி உள்ளார்.

**குறிப்புரை:** தன் புகழை நம்பி வளர்ந்த தோளை உடைய இராவணன் வாட அடர்த்து. அருள் செய்தவர் இவர் என்கின்றது. வலங்கொள் புகழ் என்றது கொடை முதலியவற்றாலும் புகழ் வருமாதலின் அவற்றினின்றும் பிரிக்க. கலம் – மரக்கலம்.

Raavanaa's fame grew up and up because of his success after success in his life due to his bravery. With his 'mountain like' strong shoulders he tried to uproot the mount Kailash. Lord Civan crushed him and he fainted. Later when he repented for his misdeed, Civan forgave him and graced him. Adored and hailed by devotees of this earth who are blessed with fruit of their life, Lord Civan is enshrined in Thiru-naakai-k-kaaronam, where in the nearby sea vessels ply in large numbers.

திருமாலடி வீழத்திசை நான்முகனேத்தப்
பெருமானெ னநின்றபெம் மான்பிறைச்சென்னிச்
செருமால் விடையூருஞ் செல்வன் திரைசூழ்ந்த
கருமால் கடல்நாகைக் காரோணத்தானே. 9

*திருமால் அடி வீழ, திசை நான்முகன் ஏத்த,*
*பெருமான் என நின்ற பெம்மான்; பிறைச் சென்னிச்*
*செரு மால்விடை ஊரும் செல்வன் - திரை சூழ்ந்த*
*கருமால் கடல் நாகைக்காரோணத்தானே.*

tirumAl aTi vIza, ticai nAn2mukan2 Etta,
perumAn2 en2a nin2Ra pemmAn2; piRaic cen2n2ic
ceru mAlviTai Urum celvan2--tirai cUznta
karumAl kaTal nAkaikkArONattAn2E.

***பொருள்:*** சிவபெருமான், தன் திருவடியில் திருமால் விழுந்து வணங்கவும், நான்முகன் போற்றவும், தாமே முழுமுதல் பரம்பொருள் என அவர்கள் உணரும்படி அழல் உருவாய் ஓங்கி நின்றவர். பிறைமதியைச் சென்னியில் சூடியவர். பகைவரை எதிர்க்க வல்ல விடையேறி ஊர்ந்து வரும் செல்வர் ஆவார். இப்பெருமான், அலைகளால் சூழப்பட்ட கரிய பெரிய கடலை அடுத்துள்ள நாகைக் காரோணத்தில் எழுந்தருளி உள்ளார்.

***குறிப்புரை:*** அயன் மால் இவர்கள் பெருமானே என ஏத்த நின்றவர். விடையூருஞ் செல்வர். இவர் என்கின்றது. செரு மால் விடை – சண்டை செய்யும் பெரிய இடபம். கருமால் கடல் – கரிய பெரிய கடல்.

Lord Civan stood as a big and tall blazing fire and proved His Supremacy when Thirumaal fell at His feet and regretted for his egoism, while the four faced Brahma also felt the same and hailed him. He supports a crescent moon in His head. He is the Lord who rides a martial bull which can oppose all enemies. This Lord Civan is entempled in Thiru-naakai-k-kaaronam near the dark, vast and billowing sea.

**Note:** Naakai is known as Naaka-p-pattinam.

நல்லார றஞ்சொல்லப் பொல்லார்புறங்கூற
அல்லார லர்தூற்றஅடி யார்க்கருள்செய்வான்
பல்லார் தலைமாலை யணிவான் பணிந்தேத்தக்
கல்லார் கடல்நாகைக் காரோணத்தானே. 10

*நல்லார் அறம் சொல்ல, பொல்லார் புறம்கூற,*
*அல்லார் அலர் தூற்ற, அடியார்க்கு அருள் செய்வான்;*
*பல்ஆர் தலைமாலை அணிவான் - பணிந்து ஏத்த,*
*கல் ஆர் கடல் நாகைக்காரோணத்தானே.*

nallAr aRam colla, pollAr puRamkURa,
allAr alar tURRa, aTiyArkku aruLceyvAn2;
pal Ar talaimAlai aNivAn2--paNintu Etta,
kal Ar kaTal nAkaikkArONattAn2E.

**பொருள்:** நல்லவர்கள் அறநெறியைப் போதிக்கின்றனர். ஆனால், பொல்லாதவர்களாகிய சமணர்கள் புறங்கூறுகின்றனர். நல்லவர்கள் அல்லாத புத்தர்கள் பழி தூற்றுகின்றனர். எம்பெருமானான சிவபெருமான் அடியார்க்கு அருள்புரியும் இயல்பினர். இப்பெருமான் பல்லோடு கூடிய தலையோடுகளை மாலையாக அணிந்து, பலரும் பணிந்து போற்றக் 'கல்' என்னும் ஒலியோடு கூடிய கடலை அடுத்துள்ள நாகைக் காரோணத்தில் எழுந்தருளி உள்ளார்.

**குறிப்புரை:** நல்லவர்கள் அறம் சொல்ல, தீயோர் புறங்கூற, அயலார் பழிசொல்ல, அடியார்க்கு அருள் செய்பவன் காரோணத்தான் என்கின்றது. பல்ஆர் தலை – பல்லோடுகூடிய தலை. கல்ஆர் கடல் – 'கல்' என்னும் ஒலியோடு கூடிய கடல்.

Virtuous people preach divine knowledge; while the base ones slander behind the back of others. The wicked speak falsehood; but our God Lord Civan grants grace to His devotees who humbly worship Him. He wears a garland made up of human skulls with teeth. He is enshrined in Thiru-naakai-k-kaaronam near the roaring sea. The sound of the sea waves, resembles the noise 'Kall' (கல்லார் - கல் என்ற ஒலியோடு).

**Note:** The base and the bad ones referred to in this verse are the Samanars and the Buddhists.

கரையார் கடல்நாகைக் காரோணம்மேய
நரையார் விடையானை நவிலுஞ்சம்பந்தன்
உரையார் தமிழ்மாலை பாடும்மவரெல்லாம்
கரையா வுருவாகிக்கலி வானடைவாரே. 11

கரை ஆர் கடல் நாகைக்காரோணம் மேய
நரை ஆர் விடையானை நவிலும் சம்பந்தன்
உரை ஆர் தமிழ்மாலை பாடும்(ம்)அவர்எல்லாம்
கரையா உருஆகிக் கலி வான் அடைவாரே.

karai Ar kaTal nAkaikkArONam mEya
narai Ar viTaiyAn2ai navilum campantan2
urai Ar tamizmAlai pATum(m) avar ellAm
karaiyA uru Akik kali vAn2 aTaivArE.

**பொருள்:** இடைவிடாது ஒலிக்கும் கடலை அடுத்துள்ள நாகைக் காரோணத்தில் வெண்மை நிறம் பொருந்திய விடை ஊர்தியோடு சிவபெருமான் எழுந்தருளி உள்ளார். இப்பெருமானை புகழ் பொருந்திய தமிழ் மாலையால் ஞானசம்பந்தன் போற்றிப் பாடினார். இத்தமிழ் மாலையைப் பாடும் சான்றோர்கள் அனைவரும் அழியாத வடிவத்தோடு ஆரவாரம் மிக்க, வானுலகை அடைவார்கள்.

**குறிப்புரை:** காரோண நாதனை ஞானசம்பந்தன் சொன்ன தமிழ் மாலையாகிய இவற்றைப் பாடுவார் அழியாவடிவோடு வான் அடைவார்கள் என்கின்றது. கரையார் கடல் – ஒலிக்கின்ற கடல். நரை – வெண்மை. உரை – புகழ். கரையா உருவாகி – அழியாத வடிவத்தோடு. கலி – ஓசை.

Thiru Gnaanasambandan adored and worshipped the Lord Civan, singing this hymn. He rides on a white bull. He is enshrined in Thiru-naakai-k-kaaronam near the sea where the roaring noise of the sea waves never ceases. All those who can adore Lord Civan and chant this glorious garland of Tamil verses sung by Gnaanasambandan, will reach the ever vibrant upper world without any change in their physical frame.

Note: *கரையாஉரு* – Possibly a reference to *'உத்தம முத்தி'* (*உடம்பொடு மறைதல்*) as in Sanmaargham.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*84ஆம் பதிகம் முற்றிற்று*
End of 84th Hymn

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# 85. திருநல்லம்

## திருத்தல வரலாறு:

திருநல்லம் என்ற இத்திருத்தலம் சோழ நாட்டுக் காவிரித் தென்கரைத் தலங்களில் ஒன்று. கும்பகோணம் வடமட்டம் பேருந்துகளில் செல்லலாம். இத்தலம் கோநேரி இராஜபுரம் என்றும் வழங்கி வருகிறது. இத்தலத்தில் நடராசர் விக்ரகம் மிகப் பெரியதாகவும் அழகாகவும் இருக்கிறது. சுவாமி உமாமகேசுவரர். அம்மை மங்கள நாயகி. தீர்த்தம் சக்தி தீர்த்தம்.

## கல்வெட்டு:

இக்கோயிலை மதுராந்தக தேவனான உத்தம சோழன் தாயும் கண்டராதித்தன் மனைவியுமான செம்பியன்மாதேவியார் கருங்கற்பணியாகக் கட்டினான். இறைவன் திருநல்லமுடையார், திருநல்லமுடைய மகாதேவர் என வழங்கப் பெறுவர். இராஜகேசரி வர்மனான இராஜராஜன் காலத்தில் கோயிலில் திருப்பதிகம் ஓத இருவரால் பூங்குடி கிராமத்தில் நிலம் விடப்பெற்றது. உடைய பிராட்டியார் உத்தரவின்படி சாத்தன் குணபட்டனான அரசாணசேகரனால் கோயில் கட்டப் பெற்றது. இராஜராஜன் காலத்தில் தெரிஞ்ச கைக்கோளர்களில் ஒருவனான நக்கன் நள்ளாற்றடிகளால் கடவுளின் வெள்ளி விக்ரகம் ஒன்றும், சண்டேசுவரர் செப்பு விக்ரகமும் செய்விக்கப் பெற்றன. இன்னாரது என்று அறியப் பெறாத கல்வெட்டு ஒன்று செம்பியன்மாதேவி கண்டராதித்தன் பெயரால் இத்திருக்கோயிலைத் திருப்பணி செய்தான் என்கின்றது. இங்கே கைலாசமுடைய மகாதேவர், ஆதித்தேசுவரமுடைய மகாதேவர், கோயில்களும் தனித்து இருந்தனவாக அறியப்படுகின்றன. உத்தம சோழ விண்ணகரம் என்ற விஷ்ணு ஆலயமும் குறிக்கப் பெறுகின்றது.

இவையன்றித் திருநல்லமுடையார் கோயில் தெற்குப் பக்கத்து பிராகாரத்தில் புகழா பரண மண்டபம் என்ற ஒன்று இருந்ததாகவும், அதில் பிள்ளையாரைப் பிரதிட்டை செய்ய மூன்றாம் குலோத்துங்கன் காலத்தில் நிலம் அளிக்கப் பெற்றது என்றும் வரலாறு விளங்குகின்றது. திட்டை விழுமியான் பிள்ளையடியாரால் சண்டேசுவரர் கோயில் திருப்பணி செய்விக்கப் பெற்றது. ஆதனூர் விஜய நட்டரையனான அருண்மொழித் தேவனால் திருநடை மாளிகை கட்டப் பெற்றது. ஏனைய கல்வெட்டுக்கள் திருமஞ்சனத்திற்கும், பூமாலைக்கும், நந்தவனத்திற்கும், அமுதுக்கும்,

விளக்கிற்கும் செய்த பணிகளை அறிவிப்பன. இத்தலத்தால் தெரியும் அரசர்களும், தண்டத் தலைவர்களும், அரச காரியம் பார்ப்பாரும், வெற்றிக் குறிப்புக்களும் பல.

**பதிக வரலாறு:**

வைகல் மாடக் கோயிலை வணங்கிப் போந்த பிள்ளையார் திருநல்லத்தை நணுகினார்கள். அங்கு எழுந்தருளியுள்ள நீடுமாமணியின் சேவடிகளை வணங்கி, இனிய தமிழாகிய 'கல்லால் நிழன்மேய' என்னும் பதிகத்தை அருளிச் செய்தார்.

## 85. THIRU-NALLAM

### HISTORY OF THE PLACE

This sacred place is to the south of river Cauvery in Chola Naadu. It can be reached by bus from Kumbakonam and Vadamattam. It is also known as Koneri-raaja-puram.

The Lord's name is Umaamahesuvarar and the name of the Goddess is Mangkalanaayaki. The sacred ford is Sakthi Theerththam. A largest and beautiful image of Nataraajar is here.

From the inscriptions, we know that this temple was rebuilt with stone by Sembiyan Maadheviyaar, wife of Gandaraadhiththan and mother of Uththama Cholan. During the reign of Raajaraajan, a grant of land from Poongkudi village was made for the recitation of the sacred hymns (Thiruppadhigam). Also a silver icon of the Lord and a copper icon of Sandesuvarar were made by a Therinjcha Kaikkolar of the name Nakkan Nallaarradikal. Inscriptions reveal that there were two other Siva temples for Kailaasamudaiya Mahaadhevar and Aadhiththesuvaramudaiya Mahaadhevar and a temple for Vishnu of the name Uththama Chola Vinnagaram.

Kuloththungkan III installed a Pillaiyaar in a pavilion called Pugazhaabarana Mandapam in the southern ambulatory of this temple and made land grants for it. Others contributed by renovating the Sandesuvarar shrine and for building a 'thirunadai maaligai'.

Other inscriptions inform about gifts for ceremonial bathing of the icons, flower garlands, food offerings, and for lamps. There are many kings and their officers about whom the inscriptions here speak.

## INTRODUCTION TO THE HYMN

From Vaikal Maadakkoyil, our saint arrived at Nallam where he sang the following hymn:

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 85. திருநல்லம் 85. THIRU-NALLAM

பண் : குறிஞ்சி *Pann: Kurinji*
ராகம் : குறிஞ்சி *Raagam: Kurinji*

கல்லால் நிழல்மேய கறைசேர் கண்டாவென்
றெல்லா மொழியாலு மிமையோர் தொழுதேத்த
வில்லா லரண்மூன்றும் வெந்துவிழவெய்த
நல்லா னமையாள்வா னல்ல நகரானே. 1

“கல்லால்நிழல் மேய கறை சேர் கண்டா!” என்று
எல்லாமொழியாலும் இமையோர் தொழுது ஏத்த,
வில்லால் அரண்மூன்றும் வெந்துவிழ எய்த,
நல்லான்; நமை ஆள்வான்-நல்லம்நகரானே.

"kallAl nizal mEya kaRai cEr kaNTA!" en2Ru
ellAmoziyAlum imaiyOr tozutu Etta,
villAl araNmUn2Rum ventu viza eyta
nallAn2; namai ALvAn2--nallam nakarAn2E.

**பொருள்:** சிவபெருமானை வானோர்கள் ‘கல் ஆலமர நிழலில் உபதேச குருமூர்த்தியாகிய நீலகண்டா’ என்று தமக்குத் தெரிந்த அனைத்து மொழிகளாலும் தொழுது போற்றுகின்றனர். மேரு மலையை வில்லாகக் கொண்டு அசுரர்களின் மூன்று அரண்களும் வெந்து விழுமாறு செய்தருளிய நல்லவர். இப்பெருமானார் நம்மை ஆட்கொண்டு அருளும் பொருட்டு நல்லம் என்னும் நகரில் எழுந்தருளி உள்ளார்.

**குறிப்புரை:** உபதேச குருமூர்த்தியாயிருந்த நீலகண்டர் என்று தேவர்கள் தோத்திரிக்கத் திரிபுரம் எரித்த பெருமான் நமையாட் கொள்ளுவதற்காகத் திருநல்லம் என்னும் திருப்பதியில் எழுந்தருளி இருக்கின்றார் என்கின்றது. கறை – விஷம். எல்லா மொழியாலும் – தமக்குத் தெரிந்த மொழிகள் எல்லாவற்றிலும்.

Celestials hail and worship Lord Civan using many different expressions known to them by saying thus: "Oh! Lord Neelakanda! You presided over the celestial saints sitting under the shade of stone-banyan tree". You are the good one who destroyed the three citadels by using the Meru mountain as bow. This Lord Civan is enshrined in the town called Nallam (நல்லம்) to admit us into His good graces (நமை ஆள்வான் - நம்மை ஆட்கொள்ளும் பொருட்டு).

**Note:** The first ten verses of this hymn ends with the phrase: "Nallam nakaraane". This phrase also means that Civa parts not from Vallam. Kallaala tree is the banyan tree which is without stilt roots called stone-banyan tree. This hymn opens with the phrase: "Kallaal nizhal". In St. Meykandaar's Siva-gnaana-botham – the first invocation verse on Lord Ganesh to bless him also begins with this very same phrase "Kallaal nizhal".

தக்கன் பெருவேள்வி தன்னிலமரரைத்
துக்கம் பலசெய்து சுடர்பொற் சடைதாழக்
கொக்கி ன்னிறகோடு குளிர்வெண் பிறைசூடும்
நக்க னமையாள்வா னல்ல நகரானே. 2

தக்கன் பெருவேள்விதன்னில் அமரரைத்
துக்கம்பல செய்து, சுடர்பொன்சடை தாழ,
கொக்கின்(ன்)இறகோடு குளிர்வெண்பிறை சூடும்
நக்கன்; நமையாள்வான் - நல்லம்நகரானே.

takkan2 peru vELvi tan2n2il amararait
tukkam pala ceytu, cuTar pon2caTai tAza,
kokkin2(n2) iRakOTu kuLir veNpiRai cUTum
nakkan2; namai ALvAn2-nallam nakarAn2E.

**பொருள்:** சிவபெருமான் தம்மை மதிக்காமல் தக்கன் செய்த பெருவேள்வி செய்ய அவ்வேள்விக்கு சென்ற தேவர்களை அவ்வேள்விக் களத்திலேயே பலவகையான துக்கங்களை அடையச் செய்தவன். ஒளிவிடும் பொன்போன்ற சடைகள் தாழ்ந்து தொங்கக்

கொக்கின் வெண்மையான இறகோடு குளிர்ந்த வெண்மையான பிறையைச் சூடியிருக்கும் திகம்பரன் (நிர்வாணி - அம்மணமான சந்நியாசி) ஆவான். இப்பெருமான் நம்மை ஆட்கொண்டு அருளும் பொருட்டு நல்லம் என்னும் நகரில் எழுந்தருளி உள்ளான்.

**குறிப்புரை:** தக்க யாகத்தில் தேவர்களைத் துக்கப்படச் செய்த பெருமான் இவர் என்கின்றது. நக்கன் – நக்நன். இது நிர்வாணி (அம்மணம்) என்னும் பொருளது.

Lord Civan made the celestials face many sufferings at the hands of His servitor Veerabadran for attending the big sacrificial ceremony arranged by Dakshan without giving due respect to Him. Some of the celestials ran away; some others were severely punished in the very ceremonial hall itself; the entire oblation hall was destroyed. In His radiant and dangling matted hair Lord Civan sports the heron's feather and the cool white crescent moon. This Lord Civan is entempled in Nallam to rule over us.

**Note:** Heron's feather: Civa smote an Asura who assumed the form of a heron. He then added its feather to His crest.

Kokkiraku is a flower known as Kokku-mantaarai. Our saint speaks of Kokkin iraku (heron's feather) and not the flower.

அந்திமதி யோடுமரவச் சடைதாழ
முந்தியன லேந்திமுது காட்டெரியாடி
சிந்தித் தெழவல்லார் தீராவினை தீர்க்கும்
நந்தி நமையாள்வா னல்ல நகரானே. 3

*அந்திமதியோடும் அரவச் சடை தாழ,*
*முந்தி அனல் ஏந்தி, முதுகாட்டு எரிஆடி;*
*சிந்தித்து எழ வல்லார் தீரா வினை தீர்க்கும்*
*நந்தி; நமை ஆள்வான் - நல்லம்நகரானே.*

antimatiyOTum aravac caTai tAza,
munti an2al Enti, mutukATTu eri ATi;
cintittu eza vallAr tIrA vin2ai tIrkkum
nanti; namai ALvAn2--nallam nakarAn2E.

**பொருள்:** சிவபெருமான் மாலைக் காலத்தில் தோன்றும் பிறை மதியோடு பாம்பையும் சூடிய சடைமுடி தாழ்ந்து தொங்க ஊழிக் காலத்தின் தொடக்கத்தில் கையில் அனலேந்திப் பழமையான சுடுகாட்டில் எரிஆடுபவர். தன்னையே சிந்தித்து, எச்செயலையும் தொடங்கும்

வல்லவர்களின் தீராத வினைகள் எல்லாவற்றையும் தீர்த்து அருளும் பெருமான் இவன். இப்பெருமான் நம்மை ஆட்கொண்டு அருளும் பொருட்டு நல்லம் என்னும் நகரில் எழுந்தருளி உள்ளார்.

**குறிப்புரை:** தியானிப்பவர்களுடைய தீராவினை நீக்குவார் இவர் என்கின்றது. முந்தி – ஊழித் தொடக்கத்தில். தீராவினை – இறைவன் திருவருளால் அன்றி வேறொன்றாலும் தீராத வினை. நந்தி – சிவ பெருமான்.

Lord Civan adorns His dangling matted hair with both the crescent moon which appears during the evening hours in the sky, as well the serpent. At the time of the great deluge, by holding the primal fire in His hand Lord Civan dances in the burial fire in an old cremation ground. He annuls all the insolvable bad karma of those who first pay obeisance to Him and thereafter only commence their routine work. This Lord Civan who is also known as Nandi is enshrined in Nallam to admit us into His good grace.

**Note:** The Primal Fire is the one that occurs during Maha Samhaaram.

குளிரும் மதிசூடிக் கொன்றைச் சடைதாழ
மிளிரும் மரவோடு வெண்ணூல் திகழ்மார்பில்
தளிருந் திகழ்மேனித் தையல்பாகமாய்
நளிரும் வயல்சூழ்ந்த னல்ல நகரானே. 4

குளிரும் மதி சூடிக் கொன்றைச் சடை தாழ,
மிளிரும்(ம்) அரவோடு வெண் நூல் திகழ் மார்பில்,-
தளிரும் திகழ்மேனித் தையல் பாகம்ஆய்,
நளிரும் வயல் சூழ்ந்த நல்லம்நகரானே.

kuLirum mati cUTik kon2Raic caTai tAza,
miLirum(m) aravOTu veN nUl tikaz mArpil,--
taLirum tikazmEn2it taiyal pAkam Ay,
naLirum vayal cUznta nallam nakarAn2E.

பொருள்: சிவபெருமான் குளிர்ந்த பிறைமதியைச் சூடி இருப்பவர். கொன்றை மலர்களை அணிந்துள்ள சடைகள் தாழ்ந்து தொங்க விளங்கும் பாம்போடு வெண்மையான பூணூல் திகழும் மார்பினை உடையவர். அம்மார்பில் தளிர் போன்ற திருமேனியை உடைய

உமையம்மையை ஒரு பாகமாகக் கொண்டிருப்பவர். நந்தி என்னும் இச்சிவபெருமான் குளிர்ந்த வயல்கள் சூழ்ந்த நல்லம் என்னும் நகரில் எழுந்தருளி உள்ளார்.

***குறிப்புரை:*** உமையொரு பாகன் இவன் என்கின்றது. மிளிரும் – விளங்குகின்ற. தளிரும் திகழ் மேனி – தளிரைப் போல் விளங்குகின்ற மேனி. நளிரும் வயல் – குளிர்ந்த வயல்.

Lord Civan supports the cool crescent moon as well the cassia flowers in His dangling matted hair. The dazzling snake and the three ply sacred thread shine on His chest. He is concorporate with His consort whose splendorous body is soft like the tender shoot. He is entempled in the town of Nallam, which is girt with cool fields (to admit us into His grace).

**Note:** Civa is Theeyaadi (Dancer in fire). However, He is ever cool. He dwells in the snow-clad Mount Kailash. His consort is the Daughter of Himavan. Himam means ice. A cool river courses in His head. He wears a moist crescent moon. Flowers for ever cool, adorn Him. His shrine is girt with cool fields.

மணியார் திகழ்கண்டம் முடையான் மலர்மல்கு
பிணிவார் சடையெந்தை பெருமான் கழல்பேணித்
துணிவார் மலர்கொண்டு தொண்டர் தொழுதேத்த
நணியா னமையாள்வா னல்ல நகரானே. 5

*மணிஆர் திகழ் கண்டம்(ம்) உடையான்; மலர் மல்கு*
*பிணி வார்சடை எந்தைபெருமான்; கழல் பேணித்*
*துணிவு ஆர் மலர் கொண்டு தொண்டர் தொழுது ஏத்த,*
*நணியான்; நமை ஆள்வான் - நல்லம் நகரானே.*

maNi Ar tikaz kaNTam(m) uTaiyAn2; malar malku
piNi vArcaTai entai perumAn2; kazal pENit
tuNivu Ar malarkoNTu toNTar tozutu Etta,
naNiyAn2; namai ALvAn2--nallam nakarAn2E.

***பொருள்:*** சிவபெருமான் நீலமணி போன்று விளங்கிய கண்டத்தினை உடையவர். மலர்களால் வளைத்துக் கட்டப்பட்ட நீண்ட சடைமுடியினர். எமக்குத் தந்தையானவர். இப்பெருமானின் திருவடிகளை மனத்துணிவு உடைய தொண்டர்கள் மலர் கொண்டு, போற்றித் தொழுதேத்த அவர்களுக்கு அண்மையில் இருப்பவர் இவர். இப்பெருமான் நம்மை ஆட்கொண்டு அருளும் பொருட்டு நல்லம் என்னும் நகரில் எழுந்தருளி உள்ளார்.

**குறிப்புரை:** மலர் கொண்டு கழல் பேணி – தொண்டர்கள் தொழுது ஏத்த அவர்களுக்கு அண்மையில் இருப்பவன் இவன் என்கின்றது. மணி – நீலமணி. பிணிவார் சடை – கட்டிய நீண்ட சடை. நணியான் – நணுகியவன். துணிவார் தொண்டர் – மனத்துணிவினை உடைய தொண்டர்.

My father Lord Civan's neck is dark blue in colour similar to the sapphire gem. His massive and long bounded matted hair is decked with flowers. He is easily accessible to the resolute servitors who adore and hail Him with flowers. He is entempled in the town of Nallam to admit us into His good grace.

**Note:** The wearer of flowers is to be adored with flowers.

வாசம் மலர்மல்கு மலையான் மகளோடும்
பூசுஞ் சுடுநீறுபுனைந் தான்விரி கொன்றை
ஈசன் னெனவுள்கி யெழுவார் வினைகட்கு
நாச னமையாள்வா னல்ல நகரானே. 6

*"வாசம் மலர் மல்கு மலையான்மகளோடும்*
*பூசும் சுடுநீறு புனைந்தான், விரிகொன்றை*
*ஈசன்(ன்)!" என உள்கி எழுவார் வினைகட்கு*
*நாசன்; நமை ஆள்வான் - நல்லம் நகரானே.*

"vAcam malar malku malaiyAn2 makaLOTum
pUcum cuTunIRu pun2aintAn2, virikon2Rai
Ican2(n2)!" en2a uLki ezuvAr vin2aikaTku
nAcan2; namai ALvAn2--nallam nakarAn2E.

**பொருள்:** சிவபெருமான், மலை அரசன் மகளாகிய மணம் கமழ்கின்ற மலர்களைச் சூடிய பார்வதி தேவியோடு இருப்பவர். பூசத் தகுந்தவாறு சுட்டெடுத்த திருநீறு அணிந்தவர். இதழ்விரிந்த கொன்றைப்பூ மாலையைப் புனைந்தவர். ஈசன் எனத் தன்னை நினைந்து ஏத்துபவர்களின் வினைகளைப் பொடி செய்பவர். இப்பெருமான் நம்மை ஆட்கொண்டு அருளும் பொருட்டு நல்லம் என்னும் நகரில் எழுந்தருளி உள்ளார்.

**குறிப்புரை:** உமாதேவியோடு நீறணிந்து கொன்றை சூடிய ஈசன் எனத் தியானிப்பார்க்கு வினை நாசம் செய்பவன் இவன் என்கின்றது. உள்கி – நினைத்து.

Lord Civan is the destroyer of bad karma of those who rise up praying and contemplating on Him as the Supreme Lord of the Universe (*ஈசன்*). He wears the fully

blossomed cassia flower garlands. He is concorporate with Himavaan's daughter Paarvathi Devi who is adorned with flowers of exceeding fragrance. He smears His body with burnt ashes. He is entempled in the town of Nallam to admit us into His good grace.

அங்கோல் வளைமங்கை காணஅனலேந்திக்
கொங்கார் நறுங்கொன்றை சூடிக்குழகாக
வெங்காடு டமாகவெந்தீ விளையாடும்
நங்கோன் நமையாள்வா னல்ல நகரானே. 7

**அம் கோல்வளை மங்கை காண, அனல் ஏந்தி,**
**கொங்கு ஆர் நறுங்கொன்றை சூடி, குழகுஆக,**
**வெங்காடு இடம்ஆக, வெந்தீ விளையாடும்**
**நம் கோன்; நமை ஆள்வான் நல்லம் நகரானே.**

am kOlvaLai magkai kANa, an2al Enti,
kogku Ar naRugkon2Rai cUTi, kuzaku Aka,
vegkATu iTam Aka, ventI viLaiyATum
nam kOn2; namai ALvAn2--nallam nakarAn2E.

**பொருள்:** சிவபெருமான், அழகிய திரண்ட வளையல்களை அணிந்த உமையம்மை காண கையில் அனலை ஏந்தியிருப்பவர். தேன் நிறைந்த மணமுடைய கொன்றை மலர் மாலையைச் சூடியிருப்பவர். இளமைக் கோலத்தில் சுடுகாட்டை அரங்கமாகக் கொண்டு எரி ஆடுபவர். நமது அரசனான இப்பெருமான் நம்மை ஆட்கொண்டு அருளும் பொருட்டு நல்லம் என்னும் நகரில் எழுந்தருளி உள்ளார்.

**குறிப்புரை:** உமையம்மைக் காண கொன்றைசூடி, ஊழிக்காலத்தில் நடனம் புரிபவர் இவர் என்கின்றது. அம் கோல் வளை – அழகிய திரண்ட வளையல். கொங்கு – மணம் நிறைந்த தேன். குழகா – இளமையாக.

Lord Civan holding fire in His palm dances in the cremation ground. In the fierce cremation ground He dances in the blazing fire. In His youthful frame He always considers the cremation ground as His stage for dancing. His dance was witnessed only by His consort who wears comely and rotund bangles. This Lord Civan is entempled in the town of Nallam to admit us into His good grace.

**Note:** Civa is Kuzhakan – the eternal youth.

பெண்ணார் திருமேனிப் பெருமான் பிறைமல்கு
கண்ணார் நுதலினான் கயிலைகருத்தினால்
எண்ணா தெடுத்தானை யிறையேவிரலூன்றி
நண்ணார் புரமெய்தா னல்ல நகரானே. 8

*பெண் ஆர் திருமேனிப் பெருமான்; பிறை மல்கு*
*கண் ஆர் நுதலினான்; கயிலை கருத்தினால்*
*எண்ணாது எடுத்தானை இறையே விரல் ஊன்றி*
*நண்ணார் புரம் எய்தான் - நல்லம்நகரானே.*

peN Ar tirumEn2ip perumAn2; piRai malku
kaN Ar nutalin2An2; kayilai karuttin2Al
eNNAtu eTuttAn2ai iRaiyE viral Un2Ri,
naNNAr puram eytAn2--nallam nakarAn2E.

***பொருள்:*** சிவன் உமையம்மையைத் தன் திருமேனியின் ஒரு கூற்றிலே கொண்டுள்ள பெருமான். பிறைமதியைத் தன் சடையில் சூடியவர். தனது நெற்றியில் மூன்றாவது கண்ணை உடையவர். இறைவனது வரம்பில்லாத ஆற்றலை முன்பே எண்ணாது கயிலை மலையை எடுத்த இராவணனைச் சிறிதே விரலூன்றி அடர்த்தவர். பகைவரின் முப்புரங்களையும் எய்து அழித்தவர். நம்மை ஆட்கொண்டு அருளும் பொருட்டு நல்லம் என்னும் நகரில் எழுந்தருளி உள்ளார்.

***குறிப்புரை:*** இராவணனை விரலால் ஊன்றித் திரிபுரம் எரித்தவர் இவர் என்கின்றது. எண்ணாது – பின்வருகின்ற தீங்கை முன் ஆராயாது. இறையே – சிறிது. நண்ணார் – பகைவர்.

Lord Civan concorporates His consort Umaa Devi on the left half of His divine body. He has a third eye on His forehead and a crescent moon on His head. He slightly pressed His toe on the mountain and crushed Raavanan, who thoughtlessly tried to uproot mount Kailash in vain. He gutted with fire the three citadels of the hostile Asuraas. This Lord Civan is entempled in the town Nallam.

நாகத் தணையானும் நளிர்மாமலரானும்
போகத் தியல்பினாற் பொலியஅழகாகும்
ஆகத் தவளோடும மர்ந்தங்கழகாரும்
நாகம் மரையார்த்தா னல்ல நகரானே. 9

நாகத்து அணையானும் நளிர் மா மலரானும்
போகத்து இயல்பினால் பொலிய, அழகு ஆகும்
ஆகத்தவளோடும் அமர்ந்து, அங்கு அழகு ஆரும்
நாகம்(ம்) அரை ஆர்த்தான் - நல்லம்நகரானே.

nAkattu aNaiyAn2um naLir mA malarAn2um
pOkattu iyalpin2Al poliya, azaku Akum
AkattavaLOTum amarntu, agku azaku Arum
nAkam(m) arai ArttAn2--nallam nakarAn2E.

**பொருள்:** பாம்பணையில் துயிலும் திருமாலும், குளிர்ந்த தாமரை மலர்மேல் எழுந்தருளி உள்ள நான்முகனும் திருமகள் கலைமகளிரோடு போகம் பொருந்தி வாழும் பொருட்டு சிவபெருமானும் மலைமகளோடு கூடிப் போகியாய் இருந்து அருள் செய்கின்றார். அழகு பொருந்திய பாம்பை இடையில் அரைநாணாகக் கட்டிக் கொண்டுள்ளார். இப்பெருமான் நம்மை ஆட்கொண்டு அருளும் பொருட்டு நல்லம் என்னும் நகரில் எழுந்தருளி உள்ளார்.

**குறிப்புரை:** நாகத்தணையான் – திருமால். திருமாலை இச்சொல்லால் குறித்தது. அணையிருந்தும் அணையிலேயே அருகில் அலர்மகள் இருந்தும், மாலுக்கு போகம் கூட வேண்டுமாயின் இறைவன் போகியாய் இருந்தால் அல்லது பயனில்லை என்பதைக் காட்ட; மாமலரான் என்பதும் அங்ஙனமே.

Lord Civan has a happy conjugal life in His aspect as Sadaa Civan (*சதாசிவன்*) with His consort Umaa Devi, daughter of mountain king. This He did in His grace in order to enable Thirumaal who reclines in snake bed and Brahma seated in the cool lotus flower, to flourish in their conjugal life with their consorts - Thiru-makal (Lakshmi) and Kalai-makal (Saraswathi) respectively. He has worn a beautiful snake on His waist as waist-cord. This Lord Civan is enshrined in Thiru-nallam to admit us into His good grace.

குறியில் சமணோடுகுண் டர்வண்தேரர்
அறிவில் லுரைகேட் டங்கவமே கழியாதே
பொறிகொள் ளரவார்த் தான்பொல்லா வினைதீர்க்கும்
நறைகொள் பொழில்சூழ்ந்த நல்லநகரானே. 10

குறி இல் சமணோடு, குண்டர் வண்தேரர்,
அறிவு இல் உரை கேட்டு, அங்கு அவமே கழியாதே!
பொறி கொள் அரவு ஆர்த்தான் - பொல்லாவினை தீர்க்கும்,
நறை கொள் பொழில் சூழ்ந்த நல்லமநகரானே.

kuRi il camaNOTu, kuNTarvaN tErar,
aRivu il urai kETTu, agku avamE kaziyAtE!
poRi koL aravu ArttAn2--pollAvin2ai tIrkkum,
naRai koL pozil cUznta, nallam nakarAn2E.

***பொருள்:*** சமணர்கள் குறிக்கோள் இல்லாதவர்கள். புத்தர்கள் அறிவற்றவர்கள். இவர்களின் அறிவற்ற சொற்களைக் கேட்டு நாட்களை வீணாகக் கழிக்காதீர்கள். சிவபெருமான் புள்ளிகளோடு கூடிய பாம்பினை இடையில் கட்டி இருப்பவர். இப்பெருமான் நமது பொல்லாத வினைகளைத் தீர்க்கும் பொருட்டுத் தேன் நிறைந்த பொழில் சூழ்ந்த நல்லம் என்னும் நகரில் எழுந்தருளி உள்ளார். அவனை வழிபாடு செய்வீராக.

***குறிப்புரை:*** இது பொல்லா வினையைப் போக்குவார் இவர் என்கின்றது. குறி இல் சமண் – குறிக்கோளற்ற சமணர். குண்டர் – அறிவிலிகள். தேரர் – புத்தர். அவமே – வீணாக. பொறி – படப்பொறி. நறை – தேன்.

Ye folks! Do not waste your lifetime listening to the meaningless and aimless words of the Samanars and Buddhists. Lord Civan has worn in His waist a speckled serpent as His cord. He will annul all our evil karma. Worship this Lord Civan who is entempled in Thiru-nallam girt with gardens full of honey.

நலமார் மறையோர் வாழ்நல்ல நகர்மேய
கொலைசேர் மழுவானைக் கொச்சை யமர்ந்தோங்கு
தலமார் தமிழ்ஞான சம்பந்தன்சொன்ன
கலைகளி வைவல்லார் கவலைகழிவாரே. 11

நலம் ஆர் மறையோர் வாழ் நல்லம்நகர் மேய
கொலை சேர் மழுவானை, கொச்சை அமர்ந்து ஓங்கு
தலம் ஆர் தமிழ் ஞானசம்பந்தன் சொன்ன
கலைகள் இவை வல்லார் கவலை கழிவாரே.

nalam Ar maRaiyOr vAz nallam nakar mEya
kolai cEr mazuvAn2ai, koccai amarntu Ogku
talam Ar tamiz njAn2acampantan2, con2n2a
kalaikaL ivai vallAr kavalai kazivArE.

**பொருள்:** நல்லம் நகரில் நன்மைகள் செய்யும் வேதங்களை ஓதும் சான்றோர்கள் வாழ்கின்றனர். இந்நகரில் சிவபெருமான் நமது பாவங்களை அழிக்கவல்ல மழு என்னும் ஆயுதத்தை ஏந்தியவாறு எழுந்தருளி உள்ளார். கொச்சை வயம் என்னும் புகழை உடைய சீகாழித் தலத்தில் தோன்றிய தமிழ் ஞானசம்பந்தன் இப்பெருமானைப் போற்றிக் கலைநயம் வாய்ந்த இப்பதிகத்தைப் பாடினார். இக்கலைநயம் வாய்ந்தப் பதிகத்தை ஓத வல்லவர்களின் கவலைகள் கழிந்து அழிந்து விடும்.

**குறிப்புரை:** நல்ல நகரானை ஞானசம்பந்தன் சொன்ன கலைகளாகிய இவைகளில் வல்லவர்கள் கவலை கழிவார் என்கின்றது. கொச்சை – சீகாழி. இப்பதிகத்தைக் கலைகள் எனச் சிறப்பித்தமை காண்க.

Lord Civan is enshrined in the city of Nallam holding in His hand the martial battleaxe. In this city Vedic scholars well versed in chanting the weal conferring scriptures abide in large numbers. Gnaanasambandan who is himself well versed in Tamil (Tamil Gnaanasambandan - *தமிழ் ஞானசம்பந்தன்*) hails from the lofty and holy city of Seekaazhi called Kochai-vayam (*கொச்சைவயம்*). He sang on Lord Civan of Nallam, this compact hymn revealing all the wisdom of holy scriptures. Those who can chant this hymn with deep devotion will stand freed from worry.

**Note:** This verse refers to Kocchai vayam which is one of the twelve names of Seekazhi. The word Kalai means holy scriptures. In other words Kalai means science - Kalai inculcates science, physical as well as spiritual. Our Saint proclaims that his verses constitute kalai.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*85ஆம் பதிகம் முற்றிற்று*
End of 85th Hymn

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

## 86. திருநல்லூர்

### திருத்தல வரலாறு:

திருநல்லூர் என்ற இத்திருத்தலம் சோழ நாட்டுக் காவிரித் தென்கரைத் தலம். சுந்தரப்பெருமாள் கோயிலுக்கு அருகில் உள்ளது. பேருந்து வழி உள்ளது. இத்தலம் கோச்செங்கட் சோழனால் திருப்பணி செய்யப் பெற்ற மாடக்கோயிலுள் ஒன்றாக விளங்குவது. திருநாவுக்கரசு சுவாமிகள் நான்காம் திருமுறையில் திருச்சத்தி முற்றப் பதிகத்தில் (பதிகம் எண் – 4–96 "கோவாய்முடுகி" என்று தொடங்கும் முதல் பதிகத்தில் இரண்டாவது அடியில்) 'பூவார் அடிச்சுவடு என்மேல் பொறித்துவை' என்று விண்ணப்பஞ்செய்ய, இறைவன் 'நல்லூருக்கு வா! உன்னுடைய நினைப்பதனை முடிக்கின்றோம்' என்று அருள திருநல்லூரில் எழுந்தருளினார் (பெரியபுராணம் "நன்மை பெருகு" என்று தொடங்கும் பாட்டு 12–27–193 முதல் 196 முடிய). திருவடி சூட்டப் பெற்றார். அதனை அமைத்துத் திருத்தாண்டகத்து ஓதுதலைக் காண்க (6–14–6380 முதல் 6390 முடிய).

அமர்நீதி நாயனார் பழையாறையில் வைசிய குலத்தில் பிறந்த பெரிய தனவந்தர். சிறந்த சிவபக்தர். சிவனடியார்களுக்கு உணவு, உடை, கோவணம் மற்றும் தேவையானவற்றை வாரி வாரி வழங்கும் கொடைவள்ளல். அண்மையில் உள்ள திருநல்லூரில் விளங்கும் சிவன் கோவிலில் நடக்கும் திருவிழாவிற்கு மக்கள் கூட்டம் மிக அதிகமாக வரும். அதை அறிந்து அமர்நீதி நாயனாரும் திருநல்லூர் வந்து ஒரு சத்திரம் கட்டி குடும்பத்துடன் அங்கு தங்கி, தன்னுடைய திருத்தொண்டை மிக அதிகமாக செய்து வந்தார். இவருடைய பெருமையை உலகமக்கள் அறிய வேண்டுமென்று சிவபெருமான் விரும்பி ஒரு சிறிய நாடகம் நடத்தினார். சிவன், வேதியராய் பிரமசாரி வேடந்தாங்கி நாயனார் இல்லம் வந்து, உமது தொண்டைக் கேள்வியுற்று உம்மைக் காண வந்தோம் என்றார். நாயனார் முறைப்படி வணங்கி உபசரித்தார். வேதியர் ஒரு உலர்ந்த கோவணத்தைத் கொடுத்து இதைப் பத்திரமாக வைத்திரும். நான் காவேரி சென்று குளித்து விட்டு வந்து வாங்கி அணிந்து கொள்ளுவேன் என்று சொல்லிப் போந்தார். திரும்பி வரும் பொழுது மழை வந்து விட்டது. வேதியரின் உடை அனைத்தும நனைந்து விட்டது. நாயனாரைச் சந்தித்து தன் கோவணத்தைக் கேட்டார். இறையருளால் கோவணத்தைக் காணவில்லை. வீடெங்கும் தேடிக் காணாமையால் வேறு ஒரு புதிய உயர்ந்த கோவணத்தைக் கொண்டு வந்து கொடுத்து வேதியரிடம் "தாங்கள் கொடுத்த கோவணத்தை வைத்த இடத்தில் தேடினேன்; காணவில்லை.

அதைப்பார்க்கிலும் இது மிக உறுதியானது; இதை உபயோகப்படுத்திக் கொள்ளுங்கள்'' என்றார். வேதியர் அதை வாங்க மறுத்து நாயனாரை மிகவும் இகழ்ந்து பேசி வம்புக்கு இழுத்தார். நாயனார் ''நான் என்ன பட்டாடைகள், மணிகள் வேண்டுமானாலும் தருகிறேன். என் தவறை மன்னியுங்கள்'' என்று மன்றாடினார். கடைசியாக வேதியர் ஒரு வழிக்கு வந்தார். என்னிடம் உள்ள இன்னுமொரு ஈரக் கோவணத்தின் எடைக்கு சமமாக மற்றுமொரு கோவணம் கொடுத்தால் போதும் என்று கூற, அடியார் விரைந்து வந்து ஒரு துலா நாட்டினார். வேதியர் தனது கோவணத்தை ஒரு தட்டில் இட்டார். நாயனார் தான் காண்பித்த கோவணத்தை மற்றொரு தட்டில் இட்டார். நிறை ஒத்து வரவில்லை. மற்றும் பல கோவணங்கள், பட்டாடைகள், பொன், வெள்ளி முதலிய நாணயங்கள் அனைத்தையும் இட்டார். நிறை ஒத்து வரவில்லை. நாயனார் சிவனை மனதால் வழிபட்டு திருவைந்தெழுத்தை ஓதி தானும், மனைவியும், மைந்தனும் தட்டில் ஏறினார்கள். நிறை ஒத்து வந்தது. வேதியர் மறைந்து விட்டார். விண்ணிலே சிவபெருமான் உமாதேவியாரோடு காட்சி கொடுக்க நாயனார் சிவபெருமான் திருக்கோலத்தைக் கண்டு மகிழ்ச்சியடைந்து, போற்றி, வழிபட்டு வணங்கினார். **''உமது தொண்டை உலகறியச் செய்வதற்காக இவ்வாறு செய்தோம்''** என்று சிவன் கூறி மூவரையும் துலாவை விமானமாக மாற்றி தன் இருப்பிடம் கூட்டிச் சென்று அருள் புரிந்தார். இதனை அப்பர் சுவாமிகள் 'நாட்கொண்ட' என்ற பாடலில் (4–97–7ஆம் பாட்டு) விளக்கி அருளுகிறார்கள்.

பிருங்கி வண்டுருபமாகப் பூசித்ததால் இங்குள்ள திருமேனி முழுவதும் துளைகள் உள்ளன. அகத்தியருக்குத் திருமணக் கோலம் காட்டிய தலம் ஆதலால் அகத்திய லிங்கமும், கல்யாண சுந்தரக் கோலமும் கருப்பக்கிருகத்தில் இருக்கின்றன. சுவாமி பொன்வண்ணத் திருமேனியோடு விளங்குகிறார். ஒருநாளைக்கு ஐந்து வர்ணமாய்த் தோன்றுவதாக ஐதீகம். இக்கோயிலில் சாலிக்கிராமத்தால் செய்யப் பெற்ற சுப்பிரமணியர் விக்கிரகம் ஒன்று உண்டு. சுவாமி பெயர் பெரியாண்டேசுவரர், கல்யாண சுந்தரேசுவரர், பஞ்சவர்ணேசர் என்பன. இறைவி பெயர் பர்வத சுந்தரி, கல்யாண சுந்தரி என்பன. தீர்த்தம் சப்தசாகர தீர்த்தம். சுந்தரப் பெருமாள் கோயிலுக்குத் தெற்கே 3 கி.மீ. தூரத்தில் உள்ளது. திருவாவடுதுறை ஆதீன அருளாட்சியில் உள்ளது.

**கல்வெட்டு:**

இத்தலம் ஹொய்சள அரசரான வீரராமநாத தேவரின் 23ஆவது ஆட்சியில் நித்த விநோத வளநாட்டு நல்லூர் நாட்டுப் பஞ்சவள மாதேவி சதுர்வேதி மங்கலமாகிய திருநல்லூர் என்று வழங்குகிறது.

இறைவன் திருநல்லூர் நாயனார் என்று வழங்கப்படுகிறார். இத்தல விநாயகர் அகம்படி விநாயகர் என்று குறிக்கப்படுகிறார். நாராயணன் மேகவீரன் என்பவன் ஒரு மண்டபம் கட்டினான். ஏனைய கல்வெட்டுக்கள் நிவேதனத்திற்கு நெல்லும், நிலமும், விளக்கிற்குப் பொன்னும் பூந்தோட்டத்திற்கும், பூக்கட்டவும் நிலமும் பொன்னும் அளித்த செய்தியை அறிவிக்கின்றன. இராஜேந்திர சோழ தேவனின் 5ஆம் ஆண்டுக் கல்வெட்டு ஒன்று கோயிலில் அடித்தளம் அமைக்க நிலம் வழங்கியதைத் தெரிவிக்கின்றது.

**பதிக வரலாறு:**

திருஞானசம்பந்தப் பிள்ளையார் திருப்பாலைத்துறையை வணங்கிக் கொண்டு திருநல்லூரை அடைந்தார்கள். அங்கிருந்த அந்தணர்கள் மங்கள வாத்தியங்களுடன் எதிர்கொண்டு அழைத்தனர். பிள்ளையார் சிவிகையில் ஆரோகணித்த வண்ணமே சென்றார். கோயிலை அணுகியதும் சிவிகையினின்றும் கீழிறங்கி, அந்தணர் கூட்டம் முன்செல்ல, அடியார் கூட்டம் இரு மருங்கும் வர, திருக்கோயிலை அடைந்தார். கோபுரத்தைக் கண்டு வணங்கினார். கோயிலை வலம் வந்தார். அப்போது ஆனந்த பாஷ்பம் அருவிபோற்பொழிய இறைவனைத் தொழுது பரவிச் சொற்பதிகமாகிய 'கொட்டும்பறை' என்னும் இதனை அருளிச் செய்தார்.

## 86. THIRU-NALLOOR

### HISTORY OF THE PLACE

This sacred place is to the south of river Cauvery in Chola Naadu. It is to the south of Sundharapperumaal Koyil at a distance of 3 km from it. It is accessible by bus.

The names by which the Lord is known are Periyaandusuvarar, Kalyaana-sundharesuvarar and Panjchavarnesuvarar. The Goddess is known as Parvatha-sundhari and Kalayaanasundhari. The holy ford is Sapthasaagar Theerththam.

This temple is one of the multi-storeyed temples (Maadakkoyil) renovated by Kochchengkat Cholan. Saint Thirunaavukkarasar prayed in his Thiruchchaththi mutram hymn (4-96-1-second line), 'poovAr aDicchuvaDu en mEi poritthu vai' (*பூவார் அடிச்சுவடு என்மேல் பொறித்துவை*) (please grant your grace by crowning me with your flower-like feet). In response, the Lord asked him to come to Nalloor where He would grant him his prayer. So the Saint came to this temple and had the holy feet of the Lord

bestowed on him. The Saint's Thiruththaandakam recalls this (6-14-1 to 10; 6380 to 6390).

Saint Amarneethi Naayanar born in Pazhayaarai in Chola country belonged to a rich merchant community (Vaisyas - வைசியர்). He is a staunch devotee of Lord Civan. He spent his wealth in feeding the devotees, giving them dhoties, loincloth and whatever needed by them. Thirunallur is a nearby town where people gather in large numbers to witness the temple festival. Amarneethi Naayanar also went and built a chatram in this town and settled there with all his family members. He carried on his charitable activities here in a more elaborate manner then before. Lord Civan decided to display his nobleness to all the people. HE therefore enacted a drama. He went in disguise as an old man to Amarneethi Naayanar's house and requested him to keep safely HIS dry loincloth until HE returns from HIS bath in the river nearby. When he returned it started rain and His entire dresses went vet. He met the Naayanaar and asked him to return His dry loincloth to wear, as all other cloths were wet. Naayanar went inside the place and searched for the loincloth. It was missing. He, therefore, brought a new one and gave it to HIM and regretted for losing HIS loincloth. Lord Civan shouted at Naayanar for alleged misdeeds and insulted him. Naayanar begged for pardon and offered to provide anything else in compensation He offered such as silk dhoties, silk loincloth, gems etc., and requested HIM to accept anything HE liked. Lord Civan calmed himself and told him that it is enough if he can give a loincloth equal in weight to HIS wet loincloth. Amarneethi Naayanar agreed. A scale was brought, He placed his wet loincloth in one of the two trays. Naayanar placed one loincloth of a certain kind in the other tray. The scale did not equalise. Naayanar placed one after another, the entire wealth in his house, but all in vain. Finally he prayed to Lord Civan by chanting the five letter mystic word (திருவைந்தெழுத்து) and proclaimed thus "I was doing all these years charity to all the devotees of the Lord sincerely. If it is a true one the scale should reach equalising as soon as I get into the scale along with my wife and son". Lo! the scale balanced as soon as Naayanar entered into the scale along with his wife and son. The old man disappeared, but Lord Civan and His consort Umaa Devi

appeared in the sky riding in His bull vehicle. Naayanar and his family hailed and worshipped Lord Civan. Civa graced all the three and took them to HIS abode. The scale turned into an airplane and all the three rode to Civa's abode in the same scale. This is sung by Saint Appar in a verse that begins with 'naatkonDa ...' (நாட்கொண்ட) (4-97-7-5107).

As the sage Bringi took the form of a beetle to adore the Lord, the image of the Lord is seen here with holes bored by the insect. As the Lord showed His form at His wedding to Sage Agaththiyar, He is also present in the form of Agaththiyalingam and Kalyaanasundharar at the sanctum in this temple. The Lord's image is of a golden hue. According to tradition, He appears in five different colours each day. There is also an icon of Subbiramaniyar made of Saaligramam.

This temple is under the administration of Thiruvaavaduthurai Aadheenam. Among the inscriptions of this temple are those by Chola and Hoysala kings. They give information about the grant of land and gold for lamps, flower garland making and flower gardens. An inscription of the 5th regal year of Raajendhira Chola Thevan mentions the gift of land for laying a foundation at the temple.

## INTRODUCTION TO THE HYMN

From Thiruppaalaitthurai our saint arrived at Thirunalloor and sang the following hymn:

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 86. திருநல்லூர்

## 86. THIRU-NALLOOR

பண் : குறிஞ்சி
ராகம் : குறிஞ்சி

*Pann: Kurinji*
*Raagam: Kurinji*

கொட்டும் பறைசீராற் குழுமஅனலேந்தி
நட்டம் பயின்றாடு நல்லூர்ப் பெருமானை
முட்டின் றிருபோதுமுனியா தெழுந்தன்பு
பட்டம னத்தார்களறி யார்பாவமே.

1

கொட்டும் பறை சீரால் குழும, அனல் ஏந்தி,
நட்டம் பயின்று ஆடும் நல்லூர்ப் பெருமானை
முட்டு இன்று இருபோதும், முனியாது எழுந்து, அன்பு
பட்ட மனத்தார்கள் அறியார், பாவமே.

koTTum paRai cIrAl kuzuma, an2al Enti,
naTTam payin2Ru ATum nallUrp perumAn2ai
muTTu in2Ru irupOtum, mun2iyAtu ezuntu, an2pu-
paTTa man2attArkaL aRiyAr, pAvamE.

**பொருள்:** சிவபெருமான் திருநல்லூரில் எழுந்தருளி உள்ளார். இவர் நாதப்பறை கொட்டும் தாளத்திற்கு ஏற்பவும், பூத கணங்கள் சூழவும், திருக்கையில் அனலேந்தியும் விருப்பத்தோடு நடனம் ஆடுபவர். இப்பெருமானைக் காலையிலும் மாலையிலும் மனதில் விருப்பத்தோடு உதித்து எழுகின்ற அன்பினால், தொடர்ந்து வணங்குபவர்களைப் பாவம் அணுகாது.

**குறிப்புரை:** பறை கொட்டும் சீருக்கேற்ப அனலேந்தியாடும் நல்லூர்ப் பெருமானை, காலை மாலை இரு வேளைகளிலும் அன்பு செய்யுமனத்தவர்கள் பாவமறியார் என்கின்றது. சீரால் – சதிக்கு ஏற்ப சீரால் ஆடும் எனக் கூட்டுக. முட்டின்று – இடையீடு இல்லாமல். அன்புபட்ட – அன்பொடு பொருந்திய.

Lord Civan surrounded by His goblin hosts enacts His dance with all love, holding fire in His hand. His dance harmonises with the beat of the drums. Those who serenely adore this Lord Civan twice daily with deep devotion and without any break and with a loving mind, will never know what is sin.

**Note:** Nalloor literally means 'the town of weal or famous town'. It was here St. Appar was blessed with the Tiruvati-diksha. The Civalinga at Nalloor is hailed as Panchavarnesurar. It seemingly undergoes a fivefold change in hue daily, as stated by traditional folks of this town.

ஏறிலெரு தேறுமெழிலா யிழையோடும்
வேறும் முடனுமாம் விகிர்தர வரென்ன
நாறும் மலர்ப்பொய் கைநல்லூர்ப் பெருமானைக்
கூறும் மடியார்கட் கடையா குற்றமே. 2

ஏறில் எருது ஏறும், எழில் ஆயிழையோடும்
வேறும்(ம்) உடனும்ஆம், விகிர்தர் அவர் என்ன,
நாறும் மலர்ப்பொய்கை நல்லூர்ப் பெருமானைக்
கூறும்(ம்) அடியார்கட்கு அடையா, குற்றமே.

ERil erutu ERum, ezil AyizaiyOTum
vERum(m) uTan2umAm, vikirtar avar en2n2a,
nARum malarp poykai nallUrp perumAn2aik
kURum(m) aTiyArkaTku aTaiyA, kuRRamE.

**பொருள்:** சிவபெருமான், மணம் கமழும் மலர்ப் பொய்கை சூழ்ந்த திருநல்லூரில் எழுந்தருளி உள்ளார். இப்பெருமான், ஊர்தியாக எருது ஒன்றில் மட்டுமே ஏறும் விகிர்தர். அழகிய உமையம்மையோடு ஒன்றாகவும், வேறாகவும் விளங்கும் தன்மை உடையவர். இவ்விதமாக அவரது புகழைக் கூறும் அடியவர்களைக் குற்றங்கள் அணுகாது.

**குறிப்புரை:** அம்மையொடு உடனாயும் வேறாயும் இருக்கும் பெருமானாகிய, நல்லூர் இறைவனைத் தோத்திரிப்பார்க்குக் குற்றம் அடையா என்கின்றது. ஏறில் எருது ஏறும் விகிர்தர் எனக்கூட்டிப் பொருள் கொள்க. எருதன்றி வேறொன்றிலும் அவர்க்கு விருப்பில்லை என்றவாறு. எழில் – அழகு. வேறாதல் – அம்மையை இடப்பாகத்துக் கொண்டிருத்தல். உடனாதல் – தன்மேனியில் ஒருபங்காய்க் கொண்டு அர்த்த நாரீச்சுரராக இருத்தல். இதுவும் உருவில் வேறுபட்டுத் தோன்றுதலின் சத்தியைத் தன்னுளடக்கியிருக்கும் நிலை கூறிற்றுமாம்.

Civan, who is the pre-eminent Supreme Lord (விகிர்தன்) will ride only on His bull which is His vehicle. He is renowned as one when He shares half of His body frame with His charming consort Umaa Devi; but He is also a different entity when she sits on His left hand side in Her full form. He is **one** with Her and also **different** from Her. The devotees who adore and worship this Lord Civan of Thiru-nalloor, which is surrounded by fragrant and flowery gardens will never be touched by faults.

சூடுமிளந் திங்கட் சுடர்பொற் சடைதாழ
ஓடுண் கலனாக வூரு ரிடுபிச்சை
நாடுந் நெறியானை நல்லூர்ப் பெருமானைப்
பாடும் மடியார்கட் கடையா பாவமே. 3

சூடும் இளந்திங்கள் சுடர்பொன்சடை தாழ,
ஓடு உண்கலன் ஆக, ஊர்ஊர் இடு பிச்சை
நாடும் நெறியானை, நல்லூர்ப் பெருமானைப்
பாடும்(ம்) அடியார்கட்கு அடையா, பாவமே.

cUTum iLantigkaL cuTar pon2caTai tAza,
OTu uNkalan2 Aka, Ur Ur iTu piccai
nATum neRiyAn2ai, nallUrp perumAn2aip
pATum(m) aTiyArkaTku aTaiyA, pAvamE.

**பொருள்:** சிவபெருமான் இளம்பிறையைத் தம் திருமுடியிற் சூடியுள்ளார். ஒளிவிடுகின்ற பொன்போன்ற திருச்சடைகள் தாழ, தலையோட்டையே உண்கலனாகக் கொண்டுள்ளார். ஒவ்வோர் ஊரிலும் மகளிர் இடும் பிச்சையை நாடிச் செல்லும் அறநெறியாளர். இந்தத் திருநல்லூர்ப் பெருமானைப் போற்றிப் பாடும் அடியவர்களைப் பாவங்கள் அடையாது.

**குறிப்புரை:** ஊரிடு பிச்சையை நாடும் முறையை உடைய நல்லூர்ப் பெருமானைப் பாடுகின்ற அடியவர்களைப் பாவம் அடையா என்கின்றது. சுடர் பொன் சடை – ஒளிவிடுகின்ற பொன் போலும் திருச்சடை.

Lord Civan holds the young crescent moon in His matted hair dangling downwards, which radiates its golden dazzling rays all over. He pursues His course, begging for alms, moving from place to place, with a human skull in His hand that serves as His begging bowl. Sin will never touch those devotees who sing and worship with deep devotion, this virtuous Supreme Lord Civan of Thiru-nalloor.

நீத்த நெறியானை நீங்காத் தவத்தானை
நாத்த நெறியானை நல்லூர்ப் பெருமானைக்
காத்த நெறியானைக்கை கூப்பித்தொழு
தேத்து மடியார்கட் கில்லை யிடர்தானே. 4

நீத்த நெறியானை, நீங்காத் தவத்தானை,
நாத்த நெறியானை, நல்லூர்ப் பெருமானை,
காத்த நெறியானை, கைகூப்பித் தொழுது
ஏத்தும் அடியார்கட்கு இல்லை, இடர்தானே.

nItta neRiyAn2ai, nIgkAt tavattAn2ai,
nAtta neRiyAn2ai, nallUrp perumAn2ai,
kAtta neRiyAn2ai, kaikUppit tozutu
Ettum aTiyArkaTku illai, iTartAn2E.

**பொருள்:** சிவபெருமான் உலகியல் நெறிமுறைகளைத் தான் பின்பற்றாது நீத்தவர். நீங்காத தவத்தை உடையவர். கட்டுப்பாடுகளுடைய நெறிகளை வகுத்து அளித்தவர். அந்நெறி

நிற்பாரைக் காத்து அருளுபவர். இந்தத் திருநல்லூர்ப் பெருமானைக் கைகுவித்து தொழுதேத்தும் அடியவர்களுக்கு இடர் இல்லை.

**குறிப்புரை:** இவனைக் கைதொழுதேத்துவார்கட்கு இடர் இல்லை என்கின்றது. நீத்த நெறியானை – விடுபட்ட நெறிகளை உடையவனை, நெறி என்பன யாவும் மலமாயா பந்தங்களாற் கட்டப் பெற்ற நம் போலியர்க்கே ஆதலின், அவையற்ற இறைவன், விடுபட்ட ஆசார சீலங்களை உடையவனாயினன். நாத்த நெறியானை என்பதில் ஞாத்தநெறி நாத்த நெறியாயிற்று. ஞாத்த – கட்டப்பட்ட; எமக்கு ஒழுங்குகளைக் கட்டிக் கொடுத்தவனை என்பது பொருள்.

Lord Civan is unfettered by any type of worldly matters; Penance will never close to exist in Him; He formulated the virtuous ways of life for us to follow; He protects those who strictly adore by all these virtuous deeds. Those devotees who worship this Lord Civan of Thiru-nalloor with folded hands will never get any calamity in their lifetime.

ஆகத் துமைகேள் வனரவச் சடைதாழ
நாகம் மசைத்தானை நல்லூர்ப் பெருமானைத்
தாகம் புகுந்தண்மித் தாள்கள்தொழுந் தொண்டர்
போகம் மனத்தராய்ப் புகழத் திரிவாரே. 5

ஆகத்து உமைகேள்வன், அரவச் சடை தாழ
நாகம்(ம்) அசைத்தானை, நல்லூர்ப் பெருமானை,
தாகம் புகுந்து அண்மி, தாள்கள் தொழும் தொண்டர்
போகம் மனத்தராய், புகழத் திரிவாரே.

Akattu umaikELvan2, aravac caTai tAza
nAkam(m) acaittAn2ai, nallUrp perumAn2ai,
tAkam pukuntu aNmi, tALkaL tozum toNTar
pOkam man2attarAy, pukazat tirivArE.

**பொருள்:** சிவபெருமான், தனது திருமேனியில் கூறாகக் கொண்டுள்ள உமையம்மையின் கணவர் ஆவார். பாம்பணிந்த சடைகள் தாழ்ந்து தொங்க, தனது இடையில் பாம்பைக் கச்சாகக் கட்டியவர். இந்தத் திருநல்லூர்ப் பெருமானை வேட்கை மிகுந்தவராய் அணுகி அவரது திருவடிகளைத் தொழும் தொண்டர்கள், இன்பம் பொருந்திய மனத்தவராய்ப் உலகம் புகழத் திரிவார்கள்.

**குறிப்புரை:** சிவனைச் சேரவேண்டும் என்ற தாகம் எடுத்து அணுகுந் தொண்டர்கள் போகம் நிறைந்த மனத்தராக உலகம் புகழத் திரிவார்கள் என்கின்றது. ஆகம் – மேனி. தாகம் புகுந்து – வேட்கைமிக்கு. அண்மி – அணுகி.

Lord Civan is the consort of Umaa Devi who occupies half of His body. His matted hair holds a snake and dangles downwards. He also wears another snake in His waist as His waist cord. Those servitors who approach Him with great desire, and worship the holy feet of this Lord Civan of Thiru-nalloor, will be praised by one and all on this earth and will live with everlasting happiness in their mind.

கொல்லுங் களியானை யுரிபோர்த் துமையஞ்ச
நல்லநெறி யானைநல்லூர்ப் பெருமானைச்
செல்லுநெறி யானைச்சேர்ந் தாரிடர்தீரச் 6
சொல்லுமடி யார்களறியார் துக்கமே.

கொல்லும் களியானை உரி போர்த்து, உமை அஞ்ச
நல்ல நெறியானை, நல்லூர்ப் பெருமானை,
செல்லும் நெறியானை, சேர்ந்தார் இடர் தீர,
சொல்லும் அடியார்கள் அறியார், துக்கமே.

kollum kaLiyAn2ai uri pOrttu, umai anjca,
nalla neRiyAn2ai, nallUrp perumAn2ai,
cellum neRiyAn2ai, cErntAr iTar tIra,
collum aTiyArkaL aRiyAr, tukkamE.

**பொருள்:** தன்னைக் கொல்ல வந்த மதம் பொருந்திய யானையைக் கண்டு உமையம்மை அஞ்சினார். சிவபெருமான் அதனைக் கொன்று, அதன் தோலைப் போர்த்த நல்ல நெறியாளர் ஆவார். இவர் திருநல்லூர்ப் பெருமானாக எல்லோரும் அடையத்தக்க முத்தி நெறியாளராக விளங்குகின்றார். இப்பெருமானை அடைந்து, தங்களின் துன்பங்கள் தீருமாறு புகழ்ந்து போற்றும் அடியவர்கள், துக்கம் அறியார்.

**குறிப்புரை:** மக்களைடையும் நெறியாகவுள்ள நல்லூர்ப் பெருமானைச் சொல்லும் அடியார்கள் துக்கம் அறியார் என்கின்றது. உரி – தோல். செல்லுநெறி – அடையத்தகும் நெறியாகிய முத்தி. சேர்ந்தார் – தியானித்தவர்கள்.

Umaa Devi got frightened at the sight of an exhilarated elephant that was approaching her. Lord Civan faced the elephant, peeled its skin, and covered His body with the skin. He is the virtuous Lord enshrined in Thiru-nalloor. Those deovtees who contemplate on Him in their minds and adore Him with a request to wipe out their miseries, will get rid of their troubles for ever.

எங்கள் பெருமானை யிமையோர் தொழுதேத்தும்
நங்கள் பெருமானை நல்லூர் பிரிவில்லாத்
தங்கை தலைக்கேற் றியாளென் றடிநீழல்
தங்கு மனத்தார்கள் தடுமாற்றறுப்பாரே. 7

எங்கள் பெருமானை இமையோர் தொழுது ஏத்தும்
நங்கள் பெருமானை, நல்லூர் பிரிவு இல்லா,
தம் கை தலைக்கு ஏற்றி, "ஆள்" என்று அடி நீழல்
தங்கும் மனத்தார்கள் தடுமாற்று அறுப்பாரே.

engkaL perumAn2ai, imaiyOr tozutu Ettum
nagkaL perumAn2ai, nallUr pirivu illA,
tam kai talaikku ERRi, "AL" en2Ru aTinIzal
tagkum man2attArkaL taTumARRu aRuppArE.

**பொருள்:** சிவபெருமான், எங்கள் தலைவனும், தேவர்களால் தொழுது போற்றப்படும் நம் பெருமானும் ஆவார். இப்பெருமான் திருநல்லூரில் பிரிவின்றி எழுந்தருளி உள்ள தலைவர் ஆவார். அவ்வரை அடைந்து தம் கைகளை தலையின்மேல் குவித்து, நாங்கள் உமக்கு அடிமை என்று கூறி, அவரது திருவடி நிழலில் ஒன்றி வாழும் மனத்தவர்கள் தடுமாற்றம் இல்லாதவர்கள் ஆவர்.

**குறிப்புரை:** சிரமேற் கைகுவித்து, திருமுன்நின்று அடியேன்மீளா ஆளாவேன் என்று திருவடி நீழலில் தங்கும் மனத்தார்கள் தடுமாற்றம் அறுப்பார்கள் என்கின்றது.

Lord Civan is our Master God who is hailed and adored by all the supernal folks; He is our own Supreme Lord who never parts from the town of Thiru-nalloor. Those who reach this Lord, raise their adoring hands above their heads, and submit to Him that they all are His slaves, and abide in the shade of His holy feet, will quell their bewilderment in their lifetime.

காம னெழில்வாட்டிக் கடல்சூழி லங்கைக்கோன்
நாம மிறுத்தானை நல்லூர்ப் பெருமானை
ஏம மனத்தா ராயிகழாதெழுந் தொண்டர்
தீப மனத்தார் களறியார் தீயவே. 8

காமன் எழில் வாட்டி, கடல் சூழ் இலங்கைக் கோன்
நாமம் இறுத்தானை, நல்லூர்ப் பெருமானை,
ஏம மனத்தாராய் இகழாது எழும் தொண்டர்
தீபமனத்தார்கள்; அறியார், தீயவே.

kAman2 ezil vATTi, kaTal cUz ilagkaik kOn2
nAmam iRuttAn2ai, nallUrp perumAn2ai,
Ema man2attArAy ikazAtu ezum toNTar
tIpaman2attArkaL; aRiyAr, tIyavE.

**பொருள்:** சிவபெருமான் மன்மதனது உருவ அழகை அழித்தவர். கடல் சூழ்ந்த இலங்கை மன்னனாகிய இராவணனது புகழை நீக்கியவர். இப்பெருமான் திருநல்லூரில் எழுந்தருளி இருப்பவர். இப்பெருமானை இகழாது பாதுகாப்புக் கொண்ட மனத்தவர்களாய் அவரைக் காண எழும் தொண்டர்கள், தீபம் போன்ற ஞான ஒளி நிலைத்த மனம் உடையவர்கள் ஆவர். அவர்கள் தீயனவற்றை அறியமாட்டார்கள்.

**குறிப்புரை:** இராவணனது புகழைக் கெடுத்த பெருமானாகிய நல்லூர்ப் பெருமானைப் புகழுந் தொண்டர், ஒளிமனத்தர்களாய் தீயன அறியார் என்கின்றது. காமன் – மன்மதன். எழில் – எழுச்சி. தருக்கு. நாமம் – புகழ். ஏம மனத்தார் – பாதுகாப்புற்ற மனத்தவர்கள். தீப மனத்தார் – எழுதிய தீபம் போல நிலைத்த மனத்தடியார்கள்.

Lord Civa burnt the beautiful form of Manmathan (God of Love - *மன்மதன்*); He quelled the glory of the king of the sea-girt Sri Lanka; He is the God of Thiru-nalloor. His servitors who guard well their minds, and diligently exercise themselves in His worship will shine by enlightenment; they know not what evil is.

வண்ண மலரானும் வையமளந்தானும்
நண்ணரி யானைநல்லூர்ப் பெருமானைத்
தண்ண மலர்தூவித் தாள்கள்தொழுதேத்த 9
எண்ணு மடியார்கட் கில்லையிடுக்கணே.

வண்ண மலரானும் வையம் அளந்தானும்
நண்ணல் அரியானை, நல்லூர்ப் பெருமானை,
தண்ணமலர் தூவித் தாள்கள் தொழுது ஏத்த
எண்ணும் அடியார்கட்கு இல்லை, இடுக்கணே.

vaNNa malarAn2um vaiyam aLantAn2um
naNNal ariyAn2ai, nallUrp perumAn2ai,
taNNamalar tUvit tALkaL tozutu Etta
eNNum aTiyArkaTku illai, iTukkaNE.

**பொருள்:** திருநல்லூரில் விளங்கும் சிவபெருமானை செந்தாமரையில் விளங்கும் பிரமனும், உலகை அளந்த திருமாலும் நண்ணுதலுக்கு அரியவர். இப்பெருமானை குளிர்ந்த மலர்களைத் தூவி, அவரது திருவடிகளைத் தொழுது ஏத்த எண்ணுகின்ற அடியவர்களுக்குத் துன்பம் இல்லை.

**குறிப்புரை:** அயனும் மாலும் அணுகவும் அரிய பெருமான் திருவடியை மலர்தூவி வணங்கும் அடியார்கட்கு என்றும் துன்பமில்லை என்கின்றது. வண்ணமலரான் – செந்தாமரையில் உள்ள பிரமன். வையம் அளந்தான் – உலகளந்த பெருமாள், தொழுது ஏத்தவும் வேண்டாம் – எண்ணினாற்போதும் இடுக்கண் இல்லை என்று எளிமை கூறியவாறு.

Lord Civan is inaccessible to Brahma seated on the splendorous lotus flower and to Thirumaal who (while asking for gift from king Bali) measured the earth. He is the Supreme Lord of Thiru-nalloor town. No trouble exists for those willing devotees who hail and adore Him strewing cool flowers at His holy feet.

பிச்சக்குடை நீழற்சமணர் சாக்கியர்
நிச்சமலர் தூற்றநின்ற பெருமானை
நச்சுமிடற் றானைநல்லூர்ப் பெருமானை
எச்சுமடி யார்கட்கில்லை யிடர்தானே. 10

*பிச்சக்குடை நீழல் சமணர், சாக்கியர்,*
*நிச்சம் அலர் தூற்ற நின்ற பெருமானை,*
*நச்சுமிடற்றானை, நல்லூர்ப் பெருமானை,*
*எச்சும் அடியார்கட்கு இல்லை, இடர்தானே.*

piccakkuTai nIzal camaNar, cAkkiyar,
niccam alar tURRa nin2Ra perumAn2ai,
naccumiTaRRAn2ai, nallUrp perumAn2ai,
eccum aTiyArkaTku illai, iTartAn2E.

**பொருள்:** சமணர்கள் மயில் இறகுகளால் ஆன குடை நிழலில் திரிபவர்கள். புத்தர்களால் நாள்தோறும் பழி தூற்றுமாறு நின்ற பெருமான் இவர். நஞ்சு பொருந்திய கண்டத்தை உடைய திருநல்லூர் சிவபெருமானைப் புகழும் அடியவர்களுக்கு இடரில்லை.

**குறிப்புரை:** அமணரும் புத்தரும் அலர் தூற்ற நின்ற பெருமானைப் புகழும் அடியார்கட்கு இடர் இல்லை என்கின்றது. பிச்சகுடை – மயிற் பீலியாலாகிய குடை. நிச்சம் – நாடோறும். அலர் – பழிச் சொல். நச்சு மிடற்றானை – விஷம் பொருந்திய கழுத்தை உடையவனை. எச்சும் – ஏச்சும். ஏத்தும் என்பதன் மரூஉ.

The Samanars and Buddhists roam about carrying an umbrella made up of peacock's feather. They daily censure and slander Lord Civan who never minds their

abuse. Lord Civan positioned the venom of the ocean in His throat. Devotees who adore this Lord Civan of Thiru-nalloor remain unaffected by any distress.

தண்ணம் புனற்காழி ஞானசம்பந்தன்
நண்ணும் புனல்வேலி நல்லூர்ப் பெருமானை
வண்ணம் புனைமாலை வைகலேத்துவார்
விண்ணுந் நிலனுமாய் விளங்கும் புகழாரே. 11

*தண்ணம் புனல் காழி ஞானசம்பந்தன்,*
*நண்ணும் புனல் வேலி நல்லூர்ப் பெருமானை,*
*வண்ணம் புனை மாலை வைகல் ஏத்துவார்*
*விண்ணும் நிலனும்ஆய் விளங்கும் புகழாரே.*

taNNampun2al kAzi njAn2acampantan2,
naNNum pun2al vEli nallUrp perumAn2ai,
vaNNam pun2ai mAlai vaikal EttuvAr
viNNum nilan2um Ay viLagkum pukazArE.

**பொருள்:** குளிர்ந்த நீரால் சூழப்பட்ட சீகாழிப் பதியில் தோன்றியவர் ஞானசம்பந்தன் ஆவார். இவர், பொருந்திய நீரை வேலியாக உடைய திருநல்லூரில் விளங்கும் சிவபெருமானின் இயல்புகளைப் புனைந்து மாலையாகப் பாடினார். இத்திருப்பதிகத்தை நாள்தோறும் ஏத்தித் துதிப்பவர், விண்ணும் மண்ணும் விளங்கும் புகழாளர் ஆவர்.

**குறிப்புரை:** ஞானசம்பந்தன், நல்லூர்ப் பெருமானைச் சொன்ன புகழ்மாலையை நாளும் ஏத்துவார் விண்ணும் நிலனுமாக விளங்கும் புகழார் என்கின்றது. தண்ணம்புனல்: அம் சாரியை. புனல் வேலி – நீரை வேலியாகவுடைய. வண்ணம்புனை மாலை – இறையியல்புகளை எடுத்துச் சேர்த்துச் சொன்ன மாலை. வைகல் – நாடோறும்.

Gnaanasambandan of Kaazhi rich in cool watersheds has sung on the God of Thiru-nalloor, which is fenced with many water ways. The renown of those who hail the Lord God of Thiru-nalloor daily with his splenderous garland of verses will be hailed both by the celestial and the earth born humans.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*86ஆம் பதிகம் முற்றிற்று*
End of 86th Hymn

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

## 87. திருவடுகூர்

### திருத்தல வரலாறு:

திருவடுகூர் ஒரு நடு நாட்டுத் தலம். விழுப்புரம் – பாண்டிச்சேரி (கோலியனூர் – கண்டமங்கலம் வழி) பேருந்து வழியில் உள்ளது. வடுகனாகிய வைரவர் பூசித்துப் பேறு பெற்றதாதலின் இப்பெயர் எய்தியது. தற்காலம் ஆண்டார் கோயில் என வழங்கப்படுகிறது. இறைவன் பெயர் வடுகூர்நாதர். இறைவியின் பெயர் வடுவகிர்க்கண்ணியம்மை. தீர்த்தம் பெண்ணை நதி.

### பதிக வரலாறு:

சண்பை வேந்தர் திருப்பாதிரிப்புலியூரை வணங்கிப் பதிகம்பாடித் திருவடுகூரை அடைந்தார். இறைவனை வணங்கி 'கடுகூர் எரிமாலை' என்னும் இப்பதிகத்தை அருளிச் செய்தார்.

## 87. THIRU-VADUKOOR

### HISTORY OF THE PLACE

This sacred place is in Nadu Naadu and is in the Vizhuppuram - Pondichcheri via Koliyanoor - Kandamangkalam bus route. As it is the temple where Vairavar, who is a Vadugan, offered worship here, it got the name Thiruvadugoor. Nowadays it is called Aandaar Koyil.

The Lord's name is Vadugoornaathar and the Goddess's is Vaduvakirkkanni Ammai. The sacred ford is river Pennai.

### INTRODUCTION TO THE HYMN

Having adored Civa in the shrine of Thiruppaatiripuliyoor, he arrived in Thiruvadukoor. Here he hailed the Lord-God with the following hymn:

திருச்சிற்றம்பலம்

THIRU-CH-CHITRAMBALAM

# 87. திருவடுகூர்

# 87. THIRU-VADUKOOR

பண் : குறிஞ்சி

ராகம் : குறிஞ்சி

*Pann: Kurinji*

*Raagam: Kurinji*

சுடுகூ டெரிமாலையணி வர்சுடர் வேலர்
கொடுகூர் மழுவாளொன் றுடையார் விடையூர்வர்
கடுகூர் பசிகாமங்க வலைபிணி யில்லார்
வடுகூர் புனல்சூழ்ந்த வடுகூரடிகளே. 1

சுடு கூர் எரிமாலை அணிவர்; சுடர் வேலர்;
கொடுகு ஊர் மழுவாள் ஒன்று உடையார்; விடை ஊர்வர்;
கடுகு ஊர் பசி, காமம், கவலை, பிணி, இல்லார் -
வடு கூர் புனல் சூழ்ந்த வடுகூர் அடிகளே.

cuTu kUr erimAlai aNivar; cuTar vElar;
koTuku Ur mazuvAL on2Ru uTaiyAr; viTai Urvar;
kaTuku Ur paci, kAmam, kavalai, piNi, illAr--
vaTu kUr pun2al cUznta vaTukUr aTikaLE.

**பொருள்:** சிவபெருமானார் சுடுகின்ற தன்மையுள்ள தீபமாலையை அணிந்திருப்பவர். ஒளி பொருந்திய சூலத்தை வைத்திருப்பவர். கொடியதும் கூர்மையானதுமான மழுவாயுதம் ஒன்றை கையில் உடையவர். விடைமேல் ஊர்ந்து வருபவர். மிக்க பசி, காமம், கவலை, பிணி இவைகள் இல்லாதவர். இப்பெருமானார் நீர்வளம் மிக்க வடுகூரில் எழுந்தருளியிருக்கும் இறைவர் ஆவார்.

**குறிப்புரை:** தீயணிவர், சுடர்வேலர். மழுவுடையர், பசி, காமம், கவலை, பிணி, முதலியன இல்லாதவர் வடுகூரடிகள் என்கின்றது. கூர் எரிமாலை – மிக்க தீவரிசையை. வேல் – சூலம். கொடுகுஊர் – கொடுமை மிக்க ஊர். கடுகுகூர் – விரைந்து ஊரும்.

Lord Civan of Vadukoor wears a flaming garland of fire; He wields a radiant spear; He holds a fierce and bright battle axe. He rides on a bull. Lo, he is ever free from violent and aggressive appetite, lust, worry and malady. He is the noble one of Vadukoor having plenty of water resources.

**Note:** The garland of Civa is called Dipa-maalai. He alone is the light of the cosmos. Civa is Kothila Niraivu (the blemishless fullness). He knows no hunger. Civa did away with Kaama (Manmathan). Lust is alien to Him. He is the Queller of worry. He is Vaidhyanaathan.

பாலுந் நறுநெய் யுந்தயிரும் பயின்றாடி
ஏலுஞ் சுடுநீறுமென் புமொளிமல்கக்
கோலம் பொழிற்சோ லைக்கூடி மடஅன்னம்
ஆலும் வடுகூரிலா டும்மடிகளே. 2

பாலும் நறுநெய்யும் தயிரும் பயின்று ஆடி,
ஏலும் சுடுநீறும் என்பும் ஒளி மல்க,
கோலம் பொழில்-சோலைக் கூடி மடஅன்னம்
ஆலும் வடுகூரில் ஆடும்(ம்), அடிகளே.

pAlum naRu neyyum tayirum payin2Ru ATi,
Elum cuTu nIRum en2pum oLi malka,
kOlam pozil-cOlaik kUTi maTa an2n2am
Alum vaTukUril ATum(m), aTikaLE.

**பொருள்:** சிவபெருமானார் பாலையும், நறுமணமுள்ள நெய்யையும், தயிரையும் விரும்பி ஆடுபவர். பொருந்துவதான திருவெண்ணீறு, என்புமாலை ஆகியவற்றை ஒளி மல்க தன் மார்பில் அணிந்துள்ளவர். இப்பெருமானார் அழகிய பொழில்களிலும் சோலைகளிலும் கூடியிருக்கும் பெண் அன்னங்கள் ஒலித்து ஆர்ப்பரிக்கின்ற வடுகூரில் மகிழ்வோடு திருநடனம் ஆடுகின்றார்.

**குறிப்புரை:** பால், நெய், தயிர் இவற்றை ஆடி, நீறும் எலும்பும் ஒளி நிரம்பச்சூடி, நடஞ்செய்வர் இவர் என்கின்றது. பயின்று – பலகாலும் விரும்பி. ஏலும் – பொருந்தும். கோலம் – அழகு. ஆலும் – ஒலிக்கும்.

Lord Civan of Thiru-vadukoor loves to take His bath in milk, sweet smelling ghee, and curd. He smears His body with holy ashes and wears a garland of bones. With this majestic appearance He dances happily in Thiru-vadukoor where in the beautiful gardens and groves, swans gather and play with each other.

சூடுமிளந் திங்கட்சுடர் பொற்சடை தன்மேல்
ஓடுங்களி யானையுரிபோர்த் துமையஞ்ச
ஏடுமலர் மோந்தங்கெழி லார்வரிவண்டு
பாடும் வடுகூரி லாடும்மடிகளே. 3

சூடும், இளந்திங்கள் சுடர்பொன்சடைதன்மேல் -
ஓடும் களியானை உரி போர்த்து, உமை அஞ்ச,
ஏடு மலர் மோந்து அங்கு எழில் ஆர் வரிவண்டு
பாடும் வடுகூரில் ஆடும்(ம்) அடிகளே.

cUTum, iLantigkaL cuTar pon2caTai tan2mEl--
OTum kaLiyAn2ai uri pOrttu, umai anjca,
ETu malar mOntu agku ezil Ar varivaNTu
pATum vaTu kUril ATum(m) aTikaLE.

**பொருள்:** சிவபெருமானார், ஒளி பொருந்திய பொன் போன்ற இளந்திங்களைச் சூடியிருப்பவர். மதம் கொண்டு தன்னிடம் ஓடி வந்த யானையைக் கண்டு, உமையம்மை அஞ்ச, அதனைக் கொன்று, அதன் தோலைப் போர்த்தியிருப்பவர். அழகு பொருந்திய வரிவண்டுகள் இதழ்களோடு கூடிய மலர்களை முகர்ந்து தேனுண்டு பாடுகின்ற வடுகூரில் இப்பெருமானார் திருநடனம் ஆடுகின்றார்.

**குறிப்புரை:** சடையின்மேல் இளம்பிறையைச் சூடுவர். உமையாள் அஞ்ச யானையை உரித்துப் போர்த்துக் கொண்டு ஆடுவர் வடுகூர்நாதர் என்கின்றது. மலர் ஏடு – பூவிதழ் மோந்து – முகர்ந்து, எழிலார் – அழகுமிக்க.

Lord Civan wears the young crescent moon in His dangling gold-like matted hair. Umaa Devi got scared at the sight of an exhilarated elephant approaching her; Civan faced the elephant, killed it and covered His body with it's skin. He dances in Thiru-vadukoor where comely and striped bees smell the petals of flowers and then suck the honey and go on buzzing, which resembles a singing spree.

துவரும் புரிசையுந்து தைந்தமணிமாடம்
கவரவெரி யோட்டிக்கடிய மதிலெய்தார்
கவருமணி கொல்லைக் கடியமுலை நல்லார்
பவரும் வடுகூரி லாடும்மடிகளே. 4

துவரும் புரிசையும் துதைந்த மணி மாடம்
கவர எரியோட்டி, கடிய மதில் எய்தார் -
கவரும் அணி கொல்லைக் கடிய முலை நல்லார்
பவரும் வடுகூரில் ஆடும்(ம்) அடிகளே.

tuvarum puricaiyum tutainta maNi mATam
kavara eriyUTTi, kaTiya matil eytAr--
kavarum aNi kollaik kaTiya mulai nallAr
pavarum vaTukUril ATum(m) aTikaLE.

**பொருள்:** செந்நிறமுடைய மதில்கள் நிறைந்த அழகிய மாடங்களைக் கொண்டதும் காவலோடு கூடியதுமான முப்புரங்கள் அழியுமாறு, தீயுடன் சேர்ந்த அம்பை எய்தவர் சிவபெருமானார். திருவடுகூரில் மிக அழகான பெண்கள் தங்கள் தனங்களை நன்றாக மூடிக் கொண்டு கூட்டம் கூட்டமாக முல்லைக் காட்டுப்பக்கம் சென்று நவரத்தினங்களை பொறுக்கி எடுத்து வந்து மகிழ்வெய்தி வாழ்கிறார்கள். இந்தத் திருவடுகூரில் சிவபெருமானார் நடனம் புரிகின்றார்.

**குறிப்புரை:** திரிபுரம் எரியச் செய்தார் வடுகூரிலாடும் அடிகள் என்கின்றது. துவரும் புரிசையும் துதைந்த மணிமாடம் – காவியூட்டி மதில்கள் செறிந்த அழகிய மாடங்கள். ஓட்டி – பரப்பி. கடிய மதில் – காவலோடுகூடிய முப்புரங்கள், மணிகவரும் கொல்லை கடிய முலை நல்லார் பவரும் – இரத்தினங்களைக் கவரும் முல்லை நிலத்தில் உள்ள காவல் பொருந்திய முலையோடு கூடிய பெண்களாகிய கொடிகளோடு கூடிய.

Lord Civan discharged an arrow at the well guarded, beautiful citadels and destroyed the red walls and the mansion by fire. This Lord Civan is enshrined in Thiru-vadukoor. Here He dances. In this Thiru-vadukoor liana-like damsels wear protective coverings over their breasts, foregather in the mullai region (forest area) to gather gems.

துணியா ருடையாடை துன்னியரை தன்மேல்
தணியா அழல்நாகந் தரியாவகை வைத்தார்
பணியா ரடியார்கள்பல ரும்பயின்றேத்த
அணியார் வடுகூரி லாடும்மடிகளே. 5

துணி ஆர் உடை ஆடை துன்னி, அரைதன்மேல்-
தணியா அழல்நாகம் தரியா வகை வைத்தார் -
பணி ஆர் அடியார்கள் பலரும் பயின்று ஏத்த,
அணி ஆர் வடுகூரில் ஆடும்(ம்) அடிகளே.

tuNi Ar uTai ATai tun2n2i, araitan2mEl--
taNiyA azal nAkam tariyA vakai vaittAr--
paNi Ar aTiyArkaL palarum payin2Ru Etta,
aNi Ar vaTukUril ATum(m) aTikaLE.

**பொருள்:** சிவபெருமானார், கிழிக்கப் பெற்ற கோவண ஆடையைத் தரித்திருப்பவர். அதன்மேல் தீப்போன்ற, கோபத்தோடு கூடிய நாகத்தை அழகாகத் தரித்திருப்பவர். இப்பெருமானார், அடியவர் பலரும் பணிந்து துதிக்க, அழகிய வடுகூரில் திருநடனம் ஆடி அருள்புரிகின்றார்.

**குறிப்புரை:** கோவணமுடுத்து அதன்மேல் அழகாக நாகம் வைத்தவர், அடியார்கள் பலரும் வணங்கும் வடுகூரில் ஆடும் அடிகள் என்கின்றது. துணி – கிழிக்கப் பெற்ற கோவணம். துன்னி – பொருந்தி. தணியா அழல் நாகம் – தணியாத கோபத்தோடு கூடிய பாம்பு. பணிஆர் அடியார்கள் – பணிதலைப் பொருந்திய அடியார்கள்.

Lord Civan wears a fore-lap cloth round His loins and fixes it by a good looking fiery serpent of unabated wrath. He dances at the beautiful Thiru-vadukoor where devotees in their strength poised in service, hail Him with practiced perfection.

தளருங் கொடியன்னாள் தன்னோடுடனாகிக்
கிளருமர வார்த்துக்கிளரு முடிமேலோர்
வளரும் பிறைசூடிவரி வண்டிசைபாட
ஒளிரும் வடுகூரி லாடும்மடிகளே. 6

தளரும் கொடி அன்னாள் தன்னோடு உடன்ஆகி,
கிளரும் அரவு ஆர்த்து, கிளரும் முடிமேல் ஓர்
வளரும் பிறை சூடி, வரிவண்டு இசை பாட
ஒளிரும் வடுகூரில் ஆடும் அடிகளே.

taLarum koTi an2n2AL tan2n2OTu uTan2 Aki,
kiLarum aravu Arttu, kiLarum muTimEl Or
vaLarum piRai cUTi, varivaNTu icai pATa
oLirum vaTukUril ATum(m), aTikaLE.

**பொருள்:** சிவபெருமானார், சுமை பொறுக்காது தள்ளாடும் கொடியை ஒத்த உமையம்மையோடு கூடியிருப்பவர். விளங்கும் பாம்பை இடையில் கட்டிக் கொண்டிருப்பவர். விளங்கும் முடிமேல் வளரும் பிறைமதியைச் சூடியிருப்பவர். அடிகளாகிய வரிகள் பொருந்திய வண்டுகள் இசை பாடப் பலராலும் நன்கறியப்பெற்ற வடுகூரில் இப்பெருமானார் திருநடனம் ஆடி அருள்புரிகின்றார்.

**குறிப்புரை:** உமாதேவியோடு உடனாகி, அரவு பிறை இவற்றை அணிந்து வடுகூர் அடிகள் ஆடுவர் என்கின்றது. தளரும் கொடி அன்னாள் – சுமை பொறுக்காது தள்ளாடும் கொடியை ஒத்த உமாதேவி. அரவு – பாம்பு. கிளரும் – விளங்கும். ஒளிரும் – பிரகாசிக்கும். (c.f. Thiurukkural – அனிச்சப் பூக்கால்களையா).

Lord Civan is enshrined in Thiru-vadukoor along with Umaa Devi who is as tender as a creeping vine, which wobbles due to the heavy weight of it's own parts. He has tied a bright serpent in His waist. In His shining hair He holds a waxing crescent moon. This noble Lord Civan who enacts the dance is entempled in splendorous Thiru-vadukoor where striped honeybees buzz around as if in a choir.

நெடியர் சிறிதாய நிரம்பா மதிசூடும்
முடியர் விடையூர்வர் கொடியர்மொழி கொள்ளார்
கடிய தொழிற்காலன் மடியவுதை கொண்ட
அடியர் வடுகூரி லாடும் அடிகளே. 7

நெடியர்; சிறிதுஆய நிரம்பா மதி சூடும்
முடியர்; விடை ஊர்வர்; கொடியர் மொழி கொள்ளார்;
கடிய தொழில் காலன் மடிய, உதை கொண்ட
அடியர் - வடுகூரில் ஆடும்(ம்) அடிகளே.

neTiyar; ciRitu Aya nirampA mati cUTum
muTiyar; viTai Urvar; koTiyar mozi koLLAr;
kaTiya tozil kAlan2 maTiya, utai koNTa
aTiyar--vaTukUril ATum(m) aTikaLE.



திருப்பாற்றுறை (திருப்பாலத்துறை) – ஸ்ரீ ஆதிமூலேஸ்வரர் – சோழநாட்டு வடகரைத் தலம்
**Sri Tirumoola Naathar Temple - Tiruppaatrurai - Tamil Nadu.**



திருவேற்காடு – வேற்காட்டுநாதர் – தொண்டை நாட்டுத் தலம்
**Verkattisar Temple - Tiruverkadu, Tamil Nadu.**



திருக்கரவீரம் (கரையபுரம்) – கரவீரேஸ்வரர் – சோழநாட்டு தென்கரைத் தலம்
**Karavira Nathar Temple - Karaviram (Karaiyapuam), Tamil Nadu.**



திருத்தூங்கானைமாடம் (பெண்ணாகடம்) – நடுநாட்டுத்தலம்
**Sudarkkozhundu Eesar Temple - Pennakatam, Tamil Nadu.**

**பொருள்:** சிவபெருமானார் பேருருவம் கொள்பவர். சிறிதான கலை நிரம்பாத பிறைமதியைச் சூடும் முடியை உடையவர். விடைமேல் ஊர்ந்து வருபவர். கொடியவர் மொழிகளை ஏற்றுக் கொள்ளாதவர். கொல்லுந் தொழில் புரியும் எமன் மடியுமாறு உதைத்தருளிய திருவடியினர். இப்பெருமானார் வடுகூரில் திருநடனம் ஆடி அருள்புரிகின்றார்.

**குறிப்புரை:** நெடியர், சிறுமதிசூடும் முடியர், விடையூர்வர், கொடியர் மொழி கொள்ளாதவர், காலனை உதைத்த அடியவர் வடுகூரில் ஆடும் அடிகள் என்கின்றது. நிரம்பா மதி – இளம்பிறை. கடிய தொழில் – கொடுந்தொழில்.

Lord Civan who dances in Thiru-vadukoor has a gigantic figure. He supports in His hair the young small moon that has not waxed full; He rides on His bull. He ignores the talk of cruel folks. It is He who once kicked down the killer Kaalan (*காலன், இயமன்*), messenger of death, verily to death by His holy feet.

பிறையு நெடுநீரும் பிரியா முடியினார்
மறையும் பலபாடி மயானத் துறைவாரும்
பறையுமஅ திர்குழலும் போலப்பல வண்டாங்
கறையும் வடுகூரிலா டும்மடிகளே. 8

*பிறையும் நெடுநீரும் பிரியா முடியினார்,*
*மறையும் பல பாடி மயானத்து உறைவாரும் -*
*பறையும் அதிர் குழலும் போலப் பலவண்டு ஆங்கு*
*அறையும் வடுகூரில் ஆடும்(ம்) அடிகளே.*

piRaiyum neTunIrum piriyA muTiyin2Ar,
maRaiyum pala pATi mayAn2attu uRaivArum--
paRaiyum atir kuzalum pOlap palavaNTu Agku
aRaiyum vaTukUril ATum(m) aTikaLE.

**பொருள்:** சிவபெருமானார் இளம் பிறையையும் பெருகி வரும் கங்கை நீரையும் பிரியாத திருமுடியை உடையவர். வேதங்களில் உள்ள சந்தங்கள் பலவற்றையும் பாடிக் கொண்டு மயானத்தில் உறைபவர். இப்பெருமானார், அதிர்கின்ற பறையும், வேய்ங்குழலும் போலப் பல வண்டுகள் ஒலிக்கும் சோலைகளை உடைய வடுகூரில் திருநடனம் ஆடி அருள்புரிகின்றார்.

**குறிப்புரை:** கங்கையும் பிறையும் பிரியா முடியாரும், வேதம் பல பாடி மயானத்துறைவாரும் வடுகூரில் ஆடும் அடிகள் என்கின்றது. நெடுநீர் – கங்கை. பறையும் குழலும் போலப் பல வண்டு ஆங்கு அறையும் எனப் பிரிக்க.

Lord Civa's holy head is ever holding the young crescent moon and the flooding river Ganges. He sings many of the Vedic prosody (*வேதங்களில் உள்ள சந்தங்கள்*) and abides in the cremation ground. This noble dancer Civan is entempled in Thiru-vadukoor. In the gardens of this town innumerable bees are buzzing. This buzzing noise is similar to the reverberating sounds of drums and flutes.

சந்தம் மலர்வேய்ந் தசடையின் னிடைவிம்மு
கந்தம் மிகுதிங்கட் சிந்துகதிர் மாலை
வந்துநயந் தெம்மைநன்று மருள்செய்வார்
அந்தண் வடுகூரிலா டும்மடிகளே. 9

*சந்தம் மலர் வேய்ந்த சடையின்(ன்) இடை விம்மு*
*கந்தம் மிகு திங்கள் சிந்து கதிர்மாலை*
*வந்து நயந்து எம்மை நன்றும் மருள் செய்வார் -*
*அம் தண் வடுகூரில் ஆடும் அடிகளே.*

cantam malar vEynta caTaiyin2(n2) iTai vimmu
kantam miku tigkaL cintu katirmAlai
vantu nayantu, emmai nan2Rum maruL ceyvAr--
am taN vaTu kUril ATum(m) aTikaLE.

***பொருள்:*** கண்ணைக் கவரும் மலர்கள் வேய்ந்த சடையை உடைய சிவபெருமானார், அதன்கண் பொங்கி எழும் மணம் மிகுந்த பிறைமதி கிரணங்களை வெளியிடும் மாலை நேரத்தில். அழகும் குளிர்ச்சியும் பொருந்திய வடுகூரில் திருநடனம் புரிகின்றார். அந்நேரத்தில் இப்பெருமானார் இனியவை பலகூறி விரும்பி வந்து எமக்கு நன்றாக அருள்புரிவார்.

**குறிப்புரை:** மலர் புனைந்த சடைக்காட்டில் இருப்பதால் மணம் பெற்ற மதி சிந்துகின்ற கதிர்களோடு வந்து நயந்து எமக்கு நன்மையை அருளுவர் வடுகூரில் அழகர் என்கின்றது. சந்தம் – அழகு. கதிர்மாலை – கிரணவரிசை. நயந்து – இனியன பலகூறி, நன்றும் அருள் செய்வார் – நன்றாக அருளுவர். நன்றும் மருள் செய்வார் – நன்றாக மயக்குவர் என்றுமாம்.

The moon resting in Lord Civan's matted hair absorbs the fragrance of the flowers therein and spreads its fragrant rays in the evening hours all over the world. In such an evening hour Lord Civan comes over to us in love and showers grace on us in all goodness. This Lord Civan dances in the cool and beautiful city Thiru-vadukoor.

திருமா லடிவீழத்திசை நான்முகனாய
பெருமா னுணர்கில்லாப் பெருமான் நெடுமுடிசேர்
செருமா ல்விடையூருஞ் செம்மான் திசைவில்லா
அருமா வடுகூரி லாடும்மடிகளே. 10

*திருமால் அடி வீழ, திசைநான்முகன் ஆய*
*பெருமான் உணர்கில்லாப் பெருமான், நெடு முடி சேர்*
*செரு மால்விடை ஊரும் செம்மான் - திசைவு இல்லா*
*அரு மா வடுகூரில் ஆடும் அடிகளே.*

tirumAl aTi vIza, ticai nAn2mukan2 Aya
perumAn2 uNarkillAp perumAn2, neTu muTi cEr
ceru mAl viTai Urum cemmAn2--ticaivu illA
aru mA vaTukUril ATum(m) aTikaLE.

**பொருள்:** திருமால் சிவபெருமானாருடைய அடிகளைத் தேடிப் பூமியைத் தோண்டிச் சென்றும் தோற்றவர். திசைக்கு ஒரு முகமாக நான்கு திருமுடிகளைக் கொண்ட நான்முகனும் சிவனது முடியினை காணாது திகைத்தவர். போர் செய்யத் தக்க விடைமீது எழுந்தருளி வரும் சிவந்த நிறத்தினர். எல்லாத் திசைகளிலும் ஒளியை வீசுகின்ற அரிய பெரிய வடுகூரில் இப்பெருமானார் திருநடனம் ஆடி அருள்புரிகின்றார்.

**குறிப்புரை:** அயனும் மாலும் அறியவொண்ணாப் பெருமான் மாலாகிய இடபமூரும் செம்மான் வடுகூர் அடிகள் என்கின்றது. செருமால் – போர் வல்லமை கொண்ட பெரிய திருமாலாகிய என்றுமாம். திசைவில்லா அருமா வடுகூரில் – திசைகளில் எல்லாம் ஒளியைச் செய்கின்ற அரிய பெரிய வடுகூரில்.

Lord Civan could not be beheld by Thirumaal who burrowed the earth for long in search of His holy feet; while Brahma who has four faces facing the four directions, went in search of Civan's head in vain. This Lord Civan has a very large head which could not be seen by any one and rides on the bull, which is none other than Thirumaal himself (Thirumaal once appeared before Lord Civan in the form of a bull and requested Him to use him as His bull vehicle wherever He goes for fighting / war, to

which Civan agreed). Lord Civan is entempled in, and dances in the rare and great Thiru-vadukoor whose glory and fame pervades all the eight directions.

**Note:** This is one of the very few hymns where there is no reference to Raavana, the Samanars and the Buddhists.

படிநோன் பவையாவர் பழியில் புகழான
கடிநாணி கழ்சோலை கமழும் வடுகூரைப்
படியான சிந்தைமொழி யார்சம்பந்தன்
அடிஞா னம்வல் லாரடிசேர் வார்களே. 11

படி நோன்புஅவை ஆவர், பழி இல் புகழ்ஆன,
கடிநாள் நிகழ் சோலை கமழும் வடுகூரை,
படிஆன சிந்தை மொழி ஆர் சம்பந்தன்
அடிஞானம் வல்லார் அடி சேர்வார்களே.

paTi nOn2pu avai Avar, pazi il pukaz An2a,
kaTinAL nikaz cOlai kamazum vaTukUrai,
paTi An2a cintai mozi Ar campantan2
aTinjAn2am vallAr aTi cErvArkaLE.

**பொருள்:** சிவபெருமானார், இவ்வுலகில் கூறப்படும் பற்பல நோன்புகளுக்கு உரியவர். குற்றமற்ற புகழோடும், மணம் கமழும் சோலைகளால் மணம் பெறும் வடுகூரில் எழுந்தருளி இருப்பவர். இப்பெருமானாரை அமைதியான மனமுடைய ஞானசம்பந்தன் போற்றிப் பாடினார். இப்பதிகத்தை ஓதும் சிவஞானம் உடைய சான்றோர்கள் முத்தியாகிய சாயுச்சிய முத்தியை அடைவார்கள்.

**குறிப்புரை:** இவ்வுலகத்துள்ள நோன்பெல்லாம் ஆய இறைவன் எழுந்தருளியுள்ள வடுகூரைப் பாடிய திருவடிஞானத்தால் வந்த இத்திருப்பாடல்களை வல்லார், திருவடி சேர்மூர்த்தியை எய்துவார்கள். படி – பூமி. படியான சிந்தை – படிதலான மனம். அடிஞானம் – சிவஞானம்; அடிசேர்வார் – அடிசேரும் முத்தியாகிய சாயுச்சிய முத்தியை அடைவார்கள்.

Lord Civan is the goal of all penance of the world; He is enshrined in the glorious and flawless Thiru-vadukoor made fragrant by its incense breathing gardens. Those devotees who are well versed in the hymns of Sambandan, whose mind is immersed in the grace of the hallowed feet, will gain the salvific feet of Civan, through divine gnosis.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

87ஆம் பதிகம் முற்றிற்று
End of 87th Hymn

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# 88. திருஆப்பனூர்

## திருத்தல வரலாறு:

திருஆப்பனூர் என்ற இத்திருத்தலம் பாண்டிய நாட்டுத் திருத்தலம். மதுரை மாநகரில் வைகை ஆற்றின் வடகரை ஓரமாக, கல்பாலத்தின் அருகில் அமைந்துள்ள ஒரு சிறு பகுதியாகும். மதுரையில் இருந்து பேருந்துகளில் செல்லலாம். தற்பொழுது திருஆப்புடையார் கோயில் என வழங்கப் பெறுகிறது. சோழாந்தகன் என்னும் பாண்டிய மன்னன் பொருட்டுச் சிவபெருமான் ஆப்பினிடத்துத் தோன்றினமையால் இப்பெயர் பெற்றது. நடராசர், சிவகாமி இருவர்களின் உருவம் சிலையிலும் செம்பிலும் உள்ளன. இறைவன் பெயர் ஆப்பனூர்காரணர், ஆப்பனூரீசுரர், திருவாப்புடையார். இறைவி பெயர் அம்பிகையம்மை, குரவங்கமழ் குழலம்மை. தீர்த்தம் இடப தீர்த்தம்.

## பதிக வரலாறு:

திருப்பரங்குன்றம் வணங்கியபின் திருஞானசம்பந்தப் பிள்ளையார் ஆப்பனூரை அணைந்து வணங்கி 'முற்றுஞ் சடைமுடி' என்னும் இப்பதிகத்தை அருளிச் செய்தார்கள்.

# 88. THIRU-AAPPANOOR

## HISTORY OF THE PLACE

This sacred place is in Paandiya Naadu. In Madurai city, on the northern bank of river Vaikai and near the main bridge, this place is a very small one now called Thiru Aappudaiyaar Koyil. The reason for the name is that the Lord appeared from a wedge (aappu) for the sake of the Paandiya king Cholaanthakan.

The Lord is known by the names of Aappaanoor-k-Kaaranar, Aappanooreesurar, and Thiruvaappudaiyaar. The Goddess is known as Ambikaiyammai and Kuravang Kamazh Kuzhalammai. The sacred ford is Idaba Theerththam.

Images of both Lord Nataraajar and Goddess Sivakaami can be seen in both stone and bronze.

**INTRODUCTION TO THE HYMN**

From Thiru-p-paarang-kundram our saint arrived at Thiru-aappanoor where he sang the following hymn:

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 88. திருஆப்பனூர் 88. THIRU-AAPPANOOR

பண் : குறிஞ்சி
ராகம் : குறிஞ்சி

*Pann: Kurinji*
*Raagam: Kurinji*

முற்றுஞ் சடைமுடி மேல்முதிரா இளம்பிறையன்
ஒற்றைப் படவரவ மதுகொண் டரைக்கணிந்தான்
செற்றமில் சீரானைத்திரு வாப்பனூரானைப்
பற்றுமன முடையார்வினை பற்றறுப்பாரே. 1

*முற்றும் சடைமுடிமேல் முதிரா இளம்பிறையன்,*
*ஒற்றைப் பட அரவம் அது கொண்டு அரைக்கு அணிந்தான்,*
*செற்றம் இல் சீரானைத் திரு ஆப்பனூரானைப்*
*பற்றும் மனம் உடையார் வினை பற்றுஅறுப்பாரே.*

muRRum caTai muTi mEl mutirA iLampiRaiyan2,
oRRaip paTa aravam atu koNTu araikku aNintAn2,
ceRRam il cIrAn2ait tiru Appan2UrAn2aip
paRRum man2am uTaiyAr vin2ai paRRu aRuppArE.

**பொருள்:** சிவபெருமான் தமது முடியைச் சூழ்ந்துள்ள சடைமுடியின்மேல் வளர்ச்சி பெறாத இளம் பிறையைச் சூடியிருப்பவர். ஒரு தலைப் படத்தோடு கூடிய பாம்பை இடையில் கட்டியிருப்பவர். சிறிதும் வெறுத்தற்கு இயலாத புகழானவர். திருஆப்பனூரில் எழுந்தருளியுள்ள இப்பெருமானை விரும்பிப் பற்றுகின்ற உள்ளம் உடையவர்கள், தங்களின் வினைத் தொடர்ச்சி நீங்கப் பெறுவார்கள்.

*குறிப்புரை:* இப்பதிகம் ஆப்பனூரானைப் பணிவார், பரவுவார், புகழ்வார், வினைப்பற்றறுப்பார் என்கின்றது. 'முற்றும் சடை முதிரா இளம்பிறை' என்பதில் பொருள்முரண் உள்ளது. செற்றம் – கோபம்.

Lord Civan in Thiru-aappanoor supports the ever young crescent moon around His matted hair. He fastens a single hooded cobra in His waist. His is the glory that is unassailable. Those who hail heartily this Civan will get rid of their bad karma.

குரவங் கமழ்குழலாள் குடிகொண்டு நின்றுவிண்ணோர்
விரவுந் திருமேனி விளங்கும் வளையெயிற்றின்
அரவ மணிந்தானை யணியாப்பனூரானைப்
பரவுமன முடையார்வினைப் பற்றறுப்பாரே. 2

குரவம் கமழ் குழலாள் குடிகொண்டு நின்று, விண்ணோர்
விரவும் திருமேனி, விளங்கும் வளைஎயிற்றின்
அரவம் அணிந்தானை, அணி ஆப்பனூரானைப்
பரவும் மனம் உடையார் வினைப் பற்றுஅறுப்பாரே.

kuravam kamaz kuzalAL kuTi koNTu nin2Ru, viNNOr
viravum tirumEn2i, viLagkum vaLai eyiRRin2
aravam aNintAn2ai, aNi Appan2UrAn2aip
paravum man2am uTaiyAr vin2ai paRRu aRuppArE.

**பொருள்:** குராமலர் கமழும் கூந்தலை உடைய உமையம்மை விளங்கும் திருமேனியோடு இருக்கும் சிவபெருமானைத் தேவர்கள் கூடி வணங்குகின்றார்கள். தமது திருமேனியில் விளங்கும் வளை, பன்றியின் பல், பாம்பு ஆகியவற்றை அணிந்திருப்பவர். அழகிய திருஆப்பனூரில் எழுந்தருளியுள்ள இப்பெருமானைப் போற்றுகின்ற உள்ளம் உடையவர்கள். தங்களின் வினைத் தொடர்ச்சி நீங்கப் பெறுவர்.

**குறிப்புரை:** குரவம் கமழ் குழலாள் – குராமலர் மணக்கும் கூந்தலை உடைய உமாதேவி, விரவுதல் – கலந்து பணியும். வளை எயிறு – வளைந்த விஷப்பல். பரவுதல் – தோத்திரித்தல்.

Lord Civan is entempled in Thiru-aappanoor along with His consort Umaa Devi whose locks are fragrant with bottle-flower (*குராமலர்*) so as to enable the celestial gods to come and adore Him from here. Those who offer worship to this Lord Civan will get rid from the continuity of their bad karma.

முருகுவிரி குழலார்மனங் கொளநங்கனைமுன்
பெரிதுமுனிந் துகந்தான் பெருமான் பெருங்காட்டின்
அரவமணிந் தானையணி யாப்பனூரானைப்
பரவுமன முடையார்வினைப் பற்றறுப்பாரே. 3

முருகு விரி குழலார் மனம் கொள் அநங்கனை முன்
பெரிதும் முனிந்து உகந்தான், பெருமான், பெருங்காட்டின்
அரவம் அணிந்தானை, அணி ஆப்பனூரானைப்
பரவும் மனம் உடையார் வினைப் பற்றுஅறுப்பாரே.

muruku viri kuzalAr man2am koL anagkan2ai mun2
peritum mun2intu ukantAn2, perumAn2, perugkATTin2
aravam aNintAn2ai, aNi Appan2UrAn2aip
paravum man2am uTaiyAr vin2ai paRRu aRuppArE.

**பொருள்:** சிவபெருமான், மணம் கமழும் கூந்தலை உடைய மகளிரால் நினைக்கப் பெறும் காமனை, முற்காலத்தில் பெரிதும் சினந்து எரித்தவர். பின்பு அவனுக்கு வாழ்வு தந்த பெருமானும் இவரே. பெரிய காட்டகத்தே வாழும் அரவத்தை அணிந்தவர். அழகிய திருஆப்பனூரில் எழுந்தருளியுள்ள இப்பெருமானைப் போற்றும் உள்ளம் உடையவர்கள் தங்களின் வினைத் தொடர்ச்சி நீங்கப் பெறுவர்.

**குறிப்புரை:** முருகு விரி குழலார் – மணம் வீசும் கூந்தலை உடைய பெண்கள். அநங்கன் – மன்மதன்.

Young girls with fragrant locks often think about Manmathan, the god of love (அநங்கன் - மன்மதன்); Lord Civan once got enraged with him for his misdeed and burnt him to death; however, at the prayerful request of his wife Rathi, Civan gave back his life but to be visible only to his wife Rathi. This Lord Civan wears in His body a huge forest serpent and is entempled in the beautiful Thiru-aappanoor city. Those who offer worship to Civan in this city will get rid of their bad karma.

பிணியும்பிறப் பறுப்பான்பெரு மான்பெருங்காட்டில்
துணியினுடை தாழச்சுடரே ந்தியாடுவான்
அணியும்புன லானையணி யாப்பனூரானைப்
பணியுமன முடையார்வினை பற்றறுப்பாரே. 4

பிணியும் பிறப்பு அறுப்பான், பெருமான், பெருங்காட்டில்-
துணியின்உடை தாழச் சுடர் ஏந்தி ஆடுவான்,
அணியும் புனலானை, அணி ஆப்பனூரானைப்
பணியும் மனம் உடையார் வினை பற்றுஅறுப்பாரே.

piNiyum piRappu aRuppAn2, perumAn2, perugkATTil--
tuNiyin2 uTai tAzac cuTar Enti ATuvAn2,
aNiyum pun2alAn2ai, aNi Appan2UrAn2aip
paNiyum man2am uTaiyAr vin2ai paRRu aRuppArE.

**பொருள்:** சிவபெருமான், உடலைப் பற்றிய நோய்களையும் உயிரைப் பற்றிய பிறவி நோயையும் அறுத்தருள்பவர். சுடுகாட்டகத்தே கோவண ஆடையோடு அழலேந்தி ஆடுபவர். கங்கையை முடியில் அணிந்திருப்பவர். அழகிய திருஆப்பனூரில் எழுந்தருளியுள்ள இப்பெருமானைப் பணிந்து போற்றும் உள்ளம் உடையவர்கள் தங்களின் வினைத் தொடர்ச்சி நீங்கப் பெறுவர்.

**குறிப்புரை:** பிணியும் பிறப்பும் அறுப்பான் என உம்மை விரிக்க. துணியின் உடை – கீண்ட கோவண உடை.

Lord Civan annuls our bodily ailments and relieves us from the cycle of birth and death. Wearing a fore-lap cloth over His loins, He dances in the expansive burning ghat holding fire in His hand. He supports the river Ganges in His head. Those who offer worship to this Supreme Lord Civan will get rid of their karma.

தகரமணி யருவித்தட மால்வரை சிலையா
நகரமொரு மூன்றும்நல ங்குன்றவென் றுகந்தான்
அகரமுத லானையணி யாப்பனூரானைப்
பகருமன முடையார்வினை பற்றறுப்பாரே. 5

தகரம் அணி அருவித் தடமால்வரை சிலையா,
நகரம்ஒருமூன்றும் நலம் குன்றவென்று உகந்தான்,
அகரமுதலானை, அணி ஆப்பனூரானைப்
பகரும் மனம் உடையார் வினை பற்றுஅறுப்பாரே.

takaram aNi aruvit taTamAlvarai cilaiyA,
nakaram oru mUn2Rum nalam kun2Ra ven2Ru ukantAn2,
akaramutalAn2ai, aNi Appan2UrAn2aip
pakarum man2am uTaiyAr vin2ai paRRu aRuppArE.

**பொருள்:** சிவபெருமான், தகரம் எனப்படும் மணமுள்ள பொருளும், மணிகளும் கலந்து வரும் அருவிகளை உடைய மிகப்பெரிய மேரு மலையை வில்லாக வளைத்தவர். வில்லாக வளைத்து அசுரர்களின் நகரங்களான முப்புரங்களும் பொடிபடச் செய்து மகிழ்ந்தவர்.

எல்லா எழுத்துக்களிலும் கலந்து நிற்கும் 'அ'கரம் போல பொருட்களிலும் கலந்து இருப்பவர். அழகிய திருஆப்பனூரில் எழுந்தருளியுள்ள இப்பெருமானாகிய சிவபெருமான் புகழைக் கூறுகின்ற உள்ளம் உடையவர்கள், தங்களின் வினை மாசுகளினின்று நீங்கப் பெறுவர்.

**குறிப்புரை:** தகரம் அணியருவி – தகர மரத்தை அணிந்த அருவி என்றுமாம். நகரம் ஒரு மூன்று – முப்புரம். அகர முதலானை என்பது 'அகரமுதல எழுத்தெல்லாம்' என்ற குறட்கருத்து.

Lord Civan using the very big mountain 'Mēru' as His bow destroyed the three citadels of the Asuraas and felt delighted. In the waterfalls of this mountain, the water carries the fragrant leaves of the wax-flower dog-bane trees (*தகரம்*) as cool gems. The alphabet 'A' (*அ*) is combined with all other letters: similarly Lord Civan is the sustenance of all the universe. This Civan is entempled in the beautiful Thiru-aappanoor. Those who can adore and praise His glory will get rid of their bad karma.

**Note:** One of the rare portions in the saints composition where a direct simile from Thirukkural has been employed - Vide Kural(1) explaining the uniqueness of the Lord and the first alphabet '*அ*'.

ஓடுந்திரி புரங்களுட னேயுலந்தவியக்
காடதிட மாகக்கனல் கொண்டு நின்றிரவில்
ஆடுந் தொழிலானை யணியாப்பனூரானைப்
பாடுமன முடையார்வினை பற்றறுப்பாரே. **6**

*ஓடும் திரிபுரங்கள் உடனே உலந்து அவிய,*
*காடு அது இடம்ஆகக் கனல் கொண்டு நின்று இரவில்*
*ஆடும் தொழிலானை, அணி ஆப்பனூரானைப்*
*பாடும் மனம் உடையார் வினை பற்றுஅறுப்பாரே.*

OTum tiripuragkaL uTan2E ulantu aviya,
kATu atu iTam Akak kan2al koNTu nin2Ru iravil
ATum tozilAn2ai, aNi Appan2UrAn2aip
pATum man2am uTaiyAr vin2ai paRRu aRuppArE.

**பொருள்:** சிவபெருமான், பறந்து திரியும் முப்புரங்களை ஒரு நொடியில் அழிவுறச் செய்தவர். சுடுகாட்டைத் தனது இருப்பிடமாகக் கொண்டு கனல் ஏந்தி நின்று இரவில் திருநடனம் புரிவதைத் தொழிலாகக் கொண்டவர். அழகிய திருஆப்பனூரில் எழுந்தருளியுள்ள

இப்பெருமானின் புகழைப் பாடும் உள்ளம் உடையவர்கள் தங்களின் வினைத் தொடர்ச்சி நீங்கப் பெறுவர்.

**குறிப்புரை:** உலந்து – வற்றி.

Lord Civan destroyed and reduced to powder in one single moment, the three citadels that were flying in the sky. His avocation is to dance in the burning ghat during night hours by holding fire in His hand. He is entempled in the beautiful Thiru-aappanoor. Those who can sing in praise of this Lord will get rid of their bad karma.

இயலும்விடை யேறியெரிகொள் மழுவீசிக்
கயலினிணைக் கண்ணாளொரு பாற்கலந்தாட
இயலுமிசை யானையெழிலாப் பனூரானைப்
பயிலுமன முடையார்வினை பற்றறுப்பாரே. 7

*இயலும் விடை ஏறி, எரி கொள் மழு வீசி,*
*கயலின் இணைக் கண்ணாள் ஒருபால் கலந்துஆட,*
*இயலும் இசையானை, எழில் ஆப்பனூரானைப்*
*பயிலும் மனம் உடையார் வினை பற்றுஅறுப்பாரே.*

iyalum viTai ERi, eri koL mazu vIci,
kayalin2 iNaikkaNNAL orupAl kalantu ATa,
iyalum icaiyAn2ai, ezil Appan2UrAn2aip
payilum man2am uTaiyAr vin2ai paRRu aRuppArE.

**பொருள்:** சிவபெருமான், மனம் போல் இயங்கும் விடைமிசை ஏறிவருபவர். எரிதலைக் கொண்ட மழுவைச் சுழற்றிக் கொண்டு இருப்பவர். கயல் போன்ற இரு விழிகளை உடைய உமையம்மையைத் தனது திருமேனியில் ஒருபாகமாகக் கலந்தும், ஆடியும், கூடி இருந்தும், பொருந்தியும், மகிழ்ந்தும் இருப்பவர். அழகிய திரு ஆப்பனூரில் எழுந்தருளி உள்ள இப்பெருமானைப் பாடுவதைத் தம் இயல்பாகக் கொண்ட மனம் உடையவர்கள் வினைமாசு தீர்வார்கள்.

**குறிப்புரை:** இயலும் விடை – மனம் போலியங்கும் இடபம்.

By brandishing in His hand a burning battleaxe Lord Civan rides on the bull that is alert to His intent. He happily concorporates with Umaa Devi whose two eyes are

similar to the eyes of carp fish. He rejoices in singing and is entempled in the beautiful Thiru-aappanoor. Those who can sing by their natural instinct in praise of this Lord Civan will get rid of their bad karma.

கருக்கு மணிமிடறன் கதநாகக் கச்சையினான்
உருக்கு மடியவரை யொளிவெண் பிறைசூடி
அரக்கன் றிறலழித் தானணியாப் பனூரானைப்
பருக்குமன முடையார்வினை பற்றறுப்பாரே. 8

கருக்கும் மணிமிடறன், கதநாகக்கச்சையினான்,
உருக்கும் அடியவரை, ஒளிவெண்பிறைசூடி,
அரக்கன் திறல் அழித்தான், அணி ஆப்பனூரானைப்
பருக்கும் மனம் உடையார் வினை பற்றுஅறுப்பாரே.

karukkum maNimiTaRan2, katanAkakkaccaiyin2An2,
urukkum aTiyavarai, oLiveNpiRaicUTi,
arakkan2 tiRal azittAn2, aNi Appan2UrAn2aip
paru(k)kum man2am uTaiyAr vin2ai paRRu aRuppArE.

**பொருள்:** சிவபெருமான், கருமையான நீலமணி போன்ற கண்டத்தை உடையவர். சினம் பொருந்திய பாம்பைக் கச்சையாக அணிந்திருப்பவர். அடியவர்களை மனம் உருகச் செய்பவர். ஒளி பொருந்திய வெண்பிறையைச் சூடியவர். இராவணனின் வலிமையை அழித்தவர். அழகிய திருஆப்பனூரில் எழுந்தருளியுள்ள இப்பெருமானை உணர்வுப் பூர்வமாக சுவைக்கும் உள்ளம் உள்ளவர்கள் தங்களின் மாசு நீங்கப் பெறுவார்கள்.

**குறிப்புரை:** கருக்கும் மணி மிடறன் – மேலும் கருக்கும் நீலமணி போலும் கழுத்தினை உடையவன். கதநாகம் – சினத்தோடுகூடிய பாம்பு. அரக்கன் – இராவணன். திறல் – வலி. பருக்கும் – பருகும் என்பதன் விரித்தல் விகாரம் குடிக்கும் என்பது பொருள்.

Lord Civan's neck is of dark blue colour similar to the sapphire gem and the darkness seems to increase ever more. He wears the ferocious serpent in His waist as a corset. He causes His devotee's heart to melt in love. He holds the white and bright crescent moon in His matted hair. He destroyed the valour of Raavanan. This Lord Civan is entempled in the beautiful city of Thiru-aappanoor. Those who heartily contemplate on this Lord Civan in their minds will get rid of their bad karma.

கண்ணன் கடிக்கமல மலர்மேலி னிதுறையும்
அண்ணற் களப்பரிதாய் நின்றங்கடி யார்மேல்
எண்ணில் வினைகளை வானெழிலாப் பனூரானைப்
பண்ணின் னிசைபகர்வார் வினைபற் றறுப்பாரே. 9

கண்ணன், கடிக்கமலமலர்மேல் இனிது உறையும்
அண்ணற்கு அளப்பு அரிதுஆய் நின்று, அங்கு அடியார்மேல்
எண் இல் வினைகளைவான், எழில் ஆப்பனூரானைப்
பண்ணின் இசை பகர்வார் வினை பற்றுஅறுப்பாரே.

kaNNan2, kaTik kamala malar mEl in2itu uRaiyum
aNNaRku aLappu aritu Ay nin2Ru, agku aTiyArmEl
eN il vin2ai kaLaivAn2, ezil Appan2UrAn2aip
paNNin2 icai pakarvAr vin2ai paRRu aRuppArE.

**பொருள்:** திருமாலாலும், மணம் பொருந்திய தாமரை மலர்மேல் இனிதுறையும் பிரமனாலும் அளப்பதற்கு அரியவனாக நின்றவர் சிவபெருமான். அடியவர்கள் மேல் வரும் எண்ணற்ற வினைகள் பலவற்றையும் களைந்து அருளுபவர். அழகிய திருஆப்பனூரில் எழுந்தருளியுள்ள இப்பெருமானைப் பண் பொருந்த இசையோடு உருகிப் பாடிப் போற்றுபவர்கள், தங்களின் வினை மாசு நீங்கப் பெறுவார்கள்.

**குறிப்புரை:** கடிக்கமலம் – மணம் உள்ள தாமரை. அண்ணல் என்றது பிரமனை.

Lord Civan is unable to be searched into by Thirumaal as well as by Brahma who is beautifully seated on the fragrant lotus flower. He removes the multifarious bad karma of His devotees. This Lord Civan is entempled in the beautiful city of Thiru-aappanoor. Those who worship Him by singing tunefully the divine songs will get rid of their bad karma.

செய்யகலிங் கத்தார்சிறு தட்டுடையார்கள்
பொய்யர்புறங் கூறப்புரிந்த வடியாரை
ஐயமகற்று வானணியாப் பனூரானைப்
பையநினைந் தெழுவார் வினைபற் றறுப்பாரே. 10

செய்ய கலிங்கத்தார், சிறு தட்டு உடையார்கள்,
பொய்யர் புறம் கூற, புரிந்த அடியாரை
ஐயம் அகற்றுவான், அணி ஆப்பனூரானைப்
பைய நினைந்து எழுவார் வினை பற்றுஅறுப்பாரே.

ceyya kaligkattAr, ciRu taTTu uTaiyArkaL,
poyyar puRam kURa, purinta aTiyArai
aiyam akaRRuvAn2, aNi Appan2UrAn2aip
paiya nin2aintu ezuvAr vin2ai paRRu aRuppArE.

**பொருள்:** புத்தர்கள் சிவந்த காவி ஆடை உடுத்தியிருப்பவர்கள். சமணர்கள் சிறு தடுக்கை ஆடையாக உடுத்திக் கொண்டு திரிபவர்கள். இவர்கள் பொய் பேசுவார்கள். புறங்கூறித் திரிபவர்கள். சிவபெருமான், தன்னை விரும்பிய அடியவர்களின் சந்தேக ஞானத்தை விலக்கித் தெளிவுறச் செய்பவர். அழகிய திருஆப்பனூரில் எழுந்தருளிய இப்பெருமானை நுண்ணுணர்வாக நினைந்து எழும் அடியவர்களின் வினை மாசுகள் நீங்கும்.

**குறிப்புரை:** செய்ய கலிங்கத்தார் – சிவந்த காவியாடையார். சிறு தட்டு – சிறு தடுக்கு. புரிந்த – விரும்பிய. ஐயம் அகற்றுவான் – சந்தேக ஞானத்தை விலக்குபவன்.

Buddhists who wear the ruddy and ochre hued robe and Samanars who dress themselves in small plaited mats are liars and back biters on Lord Civan. Lord Civan removes the unreasonable doubts on spiritual knowledge of His loving devotees. He is entempled in the beautiful city of Thiru-aappanoor. They who contemplate slowly and have afflictions in their heart on Lord Civan will get rid of their bad karma.

அந்தண் புனல்வை கையணியா ப்பனூர்மேய
சந்தமலர்க் கொன்றை சடைமேலுடையானை
நந்தியடி பரவும்நலஞான சம்பந்தன்
சந்தமிவை வல்லார் தடுமாற்றறுப்பாரே. 11

அம் தண்புனல் வைகை அணி ஆப்பனூர் மேய
சந்த மலர்க்கொன்றை சடைமேல் உடையானை,
நந்திஅடி பரவும் நல ஞானசம்பந்தன்
சந்தம்இவை வல்லார் தடுமாற்று அறுப்பாரே.

am taNpun2al vaikai aNi Appan2Ur mEya
canta malarkkon2Rai caTaimEl uTaiyAn2ai,
nanti aTi paravum nala njAn2acampantan2
cantam ivai vallAr taTumARRu aRuppArE.

**பொருள்:** சிவபெருமான், அழகிய கொன்றை மாலையைச் சடையின்மேல் அணிந்து கொண்டு குளிர்ந்த நீர் நிறைந்துள்ள வைகை ஆற்றின் கரையில் விளங்கும் திருஆப்பனூரில்

எழுந்தருளியுள்ளார். சிவன் திருவடிகளையே பரவும் நல்ல ஞானசம்பந்தன், இப்பதிகத்தால் இப்பெருமானைப் போற்றிப் பாடினார். சந்த இசையோடு கூடிய இப்பதிகப் பாடல்களைப் பொருள் உணர்ந்து ஓதவல்லவர்கள், இவ்வுலகில் தடுமாற்றத்தைத் தருகின்ற அறிவை அறுத்து, நிலையான மெய்யறிவைப் பெறுவார்கள்.

**குறிப்புரை:** நந்தி – சிவபெருமான். சந்தம் – சந்தத்தோடுகூடிய திருப்பாடல்.

Lord Civan wears the good looking garland of cassia flowers on His matted hair. He is enshrined at the temple in the beautiful Thiru-aappanoor town. This town lies on the banks of river Vaigai (*வைகை நதி*) of cool and lovely stream full of water. Gnaanasambandan, the considerate, always adore the holy feet of Lord Civan sang this tuneful musical song. Those who can chant these songs will get rid of their bewilderment and gain spiritual wisdom.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*88ஆம் பதிகம் முற்றிற்று*
End of 88th Hymn

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# 89. திருஎருக்கத்தம் புலியூர்

## திருத்தல வரலாறு:

திருஎருக்கத்தம் புலியூர் ஒரு நடு நாட்டுத் தலம். விருத்தாசலம் – ஜயங்கொண்டம் பேருந்து வழியில் உள்ளது. இராஜேந்திர பட்டினம் என வழங்குகிறது. எருக்கினைத் தல விருட்சமாக உடைய புலியூராதலின் இப்பெயர் பெற்றது. திருநீலகண்ட யாழ்ப்பாண நாயனார் அவதாரத்தலம். இறைவன் பெயர் திருநீலகண்டர். இறைவியின் பெயர் நீலமலர்க்கண்ணியார். தல விருட்சம் எருக்கு.

## பதிக வரலாறு:

திருநீலகண்ட யாழ்ப்பாணர், பொன்னம்பலந் தொழுது முடித்துவிட்டு வந்த புகலிப் பிள்ளையார் திருமுன்பு சென்று, 'அடியேன் பிறந்த பதி திருஎருக்கத்தம்புலியூர் அண்மையில் உள்ளது. அதையும் வணங்கிப் போதல் வேண்டும்' என்று விண்ணப்பிக்க, பிள்ளையார் அங்ஙனமே தந்தையார் பரிசனங்கள், பாணர் மதங்கசூளாமணியார் இவர்களுடன் நிவாநதியின் கரைவழியே, மேற்றிசையிற் போய்த் திருஎருக்கத்தம்புலியூரை அடைந்தார். திருக்கோயிலுக்குச் சென்று வழிபட்டுப் 'படையார் தரு' என்னும் இப்பதிகத்தை அருளிச் செய்தார்.

# 89. THIRU-ERUK-KATH-THAM-PULIYOOR

## HISTORY OF THE PLACE

This sacred place is in Nadu Naadu. It is on the Viru-dhaa-chalam – Jayangkondam bus route. It is called Raajendhirapattinam now. Since the sacred tree of this temple is 'erukku' and it is also a 'puliyoor', it got this name.

The God's name is Neelakantar and the Goddess's name is Neelamalarkkanniyaar. This is the birthplace of the saint Thiruneelakanta Yaazhppaana Naayanar.

## INTRODUCTION TO THE HYMN

At the request of Thirunilakanta Yaazhppaanar, our saint visited Thiru-eruk-kath-tham-puliyoor, the birthplace of the great Paanar along with his father and his retinue. Our saint reached this place and sang the following hymn:

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 89. திருஎருக்கத்தம்புலியூர்

## 89. THIRU-ERUK-KATH-THAM-PULIYOOR

பண் : குறிஞ்சி
ராகம் : குறிஞ்சி

*Pann: Kurinji*
*Raagam: Kurinji*

படையார் தருபூதப்பக டாருரிபோர்வை
உடையா னுமையோடு முடனாயிடு கங்கைச்
சடையா னெருக்கத்தம் புலியூர்த் தகுகோயில்
விடையா னடியேத்தமே வாவினைதானே. 1

படை ஆர்தரு பூதப் பகடு ஆர் உரி போர்வை
உடையான், உமையோடும் உடன் ஆய் இடு கங்கைச்
சடையான் - எருக்கத்தம்புலியூர்த் தகு கோயில்
விடையான்; அடி ஏத்த, மேவா, வினைதானே.

paTai Artaru pUtap pakaTu Ar uri pOrvai
uTaiyAn2, umaiyOTum uTan2 Ay iTu kagkaic
caTaiyAn2--erukkattampuliyUrt taku kOyil
viTaiyAn2; aTi Etta, mEvA, vin2aitAn2E.

**பொருள்:** சிவபெருமான், பூதகணங்களைத் தமது படையாகக் கொண்டவன். யானையின் தோலைப் போர்வையாகக் கொண்டவன். உமையம்மையோடு உடனாய் விளங்குபவன். வந்து பொருந்திய கங்கையை ஏற்ற சடையை உடையவன். எருக்கத்தம்புலியூரில் விளங்கும் தகுதி வாய்ந்த கோயிலில் எழுந்தருளி இருப்பவன். விடை ஏற்றை உடைய இப்பெருமான் திருவடிகளைத் துதிப்பவர்களை வினைகளின் வலிமை வந்து சேராது.

**குறிப்புரை:** பகடு ஆர் உரி – யானையின் தோல். மேவா – தம் வலிமையைக் காட்டா.

Lord Civan is the Lord of His army of goblin hosts. He covers His body with the skin of an elephant. He is concorporate with His consort Umaa Devi. On His matted

hair, is the river Ganges that came and rested. This Lord Civan, rider of the bull is entempled at the temple in Thiru-eruk-kath-tham-puliyoor. Bad karma will not show its force on those who adore His holy feet in this place.

இலையார் தருசூலப்படை யெம்பெருமானாய்
நிலையார் மதில்மூன்று நீறாய்விழ வெய்த
சிலையா னெருக்கத்தம் புலியூர்த்திகழ் கோயில்
கலையா னடியேத்தக் கருதாவினை தானே. 2

இலை ஆர்தரு சூலப்படை எம்பெருமானாய்,
நிலையார் மதில்மூன்றும் நீறுஆய் விழ எய்த
சிலையான்- எருக்கத்தம்புலியூர்த் திகழ் கோயில்
கலையான்; அடி ஏத்த, கருதா, வினைதானே.

ilai Ar taru cUlappaTai emperumAn2Ay,
nilaiyAr matil mUn2Rum nIRu Ay viza eyta
cilaiyAn2--erukkattampuliyUrt tikaz kOyil
kalaiyAn2; aTi Etta, karutA, vin2aitAn2E.

**பொருள்:** சிவபெருமானார், இலை வடிவமாக அமைந்த சூலப்படையை உடையவர். நிலைபெற்ற முப்புரங்களும் நீறாய்ப் பொடிபடுமாறு கணையை எய்த வில்லை உடையவர். எருக்கத்தம்புலியூரில் விளங்கும் கோயிலில் எம்பெருமானார் எழுந்தருளியுள்ளார். சகல கலைகளின் வடிவான இப்பெருமானாருடைய திருவடிகளைத் துதித்து வாழ்த்துபவர்களை எண்ணங்களால் வருத்தும் வினைகள் வந்து சேரா.

**குறிப்புரை:** இலையார்தரு சூலப்படை - இலைவடிவாகச் செய்யப் பெற்ற சூலப்படை. நிலையார் - அழிந்து படுந்தன்மையரான திரிபுராதிகள்.

Lord Civa is our divine noble man armed with a leaf-like trident. He owns a powerful bow. He sent an arrow from this bow on to the three well established citadels, and they fell down as a shower of cinders. This Lord Civan is enshrined at the temple in Thiru-eruk-kath-tham-puliyoor. Bad karma will not affect those who worship His holy feet in this place.

விண்ணோர் பெருமானேவிகிர் தாவிடையூர்தீ
பெண்ணா ணலியாகும்பித் தாபிறைசூடீ
எண்ணாரெ ருக்கத்தம்புலி யூருறைகின்ற
அண்ணா வெனவல்லார்க் கடையாவினை தானே. 3

"விண்ணோர்பெருமானே! விகிர்தா! விடைஊர்தீ!
பெண், ஆண், அலி, ஆகும் பித்தா! பிறைசூடீ!
எண் ஆர் எருக்கத்தம்புலியூர் உறைகின்ற
அண்ணா!" என வல்லார்க்கு அடையா, வினைதானே.

"viNNOr perumAn2E! vikirtA! viTai UrtI!
peN, AN, ali, Akum pittA! piRaicUTi!
eN Ar erukkattampuliyUr uRaikin2Ra
aNNA!" en2a vallArkku aTaiyA, vin2aitAn2E.

**பொருள்:** சிவபெருமானாரே! விண்ணவர்களின் தலைவரே! வேறுபட்ட வடிவும் பண்பும் உடையவரே! விடைமீது ஏறி வருபவரே! பெண், ஆண், அலி என்னும் பாகுபாடுகளைக் கடந்தவரே! பேரின்பமானவரே! (பித்தனே!) பிறைசூடியிருப்பவரே! எல்லாராலும் எண்ணப்படுபவரே! எருக்கத்தம்புலியூரில் உறைகின்ற தலைவரே! என்று உரைத்துப் போற்ற வல்லவரை வினைகள் வந்து அடையா.

**குறிப்புரை:** பெண் ஆண் அலியாகும் – பால்பாகுபாட்டையும் திணைப்பாகுபாட்டையும் கடந்தவன் என்பது கருத்து. 'பித்தா பிறை சூடி' என்ற இத்தொடரே சுந்தரர் வாக்கில் தோன்றுவது. எண் ஆர் – எண்ணுதல் பொருந்திய.

Karma will not touch those who hail Him thus: "Oh! God of the celestials! Oh! Pre-eminent Supreme Lord! Oh! Rider of the bull! Oh! You are the embodiment of heavenly joy (பித்தா)! Oh! You are beyond the ambit of gender! (man-woman-neuter hermaphrodite) You hold the crescent moon in Your matted hair. Oh! You are enshrined at the temple in Thiru-eruk-kath-tham-puliyoor and hailed thus by every one in his mind".

அரையார் தருநாகமணி வானலர்மாலை
விரையார் தருகொன்றை யுடையான் விடையேறி
வரையா னெருக்கத்தம் புலியூர் மகிழ்கின்ற
திரையார் சடையானைச் சேரத்திருவாமே. 4

*அரை ஆர்தரு நாகம் அணிவான், அலர்மாலை*
*விரை ஆர்தரு கொன்றை உடையான், விடைஏறி,*
*வரையான் எருக்கத்தம்புலியூர் மகிழ்கின்ற*
*திரை ஆர் சடையானைச் சேரத் திரு ஆமே.*

arai Artaru nAkam aNivAn2, alarmAlai
virai Artaru kon2Rai uTaiyAn2, viTai ERi,
varaiyAn2, erukkattampuliyUr makizkin2Ra
tirai Ar caTaiyAn2aic cEra, tiru AmE.

**பொருள்:** சிவபெருமானார், பாம்பை இடையில் பொருந்துமாறு அணிந்துள்ளவர். மணம் கமழும் கொன்றை மலர் மாலையை அணிந்துள்ளவர். விடைமீது ஏறிவருபவர். கயிலை மலையைத் தனக்குரிய இடமாகக் கொண்டவர். அலைகள் வீசும் கங்கைநதியை சடைமிசைத் தரித்திருப்பவர். எருக்கத்தம்புலியூரில் மகிழ்ந்திருப்பவராக எழுந்தருளியிருக்கும் இப்பெருமானாரைச் சேர்வோர்க்கு செல்வங்கள் வந்து சேரும்.

**குறிப்புரை:** விரை – மணம். வரையான் – கைலைமலையை உடையவன். திரையார் சடையான் – கங்கை அணிந்த சடையான். திரை ஆகு பெயராய்க் கங்கையை உணர்த்திற்று.

Lord Civan keeps a serpent firmly in position in His waist. He is adorned with a fragrant garland of burgeoning cassia flowers. His mount is the bull. Mount Kailash is His permanent abode. He is joyfully enshrined in Thiru-eruk-kath-tham-puliyoor supporting the billowing river Ganges in His matted hair. Opulence (Affluence) will be theirs who gain access to Him and worship Him.

வீறார்முலை யாளைப்பாக மிகவைத்துச்
சீறாவரு காலன்சினத் தையழிவித்தான்
ஏறானெ ருக்கத்தம்புலி யூரிறையானை
வேறாநினை வாரைவிரும் பாவினை தானே. 5

*வீறு ஆர் முலையாளைப் பாகம் மிக வைத்து,*
*சீறா வரு காலன் சினத்தை அழிவித்தான்,*
*ஏறான், எருக்கத்தம்புலியூர் இறையானை*
*வேறா நினைவாரை விரும்பா, வினைதானே.*

vIRu Ar mulaiyALaip pAkam mika vaittu,
cIRA varu kAlan2 cin2attai azivittAn2,
ERAn2, erukkattampuliyUr iRaiyAn2ai
vERA nin2aivArai virumpA, vin2aitAn2E.

**பொருள்:** சிவபெருமானார், அழகிய தனங்களை உடைய உமையம்மையை, இடப்பாகத்தில் சிறப்புடன் வைத்திருப்பவர். சீறிவந்த காலனின் சினத்தை அடக்கி அழித்தவர். இடப ஊர்தியை உடையவர். எருக்கத்தம்புலியூரில் எழுந்தருளியுள்ள இப்பெருமானாராகிய சிவபெருமானை தனித்திருந்து தியானிப்பவர்களை வினைகள் விரும்பாது.

**குறிப்புரை:** வீறு – தனிப்பெருமை. வேறொன்றற்கு இல்லாத அழகு என்பர் நச்சினார்க்கினியர். அழித்தான் என்னாது அழிவித்தான் என்றது காலன் தானேயுணர்ந்து அடங்கச் செய்த தன்மையால். வேறா நினைவாரை – தனியேயிருந்து தியானிப்பவர்களை.

Lord Civan accommodates His consort Umaa Devi, whose breasts are incomparably imposing, very eminently on the left half of His body frame. He did away the fury of Kaalan (regent of god of death). Those who meditate on and adore this Lord Civan in a secluded atmosphere will not be sought by their bad karma.

நகுவெண் டலையேந்தி நானாவிதம்பாடிப்
புகுவான யம்பெய்யப் புலித்தோல் பியற்கிட்டுத்
தகுவானெ ருக்கத்தம் புலியூர்த்தகைந் தங்கே
தொகுவான் கழலேத்தத் தொடரா வினைதானே. 6, 7

நகுவெண்தலை ஏந்தி நானாவிதம் பாடிப்
புகுவான் அயம் பெய்ய, புலித்தோல் பியற்கு இட்டுத்
தகுவான் - எருக்கத்தம்புலியூர்த் தகைந்து அங்கே
தொகுவான்! கழல் ஏத்த, தொடரா, வினைதானே.

nakuveNtalai Enti nAn2Avitam pATip
pukuvAn2 ayam peyya, pulittOl piyaRku iTTut
takuvAn2--erukkattampuliyUrt takaintu agkE
tokuvAn2; kazal Etta, toTarA, vin2aitAn2E.

**பொருள்:** சிரிப்பது போல விளங்கும் வெண்மையான தலையோட்டைச் சிவபெருமானார் கையில் ஏந்தி இருப்பவர். பலவிதமாகப் பாடிக்கொண்டு மகளிர் இடும் பிச்சையை ஏற்கப் புகுபவர். புலித்தோலைப் பிடரியில் இட்டுக் கொண்டு இருப்பவர். தகுதி வாய்ந்தவராக

எருக்கத்தம்புலியூரில் தங்கி அங்கேயே நிலைத்திருப்பவர். இப்பெருமானார் திருவடிகளைத் துதிக்க வினைகள் நம்மைத் தொடராது.

**குறிப்புரை:** நானாவிதம் பாடி – பலவகையான பண்களைப் பாடி. அயம் பெய்யப் புகுவான் – பிச்சையை மகளிர் பெய்யப் புகுவான். ஐயம் என்ற வார்த்தை அயம் எனப் போலியாயிற்று. பியற்கு – பிடரிக்கு.

Lord Civan holding a white human skull, with a smiling appearance (because of the exposed teeth) and singing in multifarious modes, goes about to accept the alms given by women. He wears on His shoulders a tiger skin. He abides fittingly in Thiru-eruk-kath-tham-puliyoor for ever. Karma will not pursue those who adore and worship His holy feet.

**Note:** The tiger-skin is Civa's loincloth. It also serves as His shoulder cloth.

ஆவாவென வரக்கனலற வடர்த்திட்டுத்
தேவாவென வருளார்செல் வங்கொடுத்திட்ட
கோவேயெ ருக்கத்தம்புலி யூர்மிகுகோயில்
தேவேயென அல்லல்தீர்தல் திடமாமே. 8

*"ஆவா!" என அரக்கன் அலற அடர்த்திட்டு,*
*"தேவா!" என அருள் ஆர் செல்வம் கொடுத்திட்ட*
*"கோவே! எருக்கத்தம்புலியூர் மிகு கோயில்-*
*தேவே!" என அல்லல் தீர்தல் திடமாமே.*

"AvA!" en2a arakkan2 alaRa aTarttiTTu,
"tEvA!" en2a, aruL Ar celvam koTuttiTTa
kOvE! erukkattampuliyUr miku kOyil-
tEvE!' en2a, allal tIrtal tiTam AmE.

**பொருள்:** சிவபெருமானார், இராவணன் "ஆ, ஆ" என்று அலறுமாறு அவனை அடர்த்தவர். அதன்பின் அவன் 'தேவா' என வேண்டுதல் செய்ய, அருள்நிறைந்த செல்வங்கள் பலவற்றை வழங்கியருளிய தலைவரும் இவரே ஆவார். எருக்கத்தம்புலியூரில் விளங்கும் சிறப்புமிக்க கோயிலில் எழுந்தருளியுள்ள இப்பெருமானாரைத் 'தேவனே' என்று போற்றும்போது நம் அல்லல்கள் தீர்வது உறுதியாகும்.

**குறிப்புரை:** ஆஆ – இரக்கக்குறிப்பு. தேவா என – அவனே, 'தேவா' என்று வேண்ட.

Lord Civan crushed the head and shoulders of Raavanan under the mountain. Unable to bear the pain, he cried aloud "Aa! Aah!". "Oh! Lord Civa forgive me. I regret

my folly; Oh! Deva! Save me". Civan the sovereign, forgave and blessed him with riches and boons. If we can hail Him, the Lord of great Thiru-eruk-kath-tham-puliyoor temple, all the troubles will cease for sure.

**Note:** Civa is touched by remorse or penitence. He dispenses mercy even to a cruel and haughty Raakshasa, if he repents for his misconduct.

மறையான் நெடுமால்காண் பரியான்மழுவேந்தி
நிறையா மதிசூடிநிகழ் முத்தின்றொத்தே
இறையா னெருக்கத்தம் புலியூரிடங்கொண்ட
கறையார் மிடற்றானைக் கருதக்கெடும் வினையே. 9

*"மறையான், நெடுமால், காண்பு அரியான்! மழுஏந்தி!*
*நிறையா மதி சூடி! நிகழ் முத்தின் தொத்து ஏய்*
*இறையான்!" எருக்கத்தம்புலியூர் இடம்கொண்ட*
*கறை ஆர் மிடற்றானைக் கருத, கெடும், வினையே.*

"maRaiyAn2, neTumAl, kANpu ariyAn2! mazu Enti!
niRaiyA mati cUTi! nikaz muttin2 tottu Ey
iRaiyAn2!"--erukkatampuliyUr iTam koNTa
kaRai Ar miTaRRAn2aik karuta, keTum, vin2aiyE.

**பொருள்:** சிவபெருமானார், வேதங்கள் ஓதும் நான்முகனாலும், நெடுமாலாலும் காண முடியாத அரியவர். மழுவைக் கையில் ஏந்தியிருப்பவர். கலை நிறையாத பிறைமதியைச் சூடியிருப்பவர். "முத்துக்களின் கொத்துப் போன்ற இறையோனே!" எனப் போற்றுங்கள். எருக்கத்தம்புலியூரை இடமாகக் கொண்ட கறை மிடற்றுப் பெருமானை நினைத்தாலே நம் வினைகள் கெடும்.

**குறிப்புரை:** மறையான் – பிரமன். நிறையாமதி – இளம்பிறை. முத்தின் தொத்தே – முத்தின் கொத்தே.

Bad karma will perish for those who worship and hail Lord Civan enshrined in the temple in Thiru-eruk-kath-tham-puliyoor, uttering these words: "Oh! Lord Civa! You are beyond the comprehension of Brahma who chants the Vedas and of the tall Thirumaal. You are wielding a battle-axe in one of Your hands. You are supporting a young crescent moon in Your matted hair. You are glowing like a cluster of shining pearls. Kindly shower Your grace on us".

புத்தரருகர் தம்பொய்கள் புறம்போக்கிச்
சுத்திதரித் துறையுஞ்சோதி யுமையோடும்
நித்தனெருக் கத்தம்புலியூர் நிகழ்வாய
அத்தனற வன்றன்னடியே யடைவோமே. 10

புத்தர் அருகர்தம் பொய்கள் புறம்போக்கிச்,
சுத்தி தரித்து உறையும் சோதி, உமையோடும்
நித்தன் - எருக்கத்தம்புலியூர் நிகழ்வுஆய
அத்தன்; அறவன்தன் அடியே அடைவோமே.

puttar arukartam poykaL puRam pOkki,
cutti tarittu uRaiyum cOti, umaiyOTum
nittan2--erukkattampuliyUr nikazvu Aya
attan2; aRavan2tan2 aTiyE aTaivOmE.

**பொருள்:** புத்தர்களும் சமணர்களும் கூறும் பொய்யுரைகளை விலக்கி விடுங்கள். சிவபெருமானார் பரிசுத்தமாக விளங்கும் ஒளிவடிவினராய் உமையம்மையாருடன் நித்தமும் மணாளனாக விளங்குபவர். எருக்கத்தம்புலியூரில் எழுந்தருளியிருக்கும் அறவடிவினராகிய இப்பெருமானாரின் அடிகளை நாம் அடைவோம்.

**குறிப்புரை:** சுத்தித் தரித்து – தூய்மையைப் பொருந்தி. அத்தன் – தலைவன்.

Lord Civan ignores the falsehood and lies of Buddhists and Samanars. He Himself is Purity. He shines brightly as an ever young consort of Umaa Devi. He is entempled in Thiru-eruk-kath-tham-puliyoor. Let us reach the holy feet of Him that is an embodiment of virtue.

ஏராரெருக் கத்தம்புலியூ ருறைவானைச்
சீரார்திகழ் காழித்திருவார் சம்பந்தன்
ஆராவருந் தமிழ்மாலை யிவைவல்லார்
பாரா ரவரேத்தப் பதிவா னுறைவாரே. 11

ஏர் ஆர் எருக்கத்தம்புலியூர் உறைவானை,
சீர் ஆர் திகழ் காழித் திரு ஆர் சம்பந்தன்
ஆரா அருந்தமிழ்மாலைஇவை வல்லார்
பாரார் அவர் ஏத்த, பதிவான் உறைவாரே.

Er Ar erukkattampuliyUr uRaivAn2ai,
cIr Ar tikaz kAzit tiru Ar campantan2
ArA aruntamiz mAlai ivai vallAr
pArAr avar Etta, pativAn2 uRaivArE.

**பொருள்:** அழகிய எருக்கத்தம்புலியூரில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானாரைச் சீர்மிகு காழிப்பதியில் தோன்றிய திருஞான சம்பந்தன் போற்றிப் பாடினார். கலை குன்றாத அருந்தமிழ் மாலையாகிய இத்திருப்பதிகப் பாடல்களை ஓதுபவர்கள், உலகத்தவர் போற்ற வானகம் எய்துவர்.

**குறிப்புரை:** ஏர் – எழுச்சி. ஆரா அருந்தமிழ் – உணர்ந்தது போதும் என்றமையாத மிக இனிய தமிழ்.

Gnaanasambandan of glory abounding Kaazhi, who is ever inseparable from grace, has sung of the deity of lofty Thiru-eruk-kath-tham-puliyoor. Those who are well versed in this garland of Tamil erudiction, will be hailed by terrestrial folks, and will eventually abide in the celestial world.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*89ஆம் பதிகம் முற்றிற்று*
End of 89th Hymn

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# 90. திருப் பிரம புரம் (திரு இருக்குக் குறள்)

## திருத்தல வரலாறு:

முதல் பதிகம் பார்க்க.

## பதிக வரலாறு:

இத்திருப்பதிகம் சீகாழியின் பன்னிரு பெயர்களைக் குறிப்பிட்டு அருளிச் செய்யப்பட்டுள்ளது. "திரு இருக்குக் குறள்" என்று சொல்லப்டும் யாப்பு வகையில் இரண்டே வரியில் பாட்டுக்கள் அமைந்துள்ளன. இந்தப் பதிகத்தில் வழக்கமாக 11 பாட்டுக்களுக்குப் பதிலாக 12 பாட்டுக்கள் உள்ளன.

## 90. THIRU-P-PIRAMA-PURAM (THIRU-IRUKKU-K-KURALL)

### HISTORY OF THE PLACE

See First Hymn.

### INTRODUCTION TO THE HYMN

The holy place where our saint was born goes by twelve different names. This hymn mentions all the different twelve names of Seekaazhi. The verses do have only two lines; they are, therefore called 'Thiru-irukku-k-kurall' (திரு இருக்குக் குறள்). There are twelve verses in this hymn as against the normal eleven verses.

திருச்சிற்றம்பலம்

THIRU-CH-CHITRAMBALAM

## 90. திருப்பிரமபுரம் திரு இருக்குக் குறள்

## 90. THIRU-P-PIRAMA-PURAM THIRU-IRUKKU-K-KURALL

பண் : குறிஞ்சி
ராகம் : குறிஞ்சி

*Pann: Kurinji*
*Raagam: Kurinji*

அரனையுள்குவீர், பிரமனூருளெம்
பரனையேமனம், பரவியுய்ம்மினே. 1

அரனை உள்குவீர்! பிரமன்ஊருள்எம்
பரனையே மனம் பரவி, உய்ம்மினே!

aran2ai uLkuvIr! piraman2 UruL em
paran2aiyE man2am paravi, uymmin2E!

**பொருள்:** சிவபெருமானையே நினையுங்கள். பிரமனூரில் விளங்கும் எம் பெருமானையே மனத்தால் போற்றித் துதித்து உய்வீர்களாக.

**குறிப்புரை:** சிவபெருமானைச் சிந்திப்பவர்களே, பிரமபுரத்தில் உள்ள பரமனைப் பரவி உய்யுங்கள் என்கின்றது.

Oh! Ye! Who contemplate on Hara (Lord Civan)! Hail our Supreme Lord of 'Piramapuram' (பிரமபுரம்) with all your heart and gain deliverance.

**Note:** Hara is Civa. Hara is Ara(n) in Tamil. பரனையே பரவி – glorifying Lord Civa alone (ஏதேற்றே காரம்).

காணவுள்குவீர், வேணுநற்புரத்
தாணுவின்கழல், பேணியுய்ம்மினே. 2

காண உள்குவீர்! வேணுநல்புரத்
தாணுவின் கழல் பேணி, உய்ம்மினே!

kANa uLkuvIr! vENunalpurat
tANuvin2 kazal pENi, uymmin2E!

**பொருள்:** சிவபெருமானைத் தரிசிக்க எண்ணும் அன்பர்களே! நல்ல வேணுபுரத்தில் விளங்கும் தாணுவின் திருவடிகளைப் பேணி உய்வீர்களாக.

**குறிப்புரை:** காண உள்குவீர் – தரிசிக்க எண்ணுபவர்களே. வேணுபுரம் – சீகாழி. தாணு – சிவபெருமான்.

Oh! Ye who seek His darshan! Adore Thaanu's (*தாணு - சிவன்*) holy feet who is entempled in 'Vēnupuram' (*வேணுபுரம்*) and gain deliverance.

**Note:** Sthaanu meaning pillar is a name for Civa. He is known as a column of fire the head and base of which could not be eyed even by Brahma and Vishnu. Sthamba is Kantazhi in Tamil (ஸ்தம்பத் என்ற வடமொழிச் சொல் தமிழில் 'கந்தழி' என்று பெயர்ப்படும்).

நாதனென்பிர்காள், காதலொண்புகல்
ஆதிபாதமே, ஓதியுய்ம்மினே. 3

**நாதன் என்பிர்காள்! காதல் ஒண் புகல்
ஆதிபாதமே ஓதி, உய்ம்மினே!**

nAtan2 en2pirkAL! kAtal oN pukal
AtipAtamE Oti, uymmin2E!

**பொருள்:** சிவபெருமானை எம் தலைவன் எனக்கூறும் அன்பர்களே! அன்போடு ஒளி விளங்கும் புகலிப் பதியில் விளங்கும் ஆதியின் திருவடிப் பெருமைகளை ஓதி உய்வீர்களாக.

**குறிப்புரை:** நாதன் என்பிர்காள் – என் தலைவன் என்பவர்களே. புகல் ஆதி – சீகாழியில் உள்ள முதல்வன்.

Oh! Ye! good hearted people! You declare that Lord Civan is your chief. He is enshrined in the bright and lovely 'Pukali' (*புகலி*). Praise the glory of His holy feet and gain deliverance.

**Note:** Naathan means master. St. Maanickavaachakar hailed Him thus "Naathan thaal vaazhka" (*நாதன் தாள் வாழ்க*).

அங்கமாதுசேர், பங்கமாயவன்
வெங்குருமன்னும், எங்களீசனே. 4

**அங்கம் மாது சேர் பங்கம்ஆயவன்,
வெங்குரு மன்னும் எங்கள் ஈசனே.**

agkam mAtu cEr pagkam Ayavan2,
vegkuru man2n2um egkaL Ican2E.

**பொருள்:** அருள் வழங்கும் குறிப்போடு உமையம்மையைத் தனது திருமேனியின் ஒரு பாகமாகக் கொண்டுள்ளவன், 'வெங்குருவில்' நிலையாக உள்ள எங்கள் ஈசன் ஆவான்.

**குறிப்புரை:** அங்கம் – மேனி. பங்கம் – பாதி. வெங்குரு – சீகாழி.

With intention to grace His devotees, He is ever enshrined in 'Venguru' (வெங்குரு) keeping His consort Umaa Devi on the left portion of His body. He is our permanent Lord of the Universe.

வாணிலாச்சடைத், தோணிவண்புரத் 5
தாணிநற்பொனைக், காணுமின்களே.

வாள்நிலாச் சடைத் தோணிவண்புரத்து
ஆணிநன்பொனைக் காணுமின்களே!

vAL nilAc caTait tONivaNpurattu
ANi nan2pon2aik kANumin2kaLE!

**பொருள்:** ஒளி பொருந்திய. பிறைமதி பொருந்திய சடைமுடி உடையவனாய்த் தோணிபுரத்தில் விளங்கும் ஆணிப் பொன் போன்ற இறைவனைக் கண்டு தொழுவீர்களாக.

**குறிப்புரை:** வாள்நிலாச் சடை – ஒளிபொருந்திய நிலாவை அணிந்த சடை. ஆணிநற்பொனை – மாற்றுயர்ந்த பொன்போன்றவனை. தோணிபுரம் – சீகாழி.

Lord Civan retains in His matted hair the bright crescent moon. Oh! Ye good hearted people, meet and worship Lord Civan who is similar to the best kind of pure gold and is enshrined in 'Thonipuram' (தோணிபுரம்).

**Note:** 'Aanippon' is gold of the finest purity.

பாந்தளார்சடைப் பூந்தராய்மன்னும் 6
ஏந்துகொங்கையாள், வேந்தனென்பரே.

"பாந்தள் ஆர் சடைப் பூந்தராய் மன்னும்,
ஏந்து கொங்கையாள் வேந்தன்" என்பரே.

"pAntaL Ar caTaip pUntarAy man2n2um,
Entu kogkaiyAL vEntan2" en2parE.

**பொருள்:** பாம்பு பொருந்திய சடைமுடியோடு பூந்தராயில் விளங்கும் பெருமானை. ஏந்திய தனபாரங்களை உடைய உமையம்மையின் கணவன் என்று கூறுவார்கள்.

**குறிப்புரை:** பாந்தள் – பாம்பு. பூந்தராய் – *சீகாழி.*

Containing a serpent in His matted hair, Lord Civan is (ever) enshrined in the town called 'Poontharaai' (*பூந்தராய்*). People will hail this noble Guru as the consort of Umaa Devi who has upraise breasts.

கரியகண்டனைச், சிரபுரத்துளெம்
அரசைநாள்தொறும், பரவியுய்ம்மினே. 7

*கரிய கண்டனை, சிரபுரத்துள் எம்*
*அரசை, நாள்தொறும் பரவி, உய்ம்மினே!*

kariya kaNTan2ai, cirapurattuL em
aracai, nALtoRum paravi, uymmin2E!

**பொருள்:** கருமை பொருந்திய கண்டத்தை உடையவனாய்ச் சிரபுரத்துள் எழுந்தருளிய அரசனை நாள்தோறும் பரவி உய்வீர்களாக.

**குறிப்புரை:** சிரபுரம் – *சீகாழி.*

Oh! Ye, good hearted people, worship daily Lord Civan, whose neck is dark blue in colour and who is entempled in 'Sirapuram', and gain deliverance.

நறவமார்பொழிற், புறவநற்பதி
இறைவன்நாமமே, மறவல்நெஞ்சமே. 8

*நறவம் ஆர் பொழில் புறவம் நல்பதி*
*இறைவன் நாமமே மறவல், நெஞ்சமே!*

naRavam Ar pozil puRavam nal pati
iRaivan2 nAmamE maRaval, nenjcamE!

**பொருள்:** தேன் பொருந்திய சோலைகளை உடைய புறவமாகிய நல்ல ஊரில் எழுந்தருளிய இறைவன் திருநாமங்களை, நெஞ்சமே! நீ மறவாதே.

**குறிப்புரை:** நறவம் – தேன். புறவநற்பதி – சீகாழி. மறவல் நெஞ்சமே எனப் பிரிக்க.

Oh! Heart, never forget the holy name of the Lord-God Civan who is entempled in virtuous 'Puravam' (*புறவம்*) which is rich in melliferous groves (smelling honey).

தென்றிலரக்கனைக் குன்றிற்சண்பைமன்
அன்றுநெரித்தவா, நின்றுநினைமினே. 9

தென்றில் அரக்கனைக் குன்றில் சண்பை மன்
அன்று நெரித்தவா, நின்று நினைமினே!

ten2Ril arakkan2aik kun2Ril caNpai man2
an2Ru nerittavA, nin2Ru nin2aimin2E!

**பொருள்:** தென் திசையில் உள்ள இலங்கை மன்னனாம் இராவணனாகிய அரக்கனைச் சண்பை மன்னனாகிய சிவபிரான் கயிலை மலையிடைப் படுத்து அன்று நெரித்த வரலாற்றை நின்று நினைத்துப் போற்றுவீர்களாக.

**குறிப்புரை:** தென்றில் அரக்கன் – தென்திசையில் உள்ள அரக்கன். குன்றில் – கயிலை மலையில் சண்பை – சீகாழி. அன்று – கயிலையைத் தூக்கிய காலத்து. நெரித்தவா் – இராவணனை நெரித்த வரலாற்றை.

Oh! Ye, devotees! Contemplate, praise and worship Lord Civan who once upon a time crushed the heads and shoulders of the Asura - Raavanan under Mount Kailash. Raavanan is the king of Sri Lanka, in the southern part of this earth. This Lord Civan is the king entempled in 'Chanbai' town (*சண்பை*).

அயனுமாலுமாய், முயலுங்காழியான்
பெயல்வையெய்தினின், றியலுமுள்ளமே. 10

அயனும் மாலும்ஆய், முயலும் காழியான்
பெயல்வை எய்தி நின்று இயலும், உள்ளமே.

ayan2um mAlum Ay muyalum kAziyAn2
peyalvai eyti nin2Ru iyalum, uLLamE.

**பொருள்:** பிரமனும் திருமாலும் அடிமுடி தேடி முயலும் பரம்பொருளாகிய சீகாழிப் பதியில் விளங்கும் இறைவனது கருணைப் பொழிவைச் சார்ந்து காத்தலும் நினைத்துக் கொண்டே இருக்கிறது என் உள்ளம்.

**குறிப்புரை:** முயலும் – தேடமுயற்சி செய்யும். காழி – சீகாழி.

Brahma and Thirumaal did their best searching for holy feet and head of Lord Civan in vain. My heart contemplates on this ancient Lord Civan, entempled in 'Seekaazhi' and aspires for His merciful downpour of grace.

தேரரமணரைச், சேர்வில்கொச்சைமன்
நேரில்கழல்நினைந், தோருமுள்ளமே. 11

தேரர் அமணரைச் சேர்வு இல் கொச்சை மன்
நேர் இல் கழல் நினைந்து ஓரும், உள்ளமே.

tErar amaNaraic cErvu il koccai man2
nEr il kazal nin2aintu Orum, uLLamE.

**பொருள்:** புத்தர் சமணர் ஆகியோரை அணுகாத, 'கொச்சைவயத்து' மன்னனாகிய சிவபிரானின் ஒப்பற்ற திருவடிகளை நினைந்து தியானிக்கும் என் உள்ளம்.

**குறிப்புரை:** கொச்சை – சீகாழி. நேரில் கழல் – ஒப்பற்ற திருவடி.

My heart always thinks of and meditates upon, the incomparable holy feet of Lord Civan, the Supreme King of 'Koch-chai-vayam' (*கொச்சைவயம்*) who will never associate himself with the Buddhists and Samanars.

தொழுமனத்தவர், கழுமலத்துறை
பழுதில்சம்பந்தன், மொழிகள்பத்துமே. 12

தொழு மனத்தவர், கழுமலத்து உறை
பழுது இல் சம்பந்தன் மொழிகள்பத்துமே.

tozu man2attavar, kazumalattu uRai
pazutu il campantan2 mozikaL pattumE.



திருப்பல்லவனீச்சுரம் (காவேரிப்பூம்பட்டினம்) – ஸ்ரீபல்லவனேஸ்வரர் – சோழநாட்டு வடகரைத் தலம்
**Pallavaneecchurar Temple - Tiruppallavneecchuram (Kaverippattinam) - Tamil Nadu.**



திரு ஈங்கோய்மலை (திருவிங்கநாத மலை) – திருமரகதாசலேஸ்வரர் – சோழநாட்டு வடகரைத்தலம்
**Sri Maragathanaathar Temple - Tiruvingkanaatha Malai, Tamil Nadu.**

அச்சிறுபாக்கம் – பார்க்கபுரீஸ்வரர் – தொண்டை நாட்டுத் தலம்
**Pakkapuresar Temple - Acchirupakkam, Tamil Nadu.**

திருநல்லம் (கோனேரிராஜபுரம்) – உமாமகேஸ்வரர் – சோழநாட்டு தென்கரைத் தலம்
**Umamaheswarar Temple - Tirunallam (Konerirajapuram), Tamil Nadu**

**பொருள்:** 'கழுமலத்தில்' உறையும் குற்றமற்ற ஞானசம்பந்தன் அருளிய மொழிகளாகிய இத்திருப்பதிகப் பாடல்களை ஓதிப் பெருமானைத் தொழும் மனத்தவர் ஆகுக.

**குறிப்புரை:** பழுது – குற்றம். கழுமலம் – சீகாழி.

Oh! Ye good hearted people! chant all these verses of this hymn rendered by the flawless Gnaanasambandan who hails from 'Kazhumalam' (*கழுமலம்*) and worship Lord Civan of this place.

The twelve names of Seekaazhi are as under:

1. Piramapuram – பிரமபுரம்
2. Vēnupuram – வேணுபுரம்
3. Pukali – புகலி
4. Venguru – வெங்குரு
5. Thonipuram – தோணிபுரம்
6. Poontharaai – பூந்தராய்
7. Sirapuram – சிரபுரம்
8. Puravam – புறவம்
9. Chanbai – சண்பை
10. Seekaazhi – சீகாழி
11. Koch-chai-vayam – கொச்சைவயம்
12. Kazhu-malam – கழுமலம்

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*90ஆம் பதிகம் முற்றிற்று*
End of 90th Hymn

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# 91. திருவாரூர் (திரு இருக்குக் குறள்)

## திருத்தல வரலாறு:

இத்திருத்தலம் மயிலாடுதுறை அறந்தாங்கிப் பாதையில் உள்ள இரயில் வண்டிக் கூட்டு நிலையம். ஸப்தவிடங்கத் தலங்களுள் தலைமையானது. மயிலாடுதுறை, கும்பகோணம், மன்னார்குடி முதலிய நகரங்களில் இருந்து பேருந்துகள் செல்கின்றன. **வீதி விடங்கப் பெருமானே** எல்லா இடங்கட்கும் முதன்மையாய்த் திருமாலாலும், இந்திரனாலும் பூசிக்கப் பெற்ற சிறப்புடையார். ஆதலின், அவரைச் சூழ ஏனைய ஆறுவிடங்கர்களும் எழுந்தருள, இவர் இத்தலத்து நடுநாயகமாக **தியாகராஜர்** என்ற திருப்பெயரோடு வீற்றிருக்கிறார்.

இத்தலம் மிகத் தொன்மையானது. '**திருவினாள் சேர்வதற்கு முன்னோ பின்னோ திருவாரூர்க் கோயிலாக் கொண்ட நாளே**' என்ற அப்பர் சுவாமிகள் திருவாக்கு இதனை மெய்ப்பிக்கும்.

இத்தலத்தில் பிரமன் கோயில், துருவாச ஆசிரமம், பரவையுண் மண்டளி, திருநீலகண்டர் கோயில், தண்டபாணி கோயில், பரவையார் கோயில், இராஜதுர்க்கை கோயில், நடுவனநாதர் கோயில், மாற்றுரைத்த விநாயகர் கோயில், சோமநாதர் கோயில், குளுந்தாளம்மன் கோயில், எல்லையம்மன் கோயில், ஐயனார் கோயில், உருத்திர கோடீசுவரர் கோயில், குமரகோயில், மாணிக்க நாச்சியார் கோயில் முதலிய கோயில்கள் உள்ளன.

தலப்பெயர்: இத்தலத்துக்குக் கமலாலயபுரம், க்ஷேத்ரவரபுரம், ஆடகேசுரபுரம், மூலாதாரபுரம், சக்திபுரம், கந்தபுரம் எனப் பல பெயர்கள் இலக்கியங்களில் வழங்குகின்றன.

### தீர்த்தங்கள்:

தேவ தீர்த்தம், சங்கதீர்த்தம், சரசுவதி தீர்த்தம் முதலிய 21 தீர்த்தங்கள் இருப்பதாகப் புராணங்கள் புகலுகின்றன.

### உட்கோயில்கள்:

திருக்கோயிலுக்குப் பூங்கோயில் என்றும் பெயர் உண்டு. கோயிலுக்குள் அசலேசம், ஆடகேசம், ஆனந்தேசம், அருணாசலேசம், விசுவகன்மேசம், சித்தீசம் எனப் பல உட்கோயில்கள் உள்ளன. அவற்றுள் அசலேசம் திருநாவுக்கரசரால் பாடப் பெற்றது.

**மூர்த்திகள்:**

ஐங்கலக்காசு விநாயகர், வன்மீகநாதர், தியாகேசர், வாதாபி விநாயகர், நீலோத்பலாம்பிகை, விடங்கர், தருணேந்துசேகரர், கமலாம்பிகை, சுந்தரர், சேரமான் முதலிய மூர்த்திகள் எழுந்தருளப் பெற்றுள்ளனர்.

**வாத்தியம்:**

பஞ்சமுக வாத்தியம், பாரி நாயனம், சுத்த மத்தளம் என்பவை இத்தலத்துக்குச் சிறந்த வாத்தியங்கள்.

தியாகப்பள்ளு, தியாகக்குறவஞ்சி, வீராணுக்கவிசயம் என்பன இத்தலத்தில் ஆடப்பட்ட கூத்துக்களில் சில.

**மண்டபங்கள்:**

தேவாசிரிய மண்டபம், பக்தகாட்சி மண்டபம், ஊஞ்சல் மண்டபம், துலாபார மண்டபம், சபாபதி மண்டபம், புராண மண்டபம், இராச நாராயண மண்டபம், தட்டஞ்சுற்றி மண்டபம், வசந்த மண்டபம், திருப்பள்ளித்தாம மண்டபம் முதலிய பல மண்டபங்கள் உள்ளன.

**கல்வெட்டு:**

சோழர்கள் தம் அரண்மனைத் தெய்வங்களாக வைத்துப் போற்றும் சிவாலயங்களில் இத்தலத்துக் கோயில் முதன்மையானது. இத்தலம் கயமாணிக்க வளநாட்டைச் சார்ந்த திருவாரூர் என்றும், அதிராஜ வளநாட்டைச் சேர்ந்த திருவாரூர் என்றும் க்ஷத்திரிய சிகாமணி வளநாட்டுத் திருவாரூர்க் கூற்றத்துத் திருவாரூர் என்றும் கல்வெட்டுக்கள் குறிக்கின்றன.

இரண்டாம் இராஜாதிராஜன் தன் ஆட்சி 16ஆம் ஆண்டில் பெரிய கோபுரத்தையும் சபாபதி மண்டபத்தையும் கட்டினான். செம்பியன் மாதேவியார் அரநெறிக் கோயிலைக் கற்கோயிலாகக் கட்டுவித்தார். இலக்கம தண்டம நாயக்க உடையாருக்கு அவர் மந்திரி நன்றாக ஒரு கோபுரம் கட்டினான். இரண்டாம் இராஜேந்திரன் வீதிவிடங்கநாதர் கருப்பக்கிருகத்தையும், வன்மீக நாதர் கோயிலையும் பொன் வேய்ந்தான். திருமுறை ஆசிரியர்களின் திருநாள்களில் விழாக் கொண்டாட ஏற்பாடுகள் செய்யப் பெற்றிருந்தன.

நம்பியாரூரர் தாயாரான இசைஞானியார் கௌதம கோத்திரத்தைச் சார்ந்த ஞானசிவாசாரியாருடைய புத்திரி என்பதை ஒரு கல்வெட்டு அறிவிக்கிறது.

பராந்தகன், முதலாம் இராஜராஜன், முதலாம் இராஜேந்திரன், முதலாம் இராஜாதி ராஜன், முதலாம் குலோத்துங்கன், இரண்டாம் இராஜேந்திரன், விக்ரம சோழன், இரண்டாம் குலோத்துங்கன், இராஜாதிராஜன் முதலிய சோழ அரசருடைய கல்வெட்டுக்களில் திருவிளக்கு போடுவதற்கும் தேவ தானங்கள் முதலானவை செய்வன பற்றியும் குறிப்பிடப்படுகின்றன.

தியாகராஜ சுவாமி கோயில் இரண்டாம் பிராகார வடசுவரில் உள்ள மனுச்சரிதம் கண்ட கல்வெட்டில் மனுச் சரிதம் முழுவதும் குறிப்பிடப்படுகிறது. இத்தலத்தில், தருமை ஆதி குருமூர்த்திகளின் குருமூர்த்தியாகிய கமலை ஞானப்பிரகாசருக்குத் தஞ்சை மன்னனும், கிருஷ்ண தேவராயனும் அளித்த தேவதானங்களும், வீதிவிடங்கப் பெருமானுக்கும் வன்மீக நாதப் பெருமானுக்கும் நித்தியார்ச்சனை, பெருநீராட்டு இவைகளுக்காக அளித்த தேவ தானங்களும் இராஜாங்கக் கட்டளை என்ற பெயரோடு விளங்கி வருகின்றன. அவற்றை அவர்கள் குருஞான சம்பந்த சுவாமிகளிடத்தில் ஒப்படைத்து விட்டார்கள். அது இப்போதும் தருமை ஆதீன நிர்வாகத்திலேயே நடைபெற்று வருகிறது.

**பதிக வரலாறு:**

செல்வத் தியாகேசர் சேவடி தொழ வேண்டும் என்ற அன்பு வெள்ளம் திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமிகள் உள்ளத்துப் பெருகி வழிகின்றது. அப்பர் பெருமானும் ஆரூர்த் தியாகேசப் பெருமானின் ஆதிரைநாளின் திருவோலக்கச் சிறப்பை எடுத்து விளக்கினார்கள். அதனால் அன்புவெள்ளம் உடைப்பெடுத்து ஓடுகின்றது. ஆரூர்க்கு வழிக்கொண்டு வருகின்றார்கள். கனிந்த சிந்தை கவிதைகளாக வெளிப்படுகின்றது. 'பாடலனான்மறை' என்ற பதிகமாகின்றது. விற்குடி முதலியவற்றை வணங்கிக் கொண்டு திருவாரூர் திருமதிற்புறத்து அணுகுகின்றபோது சிவிகையினின்றும் இறங்கித் தலத்தையும் சிவமாகக் கண்டு, செங்கை நிறைய மலர்களையேந்தித் தூவி திருவிருக்குக் குறளாகிய இதனைத் தமிழ்நாடுய்ய அருளிச் செய்கின்றார்கள்.

## 91. THIRU-AAROOR (THIRU-IRUKKU-K-KURALL)

### HISTORY OF THE PLACE

This sacred place is in a railway junction, in the Mayilaaduthurai - Aranthaangi train route. It is foremost among the seven 'vidanga' temples. Buses ply to this place from Mayilaaduthurai, Kumbakonam and Mannaarkoil.

This place is known also by other names such as Kamalaalayapuram, Khethravarapuram, Aadakesurapuram, Moolaadhaarapuram, Sakthipuram, Kandhapuram etc. The Lord is known as Thiyaagaraajar and the Goddess as Kamalaambikai. The God is also known as Veethi Vidangar and has the distinction of being foremost in being worshipped by Indhiran and others. For this reason, the other six lords known as Vidangars have their shrines, with this as the central jewel among them. This is one of the most ancient temple. The evidence is Saint Appar Swaamigal's words. There are many shrines within this temple, for Biraman, Thiruneelakandar, Dhandapaani, Paravaiyaar, Raajadhurgai, Naduvanaathar, Maarruraiththa Vinaayakar, Somanaathar, Kuluthaalamman, Elliayamman, Iyanaar, Uruththirakoteesuvarar, Kumarar and Maanicka-naachchiyaar, besides Duruvaasa Aasiramam and Paravaiyun Mandali.

In addition, there are some inner shrines in this temple, known as Poongkoyil. These inner shrines are Achalesam, Aadakesam, Anandhesam, Arunaachalesam, Visvakanmesam, Chiththeesam etc. Among these, Acahlesam has the distinction of having being sung by the Saint Appar.

Images of Ingkalakkaasu (ஐங்கலக்காசு) Vinaayakar, Vanmeeakanaathar, Thiyaakesar, Vaathaapivinaayakar, Neelothpalaambikai, Vidangar, Tharunendhu-sekarar, Kamalaambikai, Sundarar and Cheramaan are installed in the temple.

Sacred fords of this temple number 21 and these include Dhevatheerththam, Sangkatheerththam, Sarasuvaththitheertham etc. Special to this temple are certain musical instruments known as Panchamukavaaththiyam, Paarinaayanam and Sudhdhamaththalam. Thiyagappallu, Thiyaagakkuravanjchi and Veeraanuk-kavisayam are certain dances performed at this temple.

There are many mandapams at this temple: Thevaasiraya Mandapam, Bakthakaatchi Mandapam, Oonjal Mandapam, Thulaabaaramandapam, Sabaapathi Mandapam, Puraana Mandapam, Raajanaaraayana Mandapam, Thattanjchurri Mandapam, Vasantha Mandapam and Thiruppalliththaama Mandapam etc.

This temple is the foremost among the Civa temples which the Chola kings adored as their palace deities. According to inscriptions, Raajadhiraajan II had the big gopuram and Sabaapathi Mandapam built in his 16th regnal year. Queen Sembiyan Maadheviyaar had the Aranerikkoyil built as a stone edifice. Raajendhiran II had the shrine roofs of the Veethividangkanaathar sanctum and Vanmeekanaathar shrine paved with gold. A minister of Laakkama Dhandama Naayakka Udaiyaar built a gopuram for the benefit of his king.

Arrangements had been made to celebrate the festivals associated with the authors of the Saiva canon (Thirumurai).

An inscription informs us that the mother of Nambi Aroorar, Isaijnaaniyaar was the daughter of Jnaanasivaachaariyaar of Gouthama Goththiram. Inscriptions of many Chola kings, from Paraanthakan to Raajaadhiraajan speak of their endowments for lamps and other grants.

In the northern wall of the second ambulatory of Thiyaagaraaja Swaami temple, the entire story of Manu is included in an inscription.

Certain services, known as Raajaangkak Kattalai are being observed here in this temple. These were originally from the endowments made by the king of Thanjchai and Krishnadhevaraayar to the Gurumoorthi of the Aadhi Gurumoorthies of the Dharumai Aadheenam, Kamalai Jnaanap Pirakaasar. They include the gifts for the daily worsl.ip and ritual bathing of Veethividangkap Perumaan and Vanmeekanaathar. These endowments were submitted by them to Guru Jnaanasambandha Swaami. To this day, the Dharumai Aadheenam administers these endowments. Details of this may be found in the publication 'Thiruvaaroor' (No. 189) by the Aadheenam.

## INTRODUCTION TO THE HYMN

Hearing of the greatness of the Aadirai festival at Aaroor from St. Appar, the youthful saint proceeded to Aaroor to adore Lord Thyagaraja. Visiting and adoring Thiruvirkudi and other shrines, he eventually arrived at the walled city of Aaroor which appeared verily as Civa Himself when be hailed it in a hymn of Kural metre.

The kural metre employed here, is however slightly different from the standard 'two line' kural 'venba' - (e.g.) Thiru-k-kural has two lines having four and three seers (*சீர்*) respectively. Also *வெண்சீர் வெண்டளை* in all couplets of *திருக்குறள்*.

**Note:** This hymn cast in the metre of Kural is compact of mantras. If duly chanted, the chanter gets blessed with weal, at once physical and spiritual. The greatness of flower-offering in Civa Puja is highlighted in this hymn. Flowers are also symbolic of cardinal virtue. The hymns of our youthful saint are known as verse-garlands.

The offerer is himself a flower or a garland of flowers. From him wafts Civa's fragrance.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 91. திருவாரூர் திரு இருக்குக் குறள்

## 91. THIRU-AAROOR THIRU-IRUKKU-K-KURALL

பண் : குறிஞ்சி
ராகம் : குறிஞ்சி

*Pann: Kurinji*
*Raagam: Kurinji*

சித்தந்தெளிவீர்காள், அத்தனாரூரை
பத்திமலர்தூவ, முத்தியாகுமே. 1

*சித்தம் தெளிவீர்காள்! அத்தன் ஆரூரைப்*
*பத்திமலர் தூவ, முத்தி ஆகுமே.*

cittam teLivIrkAL! attan2 ArUraip
patti malar tUva, mutti AkumE.

**பொருள்:** சித்தம் மாசு நீங்கித் தெளிவடைய விரும்புகின்றவர்களே, அனைவர்க்கும் தலைவனாய் ஆரூரில் எழுந்தருளியிருக்கும் பெருமானைப் பக்தியோடு மலர் தூவி வாழ்த்துங்கள். சித்தத் தெளிவோடு முக்தி கிடைக்கும்.

**குறிப்புரை:** திருவிருக்குக்குறள் என்பது, வீடு, காதலிப்பவரால் விரும்பப் பெறும் பாடல். இரண்டு சீர்களான் யாக்கப்பெற்ற இருக்கு மந்திரம் போன்ற பாடல். வேதங்களுள் இருக்கு, மந்திர வடிவாக உள்ளது. அதுபோல இப்பதிகமும் மந்திர வடிவாக உள்ளது எனலும் ஆம். மந்திரம் சொற்சுருக்கம் உடையது; எண்ணுவார் எண்ணத்தை ஈடேற்ற வல்லது. அதுபோல இதுவும் அமைந்திருப்பது காண்க.

அநாதியே ஆன்மாவைப் பற்றி நிற்கும் பாசத்தால் இரு வினைக்கீடாகக் கருவயிற் பிண்டமாய் வளர்ந்து பிறந்து, பரிபாகமுற்ற வினைகள் துன்ப இன்பங்களையும் ஊட்டுகின்ற காலத்து வருந்தி மகிழ்ந்து, அலைகின்ற ஒழியாத் துன்பத்தினின்றும் உய்தி வேண்டும் உத்தமர்களை அழைத்து, அன்போடு மலர் தூவுங்கள். கைகளால் தொழுங்கள். எடுத்து வாழ்த்துங்கள். உங்களுடைய பற்று அறும். வினைகள் விண்டுபோம். இன்பமுத்தி எய்தலாம் எனப் பயனும் வழியும் வகுப்பன இப்பத்துப் பாடல்களும். இம் முதற்பாட்டு முத்தி எய்தலாம் என்பதனைத் தெரிவித்து, அதற்கு உபாயம் உணர்த்துகின்றது.

சித்தம் தெளிவீர்காள் – மலமறைப்பாற் கலக்குண்ட சித்தந் தெளிய விரும்புபவர்களே. அத்தன் – அனைவர்க்கும் தலைவன், திருஆரூரில் எழுந்தருளியுள்ள தியாகேசப் பெருமானை பத்தியோடு மலர் தூவி வழிபடுங்கள் முத்தியாகும் என்பது போந்த பொருள். தெளிவீர்காள் என்று எதிர்காலத்தாற் கூறியது மலர் தூவல் முதலிய கிரியைத் தொண்டுகள் சித்தந்தெளிதற்கு ஏதுவென்பது தெரித்தற்கு; கிரியையென மருவும் யாவையும் ஞானங் கிடைத்தற்கு நிமித்தம் என்பது ஞான சாத்திரமாகலின், மலர் தூவ என்றது இறைவனும், ஞானாசாரியனும் எழுந்தருளியுள்ள இடங்களை மலர் தூவி வழிபடல் மரபு என்பதை விளக்கி நிற்கின்றது. முத்தியாகும் என முத்தியை வினை முதலாகக் கூறியருளியது திருவருட் பதிவு உற்றகாலத்துத் தாமே வந்தெய்துவதோர் சிவானந்தமாதலின்.

Oh! Ye devotees! you are anxious to get rid of defects from your mind and seek clarity. Worship Lord Civan our father, with devotion and praise Him offering flowers to Him who is entempled in Thiru-aaroor. Your mind will become pure and you will get salvation.

பிறவி யறுப்பீர்காள், அறவ னாரூரை
மறவா தேத்துமின், துறவி யாகுமே. 2

*பிறவி அறுப்பீர்காள்! அறவன் ஆரூரை*
*மறவாது ஏத்துமின்! துறவி ஆகுமே.*

piRavi aRuppIrkAL! aRavan2 ArUrai
maRavAtu Ettumin2! tuRavi AkumE.

**பொருள்:** பிறப்பினை அறுத்துக் கொள்ள விரும்புபவர்களே, அறவடிவினனாகத் திருவாரூரில் எழுந்தருளியிருக்கும் இறைவனை மறவாது ஏத்துங்கள். பிறப்பிற்குக் காரணமான ஆசைகள் நீங்கித் துறவு நிலை எய்தலாம்.

**குறிப்புரை:** முத்தியாதற்குப் பிறவி இடையூறாதலின் அப்பிறப்பு, பாவத்தைப் பற்றி வருவதொன்றாதலின், பாவமோ பற்றுள்ளம் காரணமாக எழுவதாகலின், காரியமாகிய பிறப்பினையறுக்க விரும்புவார்க்குத் துறவியாதலே சிறந்த உபாயம் என்பதை உணர்த்துகின்றது இப்பாட்டு.

அறவன் – தரும வடிவன். மறவாது ஏத்துமின் – நினைப்பின்றி நினைத்து வழிபடுங்கள். நெஞ்சோடு படாத செயலும் உண்டன்றே. அங்ஙனமின்றிப் புத்திபூர்வமாக வழிபடுங்கள். துறவியாகும் – பிறவிக்கு ஏதுவாகிய பற்றுள்ளங்கழியும் என்பதாம். மறங்கடிய அறவனாலன்றி யாகாது என்பது உணரக் கிடக்கின்றது. துறவி – துறவு. வி, தொழில் விகுதி.

Oh! Ye devotees! You desire to put an end to your birth and death cycle. The easy way is, not to forget to hail and worship Lord Civan who is entempled in Thiru-aaroor as an embodiment of Dharma. Then you can become an ascetic and put an end to your birth and death cycle.

துன்பந்துடைப்பீர்காள், அன்பனணியாரூர்
நன்பொன்மலர்தூவ, இன்பமாகுமே. 3

**துன்பம் துடைப்பீர்காள்! அன்பன் அணி ஆரூர்**
**நன்பொன்மலர் தூவ, இன்பம் ஆகுமே.**

tun2pam tuTaippIrkAL! an2pan2 aNi ArUr
nan2pon2malar tUva, in2pam AkumE.

**பொருள்:** துன்பங்களைத் துடைத்துக் கொள்ள விரும்புகின்றவர்களே, அழகிய ஆரூரில் எழுந்தருளியுள்ள அன்பு வடிவான இறைவனை நல்ல பொலிவுடைய மலர்களைத் தூவி வழிபடுங்கள். துன்பம் நீங்குவதோடு இன்பம் உளதாம்.

**குறிப்புரை:** பிறந்தார் உறுவது பெருகிய துன்பமாதலின் அதனைத் துடைக்க வேண்டும் என்பதும், அதற்கு உபாயம் மலர் தூவலே என்பதும் உணர்த்துகின்றது இப்பாடல்.

அன்பன் – சிவன். அன்பனணி யாரூர் – அன்பனால் அழகு பெறும் ஆரூர். பொன்மலர் தூவ என்பது செம்பொன்னும் வெண் பொன்னுமாகிய இரண்டாலும் பூக்கள் செய்து அவற்றை முல்லை மலரோடு கலந்து தூவுதல் மரபு. இன்பம் ஆகும் – துன்ப நீக்கத்திற்குத் தொழுத உங்கட்கு இன்பமும் ஆகும் என்பதாம். இன்பம் என்றது இம்மையின்பத்தையும் நிரதிசயா நந்தப் பேரின்பத்தையும்.

Oh! Ye devotees! You seek to end your miseries in life. The easy way - you worship the ever-loving Lord Civan of Thiru-aaroor, by strewing bright and fair aromatic flowers; your life will be ever joyful.

உய்யலுறுவீர்காள், ஐயனாரூரைக்
கையினாற்றொழ, நையும்வினைதானே. 4

*உய்யல்உறுவீர்காள்! ஐயன் ஆரூரைக்*
*கையினால்-தொழ, நையும், வினைதானே.*

uyyal uRuvIrkAL! aiyan2 ArUraik
kaiyin2Al-toza, naiyum, vin2aitAn2E.

***பொருள்:*** உலக வாழ்க்கையிலிருந்து கடைத்தேற விரும்புகின்றவர்களே, ஆரூரில் எழுந்தருளிய தலைவனாகிய இறைவனைக் கைகளைக் கூப்பி வணங்குங்கள். உங்கள் வினைகள் மெலிவடையும். உய்தி பெறலாம்.

***குறிப்புரை:*** இப்பாடல் துன்பந்துடைத்து உய்தியை விரும்புவீராயின் கைகளால் தொழுங்கள் என்றருளிச் செய்கின்றது. ஐயன் - தலைவன். வினைதானே நையும் என்றது தொழுவாரிடம் இருப்புக் கொள்ள இடமின்மையால் வல்வினைகள் மெலிந்துபோம் என்பதாம். வினை உண்டாலன்றிக் கழியாதாகலின் நையும் என்றார்.

Oh! Ye devotees! You desire to be relieved of the routine of worldly life. The easy way is to worship with folded hands our Chief, Lord Civan, who is enshrined in Thiru-aaroor. Your bad karma will become functionless. You will be redeemed.

பிண்டமறுப்பீர்காள், அண்டனாரூரைக்
கண்டுமலர்தூவ, விண்டுவினைபோமே. 5

*பிண்டம் அறுப்பீர்காள்!அண்டன் ஆரூரைக்*
*கண்டு மலர் தூவ, விண்டு வினை போமே.*

piNTam aRuppIrkAL! aNTan2 ArUraik
kaNTu malar tUva, viNTu vin2ai pOmE.

**பொருள்:** மீண்டும் பிறவா நிலையைப் பெற விரும்புகின்றவர்களே, ஆரூரில் எழுந்தருளிய அனைத்துலக நாயகனாகிய இறைவனைச் சென்று கண்டு மலர் தூவி வழிபடுங்கள். பிறப்புக்குக் காரணமான வினைகள் விண்டுபோம். பிறவா நிலை எய்தலாம்.

**குறிப்புரை:** கீழைத் திருப்பாட்டு பிராரத்தவினை நைந்துபோம் என்றது. இத் திருப்பாட்டு வரக்கடவ வினைகளும் விண்டுபோம் என்கின்றது. பிண்டம் – கருவில் உறுப்பு நிரம்பாதிருக்கும் தசைத்திரள், 'சிறப்பில் சிதடும் உறுப்பில் பிண்டமும்' என்பது புறநானூறு. பிண்டம் அறுப்பீர்காள் – மீண்டும் விளையும் கருவிடைப் பிண்ட நிலையை அறுப்பவர்களே, அண்டன் ஆரூர் என்றது தேவலோகத்தில் எழுந்தருளியிருந்ததை மனங் கொண்டு கூறியது. அண்டன் – தேவன். வினை விண்டுபோம் – வினைகள் மீண்டும் அங்குரியாதவாறு கெடும். நெல் வாய் விண்டது என்பது போல.

Oh! Ye devotees! You desire not to be born again in this world. The easy way is, to go and have darshan of the Universal Lord Civan enshrined in Thiru-aaroor and offer worship to Him strewing elegant flowers. The bad karma which is the root cause of repeated births will crack and perish. You will attain the state of birthlessness.

பாசமறுப்பீர்காள், ஈசனணியாரூர்
வாசமலர்தூவ, நேசமாகுமே. 6

*பாசம் அறுப்பீர்காள்! ஈசன் அணி ஆரூர்*
*வாசமலர் தூவ, நேசம் ஆகுமே.*

pAcam aRuppIrkAL! Ican2 aNi ArUr
vAcamalar tUva, nEcam AkumE.

**பொருள்:** உயிரோடு பிணைந்துள்ள பாசம் அகல வேண்டுமென விரும்புகின்றவர்களே, அழகிய ஆரூரில் எழுந்தருளியுள்ள ஈசனை மணம் பொருந்திய மலர்களைத் தூவி வழிபடுங்கள். உம்பால் அவனது நேசம் உளதாகும். பாசம் அகலும்.

**குறிப்புரை:** கீழைத் திருப்பாட்டு வினை நீக்கங்கூறியது. அவ்வினையோடு ஒருங்கு எண்ணப் பெறுவதாய், அநாதியே பந்தித்துள்ள பாசமுங் கெடும். இறைவன் நேசமாகும் என்று சொல்கிறது இப்பாட்டு. பாசம் – ஆணவம். கட்டி நிற்பதாகலின் அதனை அறுக்க வேண்டுமாயிற்று. ஆன்ம அறிவைப் பந்தித்து அடக்கி நிற்றலின் பாசம் எனப் பெற்றது. நேசமாகுமே என்பதையுற்று நோக்குகின்ற எம்போன்றவர்களுக்கு, பாசமறுத்த நம்பியாரூரர்க்குத் தோழரானதுபோல நமக்கும் நேசமாவார் என்ற நினைப்பு உண்டாகும். அன்பு முதிரும் என்றுமாம்.

Oh! Ye devotees, that seek to severe attachment to the illusive power which ensnares your soul (*பாசம்*)! The easy way is, to approach the Lord of the Universe (*ஈசன்*) Civan, enshrined in the awe-inspiring town Thiru-aaroor and worship Him

strewing elegant and fragrant flowers on His Holy Feet. Godly love will abound in you. The bad effects of the illusive power will vanish.

வெய்யவினைதீர, ஐயனணியாரூர்
செய்யமலர்தூவ, வையமுமதாமே. 7

*வெய்ய வினை தீர, ஐயன் அணி ஆரூர்*
*செய்யமலர் தூவ, வையம் உமது ஆமே.*

veyya vin2ai tIra, aiyan2 aNi ArUr
ceyyamalar tUva, vaiyam umatu AmE.

***பொருள்:*** கொடிய வினைகள் தீர வேண்டுமென விரும்புகின்றவர்களே, அழகிய ஆரூரில் அனைத்துயிர்க்கும் தலைவனாகிய இறைவனைச் செம்மையான மலர்களைத் தூவி வழிபடுங்கள். உலகம் உம்முடையதாகும்.

***குறிப்புரை:*** இருவகை வினையும் தீரவேண்டும் என்றும், தீர்ந்தால் உலகமுழுதும் உடைமையாம் என்றும் உணர்த்துகின்றது இப்பாடல். வெய்ய வினை – விரும்பத்தக்க நல்வினையும் கொடிய தீவினையும். இரண்டும் பொன் விலங்கும் இரும்பு விலங்கும் போலத் தளைத்து நிற்பவாகலின் நல்வினையும் தீரவேண்டுவதாயிற்று. செய்ய மலர் – சிவந்த மலர். வையம் உமதாம் – எலி மாவலியாகி வையமுழுதாண்டாற்போல உமதாம் என்பதாம். விளி முதற்பாட்டில் இருந்து கொள்ளப் பெறும்.

Oh! Ye devotees! who want to get rid of the harshness of your bad karma. The easy way for you is to go to the imposing town of Thiru-aaroor where our Universal Father (*ஐயன்*) is enshrined, and worship Him with devotion, by strewing elegant flowers on His Holy Feet.

அரக்கனாண்மையை, நெருக்கினானாரூர்
கரத்தினாற்றொழத், திருத்தமாகுமே. 8

*அரக்கன் ஆண்மையை நெருக்கினான் ஆரூர்*
*கரத்தினால் - தொழ, திருத்தம் ஆகுமே.*

arakkan2 ANmaiyai nerukkin2An2 ArUr
karattin2Al-toza, tiruttam AkumE.

***பொருள்:*** அரக்கர் தலைவனாகிய இராவணனின் ஆற்றலைக் கால்விரல் ஒன்றால் நெருக்கி அடர்த்து அழித்து ஆரூரில் எழுந்தருளிய இறைவனைக் கைகளால் தொழுவீர்களாக. உமது மனக் கோணல் நீங்கும். திருத்தம் பெறலாம்.

**குறிப்புரை:** செய்ய மலர் தூவி உலகாளும் அரசனாகிய காலத்து உண்டாகிய தருக்கையும் களைந்து திருத்தம் நல்குவர் தியாகேசர் ஆதலின் அவர் தலத்தைக் கையினாற்றொழ வேண்டும் என்கின்றது இப்பாடல். அரக்கன் – சிவபூசையை விதிமுறையியற்றி ஆட்சியும் படையும் பெற்ற இராவணன். ஆண்மை – திருவருட்பதிவு இன்மையால் தன்முனைப்பால் எழுந்த வன்மை. நெருக்கினான் – அடர்த்தவன். திருத்தம் – தூய்மை. திருத்தமாகும் – கோணல் நீங்கும் என்றுமாம். அரக்கன் தருக்கழித்த இறைவனது ஆரூர் தொழத் திருத்தமாம் என்க.

Oh! Ye devotees! If you worship with your two folded hands - Lord Civan enshrined in Thiru-aaroor, who crushed the mightiness of Raavanan, you will for sure get poised in righteousness.

துள்ளுமிருவர்க்கும், வள்ளலாரூரை
உள்ளுமவர்தம்மேல், விள்ளும்வினைதானே. 9

**துள்ளும் இருவர்க்கும் வள்ளல் ஆரூரை**
**உள்ளுமவர்தம்மேல் விள்ளும், வினைதானே.**

tuLLum iruvarkkum vaLLal ArUrai
uLLumavar tammEl viLLum, vin2aitAn2E.

**பொருள்:** செருக்குற்றுத் துள்ளிய திருமால் மற்றும் பிரமரின் செருக்கு அடக்கி அருள் செய்த, ஆரூரில் எழுந்தருளிய வள்ளற் பெருமானை மனத்தால் நினைத்து வழிபட வல்லவர்களின் வினைகள் நீங்கும்.

**குறிப்புரை:** அருள் பெற்றுச் சிறிது திருந்திப் பதவிகளின் நிற்பாரும், பதவிமோகத்தான் மயங்குவாராயினும், அவர்கள் மிகைநோக்காதே, அதுதான் ஆன்மவியல்பு என்று திருவுளங் கொண்டு அருள்செய்யும் கருணையாளன் எழுந்தருளியுள்ள ஆரூரை நினைக்க வேண்டும் என்றும், நினைத்தால் ஆகாமிய சஞ்சித வினைகள் அழியும் என்றும் அறிவிக்கின்றது இப்பாடல். துள்ளும் இருவர் – அதிகாரம் பெற்ற சகலான்மாக்களாதலின் மலமுனைப்பால் தாம் பெரியர் எனத் துள்ளுகின்ற பிரம விஷ்ணுக்கள். வள்ளல் – அவர்களுடைய மிகுதி கண்டும் நகையாது வழங்குபவர். உள்ளுதல் – தியானித்தல். மேல் வினை விள்ளும் எனவும் கூட்டலாம்.

Lord Civan curbed the arrogance of Thirumaal and Brahma; later when they realised their folly and repented, Civan graced them. Those who can contemplate on this Lord Civan and offer worship to Him will get freed from the effects of their two

karmas – Sanjitham and Aahaamiyam (*சஞ்சிதம்* and *ஆகாமியம்*) as they will be destroyed by Civan. Praaraththam (*பிராரத்தம்*) will not be scrapped, but will get eliminated only by experiencing it fully in this birth.

கடுக்கொள்சீவரை, அடக்கினானாரூர்
எடுத்துவாழ்த்துவார், விடுப்பர்வேட்கையே. 10

*கடுக் கொள் சீவரை அடக்கினான் ஆரூர்*
***எடுத்து வாழ்த்துவார் விடுப்பர், வேட்கையே.***

kaTuk koL cIvarai aTakkin2An2 ArUr
eTuttu vAzttuvAr viTuppar, vETkaiyE.

**பொருள்:** கடுக்காயைத் தின்று துவர் ஆடை போர்த்துத் திரியும் சமண புத்தர்களை அடக்கியவனாகிய ஆரூர் இறைவனே பரம்பொருள் எனச் சிறப்பித்து வாழ்த்துவார், வேட்கை என்னும் ஆசையை விடுப்பர்.

**குறிப்புரை:** அதிகார மலத்தான் துள்ளுவாரையும் ஆட்கொள்ளும் இறைவன், ஏனைய விஷத்தன்மை பொருந்திய ஆன்மாக்களையும் அடக்கியாளுவர் என்ற கருணையின் மேன்மையைக் காட்டுகின்றது இச்செய்யுள். கடுக்கொள் சீவர் – கடுப்பொடியைக் கொள்ளும் சமணராகிய ஆன்மாக்கள். அடக்கினார் – அத்தன்மை கெடுமாறு அடக்கியவர். எடுத்து வாழ்த்துவார் – உள்ளத்துட்கிடந்த உணர்ச்சி வெள்ளம் உரையிறந்து வருதலின் கேட்டாரும் தம்போலுய்ய உரக்க வாழ்த்துபவர். வேட்கை விடுப்பர் – உரையினைச் செவிகேட்க, கேட்டதனைச் சித்தம் தியானிக்க, அதனால் மனம் ஒடுங்குதலின் பற்றுள்ளத்தை விடுவர் என்பதாம்.

Lord Civan quelled the haughtiness of Samanars who eat Chebulic myrobalam (*கடுக்காய்*), as also that of Buddhists who cover their body with the ruddy and ochre hued cloth. Those who believe in and declare faith in Lord Civan (hailing Him) at Thiru-aaroor as the pre-eminent Lord (*பரம்பொருள்*) of the universe, will be able to discard their life's desire or anything.

சீரூர்சம்பந்தன், ஆரூரைச்சொன்ன
பாரூர்பாடலார், பேராரின்பமே. 11

*சீர்ஊர் சம்பந்தன் ஆரூரைச் சொன்ன*
*பார்ஊர் பாடலார் பேரார், இன்பமே.*

cIr Ur campantan2 ArUraic con2n2a
pAr Ur pATalAr pErAr, in2pamE.

**பொருள்:** சிறப்புப் பொருந்திய ஞானசம்பந்தன் ஆரூர் இறைவன்மீது பாடிய உலகம் முழுதும் பரவிய பாடல்களைப் பாடி வழிபட வல்லவர் இன்பத்தினின்று நீங்கார்.

**குறிப்புரை:** முத்தியாகுமே என முதற்பாட்டில் அருளியவர்கள் அதற்கிடையூறான பிறவி வினை பாசம் இவைகளையும், இவைகளை நீக்கும் உபாயங்களையும், நீங்கியார் எய்தும் பயனையும் முறையே கூறினார்கள். இத்தகைய பாடல்கள் பத்தையும் பயில்வாரும் அத்தகைய இன்பத்தை எய்துவர்; பேரார்; நிலையாவரெனத் திருக்கடைக்காப்புச் செய்து அருள்கின்றார்கள். சீர் ஊர் – சீகாழி பாரூர் பாடல் – உலகமுழுதும் பரவிப் பண்படுத்தும் பாடல். இன்பம் பேரார் – பெற்ற இன்பத்தினின்றும் மீளார். பேராவின்பப் பெருவாழ்வெய்துவர் என்பதாம். கீழ்ப்பாடல்களும் ஆரூரை மலர்தூவ அடையும் பயனை ஐந்து பாடல்களும், தொழுவார் எய்தும் பயனை இரண்டு பாடல்களும், வாழ்த்துவார் எய்தும் பயனை இரண்டு பாடல்களும் பாடற்பயனை ஒரு பாடலும் உணர்த்துகின்றன.

The distinguished Gnaanasambandan sang hymns on Civan of Thiru-aaroor that became world famous. Those who can chant these verses and worship this Aaroor of Lord Civan will never part with the highest bliss they acquire.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*91ஆம் பதிகம் முற்றிற்று*
End of 91st Hymn

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

## 92. திருவீழிமிழலை (திரு இருக்குக் குறள்)

### திருத்தல வரலாறு:

நான்காம் பதிகம் பார்க்க.

### பதிக வரலாறு:

திருஞானசம்பந்த சுவாமிகள் திருநாவுக்கரசு நாயனாரோடு திருவீழிமிழலையில் வீற்றிருந்தபோது பெரும்பஞ்சம் உண்டாக, அப்பசியால் உயிர்கள் வாடின. அடியார்களும் வருந்தினர். அதுகண்ட நாயன்மார்கள் 'கண்ணுதலான் திருநீற்றுச் சார்பினோர்க்கும் கவலை வருமோ' எனத் திருவுள்ளத்து எண்ணித் துயின்றனர். அன்று இரவு இறைவன் கனவில் தோன்றி, 'கால மாறுதலினால் நீங்கள் கவலை கொண்டுள்ளீர்கள்; எனினும் உங்கள் அடியார்களின் வாட்டத்தைத் தீர்க்கும் பொருட்டுப் பஞ்சம் நீங்கும்வரை பீடத்தின் கிழக்குப் பகுதியிலும் மேற்குப் பகுதியிலுமாகப் படிக்காசு ஒவ்வொன்று அளிக்கின்றோம்' என்று அருள்செய்தனர். விடியலில் இருவரும் சென்று அவ்வாறே இருக்கக் கண்டு எடுத்து வந்து அடியார்கட்கு அமுதளித்தனர். வாகீசர் திருமடத்தில் காலம் தாழ்த்தாது அமுதூட்டப் பெறுதலையும் தமது காசு வட்டம் கொடுத்து மாற்றப் பெறுதலையும் அறிந்த சிவஞானப் பிள்ளையார் திருக்கோயிலுக்குச் சென்று 'வாசி தீரவே' என்னும் இப்பதிகத்தை அருளிச் செய்து வாசியில்லாக் காசு பெற்று, சிவனடியார்களுக்கு காலந்தவறாது திருவமுதளித்து எழுந்தருளி இருந்தனர். சில நாட்களில் பஞ்சம் நீங்கிற்று.

## 92. THIRU-VEEZHI-MIZHALAI (THIRU-IRUKKU-K-KURALL)

### HISTORY OF THE PLACE

See Fourth Hymn.

### INTRODUCTION TO THE HYMN

When our young saint and St. Appar were sojourning in Thiru-veezhi-mizhalai a famine assailed the country. To relieve the distress of His devotees, Civa blessed each of the saints with a gold coin, daily. The coin received by Saint Sambandar was inferior

to the one received by St. Appar. The saint therefore prayed to Civa through this hymn requesting coins matching the coins received by St. Appar. His prayer was answered.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 92. திருவீழிமிழலை திரு இருக்குக் குறள்

## 92. THIRU-VEEZHI-MIZHALAI THIRU-IRUKKU-K-KURALL

பண் : குறிஞ்சி
ராகம் : குறிஞ்சி

*Pann: Kurinji*
*Raagam: Kurinji*

வாசிதீரவே, காசுநல்குவீர்
மாசின்மிழலையீர், ஏசலில்லையே. 1

வாசி தீரவே, காசு நல்குவீர்!
மாசு இல் மிழலையீர்! ஏசல் இல்லையே.

vAci tIravE, kAcu nalkuvIr!
mAcu il mizalaiyIr! Ecal illaiyE.

**பொருள்:** குற்றம் அற்ற வீழிமிழலையில் எழுந்தருளியுள்ள இறைவரே, அடியேனுக்கு வழங்கி அருளும் காசில் உள்ள உயர்வு தாழ்வு நீங்குமாறு செய்து நல்ல காசினை நல்குக. அதனால் உமக்குப் பழிப்பு இல்லை.

**குறிப்புரை:** வாசி – உயர்வு தாழ்வு (வட்டமாகக் கழிக்கும் பணம்). மாசு – குற்றம். ஏசல் – நிந்தனை.

Oh! Lord Civa! You are enshrined in the flawless Thiru-veezhi-mizhalai. Pray, grant that the gold coin You are giving me daily be not of inferior quality. By doing this graceful deed none will blame You.

இறைவராயினீர், மறைகொண்மிழலையீர்
கறைகொள்காசினை, முறைமைநல்குமே. 2

இறைவர் ஆயினீர்! மறை கொள் மிழலையீர்!
கறை கொள் காசினை முறைமை நல்குமே!

iRaivar Ayin2Ir! maRai koL mizalaiyIr!
kaRai koL kAcin2ai muRaimai nalkumE!

**பொருள்:** எல்லாருக்கும் இறைவனாக விளங்கும் பெருமானீரே, வேதங்களின் ஒலி நிறைந்த திருவீழிமிழலையில் எழுந்தருளி இருப்பவரே, கறை படிந்ததாக அளிக்கப்படும் காசில் உள்ள அக்கறையை நீக்கி முறையாக அளித்தருள்க.

**குறிப்புரை:** இறைவர் ஆயினீர் என இயற்கையே இறைவரை ஆயினீர் என ஆக்கம் கொடுத்துக் கூறினார். முறைப்படி வேற்றுமையறக் கொடுக்காமையால். கறைகொள் காசு – அழுக்கு படிந்த காசு; நாள்படச் சேமித்து வைத்த காசு என்பது கருத்து.

Oh! Lord Civan! You are the Supreme Being for all in the Universe. You are enshrined in Thiru-veezhi-mizhalai where the chanting sounds of Vedas fill the atmosphere. Pray kindly remove the blemishness in the coin You are giving me daily.

செய்யமேனியீர், மெய்கொண்மிழலையீர்
பைகொளரவினீர், உய்யநல்குமே. 3

*செய்யமேனியீர்! மெய் கொள் மிழலையீர்!*
*பை கொள் அரவினீர்! உய்ய, நல்குமே!*

ceyyamEn2iylr! mey koL mizalaiylr!
pai koL aravin2Ir! uyya, nalkumE!

**பொருள்:** சிவந்த திருமேனியை உடையவரே, மெய்ம்மையாளர் வாழும் திருவீழிமிழலையில் எழுந்தருளி இருப்பவரே, படம் எடுக்கும் பாம்பை அணிகலனாகப் பூண்டுள்ளவரே, நாங்களனைவரும் உய்யுமாறு வாசியில்லாததாகக் காசு அருளுக.

**குறிப்புரை:** மெய் – உண்மைத் தன்மை. பை – படம்.

Oh! Lord Civa! You are having an elegant holy frame! You are enshrined in Thiru-veezhi-mizhalai, where true holymen reside. You wear the hood spreading serpent as Your ornament. We are Your servitors. We thrive by the coin which You are giving us daily. Pray, let the coin be flawless.

நீறுபூசினீர், ஏறதேறினீர்
கூறுமிழலையீர், பேறுமருளுமே. 4

*நீறு பூசினீர்! ஏறுஅது ஏறினீர்!*
*கூறு மிழலையீர்! பேறும் அருளுமே!*

nIRu pUcin2Ir! ERu atu ERin2Ir!
kURu mizalaiyIr! pERum aruLumE!

**பொருள்:** திருவெண்ணீற்றை அணிந்தவரே, ஆனேற்றில் ஏறி வருபவரே, பலராலும் புகழப்பெறும் திருவீழிமிழலையில் எழுந்தருளியவரே, காசு அருளுவதோடு எமக்கு முத்திப் பேறும் அருளுவீராக.

**குறிப்புரை:** பேறும் அருளும் – காசு கொடுத்ததோடமையாது; வீடு பேற்றையும் கொடும் என்பதாம்.

Oh! Lord Civa of the far renowned Thiru-veezhi-mizhalai! You are adorned with the holy ashes, all over Your body. Your mount is the Bull. In addition to the coin You are giving us daily, kindly grace us with divine bliss also.

காமன்வேவவோர், தூமக்கண்ணினீர்
நாமமிழலையீர், சேமநல்குமே. 5

*காமன் வேவ, ஓர் தூமக்கண்ணினீர்!*
*நாம மிழலையீர்! சேமம் நல்குமே!*

kAman2 vEva, Or tUmak kaNNin2Ir!
nAma mizalaiyIr! cEmam nalkumE!

**பொருள்:** காமனை எரித்து அழியுமாறு செய்த புகை பொருந்திய அழல் விழியை உடையவரே, புகழ் பொருந்திய திருவீழிமிழலையில் எழுந்தருளியவரே, எமக்குச் சேமத்தை அருளுவீராக.

**குறிப்புரை:** தூமக்கண் – புகையோடு கூடிய தீக்கண். நாமம் – புகழ் சேமம் – பாதுகாவல். க்ஷேமம் என்பதன் திரிபுமாம்.

Oh! Lord Civa of the celebrated Thiru-veezhi-mizhalai! You stared at Kaaman (God of Love - *காமன்*) through Your smoke surrounding fiery eye, and burnt him to death. Pray! Be pleased to give us Your full protection.

பிணிகொள்சடையினீர், மணிகொண்மிடறினீர்
அணிகொள்மிழலையீர், பணிகொண்டருளுமே. 6

*பிணி கொள் சடையினீர்! மணி கொள் மிடறினீர்!*
*அணி கொள் மிழலையீர்! பணிகொண்டு அருளுமே!*

piNi koL caTaiyin2Ir! maNi koL miTaRin2Ir!
aNi koL mizalaiyIr! paNikoNTu aruLumE!

**பொருள்:** கட்டப்பட்ட சடையை உடையவரே, நீலமணி போன்ற கண்டத்தை உடையவரே, அழகு பொருந்திய திருவீழிமிழலையில் எழுந்தருளி இருப்பவரே, எம்மைப் பணி கொண்டு அருளுவீராக.

**குறிப்புரை:** பிணிகொள் சடையினீர் – கட்டிய சடையை உடையவரே. மணி – நீலமணி. பணி – ஏவல்.

Oh! Lord Civa of well decorated Thiru-veezhi-mizhalai! Your neck is of dark blue colour similar to the sapphire gem. You keep Your strands of hair well bound to each other. Kindly grace us by taking our services upon You.

மங்கைபங்கினீர், துங்கமிழலையீர்
கங்கைமுடியினீர், சங்கைதவிர்மினே. 7

*மங்கை பங்கினீர்! துங்க மிழலையீர்!*
*கங்கை முடியினீர்! சங்கை தவிர்மினே!*

magkai pagkin2Ir! tugka mizalaiyIr!
kagkai muTiyin2Ir! cagkai tavirmin2E!

பொருள்: உமையம்மையை ஒரு பாகமாகக் கொண்டவரே, உயர்வுடைய திருவீழிமிழலையில் உறைபவரே, கங்கை சூடிய திருமுடியை உடையவரே, எங்களது ஐயுறவைப் போக்கி அருளுக.

**குறிப்புரை:** பங்கு – ஒரு பகுதி. துங்கம் – உயர்வு. சங்கை – சந்தேகம். தேவரீரிடம் வேற்றுமை சிறிதும் இல்லையாகவும் நாங்கள் சந்தேகிக்கிறோம். வாசிதீர அளித்து அதனைப் போக்கி அருளும்.

Oh! Lord Civa! You are having Your consort Umaa Devi on the left half of Your body frame! You are abiding in the lofty Thiru-veezhi-mizhalai. You are having the river Ganges in Your matted hair. Pray, dispel our misgivings.

அரக்க னெரிதர, இரக்கமெய்தினீர் 8
பரக்குமிழலையீர், கரக்கைதவிர்மினே.

அரக்கன் நெரிதர, இரக்கம் எய்தினீர்!
பரக்கும் மிழலையீர்! கரக்கை தவிர்மினே!

arakkan2 neritara, irakkam eytin2Ir!
parakkum mizalaiyIr! karakkai tavirmin2E!

**பொருள்:** இராவணன் கயிலை மலையின்கீழ் அகப்பட்டு நெரிய இரக்கம் காட்டி அருளுபவரே, எங்கும் பரவிய புகழ் உடைய திருவீழிமிழலையில் உறைபவரே, எமக்கு அளிக்கும் காசில் உள்ள குறையைப் போக்கியருளுக.

**குறிப்புரை:** அரக்கன் – இராவணன். பரக்கும் – எங்கும் புகழ் பரவிய. கரக்கை – வஞ்சகம்.

Oh! Lord Civa! You are enshrined in the far famed Thiru-veezhi-mizhalai. When Raavanan got crushed under Your mount Kailash, You relented and graced him. Pray remove disparities in the coins You are giving us daily.

அயனுமாலுமாய், முயலுமுடியினீர் 9
இயலுமிழலையீர், பயனுமருளுமே.

அயனும் மாலும்ஆய் முயலும் முடியினீர்!
இயலும் மிழலையீர்! பயனும் அருளுமே!

ayan2um mAlum Ay muyalum muTiyin2Ir!
iyalum mizalaiyIr! payan2um aruLumE!

**பொருள்:** நான்முகனும் திருமாலும் அடிமுடி காண முயலும் போது, அவர்கள் காணமுடியாத பேருருவம் கொண்டவரே, எல்லோரும் எளிதில் வழிபட இயலுமாறு திருவீழிமிழலையில் எழுந்தருளியவரே, எமக்கு வீட்டின்பத்தை அருளுவீராக.

***குறிப்புரை:*** பயன் – வீட்டின்பம்.

Oh! Lord Civa! You took the huge form of a blazing fire when Thirumaal and Brahma ventured out to see Your Holy Feet and head. You are enshrined in Thiru-veezhi-mizhalai to enable everyone to worship You easily. Pray! grace us by granting us holy bliss also.

பறிகொள்தலையினார், அறிவதறிகிலார்
வெறிகொள்மிழலையீர், பிறிவதரியதே. **10**

***பறிகொள் தலையினார் அறிவது அறிகிலார்;***
***வெறி கொள் மிழலையீர்! பிறிவுஅது அரியதே.***

paRikoL talaiyin2Ar aRivatu aRikilAr;
veRi koL mizalaiyIr! pirivu atu ariyatE.

**பொருள்:** ஒன்றொன்றாக மயிர் பறித்த தலையினை உடைய சமணர்கள் அறிய வேண்டிய உண்மை ஞானங்களை அறியாது வாழ்கின்றனர். மணம் கமழும் திருவீழிமிழலையில் உறைபவரே, நாங்களனைவரும் உம்மைப் பிரிந்து வாழ்தல் இயலாது.

***குறிப்புரை:*** பறிகொள் தலையினார் – மயிர் பறித்த தலையை உடைய சமணர். அறிவது அறியவேண்டிய உண்மை ஞானங்களை, வெறி – மணம்.

Oh! Lord Civa! The Samanars should realise Your supremacy; but without any knowledge that You are the Supreme Lord of the universe, they lead a wasteful life. They pluck their hair one by one and keep their head bald. You are enshrined in the fragrant Thiru-veezhi-mizhalai. We, Your devotees cannot have an independent life separated from You.

காழிமாநகர், வாழிசம்பந்தன்
வீழிமிழலைமேல், தாழுமொழிகளே. 11

காழி மா நகர் வாழி சம்பந்தன்
வீழிமிழலைமேல் - தாழும் மொழிகளே.

kAzi mA nakar vAzi campantan2
vIzimizalaimEl-tAzum mozikaLE.

**பொருள்:** இத்திருப்பதிகம் சீகாழிப் பதியாகிய பெரிய நகருள் தோன்றி வாழும் ஞானசம்பந்தன் திருவீழிமிழலை இறைவர்மேல் தாழ்ந்து பணிந்து போற்றிய மொழிகளைக் கொண்டதாகும்.

**குறிப்புரை:** வீழிமிழலைமேல் தாழும் மொழிகளே வல்லார் எல்லா நன்மையும் எய்துவர் எனச் செயப்படுபொருளும், வினையும் வருவித்து முடிக்க.

These humble verses were sung by Gnaanasambandan of the famed city of Seekaazhi on Lord Civan of Thiru-veezhi-mizhalai. Those who can chant these verses with devotion will be graced by Lord Civan of Thiru-veezhi-mizhalai.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*92ஆம் பதிகம் முற்றிற்று*
End of 92nd Hymn

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

## 93. திருமுதுகுன்றம் (திரு இருக்குக் குறள்)

### திருத்தல வரலாறு மற்றும் பதிக வரலாறு:

12ஆம் பதிகம் பார்க்கவும்

## 93. THIRU-MUTHU-KUN-DRAM (THIRU-IRUKKU-K-KURALL)

### HISTORY OF THE PLACE AND INTRODUCTION TO THE HYMN

See Twelfth Hymn.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

**93. திருமுதுகுன்றம்**
**திரு இருக்குக் குறள்**

**93. THIRU-MUTHU-KUN-DRAM**
**THIRU-IRUKKU-K-KURALL**

பண் : குறிஞ்சி
ராகம் : குறிஞ்சி

*Pann: Kurinji*
*Raagam: Kurinji*

நின்றுமலர்தூவி, இன்றுமுதுகுன்றை
நன்றுமேத்துவீர்க், கென்றுமின்பமே. 1

நின்று மலர் தூவி, இன்று முதுகுன்றை
நன்றும் ஏத்துவீர்க்கு என்றும் இன்பமே.

nin2Ru malar tUvi, in2Ru mutukun2Rai
nan2Rum EttuvIrkku en2Rum in2pamE.

**பொருள்:** இன்றே திருமுதுகுன்றம் சென்று, அங்குள்ள இறைவனை மலரால் அருச்சித்து நின்று நல்லமுறையில் துதிப்பீராயின் உமக்கு எக்காலத்தும் இன்பம் உளதாம்.

**குறிப்புரை:** இன்றைக்கே முதுகுன்றை மலர்தூவி ஏத்தும் உங்களுக்கு என்றைக்கும் இன்பமாம் என்கின்றது. ஒருநாள் வழிபாட்டிற்கு நிலைத்த இன்பம் வரும் என்கின்றது.

Ye devotees! should you, this day, stand before Lord Civan in Thiru-muthu-kun-dram, offer flowers at His Holy Feet and adore Him with deep devotion, you will enjoy holy bliss forever.

அத்தன்முதுகுன்றைப், பத்தியாகிநீர்
நித்தமேத்துவீர்க், குய்த்தல்செல்வமே. 2

*அத்தன் முதுகுன்றை, பத்திஆகி, நீர்,*
*நித்தம் ஏத்துவீர்க்கு உய்த்தல் செல்வமே.*

attan2 mutukun2Rai, patti Aki, nIr,
nittam EttuvIrkku uyttal celvamE.

**பொருள்:** நீர் திருமுதுகுன்றத்துத் தலைவனாய் விளங்கும் இறைவன்மீது பக்தி செலுத்தி நாள்தோறும் வழிபட்டு வருவீராயின் உமக்குச் செல்வம் பெருகும்.

**குறிப்புரை:** உய்த்தல் செல்வமே – பொருந்துதல் செல்வமேயாகும் என்றது பொருள் பெருகும் என்பதாம்.

Ye devotees! With piety and sincerity if you daily worship Lord Civan who is the Supreme of Thiru-muthu-kun-dram, your prosperity will be ever on the increase.

ஐயன்முதுகுன்றைப், பொய்கள்கெடநின்று
கைகள்கூப்புவீர், வையமுமதாமே. 3

*ஐயன் முதுகுன்றை, பொய்கள் கெட நின்று,*
*கைகள் கூப்புவீர்! வையம் உமது ஆமே.*

aiyan2 mutukun2Rai, poykaL keTa nin2Ru,
kaikaL kUppuvIr! vaiyam umatu AmE.

**பொருள்:** திருமுதுகுன்றத்துள் விளங்கும் தலைவனாகிய சிவபிரானை நீர் பலவகையான பொய்கள் இன்றி உண்மையோடு நின்று கைகளைக் கூப்பி வழிபடுவீர்களாயின் உலகம் உம்முடையதாகும்.

**குறிப்புரை:** ஐயன் – தலைவன். பொய்யில்லாதவருக்கு உலகமே உரிமையாம் என்பதை விளக்கியவாறு.

Ye devotees! Without any falsities in your ways of adoration, if you worship with folded hands, Lord Civa, the Supreme of Thiru-muthu-kun-dram with all sincerity and devotion, the whole world will be yours (you will become a world renowned personality).

ஈசன்முதுகுன்றை, நேசமாகிநீர்
வாசமலர்தூவப், பாசவினைபோமே. 4

*ஈசன் முதுகுன்றை நேசம்ஆகி நீர்*
*வாசமலர் தூவ, பாசவினை போமே.*

Ican2 mutukun2Rai nEcam Aki nIr
vAcamalar tUva, pAcavin2ai pOmE.

**பொருள்:** திருமுதுகுன்றத்து ஈசனை நீர் அன்போடு மணம் பொருந்திய மலர்களால் அருச்சித்துவரின் உம் பாசங்களும் அவற்றால் விளைந்த வினைகளும் நீங்கும்.

**குறிப்புரை:** நேசமாகி – அன்பாகி. பாசவினை – பாசமும் வினையும்.

Ye devotees! Worship in sheer love, by strewing fragrant flowers at the Holy Feet of Civan, the Supreme Lord of the Universe enshrined in Thiru-muthu-kun-dram. Your bad karma and its evil effects will disappear from you.

மணியார்முதுகுன்றைப், பணிவாரவர்கண்டீர்
பிணியாயினகெட்டுத், தணிவாருலகிலே. 5

*மணி ஆர் முதுகுன்றைப் பணிவார் அவர்கண்டீர்,*
*பிணி ஆயின கெட்டுத் தணிவார் உலகிலே.*

maNi Ar mutukun2Raip paNivAr avar kaNTIr,
piNi Ayin2a keTTut taNivAr, ulakilE.

**பொருள்:** அழகிய திருமுதுகுன்றத்து இறைவனைப் பணிபவர்கள், பிணிகளில் இருந்து விடுபட்டு உலகில் அமைதியோடு வாழ்வார்கள்.

**குறிப்புரை:** மணி – அழகு, முத்துமாம். தணிவார் – அமைதி உறுவார்கள்.

Those who adore Civan enshrined in the renowned city Thiru-muthu-kun-dram will get relieved from further ailments and will lead a peaceful life in this world.

மொய்யார்முதுகுன்றில், ஐயாவெனவல்லார்
பொய்யாரிரவோர்க்குச், செய்யாளணியாளே. 6

*"மொய் ஆர் முதுகுன்றில் ஐயா!" என வல்லார்*
*பொய்யார், இரவோர்க்கு; செய்யாள் அணியாளே.*

"moy Ar mutukun2Ril aiyA!" en2a vallAr
poyyAr, iravOrkku; ceyyAL aNiyALE.

**பொருள்:** அன்பர்கள் நெருங்கித் திரண்டுள்ள திருமுதுகுன்றத்து இறைவனை, நீங்கள், 'ஐயா' என அன்போடு அழைத்துத் துதிக்க வல்லீர்களாயின் இரப்பவர்க்கு இல்லை என்னாத நிலையில் திருமகள் நிறை செல்வத்தோடு உங்களுக்கு அணியள் ஆவாள்.

**குறிப்புரை:** மொய் – நெருக்கம், ஐயா எனத் தோத்திரிக்க வல்லவராய இரவலர்க்கு இல்லை என்று பொய்யும் சொல்லாதவர்களுக்குச் செய்யவள் அணியள் ஆவாள் என்றவாறு.

Lord Civan is enshrined in Thiru-muthu-kun-dram where beloved persons in large numbers gather to worship Him. Ye devotees! If you offer worship to this Civan with sincere love, declaring "Oh sire - you are our Father!", you will never say 'No' to those who solicit your help, the goddess 'Thirumagal', goddess of wealth, will always be near you ready to shower grace on you.

விடையான்முதுகுன்றை, இடையாதேத்துவார் 7
படையாயினசூழ, உடையாருலகமே.

விடையான் முதுகுன்றை இடையாது ஏத்துவார்
படைஆயின சூழ, உடையார், உலகமே.

viTaiyAn2 mutukun2Rai iTaiyAtu EttuvAr
paTaiAyin2a cUza, uTaiyAr, ulakamE.

**பொருள்:** விடை ஊர்தியை உடைய திருமுதுகுன்றத்து சிவபிரானை இடையீடுபடாது ஏத்துகின்றவர், படைகள் பல சூழ உலகத்தை ஆட்சிசெய்யும் உயர்வை உடையவர் ஆவர்.

**குறிப்புரை:** இடையாது – இடையீடு படாது. உலகம் உடையார் – சக்கரவர்த்தியாவர்.

Lord Civan of Thiru-muthu-kun-dram owns a bull as vehicle to ride on. Those who worship this Civan with all devotion and without any break will rise to such high status as 'Emperor' and rule over the world having large and varied types of defence forces.

பத்துத்தலையோனைக், கத்தவிரலூன்றும் 8
அத்தன்முதுகுன்றை, மொய்த்துப்பணிமினே.

பத்துத்தலையோனைக் கத்த விரல் ஊன்றும்
அத்தன் முதுகுன்றை மொய்த்துப் பணிமினே!

pattuttalaiyOn2aik katta, viral Un2Rum
attan2 mutukun2Rai moyttup paNimin2E!

**பொருள்:** பத்துத் தலைகளை உடைய இராவணனை அவன் கதறி அழுமாறு கால் விரலை ஊன்றி அடர்த்த திருமுதுகுன்றத்துத் தலைவனாகிய சிவபிரானை நெருங்கிச் சென்று பணிவீராக.

**குறிப்புரை:** மொய்த்து – நெருங்கி.

Oh! Ye devotees! Go in large numbers near unto Lord Civan of Thiru-muthu-kun-dram and worship Him. He is our valiant Supremo who pressed His toe on mount Kailash and made the ten headed Raavanan to cry aloud as he was unable to bear the weight of the mountain on his head and shoulders.

இருவரறியாத, ஒருவன்முதுகுன்றை
உருகிநினைவார்கள், பெருகிநிகழ்வோரே. 9

இருவர் அறியாத ஒருவன் முதுகுன்றை
உருகி நினைவார்கள் பெருகி நிகழ்வோரே.

iruvar aRiyAta oruvan2 mutukun2Rai
uruki nin2aivArkaL peruki nikazvOrE.

**பொருள்:** திருமால் மற்றும் பிரமன் ஆகிய இருவரும் அறியவொண்ணாத திருமுதுகுன்றத்தில் விளங்கும் பெருமானை மனம் உருகி நினைப்பவர் பெருக்கத்தோடு வாழ்வர்.

**குறிப்புரை:** இருவர் – அயனும் மாலும்.

Lord Civan of Thiru-muthu-kun-dram is beyond the comprehension (even of) Thirumaal and Brahma. Those who contemplate on, and adore Him with sincerity and melting love, will live in all splendour.

தேரரமணரும், சேரும்வகையில்லான்
நேரின்முதுகுன்றை, நீர்நின்றுள்குமே. 10

தேரர் அமணரும் சேரும் வகை இல்லான்
நேர் இல் முதுகுன்றை நீர் நின்று உள்குமே.

tErar amaNarum cErum vakai illAn2,
nEr il mutukun2Rai nIr nin2Ru uLkumE!

**பொருள்:** புத்தர் சமணர் ஆகியோர்க்குத் தன்னை வந்தடையும் புண்ணியத்தை அளிக்காத சிவபெருமானுடைய திருமுதுகுன்றத்தை வாய்ப்பு நேரின், நீர் நேரில் நின்று தியானியுங்கள்.

**குறிப்புரை:** உள்கும் – தியானியுங்கள்.

Lord Civan did not grace the Buddhists and Samanars who do not reach Thiru-muthu-kun-dram and worship Him. Ye devotees! If you get an opportunity to go to Thiru-muthu-kun-dram meditate on and worship Him.

நின்றுமுதுகுன்றை, நன்றுசம்பந்தன் 11
ஒன்றுமுரைவல்லார், என்றுமுயர்வாரே.

நின்று முதுகுன்றை நன்று சம்பந்தன்
ஒன்றும் உரை வல்லார் என்றும் உயர்வாரே.

nin2Ru mutukun2Rai nan2Ru campantan2
on2Rum urai vallAr en2Rum uyarvOrE.

**பொருள்:** திருமுதுகுன்றம் சென்று நின்று பெருமை உடையவனாகிய ஞானசம்பந்தன் ஒன்றி உரைத்த இப்பதிகப் பாடல்களை ஓத வல்லவர் எக்காலத்தும் உயர்வு பெறுவர்.

**குறிப்புரை:** ஒன்றும் உரை – அவன் தான் என வேறின்றி ஒன்றிய உரை.

The glorious Gnaanasambandan, with all steadfastness sang this hymn on Lord Civan of Thiru-muthu-kun-dram. Those who can chant these ten verses of this hymn will reach excellence in every walk of their life.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*93ஆம் பதிகம் முற்றிற்று*
End of 93rd Hymn

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

## 94. திருஆலவாய்

### திருத்தல வரலாறு:

7ஆம் பதிகம் பார்க்கவும்.

### பதிக வரலாறு:

திருஞானசம்பந்த சுவாமிகள் மதுரையின் வெளிப்புறம் வந்து சேர்ந்த பொழுது அங்கு குலச்சிறையார் எதிர்கொண்டு வணங்கிப் போற்றி வழிபட்டு அழைத்துச் சென்றார்கள். உடன் வரும் அடியார்கள் 'இதுதான் திருஆலவாய்' எனக் காட்டக்கண்டு கரங்குவித்தருளிப் பதிகம் பாடித் திருக்கோயிலை அடைந்தார்கள். ஆலவாய் அண்ணலை ஆராத அன்பினுடன் வழிபட்டுப் புளகம் மெய்யெல்லாம் போர்ப்ப, கண்ணீர் வாரத் திருமுன்னின்று 'நீலமாமிடற்றா லவாயிலான்' என்னும் மூலமாகிய திருவிருக்குக்குறளை மொழிந்தார்கள். அடியார்களோடும் சிவானந்த வாரிதியில் திளைத்தார்கள்.

## 94. THIRU-AALAVAAY

### HISTORY OF THE PLACE

See 7th Hymn.

### INTRODUCTION TO THE HYMN

Beholding Aalavoi from the outskirts of Madurai, our Saint hailed it in a hymn. Then, he arrived at the temple and adored the Lord-God. He prostrated before Him times without number. Tears cascaded from his eyes. His divine frame glowed in splendour. Then he hailed the God of Aalavoi in the hymn that is as follows:

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 94. திருஆலவாய் — 94. THIRU-AALAVAAY

பண் : குறிஞ்சி — திரு இருக்குக் குறள் — *Pann: Kurinji*
ராகம் : குறிஞ்சி — THIRU-IRUKKU-K-KURALL — *Raagam: Kurinji*

நீலமாமிடற், றாலவாயிலான்
பாலதாயினார், ஞாலமாள்வரே. 1

*நீலமாமிடற்று ஆலவாயிலான்-*
*பால்அது ஆயினார் ஞாலம் ஆள்வரே.*

nIlamAmiTaRRu AlavAyilAn2-
pAl atu Ayin2Ar njAlam ALvarE.

**பொருள்:** நீலநிறம் பொருந்திய கண்டத்தினை உடைய திருஆலவாய் இறைவனைச் சென்று தொழுது மனத்தால் அவன் அருகில் இருப்பதாக உணர்பவர்கள், இவ்வுலகை ஆள்வர்.

**குறிப்புரை:** பாலது ஆயினார் – சாமீப்யம் அடைந்தவர்கள்.

Lord Civan whose neck is of dark blue colour, similar to sapphire gem is enshrined in Thiru-aalavoi temple. Those who can go near and worship Him, and contemplate on Him in their mind as though they are in proximity to Him will virtually be like rulers in this world.

**Note:** This state is one of four Patavi (*பதவிகள்*) called 'Saameeppiyam' (*சாமீப்பியம்* or *சாமீபம்*. The other three are Saaloogam; Saaroopam and Saayuchchiyam – *சாலோகம்; சாரூப்பியம்; சாயுச்சியம்*).

ஞாலமேழுமாம், ஆலவாயிலார்
சீலமேசொலீர், காலன்வீடவே. 2

*ஞாலம்ஏழும் ஆம் ஆலவாயிலார்*
*சீலமே சொலீர், காலன் வீடவே!*

njAlam Ezum Am AlavAyilAr
cIlamE collr, kAlan2 vITavE!

**பொருள்:** எம பயம் இன்றி வாழ, ஏழுலகங்களிலும் எழுந்தருளி இருக்கும் ஆலவாய் இறைவனது மெய்ப்புகழையே உரையால் போற்றி வருவீர்களாக.

**குறிப்புரை:** ஞாலம் ஏழுமாம் ஆலவாயில் – உலகேழும் உளதாதற்குக் காரணமாகிய துவாதசாந்தப் பெருவெளியாகிய ஆலவாயில். சீலம் – குணங்கள். வீட – அழிய.

Lord Civan of Thiru-aalavoi is enshrined in all the seven worlds. Ye devotees! worship Him and proclaim His divine glory by chanting the holy scriptures. This will enable you to live without the fear of death. The implication is that, Yama, the god of death will not come near the devotees of Lord Civan.

**Note:** It is also said that the cause for the existence of the seven worlds is this place "Thiru-aalavoi". This is also known as 'Thuvaatha Saantha-p-peruvali' (*துவாத சாந்தப் பெருவெளி*).

ஆலநீழலார், ஆலவாயிலார்
காலகாலனார், பாலதாமினே. 3

**ஆலநீழலார், ஆலவாயிலார்,**
**காலகாலனார்பால்அது ஆமினே!**

AlanIzalAr, AlavAyilAr,
kAlakAlan2Ar pAl atu Amin2E!

**பொருள்:** கல்லால மர நிழலில் வீற்றிருப்பவரும், காலனுக்குக் காலனாய் அவனை அழித்தருளிய பெருவீரரும் ஆகிய ஆலவாய் இறைவனை மனத்தால் அணுகியிருப்பீர்களாக.

**குறிப்புரை:** ஆலநீழலார் – வடஆல விருட்சத்தின் நிழலில் இருப்பவர்.

Lord Civan of Thiru-aalavoi once was seated under the shade of a banyan tree. Also He is the Lord Hero who killed Kaalan, the death god by kicking him down. Ye devotees, at least mentally create a state as though you are near Him and adore Him.

அந்தமில்புகழ், எந்தையாலவாய்
பந்தியார்கழல், சிந்தைசெய்ம்மினே. 4

**அந்தம்இல் புகழ் எந்தை ஆலவாய்**
**பந்தி ஆர் கழல் சிந்தைசெய்ம்மினே!**

antam il pukaz entai AlavAy
panti Ar kazal cintai ceymmin2E!

**பொருள்:** ஆலவாய்க் கோயிலில் உள்ள எந்தையாகிய சிவபெருமானுடைய அழிவில்லாத புகழுக்கு இருப்பிடமான திருவடிகளை மனங்கொள்ளுங்கள்.

**குறிப்புரை:** அந்தமில்புகழ் – எல்லையற்ற புகழ். பந்தியார் – இடமாகக் கொண்டவர். பாசங்களால் கட்டுண்ணாதவர் என்றுமாம்.

Ye devotees! contemplate on and adore the Holy Feet of Lord Civan of Thiru-aalavoi. His Holy Feet is the place for His interminable glory.

ஆடலேற்றினான், கூடலாலவாய்
பாடியேமனம், நாடிவாழ்மினே. 5

***ஆடல் ஏற்றினான் கூடல் ஆலவாய்***
***பாடியே, மனம் நாடி, வாழ்மினே!***

ATal ERRin2An2 kUTal AlavAy
pATiyE, man2am nATi, vAzmin2E!

**பொருள்:** வெற்றியோடு கூடிய எருதை வாகனமாகக் கொண்ட சிவபெருமான் நான்மாடக்கூடல் என்னும் ஆலவாயில், வீற்றிருந்து அருள் புரிந்து வருகின்றார். அவர் புகழைப் பாடி மனத்தால் அவ்விறைவனையே நாடி வாழ்வீர்களாக.

**குறிப்புரை:** ஆடல் ஏறு – வெற்றியோடு கூடிய இடபம். நாடி – விரும்பி. 'அடல் ஏறு' ஆடல் ஏறு என நீட்டித்தது எனலும் கூடும்.

Ye devotees! chant the glory of Thiru-aalavoi also known as 'Naan-maada-k-koodal' (*நான் மாடக் கூடல்*). Lord Civan of this place rides on His victorious bull. Seek Him in your mind, adore Him and flourish.

அண்ணலாலவாய், நண்ணினான்றனை
எண்ணியேதொழத், திண்ணமின்பமே. 6

***அண்ணல் ஆலவாய் நண்ணினான் தனை***
***எண்ணியே தொழ, திண்ணம் இன்பமே.***

aNNal AlavAy naNNin2An2 tan2ai

eNNiyE toza, tiNNam in2pamE.

**பொருள்:** தலைமையாளனும் ஆலவாய் என்னும் மதுரைப் பதியின் கோயிலில் வீற்றிருந்து அருள் வழங்கி வருபவனுமாகிய சோமசுந்தரப் பெருமானையே எண்ணித் தொழுதுவரின் இன்பம் பெறுவது திண்ணமாகும்.

**குறிப்புரை:** எண்ணி – தியானித்து. திண்ணம் – உறுதி.

Lord Civan is our merciful chief god. He is enshrined at the Aalavoi temple in Madurai city where He is known as Lord Somasundarar. Think on Him and on Him alone and adore Him. You are sure to enjoy the bliss.

அம்பொனாலவாய், நம்பனார்கழல்
நம்பிவாழ்பவர், துன்பம்வீடுமே. 7

அம் பொன்-ஆலவாய் நம்பனார்-கழல்
நம்பி வாழ்பவர் துன்பம் வீடுமே.

am pon2--AlavAy nampan2Ar--kazal
nampi vAzpavar tun2pam vITumE.

**பொருள்:** அழகிய பொன் மயமான ஆலவாய்த் திருக்கோயிலில் விளங்கும் இறைவனுடைய திருவடிகளே நமக்குச் சார்வாகும், என நம்பி வாழ்பவரின் துன்பம் நீங்கும்.

**குறிப்புரை:** நம்பனார் கழல் நம்பி – இதுவே எமக்கு இம்மையும் மறுமையும் இன்பமும் வீடும் என்று உறுதி கொண்டு.

Lord Civan is enshrined in the golden Aalavoi temple. Ye devotees, be confident that the Holy Feet of this Supreme Being (*நம்பனார்*) is the only source for your solace. You hail and worship Him. Your miseries will surely disappear.

அரக்கனார்வலி, நெருக்கனாலவாய்
உரைக்குமுள்ளத்தார்க், கிரக்கமுண்மையே. 8

அரக்கனார் வலி நெருக்கன் ஆலவாய்
உரைக்கும் உள்ளத்தார்க்கு இரக்கம் உண்மையே.

arakkan2Ar vali nerukkan2 AlavAy
uraikkum uLLattArkku, irakkam uNmaiyE.

**பொருள்:** அரக்கனாகிய பெருவலி படைத்த இராவணனைக் கால் விரலால் நெரித்தருளிய ஆலவாய் அரன் புகழை உரைக்கும் உள்ளத்தார்க்கு அவனது கருணை உளதாகும் (இத்தகு உள்ளத்தார்க்கு இயல்பாகவே உயிர்கள் மாட்டு இரக்க உணர்வு கூடும் எனப் பொருள் கோடலும் சாலும்).

**குறிப்புரை:** நெருக்கன் – நெருக்கியவன்.

Lord Civan of the Aalavoi temple crushed the mightiest of Asuraas Raavanan by His toe. Those who sing soulfully the glory of this Lord Hero, will definitely be graced by Him (We may also take it that compassionate feelings will naturally arise in those who sing the glory of Lord Civan).

அருவனாலவாய், மருவினான்றனை
இருவரேத்தநின், றுருவமோங்குமே. 9

அருவன், ஆலவாய் மருவினான்தனை
இருவர் ஏத்த, நின்று உருவம் ஓங்குமே.

aruvan2, AlavAy maruvin2An2tan2ai
iruvar Etta, nin2Ru uruvam OgkumE.

**பொருள்:** அருவனாய் விளங்கும் இறைவன் திருவாலவாயில் திருமால் பிரமன் ஆகிய இருவர் போற்றும் உருவனாய் மருவி ஓங்கி நிற்கின்றான்.

**குறிப்புரை:** அருவன் – அருவமானவன். இருவர் – அயனும் மாலும்.

Lord Civan of the Aalavoi temple is formless. However, He took the form of a tall column of blazing fire, when Thirumaal and Brahma worshipped Him.

ஆரநாகமாம், சீரனாலவாய்த்
தேரமண்செற்ற, வீரனென்பரே. 10

"ஆரம் நாகம் ஆம் சீரன், ஆலவாய்த்
தேர் அமண் செற்ற வீரன்" என்பரே.

"Aram nAkam Am cIran2, AlavAyt
tEr amaN ceRRa vIran2" en2parE.

**பொருள்:** பாம்பாகிய ஆரத்தை அணிந்தவனாய், ஆலவாயில் பெரும் புகழாளனாய் விளங்கும் இறைவன், புத்தரையும் சமணரையும் அழித்த பெருவீரன் ஆவான் என்று அடியவர்கள் அவனைப் புகழ்ந்து போற்றுவார்கள்.

**குறிப்புரை:** ஆரம் – மாலை. சீரன் – புகழுடையவன். தேரர் – புத்தர். அமண் – அமணர்.

Servitors praise and adore the glory of Lord Civan of the Aalavoi temple by saying that He wears the snake as His garland and He is the Hero who quelled the Buddhists and Samanars.

அடிகளாலவாய்ப், படிகொள்சம்பந்தன்
முடிவிலின்தமிழ், செடிகணீக்குமே. 11

அடிகள் ஆலவாய், படி கொள் சம்பந்தன்,
முடிவு இல் இன்தமிழ் செடிகள் நீக்குமே.

aTikaL AlavAy, paTi koL campantan2,
muTivu il in2tamiz ceTikaL nIkkumE.

**பொருள்:** ஆலவாயில் எழுந்தருளிய அடிகளாகிய இறைவனது திருவருளில் தோய்ந்த ஞானசம்பந்தனின் அழிவற்ற இனிய இத்தமிழ் மாலை நமக்கு வரும் வினைகளைப் போக்குவதாகும்.

**குறிப்புரை:** செடிகள் – வினைகள்.

Gnaanasambandan was fully united in the grace of Lord Civan of the Aalavoi temple. He sang on this greatest god, this garland of Tamil hymn of unending sweetness. This will cure the singer of his cruel karma.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*94ஆம் பதிகம் முற்றிற்று*
End of 94th Hymn

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# 95. திரு இடைமருதூர்

## திருத்தல வரலாறு:

32ஆம் பதிகம் பார்க்கவும்.

## 95. THIRU-IDAI-MARUTHOOR

### HISTORY OF THE PLACE

See 32nd Hymn.

### INTRODUCTION TO THE HYMN

From Thiru-naa-ke-c-charam our saint proceeded to Thiru-idai-maruthoor singing a hymn on the way. Arriving at the holy place, he entered into the temple, adored Civan and sang the following hymn.

**Note:** The message of this hymn is this. The Lord who dances in the burning ghat burns away the sins of all penitent worshippers. He burns away karma even as He burnt away the hostile three citadels. The bull is an embodiment of Dharma. Constant worship of Civa keeps the devotees in prosperity that knows no decrease. Flower-offerings to Civa are efficacious. The recitation of the hymns of our young saint attenuates and eventually annuls the karma of those that sing on His glory.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 95. திருஇடைமருதூர் 95. THIRU-IDAI-MARUTHOOR

பண் : குறிஞ்சி திரு இருக்குக் குறள் *Pann: Kurinji*
ராகம் : குறிஞ்சி THIRU-IRUKKU-K-KURALL *Raagam: Kurinji*

தோடொர்காதினன், பாடுமறையினன்
காடுபேணிநின், றாடுமருதனே. 1

*தோடு ஓர் காதின்ன்; பாடு மறையினன் -*
*காடு பேணி நின்று ஆடும் மருதனே.*

tOTu Or kAtin2an2; pATu maRaiyin2an2--
kATu pENi nin2Ru ATum marutan2E.

**பொருள்:** திருஇடைமருதூர் இறைவன் தோட்டை, தனது இடத் திருச்செவியில் அணிந்தவன். நான்கு வேதங்களைப் பாடுபவன். சுடுகாட்டை விரும்பி அதன்கண் நின்று ஆடுகின்றவனும் ஆவான்.

**குறிப்புரை:** பேணி – விரும்பி.

Lord Civan of Thiru-idai-maruthoor wears an ola (ஓலை) roll in His left ear. He sings all the four Vedas. He prefers to dance in the burning ghat.

கருதார்புரமெய்வர், எருதேயினிதூர்வர்
மருதேயிடமாகும், விருதாம்வினைதீர்ப்பே. 2

*கருதார் புரம் எய்வர்; எருதே இனிது ஊர்வர்;*
*மருதே இடம் ஆகும்; விருது ஆம், வினை தீர்ப்பே.*

karutAr puram eyvar; erutE in2itu Urvar;
marutE iTam Akum; virutu Am, vin2ai tIrppE.

பொருள்: தம்மைக் கருதாதவராகிய அசுரர்களின் முப்புரங்களை எய்து அழித்தவரும், எருதை வாகனமாகக் கொண்டு இனிதாக ஊர்பவரும் ஆகிய சிவபெருமானுக்கு திருவிடைமருதூரே விரும்பி உறையும் இடம் ஆகும். அவரைத் தொழுதால் புகழ் சேரும். தீய வினைகள் தீர்ந்து விடும்.

**குறிப்புரை:** கருதார் – பகைவர். விருது ஆம் – பெருமை உளதாம். வினை தீர்ப்பு ஆம் – வினைகள் தீர்தலை உடையனவாம்.

Lord Civan destroyed all the three citadels of the Asuraas who ignored Him. He rides happily on His bull. He loves to reside in Thiru-idai-maruthoor. Ye devotees! If you worship Him you will become famous; and your bad karma will have no effect on you.

எண்ணுமடியார்கள், அண்ணன்மருதரைப்
பண்ணின்மொழிசொல்ல, விண்ணுந்தமதாமே. 3

*எண்ணும் அடியார்கள் அண்ணல் மருதரை,*
*பண்ணின் மொழி சொல்ல விண்ணும் தமது ஆமே.*

eNNum aTiyArkaL aNNal marutarai,
paNNin2 mozi colla, viNNum tamatu AmE.

**பொருள்:** மனத்தால் எண்ணி வழிபடும் அன்பர்களின் தலைமையாளராய் விளங்கும் மருதவாணரைப் பண்ணிசையோடு அவர்தம் புகழைப் போற்ற, விண்ணுலகமும் அவர்கள் வசமாகும்.

**குறிப்புரை:** அண்ணல் – பெருமையிற் சிறந்தவர். பண்ணின் மொழி – தோத்திரங்கள்.

Devotees contemplate in their minds on their lofty and sublime Lord Marutha Vaanar (*மருதவாணர்* – Civan) of Thiru-idai-maruthoor and offer worship to Him. They also praise His glory in tuneful melody. They will have an enjoyable heavenly life.

விரியார்சடைமேனி, எரியார்மருதரைத்
தரியாதேத்துவார், பெரியாருலகிலே. 4

*விரி ஆர் சடை மேனி எரி ஆர் மருதரைத்*
*தரியாது ஏத்துவார் பெரியார், உலகிலே.*

viri Ar caTai mEn2i eri Ar marutarait
tariyAtu EttuvAr periyAr, ulakilE.

**பொருள்:** விரிந்த சடைமுடியை உடையவரும், எரிபோன்ற சிவந்த மேனியருமாகிய மருதவாணரைத் தாமதியாது துதிப்பவர் உலகில் பெரியவர் எனப் போற்றப்படுபவர்.

**குறிப்புரை:** எரி – மழு, நெருப்பு. தரியாது – தாமதியாது.

Lord Maruthavaanar of Thiru-idai-maruthoor has spreading matted hair; His ruddy body frame is like that of burning fire. Those who hail Him without any delay (or waste of time) are truly great ones, and will be praised by every one.

பந்தவிடையேறும், எந்தைமருதரைச்
சிந்தைசெய்பவர், புந்திநல்லரே. 5

*பந்த விடை ஏறும் எந்தை மருதரைச்*
*சிந்தை செய்பவர் புந்தி நல்லரே.*

panta viTai ERum entai marutaraic
cintai ceypavar punti nallarE.

**பொருள்:** கட்டுத்தறியில் கட்டத்தக்க விடையின் மேல் ஏறி ஊர்ந்து வரும் எந்தையாராகிய மருதவாணரை மனத்தால் தியானிப்பவர்கள் அறிவால் மேம்பட்டவர் ஆவர்.

**குறிப்புரை:** பந்தவிடை – கட்டோடு கூடிய இடபம்.

Those who contemplate on Lord Civan, our father also known as Maruthavaanan, who rides the bull (normally) kept tethered, are blessed souls with intellectual clarity.

கழலுஞ்சிலம்பார்க்கும், எழிலார்மருதரைத்
தொழலேபேணுவார்க், குழலும்வினைபோமே. 6

*கழலும் சிலம்பு ஆர்க்கும் எழில் ஆர் மருதரைத்*
*தொழலே பேணுவார்க்கு உழலும் வினை போமே.*

kazalum cilampu Arkkum ezil Ar marutarait
tozalE pENuvArkku uzalum vin2ai pOmE.

**பொருள்:** ஒரு காலில் கழலும், பிறிதொரு காலில் சிலம்பும் ஒலிக்கும் உமை பாகராகிய அழகிய மருதவாணரை விரும்பித் தொழுவதை நியமமாகக் கொண்டவர்க்கு வருத்துவதற்கு உரிய வினைகள் துன்புறுத்தாது அகன்று விடும்.

**குறிப்புரை:** கழலும் சிலம்பும் ஆர்க்கும் – ஒருகால் கழலும், ஒருகால் சிலம்பும் ஒலிக்கும். உழலும் வினை – வருத்தும் வினைகள்.

Lord Maruthavaanar (Civan) of Thiru-idai-maruthoor is concorporate with His consort Umaa Devi. In His right Holy Feet the male anklet known as 'Kazhal' (*கழல்; வீரக்கழல்*) made up of a string of little bells will be tinkling; whereas in His left foot the female anklet known as 'Silambu' (*சிலம்பு*) will be making a different sound. Those who with all love make it a routine, to worship this beautiful divine Maruthavaanar will stand freed from mortifying karma. The karma will leave them.

பிறையார்சடையண்ணல், மறையார்மருதரை
நிறையால்நினைபவர், குறையாரின்பமே. 7

*பிறை ஆர் சடை அண்ணல் மறை ஆர் மருதரை*
*நிறையால் நினைபவர் குறையார் இன்பமே.*

piRai Ar caTai aNNal maRai Ar marutarai
niRaiyAl nin2aipavar kuRaiyAr, in2pamE.

**பொருள்:** பிறை பொருந்திய சடைமுடியினை உடைய தலைமையாளர் சிவபெருமான். அவர் வேதங்களை அருளியவர். திருஇடைமருதூரில் விளங்கும் இந்த மருதவாணரை நிறைந்த மனத்தால் நினைப்பவர் இன்பம் நிறையப் பெறுவர்.

**குறிப்புரை:** நிறையால் – நிறைவோடு.

Lord Maruthavaanar of (Civan) Thiru-idai-maruthoor supports the crescent moon in His matted hair. He is the lofty god who authored the Vedas. Those who think of Him wholeheartedly will never be in want of bliss.

எடுத்தான்புயந்தன்னை, அடுத்தார்மருதரைத்
தொடுத்தார்மலர்சூட்ட, விடுத்தார்வேட்கையே. 8

**எடுத்தான் புயம்தன்னை அடுத்தார் மருதரைத்**
**தொடுத்து ஆர்மலர் சூட்ட, விடுத்தார், வேட்கையே.**

eTuttAn2 puyam tan2n2ai aTuttAr marutarait
toTuttu Armalar cUTTa, viTuttAr, vETkaiyE.

**பொருள்:** கயிலை மலையை எடுத்த இராவணனின் தோள்களை நெரித்த மருதவாணருக்கு மாலை சூட்டுவதற்கு மலர் தொடுத்தவர்கள், பிறவிக்குக் காரணமான ஆசையை விடுத்தவர்கள் ஆவர்.

**குறிப்புரை:** எடுத்தான் – கயிலையைத் தூக்கிய இராவணன். வேட்கை – பொருள்கள்மேல் தோன்றும் பற்றுள்ளம்.

Lord Maruthavaanar (Civan) of Thiru-idai-maruthoor crushed the shoulders of Raavanan who tried to lift mount Kailash. Those devotees who worship this Maruthavaanar with flowers (and make garlands) would have done away with desire which is the root cause for their future births.

இருவர்க்கெரியாய, உருவமருதரைப்
பரவியேத்துவார், மருவிவாழ்வரே. 9

இருவர்க்கு எரி ஆய உருவம் மருதரைப்
பரவி ஏத்துவார் மருவி வாழ்வரே.

iruvarkku eri Aya uruvam marutaraip
paravi EttuvAr maruvi vAzvarE.

**பொருள்:** திருமால் பிரமர் அடிமுடி அறிய முடியாதவாறு எரி உருவமாய் நின்றவர் மருதவாணர். அவரைப் புகழ்ந்து ஏத்தித் துதிப்பவர் எல்லா நலன்களோடும் மருவி வாழும் வாழ்க்கையைப் பெறுவர்.

**குறிப்புரை:** இருவர்க்கு – அயனுக்கும் மாலுக்கும். மருவி – எல்லாவற்றோடும் பொருந்தி.

Lord Maruthavaanar of Thiru-idai-maruthoor manifested before Thirumaal and Brahma in the form of a tall and big flame of fire. Those devotees who hail and adore this Maruthavaanar will live in all goodness and be blessed with weal.

நின்றுண்சமண்தேரர், என்றுமருதரை
அன்றியுரைசொல்ல, நன்றுமொழியாரே. 10

நின்று உண் சமண், தேரர், என்றும் மருதரை
அன்றி உரை சொல்ல, நன்று மொழியாரே.

nin2Ru uN camaN, tErar, en2Rum marutarai
an2Ri urai colla, nan2Ru moziyArE.

**பொருள்:** நின்றுண்ணும் சமணரும், புத்தரும் எக்காலத்தும் இடைமருது இறைவனாகிய சிவபெருமானை மாறுபட்ட உரைகளால் கூறுவதால் அவர் எக்காலத்தும் நல்லனவே கூறார்.

**குறிப்புரை:** சமணரும் புத்தரும் என்றைக்கும் மருதப் பெருமானை அன்றிப் பிறவற்றைப் பேசுவதால் நல்லதைச் சொல்லமாட்டார்கள்.

The Samanars who eat while standing as also the Buddhists, will always be speaking everything except on tidings of Lord Maruthavaanar of Thiru-idai-maruthoor. Therefore their words are bereft of truth.

கருதுசம்பந்தன், மருதரடிபாடிப்
பெரிதுந்தமிழ்சொல்லப், பொருதவினைபோமே. 11

கருது சம்பந்தன், மருதர் அடி பாடி,
பெரிதும் தமிழ் சொல்ல, பொருத வினை போமே.

karutu campantan2, marutar aTi pATi,
peritum tamiz colla, poruta vin2ai pOmE.

**பொருள்:** இறைவன் திருவருளையே கருதும் ஞானசம்பந்தன் மருதவாணரின் திருவடிகளைப் பெரிதும் போற்றிப் பாடிய இத்தமிழ் மாலையை ஓதுபவர்க்குத் துன்புறுத்திய வினைகள் போகும்.

**குறிப்புரை:** பொருதவினை – இதுவரையில் வருத்திவந்த வினை.

Thiru Gnaanasambandan always cherishes the grace of Lord Civan. He worshipped the Holy Feet of Maruthavaanar of Thiru-idai-maruthoor and sang this hymn. Those devotees who can chant this garland of Tamil will get rid of their bad karma which was troubling them so far.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*95ஆம் பதிகம் முற்றிற்று*
End of 95th Hymn

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# 96. திருஅன்னியூர்

## திருத்தல வரலாறு:

திருஅன்னியூர் என்ற திருத்தலம் சோழ நாட்டுக் காவிரித் தென்கரைத் தலம். பொன்னூர் எனவும் வழங்கப் பெறும். மயிலாடுதுறை – மணல்மேடு பேருந்துகளில் செல்லலாம். வருணன் பூசித்துப் பேறுபெற்ற தலம். சுவாமி பெயர் ஆபத்சகாயேசுரர். அம்மையின் பெயர் பெரிய நாயகியம்மை. தீர்த்தம் வருண தீர்த்தம்.

## பதிக வரலாறு:

திருஞானசம்பந்தர் திருக்குறுக்கைப் பதியை வணங்கி, அன்னியூரை அடைந்தார்கள். அங்கு எழுந்தருளியுள்ள ஆபத்சகாயநாதர் அடியிணைபோற்றி 'மன்னியூரிறை' என்னும் இப்பதிகத்தை அருளிச் செய்தார்.

# 96. THIRU–ANNIYOOR

## HISTORY OF THE PLACE

This sacred place is to the south of river Cauvery in Chola Naadu and is called Ponnoor. It can be reached by bus from Mayilaaduthurai and Manalmedu.

The name of God of this place is Aabathsakaayesurar and that of the Goddess is Periyanaayaki Ammai. The sacred ford is Varuna Theerththam. Varunan offered worship here and obtained salvation.

## INTRODUCTION TO THE HYMN

From Thirukkurukkai our saint arrived at Anniyoor where he hailed the presiding deity and sang the following hymn:

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 96. திருஅன்னியூர் 96. THIRU–ANNIYOOR

பண் : குறிஞ்சி திரு இருக்குக் குறள் *Pann: Kurinji*
ராகம் : குறிஞ்சி **THIRU-IRUKKU-K-KURALL** *Raagam: Kurinji*

மன்னியூரிறை, சென்னியார்பிறை
அன்னியூரமர், மன்னுசோதியே. 1

*மன்னி ஊர் இறை; சென்னியார் பிறை -*
*அன்னியூர் அமர் மன்னுசோதியே.*

man2n2i Ur iRai; cen2n2iyAr, piRai--
an2n2iyUr amar man2n2ucOtiyE.

**பொருள்:** திருஅன்னியூரில் எழுந்தருளிய நிலைபெற்ற ஒளி வடிவினனாகிய சிவன், பிறை சூடிய திருமுடியோடு பல தலங்களிலும் எழுந்தருளியிருந்து, ஆங்காங்குள்ள மக்கட்குத் தலைவனாய் விளங்குபவன்.

**குறிப்புரை:** சென்னி – தலை. சோதி மன்னி ஊர் இறை என முடிக்க.

Lord Civan is enshrined in Thiru-anniyoor with a body frame blazing bright. He holds the crescent moon in His holy head. Also He is enshrined at various temples in many different places, gracing devotees who approach Him and ruling over them.

பழகுந்தொண்டர்வம், அழகனன்னியூர்க்
குழகன்சேவடி, தொழுதுவாழ்மினே. 2

பழகும் தொண்டர், வம்! அழகன், அன்னியூர்க்
குழகன், சேவடி தொழுது வாழ்மினே!

pazakum toNTar, vam! azakan2, an2n2iyUrk
kuzakan2, cEvaTi tozutu vAzmin2E!

**பொருள்:** இறைவன்பால் மனம் ஒன்றிப் பழகும் தொண்டர்களே வாருங்கள். அன்னியூரில் அழகனாகவும் இளமைத் தன்மை உடையவனாகவும் எழுந்தருளியுள்ள சிவபிரானின் செம்மையான திருவடிகளைத் தொழுது வாழ்வீர்களாக.

**குறிப்புரை:** வம் – வாருங்கள். குழகன் – இளையவன்.

Ye servitors! You that are united mentally and move closely with Lord Civan, do come to Thiru-anniyoor and worship the holy divine feet of the young and beautiful Civan of this place and flourish.

நீதிபேணுவீர், ஆதியன்னியூர்ச்
சோதிநாமமே, ஓதியுய்ம்மினே. 3

*நீதி பேணுவீர்! ஆதி, அன்னியூர்ச்*
*சோதி, நாமமே ஓதி உய்ம்மினே!*

nIti pENuvIr! Ati, an2n2iyUrc
cOti, nAmamE Oti uymmin2E!

**பொருள்:** நீதியைப் போற்றி அதன்படி வாழ்கின்றவர்களே, அன்னியூரில் விளங்கும் ஒளி வடிவினனாகிய சிவபிரான் திருநாமங்களையே ஓதி உய்வீர்களாக.

Ye devotees! You that show respect to justice and lead your life accordingly, pray chant the many divine names of Lord Civan of blazing brightness enshrined in Thiru-anniyoor and flourish.

பத்தராயினீர், அத்தரன்னியூர்ச்
சித்தர்தாள்தொழ, முத்தராவரே. 4

*பத்தர் ஆயினீர்! அத்தர், அன்னியூர்ச்*
*சித்தர், தாள் தொழ முத்தர் ஆவரே.*

pattar Ayin2Ir! attar, an2n2iyUrc
cittar, tAL toza muttar AvarE.

**பொருள்:** இறைவனிடம் பத்திமை பூண்டவர்களே, தலைமையாளனாய் அன்னியூரில் விளங்கும் ஞானவடிவினனின் திருவடிகளைத் தொழுதலால் வினை மாசுகளில் இருந்து விடுபட்டவர் ஆவீர்.

Oh! Ye devotees! You are faithful to Lord Civan. You offer worship to the Holy Feet of Lord Civan who is the chief of Thiru-anniyoor. He is an embodiment of pure intelligence clothed in wisdom. You will be relieved from the evil effects of bad karma.

நிறைவுவேண்டுவீர், அறவனன்னியூர்
மறையுளான்கழற், குறவுசெய்ம்மினே. 5

*நிறைவு வேண்டுவீர்! அறவன், அன்னியூர்*
*மறைஉளான், கழற்கு உறவு செய்ம்மினே!*

niRaivu vENTuvIr! aRavan2, an2n2iyUr
maRai uLAn2, kazaRku uRavu ceymmin2E!

**பொருள்:** மனநிறைவுடன் வாழ விரும்புகின்றவர்களே, அற வடிவினனாய் நான்கு வேதங்களிலும் பரம்பொருளாகக் கூறப்பட்டுள்ள அன்னியூர்ப் பெருமான் திருவடிகளுக்கு அன்பு செய்து அவனோடு உறவு கொள்வீர்களாக.

**குறிப்புரை:** நிறைவு வேண்டுவீர் – குறைவிலா நிறைவாக விரும்புகின்றவர்களே. அறவன் – அறவடிவானவன்.

Oh! Ye devotees! You that would like to live with full divine satisfaction in your mind. Lord Civan of Thiru-anniyoor is virtuous and is praised as the Supreme Being, by the four Vedas. You (therefore) create intimate love for His Holy Feet and be closely associated with Him.

இன்பம்வேண்டுவீர், அன்பனன்னியூர்
நன்பொனென்னுமின், உம்பராகவே. 6

*இன்பம் வேண்டுவீர்! "அன்பன் அன்னியூர்*
*நன்பொன்" என்னுமின், உம்பர் ஆகவே!*

in2pam vENTuvIr! "an2pan2, an2n2iyUr
nan2pon2" en2n2umin2, umpar AkavE!

**பொருள்:** உலக வாழ்க்கையில் இன்பங்களை எய்த விரும்பும் அடியவர்களே, அன்பனாக விளங்கும் அன்னியூர் இறைவனை நல்ல பொன்னே என்று கூறுமின், தேவர்கள் ஆகலாம்.

**குறிப்புரை:** உம்பராக – தேவர்களாக. நன்பொன் என்னுமின் – நல்ல பொன் என்று சொல்லுங்கள்.

Oh! Ye servitors! You that desire to lead a happy worldly life, please adore Lord Civan of Thiru-anniyoor by saying "Oh Lord! You are the weal conferring 'gold like' Supremo of Thiru-anniyoor; You are our dearest one". You can then become one among the Devas.

அந்தணாளர்தம், தந்தையன்னியூர்
எந்தையேயெனப், பந்தநீங்குமே. 7

"அந்தணாளர்தம் தந்தை! அன்னியூர்
எந்தையே!" என, பந்தம் நீங்குமே.

"antaNALartam tantai! an2n2iyUr
entaiyE!" en2a, pantam nIgkumE.

**பொருள்:** அந்தணாளர்களின் தந்தையாக விளங்கும் அன்னியூர் இறைவனை எந்தையே என அழைக்க மலமாயைகள் நீங்கும்.

**குறிப்புரை:** பந்தம் – மலமாயையால் விளைந்த கட்டு.

Oh Lord Civa of Thiru-anniyoor! "You are the Father of all kindly folks of virtue; You are our Father". Extol Him thus! Your bad karma will then leave you.

தூர்த்தனைச்செற்ற, தீர்த்தனன்னியூர்
ஆத்தமாஅடைந், தேத்திவாழ்மினே. 8

தூர்த்தனைச் செற்ற தீர்த்தன் அன்னியூர்
ஆத்தமா அடைந்து, ஏத்தி வாழ்மினே!

tUrttan2aic ceRRa tIrttan2 an2n2iyUr
AttamA aTaintu, Etti vAzmin2E!

பொருள்: காமாந்தகனாகிய இராவணனைத் தண்டித்த புனிதனாகிய அன்னியூர் இறைவனை அடைந்து அன்புக்குரியவனாக அவனைப் போற்றி வாழுங்கள்.

குறிப்புரை: தூர்த்தன் – காமியாகிய இராவணன். தீர்த்தன் – பரிசுத்தமானவன். ஆத்தமா – அன்போடு ஆப்தமாக என்பதன் சிதைவு.

Ye companions! You note that the pure Lord Civa of Thiru-anniyoor is the one who punished Raavanan of carnal tendencies. You proceed to Anniyoor adore Him and be attached to Him and live happily.

இருவர்நாடிய, அரவனன்னியூர்
பரவுவார்விண்ணுக் கொருவராவரே. 9

இருவர் நாடிய அரவன் அன்னியூர்
பரவுவார், விண்ணுக்கு ஒருவர் ஆவரே.

iruvar nATiya aravan2 an2n2iyUr
paravuvAr, viNNukku oruvar AvarE.

**பொருள்:** திருமால் பிரமர்களால் அடிமுடி தேடப்பட்டவரும் பாம்பை அணிகலனாகப் பூண்டவரும் ஆகிய அன்னியூர் இறைவனைப் பரவித் துதிப்பவர் தேவருலகில் இந்திரன் ஆவர்.

**குறிப்புரை:** விண்ணுக்கு ஒருவராவர் – இந்திரன் ஆவர்.

Thirumaal and Brahma went out to reach the Holy Feet and head of Lord Civan in vain. He wears a serpent in His body as an ornament. Those devotees who praise and adore this Lord Civan will become much like Indran in the supernal world.

குண்டர்தேரருக், கண்டனன்னியூர்த்
தொண்டுளார்வினை, விண்டுபோகுமே. 10

குண்டர்தேரருக்கு அண்டன் அன்னியூர்த்
தொண்டுஉளார் வினை விண்டு போகுமே.

kuNTar tErarukku aNTan2 an2n2iyUrt
toNTu uLAr vin2ai viNTu pOkumE.

**பொருள்:** சமணர்களாலும் புத்தர்களாலும் அணுக முடியாதவனாகிய அன்னியூர் இறைவனுக்குத் தொண்டு செய்பவர்களின் வினைகளின் முளைக்கும் தன்மை அழியும்.

**குறிப்புரை:** அண்டன் – அண்ட முடியாதவன். வினை விண்டு போகும் – நெல் வாய் விண்டது போல வினை முளைக்குந் தன்மையழியும்.

Lord Civan of Thiru-anniyoor could not be approached by the Samanars and Buddhists. But those devotees who serve sincerely the Lord Civan of this place, will get their bad karma loose any further development.

**Note:** Civa is beyond the ken of the Samanars and the Buddhists' comprehension.

பூந்தராய்ப்பந்தன், ஆய்ந்தபாடலால்
வேந்தனன்னியூர், சேர்ந்துவாழ்மினே. 11

**பூந்தராய்ப் பந்தன் ஆய்ந்த பாடலால்,**
**வேந்தன் அன்னியூர் சேர்ந்து வாழ்மினே!**

pUntarAyp pantan2 Aynta pATalAl,
vEntan2 an2n2iyUr cErntu, vAzmin2E!

**பொருள்:** பூந்தராய் என்னும் சீகாழிப் பதியில் தோன்றிய ஞானசம்பந்தன் ஆய்ந்து சொல்லிய பாடல்களைப் பாடி அன்னியூர் வேந்தனாகிய சிவபிரானைச் சேர்ந்து வாழ்வீர்களாக.

**குறிப்புரை:** பந்தன் – ஞானசம்பந்தன் என்பதன் முதற்குறை. பூந்தராய் – சீகாழி.

Ye companions! You chant the verses of this hymn sung by Gnaanasambandan of Poontharai alias Seekaazhi. These songs were the fruit of his meditation on Lord Civa. Associate yourself with the sovereign Lord Civa of Thiru-anniyoor and flourish in your life.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*96ஆம் பதிகம் முற்றிற்று*
End of 96th Hymn

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# 97. திருப் புறவம்

## திருத்தல வரலாறு:

இத்திருத்தலம் சீகாழியின் 12 பெயர்களில் ஒன்று. தலவரலாறு முதல் பதிகம் பார்க்கவும்.

## 97. THIRU-P-PURAVAM

## HISTORY OF THE PLACE

See first hymn.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 97. திருப் புறவம்

## 97. THIRU-P-PURAVAM

பண் : குறிஞ்சி
ராகம் : குறிஞ்சி

*Pann: Kurinji*
*Raagam: Kurinji*

எய்யாவென் றித்தானவரூர் மூன்றெரிசெய்த
மையார்கண் டன்மாதுமை வைகுந்திருமேனிச்
செய்யான் வெண்ணீறணி வான்றிகழ்பொற் பதிபோலும்
பொய்யா நாவினந்தணர் வாழும்புறவம்மே. 1

எய்யா வென்றித் தானவர் ஊர்மூன்று எரிசெய்த
மைஆர் கண்டன், மாதுஉமை வைகும் திருமேனிச்
செய்யான், வெண்நீறு அணிவான், திகழ் பொன் பதிபோலும் -
பொய்யா நாவின் அந்தணர் வாழும் புறவ(ம்)மே.

eyyA ven2Rit tAn2avar UrmUn2Ru ericeyta
mai Ar kaNTan2, mAtu umai vaikum tirumEn2ic
ceyyAn2, veNnIRu aNivAn2, tikaz pon2 patipOlum--
poyyA nAvin2 antaNar vAzum puRava(m)mE.

**பொருள்:** திருப்புறவம் என்னும் சீகாழிப் பதியானது இளையாத வெற்றியை உடைய அசுரர்களின் முப்புரங்களை எரித்த நீலகண்டனான சிவபெருமான், உமையம்மையை ஒரு கூறாகக் கொண்டு எழுந்தருளியிருக்கும் அழகிய பதியாகும். இப்பெருமான் சிவந்த மேனியனாய் வெண்ணீறு அணிந்தவராக விளங்குகின்றார். இப்பதியில் பொய் எதுவும் கூறாத நாவினை உடைய அறவோர்கள் வாழ்கின்றனர்.

**குறிப்புரை:** புறவம் திரிபுரம் எரித்த நீலகண்டர் பதிபோலும் என்கின்றது. எய்யா வென்றி – இளையாத வெற்றியை உடைய. தானவர் – அசுரர்கள். மை – விடம். பொய்யா நாவின் அந்தணர் – பொய்யே சொல்லாத நாவினை உடைய அந்தணர். அவர்கள் கூறும் உரை, தவறாத நா என்றலுமாம்.

Seekaazhi town is also known as Thiru-p-puravam. Here live Vedic scholars whose tongue never doth utter a lie. Lord Civan who is also called as Neela-kandan destroyed by fire the three citadels of Asuraas whose might is well nigh unassailable. He concorporates with His consort Umaa Devi on the left half of His holy body. He smears His body with white holy ashes and shines in the beautiful Thiru-p-puravam.

**Note:** Puravam is one of the twelve names of Seekaazhi. "Poyaa naa" (பொய்யா நா): This phrase can also be translated thus "The tongues that know no falsehood".

மாதொரு பாலும்மாலொரு பாலும்மகிழ்கின்ற
நாதனென் றேத்துநம்பரன் வைகுந்நகர் போலும்
மாதவி மேயவண்டி சைபாட மயிலாடப்
போதலர் செம்பொன் புன்னைகொடுக் கும்புறவம்மே. 2

"மாது ஒருபாலும் மால் ஒருபாலும் மகிழ்கின்ற
நாதன்" என்று ஏத்தும் நம்பரன் வைகும் நகர் போலும்
மாதவி மேய வண்டு இசைபாட, மயில் ஆட,
போது அலர் செம்பொன் புன்னை கொடுக்கும் புறவ(ம்)மே.

"mAtu orupAlum mAl orupAlum makizkin2Ra
nAtan2" en2Ru Ettum nampAn2 vaikum nakarpOlum--
mAtavi mEya vaNTu icai pATa, mayil ATa,
pOtu alar cempon2 pun2n2ai koTukkum puRava(m)mE.

**பொருள்:** திருப்புறவம் என்னும் சீகாழிப் பதியானது, ஒரு சமயம் உமையம்மையை ஒரு பாகமாகவும், மற்றொரு சமயத்தில் திருமாலை ஒரு பாகமாகவும் கொண்டு மகிழ்ந்திருக்கின்றவனும், நாதன் எனப் போற்றுகின்றவனுமாகிய சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் நகராகும். இங்குள்ள குருக்கத்தி மரத்தில் மேவிய வண்டுகள் இசைபாட, மயில்கள் ஆடுகின்றன. அவற்றிற்குப் பரிசாகப் புன்னை மரங்களின் விரிந்த மலர்கள் மகரந்தங்களைப் பொன்னாகச் சொரிகின்ற இயற்கை வளம் நிறைந்த புறவம் என்னும் சீகாழிப் பதியாகும்.

**குறிப்புரை:** ஒருபாதி உமையும் ஒருபாதி மாலுமாக இருக்கும் நாதன் நகர் புறவம் என்கின்றது. மாதவி மேய வண்டு – குருக்கத்தியில் மேவிய வண்டுகள். புன்னை போதலர் செம்பொன் கொடுக்கும் புறவம் –

புன்னை மரங்கள் போதாய் இருந்து அலர்ந்து மகரந்தங்களாய செம்பொன்னைக் கொடுக்கும் புறவம். இதனால் மரங்களும் வள்ளன்மை செய்யும் நகரம் என்றறிவித்தவாறு.

Bees tunefully hum in musical note while approaching the 'Kurukkaththi' flower (குருக்கத்தி or மாதவிப்பூ). This flower is known as "The common delight of the woods". They blossom in the groves of Thiru-p-puravam where peacocks dance gracefully. In appreciation of the dance of peacocks the Alexandrian laural tree sheds over the peacocks the golden pollen grains from their flowers. In such a natural graceful city of Thiru-p-puravam, our Supreme Lord Civan is enshrined. He happily accommodates in His body frame His consort Umaa Devi; when desired He accommodates Thirumaal in His body in place of Umaa Devi.

**Note:** Vishnu is one of the five sakthi's of Civa. Civa's body accommodates him occasionally, as it pleases Him.

வற்றாநதி யும்மதியும்பொதி யுஞ்சடைமேலே
புற்றாடர வின்படமாட வுமிப்புவனிக்கோர்
பற்றாயிடு மின்பலியென்ற டைவார்பதி போலும் 3
பொற்றா மரையின்பொய் கைநிலாவும் புறவம்மே.

வற்றா நதியும் மதியும் பொதியும் சடைமேலே
புற்று ஆடு அரவின் படம் ஆடவும், இப்புவனிக்கு ஓர்
பற்று ஆய், "இடுமின், பலி!" என்று அடைவார் பதிபோலும் -
பொன்-தாமரையின் பொய்கை நிலாவும் புறவ(ம்)மே.

vaRRA natiyum matiyum potiyum caTaimElE
puRRu ATu aravin2 paTam ATavum, ip puvan2ikku Or
paRRu Ay, "iTumin2, pali!" en2Ru aTaivAr patipOlum--
pon2-tAmaraiyin2 poykai nilAvum puRava(m)mE.

**பொருள்:** புறவம் என்னும் சீகாழிப் பதியானது என்றும் நீர் வற்றாத கங்கையும், பிறையும் பொருந்திய சடையின்மேல், புற்றை இடமாகக் கொண்ட பாம்பு படத்துடன் ஆடிக் கொண்டிருக்க, 'எனக்குப் பலி இடுமின்' என்று பல ஊர்களுக்குச் செல்லும் சிவபெருமானது பதியாகும். இப்பெருமான் இவ்வுலகத்திற்கு ஒரு பற்றுக் கோடாக இருக்க எமக்குப் பலி இடுமின் என்று வரும் இறைவனது பதி புறவம் ஆகும். இப்பதியில் அழகிய தாமரைகள் மலர்ந்துள்ள பொய்கைகள் உள்ளன (இடுமின் பலி - give alms for the welfare of all in this world).

**குறிப்புரை:** இவ்வுலகத்திற்கு ஒரு பற்றுக் கோடாக இருக்க எமக்குப் பலியிடுங்கள் என்று வரும் இறைவன் பதி புறவம் என்கின்றது. வற்றா நதி – கங்கை. பொற்றாமரையின் பொய்கை நிலாவும் – பொற்றாமரையைப் போல பிரமதீர்த்தம் விளங்குகின்றது.

Lord Civan holds in His matted hair the river Ganges that never goes dry. Also on His head is the crescent moon and a serpent which normally lives in the ant-hill that dances by dancing and spreading its hood. Lord Civan goes to many towns, meet the household women and says "give me alms", so that He would be a support for this world. This Lord Civan is enshrined in Thiru-p-puravam where attractive lotus flowers blossom in the pond.

**Note:** Civa begs for alms from the devotees for their weal and welfare. It serves no purpose at all for Himself. He is the supreme and He lacks nothing. This infinitely merciful Civa entreats mankind to make a gift of their ignorance to Him. This indeed is the alms He seeks for the weal of mankind. Ignorance which is offered to Civa vanishes the moment it is offered to Him.

The devotees of Civa should offer their 'all' to Civa. St. Maanickavaachakar said "O Hill-like One, did You not that very day You redeemed and ruled over me, make me your own – My soul, body and all that I owned? Can I, this day, have any sorrows?" – (Kuzhaittha Patthu - Hymn No. 33, Verse 7)

துன்னார் புரமும்பிரமன் சிரமுந்துணி செய்து
மின்னார் சடைமேலர வும்மதியும் விளையாடப்
பன்னாளி டுமின்பலியென் றடைவார் பதிபோலும்
பொன்னார் புரிநூலந் தணர்வாழும் புறவம்மே. 4

துன்னார்புரமும் பிரமன்சிரமும் துணிசெய்து,
மின்ஆர் சடைமேல் அரவும் மதியும் விளையாட,
பல்-நாள், "இடுமின், பலி!" என்று அடைவார் பதிபோலும் -
பொன் ஆர் புரிநூல் அந்தணர் வாழும் புறவ(ம்)மே.

tun2n2Arpuramum piraman2 ciramum tuNiceytu,
min2 Ar caTaimEl aravum matiyum viLaiyATa,
pal-nAL, "iTumin2, pali!" en2Ru aTaivAr patipOlum--
pon2 Ar purinUl antaNar vAzum puRava(m)mE.

**பொருள்:** சிவபெருமான், *பகைவர்களாகிய* அசுரர்களின் முப்புரங்களையும் அழித்தவர், பிரமனின் தலைகளில் ஒன்றை அழித்தவர், மின்னல் போல் ஒளிவிடும் அவருடைய சடைமுடிமேல் பாம்பும் மதியும் விளையாடுகின்றன. பல நாள்களும் ஊர் ஊராகச் சென்று பலி இடுமின் என்று கூறித்திரிகின்றார். இவர் வாழும் ஊர் சீகாழி என்னும் பதியாகும். இப்பதியில் பொன்னாலாகிய முப்புரிநூல் அணிந்த அறவோர்கள் வாழுகின்றனர்.

**குறிப்புரை:** திரிபுரத்தையும் பிரமன் சிரத்தையும் அழித்து, சடைமேல் பாம்பும் மதியும் விளையாட, பலியிடுங்கள் என்று வருவார் பதி புறவம் என்கின்றது. பொன்ஆர் புரிநூல் – பொன்னாலாகிய பூநூல்.

Lord Civan destroyed the three citadels of the hostile Asuraas; He plucked one of the five heads of Brahma for his misdemeanour. In His matted hair, which blazes like lightning the unfriendly duo - the serpent and the crescent moon joyfully make merry with each other. For many days He goes about seeking alms. This Lord Civan is enshrined at the temple in Thiru-p-puravam where many scholars do live, wearing the sacred three ply thread made of gold.

தேவா அரனேசரணெ ன்றிமையோர் திசைதோறுங்
காவா யென்றுவந் தடையக்கார் விடமுண்டு
பாவார் மறையும் பயில்வோ ருறையும்பதி போலும்
பூவார் கோலச்சோலை சுலாவும் புறவம்மே. 5

"தேவா! அரனே! சரண்!" என்று இமையோர் திசைதோறும்,
"காவாய்!" என்று வந்து அடைய, கார்விடம் உண்டு,
பா ஆர் மறையும் பயில்வோர் உறையும் பதிபோலும் -
பூ ஆர் கோலச் சோலை சுலாவும் புறவ(ம்)மே.

"tEvA! aran2E! caraN!" en2Ru imaiyOr ticaitORum,
"kAvAy!" en2Ru vantu aTaiya, kArviTam uNTu,
pA Ar maRaiyum payilvOr uRaiyum patipOlum--
pU Ar kOlac cOlai culAvum puRava(m)mE.

**பொருள்:** புறவம் என்னும் சீகாழிப் பதியானது, தேவர்கள் பாற்கடலில் தோன்றிய விடத்தின் கொடுமை தாங்காது, திசைதோறும் சூழ்ந்து நின்று, "தேவனே! அரனே! உன்னிடம் அடைக்கலம் எங்களைக் காப்பாயாக!" எனச் சரண் அடைந்தபோது, அந்தக் கரிய விடத்தை தன் தொண்டையில் பதித்துக் கொண்ட சிவபெருமான் வாழும் பதியாகும். இப்பதியில்,

பாடல்களாக அமைந்த வேதங்களைப் பலரும் பயில்கின்றனர். இப்பதியில் மலர்கள் நிறைந்த அழகிய சோலைகள் சூழ்ந்துள்ளன.

**குறிப்புரை:** தேவர்கள் 'தேவதேவா! அடைக்கலம்' என்று அரற்ற, விடம் உண்டவர் பதி இது என்கின்றது. சரண் – அடைக்கலம். கார் விடம் – கரிய விஷம். பா ஆர் மறை – பாக்களோடு கூடிய வேதம்.

When the Devas and Asuraas churned the ocean of milk, the unnerving poison came out of the sea. Unable to bear the severity of the poison the Devas ran helter shelter and stood before Lord Civa and prayed "Oh Deva Deva! Oh! Hara! We surrender to You; protect us from destruction by this poison!! Lord Civan positioned the dark blue poison in His throat and saved everybody. He enjoys in singing the poetic Vedas. This Lord Civan is enshrined in Thiru-p-puravam which is girt with splendid flowery gardens.

கற்றறிவெய் திக்காமன் முன்னாகும் முகவெல்லாம்
அற்றரனே நின்னடிசரணென் னுமடியோர்க்குப்
பற்றதுவாய பாசுபதன் சேர்பதி யென்பர்
பொற்றிகழ் மாடத்தொளி கள்நிலாவும் புறவம்மே. 6

'கற்று அறிவு எய்தி, காமன் முன் ஆகும்(ம்) உகவுஎல்லாம்
அற்று, "அரனே நின் அடி சரண்!" என்னும் அடியோர்க்குப்
பற்றுஅதுஆய பாசுபதன் சேர் பதி' என்பர் -
பொன்-திகழ் மாடத்து ஒளிகள் நிலாவும் புறவ(ம்)மே.

`kaRRu aRivu eyti, kAman2 mun2 Akum(m) ukavu ellAm
aRRu, "aran2E! nin2 aTi caraN!" en2n2um aTiyOrkkup
paRRu atu Aya pAcupatan2 cEr pati' en2par--
pon2-tikaz mATattu oLikaL nilAvum puRava(m)mE.

**பொருள்:** புறவம் என்னும் பதியானது, மெய்யறிவு நூல்களைக் கற்று, அதனால் நல்லறிவு எய்தி, மன்மதனின் தூண்டுதலால் உண்டாகும் காம இச்சைகள் எல்லாம் அழிவுபட்டு, அரனே! நின் திருவடிகளே சரண் என்று சரணடையும் பக்தர்களுக்கு பற்றுக் கோடாய் விளங்கும் பாசுபதன் என்று சொல்லப்படும் சிவபெருமான் எழுந்தருளிய பதியாகும். இப்பதியில் பொன் நிறைந்து விளங்கும் மாடவீடுகளின் ஒளி சூழ்ந்துள்ளது.

**குறிப்புரை:** கற்றறிந்து, காமனுக்கும் முன்னோனாயிருக்கும் முக ஒளியெல்லாம் கெட்டு, அரனே அடைக்கலம் என்னும் அடியவருக்குப் பற்றாய பரன்சேர் பதி புறவம் என்கின்றது. முகவு – முகவொளி.

The devotees of Lord Civan gain wisdom by learning scriptures and get rid of their joys of lust induced by the god of love Kaaman. They pray "Oh! Lord Haraa! We surrender to your Holy Feet which is our only refuge". For these devotees Lord Civan also known as Paasu Pathan (*பாசுபதன்*), becomes their prop and protector. This Lord Civan is enshrined in Thiru-p-puravam where multistoreyed mansions dazzle because of their gold contents.

**Note:** Men and women can transcend lust only by the grace of Civa who reduced Manmata to ashes.

எண்டிசை யோரஞ்சிடுவகை கார்சேர்வரை யென்னக்
கொண்டெ ழுகோலமுகில் போற்பெரிய கரிதன்னைப்
பண்டுரி செய்தோன் பாவனைசெய் யும்பதி யென்பர்
புண்டரிகத் தோன்போன் மறையோர்சேர் புறவம்மே. 7

"எண் திசையோர் அஞ்சிடு வகை கார் சேர் வரை என்ன,
கொண்டு எழு கோல முகில் போல், பெரிய கரிதன்னைப்
பண்டு உரிசெய்தோன் பாவனை செய்யும் பதி" என்பர்-
புண்டரிகத்தோன் போல் மறையோர் சேர் புறவ(ம்)மே.

"eN ticaiyOr anjciTu vakai kAr cEr varai en2n2a,
koNTu ezu kOla mukil pOl, periya karitan2n2aip
paNTu uriceytOn2 pAvan2ai ceyyum pati" en2par--
puNTarikattOn2 pOl maRaiyOr cEr puRava(m)mE.

**பொருள்:** முன்னொரு காலத்தில், எண் திசையில் உள்ளவர்கள் அஞ்சி நடுங்குமாறு, கரிய மலையைப் போலவும், நீரை முகந்து கொண்டு எழுந்த அழகிய கரிய மேகம் போலவும், வந்த பெரிய களிற்று யானையைக் கொன்று, அதன் தோலை உரித்துப் போர்த்த சிவபெருமான் விரும்பியிருக்கும் பதி புறவம் என்னும் சீகாழிப் பதியாகும். தாமரை மலர்மேல் உறையும் நான்முகன் போன்று வேதங்களில் வல்ல அறவோர்கள் இப்பதியில் வாழ்கின்றனர்.

**குறிப்புரை:** திசையெல்லாம் நடுங்க வந்த யானையை உரித்துப் போர்த்தவன் பதி புறவம் என்கின்றது. கார் சேர் வரை – கருமை சேர்ந்த மலை. கோல முகில் போல் – அழகிய மேகத்தைப் போல. பாவனை செய்யும் – விரும்பியிருக்கும். புண்டரிகத்தோன் – பிரமன்.

People living in all the eight directions of this earth once got freightered at sight of a dark mountain like rising vapour clouds. This was really a huge male elephant rushing towards. Lord Civa who killed this elephant and covered His body with its skin. This Lord Civan loves to reside in Thiru-p-puravam where scholars well versed in the Vedas, much like Brahma who is seated in the Lotus flower.

பரக்குந் தொல்சீர்த்தே வர்கள்சேனைப் பௌவத்தைத்
துரக்குஞ் செந்தீப்போ லமர்செய்யுந் தொழில்மேவும்
அரக்கன் திண்டோள ழித்தானக் காலத்திற்
புரக்கும் வேந்தன்சேர் தருமூதூர் புறவம்மே. 8

பரக்கும் தொல்சீர்த் தேவர்கள் சேனைப்பௌவத்தைத்
துரக்கும் செந்தீப் போல் அமர் செய்யும் தொழில் மேவும்
அரக்கன் திண் தோள் அழித்தான் அக்காலத்தில்;
புரக்கும் வேந்தன்; சேர்தரு மூதூர் - புறவ(ம்)மே.

parakkum tol cIrt tEvarkaL cEn2aippauvattait
turakkum centIp pOl amar ceyyum tozil mEvum
arakkan2 tiNtOL azivittAn2, ak kAlattil;
purakkum vEntan2; cErtaru mUtUr--puRava(m)mE.

**பொருள்:** எங்கும் பரவிய பழமையான புகழை உடைய தேவர்களின் கடல் போன்ற படையை ஊழித்தீப் போன்று அழிக்கும் ஆற்றல் கொண்டவன் இராவணன். இவனுடைய வலிய தோள் வலிமையை அக்காலத்தில் அழித்தருளிய சிவபெருமான் எழுந்தருளிய பழமையான ஊர் புறவம் என்னும் சீகாழிப் பதியாகும். இப்பெருமான் அனைத்து உலகங்களையும் காத்தருளும் வேந்தனாக விளங்குகின்றார்.

**குறிப்புரை:** தேவர்களின் சேனைக் கடலை, ஓட்டும் ஊழித் தீயைப் போல, சண்டை செய்யும் இராவணனது தோள் வலியை வாட்டியவனது பதி புறவம் என்கின்றது. பௌவம் – கடல். 'பௌ பௌ' என்று ஒலிப்பதால் பௌவம் எனும் பெயருடையதாயிற்று. சேனைப் பௌவம் – sea of army – large army. துரக்கும் – ஓட்டும்.

Devas had a sea of army. They were all widespread and had earned age old victorious name. Raavanan was more skilled than the Devas, in growing battle like conflagrating fire and used to chase and drive away the Devas from their world. Though Raavanan was such a strong man, Lord Civan crushed his mighty shoulders in the days of yore. This Lord Civan is the protecting sovereign; He is entempled in the ancient town of Thiru-p-puravam.

மீத்திக ழண்டந்தந் தயனோடு மிகுமாலும்
மூர்த்தி யைநாடிக்காண வொணாது முயல்விட்டாங்
கேத்த வெளிப்பாடெய் தியவன்றனி டமென்பர்
பூத்திகழ் சோலைத்தென் றலுலாவும் புறவம்மே. 9

"மீத் திகழ் அண்டம் தந்த(அ)யனோடு மிகு மாலும்,
மூர்த்தியை நாடிக் காண ஒணாது, முயல் விட்டு, ஆங்கு
ஏத்த, வெளிப்பாடு எய்தியவன்தன் இடம்" என்பர் -
பூத் திகழ் சோலைத் தென்றல் உலாவும் புறவ(ம்)மே.

"mIt tikaz aNTam tanta(a)yan2OTu miku mAlum,
mUrttiyai nATik kANa oNAtu, muyal viTTu, Agku
Etta, veLippATu eytiyavan2 tan2 iTam" en2par--
pUt tikaz cOlait ten2Ral ulAvum puRava(m)mE.

**பொருள்:** மேன்மையாக விளங்கும் உலகங்களைப் படைத்த பிரமனும், புகழால் மேம்பட்ட திருமாலும், அழலுருவாய் வெளிப்பட்ட சிவமூர்த்தியின் அடிமுடிகளைக் காணாது, தமது முயற்சியைக் கைவிட்டு ஏத்திப் பணிய, அவர்கட்கு காட்சி தந்தருளிய சிவபெருமானது இடம் புறவம் என்னும் சீகாழிப் பதியாகும். இப்பதியில் உள்ள மலர்கள் நிறைந்த சோலைகளில் தென்றல் காற்று உலாவி மக்களுக்கு சுகத்தை அளிக்கின்றது.

**குறிப்புரை:** அயனும் மாலும் அறியாத பெருமான் இடம் புறவம் என்கின்றது. மூர்த்தியை – உருவங் கொண்ட இறைவனை.

Brahma, the creator of the entire universe and Vishnu of even greater glory went in quest of head and Holy Feet of Civan who stood as a tall big flame of fire, but could not behold Him. When they gave up their attempt and hailed Him, He manifested

Himself before them. This Lord Civan is entempled at Thiru-p-puravam where the southerly wind strolls through the groves full of flowers.

வையக நீர்தீவாயுவும் விண்ணும் முதலானான்
மெய்யல தேரருண்டி லையென்றே நின்றேதங்
கையினி லுண்போர் காணவொணா தான்நக ரென்பர்
பொய்யக மில்லாப்பூ சுரர்வாழும் புறவம்மே. 10

வையகம், நீர், தீ, வாயுவும், விண்ணும், முதல்ஆனான்;
மெய் அல தேரர், "உண்டு, இலை" என்றே நின்றே தம்
கையினில் உண்போர், காண ஒணாதான்; நகர் என்பர் -
பொய் அகம் இல்லாப் பூ சுரர் வாழும் புறவ(ம்)மே.

vaiyakam, nIr, tI, vAyuvum, viNNum, mutal An2An2;
mey ala tErar, "uNTu, ilai" en2RE nin2RE tam
kaiyin2il uNpOr, kANa oNAtAn2; nakar en2par--
poy akam illAp pUcurar vAzum puRava(m)mE.

**பொருள்:** மண், நீர், காற்று, தீ, விண் ஆகிய ஐம்பூதங்களில் நிறைந்து, அவற்றின் முதலாக விளங்கும் இறைவன் சிவபெருமான் ஆவார். இப்பெருமான் எழுந்தருளியுள்ள நகர் புறவம் என்னும் சீகாழிப் பதியாகும். புத்தரும் சமணரும் உண்மையில்லாதவற்றைப் பேசுபவர்கள். 'உண்டு, இல்லை' என்ற உரைகளால் 'அத்தி நாத்தி' எனக் கூறித்திரிபவர்கள். தம் கைகளால் உணவேற்று உண்பவர்கள். இவர்கள் சிவபெருமான் உறையும் நகரைக் காண ஒண்ணார்கள். இந்நகரில் நெஞ்சில் பொய்யறியாத பூசுரர்கள் (அறவோர்கள்) வாழ்கின்றனர்.

**குறிப்புரை:** ஐம்பெரும் பூதமானவனும் புறச் சமயிகளால் பொருந்த ஒண்ணாதவனுமாகிய இறைவன் நகரம் புறவம் என்கின்றது. வையகம் – மண். உண்டு இலை என்று – அஸ்தி நாஸ்தி கூறி. பூசுரர் – அறவோர்.

Civan is the Supreme Primal God who manifests in earth, water, fire, air and space. Samanars and Buddhists speak untrue words. They use the words 'Athhi-Naaththi' to mean 'Yes - No'. They get their alms in their hands and eat direct from their hands. Our Lord Civan who is unknowable to these Samanars and Buddhists abides in Thiru-p-puravam, where Vedic scholars who never indulge in falsehood even in their thoughts do live in large numbers.

பொன்னி யல்மாடப்புரி சைநிலாவும் புறவத்து
மன்னிய ஈசன்சே வடிநாளும் பணிகின்ற
தன்னியல் பில்லாச்சண் பையர்கோன் சீர்ச்சம்பந்தன்
இன்னிசை யீரைந்தேத்த வல்லோர்கட் கிடர்போமே. 11

பொன் இயல் மாடப் புரிசை நிலாவும் புறவத்து
மன்னிய ஈசன் சேவடி நாளும் பணிகின்ற
தன் இயல்பு இல்லாச் சண்பையர் கோன்-சீர்ச் சம்பந்தன்-
இன்இசைஈர்-ஐந்து ஏத்த வல்லோர்கட்கு இடர் போமே.

pon2 iyal mATap puricai nilAvum puRavattu
man2n2iya Ican2 cEvaTi nALum paNikin2Ra
tan2 iyalpu illAc caNpaiyarkOn2--cIrc campantan2--
in2 icaiIr-aintu Etta vallOrkaTku iTar pOmE.

**பொருள்:** சிவபோதமற்றுச் சிவபோதமுடையவனாய்ச் சண்பையர் தலைவனாக மிக்க புகழோடு விளங்குபவர் திருஞானசம்பந்தர். இவர், பொன்னால் இயன்ற மாடங்களின் மதில்கள் சூழ்ந்த புறவம் என்னும் பதியில் நிலைபெற்று விளங்கும் சிவபெருமானின் சேவடிகளை நாள்தோறும் பணிந்து போற்றி இப்பதிகத்தை இன்னிசையோடு பாடினார். இப்பதிகப் பாடல்கள் பத்தையும் பாடித் துதிக்க வல்லவர்களுக்கு இடர் போகும்.

**குறிப்புரை:** புறவத்து ஈசனை, இப்பதிகம் சொல்லி ஏத்த வல்லாருக்கு இடர்போம் என்கின்றது. தன்னியல்பில்லாச் சண்பையர் கோன் – சீவபோதமற்ற திருஞானசம்பந்தர்.

Gnaanasambandan hails from Thiru-p-puravam which is girt with storeyed mansions built in gold. He worships daily with deep devotion the Holy Feet of Lord Civan who is enshrined here permanently, as a result of which he forgot everything about his individuality; while his soul merged its individuality in Civan, the Supreme Being (*சீவபோதம் அற்று சிவபோதம் உடையவன் ஆனார்*). This famed supreme Gnaanasambandar has sung in musical note this hymn of ten verses. Those devotees who can chant these sweet ten verses and offer worship to Lord Civan of Thiru-p-puravam will be freed from their misery.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*97 ஆம் பதிகம் முற்றிற்று*
End of 97th Hymn

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

## 98. திருச்சிராப்பள்ளி

### திருத்தல வரலாறு:

திருச்சிராப்பள்ளி சோழ நாட்டுக் காவிரித் தென்கரைத் தலங்களில் ஒன்று. தமிழகத்தின் பெரிய நகரங்களில் ஒன்று. இரயில், பேருந்து வசதிகள் முதலியன உள்ளன. தமிழகத்தின் அனைத்திடங்களில் இருந்தும் செல்லலாம். இத்தலம் மிக விளக்கமானது. சிறிய மலைக்காட்சியின் முதல் இடமாக உள்ளது. காவிரிக்குத் தென்கரையில் அமைந்தது. கலாசாலைகளும், கல்லூரிகளும் நிறைந்தது. எல்லாவிதமான அறிவுத்துறையிலும் வளர்ச்சிக்குரிய இடமாக இருக்கிறது. சரித்திர காலத்திற்கு முன்பே கி.மு. 2ஆம் நூற்றாண்டிலும் அதற்கு முன்பும் இருந்தே விளங்கி வருவது. சோழர் தலைநகரங்களில் ஒன்றாகிய உறையூரைத் தன்னகத்தே கொண்டு விளங்குவது.

### பெயர்க் காரணம்:

திரிசிராப்பள்ளி என்பதற்கு, திரிசிரன் என்னும் அரக்கன் பூசித்துப் பேறு பெற்றதனால் இப்பெயர் பெற்றது என்று புராணம் கூறும். இங்குள்ள சிறு மலையில் மூன்று சிகரங்கள் உள்ளன. அதனால் திரிசிராப்பள்ளி எனப் பெயர் பெற்றது என்று செவிவழிச் செய்தி நிலவுகிறது. இந்தப் பொருள்களில் வழங்கிய திருச்சிரப்பள்ளி திரிசிராப்பள்ளி ஆதற்கு என்ன விதியுண்டு என்பதை அறிஞர்கள் ஆய்ந்து முடிவு காண்பார்களாக. நமது சமயாசாரியப் பெருந்தகையார்கள் சிராப்பள்ளிக் குன்றுடையானை, சிராப்பள்ளிச் செல்வன், சிரகிரி எனவே வழங்குகின்றார்கள். திரிசிரா என்பதில் திரி என்பது மூன்று என்ற பொருள் குறித்த சொல்லாயின் அதனை விடுத்துச் சிராப்பள்ளி என்று வழங்கியிரார்கள். ஆதலால் அவர்கள் காலத்தில் திரு என்பதை அடைமொழியாகக் கொண்டதே சிராப்பள்ளி என்பதற்கு வேறு பொருள் இருந்திருக்க வேண்டும் என்பதனைக் கருத இடந்தருகின்றது. சிராப்பள்ளி என்றதன் பெயர்க்காரணத்தைப் பற்றி நமது சரித்திரப் பேறறிஞர் **தி.வி. சதா சிவப் பண்டாரத்தார்** அவர்கள் செந்தமிழில் எழுதிய சுருக்கக் கருத்து இங்கே தரப்பெறுகின்றது.

**சிராப்பள்ளிக் கோயில் கட்டியவன் கி.பி. 7ஆம் நூற்றாண்டில் நமது அப்பரடிகளை வருத்திச் சைவனான முதலாம் மகேந்திர வர்மனே.** அவன் இத்தலத்து எட்டு சுலோகங்கள் அடங்கிய கல்வெட்டு ஒன்று அமைத்திருக்கிறான். அதில் தான் சைவன் ஆனதையும்

திருவதிகையில் அமண் பள்ளிகளை இடித்துக் குணபரேச்சுரம் கட்டியதையும் குறிப்பிடு கின்றான். குணபரன் என்பது மகேந்திரவர்மனையே குறிக்கும் பட்டப் பெயர். இதனைச் சிராப்பள்ளியிலும், செங்கற்பட்டு வல்லத்திலும் உள்ள குகைக் கோயில் கல்வெட்டுக்கள் வலியுறுத்தும். அதைப் போலவே சிராப்பள்ளியாகிய இவ்விடத்தும் அமணப்பள்ளி ஒன்று பெரியதாக இருந்தது. அதனை இடித்தே இந்தக் கோயிலைச் சைவனான மகேந்திரவர்மன் கட்டினான்.

உச்சிப்பிள்ளையார் கோயிலின் பின்பாகத்தில் இன்றும் சமண முனிவர்களுடைய கற்படுக்கைகளைக் காணலாம். அவற்றில் அந்தந்தப் படுக்கையிலிருந்த சமண முனிவர் பெயர்கள் குறிக்கப் பெற்றுள்ளன. அவைகள் கி.பி. 5ஆம் நூற்றாண்டின் நிகழ்ச்சிகள். அவர்களில் ஒருவர் **சிரா** என்னும் பெயருடையவர் என்று ஒரு கற்படுக்கை அறிவிக்கிறது. ஆதலால், பள்ளி கோயிலானாலும், பெயர் போகாமல் சிராப்பள்ளி எனவே வழங்குகிறது.

**ஊர்ப்பெயரும் – கோயிற்பெயரும்:**

**ஊர்ப்பெயர் சிற்றம்பர். கோயிற்பெயர் சிராப்பள்ளி.** இதனை நன்கு விளக்குவது, முதலாம் இராஜராஜன் ஆட்சியாண்டு 16இல் வெட்டப் பெற்ற விக்கிரமசிங்க மூவேந்த வேளான் விளத்துரர் நாட்டில் நிலம் வாங்கி அதனை உறையூர்க் கூற்றத்துச் சிற்றம்பரில் உள்ள சிராப்பள்ளிக் கோயிலுக்கு அளித்தான் என்ற கல்வெட்டுப் பகுதியாகும். இரண்டாம் வரகுண பாண்டியன் கல்வெட்டும் இதனையே குறிக்கிறது. இன்னும் சில பகுதிகளிலும் சிற்றம்பர், சிற்றம்பர் நகர், சிற்றம்பர் பதியென இத்தலம் வழங்கப்படுகின்றது. ஆதலால் **ஊர் சிற்றம்பர்** எனவும் **கோயில் சிராப்பள்ளி** எனவும் வழங்கி வந்தமை தெளிவு.

**மூர்த்தி:**

இறைவன் பெயர் தாயுமானவர், திருமலைக் கொழுந்தர், செவ்வந்தி நாதர். அம்மையின் பெயர் மட்டுவார்குழலம்மை. வடமொழிவாணர் மாதுருபூதேசுவரர், சுகந்த குந்தளாம்பிகை எனக் கூறுவர். கல்வெட்டுக்களில் இறைவன் திருமலைப் பெருமான் அடிகள் என்ற பெயரால் குறிக்கப் பெறுகின்றனர். உச்சிப் பிள்ளையார், மாணிக்க விநாயகர் ஆலயங்களும், மௌனமடம் முருகன் கோயிலும் மிகச் சிறப்பு உடையன.

**தீர்த்தங்கள்:**

காவிரி, சிவகங்கை, நன்றுடையான், தீயதில்லான், பிரமதீர்த்தம் முதலியன உள்ளன. அவற்றுள் நன்றுடையான், தீயதில்லான் என்ற தீர்த்தங்கள் ஞானசம்பந்தர் தெய்வ வாக்கிலும் திகழ்வன. இவையன்றித் தெப்பக்குளம் ஒன்றுண்டு. அது 16ஆம் நூற்றாண்டில் அரசாண்ட விசுவநாத நாயகர் வெட்டுவித்தது. இது மேருவின் சிகரங்களில் ஒன்று. ஆதிசேடனுக்கும் வாயுதேவனுக்கும் நடந்த சொற்போட்டியால் பிரிந்த சிகரங்களில் ஒன்று திருக்காளத்தி. மற்றொன்று திரிகோணமலை. மற்றொன்று திரிசிராமலை என்று புராணம் கூறும். கருவுயிர்க்க வருந்திய **இரத்தினாவதியின்** நிறைந்த அன்பிற்கிரங்கிப் பெருமானே தாயாக எழுந்தருளிப் பணிபல புரிந்து பாதுகாத்தார். ஆதலால் தாயுமானார் ஆயினார்.

செவ்வந்திப் பூவைத் திருடிய சிவத்திர வியாபாரியான பூவாணிகனைக் கண்டிக்காத பராந்தகனது (ஆதித்தச் சோழன்) அரச அநீதியைக் கண்டு **சாரமாமுனிவர்** வேண்டுகோட்படி பெருமான் மேற்குப் பக்கமாக உறையூரைப் பார்க்கத் திரும்பினார். மண் மாரியால் நகர் அழிந்தது. மன்னன் அழிந்தான். மன்னன் மனைவி கருவுற்றிருந்தாள். காவிரியில் வீழ்ந்தாள். அந்தணன் ஒருவன் பாதுகாத்தான். கரிகாலன் பிறந்தான். கருவுற்ற ஆதித்த சோழன் மனைவியாகிய **காந்திமதிக்கு** இறைவன் தானே தோன்றிக் காட்சி கொடுத்து, தான்றோன்றீசர் என்ற திருநாமம் பெற்ற வரலாறுகளும் புராணங்களில் பேசப்படுகின்றன.

**கல்வெட்டு:**

இங்குக் குகைகள் உள்ளன. இவை மகேந்திரன் காலத்தனவே என்பது குறிப்பிடப் பட்டது. ஒன்று மலைமேல் உள்ளது. மற்றொன்று அடிவாரத்தில் உள்ளது. மலை மேலுள்ள கோயில்களிலேயே கல்வெட்டுக்கள் மிகுதியாக உள்ளன. வடமொழியில் அமைந்த எட்டு சுலோகங்கள் மகேந்திரவர்மனது மத மாற்றத்தையும் அதனால் அவன் செய்த சிவப்பணி களையும் தெரிவிக்கின்றன. அவற்றில் கல் தச்சராலே இந்த அரசனுடைய புகழ் விரிந்து நீடித்திருக்க வேண்டும் என்ற செய்தியைத் தெரிவிக்கிறது ஒரு சுலோகம். இத்தலத்தைப் பற்றிய கல்வெட்டுக்களும் செப்புப் பட்டயங்களும் நிரம்ப உள்ளன. அவற்றுள் காலத்தால் முற்பட்டது கி.மு. 2ஆம் நூற்றாண்டில் எழுந்த பிராமி எழுத்தால் எழுதப்பட்ட கல்வெட்டு ஆகும். தொடர்ச்சியாகப் பல கல்வெட்டுகள் காணப்படுகின்றன. அவை பல்லவ கிரந்தத்தாலும் தமிழாலும் ஆக்கப் பெற்றன.

**இராஜகேசரி வர்மன்:**

இவன் ஆட்சி 16ஆம் ஆண்டில் சாகுபடிக்குக் கொண்டு வரப்படாத நிலங்களைக் குறைந்த விலையாக ஐந்து கழஞ்சுக்கு விற்று, நிலம் விளைச்சலுக்கு வந்த பிறகு நிலம் வாங்கியவர்கள் திருவிழாக் காலங்களில் சித்திரைத் திருநாளில் ஒன்பது நாட்களுக்குப் பன்மாகேசுவரர்களுக்கு உணவு இடும்படி உத்தரவிட்டான்.

**பாண்டியன் மாறன்சடையன்:**

இவன் ஆட்சி 4ஆம் ஆண்டில் நிலமளித்து இருக்கிறான். இதில் இறைவன் திருமலைப் பெருமான் என்றழைக்கப் படுகிறான். வேங்கட தேவமகாராயர் சகம் 1351 வீரப்ப நாயக்கருடைய மேன்மைக்காக நிலம் அளித்தார். மதுரை விஜயரங்க சொக்க நாத நாயக்கருடைய காலத்தில் நரசபந்துலு என்னும் தன்வந்திரி வைத்தியருக்கு இறையிலியாக நிலமளிக்கப்பட்டது. அவ்வாறே திருமலை அப்பராயத் தொண்டைமான் மகனும், திருமலை ராயத் தொண்டைமான் பேரனுமான இராஜா விஜயரகுநாதத் தொண்டைமான் சகம் 1772இல் கி.பி. 1805இல் ஒராண்டிக்கோடி கிராமத்தைத் தேனாம்பட்டணம் இருளப்ப முதலியாரிடம் அளித்து திருச்சிராப்பள்ளியில் அறச்சாலை நடத்த ஏற்பாடு செய்தான். நல்லப்ப காலாட்க தோழராலும், ரங்கப்ப காலாட்க தோழராலும் அளிக்கப்பட்ட தேவதானங்களை அறிவிக்கும் செப்புப் பட்டயங்கள் உள. கல்வெட்டுக்களில் சிறப்பாகக் குகைக்கோயில் பின்சுவரில் திரிசிராமலை அந்தாதியொன்று எழுதப் பெற்றுள்ளது. அது 103 பாடல்களை உடையது. அதில் 104ஆம் பாடலாக 'மாட மதுரை மணலூர் மதில் வேம்பை, யோடமர் சேய்ஞலூர் குண்டூரின் – நீடிய நற்பதிக்கோன் நாராயணன் சிராமலை மேல் கற்பதித்தான் சொன்ன கவி' என்றதால் நாராயணன் என்பவன் கல்வெட்டுவித்தான் என்று குறிப்பிடப்படுகிறது.

**பதிக வரலாறு:**

ஞானசம்பந்தர் மூக்கீச்சரம் பணிந்து, திருச்சிராப்பள்ளிச் சிலம்பணைந்தார். அங்கே இறைவனை வணங்கி மெய்ம்மகிழ்ந்து மனங்குளிர 'நன்றுடையானை' என்னும் சொற்றமிழ் மாலை வேய்ந்து போற்றினார்கள்.

## 98. THIRU-CH-CHIRAA-P-PALLI

### HISTORY OF THE PLACE

This sacred place is to the south of river Cauvery in Chola Naadu and is one of the major cities of Tamilnadu. It is well connected by train and bus from every place in Tamilnadu. It is a historic city, going back to times prior to 2nd century BC. It incorporates within itself Uraiyoor, which was once the capital of the Chola kings.

The Lord's names are Thaayumaanavar, Thirumalaikkozhundhar, Sevvandhi-naathar and other names. The Goddess is known as Mattuvaarkuzhalammai. The Sanskrit equivalents are Maathrubhoothesuvara and Suganthakunthalaambikai. Other shrines for the Uchchippillaiyaar, Maanikka Vinaayakar and for Murugan at the Mouna Matam are of special distinctions.

The name of the city is also given as Chitrambar in some inscriptions and the temple is referred to as Chiraappalli. While various reasons are ascribed for the name Chiraappalli, the great scholar T.V. Sadasiva Pandaraththar is of the opinion that the place where the temple is situated, was once a Jain monastery and the king Mahendhiravarman-I having converted to Saivism from Jainism had built this temple in the 7th century CE after demolishing the Jain monastery. The king has an inscription in the form of a poem of 8 Sanskrit slokas. In this inscription he notes his conversion and building of the shrine Gunaparechchuram on the site of Jain monasteries in Thiruvadhikai. Gunaparan is another name for this king.

Behind the Uchchippillaiyaar temple, there are stone beds with the names of Jain monks inscribed on them. They belong to the 5th century BC. One of the names in these beds is Chiraa, and it can be surmised that Chirappalli meant the sleeping place of Chiraa. Although the beds are no longer in use, the temple came to be known as Chiraappalli by association with the old name.

According to puraanaas (old legends) the hill on which the temple is located is one of the peaks of Mount Meru. When a contest arose between Vaayudhevan and

Aadhiseshan, the peak got split into three, they being Thirukkaalaththi and Thirikonamalai besides this. There is also the legend that the compassionate Lord, out of love for HIS devotee Raththinaavathi who was then pregnant, took the form of her mother and helped her to have a safe delivery. Her real mother could not reach her daughter's place in time, because of heavy flood in the river Cauvery which she had to cross.

Another legend is that of the Lord appearing in a vision to the pregnant queen Kaanthimathi of Aadhiththa Cholan. He got the name Thaanthonreesar because of this. There is also a legend associated with Chola king Karikaalan. According to this, Paraanthakan, king of Uraiyoor failed to punish a flower merchant, who committed the serious crime of stealing a flower dedicated to Siva. On the appeal of a sage, Saaramaamunivar, the Lord turned His face towards the west, upon which Uraiyoor was destroyed by a shower of mud. The king perished and his pregnant queen jumped into the river Cauvery. An Andhanan saved her and she gave birth to Karikaalan.

There are two rock-cut caves with beautiful sculptures, one on the hill and the other near the foot of the hill. Both of these are the period of Mahendhiravarman. Besides the poem in the inscription noted before, there are many inscriptions in the temple on the hill. There are also copper plate engravings about this temple. Of all the inscriptions, the oldest belongs to the 2$^{nd}$ century BC and is written in Brahmi characters. Other inscriptions are in grantha script as well as in Tamil.

One of the inscriptions on the back wall of the cave temple is a long poem of 103 stanzas, known as Thirisiraamalai Andhaadhi. At the end of the last stanza, there is the mention of one Naaraayanan who caused the inscription to be engraved.

The following is a gist of some of the notable grants found in the inscriptions: In his 16$^{th}$ regnal year, Raajakesarivarman, sold some uncultivated lands for five 'kazhanjchu' and after the buyers brought the land under cultivation ordered them to feed devotees of Siva during the nine days of a festival in Chiththirai. Paandiyan

Maaran Sadaiyan gave land in his 4th regnal year. Venkatadheva Mahaaraayar gifted land in Saka year 1351 for the benefit of Veerappa Naayakkar. Tax-free land was given to one Narasabanthulu, a physician, during the reign of Vijayanagara Chokkanaatha Naayakkar of Madhurai. King Vijaya Raghunaatha Thondaimaan gave a village, Oraandikkodi, to a Irulappa Mudhaliar of Thenaampattinam for a choultry (arachchaalai) in this city.

## INTRODUCTION TO THE HYMN

Having hailed Civa at Mukeeccharam, our saint went forth and arrived at the hill-shrine of Civa at Thiru-ch-chiraa-p-palli where he sang the following hymn:

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 98. திருச்சிராப்பள்ளி — 98. THIRU-CH-CHIRAA-P-PALLI

பண் : குறிஞ்சி
ராகம் : குறிஞ்சி

*Pann: Kurinji*
*Raagam: Kurinji*

நன்றுடை யானைத்தீய திலானைநரை வெள்ளே
றொன்றுடை யானையுமை யொருபாக முடையானைச்
சென்றடை யாததிருவுடை யானைச்சிராப் பள்ளிக்
குன்றுடை யானைக்கூற என்னுள்ளங் குளிரும்மே. 1

*நன்று உடையானை, தீயது இலானை, நரை-வெள்ஏறு*
*ஒன்று உடையானை, உமை ஒருபாகம் உடையானை,*
*சென்று அடையாத திரு உடையானை, சிராப் பள்ளிக்-*
*குன்று உடையானை, கூற, என் உள்ளம் குளிரு(ம்)மே.*

nan2Ru uTaiyAn2ai, tIyatu ilAn2ai, narai-veL ERu
on2Ru uTaiyAn2ai, umai oru pAkam uTaiyAn2ai,
cen2Ru aTaiyAta tiru uTaiyAn2ai, cirAppaLLik-
kun2Ru uTaiyAn2ai, kURa, en2 uLLam kuLiru(m)mE.

*பொருள்:* சிராப்பள்ளிக் குன்றில் எழுந்தருளியுள்ள சிவபெருமானை, 'நன்மைகளையே தனக்கு உடைமையாகக் கொண்டவனே! தீயது ஒன்றுமே இல்லாதவனே! மிக வெண்மையான ஆனேற்றைத் தனக்கு ஊர்தியாகக் கொண்டவனே! பார்வதியை ஒரு பாகமாக உடையவனே! அவனது அருளால் அன்றி சென்று அடைய முடியாத வீடுபேறு என்ற செல்வத்தை உடையவனே!' என்று போற்ற என் உள்ளம் குளிரும்.

**குறிப்புரை:** சிராப்பள்ளி நாதரைச் சொல்ல என்னுள்ளம் குளிரும் என்கின்றார். நன்றுடையான், தீயதில்லான் இவையிரண்டும் இத்தலத்துத் தீர்த்தங்கள். நரைவெள்ளேறு – மிக வெள்ளிய இடபம். சென்றடையாத திரு – நல்வினைப் போகம் காரணமாக ஆன்மாக்களுக்கு வருவது போல வந்து அடையாத இயற்கையேயான திரு.

Lord Civan of Thiru-ch-chiraa-p-palli is the only Supreme One who is the epitome of all absolute goodness; He is the only one who is fully free from any sinister intent. He keeps one white bull as His vehicle. He accommodates His consort Paarvathi Devi on the left half of His body. Without His grace no one can reach Heaven, the final release of liberation and enjoy the eternal state of bliss. This Lord Civan is enshrined at the temple in the hillock of Thiru-ch-chiraa-p-palli. As and when I adore Him, I do have the fullest delightfulness in my mind (*உள்ளங்குளிரும் - மனமகிழ்ச்சி அடைகின்றேன்*).

கைம்மக வேந்திக்கடுவ னொடூடிக் கழைபாய்வான்
செம்முக மந்திகருவரை யேறுஞ்சிராப்பள்ளி
வெம்முக வேழத்தீருரி போர்த்தவி கிர்தாநீ
பைம்முக நாகம்மதி யுடன்வைத்தல் பழியன்றே. 2

*கைம் மகவு ஏந்திக் கடுவனொடு ஊடிக் கழை பாய்வான்,*
*செம்முக மந்தி கருவரை ஏறும் சிராப்பள்ளி,*
*வெம் முக வேழத்து ஈர்உரி போர்த்த விகிர்தா! நீ*
*பைம்முக நாகம் மதிஉடன் வைத்தல் பழி அன்றே?*

kaim makavu Entik kaTuvan2oTu UTik kazai pAyvAn2,
cemmuka manti karuvarai ERum cirAppaLLi,
vem muka vEzattu Ir uri pOrtta vikirtA! nI
paimmuka nAkam mati uTan2 vaittal pazi an2RE?

**பொருள்:** சிவந்த முகம் உடைய பெண் குரங்கு தனது ஆண் குரங்கோடு ஊடல் கொண்டு, தனது குட்டியைத் தூக்கிக் கொண்டு, மூங்கில் புதரில் பாய்வதற்காக ஏறும் கரிய மலைமிசை ஏறும் சிராப்பள்ளியில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானே! கொடிய முகத்தோடு கூடிய யானையின் தோலைப் போர்த்துள்ள விகிர்தனே! படத்தோடு கூடிய முகத்தை உடைய நாகப்பாம்பை அதன் பகைப் பொருளாகிய பிறைமதியுடன் முடிமிசை அணிந்திருப்பது உனக்கு பழிதரும் செயல் அல்லவா?

**குறிப்புரை:** பெண் குரங்கு ஆண் குரங்கோடு ஊடி, குட்டியையும் தூக்கிக் கொண்டு மூங்கிலில் பாய்வதற்காக மலைமிசையேறும் சிராப்பள்ளி நாதா! நாகத்தையும் மதியையும் உடனாக வைத்தல் உனக்குப் பழியாகுமல்லவா? கைம்மகவு – கைக்குழந்தை. கடுவன் – ஆண்குரங்கு. கழை – மூங்கில். செம்முகமந்தி – சிவந்த முகத்தோடு கூடிய பெண் குரங்கு. பெண் குரங்கின் முகம் சிவப்பாயிருக்குமென்ற குரங்கின் இயற்கையையும் ஈண்டு எண்ணுக. வெம்முக வேழம் – கொடுந்தன்மையுடைய யானை.

The ruddy faced female monkey had a love quarrel with her mate – the male monkey. The female one carrying it's babe-in-arms rushed towards the bamboo thicket and climbed up the black hillock in Thiru-ch-chiraa-p-palli. Lord Civan is enshrined at the temple in this hillock. This pre-eminent Lord Civan (*விகிர்தன்*) covered His body with the skin of a ferocious elephant. Oh Lord Civa, will it not cast a blame on you to keep in your head a serpent having poisonous sacs along with the crescent moon – both are hostile to each other?

மந்தம் முழவம்மழ லைததும்ப வரைநீழல்
செந்தண் புனமுஞ்சுனை யுஞ்சூழ்ந்த சிராப்பள்ளிச்
சந்தம் மலர்கள்சடை மேலுடையார் விடையூரும்
எந்தம் மடிகளடியார்க் கல்லலில்லையே. 3

*மந்தம் முழவம் மழலை ததும்ப, வரை நீழல்*
*செந் தண் புனமும் சுனையும் சூழ்ந்த சிராப்பள்ளி,*
*சந்தம் மலர்கள் சடைமேல் உடையார், விடை ஊரும்*
*எம்தம்(ம்) அடிகள், அடியார்க்கு அல்லல் இல்லையே.*

mantam muzavam mazalai tatumpa, varai nIzal
cen taN pun2amum cun2aiyum cUznta cirAppaLLi,
cantam malarkaL caTaimEl uTaiyAr, viTai Urum
emtam(m) aTikaL, aTiyArkku allal illaiyE.

**பொருள்:** மந்த சுருதியினை உடைய முழவு மழலை போன்று ஒலிக்கின்றதும், அழகிய குளிர்ந்த தோட்டங்களையும் சுனைகளையும் மலை அடிவாரத்தில் கொண்டுள்ளதுமான சிராப்பள்ளியில் சிவபெருமான் எழுந்தருளியுள்ளார். இப்பெருமான், அழகிய மலர்களைச் சடைமேற் சூடியிருப்பவர். விடையேற்றில் ஊர்ந்து வருபவர். எம் தலைவராகிய இச்செல்வரை வணங்கும் அடியார்களுக்குத் துன்பம் இல்லை.

**குறிப்புரை:** சிராப்பள்ளி நாதனின் அடியார்க்கு அல்லல் இல்லை என்கின்றது. மந்தம் முழவம் – மந்தஸ்தாயியில் அடிக்கப்படும் முழவம். மழலை – பொருள் விளங்காத ஒலி.

Lord Civan is enshrined in Thiru-ch-chiraa-p-palli wearing elegant flowers in His head, and moves about riding on a bull. The soft and gentle noise of drums in this town resembles the babbling of children. This city is girt with fertile and cool groves and springs at the foot of the hill. Those devotees who worship Him are free from all troubles.

துறைமல்கு சாரற்சுனை மல்குநிலத் திடைவைகிச்
சிறைமல்கு வண்டுந்தும் பியும்பாடுஞ் சிராப்பள்ளிக்
கறைமல்கு கண்டன் கனலெரியாடுங் கடவுள்ளெம்
பிறைமல்கு சென்னியுடை யவனெங்கள் பெருமானே. 4

*துறை மல்கு சாரல், சுனை மல்கு நிலத்துஇடை வைகி,*
*சிறை மல்கு வண்டும் தும்பியும் பாடும் சிராப்பள்ளி,*
*கறை மல்கு கண்டன்! கனல்எரி ஆடும் கடவுள்(ள்), எம்*
*பிறை மல்கு சென்னி உடையவன், எங்கள் பெருமானே.*

turai malku cAral, cun2ai malku nIlattu iTai vaiki,
ciRai malku vaNTum tumpiyum pATum cirAppaLLi,
kaRai malku kaNTan2, kan2al eri ATum kaTavuL(L), em
piRai malku cen2n2i uTaiyavan2, egkaL perumAn2E!

**பொருள்:** பலப்பல வழிகளைக் கொண்டுள்ள சிராப்பள்ளி மலை அடிவாரத்தில் உள்ள சுனைகளில் நீல மலர்கள் நெருக்கமாகப் பூத்திருக்கின்றன. இந்த மலர்களைச் சுற்றி சிறகுகளை உடைய வண்டுகளும் தும்பிகளும் இசை பாடுகின்றன. இச்சிராப்பள்ளியில் எங்கள் பெருமானான சிவபெருமான், கறை பொருந்திய கண்டத்தை உடையவராகவும், கையில் எரியும் நெருப்பை ஏந்தி ஆடுபவராகவும், சென்னியில் பிறையைப் பொருந்தி இருப்பவராகவும், எம் கடவுளாகவும் விளங்குகின்றார்.

**குறிப்புரை:** நீலகண்டன், எரியாடுங்கடவுள், பிறைச்சென்னியின் எங்கள் கடவுள் என்கின்றது. வண்டும் தும்பியும் நீலப்பூவில் தங்கிப் பாடும் என்ற சுனையியற்கை முதல் இரண்டடிகளில் குறிக்கப் பெறுகிறது. கறை – விடம்.

The neck of our noble Lord Civan is of dark blue colour. He is our god who dances holding fire in one of His hands. He keeps the crescent moon in His head. He is enshrined in Thiru-ch-chiraa-p-palli and graces every one who approaches Him. The mountain in this town has many pathways. In the foothills there are many springs in

which blue lily flowers blossom in large numbers. Winged chafers and dragon flies approach the flowers making music. Such a delightful town is Thiru-ch-chiraa-p-palli.

கொலைவரை யாதகொள்கை யர்தங்கள் மதில்மூன்றும்
சிலைவரை யாகச்செற்றன ரேனுஞ்சிராப்பள்ளித்
தலைவரை நாளுந்தலை வரல்லாமை யுரைப்பீர்காள்
நிலவரை நீலமுண்டதும் வெள்ளை நிறமாமே. 5

*கொலை வரையாத கொள்கையர் தங்கள் மதில்மூன்றும்*
*சிலை வரை ஆகச் செற்றனரேனும், சிராப்பள்ளித்*
*தலைவரை நாளும் தலைவர் அல்லாமை உரைப்பீர்காள்!*
*நிலவரை நீலம் உண்டதும் வெள்ளைநிறம் ஆமே?*

kolai varaiyAta koLkaiyar tagkaL matil mUn2Rum
cilai varai Akac ceRRan2arEn2um, cirAppaLLit
talaivarai nALum talaivar allAmai uraippIrkAL!
nilavarai nIlam uNTatum veLLai niRam AmE?

***பொருள்:*** கொல்லும் தொழிலைக் கைவிடாத கொள்கையினரான அசுரர்களின் மும்மதில்களை மேருமலையை வில்லாகக் கொண்டு அழித்தவர் சிவபெருமான். இவர் சிராப்பள்ளியில் தலைமை பூண்டுறைபவர். இப்பெருமானைத் தலைவர் அல்லர் என நாள்தோறும் கூறிவரும் புறச் சமயத்தினரே! இந்த நில உலகில் நீலநிறம் ஊட்டப்பட்ட துணி, வெள்ளை நிறமாக மாற்றம் அடையுமா? அது போலவே உங்கள் கொள்கையிலும் மாறுதல் இயலுவதொன்றோ?

***குறிப்புரை:*** சிவபெருமான் முழுமுதற் கடவுளல்லர் என்பார்க்கு உண்மை உணர்த்துவது இப்பாடல். கொலை வரையாத கொள்கையர் – கொலையை நீக்காத கொள்கையினை உடைய திரிபுராதிகள். நிலவரை நீலம் – நிலவுலகில் நீலநிறம் ஊட்டப்பட்ட துணி. வெள்ளை நிறம் ஆமே – வெண்மை நிற உடையாதல் கூடுமா? நீலநிறத்திற்கு மட்டும் உரிய பண்பு இது. அதுபோல் நீவிர் கொண்ட கொள்கையையும் மாற்றல் இயலாது. சங்க இலக்கியத்தில் பதினெண் கணக்கு நூல்களில் ஒன்றாகிய "பழமொழி நானூறு" என்ற பாட்டுக்களில் 94–ஆவது பாட்டு.

Lord Civan using the mount Mēru as His bow destroyed the three citadels of the Asuraas who never abandon their attitude of killing people indiscriminately. Even then, these heterodox people daily declare that Civan of Thiru-ch-chiraa-p-palli is not the Supreme Lord. It is impossible to change the opinion of these people, as it is not possible to change the colour of blue dyed cloth to white.

Mythology has it that once Lord Civan consumed the poison of the churned seawaters, in order to save the fright stricken Devas and Asuras - *ஆலகாலம் உண்டான்.* His throat turned blue in colour in this mighty display of supernal prowess. Ye hedonistic heathenes! Won't you recognise the Supremacy of Lord Civan (even after knowing this?). Is this inimitable deed of valour, a mere white wash? A matter of no consequence? In this way, our saint establishes the glory of Lord Civan. "*வெள்ளை நிறமாமோ - வெளிறு ஆமோ?*" (vide the usage of *வெளிறு* in Thirukkural - "*அரியகற்று ஆசற்றார் கண்ணும் தெரியுங்கால் இன்மை அரிதே வெளிறு*" - Kural (503) Asuras are generally devour saivas. All Asuras cannot possibly be described as unorthodox people.

வெய்ய தண்சாரல் விரிநிற வேங்கைத் தண்போது
செய்ய பொன்சேருஞ் சிராப்பள்ளி மேயசெல்வனார்
தைய லொர்பாக மகிழ்வர் நஞ்சுண்பர் தலையோட்டில்
ஐயமுங் கொள்வாராரிவர் செய்கையறிவாரே. 6

***வெய்ய தண்சாரல் விரி நிற வேங்கைத் தண்போது***
***செய்ய பொன் சேரும் சிராப்பள்ளி மேய செல்வனார்,***
***தையல் ஓர்பாகம் மகிழ்வர்; நஞ்சு உண்பர்; தலைஓட்டில்***
***ஐயமும் கொள்வார்; ஆர், இவர் செய்கை அறிவாரே?***

veyya taNcAral viri niRa vEgkait taNpOtu
ceyyapon2 cErum cirAppaLLi mEya celvan2Ar,
taiyal orpAkam makizvar; nanjcu uNpar; talaiOTTil
aiyamum koLvar; Ar, ivar ceykai aRivArE?

**பொருள்:** சிவபெருமான், எல்லாராலும் விரும்பத்தக்க குளிர்ந்த மலைச்சாரலில் குளிர்ச்சி தரும் பொன் நிறமான விரிந்த வேங்கை மலர்கள் உதிரும் சிராப்பள்ளி மலையில் வீற்றிருக்கும் செல்வர் ஆவர். இப்பெருமான் உமையம்மையை ஒரு பாகமாகக் கொண்டு மகிழ்ந்திருப்பவர். நஞ்சினை உண்பவர். தலையோட்டில் பலி ஏற்பவர். யார்தான் இவரது வேறுபட்ட செயல்களின் உண்மையை அறிய முடியும்?

**குறிப்புரை:** சிராப்பள்ளி மேவிய செல்வர் பெண்ணொரு பாகமாகுவர். ஆகாத நஞ்சை அருந்துவர். பிரம கபாலத்தில் பிச்சையும் எடுப்பர். இவர் செயல்கள் ஒன்றோடொன்று ஒத்திருந்தனவல்ல என்றபடி. வெய்ய – கொடிய. விரும்பத்தக்க என்றுமாம். வேங்கைப்பூ பொன் சேரும் சிராப்பள்ளி என்றது. வேங்கை மலர்கள் பொன் போன்ற நிறத்தனவாய் நிலத்தைச் சேரும் மலை என்க. ஐயம் – பிச்சை.

Lord Civan is our Supremely affluent one abiding in Thiru-ch-chiraa-p-palli. Here, in the lovely and cool slopes of the hillock, gold coloured flowers from the Kino tree (*வேங்கை மரம்*) drop on to the ground and give an elegant view to one and all. He happily accommodates His consort Umaa Devi on the left half of His body; He positioned the poison in His throat that came out of the ocean of milk; He accepts alms in a human skull. Who can understand the reason for His many different kinds of (above) acts?

வேயுயர் சாரற்கருவிர லூகம்விளையாடும்
சேயுயர் கோயிற்சிராப் பள்ளிமேய செல்வனார்
பேயுயர் கொள்ளிகை விளக்காகப் பெருமானார்
தீயுகந் தாடல்திருக் குறிப்பாயிற் றாகாதே. 7

***வேய் உயர் சாரல் கருவிரல் ஊகம் விளையாடும்***
***சேய் உயர் கோயில் சிராப்பள்ளி மேய செல்வனார்***
***பேய் உயர் கொள்ளி கைவிளக்கு ஆக, பெருமானார்,***
***தீ உகந்து ஆடல் திருக்குறிப்ப ஆயிற்று; ஆகாதே!***

vEy uyar cAral karuviral Ukam viLaiyATum
cEy uyar kOyil cirAppaLLi mEya celvan2Ar,
pEy uyar koLLi kaiviLakku Aka, perumAn2Ar,
tI ukantu ATal tirukkuRippu AyiRRu; AkAtE!

**பொருள்:** கரிய விரல்களை உடைய கருங்குரங்குகள் விளையாடுகின்ற, உயர்ந்து வளர்ந்துள்ள மூங்கில் மலைச்சாரலை உடைய சிராப்பள்ளியில், நெடிதாக உயர்ந்துள்ள கோயிலில் சிவபெருமான் அமர்ந்துள்ளார். பேய்கள் உயர்த்திப் பிடித்த கொள்ளிகளைக் கைவிளக்காகக் கொண்டு சுடுகாட்டில் எரியும் தீயில் மகிழ்ந்து நடனம் ஆடும் திருக்குறிப்பு யாதோ? அது அவரை அடைய விரும்பும் மகளிர்க்குப் புலனாகாமல் உள்ளதே?

**குறிப்புரை:** தாயுமானவர், பேயின் கையில் உள்ள கொள்ளியைக் கை விளக்காகக் கொண்டு ஆடுதல் திருவுளக் குறிப்பாயின் அது ஆகாது என்கின்றது. வேய் – மூங்கில். கருவிரலூகம் – கருங்குரங்கு. சேய் – தூரம். கைவிளக்கு – சிறிய விளக்கு.

The black fingered black monkeys play among themselves in the tall bamboo trees grown in the slopes of the hill in Thiru-ch-chiraa-p-palli. In the sky high temples of this town Lord Civan is enshrined. Is it the Will (*திருக்குறிப்பு*) of Lord Civa of this place to happily dance in the burning ghat of this town, where the goblins hold aloft in

their hands firebrands, as lamps so that He may dance in that bright light of the fire. This strange behaviour could not be understood by the girls who would like to reach His Holy Feet.

மலைமல்கு தோளன்வலி கெடவூன்றி மலரோன்றன்
தலைகலனா கப்பலிதிரிந் துண்பர்பழியோரார்
சொலவல வேதஞ்சொல வலகீதஞ்சொ ல்லுங்கால்
சிலவல போலுஞ்சிராப் பள்ளிச்சேடர் செய்கையே. 8

*மலை மல்கு தோளன் வலி கெட ஊன்றி, மலரோன் தன்*
*தலை கலன் ஆகப் பலி திரிந்து உண்பர்; பழி ஓரார் -*
*சொல வல வேதம் சொல வல கீதம் சொல்லும்கால்,*
*சில வலபோலும், சிராப்பள்ளிச் சேடர் செய்கையே!*

malai malku tOLan2 vali keTa Un2Ri, malarOn2 tan2
talai kalan2 Akap pali tirintu uNpar; pazi OrAr--
cola vala vEtam cola vala kItam collugkAl,
cila alapOlum, cirAppaLLic cETar ceykaiyE!

**பொருள்:** மலைபோன்ற திண்மை நிரம்பிய தோள்களை உடைய இராவணன் சிவபெருமான் தங்கியுள்ள கைலாய மலையை நகற்ற முற்பட்டபொழுது, அவர் தமது கால் விரலை மலை மீது ஊன்றி அவன் வலிமையைக் குறைத்து அவனை நசுக்கியவர். தாமரை மலர் மேல் உறைபவனாகிய பிரமனது தலையோட்டை உண்கலனாகக் கொண்டு திரிபவர். அவ்வோட்டில் பலியேற்று உண்ணுவதால் தமக்குப் பழிவருமே என்று நினையாதவர். இசையோடு ஓதத்தக்க வேதங்களையும் கீதங்களையும் அன்பர்கள் ஓதும் போது சில பிழைபட்டன என்றாலும் அவற்றை மகிழ்ச்சியோடு ஏற்பவர். சிராப்பள்ளியில் அமர்ந்திருக்கும் பெருமைக்குரிய இப்பெருமானின் செய்கையின் உட்பொருள்தான் என்ன?

**குறிப்புரை:** தலையே கலனாகப் பலி ஏற்றுண்பார். சொல்லவல்ல வேதத்தையும் பாடலையும் சொன்னால் சிராப்பள்ளியார் செய்கை சில அல்லாதன போலும் என்கின்றது. மல்கும் – நிறைந்த. வேதங்களையும் பாடல்களையும் சொன்னால் அவற்றில் சில அல்லாதன என்பதை அவர் செய்கைகளில் இருந்து அறிகிறோம் என்பது கருத்து.

Lord Civan pressed His toe on mount Kailash and quelled the mightiness of Raavanan who has very sturdy hill like shoulders. He never cares for the ridicule He might face for His abnormal behaviour of getting alms in the skull of Brahma and eating it. Devotees sing the Vedas in musical note very carefully. However, there

might be some deviation in this musical tone; but Lord Civa never minds such deviation and happily accepts and enjoys the music. Such indeed are the deeds of the glorious Civa of Thiru-ch-chiraa-p-palli. What is the truth behind such behaviour of Lord Civa?

அரப்பள்ளி யானுமலருறை வானுமறியாமைக்
கரப்புள்ளி நாடிக்கண்டி லரேனுங்கல்சூழ்ந்த
சிரப்பள்ளி மேயவார் சடைச்செல்வர் மனைதோறும்
இரப்புள்ளீ ரும்மையே திலர்கண்டா லிகழாரே. 9

*அரப்பள்ளியானும் அலர் உறைவானும், அறியாமைக்*
*கரப்பு உள்ளி, நாடிக் கண்டிலரேனும், கல் சூழ்ந்த*
*சிரப்பள்ளி மேய வார்சடைச் செல்வர் மனைதோறும்*
*இரப்பு உள்ளீர்; உம்மை ஏதிலர் கண்டால், இகழாரே?*

arappaLLiyAn2um alar uRaivAn2um, aRiyAmaik
karappu uLLi, nATik kaNTilarEn2um, kal cUznta
cirappaLLi mEya vArcaTaic celvar man2aitORum
irappu uLLIr; ummai Etilar kaNTAl, ikazArE?

**பொருள்:** பாம்பணையில் பள்ளி கொள்ளும் திருமாலும், தாமரை மலர்மேல் உறையும் பிரமனும் சிவபெருமான் மறைந்திருப்பதை அறியாமல், அவரது அடி முடியைத் தேடியும் அவர்களால் காண முடியவில்லை என்ற பெருமை சிவபெருமானே உமக்கு உள்ளது. அப்படி இருந்தும், கல் சூழ்ந்த சிராப்பள்ளியில் எழுந்தருளி இருக்கும் நீண்ட சடையினை உடைய செல்வந்தரே! நீவிர் வீடுகள்தோறும் சென்று இரப்பதை விரும்புகின்றீர். அயலவர் கண்டால் இதனை இகழாரோ?

**குறிப்புரை:** அயனும் மாலும் உம்மைக் காணாவிட்டாலும் நீர் மனைதொறும் பிச்சைக்குப் புறப்படாதீர். உம்மை யாவரும் இகழார்கள் என்கின்றது. அரப்பள்ளியான் – பாம்பைப் படுக்கையாகக் கொண்ட திருமால். கரப்பு உள்ளி – இறைவன் மறைந்திருப்பதை எண்ணி. நாடி – தேடி. ஏதிலர் – அயலார்.

Oh Lord Civa! You are known for Your widespread reputation when You stood so high that Your Holy Feet and head could not be seen, in spite of their serious search, by Thirumaal, who reclines in the snake bed and by Brahma who is seated in the lotus flower. Oh affluent Civa! You abide in the mountain temple in Thiru-ch-chiraa-p-palli having long matted hair. You visit each and every house seeking alms. Will not those

people who observe Your begging, mock at You! (Pray do not visit other's houses and seek alms).

நாணாது டைநீத்தோர் களுங்கஞ்சி நாட்காலை
ஊணாப் பகலுண்டோ துவோர்களுரைக் குஞ்சொல்
பேணாது றுசீர்பெறுதுமென் பீரெம்பெருமானார்
சேணார் கோயில்சிராப் பள்ளிசென்று சேர்மினே. 10

“நாணாது உடை நீத்தோர்களும், கஞ்சி நாள்காலை
ஊணாப் பகல் உண்டு ஓதுவோர்கள், உரைக்கும் சொல்
பேணாது, உறு சீர் பெறுதும்” என்பீர்! எம்பெருமானார்
சேண் ஆர் கோயில் சிராப்பள்ளி சென்று சேர்மினே!

"nANAtu uTai nIttOrkaLum, kanjci nALkAlai
UNAp pakal uNTu OtuvOrkaL, uraikkum col
pENAtu, uRu cIr peRutum" en2pIr! emperumAn2Ar
cEN Ar kOyil cirAppaLLi cen2Ru cErmin2E!

**பொருள்:** சமணர்கள் நாணமின்றி உடையில்லாமல் திரிகின்றனர். புத்தர்கள் காலையிலும் நண்பகலிலும் கஞ்சியை உணவாக உண்ணுகின்றனர். இவர்கள் கூறும் பழிப்புரைகளைக் கருதாதீர்கள். நாம் சிறப்படைய வேண்டும் என விரும்புகின்ற நீவீர் எம்பெருமான் உறையும் வானளாவிய கோயிலை உடைய சிராப்பள்ளிக்குச் சென்று அவனைப் போற்றி வணங்குவீர்களாக.

**குறிப்புரை:** புத்தரும் சமணரும் உரைக்கும் சொல்லைப் பேணாது பெருஞ்சிறப்பெய்த விரும்புபவர்களே! சிராப்பள்ளி சேர்மின் என்கின்றது. நாணாது – வெட்கப்படாமல். கஞ்சியை விடியலுணவாகவும், பகலிலும் உண்டு ஓதுபவர்கள் புத்தர்கள். பேணாது – போற்றாது. உறுசீர் – மிக்கபுகழ். சேணார் கோயில் – ஆகாயமளாவிய கோயில்.

Oh! Ye companions - Ignore the disparaging words of the shamelessly nude Samanars as well the Buddhists who drink gruel both at daybreak and at noon. Should You aspire to become glorious in this very life time, do visit Thiru-ch-chiraa-p-palli where our Lord Supreme Civa is enshrined in the sky-high temple and adore Him.

தேனயம் பாடுஞ்சிராப் பள்ளியானைத் திரைசூழ்ந்த
கானல்சங் கேறுங்கழுமல வூரிற்கவுணியன்
ஞானசம் பந்தன்நலமிகு பாடலிவை வல்லார்
வானசம் பந்தத்தவரொடு மன்னிவாழ்வாரே. 11

*தேன் நயம் பாடும் சிராப்பள்ளியானை, திரை சூழ்ந்த*
*கானல் சங்கு ஏறும் கழுமல ஊரில் கவுணியன் -*
*ஞானசம்பந்தன் - நலம் மிகு பாடல் இவை வல்லார்*
*வான சம்பந்தத்தவரொடு மன்னி வாழ்வாரே.*

tEn2 nayam pATum cirAppaLLiyAn2ai, tirai cUznta
kAn2al cagku ERum kazumala Uril kavuNiyan2--
njAn2acampantan2--nalam miku pATal ivai vallAr
vAn2a campantattavaroTum man2n2i vAzvArE.

***பொருள்:*** தேனுண்ணும் வண்டுகள் இனிய இசைபாடும் சிராப்பள்ளியில் விளங்கும் சிவபெருமானை, அலைகளில் பொருந்தி வந்த சங்குகள் சோலைகளில் ஏறி உலாவும் கடலை அடுத்துள்ள கழுமல ஊரில், கவுணிய கோத்திரத்தில் தோன்றிய ஞானசம்பந்தன் போற்றிப் பாடினார். நன்மைகள் மிக்க இப்பதிகப் பாடல்களை ஓத வல்லவர்கள் வானுலகில் சம்பந்தமுடையவராகத் தேவர்களோடு நிலை பெற்று வாழ்வர்.

***குறிப்புரை:*** சிராப்பள்ளியானைத் துதித்த, ஞானசம்பந்தன் பாடலிவை வல்லார் தேவரொடு சேர்ந்து வாழ்வர் என்கின்றது. தேன் – வண்டு. கானல் – கடற்கரைச் சோலை. வானசம்பந்தத்தவர் – வானுலகிற் சம்பந்தமுடைய தேவர்கள்.

Gnaanasambandan, the most famous personage in the Kaundinya Gotra (*கௌண்டின்ய கோத்திரம்*) hails from Kazhumalam (*கழுமலம்* – another name of Seekaazhi) where seashells are shoved by the waves into the foreshore gardens, close to the sea. He has sung these verses on the Lord of Thiru-ch-chiraa-p-palli where the humming of nectar sipping bees is heard. Those who can sing these verses will dwell in the upper world eternally, along with the supernal beings as their kin.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*98ஆம் பதிகம் முற்றிற்று*
End of 98th Hymn

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# 99. திருக்குற்றாலம்

## திருத்தல வரலாறு:

இத்திருக்குற்றாலத் திருத்தலம் நெல்லை மாவட்டத்தில் தென்காசிக்கும் செங்கோட்டைக்கும் இடையே பொதிகை மலையடிவாரத்தில் உள்ள ஊர் ஆகும். நடராஜப் பெருமானுக்குரிய பஞ்ச சபைகளில் ஒன்றாகிய சித்திரசபை என வழங்கும் சபை இங்கு தனிக்கோயிலாக உள்ளது. திரிகூடராசப்பக் கவிராயர் தலபுராணம் முதலிய பிரபந்தங்கள் எழுதியுள்ளார். சுற்றுலாத் தலங்களில் சிறப்புடையது. திருமால் வடிவில் இருந்த மூர்த்தியை அகத்தியர் சிவலிங்கத் திருமேனியாக மாற்றிய தலம். இங்குள்ள அருவி புகழ் பெற்றது. குற்றால அருவியில் குளிப்பதற்கு ஜுன், ஜுலை, ஆகஸ்டு மாதங்களில் சுற்றுலாப் பயணிகள் பலர் வருவர். திருஞான சம்பந்தர் தேவாரம் பாடப் பெற்றது. சுவாமி பெயர் திருக்குற்றால நாதர். அம்பாள் பெயர் குழல்வாய் மொழியம்மை. இத்தலம் குறும்பலா எனவும் வழங்கப் பெறும்.

## பதிக வரலாறு:

திருஞானசம்பந்தர் திருச்சுழியலை வணங்கிப் பின்னர் திருக்குற்றாலத்தை அடைந்து குற்றால நாதர் குரைகழல் போற்றி 'வம்பார் குன்றம்' என்னும் இப்பதிகத்தை அருளிச் செய்தார்கள் (பக்கம் 2).

# 99. THIRU-K-KUT-RA-LAM

## HISTORY OF THE PLACE

This sacred place is located in between Thenkaasi and Sengkottai at the foot of the Podhigai hills in Tirunelveli district. Chiththira Sabhai, identified as one of the five sacramental halls of Lord Nataraajar (Dance Halls) is located in a separate place near the main temple in this town. The place is also known by the name Kurumpalaa.

The name of the Lord is Kutraalanaathar (*குற்றால நாதர்*) and that of the Goddess is Kuzhalvaaimozhiyammai (*குழல்வாய்மொழியம்மை*). The celebrated Sage Agaththiyar is said to have converted the idol of Thirumaal which was originally the Deity in this

temple, into a Civalingam here. Poet Thirikootaraasappak Kaviraayar (*திரிகூட ராசப்பக் கவிராயர்*) had composed many poems in later years on this temple, including legends associated with this temple (thalapuraanam). Saint Thirujnaanasambandhar has sung this hymn on this temple.

Also famous for its waterfalls, this shrine attracts mainly tourists from Tamilnadu and outside. The season for bathing in these falls, occurs during the months of June, July and August when southwest monsoon is vigorously active.

**INTRODUCTION TO THE HYMN**

Having adored Civa at Thirucchuzhiyal our saint arrived at Thiru-k-kur-ra-lam where he sang the following hymn:

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 99. திருக்குற்றாலம் — 99. THIRU-K-KUT-RA-LAM

பண் : குறிஞ்சி
ராகம் : குறிஞ்சி

*Pann: Kurinji*
*Raagam: Kurinji*

வம்பார் குன்றந்நீடுயர் சாரல்வளர் வேங்கைக்
கொம்பார் சோலைக்கோல வண்டியாழ் செய்குற்றாலம்
அம்பால் நெய்யோடா டலமர்ந்தான லர்கொன்றை
நம்பான் மேயநன்னகர்போலுந் நமரங்காள். 1

வம்பு ஆர் குன்றம் நீடு உயர் சாரல் வளர் வேங்கைக்
கொம்பு ஆர் சோலைக் கோல வண்டு யாழ்செய் குற்றாலம் -
அம் பால் நெய்யோடு ஆடல் அமர்ந்தான், அலர்கொன்றை
நம்பான், மேய நன்நகர் போலும்; நமரங்காள்!

vampu Ar kun2Ram, nITu uyar cAral, vaLar vEgkaik
kompu Ar cOlaik kOla vaNTu yAzcey kuRRAlam--
am pAl neyyOTu ATal amarntAn2, alarkon2Rai
nampAn2, mEya nan2nakarpOlum; namaragkAL!

பொருள்: நம்மவர்களே! திருக்குற்றாலமானது பலமுறை கண்டார்க்கும் காணுந்தோறும் புதுமையைப் பயக்கும் குன்றுகளையும், காலத்தாலும், இடத்தாலும் நீண்டு உயர்ந்த மலைச் சாரலையும், உயர்ந்த வேங்கை மரங்களின் கிளைகள் நிறைந்த சோலைகளையும் உடைய

நன்னகரமாகும். இங்கு அழகிய வண்டுகள் யாழ்போல் ஒலிக்கின்றன. இந்நகரத்தில், இனிய பால் நெய் ஆகியவற்றோடு நீராடுவதை விரும்புகின்றவராய், விரிந்த கொன்றை மலர்களைச் சூடி, யாவராலும் விரும்பப்படுகின்ற சிவபெருமானார் எழுந்தருளி உள்ளார்.

**குறிப்புரை:** திருக்குற்றாலம், பால் நெய்யாடிய பரமன் உறைகோயில் என்கின்றது. வம்பு – புதுமை. வம்பார்குன்றம் – பலமுறை கண்டார்க்கும் புதுமையையே பொருந்தும் மலை. நீடு உயர் சாரல் – காலத்தானும் இடத்தானும் நீடிக்கும் சாரல். கோல வண்டு – அழகிய வண்டு. பால் நெய்யோடு – பால் நெய் இவற்றோடு. அம் ஆடல் அமர்ந்தான் – நீராடலை விரும்பியவன். நமரங்காள் – நம்மவர்களே!

Oh! Ye companions! Every time we see the hill in Thiru-k-kut-ra-lam, it gives a new and different but imposing appearance with its tall mountain slopes and groves full of Kino trees having a number of thick branches. In these trees dainty bees make humming sound that resonates with a melodious musical note. This elegant Thiru-k-kut-ra-lam city is the place where our supreme Lord Civan is enshrined. He takes His daily sacred ceremonial bath with sweet milk and ghee along with water. He has adorned His matted hair with fully blossomed cassia flowers.

பொடிகள் பூசித்தொண் டர்பின்செல்லப் புகழ்விம்மக்
கொடிகளோ டுந்நாள்விழ மல்குகுற்றாலம்
கடிகொள் கொன்றைகூ விளமாலை காதல்செய்
அடிகள் மேயநன்னகர்போலும் மடியீர்காள். 2

பொடிகள் பூசித் தொண்டர் பின் செல்ல, புகழ் விம்ம,
கொடிகளோடும் நாள்விழ மல்கு குற்றாலம் -
கடி கொள் கொன்றை, கூவிளமாலை, காதல்செய்
அடிகள் மேய நன்நகர் போலும்; அடியீர்காள்!

poTikaL pUcit toNTar pin2 cella, pukaz vimma,
koTikaLOTum nALviza malku kuRRAlam--
kaTi koL kon2Rai, kUviLa mAlai, kAtal cey
aTikaL mEya nan2nakar pOlum; aTiyIrkAL!

**பொருள்:** அடியவர்களே! திருக்குற்றாலமானது, திருநீறு பூசிய தொண்டர்கள் பின்னே வரவும், புகழ் சிறக்கவும், கொடிகளை ஏந்திய அன்பர்கள் முன்னால் செல்லவும், நாள்தோறும் விழாக்கள் நிகழும் நகரம் ஆகும். இந்நன்னகரத்தில் மணம் கமழும் கொன்றை, வில்வ மாலை ஆகியவற்றை விரும்பும் அடிகளாக சிவபெருமானார் எழுந்தருளி உள்ளார்.

**குறிப்புரை:** நீறணிந்து தொண்டர்கள் பின்செல்ல, நாள்விழா நிறைந்த குற்றாலம். கொன்றையையும் கூவிளத்தையும் விரும்பிய அடிகள் நகர் என்கின்றது. பொடி – விபூதி.

Oh! Ye devotees! Know this; the Thiru-k-kut-ra-lam city celebrates some temple festivals and other festivals almost daily. The devotees holding the temple flags move in front of the procession, while the servitors who have smeared their body with holy ashes (in the stipulated sixteen places) follow in the rear of the palanquin. In this famed city Lord Civan is enshrined. He loves to be adorned with fragrant cassia garlands as well alongside garlands made of bael leaves.

செல்வமல்கு செண்பகம் வேங்கை சென்றேறிக்
கொல்லை முல்லைமெல் லரும்பீனுங் குற்றாலம்
வில்லினொல் கமும்மதிலெய்து வினைபோக
நல்குநம்பான் நன்னகர்போலுந் நமரங்காள். 3

செல்வம் மல்கு செண்பகம் வேங்கை சென்று ஏறி,
கொல்லை முல்லை மெல்அரும்பு ஈனும் குற்றாலம் -
வில்லின் ஒல்க மும்மதில் எய்து, வினை போக
நல்கும் நம்பான் நன்நகர் போலும்; நமரங்காள்!

celvam malku ceNpakam vEgkai cen2Ru ERi,
kollai mullai mel arumpu In2um kuRRAlam--
villin2 olka mummatil eytu, vin2ai pOka
nalkum nampAn2 nan2nakarpOlum; namaragkAL!

**பொருள்:** நம்மவர்களே! திருக்குற்றாலமானது செல்வம் நிறைந்ததும், செண்பகம், வேங்கை ஆகிய மரங்களில் முல்லைக் கொடிகள் தாவிப் படர்ந்து தனது அரும்புகளை ஈனுகின்ற நகரம் ஆகும். இந்நன்னகரத்தில் வில்லின் நாண் அசைய அம்பு எய்து மும்மதில்களையும் அழித்த சிவபெருமான் எழுந்தருளி உள்ளார். யாவராலும் விரும்பப்படுகின்ற இப்பெருமான் தன்னை வழிபடும் அன்பர்களின் தீயவினைகள் அழியுமாறு அருள்புரிகின்றார்.

**குறிப்புரை:** முல்லை, செண்பகம், வேங்கை இவற்றின்மீதேறி அரும்பீனும் குற்றாலமே திரிபுரம் எய்து அவர்கள் பாவம் தொலைத்து அருள்வழங்கும் இறைவன் நகர் என்கின்றது. கொல்லை – காடு.

Oh! Ye kindred souls! Note; Thiru-k-kut-ra-lam is rich in natural resources. The Arabian jasmine vines creep over the luxurious Kino trees, as well on the very fragrant large yellow flower tree (Michelia champaca - *சண்பகம் என்ற செண்பகம்*) where their buds bloom. Lord Civan is enshrined in such a glorious city. He holds a bow in His hand with which He shot an arrow towards the three citadels of (the recalcitrant) Asuraas and destroyed them. He quells the bad karma of His devotees, who worship Him.

பக்கம் வாழைப்பாய் கனியோடு பலவின்றேன்
கொக்கின் கோட்டுப்பைங் கனிதூங்குங் குற்றாலம்
அக்கும் பாம்புமாமையும் பூண்டோர னலேந்தும் **4**
நக்கன் மேயநன்ன கர்போலுந் நமரங்காள்.

பக்கம் வாழைப் பாய் கனியோடு பலவின் தேன்,
கொக்கின் கோட்டுப் பைங்கனி தூங்கும் குற்றாலம் -
அக்கும் பாம்பும் ஆமையும் பூண்டு ஓர் அனல் ஏந்தும்
நக்கன் மேய நன்நகர் போலும்; நமரங்காள்!

pakkam vAzaip pAy kan2iyOTu palavin2 tEn2,
kokkin2 kOTTup paigkan2i, tUgkum kuRRAlam--
akkum pAmpum Amaiyum pUNTu Or an2al Entum
nakkan2 mEya nan2nakarpOlum; namaragkAL!

**பொருள்:** நம்மவர்களே! திருக்குற்றாலமானது, மலையின் எல்லாப் பக்கங்களிலும் முளைத்த வாழை மரத்தின் கனிகளோடு, தேன் ஒழுகும் பலாவின் பழங்களும் மாமரக் கிளைகளில் பழுத்த புத்தம் புதிய கனிகளுமான முக்கனிகள் தொங்கும் நகரம் ஆகும். இந்நன்னகரத்தில் சிவபெருமான், உருத்திராக்க மாலை (அக்குமணி மாலை), பாம்பு, ஆமை ஆகியவற்றை மாலையாக அணிந்து கொண்டு கையில் அனலை ஏந்தி விளங்குகின்றார். இங்கு சென்று அவனை வணங்குவீர்களாக

**குறிப்புரை:** பக்கங்களில் வாழைக்கனியோடு பலாப்பழத் தேனும், மாம்பழமும் தொங்கும் குற்றாலம், அக்குமணி முதலியவற்றையணிந்த நக்கன் நகர் என்கின்றது. பாய்கனி – பரவிய பழம். கொக்கு – மா. நக்கன் – நக்நன் – ஆடையில்லாதவன்.

On all sides, of the mountain in Thiru-k-kut-ra-lam you will see banana fruits hanging in big bunches in the plantain gardens; the huge bursted ripened Jack fruits

will be dripping honey in the jack groves; the fresh fully riped mango fruits hanging in abundance in mango trees in their groves - all the three fruits on all sides of the mountain range is a sight to see. Oh! Ye kindred souls! Kindly note that our Lord Civan holds fire in His hand and is decked with garland of snakes, tortoise shell and the seeds of Elaeo carpus (*உருத்திராட்சம்*) etc., and elegantly enshrined in such a gorgeous form in Thiru-k-kut-ra-lam. Reach this place and offer worship to Him.

மலையார் சாரல்மகவுடன் வந்தமடமந்தி
குலையார் வாழைத்தீங் கனிமாந்துங் குற்றாலம்
இலையார் சூலமேந்திய கையானெயிலெய்த
சிலையான் மேயநன்ன கர்போலுஞ்சிறு தொண்டீர். 5

*மலையார் சாரல் மகஉடன் வந்த மடமந்தி*
*குலை ஆர் வாழைத் தீங்கனி மாந்தும் குற்றாலம் -*
*இலை ஆர் சூலம் ஏந்திய கையான், எயில் எய்த*
*சிலையான், மேய நன்நகர் போலும்; சிறு தொண்டீர்!*

malai Ar cAral makauTan2 vanta maTamanti
kulai Ar vAzait tImkan2i mAntum kuRRAlam--
ilai Ar cUlam Entiya kaiyAn2, eyil eyta
cilaiyAn2, mEya nan2nakarpOlum; ciRu toNTIr!

**பொருள்:** இறைவனுக்கு கைத்தொண்டு புரிபவர்களே! திருக்குற்றாலமானது தாய்க்குரங்கு தன்குட்டிகளோடு மலையின் சாரலுக்கு வந்து வாழைக் குலைகளின் பழுத்த இனிய கனிகளை வயறு புடைக்கத் தின்னுகின்ற நகரம் ஆகும். இந்நன்னகரத்தில் சிவபெருமான், இலை வடிவமான சூலத்தை கையில் ஏந்தியுள்ளார். மும்மதில்களையும் எய்து அழித்த வில்லாளனும் ஆகிய சிவபெருமான் எழுந்தருளி உள்ள நகரமும் இதுவே ஆகும்.

**குறிப்புரை:** குட்டியுடன் வந்த தாய்க்குரங்கு வாழைப்பழத்தை உண்ணும் குற்றாலம். திரிபுரம் எரித்த சிவபெருமான் மேய நகர் என்கின்றது. மாந்தும் – தின்னும்.

The bashful female monkeys with their young ones roam about on the slopes of the hill in Thiru-k-kut-ra-lam. As and when they see well riped bananas, they climb up the plantain tree, eat the sweet fruits to their stomach full; also feed the fruits to their young ones. Oh! Ye young servitors! Lord Civan wields a trident in one of His hands;

He is the famous archer who shot an arrow and destroyed the three citadels of the Asuraas; He is enshrined in such a gorgeous Thiru-k-kut-ra-lam.

**Note:** Kutraalam is the paradise of monkeys. The female monkeys are said to be bashful. This description is a lovely mosaic of sentimental display.

மைம்மா நீலக்கண்ணி யர்சாரல் மணிவாரிக்
கொய்ம்மா வேனலுண் கிளியோப்புங் குற்றாலம்
கைம்மா வேழத்தீருரி போர்த்த கடவுள்ளெம்
பெம்மான் மேயநன்னகர் போலும் பெரியீர்காள். 6

மைம்மாநீலக்கண்ணியர் சாரல் மணி வாரி,
கொய்ம் மா ஏனல் உண் கிளி ஓப்பும் குற்றாலம் -
கைம்மாவேழத்து ஈர்உரி போர்த்த கடவுள்(ள்), எம்
பெம்மான், மேய நன்நகர் போலும்; பெரியீர்காள்!

maimmA nIlak kaNNiyar cAral maNi vAri,
koym mA En2al uN kiLi Oppum kuRRAlam--
kaimmA vEzattu Ir uri pOrtta kaTavuL(L), em
pemmAn2, mEya nan2 nakarpOlum; periyIrkAL!

**பொருள்:** பெரியோர்களே! திருக்குற்றாலமானது மிக்க் கரிய நீலமலர் போன்ற கண்களை உடைய குறமகளிர், கொய்யும் பருவத்தில் உள்ள விளைந்த தினைக் கதிர்களை உண்ணவரும் கிளிகளை அங்குள்ள மாணிக்க மணிகளை வாரிவீசி விரட்டுகின்ற நகரம் ஆகும். இந்நன்னகரத்தில் பெரிய துதிக்கை உடைய யானையின் தோலைப் போர்த்த கடவுளும் எம் தலைவனுமாகிய சிவபெருமான் எழுந்தருளி உள்ளார்.

**குறிப்புரை:** நீலமலர் போலுங் கண்ணையுடைய குறத்தியர் மாணிக்கத்தைக் கொண்டு கிளியோட்டுங் குற்றாலம். யானையுரிபோர்த்த நாதன் நகர் என்கின்றது. மை மா நீலம் – மிகக் கரிய நீலமலர். கொய் மா ஏனல் – கொய்யும் பருவத்தில் உள்ள பெரிய தினை. ஓப்பும் – ஓட்டும். கைம்மாவேழம் – கையை உடைய விலங்காகிய யானை.

In the mountain slopes of Thiru-k-kut-ra-lam riped millet grains ready for harvest have grown all over the fields. The parrots flying in large numbers reach the fields to eat the riped millet grains. Young girls belonging to the gypsy community in the hilly tract having long and dark blue eyes like blue lily flowers, who are supervising

the fields, pick up the ruby gem stones lying nearby and pelt at and to chase away the parrots. Such flourishing place is Thiru-k-kut-ra-lam. Oh! Ye scholars! Our master Lord Civan who covers His body with the skin of the trunked elephant is enshrined in such a gorgeous Thiru-k-kut-ra-lam. Offer worship to Him!

நீலநெய் தல்தண்சுனை சூழ்ந்தநீள் சோலைக்
கோலமஞ் ஞைபேடையொடா டுங்குற்றாலம்
காலன்றன் னைக்காலாற் காய்ந்தகட வுள்ளெம்
சூலபாணி நன்னகர்போலுந் தொழுவீர்காள். 7

நீலம், நெய்தல், தண்சுனை சூழ்ந்த நீள் சோலை,
கோல மஞ்ஞை பேடையொடு ஆடும் குற்றாலம் -
காலன்தன்னைக் காலால் காய்ந்த கடவுள்(ள்) எம்
சூலபாணி,, நன்நகர் போலும்; தொழுவீர்காள்!

nIlam, neytal, taNcun2ai cUznta nIL cOlai,
kOla manjnjai pETaiyoTu ATum kuRRAlam--
kAlan2 tan2n2aik kAlAl kAynta kaTavuL(L) em
cUlapANi, nan2nakar pOlum; tozuvIrkAL!

**பொருள்:** தொழுது வணங்கும் அடியவர்களே! திருக்குற்றாலமானது, நீலமலரும் நெய்தல் மலரும் பூத்த குளிர்ச்சியான சுனைகள் சூழ்ந்ததும், நீண்டு வளர்ந்துள்ள மரங்களை உடைய சோலைகளில் அழகிய ஆண் மயில்கள் தத்தம் பெண் மயில்களோடு களித்தாடும் நகரமும் ஆகும். இந்நன்னகரத்தில் காலனைக் காலால் கடிந்த எம் கடவுளாகிய சிவபெருமான் சூலத்தைக் கையில் ஏந்தியவராக எழுந்தருளி உள்ளார்.

**குறிப்புரை:** சுனை சூழ்ந்த சோலையிலே மயில் பெடையோடு விளையாடும் குற்றாலம். காலகாலனாகிய சூலபாணியின் நகர் என்கின்றது. கோல மஞ்ஞை – அழகிய மயில்.

Thiru-k-kut-ra-lam is endowed with glen and glade where blue lilies as well as the white Indian water lily (வெள்ளாம்பல்) have blossomed in large numbers. In the gardens nearby tall trees have grown in large numbers. In these gardens peacocks dance happily with their mates – the peahens. Such a gorgeous place is Thiru-k-kut-ra-lam. Oh! Ye worshippers! This Thiru-k-kut-ra-lam is the place where our Lord Civan is

enshrined. He is the one who kicked down Kaalan - the god of death to die. He wields in one of His hands the trident.

போதும் பொன்னுமுந் தியருவிபுடைசூழக்
கூதன் மாரிநுண்டுளி தூங்குங் குற்றாலம்
மூதூரி லங்கைமுட் டியகோனை மிறைசெய்த
நாதன் மேயநன்ன கர்போலுந் நமரங்காள். 8

போதும் பொன்னும் உந்தி அருவி புடை சூழ,
கூதல் மாரி நுண் துளி தூங்கும் குற்றாலம் -
மூதூர் இலங்கை முட்டிய கோனை முறைசெய்த
நாதன் மேய நன்நகர் போலும்; நமரங்காள்!

pOtum pon2n2um unti aruvi puTai cUza,
kUtal mAri nuNtuLi tUgkum kuRRAlam--
mUtUr ilagkai muTTiya kOn2ai muRai ceyta
nAtan2 mEya nan2nakar pOlum; namaragkAL!

**பொருள்:** திருக்குற்றாலத்தில் விழும் குளிர்ச்சியான அருவிகள் பொன்னையும் பூக்களையும் உந்தி வருகின்றன. இந்த அருவி நீரின் நுண்துளிகள் நாற்புறமும் சிதறி விழுகின்றன. இத்தனை சிறப்பு வாய்ந்த நகரம் திருக்குற்றாலமாகும். இந்நன்னகரத்தில், தன் தகுதிக்கு மேல் செயல்பட்ட பழமையான இலங்கை நகரின் புகழ்பெற்ற அரசனான இராவணனைத் தண்டித்த சிவபெருமான் எழுந்தருளி உள்ளார்.

**குறிப்புரை:** பூக்களையும் பொன்னையும் உந்தி அருவி புடைசூழ நுண்துளி வீசுங் குற்றாலம். இலங்கை நாதனை அடக்கிய இறைவன் நகர் என்கின்றது. மீதூர் எனவும் பாடம். கூதல் மாரி – குளிர்ந்த மழை.

In the Thiru-k-kut-ra-lam town, waterfalls carry tiny pieces of gold and flowers and they fall on the base; also it creates soft and cool drizzling on both sides surrounding the water falling area. Such an attractive place is Thiru-k-kut-ra-lam. Oh! Ye companions! Raavanan, the king of Sri Lanka once went beyond his capacity –ruled over his kingdom in all glory, but erred later. Lord Civa who punished him for his ineptitude and later graced him. He is enshrined in this delightful Thiru-k-kut-ra-lam (You reach there and worship him, Ye devotees!).

அரவின் வாயின்முள் ளெயிறேய்ப்ப அரும்பீன்று
குரவம் பாவைமுரு கமர்சோலைக் குற்றாலம்
பிரமன் னோடுமால றியாதபெ ருமையெம்
பரமன் மேயநன்ன கர்போலும் பணிவீர்காள். 9

அரவின் வாயின் முள்எயிறு ஏய்ப்ப அரும்பு ஈன்று,
குரவம்பாவை முருகு அமர் சோலைக் குற்றாலம் -
பிரம(ன்)னோடு மால் அறியாத பெருமை எம்
பரமன் மேய நன்நகர் போலும்; பணிவீர்காள்!

aravin2 vAyin2 muL eyiRu eyppa arumpu In2Ru,
kuravampAvai muruku amar cOlaik kuRRAlam--
pirama(n2)n2OTu mAl aRiyAta perumai em
paraman2 mEya nan2 nakarpOlum; paNivIrkAL!

**பொருள்:** பணியும் தொண்டர்களே! திருக்குற்றாலமானது, பாம்பின் வாயில் அமைந்த கூரிய பற்களை ஒப்ப, குரவ மரங்கள் அரும்புகளை ஈனுகின்றன. இம்மரங்களில் பூத்துள்ள பாவை போன்ற மலர்கள் நிறைந்த சோலைகள், இந்நகரைச் சுற்றிலும் உள்ளன. இந்நன்னகரத்தில் பிரமனும், திருமாலும் அறிய முடியாத பெருமை பெற்ற பெரியோனாகிய எம்பிரானான சிவபெருமான் எழுந்தருளி உள்ளார்.

**குறிப்புரை:** குரவம்பாவை பாம்பின் பல்லைப்போல் அரும்பீன்று மணங்கமழும் சோலை சூழ்ந்த குற்றாலம். அயனும் மாலும் அறியாத பரமன் நகர் என்கின்றது. முள் எயிறு – முள் போன்ற பல்.

Thiru-k-kut-ra-lam is girt with fragrant flower gardens wherein the bottle flower tree (குரவம்) sprouts its buds like unto the thorn-like curved fangs of a serpent. These buds blossom into fragrant flowers, like unto the pupil of girl's eyes. The fragrance of this flower spreads all around. Lord Civan whose glory is unknown to Thirumaal and Brahma is enshrined in this gorgeous city of Thiru-k-kut-ra-lam. Oh! Ye devotees reach here and worship Him.

பெருந்தண் சாரல்வாழ் சிறைவண்டு பெடைபுல்கிக்
குருந்தம் மேறிச்செவ் வழிபாடுங் குற்றாலம்
இருந்துண் தேரும்நின்றுண் சமணுமெடுத் தார்ப்ப
அருந்தண் மேயநன்னகர்போலு மடியீர்காள். 10

பெருந் தண்சாரல் வாழ் சிறைவண்டு பெடை புல்கி,
குருந்தம் ஏறிச் செவ்வழி பாடும் குற்றாலம் -
இருந்து உண் தேரும் நின்று உண் சமணும் எடுத்து ஆர்ப்ப,
அருந் தண் மேய நன்நகர் போலும்; அடியீர்காள்!

perun taNcAral vAz ciRai vaNTu peTai pulki,
kuruntam ERic cevvazi pATum kuRRAlam--
iruntu uN tErum nin2Ru uN camaNum eTuttu Arppa,
arun taN mEya nan2nakarpOlum; aTiyIrkAL!

**பொருள்:** அடியவர்களே! திருக்குற்றாலமானது பெரிய குளிர்ச்சியான மலைச் சாரலில் வாழ்கின்ற சிறகுகளை உடைய வண்டு தன் பெண் வண்டை விரும்பிக் கூடி, குருந்த மரத்தில் ஏறிச் செவ்வழிப் பண் இசை பாடும் நகரம் ஆகும். இந்நன்னகரத்தில் உட்கார்ந்து உண்ணும் புத்தர்களும், நின்று உண்ணும் சமணர்களும் மகிழ்ச்சியாக எடுத்து நுகர்தற்கு இயலாத தண்ணிய இறைவனாகிய சிவபெருமான் எழுந்தருளி உள்ளார்.

**குறிப்புரை:** வண்டு பெண் வண்டைப் புணர்ந்து செவ்வழிப் பண்ணைப் பாடும் குற்றாலம். தண்ணிய இறைவன் மேய நகர் என்கின்றது. எடுத்து ஆர்ப்ப அருந்தண்மேய – சமணர் புத்தர்கள் எடுத்து நுகர்தற்கரிய தண்மையான இறைவன் மேவிய. தண் – தண்மை. பண்பு தன்மையை உடைய இறைவனைக் காட்டி நின்றது.

Oh! Ye servitors! Thiru-k-kut-ra-lam is a place where the winged bees that abide in the cool slopes, having had union with their mates, ascend the wild lime tree (குருந்த மரம் - Atlantia) and then melodize in the primary melody type of the mullai class (பெரும்பண்களுள் ஒன்றாகிய செவ்வழிப்பண் என்ற முல்லைப் பண்). Such a glorious place is Thiru-k-kut-ra-lam. Here Lord Civan is enshrined who ignores the slandering words of Buddhists who sit and eat as well as Samanars who stand and eat, both could not happily enjoy the glory of our Supreme Lord Civan.

மாடவீதி வருபுனற் காழியார் மன்னன்
கோடலீன்று கொழுமுனை கூம்புங் குற்றாலம்
நாடவல்ல நற்றமிழ்ஞான சம்பந்தன்
பாடல்பத் தும்பாட நம்பாவம் பறையுமே. 11

மாட வீதி வருபுனல் காழியார் மன்னன்,
கோடல் ஈன்று கொழு முனை கூம்பும் குற்றாலம்
நாட வல்ல நல்-தமிழ் ஞானசம்பந்தன்,
பாடல் பத்தும் பாட, நம் பாவம் பறையுமே.

mATa vIti varupun2al kAziyAr man2n2an2,
kOTal In2Ru kozu mun2ai kUmpum kuRRAlam
nATa valla, nal-tamiz njAn2acampantan2,
pATalpattum pATa, nam pAvam paRaiyumE.

***பொருள்:*** நற்றமிழ் வல்ல ஞானசம்பந்தன் பலராலும் நாடவல்லவன். மாடவீதிகளும், ஆற்று நீர் வளமும் மிகுந்த சீகாழிப் பதிக்கு மன்னன். இரு கைகளைக் குவித்து மூடி இறைவனை வணங்குவது போன்று செங்காந்தள் மலர்கள் பூத்து தன் கொழுவிய முனையான பூ இதழ்களை மூடி இறைவனை வணங்கும் நகரம் திருக்குற்றாலம் ஆகும். இத்திருக் குற்றாலத்து இறைவரான சிவபெருமான் மீது ஞானசம்பந்தன் இப்பதிகத்தைப் பாடினார். இப்பாடல்கள் பத்தையும் பாட வல்லவர்கள் பாவங்கள் நீங்கும்.

***குறிப்புரை:*** குற்றாலத்தைப் பற்றி ஞானசம்பந்தன் சொன்ன பாடல் பத்தும் பாட வல்லார் பாவம் பறையும் என்கின்றது. கோடல் – செங்காந்தள். கொழுமுனை கூம்பும் – கொழுமையான சிகரம் கூம்பியுள்ள.

Gnaanasambandan, is the prince of Kaazhi where water is available in plenty. This city has many storeyed mansions. Gnaanasambandan is well versed in Tamil and sought by many. He has sung on Lord Civan of Thiru-k-kut-ra-lam. Here the Malabaar glory lily (red or white species) (Gloriasa superba - *கோடல் - செங்காந்தள்*) flourishes well. Even these flowers worship Lord Civan by closing their well-shaped sharp petals. If we chant these ten verses with true devotion our sins will be purged.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*99ஆம் பதிகம் முற்றிற்று*
End of 99th Hymn

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# 100. திருப் பரங் குன்றம்

## திருத்தல வரலாறு:

திருப்பரங்குன்றம் பாண்டிய நாட்டுத் திருத்தலம். பேருந்துகள் பல உள்ளன. இத்தலம் மதுரைக்குத் தென்மேற்கில் 8 கி.மீ. தூரத்தில் உள்ளது.

இது முருகனது ஆறு படைவீடுகளில் முதல் வீடு. முருகன் தெய்வ யானையைத் திருமணம் செய்து கொண்ட தலம். முருகப் பெருமான் தெய்வயானையைத் திருமணம் செய்யுமுன்பு, தன் தாய் தந்தையரை வணங்கி வழிபட்ட தலம். சுவாமி பெயர் பரங்கிரிநாதர். அம்மை ஆவுடை நாயகி. தீர்த்தம் சரவணப் பொய்கை. மலைமேல் காசி தீர்த்தம் என்ற ஒன்று இருக்கிறது. அதில் பல ரக மீன்கள் பார்ப்போர் கண்ணைக் கவரும். நக்கீரர் வாழ்ந்த நன்னகரம்.

## கல்வெட்டு:

இத்தலத்துக் கல்வெட்டுக்களாக செவல் பாதிரியார் குறிப்பிட்டவை பதினொன்று. ஆனால் அவைகள் தெளிவும், வரலாற்று விளக்கம் உடையனவும் அல்ல. கி.பி. 1843இல் வீரசிம்ம நாயுடு என்பவன் மரபில் வந்த மங்கம்மாள் கோயிலுக்குச் சிறிது தானம் வழங்கினாள். சுந்தரபாண்டியதேவன், வீரநாராயண குளத்திற்குக் கீழ்ப்புறமிருந்த அம்பாண்டியபுரமாகிய புளிங்குன்றூர் கிராமத்தைப் பூசைக்கும் பணிக்கும் அளித்தான். அதில் கடவுள் பெயர் சுந்தரபாண்டீசுவரம் உடையார் என்று குறிக்கப்படுகிறது. முகம்மதிய அரசாங்கத்தில் திவானாயிருந்த ராஜகோபாலராயர் ஐரோப்பியர் படை மதுரையில் புகுந்து, கோயிலை அழித்து முன்னேறிக் கொண்டிருந்தபோது, வயிராவி முத்துக்கருப்பன் குமாரன் குட்டி என்பவன் எதிரிப்படைகளைத் தடுப்பதற்காகக் கோபுரத்திலிருந்து கீழே விழ, அவன் பரம்பரையினருக்கு இறையிலியாகச் சில நிலங்கள் அளித்த செய்தி அறியப்படுகிறது.

## பதிக வரலாறு:

திருஞான சம்பந்தர் மதுரையை வழிபட்டுப் பிற தலங்களையும் வழிபடத் திருவுளங் கொண்டருளினார். அது சமயம் அரசன் நெடுமாறனும், மங்கையர்க்கரசியாரும், குலச்சிறையாரும்

கொண்டருளினார். அது ... ழிவீர்களாக; உங்களைப் பிரியாதவண்ணம்

மனங்கவல, பிள்ளையார் 'நீங்கள் கவலாதொழிவீர்களாக; உங்களைப் பிரியாதவண்ணம்

இந்நாட்டுப் பிறபதிகளையும் தரிசிக்க எண்ணினோம்' என்றார். அவர்கள் யாவரும் மகிழ்ந்து திருஞானசம்பந்தருடன் திருப்பரங்குன்றத்தை வந்து அடைந்தார்கள். அங்கு பிள்ளையார் இறைவன் திருவடிகளைப் போற்றி 'நீடலர் சோதி' என்னும் இப்பதிகத்தை அருளிச் செய்தார்கள்.

## 100. THIRU-P-PARAN-KUNDRAM

### HISTORY OF THE PLACE

This sacred place is in Paandiya Naadu, 8 km to the south of Madurai. Many bus routes touch this place.

God's name here is Parangkirinaathar and that of the Goddess is Aavudainaayaki. This is the first among the six 'padaiveedu' temples of Lord Murugan. Lord Murugan offered worship here to His parents before marrying Deivayaanai. It is here Lord Murugan then married Dheivayaanai. The sacred ford here is the Saravanap Poigai. In addition, there is a Kaasi Theerththam atop the hill. A variety of attractive fish may be found in it. This place also has the distinction of once having been the residence of the famed Tamil poet Nakkeerar who composed the famous poem "Thiru-muru-kaatru-p-padai – திருமுருகாற்றுப்படை".

Many of the eleven inscriptions here are not of historical significance. There is a reference to a small gift by Mangammaal, a descendant of Veerasimma Naayudu. Sundhara Paandiya Thevan made a gift of Pilingkunroor village for worship services and other works. An interesting episode relating to the grant of tax-free lands to the descendants of one Vayiraavi Muththukkaruppan Kumaaran Kutti is noted. As a European force invading Madhurai was advancing, this man jumped off from the gopuram with a view of stopping the invaders. Raajagopaala Raayar, dewan of the then Mahommodan ruler, made some grants to honour him for his sacrifice.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 100. திருப்பரங்குன்றம் 100. THIRU-P-PARAN-KUNDRAM

பண் : குறிஞ்சி *Pann: Kurinji*
ராகம் : குறிஞ்சி *Raagam: Kurinji*

நீடலர்சோ திவெண்பிறை யோடுநிரை கொன்றை
சூடலனந் திச்சுடரெ ரியேந்திச் சுடுகானில்
ஆடலனஞ் சொலணி யிழையாளை யொருபாகம்
பாடலன் மேயநன்னகர் போலும்பரங் குன்றே. 1

நீடு அலர் சோதி வெண்பிறையோடு நிரை கொன்றை
சூடலன், அந்திச் சுடர்எரி ஏந்திச் சுடுகானில்
ஆடலன், அம் சொல் அணியிழையாளை ஒருபாகம்
பாடலன், மேய நன்நகர் போலும் - பரங்குன்றே.

nITu alar cOti veNpiRaiyOTu nirai kon2Rai
cUTalan2, antic cuTar eri Entic cuTukAn2il
ATalan2, am col aNiyizaiyALai orupAkam
pATalan2, mEya nan2nakarpOlum--paragkun2RE.

**பொருள்:** சிவபெருமான், நீண்டு விரிந்த ஒளிக் கதிர்களை உடைய வெண்பிறையையும், வரிசையாகத் தொடுத்த கொன்றை மாலையையும் தன் முடியில் சூடியிருப்பவர். அந்திப் பொழுதில் ஒளியோடு கூடிய எரியை ஏந்திச் சுடுகாட்டில் ஆடுபவர். அழகிய உயர்ந்த சொற்களைப் பேசுபவளும், சிறந்த அணிகலன்களைப் பூண்டுள்ளவளும் ஆகிய உமையம்மையை ஒருபாகமாகக் கொண்டு பாடுபவர். அத்தகைய பெருமான் எழுந்தருளிய நன்னகரம் திருப்பரங்குன்றம் ஆகும்.

**குறிப்புரை:** பிறை, கொன்றை இவைகளைச் சூடியவனும், எரியேந்தியும், இடுகாட்டில் நட்டமாடுபவனும், உமாதேவியாரை ஒரு பாகம் வைத்து ஆடுபவனுமாம் ஆகிய இறைவன் எழுந்தருளியுள்ள நகரம் திருப்பரங்குன்றம் என்கின்றது. சூடலன் – சூடுதலை உடையவன். அம் சொல் அணியிழையாளை எனப் பிரிக்க.

Our Lord wears on His head the crescent, which diffuses bright rays of light and rows and rows of kondrai flowers. At dusk he dances in the crematory ground, holding in his hands, ruddy fire. He also sings with his bejewelled consort of mellifluous

(sweet) words. This Lord is enshrined in Thiru-p-paran-kundram, a place (known for) conferring weal on all.

அங்க மொராறும் மருமறை நான்கும் மருள்செய்து
பொங்கு வெண்ணூலும் பொடியணிமார் பிற்பொலிவித்துத்
திங்க ளும்பாம்புந் திகழ்சடை வைத்தோர் தேன்மொழி
பங்கி னன்மேயநன் னகர்போலும் பரங்குன்றே. 2

அங்கம் ஓர் ஆறும் அருமறை நான்கும் அருள்செய்து,
பொங்கு வெண் நூலும் பொடி அணி மார்பில் பொலிவித்து,
திங்களும் பாம்பும் திகழ்சடை வைத்து ஓர் தேன்மொழி
பங்கினன் மேய நன் நகர் போலும் - பரங்குன்றே.

agkam Or ARum arumaRai nAn2kum aruL ceytu,
pogku veN nUlum poTi aNi mArpil polivittu,
tigkaLum pAmpum tikazcaTai vaittu Or tEn2mozi
pagkin2an2 mEya nan2nakarpOlum--paragkun2RE.

**பொருள்:** சிவபெருமான் நான்கு வேதங்களையும் ஆறு அங்கங்களையும் அருளிச் செய்தவர். திருநீறு அணிந்த மார்பில் அழகுமிக்க வெண்ணூலைப் பொலிவுற அணிந்திருப்பவர். பிறை, பாம்பு ஆகியவற்றை விளங்கும் சடைமீது சூடியிருப்பவர். தேன் போன்ற மொழி பேசும் உமையம்மையை ஒருபாகமாகக் கொண்டவர். இப்பெருமான் எழுந்தருளிய நன்னகரம் திருப்பரங்குன்றம் ஆகும்.

**குறிப்புரை:** வேதம் அங்கம் இவைகளை அருளிச் செய்து, பூணூல் நீறணிந்த மார்பில் விளங்க, பாம்பும் மதியும் சென்னியிற் சூடிய உமையொரு பாதன் நகர் இது என்கின்றது. பொங்கும் வெண்ணூல் – அழகு மிகும் பூணூல்.

Civan blessed the world with four Vedas and six Angaas. He smears on His chest the holy ashes. He wears on His body the bright, white holy thread very beautifully. He has worn on His matted hair the crescent moon and a serpent. He shares His body with His consort Umayammai who speaks honeyed words. Thiru-p-paran-kundram is a good (town or) place where our Lord is entempled.

நீரிடங் கொண்டநி மிர்சடைதன் மேல்நிரை கொன்றை
சீரிடங் கொண்டஎம் மிறைபோலுஞ் சேய்தாய
ஒருடம் புள்ளேயுமை யொருபாக முடனாகிப்
பாரிடம் பாடஇனி துறைகோயில் பரங்குன்றே. 3

*நீர் இடம்கொண்ட நிமிர்சடைதன்மேல் நிரை கொன்றை*
*சீர் இடம்கொண்ட எம் இறைபோலும் சேய்துஆய*
*ஓர் உடம்புள்ளே உமை ஒரு பாகம் உடன் ஆகி,*
*பாரிடம் பாட, இனிது உறை கோயில் - பரங்குன்றே.*

nIr iTam koNTa nimir caTai tan2mEl nirai kon2Rai
cIr iTam koNTa em iRaipOlum, cEytu Aya
Or uTampuLLE umai orupAkam uTan2 Aki,
pAriTam pATa, in2itu uRai kOyil--paragkun2RE.

**பொருள்:** சிவபெருமான் கங்கை சூடிய நிமிர்ந்த சடைமுடிமேல் வரிசையாகத் தொடுத்த கொன்றை மாலையைச் சிறப்புற அணிந்துள்ள எம் இறைவர் ஆவார். மிக உயர்ந்துள்ள தமது திருமேனியின் ஒருபாகமாக உமையம்மையைக் கொண்டுள்ளவர். இப்பெருமான் பூத கணங்கள் பாட இனிதாக உறையும் கோயில் திருப்பரங்குன்றம் ஆகும்.

**குறிப்புரை:** கங்கை சூடிய திருச்சடையில் கொன்றையை அணிந்த எம்மிறைவன் உறைகோயில் பரங்குன்று போலும் என்கின்றது. நீர் – கங்கை. நிரை கொன்றை – மாலையாகப் பூக்கும் கொன்றை. பாரிடம் – பூதம்.

On His majestic crown of matted hair which bears a river (the Ganges), Civan wears kondrai flowers in a beautiful garland form. On His tall frame, He is concorporate with Uma. He who is hailed in hymns by the Bhuta-hosts is sweetly enshrined in Thiru-p-paran-kundram.

வளர்பூங் கோமாதவி யோடுமல்லிகைக்
குளிர்பூஞ் சாரல்வண் டறைசோலைப் பரங்குன்றம்
தளிர்போல் மேனித்தையல் நல்லாளோ டொருபாகம்
நளிர்பூங் கொன்றைசூடி னன்மேயநகர் தானே. 4

*வளர் பூங்கோங்கம் மாதவியோடு மல்லிகைக்*
*குளிர்பூஞ்சாரல் வண்டு அறை சோலைப் பரங்குன்றம்,*
*தளிர் போல் மேனித் தையல் நல்லாளோடு ஒருபாகம்,*
*நளிர் பூங்கொன்றை சூடினன் மேய நகர் தானே.*

vaLar pUgkOgkam mAtaviyOTu mallikaik
kuLirpUnjcAral vaNTu aRai cOlaip paragkun2Ram,
taLir pOl mEn2it taiyal nallALOTu oru pAkam,
naLir pUgkon2Rai cUTin2an2 mEya nakartAn2E.

**பொருள்:** திருப்பரங்குன்றத்தில் வளர்ந்துள்ள கோங்கு மரங்களும், மணம் தரும் மாதவி போன்ற செடிகளும், மல்லிகை முதலிய கொடிகளும் நிறைந்துள்ளன. வண்டுகள் முரலும் சோலைகள் சூழ்ந்த சாரலை உடையது. தளிர் போன்ற மேனியளாகிய தையல் நல்லாளை ஒரு பாகமாகவும், கொன்றை மலர் மாலையை அணிந்தவனாகவும் விளங்கும் சிவபெருமானது நகர் திருப்பரங்குன்றம் ஆகும்.

**குறிப்புரை:** கோங்கம் மாதவி மல்லிகை இவைகள் செறிந்த சாரலை உடைய பரங்குன்றம். பெண்ணொரு பாகன் பேணிய நகரம் என்கின்றது. இவன் போகியாதற்கேற்பக் குன்றமும் மல்லிகை முதலிய மணந்தரும் பூக்கள் மலிந்துள்ளமையும், புணர்ச்சி நலமிகும் சாரலோடு கூடியமையும் குறிக்கப் பெற்றன.

This Thiru-p-paran-kundram is the town of our Lord Civan. In the groves of this town flourish kongu, madavi and jasmine. These creepers and buzzing beetles abound in these cool groves. In this town is enshrined our Civan who is concorporate with Umaa, the godly dame whose body is soft as young tender shoots. He wears the garland of kondrai flowers, dense and beautiful in bunches.

பொன்னியல் கொன்றை பொறிகிளர்நாகம் புரிசடைத்
துன்னிய சோதியாகிய ஈசன்தொன்மறை
பன்னிய பாடலாடலன் மேயபரங்குன்றை
உன்னிய சிந்தையுடை யவர்க்கில்லை யுறுநோயே. 5

பொன் இயல் கொன்றை பொறி கிளர் நாகம் புரிசடைத்
துன்னிய சோதிஆகிய ஈசன், தொல்மறை
பன்னிய பாடல் ஆடலன், மேய பரங்குன்றை
உன்னிய சிந்தை உடையவர்க்கு இல்லை, உறுநோயே.

pon2 iyal kon2Rai poRi kiLar nAkam puricaTait
tun2n2iya cOti Akiya Ican2, tolmaRai
pan2n2iya pATal ATalan2, mEya paragkun2Rai
un2n2iya cintai uTaiyavarkku illai, uRu nOyE.

**பொருள்:** சிவபெருமான் பொன் போன்ற கொன்றை மலர், பொறிகள் விளங்கும் பாம்பு ஆகியவற்றை முறுக்கேறிய சடைகளில் அணிந்துள்ளார். இவர் ஒளிவடிவினனாகிய ஈசன்



வடுகூர் (ஆண்டார் கோயில்) – வடுகீஸ்வரர் – நடுநாட்டுத் தலம்

**Vatukesurar Temple - Vatukur (Anadarkoyil), Tamil Nadu.**



திரு ஆப்பனூர் – பாண்டி நாட்டுத்தலம்

**Thiru Appanur**



திருஎருக்கத்தம்புலியூர் – நீலகண்டேஸ்வரர் (வீழிஅழகர் கோயில்) – நடு நாட்டுத் தலம்
**Veezhi Azhakar Temple - Erukkatthampuliyur, Tamil Nadu.**

திருஅன்னியூர் – அக்கினிபுரீஸ்வரர் (ஆபத்சகாயேஸ்வரர்) – சோழநாட்டு தென்கரைத் தலம்
**Apathsahayareswarar Temple - Tiruvanniyur (Annur-Ponnur), Tamil Nadu.**

ஆவார். பழமையான வேதங்களில் அமைந்துள்ள பாடல்களைப் பாடி ஆடுபவர். இப்பெருமான் எழுந்தருளியுள்ள திருப்பரங்குன்றத்தைத் தியானிக்கும் உயர்ந்த உள்ளத்தை உடையவர்களுக்கு வருத்தம் தரும் மிக்க நோய்கள் எவையும் இல்லை.

**குறிப்புரை:** சோதி வடிவாகிய ஈசனும் வேதம் அருளிச் செய்தவனும் ஆகிய நட்டமாடியின் பரங்குன்றைத் தியானிப்பவர்கட்கு நோயில்லை என்கின்றது. பொறி – படப்பொறி. உன்னிய – தியானித்த. உறுநோய் – மிக்க நோய்.

Civan who is in the form of a blaze has decorated His twisted and stiff hair with golden kondrai and speckled snake. He sings hoary Vedic hymns and dances too. This Lord resides in Thiru-p-paran-kundram. Those who have the will to meditate on Him will be always free of troubling illnesses.

கடை நெடுமாடக் கடியரண் மூன்றுங்க னல்மூழ்கத்
தொடை நவில்கின்ற வில்லினனந் திச்சுடுகானில்
புடை நவில்பூதம் பாடநின்றாடும் பொருசூலப்
படை நவில்வான் றன்நன்னகர் போலும் பரங்குன்றே. 6

கடை நெடுமாடக் கடிஅரண்மூன்றும் கனல் மூழ்கத்
தொடை நவில்கின்ற வில்லினன், அந்திச் சுடுகானில்
புடை நவில் பூதம் பாட, நின்று ஆடும் பொரு சூலப்-
படை நவில்வான் தன் நன்நகர் போலும் - பரங்குன்றே.

kaTai neTu mATak kaTi araN mUn2Rum kan2al mUzkat
toTai navilkin2Ra villin2an2, antic cuTukAn2il
puTai navil pUtam pATa, nin2Ru ATum poru cUlap-
paTai navilvAn2tan2 nan2nakarpOlum--paragkun2RE.

**பொருள்:** வாயிலில் காவலை உடைய அசுரர்களின் மூன்று கோட்டைகளும் நெருப்பில் எரிந்து மூழ்குமாறு அம்பினை எய்த வில்லை உடையவர் சிவபெருமான். இவர் அந்திக் காலத்தில் தன்னோடு பழகிய பூதகணங்கள் பாட சுடுகாட்டில் ஆடுபவர். போர்க் கருவியாகிய சூலப்படையை ஏந்தியவர். இப்பெருமானின் நன்னகர் திருப்பரங்குன்றம் ஆகும்.

**குறிப்புரை:** திரிபுரம் எரிய அம்புதொடுத்த வில்லினனும், பூதம் பாட இடுகாட்டில் நடமாடும் சூலபாணியுமாகிய இறைவன் நகர் பரங்குன்று என்கின்றது. கடி அரண் – காவலோடு கூடிய அரண். தொடை – அம்பு. புடை – பக்கம். நவில்வான் – விரும்பியவன்.

The well-guarded three citadels of the Asuraas, were gutted in full, when our Lord, as an archer exercised His arrows. At dusk He dances in the burning ground to the music of the friendly Bhutas. He carries the trident, a war weapon. This Lord is enshrined in the weal-conferring Thiru-p-paran-kundram.

அயிலுடை வேலோரனல் புல்குகையினம் பொன்றால்
எயில்பட வெய்தளம் மிறைமேய இடம்போலும்
மயில்பெடை புல்கிமாநட மாடும்வளர் சோலைப்
பயில்பெடை வண்டுபாட லறாதபரங் குன்றே. 7

***அயில் உடை வேல் ஓர் அனல் புல்கு கையின் அம்பு ஒன்றால்***
***எயில் பட எய்த எம் இறை மேய இடம்போலும் -***
***மயில் பெடை புல்கி மா நடம் ஆடும் வளர் சோலை,***
***பயில் பெடைவண்டு பாடல் அறாத பரங்குன்றே.***

ayil uTai vEl Or an2al pulku kaiyin2 ampu on2RAl
eyil paTa eyta em iRai mEya iTampOlum--
mayil peTai pulki mA naTam ATum vaLar cOlai,
payil peTaivaNTu pATal aRAta paragkun2RE.

**பொருள்:** சிவபெருமான் கூரிய வேற்படையை உடையவர். அனல் தழுவிய கை அம்பு ஒன்றால் முப்புரத்தை எய்து அழித்தவர். இப்பெருமான் அமர்ந்திருக்கும் இடம் திருப்பரங்குன்றம் ஆகும். இங்கு ஆண் மயில்கள் பெண் மயில்களைத் தழுவிச் சிறந்த வகையில் நடனம் ஆடுகின்றன. வளர்ந்த சோலைகளில் பெண் வண்டுகளோடு கூடிய ஆண் வண்டுகள் இடையறாது இசை பாடுகின்றன.

**குறிப்புரை:** எறியம்பு ஒன்றால் எயில் எய்த இறைவன் எழுந்தருளியுள்ள இடம் பரங்குன்று என்கின்றது. அயில் – கூர்மை. பட – அழிய. ஆண்மயில் தன்னுடைய பெடையைத் தழுவிக் கொண்டு நடமாடும் சோலையிலே, பெடையோடு கூடிய வண்டுகள் பாடுகின்றன என்பதால் இன்பமயமாதல் எடுத்துக் காட்டப்பெற்றது.

He is the wielder of sharp spears. With fiery arrows He destroyed the three fortresses. He is enshrined in Thiru-p-paran-kundram wherein in the groves peacocks, embracing peahens, dance beautifully. Here also found beetles, both male and female, that add to the pleasantness of the place with their ceaseless humming.

மைத்தகு மேனிவாள ரக்கன்ம குடங்கள்
பத்தின திண்டோளி ருபதுஞ்செற் றான்பரங்குன்றைச்
சித்தம தொன்றிச்செய் கழலுன்னிச் சிவனென்று
நித்தலு மேத்தத்தொல் வினைநம் மேல்நில்லாவே. 8

மைத் தகு மேனி வாள் அரக்கன் மகுடங்கள்
பத்தின, திண்தோள் இருபதும், செற்றான் பரங்குன்றைச்
சித்தம் அது ஒன்றிச் செய் கழல் உன்னிச் 'சிவன்' என்று
நித்தலும் ஏத்த, தொல்வினை நம்மேல் நில்லாவே.

mait taku mEn2i vAL arakkan2 tan2 makuTagkaL-
pattin2a, tiNtOL irupatum, ceRRAn2 paragkun2Raic
cittam atu on2Ric cey kazal un2n2ic "civan2" en2Ru
nittalum Etta, tolvin2ai nammEl nillAvE.

**பொருள்:** இராவணன் மை போன்ற கரிய மேனியன். வாள் போரில் வல்லவன். இவனது மகுடம் பொருந்திய பத்துத் தலைகளையும் இருபது தோள்களையும் அடர்த்து நெரித்தவர் சிவபெருமான். இப்பெருமான் எழுந்தருளிய திருப்பரங்குன்றத்தை ஒன்றிய மனத்துடன் சிந்தித்து, அப்பெருமானின் சேவடிகளை 'சிவனே' என்று நாள்தோறும் ஏத்தித் துதிக்க, வினைகள் நம்மேல் நில்லாமல் அகன்றுவிடும்.

**குறிப்புரை:** பரங்குன்றைச் சிவபெருமானே என்றெண்ணி மனம் ஒன்றி நாள்தோறும் வழிபட நமது வினைகள் அழியும் என்கின்றது. மைத்தகு மேனி வாள் அரக்கன் – கரிய மேனியை உடைய கொடிய அரக்கன் என்றது இராவணனை.

Thiru-p-paran-kundram is the abode of Lord Civa who crushed the ten crowned heads and the twenty formidable shoulders of the pitch dark Raavana. When we concentrate on the abode, as if it is Lord Civa and glorify Him daily our hoary karma will no longer cling to us.

முந்தியிவ் வையந்தா வியமாலு மொய்யொளி
உந்தியில் வந்திங்கரு மறையீந்த வுரவோனும்
சிந்தையி னாலுந்தெரி வரிதாகித் திகழ்சோதி
பந்தியலங் கைமங்கை யொர்பங்கன் பரங்குன்றே. 9

*முந்தி இவ் வையம் தாவிய மாலும், மொய் ஒளி*
*உந்தியில் வந்திங்கு அருமறை ஈந்த உரவோனும்,*
*சிந்தையினாலும் தெரிவு அரிதுஆகித் திகழ்சோதி,*
*பந்து இயல் அம் கை மங்கை ஒர்பங்கன், பரங்குன்றே!*

munti iv vaiyam tAviya mAlum, moy oLi
untiyil vantu igku arumaRai Inta uravOn2um,
cintaiyin2Alum terivu aritu Akit tikazcOti,
pant· ·iyal am kai magkai orpagkan2, paragkun2RE!

பொருள்: திருமால், மாவலி மன்னனிடம் மூன்றடி மண்கேட்டு, அவன் தந்த அளவில் முந்திக் கொண்டு இவ்வுலகை ஓரடியாலும், வானுலகை ஓரடியாலும் அளந்தவன். நான்முகன் அத்திருமாலின் உந்திக் கமலத்தில் தோன்றியவன். அரிய மறைகளை ஓதுபவன். சிவபெருமான் இவர்கள் இருவரின் மனத்தினாலும் அறிய முடியாதவாறு பேரொளிப் பிளம்பாய் ஜோதி வடிவினனாக விளங்கியவர். இப்பெருமான், பந்து தங்கிய அழகிய கையை உடைய மங்கையை ஒரு பாகமாகக் கொண்டு எழுந்தருளி இருக்கும் தலம் திருப்பரங்குன்றம் ஆகும்.

குறிப்புரை: அயனும் மாலும் மனத்தாலும் அறியமுடியாத சோதி வடிவாகிய இறைவனது பரங்குன்று இது என்கின்றது. உந்தி – கொப்பூழ். உரவோன் – அறிஞன்; என்றது பிரமனை. பந்து இயல் அங்கை – மங்கைக்கு அடை.

Begging for three feet land from Maavali, and immediately after being granted his wish, Thirumaal measured this world with one stride and the celestial world with another stride and the third on the head of Maavali and crushed him. Brahma who arose from the navel of Thirumaal proclaimed the rare Vedas. Even these two got confounded since Civan was beyond the reach of their minds and appeared as a big blaze. This Lord holds in His body, goddess Umaa whose hands sporting a ball. He is entempled in Thiru-p-paran-kundram.

குண்டாய் முற்றுந்திரி வார்கூறை மெய்போர்த்து
மிண்டாய் மிண்டர்பே சியபேச்சு மெய்யல்ல
பண்டால் நீழல்மேவியா சன்பரங்குன்றைத்
தொண்டா யேத்தத்தொல் வினைநம் மேல்நில்லாவே. 10

குண்டுஆய் முற்றும் திரிவார், கூறை மெய் போர்த்து,
மிண்டுஆய் மிண்டர் பேசிய பேச்சு மெய்அல்ல;
பண்டுஆல் நீழல் மேவிய ஈசன் பரங்குன்றைத்
தொண்டால் ஏத்த, தொல்வினை நம்மேல் நில்லாவே.

kuNTu Ay muRRum tirivAr, kURai mey pOrttu,
miNTu Ay miNTar pEciya pEccu mey alla;
paNTu Al nIzal mEviya Ican2 paragkun2Rait
toNTAl Etta, tolvin2ai nammEl nillAvE.

**பொருள்:** சமணர்கள் பருத்த உடம்பினராக எங்கும் திரிபவர்கள். புத்தர்கள் உடலில் ஆடையை போர்த்துத் திரிபவர்கள். இவர்கள் தருக்க வாதத்துடன் மிடுக்காய்ப் பேசும் பேச்சுக்களில் உண்மை எதுவும் இல்லை. பழமையான காலத்தில் கல்லால மர நிழலில் வீற்றிருந்து நால்வர்க்கு அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய நான்கு உறுதிப்பொருளின் விளக்கத்தைத் தெளிவு படுத்திய ஈசனான சிவபெருமான் திருப்பரங்குன்றத்தில் எழுந்தருளி உள்ளார். அவருக்குத் தொண்டு செய்து போற்றினால் நம் தொல்வினைகள் நம்மேல் நில்லாது கழிந்து விடும்.

**குறிப்புரை:** புத்தரும் சமணரும் கூறுவன மெய்யில்லாதன; ஆதலால் பரங்குன்று ஈசன் பாதத்தைப் பணி செய்து தொழவே பழவினை பறக்கும் என்கின்றது. குண்டாய் – பருத்த உடலராய். மிண்டர் – வழக்குரைப்பார். பண்டு ஆல் நீழல் மேவிய எனப்பிரிக்க.

The Jains, of fatted physique roaming about everywhere, and the Buddhists donning clothes on their bodies wrangle with showy words which are not at all true. In the days of yore our Lord was seated in the shade of the banyan tree and expounded dharma to the four (the Sanathana Kuravaas). When we serve and glorify this Lord of Thiru-p-paran-kundram our hoary karma will flee from us.

தடமலி பொய்கைச் சண்பைமன் ஞானசம்பந்தன்
படமலி நாகமரைக் கசைத்தான்றன் பரங்குன்றைத்
தொடைமலி பாடல்பத்தும் வல்லார்தந் துயர்போகி
விடமலி கண்டனருள் பெறுந்தன்மை மிக்கோரே. 11

*தட மலி பொய்கைச் சண்பை மன் ஞானசம்பந்தன்,*
*படம் மலி நாகம் அரைக்கு அசைத்தான் தன் பரங்குன்றைத்*
*தொடை மலி பாடல்பத்தும் வல்லார், தம் துயர் போகி*
*விடம் மலி கண்டன் அருள் பெறும் தன்மை மிக்கோரே.*

taTa mali poykaic caNpai man2 njAn2acampantan2,
paTam mali nAkam araikku acaittAn2 tan2 paragkun2Rait
toTai mali pATal pattum vallAr, tam tuyar pOki,
viTam mali kaNTan2 aruL peRum tan2mai mikkOrE.

***பொருள்:*** ஞான சம்பந்தன், பரப்பளவு மிகுந்த பொய்கையை உடைய சண்பை என்னும் சீகாழிப் பதியின் மன்னர். இவர், படத்தோடு கூடிய பாம்பை இடையில் கட்டியிருக்கும் திருப்பரங்குன்றத்தில் இறைவரான சிவபெருமான்மீது, தொடை நயம் மிகுந்த பாடல்களைப் பாடினார். இப்பாடல்கள் பத்தையும் ஓதி வழிபட வல்லவர்களின் துன்பங்கள் நீங்கிவிடும். இவர்கள் விடமுண்ட கண்டனாகிய சிவபெருமானின் அருளைப் பெரும் தகுதி உடையவர்கள் ஆவர்.

***குறிப்புரை:*** ஞானசம்பந்தன் சொன்ன பரங்குன்றப் பாடல் பத்தும் வல்லவர் தம்முடைய துன்பம் எல்லாம் தொலைந்து நீலகண்டனது அருளைப் பெறும் தகுதி உடையோர் ஆவர்.

Gnaanasambandan, the king of Chanbai or Seekaazhi filled with spacious springs, has sung about the god of Thiru-p-paran-kundram who wears the hooded cobra on his waist. Those who are capable of reciting these ten verses worshipping our Lord, will be freed of their sins (and sorrows). They will be transformed into deserving and sincere devotees by the grace of the Lord Civan whose throat retains the venom of the churned sea.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*100ஆம் பதிகம் முற்றிற்று*
End of 100th Hymn

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# 101. திருக் கண்ணார் கோயில்

## திருத்தல வரலாறு:

சோழ நாட்டுக் காவிரி வடகரைத் தலமாக விளங்குவது திருக் கண்ணார் கோயில். மயிலாடுதுறை – வைத்தீசுவரன் கோயில் பேருந்து வழியில் உள்ளது. குறுமாணக்குடி என்றும் வழங்கப்படும். கௌதம முனிவரால் சாபம் பெற்ற இந்திரன் பூசித்துச் சரீரத்தில் உள்ள குறிகள் அனைத்தையும் கண்களாக மாற்றிக் கொண்டமையால் இப்பெயர் எய்தியது. வாமனமூர்த்தியும் பூசித்துப் பேறு பெற்றமையின் குறுமாணக்குடி என்ற மறு பெயரும் உண்டாயிற்று. இறைவன் பெயர் கண்ணாயிர நாதர். இறைவியின் பெயர் முருகு வளர் கோதை. தீர்த்தம் இந்திர தீர்த்தம். இடம் வைத்தீஸ்வரன் கோயிலுக்குத் தென்கிழக்கே 2.5 கி.மீ. தூரத்தில் உள்ளது.

## பதிக வரலாறு:

சீகாழியை விட்டுத் தாதையார் முதலியவர்கள் உடன்போத அடியார்கள் வாழ்த்தொலி எடுத்துவரத் திருஞானசம்பந்தப் பிள்ளையார் திருக் கண்ணார் கோயிலை அடைந்தார். அங்கு எழுந்தருளியுள்ள இறைவனை ‘தண்ணார் திங்கள்’ என்னும் திருப்பதிகத்தால் தோத்திரித்தார்.

# 101. THIRU-K-KANNAAR-KOVIL

## HISTORY OF THE PLACE

This sacred place is to the north of river Cauvery in Chola Naadu. It is on the Mayilaaduthurai - Vaiththeesuvaran Koyil bus route, 2.5 km to the east of Vaiththeesuvaran Koyil. Indhiran, who had been cursed by Sage Gouthamar, worshipped Lord Civa here and got the marks on his body changed to eyes, thus giving rise to this name. It is also known as Kuru-maana-k-kudi because Vaamana Murthi worshipped Lord Civa here and obtained His grace in this place.

The name of God is Kannaayira-naathar here and that of the Goddess is Murugu-valar-Kothai. The sacred ford is Indhira Theerththam.

**INTRODUCTION TO THE HYMN**

With his father and other devotees our saint arrived at Thiru-k-kannaar-koil, adored Lord Civa and sang the following hymn.

திருச்சிற்றம்பலம்

THIRU-CH-CHITRAMBALAM

## 101. திருக் கண்ணார் கோயில் 101. THIRU-K-KANNANAR KOVIL

பண் : குறிஞ்சி *Pann: Kurinji*

ராகம் : குறிஞ்சி *Raagam : Kurinji*

தண்ணார் திங்கட்பொங் கரவந்தாழ் புனல்சூடிப்
பெண்ணா ணாயபேரரு ளாளன்பிரியாத
கண்ணார் கோயில்கை தொழுவோர் கட்கிடர்பாவம்
நண்ணா வாகுந்நல் வினையாய நணுகும்மே. 1

*தண் ஆர் திங்கள், பொங்கு அரவம், தாழ்புனல், சூடி,*
*பெண் ஆண் ஆய பேர்அருளாளன் பிரியாத*
*கண்ணார்கோயில் கைதொழுவோர்கட்கு, இடர்பாவம்*
*நண்ணாஆகும்; நல்வினைஆய நணுகு(ம்)மே.*

taN Ar tigkaL, pogku aravam, tAzpun2al, cUTi,
peN AN Aya pEr aruLALan2 piriyAta
kaNNArkOyil kaitozuvOrkaTku, iTarpAvam
naNNA Akum; nalvin2ai Aya naNuku(m)mE.

***பொருள்:*** சிவபெருமான் குளிர்ச்சியான பிறை, சினம் மிகுந்த பாம்பு, ஆகாயத்திலிருந்து தாழ்ந்து வந்த கங்கை ஆகியவற்றைச் சூடியுள்ளார். பெண்ணும் ஆணுமாக விளங்கும் பெருங்கருணையாளனான இப்பெருமான் பிரியாமல் எழுந்தருளி இருக்கும் கோயில் திருக் கண்ணார் கோயில் ஆகும். இக்கோயிலைக் கைகளால் தொழுது வணங்குபவர்களைத் துன்பங்களும் பாவங்களும் அணுகா. நல்வினையால் வரும் இன்பங்கள் அவர்களை அணுகும்.

***குறிப்புரை:*** திங்களும் பாம்பும் கங்கையும் சிரத்தில் அணிந்து பெண்ணுமாய் ஆணுமாயிருக்கின்ற பேரருளாளனது கண்ணார் கோயிலைக் கைதொழுவார்களுக்கு இடரும் பாவமும் இல்லை. நல்வினை நணுகும் என்கின்றது. தண்ணார் திங்கள் – குளிர்ந்த மதி. இடர் பாவம் – துன்பமும் அதற்கு காரணமாகிய பாவங்களும்.

Lord Civan is one of immense grace, embeds His consort on the left half of His body frame and never gets Himself separated from Thiru-k-kannaar-koil temple. He decks His head with the cool crescent moon, the raging serpent and the river Ganges that has descended drawn from heaven. Troubles and sins will never approach those who worship this Lord Civan with folded hands. Also virtue accrue to them.

கந்தமர் சந்துங்கார கிலுந்தண் கதிர்முத்தும
வந்தமர் தெண்ணீர் மண்ணிவளஞ் சேர்வயல் மண்டிக்
கொந்தலர் சோலைக் கோகிலமாடக் குளிர்வண்டு
செந்திசை பாடுஞ்சீர் திகழ்கண்ணார் கோயிலே. 2

கந்து அமர் சந்தும், கார்அகிலும், தண்கதிர் முத்தும்,
வந்து அமர் தெண்நீர் மண்ணி வளம் சேர் வயல் மண்டி,
கொந்து அலர் சோலைக் கோகிலம் ஆட, குளிர் வண்டு
செந்து இசை பாடும் சீர் திகழ் கண்ணார்கோயிலே.

kantu amar cantum, kAr akilum, taNkatir muttum,
vantu amar teN nIr maNNi vaLam cEr vayal maNTi,
kontu alar cOlaik kOkilam ATa, kuLir vaNTu
centu icai pATum cIr tikaz kaNNArkOyilE.

**பொருள்:** சிவபெருமானின் திருக்கண்ணார் கோயிலானது மணம் பொருந்திய சந்தனம், கரிய அகில், குளிர்ந்த ஒளிவீசும் முத்து ஆகியன வரும் தெளிந்த நீரை உடைய மண்ணி நதியால் வளம் பெருகும் வயல்களால் சூழப்பட்டு உள்ளது. இங்கு உள்ள சோலைகளில் கொத்துக்களாக விரிந்துள்ள மலர்கள் நிறைந்துள்ளன. குயில்கள் பாடவும் ஆடவும் செய்கின்றன. செவிகளைக் குளிர்விக்கும் பண் இசைபாடும் வண்டுகள் செவ்வழிப் பண்பாடும் சீரோடு திகழ்வது சிவபிரானது திருக்கண்ணார் கோயில் ஆகும்.

**குறிப்புரை:** மண்ணியாறு வளம்படுத்துகின்ற வயல்கள் நிறைந்த சோலையிலே குயில் ஆட வண்டு பாடுங் கண்ணார் கோயில் இது என்கின்றது. கந்து அமர் சந்து – மணம் பொருந்திய சந்தனம். கந்து – கந்தம். கார் அகில் – வயிரமாய் இருக்கும் கறுத்த அகில். கோகிலம் – குயில். செந்திசை – செவ்வழிப்பண்.

Thiru-k-kannaar-koil and its town are surrounded by fertile fields getting plenty of water from the river Manni. This river also carries along with its waters, fragrant sandalwood, block eagle wood and cool bright pearls and makes the town affluent and luxurious. There are groves all around this town where bunches of well blossomed

flowers are in plenty; here the Indian cuckoos dance merrily; the chafers sing melodiously in the specific note known as Chev-vali which has a very cooling effect on our ears. Such an opulent place is Thiru-k-kannaar-koil where our Lord Civan is entempled.

பல்லியல் பாணிப்பாரி டமேத்தப்படு கானின்
எல்லிநடஞ் செய்யீசனெம் மான்றன்னி டமென்பர்
கொல்லை யின்முல்லை மல்லிகைமௌ வற்கொடி பின்னிக்
கல்லியலிஞ் சிமஞ்சமர் கண்ணார் கோயிலே. 3

"பல்இயல் பாணிப் பாரிடம் ஏத்த, படுகானில்
எல்லி நடம்செய் ஈசன் எம்மான்தன் இடம்" என்பர் -
கொல்லையின் முல்லை, மல்லிகை, மௌவல், கொடி பின்னி,
கல் இயல் இஞ்சி மஞ்சு அமர் கண்ணார்கோயிலே.

"pal iyal pANip pAriTam Etta, paTukAn2il
elli naTam cey Ican2 emmAn2 tan2 iTam" en2par--
kollaiyin2 mullai, mallikai, mauval, koTi pin2n2i,
kal iyal injci manjcu amar kaNNArkOyilE.

**பொருள்:** திருக்கண்ணார் கோயில் என்னும் தலமானது, முல்லை நிலத்தில் வளரும் முல்லை மலரும், மல்லிகை மலரும், காட்டு மல்லிகையோடு பின்னி வளர்ந்துள்ள இடமாகும். இங்குள்ள கல்லால் இயன்ற வானளாவிய மதில்களில் மேகங்கள் சிறிது நேரம் அமர்ந்து பின் செல்லுகின்றன. இத்தலமானது, பலவாக இயலும் தாளங்களை இசைத்துப் பூத கணங்கள் போற்றிப்பாட, சுடுகாட்டில் நள்ளிரவில் திருநடனம் செய்யும் ஈசனாகிய எம் சிவபெருமான் எழுந்தருளி இருக்கும் தலமாகும். மேகங்கள் சிறிது நேரம் அமர்ந்து விட்டுப் பின் செல்லுகின்றன.

**குறிப்புரை:** பூதம் ஏத்த இரவில் நடஞ்செய்யும் ஈசன் இடம் இது என்பர். பல்லியல் பாணி – பலவாகிய இயல்பினை உடைய பாட்டு. எல்லி – இரவு. கொல்லை – முல்லை நிலம். மௌவல் – காட்டு மல்லிகை. கல்லியல் இஞ்சி – கல்லால் இயன்ற மதில். மஞ்சு – மேகம்.

Our Lord Civan enacts His dance during midnight in the cremation ground to the multi splendoured singing of the Bhuta hosts. It is said that Lord Civan's shrine is Thiru-k-kannaar-koil. In the tall stonewalls of this place, clouds that are moving in the sky take rest and then move on. This town is surrounded by forest lands where the Analian jasmine (*முல்லை*), and the Himaalayan smooth jasmine (*மல்லிகை*) get twained

with the natural forest Malligai creepers and put out a very grand and pleasing appearance.

தருவளர் கானந்தங் கியதுங்கப் பெருவேழம்
மருவளர் கோதையஞ் சவுரித்து மறைநால்வர்க்
குருவள ராலநீழலமர்ந் தீங்குரை செய்தார்
கருவளர் கண்ணார் கோயிலடைந் தோர்கற்றோரே. 4

தரு வளர் கானம் தங்கிய துங்கப் பெருவேழம்,
மருவளர்கோதை அஞ்ச உரித்து, மறைநால்வர்க்கு
உரு வளர் ஆலநீழல் அமர்ந்து ஈங்கு உரைசெய்தார்
கரு வளர் கண்ணார்கோயில் அடைந்தோர் கற்றோரே.

taru vaLar kAn2am tagkiya tugkap peruvEzam,
maruvaLar kOtai anjca, urittu, maRai nAlvarkku
uru vaLar Al nIzal amarntu Igku urai ceytAr
karu vaLar kaNNAr kOyil aTaintOr kaRROrE.

***பொருள்:*** மரங்கள் செழித்து வளர்ந்துள்ள காட்டில் வாழ்ந்த உயர்ந்த பெரிய யானையைக் கண்டு, மணம் பொருந்திய மலர் மாலையை அணிந்துள்ள உமையம்மை அஞ்சினாள். உடனே சிவபெருமான் அதன் தோலை உரித்துப் போர்த்தினார். தெய்வத் தன்மை வாய்ந்த கல்ஆல மர நிழலில் அமர்ந்து அறம், பொருள், இன்பம், வீடு என்று சொல்லப்படும் உறுதிப் பொருள்களின் உட்பொருளை சனகாதி முனிவர்களுக்கு உணர்த்தியவர். திருக்கண்ணார் கோயில் கருவறையில் தங்கியிருக்கும் இப்பெருமானைப் போற்றி அடைந்தவர்கள் முழுமையான ஞானம் அடைந்தோராவர்.

***குறிப்புரை:*** உமையாள் அஞ்ச காட்டு யானையை உரித்துப் போர்த்தியும் சனகாதியர்க்கு உபதேசித்தும் அமர்ந்த பெருமானது கண்ணார் கோயிலை அடைந்தவர்கள் கற்றவர்கள் என்கின்றது. துங்கம் – உயர்ச்சி. வேழம் – யானை. மருவளர் கோதை – மணம் மிக்க மாலை போல்வாளாகிய உமாதேவி. நால்வர்க்கு – சனகாதியர்களுக்கு. உரு வளர் ஆலம் – தெய்வத்தன்மையாகிய அச்சம் வளர்கின்ற ஆலமரம். உரு – வடிவமுமாம்.

Goddess Umaa Devi wears sweet smelling flower garland; once she got terrified on seeing a massive, colossal elephant carrying tall trees from the forest, and rushing towards her. Lord Civan confronted the elephant and peeled off its skin and killed it. On another occasion Lord Civan sitting under the shade of a tall green and magnificent banyan tree, enlightened the aims of mankind (objects of human pursuit) four in

number such as virtue, riches, happiness and final liberation (*அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கு உறுதிப் பொருள்*) to the four Janakaathi saints. This Lord Civan is entempled Thiru-k-kannaar-koil. Those who reach this temple and adore Him will enrich themselves with true divine knowledge.

மறுமாணுரு வாய்மற்றி ணையின்றி வானோரைச்
செறுமாவலி பாற்சென்றுல கெல்லா மளவிட்ட
குறுமாணுரு வன்தற்குறி யாகக்கொண்டாடுங்
கறுமாகண் டன்மேயது கண்ணார் கோயிலே. 5

மறு மாண்உருஆய் மற்று இணைஇன்றி, வானோரைச்
செறு மாவலிபால் சென்று, உலகு எல்லாம் அளவிட்ட
குறு மாண்உருவன், தற்குறியாகக் கொண்டாடுங்
கறு மா கண்டன் மேயது - கண்ணார்கோயிலே.

maRu mAN uru Ay maRRu iNai in2Ri, vAn2Oraic
ceRu mAvalipAl cen2Ru, ulaku ellAm aLaviTTa
kuRu mAN uruvan2, taRkuRiyAkak koNTATum
kaRu mA kaNTan2 mEyatu--kaNNArkOyilE.

**பொருள்:** மாவலி என்ற அரக்கர் குல மன்னன் வஞ்சனை பொருந்திய பெரிய உருவம் உடையவனாய், தனக்கு ஒப்பார் எவரும் இல்லை என்று செறுக்குற்று தேவர்களைத் துன்புறுத்திய மன்னன் ஆவான். திருமால் குறுகிய பிராமண வடிவத்தை எடுத்து, அவனிடம் மூன்றடி மண் கேட்டு உலகமெல்லாம் தன்னுடையதே என்று அளந்தவன். அந்த திருமால் சிவபெருமானின் வடிவத்தைத் தாபித்து அவரை வழிபட்டு அருள் பெற்றவன். சிவபெருமான் கருத்த பெரிய கழுத்தினை உடையவராக, விரும்பி எழுந்தருளியிருக்கும் கோயில் திருக்கண்ணார் கோயில் ஆகும்.

**குறிப்புரை:** மாவலியை வென்ற குறளனாகிய திருமால் வழிபட்ட இறைவன் எழுந்தருளியுள்ள இடம் கண்ணார் கோயில் என்கின்றது. மறு மாண் உருவாய் – குற்றம் பொருந்திய பெரிய வடிவமாய். செறும் – வருத்துகின்ற. குறுமாண் உருவன் – குறுகிய பிரமசாரி வடிவத்தை எடுத்த திருமால். தற்குறியாக – சிவபெருமானின் அடையாளமாக. கறுமா கண்டன் – கறுத்த பெரிய கழுத்தினை உடையவன். இத்தலத்திற்குப் பக்கத்தில் குறுமாணகுடி என்ற கிராமமும் இருப்பது அறிஞர்கள் அறிந்து இன்புறுதற்குரியது.

Maavali is the gigantic king of demons who had no parallel for his valour. With an evil heart he used to harass the Devaas now and then. To protect the Devaas, god

Thirumaal took the form of a dwarf man and appeared before Maavali and asked him to give a load of three feet of land to which he agreed (A testament to his philanthropy and generosity). Thirumaal measured the whole world in two feet. For the third feet no land was available; he, therefore, placed his leg on Maavali's head and pushed him into the infernal regions under the earth (*பாதாளலோகம்*). This Vishnu worshipped Lord Civan entempled at Thiru-k-kannaar-koil and exposing His dark blue-neck. Thirumaal considered Lord Civan as the salvific symbol and adored Him.

விண்ணவ ருக்காய்வே லையுள்நஞ் சம்விருப்பாக
உண்ணவ னைத்தே வர்கமுதீந் தெவ்வுலகிற்குங்
கண்ணவ னைக்கண் ணார்திகழ் கோயிற்கனி தன்னை
நண்ணவ ல்லோர்கட் கில்லைந மன்பால் நடலையே. 6

விண்ணவருக்குஆய் வேலையுள் நஞ்சம் விருப்புஆக
உண்ணவனை, தேவர்க்கு அமுது ஈந்து, எவ்உலகிற்கும்
கண்ணவனை, கண்ணார் திகழ் கோயில் கனிதன்னை,
நண்ண வல்லோர்கட்கு இல்லை நமன் பால் நடலையே.

viNNavarukku Ay vElaiyuL nanjcam viruppu Aka
uNNavan2ai, tEvarkku amutu Intu, ev ulakiRkum
kaNNavan2ai, kaNNAr tikaz kOyil kan2itan2n2ai,
naNNa vallOrkaTku illai, naman2pAl naTalaiyE.

**பொருள்:** சிவபெருமான் விண்ணவர்களைக் காத்தருளும் பொருட்டு கடலில் தோன்றிய நஞ்சினை விருப்பத்தோடு உண்டவர். தேவர்களுக்கு அமுதத்தை முழுவதுமாக அளித்தவர். எல்லா உலகத்து உயிர்களுக்கும் பற்றுக் கோடாகவும், கண்ணாகவும் விளங்குபவர். திருக்கண்ணார் கோயிலில் கனிபோன்று விளங்கும் இப்பெருமானைக் கிட்டிச் சேர்வோர்களுக்கு எமனால் வரும் துன்பங்கள் இல்லை.

**குறிப்புரை:** தேவர்களுக்காக விஷத்தை விரும்பி உண்டவனை, அவர்களுக்கு அமுதம் அளித்து, எல்லா உலகிற்குங் கண்ணானவனை, கண்ணார் கோயில் கனியை அடைய வல்லவர்க்கு எமன் பால் இன்னல் இல்லை என்கின்றது. வேலை – கடல். உண்ணவன் – உண்டவன். நடலை – துன்பம்.

Lord Civan willingly positioned the oceanic venom in His throat to save the celestial folks from death; later when elixir came out of the ocean, He dispensed it to all the Devaas. He indeed is the supporter of all the worlds and is entempled in the splendid Thiru-k-kannaar-koil which is the embodiment of complete perfection. Those

who can reach this temple and worship Him will be freed from the affliction of Yama, the god of death.

முன்னொரு காலத்திந்தி ரனுற்றமுனி சாபம்
பின்னொரு நாளவ்விண்ண வரேத்தப்பெ யர்வெய்தித்
தன்னருளா ற்கண்ணாயிர மீந்தோன் சார்பென்பர்
கன்னியர்நா ளுந்துன்னமர் கண்ணார் கோயிலே. 7

"முன் ஒரு காலத்து இந்திரன் உற்ற முனிசாபம்,
பின் ஒரு நாள் அவ் விண்ணவர் ஏத்த, பெயர்வு எய்தி,
தன் அருளால் கண் ஆயிரம் ஈந்தோன் சார்பு" என்பர் -
கன்னியர் நாளும் துன் அமர் கண்ணார்கோயிலே.

"mun2 oru kAlattu intiran2 uRRa mun2icApam,
pin2 oru nAL av viNNavar Etta, peyarvu eyti,
tan2 aruLAl kaN Ayiram IntOn2 cArpu" en2par--
kan2n2iyar nALum tun2 amar kaNNAr kOyilE.

***பொருள்:*** முன்னொரு காலத்தில் கௌதம முனிவர் இந்திரனின் உடல் முழுவதும் ஆயிரம் அல்குல் தோன்றுமாறு சாபமிட்டார். அதனால் இந்திரன் மிகவும் வருந்தி சிவனை வழிபட்டான். பின்னொரு காலத்தில் தேவர்கள் புகழ்ந்து போற்றுமாறு, சிவபெருமான் அச்சாபத்தை நீக்கி அருள்செய்து, இந்திரனின் உடல் முழுவதும் ஆயிரம் கண்களாகத் தோன்றுமாறு செய்தார். அப்பெருமான் எழுந்தருளிய தலம் திருக்கண்ணார் கோயில் ஆகும். இத்தலத்தில் கன்னியர்கள் நாள்தோறும் கூடி வந்து வழிபடுகின்றனர்.

***குறிப்புரை:*** கௌதம முனிவரால் இந்திரன் அடைந்த சாபத்தைத் தேவர்கள் வேண்டிக் கொள்ளப் போக்கி ஆயிரங்கண் அளித்த கடவுள் இடம் இது என்பர். இத்தலத்து வரலாற்றைக் குறிப்பது இது. சார்பு – இடம். துன் அமர் – நெருங்கியிருக்கின்ற.

Of yore Indran the king of devaas was cursed by saint Gautama by which Indra's entire body was dotted with one thousand Pudendum muliebre. Indra prayed to Lord Civa and requested Him to remove the curse. Lord Civa lessened the curse but re-dotted his body with one thousand eyes. The celestial folks were satisfied and adored Lord Civa who is entempled in Thiru-k-kannaar-koil where pious virgins gather daily and adore Him.

பெருக்கெண் ணாதபேதை யரக்கன் வரைக்கீழால்
நெருக்குண் ணாத்தன்நீள் கழல்நெஞ்சில் நினைந்தேத்த
முருக்குண் ணாதோர்மொய் கதிர்வாள்தேர் முன்னீந்த
திருக்கண் ணாரென்பார் சிவலோகஞ் சேர்வாரே. 8

"பெருக்கு எண்ணாத பேதை அரக்கன் வரைக்கீழால்
நெருக்குண்ணா, தன் நீள்கழல் நெஞ்சில் நினைந்து ஏத்த,
முருக்குண்ணாது ஓர் மொய் கதிர் வாள், தேர், முன் ஈந்த
திருக்கண்ணார்" என்பார் சிவலோகம் சேர்வாரே.

"perukku eNNAta pEtai arakkan2 varaikkIzAl
nerukkuNNA, tan2 nILkazal nenjcil nin2aintu Etta,
murukkuNNAtu Or moy katir vAL, tEr, mun2 Inta
tirukkaNNAr" en2pAr civalOkam cErvArE.

**பொருள்:** இராவணன், சிவபெருமானை அன்போடு வழிபட்டால் ஆக்கம் பெறலாம் என்று அறியாத அறிவிலி. கயிலையைப் பெயர்த்தபோது அதன் கீழ் அகப்பட்டு நெருக்குண்டவன். அவன் நல்லறிவு பெற்று, எங்கும் புகழை உடைய சிவபெருமானின் திருவடிகளைத் தன் நெஞ்சில் நினைந்து போற்றினான். அவனுக்கு அழிக்க முடியாத ஒளியினை உடைய வாளையும், தேரையும் முற்காலத்தில் இப்பெருமான் வழங்கி அருளினார். இத்தகைய பெருமையை உடைய சிவபெருமான் வீற்றிருக்கும் தலம் திருக்கண்ணார் கோயில் என்று புகழ்ந்து கூறுபவர்கள் சிவலோகம் சென்றடைவார்கள்.

**குறிப்புரை:** இராவணன் கைலையின் கீழ் நெருக்குண்ணாதபடி திருவடியில் இருந்து தோத்திரிக்க, வாளும் தேருங் கொடுத்த இறைவன் எழுந்தருளியுள்ள இடத்தைப் பரவுவார் சிவலோகம் சேர்வார் என்கின்றது. பெருக்கு – ஆக்கம். பேதை – அறிவிலி. வரை – கைலைமலை. நெருக்குண்ணா – நெருக்குண்டு என்றுமாம்.

Raavanan did not realise the basic fact that people who pay obeisance to Lord Civan with sincere devotion will become good and affluent in their life. The arrogant Raavanan, therefore, tried to lift and keep aside mount Kailash, the abode of Lord Civan, but got crushed under the mountain. Then he realised his folly and came back to his normal senses. By Lord Civan's grace, he came out of the mountain and standing by the side of his chariot. He begged Lord Civan for pardon. He contemplated on Lord Civa's grace abounding ankleted feet and adored Him. Then Lord Civan of Thiru-k-

kannaar-koil pardoned him and blessed him. He gave him then a radiant peerless invincible sword. Those who adore Lord Civan will reach His celestial world.

செங்கமலப் போதிற்றிகழ் செல்வன் திருமாலும்
அங்கமலக் கண்ணோக்க ரும்வண்ணத் தழலானான்
தங்கமலக் கண்ணார்திகழ் கோயில்தம துள்ளம்
அங்கமலத் தோடேத்திட அண்டத் தமர்வாரே. 9

*செங்கமலப் போதில்-திகழ்செல்வன் திருமாலும்*
*அங்கு அ(ம்)மலக் கண் நோக்க(அ)ரும் வண்ணத்து அழல் ஆனான்*
*தங்கு அமலக் கண்ணார் திகழ்கோயில் தமது உள்ளம்*
*அங்கு அமலத்தோடு ஏத்திட, அண்டத்து அமர்வாரே.*

cegkamalap pOtil-tikaz celvan2 tirumAlum
agku a(m)malak kaN nOkka (a)rum vaNNattu azal An2An2
tagku amalak kaNNAr tikazkOyil tamatu uLLattu
agku amalattOTu EttiTa, aNTattu amarvArE.

**பொருள்:** செந்தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமனும் திருமாலும் தங்களின் அழகிய ஊனக் கண்களால் நோக்கியும் காண இயலாதவராக அழல் உருவாக நின்றவர் சிவபெருமான். இப்பெருமான் தனது கருணை நிறைந்த கமலக் கண்களோடு வீற்றிருக்கும் தலம் திருக்கண்ணார் கோயில் ஆகும். இக்கோயிலை அடைந்து தமது உள்ளத்தில் மலம் நீங்கப் பெற்றவராக பரிசுத்த மனத்தோடு போற்றிடுவோர் என்றும் வானுலகில் இனிது அமர்ந்திருப்பர்.

**குறிப்புரை:** அயனும் மாலும் கண்ணால் நோக்க முடியாதவண்ணம் தீயுருவான சிவன் திகழும் கண்ணார்கோயிலை வணங்குவார் அமரர் உலகத்து இருப்பார் என்கின்றது. அங்கு அம்மலக்கண் நோக்கரும் வண்ணத்து – அவ்விடத்து அழகிய ஊனக் கண்ணால் நோக்க முடியாதவண்ணம். தங்கு அமலக் கண்ணார் கோயில் அங்கு அமலத்தோடு ஏத்திட – அவ்விடத்து மலரகிதராய்த் துதிக்க.

The opulent Brahma is seated on a red lotus flower. He and Thirumaal with their lotus like bodily eyes could not see Lord Civan who was then in the form of an unbeholdable tall and large flame. This Lord Civan having merciful and lotus like divine eyes is entempled in Thiru-k-kannaar-koil. Those who can reach this temple and worship Him without any evil thoughts in their mind (மனத்துக்கண் மாசில்லாத நிலை) will gain the celestial world.

தாறிடுபெண் ணைத்தட்டு டையாருந் தாமுண்ணுஞ்
சோறுடை யார்சொல் தேறன்மின் வெண்ணூல் சேர்மார்பன்
ஏறுடை யன்பரனென் பணிவானீள் சடைமேலோர்
ஆறுடை யண்ணல் சேர்வது கண்ணார் கோயிலே. 10

தாறு இடு பெண்ணைத் தட்டுஉடையாரும், தாம் உண்ணும்
சோறு உடையார், சொல்-தேறன்மின்! வெண்நூல் சேர் மார்பன்,
ஏறுஉடையன், பரன், என்பு அணிவான், நீள்சடைமேல் ஓர்
ஆறுஉடை அண்ணல், சேர்வது - கண்ணார்கோயிலே.

tARu iTu peNNait taTTu uTaiyArum, tAm uNNum
cORu uTaiyAr, col-tERan2min2! veNnUl cEr mArpan2,
ERu uTaiyan2, paran2, en2pu aNivAn2, nIL caTai mEl Or
ARu uTai aNNal, cErvatu--kaNNAr kOyilE.

**பொருள்:** சமணர்கள், குலைகளை ஈனும் பனை மரத்தின் ஓலைகளால் வேயப்பட்ட தடுக்கை என்ற உடையை உடுத்தி இருப்பவர்கள். புத்தர்கள் தாம் உண்ணும் சோற்றையே பெரிதெனக் கருதுபவர்கள். இவர்கள் கூறும் அறிவுரைகளைக் கேளாதீர்கள். சிவபெருமான் வெண்மையான பூணூல் அணிந்த மார்பினர். ஆனேற்றை ஊர்தியாக உடையவர். மேலானவர். என்பு மாலை அணிந்தவர். நீண்ட சடைமுடிமேல் கங்கையை அணிந்துள்ளவர். தலைமைத் தன்மை உடைய இப்பெருமான் எழுந்தருளி விளங்கும் கோயில் திருக்கண்ணார் கோயில் ஆகும். அதனைச் சென்றடைந்து வணங்குங்கள்.

**குறிப்புரை:** பனந்தடுக்கை உடுத்திய சமணரும், புத்தரும் சொல்லுகின்ற சொற்களைத் தெளியாதீர்கள். சிவன் சேர்வது கண்ணார் கோயிலே என்கின்றது. தாறு இடு பெண்ணை – குலை தள்ளும் பெண் பனை. தட்டு – தடுக்கு.

The Samanars wear cloths woven with leans of bunching palmyrah trees. Buddhists live to eat; they consider that the food they eat is the best thing in the world. Ye companions! Ignore the advices of these two groups of people. Lord Civan wears in His chest a white sacred thread. He uses the bull as His vehicle. He is above all in the world. He decks His body with garland made of bones. He accommodated the river Ganges in His long matted hair. He is the Supreme Being entempled in Thiru-k-kannaar-koil. Ye devotees! Go to this temple and worship Lord Civan therein.

காமரு கண்ணார் கோயிலுளானைக் கடல்சூழ்ந்த
பூமரு சோலைப் பொன்னியல் மாடப்பு கலிக்கோன்
நாமரு தொன்மைத் தன்மையுள் ஞானசம்பந்தன்
பாமரு பாடல்பத்தும் வல்லார்மேற் பழிபோமே. 11

காமரு கண்ணார்கோயில் உளானைக் கடல் சூழ்ந்த
பூ மரு சோலைப் பொன் இயல் மாடப் புகலிக் கோன் -
நா மரு தொன்மைத்தன்மை உள் ஞானசம்பந்தன் -
பா மரு பாடல்பத்தும் வல்லார் மேல் பழி போமே.

kAmaru kaNNArkOyil uLAn2ai, kaTal cUznta
pU maru cOlaip pon2 iyal mATap pukalik kOn2--
nA maru ton2maittan2mai uL njAn2acampantan2--
pA maru pATalpattum vallAr mEl pazi pOmE.

**பொருள்:** அழகிய திருக்கண்ணார் கோயில் என்னும் தலத்தில் சிவபெருமான் எழுந்தருளி உள்ளார். இப்பெருமானைக் கடல் சூழ்ந்ததும், பூக்கள் நிறைந்த சோலைகளை உடையதும், அழகாக அமைந்த மாடவீடுகளை உடையதுமான புகலிப் பதியின் தலைவனான ஞானசம்பந்தன் போற்றிப் பாடினார். இவர் பழமையான இறைவனின் புகழை நாவினால் மருவிப் போற்றுபவர். பரந்துபட்டுச் செல்லும் ஓசை மருவிய இப்பதிகப் பாடல்கள் பத்தையும் பாட வல்லவர்கள், தம்மேல் வரும் பழிகள் நீங்கப் பெறுவர்.

**குறிப்புரை:** கண்ணார் கோயிலைப் பற்றி ஞானசம்பந்தன் சொல்லிய பாடல் பத்தையும் பாட வல்லார்மேல் பழிபோம் என்கின்றது. காமரு – அழகிய. பாமரு – பாடல் – பரந்துபட்டுச் செல்லும் ஓசை மருவிய பாடல்.

Gnaanasambandan praises the glory of the primordial Supreme Being with his blessed tongue. He is the head of the city of Puhali which is full of flower gardens and girt with sea. Imposing tall and beautiful mansions are to be seen everywhere in the city. He has sung on Lord Civan entempled in Thiru-k-kannaar-koil beautiful to behold, those who can sing these ten verses of pervasive music in proper notes and adore Lord Civan in this temple will get rid of all blame.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*101ஆம் பதிகம் முற்றிற்று*
End of 101st Hymn

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# 102. சீகாழி

## திருத்தல வரலாறு:

முதல் பதிகம் பார்க்கவும்.

# 102. SEE-KAAZHI

## HISTORY OF THE PLACE

See first hymn.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 102. சீகாழி

## 102. SEE-KAAZHI

பண் : குறிஞ்சி
ராகம் : குறிஞ்சி

***Pann: Kurinji***
***Raagam : Kurinji***

உரவார் கலையின் கவிதைப் புலவர்க்கொரு நாளுங்
கரவா வண்கைக் கற்றவர்சேருங் கலிக்காழி
அரவார ரையாவ வுணர்புரமூன் றெரிசெய்த
சரவா என்பார்தத் துவஞானத் தலையாரே. 1

"உரவு ஆர் கலையின் கவிதைப் புலவர்க்கு ஒருநாளும்
கரவா வண்கைக் கற்றவர் சேரும் கலிக் காழி
அரவு ஆர் அரையா! அவுணர் புரம்மூன்று எரிசெய்த
சரவா!" என்பார் தத்துவஞானத் தலையாரே.

"uravu Ar kalaiyin2 kavitaip pulavarkku orunALum
karavA vaNkaik kaRRavar cErum kalik kAzi
aravu Ar araiyA! avuNar puram mUn2Ru eri ceyta
caravA!" en2pAr tattuvanjAn2at talaiyArE.

**பொருள்:** ஞானம் நிறைந்த கலை உணர்வோடு கவிதைகள் பாடும் புலவர்களுக்கு தாராளமாகவும், வெளிப்படையாகவும் அள்ளிக் கொடுக்கும் கைகளை உடைய வள்ளல் தன்மை மிகுந்த கற்றவர்கள் வாழ்கின்ற ஒலிமிக்க நகரம் சீகாழியாகும். இம்மாநகரில் விளங்கும் சிவபெருமானை, 'பாம்பை இடையில் அணிந்துள்ள பரமனே! அசுரர்களின்

முப்புரங்களையும் எரித்த அம்பை உடையவனே!' என்று போற்றுபவர்கள், தத்துவ ஞானத்தில் தலையானவர்களாவர்.

**குறிப்புரை:** கவிவாணர்க்கு ஒருநாளும் கரவாதபடி வழங்குங் கற்றவர்சேரும் காழியரசே! திரிபுரம் எரித்த செல்வர் என்பவர்களே தத்துவஞானத்தில் தலையானவர்கள் என்கின்றது. உரவு – ஞானம். கரவா – மறைக்காத. கலி – ஒலி. அரவு ஆர் அரையா எனப்பிரிக்க. சரவா – அம்பை உடையவனே.

Lord Civan is enshrined in Seekaazhi temple. In this city dwell munificent scholars who have very generous hands in giving away rewards, without any bias even for a day towards intelligent poets who want to sing songs on philosophy with universal knowledge containing divine revelations. Lord Civan tightens His waist using a serpent as belt. He held the bow and arrow in His hand which burnt the three citadels of Asuraas. Those who hail Lord Civan and praise Him with those two of His features are indeed the masters of spiritual truth in natural philosophy.

மொய்சேர் வண்டுண் மும்மதநால் வாய்முரண் வேழக்
கைபோல் வாழைகாய் குலையீனுங் கலிக்காழி
மைசேர் கண்டத்தெண் டோள்முக்கண் மறையோனே
ஐயாவென் பார்க்கல்லல் களான அடையாவே. 2

"மொய் சேர் வண்டு உண் மும்மதம் நால்வாய் முரண் வேழக்
கை போல் வாழை காய் குலை ஈனும் கலிக் காழி
மை சேர் கண்டத்து எண்தோள் முக்கண் மறையோனே!
ஐயா!" என்பார்க்கு அல்லல்கள் ஆன அடையாவே.

"moy cEr vaNTu uN mummatam nAlvAy muraN vEzak
kai pOl vAzai kAykulai In2um kalik kAzi
mai cEr kaNTattu eNtOL mukkaN maRaiyOn2E!
aiyA!" en2pArkku allalkaL An2a aTaiyAvE.

**பொருள்:** தொங்கும் வாயையும், முரண்படும் தலையையும் உடைய ஆண் யானைகள் தனது தும்பிக்கையால் மும்மதங்களை அவ்வப்போது சொரிகின்றன. இந்த மதநீரை சுற்றிலும் வண்டுகள் சூழ்ந்து, மொய்த்து, தங்கி அதை உண்ணுகின்றன. இந்த யானைகளின் தும்பிக்கை போன்று வாழைத்தோட்டத்தில் வாழை மரங்கள் காய்க்குலைகளை ஈனுகின்றன. இந்த சீகாழிப் பதியில் வேதங்களைப் படிக்கின்றவர்களின் ஓசை ஒலித்துக் கொண்டேயிருக்கின்றன. இப்பதியில் எழுந்தருளிய சிவபெருமானாரை, 'நீலகண்டனாகவும்

எட்டுத் தோள்களையும் மூன்று கண்களையும் உடையவனாக விளங்கும் மறையோனே! எங்கள் ஐயனே!' எனப் போற்றுபவர்களைத் துன்பங்கள் நெருங்கா.

**குறிப்புரை:** காழிமறையோனே ஐயா என்பவர்களுக்கு அல்லல்கள் அடையா என்கின்றது. யானையின் கையைப் போல் வாழைக்குலை ஈனும் காழி என வளம் உரைத்தவாறு. மும்மதம் – கபோலம். கரடம் – கோசம் என்ற மூன்றிடத்திலும் பொருந்திய மதம். நால்வாய் – தொங்குகின்ற வாய். மை – விடம்.

The town Seekaazhi is a very fertile place. Here in the plantain gardens, the trees grow superb and gorgeous. The bunches are so big that they look like that of the trunk of an elephant. Poets often compare the banana bunches to the trunk of elephants. Similarly Gnaanasambandan not only compares the bunches to the trunk of elephants, but also gives the descriptive features of an elephant. This poem describes the elephants as having a long hanging hand, called the tusk; they have a huge head divided in two parts; they exude their must (*மதம்* - Semen) from three different parts of their body. The elephant is therefore termed as Mummathathan (*மும்மதத்தன்* - The semen oozes from the cheek, temple and from penis). The bees are very fond of sipping the must of elephants; so they swam near these oozing places and enjoy sipping it. Lord Civan is enshrined in the temple located in this noisy city. His neck is dark blue in colour; He has eight shoulders and three eyes. Those devotees who proclaim these special features of Lord Civan and worship Him will never face any adversity in their life.

இளகக் கமலத்தீன் களியங்குங் கழிசூழக்
களாகப் புரிசைக்க வினார்சாருங் கலிக்காழி
அளகத் திருநன்னு தலிபங்கா அரனேயென்
றுளகப் பாடுமடியார்க் குறுநோ யடையாவே. 3

"இளகக் கமலத்து ஈன் கள் இயங்கும் கழி சூழ,
களகப் புரிசைக் கவின் ஆர் சாரும் கலிக் காழி,
அளகத் திரு நன்நுதலி பங்கா! அரனே!" என்று
உளகப் பாடும் அடியார்க்கு உறுநோய் அடையாவே.

"iLakak kamalattu In2 kaL iyagkum kazi cUza,
kaLakap puricaik kavin2 Ar cArum kalik kAzi,
aLakat tiru nan2nutali pagkA! aran2E!" en2Ru
uLakap pATum aTiyArkku uRu nOy aTaiyAvE.

**பொருள்:** மென்மையான தாமரை மலர்களில் இருந்து வெளிவருகின்ற தேன் நிறைந்து ஓடுகின்ற கழிகள் சூழ்ந்துள்ளதும், சுண்ணாம்புச் சாந்து பூசப்பெற்ற அழகு பொருந்திய மதில்கள் உடையதும், ஆரவாரம் மிகுந்ததுமான பதி காழிப்பதியாகும். இப்பதியில் எழுந்தருளியுள்ள சிவபெருமானை, 'அழகிய கூந்தலையும் நல்ல நெற்றியையும் உடைய உமையம்மையின் கணவனே! அரனே!' என்று மனம் உருகிப் பாடும் அடியவர்களை மிகுந்த துன்பத்தைத் தரும் நோய்கள் எவையும் அணுகாது.

**குறிப்புரை:** காழியில் எழுந்தருளியிருக்கின்ற உமையொரு பாகனை அரனே என்று மனம் இளகப் பாடுகின்ற அடியார்கட்குத் துன்பம் சேரா என்கின்றது. இளகக் கமலத்து ஈன்கள் இயங்கும் கழி – முறுக்கவிழ தாமரையிலிருந்து உண்டான கள் ஓடுகின்ற கழி. களகப்புரிசை – சுண்ணாம்புச் சாந்து பூசப்பெற்ற மதில். கவின் – அழகு. அளகம் – கூந்தல். நல்நுதலி – நல்ல நெற்றியை உடையாளாகிய பார்வதி. உள் அகப்பாடும் – மனம் பொருந்தப் பாடுகின்ற.

The city of Seekaazhi is always full of jubilation due to many festivities that take place there. Into the moats around the city, flows honey that is dripping from well-blossomed lotus flowers. The fortifications and the ramparts are all built artistically with lime powder paste. In such a gorgeous city Lord Civan is concorporated with Umaa Devi of lovely forehead and graceful hair. Serious illness will never affect those devotees who sing in praise of Him with ardent love and melting heart and by saying "Oh! Hara, You are the husband of Umaa Devi of such a beautiful complexion" - We pay obeisance to You; bless us with Your grace.

எண்ணார் முத்தமீன்று மரகதம்போற் காய்த்துக்
கண்ணார் கமுகுபவ ளம்பகுக்குங் கலிக்காழிப்
பெண்ணோர் பாகாபித்தா பிரானே யென்பார்க்கு
நண்ணா வினைகள் நாடொறுமின்பந் நணுகும்மே. 4

"எண் ஆர் முத்தம் ஈன்று மரகதம் போல் காய்த்து,
கண் ஆர் கமுகு பவளம் பகுக்கும் கலிக் காழி,
பெண் ஓர் பாகா! பித்தா! பிரானே!" என்பார்க்கு
நண்ணா, வினைகள்; நாள்தொறும் இன்பம் நணுகு(ம்)மே.

"eN Ar muttam In2Ru, marakatam pOl kAyttu,
kaN Ar kamuku pavaLam pazukkum kalik kAzi,
peN Or pAkA! pittA! pirAn2E!" en2pArkku
naNNA, vin2aikaL; nALtoRum in2pam naNuku(m)mE.

**பொருள்:** அழகிய கமுக மரங்கள் அளவில்லாத முத்துக்களைப் போன்று பூத்து, மரகதம் போன்று காய்த்து, பவளம் போன்று பழுக்கும் ஆரவாரம் மிகுந்த பதி சீகாழிப் பதியாகும். இப்பதியில் விளங்கும் சிவபெருமானாரை, 'பெண்ணோர் பாகனே! பித்தனே! பிரானே!' என்று போற்றுபவர்களை வினைகள் வந்து சேராது. நாள்தோறும் அவர்களுக்கு இன்பமே வந்து சேரும்.

**குறிப்புரை:** காழியின் கண்ணுள்ள பெண்ணொரு பாகனே பித்தா என்பார்க்கு வினைகள் நண்ணா, இன்பம் நணுகும் என்கின்றது. எண்ணார் முத்தம் – எண்ணுதற்கரிய முத்தம், கமுகு முத்தம் போல அரும்பி, மரகதம்போல் காய்த்து, பவளம்போல் கனியும் காழி என வளங்கூறியது.

The devotees of Lord Civan living in the glorious Seekaazhi feel happy daily; no karmic evil will get attached to them who hail Him saying thus "Oh! Lord Civa entempled in Seekaazhi having Your consort in the left half of Your body; Oh! Most gracious One (பித்தனே); Oh! Chief Master (பிரானே)! We all pay obeisance to You - Bless us". The Seekaazhi town where Lord Civan is entempled is a very gorgeous city. Here the good looking areca trees sprout buds in large numbers which look like pearls; they develop and become sturdy nuts in dark green colour like emerald; they further grew and become ruddy ripe fruits having coral colour.

மழையார் சாரற்செம் புனல்வந்தங் கடிவருடக்
கழையார் கரும்புகண் வளர்சோலைக் கலிக்காழி
உழையார் கரவாவுமை யாள்கணவா வொளிர்சங்கக்
குழையா என்றுகூற வல்லார்கள் குணவோரே. 5

"மழை ஆர் சாரல் செம்புனல் வந்து அங்கு அடி வருட,
கழை ஆர் கரும்பு கண்வளர் சோலைக் கலிக் காழி,
உழை ஆர் கரவா! உமையாள்கணவா! ஒளிர்சங்கக்-
குழையா!" என்று கூற வல்லார்கள் குணவோரே.

"mazai Ar cAral cempun2al vantu agku aTi varuTa,
kazai Ar karumpu kaNvaLar cOlaik kalik kAzi,
uzai Ar karavA! umaiyAL kaNavA! oLircagkak-
kuzaiyA!" en2Ru kURa vallArkaL kuNavOrE.

**பொருள்:** மேகங்கள் தங்கிய மலைச்சாரலில் மழை பெய்து, சிவந்த நிறமுடைய தண்ணீர் வந்து கரும்பின் அடிப்பாகத்தை வருட, அந்த நீர் வளத்தால் மூங்கிலை ஒத்த வளமான பருத்த கரும்புகளில் கணுக்கள் வளரும் சோலைகளை உடைய ஒலிமிக்க பதி சீகாழிப் பதியாகும். இப்பதியில் எழுந்தருளி இருக்கும் சிவபெருமானை, 'மானேந்திய கையனே! உமையம்மையின் கணவனே! ஒளி பொருந்திய சங்கக் குழையை அணிந்தவனே!' என்று கூறிப் போற்ற வல்லவர்கள் நற்குணம் உடையவர்கள் ஆவர்.

**குறிப்புரை:** மான் ஏந்தி, மங்கை கணவா, சங்கக் குழையா எனக் கூறவல்லவர்கள் குணமுடையராவர் என்கின்றது. மலைச்சாரலில் மழை பெய்து, செந்நீர் வந்து அடிவருட கரும்பு தூங்கும் சோலைக் காழி என வளங்கூறிற்று. கழையார் கரும்பு – கரும்பினுள் ஒருசாதி. மூங்கிலை ஒத்த வளமான கரும்பெனினும் ஆம். உழை – மான். கரவா – கையை உடையவனே.

The devotees of Lord Civan entempled in the pleasant noisy city of Seekaazhi are virtuous ones who hail Him thus: "Oh! Lord Civan, You are wearing a bright ear-ring made of seashell; Oh! You are the consort of Umaa Devi; Oh! You are holding a deer in Your hand; Oh! Lord Civan, You are entempled in the city of Seekaazhi, where the ruddy rainwater descending down from the slopes of the western mountains, where the clouds are daily moving flows through the many groves that are situated around the city. In the sugarcane groves, sugarcanes grow in very big size. The sturdy nodes of the sugarcane resemble those of bamboo nodes".

குறியார் திரைகள்வ ரைகள்நின்றுங் கோட்டாறு
கறியார் கழிசம்பிரசங் கொடுக்குங் கலிக்காழி
வெறியார் கொன்றைச் சடையாவிடை யாஎன்பாரை
அறியா வினைகளறு நோய்பாவம் மடையாவே. 6, 7

"குறி ஆர் திரைகள் வரைகள் நின்றும் கோட்டாறு
கறி ஆர் கழி சம்புஇரசம் கொடுக்கும் கலிக் காழி,
வெறி ஆர் கொன்றைச் சடையா! விடையா!" என்பாரை
அறியா, வினைகள், அருநோய், பாவம், மடையாவே.

"kuRi Ar tiraikaL varaikaL nin2Rum kOTTARu
kaRi Ar kazi campu iracam koTukkum kalik kAzi,
veRi Ar kon2Raic caTaiyA! viTaiyA!" en2pArai
aRiyA, vin2aikaL; arunOy, pAvam, aTaiyAvE.

**பொருள்:** மலைகளில் இருந்து அலைகள் போல வரும் அருவிகள் கரையை உடைய ஆறாக உருவெடுக்கிறது. அந்த ஆற்றில் அடித்துக் கொண்டு வரும் மிளகுத் தண்டுகள் தன் சுவையைத் தண்ணீருக்கு வழங்குகிறது. இத்தகைய ஆரவாரம் மிகுந்த பதி சீகாழிப் பதியாகும். இப்பதியில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானை 'மணம் கமழும் கொன்றை மலர் மாலையை அணிந்த சடையினனே! விடைமீது ஊர்ந்து வருபவனே!' என்று போற்றுபவர்களை வினைகள் அறியவே மாட்டாது. அவர்களை அரிய நோய்களும் பாவங்களும் அடைய மாட்டாது.

**குறிப்புரை:** கொன்றைச் சடையா, விடையா என்பாரை வினைகள் அறியவே மாட்டா; நோய்களும் பாவங்களும் அடையா என்கின்றது. மலைகளில் இருந்து குறித்தலை உடைய அலைகளோடு கூடிய கரையை உடைய ஆறுகள், மிளகில் இருந்து கழிக்கப்பட்ட சம்பிரசத்தைக் கொடுக்கும் எனக் காழிச் சிறப்பு தெரிவித்தது. வெறி – மணம். சம்பு – தண்டு. இரசம் – சுவை.

Karmic sufferings, uncommon maladies and sins will not affect those devotees of Seekaazhi who hail Lord Civa entempled therein by these words "Oh Lord Civa, You are decorating your matted hair with the garland made of sweet smelling cassia flowers! Oh Lord! You move about riding on Your bull! Oh! You are the God of the renowned Seekaazhi to which water that falls rhythmically down the mountains slopes forms a billowy river between its banks. The river water carries with it large quantities of pepper creepers which suffuse flavour in the river water".

உலகங் கொள்சங் கத்தார்கலி யோதத்துதையுண்டு
கலங்கள் வந்துகார் வயலேறுங் கலிக்காழி
இலங்கை மன்னன் றன்னையிடர் கண்டருள் செய்த
சலங்கொள் சென்னிமன் னாஎன்னத் தவமாமே. 8

"உலகம் கொள் சங்கத்து ஆர் கலி ஓதத்து உதையுண்டு,
கலங்கள் வந்து கார் வயல் ஏறும் கலிக் காழி,
இலங்கை மன்னன் தன்னை இடர் கண்டு அருள் செய்த
சலம் கொள் சென்னி மன்னா!" என்னத் தவம் ஆமே.

"ulam koL cagkattu Ar kali Otattu utaiyuNTu,
kalagkaL vantu kAr vayal ERum kalik kAzi,
ilagkai man2n2an2 tan2n2ai iTar kaNTu aruL ceyta
calam koL cen2n2i man2n2A!" en2n2a, tavam AmE.

**பொருள்:** வலிமையான சங்குகளைக் கொண்டுள்ள கடல் தனது வலிய அலைகளால் தோணிகளை மோதுகின்றன. அதனால் அவைகள் கார்நெல் மிகுந்த வயலில் வந்து சேருகின்றன. இத்தகைய ஒலிமிக்க பதி சீகாழிப் பதியாகும். இப்பதியில் எழுந்தருளியுள்ள சிவபெருமானை, 'இலங்கை மன்னன் இராவணனை முதலில் துன்புறுத்திப் பின்னர் அருள் செய்தவரே! கங்கை சூடிய திருமுடியை உடைய மன்னவனே!' என்று போற்றத் தவம் கைகூடும்.

**குறிப்புரை:** இலங்கை மன்னர்க்கு அருள்செய்த அரசே! என்று சொல்லத் தவம் உண்டாம் என்கின்றது. ஓதத்தால் உந்தப்பட்டு மரக்கலங்கள் வயலைச் சாரும் காழி என்க. ஆர்கலி – கடல். கலங்கள் – தோணிகள். சலம் – கங்கை.

Seekaazhi is on the seaside. In the sea, large and heavy shells are available in plenty. The big waves of the sea dash against the boats that travel in that area and push them to the shore. The noise of the waves in the sea reverberates in the entire city of Seekaazhi. Lord Civan is entempled in this famed city. He punished King Raavanan in the first instance for his transgression. Later when he realised his impudence and begged for pardon; Lord Civa graced him. He has accommodated the river Ganges in His matted hair. Those devotees who hail Him by praising His above features will achieve the benefits of penance and all religious austenties.

Note: This hymn is a 'tell tale' geological evidence of the 'seashore' existence of the then town of Seekaazhi. Similar evidence also existing other scriptures of the time, Thiruvaachakam and others.

ஆவிக் கமலத்தன் னமியங்குங் கழிசூழக்
காவிக் கண்ணார் மங்கலமோவாக் கலிக்காழிப்
பூவிற் றோன்றும் புத்தேளொடு மாலவன் றானும்
மேவிப் பரவுமரசே யென்னவினை போமே. 9

"ஆவிக் கமலத்து அன்னம் இயங்கும் கழி சூழ,
காவிக்கண்ணார் மங்கலம் ஓவாக் கலிக் காழி,
பூவில்-தோன்றும் புத்தேளொடு மாலவன்தானும்
மேவிப்பரவும் அரசே!" என்ன, வினை போமே.

"Avik kamalattu an2n2am iyagkum kazi cUza,
kAvik kaNNAr magkalam OvAk kalik kAzi,
pUvil-tOn2Rum puttELoTu mAlavan2 tAn2um
mEvip paravum aracE!" en2n2a, vin2ai pOmE.

**பொருள்:** பொய்கைகளில் உள்ள தாமரை மலர்களில் வாழும் அன்னங்கள் அருகில் உள்ள உப்பங்கழிகளில் நடமாடுகின்றன. நீலமலர் போன்ற கண்களை உடைய மகளிரது மங்கல ஒலி நீங்காது கேட்கும் பதி சீகாழிப் பதியாகும். இப்பதியில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானை, 'பிரமனும் திருமாலும் விரும்பிப் போற்றும் அரசனே' என்று சொல்ல நம் வினைகள் நம்மைவிட்டு அகன்றுவிடும்.

**குறிப்புரை:** அயனும் மாலும் வணங்கும் அரசே என்று சொல்ல வினைபோம் என்கின்றது. பொய்கைகளில் உள்ள தாமரைகளில் அன்னம் நடமாடுகின்ற உப்பங்கழிகளைச் சுற்றிலும் மகளிர் மங்கல ஒலி நீங்காத காழி என்க. ஆவி – வாவி. காவிக் கண்ணார் – நீலமலர் போலும் கண்ணை உடைய பெண்கள். பூவில் தோன்றும் புத்தேள் – பிரமன். மேவி – விரும்பி.

Brahma of the Lotus flower and Thirumaal - both come to Seekaazhi and devotedly seek for and worship Lord Civan entempled therein. The devotees who hail Lord Civan by proclaiming "Oh! Sovereign King Lord Civa of Seekaazhi! You are avidly sought for and worshipped by Brahma of the lotus flower and by Thirumaal! Pray bless us!" By saying this, the evil effects of their bad (karma) deeds will cease affecting them. Lord Civan is enshrined in the temple in Seekaazhi city which is girt with creeks and lotus pools where swans thrive. Around this area, saltpans are in plenty. This city is pervaded by the auspicious words of damsels whose eyes are like blue lily flowers.

மலையார் மாடநீடுயி ரிஞ்சிமஞ் சாருங்
கலையார் மதியஞ்சேர் தருமந்தண் கலிக்காழித்
தலைவா சமணர்சா க்கியர்க்கென்று மறிவொண்ணா
நிலையா யென்னத்தொல் வினையாய நில்லாவே. 10

*"மலை ஆர் மாடம், நீடு உயர் இஞ்சி, மஞ்சு ஆரும்*
*கலை ஆர் மதியம் சேர்தரும் அம் தண் கலிக் காழித்*
*தலைவா! சமணர் சாக்கியர்க்கு என்றும் அறிவு ஒண்ணா*
*நிலையாய்!" என்ன, தொல்வினை ஆய நில்லாவே.*

"malai Ar mATam, nITu uyar injci, manjcu Arum
kalai Ar matiyam cErtarum am taN kalik kAzit
talaivA! camaNar cAkkiyarkku en2Rum aRivu oNNA
nilaiyAy!" en2n2a, tolvin2ai Aya nillAvE.

**பொருள்:** மலைபோல் உயர்ந்த மாடவீடுகளிலும் மேகங்கள் தவழும் நீண்டுயர்ந்த மதில்களிலும் கலைகள் நிறைந்த சந்திரன் வந்து தங்குகின்றது. அழகிய குளிர்ந்த ஒலிமிக்கதுமான பதி சீகாழிப் பதியாகும். இப்பதியில் எழுந்தருளியுள்ள சிவபெருமானை, 'சீகாழியின் தலைவனே! வெளிவேஷக்கார சமண முனிவர்களும், போலி புத்தத் துறவிகளாலும் என்றும் அறிய ஒண்ணாத நிலையினனே!' என்று போற்ற நம் பழவினைகள் நம்மிடம் நில்லாது அகன்று விடும்.

**குறிப்புரை:** காழித் தலைவா, புறச்சமயிகளால் அறியப்படாதவனே என்று சொல்ல, பழவினை நில்லா என்கின்றது. மலையார் மாடம் – மலையையொத்த மாடங்கள். நீடு உயர் இஞ்சி – நீண்ட உயர்ந்த மதில். மஞ்சு – மேகம்.

The mansions in Seekaazhi are as high as mountains; the clouds move on in the sky and stay in these mansions. The moon full of many phases (*கலை*) comes and settles down in the tall high walls of the city. In this famed cool city full of auspicious sounds - Oh! Lord Civa, You are enshrined here as the Supreme God! "You remain forever beyond the pale of the intellect of the Jains and the Buddhists. Bless us". By praying like this, all our hoary karma will be done away with.

வடிகொள் வாவிச்செங் கழுநீரிற் கொங்காடிக்
கடிகொ டென்றன்முன் றினில்வை குங்கலிக்காழி
அடிகள் தம்மையந்த மில்ஞான சம்பந்தன்
படிகொள் பாடல்வல் லவர்தம்மேற் பழிபோமே. 11

வடி கொள் வாவிச் செங்கழுநீரில் கொங்கு ஆடிக்
கடி கொள் தென்றல் முன்றினில் வைகும் கலிக் காழி
அடிகள்தம்மை, அந்தம்இல் ஞானசம்பந்தன்
படி கொள் பாடல் வல்லவர் தம்மேல் பழி போமே.

vaTi koL vAvic cegkazu nIril kogku ATik
kaTi koL ten2Ral mun2Rilil vaikum kalik kAzi
aTikaL tammai, antam il njAn2acampantan2
paTi koL pATal vallavar tammEl pazi pOmE.

**பொருள்:** தேன் மணம் கொண்ட நீர்நிலைகளில் மலர்ந்த செங்கழுநீர்ப் பூவின் மகரந்தங்களில் படிந்து, அவற்றின் மணத்தைத் தென்றல் காற்றானது வீட்டு வாசல்களில் கொண்டு வந்து உலாவச் செய்கின்றது. ஒலிமிகுந்த காழிப் பதியில் எழுந்தருளியுள்ள சிவபெருமானை முடிவற்ற புகழை உடைய ஞானசம்பந்தன் போற்றிப் பாடினார். இப்பாடல்களைப் பாடவல்லவர்களின் மேல் வரும் பழிகள் தானாகவே நீங்கிவிடும்.

**குறிப்புரை:** ஞானசம்பந்தன் காழி அடிகளைப் பாடிய பாடல் வல்லவர் பழி நீங்கும் என்கின்றது. தென்றல் செங்கழுநீர்ப் பூவில் அளைந்து முன்றலில் உலாவும் காழி என்க. வடி – மா. கொங்கு – தேன். கடிகொள் – மணத்தைக் கொள்ளுகின்ற. படிகொள் பாடல் – ஒப்பினைக் கொண்ட பாடல்.

Gnaanasambandan of endless glory has sung on Lord Civan of the renowned Seekaazhi, these ten verses. In the foreyards of the mansions in this city, where the smell of honey is already prevailing, the fragrant southerly winds also flow. They leave a further sweet smell as they have passed over the pollen grains of the sweet smelling red water lily (செங்கழுநீர்) flowers, before reaching the city. These flowers abound in the pools around the city having lucid waters. The sin and blame of those well-versed in these verses, which spread through the entire world, will leave them for good.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM
102ஆம் பதிகம் முற்றிற்று
End of 102nd Hymn

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# 103. திருக்கழுக்குன்றம்

## திருத்தல வரலாறு:

தொண்டை நாட்டுத் தலங்களில் ஒன்று திருக்கழுக்குன்றம். இத்தலம் செங்கற்பட்டிலிருந்து தென்கிழக்கே 14 கி.மீ. தூரத்தில் உள்ளது. பேருந்துகள் உள்ளன. கழுகுகள் பூசித்துப் பேறு பெற்றமையின் கழுக்குன்றம் எனப் பெறும். முதல் யுகத்து, சாபமெய்திய சண்டன், பிரசண்டன் என்னும் கழுகுகளும், இரண்டாம் யுகத்து சம்பாதி, ஜடாயு என்னும் கழுகுகளும், மூன்றாம் யுகத்து சம்புகுத்தன், மாகுத்தன் என்னும் கழுகுகளும், நான்காம் யுகத்து சம்பு, ஆதி என்னும் கழுகுகளும் பூசித்து முறையே பேறு பெற்றன. வேதங்கள் மலையுருவாய்ச் சுவாமியைத் தாங்கலின் வேதகிரி எனவும் வழங்கும். வடதேசத்தினர் பட்சி தீர்த்தம் என்பர். இன்றும் இரண்டு பட்சிகள் தினந்தோறும் அன்னத்தை உண்டு வலம் வருகின்றன. 12 ஆண்டுக்கு ஒருமுறை திருக்குளத்தில் சங்கு பிறத்தலின் சங்கு பிறந்த குளம் என்னும் மகிமையைப் பெற்றுள்ளது. மாணிக்கவாசக சுவாமிகளுக்கு இறைவன் குருமூர்த்தி வடிவமாய்த் தரிசனம் கொடுத்த தலம். இவரன்றி நந்தி, இந்திரன், கோடிருத்திரர் முதலியோர் பூசித்துப் பேறு பெற்றனர். இறைவன் வேதபுரீசுவரர். இறைவி பெண்ணின் நல்லாள் அம்மை, மலைச் சொக்க நாயகி. அடிவார இறைவன் பெயர் பக்தவத்சலர். இறைவி திரிபுரசுந்தரி. தீர்த்தம் சங்கு பிறந்த குளம், சங்க தீர்த்தம், பட்சி தீர்த்தம்.

## கல்வெட்டு:

பாண்டிய மன்னன் ஜடாவர்மன் என்கிற திரிபுவனச் சக்கரவர்த்தி வீரபாண்டிய தேவன் காலத்தில் செயங்கொண்ட சோழ மண்டலத்தில் களத்தூர் கோட்டத்துத் திருக்கழுக்குன்றம் என்றும், சோழர் காலத்தில் களத்தூர் கோட்டத்தில் களத்தூர் நாட்டில் உள்ள உலகளந்த சோழபுரம் என்றும் வழங்கப் பெற்றது. இறைவன் திருக்கழுக்குன்றம் உடைய நாயனார் என்று வழங்கப்படுவர். சண்முகப் பிள்ளையார் குறிக்கப்பட்டு உள்ளார். இராஷ்டிரகூட அரசன் கன்னரதேவன் காலத்தில் கருப்பக்கிருகத்தின் முன் மண்டபங்கட்ட ஈசானசிவாவிடம் இருந்து ஒரு பட்டி நிலம் வாங்கப்பட்டது. இராஜராஜபுரத்தில் வசிக்கும் ஒருவர் 10 காசுகள் கொடுக்கத் தான் வாங்கின நிலத்தை 63 நாயன்மார்களில் ஒருவரான நமிநந்தியடிகள் பிதாவிடம் கொடுத்துள்ளார்கள். பக்தவத்சலக் கோயில் குன்றத்தின் மேலுளதாக இரண்டு கல்வெட்டுக்கள் அறிவிக்கின்றன. கோயிலைப்

பழுதுபார்க்க விஜயநகர அரசன் பிரதாப்புக்கராயர் நிலம் தந்துள்ளார். மேலும் தம் பெயராகிய புக்கராயன் சந்தி விழாவிற்காகவும் நிலம் தானம் செய்துள்ளார். ஆயிரப்பிரிவில் உள்ள மக்களால் திருமலை ஆளுடை நாயனார் கோயிலுக்கு நிலம் தானம் செய்யப்பட்டு உள்ளது. களத்தூர் பிரிவில் உள்ள மக்களால் அதே கோயிலுக்கு காளிங்கராயன் சந்தி விழாவிற்காக நிலம் தானம் செய்யப்பட்டது. மாறவர்மன் திரிபுவனச் சக்கரவர்த்தி வீரபாண்டிய தேவன் காலத்தில் ஒரு நபரால் சண்முகப் பிள்ளையார் கருப்பக்கிருகத்திற்கு விளக்கிடப் பசுக்கள் தானம் செய்யப்பட்டு உள்ளன. விஜய நகர அரசன் வீரவிஜய பூபதிராயரது ஆட்சியில் அரசனுடைய அதிகாரியான நாகேசுவரமுடையான் விழாவிற்காக வரியைத் தள்ளுபடி செய்துள்ளான். 17ஆம் நூற்றாண்டின் மத்தியில் ஒல்லாந்து நாட்டு அதிகாரிகளைப் பற்றிய அடையாளச் செய்திகள் குன்றின் ஒருகால் மண்டபத்தின் கீழ்த்தாழ்வாரத்தின் 8 சுவர்களின் மேல் பொறிக்கப்பட்டுள்ளன. இவையன்றி விளக்கு முதலானவற்றுக்குப் பொன், நிலம், ஊர், ஆடுகள், பசுக்கள் முதலியன அளிக்கப்பட்ட செய்திகளும் அறியப்படுகின்றன.

**பதிக வரலாறு:**

திருவிடைச்சுரத்தை வணங்கியபின் சண்பைக் காவலர் திருத்தொண்டர்களுடன், வண்டுகள் செந்துருத்திப் பண்ணைப் பாடும் திருக்கழுக் குன்றத்தை அடைந்தார். அவ்வூரடியார்கள் சுவாமிகளை எதிர்கொள்ள, சிவிகையினின்றும் இறங்கி, திருமலையை வலங்கொண்டு செஞ்சடைப் பெருமானைச் சிந்தை களிகூர வணங்கினார். ஒருகாலைக் கொருகால் பெருகியெழுங்காதலினால் வணங்கிக் ‘காதல் செய் கோயில் கழுக்குன்று’ என்று பதிகக்கருத்தை வைத்துத் ‘தோடுடையான்’ என்னும் இப்பதிகத்தை அருளிச் செய்தார்.

## 103. THIRU-K-KAZHU-K-KUNDRAM

### HISTORY OF THE PLACE

This sacred place is in Thondai Naadu and is at a distance of 14 km southeast of Chengalpattu. It can be reached by bus. As vultures worshipped the Lord on the hill here, the place got its name, which means Vulture Hill. It is also known as Vedhagiri (Vedha Hill) as the Vedhas have become the hill that supports the shrine. People of the north call this place as Pakshi Theerththam.

The name of God on the hill shrine is Vedhapureesuvarar and the Goddess is known by the names of Penninallaalammai and Malaichchokkanaayaki. The God, at the shrine at the foothill is Bhakthavathsalar and the Goddess Thiripurasundhari. The sacred fords are Pond of the Conch's Birth (Sangu Pirandha Kuzham), Sanga Theerththam and Pakshi Theerththam.

The names of the vultures that offered worship are given as follows: In the first eon, Chandan and Prachandan; in the second, Sampaathi and Jataayu; in the third, Sambukuththan and Maakuththan; and in the fourth eon, Sambu and Aadhi. Even today, two birds accept the food offering and then circle over the temple before flying away. The pond here has the distinction of having conches appear in it once in every twelve years. This temple also has the distinction of being the place where the Lord appeared to Saint Maanikkavaachakar in the form of Guru. Others such as Nandhi, Indhiran and Kotiru-dh-dhirar have offered worship and obtained their wishes here.

The inscriptions here include those of Paandiya, Chola, Raashtrakoota and Vijayanagara kings. There are even some hints about officials from Holland in a 17th century inscription, found on the 8 walls in the east verandah of the Single-pillared mandapam. Lord Vinaayaka is noted as Shanmugap Pillaiyaar. The mandapam in front of the sanctum was built during the time of Raashtrakoota king Kannara Thevan, for building which land was purchased from one Eesaana Siva. A resident of Raajaraajapuram had given some land to the father of Naminandhi Adigal, one of the 63 saints known as Naayanmaar. Two inscriptions note that the Bhakthavatshsala shrine is on top of the hill. A Vijayanagara king, Prathaapa Bukka Raaya, had donated land for renovating the temple and for instituting a festival in his name known as Bukka Raayan Sandhi. During the reign of another Vijayanagara king Veera Boopathi Raayar an official of his had given tax remission to enable a festival to be celebrated.

Besides the above, the grant of gold, land, villages, sheep and cows for lamps and other temple expenses is also recorded.



திருக்கண்ணார்கோயில் – குருமாணக்குடி – ஸ்ரீ கண்ணாயிரநாதர் – சோழநாட்டு வடகரைத் தலம்
**Kannaayira Naathar Temple - Tirukkannar Koyil (Kurumaanakkudi) - Tamil Nadu**



திருப்பாதாளேச்சுரம் (பாமணி) – சர்ப்பபுரீஸ்வரர் – சோழநாட்டு வடகரைத் தலம்
**Sarpapuriswarar Temple - Pathaleecchuram (Paamani), Tamil Nadu.**



திருக்கடைமுடி – கீழையூர் – ஸ்ரீகடைமுடிநாதர் – சோழநாட்டு வடகரைத் தலம்
**Kadaimudi Naathar Temple - Tirukkadaimudi (Keezhaiyur) - Tamil Nadu.**



இராமனதீச்சரம் / திருக்கண்ணபுரம் – இராமநாதர் சோழ நாட்டுத் தென்கரைத் தலம்
**Iramanathar Temple - Iramanandeeccharam, Tamil Nadu.**

## INTRODUCTION TO THE HYMN

From Idaicchuram our saint arrivėd at this holy mount and sang the following hymn in praise of its presiding deity.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 103. திருக் கழுக் குன்றம் 103. THIRU-K-KAZHU-K-KUNDRAM

பண் : குறிஞ்சி
ராகம் : குறிஞ்சி

***Pann: Kurinji***
***Raagam : Kurinji***

தோடுடையா னொருகாதிற் றூயகுழைதாழ
ஏடுடையான றலைகலனாக இரந்துண்ணும்
நாடுடையான் நள்ளிருளேம நடமாடுங்
காடுடையான் காதல்செய் கோயில் கழுக்குன்றே. 1

தோடு உடையான் ஒரு காதில், - தூய குழை தாழ
ஏடு உடையான், தலைகலன் ஆக இரந்து உண்ணும்
நாடு உடையான், நள்இருள் ஏமம் நடம் ஆடும்
காடு உடையான், காதல்செய் கோயில் - கழுக்குன்றே.

tOTu uTaiyAn2 oru kAtil-tUya kuzai tAza
ETu uTaiyAn2, talai kalan2 Aka irantu uNNum
nATu uTaiyAn2, naL iruL Emam naTam ATum
kATu uTaiyAn2, kAtal cey kOyil--kazukkun2RE.

**பொருள்:** ஒரு காதில் தோடும் மற்றொரு காதில் தூய குழையும் தாழ்ந்து தொங்கப் பெற்றவன். தாமரை மலரில் தங்கும் பிரமனின் தலையோட்டை உண்கலனாகக் கொண்டிருப்பவன். இரந்து உண்ணும் நாடுகளை உடையவன். நள்ளிருள் யாமத்தில் சுடுகாட்டில் நடனம் ஆடுபவன். இத்தகைய இறைவனான சிவபெருமான் விரும்பி உறையும் இடம் திருக்கழுக்குன்றம் ஆகும்.

**குறிப்புரை:** ஒருகாதில் தோடுடையான், ஒருகாதில் குழைதாழ மலரும் அணிந்தவன். கபாலத்தில் இரந்துண்ணும் நாட்டை உடையவன், நள்ளிருளில் நடமாடுதற்குரிய காட்டை உடையவன். அத்தகைய இறைவன் காதலிக்கும் இடம் கழுக்குன்று என்கின்றது. ஏடு – மலர். நள்ளிருள் – நடு இரவு. ஏமம் – யாமம்.

Lord Civan wears an ola-roll (தோடு) in one of His ears and the ear jewel (*குழை*) in the other ear, both of which dangle in a low level. He wears a lot of flowers on His

body and head. His is the region where He goes for begging and eating, carrying a begging bowl made of Brahma's skull who stays in lotus flower. He happily dances in the cremation ground during midnight. Thiru-k-kazhu-k-kundram is the place of His temple where He loves to abide.

கேணவல் லான்கேழல் வெண்கொம்பு குறளாமை
பூணவல் லான்புரிசடை மேலொர்புனல் கொன்றை
பேணவல் லான்பெண் மகள்தன்னை யொருபாகம்
காணவல் லான்காதல் செய்கோயில் கழுக்குன்றே. 2

கேண வல்லான், கேழல்வெண்கொம்பு; குறள்ஆமை
பூண வல்லான்; புரிசடைமேல் ஓர் புனல், கொன்றை,
பேண வல்லான்; பெண்மகள்தன்னை ஒருபாகம்
காண வல்லான்; காதல்செய் கோயில் - கழுக்குன்றே.

kENa vallAn2; kEzal veN kompu; kuRaL Amai
pUNa vallAn2; puricaTaimEl or pun2al, kon2Rai,
pENa vallAn2; peN makaL tan2n2ai orupAkam
kANa vallAn2; kAtal cey kOyil--kazukkun2RE.

**பொருள்:** திருமாலாகிய பன்றியினது வெண்மையான கொம்பை அகழ்ந்து அணிய வல்லவன். வாமனனாக அவதரித்த திருமாலின் கூர்மவதார ஆமையோட்டினை அணிகலனாகக் கோத்துப் பூண வல்லவன். முறுக்கிய சடைமுடிமேல் ஒப்பற்ற கங்கை, கொன்றை மாலை ஆகியவற்றை விரும்பி அணிபவன். பெண்ணின் நல்லவளான உமையம்மையைத் தன் திருமேனியின் ஒருபாகமாகக் காணுமாறு செய்தருளியவன். அத்தகையோன் காதல் செய்யும் கோயில் திருக்கழுக்குன்றம் ஆகும்.

**குறிப்புரை:** பன்றிக் கொம்பைக் கேணவல்லவனும், ஆமையோட்டைப் பூணவல்லவனும், கொன்றை மாலையணிவிப்பவனும், உமையை யொருபாகம் உடையவனும் ஆகிய இறைவன் கோயில் கழுக்குன்று என்கின்றது. கேண – சிதைக்க. கேழல் – பன்றி. குறள் ஆமை – சிறிய ஆமை. ஈண்டு அதன் ஓட்டினைக் குறிக்கின்றது.

Thirumaal once took the Avataar as a dwarf man; on another occasion he took the avatar as a hog when the valiant Lord Civan broke its tusk. Lord Civan wears as one of His ornaments, the tortoise shell of Thirumaal, when he took the avatar as tortoise. In His tightened matted hair He loves in holding a river and cassia flowers. He exposes in a portion of His body His consort Umaa Devi, the fairest and the best

natured among women to enable the devotees to perceive her vision and to offer obeisance to her. Lord Civan of these status loves the temple in Thiru-k-kazhu-k-kundram to dwell in.

தேனகத் தார்வண் டதுவுண்டதிகழ் கொன்றை
தானகத் தார்தண் மதிசூடித்தலை மேலோர்
வானகத் தார்வைய கத்தார்கள்தொழு தேத்தும்
கானகத் தான்காதல் செய்கோயில் கழுக்குன்றே. 3

தேன் அகத்து ஆர் வண்டு அது உண்ட திகழ் கொன்றை-
தான் நக, தார்; தண்மதி சூடி, தலைமேல்; ஓர்
வானகத்தார் வையகத்தார்கள் தொழுது ஏத்தும்
கானகத்தான்; காதல்செய் கோயில் - கழுக்குன்றே.

tEn2 akattu Ar vaNTu atu uNTa tikaz kon2Rai-
tAn2 naka, tAr; taNmati cUTi, talaimEl; Or
vAn2akattAr vaiyakattArkaL tozutu Ettum
kAn2akattAn2; kAtal cey kOyil--kazukkun2RE.

**பொருள்:** பூக்களின் அகத்தில் இருந்து வண்டுகள் தேனை உண்டு விளங்கிய கொன்றை மாலையையும், பிறை மதியையும் தலைமேல் சூடி இருப்பவன். வானவரும் பூலோகத்தவரும் துதிக்குமாறு விளங்குபவன். சுடுகாட்டைத் தனது இருப்பிடமாகக் கொண்டிருப்பவன். இத்தகைய இறைவனான சிவபெருமான் விரும்பி உறையும் கோயில் திருக்கழுக்குன்றம் ஆகும்.

**குறிப்புரை:** கொன்றையையும், மதியையும் அணிந்து விண்ணவரும் மண்ணவரும் துதிக்க நின்ற இறைவன் இடம் இது என்கின்றது. தேன் அகத்து ஆர் வண்டு – தேனைப் பூவினகத்தில் இருந்து உண்ணும் வண்டு. கொன்றை தான் நக தார் தண்மதிசூடி – கொன்றை மலர். அம்மாலையைத் தன் பிறையோடு சூடி. கானகத்தான் – காட்டில் உறைபவன்.

Honeybees stick inside the cassia flowers and goes on sucking the honey. Lord Civan wears on His matted hair garlands made of these cassia flowers. He also accommodates the crescent moon in His hair along with the flowers. He uses the cremation ground as His dancing place. He is hailed and worshipped by the dwellers of the earth, as also of heaven. He is enshrined in the temple in Thiru-k-kazhu-k-kundram where He eagerly loves to abide.

துணையல் செய்தான்தூய வண்டியாழ் செய்சுடர் கொன்றை
பிணையல் செய்தான்பெண் ணினல்லாளை யொருபாகம்
இணையல் செய்யாவிலங் கெயில்மூன்று மெரியுண்ணக்
கணையல் செய்தான்கா தல்செய்கோயில் கழுக்குன்றே. 4

துணையல் செய்தான், தூய வண்டு யாழ்செய் சுடர்க் கொன்றை
பிணையல் செய்தான், பெண்ணின்நல்லாளை ஒருபாகம்
இணையல்செய்யா, இலங்கு எயில்மூன்றும் எரியுண்ணக்
கணையல் செய்தான், காதல்செய் கோயில் - கழுக்குன்றே.

tuNaiyal ceytAn2, tUya vaNTu yAz cey cuTark kon2Rai
piNaiyal ceytAn2, peNNin2 nallALai orupAkam
iNaiyal ceyyA, ilagku eyil mUn2Rum eriyuNNak
kaNaiyal ceytAn2, kAtal cey kOyil--kazukkun2RE.

**பொருள்:** இரண்டிரண்டாகச் சேர்த்துக் க்ட்டும் மாலையையும், புனிதமான வண்டுகள் யாழ்போல் ஒலிக்கின்றதும் ஒளி நிறைந்ததுமான கொன்றை மாலையை அணிந்திருப்பவன். பெண்ணின் நல்லவளான உமையம்மையைத் தன் உடலின் ஒருபாகமாகப் பிணைத்து இருப்பவன். தன்னோடு நட்புக் கொள்ளாத அசுரர்களின் முப்புரங்களும் தீயினால் உண்ணப்படுமாறு கணையை விடுத்தவன். இத்தகைய இறைவனான சிவபெருமான் விரும்பி உறையும் கோயில் திருக்கழுக்குன்றம் ஆகும்.

**குறிப்புரை:** கொன்றை அணிந்து, உமையை ஒரு பாகத்து வைத்து, திரிபுரமெரித்த இறைவன் இடம் இது என்கின்றது. துணையல் – இரண்டிரண்டாகச் சேர்த்துக் கட்டும் மாலை. பிணையல் – புணர்தல். இணையல் – நட்புக் கொள்ளல். கணையல் செய்தான் – அம்பெய்தான். நான்கு அடிகளிலும் அல் சாரியை.

Lord Civan wears a garland woven with pairs of flowers. He is adorned with clean and bright cassia flowers in which bees hum in sweet voice much as in the stringed musical instruments (*யாழ்*). He accommodates His consort Umaa Devi, the good, pious and fair one among women, in the left half of His body. He sent a dart that gutted with fire the three great citadels of Asuraas who were His adversaries. Thiru-k-kazhu-k-kundram is the place of His shrine where He loves to abide.

பையுடைய பாம்பொடுநீறு பயில்கின்ற
மெய்யுடை யான்வெண்பிறை சூடிவிரிகொன்றை
மையுடைய மாமிடற்றண் ணல்மறிசேர்ந்த
கையுடை யானகாதல் செய்கோயில் கழுக்குன்றே. 5

பை உடைய பாம்பொடு நீறு பயில்கின்ற
மெய் உடையான், வெண்பிறைசூடி, விரிகொன்றை
மை உடைய மா மிடற்று அண்ணல், மறி சேர்ந்த
கை உடையான், காதல்செய் கோயில் - கழுக்குன்றே.

pai uTaiya pAmpoTu nIRu payilkin2Ra
mey uTaiyAn2, veN piRai cUTi, virikon2Rai
mai uTaiya mA miTaRRu aNNal, maRi cErnta
kai uTaiyAn2, kAtal cey kOyil--kazukkun2RE.

**பொருள்:** நச்சுப் பையை உடைய பாம்பையும் திருநீறு அணியப் பெற்ற திருமேனியையும் உடையவன் சிவபெருமான். வெண் பிறையையும் விரிந்த கொன்றையையும் முடியில் சூடியவன். விடம் பொருந்திய கழுத்தினை உடைய தலைமையாளன். மானேந்திய கையை உடையவன். இத்தகைய இறைவனான சிவபெருமான் விரும்பி உறையும் கோயில் திருக்கழுக்குன்றம் ஆகும்.

**குறிப்புரை:** அரவும் திருநீறும் பழகும் திருமேனி உடையவனும், பிறை கொன்றை இவற்றை அணிந்த நீலகண்டனும், மானேந்திய கையை உடையவனும் ஆகிய சிவபெருமான் இடம் கழுக்குன்று என்கின்றது. பை – படம். மை – விடம்.

Lord Civan smears His body with holy ashes. He is adorned with serpents having venomous sacs, in His body. He accommodates the white crescent moon in His matted hair along with well-blossomed cassia flowers. His neck is of dark blue colour caused by positioning the poison of the sea in His throat. His hand sports a fawn. He is the most merciful Supreme Lord who loves to abide in the temple in Thiru-k-kazhu-k-kundram.

வெள்ள மெல்லாம்விரி சடைமேலோர் விரிகொன்றை
கொள்ள வல்லான்குரை கழலேத்துஞ் சிறுதொண்டர்
உள்ள மெல்லாமுள்கி நின்றாங் கேயுடனாடுங்
கள்ளம் வல்லான்காதல் செய்கோயில் கழுக்குன்றே. 6, 7

வெள்ளம் எல்லாம் விரிசடை மேல் ஓர் விரிகொன்றை
கொள்ள வல்லான், குரைகழல் ஏத்தும் சிறு தொண்டர்
உள்ளம்எல்லாம் உள்கி நின்று ஆங்கே உடன் ஆடும்
கள்ளம் வல்லான், காதல்செய் கோயில் - கழுக்குன்றே.

veLLam ellAm viricaTaimEl Or virikon2Rai
koLLa vallAn2, kuraikazal Ettum ciRu toNTar
uLLam ellAm uLki nin2Ru AgkE uTan2 ATum
kaLLam vallAn2, kAtalcey kOyil--kazukkun2RE.

**பொருள்:** விரிந்த சடைமுடியின்மேல் வெள்ளமாகப் பெருகி வந்த கங்கையின் அனைத்து நீரையும் விரிந்த கொன்றை மாலையோடு சேர்த்துச் சூடியிருப்பான். தனது ஒலிக்கின்ற கழல் அணிந்த திருவடிகளை ஏத்தித் துதிக்கும் அடியார்களின் உள்ளமெல்லாம் நிறைந்து இருப்பவன். அவர்கள் உள்ளம் உருகி தியானித்து நின்று ஆட அவர்களோடு தானும் உடன் திருநடனம் ஆடும் மறைப்புத் தன்மை மிகுந்த வல்லவன். இத்தகைய இறைவனான சிவபெருமான் விரும்பி உறையும் கோயில் திருக்கழுக்குன்றம் ஆகும்.

**குறிப்புரை:** விரிசடைமேல் கங்கையையும் கொன்றையையும் சூட வல்லவனும், அடிபணியும் அடியார் உள்ளங்களில் எல்லாம் உடனாய் நின்று ஆடும் கள்ளனுமாகிய பெருமான் காதலிக்கும் கோயில் கழுக்குன்று என்கின்றது. வெள்ளம் – கங்கை. குரை கழல் – ஒலிக்கும் வீரக்கழல். உள்கி – எண்ணி.

Lord Civan holds the entire flood of the river Ganges in His expansive-matted hair along with well-blossomed cassia flower garlands. In the entire mind of His young devotees heart, who hail His ankleted feet that ensure salvation and to all who meditate on Him, who melt and dance in ecstasy, He – the bold thief, abides as one with them and dances along with them. This Lord Civan loves to dwell in the temple in Thiru-k-kazhu-k-kundram.

ஆதல் செய்தான ரக்கர்தங் கோனையரு வரையின்
நோதல் செய்தான் நொடிவரை யின்கண் விரலூன்றிப்
பேர்தல் செய்தான் பெண்மகள்தன் னோடொருபாகம்
காதல் செய்தான்காதல் செய்கோயில் கழுக்குன்றே. 8

ஆதல் செய்தான்; அரக்கர்தம் கோனை அருவரையின்
நோதல் செய்தான், நொடிவரையின்கண் விரல் ஊன்றி;
பேர்தல் செய்தான்; பெண்மகள் தன்னோடு ஒருபாகம்
காதல் செய்தான்; காதல்செய் கோயில் - கழுக்குன்றே.

Atal ceytAn2; arakkartam kOn2ai aru varaiyin2
nOtal ceytAn2; noTivaraiyin2 kaN viral Un2Ri;
pErtal ceytAn2; peNmakaL tan2n2OTu oru pAkam
kAtal ceytAn2; kAtal cey kOyil--kazukkun2RE.

**பொருள்:** கயிலை மலையைப் பெயர்க்க முயன்ற அரக்கர் அரசனான இராவணனை அக்கயிலை மலையின்கீழ் அகப்படுத்தியவன் சிவபெருமான். நொடிப் பொழுதில் தன் கால் விரலை ஊன்றி அவனை வருத்தியவன். பின்னர் அவனுக்கு உயர்வு அளித்தவன். பெண் மகளாகிய உமையம்மையை ஒரு பாகமாகக் கொண்டு அன்பு செய்தவன். இத்தகைய இறைவனான சிவபெருமான் விரும்பி உறையும் கோயில் திருக்கழுக்குன்றம் ஆகும்.

**குறிப்புரை:** கைலையைத் தூக்கிய இராவணனை அழியச் செய்தவனும், உமையை ஒருபாகத்து இருத்திக் காதல் செய்தவனும் ஆகிய இறைவன் இடம் இது என்கின்றது. நொடிவரை – நொடிப்பொழுது.

King Raavanan once tried to lift and keep aside mount Kailash, Lord Civa's abode. Lord Civan in just a split second pressed His toe on the top of His mountain and crushed him. Later Raavanan relented and begged for pardon. Thereafter, Lord Civan blessed and granted him boons. He accommodates, His consort Umaa Devi daughter of King Himaalayaas, very lovingly in the left half of His body. This Lord Civan loves to abide in the temple in Thiru-k-kazhu-k-kundram.

இடந்த பெம்மானே னமதாயு மனமாயும்
தொடா்ந்த பெம்மான் தூமதிசூடி வரையாா்தம்
மடந்தை பெம்மான் வாா்கழலோச் சிக்காலனைக்
கடந்த பெம்மான்காதல் செய்கோயில் கழுக்குன்றே. 9

**இடந்த பெம்மான் ஏனம்அது ஆயும், அனம்ஆயும்,**
**தொடர்ந்த பெம்மான்; தூ மதிசூடி; வரையார்தம்**
**மடந்தை பெம்மான்; வார்கழல் ஓச்சிக் காலனைக்**
**கடந்த பெம்மான்; காதல்செய் கோயில் - கழுக்குன்றே.**

iTanta pemmAn2 En2am atu Ayum, an2am Ayum,
toTarnta pemmAn2; tU mati cUTi; varaiyArtam
maTantai pemmAn2; vArkazal Occik kAlan2aik
kaTanta pemmAn2; kAtal cey kOyil--kazukkun2RE.

**பொருள்:** அடிமுடியைத் தேடி பன்றி உருவோடு நிலத்தை அகழ்ந்து சென்ற திருமாலும், அன்னமாகப் பறந்து சென்ற நான்முகனும் தொடர்ந்து சென்றும் காண முடியாதவராக நின்றவன் சிவபெருமான். தூய பிறைமதியைத் தலைமுடியில் சூடியிருப்பவன். மலைமகளின் தலைவன். வீரக் கழலணிந்த திருவடியை உயர்த்திக் காலனைக் காய்ந்தவன். இத்தகைய இறைவனான சிவபெருமான் விரும்பி உறையும் கோயில் திருக்கழுக்குன்றம் ஆகும்.

**குறிப்புரை:** திருமால் பன்றியாய்த் தோண்டிக் காணவும், பிரமன் அன்னமாய்ப் பறந்து தொடரவும் நின்ற பெருமான், காலனைக் கடந்த பெருமான் காதல் செய்த இடம் இது என்கின்றது. இடந்த – தோண்டிய. ஏனம் – பன்றி. கடந்த – வென்ற.

Lord Civan was pursued by Vishnu, who burrowed into the earth in the form of a boar to see His holy feet. Brahma flew up in the air as a swan to see His head - both in vain. Lord Civan wears in His head the pure white crescent moon. He is the Lord and consort of Himavaan's daughter. Brandishing His foot decked with a long anklet He kicked Yama (Kaalan - *காலன்*) to death. This Lord Civan loves to dwell in the temple in Thiru-k-kazhu-k-kundram.

தேயநின் றான்திரிபுரங் கங்கை சடைமேலே
பாயநின் றான்பலர் புகழ்ந்தேத்த வுலகெல்லாம்
சாயநின் றான்வன்சமண குண்டர் சாக்கியர்
காயநின் றான்காதல் செய்கோயில் கழுக்குன்றே. 10

*தேய நின்றான் திரிபுரம், கங்கை சடைமேலே*
*பாய நின்றான், பலர் புகழ்ந்து ஏத்த உலகு எல்லாம்*
*சாய நின்றான், வன்சமணகுண்டர் சாக்கியர்*
*காய நின்றான் காதல்செய் கோயில் - கழுக்குன்றே.*

tEya nin2RAn2 tiripuram, kagkai caTaimElE
pAya nin2RAn2, palar pukazntu Etta ulaku ellAm
cAya nin2RAn2, van2 camaN kuNTar cAkkIyar
kAya nin2RAn2, kAtal cey kOyil--kazukkun2RE.

**பொருள்:** முப்புரங்களையும் அழியுமாறு செய்தவன் சிவபெருமான். பெருகி வந்த கங்கையைத் தன் சடைமேல் பாய நின்றவன். பலரும் புகழ்ந்து போற்ற உலகம் அனைத்தும் ஊழி இறுதியில் அழியுமாறு நின்றவன். உடல் பருத்த வலிய வெளிவேஷக்கார சமண முனிவர்களும் போலிப் புத்தத் துறவிகளும் வருந்துமாறு நின்றவன். இத்தகைய இறைவனான சிவபெருமான் விரும்பி உறையும் கோயில் திருக்கழுக்குன்றம் ஆகும்.

**குறிப்புரை:** திரிபுரம் தேயவும், கங்கை சடைமேலே பாயவும் நின்ற பெருமான், புறச்சமயிகள் காய நின்றவன் காதல் செய்யுமிடம் கழுக்குன்று என்கின்றது. தேய – அழிய. சாய – கெட. சாக்கியர் என்பது சந்த நோக்கி நீண்டது.

Lord Civan simply stared at the three citadels of the Asuraas. Instantly they were destroyed. He stood firm praised by the entire people of the world when the river

Ganges flowed from heaven to the earth at high speed and pressure. He remained calm all along at the time of great deluge when the entire universe perished into dust and ashes. He stood poised into dust and ashes. He stood poised when the mighty gangster Samanars and Saakkiars stood totally mortified. This Lord Civan loves to dwell in the temple in Thiru-k-kazhu-k-kundram.

கண்ணு தலான்காதல் செய்கோயில் கழுக்குன்றை
நண்ணி யசீர்ஞான சம்பந்தன் தமிழ்மாலை
பண்ணி யல்பாற்பாடிய பத்துமிவை வல்லார்
புண்ணி யராய்விண் ணவரோடும் புகுவாரே. 11

*கண் நுதலான் காதல்செய் கோயில் கழுக்குன்றை,*
*நண்ணிய சீர் ஞானசம்பந்தன் தமிழ்மாலை,*
*பண் இயல்பால் பாடிய பத்தும்இவை வல்லார்*
*புண்ணியராய் விண்ணவரோடும் புகுவாரே.*

kaN nutalAn2 kAtal cey kOyil kazukkun2Rai,
naNNiya cIr njAn2acampantan2 tamizmAlai,
paN iyalpAl pATiya pattum ivai vallAr
puNNiyarAy viNNavarOTum pukuvArE.

**பொருள்:** நெற்றியில் கண்ணுடையவனான சிவபெருமான் விரும்பி உறையும் கோயில் திருக்கழுக்குன்றம் ஆகும். இக்கோயிலையும் அங்குள்ள இறைவனையும் புகழ் பொருந்திய ஞானசம்பந்தன் பண் அமைதியோடு அமைந்த தமிழ்மாலையாக இப்பதிகத்தைப் பாடினார். இவர் பாடிய பத்துப் பாடல்களையும் பாடிப் போற்றுபவர்கள் புண்ணியராய்த் தேவர்களோடு வானுலகத்தில் உறைவர்.

**குறிப்புரை:** ஞானசம்பந்தன் பாடிய கழுக்குன்றப் பதிகத்தைப் பண்ணியல்பால் பாடிய பத்தும் வல்லவர் புண்ணியராய்த் தேவரோடு உடன் உறைவர் என்கின்றது.

The illustrious and reputed Gnaanasambandan has sung in proper musical notes on the shrine of Thiru-k-kazhu-k-kundram which is dear to Lord Civan, who sports a third eye in His forehead. Those who can sing in melodious musical note these ten verses - a garland of Tamil - will enter heaven in holy communion along with the Devaas.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*103ஆம் பதிகம் முற்றிற்று*
End of 103rd Hymn

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

## 104. திருப்புகலி

### திருத்தல வரலாறு:

முதல் திருப்பதிகம் பார்க்கவும்.

## 104. THIRU-P-PUKALI

### HISTORY OF THE PLACE

See First Hymn.

### INTRODUCTION TO THE HYMN

Thiru-p-pukali is one of the twelve names of Seekaazhi. See more details in first hymn.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-ĊHITRAMBALAM

## 104. திருப்புகலி

## 104. THIRU-P-PUKALI

பண் : வியாழக்குறிஞ்சி
ராகம் : சௌராஷ்டிரம்

*Pann: Viyazha-k-kurinji*
*Raagam : Saurashtram*

ஆடலர வசைத்தான ருமாமறை தான்விரித் தான்கொன்றை
சூடியசெஞ் சடையான்சுடு காடமர்ந்த பிரான்
ஏடவிழ் மாமலை யாளொருபாக மமர்ந்தடி யாரேத்த
ஆடியஎம் மிறையூர்புகலிப் பதியாமே. 1

ஆடல் அரவு அசைத்தான், அருமாமறைதான் விரித்தான், கொன்றை
சூடிய செஞ்சடையான், சுடுகாடு அமர்ந்த பிரான்,
ஏடு அவிழ் மாமலையாள் ஒருபாகம் அமர்ந்து அடியார் ஏத்த
ஆடிய எம் இறை, ஊர் - புகலிப்பதிஆமே.

ATal aravu acaittAn2, arumAmaRaitAn2 virittAn2, kon2Rai
cUTiya cenjcaTaiyAn2, cuTukATu amarnta pirAn2,
ETu aviz mAmalaiyAL oru pAkam amarntu aTiyAr Etta
ATiya em iRai, Ur--pukalippati AmE.

**பொருள்:** சிவபெருமான் படம் எடுத்து ஆடும் பாம்பினை இடையில் கட்டியிருப்பவன். அரிய பெரிய வேதங்களை அருளிச் செய்தவன். கொன்றை மலர் மாலையைச் சூடிய செஞ்சடை முடியை உடையவன். சுடுகாட்டில் நடனம் செய்பவன். இதழ் அவிழும் மலர்கள் பூத்த பெரிய இமய மலை அரசனின் புதல்வியாகிய பார்வதி தேவியை ஒரு பாகமாக விரும்பி ஏற்றிருப்பவன். அடியவர் போற்ற நடனம் ஆடுபவன். எம் இறைவனான இப்பெருமான் உறையும் ஊர் புகலிப்பதி என்னும் சீகாழிப் பதியாகும்.

**குறிப்புரை:** அரவணிந்து, வேதம் விரித்து, கொன்றை சூடி, சுடுகாட்டில் அமர்ந்த பிரான் உமையொரு பாகத்திருக்க ஆடிய இறைவன் ஊர் புகலிப்பதியாம் என்கின்றது. அசைத்தான் – கட்டியவன். ஏடு – இதழ். புகலி – சீகாழி.

Lord Civan wears in His waist a serpent that spreads its hood and dances; He authored and expounded the rare and renowned Vedas; He wears on His ruddy matted hair garlands fabricated of cassia flowers; He is the Lord who inhabits in the cremation ground as and when He desires. He affectionately accommodates His consort Paarvathi Devi on the left part of His body. She is the daughter of the king of Himaalayaas where huge quantities of different kinds of flowers blossom. He dances in the cremation grounds when His devotees admire and hail Him. He is our Lord who is enshrined in the temple situated in Thiru-p-pukali town.

**Note:** Pukali is one of the twelve names of Seekaazhi.

ஏலமலி குழலாரிசை பாடியெழுந்தரு ளாற்சென்று
சோலைமலி சுனையிற்குடைந் தாடித்துதிசெய்ய
ஆலைமலி புகைபோயண்டர் வானத்தை மூடிநின்றுநல்ல
மாலையது செய்யும்புகலிப் பதியாமே. 2

ஏலம் மலி குழலார் இசை பாடி எழுந்து, அருளால் சென்று,
சோலை மலி சுனையில் குடைந்து ஆடித் துதி செய்ய,
ஆலை மலி புகை போய் அண்டர்வானத்தை மூடி நின்று நல்ல
மாலைஅது செய்யும் - புகலிப்பதிஆமே.

Elam mali kuzalAr icai pATi ezuntu, aruLAl cen2Ru,
cOlai mali cun2aiyil kuTaintu ATit tuti ceyya,
Alai mali pukai pOy aNTar vAn2attai mUTi nin2Ru nalla
mAlai atu ceyyum--pukalippati AmE.

**பொருள்:** மயிர்ச் சாந்தணிந்த கூந்தலினை உடைய பெண்கள் காலைப் பொழுதில் எழுகின்றனர். இறையருள் பெறும் விருப்பத்துடன் இசைபாடிக் கொண்டு சுனையை நோக்கிச் செல்கின்றனர். சோலையினுள் விளங்கும் சுனையின் நீரில் மூழ்கி நீராடித் துதி செய்கின்றனர். கரும்பு ஆலைகளில் நிறைந்தெழுந்த புகை மேலெழுந்து சென்று தேவர்கள் உறையும் வானகத்தை மூடி நிற்கிறது. இதனால் நல்ல காலைப் பொழுதுதான் மாலைப் பொழுது போன்று தெரியும் பதி புகலிப்பதி என்னும் சீகாழிப் பதியாகும்.

**குறிப்புரை:** மகளிர் விடியலில் இசைபாடிக் கொண்டே எழுந்து சுனையில் நீராடித் தோத்திரிக்க, ஆலைப்புகைபோய் ஆகாயத்தை மறைத்து மாலைக்காலத்தைச் செய்யும் புகலி என்கின்றது. ஏலம் – மயிர்ச்சாந்து. அண்டர் – தேவர்.

The hair of women-folk in Thiru-p-pukali are perfumed by unguent (*நறுமணத் தைலம்*) which emits a fragrant smell all around. They awake in the early morning, get out of bed and singing divine songs with a deep desire to get benediction from Lord Civan, move towards the water tank. There they joyously plunge, play inside the water and finish their bath by singing divine songs. The smoke emanating from the sugarcane press in the city of Thiru-p-pukali soars up and covers the entire sky of the celestials. The morning sky then appears as though it was evening time. Both these events take place in Thiru-p-pukali.

Note: The message is that the happiness of a place depends upon the happiness of its female population.

ஆறணி செஞ்சடை யானழகார் புரமூன்று மன்றுவேவ
நீறணி யாகவைத்த நிமிர்புன் சடையெம் மிறைவன்
பாறணி வெண்டலையிற் பகலேபலி யென்றுவந் துநின்று
வேறணி கோலத்தினான் விரும்பும் புகலியதே. 3

*ஆறு அணி செஞ்சடையான் அழகுஆர் புரம் மூன்றும் அன்று வேவ,*
*நீறு அணிஆக வைத்த நிமிர்புன்சடை எம் இறைவன்;*
*பாறு அணி வெண்தலையில் பகலே "பலி" என்று வந்து நின்று*
*வேறு அணி கோலத்தினான்;; விரும்பும் - புகலிஅதே.*

ARu aNi cenjcaTaiyAn2; azaku Ar puram mUn2Rum an2Ru vEva,
nIRu aNi Aka vaitta nimir pun2caTai em iRaivan2;
pARu aNi veN talaiyil pakalE "pali" en2Ru vantu nin2Ra
vERu aNi kOlattin2An2; virumpum--pukali atE.

**பொருள்:** சிவபெருமான் கங்கை சூடிய செஞ்சடையினை உடையவன். அசுரர்களின் வலிய முப்புரங்களைத் தீயால் வெந்து போகுமாறு செய்தவன். திருநீற்றைத் தன் திருமேனியில் அழகாகப் பூசியிருப்பவன். மேல்நோக்கிய சிவந்த சடையை உடையவன். பருந்து சூழும் வெள்ளிய தலையோட்டை கையில் ஏந்திப் பகலில் 'பலி இடுக' என்று வந்து நிற்பவன். வேறுபாடு உடைய கோலத்தினனாகிய எம்பெருமான் விரும்பும் தலம் புகலிப் பதி என்னும் சீகாழிப் பதியாகும்.

**குறிப்புரை:** திரிபுரம் வேவ, திருநீற்றை அணியாகப்பூசிய இறைவன் விரும்பும் இடம் புகலி என்கின்றது. அணியாக – ஆபரணமாக, பாறு – பருந்து.

Lord Civan has a ruddy matted hair which stands upward, wherein He holds the river Ganges. He burnt the three beautiful and strong citadels of the Asuraas by fire. He smears His body with holy ashes in an attractive manner. He goes about in the daytime holding a white human skull, which is surrounded by falcons, and demands alms. He assumes various different frames according to the situation. Thiru-p-pukali is indeed His sacred place where He is enshrined in the temple.

**Note:** The form of Civa is entirely different from all the forms known to us. Civa is unique (Formless Lord).

வெள்ள மதுசடை மேற்கரந் தான்விர வார்புரங் கள்மூன்றுங்
கொள்ள எரிமடுத்தான் குறைவின்றி யுறைகோயில்
அள்ளல் விளைகழனி யழகார்விரைத் தாமரை மேலன்னப்
புள்ளினம் வைகியெழும் புகலிப்பதி தானே. 4

வெள்ளம்அது சடைமேல் கரந்தான், விரவார் புரங்கள்மூன்றும்
கொள்ள எரி மடுத்தான், குறைவு இன்றி உறை கோயில் -
அள்ளல் விளை கழனி அழகுஆர் விரைத் தாமரை மேல் அன்னப்-
புள்இனம் வைகி எழும் புகலிப்பதிதானே.

veLLam atu caTaimEl karantAn2, viravAr puragkaL mUn2Rum
koLLa eri maTuttAn2, kuRaivu in2Ri uRai kOyil--
aLLal viLai kazan2i azaku Ar virait tAmaraimEl an2n2ap
puL in2am vaiki ezum pukalippatitAn2E.

**பொருள்:** சிவபெருமான், பெருகி வந்த கங்கை வெள்ளத்தைத் தன் சடைமேல் தாங்கியிருப்பவர். பகைவர்களாகிய அசுரர்களின் புரங்கள் மூன்றையும் எரியும்படி செய்தவர். இப்பெருமான் குறைவில்லாத நிறைவோடு உறைந்திருக்கும் கோயில் புகலிப்பதி என்னும் சீகாழியாகும். இங்குள்ள சேறு நிறைந்த வயல்களில் முளைத்திருக்கும் அழகிய மணம் கமழும் தாமரை மலர்கள் மேல் அன்னமும் பிற பறவைகளும் தங்கிச் செல்கின்றன.

**குறிப்புரை:** கங்கையைச் சடையிற்கரந்தவன் திரிபுரம் தீமடுத்தவன் உறையும் கோயில் புகலிப்பதி என்கின்றது. விரவார் – பகைவர். அள்ளல் – சேறு. தாமரைமேல் அன்னமும் பறவைக் கூட்டங்களும் தங்கி எழும் புகலி என்க.

Lord Civan concealed the floodwaters of the river Ganges in His ruddy matted hair. He gutted with fire the three citadels of the hostile Asuraas. He is enshrined in the temple where there is no deficiency. This temple is situated in Thiru-p-pukali town rich in fertile fields full of mire. Here grows the fragrant and wondrous lotus flowers in plenty on which swans and other birds rest for a while and then fly away.

**Note:** Blessed indeed are the fauna and flora of Pukali.

சூடுமதிச் சடைமேற் சுரும்பார் மலர்க்கொன் றைதுன்றநட்டம்
ஆடுமமரர் பிரானழகா ருமையோடுமுடன்
வேடுபட நடந்தவிகிர் தன்குணம் பரவித்தொண்டர்
பாடஇனி துறையும்புகலிப் பதியாமே.

5

சூடும் மதிச் சடைமேல் சுரும்பு ஆர் மலர்க்கொன்றை துன்ற, நட்டம்
ஆடும் அமரர்பிரான் அழகு ஆர் உமையோடும் உடன்
வேடுபட நடந்த விகிர்தன், குணம் பரவித் தொண்டர்
பாட, இனிது உறையும் புகலிப்பதியாமே.

cUTum matic caTaimEl curumpu Ar malarkkon2Rai tun2Ra, naTTam--
ATum amararpirAn2, azaku Ar umaiyOTum uTan2
vETupaTa naTanta vikirtan2, kuNam paravit toNTar
pATa, in2itu uRaiyum--pukalippati AmE.

**பொருள்:** சிவபெருமான் பிறைமதி சூடிய சடையினை உடையவர். அதன்மீது வண்டுகள் மொய்க்கும் கொன்றை மலர்களைப் பொருந்துமாறு அணிந்து நடனம் ஆடுபவர். அந்தத் தேவர்பிரான் உமையம்மையோடு உடனாய் வேட்டுவக் கோலத்தோடு தோன்றி அருச்சுனனுக்கு அருள் புரிந்த விகிர்தர். தொண்டர்கள் இவரது குணங்களைப் புகழ்ந்து போற்றிப் பாட, இப்பெருமான் இனிதாக உறைந்திருக்கும் பதி புகலிப்பதியாகும்.

**குறிப்புரை:** மதிசூடிய சடைமேல் கொன்றை நெருங்க நடனம் ஆடும் பெருமானும், உமையோடும் வேடனாகி நடந்த இறைவனும் ஆகிய இவர் புகழைத் தொண்டர்கள் புகழ்ந்து பாட இனிதுறையும் பதி புகலியாம் என்கின்றது.

Lord Civan, god of the supernal, dances wearing along with the moon in His matted hair, a lot of cassia flowers buzzed by bees. He is the pre-eminent Supreme Lord (*விகிர்தன்*). He assumes a completely different body frame as a forest hunter and accompanied by His beautiful consort Umaa Devi, also dressed as huntress. The servitors of Lord Civan, hail Him adoring His virtues who pleasantly abides in the temple in Thiru-p-pukali.

மைந்தணி சோலையின்வாய் மதுப்பாய்வரி வண்டினங் கள்வந்து
நந்திசை பாடநடம் பயில்கின்ற நம்பனிடம்
அந்திசெய் மந்திரத்தா லடியார்கள் பரவியெழ விரும்பும்
புந்திசெய் நான்மறையோர் புகலிப்பதி தானே. 6

மைந்து அணி சோலையின்வாய் மதுப் பாய் வரிவண்டு இனங்கள் வந்து
நந்து இசை பாட, நடம் பயில்கின்ற நம்பன் இடம் -
அந்தி செய் மந்திரத்தால் அடியார்கள் பரவி எழ, விரும்பும்
புந்தி செய் நால்மறையோர் புகலிப்பதிதானே.

maintu aNi cOlaiyin2 vAy matup pAy vari vaNTu in2agkaL vantu
nantu icai pATa, naTam payilkin2Ra nampan2 iTam--
anti cey mantirattAl aTiyArkaL paravi eza, virumpum
punti cey nAlmaRaiyOr pukalippatitAn2E.

**பொருள்:** இளமை குன்றாத மரங்களை உடைய அழகிய சோலையினுள், வரி வண்டுகள், மலர்ந்த பூக்களில் உள்ள தேனில் பரவி வந்து, வளரும் இசையைப் பாட, நம்பெருமான் நடனம் புரியும் இடம் புகலிப் பதி என்னும் சீகாழியாகும். இப்பதியில், நான்கு வேதங்களில்

veLLam atu caTaimEl karantAn2, viravAr puragkaL mUn2Rum
koLLa eri maTuttAn2, kuRaivu in2Ri uRai kOyil--
aLLal viLai kazan2i azaku Ar virait tAmaraimEl an2n2ap
puL in2am vaiki ezum pukalippatitAn2E.

**பொருள்:** சிவபெருமான், பெருகி வந்த கங்கை வெள்ளத்தைத் தன் சடைமேல் தாங்கியிருப்பவர். பகைவர்களாகிய அசுரர்களின் புரங்கள் மூன்றையும் எரியும்படி செய்தவர். இப்பெருமான் குறைவில்லாத நிறைவோடு உறைந்திருக்கும் கோயில் புகலிப்பதி என்னும் சீகாழியாகும். இங்குள்ள சேறு நிறைந்த வயல்களில் முளைத்திருக்கும் அழகிய மணம் கமழும் தாமரை மலர்கள் மேல் அன்னமும் பிற பறவைகளும் தங்கிச் செல்கின்றன.

**குறிப்புரை:** கங்கையைச் சடையிற்கரந்தவன் திரிபுரம் தீமடுத்தவன் உறையும் கோயில் புகலிப்பதி என்கின்றது. விரவார் – பகைவர். அள்ளல் – சேறு. தாமரைமேல் அன்னமும் பறவைக் கூட்டங்களும் தங்கி எழும் புகலி என்க.

Lord Civan concealed the floodwaters of the river Ganges in His ruddy matted hair. He gutted with fire the three citadels of the hostile Asuraas. He is enshrined in the temple where there is no deficiency. This temple is situated in Thiru-p-pukali town rich in fertile fields full of mire. Here grows the fragrant and wondrous lotus flowers in plenty on which swans and other birds rest for a while and then fly away.

**Note:** Blessed indeed are the fauna and flora of Pukali.

சூடுமதிச் சடைமேற் சுரும்பார் மலர்க்கொன் றைதுன்றநட்டம்
ஆடுமமரர் பிரானழகா ருமையோடுமுடன்
வேடுபட நடந்தவிகிர் தன்குணம் பரவித்தொண்டர்
பாடஇனி துறையும்புகலிப் பதியாமே. 5

சூடும் மதிச் சடைமேல் சுரும்பு ஆர் மலர்க்கொன்றை துன்ற, நட்டம்
ஆடும் அமரர்பிரான் அழகு ஆர் உமையோடும் உடன்
வேடுபட நடந்த விகிர்தன், குணம் பரவித் தொண்டர்
பாட, இனிது உறையும் புகலிப்பதியாமே.

cUTum matic caTaimEl curumpu Ar malarkkon2Rai tun2Ra, naTTam--
ATum amararpirAn2, azaku Ar umaiyOTum uTan2
vETupaTa naTanta vikirtan2, kuNam paravit toNTar
pATa, in2itu uRaiyum--pukalippati AmE.

கங்கை யோர்வார் சடைமேற் கரந்தான்கிளி மழலைக் கேடில்
மங்கை யோர்கூறு டையான்மறை யான்மழு வேந்தும்
அங்கை யினானடி யேபரவிய வன்மேய ஆரூர்
தங்கை யினாற்றொழு வார்தடுமாற் றறுப்பாரே. 6

கங்கை ஓர் வார்சடைமேல் கரந்தான், கிளிமழலைக் கேடுஇல்
மங்கை ஓர்கூறு உடையான், மறையான், மழு ஏந்தும்
அம்கையினான், அடியே பரவி, அவன் மேய ஆரூர்
தம் கையினால்-தொழுவார் தடுமாற்று அறுப்பாரே.

kagkai Or vArcaTaimEl karantAn2, kiLimazalaik kETu il
magkai Or kURu uTaiyAn2, maRaiyAn2, mazu Entum
am kaiyin2An2, aTiyE paravi, avan2 mEya ArUr
tam kaiyin2Al-tozuvAr taTumARRu aRuppArE.

**பொருள்:** சிவபெருமான் கங்கையைத் தனது ஒப்பற்ற நீண்ட சடைமுடிமேல் மறைத்தவன். கிளி போன்ற மழலை மொழி பேசும் கேடு இல்லாத உமையம்மையை ஒரு பாகமாக வைத்தவன். வேதங்களை உடையவன். மழுவாயுதத்தை அழகிய கையில் ஏந்தியவன். இத்தகைய இறைவனான சிவபெருமான் திருவடிகளையே பரவி, அப்பெருமான் எழுந்தருளியுள்ள திருவாரூரைத் தம் கைகளால் தொழுபவர்கள் வாழ்க்கையின் தடுமாற்றங்களைத் தவிர்த்து விடுவர்.

**குறிப்புரை:** இவ்வண்ணம் கடமைகளை விடாது செய்தவர் வீடு எய்துவார் ஆதலின், பிறவிக்கடலில் வினைச்சுழலில் தடுமாறார் என இப்பாடல் தெரிவிக்கின்றது. கிளி மழலை மங்கை – கிளி போன்ற மழலைச் சொல்லினை உடைய உமாதேவி, கங்கை கரந்தாள், மங்கையோர் கூறுடையான் என்றது தருக்கி வந்த தாழ்குழலை மறைத்தடக்கி, அநுக்கிரக சக்தியைத் தன் இடப்பாகமாகக் கொண்டு இருக்கின்ற அருமைப்பாடு அறிவிக்கின்றது. மறையான் – விதிமுறையானும் விலக்குமுறையானும் அறிவுறுக்கும் ஆணை மொழியாகிய வேதங்களை உடையவன். பரவித் தொழுவார் தடுமாற்று – துணிவு பெறாத தொல்லை.

Lord Civan concealed the river Ganges in His matchless long matted hair. He accommodates on the left side of His body His imperishable consort Umaa Devi who speaks very softly like a parrot. He holds the battle axe in one of His wondrous hands. He is the author of the four Vedas. Those who hail both the holy feet of Lord Civan and

the town Thiru-aaroor, where He is entempled, with folded hands, will renounce their bewilderment.

நீறணி மேனியனாய் நிரம்பாமதி சூடிநீண்ட
ஆறணி வார்சடை யானாரூரி னிதமர்ந்தான்
சேறணி மாமலர்மேற் பிரமன்சிர மரிந்தசெங்கண்
ஏறணி வெல்கொடி யானவனெம் பெருமானே. 7

*நீறு அணி மேனியனாய், நிரம்பா மதி சூடி, நீண்ட*
*ஆறு அணி வார்சடையான், ஆரூர் இனிது அமர்ந்தான் -*
*சேறு அணி மா மலர் மேல் பிரமன் சிரம் அரிந்த, செங்கண்*
*ஏறு அணி வெல் கொடியான் அவன் - எம் பெருமானே.*

nIRu aNi mEn2iyan2Ay, nirampA mati cUTi, nINTa
ARu aNi vArcaTaiyAn2, ArUr in2itu amarntAn2--
cERu aNi mA malarmEl piraman2 ciram arinta, cegkaN
ERu aNi veL koTiyAn2 avan2--emperumAn2E.

**பொருள்:** சிவபெருமான் திருநீறு அணிந்த திருமேனியன். திருமுடியில் இளம்பிறையைச் சூடியவன். கங்கை விளங்கும் அழகிய நீண்ட சடைமுடியை உடையவன். திருவாரூரின்கண் மகிழ்வோடு எழுந்தருளி இருப்பவன். சேற்றின்கண் அழகியதாய் தோன்றி மலர்ந்த தாமரை மலர்மேல் விளங்கும் பிரமனுடைய சிரங்களில் ஒன்றைக் கொய்தான். சிவந்த கண்களை உடைய விடையேற்றை வெற்றிக் கொடியாகக் கொண்ட இப்பெருமானே எம் தலைவன் ஆவான்.

**குறிப்புரை:** இங்ஙனம், ஆன்மாக்களின் தடுமாற்றறுப்பவரே தலைவர்; அவருடைய திருமேனியும் இடமும் இத்தகைய என்பன முதலியவற்றை இப்பாடலில் அறிவிக்கின்றார். நிரம்பாமதி – இறைவன் முடியிலிருந்தும் நிரம்பாத பிள்ளைமதி. நிரம்பா மதிசூடி, நீண்ட ஆறு அணிசடையன் என்றது குறைப் பொருளையும் நிறைப் பொருளையும் ஒப்ப நோக்குவான் என்பது விளக்கிற்று. சேறணி மாமலர் – சேற்றிற் பிறந்து அழகு செய்யும் தாமரை. சேறணி மாமலர்மேற் பிரமன் என, பிரமன உந்தியந் தாமரையிலிருந்தும் கூறியது. தாமரை என்ற பொதுமை நோக்கி, 'புற்றில் வாளரவன்' (திருக்கோவை.) என்று மணிவாசகர் கூறியருளியது போல, பிரமன் சிரமரிந்த செங்கண் ஏறணி வெல்கொடியான் என்றது மகன்றலையறுக்கவும், ஒரு கரத்துக் கொடியாக இருந்த இடபவடிவினனாகிய திருமால், பார்த்துக் கொண்டே இருப்பதைத் தவிரத் தவிர்க்க முடியாத வண்ணம் தலைமை படைத்தவன்; அவனே எம் தலைவன் எனத் தலைவனின் தனிச்சிறப்பினை விளக்கியவாறு.

Lord Civan smears His sacred body with holy ashes. He wears the ever young crescent moon in His divine hair. The river Ganges shines in His attractive long matted hair. He is happily entempled in Thiru-aaroor. He clipped one of the five heads of Brahma who is seated on the pretty fully blossomed lotus flower, which is rooted in mire. His insigne in His ever-victorious flag is the red eyed bull. This Lord Civan is our Supreme Head.

8. Not Available

வல்லியந் தோலுடை யான்வளர் திங்கட்கண் ணியினான் வாய்த்த
நல்லிய னான்முகத் தோன்தலை யின்னற வேற்றான்
அல்லியங் கோதைதன் னையாகத் தமர்ந்தருளி ஆரூர்ப்
புல்லிய புண்ணியனைத் தொழுவாரும் புண்ணியரே. 9

***வல்லியந்தோல் உடையான், வளர்திங்கள்கண்ணியினான், வாய்த்த***
***நல்இயல் நான்முகத்தோன் தலையில் நறவு ஏற்றான்,***
***அல்லி அம்கோதைதன்னை ஆகத்து அமர்ந்து அருளி, ஆரூர்ப்***
***புல்லிய புண்ணியனைத் தொழுவாரும் புண்ணியரே.***

valliyantOl uTaiyAn2, vaLar tigkaL kaNNiyin2An2, vAytta
nal iyal nAn2mukattOn2 talaiyil naRavu ERRAn2,
alli am kOtai tan2n2ai Akattu amarntu aruLi, ArUrp
pulliya puNNiyan2ait tozuvArum puNNiyarE.

**பொருள்:** சிவபெருமான் வலிமையான புலியினது தோலை உடுத்தவன். வளர்தற்குரிய பிறைமதியைத் தன் தலையில் கண்ணியாகச் சூடியவன். நல்லியல்புகள் கொண்ட பிரமனுடைய தலையில் பலியேற்று உண்பவன். அல்லியங்கோதை என்ற பெயருடைய அம்மையைத் தனது திருமேனியில் ஒருபாகமாகக் கொண்டு அமர்ந்தருளி இருப்பவன். திருவாரூரில் பொருந்திய புண்ணியன். இவனைத் தொழுபவர்களும் புண்ணியம் செய்தவர்களே!

***குறிப்புரை:*** அத்தலைவன், அடைவார் எளிதில் அடைந்துய்ய அல்லியங் கோதையுடன் அருள்மூர்த்தியாய் ஆரூரில் அமர்ந்திருக்கின்றான் என இப்பாடலில் இடம் குறிக்கின்றார். வல்லியம் – புலி. நல்லியல் வாய்த்த நான்முகத்தோன் – தான் பிரமம் என்ற தன்மை யொழிந்து தலைவனை உணர்தலாகிய நல்லியல்பு வாய்க்கப் பெற்ற பிரமன். நல்லியல் வாய்க்கப் பெற்றமையாலேயே கபாலம் இறைவன் கரத்து ஏற்குங்

கலமாக விளங்கிற்று. நறவு – அமுதம். விஷ்ணு மார்பில் உள்ளது. அல்லியங்கோதை – பூங்கோயில் பக்கத்துக் கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் நீலோத்பலாம்பிகை. ஆகம் – திருமேனி.

Lord Civan is clad in fierce tiger-skin. He wears as a flower bud (*கண்ணி*) the ever-young crescent moon, which normally grows day by day. He goes about and accepts alms in the skull of Brahma who turned a good mannered creator after he met with punishment from Lord Civan. He concorporates in His body frame goddess Uma Devi. She is known in this temple as Alliyang-kothai (*அல்லியங்கோதை*). This Lord Civan who is entempled in Thiru-aaroor is the holiest one; those who adore and worship Him are also holy ones.

செந்துவரா டையினாருடை விட்டுநின் றுழல்வார் சொன்ன
இந்திர ஞாலமொழிந் தின்புறவே ண்டுதிரேல்
அந்தர மூவெயிலும் அரணம்மெரி யூட்டிஆரூர்த்
தந்திர மாவுடை யானவனெந் தலைமையனே. 10

*செந்துவர் ஆடையினார், உடை விட்டு நின்று உழல்வார், சொன்ன*
*இந்திரஞாலம் ஒழிந்து, இன்புஉற வேண்டுதிரேல்,*
*அந்தர மூஎயிலும்(ம்) அரணம் எரி யூட்டி, ஆரூர்த்*
*தம் திரமா உடையான் அவன் - எம் தலைமையனே.*

centuvar ATaiyin2Ar, uTai viTTu nin2Ru uzalvAr, con2n2a
intiranjAlam ozintu, in2pu uRa vENTutirEl,
antara mU eyilum(m) araNam eriyUTTi, ArUrt
tam tiramA uTaiyAn2 avan2--em talaimaiyan2E.

**பொருள்:** செந்துவர் ஊட்டப்பட்ட ஆடையை உடுத்தி, உண்மைத் துறவிகள்போல் பாசாங்கு செய்யும் புத்தர்கள், மற்றும் ஆடையின்றித் திரியும் போலித் துறவிகளான சமணர்கள் ஆகியோரின் மாயப் பேச்சுக்களைக் கேளாதீர்கள். நீங்கள் இன்புற்று வாழ விரும்புவீர்களாயின், வானத்தில் திரியும் மூவெயில்களாகிய அசுரர்களின் கோட்டைகளை எரியூட்டி அழித்தவனும் திருவாரூரைத் தனக்கு நிலையான இடமாகக் கொண்டவனுமாகிய சிவபெருமானே எம் தலைவன் என்று வழிபடுவீர்களாக.

**குறிப்புரை:** புண்ணியனைத் தொழும் புண்ணியம் பெற்ற நீங்கள். புறச் சமயிகள் கூறும் இந்திர ஞாலம் நீங்கி, இன்பம் பெற வேண்டின், ஆரூருடையானைத் தலைவனாக அறியுங்கள் என்று அறிவித்து அருள்கின்றார். செந்துவர் ஆடை – காவியாடை, சைன சந்நியாசிகளில் காவி ஆடை உடுத்தியவரும்,

திகம்பர சந்நியாசிகளும் என இருவகையார். இந்திரஞாலம் – இந்திரஞாலமான மாயப் பேச்சுக்கள். அந்தரம் – ஆகாயம். அரணம் – கோட்டை. ஆரூர் தம் திரமாவுடையான் – ஆரூரைத் தமது நிலைக்களனாகக் கொண்டவன். திரம் ஸ்திரம் என்பதன் திரிபு. சிவபூஜா துரந்தரர்களாகிய திரிபுராதிகள் தம் நிலை கெட்டது புத்தாவதாரங்கொண்ட திருமாலின் இந்திர ஜாலப் பேச்சால். திருமால் உபதேசம் மனத்தைக் கெடுத்தமையும். அதனால் அசுரர்கள் அழிந்தமையும் ஆகிய வரலாற்றை நினைப்பூட்டுவது இப்பகுதி.

Oh! Ye devotees! Do not listen to the illusory words of those who are clad in red-ochre hued garments and also those who roam about nakedly. If you would like to lead a life of happiness, be a firm believer in your mind that Lord Civan is our Supreme God and offer worship to Him. He is the one who burnt and destroyed the three citadels of the hostile Asuraas roaming about in the sky. He is happily entempled in Thiru-aaroor as His sacred place of living.

நல்லபுனற் புகலித்தமிழ் ஞானசம்பந் தன்நல்ல
அல்லிமலர் க்கழனி ஆரூரமர்ந்தானை
வல்லதோரிச் சையினால் வழிபாடிவை பத்தும் வாய்க்கச்
சொல்லுதல் கேட்டல்வல் லார்துன் பந்துடைப்பாரே. 11

நல்ல புனல் புகலித் தமிழ் ஞானசம்பந்தன், நல்ல
அல்லிமலர்க் கழனி ஆரூர் அமர்ந்தானை,
வல்லது ஓர் இச்சையினால், வழிபாடு இவைபத்தும் வாய்க்கச்
சொல்லுதல், கேட்டல், வல்லார் துன்பம் துடைப்பாரே.

nalla pun2al pukalit tamiz njAn2acampantan2, nalla
allimalark kazan2i ArUr amarntAn2ai,
vallatu Or iccaiyin2Al, vazipATu ivaipattum vAykkac
collutal, kETTal, vallAr tun2pam tuTaippArE.

**பொருள்:** தமிழ் ஞானசம்பந்தன் தூய்மையான நீர்வளத்தை உடைய புகலி என்னும் சீகாழியில் தோன்றியவர். இவர் நல்ல அல்லி மலர்கள் பூத்திருக்கும் வயல்களால் சூழப்பட்ட திருவாரூரில் எழுந்தருளிய சிவபெருமானைத் தனது வல்லமையான அன்போடு இப்பதிகத்தை வழிபாட்டுப் பாடல்களாகப் பாடினார். இந்த ஒன்பது பாடல்களையும் பொருளுணர்ந்து சொல்லுபவர்களும், கேட்கும் திறனுடைய வல்லவர்களும் தங்களுடைய துன்பங்களைச் சுவடும் தெரியாதபடி துடைத்து விடுவர்.

**குறிப்புரை:** அத்தகைய தலைவனாகிய ஆரூரமர்ந்தானை மனங்கொண்ட மகிழ்ச்சியால் எழுந்த பாடல்கள் ஒன்பதினையும் பாடுவாரும் கேட்பாரும் துன்ப நீக்கம் பெறுவர் என்றுணர்த்துகிறது திருக்கடைக்காப்பாகிய இறுதிப் பாடல். நல்லபுனல் – கழுமலவள நதி. வழிபாடு பத்தும் – இப்பத்துப் பாடல்களுமே வழிபாடு ஆகும் என்பதாம். வாய்க்கச் சொல்லுதல் கேட்டல் – சொல்லும் வாயும், கேட்கும் செவியும், இவற்றை இயக்கும் உள்ளமும் பிறவழி போகாது பொருந்தச் சொல்லுதலும், கேட்டலும் துன்பந் துடைப்பார் – ஈரந் துடைப்பார் என்பது போலத் துன்பம் இருந்த சுவடுந் தெரியாதபடித் துடைப்பார் என்பதாம்.

Gnaanasambandan is well versed in Tamil. He hails from Pukali which is renowned for its abundant water supply at all times. He has sung these ten verses with deep respect and high dedication, on Lord Civan of Thiru-aaroor. This place is surrounded by fields full of water, where lotus and other similar flowers grow well with their outer petals fully blossomed and fully grown. Those who explain these verses with deep knowledge and those who patiently and sincerely hear such deep explanation will sweep their misery away from them for ever.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*105ஆம் பதிகம் முற்றிற்று*
End of 105th Hymn

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# 106. திருவூறல்

## திருத்தல வரலாறு:

தொண்டை நாட்டுத் தலமாக விளங்குவது திருவூறல் என்ற திருத்தலமாகும். இத்தலம் தக்கோலம் என வழங்கப் பெறுகிறது. இரயில் நிலையம் உள்ளது. காஞ்சிபுரத்தில் இருந்து பேருந்துகள் உள்ளன. நந்திதேவரது வாயினின்றும் நீர் சுரப்பதாலும், இறைவனது திருவடியினின்றும் நீர் சுரப்பதாலும் ஊறல் என்று வழங்குவதாயிற்று. சம்வர்த்த முனிவர் பூசித்துப் பேறு பெற்ற தலம். இக்கோயிலை அடுத்து மதிலோரத்தின் கிழக்கே உள்ள கங்காதரர் சந்நிதியில் மேற்குப் பிராகாரத்தில் விருஷப வாயிலிருந்து அகோராத்ரம் தீர்த்தம் வருவது ஸ்தல மகிமையை விளக்கும். இறைவன் உமாபதீசுவரர், ஜலநாதேசுவரர். இறைவி உமையம்மை. தீர்த்தம் பார்வதி தீர்த்தம். விசயநகர அரசர்களால் நந்திதீர்த்தம் என்றழைக்கப்பட்டது. தக்கோலம் இரயில் நிலையத்தில் இருந்து கிழக்கே 1.5 கி.மீ. தொலைவில் இத்தலம் உள்ளது.

### கல்வெட்டு:

கல்வெட்டில் ஜலநந்தீசுவரர் என்று வழங்கப் பெறும். இராஜகேசரி வர்மன் ஆட்சியில் கங்கமன்னன் பிருதிவி பதியால் வெள்ளிப்பாத்திரம் தானம் செய்யப்பட்டது. அவன் மனைவி அருள்மொழி நங்கையால் கோதானம் செய்யப்பட்டது. கோபார்த்தி வேந்திரவர்மன் ஆட்சியில் துர்க்கைச் சிலைக்கு விளக்குகள் அளிக்கப்பட்டு உள்ளன. திரிபுவனச் சக்கரவர்த்தி குலோத்துங்கன் ஆட்சியில் திருக்காளத்தி தேவன் என்கிற யாதவனால் நிலம் தானம் செய்யப் பெற்றுள்ளது. மற்றவை விளக்கிற்கும், மற்றச் செலவுகளுக்கும் பொன், பணம், நிலம், ஆடுகள், நெல் முதலியன வழங்கியதைத் தெரிவிக்கின்றன.

## பதிக வரலாறு:

தக்கோலத்தை வணங்கி, தமிழ்மாலை சாத்திய ஆளுடைய பிள்ளையார் திருவூறலை அடைந்தார். அங்கு எழுந்தருளியுள்ள, இறைவனைப் பலமுறை வணங்கி, "மாறிலவுணர் அரணம்" என்னும் பழுதில் செந்தமிழ்ப்பாமாலை பாடினார்.

## 106. THIRU-OORAL

### HISTORY OF THE PLACE

This sacred place is in Thondai Naadu and is known as Thakkolam. It can be reached by bus from Kaanchipuram. It is 1.5 km to the east of the Thakkolam railway station. The name Ooral is derived either from the water spring at the feet of the Lord or from the flow of water (saliva) from the mouth of Nandhidhevar. Next to this temple wall towards its east is a shrine for Gangaadharar. In the western ambulatory of this shrine there is a bull out of whose mouth flows holy water known as Agoraathram Theerththam. This shows the greatness of this temple.

The Lord is known as Umaapatheesuvarar or Jalanaathesuvarar. The Goddess is known as Umaiyammai. The sacred ford is Paarvathi Theerththam, called Nandhi Theerththam by Vijayanagar kings. Sage Samvarththa Munivar worshipped and attained salvation here.

Some inscriptions refer to the God as Jalanandheesuvarar. The Ganga king Piruthivipathi gifted silver utensils and his queen Arulmozhinangai gave away cows for the temple. Other inscriptions speak of the gift of gold, cash, land, paddy and sheep for lamps and other temple expenses.

### INTRODUCTION TO THE HYMN

From Virkolam our saint arrived at Takkolam and hailed Lord Civan in the local shrine known as Ooral.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

# 106. திருவூறல்

# 106. THIRU-OORAL

பண் : வியாழக்குறிஞ்சி
ராகம் : சௌராஷ்டிரம்

*Pann: Viyazha-k-kurinji*
*Raagam : Saurashtram*

மாறில வுணரரணம் மவைமாய வோர்வெங் கணையாலன்று
நீறெழ வெய்தவெங் கள்நிமல னிடம்வினவில்
தேறலி ரும்பொழி லுந்திகழ் செங்கயல் பாய்வயலுஞ் சூழ்ந்த
ஊறல மர்ந்தபிரா னொலியார் கழலுள் குதுமே. 1

மாறு இல் அவுணர் அரணம்(ம்) அவை மாய, ஓர் வெங்கணையால், அன்று,
நீறு எழ எய்த எங்கள் நிமலன் இடம் வினவில் -
தேறல் இரும் பொழிலும், திகழ் செங்கயல் பாய் வயலும், சூழ்ந்த
ஊறல்; அமர்ந்த பிரான் ஒலி ஆர் கழல் உள்குதுமே.

mARu il avuNar araNam(m) avai mAya, Or vegkaNaiyAl, an2Ru,
nIRu eza eyta egkaL nimalan2 iTam vin2avil--
tERal irum pozilum, tikaz cegkayal pAy vayalum, cUznta
URal; amarnta pirAn2 oli Ar kazal uLkutumE.

**பொருள்:** தமக்கு நிகரில்லாத வலிய அசுரர்களின் கோட்டைகளாக விளங்கிய முப்புரங்களும் சாம்பலாகிப் போகுமாறு, முற்காலத்தில் ஒருவெங்கணையால் அழித்த நிமலன், எங்கள் சிவபெருமான் ஆவார். இப்பெருமான் எழுந்தருளிய இடம் யாது என வினவினால், அது, தேன் நிறைந்த பெரிய பொழில்களும், விளங்கிய செங்கயல் மீன்கள் பாயும் வயல்களும் சூழ்ந்த திரு ஊறல் ஆகும். இப்பெருமானின் ஒலிக்கின்ற கழல் அணிந்த திருவடிகளை நாம் நாள்தோறும் தியானிப்போமாக.

**குறிப்புரை:** திரிபுரம் எரித்த சிவபெருமான் இடம் யாதென்று வினவினால், அது திருஊறலாம். அங்கு எழுந்தருளியுள்ள இறைவன் கழலைத் தியானிப்போம் என்கின்றது. அரணம் – கோட்டை. தேறல் – தேன்.

Oh! Ye devotees! If you seek to identify the place of residence of our Lord Civan, the Supreme, who is pure, it is Thiru-ooral. In the days of yore, He smote with a single fierce arrow, on the walled citadels of the uncomparable recalcitrant Asuraas and reduced them to cinders. The city is surrounded by thick vegetation full of honey and fields teaming with red carp fishes. Let us contemplate on the holy feet of Lord Civan of this place who is decked with resounding anklets and get His grace.

மத்தம தக்கரியை மலையான் மகளஞ்ச வன்றுகையால்
மெத்த வுரித்தவெங் கள்விமலன் விரும்புமிடம்
தொத்த லரும்பொழில் சூழ்வயல் சேர்ந்தொளிர் நீலநாளுந் நயனம்
ஒத்த லருங்கழனித் திருவூறலை யுள்குதுமே. 2

*மத்தமதக்கரியை, மலையான்மகள், அஞ்ச, அன்று, கையால்*
*மெத்த உரித்த எங்கள் விமலன் விரும்பும் இடம் -*
*தொத்து அலரும் பொழில் சூழ் வயல் சேர்ந்து, ஒளிர், நீலம் நாளும் நயனம்*
*ஒத்து அலரும் கழனி - திரு ஊறலை உள்குதுமே.*

mattamatakkariyai, malaiyAn2makaL anjca, an2Ru, kaiyAl
metta uritta egkaL vimalan2 virumpum iTam--
tottu alarum pozil cUz vayal cErntu, oLir nIlam nALum nayan2am
ottu alarum kazan2i--tiru URalai uLkutumE.

***பொருள்:*** மதம் பொருந்திய பெரிய தலையை உடைய யானையைக் கண்டு மலைமகள் அஞ்ச, முற்காலத்தில் தன் கைகளால் முழுமையாக உரித்த நிமலன், எங்கள் சிவபெருமானாகும். இப்பெருமான் விரும்பும் இடம் யாது என வினவினால், அது, பூங்கொத்துக்கள் விரிந்துள்ள பொழில்கள் சூழ்ந்ததும், வயல்களில் நாள்தோறும் முளைத்து ஒளிரும் நீல மலர்கள், மங்கையரின் கண்களை ஒத்திருக்கும் வயல் வளங்களை உடைய திருஊறல் ஆகும். இத்தலத்தை நாம் நாள்தோறும் தியானிப்போமாக.

***குறிப்புரை:*** யானையை உரித்த இறைவன் விரும்பும் இடம் திருவூறல். அதனை உள்குவோம் என்கின்றது. மெத்த – மிக. தொத்து – கொத்து. நயனம் – கண்.

A wild elephant once came rushing towards Umaa Devi consort of Lord Civan and daughter of the mountain king, who got frightened at the very sight of the elephant. Lord Civan killed the elephant, and stripped off its skin by His very hands and covered His body with that skin. This Lord Civan loves to be entempled in Thiru-ooral. This city is surrounded by natural gardens full of well blossomed flowering trees and plants. Also rich fields are in plenty here in this city area, where the blue lilies blossom daily in large numbers. These flowers resemble the beautiful eyes of damsels living in this city. Let us remember and reach this town daily and offer our worship to Lord Civan entempled therein.

ஏனமருப் பினொடுமெழி லாமையும் பூண்டழகார் நன்றும்
கானமர் மான்மறிக் கைக்கடவுள் கருதுமிடம்
வானமதி தடவும்வளர் சோலைகள் சூழ்ந்தழகார் நம்மை
ஊனமறுத் தபிரான்திரு வூறலையுள் குதுமே. 3

ஏனமருப்பினொடும், எழில் ஆமையும் பூண்ட அழகார், நன்றும்
கான் அமர் மான்மறிக் கைக்கடவுள், கருதும் இடம் -
வானமதி தடவும் வளர் சோலைகள் சூழ்ந்து, அழகுஆர், நம்மை
ஊனம் அறுத்த பிரான் - திரு ஊறலை உள்குதுமே.

En2a maruppin2oTum ezil Amaiyum pUNTa azakAr, nan2Rum
kAn2 amar mAn2maRik kaik kaTavuL, karutum iTam--
vAn2a mati taTavum vaLar cOlaikaL cUzntu, azaku Ar, nammai
Un2am aRutta pirAn2--tiru URalai uLkutumE.

**பொருள்:** பன்றிக் கொம்புகளோடு ஆமையோட்டையும் அணிகலனாக அழகுறப் பூண்டு, நல்ல காட்டில் வாழும் மான் கன்றைத் தன் கையில் ஏந்தியுள்ள கடவுள் எங்கள் சிவபெருமானாகும். இப்பெருமான் விரும்பும் இடமானது, வானத்தில் உள்ள மதி தோயுமாறு வளர்ந்துள்ள சோலைகளால் அழகுறச் சூழப்பட்டு நமது பிறவிப் பிணியைப் போக்க வல்லவனாக எழுந்தருளியிருக்கும் திருஊறல் ஆகும். இத்தலத்தை நாம் நாள்தோறும் தியானிப்போமாக.

**குறிப்புரை:** பன்றிக் கொம்பு, ஆமையோடு இவற்றை அணிந்து மான் ஏந்திய கடவுள் இடம் திருவூறல். அதனைத் தியானிப்போம் என்கின்றது. ஏனம் – பன்றி. எழில் – அழகு. மான்மறி – மான்குட்டி. ஊனம் – குறை.

Lord Civan wears the tusk of the hog, and the shell of tortoise as His ornaments creating a gorgeous look. He also carries in one of His hands the young deer which normally lives in the forest. This Lord Civan loves to be entempled in Thiru-ooral. Here thick well developed and good looking groves with tall trees are in plenty. And the moon apparently floats high in the skies here. Let us go daily to this town and offer our worship to Lord Civan entempled there who will eradicate our birth and death karma.

நெய்யணி மூவிலை வேல்நிறை வெண்மழுவும் மனலுமன்று
கையணி கொள்கையி னான்கடவுள்ளிடம் வினவில்
மையணி கண்மடவார் பலர்வந்திறைஞ் சமன்னி நம்மை
உய்யும் வகைபுரிந் தான்திரு வூறலை யுள்குதுமே. 4

நெய் அணி மூஇலைவேல், நிறை வெண்மழுவும்(ம்), அனலும், அன்று
கை அணி கொள்கையினான் கடவுள்(ள்) இடம் வினவில் -
மை அணி கண் மடவார் பலர் வந்து இறைஞ்ச, மன்னி நம்மை
உய்யும் வகை புரிந்தான் - திரு ஊறலை உள்குதுமே.

ney aNi mUilaivEl, niRai veNmazuvum(m), an2alum, an2Ru,
kai aNi koLkaiyin2An2 kaTavuL(L) iTam vin2avil--
mai aNi kaN maTavArpalar vantu iRainjca, man2n2i nammai
uyyum vakai purintAn2--tiru URalai uLkutumE.

***பொருள்:*** நெய் பூசப்பெற்ற மூவிலை வேல், ஒளி நிறைந்த வெண்மையான மழு, அனல் ஆகியவற்றைத் தன் கைகளில் உடைமையாகக் கொண்டுள்ள கொள்கை உடைய கடவுள் எங்கள் சிவபெருமான் ஆகும். இப்பெருமான் விரும்பும் இடம் யாது என வினவினால், அது, மை பூசப்பெற்ற கண்களை உடைய பெண்கள் பலர் வந்து வணங்குகின்றதும், நாம் உய்யும் வகையில் எழுந்தருளி நிலைபெற்றிருக்கும் திருஊறல் ஆகும். இத்தலத்தை நாம் நாள்தோறும் தியானிப்போமாக.

***குறிப்புரை:*** திரிசூலம், மழு, அனல் இவற்றைக் கையில் ஏந்திய கடவுள் இடம் திருஊறல் என்கின்றது. நெய்யணி – நெய் பூசப்பெற்ற. ஆயுதங்கள் துருப்பிடிக்காவாறு நெய் பூசி வைத்தல் மரபு. உய்யும் வகை – துன்பத்தினின்று ஈடேறும் வகை.

Lord Civan holds in His hands the trident well smeared with melted butter (Ghee) and also the bright white battle axe as well the hot burning fire. If you ask where this Lord Civan loves to be enshrined, it is the town Thiru-ooral. Here Lord Civan is entempled permanently to enable devotee damsels who have tainted their eyes with black paste (அஞ்சனம்), to come in large numbers to the temple daily to offer worship. Let us also remember this temple and go there daily and offer our worship to Lord Civa.

எண்டி சையோர் மகிழஎழில் மாலையும்போ னகமும்பண்டு
சண்டி தொழஅளித் தானவன்தாழு மிடம்வினவில்
கொண் டல்கள்தங்கு பொழிற்குளிர் பொய்கைகள் சூழ்ந்துநஞ்சை
உண்ட பிரானமரும் திருவூறலை யுள்குதுமே. 5

*எண்திசையோர் மகிழ, எழில் மாலையும் போனகமும், பண்டு,*
*சண்டி தொழ அளித்தான் அவன் தாழும் இடம் வினவில் -*
*கொண்டல்கள் தங்கு பொழில் குளிர் பொய்கைகள் சூழ்ந்து, நஞ்சை*
*உண்ட பிரான் அமரும் - திரு ஊறலை உள்குதுமே.*

eNticaiyOr makiza, ezil mAlaiyum pOn2akamum, paNTu,
kaNTi toza aLittAn2 avan2 tAzum iTam vin2avil--
koNTalkaL tagku pozil kuLirpoykaikaL cUzntu, nanjcai
uNTa pirAn2 amarum--tiru URalai uLkutumE.

**பொருள்:** எட்டுத் திசைகளிலும் உள்ளவர்கள் கண்டு மகிழுமாறு, தன்னைத் தொழுத விசார சருமற்கு (சண்டீசர்) தான் அணிந்த அழகிய மாலை, தான் உண்டு எஞ்சிய உணவு ஆகியனவற்றை முற்காலத்தே அளித்து அருளியவன். கடலில் தோன்றிய நஞ்சினை உண்டு தேவர்களைக் காத்தவனும் எங்கள் சிவபெருமானாகும். இப்பெருமான் விரும்பி உறையும் இடம் யாது என வினவினால், அது, மேகங்கள் தங்கும் பொழில்களும், குளிர்ந்த பொய்கைகளும் சூழ்ந்து விளங்கும் திருஊறல் ஆகும். இத்தலத்தை நாம் நாள்தோறும் தியானிப்போமாக.

**குறிப்புரை:** தான் சாத்திய மாலையும் உண்ட உணவும், சண்டேசுரர்க்கு அருள் செய்தவன் இடம் திருஊறல் என்கின்றது போனகம் – உணவு. சண்டி – சண்டேசுரர். கொண்டல்கள் – மேகங்கள்.

Sage Visara Sarumar (*விசார சருமர்*) used to worship Lord Civan daily, performing oblations as depicted in the Aagamaas. One day Lord Civan appeared before him and blessed him, for his deep devotion and granted him boons such as a position in His abode called Chandeesar (*சண்டீசர் என்ற பதவி*), good garlands and divine food after His use (The name of the position given to this sage itself became later his own name as Chandeeswarar - *சண்டீஸ்வரர்*). The entire humanity in all the eight directions of this world, was greatly in joy due to this act of Benediction by Lord Civan to this sage. This Lord Civan positioned the poison that came out of the sea, in His throat permanently and saved the life of Devaas and others. If you ask where this Lord Civan is entempled, it is the town known as Thiru-ooral. In this city, clouds passing through the sky, stay over the thick vegetation area where tall trees are in plenty and

also where cool tanks full of water are to be found everywhere. Let us remember this place daily and go there and offer worship to Lord Civa entempled therein.

**Note:** Chandi is Chandeesua Naayanaar. He has a sub-shrine in every temple of Civa.

6 & 7 Not available

கறுத்தம னத்தினொடுங் கடுங்காலன் வந்தெய்து தலுங்கலங்கி
மறுக்குறு மாணிக்கருள மகிழ்ந்தானிடம் வினவில்
செறுத்தெ ழுவாளரக்கன் சிரந்தோளுமெய் யுந்நெரியஅன்று
ஒறுத்த ருள்செய்தபி ரான்திரு வூறலையுள் குதுமே. 8

*கறுத்த மனத்தினொடும் கடுங்காலன் வந்து எய்துதலும், கலங்கி*
*மறுக்குஉறும் மாணிக்கு அருள மகிழ்ந்தான் இடம் வினவில் -*
*செறுத்து எழுவாள் அரக்கன் சிரம் தோளும் மெய்யும் நெரிய அன்று*
*ஒறுத்து, அருள்செய்த பிரான் - திரு ஊறலை உள்குதுமே.*

kaRutta man2attin2oTum kaTugkAlan2 vantu eytutalum, kalagki,
maRukku uRum mANikku aruLa makizntAn2 iTam vin2avil--
ceRuttu ezu vAL arakkan2 ciram tOLum meyyum neriya an2Ru
oRuttu, aruL ceyta pirAn2--tiru URalai uLkutumE.

**பொருள்:** சினம் பொருந்திய மனத்தோடு கூடிய கொடிய காலன் பிரம்மசாரியாகிய மார்க்கண்டேயனின் வாழ்நாளைக் கவர வந்தான். அது கண்டு, மனம் கலங்கி மயங்கிய மார்க்கண்டேயனுக்கு அருள் புரிந்தவன் சிவபெருமான். தன்னை மதியாது சினந்து வந்த, வாட்போரில் வல்லவனான இராவணனின் தலை, தோள், உடல் ஆகியவைகளை முன்னொரு காலத்தில் சிவபெருமான் நெரித்தான். பின்பு, அவன் வருந்தி மன்னிப்பு வேண்ட அவனுக்கு அருள் செய்த கடவுளும் எங்கள் சிவபெருமான் ஆவார். இப்பெருமான் விரும்பி உறையும் இடம் யாதென வினவினால், அது திருஊறல் ஆகும். இத்தலத்தை நாம் நாள்தோறும் தியானிப்போமாக.

**குறிப்புரை:** மார்க்கண்டேயற்கு அருள்செய்த இறைவன் இடம் திருஊறல் என்கின்றது. கறுத்த – கோபித்த. மறுக்குறும் – மயங்கிய. மாணி – பிரமசாரியாகிய மாக்கண்டன். வாள் அரக்கன் – கொடிய அரக்கன். செறுத்து – கோபித்து அரக்கன் என்றது இராவணனை. ஒறுத்து – தண்டித்து.

The fierce and wrathful Yama approached the Brahmachari (Bachelor Saint – *மார்க்கண்டேயர்*) Maarkandēyar to snatch away his life, even as he was worshipping the Civalingam with proper ceremonies. Maarkandēya got frightened and bewildered at

this. At this moment, Lord Civa kicked Yama to death and saved Maarkandēya and blessed him to live for ever without ageing. Once before, king Raavanan unaware of the prowess of Lord Civa, tried to lift and put aside Mount Kailash, His abode. Civan crushed his head, shoulders and body etc. Later when Raavanan rued and repented for his folly and begged for pardon, Lord Civan forgave him and graced him with a few boons. If you seek to identify the abode of this Lord Civan, it is Thiru-ooral. Let us meditate on that place in our mind daily, go there and offer worship to Lord Civan enshrined therein.

நீரின்மி சைத்துயின் றோன்நிறை நான்முகனும் மறியாதன்று
தேரும் வகைநிமிர்ந் தானவன்சேரு மிடம்வினவில்
பாரின் மிசையடியார் பலர்வந்திறைஞ் சமகிழ்ந்தாகம்
ஊருமர வசைத்தான் திருவூறலை யுள்குதுமே. 9

*நீரின்மிசைத் துயின்றோன் நிறை நான்முகனும் அறியாது, அன்று,*
*தேரும் வகை நிமிர்ந்தான் அவன் சேரும்இடம் வினவில் -*
*பாரின்மிசை அடியார்பலர் வந்து இறைஞ்ச, மகிழ்ந்து, ஆகம்*
*ஊரும் அரவு அசைத்தான் - திரு ஊறலை உள்குதுமே.*

nirin2 micait tuyin2ROn2 niRai nAn2mukan2um aRiyAtu, an2Ru,
tErum vakai nimirntAn2 avan2 cErum iTam vin2avil--
pArin2 micai aTiyAr palar vantu iRainjca, makizntu, Akam
Urum aravu acaittAn2--tiru URalai uLkutumE.

**பொருள்:** கடல் நீரின் மேல் துயில் கொள்ளும் திருமாலும் ஞானத்தில் நிறைந்த நான்முகனும் அறிய முடியாமல், தேடி ஆராயுமாறு நிமிர்ந்து நின்றவன் சிவபெருமான். மண்ணுலகில் அடியவர் பலரும் வந்து வணங்க, மகிழ்ந்து ஊரும் பாம்பினை இடையில் கட்டியிருக்கும் கடவுளும் எங்கள் சிவபெருமான் ஆவார். இப்பெருமான் எழுந்தருளிய இடம் யாது என வினவினால், அது திருஊறல் ஆகும். இத்தலத்தை நாம் நாள்தோறும் தியானிப்போமாக.

**குறிப்புரை:** அயனம் மாலும் அறியாதவண்ணம் அக்கினி மாலையாய் நிமிர்ந்தவன் இடம் திருஊறல் என்கின்றது. நீரின் மிசைத்துயின்றோன் – திருமால். தேரும் வகை – ஆராயும் வகை.

Thirumaal who rests on the snake bed on sea and Brahma who is a scholar in divine knowledge - both could not have darshan (vision) of Lord Civan in spite of their serious search for Him who then soared up high in the sky as a big pillar of fire. Snakes normally crawl in the ground happily. Civa got hold of the snake and tied it round His

waist as a belt. If you ask where this Civa is enshrined, it is Thiru-ooral, because He wants His devotees to come to His place in large numbers and to offer worship to Him. Let us also follow suit, like the devotees, go to the temple and offer our worship to Lord Civan entempled therein in Thiru-ooral town.

பொன்னியல் சீவரத்தார் புளித்தட்டை யர்மோட்ட மணர்குண்டர்
என்னுமிவர்க் கருளாவீச னிடம்வினவில்
தென்னெ னவண்டி னங்கள்செறி யார்பொழில் சூழ்ந்தழகார் தன்னை
உன்னவினை கெடுப்பான் திருவூறலை யுள்குதுமே. 10

பொன்இயல் சீவரத்தார் புளித் தட்டையர், மோட்டு அமணர்குண்டர்,
என்னும் இவர்க்கு அருளா ஈசன் இடம் வினவில் -
தென்னென வண்டுஇனங்கள் செறி ஆர் பொழில் சூழ்ந்து, அழகுஆர், தன்னை
உன்ன வினை கெடுப்பான் - திரு ஊறலை உள்குதுமே.

pon2 iyal cIvarattAr, puLit taTTaiyar, mOTTu amaNarkuNTar,
en2n2um ivarkku aruLA Ican2 iTam vin2avil--
ten2n2en2a vaNTu in2agkaL ceRi Ar pozil cUzntu, azaku Ar, tan2n2ai
un2n2a vin2ai keTuppAn2--tiru URalai uLkutumE.

**பொருள்:** பொன் போன்ற மஞ்சள் நிற காவி உடை அணிந்து போலித் துறவிகளாகத் திரியும் புத்தர்களுக்கும், புளிப்பேறிய காடியைத் தட்டில் இட்டு உண்ணும் வெளி வேஷக் காரர்களாகத் திரியும் தடித்த உடம்பை உடைய சமணர்களுக்கும் சிவன் அருள் புரியாதவன். தன்னைத் தியானிப்பவர்களின் இரு வினைகளை நீக்குபவனான கடவுள் எங்கள் சிவபெருமான் ஆவார். இப்பெருமான் எழுந்தருளிய இடம் யாது என வினவினால், அது, 'தென்' என்ற ஓசை உண்டாகும்படியாக ரீங்காரமிடும் வண்டினங்கள் நிறைந்த பொழில்கள் சூழ்ந்துள்ள அழகிய திருஊறல் ஆகும். இத்தலத்தை நாம் நாள்தோறும் தியானிப்போமாக.

**குறிப்புரை:** புத்தருக்கும் சமணருக்கும் அருள் புரியாத ஈசன் இடம் திருஊறல் என்கின்றது. பொன்னியல் சீவரத்தார் – பொன்போன்ற நிறத்தினை உடைய உடை அணிந்தவர்கள். புளித்தட்டையர் – புளித்த நீரோடு கூடிய பழஞ்சோற்றைத் தட்டில் இட்டு உண்பவர்; தென் என; ஒலிக்குறிப்பு. தன்னை உன்ன வினைகெடுப்பான் – தன்னைத் தியானிப்பவர்களின் இரு வினையைக் கெடுப்பவன்.

Buddhists wear golden hued yellow robes; while the Samanars eat the sour gruel from flat plates. The Lord never graces these two who lack in specific knowledge, whereas He annuls the karma of His devotees who contemplate on and adore Him. If you ask where this Lord Civan is enshrined, it is in the beautiful Thiru-vural which is

girt with groves where bees *in their strength* swarm about *buzzing* and humming melodious notes. Let us also contemplate on Lord Civan of this place and adore Him.

கோடலி ரும்புறவிற் கொடிமாடக் கொச்சையர் மன்மெச்ச
ஓடுபுனற் சடைமேற் கரந்தான் றிருவூறல்
நாடலரும் புகழான்மிகு ஞானசம்பந்தன் சொன்னநல்ல
பாடல்கள் பத்தும்வல் லார்பரலோகத் திருப்பாரே. 11

கோடல் இரும் புறவில் கொடி மாடக் கொச்சையர்மன், மெச்ச
ஓடுபுனல் சடைமேல் கரந்தான் திரு ஊறல்,
நாடல் அரும்புகழான் மிகு ஞானசம்பந்தன், சொன்ன நல்ல
பாடல்கள்பத்தும் வல்லார் பரலோகத்து இருப்பாரே.

kOTal irum puRavil koTi mATak koccaiyarman2, mecca
OTupun2al caTaimEl karantAn2 tiru URal,
nATal arumpukazAn2 miku njAn2acampantan2, con2n2a nalla
pATalkaL pattum vallAr paralOkattu iruppArE.

**பொருள்:** செங்காந்தள் செடிகள் நிறைந்த பெரிய காடுகளை உடையதும், கொடிகள் கட்டப்பட்ட மாடவீதிகளைக் கொண்டதுமான பதி கொச்சையம்பதி என்ற சீகாழி ஆகும். பிறரால் தேடற்கரிய புகழ் மிகுந்த ஞானசம்பந்தன் இப்பதிக்குத் தலைவன் ஆவார். இவர், பெருகி வரும் கங்கையைச் சடைமிசைக் கரந்தவனான சிவபெருமான் உறையும் திருஊறலைப் புகழ்ந்து இப்பதிகத்தைப் பாடினார். இப்பதிகப் பாடல் பத்தையும் பொருளுணர்ந்து பாட வல்லவர்கள் பரலோகத்தில் இன்பமாகத் திளைத்திருப்பார்கள்.

**குறிப்புரை:** திருஊறலைப் பற்றிய பாடல் பத்தையும் வல்லவர் பரலோகத்து இருப்பார் என்கின்றது. கோடல் – செங்காந்தள். இரும்புறவில் – பெரிய காடுகளை உடைய. நாடல் அரும் – பிறரால் தேடற்கரிய.

The rare Gnaanasambandan of renown par excellence, is the prince of Pukali rich in storeyed mansions, with flags fluttering from poles. Also big bushes full of red Malabar glory lily plants (செங்காந்தட்செடிகள்) have grown in plenty. Gnaanasambandan has sung on Thiru-vural's Lord Civan who has concealed in His matted hair the celebrated and flowing river Ganges. Those who are well versed in these ten verses will abide in the supernal world.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-ÇHITRAM-BALAM

*106ஆம் பதிகம் முற்றிற்று*
End of 106th Hymn

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# 107. திருக்கொடிமாடச்செங்குன்றூர் (திருச்செங்கோடு)

## திருத்தல வரலாறு:

கொங்கு நாட்டுத் தலங்களில் முக்கியமான ஒன்று. திருக்கொடிமாடச்செங்குன்றூர் அல்லது திருச்செங்கோடு என்று வழங்கப்படும். இத்தலம் சங்ககிரிதுர்க்கம் இரயில் நிலையத்தில் இருந்து கிழக்கே 9 கி.மீ. தூரத்தில் இருக்கிறது. ஈரோட்டில் இருந்து நாமக்கல், சேலம் ஆகிய ஊர்களில் இருந்தும் பேருந்துகள் மூலமாகவும் இத்தலத்தை அடையலாம். மலைமேல் கோயில் வரை செல்லப் பேருந்து வசதி உள்ளது.

இத்தலம் திருச்செங்கோடு, திருச்செங்குன்றூர், நாகாசலம் எனவும் வழங்கப் பெறும். மேலவீதியில் இருந்து பார்த்தால் மலை, நாகம் போல் தோன்றுவதால் நாககிரி எனப் பெற்றது. சுப்பிரமணிய சுவாமி சந்நிதி தனியே அமைந்துள்ளது. சுவாமி சந்நிதி மேற்குப் பார்த்தது. முருகன் சந்நிதி கிழக்குப் பார்த்தது. விஷ்ணுகோயில் கோயிலுக்குள்ளேயே தனியே இருக்கிறது. சுவாமி அர்த்த நாரீசுவரர். அம்மை பாகம்பிரியாள்; அர்த்தநாரீசுவரி. விஷ்ணுவுக்கு ஆதிகேசவப் பெருமாள் என்று பெயர். அர்த்தநாரீசுவரர் பாதத்தில் ஒரு சிறு ஊற்று இருக்கிறது. இது விறல்மிண்ட நாயனாருடைய அவதார ஸ்தலம். தீர்த்தம் பிரமதீர்த்தம் முதல் 16 தீர்த்தங்கள் உள்ளன.

## கல்வெட்டு:

பரகேசரி வர்மனான முதலாம் இராஜராஜன், மதுரை கொண்ட முதற்பரகேசரி வர்மன், சுந்தர பாண்டிய தேவன், சொக்கப்ப நாயக்கன், சொக்கலிங்க நாயக்கன், மைசூர் கிருஷ்ண ராஜ உடையார் முதலிய அரசர்களின் கல்வெட்டுக்கள் இங்குக் காணப் படுகின்றன. அவற்றால் அறியப்படுவன பெரும்பாலானவை அந்தணர்களுக்கு அன்னமும், யாத்தீரிகர்களுக்கு உணவும், விளக்கிற்கு நெய்யும் அளிக்கப் பெற்ற நிவந்தங்களே ஆகும். 192 முதல் 194 வரையில் உள்ள கல்வெட்டுக்கள் சுப்பிரமணியப் பிள்யைார் கோயிலைப் பற்றி அறிவிக்கின்றன. கி.பி. 1660 முதல் 1662 வரை அரசாண்ட விஸ்வநாத சொக்க லிங்கர் காசி விசுவேசர் கோயிலையும் கோபுரத்தையும் கட்டினார்.

**பதிக வரலாறு:**

இவ்வூர் பிரசித்தி பெற்ற முருகப் பெருமான் திருத்தலமாக விளங்குகிறது. இதனை அருணகிரிநாதர் கந்தர் அலங்காரத்தில் அருளிச் செய்த 72–ஆவது பாட்டு கீழ் வருமாறு:

"சேந்தனைக் கந்தனைச் செங்கோட்டுவெற்பனைச் செஞ்சுடர் வேல்
வேந்தனைச் செந்தமிழ் நூல் விரித்தோனை விளங்கு வள்ளி
காந்தனைக் கந்தக் கடம்பனைக் கார் மயில் வாகனனைச்
சாந்துணைப் போதும் மறவாதவற்கு ஒரு தாழ்வில்லையே"

திருவீங்கோய்மலையை வழிபட்ட சிவஞானப் பிள்ளையார் திருக்கொடி மாடச் செங்குன்றூரை அடைந்தார். அந்நகரில், வாழ்கின்ற மக்களும் சிவனடியார்களும், மகரதோரணம் முதலியவற்றால் நகரை அலங்கரித்து, வாத்தியங்கள் முழங்க, எதிர்கொண்டு அழைத்தனர். சினவிடையார் திருக்கோயிலுக்கு வரவேண்டினர். அங்ஙனமே, ஆளுடைய பிள்ளையார் எழுந்தருளி, நம்பர் அவர் திருமுன்பு தாழ்ந்தெழுந்து நலஞ்சிறக்க மண்ணவரும் விண்ணவரும் போற்ற இன்னிசை வண்டமிழாகிய 'வெந்த வெண்ணீறு' என்னும் இப்பதிகத்தை அருளினார். இத்திருப்பதிகத்தின் பல பாடல்கள் இத்தலத்தில் பெருமான் அர்த்தநாரீசுரராக விளங்குதலைக் குறிக்கின்றன.

## 107. THIRU-K-KODI-MAADA-CH-CHENG-KUNDOOR

### HISTORY OF THE PLACE

This sacred place is in Kongu Naadu, 9 km east of Sankagiridhurgam railway station. It can be reached by bus from Erode, Naamakkal, and Salem. Buses ply to the temple atop the hill. It is known by the names, Thiruchchengkodu, Thiruchcheng-kunroor, and Naagaachalam. The hill is called Naagagiri as it resembles a serpent, viewed from the west street.

The name of the God is Ardhanaareesuvarar and the Goddess is known by the names of Paagampiriyaal and Ardhanaareesuvari. There is a small spring at the feet of Ardhanaareesuvarar. There are separate shrines for Subramania Swaami and Vishnu, known as Aadhikesavapperumaal. The shrine of the Lord faces west and that of Murugan faces East. There are 16 sacred fords such as Biramatheerththam.

There are inscriptions of Chola, Paandiya, Naayakka and Mysore Udaiyaar kings in this temple. They note the grants made for feeding pilgrims, and of rice for Andhanars, and ghee for lamps. Some of the inscriptions give information about the shrine for Subbiramaniap Pillaiyaar, Visvanaatha Chokkalingar had the temple and gopuram for Kaasi Visuvesar built.

### INTRODUCTION TO THE HYMN

Our saint departed from Eengoimalai having duly hailed its Lord. Adoring Civa in many shrines he eventually arrived at Thiru-k-kodi-maada-ch-cheng-kundoor from where he composed the following hymn:

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 107. திருக்கொடிமாடச்செங்குன்றூர் (திருச்செங்கோடு)

## 107. THIRU-K-KODI-MAADA-CHENG-KUNDOOR (THIRU-CH-CHEN-GŌDU)

பண் : வியாழக்குறிஞ்சி
ராகம் : சௌராஷ்டிரம்

*Pann: Viyazha-k-kurinji*
*Raagam : Saurashtram*

வெந்தவெண் ணீறணிந்து விரிநூல்திகழ் மார்பினல்ல
பந்தணவும் விரலாளொரு பாகமமர்ந் தருளிக்
கொந்தண வும்பொழில்சூழ் கொடிமாடச் செங்குன் றூர்நின்ற
அந்தண னைத்தொழு வாரவல மறுப்பாரே. 1

வெந்தவெண் நீறு அணிந்து விரிநூல் திகழ் மார்பில் நல்ல
பந்து அணவும் விரலாள் ஒருபாகம் அமர்ந்துஅருளி,
கொந்து அணவும் பொழில் சூழ் கொடிமாடச்செங்குன்றூர் நின்ற
அந்தணனைத் தொழுவார் அவலம் அறுப்பாரே.

venta veN nIRu aNintu, virinUl tikaz mArpil nalla
pantu aNavum viralAL oru pAkam amarntu aruLi,
kontu aNavum pozil cUz koTimATac cegkun2RUr nin2Ra
antaNan2ait tozuvAr avalam aRuppArE.

பொருள்: சிவபெருமான் விரிக்கப் பெற்ற பூணூல் திகழ்கின்ற மார்பில் திருவெண்ணீற்றை அணிந்திருப்பவன். பந்து பொருந்தும் கைவிரல்களை உடைய உமையம்மையை தனது திருமேனியில் ஒரு பாகத்தில் அமர்ந்திருக்கும்படி அருளியவன். பூங்கொத்துக்கள் நிறைந்த

பொழில் சூழந்த கொடிமாடச் செங்குன்றூரில் எழுந்தருளி இருப்பவன். இத்தகைய இறைவனைத் தொழுபவர்கள் தங்கள் துன்பங்களை நீக்கப் பெறுவர்.

**குறிப்புரை:** பூணுநூல் திகழ்கின்ற திருமார்பில் வெண்ணீறணிந்து உமையொரு பாகமாகக் கொடிமாடச் செங்குன்றூரில் விளங்கும் இறைவனைத் தொழுவார் அவலம் அறுப்பார் என்கின்றது. அணவும் – கலக்கும். கொந்து – கொத்து.

Lord Civan wears on His splendorous body the big three-ply sacred thread. He smears His body with well-burnt holy ashes. He accommodates His consort Umaa Devi on the left half of His body frame, whose fingers sport with goodly ball. This Lord Civan is entempled in Thiru-k-kodi-maada-ch-cheng-kunroor, which is girt with thick natural vegetation having a lot of fully blossomed flower trees and plants. Those who worship this Lord Civan (Lord of Dharmic Scholars) enshrined in Thiru-k-kodi-maada-ch-cheng-kundoor will snap all their miseries.

அலைமலி தண்புனலோ டரவஞ்சடைக் கணிந்தாகம்
மலைமக ள்கூறுடை யான்மலையா ளிவாழைக்
குலைமலி தண்பொழில் சூழ்கொடி மாடச்செங்குன் றூர்நின்ற
தலைமக னைத்தொழு வார்தடுமாற் றறுப்பாரே. 2

அலை மலி தண்புனலோடு அரவம் சடைக்கு அணிந்து, ஆகம்
மலைமகள் கூறு உடையான், மலை ஆர் இள வாழைக்
குலை மலி தண்பொழில் சூழ் கொடிமாடச்செங்குன்றூர் நின்ற
தலைமகனைத் தொழுவார் தடுமாற்று அறுப்பாரே.

alai mali taNpun2alOTu aravam caTaikku aNintu, Akam
malaimakaL kURu uTaiyAn2, malai Ar iLa vAzaik
kulai mali taN pozil cUz koTi mATac cegkun2RUr nin2Ra
talaimakan2ait tozuvAr taTumARRu aRuppArE.

**பொருள்:** சிவபெருமான், அலைகள் நிறைந்த குளிர்ந்த கங்கை நதியோடு, பாம்பினையும் சடையின்கண் அணிந்திருப்பவன். தனது திருமேனியில் மலைமகளை ஒரு பாகமாகக் கொண்டிருப்பவன். மலையின்கண் வளரும் குலைகள் நிறைந்துள்ள இளவாழை மரங்களை உடைய குளிர்ந்த பொழில்கள் சூழ்ந்துள்ள கொடிமாடச் செங்குன்றூரில் எழுந்தருளி இருப்பவன். இத்தகைய தலைமகனான சிவபெருமானைத் தொழுபவர்கள் தங்கள் வாழ்க்கையின் தடுமாற்றத்தைத் தவிர்த்து விடுவர்.

**குறிப்புரை:** கங்கை, பாம்பு இவற்றைச் சடைக்கணிந்து மலைமகள் கூறுடையனாக எழுந்தருளியிருக்கின்ற செங்குன்றூர்த் தலைவனைத் தொழுவார் தடுமாற்றம் தகர்ப்பார் என்கின்றது. அரவம் – பாம்பு.

Lord Civan supports the cool river Ganges full of waves, together with a serpent in His matted hair. He accommodates His consort Umaa Devi daughter of the mountain king on the left half of His body. This Lord Civan is enshrined in Thiru-k-kodi-maada-ch-cheng-kundoor girt with groves of tender plantain trees of mountain variety having fully grown bunches. Those who worship Lord Civan, the primal god of this place will do away with their bewilderment.

பாலன நீறுபுனை திகழ்மார்பிற் பல்வளைக் கைநல்ல
ஏலமலர்க் குழலாளொரு பாகமமர்ந் தருளிக்
கோலமலர்ப் பொழில்சூழ் கொடிமாடச் செங்குன்றூர் மல்கும்
நீலநன் மாமிடற்றான் கழலேத்தல் நீதியே. 3

*பால் அன நீறு புனை திகழ் மார்பில், பல்வளைக்கை நல்ல*
*ஏலமலர்க் குழலாள் ஒருபாகம் அமர்ந்து அருளி,*
*கோல மலர்ப்பொழில் சூழ் கொடிமாடச்செங்குன்றூர் மல்கும்*
*நீலநல்மாமிடற்றான் கழல் ஏத்தல் நீதியே.*

pAl an2a nIRu pun2ai tirumArpil, palvaLaikkai nalla
Elamalark kuzalAL orupAkam amarntu aruLi,
kOla malarppozil cUz koTimATac cegkun2RUr malkum
nIlanal mAmiTaRRAn2 kazala Ettal nItiyE.

**பொருள்:** சிவபெருமான் பால்போன்ற வெள்ளிய திருநீற்றைப் புனைந்து விளங்கும் மார்பினன். பலவகை வளையல்களைக் கையில் நல்லமுறையில் அணிந்தும், மணம் கமழும் நறுமலர்களைக் கூந்தலில் சூடியும் உள்ள உமையம்மையை ஒரு பாகமாக அமர்ந்திருக்கும்படி அருளிய கோலத்தையும் உடையவன். தேவர்க்கு நன்மைகள் பல செய்த நீலகண்டன். அழகிய மலர்கள் பூத்த பொழில்கள் சூழ்ந்த கொடிமாடச் செங்குன்றூரில் எழுந்தருளி இருப்பவன். இப்பெருமானின் கழலணிந்த திருவடிகளைத் துதிப்பதே நீதியாகும்.

**குறிப்புரை:** நீறுபூசிய திருமேனியோடு மலைமகள் ஒருபாகமாக எழுந்தருளிய செங்குன்றூர் நீலகண்டன் திருவடியைத் தொழுதலே நீதி என்கின்றது. ஏலம் – மயிர்ச்சாந்து. நீலநன்மாமிடற்றான் – நீலகண்டன். நன்மிடறு என்றது தேவர்க்கு நன்மை செய்தலின்.

Lord Civan smears His shining body with holy ashes as white as milk. He accommodates His consort Umaa Devi on the left half of His body. Umaa Devi is good looking, well ornamented and has decked her hair with sweet smelling and fair flowers. With this attractive appearance Lord Civan is enshrined in Thiru-k-kodi-maada-ch-cheng-kundoor girt with groves full of delightful and pretty flowers. Virtuous deed is verily indeed to adore and offer worship at the ankleted holy feet of Lord Civan of this place whose neck is attractive and of dark blue in colour like that of sapphire gem.

வாருறுகொங் கைநல்ல மடவாள்திகழ் மார்பில்நண்ணும்
காருறுகொன் றையொடுங்கத நாகம்பூண் டருளிச்
சீருறுமந்த ணர்வாழ் கொடிமாடச் செங்குன்றூர் நின்ற
நீருறுசெஞ் சடையான்கழ லேத்தல்நீதியே. 4

வார் உறு கொங்கை நல்ல மடவாள் திகழ் மார்பில், நண்ணும்
கார் உறு கொன்றையொடும் கதநாகம் பூண்டு அருளிச்,
சீர் உறும் அந்தணர் வாழ் கொடிமாடச்செங்குன்றூர் நின்ற
நீர் உறு செஞ்சடையான் கழல் ஏத்தல் நீதியே.

vAr uRu kogkai nalla maTavAL tikaz mArpil, naNNum
kAr uRu kon2RaiyoTum katanAkam pUNTu aruLi,
cIr uRum antaNar vAz koTimATac cegkun2RUr nin2Ra
nIr uRu cenjcaTaiyAn2 kazal Ettal nItiyE.

**பொருள்:** சிவபெருமான், அழகிய கச்சணிந்த தனங்களை உடைய உமையம்மை விளங்கும் திருமார்பினன். கார்காலத்தில் மலரும் கொன்றை மலர் மாலையோடு சினம் பொருந்திய பாம்பையும் அணிகலனாகப் பூண்டுள்ளவன். கங்கையை முடியில் கொண்டுள்ள செஞ்சடையன். சிறப்புடைய சான்றோர்கள் வாழும் கொடிமாடச் செங்குன்றூரில் எழுந்தருளி இருப்பவன். இப்பெருமானின் கழலணிந்த திருவடிகளைத் துதிப்பதே நீதியாகும்.

**குறிப்புரை:** உமாதேவி விளங்குகின்ற, திருமார்பில் கொன்றை மாலையையும் பாம்பு அணியையும் பூண்டு வீற்றிருக்கும் செங்குன்றூர் நாதன் சேவடியைத் துதித்தல் நீதியாம் என்கின்றது. வார் – கச்சு. கதம் – கோபம். சீர் – புகழ்.

In the attractive and lovely frame of Lord Civan, His consort appears conspicuously beautiful, who wears a corset over her breasts. He graciously adorns His

chest with garlands made up of cassia flowers which blossom in the rainy season and shine along with a wrathful snake as His jewellery. This Lord Civan is enshrined in Thiru-k-kodi-maada-ch-cheng-kundoor where noble folks live and do dwell in large numbers. He shines by supporting the river Ganges in His matted hair. It will be a virtuous deed indeed to adore and worship the ankleted holy feet of Lord Civan of this place.

பொன் றிகழலாமை யொடுபுரி நூல்திகழ் மார்பில்நல்ல
பன்றி யின்கொம் பணிந்துபணைத் தோளியோர் பாகமாகக்
குன்ற னமாளிகை சூழ்கொடி மாடச்செங் குன்றூர்வானில்
மின்றி கழ்செஞ்சடை யான்கழலேத் தல்மெய்ப் பொருளே. 5

பொன் திகழ் ஆமையொடு, புரி நூல் திகழ் மார்பில், நல்ல
பன்றியின் கொம்பு அணிந்து, பணைத்தோளி ஓர்பாகம் ஆகக்,
குன்று அன மாளிகை சூழ் கொடிமாடச்செங்குன்றூர், வானில்
மின் திகழ் செஞ்சடையான் கழல் ஏத்தல் மெய்ப்பொருளே.

pon2 tikaz AmaiyoTu purinUl tikaz mArpil, nalla
pan2Riyin2 kompu aNintu, paNaittOLi OrpAkam Aka,
kun2Ru an2a mALikai cUz koTi mATac cegkun2RUr, vAn2il
min2tikaz cenjcaTaiyAn2 kazal Ettal meypporuLE.

**பொருள்:** சிவபெருமான் ஆமையின் ஓட்டினோடு முப்புரி நூலையும் தனது மார்பில் அணிந்துள்ளான். நல்ல பன்றியின் கொம்புகளையும் அணிந்து மூங்கில் போன்ற தோள்களை உடைய உமையம்மையை தனது திருமேனியில் ஒருபாகமாகக் கொண்டு விளங்குபவன். வானில் திகழும் மின்னல் போன்று விளங்கும் செஞ்சடையை உடையவன். குன்றுகள் போன்ற மாளிகைகள் சூழ்ந்த கொடிமாடச் செங்குன்றூரில் எழுந்தருளி இருப்பவன். இப்பெருமானின் கழலணிந்த திருவடிகளைத் துதிப்பதே மெய்ப்பொருளாகும்.

**குறிப்புரை:** ஆமையோடும் பூணூலும் விளங்கும் மார்பில், பன்றிக் கொம்பையும் அணிந்த மாதொரு பாதியனான செங்குன்றூர் நாதன் கழலேத்துதலே மெய்ப்பொருள் என்கின்றது. பொன் திகழ் ஆமை ஒடு – திருமகள் விளங்குகின்ற திருமாலாகிய ஆமையின் ஓடு. பணை – மூங்கில்.

Lord Civan adorns His chest with the shell of tortoise. This shell, once upon a time was nothing but Vishnu in his Koorma-avataar. His consort goddess Lakshmi, therefore, dwelled in the shell, which was then glittering like gold. He was also

wearing the three-ply sacred thread in His body along with the tusk of a hog. He happily accommodates His consort Umaa Devi on the left half of His body; whose shoulders resemble bamboo stem. This Lord Civan is enshrined in Thiru-k-kodi-maada-ch-cheng-kundoor where all the mansions look like hillocks. His ruddy matted hair shines like the lightning in the sky. It is verily a sound doctrine of divine knowledge and worship to adore the holy feet of Lord Civan of this place.

ஓங்கிய மூவிலைநற் சூலமொரு கையன்சென்னி
தாங்கிய கங்கையொடு மதியஞ்சடைக் கணிந்து
கோங்க ணவும்பொழில் சூழ்கொடி மாடச்செங்குன் றூர்வாய்ந்த
பாங்கன தாள்தொழு வார்வினை யாயபற்றறுமே. 6

ஓங்கிய மூஇலைநல்சூலம் ஒரு கையன், சென்னி
தாங்கிய கங்கையொடு மதியம் சடைக்கு அணிந்து
கோங்கு அணவும் பொழில் சூழ் கொடிமாடச்செங்குன்றூர் வாய்ந்த
பாங்கன தாள் தொழுவார் வினை ஆய பற்று அறுமே.

Ogkiya mUilai nal cUlam oru kaiyan2, cen2n2i
tAgkiya kagkaiyoTu matiyam caTaikku aNintu,
kOgku aNavum pozil cUz koTimATac cegkun2RUr vAynta
pAgkan2a tAL tozuvAr vin2ai Aya paRRu aRumE.

**பொருள்:** சிவபெருமான், ஆற்றல் மிக்க மூவிலை வடிவமான நல்ல சூலத்தை ஒரு கையில் ஏந்தியிருப்பவன். திருமுடியில் கங்கையைத் தாங்கியிருப்பதோடு பிறையையும் அணிந்து இருப்பவன். கோங்கு மரங்கள் நிறைந்த சோலைகளால் சூழப்பட்ட கொடிமாடச் செங்குன்றூரில் எழுந்தருளி இருப்பவன். பொருந்திய தோழனாக விளங்குபவன். இப்பெருமானின் திருவடிகளைத் தொழுபவர்கள் தங்கள் வினைப்பற்றுகளை வேரோடு அறுத்துவிடுவர்.

**குறிப்புரை:** சூலமேந்திய கையனும், கங்கையும் மதியமும் சூடியவனும் ஆகிய செங்குன்றூர் நாதன் தாள் தொழுவாரது வினைப்பற்று நீங்கும் என்கின்றது. ஓங்கிய – சிறந்த. கோங்கு அணவும் – கோங்கு மரங்கள் கலந்த. பாங்கன தாள் – தோழமை பூண்ட இறைவனுடைய தாள்கள்.

Lord Civan holds in one of His hands a very strong and sharp three leaved trident. He bedecks the crescent moon in His matted hair and supports the river Ganges also along with it. This Lord Civan is entempled in Thiru-k-kodi-maada-ch-

cheng-kundoor which is girt with natural groves full of Kōngu trees. Those who adore this friendly Civan and worship His holy feet will get rid of their karmic attachment completely from its root.

நீடலர் கொன்றை யொடுநிமிர் புன்சடைதாழ வெள்ளை
வாடலு டைதலையிற் பலிகொள்ளும் வாழ்க்கையனாய்க்
கோடல் வளம்புறவிற் கொடிமாடச் செங்குன்றூர் நின்ற
சேடன தாள்தொழு வார்வினை யாயதேயுமே. 7

*நீடு அலர்கொன்றையொடு நிமிர்புன்சடை தாழ, வெள்ளை-*
*வாடல் உடைதலையில் பலி கொள்ளும் வாழ்க்கையனாய்க்,*
*கோடல் வளம் புறவில் கொடி மாடச்செங்குன்றூர் நின்ற*
*சேடன தாள் தொழுவார் வினைஆய தேயுமே.*

nITu alarkon2RaiyoTu nimirpun2 caTai tAza, veLLai-
vATal uTai talaiyil pali koLLum vAzkkaiyan2Ay,
kOTal vaLam puRavil koTimATac cegkun2RUr nin2Ra
cETan2a tAL tozuvAr vin2ai Aya tEyumE.

***பொருள்:*** சிவபெருமான், கொத்தாக நீண்டு மலர்கின்ற கொன்றை மலர்களைத் தன் சடையில் அணிந்துள்ளவன். நிமிர்ந்து தோன்றும் சிவந்த சடைகள் தாழ்ந்து தொங்குமாறு விளங்குபவன். வெண்மையான புலால் நீங்கிய தலையோட்டில் பலி ஏற்று உண்ணும் வாழ்க்கையை உடையவன். வெண் காந்தள் மலர்ந்த புதர்களை உடைய வளமான முல்லை நிலங்களால் சூழப்பட்ட கொடிமாடச் செங்குன்றூரில் எழுந்தருளி இருப்பவன். இப்பெரியோனின் திருவடிகளைத் தொழுபவர்களின் வினைகள் தேய்ந்து ஒழியும்.

***குறிப்புரை:*** கொன்றை மாலையோடு சடைதாழ, உலர்ந்த தலையிற் பலிகொள்ளும் செங்குன்றூர் நாதன் தாள் தொழுவாரது வினைதேயும் என்கின்றது. நீடு அலர் கொன்றை – மாலையாக நீண்டு மலர்கின்ற கொன்றை. வாடல் – உலர்தல். கோடல் – செங்காந்தள். சேடன் – பெருமை உடையவன்.

Lord Civan bedecks His majestic, ruddy and hanging matted hair with cassia flowers that blossom in long rows, He pursues a mendicant's life holding a dry and white human skull as His begging bowl. This Lord Civan is entempled in Thiru-k-kodi-maada-ch-cheng-kundoor. This city is girt with rich sylvan tracts where thick bushes having fully blossomed white malabar glory lily flowers could be seen in plenty. Those

who can reach this place, adore Lord *Civan* and worship the holy feet of the glorious one, par excellence, will get their karma rubbed away.

மத்தநன் மாமலரும்மதி யும்வளர்கொன் றையுடன்துன்று
தொத்தலர் செஞ்சடைமேல் துதையவுடன்சூடிக்
கொத்தலர் தண்பொழில் சூழ்கொடி மாடச்செங்குன் றூர்மேய
தத்துவனைத் தொழுவார் தடுமாற்ற றுப்பாரே. 8

மத்தநல்மாமலரும் மதியும் வளர் கொன்றைஉடன் துன்று
தொத்து அலர் செஞ்சடைமேல்-துதைய உடன்சூடிக்,
கொத்துஅலர் தண்பொழில் சூழ் கொடிமாடச்செங்குன்றூர் மேய
தத்துவனைத் தொழுவார் தடுமாற்று அறுப்பாரே.

matta nal mAmalarum matiyum vaLar kon2Rai uTan2 tun2Ru
tottu alar cenjcaTaimEl-tutaiya uTan2 cUTi,
kottu alar taNpozil cUz koTimATac cegkun2RUr mEya
tattuvan2ait tozuvAr taTumARRu aRuppArE.

**பொருள்:** சிவபெருமான் தமது செஞ்சடைமீது நல்ல ஊமத்தமலரையும் இளமதியையும் கொத்தாக மலரும் கொன்றை மலருடன் ஒருசேர நெருங்கச் சூடியிருப்பவன். பூங்கொத்துக்கள் மலர்ந்திருக்கும் குளிர்ந்த பொழில்கள் சூழ்ந்துள்ள கொடிமாடச் செங்குன்றூரில் விரும்பி எழுந்தருளி இருப்பவன். இத்தகைய மெய்ப்பொருளான பெருமானைத் தொழுபவர்கள் தடுமாற்றங்கள் இல்லாதவர்கள் ஆவர்.

**குறிப்புரை:** ஊமத்தம் பூவும், பிறையும், கொன்றையும் செஞ்சடை மேற்சூடிய தத்துவனைத் தொழுவார் தடுமாற்றம் அறுப்பார் என்கின்றது. துன்று – நெருங்கிய தொத்து – கொத்து. துதைய – செறிய. தத்துவன் – மெய்ப்பொருள் ஆனவன்.

Lord Civan bedecks His ruddy matted hair with datura flowers and blossoming cassia flowers. Also He supports the young crescent moon along with these flowers jointly together. This Lord Civan is enshrined in Thiru-k-kodi-maada-ch-cheng-kundoor which is girt with cool groves where bunches of flowers blossom in large quantities. Those who adore and worship this Lord Civan, the Lord of all powers (தத்துவன்), will have their bewilderment cut short.

செம்பொ னின்மேனி யனாம்பிர மன்றிருமாலுந் தேடநின்ற
அம்பவ ளத்திரள்போ லொளியாய ஆதிபிரான்
கொம்ப ணவும்பொழில் சூழ்கொடி மாடச்செங் குன்றூர்மேய
நம்பன தாள்தொழு வார்வினை யாயநாசமே. 9

செம்பொனின் மேனியனாம் பிரமன் திருமாலும் தேட நின்ற
அம் பவளத்திரள் போல் ஒளிஆய ஆதிபிரான்,
கொம்பு அணவும் பொழில் சூழ் கொடிமாடச்செங்குன்றூர் மேய
நம்பன தாள் தொழுவார் வினைஆய நாசமே.

cempon2in2 mEn2iyan2 Am piraman2 tirumAlum tETa nin2Ra
am pavaLattiraL pOl oLi Aya AtipirAn2,
kompu aNavum pozil cUz koTi mATaccegkun2RUr mEya
nampan2a tAL tozuvAr vin2ai Aya nAcamE.

**பொருள்:** சிவபெருமானார், சிவந்த பொன் நிறமான பிரமனும், திருமாலும் தேடியும் காண முடியாதவாறு, பவளத் திரள் போன்ற ஒளி வடிவினனாக ஓங்கி நின்ற ஆதி பிரான் ஆவார். கொம்புகளாக நெருங்கி வளர்ந்த மரங்கள் நிறைந்த பொழில்கள் சூழ்ந்த கொடிமாடச் செங்குன்றூரில் விரும்பி எழுந்தருளி இருப்பவன். கடவுளான இப்பெருமானின் திருவடிகளைத் தொழுபவர்கள் தங்களின் வினைகள் யாவையும் நாசம் செய்து விடுவர்.

**குறிப்புரை:** அயனும் மாலும் தேடச் செம்பவளத் திரள் போல தீவடிவாய ஆதிப் பிரானது தாள் தொழுவார் வினைகள் யாவும் நாசமாம் என்கின்றது. கொம்பு அணவும் பொழில் – கொம்புகள் செறிந்த சோலை. நம்பன் – சிவன் (from the root நாம், நம்மவர், நம்மினத்தவர் . . .).

**Brahma** with a ruddy and golden hued frame as well as Thirumaal, went in quest of Lord Civan in vain. Lord Civan, the primordial god, then stood as a bright dazzling fire column like a rotund coralline column. This Lord Civan is enshrined in Thiru-k-kodi-maada-ch-cheng-kundoor which is girt with thick groves full of densely grown trees with a good number of branches. Those who adore the supremely desirable (நம்பன்) Lord Civan's holy feet, will get their karma perish totally.

போதியர் பிண்டியரென் றிவர்கள்புறங் கூறும்பொய்ந்நூல்
ஓதிய கட்டுரைகேட் டுழல்வீர்வரிக் குயில்கள்
கோதிய தண்பொழில் சூழ்கொடி மாடச்செங் குன்றூர்நின்ற
வேதிய னைத்தொழ நும்வினை யானவீடுமே. 10

போதியர் பிண்டியர் என்று இவர்கள் புறம்கூறும் பொய்ந்நூல்
ஓதிய கட்டுரை கேட்டு உழல்வீர்! வரிக்குயில்கள்
கோதிய தண்பொழில் சூழ் கொடிமாடச்செங்குன்றூர் நின்ற
வேதியனைத் தொழ, நும் வினைஆன வீடுமே.

pOtiyar piNTiyar en2Ru ivarkaL puRam kURum poynnUl
Otiya kaTTurai kETTu uzalvIr! varikkuyilkaL
kOtiya taNpozil cUz koTi mATac cegkun2RUr nin2Ra
vEtiyan2ait toza, num vin2ai An2a vITumE.

**பொருள்:** போதி மரத்தை வழிபடுவதாகக் கூறி போலி புத்தத் துறவிகள் திரிகின்றனர். அசோக மரத்தை வழிபடுவதாகக் கூறி வெளி வேஷக்காரர்களாகச் சமணத் துறவிகள் திரிகின்றனர். அவர்கள் உண்மைக்கு மாறான நூல்களில் இருந்து மேற்கோள்களைக் கூறுகின்றனர். அவைகளை உண்மை என்று நம்பி ஏமாந்து உழல்பவர்களே! இசைபாடும் குயில்கள் மகிழ்ச்சியுடன் வாழும் குளிர்ந்த பொழில்கள் சூழ்ந்த கொடிமாடச் செங்குன்றூரில் சிவபெருமான் எழுந்தருளி உள்ளார். வேதங்களை அருளிய இப்பெருமானைத் தொழுங்கள்! உங்கள் வினைகள் யாவும் அழிந்துவிடும்.

**குறிப்புரை:** புத்தர் சமணர் இவர்களுடைய புறவுரை கேட்டு உழலுகின்ற மக்களே! செங்குன்றூர் வேதியனைத் தொழ உங்கள் வினையாயின அழியும் என்கின்றது.

Oh! Ye devotees! You confuse yourselves by considering the false and slanderous words of Buddhists who worship the peepul tree and those of Samanars who worship the Ashoka tree. Lord Civan is enshrined in Thiru-k-kodi-maada-ch-cheng-kundoor. This city is surrounded by cool groves where the Indian cuckoos eat tender shoots and sing musical notes. The trees with such tender leaves expose a very attractive appearance. You go to this city and offer your worship to Lord Civan who has authored the Vedas. Your karma will disappear.

அலைமலி தண்புனல் சூழ்ந்தழகார் புகலிந்நகர் பேணும்
தலைமகனா கிநின்றதமிழ் ஞானசம்பந்தன்
கொலைமலி மூவிலையான் கொடிமாடச் செங்குன்றூரேத்தும்
நலமலிபாடல் வல்லார்வினை யானநாசமே. 11

அலை மலி தண்புனல் சூழ்ந்து அழகுஆர் புகலி(ந்)நகர் பேணும்
தலைமகன்ஆகி நின்ற தமிழ் ஞானசம்பந்தன்
கொலை மலி மூஇலையான் கொடிமாடச்செங்குன்றூர் ஏத்தும்
நலமலி பாடல் வல்லார் வினைஆன நாசமே.

alai mali taN pun2al cUzntu azaku Ar pukali(n)nakar pENum
talaimakan2 Aki nin2Ra tamiz njAn2acampantan2,
kolai mali mUilaiyAn2 koTi mATaccegkun2RUr Ettum
nalam mali pATal vallAr vin2ai An2a nAcamE.

**பொருள்:** அலைகள் மிகுந்த குளிர்ந்த நீரால் சூழப்பட்ட நகர், புகலி என்னும் அழகிய சீகாழியாகும். இந்நகரை விரும்பும் தலைமகனாக நிற்பவர் தமிழ் ஞானசம்பந்தன் ஆகும். கொல்லும் தொழிலில் வல்ல மூவிலைச் சூலத்தை ஏந்திய சிவபெருமான் எழுந்தருளியுள்ள கொடிமாடச் செங்குன்றூரைப் போற்றிப் பாடினார். இப்பதிகப் பாடல்கள் பத்தையும் பாட வல்லவர்களின் வினைகள் யாவும் நாசமாகிவிடும்.

**குறிப்புரை:** ஞானசம்பந்தப் பெருமான் செங்குன்றூர் நாதரை ஏத்திய நலமிகுந்த பாடல் வல்லார் வினைகள் நாசமாம் எனப் பயன் கூறுகின்றது. புகலி – சீகாழி. கொலைமலி மூவிலையான் – கொலைபுரியும் முத்தலைச் சூலம் ஏந்தியவன் (மூவிலைச்சூலம்).

Gnaanasambandan who is the prince of Pukali is an adept in Tamil language. With reverence he is fostered at Pukali which is girt with cool and billowy waters. He hailed Lord Civan of Thiru-k-kodi-maada-ch-cheng-kundoor and sang these good Tamil songs which will confer happiness on to the singer and the hearer. This Lord Civan wields a formidable three leaved trident. The karma of those who are well versed in these hymns will perish for sure.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*107ஆம் பதிகம் முற்றிற்று*
End of 107th Hymn

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# 108. திருப்பாதாளீச்சரம்

## திருத்தல வரலாறு:

திருப்பாதாளீச்சரம் என்ற திருத்தலம் சோழ நாட்டுக் காவிரித் தென்கரைத் தலங்களில் ஒன்றாகும். மன்னார்குடிக்கு அருகில் உள்ளது. பாமணி, பாம்பணி என வழங்கப்படுகிறது. சர்ப்பபுரம் எனவும் பெயர் உண்டு. தனஞ்சயன் என்னும் பாம்பு பூசித்து பேறு பெற்ற தலம். அம்முனிவருடைய திருவுருவம் கோயிலில் உள்ளது. இறைவன் பெயர் நாகநாதர், சர்ப்பபுரீசுவரர். இறைவியின் பெயர் அமிர்த நாயகி. தீர்த்தம் நாகதீர்த்தம்.

## கல்வெட்டு:

இத்தலத்தைப் பற்றியதாக 6 கல்வெட்டுக்கள் உள்ளன. இத்தலத்து இறைவன் திருப்பாதாளீச்சரம் உடையார். செல்வத் திருவாரூர் வாகீசப் பெருமான் வடகீழ்மடத்து முதலியார் பிள்ளையின் நிலங்கள் இக்கோயிலுக்குக் கொடுக்கப்பட்டன. இதில் ஆலால சுந்தரர் திருமடமும் குறிக்கப்படுகின்றது. இத்தலம் கற்றவேலி வளநாட்டுப் பாம்பணி கூற்றத்துப் பாமணி என இராஜராஜன் காலத்து அழைக்கப்படுகின்றது. இவையன்றி ஸ்ரீபூதிவிண்ணகர ஆழ்வார்க்கு விளக்கிற்காகவும், வழிபட வருவார்க்கு உணவிற்காகவும் பொன்னும் ஆடுகளும் வழங்கப் பெற்றன.

## பதிக வரலாறு:

பிள்ளையார் பொன்னி வளந்தரு நாடாகிய சோழ நாட்டில் திருக்களரை வழிபட்டு, பாதாளீச்சரத்தை அடைந்து, கண்டங் கறையணிந்தார் கழலைப் போற்றினார். 'மின்னியல் செஞ்சடைமேல்' என்னும் திருப்பதிகத்தை அருளிச் செய்தார்.

# 108. THIRU-P-PAATHAALEE-CH-CHARAM

## HISTORY OF THE PLACE

This sacred place, near Mannaarkudi, is to the south of river Cauvery in Chola Naadu. It has other names such as Paamani, Paambani, and Sarppapuram.

The names of the Lord are Naaganaathar and Sarppapureesuvarar and those of the Goddess, Amirthanaayaki. The sacred ford is Naaga Theerththam.

A serpent sage named Dhananjchayan offered worship here and attained salvation. The sage's image is installed in the temple.

**INTRODUCTION TO THE HYMN**

Having adored Civa at Thiru-k-kalar, our saint arrived at Thiru-p-paathaalee-ch-charam and sang the following hymn:

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 108. திருப்பாதாளீச்சரம் 108. THIRU-P-PAATHAALEE-CH-CHARAM

பண் : வியாழக்குறிஞ்சி
ராகம் : சௌராஷ்டிரம்

*Pann: Viyazha-k-kurinji*
*Raagam : Saurashtram*

மின்னியல் செஞ்சடைமேல் விளங்கும்மதி மத்தமொடு நல்ல
பொன்னியல் கொன்றையினான் புனல்சூடிப்பொற் பமரும்
அன்னமன நடையாளொரு பாகத்தமர்ந் தருளிநாளும்
பன்னியபாட லினானுறை கோயில் பாதாளே. 1

மின் இயல் செஞ்சடைமேல் விளங்கும் மதி மத்தமொடு நல்ல
பொன் இயல் கொன்றையினான்; புனல்சூடிப்; பொற்பு அமரும்
அன்னம் அன நடையாள் ஒருபாகத்து அமர்ந்து அருளி; நாளும்
பன்னிய பாடலினான்; உறை கோயில் - பாதாளே.

min2 iyal cenjcaTaimEl viLagkum mati mattamoTu nalla
pon2 iyal kon2Raiyin2An2; pun2al cUTi; poRpu amarum
an2n2am an2a naTaiyAL oru pAkattu amarntu aruLi; nALum
pan2n2iya pATalin2An2; uRai kOyil-pAtALE.

பொருள்: சிவபெருமான் தனது மின்னல் போன்ற செஞ்சடைமேல் விளங்கும் பிறைமதியையும் ஊமத்தம் மலர் மற்றும் பொன் போன்ற நிறமுடைய கொன்றை மலரையும் அணிந்திருப்பவன். கங்கை நதியைச் சூடியிருப்பவன். அழகுடைய அன்னத்தைப் போன்ற நடையை உடைய உமையம்மையை தனது உடம்பில் ஒரு பாகத்தில் அமர்ந்திருக்க அருளியவன். நாள்தோறும் வேத கீதங்களைப் பாடியவனாய் இப்பெருமான் உறைந்திருக்கும் கோயில் திருப்பாதாளீச்சரம் ஆகும்.

**குறிப்புரை:** இப்பதிகம் முழுவதும் செஞ்சடைமேல், *பிறை, ஊமத்தம், கொன்றை இவற்றை அணிந்தவனும்,* கங்கை அணிந்து உமையை ஒருபாகத்தில் இருந்தருளச் செய்தவனும் ஆகிய இறைவன் உறைகோயில் திருப்பாதாளீச்சரம் என்கின்றது. ஒவ்வொரு பாடலிலும் தலத்தின் திருப்பெயருக்கு ஏற்பப் பாம்பணிந்தமை பேசப்படுதல் காண்க. விளங்கும் மதி – இறைவன் திருமுடிமேல் இருத்தலின் விளக்கம் பெற்ற பிறை. 'அன்னம் அனநடையாள்' அன்ன என்பது அன எனல் தொகுத்தல் விகாரம்.

Lord Civan supports the crescent moon in His matted hair which dazzles like lightning. He wears datura flowers as well as the golden coloured cassia flowers in His head. He also accommodates the river Ganges in His head along with the above. His consort Umaa Devi who walks as majestically as the swan conspicuously shines in the left half of His body. Singing the Vedas daily, He stays enshrined at the temple in Thiru-p-paathaalee-ch-charam.

நீடலர் கொன்றையொடு நிரம்பாமதி சூடிவெள்ளைத்
தோடமர் காதில்நல்ல குழையான்சுடு நீற்றான்
ஆடரவம் பெருகஅன லேந்திக்கைவீசி வேதம் 2
பாடலி னாலினியானு றைகோயில் பாதாளே.

நீடு அலர் கொன்றையொடு நிரம்பா மதி சூடி; வெள்ளைத் -
தோடு அமர் காதில் நல்ல குழையான்; சுடுநீற்றான்;
ஆடுஅரவம் பெருக அனல் ஏந்திக் கை வீசி, வேதம்
பாடலினால் இனியான் உறை கோயில் - பாதாளே.

nITu alar kon2RaiyoTu nirampA mati cUTi; veLLait-
tOTu amar kAtil nalla kuzaiyAn2; cuTu nIRRAn2;
ATu aravam peruka an2al Entik kai vIci, vEtam
pATalin2Al in2iyAn2; uRai kOyil--pAtALE.

**பொருள்:** சிவபெருமான் தனது திருமுடியில் கொத்தாக நீண்டு மலர்ந்துள்ள கொன்றை மலர்களோடு பிறைமதியையும் சூடி இருப்பவன். ஒரு காதில் வெண்மையான தோட்டையும் மறுகாதில் நல்ல குழையையும் அணிந்திருப்பவனாக விளங்குபவன். சுடப்பட்ட திருநீற்றைப் பூசியிருப்பவன். ஆடும் பாம்பை அணிகலனாக அணிந்து அனல் ஏந்திய கையை வீசிக் கொண்டு இருப்பவனாக விளங்குபவன். வேதப் பாடல்களைப் பாடுதலில் இனியனாய் விளங்கும் இப்பெருமான் உறைந்திருக்கும் கோயில் பாதாளீச்சரம் ஆகும்.

**குறிப்புரை:** நிரம்பா மதி – குறைப் பிறை. வெள்ளைத்தோடு – முத்துத் தோடு. குழை – காதணியாகிய குண்டலம்.

Lord Civan wears fully blossomed long and fascinating cassia flowers in His matted hair. He supports the crescent moon in His head. He shines majestically by wearing an ola roll in His left ear and a round ear ring in His right ear. He puts on His body, the dancing snake as His ornament which conspicuously shines forth. He swings one of His hands in which he holds fire and sweetly sings the Vedic hymns. This Lord Civan is enshrined at the temple in Thiru-p-paathaalee-ch-charam.

நாகமும் வான்மதியுந் நலமல்கு செஞ்சடை யான்சாமம்
போகநல் வில்வரையாற் புரமூன்றெரித் துகந்தான்
தோகை நன்மாமயில் போல்வளர்சாயல் தூமொழியைக் கூடப்
பாகமும் வைத்துகந்தானு றைகோயில் பாதாளே. 3

நாகமும் வான்மதியும் நலம் மல்கு செஞ்சடையான், சாமம்
போக நல் வில்வரையால் புரம் மூன்று எரித்து உகந்தான்,
தோகை நல்மாமயில் போல் வளர் சாயல் - தூமொழியைக் கூடப்
பாகமும் வைத்து உகந்தான் உறை கோயில் -. பாதாளே.

nAkamum vAn2matiyum nalam malku cenjcaTaiyAn2, cAmam
pOka nal vilvaraiyAl puram mUn2Ru erittu ukantAn2,
tOkai nal mAmayil pOl vaLar cAyal-tUmoziyaik kUTap
pAkamum vaittu ukantAn2, uRai kOyil-pAtALE.

**பொருள்:** சிவபெருமான் நாகப்பாம்பையும், வானில் விளங்கும் மதியையும் தனது அழகுமிக்க செஞ்சடையில் சூடியிருப்பவன். உரிய காலம் கழிந்தவுடன் நல்ல மேருமலையின் வில்லினால் முப்புரங்களை எரித்து மகிழ்ந்தவன். நல்ல ஆண் மயில்மீது வளர்கின்ற அழகிய தோகையைப் போன்ற மென்மையும், தூய மொழி பேசும் உமையம்மையை தன்னோடு உடனாக இடப்பாகத்தில் வைத்து மகிழ்ந்திருப்பவன். இந்தச் சிவபெருமான் உறையும் கோயில் பாதாளீச்சரம் ஆகும்.

**குறிப்புரை:** வான்மதி – வானிலுள்ள பிறை. சாமம் போக – உரிய காலங்கழிய. தோகை மா மயில் – ஆண் மயில்.

Lord Civan holds a serpent and the crescent moon which shines in the sky in His good looking ruddy matted hair. After waiting for some time till the arrival of the ordained hour, He by using the strong mountain Meru as His bow burnt down the three citadels of the Asuraas. He happily concorporates His consort Umaa Devi on the left half of His body, who appears as beautiful as the good looking male pea fowl which has a crested head and a large fan shaped attractive plumage. She always speaks pure divine words. This Lord Civan, gracefully is enshrined in Thiru-p-paathaalee-ch-charam.

அங்கமு நான்மறையு மருள்செய் தழகார்ந்த அஞ்சொல்
மங்கை யோர்கூறு டையான்மறை யோனுறை கோயில்
செங்க யல்நின்றுகளுஞ் செறுவில்திகழ் கின்றசோதிப்
பங்கய நின்றலரும் வயல்சூழ்ந்த பாதாளே. 4

அங்கமும் நால்மறையும் அருள் செய்து, அழகு ஆர்ந்த அம் சொல்
மங்கை ஓர் கூறு உடையான், மறையோன் உறை கோயில் -
செங்கயல் நின்று உகளும் செறுவில் - திகழ்கின்ற சோதிப்
பங்கயம் நின்ற அலரும் வயல் சூழ்ந்த பாதாளே.

agkamum nAlmaRaiyum aruLceytu, azaku Arnta am col
magkai Or kURu uTaiyAn2, maRaiyOn2, uRai kOyil--
cegkayal nin2Ru ukaLum ceRuvil-tikazkin2Ra cOtip
pagkayam nin2Ru alarum vayal cUznta pAtALE.

**பொருள்:** சிவபெருமான் நான்கு வேதங்களையும் ஆறு அங்கங்களையும் அருளிச் செய்தவன். அழகிய இனிய சொற்களைப் பேசும் உமையம்மையை ஒரு பாகமாக உடையவன். வேதங்களைப் பாடி மகிழ்பவனுமாகிய பெருமான் உறையும் கோயிலானது செங்கயல் மீன்கள் புரளும் வயல்களில் விளங்கும் ஒளியினால் தாமரை மலர்கள் மலருகின்ற வயல்கள் சூழ்ந்த பாதாளீச்சரம் ஆகும்.

**குறிப்புரை:** செங்கயல்மீன்கள் புரளும் வயலில் தாமரை மலரும் பாதாளம் என்கின்றது. செறு – வயல்.

Lord Civan authored the four Vedas and the six subsidiaries (Angaas). He happily accommodates on the left half of His body, His consort, whose speech is divinely foremost. He enjoys singing the Vedas. This Lord Civan is entempled in

**குறிப்புரை:** நிரம்பா மதி – குறைப் பிறை. வெள்ளைத்தோடு – முத்துத் தோடு. குழை – காதணியாகிய குண்டலம்.

Lord Civan wears fully blossomed long and fascinating cassia flowers in His matted hair. He supports the crescent moon in His head. He shines majestically by wearing an ola roll in His left ear and a round ear ring in His right ear. He puts on His body, the dancing snake as His ornament which conspicuously shines forth. He swings one of His hands in which he holds fire and sweetly sings the Vedic hymns. This Lord Civan is enshrined at the temple in Thiru-p-paathaalee-ch-charam.

நாகமும் வான்மதியுந் நலமல்கு செஞ்சடை யான்சாமம்
போகநல் வில்வரையாற் புரமூன்றெரித் துகந்தான்
தோகை நன்மாமயில் போல்வளர்சாயல் தூமொழியைக் கூடப்
பாகமும் வைத்துகந்தானு றைகோயில் பாதாளே. 3

நாகமும் வான்மதியும் நலம் மல்கு செஞ்சடையான், சாமம்
போக நல் வில்வரையால் புரம் மூன்று எரித்து உகந்தான்,
தோகை நல்மாமயில் போல் வளர் சாயல் - தூமொழியைக் கூடப்
பாகமும் வைத்து உகந்தான் உறை கோயில் -. பாதாளே.

nAkamum vAn2matiyum nalam malku cenjcaTaiyAn2, cAmam
pOka nal vilvaraiyAl puram mUn2Ru erittu ukantAn2,
tOkai nal mAmayil pOl vaLar cAyal-tUmoziyaik kUTap
pAkamum vaittu ukantAn2, uRai kOyil-pAtALE.

**பொருள்:** சிவபெருமான் நாகப்பாம்பையும், வானில் விளங்கும் மதியையும் தனது அழகுமிக்க செஞ்சடையில் சூடியிருப்பவன். உரிய காலம் கழிந்தவுடன் நல்ல மேருமலையின் வில்லினால் முப்புரங்களை எரித்து மகிழ்ந்தவன். நல்ல ஆண் மயில்மீது வளர்கின்ற அழகிய தோகையைப் போன்ற மென்மையும், தூய மொழி பேசும் உமையம்மையை தன்னோடு உடனாக இடப்பாகத்தில் வைத்து மகிழ்ந்திருப்பவன். இந்தச் சிவபெருமான் உறையும் கோயில் பாதாளீச்சரம் ஆகும்.

**குறிப்புரை:** வான்மதி – வானிலுள்ள பிறை. சாமம் போக – உரிய காலங்கழிய. தோகை மா மயில் – ஆண் மயில்.

Lord Civan holds a serpent and the crescent moon which shines in the sky in His good looking ruddy matted hair. After waiting for some time till the arrival of the ordained hour, He by using the strong mountain Meru as His bow burnt down the three citadels of the Asuraas. He happily concorporates His consort Umaa Devi on the left half of His body, who appears as beautiful as the good looking male pea fowl which has a crested head and a large fan shaped attractive plumage. She always speaks pure divine words. This Lord Civan, gracefully is enshrined in Thiru-p-paathaalee-ch-charam.

அங்கமு நான்மறையு மருள்செய் தழகார்ந்த அஞ்சொல்
மங்கை யோர்கூறு டையான்மறை யோனுறை கோயில்
செங்க யல்நின்றுகளுஞ் செறுவில்திகழ் கின்றசோதிப்
பங்கய நின்றலரும் வயல்சூழ்ந்த பாதாளே. 4

அங்கமும் நால்மறையும் அருள் செய்து, அழகு ஆர்ந்த அம் சொல்
மங்கை ஓர் கூறு உடையான், மறையோன் உறை கோயில் -
செங்கயல் நின்று உகளும் செறுவில் - திகழ்கின்ற சோதிப்
பங்கயம் நின்ற அலரும் வயல் சூழ்ந்த பாதாளே.

agkamum nAlmaRaiyum aruLceytu, azaku Arnta am col
magkai Or kURu uTaiyAn2, maRaiyOn2, uRai kOyil--
cegkayal nin2Ru ukaLum ceRuvil-tikazkin2Ra cOtip
pagkayam nin2Ru alarum vayal cUznta pAtALE.

**பொருள்:** சிவபெருமான் நான்கு வேதங்களையும் ஆறு அங்கங்களையும் அருளிச் செய்தவன். அழகிய இனிய சொற்களைப் பேசும் உமையம்மையை ஒரு பாகமாக உடையவன். வேதங்களைப் பாடி மகிழ்பவனுமாகிய பெருமான் உறையும் கோயிலானது செங்கயல் மீன்கள் புரளும் வயல்களில் விளங்கும் ஒளியினால் தாமரை மலர்கள் மலருகின்ற வயல்கள் சூழ்ந்த பாதாளீச்சரம் ஆகும்.

**குறிப்புரை:** செங்கயல்மீன்கள் புரளும் வயலில் தாமரை மலரும் பாதாளம் என்கின்றது. செறு – வயல்.

Lord Civan authored the four Vedas and the six subsidiaries (Angaas). He happily accommodates on the left half of His body, His consort, whose speech is divinely foremost. He enjoys singing the Vedas. This Lord Civan is entempled in

Thiru-p-paathaalee-ch-charam, where the red carp fishes roll in large numbers in the fields creating brightness, by which the lotus flowers blossom.

பேய்பலவுந் நிலவப்பெருங் காடரங்காக வுன்னிநின்று
தீயொடு மான்மறியும் மழுவுந்தி கழ்வித்துத்
தேய்பிறை யும்மரவும் பொலிகொன் றைச்சடைதன் மேற்சேரப்
பாய்புன லும்முடையா னுறைகோயில் பாதாளே. 5

பேய்பலவும் நிலவப் பெருங்காடு அரங்குஆக உன்னி நின்று,
தீயொடு மான்மறியும் மழுவும் திகழ்வித்துத்,
தேய்பிறையும்(ம்) அரவும் பொலி கொன்றைச் சடைதன்மேல் சேரப்,
பாய்புனலும்(ம்) உடையான் உறை கோயில் - பாதாளே.

pEy palavum nilavap perugkATu aragku Aka un2n2i nin2Ru,
tIyoTu mAn2maRiyum mazuvum tikazvittu,
tEypiRaiyum(m) aravum poli kon2Raic caTaitan2 mEl cEra,
pAy pun2alum(m) uTaiyAn2 uRai kOyil--pAtALE.

**பொருள்:** சிவபெருமான், பலவிதமான பேய்கள் நிறைந்துள்ள பெரிய சுடுகாட்டைத் தனது நாடக மேடையாக எண்ணி நடனமாடுபவன். கைகளில் தீயையும், மான் மற்றும் மழுவையும் வைத்திருப்பவனாக விளங்குபவன். தன் சடைமேல் தேய்ந்த பிறையும், பாம்பும், செழிப்புள்ள கொன்றை மலர்களோடு பாய்ந்துவரும் கங்கையையும் உடையவன். இச்சிவபெருமான் உறையும் கோயில் பாதாளீச்சரம் ஆகும்.

**குறிப்புரை:** பேய்கள் உடன்விளங்க, இடுகாட்டை நாடகமேடையாக எண்ணி, மான், மழு முதலியன தாங்கி ஆடும் பெருமான் உறைவிடம் பாதாளீச்சரம் என்கின்றது. உன்னி நின்று, திகழ்வித்து, சேர உடையான் உறைகோயில் பாதாள் எனக்கூட்டுக.

Lord Civan looks upon the crematory as His theatre and dances surrounded by several ghouls. He holds fire, the young deer and the battle-axe in His hands. He keeps the snake and the waning crescent moon and cassia flowers in His matted hair, where the gushing river Ganges also flows. With all these, Lord Civan is enshrined at the temple in Thiru-p-paathaalee-ch-charam.

கண்ணமா் நெற்றியினான் கமழ்கொன்றைச் சடைதன்மேல் நின்றும்
விண்ணி யல்மாமதியும் முடன்வைத் தவன்விரும்பும்
பெண்ண மா்மேனியினான் பெருங்காடரங் காகஆடும்
பண்ணியல் பாடலினா னுறைகோயில் பாதாளே. 6

*கண் அமா் நெற்றியினான், கமழ்கொன்றைச் சடைதன்மேல் நின்றும்*
*விண் இயல் மா மதியும் உடன் வைத்தவன், விரும்பும்*
*பெண் அமா் மேனியினான், பெருங்காடு அரங்குஆக ஆடும்*
*பண் இயல் பாடலினான் உறை கோயில் - பாதாளே.*

kaN amar neRRiyin2An2, kamaz kon2Raic caTaitan2mEl nan2Rum
viN iyal mA matiyum uTan2 vaittavan2, virumpum
peN amar mEn2iyin2An2, perugkATu aragku Aka ATum
paN iyal pATalin2An2, uRai kOyil--pAtALE.

***பொருள்:*** சிவபெருமான் மூன்றாவது ஒரு கண் பொருந்திய நெற்றியை உடையவன். சடைமுடிமீது மணம் கமழும் கொன்றை மலரோடு, விண்ணில் உலாவும் சிறந்த பிறைமதியையும் உடனாக வைத்திருப்பவன். தன்னால் விரும்பப் பெற்ற உமையம்மை பொருந்திய திருமேனியன். பெரிய சுடுகாட்டை அரங்காகக் கொண்டவன். பண் இசையோடு கூடிய பாடல்களுடன் ஆடுபவனுமாகிய சிவபிரான் உறைந்திருக்கும் கோயில் பாதாளீச்சரம் ஆகும்.

***குறிப்புரை:*** கண்ணமா்நெற்றி – கண்ணோடு விளங்குகின்ற நெற்றியை உடையவன். நன்று விண் இயல் மாமதி – நன்றாக விண்ணில் இயங்குகின்ற பெரிய பிறைச்சந்திரன்.

Lord Civan has a third eye in His forehead. He wears the fragrant smelling cassia flowers in His matted hair, where He supports the crescent moon also which crawls in the sky gracefully. He joyfully incorporates on the left half of His attractive body, His consort whom He adores very much. He considers the crematory as His theatre and dances singing songs to coordinate with the harmonious musical mode (பண்) of the ghols. This Lord Civan is enshrined at the temple in Thiru-p-paathaalee-ch-charam.

விண்டலர் மத்தமொடு மிளிரும்மிள நாகம்வன்னி திகழ்
வண்டலர் கொன்றைநகு மதிபுல்குவார் சடையான்
விண்டவர் தம்புரமூன் றெரிசெய்துரை வேதநான் கும்மவை
பண்டிசை பாடலினா னுறைகோயில் பாதாளே. 7

விண்டு அலர் மத்தமொடு மிளிரும்(ம்) இள நாகம், வன்னி, திகழ்
வண்டு அலர் கொன்றை, நகு மதி, புல்கு வார்சடையான்;
விண்டவர்தம் புரம்மூன்று எரிசெய்து உரை வேதம் நான்கும்(ம்) அவை
பண்டு இசைபாடலினான் உறை கோயில் - பாதாளே.

viNTu alar mattamoTu miLirum(m) iLa nAkam, van2n2i, tikaz
vaNTu alar kon2Rai, naku mati, pulku vArcaTaiyAn2;
viNTavar tam puram mUn2Ru eri ceytu, urai vEtam nAn2kum(m) avai
paNTu icaipATalin2An2; uRai kOyil--pAtALE.

**பொருள்:** சிவபெருமான் தனது நீண்ட சடையில் தளை அவிழ்ந்து மலர்ந்த ஊமத்த மலரோடு, புரண்டு கொண்டிருக்கும் இள நாகம், வன்னி இலை, வண்டுகளால் மலர்த்தப் பெறும் கொன்றை, பிறைமதி ஆகியவை பொருந்தியிருப்பவனாக விளங்குபவன். பகைவரான அசுரர்களின் முப்புரங்களையும் எரித்தவன். நான்கு வேதங்களையும் உரைத்தவன். அவற்றைப் பண்டைய இசைமரபோடு பாடி மகிழ்பவனுமான சிவபிரான் உறைந்திருக்கும் கோயில் பாதாளீச்சரம் ஆகும்.

**குறிப்புரை:** விண்டு – முறுக்கவிழ்ந்து. வன்னி – வன்னியிலை. நகும் – மலரும். விண்டவர் – பகைவர்.

Lord Civan keeps the young dazzling snake which rolls over the well blossomed datura flowers that adorn in His long matted hair. He wears therein the leaves of Indian mesquit trees also and the cassia flowers blooming bees. He supports the crescent moon also in His hair. He burnt into ashes the three citadels of the haughty Asuraas. He not only professed the four Vedas, but also feels happy in singing them according to the ancient harmonious mode. This Lord Civan is enshrined at the temple in Thiru-p-paathaalee-ch-charam.

மல்கியநுண் ணிடையாளு மைநங்கைம றுகஅன்று கையால்
தொல்லை மலையெடுத்த அரக்கன்றலை தோள்நெரித்தான்
கொல்லை விடையுகந் தான்குளிர் திங்கள்சடைக் கணிந்தோன்
பல்லிசை பாடலினா னுறைகோயில் பாதாளே. 8

*மல்கிய நுண் இடையாள் உமைநங்கை மறுக, அன்று, கையால்-*
*தொல்லைமலை எடுத்த அரக்கன் தலைதோள் நெரித்தான்;*
*கொல்லை விடை உகந்தான்; குளிர் திங்கள் சடைக்கு அணிந்தோன்;*
*பல்இசை பாடலினான் உறை கோயில் - பாதாளே.*

malkiya nuN iTaiyAL umai nagkai maRuka, an2Ru, kaiyAl-
tollaimalai eTutta arakkan2 talaitOL nerittAn2;
kollai viTai ukantAn2; kuLirtigkaL caTaikku aNintOn2;
pal icai pATalin2An2; uRai kOyil--pAtALE.

**பொருள்:** நெருங்கியதும் நுண்மையானதுமான இடையினை உடைய உமையம்மை அஞ்சும்படி, பழமையான கயிலை மலையை முன்னொரு காலத்தில் இராவணன் பெயர்க்க முயற்சித்தான். அப்போது, சிவபெருமான் அவனுடைய தலைக்ளையும் தோள்களையும் நெரித்தவர். இவர் முல்லை நிலத்து தெய்வமான திருமாலாகிய இடபத்தை விரும்புபவர். குளிர்ந்த திங்களைச் சடையின்கண் அணிந்திருப்பவர். பல்வகையான இசைப்பாடல்களைப் பாடுபவனுமாகிய இச்சிவபெருமான் உறைந்திருக்கும் கோயில் திருப்பாதாளீச்சரம் ஆகும்.

**குறிப்புரை:** இராவணன் தோள் நெரித்தது; இறைவற்கு எழுந்த சீற்றம் காரணம் அன்று; உமாதேவி நடுங்க, அந்நடுக்கந்தீரவே விரலூன்றி மலையை நிலைக்கச் செய்தார். அது, இராவணற்கு இன்னலாயிற்று என்ற கருத்து ஓர்க. கொல்லை விடை – முல்லை நிலத்து இடபம்.

King Raavanan tried by his hand to lift the ancient mount Kailash and keep it aside. The mountain, the abode of Lord Civan started shaking. Umaa Devi, who has a compact but slender waist felt fear at the shaking of her mountain. To alleviate her fear Lord Civan pressed the mountain by His toe. Lo! Raavanaa's ten heads and twenty shoulders got crushed under the mountain. Lord Civan was once happy to take as his vehicle, Thirumaal, god of woodland areas who took the form of a bull and volunteered to transport Him. He supports the cool crescent moon in His head. He likes to sing different kinds of musical notes in their respective harmonious modes. This Lord Civan is enshrined at the temple in Thiru-p-paathaalee-ch-charam.

தாமரை மேலயனும் மரியுந்தமதாள் வினையால்தேடிக்
காமனை வீடுவித்தான் கழல்காண் பிலாராயகன்றார்
பூமருவுங் குழலாளுமை நங்கைபொருந் தியிட்டநல்ல
பாமருவுங் குணத்தா னுறைகோயில் பாதாளே. 9

*தாமரை மேல் அயனும்(ம்) அரியும் தமது ஆள்வினையால்-தேடிக்,*
*காமனை வீடுவித்தான் கழல் காண்பு இலாராய் அகன்றார்;*
*பூ மருவும் குழலாள் உமைநங்கை பொருந்தியிட்ட நல்ல*
*பா மருவும் குணத்தான் உறை கோயில் - பாதாளே.*

tAmaraimEl ayan2um(m) ariyum tamatu ALvin2aiyAl-tETi,
kAman2ai vITuvittAn2 kazal kANpu ilarAy akan2RAr;
pU maruvum kuzalAL umainagkai poruntiyiTTa nalla
pA maruvum kuNattAn2 uRai kOyil--pAtALE.

***பொருள்:*** மன்மதனை எரித்த சிவபெருமானின் திருவடிகளைத் தமது முயற்சியால் தேடியும் காண இயலாதவர்களைத் தாமரை மலர்மேல் உறையும் அயனும் திருமாலும் அகன்று விட்டனர். இப்பெருமான் மலர்கள் சூடிய கூந்தலை உடைய உமை நங்கையை தனது உடலில் ஒரு பாகமாகப் பொருந்தி இருப்பவர். வேதப் பாடல்களைப் பாடும் நல்ல குணத்தினனும் ஆகிய இப்பெருமான் உறைந்திருக்கும் கோயில் திருப்பாதாளீச்சரம் ஆகும்.

***குறிப்புரை:*** ஆள்வினையால் – முயற்சியால். செயலற்ற தன்மையில் சிந்திக்க வேண்டிய சிவத்தைச் செய்வினையாற் காணமுற்பட்ட அறிவீனத்தை விளக்கியவாறு. காமனை வீடுவித்தான் கழல் – காமனை எரித்த பெருமான் திருவடி. காமனும் தருக்கி வருவானாயினும் அவன் காண இருந்தமையும் அயனும் மாலும் காணாதிருந்தமைக்கும் ஏது ஒன்று உண்டு. இவர்கள் தாம் பெரியர் என்னுந் தருக்கால் முனைத்து வந்தவர்கள். காமன் தேவ காரியம் என்றும், இந்திரன் சாபத்தால் இறப்பதைக் காட்டிலும், சிவன் கோபத்தால் இறப்பதுமேல் என்றும் வந்தவன்; ஆதலால் இவனுக்குக் கட்புலனானார் என்பது சிந்தனைக்குரியது.

Brahma who is seated in the Lotus flower as well Thirumaal - both had egoistic feelings that they are superior to each other, and also to Lord Civan. With this feeling they personally exerted themselves hard to reach and have darshan of the divine face of Lord Civan and His holy feet. They both failed in their attempt to reach the holy feet and head of Lord Civan who once upon a time burnt Kaaman (*காமன் - மன்மதன்*), the god of love for his misdeed. Lord Civan accommodates His consort Umaa Devi on the

left half of His body, His consort who wears fresh and fragrant flowers in her head. Lord Civan (the most virtuous one) loves and sings Vedic hymns. This Lord Civan is enshrined at the temple in Thiru-p-paathaalee-ch-charam (It is implied that those who reach this temple with sincere devotion could have darshan of His holy feet).

காலை யிலுண்பவருஞ் சமண்கை யருங்கட்டு ரைவிட்டன்
றாலவிட நுகர்ந்தான வன்றன்னடி யேபரவி
மாலை யில்வண்டி னங்கள்மது வுண்டிசை முரலவாய்த்த
பாலை யாழ்ப்பாட் டுகந்தானுறை கோயில் பாதாளே. 10

*காலையில் உண்பவரும் சமண்கையரும் கட்டுரை விட்டு, அன்று*
*ஆலவிடம் நுகர்ந்தான் அவன்தன் அடியே பரவி,*
*மாலையில் வண்டுஇனங்கள் மது உண்டு இசை முரல, வாய்த்த*
*பாலையாழ்ப் பாட்டு உகந்தான் உறை கோயில் - பாதாளே.*

kAlaiyil uNpavarum camaNkaiyarum kaTTurai viTTu, an2Ru
AlaviTam nukarntAn2 avan2tan2 aTiyE paravi,
mAlaiyil vaNTu in2agkaL matu uNTu icai murala, vAytta
pAlaiyAzp pATTu ukantAn2 uRai kOyil--pAtALE.

**பொருள்:** காலையில் சோறுண்ணும் புத்தர்களும் சமணர்களும் கூறும் பொய்யுரைகளைக் கேட்காதீர்கள். ஆலகால விடமுண்டு அமரர்களைக் காத்த சிவபெருமானின் திருவடிகளைப் போற்றுங்கள். மாலைக் காலத்தில் வண்டினங்கள் தேனை உண்டு இசை பாடுகின்றன. இந்த இசையானது பாலைப் பண்ணில் பாடும் யாழ் இசை போல் ஒலிக்கின்றன. இந்த இசையில் மகிழ்ந்திருப்பவனுமான இப்பெருமான் உறைந்திருக்கும் கோயில் திருப்பாதாளீச்சரம் ஆகும்.

**குறிப்புரை:** பாலை யாழ்ப் பாட்டு உகந்தான் – பாலைப் பண்ணில் விருப்புடையான்.

Oh! Ye devotees! lgnore the tidings which appear as true, but are really utterly false messages, tidings, put out by the Buddhists (who eat in the morning hours) and by the base Samanars. Adore the holy feet of Lord Civan who saved the celestials by positioning the poison that came out of the sea known as 'Aala Kaala' poison (*ஆல கால விஷம்*) in His throat. He enjoys hearing the divine music sung in the lute in the particular mode called 'Paalai-p-pann' (*பாலைப் பண்*). This music correlates with the humming sound of the bees that buz around after they suck the honey from the flowers

during the evening hours. This Lord Civan is enshrined at the temple of Thiru-p-paathaalee-ch-charam.

பன்மலர் வைகுபொழில் புடைசூழ்ந்த பாதாளைச்சேரப்
பொன்னி யன்மாடமல்கு புகலிந்நகர் மன்னன்
தன்னொ ளிமிக்குயர்ந்த தமிழ்ஞான சம்பந்தன் சொன்ன
இன்னிசை பத்தும்வல்லா ரெழில்வானத் திருப்பாரே. 11

பல்மலர் வைகு பொழில் புடை சூழ்ந்த பாதாளைச் சேரப்,
பொன்இயல் மாடம் மல்கு புகலி(ந்) நகர் மன்னன் -
தன் ஒளி மிக்கு உயர்ந்த தமிழ் ஞானசம்பந்தன் - சொன்ன
இன்இசைபத்தும் வல்லார் எழில் வானத்து இருப்பாரே.

palmalar vaiku pozil puTai cUznta pAtALaic cEra,
pon2 iyal mATam malku pukali(n) nakar man2n2an2--
tan2 oLi mikku uyarnta tamiz njAn2acampantan2--con2n2a
in2 icaipattum vallAr ezil vAn2attu iruppArE.

**பொருள்:** பொன்னால் இயன்ற மாடவீடுகள் நிறைந்த புகலி நகர் மன்னனும், தனது புகழ் உலகு எங்கும் பரவி உயர்ந்து விளங்கும் புதல்வனுமாகியவன் தமிழ் ஞானசம்பந்தன். பலவகையான மலர்கள் பூத்துள்ள பொழில்களால் சூழப்பட்ட திருப்பாதாளீச்சரத்தை நாம் சென்று தரிசிக்குமாறு இவர் இப்பதிகத்தைப் பாடினார். இன்னிசையோடு கூடிய இப்பதிகப் பாடல்கள் பத்தையும் பாட வல்லவர்கள் வானுலகத்தின்கண் இருப்பார்கள்.

**குறிப்புரை:** இப்பதிகம் வல்லார் தேவராய் வானத்திருப்பார் என்கின்றது.

Gnaanasambandan is the king of Pukali where mansions built out of gold are in plenty. He is well versed in the classical Tamil language and his fame pervades the whole world. He sang this hymn full of sweet music on Lord Civan of Thiru-p-paathaalee-ch-charam, which is girt with groves full of different kinds of flowers. Those who are well versed in these sweet hymns will eventually abide in the celestial world. Ye! Devotees, go over to this place and offer worship to Lord Civan enshrined here.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*108ஆம் பதிகம் முற்றிற்று*
End of 108th Hymn

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# 109. திருச் சிரபுரம்

## திருத்தல வரலாறு:

முதல் திருப்பதிகம் காண்க.

# 109. THIRU-CH-CHIRA-PURAM

## HISTORY OF THE PLACE

See First Hymn.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 109. திருச்சிரபுரம்

## 109. THIRU-CH-CHIRA-PURAM

பண் : வியாழக்குறிஞ்சி
ராகம் : சௌராஷ்டிரம்

*Pann: Viyazha-k-kurinji*
*Raagam : Saurashtram*

வாரு றுவனமுலை மங்கை பங்கன்
நீருறு சடைமுடிநிம லனிடங்
காருறு கடிபொழில் சூழ்ந்தழகார்
சீருறு வளவயற் சிரபுரமே. 1

வார் உறு வனமுலை மங்கை பங்கன்,
நீர் உறு சடைமுடி நிமலன், இடம் -
கார் உறு கடிபொழில் சூழ்ந்து அழகு ஆர்
சீர் உறு வளவயல் சிரபுரமே.

vAr uRu van2amulai magkai pagkan2,
nIr uRu caTai muTi nimalan2, iTam--
kAr uRu kaTi pozil cUzntu azaku Ar
cIr uRu vaLavayal cirapuramE.

**பொருள்:** சிவபெருமான் கச்சணிந்த அழகிய தனபாரங்களை உடைய உமையம்மையை ஒரு பாகம் கொண்டவர் ஆவார். கங்கை நதியைச் சடைமுடியில் அணிந்திருக்கும் நிமலர். இப்பெருமான் விரும்பி உறையும் இடமானது, மேகங்கள் தோயுமாறு வானளாவிய மணம் கமழும் பொழில் சூழ்ந்துள்ளதும், அழகிய சிறப்புள்ளதும், வளமையான வயல்வெளிகளை உடையதுமான சிரபுரம் ஆகும்.

**குறிப்புரை:** இப்பதிகம் பெரிய நாயகியுடன் எழுந்தருளி இருக்கும் பெருமான் நகரம் சிரபுரமாகிய சீகாழி என்கின்றது. வார் – கச்சு.

The pure Supreme Being Lord Civan holds His consort of fair chest, in the part of His body. He accommodates the river Ganges in His matted hair. His consort Umaa Devi wears a corset over her attractive big breasts. This Lord Civan (free of all blemish) loves to reside in Thiru-ch-chira-puram. This city is surrounded by groves full of tall trees reaching the sky. Fragrance encircles this place. The clouds glide over these tall trees. Also beautiful lush and rich fields could be seen all around the groves.

அங்க மொடருமறை யருள்புரிந்தான்
திங்க ளொடரவணி திகழ்முடியன்
மங்கை யொடினிதுறை வளநகரஞ்
செங்க யல்மிளிர்வயற் சிரபுரமே. 2

*அங்கமொடு அருமறை அருள்புரிந்தான்,*
*திங்களொடு அரவு அணி திகழ் முடியன்,*
*மங்கையொடு இனிது உறை வள நகரம் -*
*செங்கயல் மிளிர் வயல், சிரபுரமே.*

agkamoTu arumaRai aruLpurintAn2,
tigkaLoTu aravu aNi tikaz muTiyan2,
magkaiyoTu in2itu uRai vaLa nakaram--
cegkayal miLir vayal, cirapuramE.

**பொருள்:** சிவபெருமான், ஆறு அங்கங்களோடு கூடிய அரிய வேதங்கள் நான்கையும் அருளிச் செய்தவர். திங்கள், பாம்பு ஆகியவற்றைத் திருமுடியில் அணிந்தவராக விளங்குபவர். இப்பெருமான் உமையம்மையோடு மகிழ்ந்து உறைபவராக விளங்கும் நகரமானது, செங்கயல் மீன்கள் துள்ளி விளையாடும் வயல்களைச் சூழ்ந்துள்ள சிரபுரம் ஆகும்.

**குறிப்புரை:** அருமறை – எக்காலத்தும் உணரும் அருமைப் பாட்டினை உடைய வேதம்.

Lord Civan composed the four Vedas and the six subsidiaries (Angaas). He wears a crescent moon on His bright matted hair allowing a serpent also to remain near by. This Lord Civan happily resides in this affluent city Thiru-ch-chira-puram along

with His consort Umaa Devi. This city is surrounded by fields in which several red carp fish jump here and there and play.

பரிந்த வன்பன்முடி யமரர்க்காகித்
திரிந்த வர்புரமவை தீயின்வேவ
வரிந்த வெஞ்சிலை பிடித்தடுசரத்தைத்
தெரிந்த வன்வளநகர் சிரபுரமே. 3

பரிந்தவன், பல் முடிஅமரர்க்கு ஆகித்
திரிந்தவர் புரம்அவை தீயின் வேவ
வரிந்த வெஞ்சிலை பிடித்து, அடுசரத்தைத்
தெரிந்தவன், வள நகர் - சிரபுரமே.

parintavan2, pal muTi amararkku Akit
tirintavar puram avai tIyin2 vEva
varinta venjcilai piTittu, aTucarattait
terintavan2, vaLa nakar--cirapuramE.

**பொருள்:** சிவபெருமான், பலவகையான கிரீடங்களை அணிந்த வானோர்களிடம் மிக்க பரிவுடையவர். வானவெளியில் திரிந்த அசுரர்களின் முப்புரங்களும் தீயில் வெந்து போகுமாறு, வரிந்து கட்டிய கொடிய வில்லைப் பிடித்து, கொல்லும் அம்பினை ஆராய்ந்து தொடுத்தவர். இப்பெருமான் உறையும் நகரமானது வளமான சிரபுரம் ஆகும்.

**குறிப்புரை:** பரிந்தவன் – அன்பு கூர்ந்தவன். வரிந்த – கட்டிய. அடுசரத்தை – கொல்லும் பாணத்தை. தெரிந்தவன் – ஆராய்ந்தவன்.

Lord Civan has great compassion for the Devaas who wear several sorts of crowns. By holding the dreadful and well-tightened bow, Lord Civan selected and exercised the killing arrows after scrutiny, and burnt down the three citadels of the hostile Asuraas wandering in the sky. This Lord's place is the fertile Thiru-ch-chira-puram.

நீறணி மேனியன் நீள்மதியோ
டாறணி சடையின னணியிழையோர்
கூறணி ந்தினிதுறை குளிர்நகரஞ்
சேறணி வளவயற் சிரபுரமே. 4

நீறு அணி மேனியன், நீள் மதியோடு
ஆறு அணி சடையினன், அணியிழை ஓர் -
கூறு அணிந்து இனிது உறை குளிர் நகரம் -
சேறு அணி வள வயல், சிரபுரமே.

nIRu aNi mEn2iyan2, nIL matiyOTu
ARu aNi caTaiyin2an2, aNiyizai Or-
kURu aNintu in2itu uRai kuLir nakaram--
cERu aNi vaLavayal, cirapuramE.

***பொருள்:*** சிவபெருமான், திருநீறு அணிந்த திருமேனியை உடையவர். வளைவாக நீண்ட பிறைமதியோடு கங்கையை அணிந்த சடையினர். அழகிய அணிகலன்களை ஆபரணமாக அணிந்த உமையம்மையை ஒருபாகமாகக் கொண்டவர். இப்பெருமான் இனிதாக உறையும் குளிர்ச்சியான நகரமானது, சேற்று மண்ணால் வளமான வயல்கள் சூழ்ந்த சிரபுரம் ஆகும்.

***குறிப்புரை:*** அணியிழை – அணிந்த இழையினை உடையாளாகிய உமை.

Lord Civan has smeared holy ashes on His holy body. He is bedecked with an elongated curved crescent moon on His matted hair along with the river Ganges near by. He accommodates His consort Umaa Devi wearing beautiful ornaments in one side of His body. He pleasantly resides in the cool town of Thiru-ch-chira-puram which is surrounded by fertile fields of rich soil.

அருந்திறல வுணர்கள ரணழியச்
சரந்துர ந்தெரிசெய்த சங்கரனூர்
குருந் தொடுகொடி விடுமாதவிகள்
திருந் தியபுறவணி சிரபுரமே. 5

*அருந்திறல் அவுணர்கள் அரண் அழியச்*
*சரம் துரந்து எரிசெய்த சங்கரன் ஊர் -*
*குருந்தொடு கொடிவிடு மாதவிகள்*
*திருந்திய புறவு அணி சிரபுரமே.*

aruntiRal avuNarkaL araN aziyac
caram turantu eri ceyta cagkaran2 Ur--
kuruntoTu koTiviTu mAtavikaL
tiruntiya puRavu aNi cirapuramE.

பொருள்: வெல்லுவதற்கு அரிய வலிமையை உடைய அசுரர்களின் முப்புரங்களும் அழியுமாறு தனது கணையைத் தொடுத்து எரித்த சங்கரனான சிவபெருமானுடைய ஊர் சிரபுரம் ஆகும். இது, குருந்த மரத்தில் கொடிகளாகப் படரும் மாதவி என்னும் குருக்கத்தி செடிகள் நிறைந்த அழகிய புதர்களால் சூழப்பட்ட சிரபுரம் என்னும் நகரமாகும்.

**குறிப்புரை:** அருந்திறல் – பிறரால் வெல்லுதற்கு அரிய வலிமை. சரம் துரந்து – அம்பைச் செலுத்தி. சங்கரன் – சுகத்தைச் செய்பவன். குருந்து – குருந்தமரம். மாதவி – குருக்கத்தி. புறவு – காடு.

Lord Civan who is also known as Sankaran destroyed the three fortresses of the Asuraas, who had rare valour; He reduced the citadels to ashes by using His arrows. He is entempled in Thiru-ch-chira-puram which is surrounded by thick elegant bushes of Maadhavi alias Kurukkathi - common delight of the woods (Hiptage madabloia) which spreads as creepers over the wild lime trees (*குருந்தமரம்*).

கலைய வன்மறைய வன்காற்றொடுதீ
மலைய வன்விண்ணொடு மண்ணுமவன்
கொலைய வன்கொடிமதில் கூட்டழித்த
சிலைய வன்வளநகர் சிரபுரமே. 6

*கலை அவன், மறை அவன், காற்றொடு தீ*
*மலை அவன், விண்ணொடு மண்ணும் அவன்,*
*கொலைய வன் கொடிமதில் கூட்டுஅழித்த*
*சிலை அவன், வள நகர் - சிரபுரமே.*

kalai avan2, maRai avan2, kARRoTu tI
malai avan2, viNNoTu maNNum avan2,
kolaiya van2 koTi matil kUTTu azitta
cilaiyavan2, vaLa nakar--cirapuramE.

**பொருள்:** சிவபெருமான் கலைகளாக விளங்குபவர். வேதங்களை அருளியவர். காற்று, தீ, மலை, விண், மண் ஆகியவற்றில் ஊடுருவி இருப்பவர். கொடிகள் கட்டப்பட்ட அசுரர்களின் முப்புரங்களை மதில்களோடு கூட்டாக அழிக்க, மேரு மலையை வில்லாக ஏந்திய, கொலையாளன். இப்பெருமான் உறையும் வளமான நகர் சிரபுரம் ஆகும்.

**குறிப்புரை:** கலையவன் – கல்வியினால் எய்தும் பயனாகிய ஞானம் ஆயவன், மதில் அழித்த கொலையவன் எனக் கூட்டுக.

Lord Civan is an embodiment of spiritual wisdom (*கலையவன்*). He is the author of the Vedas. He is wind, fire and mountain. He is heaven and also earth. He is the killer bowman who destroyed simultaneously the three citadels along with their walls

where flags were flying, by holding the Meru mountain in His hand using it as His bow. His place is the affluent Thiru-ch-chira-puram.

வானமர் மதியொடு மத்தஞ்சூடித்
தானவர் புரமெய்த சைவனிடங்
கானமர் மடமயில் பெடைபயிலுந்
தேனமர் பொழிலணி சிரபுரமே. 7

வான் அமர் மதியொடு மத்தம் சூடித்
தானவர் புரம் எய்த சைவன் இடம் -
கான் அமர் மடமயில் பெடை பயிலும்
தேன் அமர் பொழில் அணி சிரபுரமே.

vAn2 amar matiyoTu mattam cUTit
tAn2avar puram eyta caivan2 iTam--
kAn2 amar maTamayil peTai payilum
tEn2 amar pozil aNi cirapuramE.

***பொருள்:*** சிவபெருமான் வானத்தில் உலவும் பிறைமதியோடு ஊமத்தம் மலரையும் தனது முடியில் சூடியிருப்பவர். அசுரர்களின் முப்புரங்களை எய்து அழித்த, சிவன் இவர் ஆவார். இப்பெருமான் உறையும் இடமானது, காடுகளில் வாழும் ஆண் மயில்கள் பெண் மயில்களோடு கூடி மகிழும் இனிமையும், அழகும் உடைய பொழில்கள் நிறைந்த சிரபுரம் ஆகும்.

***குறிப்புரை:*** தானவர் – அசுரர். கான் – காடு.

Lord Civan wears the crescent moon, on His matter hair which apparently glides in the sky, along with datura flowers. He destroyed the three citadels of the Asuraas. His place is the affluent city Thiru-ch-chira-puram where the young peacocks living in forests join the peahens and play happily. This town is filled with all pleasant groves.

மறுத்த வர்திரிபுர மாய்ந்தழியக்
கறுத்த வன்காரரக் கன்முடிதோள்
இறுத்த வனிருஞ்சினக் காலனைமுன்
செறுத்த வன்வளநகர் சிரபுரமே. 8

மறுத்தவர் திரிபுரம் மாய்ந்து அழியக்
கறுத்தவன், கார்அரக்கன் முடிதோள்
இறுத்தவன், இருஞ் சினக் காலனை முன்
செறுத்தவன், வள நகர் - சிரபுரமே.

maRuttavar tiripuram mAyntu aziyak
kaRuttavan2, kAr arakkan2 muTitOL
iRuttavan2, irunj cin2ak kAlan2ai mun2
ceRuttavan2, vaLa nakar--cirapuramE.

**பொருள்:** சிவபெருமான், தன்னோடு உடன்படாமல் மறுத்த அசுரர்களின் முப்புரங்களும் ஒருசேரக் கெட்டு அழியுமாறு சினந்தவர். அரக்கனாகிய இராவணனின் தலை, தோள் ஆகியவற்றை நெரித்தவர். மிக்க சினமுடைய இயமனை அழித்தவர். இப்பெருமான் உறையும் வளமையான நகரமானது சிரபுரம் ஆகும்.

**குறிப்புரை:** மறுத்தவர் – பகைவர். கறுத்தவன் – சினந்தவன்.

Lord Civan got angry with the Asuraas who disagreed with Him and were also hostile to Him, and destroyed their three citadels. He crushed the heads and shoulders of the black Asuraa Raavanan. He also kicked to death the immensely irate Yama. This affluent city of Thiru-ch-chira-puram is the place of Lord Civan.

வண்ண நன்மலருறை மறையவனுங்
கண்ண னுங்கழல்தொழக் கனலுருவாய்
விண்ணு றவோங்கிய விமலனிடந்
திண்ண நன்மதிலணி சிரபுரமே. 9

வண்ண நல்மலர் உறை மறையவனும்
கண்ணனும் கழல் தொழ, கனல் உருஆய்
விண் உற ஓங்கிய விமலன் இடம் -
திண்ண நல்மதில் அணி சிரபுரமே.

vaNNa nalmalar uRai maRaiyavan2um
kaNNan2um kazal toza, kan2al uru Ay
viN uRa Ogkiya vimalan2 iTam--
tiNNa nalmatil aNi cirapuramE.

**பொருள்:** தாமரை மலர் மேல் உறையும் நான்முகனும், திருமாலும் தனது திருவடிகளைத் தொழுது நிற்குமாறு கனல் உருவமாக விண்ணுற ஓங்கி நின்றவர் சிவபெருமான் ஆவார். விமலனான இப்பெருமான் உறைந்திருக்கும் இடமானது, உறுதியான நல்ல மதில்களால் அழகுற அமைந்த சிரபுரம் ஆகும்.

***குறிப்புரை:*** வண்ணநன்மலர் – தாமரைமலர். திண்ணநன்மதில் – உறுதியாகிய மதில்.

The immaculate Lord Civan soared up in the sky as a big tall flame of fire when Brahma who resides in the attractive red lotus and Thirumaal were out to see and worship His holy feet. This Lord Civan's place is the affluent and good looking Thiru-ch-chira-puram which is encircled by strongly built high and thick walls.

வெற்றரை யுழல்பவர்விரி துகிலார்
கற்றிலார றவுரைபுற னுரைக்கப்
பற்றலர்திரி புரமூன்றும் வேவச்
செற்றவன் வளநகர் சிரபுரமே. 10

*வெற்று அரை உழல்பவர், விரி துகிலார்,*
*கற்றிலார் அறஉரை புறன் உரைக்கப்,*
*பற்றலர் திரி புரம்மூன்றும் வேவச்*
*செற்றவன் வள நகர் - சிரபுரமே.*

veRRu arai uzalpavar, viri tukilAr,
kaRRilar aRa urai puRan2 uraikka,
paRRalar tiri puram mUn2Rum vEvac
ceRRavan2 vaLa nakar--cirapuramE.

**பொருள்:** ஆடையில்லாது திரிந்து உழல்பவர்கள் சமணர்கள். விரிவான ஆடையைப் போர்வையாகப் போர்த்து இருப்பவர்கள் புத்தர்கள். இவர்களுடைய மெய்யறிவற்ற உரைகளைப் பொருட்படுத்தாதீர்கள். அசுரர்களின் முப்புரங்களைத் தீயில் வேகுமாறு அழித்தவர் நம் சிவபெருமான் என்பதை உணருங்கள். இப்பெருமான் எழுந்தருளிய வளமான நகர் சிரபுரம் ஆகும்.

***குறிப்புரை:*** வெற்று அரை உழல்பவர் – ஆடையில்லாத இடையோடு திரிகின்றவர்கள். அறவுரை கற்றிலர் என மாறுக. புறன் உரைக்க – பொருந்தாத புறம்பான உரைகளைச் சொல்ல. பற்றலர் – பகைவர்.

The Samanars roam naked without any dress in their waist; the Buddhists cover their body using the wide cloth as a cloak. They have not learnt any books on the ultimate truth. They speak falsehood contrary to Dharma. Without minding these people, Lord Civan is enshirned in the fertile town of Thiru-ch-chira-puram, - He once destroyed by fire, the three fortresses of the hostile Asuraas.

அருமறை ஞானசம்பந் தனந்தண்
சிரபுர நகருறை சிவனடியைப்
பரவிய செந்தமிழ் பத்தும்வல்லார்
திருவொடு புகழ்மல்கு தேசினரே. 11

அருமறை ஞானசம்பந்தன், அம்தண்
சிரபுரநகர் உறை சிவன் அடியைப்
பரவிய செந்தமிழ்பத்தும் வல்லார்
திருவொடு புகழ் மல்கு தேசினரே.

arumaRai njAn2acampantan2, am taN
cirapuranakar uRai civan2 aTiyaip
paraviya centamiz pattum vallAr
tiruvoTu pukaz malku tEcin2arE.

**பொருள்:** அரிய வேதங்களின் பொருளை நன்கு உணர்ந்தவர் ஞானசம்பந்தன். அவர் அழகிய குளுமையான சிரபுரம் நகரில் எழுந்தருளிய சிவபெருமானின் திருவடியைப் போற்றிச் செந்தமிழால் இப்பதிகத்தைப் பாடினார். இப்பதிகத்தின் பத்துப் பாடல்களையும் பொருளுணர்ந்து ஓதவல்லவர்கள், செல்வத்துடன் புகழ் நிறைந்து ஒளியுடன் திகழ்வார்கள்.

**குறிப்புரை:** தேசினர் – ஒளியை உடையவர்கள்.

Gnaanasambandan has imbibed all the rare Vedas (without being taught by a third scholar). He has sung these ten verses in praise of Lord Civan's holy feet enshrined in the affluent and elegant Thiru-ch-chira-puram. Those who can sing these ten verses will flourish in splendour with wealth and glory.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*109ஆம் பதிகம் முற்றிற்று*
End of 109th Hymn

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# 110. திரு இடை மருதூர்

## திருத்தல வரலாறு:

32ஆம் பதிகம் பார்க்க.

# 110. THIRU-IDAI-MARUTHOOR

## HISTORY OF THE PLACE

See 32nd Hymn

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 110. திரு இடை மருதூர்

## 110. THIRU-IDAI-MARUTHOOR

பண் : வியாழக்குறிஞ்சி
ராகம் : சௌராஷ்டிரம்

*Pann: Viyazha-k-kurinji*
*Raagam : Saurashtram*

மருந்தவன்வானவர்தானவர்க்கும்
பெருந்தகைபிறவினொடிறவுமானான்
அருந்தவமுனிவரொடால்நீழற்கீழ்
இருந்தவன்வளநகரிடைமருதே. 1

மருந்து அவன், வானவர் தானவர்க்கும்
பெருந்தகை, பிறவினொடு இறவும் ஆனான்,
அருந்தவ முனிவரொடு ஆல்நீழல்கீழ்
இருந்தவன், வள நகர் - இடைமருதே.

maruntu avan2, vAn2avar tAn2avarkkum
peruntakai, piRavin2oTu iRavum An2An2,
aruntava mun2ivaroTu Al nizal kIz
iruntavan2, vaLa nakar--iTaimarutE.

பொருள்: சிவபெருமானார் பிறப்பு என்னும் நோயைத் தீர்க்கும் மருந்தாக விளங்குகின்றவர். தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் தலைவர். உயிர்களின் பிறப்புக்கும் இறப்புக்கும் காரணமானவர். உயர்ந்த தவம் புரியும் சனகாதி முனிவர்களோடு கல்லால மரநிழலில்

எழுந்தருளி அறம் உரைத்தவர். இப்பெருமானார் எழுந்தருளியிருக்கும் வளமான நகரம் இடைமருதூர் ஆகும்.

**குறிப்புரை:** இப்பதிகம் முழுவதும் இறைவன் திருநகர் இடைமருதே என்கின்றது. மருந்தவன் – மருந்து போல்வன். மருந்து, நோய் நீக்கவும், நோய் வாராமல் தடுக்கவும், உடலை வளர்க்கவும் உண்ணப்படுமாறு போல இறைவனும் அநாதியே பந்தித்த மலப்பிணியினீக்கவும், வினை ஏறாமல் காக்கவும், கைவந்த சிவஞானங் கழன்றுபோம் வண்ணம் வாசனை தாக்காமல் வளர்க்கவும் உபகாரப்படுதலின் மருந்தவன் என்றருளினார். அமுதமாயினான் எனலுமாம். தானவர் – அசுரர். பிறவு இறவு – பிறப்பு, இறப்பு. 'வு' விகுதி பெற்ற தொழிற்பெயர். மிக அருமையான பிரயோகம். முனிவரோடு ஆலநிழல் கீழ் இருந்தவன் எனப்பிரிக்க.

Lord Civan is medicine as also medical man that cures the disease of birth and death. He is the Lord of the Devaas and the Asuraas. He is the sole cause of birth and death of all beings. He sat with and headed the noble Sanagaathi sages (*சனகாதி முனிவர்கள்*) in the shade of the stone banyan tree [*கல்லாலமரம்* is a kind of Banyan tree which has no drop down shoots (*விழுதுகள்*) for support unlike other Banyan trees. Named 'Kallaalam', it has wide expansive shade below]. Here He preached the laws of virtue and dharma. His fertile town is Thiru-idai-maruthoor.

தோற்றவன்கேடவன்துணைமுலையாள்
கூற்றவன்கொல்புலித்தோலசைத்த
நீற்றவன்நிறைபுனல்நீள்சடைமேல் 2
ஏற்றவன்வளநகரிடைமருதே.

தோற்று அவன் கேடு அவன், துணைமுலையாள்
கூற்றவன், கொல் புலித் தோல் அசைத்த
நீற்றவன், நிறைபுனல் நீள்சடைமேல்
ஏற்றவன், வள நகர் - இடைமருதே.

tORRu avan2 kETu avan2, tuNaimulaiyAL
kURRavan2, kol pulit tOl acaitta
nIRRavan2, niRai pun2al nIL caTaimEl
ERRavan2, vaLa nakar--iTaimarutE.

**பொருள்:** சிவபெருமானார் உயிர்களின் தோற்றத்திற்கும் அழிவுக்கும் காரணமாக இருப்பவர். இணையான இரு தனங்களை உடைய உமையம்மையைத் தனது உடலில் ஒரு பாகமாகக் கொண்டிருப்பவர். கொல்லும் தொழிலில் வல்ல புலியினுடைய தோலை இடையில் கட்டியிருப்பவர். உடம்பெங்கும் திருநீற்றை அணிந்திருப்பவர். பெருகி வந்த கங்கையை நீண்ட சடைமுடிமேல் ஏற்றி இருப்பவர். இப்பெருமான் எழுந்தருளியிருக்கும் வளமான நகரம் இடைமருதூர் ஆகும்.

**குறிப்புரை:** தோற்றவன் – பிறப்பை அருளியவன். கேடவன் – அழித்தவன். கூற்றவன் – பாகமதுடையான்.

Lord Civan is the sole cause of the origin of life and its disappearance from the body. Umaa Devi with attractive twin breasts occupies the left side of His body. He wears in His waist the hides of tigers known for ferocious killing. He smears His body with the holy ashes. He accommodated the flooding river Ganges on His matted hair and saved all people in the world from death. This Civan's favourite residing place is Thiru-idai-maruthoor.

படையுடைமழுவினன்பால்வெண்ணீற்றன்
நடைநவிலேற்றினன்ஞாலமெல்லாம்
உடைதலையிடுபலிகொண்டுழல்வான்
இடைமருதினிதுறையெம்மிறையே. 3

*படை உடை மழுவினன், பால்வெண்நீற்றன்,*
*நடை நவில் ஏற்றினன், ஞாலம்எல்லாம்*
*உடைதலை இடு பலி கொண்டு உழல்வான் -*
*இடைமருது இனிது உறை எம் இறையே.*

paTai uTai mazuvin2an2, pAlveN nIRRan2,
naTai navil ERRin2an2, njAlam ellAm
uTai talai iTu pali koNTu uzalvAn2--
iTaimarutu in2itu uRai em iRaiyE.

**பொருள்:** சிவபெருமான் தனக்குரிய ஆயுதமாக மழுவைக் கொண்டிருப்பவர். பால்போன்ற வெள்ளிய திருநீற்றை உடல் முழுவதும் பூசியிருப்பவர். இனிய நடையைப் பழகுகின்ற விடை ஏற்றை உடையவர். உடைந்த தலையோட்டில் பலிகொண்டு உலகமெங்கும் திரிந்து

உழல்பவர். எமது இறைவராகிய இப்பெருமான் இனிதாக எழுந்தருளியிருக்கும் நகரம் இடைமருதூர் ஆகும்.

**குறிப்புரை:** நடைநவில் – நடைபழகுகின்ற. உடைதலை – உடைந்த கபாலம்.

Lord Civan holds the battle axe as His war weapon. He has smeared on His body, milk white holy ashes. He has the bull with majestic strides as His vehicle. He accepts alms in a broken human skull, wandering all over the world. This our Lord is enshrined pleasingly in Thiru-idai-maruthoor.

பணைமுலையுமையொருபங்கனொன்னார்
துணைமதிள்மூன்றையுஞ்சுடரின்மூழ்கக்
கணைதுரந்தடுதிறற்காலற்செற்ற
இணையிலிவளநகரிடைமருதே. 4

பணைமுலை உமை ஒருபங்கன், ஒன்னார்
துணை மதிள்மூன்றையும் சுடரில் மூழ்கக்
கணை துரந்து அடுதிறல் காலற் செற்றக்
இணை இலி, வள நகர் - இடைமருதே.

paNaimulai umai orupagkan2, on2n2Ar
tuNai matil mUn2Raiyum cuTaril mUzkak
kaNai turantu, aTu tiRal kAlaR ceRRa
iNai ili, vaLa nakar--iTaimarutE.

**பொருள்:** சிவபெருமான் தனது ஒரு பாகத்தில் பருத்த தனங்களை உடைய உமையம்மையைக் கொண்டிருப்பவர். பகைவராகிய அசுரர்களுக்குத் துணையாக இருந்த மூன்று மதில்களையும் தீச்சுடரில் மூழ்கி அழியுமாறு வலிய அம்பைச் செலுத்தியவர். காலனை அழித்த ஒப்பில்லாத இப்பெருமான் எழுந்தருளியிருக்கும் வளமான நகரம் இடைமருதூர் ஆகும்.

**குறிப்புரை:** பணைமுலை – பருத்த முலை. ஒன்னார் – பகைவர். துணை மதிள் – திரிபுராதிகள் செய்யும் தீமைக்கெல்லாம் அரணாயிருந்து துணைபுரிந்த மதிள். கணை – அம்பு. அடுதிறல் – கொல்லும் வன்மை.

Lord Civan accommodates His consort Umaa Devi who has very attractive bulging breasts on the left side of His body. The three hostile Asuraas owned, for their protection, three forts. Lord Civan shot an arrow and burnt the three citadels and

destroyed them completely by using His powerful arrow. He is an incomparable Lord kicked Kaalan (Yama the God of Death) to death. This Lord Civan's favourite place is Thiru-idai-maruthoor.

பொழிலவன்புயலவன்புயலியக்குந்
தொழிலவன்துயரவன்துயரகற்றுங்
கழலவன்கரியுரிபோர்த்துகந்த
எழிலவன்வளநகரிடைமருதே. 5

பொழில் அவன், புயல் அவன், புயல் இயக்கும்
தொழில் அவன், துயர் அவன், துயர் அகற்றும்
கழலவன், கரிஉரி போர்த்து உகந்த
எழிலவன், வள நகர் - இடைமருதே.

pozil avan2, puyal avan2, puyal iyakkum
tozil avan2, tuyar avan2, tuyar akaRRum
kazalavan2, kariuri pOrttu ukanta
ezilavan2, vaLa nakar--iTaimarutE.

**பொருள்:** சிவபெருமான் இயற்கையாக வளர்ந்த காடுகளாய் இருப்பவன். மேகங்களாகவும் அதனை இயக்கி மழையைப் பெய்விக்கும் தொழிலைப் புரிவோனாக இருப்பவனும் அவனே. அவரவர் செய்த தீவினைக்கு ஈடான துன்பங்களை அந்தந்த ஆன்மாக்களின் நிலைக்கு ஏற்ப சிறிது சிறிதாக அனுபவிக்க மறுபிறப்புத் தருபவனும் அவனே. கழலணிந்த திருவடிகளை உடைய அவனே அத்துயரைப் போக்க வல்லவனும் ஆவான் (அவனது திருவருளையே திருவடிகள் என உணர்த்தப் பெறுவன் என்ற கருத்தினை இங்கு ஓர்க). யானையின் கரிய தோலைப் போர்த்திருந்தும் அவனே மிகுந்த அழகனாக விளங்குகின்றான். இப்பெருமான் எழுந்தருளியிருக்கும் வளமான நகரம் இடை மருதூர் ஆகும்.

**குறிப்புரை:** புயலவன் – மேகமாயுள்ளவன்; புயலவனாய், அதனையியக்கும் தொழிலவனாய், துயரவனாய், துயரை அகற்றும் கழலவனாய், என்பன பொருளாயும், அதனையியக்கும் கருத்தனாயும் இருப்பவன் இறைவனே என்பதை விளக்கிற்று. கரியுரிபோர்த்துகந்த எழிலவன் என்றது செய்ய திருமேனி மேல் கரிய தோலைப் போர்த்தியதும் அழகாயிற்று என்பதாம்.

Lord Civan Himself is the natural trees in the forests. He is the clouds; and Himself is the agent that performs the work of acting on the clouds and causing rains. He is the cause as well as remedy for all misery of all souls. He is the possessor of

ankleted holy feet that annuls *those miseries. He* is the handsome one who skinned the elephant and covered His body happily with its skin. This Lord Civan's favourable place is Thiru-idai-maruthoor.

**Note:** He looks elegant even after wearing the dark skin of the elephant.

நிறையவன்புனலொடுமதியும்வைத்த
பொறையவன்புகழவன்புகழநின்ற
மறையவன்மறிகடல்நஞ்சையுண்ட 6
இறையவன்வளநகரிடைமருதே.

நிறை அவன், புனலொடு மதியும் வைத்த
பொறையவன், புகழ் அவன், புகழ நின்ற
மறை அவன், மறிகடல் நஞ்சை உண்ட
இறையவன், வள நகர் - இடைமருதே.

niRai avan2, pun2aloTu matiyum vaitta
poRaiyavan2, pukaz avan2, pukaza nin2Ra
maRai avan2, maRikaTal nanjcai uNTa
iRaiyavan2, vaLa nakar--iTaimarutE.

**பொருள்:** சிவபெருமான் எவ்விதத்திலும் குறையில்லாமல் முழுமையான நிறையுள்ளவனாக விளங்குபவன். கங்கையோடு பிறை மதியையும் திருமுடியில் வைத்துச் சுமக்கும் சுமையை உடையவன். எல்லாராலும் புகழப்படுகின்ற வேதங்களாக விளங்குபவன். சுருண்டு விழும் அலைகளை உடைய கடலில் தோன்றிய நஞ்சினை உண்ட இறைவனும் இவனே. இப்பெருமான் எழுந்தருளியிருக்கும் வளமான நகரம் இடை மருதூர் ஆகும்.

**குறிப்புரை:** பொறையவன் – சுமையை உடையவன்.

Civan is the Supreme Lord perfect and flawless. He carries the weight of the river Ganges and also the crescent moon in His holy head. He is an embodiment of glory. He Himself is the Vedas praised by one and all. He positioned the poison that appeared in the sea full of rolling waves, in His throat. This Civan's favourite place is Thiru-idai-maruthoor.

நனிவளர்மதியொடுநாகம்வைத்த
பனிமலர்க்கொன்றையம்படர்சடையன்
முனிவரொடமரர்கள்முறைவணங்க
இனிதுறைவளநகரிடைமருதே. 7

நனி வளர் மதியொடு நாகம் வைத்த
பனிமலர்க்கொன்றை அம் படர் சடையன்,
முனிவரொடு அமரர்கள் முறை வணங்க,
இனிது உறை வள நகர் - இடைமருதே.

nan2i vaLar matiyoTu nAkam vaitta
pan2i malark kon2Rai am paTar caTaiyan2,
mun2ivaroTu amararkaL muRai vaNagka,
in2itu uRai vaLa nakar--iTaimarutE.

**பொருள்:** சிவபெருமான் தனது திருமுடியில் நாள்தோறும் ஒவ்வொரு கலையாக வளரும் பிறைமதியோடு பாம்பையும் வைத்திருப்பவன். குளிர்ந்த கொன்றை மலர் மாலை சூடிய விரிந்த சடையை உடையவன். இப்பெருமான், முனிவர்களும் தேவர்களும் முறையாக வணங்க இனிதாக எழுந்தருளியிருக்கும் வளமான நகரம் இடை மருதூர் ஆகும்.

**குறிப்புரை:** பனிமலர் – குளிர்ந்த மலர், முனிவர் முன்னும், தேவர் பின்னுமாக வணங்குதல் முறையாதலின் முறை வணங்க என்றார். முனிவர்கள் வணக்கம்; உலகம் உய்யவந்த நிஷ்காமிய வணக்கம்; தேவர்கள் வணக்கம்; அசுரர் அழியத் தாம் வாழ வேண்டும் என்னும் காமிய வணக்கம்; ஆதலின் அவர்கள் முன்னும் தேவர்கள் பின்னும் முறையே வணங்க என்றது.

Lord Civan accommodates in His widespread matted hair the serpent as well the growing crescent moon (i.e. waxing daily) phase by phase. He decorates His hair with the cool cassia flower garland. He is worshipped by sages and Devaas in an orderly way. This Lord Civan is happily enshrined in Thiru-idai-maruthoor.

தருக்கினஅரக்கனதாளுந்தோளும்
நெரித்தவன்நெடுங்கைமாமதகரியன்
றுரித்தவனொன்னலர்புரங்கள்மூன்றும்
எரித்தவன்வளநகரிடைமருதே. 8

தருக்கினஅரக்கன தாளும் தோளும்
நெரித்தவன், நெடுங்கைமாமதகரி அன்று
உரித்தவன், ஒன்னலர் புரங்கள் மூன்றும்
எரித்தவன், வள நகர் - இடைமருதே.

tarukkin2a arakkan2a tALum tOLum
nerittavan2, neTugkai mA matakari an2Ru
urittavan2, on2n2alar puragkaL mUn2Rum
erittavan2, vaLa nakar--iTaimarutE.

**பொருள்:** மிகுந்த ஆணவம் நிறைந்த அரக்கனான இராவணனின் கால்களையும் தோள்களையும் நெரித்தவர் சிவபெருமானாகும். நீண்ட கையை உடைய பெரிய மத யானையின் தோலை உரித்தவர். பகைவர்களாகிய அசுரர்களின் மூன்று கோட்டைகளையும் எரித்தவர். இப்பெருமானார் எழுந்தருளியிருக்கும் வளமான நகரம் இடை மருதூர் ஆகும்.

**குறிப்புரை:** அரக்கன் – இராவணன். ஒன்னலர் – பகைவர்.

Lord Civan smashed the feet and shoulders of the arrogant Raavanan. Once before, He peeled *the hide of the frenzied big elephant having a long hand, and covered* His body with that skin. He burnt down *the three fortresses of the hostile Asuraas.* Lord Civan of such action lives in Thiru-idai-maruthoor.

பெரியவன்பெண்ணினொடாணுமானான்
வரியரவணைமறிகடல்துயின்ற
கரியவனலரவன்காண்பரிய 9
எரியவன்வளநகரிடைமருதே.

பெரியவன், பெண்ணினொடு ஆணும் ஆனான்,
வரிஅரவுஅணை மறிகடல்-துயின்ற
கரியவன், அலரவன் காண்புஅரிய
எரியவன், வள நகர் - இடைமருதே.

periyavan2, peNNin2oTu ANum An2An2,
vari aravu aNai maRikaTal-tuyin2Ra
kariyavan2 alaravan2 kANpu ariya
eriyavan2, vaLa nakar--iTaimarutE.

**பொருள்:** சிவபெருமான் எல்லாரிலும் பெரியவர். பெண்ணும் ஆணுமான வடிவாக விளங்குபவர். வரிகளை உடைய பாம்பை தலையணையாகக் கொண்டு கடலிடையே துயிலும் கரிய நிறமுள்ள திருமாலும், தாமரை மலர் மேல் உறையும் நான்முகனும் காண்பதற்கு இயலாத எரி உருவமாக ஓங்கி நின்றவர். இப்பெருமான் எழுந்தருளி இருக்கும் வளமான நகரம் இடைமருதூர் ஆகும்.

**குறிப்புரை:** அரவணை – ஆதிசேடனாகிய படுக்கை. கரியவன் – திருமால். அலரவன் – பிரமன்.

Lord Civan is the Supreme Being, above all others. He has the form of a woman and a man. He is beyond the reach and recognition of both Thirumaal who rests on a striped serpent on the seas and by Brahma who is seated in the lotus, by stretching Himself as a big and tall column of fire. This Civan's favourite place is Thiru-idai-maruthoor.

சிந்தையில்சமணொடுதேரர்சொன்ன
புந்தியிலுரையவைபொருள்கொளாதே
அந்தணரோத்தினோடரவமோவா
எந்தைதன்வளநகரிடைமருதே. 10

*சிந்தை இல் சமணொடு தேரர் சொன்ன*
*புந்தி இல் உரைஅவை பொருள் கொளாதே*
*அந்தணர் ஓத்தினோடு அரவம் ஓவா,*
*எந்தைதன் வள நகர் - இடைமருதே.*

cintai il camaNoTu tErar con2n2a
punti il urai avai poruL koLAtE,
antaNar Ottin2oTu aravam OvA,
entaitan2 vaLa nakar--iTaimarutE.

**பொருள்:** சுயமாக சிந்திக்கும் திறமை இல்லாத சமணருடன் புத்தர்களும் சொல்லுகின்ற அறிவற்ற உரைகளை உண்மை என்று ஏற்றுக் கொள்ள வேண்டாம். அறவோர்களின் நித்திய வேத ஒலியுடன் விழாக்களின் ஒலியும் தொடர்ந்து ஒலிக்கும் வளமான நகரம் இடைமருதூர் ஆகும். அந்நகரம் எம் தந்தையாகிய சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் தலமாகும். அதனை அறிந்து அங்கு சென்று வழிபடுவீர்களாக.

**குறிப்புரை:** சிந்தை இல் சமண் – சிந்தனை என்பதொன்றற்ற சமணர். தேரர் – புத்தர். புந்தி இல் உரை – புத்தியற்ற வார்த்தை. ஓத்து – வேதம். அரவம் – ஒலி.

Oh! Ye Folks! Do not consider as meaningful the ignorant speeches of the Jains who are incapable of deep thinking and that of the brainless Buddhists. Please realise that Thiru-idai-maruthoor is the best place where our father Civan resides, where all the

sounds of festivities and those of Vedic scholars are ever heard continuously. Understand this well, go to Thiru-idai-maruthoor and worship Lord Çivan therein.

இலைமலிபொழிலிடைமருதிறையை
நலமிகுஞானசம்பந்தன்சொன்ன
பலமிகுதமிழிவைபத்தும்வல்லார் 11
உலகுறுபுகழினோடோங்குவரே.

இலை மலி பொழில் இடைமருது இறையை
நலம் மிகு ஞானம்பந்தன் சொன்ன
பலம் மிகு தமிழ் இவைபத்தும் வல்லார்
உலகு உறு புகழினோடு ஓங்குவரே.

ilai mali pozil iTaimarutu iRaiyai
nalam miku njAn2acampantan2 con2n2a
palam miku tamiz ivaipattum vallAr
ulaku uRu pukazin2oTu OgkuvarE.

**பொருள்:** இலைகள் நிறைந்த பொழில்கள் சூழ்ந்த இடைமருதூரில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானாரை, அருள் நலம் மிகுந்த ஞானசம்பந்தன் போற்றி இப்பதிகத்தைப் பாடினார். பயன் மிகுந்த தமிழ்ப் பாடல்களாகிய இப்பதிகத்தின் பத்துப் பாடல்களையும் பாட வல்லவர்கள், உலகில் நிறைந்து விளங்கும் புகழுடன் ஓங்கி உயர்ந்து வாழ்வார்கள்.

**குறிப்புரை:** இடைமருதூர்ப் பதிகமாகிய இப்பத்தையும் பாட வல்லவர். உலகிற் புகழோடு ஓங்கி வாழ்வர் என்கின்றது. பலமிகு தமிழ் – பயன் மிகுந்த தமிழ். தெய்வபலமிகுந்த தமிழ் என்றுமாம். புகழ் இம்மைப் பயனே என்பார் உலகு உறு புகழ் என்று அருளினர். நலம் – திருவருட்டிறம்.

Lord Civan is enshrined in Thiru-idai-maruthoor encircled by groves full of green leaves. Gnaanasambandan who was graced fully by Lord Civan, hailed this Lord of Thiru-idai-maruthoor and sang these ten fruit valuable Tamil verses. Those who are well versed in chanting these ten verses will attain all glory and live long in the world.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*110ஆம் பதிகம் முற்றிற்று*
End of 110th Hymn

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# 111. திருக் கடை முடி

## திருத்தல வரலாறு:

இத்திருத்தலம் கீழூர் எனப்பெயர் பெறும். சோழ நாட்டுக் காவிரி வடகரைத்தலமாய்க் காவிரியின் கடைமுடியாதலின் இப்பெயர் பெற்றது. மயிலாடுதுறையில் இருந்து பேருந்து வசதி உள்ளது. பிரமன் பூசித்துப் பேறு பெற்ற தலம். சுவாமி பெயர் கடைமுடி நாதர். அம்மையின் பெயர் அபிராமியம்மை. தீர்த்தம் கருணா தீர்த்தம்.

## கல்வெட்டு:

கடைமுடி என்பது கீழூராயின் கல்வெட்டு ஒன்றுமில்லை. சேது சமஸ்தான வித்துவான் மு. இராகவ ஐயங்கார் அவர்கள் தமது ஆராய்ச்சித் தொகுதியில் சிறந்ததோர் கருத்தை வெளியிட்டுள்ளார்கள். அதன் சுருக்கமாவது: தஞ்சாவூர் மாவட்டத்தில் கோவிலடி என வழங்கும். பேரூருக்குப் பக்கத்தில் கிழக்கே 2.5 கி.மீ. தூரத்தில் திருச் சின்னம்பூண்டி என்ற கிராமம் உள்ளது. அங்கே உள்ள இறைவன் சடையை உடையர், சடேசுவரர் என்று வழங்கப்படுகிறார். அங்கேயுள்ள சாசனங்கள் தெள்ளாறு எறிந்த மூன்றாம் நந்தி வர்மன், அவன் மகன் கோ விஜய திரு பதுங்க வர்மன், முதல் பராந்தகன் இவர்கள் காலத்தன. அவற்றுள் முதல் பராந்தகன் காலத்துக் கல்வெட்டுக்களில் ஒன்றே ஒன்று திருச்சடைமுடி மகாதேவர் எனக் குறிப்பிடப்படுகிறது. ஏனைய இறைவன் பெயரை, திருக்கடைமுடி மகாதேவர் என்றே குறிப்பிடுகின்றன. ஒன்பது, பத்தாம் நூற்றாண்டுகளில் அதாவது ஏழாம் நூற்றாண்டினரான திருஞானசம்பந்தர் காலத்திற்கு அணிமையில் திருக்கடைமுடி இப்பொழுது வழங்கும் சென்னப்பூண்டி என்றே விளங்கினமை அறியலாம். திருச்சடைமுடி என்பது திருப்பேராகிய கோவிலடிக்கு வழங்கிய பெயராதலைப் பிற கல்வெட்டுக்களும் எடுத்துக் காட்டுகின்றன. ஆதலால் கீழூர் கடைமுடியன்று என்பர். சென்னம்பூண்டி கடைமுடியைப் பற்றியனவாக 22 கல்வெட்டுக்கள் உள்ளன. தென்கரை இடையாற்று நாட்டு திருக்கடை முடி எனக் குறிக்கப் பெற்றுள்ளது. நிருபதுங்கவர்மன் காலத்து அரசி ஒருத்தி விளக்கிற்காகப் பொன் அளித்தாள். முதல் பராந்தகன் பணிகள் யாவும் விளக்கிற்காக ஆடுகள் அளித்தமையே. வீரநாராயண மூவேந்த வேளான் முதலான அரசியல் தலைவர்களும் நிவந்தங்கள் அளித்துள்ளார்கள்.

## 111. THIRU-K-KADAI-MUDI

### HISTORY OF THE PLACE

This sacred place is to the north of river Cauvery in Chola Naadu and is also known as Keezhoor. It is known as Kadaimudi as it is located at the tail end of the river Cauvery. Buses ply from Mayilaaduthurai to this place.

The name of God is Kadaimudinaathar and that of Goddess is Abiraamiyammai. The sacred ford is Karunaa Theerththam. Biraman offered worship here to attain salvation.

There are no inscriptions in Keezhoor, which lead to research on the true location of Kadaimudi (confer scholar M. Raaghava Iyengar, the Sethusamasthaana Vidhvaan). He concludes Keezhoor is not Kadaimudi and Chennappoondi or Thiru-ch-chinnam-poondi near Koviladi village (known in the literature as திருப்பேர்) is actually Kadaimudi. Inscriptions there name the Lord as Thiruchchadaimudi Mahaadhevar or Thirukkadaimudi Mahaadhevar. There are 22 inscriptions about Kadaimudi at Chennampoondi. They speak of grants of gold, sheep etc., by royal personages.

திருச்சிற்றம்பலம்

THIRU-CH-CHITRAMBALAM

## 111. திருக்கடைமுடி

## 111. THIRU-K-KADAI-MUDI

பண் : வியாழக்குறிஞ்சி

ராகம் : சௌராஷ்டிரம்

*Pann: Viyazha-k-kurinji*

*Raagam : Saurashtram*

அருத்தனையறவனையமுதனைநீர்
விருத்தனைப்பாலனைவினவுதிரேல்
ஒருத்தனையல்லதிங்குலகமேத்தும்
கருத்தவன்வளநகர்கடைமுடியே. 1

அருத்தனை, அறவனை, அமுதனை, - நீர் -
விருத்தனைப், பாலனை, வினவுதிரேல்
ஒருத்தனை, அல்லது இங்கு உலகம் ஏத்தும்
கருத்தவன், வள நகர் - கடைமுடியே.

aruttan2ai, aRavan2ai, amutan2ai,--nIr--
viruttan2ai, pAlan2ai, vin2avutirEl,
oruttan2ai, allatu igku ulakam Ettum
karuttavan2, vaLa nakar--kaTaimuTiyE.

**பொருள்:** சிவபெருமான் வேதத்தின் பொருளாய் விளங்குபவன். அறத்தின் வடிவு உடையவன். அமுதமாக இனியவன். உலகத்தின் மூத்தவனும் இளையவனும் அவனே. உலக மக்கள் யாவரும் இவன் ஒருவனையே போற்றித் தியானித்து வழிபடுகின்றனர். இப்பெருமான் எங்கு இருக்கின்றான் என நீர் வினவினால், அவன் தியானிப்பவரின் உள்ளத்திலும், வளமான நகரமாகிய கடைமுடியிலும் எழுந்தருளியுள்ளான். அங்கு சென்று வழிபடுவீர்களாக!

**குறிப்புரை:** நீர் பொருளாயுள்ளவனும், அறவடிவானவனும், அமுதனுமாகிய இறைவன் இடம் வினவுவீராயின், அது கடைமுடி என்கின்றது. அருத்தன் – பொருள் வடிவானவன். விருத்தன் – மூத்தவன். அருத்தனை . . . . உலகம் ஏத்தும் ஒருத்தனை வினவுதிரேல் கருத்தவன் அல்லது வளநகர் கடைமுடியே எனக் கூட்டுக. இதன் கருத்து அத்தகைய ஒருவனை வினவுதிராயின் அவன் தியானிப்பார் கருத்தினை இடமாகக் கொண்டவன். அன்றியும், கடைமுடியும் இடமாக்கியவன் என்பதாம்.

Lord Civa is

1) the significance of all words especially the Vedas
2) an embodiment of virtue
3) sweet like ambrosia
4) the oldest
5) the youngest

All people in the world declare that there exists no other saviour for them except Lord Civa, who is the final object; saying this they adore and offer worship to Him, with sincere and deep devotion. If you raise a question where such a Lord is entempled, the answer is that He is enshrined in the fertile city of Thiru-k-kadai-mudi. Ye devotees! Go to this place, adore Him and offer worship to His Holy Feet.

திரைபொருதிருமுடிதிங்கள்விம்மும்
அரைபொருபுலியதளடிகளிடம்
திரையொடுநுரைபொருதெண்சுனைநீர்
கரைபொருவளநகர்கடைமுடியே. 2

திரை பொரு திருமுடி திங்கள் விம்மும்
அரை பொரு புலிஅதள் அடிகள் இடம்,
திரையொடு நுரை பொரு தெண்சுனைநீர்
கரை பொரு வள நகர் - கடைமுடியே.

tirai poru tiru muTi tigkaL vimmum
arai poru puli ataL aTikaL iTam,
tiraiyoTu nurai poru teN cun2ai nIr
karai poru vaLa nakar--kaTaimuTiyE.

**பொருள்:** சிவபெருமான் தனது திருமுடியில் ஒளியால் விம்மித் தோன்றும் பிறைமதியையும், அலைகளால் மோதும் கங்கையையும் கொண்டிருப்பவர். புலித்தோலை தனது இடையில் அணிந்திருப்பவர். இப்பெருமான் எழுந்தருளியுள்ள தலமானது, அலைகளுடன் நுரைகள் பொருந்திய தெளிந்த சுனைநீர் கரைகளில் வந்து மோதும் வளமுடைய நகரமான கடை முடியாகும்.

**குறிப்புரை:** கங்கையையும் பிறையையும் அணிந்த திருமுடியையும், புலித்தோலை உடுத்த அரையையும் உடைய அடிகளிடம் கடைமுடி என்கின்றது. திரை – அலை. ஆகுபெயரால் கங்கையை உணர்த்தியது. அதள் – தோல்.

Lord Civan accommodates on His holy matted hair the crescent moon, which appears bulged because of its brightness. Along with the moon, the river Ganges also finds a place in His head where waves dash against each other. He has gracefully worn the tiger skin on His waist. He is enshrined in Thiru-k-kadai-mudi, His favourite place, where the waters of the spring, with foamy waves dash against the banks.

ஆலிளமதியினொடரவுகங்கை
கோலவெண்ணீற்றனைத்தொழுதிறைஞ்சி
ஏலநன்மலரொடுவிரைகமழும்
காலனவளநகர்கடைமுடியே. 3

ஆர் இளமதியினொடு, அரவு, கங்கை,
கோல வெண்நீற்றனைத் தொழுது இறைஞ்சி,
ஏலநல்மலரொடு விரை கமழும்
காலன வள நகர் - கடைமுடியே.

Al iLamatiyin2oTu, aravu, kagkai,
kOla veN nIRRan2ait tozutu iRainjci,
Ela nalmalaroTu virai kamazum
kAlan2a vaLa nakar--kaTaimuTiyE.

***பொருள்:*** சிவபெருமான் கல்லால மரநிழலில் இளமையான மதி, அரவு, கங்கை ஆகியனவற்றைச் சூடிய சடைமுடியுடன் விளங்குகின்றார். அழகிய திருவெண்ணீறை உடல் முழுதும் பூசி உள்ளார். நல்ல மணங்கமழும் மாலைகளையும் மார்பில் அணிந்துள்ளார். மணம் கமழும் திருவடியை உடையவர். இப்பெருமானுடைய தொழுது வணங்குதற்குரிய வளமுடைய நகரம் கடைமுடியாகும்.

***குறிப்புரை:*** இளம்பிறை முதலியவற்றையுடைய இறைவனைத் தொழ, மலர் மணங்கமழும் திருவடியை உடையவன் நகர் கடைமுடி (அடைவோம்) என்கின்றது. இறைஞ்சி என்ற செய்தி என் வினையெச்சத்தைச் செயவென் எச்சமாக மாற்றுக. இறைஞ்சக் கமழும் காலன நகர் எனமுடிக்க.

Lord Civa is adorned on His matted hair with a serpent and the river Ganges. He smears His brilliant body with holy ashes. His feet are fragrant because of sweet smelling flowers strewn at His feet. To pay obeisance and to worship this Lord Civan, ye! devotees understand that He resides in the fertile town of Thiru-k-kadai-mudi. You go to this place and adore Him.

கொய்யணிநறுமலர்க்கொன்றையந்தார்
மையணிமிடறுடைமறையவனூர்
பையணியரவொடுமான்மழுவாள்
கையணிபவனிடங்கடைமுடியே. 4

***கொய் அணி நறுமலர்க்கொன்றைஅம்தார்
மை அணி மிடறு உடை மறையவன்ஊர்,
பை அணி அரவொடு மான் மழுவாள்
கை அணிபவன் இடம் - கடைமுடியே.***

koy aNi naRumalark kon2Rai amtAr
mai aNi miTaRu uTai maRaiyavan2 Ur,
pai aNi aravoTu mAn2 mazuvAL
kai aNipavan2 iTam--kaTaimuTiyE.

***பொருள்:*** சிவபெருமான் தேர்ந்து எடுக்கப்பட்ட அழகிய மணம் கமழும் கொன்றை மலர் மாலையை அணிந்திருப்பவர். விடம் பொருந்திய கண்டத்தை உடையவர். படம் பொருந்திய பாம்பையும், மான், மழு, வாள் ஆகியனவற்றையும் கையில் ஏந்திருப்பவர்.

விளக்கமாய் உள்ள வேதங்களும் முதல்வனாய் உள்ள இப்பெருமானின் ஊரும் இடமும் கடைமுடியாகும்.

**குறிப்புரை:** கொன்றையை அணிந்த நீலகண்டனும், அரவையும், மானையும், மழுவையும் கையில் அணிந்தவனும் ஆகிய இறைவன் இடம் கடைமுடி என்கின்றது. கொய் – கொய்யப் பெற்ற, மை – விடம். பை – படம்.

Lord Civan is decked with a lovely garland woven of fragrant cassia flowers, plucked with care. His neck is dark blue with the hue of venom. He holds in His hands a snake with poisonous sacs, a deer, and a bright battle axe. The town of this primordial Lord of the Vedas is Thiru-k-kadai-mudi.

மறையவனுலகவன்மாயமவன்
பிறையவன்புனலவனனலுமவன்
இறையவனெனவுலகேத்துங்கண்டம்
கறையவன்வளநகர்கடைமுடியே. 5

**"மறை அவன், உலகு அவன், மாயம் அவன்,**
**பிறையவன், புனல் அவன், அனலும் அவன்,**
**இறையவன்" என உலகு ஏத்தும் கண்டம்-**
**கறையவன் வள நகர் - கடைமுடியே.**

"maRai avan2, ulaku avan2, mAyam avan2,
piRaiyavan2, pun2al avan2, an2alum avan2,
iRaiyavan2" en2a ulaku Ettum kaNTam-
kaRaiyavan2 vaLa nakar--kaTaimuTiyE.

**பொருள்:** சிவபெருமான், ஒலி வடிவானவன். பொருட்பிரபஞ்ச வடிவானவன். இவையிரண்டிற்கும் அடியாகிய சுத்தமும் அசுத்தமும் ஆன மாயையும் அவன். உலகம் முழுவதிலும் ஊடுருவி இருப்பவன். சடைமுடியில் பிறையை அணிந்திருப்பவன். கையில் தீயை ஏந்தியிருப்பவன். விடம் பொருந்திய நீல கண்டன். உலகமெல்லாம் இவனே இறைவன் என்று போற்றப்படுபவனாக எழுந்தருளியுள்ள வளமான நகரம் கடைமுடியாகும்.

**குறிப்புரை:** 'எல்லாமாயிருப்பவன் இறையவன்' என உலகேத்துங் கண்டங்கரியவன் இடம் கடைமுடி என்கின்றது. மறையவன் – ஒலி வடிவானவன். உலகவன் – பொருட் பிரபஞ்ச வடிவானவன். மாயம் அவன் – இவையிரண்டிற்கும் அடியாகிய சுத்தமும் அசுத்தமும் ஆன மாயையும் அவன். இறையவன் – எல்லா உயிர்களிலும் உள்ளும் புறமுந் தங்குதலை உடையவன். கறை – விடம்.

Lord Civan composed the Vedas. He is the cosmos. He is one whose actions are full of wonders (*மாயவன்*). He keeps on His matted hair the crescent moon and the river Ganges. He holds fire in His hand. He is hailed by all the people in the world as 'Neela Kantan' (His neck is dark blue in colour - *நீலகண்டன்*). This Civan's favourite place is Thiru-k-kadai-mudi.

படவரவேரல்குற்பல்வளைக்கை
மடவரலாளையொர்பாகம்வைத்துக்
குடதிசைமதியதுசூடுசென்னிக்
கடவுள்தன்வளநகர்கடைமுடியே. 6

***பட அரவு ஏர் அல்குல் பல்வளைக்கை***
***மடவரலாளை ஓர்பாகம் வைத்துக்,***
***குடதிசை மதிஅது சூடு சென்னிக்***
***கடவுள்தன் வள நகர் - கடைமுடியே.***

paTa aravu Er alkul palvaLaikkai
maTavaralALai orpAkam vaittu,
kuTaticai mati atu cUTu cen2n2ik
kaTavuL tan2 vaLa nakar--kaTaimuTiyE.

**பொருள்:** பாம்பின் படம் போன்ற அழகிய அல்குலையும் பலவகையான வளையல்களையும் அணிந்த கைகளை உடைய உமாதேவியை ஒரு பாகமாக வைத்திருப்பவர் சிவபெருமான். மேற்குத் திசையில் தோன்றும் பிறைமதியைச் சடைமுடியில் சூடியிருப்பவர். இக்கடவுளின் வளமான நகரம் கடைமுடியாகும்.

**குறிப்புரை:** உமாதேவியை ஒருபாகம் வைத்து, பிறையைச் சூடும் முடியை உடைய கடவுள் நகர் இது என்கின்றது. பட அரவு ஏர் – அரவின் படத்தையொத்த. மடவரலாள் – உமாதேவி. குடதிசைமதி – இளம்பிறை. பிறை மேற்கின்கண்ணே தோன்றுமாதலின் இங்ஙனம் கூறினார்.

Lord Civan accommodates His consort Umaa Devi on the left portion of His body whose forelap is as beautiful as the hood of cobra. She wears different kinds of bangles in her hands. He keeps the crescent moon appearing in the western sky, in His matted hair. This Lord's favourite place is Thiru-k-kadai-mudi.



திருக்கள்ளில் (திருக்கண்டலம்) – சிவானந்தேஸ்வரர்

**Sivanantesurar Temple - Tirukkallill (Tirukkandalam), Tamil Nadu.**



திருப்பறியலூர் (கீழப் பரசலூர்) – வீரட்டேஸ்வரர் – சோழநாட்டு தென்கரைத் தலம்

**Veerattesurar Temple - Tirupparıyalur (Parasalur), Tamil Nadu.**



திருத்தருமபுரம் – யாழ்முரிநாதர் – சோழநாட்டு தென்கரைத் தலம்
**Yazhmuri Nathar Temple - Dharumapuram, Tamil Nadu.**



கும்பகோணம் (குடந்தைக் காரோணம் சோமேசர் கோயில்) – சோமேசர் – சோழநாட்டு தென்கரைத் தலம்
**Someswar Temple - Kudantai-k-karonam (Kumbakonam) Tamil Nadu.**

பொடிபுல்குமார்பினிற்புரிபுல்குநூல்
அடிபுல்குபைங்கழலடிகளிடம்
கொடிபுல்குமலரொடுகுளிர்சுனைநீர்
கடிபுல்குவளநகர்கடைமுடியே. 7

பொடி புல்கு மார்பினில் புரி புல்கு நூல்,
அடி புல்கு பைங்கழல் அடிகள் இடம்;
கொடி புல்கு மலரொடு குளிர்சுனைநீர்
கடி புல்கு வள நகர் - கடைமுடியே.

poTi pulku mArpin2il puri pulku nUl,
aTi pulku paigkazal, aTikaL iTam;
koTi pulku malaroTu kuLir cun2ai nIr
kaTi pulku vaLa nakar--kaTaimuTiyE.

***பொருள்:*** சிவபெருமானார் தனது திருநீறு அணிந்த மார்பின்கண் முறுக்கேறிய பூணூலை அணிந்திருப்பவர். திருவடிகளில் பொருந்திய அழகிய கழல்களை உடையவர். இப்பெருமான் எழுந்தருளியிருக்கும் இடமானது குளிர்ந்த சுனை நீரில் படர்ந்திருக்கும் கொடிகளில் பூத்துக் குலுங்கும் மலர்களின் மணம் கமழும் வளமான நகரமான கடைமுடியாகும்.

***குறிப்புரை:*** மார்பில் பூணூலையும், திருவடியில் கழலையும் பூண்ட அடிகளிடம் இது என்கின்றது. பொடி – விபூதி. கொடிபுல்கு மலர் – முல்லைக் கொடியில் பொருந்தியுள்ள மலர். கடி – காவல்.

Lord Civan smears His chest with the holy ashes; and also wears the twisted strands of the sacred thread. His divine feet are fastened with well-befitting anklets. This Lord Civan is enshrined in Thiru-k-kadai-mudi, which is a fertile town filled with the fragrance of blossomed flowers from the creepers as well from the cool waters of the spring.

நோதல்செய்தரக்கனை நோக்கழியச்
சாதல்செய்தவனடிசரணெனலும்
ஆதரவருள்செய்தஅடிகளவர்
காதல்செய்வளநகர்கடைமுடியே. 8

நோதல்செய்து அரக்கனை, நோக்கு அழியச்
சாதல்செய்து, அவன், "அடி சரண்!" எனலும்,
ஆதரவு அருள்செய்த அடிகள்அவர்
காதல்செய் வள நகர் - கடைமுடியே.

nOtal ceytu arakkan2ai, nOkku aziyac
cAtal ceytu, avan2, "aTi caraN!" en2alum,
Ataravu aruL ceyta aTikaL avar
kAtal cey vaLa nakar--kaTaimuTiyE.

**பொருள்:** இராவணனுக்கு முதலில் கருணை செய்யாமல் துன்புறச் செய்தவர். பின்பு அவன் சிவன் திருவடியே சரணம் என்று கூறிய அளவில் ஆதரவு காட்டி அருள் செய்தவர். இப்பெருமானான சிவபெருமான் பேரன்புடன் விரும்பி எழுந்தருளியிருக்கும் வளமான நகரம் கடைமுடியாகும்.

**குறிப்புரை:** இராவணன் வலியடக்கி ஆட்கொண்ட இறைவன் இடம் இது என்கின்றது. நோதல் செய்து – வருத்தி. நோக்கு அழிய – திருவருட் பார்வைகெட. சாதல் செய்தவன் – அழிந்து பட்டவனாகிய இராவணன்.

Our Lord harassed Raavanan in the beginning for his misdeeds. Later He blessed Raavanan when he repented for his misdeed and sought refuge in his Holy Feet. This Lord Civan loves to reside in the fertile town of Thiru-k-kadai-mudi.

அடிமுடிகாண்கிலரோரிருவர்
புடைபுல்கியருளென்றுபோற்றிசைப்பச்
சடையிடைப்புனல்வைத்தசதுரனிடம்
கடைமுடியதனயல்காவிரியே. 9

அடி முடி காண்கிலர் ஓர்இருவர்
புடை புல்கி, "அருள்!" என்று போற்றி இசைப்பச்,
சடைஇடைப் புனல் வைத்த சதுரன் இடம் -
கடைமுடி; அதன அயல் காவிரியே.

aTi muTi kANkilar Or iruvar
puTai pulki, "aruL!" en2Ru pORRu icaippa,
caTai iTaip pun2al vaitta caturan2 iTam--
kaTai muTi; atan2 ayal kAviriyE.

**பொருள்:** திருமாலும் பிரமனும் சிவபெருமானது அடிமுடியைக் காணாதவராக அவரை அணுகி, 'அருள் செய்க' என்று போற்றி வழிபட்டனர். அவர் தனது சடைமுடியில் கங்கையை அணிந்த பேராற்றல் மிக்கவர். அவருடைய தலமாக விளங்குவது, காவிரியின் அருகில் உள்ள கடைமுடியாகும்.

**குறிப்புரை:** அடிமுடி அறியாத அயனும் மாலும் அருள் என்று போற்றிசைப்ப. கங்கை சூடிய பெருமானிடம் இது என்கின்றது. புடைபுல்லி – அணுகி.

Brahma and Thirumaal could not see Lord Civan's holy head and feet and failed in their search. Later they realised their folly, and adored Him and worshipped Him and pleaded for His grace. This Lord Civan wearing the river Ganges on His matted hair chose to reside in Thiru-k-kadai-mudi near where the river Cauvery flows.

மண்ணுதல்பறித்தலுமாயமிவை
எண்ணியகாலவையின்பமல்ல
ஒண்ணுதலுமையையொர்பாகம்வைத்த
கண்ணுதல்வளநகர்கடைமுடியே. 10

*மண்ணுதல் பறித்தலும் மாயம் இவை;*
*எண்ணியகால், அவை இன்பம் அல்ல;*
*ஒண் நுதல் உமையை ஓர்பாகம் வைத்த*
*கண்ணுதல் வள நகர் - கடைமுடியே.*

maNNutal paRittalum mAyam ivai;
eNNiyakAl, avai in2pam alla;
oN nutal umaiyai or pAkam vaitta
kaNNutal vaLa nakar--kaTaimuTiyE.

**பொருள்:** நீரில் பலகாலம் மூழ்குதலும், தங்களது முடியைப் பறித்தலுமாகிய புத்த, சமண விரதங்கள் பொய்யானவை. ஆராய்ந்து பார்க்கையில் இவை இன்பத்தைத் தரா. ஒளி பொருந்திய நெற்றியை உடைய உமாதேவியை ஒருபாகமாக வைத்துள்ள கண்ணுதலோனின் (சிவபெருமானின்) வளமான நகரம் கடைமுடியாகும்.

**குறிப்புரை:** முழுகுதலும், மயிர் பறித்தலும் ஆகிய இந்த விரத ஒழுக்கங்கள் யாவும் வெறும் மாயம்; எண்ணும் பொழுது இவை இன்பமாகா. உமாதேவியைப் பாகம் வைத்த பெருமானது இடம் இது என்கின்றது. ஒள்நுதல் – ஒளிபொருந்திய நெற்றி.

The rituals of Buddhists to take bath several times in the water and that of Samanars plucking the hair from their head are all dishonest practices. When these actions are analysed, they will bring no happiness. Ye devotees! realise that Lord Civan who has a third eye on His forehead and who is concorporate with His consort Umaa Devi whose visage is splendorous has chosen to live in the city Thiru-k-kadai-mudi (To this city, please go and offer worship).

பொன்திகழ்காவிரிப்பொருபுனல்சீர்
சென்றடைகடைமுடிச்சிவனடியை
நன்றுணர்ஞானசம்பந்தன்சொன்ன
இன்தமிழிவைசொலஇன்பமாமே. 11

பொன் திகழ் காவிரிப் பொரு புனல் சீர்
சென்று அடை கடைமுடிச் சிவன் அடியை
நன்று உணர் ஞானசம்பந்தன் சொன்ன
இன்தமிழ் இவை சொல, இன்பம்ஆமே.

pon2 tikaz kAvirip poru pun2al cIr
cen2Ru aTai kaTaimuTic civan2 aTiyai
nan2Ru uNar njAn2acampantan2 con2n2a
in2tamiz ivai cola, in2pam AmE.

***பொருள்:*** அழகு பொருந்திய காவிரி ஆற்றின் அலைகளின் நீர் முறையாகச் சென்று அடையும் தலம் கடைமுடியாகும். இங்கு எழுந்தருளி இருக்கும் சிவபெருமானின் திருவடிப் பெருமைகளை நன்கு உணர்ந்த ஞானசம்பந்தன் இப்பதிகத்தைப் பாடினார். இனிய தமிழாகிய இத்திருப்பதிகப் பாடல்களை ஓதி வழிபடுவோர்க்கு இன்பம் பிறக்கும்.

***குறிப்புரை:*** காவிரியின் நீர்வளம் மிகுந்த கடைமுடியின்கண் எழுந்தருளியுள்ள சிவனடியைப்பற்றித் திருஞானசம்பந்தன் சொன்ன இனிய தமிழைச் சொல்ல இன்பமாம் என்கின்றது. பொருபுனல் – கரையை மோதுகின்ற நீர், பொன்திகழ் காவிரி – பொன்னியெனப் பெயர் தாங்கித் திகழ்கின்ற காவிரி. பொன் – அழகுமாம். சீர் சென்றடை சிவன் எனக் கூட்டுக. உரைப்பார் உரைக்கும் புகழ்களை உடையான் இவனென உணராதே உரைப்பினும், சென்றடைவது சிவனையே என்பதாம். சீர் சென்றடை கடைமுடி எனலுமாம்.

Gnaanasambandan who has well recognised the greatness of Lord Civan has sung these ten sweet Tamil verses on His Holy Feet. He is enshrined in Thiru-k-kadai-mudi, where the water waves of river Cauvery reach regularly carrying sands mixed with fine particles of gold. Reciting these verses one will get supreme bliss in one's life.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*111ஆம் பதிகம் முற்றிற்று*
End of 111th Hymn

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# 112. திருச் சிவ புரம்

## திருத்தல வரலாறு

21–ஆம் திருப்பதிகம் பார்க்க.

## பதிக வரலாறு

21–ஆம் திருப்பதிகம் பார்க்க.

# 112. THIRU-CH-CHIVA-PURAM

## HISTORY OF THE PLACE

See 21st Hymn.

## INTRODUCTION TO THE HYMN

See 21st Hymn.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 112. திருச் சிவபுரம் — 112. THIRU-CH-CHIVA-PURAM

பண் : வியாழக்குறிஞ்சி — *Pann: Viyazha-k-kurinji*
ராகம் : சௌராஷ்டிரம் — *Raagam : Saurashtram*

இன்குரலிசைகெழும்யாழ்முரலத்
தன்கரமருவியசதுரன்நகர்
பொன்கரைபொருபழங்காவிரியின்
தென்கரைமருவியசிவபுரமே. 1

இன்குரல்இசை கெழும் யாழ் முரலத்
தன் கரம் மருவிய சதுரன் நகர் -
பொன் கரை பொரு பழங்காவிரியின்
தென்கரை மருவிய சிவபுரமே.

in2kural icai kezum yAz muralat
tan2 karam maruviya caturan2 nakar--
pon2 karai poru pazagkAviriyin2
ten2 karai maruviya civapuramE.

**பொருள்:** சிவபுரம் என்ற நகரமானது, இனிய ஒலியும், இசையும் பொருந்திய யாழ் இசை ஒலிக்குமாறு அதனைத் தனது கரத்தில் ஏந்தியவாறு விளங்கும் சமர்த்தரான சிவபெருமானின் நகரமாகும். இந்த நகரம் பழமையான காவிரி ஆற்றின் நீர் வந்து அழகிய கரையினை மோதுமாறு அமைந்த, அதன் தென்கரையில் அமைந்துள்ளது.

**குறிப்புரை:** யாழேந்திய கரத்தன் நகர் சிவபுரம் என்கின்றது. முரல் – ஒலிக்க.

Lord Civan, the most ingenious (*சதுரன்*) one shines by holding in His hands the lute in the proper way enabling the strings to produce sweet harmonious musical sound with a suitable background noise. His place is called Thiru-ch-chiva-puram which is on the southern bank of the ancient Cauvery river whose waters splash against its beautiful banks.

அன்றடற்காலனைப்பாலனுக்காய்ப்
பொன்றிடவுதைசெய்தபுனிதன்நகர்
வென்றிகொளெயிற்றுவெண்பன்றிமுன்னாள்
சென்றடிவீழ்தருசிவபுரமே. 2

*அன்று அடல் காலனைப் பாலனுக்குஆய்ப்*
*பொன்றிட உதைசெய்த புனிதன் நகர் -*
*வென்றி கொள் எயிற்று வெண்பன்றி முன்நாள்*
*சென்று அடி வீழ்தரு சிவபுரமே.*

an2Ru aTal kAlan2aip pAlan2ukku Ayp
pon2RiTa utai ceyta pun2itan2 nakar--
ven2Ri koL eyiRRu veNpan2Ri mun2nAL
cen2Ru aTi vIztaru civapuramE.

*பொருள்:* சிவபுரம் என்ற நகரமானது, முற்காலத்தில் மார்க்கண்டேயன் என்ற பாலனுக்காக, யமன் அழியுமாறு அவனை காலால் உதைத்தருளிய புனிதரான சிவபெருமானின் நகரமாகும். இந்த நகரம், தனது கோரைப் பல்லால் வெற்றி பெறும், வெள்ளைப் பன்றியாக அவதரித்த திருமால், முற்காலத்தில் சிவன் திருவடியைப் பணிந்து வழிபட்ட நகரமாகும்.

**குறிப்புரை:** மார்க்கண்டற்காகக் காலனை உதைத்தவன் நகர் இது என்கின்றது. அடல் – வலிமை. பொன்றிட – அழிய. எயிறு – கொம்பு. வெண்பன்றி – திருமாலாகிய சுவேதவராகம். இது இத்தலவரலாற்றுக் குறிப்பை அருளியது.

Once in the ancient days, Lord Civan, the pure and holy one (*புனிதன்*), kicked the dreadful Kaalan, to death, in order to save His devotee Maarkkandēyan, the brahmachari sixteen years of age. This Lord Civan's place is Thiru-ch-chiva-puram. In the past Thirumaal incarnated as a white hog having sharp teeth for attaining victory, came to this place, prostrated before the holy feet of Lord Civan and worshipped Him.

மலைமகள்மறுகிடமதகரியைக்
கொலைமல்கவுரிசெய்தகுழகன்நகர்
அலைமல்குமரிசிலினதனயலே
சிலைமல்குமதிளணிசிவபுரமே. 3

*மலைமகள் மறுகிட, மதகரியைக்*
*கொலை மல்க உரிசெய்த குழகன் நகர் -*
*அலை மல்கும் அரிசிலின் அதன் அயலே*
*சிலை மல்கு மதிள் அணி சிவபுரமே.*

malaimakaL maRukiTa, matakariyaik
kolai malka uriceyta kuzakan2 nakar--
alai malkum aricilin2 atan2 ayalE
cilai malku matil aNi civapuramE.

**பொருள்:** சிவபுரம் என்ற நகரமானது, மலைமகளாகிய பார்வதி தேவி அஞ்சுமாறு மதம் பொருந்திய யானை ஒன்று அவள் எதிரே ஓடி வந்தது. உடனே சிவபெருமான் அதன் எதிரே சென்று அதனைக் கொன்று, அதன் தோலை உரித்துப் போர்த்திக் கொண்ட அழகிய சிவபெருமானின் நகரமாகும். இந்நகரம் அலைகள் நிறைந்த அரிசிலாற்றின் கரை அருகே மலைபோன்ற மதில்களை உடையதுமாக விளங்குகின்றது.

**குறிப்புரை:** மலைமகள் அஞ்ச யானையை உரித்த இறைவன் நகர் இது என்கின்றது. மறுகிட – கலங்க. உரிசெய்த – உரித்த. குழகன் – இளமையை உடையவன். சிலை மல்கும் – மலைபோல் விளங்கும்.

Goddess Paarvathi Devi got scared at the sight of an exhilarated elephant approaching her. Lord Civan the ever young one (*குழகன்*) faced and killed the elephant

and stripped off its skin and covered His body with that skin. This Lord Civan resides in Thiru-ch-chiva-puram. This town is situated on the banks of river 'Arisilaaru' and has mountain like big forts.

மண்புனலனலொடுமாருதமும்
விண்புனைமருவியவிகிர்தன்நகர்
பண்புனைகுரல்வழிவண்டுகிண்டிச்
செண்பகமலர்பொழிற்சிவபுரமே. 4

மண், புனல், அனலொடு, மாருதமும்,
விண், புனை மருவிய விகிர்தன் நகர் -
பண் புனை குரல்வழி வண்டு கெண்டிச்
செண்பகம் அலர் பொழில் சிவபுரமே.

maN, pun2al, an2aloTu, mArutamum,
viN, pun2ai maruviya vikirtan2 nakar--
paN pun2ai kuralvazi vaNTu keNTic
ceNpakam alar pozil civapuramE.

***பொருள்:*** சிவபுரம் என்ற நகரமானது, மண், நீர், தீ, காற்று, ஆகாயம் என்ற ஐம்பூதங்களாக பொருந்தி விளங்கும் விகிர்தனான சிவபெருமானின் நகரமாகும். இந்நகரம், பண் இசை பொருந்திய குரலோடு வண்டுகள் தோண்ட, செண்பகப் பூக்கள் மலரும் பொழில்களால் சூழப்பட்டுள்ளது.

***குறிப்புரை:*** ஐம்பூதமாகிய விகிர்தனது நகர் இதுவாம் என்கின்றது. மாருதம் – காற்று. பண்புனை குரல் – பண்ணைச் செய்கின்ற குரல்.

The pre-eminent Supreme Lord Civan (*விகிர்தன்*) manifests Himself as the **earth, water, fire, air and ether**. He is enshrined in Thiru-ch-chiva-puram. This city is surrounded by groves full of champak flower plants (*செண்பகச்செடி;* Michelia). The flowers in these plants blossom due to the bees humming melodiously in musical mode and kindling the buds.

வீறுநன்குடையவள்மேனிபாகம்
கூறுநன்குடையவன்குளிர்நகர்தான்
நாறுநன்குரவிரிவண்டுகிண்டித்
தேறலுண்டெழுதருசிவபுரமே. 5

வீறு நன்கு உடையவள் மேனி பாகம்
கூறு நன்கு உடையவன் குளிர் நகர்தான் -
நாறு நன் குர விரி வண்டு கெண்டித்
தேறல் உண்டு எழுதரு சிவபுரமே.

vIRu nan2ku uTaiyavaL mEn2i pAkam
kURu nan2ku uTaiyavan2 kuLir nakartAn2--
nARu nan2 kura viri vaNTu koNTit
tERal uNTu ezutaru civapuramE.

**பொருள்:** ஒப்பற்ற அழகால் தனித்தன்மை பெற்ற உமையம்மையைத் தனது திருமேனியில் ஒருபாகமாக உடையவனாகிய சிவபெருமான் விரும்பும் குளிர்ச்சியான நகரம் சிவபுரம் ஆகும். இச்சிவபுரம், மணம் வீசுகின்ற நல்ல குராமலரை, வண்டுகள் கிண்டி அதன் தேனை உண்டு மகிழ்ந்து விளங்கும் பொழில்களால் சூழப்பட்டுள்ள நகரம் ஆகும்.

**குறிப்புரை:** உமாதேவியை ஒரு பாகங்கொண்டவன் நகர் இதுவாம் என்கின்றது. வீறு – தனிப்பெருமை. நாறு நல்குரவிரி – மணம் வீசுகின்ற நல்லகுராமலர். விரி – மலர். முதனிலைத் தொழிலாகு பெயர். தேறல் – தேன்.

Lord Civan accommodates His consort Umaa Devi on the left half of His body whose beauty is without equal. This Lord is enshrined in the cool Thiru-ch-chiva-puram, which is girt with groves where bees kindle the fragrant common battle flowers (*குராமலர்*) and suck the honey and fly about in delight.

மாறெதிர்வருதிரிபுரமெரித்து
நீறதுவாக்கியநிமலன்நகர்
நாறுடைநடுபவருழவரொடும்
சேறுடைவயலணிசிவபுரமே. 6

மாறு எதிர்வரு திரிபுரம் எரித்து,
நீறுஅது ஆக்கிய நிமலன் நகர் -
நாறு உடை நடுபவர் உழவரொடும்
சேறு உடை வயல் அணி சிவபுரமே.

mARu etirvaru tiripuram erittu,
nIRu atu Akkiya nimalan2 nakar--
nARu uTai naTupavar uzavaroTum
cERu uTai vayal aNi civapuramE.

**பொருள்:** பகைமை உணர்வோடு மாறுபட்டுத் தன்னை எதிர்த்து வந்த அசுரர்களின் முப்புரங்களை எரித்து நீறாக்கிய பரிசுத்தனான சிவபெருமானின் நகரம் சிவபுரம் ஆகும். இது, உழவர்களோடு நாற்று நடும் மகளிர் பலரைக் கொண்ட, சேற்று வளம் மிக்க வயல்களால் அழகு பெறும் நகரமாகும்.

**குறிப்புரை:** திரிபுரங்களை நீறாக்கிய நிமலன் நகர் இதுவாம் என்கின்றது. மாறு – பகையாக. நாறு – நாற்று.

The pure Supreme Being (நிமலன்) Lord Civan burnt the three citadels of the Asuraas who encountered Him with different hostile feelings. He is enshrined in Thiru-ch-chiva-puram which is surrounded by lush miry fields where a good number of folks (maids) plant seedlings along with the farmers. Such is the beautiful landscape of Thiru-ch-chiva-puram.

ஆவிலைந்தமர்ந்தவனரிவையொடு
மேவிநன்கிருந்ததொர்வியன்நகர்தான்
பூவில்வண்டமர்தருபொய்கையன்னச்
சேவல்தன்பெடைபுல்குசிவபுரமே. 7

ஆவில்ஐந்து அமர்ந்தவன் அரிவையொடு
மேவி நன்கு இருந்தது ஓர் வியல்நகர்தான் -
பூவில் வண்டு அமர்தரு பொய்கைஅன்னச் -
சேவல் தன் பெடை புல்கு சிவபுரமே.

Avil aintu amarntavan2 arivaiyoTu
mEvi nan2ku iruntatu or viyal nakartAn2--
pUvil vaNTu amartaru poykai an2n2ac-
cEval tan2 peTai pulku civapuramE.

**பொருள்:** பசுவிலிருந்து கிடைக்கும் பால், தயிர் முதலிய ஐந்து பொருள்களை விரும்பும் சிவபெருமான் உமையம்மையோடு கூடி மகிழ்ந்து இருக்கும் பெரிய நகரம் சிவபுரம் ஆகும். இந்நகரம், தேனைப் பருகுவதற்காக வண்டுகள் வந்து மொய்க்கும் மலர்களை உடைய

பொய்கைகளில், அன்னச் சேவல் தன் பெடையை புல்லி மகிழும் அழகுடைய நகரம் ஆகும்.

**குறிப்புரை:** ஆனைந்தாடும் பரமன் அம்மையோடும் எழுந்தருளி இருந்த இடமாம் என்கின்றது. ஆவில் ஐந்து – பஞ்சகவ்யம். அரிவை – உமாதேவி. பூவில் வண்டு கண்ணயர்ந்திருக்கும் பொய்கையிலே, அன்னச் சேவல் தன் பெடையைப் புல்லும் சிவபுரம் என்பதாம்.

Thiru-ch-chiva-puram is the big town where Lord Civan joyfully resides with His consort Umaa Devi. This Lord Civan loves very much to use the five products of the cow i.e. milk, curd, ghee, etc., all known as Panchakavyam (*பஞ்சகவ்யம்*). This town is filled with many ponds, where bees hum around flowers in search of honey. Here the swans, male and female embrace each other joyfully. Such is the beauty of Thiru-ch-chiva-puram.

எழில்மலையெடுத்தவல்லிராவணன்றன்
முழுவலியடக்கியமுதல்வன்நகர்
விழவினிலெடுத்தவெண்கொடிமிடைந்து
செழுமுகிலடுக்கும்வண்சிவபுரமே. 8

எழில் மலை எடுத்த வல்இராவணன்தன்
முழுவலி அடக்கிய முதல்வன் நகர் -
விழவினில் எடுத்த வெண்கொடி மிடைந்து,
செழு முகில் அடுக்கும் வண் சிவபுரமே.

ezil malai eTutta val irAvaNan2 tan2
muzuvali aTakkiya mutalvan2 nakar--
vizavin2il eTutta veNkoTi miTaintu,
cezu mukil aTukkum vaN civapuramE.

**பொருள்:** அழகிய கயிலை மலையைப் பெயர்க்க முயற்சி செய்த வலிமை மிகுந்த இராவணனின் முழுவலிமையையும் அடக்கிய முதல்வனாகிய சிவபெருமான் விரும்பித் தங்கும் ஊர் சிவபுரம் ஆகும். இந்நகரில், விழாக்காலங்களில் உயர்த்திய வெண்மையான கொடிகள் வானில் நிறைந்து, மேகத்தை அணுகும். அவைகள் கரிய மேகங்களோடு கலந்து நிற்கும் வளமை மிகுந்த நகரமாகும்.

**குறிப்புரை:** இராவணனின் வலியடக்கிய முதல்வன் நகர் இது என்கின்றது. எழில்மலை – அழகிய கயிலை. உற்சவத்தில் உயர்த்திய கொடிகள் மேகத்தை அணுகும் சிவபுரம் என விழாச் சிறப்பும், கொடியின் உயரமும் உரைத்தவாறு.

Raavanan the mighty warrior tried to lift the lovely mount Kailash, the abode of Civa. Lord Civan the Supreme subdued the full might of Raavanan. This Civan is enshrined in the imposing Thiru-ch-chiva-puram, where numberless white temple flags flutter against the back drop of the black clouds during the festival period.

சங்களவியகையன்சதுர்முகனும்
அங்களவறிவரியவன்நகர்தான்
கங்குலும்பறவைகள்கமுகுதொறும்
செங்கனிநுகர்தருசிவபுரமே.

9

சங்கு அளவிய கையன், சதுர்முகனும்,
அங்கு அளவு அறிவு அரியவன் நகர்தான் -
கங்குலும் பறவைகள் கமுகுதொறும்
செங்கனி நுகர்தரு சிவபுரமே.

cagku aLaviya kaiyan2, caturmukan2um,
agku aLavu aRivu ariyavan2 nakartAn2--
kagkulum paRavaikaL kamukutoRum
cegkan2i nukartaru civapuramE.

**பொருள்:** சங்கு ஏந்திய கையினை உடைய திருமாலும், நான்முகனும் அடிமுடியைத் தேடியும் அறியப் பெறாத சிவபெருமானின் நகரம் சிவபுரம் ஆகும். இந்நகரத்தில் இரவிலும் பறவைகள் கமுக மரங்களில் தங்கிச் செங்கனிகளை நுகரும் வளமை மிக்க நகரமாகும்.

**குறிப்புரை:** அயனும் மாலும் அறியப் பெறாதவன் நகர் இதுவாம் என்கின்றது. சங்கு அளவிய கையன் – பாஞ்சசன்யம் என்னும் சங்கு கலந்த கையை உடையவன். அளவு – உயரமும், ஆழமும் ஆகிய புற அளவு இரவிலுங்கூடப் பறவைகள் கமுகுதோறும் பழநுகரும் நகர் என்று இருபோதும் பறவைக்கு உபகாரப்படுவது உரைக்கப் பெற்றது.

Thirumaal holds the divine chank - Paancha-chanyam (பாஞ்ச சன்யம்) in His hands. He and Brahma in the olden days could not succeed in their efforts to see the holy feet and head of Lord Civan. This Lord Civan is enshrined in Thiru-ch-chiva-

puram where birds during night hours fly, settle in the areca nut trees and enjoy eating the red fruits therein. Thiru-ch-chiva-puram is such an affluent city.

மண்டையிற்குண்டிகைமாசுதரும்
மிண்டரைவிலக்கியவிமலன்நகர்
பண்டமர்தருபழங்காவிரியின்
தெண்டிரைபொருதெழுசிவபுரமே. 10

மண்டையின், குண்டிகை, மாசு தரும்,
மிண்டரை விலக்கிய விமலன் நகர் -
பண்டு அமர்தரு பழங்காவிரியின்
தெண்திரை பொருது எழு சிவபுரமே.

maNTaiyin2, kuNTikai, mAcu tarum,
miNTarai vilakkiya vimalan2 nakar-
paNTu amartaru pazagkAviriyin2
teNtirai porutu ezu civapuramE.

**பொருள்:** உண்கலம், கமண்டலம் ஆகியவற்றை கையில் ஏந்தி, அழுக்குடைய உடம்போடு அறிவற்ற பிறச் சமயத்தினரை விலக்கும் சிவபெருமானின் நகரம் சிவபுரம் ஆகும். இந்நகரம் பழமையான காலத்திலிருந்தே காவிரி நீரால் வளமை சேர்க்கப்பட்ட நகரம் ஆகும்.

**குறிப்புரை:** புறச்சமயிகளை விலக்கிய விமலன் நகரிதுவாம் என்கின்றது. மண்டை – உண்கலம். மாசு – அழுக்கு. பண்டு அமர் தரு பழங்காவிரி – முன்னமே வளந்தரும் பழங்காவிரி எனப் பழமைக்கு எல்லை கூறியவாறு.

Samanars carry begging bowls and water jugs and roam about in arrogance with dirty bodies. Lord Civan discarded these people. He is enshrined in Thiru-ch-chiva-puram where since ancient times, the waves in the fast running Cauvery river have been dashing against the banks.

சிவனுறைதருசிவபுரநகரைக்
கவுணியர்குலபதிகாழியர்கோன்
தவமல்குதமிழிவைசொல்லவல்லார்
நவமொடுசிவகதிநண்ணுவரே. 11

சிவன் உறைதரு சிவபுர நகரைக்
கவுணியர்குலபதி - காழியர்கோன் -
தவம் மல்கு தமிழ் இவை சொல்ல வல்லார்
நவமொடு சிவகதி நண்ணுவரே.

civan2 uRaitaru, civapuranakaraik
kavuNiyar kulapati--kAziyarkOn2--
tavam malku tamiz ivai colla vallAr
navamoTu civakati naNNuvarE.

**பொருள்:** சிவபெருமான் எழுந்தருளியுள்ள சிவபுரம் நகரைப் போற்றி, கவுணிய குலப்பதியாகிய காழியர் தலைவன் ஞான சம்பந்தன் இப்பதிகத்தைப் பாடினார். தவத்தைத் தரும் இத்தமிழ்ப் பதிகத்தை ஓதவல்லவர்கள் புதுமைகள் பலவும் பெற்று முடிவில் சிவகதி சேர்வர்.

**குறிப்புரை:** சிவபுரத்தைக் காழிநாதன் கூறிய பாடலைச் சொல்ல வல்லவர் சிவகதி சேர்வர் எனப் பயன் கூறியது. நவம் – புதுவை. திருச்சிவபுரம் வேறு; திருச்சிரபுரம் வேறு என்பதறிக.

The Chief of the Kauniyan clan – the prince of Seekaazhi has hailed, in Austerity, these '(Tapas) – conferring hymns', in Tamil, on Lord Civan of Thiru-ch-chiva-puram. Those who are well versed in these hymns, and chant them will flourish in ever new splendour and will gain the final bliss (*சிவகதி*).

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*112*ஆம் பதிகம் முற்றிற்று
End of 112th Hymn

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# 113. திருவல்லம்

## திருத்தல வரலாறு:

திருவல்லம் தொண்டை நாட்டுத் திருத்தலங்களுள் ஒன்று. வேலூர் ஆர்க்காட்டில் இருந்து பேருந்துகளில் செல்லலாம். இத்தலம் இப்பொழுது திருவலம் என வழங்கப் பெறுகிறது. வில்வாரண்ய தலம், தீக்காலி என்பான் பூசித்துப் பேறு பெற்றமையான் தீக்காலி வல்லம் எனவும் வழங்கும். நவக்கிரகங்களும், வல்லாளனும் பூசித்துப் பேறு பெற்றனர். சுவாமி வல்ல நாதர். இறைவி வல்லாம்பிகை. தீர்த்தம் கெளரி தீர்த்தம்.

## கல்வெட்டு:

கோப்பர கேசரியான இராஜேந்திர சோழன் (கி.பி. 1050–62) 3ஆம் ஆண்டில் உத்தியோகஸ்தன் ஒருவனிடம் இருந்து 25 கழஞ்சு பொன் வாங்கித் தீட்சிதரிடம் கொடுத்தான். அதே ஆண்டில் வாணபுரத்தில் உள்ள பேரவையோர் சங்கரதேவன் மகனான வைதும்ப சோமநாதனுக்கு 1000 குழி நிலம் விற்றதையும் அவர்கள் அதைத் திருவைய ஈசுவரருக்கு உரிமையாக்கியதையும் குறிக்கிறது. 4ஆம் ஆண்டில் முதல் இராஜராஜன் உத்தியோகத்தனான ஈராயிரவன் பல்லவராயனால் இராஜராஜேஸ்வரர் கருப்பக்கிரகம் கட்டப் பெற்றது. 2 விளக்கிற்காக 2000 குழி நிலமும் அளிக்கப் பெற்றது.

கோராஜகேசரி வர்மனான இராஜமகேந்திரன் காலத்து 2ஆம் ஆண்டில் படைத்தலைவன் ஒருவன் திருவல்லம் பேரவையில் இருந்து 800 குழி நிலம் பெற்று அதைக் கோயிலுக்குக் கொடுத்தான். அதன் விலை 64 காசு (22 கழஞ்சு 8 மஞ்சாடி). குலோத்துங்கன் 23ஆம் ஆண்டில் ஒரு சுங்கத்தலைவனால் வீரசோழன் மனைவியான தன்னுடைய மகளுக்கு நன்றுண்டாக விளக்குப் போடப்பெற்றது. மூன்றாம் குலோத்துங்கன் 8ஆம் ஆண்டில் திரிசூலக்காசு கோயிலுக்கு அளிக்கப் பெற்றது. 34ஆம் ஆண்டில் கங்க அரசியான அரியபிள்ளையால் இரண்டு விளக்கு தானம் செய்யப் பெற்றன. முதல் கோராஜகேசரி வர்மன், 7ஆம் ஆண்டில் இறைவித் திருவுருவம் செய்யவும் ஒரு விளக்குக்கும் ஒரு பிராமணனால் 1700 குழி நிலமும் தூய்நாட்டில் மந்திரம் பேரவையினின்றும், 1700 குழி நிலமும் வாங்கப் பெற்றன. 26ஆம் ஆண்டில் 4ஆம் விக்கிரமாதித்தனிடமும் 3ஆம் ஜயசிம்மனிடமும் வெற்றி பெற்றமையும் கோயிலுக்கு விளக்கு பொருத்தியமையும் தெரிகிறது.

7ஆம் ஆண்டில் மதுராந்தக கண்டராதித்தன் கோயிலுக்கு வந்தமையும் 1000 குடங்களால் அபிஷேகித்தமையும், வருமானத்தை ஆராய்ந்தமையும் குறிக்கப் பெற்றுள்ளன.

முதலாம் கோராஜஇராஜகேசரிவர்மன் 16ஆம் ஆண்டில் 700 குழி நிலம் சங்கர தேவனுக்கு விற்றமையும் அவன் அதைத் திருவைய ஈசுவரருக்கு அளித்தமையும் தெரிகிறது. கோராசகேசரிவர்மன் இராஜராஜதேவன் 20ஆம் ஆண்டில் 90 ஆடுகள் தானம் செய்தான். 3ஆம் ஆண்டில் தூய்நாட்டில் உள்ள குக்கனூர் கிராமத்தின் வருவாய்களைத் திருவல்லம் கோயிலுக்குக் கொடுத்தான். மகாவலி வாணராயனது பொன்படு குட்டத்தில் உள்ள சில நிலங்களை ஒருவன் வாங்கி விளக்கிற்காகவும் படையலுக்காகவும் கொடுத்தான். வாண வித்தியாதரன் காலத்து விளக்கெரிக்க 20 கழஞ்சு பொன் கொடுக்கப் பெற்றது. முதலாம் விக்கிரமாதித்தன் வேண்டுகோளின்படி மூன்று கிராமங்கள் (விடேல் விடுகு விக்கிரமாதித்த சதுர்வேதி மங்கலம்) தானம் செய்யப்பட்டன. வாணராயனது சகம் 810ல் எட்கூரில் உள்ள ஒரு பார்ப்பனனால் கார நாட்டில் உள்ள வன்னிப்பேடு கிராமத்தாரிடம் 25 கழஞ்சு பொன் கொடுக்கப் பெற்று அதன் வட்டியில் இருந்து விளக்குப் போடப்பட்டது. சோழ பூபன் மகனான வீரசம்பன் சகம் 1236இல் அர்த்த மண்டபம் ஞானமூர்த்தி என்ற பெயருடைய துறவியாலும் பிருதா அரசனாலும் கட்டப் பெற்றது. மேலும் கருப்பக்கிருகமும் கட்டப் பெற்றது. வீரசம்பன் படைத்தலைவனா ? ஒரு நாயகனா ? என்று ஊகிக்க வேண்டியுள்ளது. வாண வித்தியாதர ராஜன் என்கிற வாணராயன் விளக்கிற்கு நெய்யிட 25 கழஞ்சு பொன் வழங்கினான். விசய கண்ட கோபால தேவன் மூன்றாம் ஆண்டில் அழகிய பல்லவன் காலத்து 3ஆம் இராஜராஜன் நிலமணியக் காரர் 1.16 பாக வரியையும் 1.5 பாக வரியையும் தள்ளியமை தெரிகிறது. முதலாம் ராஷ்டிரகுப்த அமோகவர்ஷணன் மருமகன் காலத்து பொற்கொல்லன் ஒருவன் கோயிலுக்கு நிலம் தானம் செய்தான்.

## பதிக வரலாறு:

திருமாற்பேறு உடையவர்தம் திருவருள் பெற்றுத் திருவல்லத்தை அடைந்த சிவஞானச் செம்மலார், அங்குள்ள பெருமானுக்கு 'எரித்தவன் முப்புரம்' என்னும் திருப்பதிகப் பெரும்பிணையலை அணிவித்தார்.

## 113. THIRU-VALLAM

### HISTORY OF THE PLACE

This sacred place is in Thondai Naadu and can be reached by bus from Veloor Aarkkaadu. The place is now known as Thiruvalam. It is also known as Theekkaali Vallam, after Theekkaali who offered worship here.

The Lord's name is Vallanaathar and the Goddess is called Vallaambikai. The sacred ford is Gouritheerththam. It is in a forest of Vilvam trees. The 'Navagrahas' and one Vallaalan worshipped here and attained salvation.

Of the voluminous information revealed by the inscriptions here, most of which refer to the numerous grants of lands and other gifts, the most interesting items are as follows: An official of Raajaraajan I had the sanctum of Raajaraajesuvarar shrine built and endowed it with 2000 'kuzhi' land for 2 lamps. The king Madhuraanthaka Kandaraadhiththan came to the temple in his 7th year of reign to perform an ablution with 1000 pots of water, and he also inspected the temple accounts during his visit.

### INTRODUCTION TO THE HYMN

Having adored the Lord at Thiru-maar-pēru, our saint arrived at Thiru-vallam and hailed Him in the following hymn:

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 113. திருவல்லம்

## 113. THIRU-VALLAM

பண் : வியாழக்குறிஞ்சி
ராகம் : சௌராஷ்டிரம்

***Pann: Viyazha-k-kurinji***
***Raagam : Saurashtram***

எரித்தவன்முப்புரமெரியின்மூழ்கத்
தரித்தவன்கங்கையைத்தாழ்சடைமேல்
விரித்தவன்வேதங்கள்வேறுவேறு
தெரித்தவனுறைவிடந்திருவல்லமே. 1

எரித்தவன், முப்புரம் எரியில் மூழ்கக்;
தரித்தவன், கங்கையைத் தாழ்சடைமேல்;
விரித்தவன் வேதங்கள்; வேறுவேறு
தெரித்தவன்; உறைவுஇடம் - திருவல்லமே.

erittavan2, muppuram eriyil mUzka;
tarittavan2, kagkaiyait tAzcaTaimEl;
virittavan2 vEtagkaL; vERuvERu
terittavan2, uRaivu iTam--tiru vallamE.

**பொருள்:** சிவபெருமான் அசுரர்களின் கோட்டையான முப்புரங்களையும் தீயில் மூழ்குமாறு செய்து அழித்தவன். தனது தாழ்ந்து தொங்கும் சடையின்மீது கங்கையைத் தரித்தவன். வேதங்களை அருளிச் செய்தவன். அவற்றின் பொருள்களை ஆறு அங்கங்களுடன் தெளிவாக உணர்த்தியவன். இப்பெருமான் உறைந்திருக்கும் இடம் திருவல்லமாகும்.

**குறிப்புரை:** முப்புரம் எரித்தவன். சடையிற் கங்கையைத் தரித்தவன். வேதங்களை விரித்தவன். வேறு வேறு தெரித்தவன் இடம் திருவல்லம் என்கின்றது. விரித்தவன் – பரப்பியவன். தெரித்தவன் – பொருளுணர்த்தியவன்.

Lord Civan destroyed the three citadels of the Asuras and completely burnt them in fire. In His hanging matted hair He holds the river Ganges. He formulated the four Vedas. Thereafter He elaborately explained them in six subsidiaries known as six Angaas. Lord Civan who is the father of all these activities is enshrined in Thiru-vallam.

தாயவனுலகுக்குத்தன்னொப்பிலாத்
தூயவன்தூமதிசூடியெல்லாம்
ஆயவனமரர்க்கும்முனிவர்கட்கும்
சேயவனுறைவிடந்திருவல்லமே. **2**

தாயவன் உலகுக்குத், தன்ஒப்புஇலாத்
தூயவன், தூ மதிசூடி, எல்லாம்
ஆயவன், அமரர்க்கும் முனிவர்கட்கும்
சேயவன், உறைவுஇடம் - திருவல்லமே.

tAyavan2 ulakukku, tan2 oppu ilAt
tUyavan2, tU mati cUTi, ellAm
Ayavan2, amararkkum mun2ivarkaTkum
cEyavan2, uRaivu iTam--tiru vallamE.

**பொருள்:** சிவபெருமான் உலக உயிர்களுக்குத் தாய் போன்று இருப்பவன். தனக்கு யாரையும் உவமை சொல்ல முடியாத பரிசுத்தன். தூய மதியை முடியில் சூடியிருப்பவன். எல்லாப் பொருளுமாக ஆனவன். ஞானம் கைவரப் பெறாத போகிகள் ஆன தேவர்களுக்கும் மானசீலராக முனிவர் முதலானோக்குத் தொலையாக இருப்பவன். இப்பெருமான் உறைந்திருக்கும் இடம் திருவல்லம் ஆகும்.

**குறிப்புரை:** உலகுக்குத் தாயானவன், ஒப்பில்லாத் தூயவன். தேவர்கட்கும் முனிவர்கட்கும் சேயவன் திருத்தலம் திருவல்லம் என்கின்றது. அமரர் முனிவர் இருவரும் போகிகளாயும், மனைசீலர்களாயும் இருத்தலின் அவர்களுக்குச் சேயவனானான் என்று அருளினர். இவர்களுக்குச் சேயவன் எனவே ஞானிகட்கு மிக அண்ணியன் என்பதாம்.

Lord Civan is the mother of the entire cosmos. He is the matchless embodiment of purity. He accommodates the pure crescent moon on His head. He manifests Himself in all matters in the world. He is inaccessible even to the Devas who enjoy worldly life and to the sages whose faith is only on their minds. Such great Lord Civan is enshrined in Thiru-vallam.

பார்த்தவன்காமனைப்பண்பழியப்
போர்த்தவன்போதகத்தின்னுரிவை
ஆர்த்தவன்நான்முகன்தலையையன்று
சேர்த்தவனுறைவிடந்திருவல்லமே. 3

பார்த்தவன், காமனைப் பண்பு அழியப்;
போர்த்தவன், போதகத்தின்உரிவை;
ஆர்த்தவன் நான்முகன் தலையை, அன்று
சேர்த்தவன்; உறைவுஇடம் - திருவல்லமே.

pArttavan2, kAman2aip paNpu aziya;
pOrttavan2, pOtakattin2 urivai;
Arttavan2 nAn2mukan2 talaiyai, an2Ru
cErttavan2; uRaivu iTam--tiru vallamE.

**பொருள்:** சிவபெருமான் மன்மதனின் அழகு கெடுமாறு அவனை நெற்றிக் கண்ணால் பார்த்து எரித்து அழித்தவன். யானையின் தோலை உரித்துப் போர்த்தவன். ஆணவத்தால் ஆர்ப்பரித்த பிரமனின் ஐந்து தலைகளில் ஒன்றை முன்னொரு காலத்தில் பறித்து

அத்தலையின் ஓட்டைக் கையில் உண்கலனாகச் சேர்த்தவன். இப்பெருமான் உறைந்திருக்கும் இடம் திருவல்லம் ஆகும்.

**குறிப்புரை:** காமனை எரித்தவன், யானையை உரித்தவன், பிரமனைச் சிரம் கொய்தவன் இடம் இது என்கின்றது. பண்பு – அழகு. போதகம் – யானைக் கன்று. உரிவை – தோல். ஆர்த்தவன் – ஆரவாரம் செய்த பிரமன்.

Lord Civan frowned upon Manmathan (*மன்மதன்* – God of Love) destroyed his beauty and burnt him by opening His third eye in the forehead. He peeled the skin of the elephant and covered His body with that skin. He plucked one of the five heads of the ego-centered pompous Brahma and used it as His begging bowl. This Lord abides in Thiru-vallam.

கொய்தவம்மலரடிகூடுவார்தம்
மைதவழ்திருமகள்வணங்கவைத்துப்
பெய்தவன்பெருமழையுலகமுய்யச்
செய்தவனுறைவிடந்திருவல்லமே. 4

*கொய்த அம் மலர் அடி கூடுவார்தம் -*
*மை, தவழ் திருமகள் வணங்க வைத்துப்,*
*பெய்தவன், பெருமழை; உலகம் உய்யச்*
*செய்தவன்; உறைவுஇடம் - திருவல்லமே.*

koyta am malar aTi kUTuvAr tam-
mai, tavaz tirumakaL vaNagka vaittu,
peytavan2, peru mazai; ulakam uyyac
ceytavan2; uRaivu iTam--tiru vallamE.

**பொருள்:** கொய்த அழகிய மலரைக் கொண்டு, மனம் ஒருமித்துத் தூவிப் போற்றி வழிபடுபவர்களுக்குத் திருமகள் செல்வச் செழிப்பினை இணங்கி அருளுமாறு செய்ய வைத்தும் உலகம் உய்யப் பெருமழை பெய்யுமாறு செய்து பஞ்சத்தைப் போக்கும் ஈசன் உறையும் இடம் திருவல்லம் ஆகும்.

**குறிப்புரை:** தம் அடியை வணங்குவாரைத் திருமகள் வணங்க வைத்து, உலகம் உய்யப் பெருமழை பெய்யச் செய்தவன் உறைவிடம் வல்லம் என்கின்றது. கொய்த அம் மலரடி – கொய்த அழகிய மலரை

அணிந்த திருவடி. கூடுவார்தம்மை – தியானிப்பவர்களை. தவழ்திருமகள் – நிலையாமல் தவழ்ந்து கொண்டே இருக்கின்ற இலட்சுமியை.

Lord Civan bids Thirumagal, the goddess of wealth to bestow all richness to those devotees who pluck selected well fragrant flowers and places them at His feet with devoted single mindedness. He also causes the great and timely rain to pour and thus saves the world from famine.

சார்ந்தவர்க்கின்பங்கள்தழைக்கும்வண்ணம்
நேர்ந்தவன்நேரிழையோடுங்கூடித்
தேர்ந்தவர்தேடுவார்தேடச்செய்தே 5
சேர்ந்தவனுறைவிடந்திருவல்லமே.

சார்ந்தவர்க்கு இன்பங்கள் தழைக்கும் வண்ணம்
நேர்ந்தவன்; நேரிழையோடும் கூடித்,
தேர்ந்தவர் தேடுவார் தேடச் செய்தே
சேர்ந்தவன்; உறைவு இடம் - திருவல்லமே.

cArntavarkku in2pagkaL tazaikkum vaNNam
nErntavan2; nErizaiyOTum kUTi,
tErntavar tETuvAr tETac ceytE
cErntavan2; uRaivu iTam--tiru vallamE.

**பொருள்:** சிவபெருமானது திருவடியே சரணம் என்று சார்ந்து உள்ள அடியவர்களுக்கு எல்லாவிதமான இன்பங்களும் தழைக்கும் வண்ணம் செய்கின்றான். உமையம்மையோடு கூடி அருள் வழங்குபவன். தேர்ந்த ஞானியரையும் தேடுபவர்களையும் தொடர்ந்து இடைவிடாமல் தேடச் செய்து, அவர்களுக்கு உள்நின்று அருள் செய்பவன். இப்பெருமான் உறைந்திருக்கும் இடம் திருவல்லம் ஆகும்.

**குறிப்புரை:** சார்ந்தவர்க்கு இன்பம் நல்கி, பார்வதியோடும் இருப்பவனும், தெளிந்தாரும் தேடுவாரும் தேடச் செய்தே அவர்களிடம் சேர்ந்திருப்பவனும் ஆகிய சிவன் இடம் இது என்கின்றது. சார்ந்தவர்க்கு – திருவடியே சரண் என்று சார்ந்த ஞானிகட்கு. நேர்ந்தவன் – திருவுளம் பற்றியவன். தேர்ந்த ஞானியரையும் தேடச் செய்து அவர்கட்குப் பாலினெய் போலவும் தேடுவாரைத் தேடச் செய்து விறகின் தீப்போலவும் தோன்றி நிற்பவன்.

Lord Civan joins His consort Umaa Devi, who wears fine jewellery. He graces with happiness those devotees, who surrender to His holy feet. He causes His chosen ones and others who quest after Him, to continue their quest, but remains with them inside their heart and graces them.

பதைத்தெழுகாலனைப்பாதமொன்றால்
உதைத்தெழுமாமுனிக்குண்மைநின்று
விதிர்த்தெழுதக்கன்றன்வேள்வியன்று
சிதைத்தவனுறைவிடந்திருவல்லமே. 6

பதைத்து எழு காலனைப் பாதம் ஒன்றால்
உதைத்து எழு மா முனிக்கு உண்மை நின்று,
விதிர்த்து எழு தக்கன்தன் வேள்வி அன்று
சிதைத்தவன் உறைவு இடம் - திருவல்லமே.

pataittu ezu kAlan2aip pAtam on2RAl
utaittu, ezu mA mun2ikku uNmai nin2Ru,
vitirttu ezu takkan2 tan2 vELvi an2Ru
citaittavan2 uRaivu iTam--tiru vallamE.

**பொருள்:** தன்னைச் சினந்து வந்த எமனை இடக்காலால் உதைத்தவன். தன்னை வணங்கி எழுந்த மார்க்கண்டேயனுக்கு உண்மைப் பொருளாய் எதிர் நின்று உணர்த்தி அருள் செய்தவன். நன்னெறியிலிருந்து பிறழ்ந்து தடுமாறிய தக்கன் செய்த வேள்வியை முன்னொரு காலத்தில் சிதைக்க வீரபத்திரனை ஏவியவன் சிவபெருமான். இப்பெருமான் உறைந்திருக்கும் இடம் திருவல்லம் ஆகும்.

**குறிப்புரை:** காலனை உதைத்தும், மார்க்கண்டர்க்கு உண்மைப் பொருளாய் எதிர்நின்றும், தக்கன் யாகத்தினைத் தகர்த்தும் நின்ற இறைவன் இடம் இது என்கின்றது. மாமுனி – மார்க்கண்டர். விதிர்த்து – நடுங்கி.

Lord Civan kicked down with His left foot, Yama, the god of death, who came in great fury to take away the life of His devotee, the great Muni Maarkandēyan. When Maarkantēyan got up and prostrated before Lord Civan, He exposed His Real form and graced him. Dhakshan arranged a big sacrifice with an evil motive of insult. Lord

Civan laid to waste the sacrifice and punished most of those assembled there through Veerabhadra. This Lord Civan is enshrined in Thiru-vallam.

7. This verse was not available.

இகழ்ந்தருவரையினையெடுக்கலுற்றாங்
ககழ்ந்தவல்லரக்கனையடர்த்தபாதம்
நிகழ்ந்தவர்நேடுவார்நேடச்செய்தே 8
திகழ்ந்தவனுறைவிடந்திருவல்லமே.

இகழ்ந்து அரு வரையினை எடுக்கல்உற்று, ஆங்கு
அகழ்ந்த வல்அரக்கனை அடர்த்த பாதம்
நிகழ்ந்தவர், நேடுவார், நேடச் செய்தே
திகழ்ந்தவன் உறைவு இடம் - திருவல்லமே.

ikazntu aru varaiyin2ai eTukkal uRRu, Agku
akaznta val arakkan2ai aTartta pAtam
nikazntavar, nETuvAr, nETac ceytE
tikazntavan2 uRaivu iTam--tiru vallamE.

**பொருள்:** தனது வலிமைக்கு இது எம்மாத்திரம் என்று இகழ்ந்து, அரிய கயிலை மலையை எடுத்து அப்புறப்படுத்தும் பொருட்டு முயற்சி செய்த இராவணனை நெரித்த திருவடியை உடையவன். அந்தத் திருவடியையே எப்பொழுதும் சரணடைந்து தேடுபவர்களுக்கு அவர்கள் உள்ளத்திலேயே ஒளியாக விளங்குபவன். இப்பெருமான் உறைந்திருக்கும் இடம் திருவல்லம் ஆகும்.

**குறிப்புரை:** இராவணன் வலியடக்கிய பாதத்தைத் தேடுவார் தேடச்செய்தே எமக்கு எளிமையாகத் திகழ்ந்தவன் நகர் இது என்கின்றது. இகழ்ந்து அருவரையினை – இது என் வலிக்கு எம் மாத்திரம் என்று இகழ்ந்து அரிய கயிலையை. நிகழ்ந்தவர் – பாதத்தை நிகழ் பொருளாகக் கண்டவர்கள். நேடுவார் – தேடுபவர்கள்.

The egoistic Raavanan who ignored the greatness of Civa and His abode, tried to lift the mount Kailash and keep it apart. Lord Civan by pressing the mountain by His holy feet crushed him. Whereas Lord Civan graces and abides in the hearts of those sincere devotees who consider the Lord's feet as the permanent goal of their life and offer worship at His feet. This Lord Civan resides at Thiru-vallam.

பெரியவன்சிறியவர்சிந்தைசெய்ய
அரியவனருமறையங்கமானான்
கரியவன்நான்முகன்காணவொண்ணாத்
தெரியவன்வளநகர்திருவல்லமே. 9

பெரியவன்; சிறியவர் சிந்தை செய்ய
அரியவன்; அருமறை அங்கம் ஆனான்;
கரியவன், நான்முகன், காண ஒண்ணாத்
தெரியவன்; வளநகர் - திருவல்லமே.

periyavan2; ciRiyavar cintaiceyya
ariyavan2; arumaRai agkam An2An2;
kariyavan2, nAn2mukan2, kANa oNNAt
teriyavan2; uRaivu iTam--tiru vallamE.

**பொருள்:** சிவபெருமான் யாவற்றுக்கும் முதற் பொருளாய் இருத்தல் போன்று யாவர்க்கும் பெரியவனாய் விளங்குபவர். அறிவிற் சிறியவர்கள் சிந்தித்து உணர்தற்கு இயலாதவன். அரிய வேதங்களும் அவற்றின் அங்கங்களும் ஆனவன். திருமாலாலும் பிரம்மாவாலும் காண இயலாதவன். முனைப்படங்கிய முத்தான்மாக்களுக்கு விளங்கி நிற்பவன். இப்பெருமான் எழுந்தருளியிருக்கும் வளமான நகரம் திருவல்லம் ஆகும்.

**குறிப்புரை:** பெரியவன், சிறியவர்கள் தியானித்தற்கு அரியவன். வேதமும் அங்கமும் ஆனான், அயனும் மாலுங்காண ஒண்ணாத தெரியவன் நகர் இது என்கின்றது. தெரியவன் – தெரிய நிற்பவன். முனைப்படங்கிய முத்தான்மாக்களுக்கு விளங்கி நிற்பவன் என்பதாம்.

Lord Civan is greater than all others. He cannot, therefore, be thought of by those in their minds who are ignorant. He is the rare Vedas and their six subsidiaries (Angaas), He is invisible to Thirumaal and Brahma; whereas He is visible to those who are great in their love to humanity and never think of any evil to others. This Lord Civan is enshrined in Thiru-vallam.

அன்றியஅமணர்கள்சாக்கியர்கள்
குன்றியஅறவுரைகூறாவண்ணம்
வென்றவன்புலனைந்தும்விளங்களங்கும்
சென்றவனுறைவிடந்திருவல்லமே. 10

அன்றிய அமணர்கள், சாக்கியர்கள்,
குன்றிய அறஉரை கூறா வண்ணம்
வென்றவன், புலன் ஐந்தும்; விளங்க எங்கும்
சென்றவன்; உறைவு இடம் - திருவல்லமே.

an2Riya amaNarkaL, cAkkiyarkaL,
kun2Riya aRa urai kURA vaNNam
ven2Ravan2, pulan2 aintum; viLagka egkum
cen2Ravan2; uRaivu iTam--tiru vallamE.

**பொருள்:** சமணர்களும் புத்தர்களும் அறம் குன்றிய உரைகளைக் கூறுகின்றனர். ஐம்புலன்களை வென்ற சான்றோர்களுக்கு எங்கும் விளங்கித் தோன்றுபவனாகிய சிவபெருமானின் உறைவிடம் திருவல்லம் ஆகும்.

**குறிப்புரை:** சமணரும், புத்தரும் அறமிலா உரை பேசாவண்ணம் ஐம்புலன்களையும் வென்றவன் நகர் வல்லம் என்கின்றது. அன்றிய – மாறுபட்ட. அறம் குன்றிய உரை என மாறுக.

The Jains and the Buddhists who foster doctrinal differences among themselves, preach unrighteous sermons. Lord Civan triumphed over them; He is ever the conqueror of the five senses. He pervades everywhere splendidly. This Lord Civan abides in Thiru-vallam.

கற்றவர்திருவல்லங்கண்டுசென்று
நற்றமிழ்ஞானசம்பந்தன்சொன்ன
குற்றமில்செந்தமிழ்கூறவல்லார்
பற்றுவரீசன்பொற்பாதங்களே. 11

கற்றவர் திருவல்லம் கண்டுசென்று,
நல்-தமிழ் ஞானசம்பந்தன் சொன்ன
குற்றம்இல் செந்தமிழ் கூற வல்லார்
பற்றுவர், ஈசன் பொன்பாதங்களே.

kaRRavar tiru vallam kaNTu cen2Ru,
nal-tamiz njAn2acampantan2 con2n2a
kuRRam il centamiz kURa vallAr
paRRuvar, Ican2 pon2pAtagkaLE.

**பொருள்:** சிறந்த அறிவுடையவர் வாழும் திருவல்லத்தைத் தரிசித்துச் சென்று, நற்றமிழில் வல்ல ஞானசம்பந்தன் இப்பதிகத்தைப் பாடினார். குற்றமற்ற இச்செந்தமிழ்ப் பதிகத்தைப் பாடவல்லவர்கள் சிவபெருமானின் அழகிய திருவடிகளை அடைவர்.

**குறிப்புரை:** ஞானசம்பந்தப் பெருமான் திருவல்லத்தைக் கண்டு சொன்ன குற்றம்இல் செந்தமிழ்ப் பாடலாகிய இவற்றைக் கூறவல்லவர் ஈசன் பாதங்களைப் பற்றுவர் என்கின்றது. கண்டு சென்று சொன்ன என்பதால் இப்பதிகம் திருவல்லத்தை வழிபட்டுப்போன பின்பு சிவானந்தாநுபவம் சிந்தையில் நிறைய ஆக்கப்பெற்றதாகும் என்பது அறியப்பெறும்.

Thiru-vallam is the town where great scholars abide in large numbers and cultivate dedication to Lord Civan. Those who visit this place and hail Him with these flawless Tamil hymns sung by Gnaanasambandan, (the great scholar in Tamil) will gain the golden feet of Lord Civan.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*113ஆம் பதிகம் முற்றிற்று*
End of 113th Hymn

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# 114. திருமாற்பேறு

## திருத்தல வரலாறு

55ஆம் பதிகம் பார்க்க.

## பதிக வரலாறு

55ஆம் பதிகம் பார்க்க.

# 114. THIRU-MAAR-PĒRU

## HISTORY OF THE PLACE

See 55th Hymn.

## INTRODUCTION TO THE HYMN

See 55th Hymn.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 114. திருமாற்பேறு

பண் : வியாழக்குறிஞ்சி
ராகம் : சௌராஷ்டிரம்

குருந்தவன்குருகவன்கூர்மையவன்
பெருந்தகைபெண்ணவனாணுமவன்
கருந்தடமலர்க்கண்ணிகாதல்செய்யும்
மருந்தவன்வளநகர்மாற்பேறே. 1

குருந்து அவன், குருகு அவன், கூர்மை அவன்,
பெருந்தகை, பெண் அவன், ஆணும் அவன்,
கருந்தடமலர்க்கண்ணி காதல் செய்யும்
மருந்து அவன், வள நகர் - மாற்பேறே.

## 114. THIRU-MAAR-PĒRU

*Pann: Viyazha-k-kurinji*
*Raagam : Saurashtram*

kuruntu avan2, kuruku avan2, kUrmai avan2,
peruntakai, peN avan2, ANum avan2,
karuntaTa malarkkaNNi kAtal ceyyum
maruntu avan2, vaLa nakar--mARpERE.

**பொருள்:** சிவபெருமான் குருந்த மரத்தடியில் குருவாக நின்றவன். எப்போதும் இளமையாக இருப்பவன். பேரறிவுடையவன். பெருந்தன்மை உடையவன். பெண் மற்றும் ஆண் வடிவோடு விளங்குபவன். தடாகத்தில் பூக்கும் கருநீல மலர் போன்ற கண்களை உடைய உமையம்மையால் விரும்பப்படுபவன். பிறவிப் பிணியைப் போக்கும் அரிய மருந்தாக விளங்குபவன். இப்பெருமான் எழுந்தருளியிருக்கும் வளமையான நகரம் திருமாற்பேறாகும்.

**குறிப்புரை:** இப்பதிகம், மருந்தாய், மாறிலியாய், உமாபதியாய், கயிலாய பதியாய், காலகாலனாய், முனிவரும் தேவரும் மக்களும் ஒருசேர வணங்கத்தகும் எளிமையனாய் மாதுடையனாய், பிறை முதலிய சூடியவனாய், எந்தையாய் இருப்பவன் நகர் மாற்பேறு என்கின்றது. குருந்தவன் – குருந்த மரத்தடியிற் குருவானவன். இவ்வுரை மாணிக்கவாசகர் காலத்துக்கு ஞானசம்பந்தப் பெருமான் பின்னவராயிருந்தவர் எனக் கொள்ளலாம். குருந்து – குருத்து எனலும் ஆம். குருகவன் – வயிர வகைகளில் ஒன்றானவன். மருந்து – அமுதம்.

Lord Civan is the spiritual teacher who gave initiation to Saint Maanikkavaachakar sitting under the Kurunta Tree in Thiru-p-perun-thurai (குருந்தவன்); He is diamond (குருகவன் - one of the varieties of diamond); He is an embodiment of sharp intellect (நுட்பபுத்தி - கூர்மையானவன்). He is one of great dignity (Nobility - பெருந்தகை). He appears as the male and the female. He is like nectar and the love lord of Umaa Devi whose eyes are beautiful like the blue lily flowers that blossom in the pool such is Thiru-maar-pēru where this Lord abides.

பாறணிவெண்டலைகையிலேந்தி
வேறணிபலிகொளும்வேட்கையனாய்
நீறணிந்துமையொருபாகம்வைத்த
மாறிலிவளநகர்மாற்பேறே.

2

பாறு அணி வெண் தலை கையில் ஏந்தி
வேறு அணி பலி கொளும் வேட்கையனாய்,
நீறு அணிந்து உமை ஒருபாகம் வைத்த
மாறுஇலி வள நகர் - மாற்பேறே.

pARu aNi veNtalai kaiyil Enti,
vERu aNi pali koLum vETkaiyan2Ay,
nIRu aNintu, umai orupAkam vaitta
mARu ili vaLa nakar-mARpERE.

**பொருள்:** சிவபெருமான் தனது கையில் பருந்தால் புலால் நீக்கப்பட்ட வெள்ளிய தலையோட்டை ஏந்தியுள்ளான். உலகம் முழுவதும் வேறுபட்ட அழகுடன் சென்று பலியேற்கும் பற்றுள்ளம் கொண்டவன். திருமேனி முழுவதும் திருநீறு பூசியிருப்பவன். உமையம்மையை ஒருபாகமாக வைத்திருப்பவன். தனக்கு ஒப்புவமை இல்லாத இப்பெருமான் எழுந்தருளியிருக்கும் வளமையான நகரம் திருமாற்பேறாகும்.

**குறிப்புரை:** பாறு – பருந்து. மாறிலி – மாறுபாடில்லாதவன்.

Lord Civan holds in His hand a white human skull from which the flush pieces have been eaten away by the kites. With a longing to beg, He goes about with a beautiful appearance different from the normal worldly beautiful people. He smears His body with holy ashes. He concorporates His consort in one part of His body. This peerless Lord Civan has chosen to reside in the fertile Thiru-maar-pēru.

கருவுடையாருலகங்கள்வேவச்
செருவிடையேறியுஞ்சென்றுநின்
றுருவுடையாளுமையாளுந்தானும் 3
மருவியவளநகர்மாற்பேறே.

கரு உடையார் உலகங்கள் வேவச்,
செரு விடை ஏறி முன் சென்று நின்று
உரு உடையாள் உமையாளும் தானும்
மருவிய வள நகர் - மாற்பேறே.

karu uTaiyAr ulakagkaL vEva,
ceru viTai ERi mun2 cen2Ru nin2Ru,
uru uTaiyAL umaiyALum tAn2um
maruviya vaLa nakar--mARpERE.

**பொருள்:** சிவபெருமான் ஊழிக்காலத்தில் கருவில் பிறந்த ஆன்மாக்களுக்காக படைக்கப்பட்ட உலகங்களை அழியுமாறு செய்பவன். போரில் வல்ல விடைமீது ஏறி வருபவன். இப்பெருமான் அழகிய இடையினை உடைய உமையாளும் தானுமாய்ச் சென்று எழுந்தருளியிருக்கும் வளமையான நகரம் திருமாற்பேறாகும்.

**குறிப்புரை:** கருவுடையார் உலகங்கள் வேவ பிறப்புடைய ஆன்மாக்களின் போக நுகர்ச்சிக்காகப் படைக்கப் பெற்ற உலகங்கள் அழிய. உரு – அழகிய.

Lord Civan created this world for the benefit of all souls to enjoy life. At the time of deluge He destroys the entire cosmos as well this earth. He travels all around mounting on the warring bull. He and His consort, the slender waist Umaa Devi reached the fertile Thiru-maar-pēru and are enshrined there conspicuously gracing the devotees.

தலையவன்தலையணிமாலைபூண்டு
கொலைநவில்கூற்றினைக்கொன்றுகந்தான்
கலைநவின்றான்கயிலாயமென்னும்
மலையவன்வளநகர்மாற்பேறே. 4

தலையவன், தலைஅணிமாலை பூண்டு
கொலை நவில் கூற்றினைக் கொன்று உகந்தான்,
கலை நவின்றான், கயிலாயம் என்னும்
மலையவன், வள நகர் - மாற்பேறே.

talaiyavan2, talai aNimAlai pUNTu
kolai navil kURRin2aik kon2Ru ukantAn2,
kalai navin2RAn2, kayilAyam en2n2um
malaiyavan2, vaLa nakar--mARpERE.

**பொருள்:** சிவபெருமான் எல்லாருக்கும் தலைமையானவன். அழகிய தலைமாலையை அணிந்திருப்பவன். உயிரைக் கொல்ல விருப்பத்தோடு வந்த கூற்றுவனைக் கொன்று மகிழ்ந்தவன். எல்லாக் கலைகளையும் உலகிற்கு அருளியவன். கயிலை மலை என்னும் மலையில் வீற்றிருக்கும் இப்பெருமானின் வளமையான நகரம் திருமாற்பேறாகும்.

**குறிப்புரை:** தலையணி மாலை – கபால மாலை. நவில் – விரும்பும்.

Lord Civan is the Chief of the cosmos and all everywhere. He is decked with a garland of skulls in His head. He killed the killer god of death and stood happily. He expounded the sixty-four arts and sciences. He belongs to mount Kailas. He is enshrined in the fertile Thiru-maar-pēru.

துறையவன்தொழிலவன்தொல்லுயிர்க்கும்
பிறையணிசடைமுடிப்பெண்ணொர்பாகன்
கறையணிமிடற்றண்ணல்காலற்செற்ற
மறையவன்வளநகர்மாற்பேறே. 5

**துறை அவன், தொழிலவன், தொல்உயிர்க்கும்**
**பிறை அணி சடைமுடிப் பெண்ஓர்பாகன்,**
**கறை அணி மிடற்று அண்ணல், காலன் செற்ற**
**மறையவன், வள நகர் - மாற்பேறே.**

tuRai avan2, tozilavan2, tol uyirkkum
piRai aNi caTai muTip peN OrpAkan2,
kaRai aNi miTaRRu aNNal, kAlaR ceRRa
maRaiyavan2, vaLa nakar--mARpERE.

**பொருள்:** சிவபெருமான் பல்வேறு நீதிநெறிகளாய் இருப்பவன். பழமையாக வரும் உயிர்களுக்கு ஐந்தொழில்களைப் புரிபவன். பிறையணிந்த சடைமுடியை உடையவன். உமையம்மையை ஒரு பாகமாகக் கொண்டிருப்பவன். விடக்கறை பொருந்திய கண்டத்தினை உடையவன். எல்லாருக்கும் தலைமையானவன். காலனை அழித்த இரகசியப் பொருளானவன். இப்பெருமான் எழுந்தருளியிருக்கும் வளமையான நகரம் திருமாற்பேறாகும்.

**குறிப்புரை:** துறையவன் – பல நெறிகளாய் இருப்பவன். தொழிலவன் – ஐந்து தொழிலை உடையவன். கறை – விடம்.

Lord Civan is the embodiment of all virtue and moral ways. He performs the five fold acts such as creation, sustenance, dissolution, obscuration, and blissful absorption for the salvation of souls. His matted hair is adorned with a crescent moon. He has accommodated His consort Umaa Devi on the left half of His body. He is the Supreme Lord whose neck is dark blue in colour because of the poison positioned in His throat. He is the originator of the Vedas. He kicked Kaalan to death. This Lord Civan happily resides in the fertile Thiru-maar-pēru.

பெண்ணினல்லாளையொர்பாகம்வைத்துக்
கண்ணினாற்காமனைக்காய்ந்தவன்றன்
விண்ணவர்தானவர்முனிவரொடு
மண்ணவர்வணங்குநன்மாற்பேறே. 6

பெண்ணின் நல்லாளை ஓர்பாகம் வைத்துக்
கண்ணினால் காமனைக் காய்ந்தவன்தன்,
விண்ணவர் தானவர் முனிவரொடு
மண்ணவர் வணங்கும், நல் மாற்பேறே.

peNNin2 nallALai OrpAkam vaittuk
kaNNin2Al kAman2aik kAyntavan2tan2,
viNNavar tAn2avar mun2ivaroTu
maNNavar vaNagkum, nal mARpERE.

**பொருள்:** சிவபெருமான் பெண்களில் பேரழகுடைய உமையம்மையை ஒரு பாகமாக வைத்திருந்தும், காமனை தனது நெற்றிக் கண்ணால் எரித்து அழித்தவன். தேவர்கள், அசுரர்கள், முனிவர்கள் மற்றும் மண்ணுலக மக்கள் ஆகியோர்களால் வணங்கப் பெறுபவன். இப்பெருமான் எழுந்தருளியிருக்கும் வளமையான நகரம் திருமாற்பேறாகும்.

**குறிப்புரை:** உமையையொருபாகம் வைத்தும் மன்மதனைக் கண்ணாற் காய்ந்தவன் என்பதில் நயம் ஓர்க. விண்ணவர் முதலானோர் ஒப்ப வணங்கத் தகும் எளிமையில் இருப்பவன் என இறைவனுடைய ஒப்புநோக்கும் பேரருள் உரைக்கப்பட்டது.

The most handsome among women Umaa Devi occupies Civa's left portion of His body; yet Civan burnt Kaaman by His third eye (in His forehead). He is adored by the celestial, the asuraas, sages and by earthly people. He resides in this fertile town Thiru-maar-pēru.

7. Verse not available.

தீதிலாமலையெடுத்தவ்வரக்கன்
நீதியால்வேதகீதங்கள்பாட
ஆதியானாகியஅண்ணலெங்கள்
மாதிதன்வளநகர்மாற்பேறே. 8

தீது இலா மலை எடுத்த(வ்) அரக்கன்
நீதியால் வேதகீதங்கள் பாட,
ஆதியான் ஆகிய அண்ணல், எங்கள்
மாதிதன் வள நகர் - மாற்பேறே.



திருக்கச்சி ஏகம்பம் – காஞ்சீபுரம் – ஏகாம்பரநாதர்
**Ekampara Nathar Temple - Kacchi Ekampam, Kancheepuram, Tamil Nadu.**



திருவாரூர் – வன்மீகநாதர் – சோழநாட்டு தென்கரைத் தலம்
**Vanmika Nathar Temple - Tiruvarur, Tamil Nadu**



திருக்குற்றாலம் – குரும்பலா ஈசர் – பாண்டிய நாட்டுத் தலம்
**Kurumpalaa Eesar Temple - Tirukkutralam, Tamil Nadu.**



நொடித்தான்மலை (திருக்கயிலாயம்) – கயிலாயநாதர்
**Kayilaya Nathar Mount - Notithanmalai (Kailash), North India. (Western & Tibet)**

tItu ilA malai eTutta(v) arakkan2
nItiyAl vEta kItagkaL pATa,
AtiyAn2 Akiya aNNal, egkaL
mAti tan2 vaLa nakar--mARpERE.

**பொருள்:** குற்றமற்ற கயிலை மலையைப் பெயர்த்த அரக்கனான இராவணனைக் கால் விரலால் நெரித்தவர் சிவபெருமானாகும். அவன் தனது பிழையை உணர்ந்து, முறையாக வேத கீதங்கள் பாடியவுடன் அவனுக்கு அருள் புரிந்தவரும் இவரே. ஆதி முதல்வனான எங்கள் தலைவர். ஒரு பெண்ணை பாகமாகக் கொண்டுள்ளார். இப்பெருமானார் எழுந்தருளியிருக்கும் வளமையான நகரம் திருமாற்பேறாகும்.

**குறிப்புரை:** மாதி – மாதினை உடையவன்.

Lord Civan crushed the Raakshasa Raavanan by His toe, when he tried to uproot the flawless and sacred mount Kailas, in the first instance. Later when Raavanan repented and begged for pardon by singing Vedic hymns, He forgave and blessed him. He is our primordial god who is concorporate with His consort by accommodating her on the left half of His body. This Lord Civan's fertile place is Thiru-maar-pēru.

செய்யதண்டாமரைக்கண்ணனொடும்
கொய்யணிநறுமலர்மேலயனும்
ஐயனன்சேவடியதனையுள்க
மையல்செய்வளநகர்மாற்பேறே. 9

செய்யதண்தாமரைக்கண்ணனொடும்
கொய் அணி நறுமலர்மேல் அயனும்
ஐயன் நன்சேவடி அதனை உள்க,
மையல் செய் வள நகர் - மாற்பேறே.

ceyya taN tAmaraik kaNNan2oTum
koy aNi naRumalar mEl ayan2um
aiyan2 nan2 cEvaTi atan2ai uLka,
maiyal cey vaLa nakar--mARpERE.

**பொருள்:** திருமால் குளிர்ச்சியான சிவந்த தாமரை மலர் போன்ற கண்களை உடையவன். பிரமன், கொய்து அணியத்தக்க தாமரை மலர்மேல் விளங்குபவன். இவர்கள் இருவரும், பெருவிருப்பத்துடன், தலைவனான சிவபெருமானை நினைத்து வழிபடும் வளமையான நகரம் திருமாற்பேறாகும்.

**குறிப்புரை:** ஐயன்நன்சேவடி – தலைவனுடைய நல்ல சேவடியை. மையல் – விருப்பம்.

Thirumaal's eyes are like ruddy lotus. Brahma is seated on the fragrant lotus flower which is plucked for adornment. These two sincerely contemplated and worshipped Lord Civan's holy red feet and got His grace. This Lord Civan is enshrined in the flourishing Thiru-maar-pēru.

குளித்துணாஅமணர்குண்டாக்கரென்றும்
களித்துநன்கழலடிகாணலுற்றார்
முளைத்தவெண்மதியினொடரவஞ்சென்னி
வளைத்தவன்வளநகர்மாற்பேறே. 10

**குளித்து உணா அமணர், குண்டுஆக்கர், என்றும்**
**களித்து நன் கழல் அடி காணல் உற்றார்;**
**முளைத்த வெண்மதியினொடு அரவம் சென்னி**
**வளைத்தவன் வள நகர் - மாற்பேறே.**

kuLittu uNA amaNar, kuNTu Akkar, en2Rum
kaLittu nan2 kazal aTi kANal uRAr;
muLaitta veNmatiyin2oTu aravam cen2n2i
vaLaittavan2 vaLa nakar--mARpERE.

**பொருள்:** குளிக்காமல் உணவு உண்ணும் சமணர்களும் உடல் பருத்துள்ள புத்தர்களும் ஆனந்தப்படும்படி அவர்கள் சிவபெருமானின் திருவடிகளைக் காணமாட்டார்கள். ஒருகலைப் பிறையான வெள்ளிய மதியையும் பாம்பினையும் திருமுடிமீது சூடியிருக்கும் சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் வளமையான நகரம் திருமாற்பேறாகும்.

**குறிப்புரை:** 'கூழாயினுங் குளித்துக் குடி' என்பது உலக வாய்மொழியாகவும் குளித்து உண்ணாத அமணர்கள் என அவர்கள் இயல்பு கூறியது. குண்டு ஆக்கர் – பரு உடலராகிய புத்தர்.

The Jains who eat food before bathing; and the fat bodied Buddhists do not willingly seek to have darshan of Civan's holy feet. Lord Civa accommodated on His matted hair the white single phased moon along with a serpent. This Lord Civan is enshrined in the fertile Thiru-maar-pēru.

அந்தமில்ஞானசம்பந்தன்நல்ல
செந்திசைபாடல்செய்மாற்பேற்றைச்
சந்தமின்றமிழ்கள்கொண்டேத்தவல்லார்
எந்தைதன்கழலடியெய்துவரே. 11

அந்தம் இல் ஞானசம்பந்தன் நல்ல
செந்துஇசை பாடல்செய் மாற்பேற்றைச்
சந்தம்இன் தமிழ்கள் கொண்டு ஏத்த வல்லார்
எந்தைதன் கழல்அடி எய்துவரே.

antam il njAn2acampantan2 nalla
centu icai pATal cey mARpERRaic
cantam in2 tamizkaL koNTu Etta vallAr
entai tan2 kazal aTi eytuvarE.

**பொருள்:** என்றும் புகழுடன் இருக்கும் ஞானசம்பந்தன் அழகிய இசையையுடைய பாடல்களால் திருமாற்பேற்று சிவபெருமானைப் போற்றி இப்பதிகத்தைப் பாடினார். இசையோடு கூடிய இனிய இத்தமிழ்ப் பாடல்களைக் கொண்டு துதித்துப் பாட வல்லவர்கள் எம் தந்தையாகிய சிவபெருமானின் கழலணிந்த திருவடிகளை அடைவர்.

**குறிப்புரை:** அந்தம் இல் – அழிவற்ற, அழிவில்லாத, என்றும் நிலைத்திருக்கும். சந்தம் இன்தமிழ் – இசையோடு கூடிய இனிய தமிழ். இப்பதிகம் பாடினவர்க்குப் பயன் திருவடிப்பேறு எனச் சொல்லப்படுகின்றது. செந்து இசை பாடல் – செவ்விய இசையை உடைய பாடல். து – சாரியை.

Gnaanasambandan of endless gnosis has sung on Lord Civan who is enshrined in the prosperous Thiru-maar-pēru. Those who hail and worship Civan with those verses - sweet and rhythmic - of this endless Tamil, will reach the ankleted holy feet of our Father Lord Civan.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*114ஆம் பதிகம் முற்றிற்று*
End of 114th Hymn

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# 115. திருஇராமனதீச்சரம்

**திருத்தல வரலாறு:**

சோழ நாட்டுக் காவிரித் தென்கரைத் தலங்களில் ஒன்று திருஇராமனதீச்சரம். இடம் திருப்புகலூரிலிருந்து முடிகொண்டான் ஆற்றைக் கடந்து, கண்ணபுரம் சென்று கிழக்கே சென்றால் இத்தலத்தை அடையலாம். இராமன் பூசித்துப் பேறு பெற்றனராதலின் இப்பெயர் எய்தியது. இறைவன் பெயர் இராமநாதர். இறைவியின் பெயர் சரிவார்க்குழலி. தீர்த்தம் இராமதீர்த்தம்.

**கல்வெட்டு:**

இத்தலம் திருக்கண்ணபுரம் கல்வெட்டுக்களிற் சேர்ந்தே அரசியலாரால் படியெடுக்கப் பெற்றுள்ளது. ஐந்து கல்வெட்டுக்கள் உள்ளன. இறைவன் இராமனதீச் சரமுடையார் என வழங்கப் பெறுவர். குலோத்துங்க சோழன் இக்கோயில் பூசைக்காகவும், அமுதுபடிக்காகவும் நிலம் அளித்தான். இந்நிலம் பின்னர் சிவபாதசேகரமங்கலம் என்று வழங்கப்பெற்றது. கோயிலைத் திருப்பணி செய்தவனும் இவனே. பின்னர், திருமலை தேவ மகாராயரின் (சகம் 1397) விக்ரமாதித்தன் என்னும் அரசகாரியம் பார்ப்பவன் கோயிலைப் பழுது பார்த்து இருக்கிறான். பூசைக்கும், அமுதுக்கும் நிலம் அளித்து இருக்கிறான். கோனேரின்மை கண்டான் (யார் என்று அறியக்கூட வில்லை) காலத்தில் அருச்சகருக்குள் உரிமைப் போர் நிகழ்ந்திருக்கின்றது. அதனை நீக்கி, திருமன்னுசோழ பிரமராயனுக்கும், மானவரையனுக்கும் பூசை உரிமைகள் வழங்கப் பெற்றன. தனியூரான தில்லையிலிருந்த மாகேசுவரர்களால் இக்கோயில் நிலம் பஞ்சத்தால் விளையாது போக, இராஜராஜ பாண்டி மண்டலம், வீரசோழ மண்டலம், நடுவில் நாடு, ஜெயங்கொண்ட சோழ மண்டலம் முதலியவற்றில் உள்ள கோயில்களிலிருந்து நெல்லும் பொன்னும் கொடுத்துதவும்படி உத்தரவிட்டு இருக்கின்றனர். இது கோயில் நிர்வாகத்தின் தனிச்சிறப்பைக் குறிப்பதாகும்.

பதிக வரலாறு:

திருப்பனையூரை வணங்கி வருகின்ற சிரபுரச் செல்வர் திருஇராமனதீச்சரத்தை அடைந்து 'சங்கொளிர்' என்னும் இப்பதிகத்தை அருளிச் செய்தார்.

## 115. THIRU-RAAMANA-THEECH-CHARAM

### HISTORY OF THE PLACE

This sacred place is to the south of river Cauvery in Chola Naadu. It can be reached from Thiru-p-pugaloor by crossing the river Mudikondaan, and going east from Kannapuram. God's name here is Raamanaathar and the Goddess is known as Sarivaar-k-kuzhali. The sacred ford is Raama Theerththam.

There are five inscriptions about this temple. Kulo-th-thunga Cholan and renovated this temple and made grants for worship services and food offering. One Vikkiramaadhiththiyan, officer of the King Thirumalaidhevamahaarayar, also performed similar services. There is a reference to the conflict among the priests as to rights at the temple during the reign of one Konerinmaikondaan and its resolution by the appointment of two persons with rights to perform worship services. When the crops in the temple lands failed as a result of draught, the Maahesuvarars of Thillai ordered paddy and gold be given to this temple from the resources of other temples in nearby regions.

### INTRODUCTION TO THE HYMN

Having hailed Civa at Thiru-p-panaiyūr, our saint arrived at Thiru-raamana-theech-charam and sang on Him in the following hymn:

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 115. திருஇராமனதீச்சரம் 115. THIRU-RAAMANA-THEECH-CHARAM

பண் : வியாழக்குறிஞ்சி
ராகம் : சௌராஷ்டிரம்

*Pann: Viyazha-k-kurinji*
*Raagam : Saurashtram*

சங்கொளிர்முன்கையர்தம்மிடையே
அங்கிடுபலிகொளுமவன்கோபப்
பொங்கரவாடலோன்புவனியோங்க
எங்குமனிராமனதீச்சரமே. 1

சங்கு ஒளிர் முன்கையர் தம்இடையே
அங்கு இடு பலி கொளுமவன், கோபப்
பொங்கு அரவு ஆடலோன், புவனி ஓங்க
எங்கும் மன், - இராமனதீச்சரமே.

cagku oLir mun2 kaiyar tam iTaiyE
agku iTu pali koLumavan2, kOpap
pogku aravu ATalOn2, puvan2i Ogka
egkum man2,--irAman2antIccuramE.

**பொருள்:** ஒளிவீசும் சங்கு வளையல்களை முன் கைகளில் அணிந்துள்ள முனிபன்னியர் வாழும் வீதிகளிடையே சென்று அங்கு அவர்கள் இடும் பலியை மகிழ்வோடு ஏற்றுக் கொள்பவன். சினம் பொங்கும் பாம்பைப் பிடித்து ஆடுபவன். உலக மக்கள் உயர்வு பெற எங்கும் நிறைந்திருப்பவனான சிவபெருமானின் தலம் இராமனதீச்சரம் ஆகும்.

**குறிப்புரை:** முனிபன்னியர் இடும்பலியை ஏற்பவனும், அரவு அணிந்தவனும், உலகமெலாம் உயர எங்கும் மன்னியிருப்பவனும் ஆகிய சிவனிடம் இராமனதீச்சரம் என்கின்றது. சங்கு – வளையல். அங்கு – அசை. புவனி – பூமி.

Lord Civan goes to the streets where the wives of the Rishis (முனிபன்னியர்) live, who wear in their fore arms bangles made of shells, and accepts happily the alms they give. He catches the serpent of spiralling wrath and causes it to dance. For the upliftment of the entire people of the world He pervades everywhere. This Lord Civan's place is Thiru-raamana-theech-charam.

சந்தநன்மலரணிதாழ்சடையன்
தந்தமதத்தவன்றாதையோதான்
அந்தமில்பாடலோனழகனல்ல
எந்தவனிராமனதீச்சரமே. 2

சந்த நல்மலர் அணி தாழ்சடையன்,
தந்த மதத்தவன் தாதையோ தான்,
அந்தம் இல் பாடலோன், அழகன், நல்ல
எம் தவன், - இராமனதீச்சரமே.

canta nalmalar aNi tAzcaTaiyan2,
tanta matattavan2 tAtaiyO tAn2,
antam il pATalOn2, azakan2, nalla
em tavan2,--irAman2antIccuramE.

**பொருள்:** அழகிய நல்ல மலர்களை அணிந்து தாழ்ந்து தொங்கும் சடையினை உடையவன். தந்தத்தையும் மதத்தையும் உடைய விநாயகப் பெருமானின் தந்தை. இவன் முடிவற்ற இசைப்பாடல்களைப் பாடுபவன். பேரழகன். மிக நல்லவன். எங்கள் தவப்பேறாய் விளங்கும் சிவபெருமானின் தலம் இராமனதீச்சரம் ஆகும்.

**குறிப்புரை:** தாழ்சடையன், விநாயகப் பெருமான் தாதை, பாடலன், அழகன் நகர் இது என்கின்றது. சந்தம் – அழகு. தந்தமதத்தவன் – தந்தத்தையும் மதத்தையும் உடைய விநாயகப் பெருமான். அந்தம் இல் – எல்லையில்லாத.

Lord Civan's dangling and descending matted hair is decorated with pretty fragrant flowers. He is the father of the tusked and musty elephant headed 'Vinaayaka'. He sings endless rhythmic songs. He is absolute beauty. He is verily the reward of our penance. This Lord Civan abides in Thiru-raamana-theech-charam.

தழைமயிலேறவன்றாதையோதான்
மழைபொழிசடையவன்மன்னுகாதில்
குழையதுஇலங்கியகோலமார்பின்
இழையவனிராமனதீச்சரமே. 3

தழைமயில்ஏறவன் தாதையோ தான்,
மழை பொழி சடையவன், மன்னு காதில்
குழைஅது விலங்கிய கோல மார்பின்
இழையவன் - இராமனதீச்சரமே.

tazai mayil ERavan2 tAtaiyO tAn2,
mazai poti caTaiyavan2, man2n2u kAtil
kuzai atu vilagkiya kOla mArpin2
izaiyavan2,--irAman2antIccuramE.

**பொருள்:** அழகிய தோகையோடு கூடிய ஆண் மயில்மீது ஏறிவரும் முருகப் பெருமானின் தந்தை சிவபெருமான். அவன் உலகிற்கு நீர் வளம் தரும் கங்கையைச் சடையில் அணிந்திருப்பவன். தனது காதில் நிலை பெற்று விளங்கும் குழையை அணிந்திருப்பவன். அழகிய திருமார்பில் முப்புரிநூலை அணிந்தவனான சிவபெருமானின் தலம் இராமனதீச்சரம் ஆகும்.

**குறிப்புரை:** முருகன் தாதை, மார்பில் பூணூலன் நகர் இதுவே என்கின்றது. தழை மயில் – பீலியோடு கூடிய மயில். ஏறவன் – ஏறுதலை உடையவன். மழை – நீர்த்துளி. குழை – காதணி. கோலம் – அழகு. இழை – பூணூல். ஆபரணமும் ஆகும்.

Lord Civan is the father of Murugan (*முருகன்*) who moves on his peacock vehicle whose spreaded plumage is a sight to see and enjoy. The river Ganges that provides prosperity to the world finds a place in Civan's matted hair. An ear ring permanently shines in His right ear. The three ply sacred thread lies across His splendorous chest. This Lord Civan's place of residence is Thiru-raamana-theech-charam.

சத்தியுளாதியோர்தையல்பங்கன்
முத்தியதாகியமூர்த்தியோதான்
அத்தியகையினிலழகுசூலம்
வைத்தவனிராமனதீச்சரமே. 4

சத்தியுள் ஆதிஓர்தையல் பங்கன்,
முத்திஅதுஆகிய மூர்த்தியோ தான்,
அத்திய கையினில் அழகு சூலம்
வைத்தவன், - இராமனதீச்சரமே.

cattiyuL Ati Or taiyal pagkan2,
mutti atu Akiya mUrttiyO tAn2,
attiya kaiyin2il azaku cUlam
vaittavan2,--irAman2antIccuramE.

பொருள்: சக்திகளின் முதல்வியாக விளங்கும் உமையம்மையை ஒரு பாகமாகக் கொண்டவன் சிவபெருமான். அவன் எல்லா உயிர்களுக்கும் முக்திப் பேறான கடவுளாக விளங்குபவன். தீயேந்திய கையை உடையவன். சங்கார கிருத்தியஞ் செய்யும் தீ ஏந்திய

திருக்கரத்தில் அழகுக்காகச் சூலத்தைத் தாங்கி இருப்பவனான சிவபெருமானின் தலம் இராமனதீச்சரம் ஆகும்.

**குறிப்புரை:** ஆதி சத்தியின் தலைவன், முத்திதரு முதல்வன் நகர் இது என்கின்றது. அத்தியகையினில் அழகு சூலம் வைத்தவன் – சங்கார கிருத்தியஞ்செய்யும் தீயேந்திய திருக்கரத்தில் அழகுக்காகச் சூலத்தை ஏந்தியவன். இதன் நயம் ஓர்க.

Of the different goddesses of energy Umaa Devi is the chief, who occupies half of Lord Civan's body. Lord Civan is the only God to give final salvation to all souls. He holds the sharp and strong trident in his hand in which He also keeps fire for final delusion. This Lord Civan's shrine is Thiru-raamana-theech-charam.

தாழ்ந்தகுழற்சடைமுடியதன்மேல்
தோய்ந்தஇளம்பிறைதுளங்குசென்னிப்
பாய்ந்தகங்கையொடுபடவரவம்
ஏய்ந்தவனிராமனதீச்சரமே. 5

*தாழ்ந்த குழல்சடைமுடிஅதன்மேல்-*
*தோய்ந்த இளம்பிறை துளங்கு சென்னிப்*
*பாய்ந்த கங்கையொடு படஅரவம்*
*ஏய்ந்தவன் - இராமனதீச்சரமே.*

tAznta kuzal caTaimuTi atan2mEl-
tOynta iLampiRai tuLagku cen2n2ip
pAynta kagkaiyoTu paTa aravam
Eyntavan2--irAman2antIccuramE.

**பொருள்:** சிவபெருமான், தனது தாழ்ந்த கூந்தலில் உள்ள சடைமுடியின்மேல் அழகு தோய்ந்த இளம்பிறையை அணிந்திருப்பவன். திருமுடியில் பாய்ந்து வரும் கங்கை, படம் பொருந்திய பாம்பு ஆகியவற்றையும் சூடிய சிவபெருமானின் தலம் இராமனதீச்சரம் ஆகும்.

**குறிப்புரை:** பிறையணிந்த சென்னியோடு கங்கை பாம்பு அணிந்தவன் நகர் இது என்கின்றது. ஏய்ந்தவன் – பொருந்தியவன்.

In the descending matted bunches made up of His tresses Lord Civan keeps the good looking young crescent moon along with the gurgling river Ganges and a hooded snake. This Lord Civan's shrine is Thiru-raamana-theech-charam.

சரிகுழலிலங்கியதையல்காணும்
பெரியவன்காளிதன்பெரியகூத்தை
அரியவனாடலோனங்கையேந்தும்
எரியவனிராமனதீச்சரமே. 6

*சரிகுழல் இலங்கியதையல் காணும்*
*பெரியவன், காளிதன் பெரிய கூத்தை*
*அரியவன் ஆடலோன், அங்கை ஏந்தும்*
*எரியவன் - இராமனதீச்சரமே.*

carikuzal ilagkiya taiyal kANum
periyavan2, kALitan2 periya kUttai
ariyavan2, ATalOn2, agkai Entum
eriyavan2,--irAman2antIccuramE.

***பொருள்:*** பிடரியின் மேல் விளங்கும் சுருண்ட கூந்தலை உடைய உமையம்மை தன் நடனத்தை கண்டு அனுபவிக்கத் தன் அருகில் வைத்து அருள் செய்த பெரியன் சிவபெருமான். இவன் காளியின் பெரிய கூத்திற்கு போட்டியிட்டும் அவளால் அறிதற்கு அரியவனாய் நடனமாடுபவன். அழகிய திருக்கையில் எரி ஏந்தி விளங்குபவனாகிய சிவபெருமானின் தலம் இராமனதீச்சரம் ஆகும்.

***குறிப்புரை:*** பராசக்தி காணும் பெரியவன், காளியின் கூத்திற்கு அரியவன், ஆனந்தக் கூத்தன் நகர் இது என்கின்றது. சரிகுழல் – பிடரிமீது சரிந்த கூந்தல். இத்தலத்து இறைவி நாமம் சரியார் குழலி.

Lord Civan is the great one who allowed His consort Umaa Devi to stay on seated nearby, (in whose nape of the neck appears her beautiful curling hair), to witness His dance. With a view to suppress the egoism of one of the junior deities, the famous Kaali, dark black in appearance and a fierce look, Lord Civan contested against her in a dance and subdued her. He holds in one of His divine hands the flaming fire. This Lord Civan abides in Thiru-raamana-theech-charam.

மாறிலாமாதொருபங்கன்மேனி
நீறதுவாடலோனீள்சடைமேல்
ஆறதுசூடுவானழகன்விடை
ஏறவனிராமனதீச்சரமே. 7

மாறு இலா மாது ஒருபங்கன், மேனி
நீறுஅது ஆடலோன், நீள்சடைமேல்
ஆறுஅது சூடுவான், அழகன், விடை
ஏறவன், - இராமனதீச்சரமே.

mARu ilA mAtu orupagkan2, mEn2i
nIRu atu ATalOn2, nILcaTaimEl
ARu atu cUTuvAn2, azakan2, viTai
ERavan2,--irAman2antIccuramE.

**பொருள்:** தனது அழகிற்கு ஒப்பிடுமாறு யாரும் இல்லாத உமையம்மையை ஒரு பாகமாகக் கொண்டிருப்பவன் சிவபெருமான். அவன் தன் திருமேனியில் திருநீற்றை அணிந்திருப்பவன். நீண்ட சடைமுடியின்மேல் கங்கையைச் சூடியிருப்பவன். பேரழகன். விடைமீது ஏறிவருபவன். இவன் விரும்பி இருக்கும் தலம் இராமனதீச்சரம் ஆகும்.

**குறிப்புரை:** மாதொருபங்கன், நீறாடி, ஆறுசூடி, அழகன் நகர் இது என்கின்றது. மாறு இலா மாது – அன்னையாகிய பராசக்தி. நீறு அது ஆடலோன் – நீறாடியவன்.

Lord Civan accommodates His consort Umaa Devi in the left half of His body (Umaa Devi is the most and peerless beautiful woman). He smears His body with holy ashes. He keeps the river Ganges in His long matted hair. He is beauty Himself. He goes round mounted on His bull vehicle. This Lord Civan's place is Thiru-raamana-theech-charam.

தடவரையரக்கனைத்தலைநெரித்தோன்
படவரவாட்டியபடர்சடையன்
நடமதுவாடலானான்மறைக்கும்
இடமவனிராமனதீச்சரமே. 8

தடவரை அரக்கனைத் தலை நெரித்தோன்,
பட அரவு ஆட்டிய படர்சடையன்,
நடம்அது ஆடலான், நால்மறைக்கும்
இடமவன், - இராமனதீச்சரமே.

taTavarai arakkan2ait talai nerittOn2,
paTa aravu ATTiya paTar caTaiyan2,
naTam atu ATalAn2, nAlmaRaikkum
iTamavan2,--irAman2antIccuramE.

**பொருள்:** பெரிய கயிலை மலையைப் பெயர்த்த இராவணனின் தலையை நெரித்தவன். படம் பொருந்திய பாம்பை ஆட்டி மகிழ்பவன். விரிந்த சடைமுடியை உடையவன். திருநடனம் ஆடுபவன். வேதங்களான நான்மறைக்கும் இடமாக ஆயவன் சிவபெருமான். இவன் விரும்பி எழுந்தருளி தலம் இராமனதீச்சரம் ஆகும்.

**குறிப்புரை:** இராவணனை நெரித்தவன், அரவாட்டிய சடையன், நடனம் ஆடுதலை உடையவன் நகர் இது என்கின்றது. நான்மறைக்கும் இடம் அவன் – வேதங்கள் நான்கிற்கும் இடம் ஆயவன்.

Lord Civan crushed the heads of the Raakshasaa Raavanan by slightly pressing the mount Kailas; He takes pleasure in swinging the hooded cobra. He has wide matted hair. He is a cosmic dancer. He is the source and content of the four Vedas. This Lord Civan's place is Thiru-raamana-theech-charam.

தனமணிதையல்தன்பாகன்றன்னை
அனமணியயனணிமுடியுங்காணான்
பனமணிஅரவரிபாதங்காணான்
இனமணியிராமனதீச்சரமே.

9

தனம் அணி தையல்தன் பாகன்தன்னை,
அனம் அணி அயன் அணிமுடியும் காணான்;
பனமணிஅரவு அரி பாதம் காணான்; -
இனமணி இராமனதீச்சரமே.

tan2am aNi taiyal tan2 pAkan2 tan2n2ai,
an2am aNi ayan2 aNimuTiyum kANAn2;
pan2a maNi aravu ari pAtam kANAn2;--
in2a maNi irAman2antIccuramE.

**பொருள்:** அழகிய தனபாரங்களை உடைய உமையம்மையின் கணவன் சிவபெருமான். அன்னமாகத் தன்னை மாற்றிக் கொண்ட பிரமனாலும், திருமுடியைக் கண்டு பிடிக்க முடியாதவன். பாம்பின் படத்தில் மணிகளை உடைய ஆதிசேடனாகிய அணையில் துயிலும் திருமாலாலும், திருவடியைக் கண்டுபிடிக்க முடியாதவன். இவர்கள் இருவரும் வணங்க அருள் புரிந்தவனாகிய சிவபெருமானின் தலம் இராமனதீச்சரம் ஆகும்.

**குறிப்புரை:** உமைபாகனை அயன்முடிகாணான், அரி அடி காணான். அத்தகைய இறைவன் நகர் இது என்கின்றது. அனம் அணி அயன் – அன்னமாகத் தன்னைப்புனைந்து கொண்ட பிரமன். பன மணி வரவு அரி – படங்களில் மணிகளை உடைய ஆதிசேடன் மேல் வருதலை உடைய மால். பண என்பது எதுகை நோக்கிப் பன என ஆயிற்று. நான்கு தலைகளை உடைய பிரமன் ஒரு முடியைக் காணாமையும், ஏனமாய் நான்கு கால்களை உடைய திருமால் இணையடி காணாமையும் வியப்பு என நயம் தோன்ற நின்றது.

Lord Civan is the consort of Umaa Devi of shapely frame. Brahma took the form of a swan soared up and up, but could not behold Lord Civan's crest. Vishnu who sleeps on a bed of serpent, the hoods of which contain gems, also could not behold Lord Civan's holy feet. Howoever, Lord Civan graced these two when they worshipped Him. This Lord Civan resides in Thiru-raamana-theech-charam, filled with cluster of several gems.

தறிபோலாஞ்சமணர்சாக்கியர்சொற்கொளேல்
அறிவோரரானாமமறிந்துரைமின்
மறிகையோன்றன்முடிமணியார்கங்கை 10
எறிபவனிராமனதீச்சரமே.

தறி போல் ஆம் சமணர்சாக்கியர் சொல் கொளேல்!
அறிவோர் அரன் நாமம் அறிந்து உரைமின்!
மறி கையோன், தன் முடி மணி ஆர் கங்கை
எறிபவன் - இராமனதீச்சரமே.

taRi pOl Am camaNar cAkkiyar col koLEl!
aRivOr aran2 nAmam aRintu uraimin2!
maRi kaiyOn2, tan2 muTi maNi Ar kagkai
eRiyavan2,--irAman2antIccuramE.

**பொருள்:** மரத்தால் செய்யப்பட்ட தடிபோன்று, அறிவற்ற சமண புத்தர்களின் பேச்சுக்களைக் கேளாதீர்கள். மெய்ஞ்ஞானியர்கள் மூலமாக இறைவனின் திருப்பெயரை அறிந்து கொண்டு வாயால் சொல்வீர்களாக. இளமான் கன்றை கையில் ஏந்தியும், தனது முடியில் மணிகளோடு கூடிய கங்கை நதி அலைமோதுபவனாய் எழுந்தருளி இருக்கும் சிவபெருமானின் தலம் இராமனதீச்சரம் ஆகும். அங்கு சென்று வழிபடுவீர்களாக.

**குறிப்புரை:** அறிவால் அறியப் பெறாதவன், மான்கையன். கங்கையன் நகர் இது என்கின்றது. தறி – கம்பம். அறிவு – பசு. பாச ஞானம். பாச ஞானத்தாலும் படர் பசுஞானத்தாலும் ஈசனையறிய வொண்ணாது ஆதலின் இங்ஙனம் கூறினார். மறி – மான்குட்டி.

Ye folks! do not listen to the words of Samanars and Saakkiyars who are like mere logs of wood. Learn the name of Lord Civan from the truly wise. Know how to chant His name. He holds a young deer in His palm. His crest is adorned with the billowy and gem filled Ganges river.

தேன்மலர்க்கொன்றையோன் * * * * *
* * * * * * * * * * * * * * * * * * * * * * * *
* * * * * * * * * * * * * * * * * * * * * * * *
* * * * * * * * * * முந்தமக்கூனமன்றே. 11

தேன்மலர்க்கொன்றையோன் * * * * *
* * * * * * * * * * * * * * * * * * * * * * * *
* * * * * * * * * * * * * * * * * * * * * * * *
* * * * * * * * * * முந்தமக்கூனமன்றே.

tEn2 malark kon2Rai yOn2........

**பொருள்:** தேன் பொருந்திய கொன்றை மாலையைச் சூடியிருப்பவன் .......

**குறிப்புரை:** இந்தப் 11ஆம் பாட்டில் முதல் இரண்டு வார்த்தைகளே கிடைத்துள்ளன.

In this verse two words were only available.

Lord Civan wears cassia flowers in His crest.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*115ஆம் பதிகம் முற்றிற்று*
End of 115th Hymn

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# 116. பொது – திரு நீல கண்டம்

## பதிக வரலாறு:

கொடிமாடச் செங்குன்றூரில் சிவஞானச் செம்மலார், அடியார்களுடன் தங்கியிருந்த காலத்துப் பனிக்காலம் வந்து விட்டது. அதனால் அடியார்கள் நளிர் சுரத்தினால் வருந்தினார்கள். பிள்ளையாரிடம் விண்ணப்பம் செய்து கொண்டனர். 'இந்த நளிர் சுரம் வருதல் இந்நாட்டிற்கு இயல்பாயினும் நமக்கு இந்தநோய் எய்தப்பெறா, நீலகண்டமே எந்நாளும் அடியார் இடர்தீர்க்கும் அருந்துணை' என்று எண்ணி, 'அவ்வினைக் கிவ்வினை' என்னும் திருப்பதிகத்தைத் தொடங்கி, ஒவ்வொரு திருப்பாடல் இறுதியிலும் 'செய்வினை தீண்டா திருநீலகண்டம்' என ஆணைவைத்து அருளிச் செய்தார்கள். உடனே அடியார்களுக்கு மட்டுமன்றி அந்நாட்டிலேயே சுர நோய் தொலைந்தது.

## 116. COMMON

## INTRODUCTION TO THE HYMN

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 116. பொது – திருநீலகண்டம்

## 116. COMMON

பண் : வியாழக்குறிஞ்சி
ராகம் : சௌராஷ்டிரம்

*Pann: Viyazha-k-kurinji*
*Raagam : Saurashtram*

அவ்வினைக்கிவ்வினையாமென்றுசொல்லுமஃதறிவீர்
உய்வினைநாடாதிருப்பதுமுந்தமக்கூனமன்றே
கைவினைசெய்தெம்பிரான்கழல்போற்றுதும்நாமடியோம்
செய்வினைவந்தெமைத்தீண்டப்பெறாதிருநீலகண்டம். 1

"அவ் வினைக்கு இவ் வினை ஆம்" என்று சொல்லும் அஃது அறிவீர்!
உய்வினை நாடாது இருப்பது உம்தமக்கு ஊனம் அன்றே?
கை வினை செய்து எம்பிரான் கழல் போற்றுதும், நாம்அடியோம்;
செய்வினை வந்து எமைத் தீண்டப்பெறா; - திருநீலகண்டம்!

"av vin2aikku iv vin2ai Am" en2Ru collum aHtu aRivIr!
uyvin2ai nATAtu iruppatum umtamakku Un2am an2RE?
kai vin2ai ceytu empirAn2 kazal pORRutum, nAm aTiyOm;
ceyvin2ai vantu emait tINTappeRA;--tirunIlakaNTam!

**பொருள்:** 'நாம் முற்பிறவிகளில் சேர்த்து வைத்த சஞ்சித கர்ம வினைகளுக்கு ஈடாகவே இப்பிறவியில் பிறந்து பிராரர்த்த வினையின்படி இன்பத்தையும் துன்பத்தையும் அனுபவிக்கின்றோம்' என்று சொல்லப்படுவதை நீங்கள் அறிவீர்கள் அல்லவா? இவ்வினைகளில் இருந்து விடுதலை பெறும் வழியை நீங்கள் முயற்சி செய்து தேடாமல் இருப்பது உங்களுடைய பெருங்குறை அல்லவா? நாம் அனைவரும் எவ்வித பிரதிபலனையும் எதிர்பார்க்காமல் சிவப்பணிகளையும், திருத்தொண்டுகளையும் செய்து, சிவபெருமானின் திருவடியைப் போற்றுவோம். அப்படிச் செய்தால் சஞ்சித வினைகள் அழிந்து விடும். இனிவரும் ஆகாமிய வினைகளும் நம்மை வந்து அணுகா. இது நீலகண்டனான சிவபெருமான்மீது கூறும் ஆணையாகும். (பிராரர்த்த வினையை இந்தப் பிறவியில் அவரவர்கள் அனுபவித்தே தீர வேண்டும். இறைவன் அதை நீக்கமாட்டார்).

**குறிப்புரை:** நாம் முன் பல பிறவிகளில் ஈட்டிய தீவினைகட்கு ஏற்ப இப்பிறவியில் பிராரர்த்தம் வந்தூட்ட இத்துன்பம் அநுபவிக்கிறோம் என்று சொல்லும் அடியார்களைப் பார்த்து நீங்கள் உய்வைத் தேடாதிருப்பது ஊனமல்லவா? கைத்தொண்டு செய்து கழலைப் போற்றுவோம். நாம் செய்தவினை நம்மைத் தீண்டா; திருநீலகண்டம் என்கின்றது. அவ்வினைக்கு – முன்னைய வினைக்கு. இவ்வினை – இப்போது சுரநோயால் வருந்தும் இவ்வினை. உய்வினை – தீரும் உபாயத்தை. கைவினை – கிரியைகளாகிய சிவப்பணி.

Oh you devotees! You yourself know well that your actions of former births are considered as the latent cause of the joys and sorrows. Then is it not your short comings for not to seek ways to get rid of the present suffering? Now I will advise you what to do. All of us are servitors of Lord Civan. Contemplate on Him; perform the four fold means to attain salvation such as Chariyai (*சரியை*), Kiriyai (*கிரியை*) etc., i.e., worship Lord Civa in the temple; do the rites, rituals and ceremonies as prescribed in the Aagamaas (Scriptures - *ஆகமங்கள்*). Then perform service to Lord Civan as a selfless (abstemious) mendicant and worship His Holy Feet. If you do all these, with

sincere devotion, I declare on oath on Civan, the holy dark blue-necked Lord, that our past karma will not affect us much.

காவினையிட்டுங்குளம்பலதொட்டுங்கனிமனத்தால்
ஏவினையாலெயில்மூன்றெரித்தீரென்றிருபொழுதும்
பூவினைக்கொய்துமலரடிபோற்றுதும்நாமடியோம்
தீவினைவந்தெமைத்தீண்டப்பெறாதிருநீலகண்டம். 2

காவினை இட்டும், குளம்பல தொட்டும், கனி மனத்தால்,
"ஏ வினையால் எயில்மூன்று எரித்தீர்" என்று, இருபொழுதும்,
பூவினைக் கொய்து, மலர்அடி போற்றுதும், நாம்அடியோம்;
தீவினை வந்து எமைத் தீண்டப்பெறா; - திருநீலகண்டம்!

kAvin2ai iTTum, kuLampala toTTum, kan2i man2attAl,
"E vin2aiyAl eyil mUn2Ru erittIr" en2Ru, irupozutum,
pUvin2aik koytu, malar aTi pORRutum, nAm aTiyOm;
tIvin2ai vantu emait tINTappeRA;--tirunIlakaNTam!

**பொருள்:** நாம் நந்தவனம், சோலை முதலியவற்றை வளர்ப்போம். குளங்கள் பலவற்றைத் தோண்டுவோம். நல்லறங்கள் பலவற்றைச் செய்வோம். காலை மாலை இருபொழுதும் பூக்களைக் கொய்து, சிவபெருமானின் மலர்போன்ற திருவடிகளில் சாத்தி, கனிந்த அன்புள்ள மனதுடன், 'கணை ஒன்றால் முப்புரங்களை எரித்தீரே' என்று போற்றுவோம். அவ்வாறு செய்து வந்தால் சிவனடியார்கள் ஆகிவிடுவோம். பழைய வினையான சஞ்சித கர்மம் நம்மைத் துன்புறுத்தாது. இது நீலகண்டத்தின்மேல் கூறும் ஆணையாகும்.

**குறிப்புரை:** திரிபுரம் எரித்த பெருமானே! நந்தவனம் வைத்தும், குளந்தோண்டியும், பூவெடுத்துக் கட்டி அணிவித்தும் போற்றுவோம். ஆதலால் தீவினை எம்மைவந்து தீண்டப்பெறா திருநீலகண்டம் என்கின்றது. கா – சோலை. தொட்டும் – தோண்டியும். ஏ வினையாம் – அம்பின் தொழிலால்.

Oh ye devotees! Listen to me. We are all servitors of Lord Civan. Let us develop flower gardens and all kinds of flowering trees. Let us dig as many ponds as we can (for storage of rainwater). Let us devote ourselves to doing as many virtuous deeds as we can. Let us proclaim both in the morning and evening with sincere devotion "Oh Civa! You are the most skilful Lord with no parallel; You destroyed the three citadels of the Asuraas by one single shot". Let us pluck different kinds of fragrant flowers, and

offer them at His flower like Holy Feet and worship Him. If you do this, I declare on oath on Civa, the holy dark blue-necked Lord, that our past karma will not affect us.

முலைத்தடமூழ்கியபோகங்களுமற்றெவையுமெல்லாம்
விலைத்தலையாவணங்கொண்டெமையாண்டவிரிசடையீர்
இலைத்தலைச்சூலமுந்தண்டுமழுவுமிவையுடையீர்
சிலைத்தெமைத்தீவினைதீண்டப்பெறாதிருநீலகண்டம். 3

முலைத்தடம் மூழ்கிய போகங்களும் மற்று எவையும் எல்லாம்,
விலைத்தலை ஆவணம் கொண்டு எமை ஆண்ட விரிசடையீர்!
இலைத்தலைச்சூலமும் தண்டும் மழுவும் இவை உடையீர்!
சிலைத்து எமைத் தீவினை தீண்டப்பெறா; - திருநீலகண்டம்!

mulaittaTam mUzkiya pOkagkaLum maRRu evaiyum ellAm,
vilaittalai AvaNam koNTu emai ANTa viricaTaiyIr!
ilaittalaic cUlamum taNTum mazuvum ivai uTaiyIr!
cilaittu emait tIvin2ai tINTappeRA;--tiru nilakaNTam!

**பொருள்:** பெண்ணாசை என்ற போகங்களிலும் மற்றும் பலவித ஆசைகளிலும் மூழ்கி அலைக்கழிக்கப்பட்டுப் போகாமல் எங்களைத் தடுத்து ஆட்கொண்ட விரிந்த சடைப்பெருமானே! இலைவடிவான சூலம், தண்டாயுதம், மழு ஆகியவற்றைப் படைக்கலன்களாக உடையவரே! என்று சிவபெருமானைப் போற்றுவோம். ஆர்ப்பரித்து வரும் பழைய வினையான சஞ்சித கர்மம் நம்மைத் துன்புறுத்தாது. இது நீலகண்டத்தின்மேல் கூறும் ஆணையாகும்.

**குறிப்புரை:** போகங்கள் எம்மைப் பற்றாவண்ணம் தடுத்தாண்ட பெருந்தகையீர்! சூலம் மழு இவற்றையுடையீர்! எம்மை வினை தீண்டப்பெறா என்கின்றது. விலைத்து அலையா வண்ணம்; அடியேனை விலகச்செய்து அலையாவண்ணம்; விலையாகக் கொண்டு எனலுமாம். விலைத்து – ஒலித்து. விலைத்தலை ஆவணம் செய்து என்றுமாம்.

Oh! Lord Civa! You are our revered Supreme Being, having expansive matted hair. You protected us from indulging in carnal and such other pleasures in worldly life; also you saved us from forgetfulness of Your Holy Feet and graced us. You are holding a trident and a battle-axe in your hands. Chanting thus, let us adore Him. Now I declare on oath that Thiru-neela-kandam (திருநீலகண்டம், Lord Civan Himself) will protect us from the bad effects of our mountain like past karma.

விண்ணுலகாள்கின்றவிச்சாதரர்களும்வேதியரும்
புண்ணிரென்றிருபோதுந்தொழப்படும்புண்ணியரே
கண்ணிமையாதனமூன்றுடையீருங்கழலடைந்தோம் 4
திண்ணியதீவினைதீண்டப்பெறாதிருநீலகண்டம்.

விண்ணுலகு ஆள்கின்ற விச்சாதரர்களும் வேதியரும்,
"புண்ணியர்" என்று இருபோதும் தொழப்படும் புண்ணியரே!
கண் இமையாதனமூன்றுஉடையீர்! உம் கழல் அடைந்தோம்;
திண்ணிய தீவினை தீண்டப்பெறா; - திருநீலகண்டம்!

viNNulaku ALkin2Ra viccAtararkaLum vEtiyarum,
"puNNiyar" en2Ru iru pOtum tozappaTum puNNiyarE!
kaN imaiyAtan2a mUn2Ru uTaiyIr! um kazal aTaintOm;
tiNNiya tIvin2ai tINTappeRA;--tiru nIlakaNTam!

**பொருள்:** விண்ணுலகை ஆளுகின்ற வானோர்களும் வேதவிற்பன்னர்களும் 'புண்ணிய வடிவமானவர்' என்று இருவேளைகளிலும் உம்மைத் துதித்துத் தொழப்படும் புண்ணியரே! இமைத்தல் புரியாத முக்கண்களை உடையவரே! உமது திருவடிகளில் புகல் அடைந்தோம்! எனப் போற்றுவோம். இப்படிச் செய்து வந்தால் வலிமையான சஞ்சித கர்மம் என்ற தீவினை நம்மைத் துன்புறுத்தாது. இது நீலகண்டத்தின்மேல் கூறும் ஆணையாகும்.

**குறிப்புரை:** வேதியரும், வித்தியாதரர்களும் புண்ணியர் என்று தொழும் புண்ணியரே! உம் கழல் அடைந்தோம்; திண்ணிய தீவினை தீண்டப்பெறா என்கின்றது. திண்ணிய தீவினை தீண்டப்பெறா என்றது இதுவரை நுகர்ந்த அளவிலேயே அமைவதாக, திருவருள் நோக்கத்தால் அவை மென்மையாயின ஆதலின் இங்ஙனம் கூறினார்.

A class of demigods (*வித்யாதரர்*) who rule the world of the celestials. The illustrious Vedic scholars contemplate on you, and adore you both in the morning and in the evening and proclaim "Oh! You are the embodiment of virtue". We worship you. You have a third eye in you forehead which never flickers. We have surrendered at your Holy Feet, which is our refuge. If we adore the Lord in this way, the past strong bad karma will not approach us. This I declare on oath on Thiru-neela-kandam (Lord Civan).

மற்றிணையில்லாமலைதிரண்டன்னதிண்டோளுடையீர்
கிற்றெமையாட்கொண்டுகேளாதொழிவதுந்தன்மைகொல்லோ
சொற்றுணைவாழ்க்கைதுறந்துந்திருவடியேயடைந்தோம்
செற்றெமைத்தீவினைதீண்டப்பெறாதிருநீலகண்டம். 5

*மற்று இணை இல்லா மலை திரண்டன்ன திண்தோள் உடையீர்!*
*கிற்று எமை ஆட்கொண்டு கேளாது ஒழிவதும் தன்மைகொல்லோ?*
*சொல்-துணை வாழ்க்கை துறந்து உம் திருவடியே அடைந்தோம்;*
*செற்று எமைத் தீவினை தீண்டப்பெறா; - திருநீலகண்டம்!*

maRRu iNai illA malai tiraNTan2n2a tiNtOL uTaiyIr!
kiRRu emai ATkoNTu kELAtu ozivatum tan2maikollO?
col-tuNai vAzkkai tuRantu um tiruvaTiyE aTaintOm;
ceRRu emait tIvin2ai tINTappeRA;--tirunIlakaNTam!

**பொருள்:** எவர்க்கும் இணையில்லாத ஒப்பற்ற மலைபோலத் திரண்ட வலிமையான தோள்களை உடைய பெருமானே! வலிமையுடன் உறுதியாக எம்மை ஆட்கொண்ட பின்னரும், எமது குறையைக் கேளாது இருப்பது உமக்குப் பெருமை தருமோ? வெறும் வாய்ச்சொற்கள் வாயிலாகத் 'துணை' என்று சொல்லப்படுகின்ற இல்லற வாழ்க்கைக்குச் சொல்லப்படும் எல்லாத் துணைகளையும் துறந்து, உம்முடைய திருவடிகளையே சரண் அடைந்தோம். ஆகையால் பெரும் வருத்தத்தைத் தருகின்ற சஞ்சித கர்மம் என்ற தீவினைகள் பெருவலிமை கொண்டு வருத்தி நம்மை வந்து அடையமாட்டா. இது நீலகண்டத்தின்மேல் கூறும் ஆணையாகும்.

**குறிப்புரை:** ஒப்பற்ற மலைபோல் திரண்ட தோளுடையீர்! எம்மையாட்கொண்டும் எம்குறையைக் கேளாதொழிவது பெருமையோ? எல்லாத் துணையையும்விட்டு உமது திருவடி அடைந்தோம். ஆதலால், எம்மைத் தீவினை தீண்டப்பெறா. திருநீலகண்டம் ஆணை என்கின்றது. மற்று – வேறு. இணை – ஒப்பு. கிற்று – வலிபடைத்து. சொல் துணை வாழ்க்கை – சொல்லப்படுகின்ற துணைகள் பலவற்றோடும் கூடிய வாழ்க்கை. செற்று – வருத்தி. எமது வினைகளை வெருட்டும் வலியுடையீர் என்று குறிக்க இணையில்லாத மலை திரண்டன்ன தோளுடையீர் என்று குறிப்பித்தது. எமக்கும் தேவரீர்க்கும் உள்ள தொடர்பு ஆட்கொள்ளப்பட்டதால் உண்டான ஆண்டானும் அடிமையுமான தொடர்பு அங்ஙனமிருந்தும் எமது குறையை நீரேயறிந்து நீக்க வேண்டியிருக்க, சொல்லியும் கேளாது ஒழிவதும் தன்மையோ என்றார். துணையென்று சொல்லப்படுகின்ற வாழ்க்கைகளைத் துறந்து உம் திருவடி அடைந்தோம் என்றது அகப்பற்றும் புறப்பற்றும் விட்டு உம்மைப் பற்றினோம் என்றது. தீவினை செற்றுத் தீண்டப்பெறா என்றது

தீவினைகள் தீண்டுபவற்றைத் தடுத்தலாகாது ஆயினும் அவை வலியிழந்தனவாகத் தீண்டா என்று விளக்கியவாறு. கிற்று – கற்றல் பொருந்திய.

Oh! Lord Civa! Your shoulders are strong and unparallelled like piled up consolidated mountain! With all Your might, You allowed us in Your midst and graced us. In spite of this, is it not inappropriate to Your dignity, not to listen to our pleadings. We quit all the assistance that are considered necessary to family life, and surrendered to Your Holy Feet, our refuge. If we adore Him like this the bad karma done by us in our past births will not come and affect us. This I declare on oath on Thiru-neela-kandam.

மறக்குமனத்தினைமாற்றியெம்மாவியைவற்புறுத்திப்
பிறப்பில்பெருமான்றிருந்தடிக்கீழ்ப்பிழையாதவண்ணம்
பறித்தமலர்கொடுவந்துமையேத்தும்பணியடியோம் 6
சிறப்பிலித்தீவினைதீண்டப்பெறாதிருநீலகண்டம்.

மறக்கும் மனத்தினை மாற்றி, எம் ஆவியை வற்புறுத்திப்,
பிறப்பு இல் பெருமான் திருந்து அடிக்கீழ்ப் பிழையாத வண்ணம்,
பறித்த மலர் கொடுவந்து, உமை ஏத்தும் பணி அடியோம்;
சிறப்புஇலித் தீவினை தீண்டப்பெறா; - திருநீலகண்டம்!

maRakkum man2attin2ai mARRi, em Aviyai vaRpurutti,
piRappu il perumAn2 tiruntu aTikkIzp pizaiyAta vaNNam,
paRitta malar koTuvantu, umai Ettum paNi aTiyOm;
ciRappu ilit tIvin2ai tINTappeRA;--tirunIlakaNTam!

**பொருள்:** எமது மனமானது, உலக மாயையால் எம்மோடு ஒத்து வராமல், உம்மை மறக்கும் தன்மை வாய்ந்தது. மலமறப்பால் தடுமாறும் இந்த மனதை வைராக்கிய பயிற்சியால் மாற்றி, ஆன்மாவை ஒருமுகப்படுத்தி நெஞ்சில் மாசற்ற தன்மையை அடைந்தோம். பிறப்பற்ற தேவரீரின் திருவடிக்குப் பிழை ஏற்படாத வண்ணம், புதிதாகப் பறித்த மலர்களைக் கொண்டு உம்மைப் போற்றிப் பணி செய்து அடியவர்கள் ஆகிவிட்டோம். ஆகையால் சிறப்பற்ற சஞ்சித வினை என்ற தீவினை எங்களைத் தீண்டமாட்டா. இது நீலகண்டத்தின்மேல் கூறும் ஆணையாகும்.

**குறிப்புரை:** எம்மோடு ஒன்றி வராமல் மறுக்கும் தன்மைவாய்ந்த மனத்தையும் மாற்றி, உயிரை வற்புறுத்தித் தேவரீர் திருவடிக்குப் பிழை ஏற்படாத வண்ணம் மலர் கொண்டேத்தும் அடியோங்களைச்

சிறப்பு இல்லாத இத்தீவினைகள் தீண்டப்பெறா திருநீலகண்டம் என்கின்றது. மனத்திற்கு இயற்கை, பற்றியதை விட்டுப் பின் வேறொன்றைப் பற்றி, அதன் மயமாய், பற்றியதையும் மறந்துவிடுதல், அந்த நிலையை மாற்றி என்றார். வற்புறுத்தி – திருவடியையே பற்றிவிடாது நிற்றலின் வினையின் வழிநின்று மலமறைப்பால் தடுமாறும் ஆன்மாவை வற்புறுத்தி. சிறப்பில் இத்தீவினை – சிறப்பற்ற இந்தத் தீவினை.

Are we not servitors of Lord Civan! Due to the illusion of this visible world, our minds forget virtuous deeds of contemplating on God; but He altered this way of our mind and directed it on the right path; the birthless noble God also changed the illusion caused to the perplexed soul by the three inherent evil passions (*மலம் - ஆணவம், கன்மம், மாயை*) and made us worship His Holy Feet. Then we adored and worshipped Him by offering Him freshly plucked flowers. Oh Lord! We declare that as Your servitors we did all these virtuous deeds. Hence, the evil karma done by us in our past births will not affect us. I declare this on oath on Thiru-neela-kandam.

7. Note: The seventh verse was not available.

கருவைக்கழித்திட்டுவாழ்க்கைகடிந்துங்கழலடிக்கே
உருகிமலர்கொடுவந்துமையேத்து துநாமடியோம்
செருவிலரக்கனைச்சீரிலடர்த்தருள்செய்தவரே
திருவிலித்தீவினைதீண்டப்பெறாதிருநீலகண்டம். 8

கருவைக் கழித்திட்டு, வாழ்க்கை கடிந்து, உம் கழல் அடிக்கே
உருகி, மலர் கொடுவந்து, உமை ஏத்துதும், நாம் அடியோம்;
செருஇல் அரக்கனைச் சீரில் அடர்த்து அருள் செய்தவரே!
திருஇலித் தீவினை தீண்டப்பெறா; - திருநீலகண்டம்!

karuvaik kazittiTTu, vAzkkai kaTintu, um kazal aTikkE
uruki, malar koTuvantu, umai Ettutum, nAm aTiyOm;
ceru il arakkan2aic cIril aTarttu aruLceytavarE!
tiru ilit tIvin2ai tINTappeRA;--tirunIlakaNTam!

பொருள்: இனி வருகின்ற பிறவியை அறுத்து, உலக வாழ்க்கையை வெறுத்து, உமது திருவடியில் மனம் கரைந்து, நல்ல மலர்களைக் கொண்டு அர்ச்சனை செய்து போற்றி, உமது அடியவர்கள் ஆகிவிட்டோம். ஆணவத்தால் செருக்குற்ற அரக்கனான இராவணனை நெருக்கி, பின்னர் அவனுக்கு அருள்செய்த சிவபெருமானாரே! முற்பிறவிகளில் உம்மை

வழிபாடு செய்யாததால் வந்த தீவினை எங்களைத் துன்புறுத்தக் கூடாது. இது திருநீலகண்டத்தின்மேல் கூறும் ஆணையாகும்.

**குறிப்புரை:** பிறவியை அறுத்து உலக வாழ்க்கையை வெறுத்து உம் திருவடியை உருகிவழிபடும் எம்மைத் தீவினை தீண்டப்பெறா திருநீலகண்டம் என்கின்றது. கரு – பிறவிமுதல். செருஇல் அரக்கன் – போரில்லாத இராவணன். திக்குவிஜயம் பண்ணிப் போரில்லாமமையால் தருக்கிக் கயிலையை எடுத்தானாதலின் இங்ஙனம் கூறினார். திருஇல் – சிவனடி வழிபடும் செல்வத்தையில்லாத.

In this birth we renounced the worldly life; offered fresh fragrant flowers and surrendered at Your Holy Feet and became eligible for not to be born again in this world. Raavanan was a great warrior; there were none to oppose him; also all people praised him for his valour and other abilities. Oh Lord Civaa! You oppressed him for his folly and later when he repented, graced him. If we adore Lord Civan in this manner and melt, at heart, then the bad old karma of our past births which prevent our virtuous action of worshipping Lord Civan, will not affect us. This oath I declare on Thiru-neela-kantam.

நாற்றமலர்மிசைநான்முகன்நாரணன்வாதுசெய்து
தோற்றமுடையஅடியுமுடியுந்தொடர்வரியீர்
தோற்றினுந்தோற்றுந்தொழுதுவணங்குதும்நாமடியோம் 9
சீற்றமதாம்வினைதீண்டப்பெறாதிருநீலகண்டம்.

நாற்றமலர்மிசை நான்முகன் நாரணன் வாதுசெய்து,
தோற்றம் உடைய அடியும் முடியும் தொடர்வு அரியீர்!
தோற்றினும் தோற்றும், தொழுது வணங்குதும், நாம் அடியோம்;
சீற்றம் அதுஆம் வினை தீண்டப்பெறா; - திருநீலகண்டம்!

nARRamalar micai nAn2mukan2 nAraNan2 vAtuceytu,
tORRam uTaiya aTiyum muTiyum toTarvu ariyIr!
tORRin2um tORRum, tozutu vaNagkutum, nAm aTiyOm;
cIRRa atu Am vin2ai tINTap peRA;--tiru nIlakaNTam!

**பொருள்:** மணம் மிக்க தாமரை மலரில் விளங்கும் நான்முகனும் திருமாலும் தங்களுக்குள் தர்க்கம் செய்து, உமது அடியும் முடியும் அறியப்படாத தன்மையுடைய சிவபெருமானாரே! நீர் காணப்பெறினும் பெறுவீர்! உம்மைத் தொழுது வணங்கி உமது அடியவர்கள்

ஆகிவிட்டோம். ஆகையால் கோபமுடைய சஞ்சித வினை என்ற தீவினை நம்மைத் துன்புறுத்தாது. இது நீலகண்டத்தின்மேல் கூறும் ஆணையாகும்.

**குறிப்புரை:** மலர்மேயவனும் திருமாலும் தங்களுக்குள் வாது செய்து, அடியும் முடியும் அறிய மாட்டாத தன்மையை உடையவரே! காணப்பெறினும் பெறுவீர், உம்மைத் தொழுது வணங்குவோம்; சீற்றமாகிய வினை எம்மைத் தீண்டப்பெறா; திருநீலகண்டம் என்கின்றது. நாற்றம் – மணம். தோற்றமுடைய – கட்புலனாகிய. சீற்றம் – கோபம்.

Are we not servitors of Lord Civa? Brahma seated in the fragrant lotus flower and Thirumaal argued with each other regarding as to who is superior in worldly greatness among them. They failed in their attempt to find out Your head and feet, though You then stood before them as a big column of fire. However You gave us your darshan. Oh! Devotees! Let us adore Him by recounting all these happenings and worship Him. If we do this, the dreadful past karma will not affect us. This oath I declare on Thiru-neela-kandam.

சாக்கியப்பட்டுஞ்சமணுருவாகியுடையொழிந்தும்
பாக்கியமின்றியிருதலைப்போகமும்பற்றும்விட்டார்
பூக்கமழ்கொன்றைப்புரிசடையீரடிபோற்றுகின்றோம்
தீக்குழித்தீவினைதீண்டப்பெறாதிருநீலகண்டம். 10

சாக்கியப்பட்டும், சமன்உருஆகி உடை ஒழிந்தும்,
பாக்கியம் இன்றி இருதலைப் போகமும் பற்றும்விட்டார்;
பூக்கமழ்கொன்றைப் புரிசடையீர்! அடி போற்றுகின்றோம்;
தீக்குழித் தீவினை தீண்டப்பெறா; - திருநீலகண்டம்!

cAkkiyappaTTum, camaN uru Aki uTai ozintum,
pAkkiyam in2Ri irutalaip pOkamum paRRuviTTAr;
pUkkamaz kon2Raip puricaTaiyIr! aTi pORRukin2ROm;
tIkkuzit tIvin2ai tINTappeRA;--tirunIlakaNTam!

**பொருள்:** புத்தர்களும் ஆடையின்றித் திரியும் சமணர்களும் பாக்கியம் இல்லாதவர்கள். அவர்கள் இம்மை இன்பமும் மறுமை இன்பமும் கிடைக்கப்பெறாதவர்கள். நாம் சிவபெருமானாரை நோக்கி, மணமுள்ள பூக்களையும் கொன்றையையும் அணிந்த விரிசடை உடையவரே! உமது திருவடிகளைப் போற்றுகின்றோம், என்று கூறுவோம். அப்படிச்

செய்து வந்தால் தீக்குழியைப் போன்று சுடுகின்ற சஞ்சித வினை என்ற தீவினை நம்மைத் துன்புறுத்தாது. இது நீலகண்டனின் மேல் கூறும் ஆணையாகும்.

**குறிப்புரை:** சாக்கியராயும் சமணராகியும் இருமையின்பமும் ஒழிந்தார்கள்; நாங்கள் நும் திருவடி போற்றுகின்றோம்; எம்மை வினை தீண்டப்பெறா என்கின்றது. இருதலைப் போகம் – இம்மை மறுமையின்பம். தீக்குழித் தீவினை – தீக்குழியினைப் போலக் கனலுவதாகிய தீவினை.

Are we not servitors of Lord Civa? Samanars who roam about naked and the Buddhists are not blessed people, to worship Lord Civan. They were also inefficient and unable to enjoy the blissfulness of this life or in the other life. Still worse is that they were unable to understand the ways and means to achieve blissfulness. Let us contemplate on and adore Him declaring "Oh Lord! You are having the most attractive matted hair adorned with fragrant cassia flowers! We adore Your Holy Feet". If you declare like this sincerely, your past bad karma burning like fire in a pit will not affect us. This oath I declare on Thiru-neela-kandam.

பிறந்தபிறவியிற்பேணியெஞ்செல்வன்கழலடைவான்
இறந்தபிறவியுண்டாகிலிமையவர்கோனடிக்கண்
திறம்பயில்ஞானசம்பந்தனசெந்தமிழ்பத்தும்வல்லார் 11
நிறைந்தவுலகினில்வானவர்கோனொடுங்கூடுவரே.

பிறந்த பிறவியில் பேணி எம் செல்வன் கழல் அடைவான்,
இறந்த பிறவி உண்டாகில், இமையவர்கோன் அடிக்கண்
திறம் பயில் ஞானசம்பந்தன செந்தமிழ்பத்தும் வல்லார்
நிறைந்த உலகினில் வானவர்கோனொடும் கூடுவரே.

piRanta piRaviyil pENi em celvan2 kazal aTaivAn2,
iRanta piRavi uNTAkil, imaiyavarkOn2 aTikkaN
tiRam payil njAn2acampantan2 centamiz pattum vallAr
niRainta ulakin2il vAn2avarkOn2oTum kUTuvarE.

**பொருள்:** நாம் பிறப்பெடுத்த இந்தப் பிறவியிலேயே எமது செல்வராகிய சிவபெருமானின் திருவடிகளை விரும்பி வழிபட்டு முத்திப்பேற்றை அடையலாம். ஒருவேளை பழவினைகள் அழியாமல் மீண்டும் பிறவி எடுத்திருந்தால், தேவர்களின் அரசனான சிவபெருமானின் பெருமைகளை அறிந்த ஞானசம்பந்தன் அருளிய செந்தமிழ்ப் பாடல்கள் பத்தையும்

ஓதுவோம். இத்திருப்பதிகத்தைப் பொருளுணர்ந்து ஓத வல்லவர்கள் விண்ணுலகில் தேவர்களின் அரசனுடன் கூடி மகிழ்ந்திருப்பார்கள்.

**குறிப்புரை:** எமது இறைவன் கழலடையப் பிறந்த இப்பிறவியில் சிவபெருமான் திருவடியைப் பேணி, மீட்டும் பிறவியுளதாயின், இம்மொழி பத்தும் வல்லார்கள் வானவர் கோனொடுங் கூடுவர் என்கின்றது. அடைவான் பேணி, வல்லார், பிறவியுண்டாகில் கோனொடுங் கூடுவர் என முடிக்க.

Oh! Ye devotees! You are born as humans in this life. If you worship with devotion the Holy Feet of Lord Civa, you can obtain bliss. Or if it so happens that you are to be born again due to your karma, chant these ten verses of Gnaanasambandan who is a fully realised soul, about the divinity of the Holy Feet of Lord Civan who is the Chief of the Devaas. If you succeed in chanting these ten verses, you will join the head of the celestial and enjoy eternal bliss.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*116ஆம் பதிகம் முற்றிற்று*
**End of 116th Hymn**

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# 117. திருப்பிரமபுரம்

## திருத்தல வரலாறு:

முதலாம் திருப்பதிகம் பார்க்கவும்.

## பதிக வரலாறு:

வாக்கின் மன்னரை வழியனுப்பியபின் காழித்திருஞான சம்பந்தப் பிள்ளையார் மீண்டும் சீகாழியிற் புகுந்து, வேதவடிவாகிய திருத்தோணியில் வீற்றிருந்த விண்ணவர் பெருமானைப் பாடிப்பணிந்து, அங்கு எழுந்தருளியிருக்கின்ற நாளில், செந்தமிழ்ப் பாமாலையின் விகற்பங்களாகிய மொழிமாற்று, மாலைமாற்று, திருவியமகம், ஏகபாதம், இருக்குக்குறள், எழுகூற்றிருக்கை முதலானவற்றை அருளிச் செய்து, திருப்பாணனாரும் இசைவடிவான மதங்கசூளாமணியாரும் இப்பதிகங்களை ஏழிசைபற்றிப் பாடச் சீகாழியில் எழுந்தருளியிருந்தார்கள்.

# 117. THIRU-P-PIRAMA-PURAM

## HISTORY OF THE PLACE

See First Hymn.

## INTRODUCTION TO THE HYMN

See Hymns 1, 6 & 90.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 117. திருப்பிரமபுரம்

## 117. THIRU-P-PIRAMA-PURAM

பண் : வியாழக்குறிஞ்சி
ராகம் : சௌராஷ்டிரம்

*Pann: Viyazha-k-kurinji*
*Raagam : Saurashtram*

காடதணிகலங்காரரவம்பதிகாலதனில்
தோடதணிகுவர்சுந்தரக்காதினிற்றூச்சிலம்பர்
வேடதணிவர்விசயற்குருவம்வில்லுங்கொடுப்பர்
பீடதணிமணிமாடப்பிரமபுரத்தாரே. 1

காடுஅது, அணிகலம் கார்அரவம், பதி; கால்அதனில், -
தோடுஅது அணிகுவர் சுந்தரக்காதினில், - தூச் சிலம்பர்;
வேடுஅது அணிவர், விசயற்கு, உருவம், வில்லும் கொடுப்பர்; -
பீடுஅது அணி மணி மாடப் பிரமபுரத்தாரே.

kATu atu, aNikalam kAr aravam, pati; kAl atan2il,-
tOTu atu aNikuvar cuntarak kAtin2il,-tUc cilampar;
vETu atu aNivar, vicayaRku, uruvam, villum koTuppar;--
pITu atu maNi mATap piramapurattu ararE.

**பொருள்:** அழகு மிகுந்த மாடவீடுகளைக் கொண்ட பெருமை மிக்க பிரமபுரத்தில் சிவபெருமான் எழுந்தருளியுள்ளார். இப்பெருமான் கொடிய விடம் கொண்ட அரவத்தை ஆபரணமாகக் கொண்டவர். சுடுகாட்டை இருப்பிடமாக உடையவர். அழகிய காதில் தோடு அணிந்தவர். திருப்பாதத்தில் சிலம்பு அணிந்தவர். வேடுவர் உருவம் கொண்டு அருச்சுனனுக்குப் பாசுபதக் கணை அளித்தவர். இப்பெருமானைப் போற்றித் தொழுவோமாக.

**குறிப்புரை:** மொழிமாற்று என்பது பொருள்கோள்வகையுள் ஒன்று. பொருளுக்கு ஏற்பச் சொல்லைப் பிரித்து முன்பின் கூட்டிக் கொள்வது. பிரமபுரத்தவர் காட்டைப் பதியாகக் கொள்ளுவர். அரவத்தை அணிவர். அழகிய காதில் தோடு அணிவர். காலில் சிலம்பணிவர். வேடுருவந்தாங்கி விசயற்குப் பாசுபதாஸ்திரம் அளிப்பர் என்கின்றது. காடது பதி. அணிகலம் காரரவம். காலதனில் தூச்சிலம்பர். சுந்தரக் காதினில் தோடது அணிகுவர் எனப் பிரித்துக் கூட்டுக. பீடம் – மேடை.

Lord Civan is enshrined in **Thiru-p-pirama-puram** (another name of **Seekaazhi**) where residential mansions are superb and embedded with many valuable gems. This Lord prefers to occupy the cremation ground also. He wears the black serpent as His jewellery. In His leg He wears the pure and sonorous ankle rings. In His elegant ear He wears the ola roll. He took the form of a hunter and gifted the divine bow and arrow weapon called Paasupatham (*பாசுபதம்*) to Arjun. Worship this Lord.

கற்றைச்சடையதுகங்கணமுன்கையிற்றிங்கள்கங்கை
பற்றித்துமுப்புரம்பார்படைத்தோன்றலைசுட்டதுபண்
டெற்றித்துப்பாம்பையணிந்ததுகூற்றையெழில்விளங்கும்
வெற்றிச்சிலைமதில்**வேணுபுரத்**தெங்கள்வேதியரே. 2

கற்றைச்சடையது, கங்கணம் முன்கையில் - திங்கள் கங்கை;
பற்றித்து, முப்புரம், பார் படைத்தோன் தலை, சுட்டது பண்;
எற்றித்து, பாம்பை அணிந்தது, கூற்றை; - எழில் விளங்கும்
வெற்றிச் சிலைமதில் **வேணுபுரத்து** எங்கள் வேதியரே.

kaRRaic caTaiyatu, kagkaNam mun2kaiyil-tigkaL kagkai;
paRRittu, muppuram, pAr paTaittOn2 talai, cuTTatu paNTu;
eRRittu, pAmpai aNintatu, kURRai;--ezil viLagkum
veRRic cilaimatil vENupurattu egkaL vEtiyarE.

**பொருள்:** கருங்கல்லால் எழில் மிகுந்த வெற்றித் திருமதில்களை உடைய **வேணுபுரம்** என்னும் **சீகாழியில்** வேதநாயகரான எங்கள் சிவபெருமான் எழுந்தருளியுள்ளார். இப்பெருமான் சடைமுடியில் சந்திரனையும் கங்கையையும் தரித்தவர். முன்கையில் பாம்பை கைவளையலாக அணிந்தவர். முப்புரங்களை எரித்தவர். உலகத்தைப் படைக்கும் தொழிலை உடைய பிரமனின் ஐந்து தலைகளில் ஒன்றைக் கொய்தவர். முற்காலத்தில் மார்க்கண்டேயனின் உயிரைக் கவர வந்த எமனைக் காலால் உதைத்தவர். இப்பெருமானைப் போற்றித் தொழுவோமாக.

**குறிப்புரை:** வேணுபுரத்து வேதியரின் சடையது திங்களும் கங்கையும், முன்கையிற் கங்கணமாக அணிந்தது பாம்பு. கையில் பற்றியது பிரமன் தலை. சுட்டது முப்புரம் என்கின்றது. பண்டு கூற்றை எற்றித்து என மொழிமாற்றிக் காண்க. பற்றித்து எற்றித்து என்பன பற்றிற்று எற்றிற்று என்பதன் மரூஉ. எற்றித்து – உதைத்து.

Our Lord Civan founder of Vedas is enshrined at the temple inside the **Venupuram** city. This city is encircled by victorious and imposing holy walls constructed with black granite stones. In His thick collection of matted hair, He accommodates the crescent moon and the river Ganges. In His fore-arm He wears the serpent as bracelet. He holds in one of His hands the skull of Brahma who is the creator of this world, and uses it as His begging bowl. He burnt down the three citadels of

Asuraas. Long ago He kicked Yaman to death to save Maarkandēyan. He wears a snake as jewellery in His body. Worship this Lord.

கூவிளங்கையதுபேரிசடைமுடிக்கூட்டத்தது
தூவிளங்கும்பொடிப்பூண்டதுபூசிற்றுத்துத்திநாகம்
ஏவிளங்குந்நுதலாளையும்பாகமுரித்தனரின்
பூவிளஞ்சோலைப்புகலியுள்மேவி!யபுண்ணியரே. 3

கூவிளம், கையது பேரி, சடைமுடிக் கூட்டத்தது;
தூ விளங்கும் பொடிப், பூண்டது, பூசிற்று, துத்திநாகம்;
ஏ விளங்கும் நுதலாளையும், பாகம் உரித்தனர்; - இன்
பூ இளஞ் சோலைப் புகலியுள் மேவிய புண்ணியரே.

kUviLam, kaiyatu pEri, caTaimuTik kUTTattatu;
tU viLagkum poTi, pUNTatu, pUciRRu, tutti nAkam;
E viLagkum nutal, An2aiyum, pAkam, urittan2ar;--in2
pU iLanj cOlaip pukaliyuL mEviya puNNiyarE.

**பொருள்:** இனிய பூக்கள் நிறைந்த இளஞ்சோலைகளால் சூழப்பட்ட **புகலி** என்னும் **சீகாழியில்** புண்ணியரான சிவபெருமான் எழுந்தருளியுள்ளார். இப்பெருமான் சடைமுடியில் வில்வத்தை அணிந்துள்ளார். கையில் பேரி என்னும் தோற்பறையைக் கொண்டுள்ளார். தூய்மையோடு விளங்கும் திருநீற்றுப் பொடியைப் பூசியுள்ளார். படப் பொறிகளோடுகூடிய நாகத்தை அணிகலனாகப் பூண்டுள்ளார். வில்போன்று வளைந்த நெற்றியை உடைய உமையம்மையை ஒரு பாகத்தில் கொண்டுள்ளார். யானைத்தோலை உரித்துப் பூண்டுள்ளார். இப்பெருமானைப் போற்றித் தொழுவோமாக.

**குறிப்புரை:** கூவிளம் சடைமுடிக் கூட்டத்தது. பேரி கையது. தூவிளங்கும் பொடி பூசிற்று. துத்தி நாகம் பூண்டது என மொழிமாற்றிப் பொருள் கொள்க. கூவிளம் – வில்வம். பேரி – உடுக்கை. தூ – தூய்மை. பொடி – விபூதி. துத்தி – படப்பொறி. ஏவிளங்குதல் – வில்போல் விளங்கும் நெற்றியை உடையாள் என்றது உமாதேவியை, ஏ என்றது ஆகுபெயராக வில்லை உணர்த்திற்று. உரித்தனர் – தோலைத் தனியாக உரித்துப் பூண்டனர். புகலி – சீகாழி.

The righteous Lord Civan wearing Bael leaves in His thick matted hair is enshrined at the temple inside the **Pukali** town. This town is encircled by blooming man made groves full of attractive flowers. He holds in one of His hands the battle drum (*பேரி*) made of leather. He smeared His body with immaculate holy ashes. He

wears the hooded serpent as His jewellery. He accommodates His consort Umaa Devi on the left half of His body whose forehead is charming like a bent bow with an arrow. Worship this Lord.

உரித்ததுபாம்பையுடல்மிசையிட்டதோரொண்களிற்றை
எரித்ததொராமையையின்புறப்பூண்டதுமுப்புரத்தைச்
செருத்ததுசூலத்தையேந்திற்றுத்தக்கனைவேள்விபன்னூல்
விரித்தவர்வாழ்தருவெங்குருவில்வீற்றிருந்தவரே. 4

**உரித்தது, பாம்பை உடல்மிசை இட்டது, ஓர் ஒண் களிற்றை;**
**எரித்தது, ஓர் ஆமையை இன்புஉறப் பூண்டது, முப்புரத்தைச்;**
**செருத்தது, சூலத்தை ஏந்திற்று, தக்கனை வேள்வி; - பல்-நூல்**
**விரித்தவர் வாழ்தரு வெங்குருவில் வீற்றிருந்தவரே.**

urittatu, pAmpai uTalmicai iTTatu, Or oN kaLiRRai;
erittatu, or Amaiyai in2pu uRap pUNTatu, muppurattai;
ceruttatu, cUlattai EntiRRu, takkan2ai vELvi;--pal-nUl
virittavar vAztaru vEgkuruvil vIRRiruntavarE.

**பொருள்:** பலவேத நூல்களைக் கற்றுணர்ந்த சான்றோர்கள் வாழ்கின்றதும் மரங்கள் சூழ்ந்ததுமான வெங்குரு என்னும் சீகாழியில் சிவபெருமான் வீற்றிருக்கின்றார். இப்பெருமான் ஒப்பற்ற யானையின் தோலை உரித்தவர். பாம்பைத் தன் திருமேனியில் அணிந்தவர். முப்புரங்களை எரித்தவர். ஆமையோட்டை மகிழ்வுறப் பூண்டவர். தக்கன் வேள்வியில் வெகுண்டவர். சூலத்தை கையில் ஏந்தியவர். இப்பெருமானைப் போற்றித் தொழுவோமாக.

**குறிப்புரை:** பாம்பை உடல்மிசையிட்டது. ஓர் ஒண் களிற்றை உரித்து. ஆமையை இன்புறப் பூண்டது. முப்புரத்தை எரித்தது. சூலத்தை ஏந்திற்று. தக்கனை வேள்வி செருத்தது எனக் கூட்டுக. களிறு – யானை. செருத்தது – வருத்தியது. பன்னூல் விரித்தவர் – பல நூல்களையும் விரித்துணர்ந்த அந்தணர்.

Lord Civan is enshrined in **Venguru (வெங்குரு - One of the names of Seekaazhi)** where Vedic scholars who have deeply learned the Vedas and other scriptures do live in this city in large numbers. He skinned the exhilarated elephant. He decorates His body with serpent; He burnt the three citadels of Asuraas. He feels happy to wear tortoise skull on His body. He got wild with Thakkan for performing an

undesirable ritual sacrifice. He holds the trident in one of His hands. Let us go and worship this Lord.

கொட்டுவரக்கரையார்ப்பதுதக்கைகுறுந்தாளன
விட்டுவர்பூதங்கலப்பிலரின்புகழென்புலவின்
மட்டுவருந்தழல்சூடுவர்மத்தமுமேந்துவர்வான்
தொட்டுவருங்கொடித்தோணிபுரத்துறைசுந்தரரே. 5

கொட்டுவர், அக்கு அரை ஆர்ப்பது, தக்கை; குறுந்தாளன
இட்டுவர் பூதம், கலப்புஇலர், இன்புகழ், என்பு; உலவின்
மட்டு வரும் தழல், சூடுவர் மத்தமும் ஏந்துவர்; - வான்
தொட்டு வரும் கொடித் **தோணிபுரத்து** உறை சுந்தரரே.

koTTuvar, akku arai Arppatu, takkai; kuRuntALan2a
iTTuvar pUtam, kalappu ilar, in2pukaz, en2pu; ulavin2
maTTu varum tazal, cUTuvar mattamum, Entuvar;--vAn2
toTTu varum koTit tONipurattu uRai cuntararE.

**பொருள்:** வானத்தைத் தொடுமாறு உயர்ந்த கொடித் தோரணங்களை உடைய **தோணிபுரம் என்ற சீகாழியில்** சுந்தரரான சிவபெருமான் வீற்றிருக்கின்றார். இப்பெருமான் தக்கை என்னும் பறையைக் கொட்டுபவர். சங்கு மணியை அரையில் கட்டியிருப்பவர். குறுகிய பாதங்களை உடைய பூதகணங்களின் இனிய புகழை ஏற்பவர். கலப்பில்லாத வெண்மையான உடம்பினர். ஊமத்தம் பூவையும் சூடுபவர். உலகத்தை அழிக்குமாறு வரும் அக்கினியைக் கையில் ஏந்தியிருப்பவர். இப்பெருமானைப் போற்றித் தொழுவோமாக.

**குறிப்புரை:** வான்தொட்டு வருங்கொடித் தோணிபுரத்துறை சுந்தரர் மத்தம் சூடுவர். அக்கு அரையார்ப்பது; தக்கை கொட்டுவர். குறுந்தாளன பூதம் இன்புகழ் விட்டுவர். என்பு கலப்பிலர். உலவின்மட்டு வருந்தழல் ஏந்துவர் எனக்கூட்டிப் பொருள் காண்க. அக்கு – சங்கு மணி. தக்கை – ஒரு வாத்தியம். உலவின் மட்டு வருந்தழல் – உலகத்தை அழிக்குமளவு வரும் காலாக்கினி.

Lord Civa, our handsome god is enshrined in **Thonipuram (*தோணிபுரம்* - One of the names of Seekaazhi)** where the tall flags fixed on the mansions reach upto the sky. He beats the drum called tabour (*தக்கை*). He wears around His waist an ornament of small conches. He has an army of dwarfs with narrow feet from whom He accepts praise on Him. In His matted hair He wears the datura flowers along with the garland of skulls. He holds in one of His hands the destructive fire that prevails at the

dissolution of the universe (*காலாக்கினி; காலத்தீ* - Kaalaakkini; Kaalath-thee). Ye devotees! go and worship this Lord Civan.

சாத்துவர்பாசந்தடக்கையிலேந்துவர்கோவணந்தங்
கூத்தவர்கச்சுக்குலவிநின்றாடுவர்கொக்கிறகும்
பேர்த்தவர்பல்படைபேயவைசூடுவர்பேரெழிலார்
பூத்தவர்கைதொழுபூந்தராய்மேவியபுண்ணியரே. 6

சாத்துவர், பாசம் தடக்கையில் ஏந்துவர், கோவணம்; தம்
கூத்து, அவர், கச்சுக் குலவி நின்று, ஆடுவர்; கொக்குஇறகும்,
பேர்த்தவர் பல்படை பேய்அவை, சூடுவர்; பேர் எழிலார்; -
பூத்தவர் கைதொழு **பூந்தராய்** மேவிய புண்ணியரே.

cAttuvar, pAcam taTakkaiyil Entuvar, kOvaNam; tam
kUttu, avar, kaccuk kulavi nin2Ru, ATuvar; kokku iRakum,
pErttavar palpaTai pEy avai, cUTuvar; pEr ezilAr;--
pUttavar kaitozu pUntarAy mEviya puNNiyarE.

**பொருள்:** தவமுனிவர்கள் பூக்களைத் தூவி கையால் தொழும் **பூந்தராய் என்னும் சீகாழியில்** புண்ணியரான சிவபெருமான் எழுந்தருளியுள்ளார். இப்பெருமான் கோவணம் உடுத்தவர். இடுப்பில் கச்சு (உடை) அணிந்து ஆடுபவர். தமக்கே உரித்தான கூத்தினை உடையவர். பெரிய படைக்கலனை கையில் ஏந்தியிருப்பவர். வெண்மையான கொக்கிறகையும் சூடுபவர். பல்வகைப் படைகளாகிய பேய்க் கணங்களை அடிபெயர்த்து ஆடல் செய்தவர். பேரழகினை உடையவர். இப்பெருமானைப் போற்றித் தொழுவோமாக.

**குறிப்புரை:** தவர் பூ கைதொழு பூந்தராய் மேவிய புண்ணியர் பாசம் தடக்கையில் ஏந்துவர்; கோவணம் சாத்துவர்; தம்கூத்தவர்; கச்சு குலவி நின்று ஆடுவர்; கொக்கிறகும் சூடுவர்; பல்படைபேய் போர்த்தவர்; பேர் எழிலார் எனக் கூட்டுக. கச்சு குலவி நின்று ஆடுவர் – அரையில் கச்சு விளங்க நின்றாடுவர். குலவி; குலவ எனத் திரிக்க. போர்த்தவர் – அடி பெயர்த்தாடல் செய்தவர்.

Lord Civa, the righteous Supreme is enshrined in **Poontha-rai (*பூந்தராய்* - One of the names of Seekaazhi)** where ascetics strew flowers at the Holy Feet of Lord Civan and worship Him with their hands folded. He wears the fore-lap cloth. In His long hand He holds the noose (*பாசம்*). He dances in His own special dance pose, wearing the girdle around His waist. He adorns His head with the white flower known as Kokku-irahu or Kokkumantharai (*கொக்கிறகு அல்லது கொக்குமந்தாரை*). He decrees His army of

various types of goblins (*பேய்க்கணங்கள்*) to dance in precise movements. Ye! devotees go and worship this most handsome Lord.

காலதுகங்கைகற்றைச்சடையுள்ளாற்கழற்சிலம்பு
மாலதுவேந்தல்மழுவதுபாகம்வளர்கொழுங்கோட்
டாலதுவூர்வரடலேற்றிருப்பரணிமணிநீர்ச்
சேலதுகண்ணியொர்பங்கர்சிரபுரமேயவரே. 7

**காலது, கங்கை கற்றைச்சடையுள்ளால், கழல் சிலம்பு;**
**மாலது, ஏந்தல் மழுஅது, பாகம்; வளர் கொழுங் கோட்டு**
**ஆல்அது, ஊர்வர் அடல் ஏற்று, இருப்பர்; - அணி மணிநீர்ச்**
**சேல்அதுகண்ணி ஓர்பங்கர் சிரபுரம் மேயவரே.**

kAlatu, kagkai kaRRaic caTaiyuLLAl, kazal cilampu;
mAlatu, Ental mazu atu, pAkam; vaLar kozug kOTTu
Al atu, Urvar aTal ERRu, iruppar;--aNi maNi nIrc
cEl atu kaNNi orpagkar cirapuram mEyavarE.

**பொருள்:** அழகிய நீலமணியின் நிறத்தையும் சேல் மீன் போன்ற கண்களையும் உடைய உமையம்மையை ஒரு பாகமாக உடையவராய் சிவபெருமான் **சிரபுரம்** என்னும் **சீகாழியில்** விரும்பி எழுந்தருளி உள்ளார். இப்பெருமான் கழலையும் சிலம்பையும் காலில் சூடியவர். அடர்த்தியான சடையில் கங்கையைக் கொண்டிருப்பவர். திருமாலைப் பாகமாகக் கொண்டிருப்பவர். கையில் மழு ஏந்தியிருப்பவர். வளர்ந்த செழுமையான கிளைகளைக் கொண்ட ஆலமரத்தின்கீழ் வீற்றிருப்பவர். இடபத்தில்ஏறி ஊர்ந்து செல்பவர். இப்பெருமானைப் போற்றித் தொழுவோமாக.

**குறிப்புரை:** அணிமணி நீர்ச்சேலது கண்ணி ஓர் பங்கர் சிரபுரம் மேயவர் காலது கழல் சிலம்பு. கற்றைச் சடை உள்ளால் கங்கை. மாலது பாகம். ஏந்தல் மழுவது, வளர் கொழுங் கோட்டு ஆலது இருப்பர். அடல் ஏறு ஊர்வர் என மொழி மாற்றுக. கோடு – மேருமலைத் தென்சிகரம் ஆலது, சேலது என்பனவற்றுள் அது பகுதிப் பொருள் விகுதி.

Lord Civan concorporates His consort Umaa Devi on the left half of His body, whose eyes are good looking and bears the colour of sapphire gem and quakes like carp fish and enshrined in Chirapuram (***சிரபுரம்* - One of the names of Seekaazhi**). He wears in His left leg the tinkling anklet (*சிலம்பு*) and the warrior's ankle ring in His right leg. He accommodates the river Ganges in His matted hair. At the request of

Thirumaal He agreed to accommodate Him in half of His body occasionally whenever He goes out to fight. He carries the battle axe in one of His hands. He sits under the banyan tree having dense branches (while instructing disciples). He moves about in His vehicle the victorious bull. Go and worship this Lord.

நெருப்புருவெள்விடைமேனியரேறுவர்நெற்றியின்கண்
மருப்புறுவன்கண்ணர்தாதையைக்காட்டுவர்மாமுருகன்
விருப்புறுபாம்புக்குமெய்த்தந்தையார்விறல்மாதவர்வாழ்
பொருப்புறுமாளிகைத்தென்புறவத்தணிபுண்ணியரே. 8

*நெருப்புஉரு, வெள்விடை, மேனியர், ஏறுவர்; நெற்றியின்கண்,*
*மருப்புஉருவன், கண்ணர், தாதையைக் காட்டுவர், மா முருகன்*
*விருப்புஉறு, பாம்புக்கு மெய், தந்தையார்; - விறல் மா தவர் வாழ்*
*பொருப்பு உறு மாளிகைத் தென்புறவத்து அணி புண்ணியரே.*

neruppu uru, veLviTai, mEn2iyar, ERuvar; neRRiyin2 kaN,
maruppu uruvan2, kaNNar, tAtaiyaik kATTuvar; mA murukan2
viruppu uRu, pAmpukku mey, tantaiyAr;--viRal mA tavar vAz
poruppu uRu mALikait ten2 puRavattu aNi puNNiyarE.

***பொருள்:*** பெருமை மிக்க சிறந்த தவமுனிவர்கள் வாழ்வதும், மலை போன்ற உயர்ந்த மாளிகைகள் உடையதுமான அழகிய **புறவம் என்னும் சீகாழி** நகருக்கு அணிசேர்க்கும் புண்ணியராக சிவபெருமான் விளங்குகின்றார். இப்பெருமான் நெருப்புப் போன்ற சிவந்த மேனியர். வெண்மையான விடைமீது ஏறிவருபவர். நெற்றியில் மூன்றாவது கண் ஒன்று உடையவர். தந்தத்தை உடையவராகிய விநாயகருக்கு தந்தையார் ஆவர். பாம்பிற்கு தன் மெய்யில் இடம் தந்து அதனைச் சூடுபவர். சிறப்புக்குரிய முருகப் பெருமானுக்கு உகப்பான தந்தையார் ஆவர். இப்பெருமானைப் போற்றித் தொழுவோமாக.

***குறிப்புரை:*** விறல் மாதவர் வாழ் பொருப்புறு மாளிகைத் தென்புறவத்து அணி புண்ணியர், நெருப்புரு மேனியர், வெள்விடை ஏறுவர். நெற்றியின் கண்ணர், மருப்புருவன் தாதை, மா முருகன் விருப்புறு தந்தையார், பாம்புக்கு மெய்(யைக்) காட்டுவர் எனக் கூட்டுக. மருப்பு உருவன் – கொம்பினை உடைய விநாயகப் பெருமான், தாதையை என்பதிலுள்ள ஐகாரத்தைப் பிரித்து மெய் என்பதனோடு கூட்டி மெய்யை எனப் பொருள் கொள்க. இது உருபு பிரித்துக் கூட்டல்.

The magnanimous ascetic saints who perform many religious austerities live in **Puravam** in large numbers (*புறவம்* - One of the names of Seekaazhi) where the

mansions are so tall and big that they look like mountain. For this beautiful city of Puravam, Civan, our Lord of benediction adds more glory by His presence there. His body appears red as fire. He rides on His White Bull and moves about. He has a third eye on His forehead. He is the father of elephant headed god Vinaayakar who has two tusks as his teeth. He gives room in His body to the snake and wears it. He is the joyful father of the pre-eminent god Murugan. Go and worship this Lord Civan.

இலங்கைத்தலைவனையேந்திற்றிறுத்ததிரலையின்னாள்
கலங்கியகூற்றுயிர்பெற்றதுமாணிகுமைபெற்றது
கலங்கிளர்மொந்தையினாடுவர்கொட்டுவர்காட்டகத்துச்
சலங்கிளர்வாழ்வயற்**சண்பை**யுள்மேவியதத்துவரே. 9

***இலங்கைத் தலைவனை, ஏந்திற்று, இறுத்தது, இரலை; இல்-நாள்,***
***கலங்கிய கூற்று, உயிர் பெற்றது மாணி, குமைபெற்றது;***
***கலம் கிளர் மொந்தையின், ஆடுவர், கொட்டுவர், காட்டுஅகத்து; -***
***சலம் கிளர் வாழ் வயல் சண்பையுள் மேவிய தத்துவரே.***

ilagkait talaivan2ai, EntiRRu, iRuttatu, iralai; il-nAL,
kalagkiya kURRu, uyir peRRatu mANi, kumai peRRatu;
kalam kiLar montaiyin2, ATuvar, koTTuvar, kATTu akattu;--
calam kiLar vAz vayal caNpaiyuL mEviya tattuvarE.

***பொருள்:*** நீர் வளம் நிறைந்து விளங்கும் வயல்களை உடைய **சண்பை என்னும் சீகாழிப் பதியில்** சிவபெருமான் எழுந்தருளியுள்ளார். இப்பெருமான் இலங்கைத் தலைவனான இராவணனை நெரித்து வலியிழக்கச் செய்தவர். கையில் மானை ஏந்தியவர். கலக்கத்தோடு வந்த யமனின் உயிரைக் கவர்ந்தவர். வாழ்நாள் முடிவுற்றதைக் குறித்துக் கலங்கிய மார்க்கண்டேயருக்கு உயிர் கொடுத்துப் புது வாழ்வு அருளியவர். வாத்தியமாக இலங்கும் மொந்தை என்னும் தோல் கருவியைக் கொட்டுபவர். சுடுகாட்டில் ஆடுபவர். இப்பெருமானைப் போற்றித் தொழுவோமாக.

***குறிப்புரை:*** சலம் கிளர் வாழ் வயல் சண்பையில் மேவிய தத்துவர் இலங்கைத் தலைவனை இறுத்தது; இரலை ஏந்திற்று; கலங்கிய கூற்று குமை பெற்றது; இல் நாள் மாணி உயிர்பெற்றது. கலங்கிளர் மொந்தையின் கொட்டுவர்; காட்டகத்து ஆடுவர் எனக் கூட்டுக. இரலை – மான். இல்நாள்மாணி – வாழ்நாள் உலந்த மார்க்கண்டன், குமை பெற்றது – அளிந்தழிந்தது.

Lord Civan is entempled in **Chanbai city (*சண்பை நகரம்* - One of the names of Seekaazhi)** which abounds in rich fields full of water. He subdued king Raavanan of Sri Lanka by crushing him under His mount Kailas. He holds in one of His hands the young deer. He kicked Yama, the god of death to perish, who approached Maarkandēyan with a troubled mind. Though the life time was over for Maarkandēyan, Lord Civan blessed him and gave a further lease of life - Maarkandēya lead a new life, thereafter for an indefinite period. He beats the leather drum that opens at one end called Monthai (*மொந்தை*). He used to dance in the burial ground. Ye devotees! go and worship Him.

அடியிணைகண்டிலன்தாமரையோன்மால்முடிகண்டிலன்
கொடியணியும்புலியேறுகந்தேறுவர்தோலுடுப்பர்
பிடியணியுந்டையாள்வெற்பிருப்பதோர்கூறுடையர்
கடியணியும்பொழிற்காழியுள்மேயகறைக்கண்டரே. 10

*அடி இணை கண்டிலன், தாமரையோன், மால், முடி கண்டிலன்;*
*கொடி அணியும், புலி, ஏறு, உகந்து ஏறுவர், தோல் உடுப்பர்;*
*பிடி அணியும் நடையாள், வெற்பு இருப்பது, ஓர்கூறு உடையர்; -*
*கடி அணியும் பொழில் **காழியுள்** மேய கறைக்கண்டரே.*

aTi iNai kaNTilan2, tAmaraiyOn2, mAl, muTi kaNTilan2;
koTi aNiyum, puli, ERu, ukantu ERuvar, tOl uTuppar;
piTi aNiyum naTaiyAL, veRpu iruppatu, OrkURu uTaiyar;--
kaTi aNiyum pozil kAziyuL mEya kaRaikkaNTarE.

**பொருள்:** நறுமணம் பொருந்திய பொழில்கள் சூழ்ந்த **காழிபுரம் என்னும் சீகாழிப் பதியுள்** கறை பொருந்திய கண்டத்தை உடையவராகச் சிவபெருமான் வீற்றிருக்கின்றார். இப்பெருமானின் அடிமுடிகளைத் திருமாலும் தாமரை மலரின் மேல் விளங்கும் பிரமனும் கண்டிலர். இவரது கொடிமிசை இலச்சினையாகத் திகழும் இடபத்தை வாகனமாகக் கொண்டு அதன்மீது ஏறுபவர். புலித்தோலை உடுப்பவர். பெண் யானை போன்ற நடையினை உடைய உமையம்மையைத் தன் உடம்பில் ஒரு பாகமாகக் கொண்டவர். இவரின் இருப்பிடமோ கயிலை மலையாகும். இப்பெருமானைப் போற்றித் தொழுவோமாக.

**குறிப்புரை:** கடி அணியும் பொழில் காழியுள் மேய கறைக் கண்டர் அடியினை மால் கண்டிலன்; தாமரையோன் முடிகண்டிலன்; கொடியணியும் ஏறு உகந்து ஏறுவர்; புலித்தோல் உடுப்பர்; பிடியணியும் நடையாள் கூறுடையர்; வெற்பு இருப்பது எனக் கூட்டுக. கடி – மணம். கொடியணியும் – கொடியை அலங்கரிக்கும். பிடி அணியும் நடையாள் – பெண் யானையை ஒத்த நடையினையுடைய பார்வதி. வெற்பு – கைலை.

Lord Civan whose neck appears in dark blue colour like that of sapphire gem is entempled in **Kaazhi Puram (one of the names of Seekaazhi)** girt with fragrant flower filled natural groves. Thirumaal could not see the Holy Feet of this Lord Civan. Brahma who is seated in the lotus could not see His head and face. He desires to ride on His bull, with His flag whose insigne is also the bull. He wears the tiger skin in His waist. He embeds His consort Umaa Devi on the left half of His body frame, who walks majestically like a female elephant. His permanent place of residence is mount Kailas. Go and worship Him.

கையதுவெண்குழைகாததுசூலமமணர்புத்தர்
எய்துவர்தம்மையடியவரெய்தாரோரேனக்கொம்பு
மெய்திகழ்கோவணம்பூண்பதுடுப்பதுமேதகைய
கொய்தலர்பூம்பொழிற்**கொச்சை**யுள்மேவியகொற்றவரே. 11

கையது, வெண்குழை காதது, சூலம்; அமணர்புத்தர்,
எய்துவர், தம்மை, அடியவர், எய்தார்; ஓர் ஏனக்கொம்பு,
மெய் திகழ் கோவணம், பூண்பது, உடுப்பது; - மேதகைய
கொய்து அலர் பூம்பொழில் **கொச்சை**யுள் மேவிய கொற்றவரே.

kaiyatu, veNkuzai kAtatu, cUlam; amaNar puttar,
eytuvar, tammai, aTiyavar, eytAr; Or En2akkompu,
mey tikaz kOvaNam, pUNpatu, uTuppatu;--mEtakaiya
koytu alar pUmpozil koccaiyuL mEviya koRRavarE.

**பொருள்:** சிறந்தனவாகவும் கொய்யக் கொய்ய மீண்டும் மீண்டும் மலரும் அழகிய பொழில்களோடு சூழப்பட்டனவாயும் உள்ள **கொச்சைவயம் என்னும் சீகாழி** நகரின் பேரரசனாக சிவபெருமான் எழுந்தருளியுள்ளார். இப்பெருமானின் கையில் சூலமும் வலக்காதில் வெண்குழையும் உள்ளன. இப்பெருமானைச் சமணரும் புத்தர்களும் அடையமாட்டார்கள். ஆனால், எளிமையான அடியவர்கள் இவரை அடைவார்கள்.

பன்றியின் கொம்பை அவர் திருமேனியில் விளங்கப் பூண்பவர். அவர் கோவணம் உடுத்தவர். இப்பெருமானைப் போற்றித் தொழுவோமாக.

**குறிப்புரை:** கொய்து அலர்பூம்பொழில் மேதகைய கொச்சையுள் மேவிய கொற்றவர் கையது சூலம்; காதது வெண்குழை; அமணர் புத்தர் தம்மை எய்தார்; அடியவர் எய்துவர்; ஓர் ஏனக் கொம்பு மெய்திகழ் பூண்பது; கோவணம் உடுப்பது எனக் கூட்டுக.

Our valiant Lord Civan is enshrined in **Kochai Vayam (கொச்சைவயம் - One of the names of Seekaazhi)**. This town is girt with natural groves, which yield fragrant and good-looking flowers, and keep on yielding them after repeated plucking. He holds the trident in one of His hands. He wears in His right ear the round ear ring (குழை). The Samanars and the Buddhists could not approach Him. But His devotees can reach Him easily. He wears on His body very conspicuously the tusk of the hog. He wears the fore-lap cloth on His loins. Go and worship this Lord Civan.

கல்லுயர்கழுமலவிஞ்சியுள்மேவியகடவுள்தன்னை
நல்லுரைஞானசம்பந்தன்ஞாநத்தமிழ்நன்குணரச்
சொல்லிடல்கேட்டல்வல்லோர்தொல்லைவானவர்தங்களொடுஞ்
செல்குவர்சீரருளாற்பெறலாஞ்சிவலோகமதே. 12

கல் உயர் **கழுமலம்** விஞ்சியுள் மேவிய கடவுள் தன்னை
நல்உரை ஞானசம்பந்தன் ஞானத்தமிழ் நன்கு உணரச்
சொல்லிடல் கேட்டல் வல்லோர், தொல்லைவானவர்தங்களொடும்
செல்குவர்; சீர் அருளால் பெறல்ஆம் சிவலோகம்அதே.

kal uyar injcik kazumalam mEya kaTavuL tan2n2ai
nal urai njAn2acampantan2 njAn2attamiz nan2ku uNarac
colliTal kETTal vallOr, tollai vAn2avar tagkaLoTum
celkuvar; cIr aruLAl peRal Am civalOkam atE.

**பொருள்:** கல்லால் ஆன உயர்ந்த மதில்களை உடைய **கழுமலம்** என்னும் சீகாழியில் எழுந்தருளிய சிவபெருமானை, ஞானசம்பந்தன் நல்லுரைகளால் போற்றிப் பாடினார். கடவுள் ஞானத்தை உணர்த்தும் தமிழால் நன்கு உணரச் சொல்லிய இத்திருப்பதிகத்தைச் சொல்லவும் கேட்கவும் வல்லவர்கள். தொன்மையாக விளங்கும் தேவர்களுடன் அமருலகம் சென்று லோகத்தைப் பெறுவர்.

***குறிப்புரை:*** கழுமலநகர்க் கடவுளை ஞானசம்பந்தன் சொன்ன ஞானத்தமிழ் நல்லுரைகளைச் சொல்லவும் கேட்கவும் வல்லார் தேவரோடு சிவலோகம் பெறுவர் என்கின்றது. புண்ணியஞ் செய்வது தேவராய்ப் பதவியில் நிற்பாரை விலக்கத் தொல்லை வானவர் என்றருளினார். இப்பதிகம் கட்டளைக் கலித்துறையாதலின் இப்பாடல் முதலடி, 'கல்லுயர் இஞ்சிக் கழுமலம் மேய கடவுடன்னை' என்றிருந்து சிதைத்திருக்கலாம் என்பர் தி. வே. கோ.

திருஞானசம்பந்தருடைய பதிகங்களில், அனேகமாக 8, 9, 10ஆம் பாட்டுக்களில் முறையே இராவணனையும், திருமால் – பிரமனையும், சமணர் – புத்தர்களையும் குறிப்பிட்டுள்ளார். 11ஆவது பாட்டு திருக்கடைக்காப்பு என்று சொல்லப்படும் பதிகத்தின் பலனைக் குறிக்கும். ஆக மொத்தம் ஒவ்வொரு பதிகத்திலும் 11 பாட்டுக்களே இருக்கும். **ஆனால் இந்த 117ஆவது திருப்பிரமபுரம் என்னும் பதிகத்தில் மேலே சொல்லப்பட்ட அமைப்பு இல்லை. மொத்தம் கூடுதலாக 12ஆவது பாட்டும் அமைந்துள்ளது.**

Lord Civan is enshrined in the temple having tall walls. Gnaanasambandan sang these divine verses in wisdomful Tamil on Lord Civan of this place. Those efficient scholars who can understand well these verses and recite and/or hear them will accompany the good old Devas to the place of the celestial and finally reach the world of Lord Civa.

**Note: This hymn has got 12 verses as against the normal 11 verses which may be taken note of.**

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*117ஆம் பதிகம் முற்றிற்று*
End of 117th Hymn

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# 118. திருப்பருப்பதம்

## திருத்தல வரலாறு:

திருப்பருப்பதம் என்ற திருத்தலம் ஆந்திர மாநிலத்தில் உள்ளது. வடநாட்டுத் தலம் ஐந்தனுள் ஒன்று. சென்னையில் இருந்து நந்தியால் வரை புகைவண்டியில் சென்று ஆத்மகூர் வழியாகப் பேருந்தில் செல்லலாம். சென்னையில் இருந்து ஆந்திர மாநிலப் பேருந்து நேரே ஸ்ரீசைலம் (திருப்–பருப்–பதம்) செல்கிறது. இத்தலம் பன்னிரு சோதிர்லிங்கத் தலங்களில் ஒன்று. மல்லிகார்ச்சுனம் எனப் பெயர் பெறுவது. இத்தலம் திருப்பருப்பதம் எனவும், ஸ்ரீசைலம் எனவும் வழங்கும். அருச்சுன க்ஷேத்திரங்கள் மூன்றனுள் இது ஒன்று. திருநந்திதேவர் இறைவனைத் தாங்க மலையுருவாகத் தவஞ்செய்த தலம். இத்தலத்திற்குச் செல்லும் வழி மிகக் கடினமானது. இதனைச் சுந்தரமூர்த்தி தேவாரம் 'செல்லல் உறவரிய சீபருப்பதமலை' என்று எடுத்துக் காட்டுகிறது. சுவாமி பருப்பத நாயகர். இறைவி பருப்பத நாயகி. தீர்த்தம் பர்வதீர்த்தம்.

## கல்வெட்டு:

விஜய நகர அரசனான வீரப்பிரதாப வீரநரசிங்கராயன் இங்கு வந்து வழிபட்டு இருக்கிறான். ஒரு பருவதையன் என்பானும் அவன் மனைவியும் இங்கு வந்து 'சித்தபுரம்' என்னுமிடத்தில் ஒரு குளம் வெட்டி நந்தவனம் அமைத்தனர். கிருஷ்ண தேவராயனுடைய மந்திரியான சந்திரசேகர அமாத்யா என்பவன் கல்யாண மண்டபத்தைக் கட்டிப் பொற்கலசம் ஸ்தாபித்தான். மல்லிகார்ச்சுன கோயிலுக்கு முன்புறத்தில் ஒருமண்டபங் கட்டினான். நந்தீசுவரத்திற்கும், பிருங்கீசுவரத்திற்கும் பொன்னாலேயே திருவுரு அமைத்துக் கொடுத்தான். அந்த மண்டபத்தில் தமராசா என்பவன் கிருஷ்ண தேவராயர் சந்திரசேகர அமாத்யா இவர்களுடைய கற்சிலைகளை அமைத்தான். கோயில் செலவுகளுக்காகச் சிவபுரம் என்னும் ஊரைத் தானமாக வழங்கினான். பொற்கிண்ணமும், வெள்ளிப்பீடமும் அளித்தான். நந்தியைப் பிரதிட்டை செய்து அதற்கு முன்பக்கத்தில் பொற்றூண் ஒன்றை நிறுவினான். வீரப்பிரதாப அச்சுதராயன் காலத்தில் மல்லப்ப நாயுடு என்பவன் பிரமராம்பா அம்மைக்கு ஒரு மணியும் சரிகையாடையும் அளித்தான். விஜயராய மகாராயன் மகளும், பாண்டிய பெருமாள் தேவனின் மனைவியுமாகிய லெட்சம்மாள்ஜி ஆயி என்பவள் தினசரி ஐந்து ஜங்கமர்களுக்கு உணவளிக்க நிலம் வழங்கினாள். சாளுவ அரசனான

பதமல்லப்பன் ஒரு குளம் வெட்டியிருக்கிறான். காகதீய அரசனான பிரதாப ருத்திர தேவ மகாராஜர் காலத்தில் அவனுடைய முதல் மந்திரி உச்சிக்கால வழிபாட்டிற்காக கமநாட்டில் நிலம் வழங்கி இருக்கிறார். ஜனமாதா மண்டபத்திற்கு அருகில் ஒரு கோயிலையும் கட்டி இருக்கிறார். அன்னப்ப ஐயன் என்பவன் மல்லிகார்ச்சுன தேவர்க்கும் பிரமராம்பா தேவிக்கும் நைவேத்திய நிவந்தங்களை அளித்ததோடு முகமண்டபங் கட்டுவித்தான். தென்னண்டை மதில் பிராகாரத்தைப் பழுதுபார்த்தான். இரும்புத் தூண்களை நிறுத்தித் தெற்குக் கோபுரத்தையும் பழுதுபார்த்தான். பயிராகிஸந்தகி என்பவன் தன் மனைவியின் பெயரால் பூந்தோட்டத்திற்கு நிலம் அளித்துள்ளான். இவை யன்றி நந்திநாதர், பிருங்கிநாதர் முதலியவர்களை வழிபடுகிறவர்களுக்கு வீடுகள் கட்டி அளித்த செய்தியும், செங்கையன் என்பார் சந்தனக்கல் வைத்ததும் அறியப் பெறுகின்றன. பிரதான கங்கைக்கு இரண்டாம் விதரிசுரனின் மனைவியான கடம்ப வித்தலம்பா படிக்கட்டு கட்டினாள். வித்தலேசுவரருக்கு ஒரு உருவச்சிலை வழங்கினாள். இந்தத் தருமங்களைச் செய்ய இறைவன் அவளுக்கு கனவில் வந்து அருளியதாகக் குறிப்பிடுகிறாள். மேலும் சந்திரசேகரன் வீரபத்திர தேவர் கோபுரத்தையும், தூண்களையும், பொற் கலசங்களையும் அமைத்திருக்கிறான். உதயகிரி அப்பனையங்காரு நந்தித் தூணில் இருந்து துர்க்காதேவி கோயில் வரையில் படிக்கட்டுக்களைக் கட்டுவித்தான். கொண்டபட்டி என்பவன் கோயில் முழுமையும் புதுப்பித்திருக்கிறான். இவையன்றிப் பல அன்பர்கள் பொற்றூண்கள் அமைத்தும் படிக்கட்டமைத்தும், முகமண்டபம் கட்டியும் பணி செய்தார்கள் என்று தெரிகிறது.

### பதிக வரலாறு:

திருப்பருப்பதம் என்னும் திருத்தலமானது வடஇந்தியாவில் அமைந்துள்ள தலம் ஆகும். ஸ்ரீசைலம் என்று வழங்கப்படுகிறது. சக்தி மடமாக உள்ளது. பூகயிலாயம் எனவும் வழங்கப்பெறுகின்றது. மருத மரத்தைத் தலமரமாகக் கொண்டுள்ள தலங்கள் மூன்று. அவற்றுள் இத்தலம் மல்லிகார்ச்சுனம் எனப்படும். மற்ற இரண்டும்,

1. திருவிடை மருதூர் – மத்தியார்ச்சுனம்
2. திருப்புடை மருதூர் – புடார்ச்சுனம்.

இது சிலாத முனிவர் தவம் செய்த திருத்தலம். நந்தி தேவர் தவம் செய்து வாகனப் பேறு பெற்றார். அவரே இங்கு மலையாக இருந்து பெருமானைத் தாங்குகிறார் என்பது வரலாறு. பன்னிரு ஜோதி லிங்கத் தலங்களில் ஒன்று இத்திருத்தலம். ஏனைய 11 ஜோதி லிங்கங்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

| | | | |
|---|---|---|---|
| 1. | சோமநாதம் | – | குஜராத் மாநிலம் |
| 2. | உச்சயினி | – | மத்தியப் பிரதேசம் |
| 3. | ஓங்காரம் | – | மத்தியப் பிரதேசம் |
| 4. | வைத்தியநாதம் | – | மகாராட்டிரம் |
| 5. | பீமசங்கரம் | – | மகாராட்டிரம் |
| 6. | இராமேஸ்வரம் | – | தமிழ்நாடு |
| 7. | விஸ்வேசம் (காசி) | – | உத்தரப்பிரதேசம் |
| 8. | திரயம்பகம் | – | மகாராட்டிர மாநிலம் |
| 9. | கேதாரம் | – | உத்தரப்பிரதேசம் |
| 10. | குஸ்மேசம் | – | மகாராட்டிர மாநிலம் |
| 11. | நாகேசம் | – | மகாராட்டிர மாநிலம் |

இத்தலத்தில் உள்ள சுவாமி பருப்பத நாயகர்; மலைமீது வீற்றிருக்கின்றார். இவருக்கு மல்லிகார்ச்சுனர் என்ற வேறொரு பெயரும் உண்டு. அம்பாள் பெயர் பருப்பத நாயகி மற்றும் பிரமராம்பிகை ஆகும். இத்தலத்தின் தல மரம் மருதமரம் மற்றும் திரிபலா ஆகும். பர்வத தீர்த்தம் இங்குள்ள தீர்த்தம் ஆகும்.

திருஞானசம்பந்தர், திருக்காளத்தி மேவி ஈசனைப் பாடிப்பரவி மகிழ்ந்து, ஆங்கிருந்தவாறே, திங்கள் புனை முடியார் தம், தலம்தோறும் சென்று தமிழ் இசை பாடும் செய்கை போலக் குலவு திருப்பருப்பதத்தின் கொள்கை பாடினர் என்பது சேக்கிழார் வாக்கு.

கூற்றுதைத்தார் வீற்றிருக்கும் திருக்கோகரணம் பாடி எழுந்தருளிய பிள்ளையார் திருப்பருப்பதத்தை அடைந்து 'சுடுமணி யுமிழ் நாகம்' என்னும் இத்திருப்பதிகத்தைப் பாடிப் பர்வத நாயகரைப் பரவினர்.

## 118. THIRU-P-PARU-P-PATHAM

### HISTORY OF THE PLACE

This sacred place is in the Andhra Pradesh state and is one of the five in the Northern Country. It can be reached either directly by the Andhra Pradesh State buses from Chennai, or by taking the train from Chennai to Nandyaal from where buses ply via Aathmakoor. The place is known as Sreesailam and also as Mallikaarch-chunam.

God is known as Paruppadhanaayakar and Goddess as Paruppadhanaayaki. The sacred ford is Parvatha Theerththam..

This is one of the twelve 'Jyothirlinga' temples as well as one of the three 'Aruchchuna' temples. Thiru Nandhi Thevar performed thavam in order to get the form of a mountain for the privilege of supporting the Lord. The path leading to this temple used to be difficult in those days. Now buses are plying upto the temple.

The information gathered from the inscriptions is as follows: The Vijayanagaram king Veerappirathaapa Veeranarasinga Raayan has offered worship here. One Paruvadhaiyan and his wife dug a pond and set up a flower garden here. A minister of Krishnadheva Raaya, Chandhirasekara Amaathyaa, built a Kalyaana Mandapam with golden finials and another Mandapam in front of the main shrine. He also had icons made in gold for Nandheesuvarar and Birungeesuvarar. One Thamaraasaa had stone portraits of Krishnadheva Raayaa and Chandhirasekara Amaathyaa sculpted in the mandapam. He also gifted a village, Sivapuram, for temple expenses, besides the grant of a golden bowl and silver seat. He also installed a Nandhi and erected a golder pillar in front of that. During the reign of Veerappirathaapa Achchutha Raayan, one Mallappa Nayudu gifted a bell and a zari cloth for Goddess Biramaraambaa. Letchammaalji Aayi, wife of Paandiya Perumal Thevan and daughter of Vijyaraayamahaaraayan, made a land grant for feeding five Jangamars everyday. A Saaluva king, Padhamallappan also had dug a pond. The chief minister of the Kaakatheeya king Pirathaapa rudhradheva Mahaaraajar had gifted land in Kamanaadu for the mid-day worship service. He also had built a shrine near the Janamaathaa Mandapam. One Annappa Iyan had made grants for food offerings to the God and Goddess, in addition to having built a Mukha Mandapam, renovated the south ambulatory walls, and repaired the south gopuram by reinforcing it with iron pillars. One Bairaagi Sandhagi had give land in the name of his wife for setting up a flower garden. He also had houses built for the priests of Nandhinaathar and Bringinaathar. A Sengkaiyan installaed a grinding stone for preparing sandal paste. Kadambaviththaalaa, wife of Vidharikaran II, had steps built at the Piradhaana Gangkai

ford and also installed an icon for Viththalesuvarar. She has noted that the God appeared to her in a dream and asked her to make these gifts. One Chandhirasekaran has built the gopuram for Veerabadra Thevar along with pillars and golden finials. Appanaiyangaaru of Udhayagiri built steps going from the Nandhi pillar to the Dhurgaadhevi shrine. One Kondapatti had renovated the whole temple. Besides the above, many devotees had erected golden pillars, built steps, and constructed mandapams in service of this temple.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 118. திருப்பருப்பதம் 118. THIRU-P-PARU-P-PATHAM

பண் : வியாழக்குறிஞ்சி
ராகம் : சௌராஷ்டிரம்

*Pann: Viyazha-k-kurinji*
*Raagam : Saurashtram*

சுடுமணியுமிழ்நாகஞ்சூழ்தரவரைக்கசைத்தான்
இடுமணியெழிலானையேறலனெருதேறி
விடமணிமிடறுடையான்மேவியநெடுங்கோட்டுப்
படுமணிவிடுசுடரார்பருப்பதம்பரவுதுமே. 1

சுடுமணி உமிழ் நாகம் சூழ்தர அரைக்கு அசைத்தான்;
இடு மணி எழில் ஆனை ஏறலன், எருதுஏறி;
விடம் அணி மிடறு உடையான்; மேவிய - நெடுங்கோட்டுப்
படு மணிவிடு சுடர் ஆர் - பருப்பதம் பரவுதுமே.

cuTumaNi umiz nAkam cUztara araikku acaittAn2;
iTu maNi ezil An2ai ERalan2, erutu ERi;
viTam aNi miTaRu uTaiyAn2; mEviya--neTugkOTTup
paTu maNiviTu cuTar Ar--paruppatam paravutumE.

**பொருள்:** பிரகாசிக்கும் ஒளியை உடைய மாணிக்க மணியை உமிழும் நாகத்தைச் சிவபெருமான் தனது அரையில் பொருந்தக் கட்டியுள்ளார். இவர், இருபுறங்களிலும் மணிகள் தொங்குகின்ற யானையின்மீது ஏறாமல், இடபத்தின்மீது ஏறி வருபவர். நஞ்சை உண்ட கண்டத்தை உடையவர். இப்பெருமான் எழுந்தருளியுள்ள உயர்ந்த சிகரங்களை உடையதும், ஆங்காங்கே மணிகள் போலத் தோன்றும் ஒளியினை உடையதுமான திருப்பருப்பதத்தை நாம் வணங்குவோம்.

**குறிப்புரை:** திருவரையில் நாகத்தைக் கட்டியவர்; யானையேறாது ஆனேறு ஏறியவர். நீலகண்டர் எழுந்தருளிய சீபருப்பதத்தைப் பரவுவோம் என்கின்றது. சுடுமணி – ஒளிவிடுகின்ற மாணிக்கம். அசைத்தான் – கட்டியவன். இடுமணி எழில் ஆனை – இருமருங்கும் இடப்பெற்ற மணிகளைஉடைய யானையை.

Lord Civan is entempled in Thiru-p-paru-p-patham hemmed in by long and high hills. The area all around this place is bright with light radiating gems scattered all over the place. He dons around His waist the snake which emits the shining ruby gem. Instead of maintaining and riding on the majestic elephant as His vehicle on whose body two ringing bells hang, He rides on His bull vehicle and moves around. His neck appears dark blue in colour because He has positioned the poison in His throat. Let us go over to this city and worship Him there.

நோய்புல்குதோல்திரையநரைவருநுகருடம்பில்
நீபுல்குதோற்றமெல்லாநினையுள்குமடநெஞ்சே
வாய்புல்குதோத்திரத்தால்வலஞ்செய்துதலைவணங்கிப்
பாய்புலித்தோலுடையான்பருப்பதம்பரவுதுமே. 2

*நோய் புல்கு தோல் திரைய நரை வரு நுகர் உடம்பில்*
*நீ புல்கு தோற்றம்எல்லாம் நினை-உள்கு, மடநெஞ்சே!*
*வாய் புல்கு தோத்திரத்தால் வலம் செய்து, தலைவணங்கிப்,*
*பாய் புலித்தோல் உடையான் பருப்பதம் பரவுதுமே.*

nOy pulku tOl tiraiya narai varu nukar uTampil
nI pulku tORRam ellAm nin2ai-uLku, maTa nenjcE!
vAy pulku tOttirattAl, valamceytu, talaivaNagki,
pAy pulittOl uTaiyAn2 paruppatam paravutumE.

**பொருள்:** அறியாமையில் மூழ்கி இருக்கும் நெஞ்சே! நீ, இந்த நிலையற்ற உடம்பில் நோய்கள் தழுவியும் தோல் சுருங்கியும், நரை தோன்றும் நிலையையும் நினைந்து சிந்திப்பாயாக. வயது முதிர்ந்து வருவதற்கு முன்பே, வாய் நிறைந்த தோத்திரத்தால் பாடி, வலஞ்செய்து தலையால் வணங்கி, பாய்கின்ற புலியின் தோலை உடுத்தியுள்ள சிவபெருமான் எழுந்தருளியுள்ள திருப்பருப்பதத்தை வணங்குவோம்; வருவாயாக!

**குறிப்புரை:** நெஞ்சே! தோல் திரங்கி, நரைத்துப் போகும் உனது தோற்றம் எல்லாவற்றையும் கொஞ்சம் நினைத்துப் பார், வாய் நிறைந்த தோத்திரத்தால் வலஞ்செய்து வணங்கிச் சீபருப்பதத்தைப் பரவுவோம் வா என்கின்றது. புல்கு – தழுவிய. திரைய – சுருங்க. நினை உள்கு – நினைத்துப்பார் சிந்தித்துப்பார். புல்கு – நிறைந்த.

Oh mind! what a pity! you involve yourself in ignorance deeply and get perplexed in your life. Please think of your life from younger days. You got yourself involved in sexual life. You embroiled yourself in the ever-changing worldly life resulting in all sort of diseases, skins wrinkling, hair becoming grey and all other inconvenience. Before reaching old age, let us go to Thiru-p-paru-p-patham where Lord Civan wearing the skin of leaping tiger is enshrined, go round the temple, and offer our worship to Him. Kindly do come.

துணியுறுதுயர்தீரத்தோன்றியோர்நல்வினையால்
இனியுறுபயனாதலிரண்டுறமனம்வையேல்
கனியுறுமரமேறிக்கருமுசுக்கழையுகளும்
பனியுறுகதிர்மதியான்பருப்பதம்பரவுதுமே. 3

துணி உறுதுயர் தீரத் தோன்றி ஓர் நல்வினையால்
இனி உறுபயன் ஆதல் இரண்டு உற மனம் வையேல்!
கனி உறு மரம் ஏறிக் கருமுசுக் கழை உகளும்
பனி உறு கதிர் மதியான், பருப்பதம் பரவுதுமே.

tun2i uRutuyar tIrat tOn2Ri Or nalvin2aiyAl
in2i uRupayan2 Atal iraNTu uRa man2am vaiyEl!
kan2i uRu maram ERik karumucuk kazai ukaLum,
pan2i uRu katir matiyAn2, paruppatam paravutumE.

**பொருள்:** நெஞ்சே! வருத்தத்தைத் தரும் இந்தப் பிறவித் துயர் நீங்கி, பேரின்பம் பெறவே இவ்வுலகத்தில் நீ பிறந்திருக்கின்றாய். ஆகையால் நல்வினைகள் செய்து அப்புண்ணியத்தால் கிடைக்கும் தேவலோக இன்பத்தை நுகர்தல், வீடு பேறாகிய விழுமிய பயனை எய்துதல் ஆகிய இரண்டிலும் பற்று வைக்காதே. கரிய குரங்குகள் கனிகள் நிறைந்த மரத்தில் ஏறி அதனை நுகராமல், கனிகள் அற்ற மூங்கில் மரங்களில் தாவி மகிழும். அம்மாதிரி நடந்து கொள்ளாதே. குளிர்ந்த ஒளியோடு கூடிய பிறைமதியைச் சூடிய சிவபெருமான்

எழுந்தருளியுள்ள திருப்பருப்பதத்தை நாம் வணங்குவோம். (மனித மனம் ஒன்றைவிட்டு ஒன்றைப் பற்றும் நிலையை இப்பாடல் தெரிவிக்கின்றது).

**குறிப்புரை:** பிறவித் துன்பம் நீங்கப் பிறந்த நீ, செய்த நல்வினையால் எய்தப்போகும் இன்பப் பிறவியை எண்ணி இரண்டுபட்ட மனம் எய்தாதே; திருமலையைப் பரவுவோம் வா என்கின்றது. துனி – வருத்தம். கோடி செல்வம் பெற முயன்றார் பிடி செல்வம் பெற்று மகிழார்கள். அதுபோல நீ பேரின்பம் பெறப் பிறந்தது புண்ணிய வசத்தால் வரும் தேவலோக இன்பம் முதலியவற்றைச் சிந்தியாதே உறுதியாக இரு என்பதாம். முசு – குரங்கு.

Oh! Ye devotees! You are born in this world as human beings, the purpose of which is to get rid of birth and death cycle. The black monkeys climb on trees full of ripped fruits; but without eating them, leave the trees, and jump on the nearby bamboo tree with a lust for tender shoots therein. Like these black monkeys do not change your mind, now and then, and get perplexed. Do not think about the Bliss you are going to enjoy by your virtuous deeds. Be firm in your minds. Let us go to Thiru-p-paru-p-patham and offer worship to Lord Civan enshrined therein who decorates in His matted hair the cool bright crescent moon.

கொங்கணிநறுங்கொன்றைத்தொங்கலன்குளிர்சடையான்
எங்கள்நோயகலநின்றானெனவருளீசனிடம்
ஐங்கணைவரிசிலையானநங்கனையழகழித்த
பைங்கண்வெள்ளேறுடையான்பருப்பதம்பரவுதுமே. 4

"கொங்கு அணி நறுங்கொன்றைத் தொங்கலன், குளிர்சடையான்,
எங்கள் நோய் அகல நின்றான்" என, அருள் ஈசன் இடம் -
ஐங்கணை வரிசிலையான் அநங்கனை அழகு அழித்த
பைங்கண் வெள்ஏறு உடையான் - பருப்பதம் பரவுதுமே.

"kogku aNi naRug kon2Rait togkalan2, kuLircaTaiyAn2,
egkaL nOy akala nin2RAn2" en2a, aruL Ican2 iTam--
aigkaNai varicilaiyAn2 anagkan2ai azaku azitta
paigkaN veL ERu uTaiyAn2--paruppatam paravutumE.

**பொருள்:** சிவபெருமான் தேன் நிறைந்ததும் மணம் கமழுவதுமான கொன்றை மலர் மாலையைச் சூடியிருப்பவர். குளிர்ந்த சடைமுடியை உடையவர். எங்கள் பிறவித்

துன்பத்தைப் போக்க எழுந்தருளியுள்ளார் என்று அடியவர்கள் போற்ற அவர்களுக்கு அருள் செய்யும் தலம் இது. ஐவகை மலர்களையும் வரிந்த கரும்பு வில்லையும் உடைய மன்மதனின் அழகை அழித்து எரித்தவர் இவர். குளிர்ந்த கண்களை உடைய வெண்மையான இடபத்தை தனது ஊர்தியாக உடையவர். இவர் எழுந்தருளியிருக்கும் திருப்பருப்பதத்தை நாம் வணங்குவோம்.

**குறிப்புரை:** எங்கள் பிறவி நோய் போக்க அருள் செய்யும் ஈசன் இடம் திருமலை என்கின்றது. கொங்கு – தேன். தொங்கலன் – மாலையை உடையவன். அநங்கன் – மன்மதன்.

"Oh! Lord Civa! You have worn in Your matted hair, garlands woven out of cassia flowers full of honey. Your matted hair is always cool. You are enshrined here to dispel our sufferings". The devotees declare thus and adore Him. To grace the devotees Lord Civan is enshrined in Thiru-p-paru-p-patham. He destroyed the beauty and burnt the handsome Manmathan, god of love, who holds fine flowers as arrows and a striped sugarcane as his bow. He owns the white bull as vehicle whose eyes are very attractive. Let us go to Thiru-p-paru-p-patham and worship Lord Civan therein.

துறைபலசுனைமூழ்கித்தூமலர்சுமந்தோடி
மறையொலிவாய்மொழியால்வானவர்மகிழ்ந்தேத்தச்
சிறையொலிகிளிபயிலுந்தேனினமொலியோவாப்
பறைபடுவிளங்கருவிப்பருப்பதம்பரவுதுமே. 5

துறைபல சுனை மூழ்கித், தூ மலர் சுமந்து ஓடி,
மறைஒலி வாய்மொழியால், வானவர் மகிழ்ந்து ஏத்தச்,
சிறை ஒலி கிளி பயிலும் தேன்இனம் ஒலி ஓவா,
பறை படு விளங்கு அருவிப் பருப்பதம் பரவுதுமே.

tuRai pala cun2ai mUzki, tU malar cumantu OTi,
maRai oli vAy moziyAl, vAn2avar makizntu Etta,
ciRai oli kiLi payilum, tEn2 in2am oli OvA,
paRai paTu viLagku aruvip paruppatam paravutumE.

**பொருள்:** கிளிகளின் சிறகுகளில் இருந்து எழும்பும் ஒலியுடன், அவைகள் வாயால் எழுப்பும் இனிய ஒலியும், வண்டுகளின் இனிய ரீங்கார ஒலியும், பறைபோல் ஒலிக்கும் அருவிகளின் ஓசையும் இடைவிடாது கேட்கும் தலம் திருப்பருப்பதமாகும். இங்கு, வானோர்கள் புண்ணியத் துறைகள் பலவற்றை உடைய சுனைகளில் மூழ்கி உடம்பைத் தூய்மைப்படுத்தி,

தூய மலர்களை விரைவாக சுமந்து வந்து, வேத கீதங்களை வாய்மொழியாக மகிழ்ந்து பாடித் துதிக்கின்றனர். நாமும் இத்திருப்பருப்பதத்தை வணங்குவோம்.

**குறிப்புரை:** வானவர்கள் சுனைநீராடித் தொழும் பருப்பதம் பரவுதும் என்கின்றது. சிறை – சிறகுகள். தேனினம் – வண்டுக்கூட்டம். பறை படும் – முழவுபோல ஒலிக்கும்.

Devas take bath in the holy springs by getting through one of many steps available there. Then they pluck and carry fragrant and pure flowers, rush to the temple and chant the musical Vedas. With all happiness and with sincere devotion they worship Lord Civan enshrined in Thiru-p-paru-p-patham. The sounds raised by the flapping of the wings of parrots combined with the soft voice made by their mouth while calling each other, fills the atmosphere all around Thiru-p-paru-p-patham. Also the ceaseless humming noise of the beetles and the sound heard in the waterfalls area which resembles the beating of the drum are all heard all around Thiru-p-paru-p-patham. Lord Civan is entempled in this city where to, we all will proceed and worship.

சீர்கெழுசிறப்போவாச்செய்தவநெறிவேண்டில்
ஏர்கெழுமடநெஞ்சேயிரண்டுறமனம்வையேல்
கார்கெழுநறுங்கொன்றைக்கடவுளதிடம்வகையால்
பார்கெழுபுகழோவாப்பருப்பதம்பரவுதுமே. 6

*சீர் கெழு சிறப்பு ஓவாச் செய்தவ நெறி வேண்டில்,*
*ஏர் கெழு மட நெஞ்சே! இரண்டு உற மனம் வையேல்!*
*கார் கெழு நறுங்கொன்றைக் கடவுளது இடம், வகையால்*
*பார் கெழு புகழ் ஓவாப் பருப்பதம் பரவுதுமே.*

cIr kezu ciRappu OvAc ceytava neRi vENTil,
Er kezu maTa nenjcE! iraNTu uRa man2am vaiyEl!
kAr kezu naRugkon2Raik kaTavuLatu iTam, vakaiyAl
pAr kezu pukaz OvA, paruppatam paravutumE.

**பொருள்:** மிகுந்த பெருமை உள்ளதும் சிறப்பு நிறைந்துள்ளதுமான தவநெறி வாழ்க்கையை நீ பின்பற்ற விரும்பினால், அழகிய மடநெஞ்சே, நீ, இரண்டுபட்ட மனத்துடன் இராதே! உனது மனதை ஒருமுகப்படுத்தி, உறுதியாக நின்று, கார்காலத்தே மலரும் மணம் மிகுந்த கொன்றை மலர் மாலையைச் சூடிய சிவபெருமானை நினை. இப்பெருமான் எழுந்தருளியுள்ள உலகப்புகழ் பெற்ற தலமாய் விளங்கும் திருப்பருப்பதத்தைப் போற்றி வணங்குக.

**குறிப்புரை:** நெஞ்சே! சிறப்பகலாத செய்தவம் வேண்டில் இரண்டுபட எண்ணாதே; புகழ் நீங்காப் பொருப்பைப் பரவுதும் என்கின்றது. ஏர் – எழுச்சி.

Oh! My foolish and yet very useful mind! Do not vacillate between two different ideas - to follow or to not follow the virtuous way of life. If you take a decision to pursue the ever pure, glorious, and changeless eminent way of life, you follow the way of penance and prayer to Lord Civan. He wears the garland woven out of very fragrant cassia flowers which blossoms in the rainy season. He is enshrined in Thiru-p-paru-p-patham which is a well renowned town by all the world. Let us go to Thiru-p-paru-p-patham and offer worship to Lord Civan enshrined therein.

புடைபுல்குபடர்கமலம்புகையொடுவிரைகமழத்
தொடைபுல்குநறுமாலைதிருமுடிமிசையேற
விடைபுல்குகொடியேந்திவெந்தவெண்ணீறணிவான்
படைபுல்குமழுவாளன்பருப்பதம்பரவுதுமே. 7

*புடை புல்கு படர் கமலம் புகையொடு விரை கமழத்,*
*தொடை புல்கு நறுமாலை திருமுடிமிசை ஏற,*
*விடை புல்கு கொடி ஏந்தி, வெந்தவெண்நீறு அணிவான் -*
*படை புல்கு மழுவாளன் - பருப்பதம் பரவுதுமே.*

puTai pulku paTar kamalam pukaiyoTu virai kamaza,
toTai pulku naRumAlai tirumuTi micai ERa,
viTai pulku koTi Enti, venta veN nIRu aNivAn2--
paTai pulku mazuvALan2--paruppatam paravutumE.

**பொருள்:** எப்பக்கம் நிறைந்து வளர்ந்துள்ள தாமரை மலர்களின் நறுமணமும், வேள்வியினால் எழும் புகையின் நறுமணமும் ஒன்று சேர்ந்து மணம் கமழுமாறு தொடுக்கப்பட்ட நறுமண மாலையை சிவபெருமான் திருமுடியின்மேல் அணிந்துள்ளார். இவர் விடைக் கொடியைக் கையில் ஏந்தி உள்ளார். தனது திருமேனியில் வெந்த வெண்ணீற்றைப் பூசியுள்ளார். கையில் மழுப்படையை ஏந்தியவராக விளங்கும் இப்பெருமான் எழுந்தருளியுள்ள திருப்பருப்பதத்தை நாம் வணங்குவோம்.

**குறிப்புரை:** விடைக்கொடியை ஏந்தி நீறணியும் நிமலன் பருப்பதம் பரவுதும் என்கின்றது. புடை – பக்கம். புகை – யாகப்புகை. விரை – மணம். தொடைபுல்கு – தொடுத்தலைப் பொருந்திய. விடை – இடபம்.

Lord Civan wears garland woven out of fragrant lotus flowers that blossoms in multitude in the streams of Thiru-p-paru-p-patham. These flowers are doubly fragrant, because of the fragrant smoke that arose from the sacrifices performed by the priests mixes with the fragrance of lotus flowers. With such a garland in His holy matted hair He is enshrined in Thiru-p-paru-p-patham. The figure of bull is the insigne of Lord Civan's flag which He holds in hand. He smears His body with holy ashes. He holds in one of His hands the battle-axe. Let us go to this Thiru-p-paru-p-patham town and adore Lord Civan entempled therein.

நினைப்பெனுநெடுங்கிணற்றைநின்றுநின்றயராதே
மனத்தினைவலித்தொழிந்தேனவலம்வந்தடையாமைக்
கனைத்தெழுதிரள்கங்கைகமழ்சடைக்கரந்தான்றன்
பனைத்திரள்பாயருவிப்பருப்பதம்பரவுதுமே. 8

*நினைப்பு எனும் நெடுங்கிணற்றை நின்றுநின்று அயராதே*
*மனத்தினை வலித்து ஒழிந்தேன்; அவலம் வந்து அடையாமைக்,*
*கனைத்து எழு திரள் கங்கை கமழ்சடைக் கரந்தான் தன் -*
*பனைத்திரள் பாய் அருவிப் - பருப்பதம் பரவுதுமே.*

nin2aippu en2um neTugkiNaRRai nin2Ru nin2Ru ayarAtE
man2attin2ai valittu ozintEn2; avalam vantu aTaiyAmai,
kan2aittu ezu tiraL kagkai kamaz caTaik karantAn2tan2--
pan2aittiraL pAy aruvip--paruppatam paravutumE.

**பொருள்:** நமது மனதின் நினைப்பு என்பது, அளப்பற்ற ஆழமான கிணற்றைப் போன்றது. பலதரப்பட்ட எண்ணங்கள் ஒன்றோடு ஒன்று தோன்றி நம்மை மயக்கி, பெரும் துன்பத்தைத் தோற்றுவிக்கின்றன. ஆகையால் மனதை வைராக்கியப் பயிற்சியால் அடக்கிக், கட்டுப்படுத்தி, தீய எண்ணங்களை ஒழித்துத், துன்பங்கள் என்னை வந்தடையாமல் தப்பித்தேன். துன்பங்கள் நம்மை வந்தடையாமல் காத்துக் கொள்ளும் வழியைக் கூறுகின்றேன். ஆரவாரித்து வெள்ளமாக எழுந்த கங்கை நீரைச் சிவபெருமான் தமது மணம் கமழும் சடையில் தாங்கி மறையைச் செய்தவர். இப்பெருமான் எழுந்தருளியுள்ளதும் பனைமரம் போல உருண்டு திரண்டு ஒழுகும் அருவிநீரை உடையதுமான திருப்பருப்பதத்தை நாம் வணங்குவோம்.

**குறிப்புரை:** நினைப்பாகிய கிணற்றைப் பார்த்து நின்று நின்று மயங்காமல், மனத்தை வலிய அடிப்படுத்தினேன். ஆதலால் அவலம் அடையா வண்ணம் பருப்பதம் பரவுதும் என்கின்றது. அயராது – மயங்காமல். வலித்து – இழுத்து. நினைப்பை ஆழமான கிணறாகவும், மனத்தைக் கயிறாகவும் உருவகித்தார். இது மனத்தினை வலித்து என்பதனால் உணரப் பெறுகின்றது.

The allegory in this verse is as under:

a) A **deep well** with water in it is compared to our worrying **thoughts**.

b) A **rope** used to draw water is compared to our **mind**.

I stood near the well for long without any languishment. Then I drew the rope and brought the water out. I got exhausted.

**Exposition of the Allegory:** I was very much worried on my varying thoughts and the resultant sufferings for long. I applied my mind to get rid of my bad thoughts and sufferings. Even then I could not succeed. To dispel such thoughts and sufferings from our life, Gnaanasambandan says that there is only one open path. Let us go to Thiru-p-paru-p-patham and worship with deep devotion - Lord Civan enshrined therein. He has concealed the surging river Ganges which came rushing like a fierce flood, in His matted fragrant hair. This town is enriched with plenty of water available from the waterfalls, which resembles the palmyrah trunks stout, tall and round. Worshipping the Lord of this place is the only source of salvation.

மருவியவல்வினைநோயவலம்வந்தடையாமல்
திருவுருவமர்ந்தானுந்திசைமுகமுடையானும்
இருவருமறியாமையெழுந்ததோரெரிநடுவே
பருவரையுறநிமிர்ந்தான்பருப்பதம்பரவுதுமே. 9

மருவிய வல்வினைநோய் அவலம் வந்து அடையாமல், -
திருஉரு அமர்ந்தானும், திசைமுகம் உடையானும்,
இருவரும் அறியாமை எழுந்தது ஓர் எரி நடுவே
பருவரை உற நிமிர்ந்தான் பருப்பதம் பரவுதுமே.

maruviya valvin2ai nOy avalam vantu aTaiyAmal,-
tiru uru amarntAn2um, ticaimukam uTaiyAn2um,
iruvarum aRiyAmai ezuntatu or eri naTuvE
paruvarai uRa nimirntAn2 paruppatam paravutumE.

**பொருள்:** பல பிறவிகள் காரணமாக நம்மைத் தொடருகின்ற வலிய வினைகளினால் வரும் துன்பங்கள் நம்மை வந்து அடையாமல் இருக்க நல்வழியைக் கூறுகின்றேன். திருமகளைத் தன் மார்பில் கொண்ட திருமால், நான்முகன் ஆகிய இருவரும் அறிய முடியாதவாறு, சிவபெருமான் பெருஞ்சோதியின் நடுவே பெரிய மலையாக ஓங்கி நின்றார். இப்பெருமான் எழுந்தருளியுள்ள திருப்பருப்பதத்தை நாம் வணங்குவோம்.

**குறிப்புரை:** அயனும் மாலும் அறியாவண்ணம் எரிநடுவே மலையாய் எழுந்தானது பருப்பதம் பரவுதும் என்கின்றது. வல்வினை நோய் – பரிபாகமுற்ற வினையால் வரும் துன்பம். அவலம் – அதனால் விளைந்த செயலறிவு. திருஉரு அமர்ந்தான் – திருமகளைத் தன் மார்பில் வைத்த திருமால். பருவரை உற – பெரிய மலையைப் போல.

'Thirumaal' who entertains His consort Thirumagal (*திருமகள் - லக்ஷ்மி*) in his chest, along with the four headed Brahma - both of them made an attempt to comprehend Lord Civa but in vain. Lord Civan rose like a tall and big effulgence and in the center of the fire He towered like a mountain. This Lord Civan is entempled in Thiru-p-paru-p-patham. We have accumulated a lot of strong karma in our past several births. We, naturally, wish to prevent those karma reaching us in this birth. The only way to succeed in our wish, is to go to Thiru-p-paru-p-patham and worship Lord Civan enshrined therein.

சடங்கொண்டசாத்திரத்தார்சாக்கியர்சமண்குண்டர்
மடங்கொண்டவிரும்பியராய்மயங்கியோர்பேய்த்தேர்ப்பின்
குடங்கொண்டுநீர்க்குச்செல்வார்போதுமின்குஞ்சரத்தின்
படங்கொண்டபோர்வையினான்பருப்பதம்பரவுதுமே. 10

சடம் கொண்ட சாத்திரத்தார் - சாக்கியர், சமண்குண்டர் -
மடம் கொண்ட விரும்பியராய் மயங்கி, ஓர் பேய்த்தேர்ப் பின்
குடம் கொண்டு நீர்க்குச் செல்வார் போதுமின்! குஞ்சரத்தின்-
படம் கொண்ட போர்வையினான் பருப்பதம் பரவுதுமே.

caTam koNTa cAttirattAr--cAkkiyar, camaNkuNTar--
maTam koNTa virumpiyarAy mayagki, or pEyttErp pin2
kuTam koNTu nIrkkuc celvAr pOtumin2! kunjcarattin2-
paTam koNTa pOrvaiyin2An2 paruppatam paravutumE.

**பொருள்:** அறியாமையால் ஆட்கொள்ளப்பட்டு சாத்திரங்களைக் கூறும் புத்தர்களும் பருத்த உடம்பினராகிய சமணர்களும் கூறும் மடமையை விரும்பி சிலர் மயங்குகின்றனர். அவர்கள் கானல் நீரை உண்மை என்று நம்பிக் குடத்தை எடுத்துச் செல்வோரைப் போன்றவர்கள். அவ்வாறு செல்லுபவர்கள் செல்லட்டும். யானைத் தோலைப் போர்வையாக போர்த்த சிவபெருமான் எழுந்தருளியுள்ள திருப்பருப்பதத்தை நாம் வணங்குவோம்.

**குறிப்புரை:** சமணர் புத்தர்கட்குப்பின் *பேய்த்தேர்முன் குடங்கொண்டு* தண்ணீர்க்குப் போவார்போல போவார்போக, யானையுரி போர்த்த இறைவன் பருப்பதம் பரவுதும் என்கின்றது. சடம் – அறியாமை. மடம் – அறியாமை. பேய்த்தேர் – கானல்நீர். குஞ்சரத்தின் படம் – யானைத்தோலாகிய ஆடை.

Some people are fascinated by the ignorant preachings of the Buddhists and the crooked preachings of the obese Jains and lose their consciousness. They resemble the people who proceed towards the mirage, carrying pots in their hands, to bring water. Let them go as they decide. We will ignore such people. Lord Civan is enshrined in Thiru-p-paru-p-patham covering His body with the elephant's skin. Let us go to Thiru-p-paru-p-patham and worship Him.

வெண்செநெல்விளைகழனிவிழவொலிகழுமலத்தான்
பண்செலப்பலபாடலிசைமுரல்பருப்பதத்தை
நன்சொலினாற்பரவுஞானசம்பந்தன்நல்ல
ஒண்சொலினிவைமாலையுருவெணத்தவமாமே. 11

வெண்செ(ந்)நெல் விளை கழனி விழவு ஒலி கழுமலத்தான்,
பண் செலப் பலபாடல் இசை முரல் பருப்பதத்தை,
நன் சொலினால் பரவு ஞானசம்பந்தன், நல்ல
ஒண் சொலின் இவைமாலை உரு எணத், தவம் ஆமே.

veN ce(n) nel viLai kazan2i vizavu oli kazumalattAn2,
paN celap pala pATal icai mural paruppatattai,
nan2 colin2Al paravum njAn2acampantan2, nalla
oN colin2 ivaimAlai uru eNa, tavam AmE.

**பொருள்:** வெண்மையான நெல்லும் சிவந்த நெல்லும் விளையும் வயல்களை உடையதும், திருவிழாக்களின் ஒலிகள் நிறைந்ததுமான கழுமலம் என்ற சீகாழியில் அவதரித்தவர் ஞானசம்பந்தன் ஆகும். இவர் பண் இசையோடு பொருந்திய பாடல்கள் பலவற்றால் திருப்பருப்பதத்தில் எழுந்தருளியுள்ள சிவபெருமானைப் போற்றிப் பாடினார். நல்ல

சொற்களால் அமைந்த பாடல்களால் பாடிய ஒலி பொருந்திய இத்திருப்பாமாலையை பலகாலும் நினைந்தும், மனனம் செய்தும் பாடினால் அதுவே பெரும் தவமாகும்.

**குறிப்புரை:** சீபருப்பதத்தைத் திருஞானசம்பந்தர் சொன்ன இம்மாலையை உருவெண்ணத்தவமாம் என்கின்றது. வெண் செந்நெல்; உம்மைத்தொகை, எண்ண என்பது எண எனத் தொகுத்தல் விகாரம்.

Gnaanasambandan hails from Kazhumalam which is surrounded by fertile fields of paddy rich in variety - the white and reddish one. This town was always filled with the loud noise arising out of pompous festivals. Gnaanasambandan of Kaazhi extols Civan by singing many songs at many places. He has now sung on Lord Civan in Thiru-p-paru-p-patham in chaste Tamil words. If we recite these brilliant songs of this hymn repeatedly, that itself becomes our penance and will lead us to salvation.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*118ஆம் பதிகம் முற்றிற்று*
End of 118th Hymn

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# 119. திருக்கள்ளில்

## திருத்தல வரலாறு:

திருக்கள்ளில் தொண்டை நாட்டுத் தலம். சென்னை – வெங்கலூர் பேருந்து வழியில் உள்ளது. திருக்கள்ளம் எனவும் பெயர் பெறும். பிருகு முனிவர் பூசித்துப் பேறு பெற்றார். சுவாமியின் பெயர் சிவாநந்தர். அம்மையின் பெயர் ஆனந்தவல்லி. தீர்த்தம் ஸ்ரீநந்தி தீர்த்தம்.

## பதிக வரலாறு:

இது தொண்டை நாட்டுத் திருத்தலம். சென்னை – வெங்கலூர் பேருந்து வழியில் உள்ளது. திருக்கள்ளம் எனவும் பெயர் பெறும். பிருகு முனிவர் பூசித்துப் பேறு பெற்ற தலம்.

# 119. THIRU-K-KALLIL

## HISTORY OF THE PLACE

This sacred place is in Thondai Naadu and is on the bus route from Chennai to Venkaloor. It is also known as Thiru-k-kallam.

The name of the Lord is Sivaanandhar and that of the Goddess is Aanandhavalli. The sacred ford is Sree Nandhi Theerththam. Sage Birugu attained salvation by worshipping the Lord here.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 119. திருக்கள்ளில்

## 119. THIRU-K-KALLIL

பண் : வியாழக்குறிஞ்சி
ராகம் : சௌராஷ்டிரம்

*Pann: Viyazha-k-kurinji*
*Raagam : Saurashtram*

முள்ளின்மேல்முதுகூகைமுரலுஞ்சோலை
வெள்ளின்மேல்விடுகூறைக்கொடிவிளைந்த
கள்ளில்மேயஅண்ணல்கழல்கள்நாளும்
உள்ளுமேலுயர்வெய்தலொருதலையே. 1

முள்ளின்மேல் முது கூகை முரலும் சோலை,
வெள்ளில்மேல் விடு கூறைக்கொடி விளைந்த
கள்ளில் மேய அண்ணல் கழல்கள் நாளும்
உள்ளும்! மேல் உயர்வு எய்தல் ஒருதலையே.

muLLin2 mEl mutu kUkai muralum cOlai,
veLLil mEl viTu kURaikkoTi viLainta
kaLLil mEya aNNal kazalkaL nALum
uLLum! mEl uyarvu eytal orutalaiyE.

**பொருள்:** முள்ளுடைய மரங்களின்மேல் இருந்து முதிய கூகைகள் ஒலிக்கும் சோலைகள் சூழ்ந்ததும், விளா மரங்களின்மேல் படர்ந்த கூறைக் கொடிகள் விளைந்து தோன்றுவதுமாய கள்ளில் என்னும் இத்தலத்தில் எழுந்தருளிய சிவபிரான் திருவடிகளை நாள்தோறும் நினைவோமானால் உயர்வெய்துதல் உறுதியாகும்.

**குறிப்புரை:** கள்ளில் மேவிய கடவுளின் கழல்களைத் தியானிக்க உயர்வெய்தல் துணிவு என்கின்றது. முள்ளின்மேல் – முள்மரத்தின்மேல். வெள்ளில்மேல் – விளாவின்மேல். உள்ளுமேல் – தியானிக்குமாயின். ஒருதலை – துணிவு.

Lord Civan is enshrined in Thiru-k-kallil whih is girt with man made groves all around. Aged rock horned owls (கூகை) sit here on the branches of thorny trees. Creepers called Koorai-k-kodi twining on wood apple tree are fully grown. If we daily worship the Holy Feet of Lord Civan entempled in this city, redemption is certain.

ஆடலான்பாடலானரவங்கள்பூண்டான்
ஓடலாற்கலனில்லானுறைபதியால்
காடலாற்கருதாதகள்ளில்மேயான்
பாடெலாம்பெரியார்கள்பரசுவாரே. 2

ஆடலான், பாடலான், அரவங்கள் பூண்டான்,
ஓடுஅலால் கலன் இல்லான் - உறைபதியாக்
காடுஅலால் கருதாத கள்ளில் மேயான்;
பாடுஎலாம் பெரியார்கள் பரசுவாரே.

ATalAn2, pATalAn2, aravagkaL pUNTAn2,
OTu alAl kalan2 illAn2--uRai patiyAk
kATu alAl karutAta kaLLil mEyAn2;
pATu elAm periyOrkaL paracuvArE.

**பொருள்:** சிவபெருமான் ஆடல் பாடல்களில் *வல்லவர். பாம்புகள் பலவற்றை அணிந்தவர்.* தலையோட்டைத் தவிர வேறு உண்கலம் இல்லாதவர். சுடுகாட்டைத் தவிர வேறு இடத்தைத் தனது இடமாகக் கருதாதவர். மேன்மையுடைய பெரியயோர்கள் அருகிலிருந்து இப்பெருமானை பெருமையோடு போற்றித் துதிக்க கள்ளில் என்னும் தலத்தில் விரும்பி எழுந்தருளியுள்ளார்.

**குறிப்புரை:** ஆடல்பாடல் உடையவன் உறைபதி கள்ளில், அதன்கண் மேயானுடைய பெருமைகளைப் பெரியார்கள் பேசுவார்கள் என்கின்றது. அரவம் – பாம்பு. கலன் – உண்கலன். பாடு – பெருமை.

Lord Civan is an adept in dancing and singing. He wears several snakes on His body. He has no other bowl than the skull which He uses as His food bowl. He has not accepted any other place except the burning ghat as His own. This Lord Civan, adored by scholars has chosen to reside in Thiru-k-kallil.

எண்ணார்மும்மதிலெய்தவிமையாமுக்கண்
பண்ணார்நான்மறைபாடும்பரமயோகி
கண்ணார்நீறணிமார்பன்கள்ளில்மேயான்
பெண்ணாணாம்பெருமானெம்பிஞ்ஞகனே. 3

எண்ணார் மும்மதில் எய்த இமையா முக்கண்
பண்ஆர் நால்மறை பாடும் பரமயோகி,
கண்ஆர் நீறு அணி மார்பன் - கள்ளில் மேயான்,
பெண்ஆண்ஆம்பெருமான், எம் பிஞ்ஞகனே.

eNNAr mummatil eyta imaiyA mukkaN
paN Ar nAlmaRai pATum paramayOki,
kaN Ar nIRu aNi mArpan2--kaLLil mEyAn2,
peN AN Am perumAn2, em pinjnjakan2E.

**பொருள்:** பகைவர்களாகிய அசுரர்களின் மும்மதில்களை எய்து அழித்தவர். இமையாத மூன்று கண்களை உடையவர். இசையமைப்போடு கூடிய நான் மறைகளைப் பாடி மகிழும் மேலான யோகியர். கண்களைக் கவரும் வண்ணம் திருநீறு அணிந்த மார்பினர். பெண் ஆண் என இருபாலாகக் கருதும் உமை பாகனான எம் சிவபெருமான் கள்ளில் என்னும் தலத்தில் எழுந்தருளி உள்ளார்.

**குறிப்புரை:** திரிபுரம் எரித்த பரமயோகி கள்ளில் மேயவன். அவனே பெண் ஆண் ஆனான் என்கின்றது. எண்ணார் – பகைவர். கண் – அழகு. பிஞ்ஞகன் – அழகிய சிவன் (தலைக் கோலம் உடையவன்).

Lord Civan destroyed the three fortresses of the hostile Asuraas exercising His bow and arrows. All His three eyes never wink. He is a perfect yogi who enjoys singing musical Vedic hymns. His chest is very captivating. He smears His body with holy ashes. He is considered both as male and female. He accommodates His consort Umaa Devi on the left half of His body. Go and worship this Lord Civan entempled in Thiru-k-kallil.

பிறைபெற்றசடையண்ணல்பெடைவண்டாலும்
நறைபெற்றவிரிகொன்றைத்தார்நயந்த
கறைபெற்றமிடற்றண்ணல்கள்ளில்மேயான்
நிறைபெற்றஅடியார்கள்நெஞ்சுளானே. 4

*பிறை பெற்ற சடை அண்ணல், பெடைவண்டு ஆலும்*
*நறை பெற்ற விரிகொன்றைத்தார் நயந்த*
*கறை பெற்ற மிடற்று அண்ணல் - கள்ளில் மேயான்*
*நிறை பெற்ற அடியார்கள் நெஞ்சுஉள்ளானே.*

piRai peRRa caTai aNNal, peTaivaNTu Alum
naRai peRRa virikon2RaittAr nayanta
kaRai peRRa miTaRRu aNNal--kaLLil mEyAn2,
niRai peRRa aTiyArkaL nenjcu uLLAn2E.

**பொருள்:** சிவபெருமான் பிறைசூடிய சடையை உடைய எமது அண்ணல் ஆவார். பெண் வண்டுகளோடு ஆண்வண்டுகள் கூடி ஒலிக்கும் தேன் நிறைந்த விரிந்த கொன்றை மாலையை விரும்பிச் சூடியிருப்பவர். நஞ்சுக் கறை பொருந்திய கண்டத்தை உடையவர். மனநிறைவு பெற்ற அடியவர்களின் நெஞ்சங்களில் நிறைந்து நிற்பவர். இப்பெருமான் கள்ளில் என்னும் தலத்தில் எழுந்தருளியுள்ளார்.

**குறிப்புரை:** கள்ளில் மேயான் என் நெஞ்சுளான் என்கின்றது. ஆலும் – ஒலிக்கும். நறை – தேன். கறை – விடம். நிறைபெற்ற அடியார்கள். மனநிறைவுற்ற அடியார்கள்.

Our exalted Lord Civan has the crescent moon in His matted hair. He yearns to wear the garland woven out of cassia flowers full of honey for which the female bees

are humming. His neck is dark blue in colour due to the poison, He positioned it in His throat. He is fully resides in the hearts of His devotees who are well content in their minds. This Lord Civan is enshrined in *Thiru-k-kallil where you proceed and worship.*

விரையாலுமலராலும்விழுமைகுன்றா
உரையாலுமெதிர்கொள்ளவூராரம்மாக்
கரையார்பொன்புனல்வேலிக்கள்ளில்மேயான் 5
அரையார்வெண்கோவணத்தவண்ணல்தானே.

விரையாலும் மலராலும் விழுமை குன்றா
உரையாலும் எதிர் கொள்ள, ஊரார், அம் மாக்
கரை ஆர் பொன் புனல் வேலிக் கள்ளில் மேயான்
அரை ஆர் வெண்கோவணத்த அண்ணல்தானே.

viraiyAlum malarAlum vizumai kun2RA
uraiyAlum etir koLLa, UrAr, am mAk
karai Ar pon2 pun2al vElik kaLLil mEyAn2
arai Ar veN kOvaNatta aNNal tAn2E.

**பொருள்:** சிவபெருமானை மணம் கமழும் ஐவகை மணப்பொருள்களாலும் மலர்களாலும் சீர்மை குன்றாத புகழுரைகளாலும் ஊர்மக்கள் எதிர்கொண்டு வணங்குவர். இப்பெருமான் வெண்ணிறமான கோவணத்தை இடையில் உடுத்தியிருப்பவர். அழகியதும் பரந்ததுமான கரைகளை உடைய பொன்னி நதியின் கிளை ஆறு சூழ்ந்துள்ள கள்ளில் என்னும் தலத்தில் இவர் எழுந்தருளியுள்ளார்.

**குறிப்புரை:** கள்ளில் மேயான் மணப் பொருள்களாலும், மலராலும் தோத்திரப் பாக்களாலும் ஊரார் எதிர்கொள்ளும் அண்ணலாக இருக்கின்றான் என்கின்றது. விரை – மணம். ஐந்து வகை விரைகள் சங்க இலக்கியங்களிற் கூறப்பெற்றுள்ளன (கோட்டம், துடுக்கம், தகரம், அகில், சந்தனம்). விழுமை – பெருமை. உரை – புகழ்.

Lord Civan wears the white fore-lap cloth in His loins. The devotees with flawless words of praise adore Him and offer worship carrying five kinds of fragrant materials and sweet smelling flowers. A tributary of Ponni river with strong and wide banks flows through the town Thiru-k-kallil. Go and worship Lord Civan enshrined therein.

நலனாயபலிகொள்கைநம்பான்நல்ல
வலனாயமழுவாளும்வேலும்வல்லான்
கலனாயதலையோட்டான்கள்ளில்மேயான்
மலனாயதீர்த்தெய்துமாதவத்தோர்க்கே. 6

நலன் ஆய பலி கொள்கை நம்பான், நல்ல
வலன் ஆய மழுவாளும் வேலும் வல்லான்,
கலன் ஆய தலைஓட்டான் - கள்ளில் மேயான்
மலன் ஆய தீர்த்து எய்தும், மா தவத்தோர்க்கே.

nalan2 Aya pali koLkai nampAn2, nalla
valan2 Aya mazuvALum vElum vallAn2,
kalan2 Aya talai OTTAn2--kaLLil mEyAn2;
malan2 Aya tIrttu eytum, mA tavattOrkkE.

**பொருள்:** சிவபெருமான் மக்களுக்கு நன்மைகள் உண்டாவதற்காகத் தானே பலியேற்கும் கொள்கையை உடைய கடவுளாவார். நல்ல வெற்றியைத் தரும் மழு, வாள், வேல் ஆகியவற்றில் வல்லவர். உண்கலனாக தலையோட்டை உடையவர். சிறப்புள்ள தவத்தைச் செய்து தன்னை வந்தடைபவர்களின் மும்மலங்களையும் தீர்த்து அருளுபவர். இப்பெருமான் கள்ளில் என்னும் தலத்தில் எழுந்தருளியுள்ளார்.

**குறிப்புரை:** கள்ளில் மேயான் மாதவத்தோர்க்கு மூலமலத்தைத் தீர்த்து அவரைப் பொருந்துவன் என்கின்றது. நலன் ஆயபலி – இடுவார்க்கு நன்மையமைத்த பிச்சை. வலன் ஆய மழுவாளும் வேலும் வல்லான் – வெற்றியைத் தருவதாய மழு முதலிய படைகளை வல்லவன். மலன் ஆய தீர்த்து – மலங்களைப் போக்கி, தீத்து என்பது உபசார வழக்கு. வலியை வாட்டி என்பது கருத்து.

Our supremely desirable Lord Civan (*நம்பன்*) has the practice of accepting arms with the purpose of promoting the welfare of His devotees. He is an adept at wielding the battle axe, sword and spear that bring victory. He uses the skull as His food bowl. To those devotees who surrender to Him and adore Him, He dispels all their blemish caused by three evil passions of the soul - Malas (*ஆணவம், கன்மம், மாயை என்ற மும்மலங்கள்*) and bestows grace on them. Go and worship this Lord Civan enshrined in Thiru-k-kallil.

பொடியார்மெய்பூசினும்புறவின்நறவம்
குடியாவூர்திரியினுங்கூப்பிடினும்
கடியார்பூம்பொழிற்சோலைக்கள்ளில்மேயான்
அடியார்பண்பிகழ்வார்களாதர்களே. 7

பொடியார் மெய் பூசினும், புறவின் நறவம்
குடியா ஊர் திரியினும், கூப்பிடினும்,
கடி ஆர் பூம்பொழில்-சோலைக் கள்ளில் மேயான்-
அடியார் பண்பு இகழ்வார்கள், ஆதர்களே.

poTiyAr mey pUcin2um, puRavin2 naRavam
kuTiyA Ur tiriyin2um, kUppiTin2um,
kaTi Ar pUmpozil-cOlaik kaLLil mEyAn2-
aTiyAr paNpu ikazvArkaL, AtarkaLE.

**பொருள்:** மணம் கமழும் அழகிய பொழில்களும் சோலைகளும் சூழ்ந்த கள்ளில் என்னும் தலத்தில் சிவபெருமான் எழுந்தருளியுள்ளார். இப்பெருமானின் அடியவர்கள் திருவெண்ணீற்றுப் பொடியை உடலில் பூசியிருந்தாலும், நற்கோலத்தில் காட்சி தந்தாலும், சோலைகளில் எடுத்த தேனை உண்டு ஊரில் திரிந்தாலும், பலவாறு பிதற்றினாலும், அவர்கள் மனம் இறைவன் திருவருளிலேயே அழுந்தி இருக்கும். இவ்வடியார்களின் குணம் செயல்களை இகழ்பவர்கள் கீழ்மக்கள் ஆவார்கள்.

**குறிப்புரை:** கள்ளில் மேயான் அடியார்கள் நீறணியினும், தேனைக் குடித்து ஊர்திரியிலும், கூப்பிடினும் அவர்களை இகழ்வார்கள் கீழ் மக்கள் என்கின்றது. 'எத்தொழிலைச் செய்தாலும், ஏதவத்தைப் பட்டாலும் முத்தர் மனம் மோனத்தே' இருக்குமாதலின் அவர்களை இகழ்வார் ஆதர் என்றவாறு.

They are fools low level folks who spread slander on the devotees of our Lord at Thiru-k-kallil, where flowery gardens spread fragrance everywhere. They are the real devotees smearing the holy ashes in their body, going from one temple to another, offering worship with their folded hands.

திருநீலமலரொண்கண்தேவிபாகம்
புரிநூலுந்திருநீறும்புல்குமார்பில்
கருநீலமலர்விம்முகள்ளிலென்றும்
பெருநீலமிடற்றண்ணல்பேணுவதே. 8

திருநீலமலர்ஒண்கண் தேவி பாகம்
புரிநூலும் திருநீறும் புல்கு மார்பில்,
கருநீலமலர் விம்மு கள்ளில், என்றும்
பெரு நீலமிடற்று அண்ணல் பேணுவதே.

tiru nIlamalar oNkaN tEvi pAkam
purinUlum tiru nIRum pulku mArpil,
karu nIlamalar vimmu kaLLil, en2Rum
peru nIlamiTaRRu aNNal pENuvatE.

**பொருள்:** அழகிய ஒளிமிக்க நீலமலர் போன்ற கண்களை உடைய உமையம்மையை ஒரு பாகமாகக் கொண்டவர் சிவபெருமான். இவர் முப்புரிநூலும் திருநீறும் பொருந்திய மார்பினர். கருநீல மலர்கள் மிகுந்து பூத்துள்ள கள்ளில் என்னும் தலத்தில் கரிய விடம் பொருந்திய மிடற்று அண்ணலாகிய சிவபெருமான் விரும்பி வீற்றிருக்கிறார்.

**குறிப்புரை:** கள்ளிலே இறைவன் என்றும் பேணுவது என்கின்றது. பேணுவது – விரும்புவது.

Lord Civan accommodates His consort Umaa Devi on the left part of His body. Her eyes are attractive, sparkling and resemble the blue lily flower. He wears on His chest the three-ply sacred thread. He smears His body with the holy ashes and comes into view with radiance. His neck is of dark blue in colour. It is our duty to worship always our god Lord Civa who is enshrined in Thiru-k-kallil, where blue lilies bloom in abundance.

வரியாயமலரானும்வையந்தன்னை
உரிதாயஅளந்தானுமுள்ளுதற்கங்
கரியானுமறியாதகள்ளில்மேயான்
பெரியானென்றறிவார்கள்பேசுவாரே. 9

**"வரிஆய மலரானும் வையம் தன்னை**
**உரிதுஆய அளந்தானும் உள்ளுதற்கு அங்கு**
**அரியானும் - அறியாத கள்ளில் மேயான்**
**பெரியான்" என்று, அறிவார்கள் பேசுவாரே.**

"vari Aya malarAn2um vaiyam tan2n2ai
uritu Aya aLantAn2um uLLutaRku agku
ariyAn2um--aritu Aya kaLLil mEyAn2,
periyAn2" en2Ru, aRivArkaL pEcuvArE.

**பொருள்:** சிவந்த வரிகளைக் கொண்ட தாமரை மலர்மேல் உறையும் பிரமனும், உலகங்களைத் தனக்கு உரியதாகுமாறு அளந்த திருமாலும் நினைத்தற்கும் அரியவனாக விளங்கும் பெரியோன் சிவபெருமானாகும். இப்பெருமான் அரியதலமாய் விளங்கும்

கள்ளியில் எழுந்தருளியுள்ளார். இப்பெருமானையே பெரியோன் என அறிஞர்கள் போற்றிப் புகழ்வர்.

**குறிப்புரை:** 'கள்ளின் மேயான் பெரியான்' என்று அறிவார்கள் இவனைப் பற்றிப் புகழ்வார்கள் என்கின்றது. அறியாத ஒன்று பேசவாராதாகலின் பெரியோன் என்று அறிவார்களே பேசுவர் என்றார்கள். வரி – செவ்வரி வையந்தன்னை உரிய ஆய அளந்தான் – உலகத்தை உரித்தாக்க அளந்த திருமால்.

Lord Civan is beyond the comprehension of Brahma, residing in the red lined lotus, and for Thirumaal who measured the entire world by his feet in order to possess them. He is enshrined in the fascinating Thiru-k-kallil as the Supreme Being. Those who realise His supremacy, praise Him saying that He is our great god, and adore Him and worship Him will got salvation.

ஆச்சியப்பேய்களோடமணர்குண்டர்
பேச்சிவைநெறியல்லபேணுமின்கள்
மாச்செய்தவளவயல்மல்குகள்ளில்
தீச்செய்தசடையண்ணல்திருந்தடியே. 10

*ஆச்சியப் பேய்களோடு அமணர்குண்டர்*
*பேச்சு இவை நெறி அல்ல; பேணுமின்கள்,*
*மாச்செய்த வளவயல் மல்கு கள்ளில்*
*தீச் செய்த சடை அண்ணல் திருந்து அடியே.*

Acciyap pEykaLOTu amaNar kuNTar
pEccu ivai neRi alla; pENumin2kaL,
mAcceyta vaLavayal malku kaLLil
tIc ceyta caTai aNNal tiruntu aTiyE!

**பொருள்:** நகைப்பிற்கு இடமளிக்கும் அமணர்களும் புத்தர்களும் கூறும் உரைகள் நெறியற்றவையாகும். எனவே அவற்றைக் கேளாதீர்கள். வளம் மிக்க வயல்கள் நிறைந்த கள்ளில் என்னும் தலத்தில் விளங்கும் தீத்திரள் போன்ற சடைமுடியை உடைய அண்ணலாகிய சிவபெருமானின் அழகிய திருவடியைப் பேணித் துதிப்பீர்களாக.

**குறிப்புரை:** புறச்சமயிகள் பேச்சு நெறியற்றன; கள்ளில் இறைவன் திருவடியைச் சிந்தியுங்கள் என்கின்றது. ஆச்சியப் பேய்கள் – பரிகசிக்கத்தக்க பேய்கள். ஆச்சியம் ஹாஸ்யம் என்பதன் திரிபு. மா – பெருமை.

The speeches of Buddhists and Jains are laughable and do not preach the truth to the people. Therefore shun them and discard their words. Instead, worship the Holy Feet of Lord Civan who is enshrined in Thiru-k-kallil surrounded by fertile fields. Let us hail only Lord Civan's Holy Feet. He is our Lord With fiery matted hair.

திகைநான்கும்புகழ்காழிச்செல்வமல்கு
பகல்போலும்பேரொளியான்பந்தன்நல்ல
முகைமேவுமுதிர்சடையான்கள்ளிலேத்தப்
புகழோடும்பேரின்பம்புகுதுமன்றே. 11

*திகைநான்கும் புகழ் காழிச் செல்வம் மல்கு*
*பகல் போலும் பேர் ஒளியான்-பந்தன்-நல்ல*
*முகை மேவு முதிர்சடையான் கள்ளில் ஏத்தப்,*
*புகழோடும் பேரின்பம் புகுதும் அன்றே.*

tikai nAn2kum pukaz kAzic celvam malku
pakal pOlum pEr oLiyAn2--pantan2--nalla
mukai mEvu mutir caTaiyAn2 kaLLil Etta,
pukazOTum pEr in2pam pukutum an2RE.

***பொருள்:*** நான்கு திசை மக்களாலும் புகழப்பெறும் சீகாழிப் பதியில் செல்வ வளம் நிறைந்த சூரியனைப் போலப் பேரொளி படைத்தவராக ஞானசம்பந்தர் விளங்குகின்றார். இவர், நறுமணம் கமழும் மலர் அரும்புகள் நிறைந்த முதிர்ந்த சடைமுடி உடைய சிவபெருமான் எழுந்தருளியுள்ள கள்ளிலைப் போற்றிப் பாடினார். இத்திருப்பதிகத்தைப் பாடிப்போற்ற வல்லவர்கள் புகழோடு பேரின்பமும் அடைவார்கள்.

***குறிப்புரை:*** நாற்றிசையும் புகழ்பெற்ற ஞானசம்பந்த சுவாமிகள் பதிகத்தைக் கொண்டு கள்ளில் ஏத்தப் புகழோடு பேரின்பமும் பொருந்தும் என்கின்றது. திகை – திசை. பகல் – சூரியன். பந்தன் – நாம ஏகதேசம்.

Gnaanasambandan of Seekaazhi, a flourishing and shining scholar bright like a sun, praised by all people of the four directions. He has sung about the Lord of Thiru-k-kallil, who has matted hair decorated with fragrant flowers. If we sing these verses and adore Lord Civan, fame and eternal bliss could be attained by us.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*119ஆம் பதிகம் முற்றிற்று*
End of 119th Hymn

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# 120. திருவையாறு

## திருத்தல வரலாறு:

36ஆம் திருப்பதிகம் பார்க்கவும்.

# 120. THIRU-VAI-YAARU

## HISTORY OF THE PLACE

See 36th Hymn.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 120. திருவையாறு

## 120. THIRU-VAI-YAARU

பண் : வியாழக்குறிஞ்சி
ராகம் : சௌராஷ்டிரம்

*Pann: Viyazha-k-kurinji*
*Raagam : Saurashtram*

பணிந்தவரருவினைபற்றறுத்தருள்செயத்
துணிந்தவன்றோலொடுநூல்துதைமார்பினில்
பிணிந்தவனரவொடுபேரெழிலாமைகொண்
டணிந்தவன்வளநகரந்தணையாறே. 1

பணிந்தவன், அருவினை பற்று அறுத்து அருள்செயத்
துணிந்தவன், தோலொடு நூல் துதை மார்பினில்
பிணிந்தவன், அரவொடு பேர் எழில் ஆமை கொண்டு
அணிந்தவன், வள நகர் - அம் தண் ஐயாறே.

paNintavar aruvin2ai paRRu aRuttu aruLceyat
tuNintavan2, tOloTu nUl tutai mArpin2il
piNintavan2, aravoTu pEr ezil Amai koNTu
aNintavan2, vaLa nakar--am taN aiyARE.

**பொருள்:** சிவபெருமானின் திருவடிகளைப் பணிந்து வணங்கும் அடியவர்களின் நீங்குவதற்கு அரிய வினைகளை அவர் அடியோடு அழித்து அருள் வழங்கத் துணிந்திருப்பவர். மான் தோலோடு விளங்கும் முப்புரிநூலைத் திருமார்பில் அணிந்திருப்பவர். அரவத்துடன் பேரழகு வாய்ந்த ஆமையோட்டை அணிந்திருப்பவர். இப்பெருமான் எழுந்தருளிய வளமையான நகரம் குளிர்ச்சியான திருவையாறு ஆகும்.

***குறிப்புரை:*** அடியார்களுடைய அருவினைகளை அறுத்து, அருள் செய்யத் துணிந்தவன்; தோல் சேர்ந்த நூல் செறிந்த மார்பினை உடையவன். அரவோடு ஆமை ஓட்டைப் பிணித்தவன் வளநகர் ஐயாறு என்கின்றது. பணிந்தவர் – தாழ்வெனும் தன்மையோடு அடிபணிந்த அடியார்கள். அருவினை – திருவருளன்றி வேறொன்றாலும் நீக்குதற்கரியவினை. பிணித்தவன் எனற்பாலது எதுகை நோக்கி பிணிந்தவன் என மெலிந்தது.

Lord Civa is determined to completely eliminate such of those karmas as can be removed, from His devotees who worship Him sincerely and also come forward to grace them. He wears on His body frame the three-ply sacred thread with a bit of deer skin attached to it. Also He bedecks His body with a snake along with a large and good-looking tortoise shell. This Lord's beloved prosperous fertile city is the most famed cool Thiru-vai-yaaru. Go and worship Him there.

கீர்த்திமிக்கவனகர்கிளரொளியுடனடப்
பார்த்தவன்பனிமதிபடர்சடைவைத்துப்
போர்த்தவன்கரியுரிபுலியதளரவரை
ஆர்த்தவன்வளநகரந்தணையாறே. 2

*கீர்த்தி மிக்கவன் நகர் கிளர் ஒளிஉடன் அடப்*
*பார்த்தவன்; பனிமதி படர்சடை வைத்துப்,*
*போர்த்தவன் கரிஉரி; புலிஅதள், அரவு, அரை*
*ஆர்த்தவன்; வள நகர் - அம் தண் ஐயாறே.*

kIrtti mikkavan2 nakar kiLar oLi uTan2 aTap
pArttavan2; pan2imati paTar caTai vaittu,
pOrttavan2 kari uri; puli ataL, aravu, arai
Arttavan2; vaLa nakar--am taN aiyARE.

*பொருள்:* சிவபெருமான் புகழ்மிக்கவரும், அசுரர்களின் நகரமான முப்புரத்தைத் தனது நெற்றிக் கண்ணில் இருந்து கிளர்ந்து எழுந்த பேரொளியால் அழியுமாறு பார்த்தவரும் ஆவர். குளிர்ந்த திங்களை விரிந்த சடைமுடிமீது வைத்திருப்பவர். யானையின் தோலை உரித்துப் போர்த்தியிருப்பவர். புலித்தோல் ஆடையின் மேல் பாம்பை இடையில் கட்டியிருப்பவர். இப்பெருமான் எழுந்தருளியுள்ள வளமையான நகரம் அழகிய குளிர்ச்சியான திருவையாறு ஆகும்.

*குறிப்புரை:* திரிபுரம் எரித்தவன்; யானையை உரித்துப் போர்த்தியவன், புலித்தோல் பாம்பு இவற்றை அரையிற் கட்டியவன் நகர் ஐயாறு என்கின்றது. கீர்த்தி மிக்கவன் நகர் – திரிபுரம். திரிபுராதிகளுக்கு

உண்டான கீர்த்தி அவர்கள் அழிவிற்குக் காரணமாயிற்று எனக் குறித்தவாறு. அடப்பார்த்தவன் – அழிய விழித்தவன். திரிபுரத்தை விழித்தெரித்ததாக ஒரு வரலாறு தேவாரத்துப் பல இடங்களிலும் வருதல் காண்க. அதள் – தோல். ஆர்த்தவன் – கட்டியவன்.

Lord Civa, the most renowned, Supreme Being opened His third eye in His forehead. The great light that emanated from the eye burnt and destroyed the three citadels of the opponent Asuraas. He accommodates the cool moon in His broad matted hair. He stripped an elephant's skin and covered His body with it. He covers His waist with the skin of tiger and tightens it with a snake. This Lord Civan's beloved prosperous city is, the famed cool Thiru-vai-yaaru. Go and worship Him there.

வரிந்தவெஞ்சிலைபிடித்தவுணர்தம்வளநகர்
எரிந்தறவெய்தவனெழில்திகழ்மலர்மேல்
இருந்தவன்சிரமதுஇமையவர்குறைகொள
அரிந்தவன்வளநகர்ந்தணையாறே. 3

*வரிந்த வெஞ்சிலை பிடித்து, அவுணர் தம் வள நகர்*
*எரிந்து அற எய்தவன்; எழில் திகழ் மலர் மேல்*
*இருந்தவன் சிரம்அது, இமையவர் குறைகொள,*
*அரிந்தவன்; வள நகர் - அம் தண் ஐயாறே.*

varinta venjcilai piTittu, avuNartam vaLa nakar
erintu aRa eytavan2; ezil tikaz malarmEl
iruntavan2 ciram atu, imaiyavar kuRai koLa,
arintavan2; vaLa nakar--am taN aiyARE.

***பொருள்:*** சிவபெருமானார், இருமுனைகளும் இழுத்துக் கட்டப்பட்ட கொடிய வில்லைப் பிடித்து அசுரர்களின் வளமையான முப்புரங்கள் எரிந்து அழியுமாறு கனை எய்தவர். தேவர்களின் வேண்டுகோளுக்கு இணங்கி, அழகிய தாமரை மலரின்மேல் வீற்றிருக்கும் பிரமனின் தலைகளில் ஒன்றைக் கொய்தவர். இப்பெருமான் எழுந்தருளியுள்ள வளமையான நகரம் குளிர்ச்சியான திருவையாறு ஆகும்.

***குறிப்புரை:*** வில்லேந்தி அவுணர் முப்புரங்களும் எரிய எய்தவனும், பிரமனுடைய சிரத்தைத் தேவர்கள் வேண்ட அரிந்தவனும் ஆகிய இறைவன் நகர் இது என்கின்றது. வரிந்த – கணுக்கள் தோறும் கட்டப்பெற்ற. பிரமன் சிரங்கொய்தது தம்மைப் போல ஐந்தலை படைத்திருந்தமையால் அன்று; தேவர்கள் வேண்டிக் கொள்ள அவர்கள்மீது வைத்த கருணையினாலேயே என்பது விளக்கியவாறு.

By holding the two ends of the high powered bow tightly, Lord Civa sent the arrow and burnt and destroyed the three prosperous citadels of the opponent Asuraas. As per the complaint of Devaas Lord Civan plucked one of the five heads of Brahma who is seated in the attractive lotus flower. This Lord Civan's favourite prosperous city is Thiru-vai-yaaru. Go and worship Him there.

வாய்ந்தவல்லவுணர்தம்வளநகரெரியிடை
மாய்ந்தறவெய்தவன்வளர்பிறைவிரிபுனல்
தோய்ந்தெழுசடையினன்றொன்மறையாறங்கம்
ஆய்ந்தவன்வளநகரந்தணையாறே. 4

வாய்ந்த வல்அவுணர் தம் வள நகர் எரிஇடை
மாய்ந்து அற எய்தவன், வளர்பிறை விரிபுனல்
தோய்ந்து எழு சடையினன், தொல்மறை ஆறுஅங்கம்
ஆய்ந்தவன், வள நகர் - அம் தண் ஐயாறே.

vAynta val avuNar tam vaLa nakar eri iTai
mAyntu aRa eytavan2, vaLarpiRai viripun2al
tOyntu ezu caTaiyin2an2, tolmaRai ARu agkam
Ayntavan2, vaLa nakar--am taN aiyARE.

**பொருள்:** சிவபெருமானார், வலிமை மிகுந்த அசுரர்களின் வளமையான முப்புரங்களும் தீயால் அழிந்து ஒழிந்து போகுமாறு கணை எய்தவர். வளர்கின்ற பிறையையும், விரிந்த கங்கையையும் பொருந்திய சடையினர். பழமையான நான்கு வேதங்களாலும் ஆறு அங்கங்களாலும் ஆராயப் பெற்றவன் சிவபெருமான். இப்பெருமான் எழுந்தருளியுள்ள வளமையான நகரம் அழகும் குளிர்ச்சியானதுமான திருவையாறு ஆகும் (மறைகளால் ஆயப் பெற்றவன் எனலும் கூடும்).

**குறிப்புரை:** திரிபுரம் எரித்தவன், பிறையும் நீரும் பொருந்திய சடையினன், வேதம் அங்கம் இவற்றை ஆய்ந்தவன் நகர் ஐயாறு என்கின்றது. வாய்ந்த – வரங்களின் வன்மை வாய்ந்த, ஆய்ந்தவன் – ஆராயப் பெற்றவன். வேதங்களை ஆய வேண்டிய இன்றியமையாமை இறைவற்குக் கிடையாது. ஆதலால் வேதங்களால் ஆராயப் பெற்றவன் என்பதே பொருந்துவதாம்.

Lord Civan shot an arrow and burnt down the three prospeıous fortresses of the valiant Asuraas and destroyed them. The growing moon and the wide river Ganges glide over His matted hair. The four ancient Vedas and their subsidiaries, the six Angaas did their best in their attempt to understand the intrinsic and ingenious nature

of Lord Civan. This Lord Civan's beloved, cool and pleasant city is Thiru-vai-yaaru. Ye! devotees go there and worship Him.

வானமர்மதிபுல்குசடையிடையரவொடு
தேனமர்கொன்றையன்திகழ்தருமார்பினன்
மானனமென்விழிமங்கையொர்பாகமும்
ஆனவன்வளநகரந்தணையாறே. 5

வான் அமர் மதி புல்கு சடை இடை அரவொடு
தேன் அமர் கொன்றையன், திகழ்தரு மார்பினன்,
மான் அன மென் விழி மங்கை ஒர்பாகமும்
ஆனவன், வள நகர் - அம் தண் ஐயாறே.

vAn2 amar mati pulku caTai iTai aravoTu
tEn2 amar kon2Raiyan2, tikaztaru mArpin2an2,
mAn2 an2a men2 vizi magkai or pAkamum
An2avan2, vaLa nakar--am taN aiyARE.

**பொருள்:** சிவபெருமானார், வானில் விளங்கும் பிறைமதி பொருந்திய சடையின்மேல் பாம்பையும் தேன்நிறைந்த கொன்றை மாலையையும் அணிந்திருப்பவர். சிறப்பு மிக்க அழகு விளங்கும் திருமார்பினை உடையவர். மான்போன்ற மென்மையான விழிகளை உடைய உமையம்மையை ஒரு பாகமாகக் கொண்டவர். இப்பெருமான் எழுந்தருளிய நகரம், அழகும் குளிர்ச்சியானதுமான திருவையாறு ஆகும்.

**குறிப்புரை:** பிறையணிந்த சடையில் பாம்பையும், கொன்றையையும் சூடியவன், விளங்கும் மார்பினை உடையவன், உமையொரு பாதியன் வளநகர் ஐயாறு என்கின்றது. வானமர் பதி என்றது மதியென்ற பொதுமைநோக்கி. ஓர் பாகம் ஆனவன் என்பதற்கு இடப்பாகம் கொண்டவன் என்றுரைப்பினும் அமையும்.

Lord Civan wears in His matted hair the garland woven out of cassia flowers full of honey. Along with this, He retains in His head the crescent moon that shines brightly in the sky and also a snake. His elegant chest is very attractive. He holds His consort Umaa Devi, whose eyes are fascinating like those of deer, on the left half of His body. This Lord's beloved, cool and pleasant city is Thiru-vai-yaaru. Ye devotees! Go there and adore Lord Civan therein.

முன்பனைமுனிவரோடமரர்கள்தொழுதெழும்
இன்பனையிணையிலவிறைவனையெழில்திகழ்
என்பொனையேதமில்வேதியர்தாந்தொழும்
அன்பனவளநகரந்தணையாறே. 6

முன்பனை, முனிவரோடு அமரர்கள் தொழுது எழும்
இன்பனை, இணை இல இறைவனை, எழில் திகழ்
என் பொனை, ஏதம் இல் வேதியர்தாம் தொழும்
அன்பன வள நகர் - அம் தண் ஐயாறே.

mun2pan2ai, mun2ivaroTu amararkaL tozutu ezum
in2pan2ai, iNai ila iRaivan2ai, ezil tikaz
en2 pon2ai, Etam il vEtiyar tAm tozum
an2pan2a vaLa nakar--am taN aiyARE.

***பொருள்:*** சிவபெருமானார் ஒப்பற்ற முன்னவராகவும் வலிமை உடையவராகவும் விளங்குபவர். முனிவர்களும் தேவர்களும் தொழுகின்ற திருவடிகளை உடைய இன்ப வடிவினர். அழகுடன் விளங்கும் என் பொன்னாக இருப்பவர். குற்றமற்ற சான்றோர்களால் தொழப்படுகின்ற அன்பராவர். இப்பெருமான் எழுந்தருளிய நகரம் அழகும் குளிர்ச்சியானதுமான திருவையாறு ஆகும்.

***குறிப்புரை:*** வலியுடையனை, முனிவரும் தேவரும் வணங்கும் இன்ப வடிவனை, என் பொன் போன்றவனை, அந்தணர் வணங்கும் அன்பனை உரிமையாக உடைய தலம் ஐயாறு என்கின்றது. முன்பு – வலிமை. இணையில இறைவனை – ஒப்பற்ற முதல்வனை; எழில் – அழகு. அன்பன – அன்பனுடையதான.

Civa is the most valiant Lord of the universe. He has a very delightful personality having divine feet worshipped by sages and celestials. He is unique and has no equal. He is my most attractive Lord glittering like gold. The flawless Vedic scholars worship Him as their Supreme Being. This Lord Civan's beloved, cool and pleasant city is Thiru-vai-yaaru. Ye devotees! Go there and worship Him.

வன்றிறலவுணர்தம்வளநகரெரியிடை
வெந்தறவெய்தவன்விளங்கியமார்பினில்
பந்தமர்மெல்விரல்பாகமதாகிதன்
அந்தமில்வளநகரந்தணையாறே. 7

வன்திறல் அவுணர்தம் வள நகர் எரிஇடை
வெந்து அற எய்தவன், விளங்கிய மார்பினில்
பந்துஅமர்மெல்விரல் பாகம்அதுஆகி, தன்
அந்தம் இல் வள நகர் - அம் தண் ஐயாறே.

van2tiRal avuNartam vaLa nakar eri iTai
ventu aRa eytavan2, viLagkiya mArpin2il
pantu amar mel viral pAkam atu Aki, tan2
antam il vaLa nakar--am taN aiyARE.

**பொருள்:** சிவபெருமானார், பெரும் வலிமை படைத்த அசுரர்களின் வளமையான முப்புரங்களும் தீயால் வெந்து அழியுமாறு கணை எய்தவர். சிறப்பு மிக்க அழகு விளங்கிய திருமார்பினில் பந்து தங்கும் மெல்லிய விரலை உடைய உமையம்மையைப் பாகமாகக் கொண்டிருப்பவர். இப்பெருமான் எழுந்தருளியுள்ள வளமையான நகரம் அழகும் குளிர்ச்சியானதுமான திருவையாறு ஆகும்.

**குறிப்புரை:** திரிபுரங்கள் தீயிடை வேவ எய்தவன், பந்தணை விரலியைப் பாகங் கொண்டவன் வளநகர் ஐயாறு என்கின்றது. அந்தம் இல் – அழிவில்லாத.

Civan is the Lord Supreme who shot His arrow on the three flourishing citadels of the most valiant Asuraas and destroyed them completely in fire. He embeds on the left half of His body, His consort Umaa Devi whose soft fingers grasp the play balls. This Lord Civan resides in the eternal flourishing city Thiru-vai-yaaru,which is a cool and famed city. Ye devotees! go there and adore Him.

விடைத்தவல்லரக்கனல்வெற்பினையெடுத்தலும்
அடித்தலத்தாலிறையூன்றிமற்றவனது
முடித்தலைதோளவைநெரிதரமுறைமுறை
அடர்த்தவன்வளநகரந்தணையாறே. 8

விடைத்த வல்அரக்கன் நல் வெற்பினை எடுத்தலும்,
அடித்தலத்தால் இறை ஊன்றி, மற்று அவனது
முடித்தலை தோள் அவை நெரிதர, முறைமுறை
அடர்த்தவன் வள நகர் - அம் தண் ஐயாறே.

viTaitta val arakkan2 nal veRpin2ai eTuttalum,
aTittalattAl iRai Un2Ri, maRRu avan2atu
muTittalai tOL avai neritara, muRaimuRai
aTarttavan2 vaLa nakar--am taN aiyARE.

**பொருள்:** செருக்குடன் வந்த வீரம்மிக்க இராவணன் வலிய கயிலை மலையைப் பெயர்த்து எடுக்க முயற்சித்த அளவில், தனது அடித்தலத்தால் சிறிது ஊன்றியவர் சிவபெருமான் ஆவர். இராவணனின் கிரீடம் அணிந்த தலைகளையும் தோள்களையும் நெரித்தவர். இப்பெருமான் எழுந்தருளிய வளமையான நகரம், அழகும் குளிர்ச்சியானதுமான திருவையாறு ஆகும்.

**குறிப்புரை:** இராவணனை அடித்தலத்தால் அடர்த்தவன் நகர் ஐயாறு என்கின்றது. விடைத்த – செருக்கிய. நல்வெற்பு – கயிலை. இறை – சிறிது. இறையூன்றியது கருணையின் மிகுதியால்.

The valiant Raavanan approached with haughtiness and tried to move aside mount Kailas, the strong abode of Lord Civa. Civan pressed the mountain slightly by the bottom of His feet. And lo! Raavanan's head full of hair and his shoulders got crushed one after another. This Lord Civan's flourishing city Thiru-vai-yaaru is cool and is a famed city. Ye devotees! go there and adore Him.

விண்ணவர்தம்மொடுவெங்கதிரோனல
எண்ணிலிதேவர்களிந்திரன்வழிபடக்
கண்ணனும்பிரமனுங்காண்பரிதாகிய
அண்ணல்தன்வளநகரந்தணையாறே. 9

**விண்ணவர் தம்மொடு வெங்கதிரோன், அனல்,**
**எண் இலி தேவர்கள், இந்திரன், வழிபடக்,**
**கண்ணனும் பிரமனும் காண்பு அரிது ஆகிய**
**அண்ணல்தன் வள நகர் - அம் தண் ஐயாறே.**

viNNavar tammoTu, vegkatirOn2, an2al,
eN ili tEvarkaL, intiran2, vazipaTa,
kaNNan2um piraman2um kANpu aritu Akiya
aNNal tan2 vaLa nakar--am taN aiyARE.

**பொருள்:** சிவபெருமானாரை வானகத்தில் வாழ்பவர்களும், சூரியன், அக்கினி மற்றும் எண்ணற்ற தேவர்கள் இந்திரன் ஆகியோர் வழிபட்டனர். ஆனால் திருமால், பிரமர் இருவருக்கும் காண்பதற்கு அரியவராக நின்ற தலைவன் ஆவார். இப்பெருமான் எழுந்தருளியுள்ள வளமையான நகரம், அழகும் குளிர்ச்சியானதுமான திருவையாறு ஆகும்.

**குறிப்புரை:** இந்திரன், அக்கினி, எண்ணற்ற தேவர்கள், இவர்கள் வழிபட, திருமாலும் பிரமனும் காண்டற்கரிய கடவுள் நகர் ஐயாறு என்கின்றது. அண்ணல் – பெருமையிற் சிறந்தவன்.

All celestial beings along with the sun god, and the god of fire, numerous devaas and also Indran and his companions - all these adore and worship Lord Civan. However, He stood invisible to Thirumaal and Brahma. This Master Civan's fertile city is Thiru-vai-yaaru which is a very cool and famed one. Ye devotees go to this place and offer worship to Him.

மருளுடைமனத்துவன்சமணர்கள்மாசறா
இருளுடையிணைத்துவர்ப்போர்வையினார்களும்
தெருளுடைமனத்தவர்தேறுமின்திண்ணமா
அருளுடையடிகள்தமந்தணையாறே. 10

*மருள் உடை மனத்து வன்சமணர்கள் மாசு அறா*
*இருள் உடை இணைத்துவர்ப்போர்வையினார்களும்,*
*தெருள் உடை மனத்தவர்; தேறுமின், திண்ணமா*
*அருள் உடை அடிகள்தம் அம் தண் ஐயாறே.*

maruL uTai man2attu van2 camaNarkaL, mAcu aRA
iruL uTai iNaittuvarp pOrvaiyin2ArkaLum,
teruL uTai man2attavar; tERumin2, tiNNamA
aruL uTai aTikaL tam am taN aiyARE!

**பொருள்:** தெளிந்த மனத்தினை உடையவர்களே! வலிய சமணர்கள் மருட்சியை உடைய மனத்தை உடையவர்கள். புத்தர்கள் குற்றம் நீங்காத துவர்நிற ஆடையைப் போர்த்தி இருப்பவர்கள். இவர்கள் கூறுவதைக் கேட்காதீர்கள். சிவபிரானாரை உறுதியாகப் பற்றிக் கொண்டு தெளிந்த மனத்துடையவர்களாக மாறுங்கள். பெருங் கருணையாளனாக விளங்கும் இப்பெருமான் எழுந்தருளிய வளமான நகரம் அழகும், குளிர்ச்சியானதுமான திருவையாறு ஆகும்.

**குறிப்புரை:** மருண்ட மனத்துச் சமணர்கள் முதலாயினார்களிடம் பொருந்தாது, தெளிந்த மனத்தவர்களே! உறுதியாகத் தெளிவுறுங்கள்; அருள் உடைய அடிகள் இடம் ஐயாறே என்கின்றது. மருள், இருள் – அறியாமை. இணை துவர் போர்வையினார் – இரண்டான காவிப் போர்வையுடையவர்கள்.

Ye companions! You have clarity in your minds. Be very careful not to give any importance to the speeches of the aggressive Jains who are confused in their minds; similarly do not listen to the words of Buddhists who wear clothes of ochre colour and who are not flawless people. But you should be firm in your minds and realise the greatness of Lord Civa who is ever merciful. This Lord Civan's flourishing city is Thiru-vai-yaaru which is very cool and a famed one. Ye devotees go to this place and offer worship to Him.

நலமலிஞானசம்பந்தனதின்றமிழ்
அலைமலிபுனல்மல்குமந்தணையாற்றினைக்
கலைமலிதமிழிவைகற்றுவல்லார்மிக
நலமலிபுகழ்மிகுநன்மையர்தாமே. 11

நலம் மலி ஞானசம்பந்தனது இன்தமிழ்
அலை மலி புனல் மல்கும் அம் தண் ஐயாற்றினைக்
கலை மலி தமிழ் இவை கற்று வல்லார் மிக
நலம் மலி புகழ் மிகு நன்மையர் தாமே.

nalam mali njAn2acampantan2atu in2tamiz
alai mali pun2al malkum am taN aiyARRin2aik
kalai mali tamiz ivai kaRRu vallAr mika
nalam mali pukaz miku nan2maiyartAmE.

**பொருள்:** அலைகள் வீசும் ஆறு குளம் முதலிய நீர் நிலைகளால் சூழப்பட்ட திருவையாறில் எழுந்தருளிய சிவபெருமானாரை, நன்மைகளால் நிறைந்த ஞானசம்பந்தன் போற்றிப் பாடினார். இனிய தமிழால் இயன்ற கலைநலம் நிறைந்த இத்திருப்பதிகத்தைத் திறம்படக் கற்று வல்லவர்கள் ஆனால் நன்மை மிக்க புகழ் அவர்களை வந்தடையும்.

**குறிப்புரை:** ஐயாற்றைப்பற்றித் திருஞானசம்பந்தர் சொல்லிய கலைமலிதமிழிவை வல்லார் புகழ்மிகுந்த நன்மையர் ஆவர் எனப்பயன் கூறுகின்றது.

Thiru-vai-yaaru is girt with water reserves such as the wave filled river, lakes etc. Lord Civan is entempled in this city. Gnaanasambandan abounding in virtuous deeds, adored Lord Civan of this place and sang this hymn in sweet Tamil, full of artistic words. Those who learn and master these verses will gain much fame and reputation in this life.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*120ஆம் பதிகம் முற்றிற்று*
End of 120th Hymn

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# 121. திருஇடைமருதூர்

## திருத்தல வரலாறு:

32ஆம் திருப்பதிகம் பார்க்க.

## பதிக வரலாறு:

திருநாகேச்சரத்தை வணங்கிப் பதிகம் பாடித் தொழுது, இடைமருதுக்கு எழுந்தருளிய பிள்ளையாரை, அடியார்கள் எதிர் கொண்டு அழைத்தனர். பிள்ளையார் முதலில் பரம் பொருளானார் முதற்கோயிலைச் சென்று வழிபட்டனர். தமது கண்களில் ஆனந்தபாஷ்பம் வழிய அவனிமீது விழுந்தெழுந்து, 'நடைமரு திரிபுரம்' முதலிய பல பதிகங்களை அருளிச் செய்தனர்.

# 121. THIRU-IDAI-MARU-THOOR

## HISTORY OF THE PLACE

See 32nd Hymn.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 121. திருஇடைமருதூர் — 121. THIRU-IDAI-MARU-THOOR

பண் : வியாழக்குறிஞ்சி
ராகம் : சௌராஷ்டிரம்

*Pann: Viyazha-k-kurinji*
*Raagam : Saurashtram*

நடைமரு திரிபுரமெரி யுணநகைசெய்த
படைமரு தழலெழமழு வலபகவன்
புடைமரு திளமுகில்வள மமர்பொதுளிய
இடைமரு தடையநம் மிடர்கெட லெளிதே. 1

நடை மரு திரிபுரம் எரியுண நகைசெய்த
படை மரு தழல் எழ மழு வல பகவன்,
புடை மருது இள முகில் வளம் அமர் பொதுளிய,
இடைமருது அடைய நம்(ம்) இடர் கெடல் எளிதே.

naTai maru tiripuram eriyuNa nakai ceyta
paTai maru tazal eza mazu vala pakavan2,
puTai marutu iLa mukil vaLam amar potuLiya,
iTai marutu aTaiya, nam iTar keTal eLitE.

***பொருள்:*** எப்பொழுதும் அசைவுகளை உடைய திரிபுரங்கள் எரிந்து அழிந்து போகுமாறு புன்சிரிப்பு அருளித் தனது படைக்கலத்தால் தீ எழும்பும்படி செய்தருளிய மழு ஏந்திய வெற்றி வீரர் சிவபெருமானாராகும். இப்பெருமான் எழுந்தருளியுள்ளதும், அருகில் வளர்ந்துள்ள மருத மரங்களில் இளமேகங்கள் தவழ்ந்து மழை வளத்தை தருவதுமான திரு இடை மருதூரை அடைந்தால் நம் துயர் கெடுவது எளிதாகும்.

***குறிப்புரை:*** திரிபுரம் தீயெழச் சிரித்த மழுவேந்தியவனது இடைமருது அடைய நம் இடர் கெடல் எளிது என்கின்றது. நடை மரு திரிபுரம் – இயங்குதலை மருவிய முப்புரம். படை மரு தழல் எழ – படைக்கலமாகப் பொருந்தித் தீயெழ. புடைமருது – பக்கங்களிலுள்ள மருத மரங்கள். பொதுளிய – செறிந்த.

The Originator (*பகவன்*) primordial Lord (of auspicious trails like wealth, valour, *ஐசுவரியம்*, etc.) Civan, carrying the victorious battle axe, laughed and burnt the three moving citadels and created fire by His weaponry and completely destroyed them. This our Lord Civan is enshrined in Thiru-vidai-maru-thoor which is girt with tall Arjun trees (*மருதமரம்*). Young clouds crawl over these trees and bring abundant rainfall, creating fertility and increasing productivity of the place. To those who reach this Thiru-idai-maru-thoor, and worship Lord Civan, therein, the removal of sufferings will become easy.

மழைநுழை மதியமொடழி தலைமடமஞ்ஞை
கழைநுழை புனல்பெய்த கமழ்சடைமுடியன்
குழைநுழை திகழ்செவியழ கொடுமிளிர்வதொர்
இழைநுழை புரியணலிட மிடைமருதே. 2

*மழை நுழை மதியமொடு, அழிதலை, மடமஞ்ஞை*
*கழை நுழை புனல், பெய்த கமழ் சடைமுடியன்;*
*குழை நுழை திகழ் செவி, அழகொடு மிளிர்வது ஓர்*
*இழை நுழை புரி அணல்; இடம் - இடைமருதே.*

mazai nuzai matiyamoTu, azitalai, maTamanjnjai
kazai nuzai pun2al, peyta kamaz caTaimuTiyan2;
kuzai nuzai tikaz cevi, azakoTu miLirvatu or
izai nuzai puri aNal; iTam--iTaimarutE.

**பொருள்:** சிவபெருமானார் மேகங்களின் ஊடே செல்லும் பிறைமதியையும் தசைவற்றிய மனிதத் தலை ஓட்டையும் மட மயில்கள் மூங்கில்களின் இடையில் நுழைந்து செல்லும் மலையில் தோன்றிய கங்கையையும் தனது சடைமுடியில் சூடியிருப்பவர். குழை நுழைந்து விளங்கும் செவி அழகர். இழையாகத் திரண்ட முப்புரி நூலை விரும்பி அணியும் அண்ணல். இப்பெருமான் எழுந்தருளிய இடம் திரு இடை மருதூர் ஆகும்.

**குறிப்புரை:** மதியத்தையும் கபாலத்தையும் கங்கையையும் தாங்கிய சடையன். குழைக்காதோடு விளங்கும் பூணூலை அணிந்த அண்ணல் இடம் இது என்கின்றது. மழை நுழை மதியம் – மேகத்தினூடே நுழையும் பிறை. அழிதலை – தசைநார் அழிந்த பிரமகபாலம். மடமஞ்ஞை கழை நுழை புனல் – இளைய மயில்கள் மூங்கிலிடையே நுழைகின்ற தேவகங்கை. இழை நுழைபுரி அணல் – இழையாகத் திரண்ட முப்புரிநூலை அணிந்த பெருமையிற் சிறந்தவன்.

Lord Civan has positioned in His fragrant matted hair the crescent moon that travels through the clouds. In addition He adorns in His head the human skull to the dried skin is still sticking to the bone. He also supports in His head the celestial river Ganges running from the mountain where peacocks (women much like in some of its qualities - *மடமயில்*) get going in between the bamboo trees. He wears a round ear ring in His right charming ear. He glufully wears on His chest well twisted three ply sacred thread. This Lord Civan is entempled in Thiru-idai-maru-thoor.

அருமையனெளி மையனழல் விடமிடறினன்
கருமையினொளி பெறுகமழ் சடைமுடியன்
பெருமையன்சிறு மையன்பிணைபெணொ டொருமையின்
இருமையுமுடையணலிடமிடைமருதே. 3

அருமையன், எளிமையன், அழல்விடமிடறினன்,
கருமையின் ஒளி பெறு கமழ் சடைமுடியன்,
பெருமையன், சிறுமையன், பிணைபெணொடு ஒருமையின்
இருமையும் உடை அணல், இடம் - இடைமருதே.

arumaiyan2, eLimaiyan2, azal viTa miTaRin2an2,
karumaiyin2 oLi peRu kamaz caTaimuTiyan2,
perumaiyan2, ciRumaiyan2, piNaipeNoTu orumaiyin2
irumaiyum uTai aNal, iTam--iTaimarutE.

***பொருள்:*** சிவபெருமானார் அன்பில்லாதவருக்குத் தூரமானவராகவும், அன்புடைய அடியவருக்கு அருகிலும் இருக்கும் எளியவர். அழலும் தன்மையுடைய விடத்தை உண்டு நிறுத்திய கண்டத்தினர். பெருமையான ஒளிமிகுந்த சடை முடியை உடையவர். பெரியவற்றுக்கு எல்லாம் பெரியவர். சிறியன யாவற்றிற்கும் சிறியவர். தன்னோடு பிணைந்துள்ள உமையம்மையோடு ஒரு உருவில் இருவடிவாகத் தோன்றுபவர். இச்சிவபெருமான் எழுந்தருளிய இடம் திரு இடை மருதூர் ஆகும்.

***குறிப்புரை:*** அரியனாக, எளியனாக, நீலகண்டனாக, சடைமுடியனாக, ஒருருவிலேயே சிவமும் சக்தியுமாகிய ஈருருவத்தை உடையவனாக இருக்கும் அண்ணல் இடம் இடைமருது என்கின்றது. அருமையன் – அணுகியடி வணங்காத புறச்சமயிகட்கும், ஆணவ பரிபாகமுறாத பதவி மோகமுடையார்க்கும் அரியன். எளிமையன் – அடியார்க்கு எளியன். பெருமையன் – பெரியவற்றிற்கு எல்லாம் பெரிய பெருமையுடையவன். சிறுமையன் – சிறியவற்றிற்கெல்லாம் சிறியவன். பிணை பெண்ணோடு – பிணைந்துள்ள உமாதேவியோடு. ஒருமையின் – ஒரு திருமேனியிலேயே. இருமையும் உடைய – சிவமும் சத்தியுமாகிய இரண்டன் தன்மையும் உடைய.

Lord Civan is unattainable for those who are without any love to Him nor they do have any mercy towards other souls; whereas He is easily accessible to His pious devotees who realise the existence of god in all souls and show mercy to them. Without swallowing the 'fire like' poison, He positioned it in His throat; He is the greatest of all that is great and at the same time He is the smallest of all that is very small. Sharing His body with His consort Umaa Devi, He is monistic in dualism (one body with two forms). This Lord Civan's abode is Thiru-idai-maru-thoor.

பொரிபடுமுதுகுறமுளிகளிபுடைபுமல்கு
நரிவளர்சுடலையுள்நடமெனநவில்வோன்
வரிவளர்குளிர்மதியொளிபெறமிளிர்வதொர்
எரிவளர்சடையணலிடமிடைமருதே. 4

*பொரி படு முதுகு உற முளி களி புடைபு மல்கு*
*நரி வளர் சுடலையுள் நடம் என நவில்வோன்,*
*வரி வளர் குளிர்மதி ஒளி பெற மிளிர்வது ஓர்*
*எரி வளர்சடை அணல், இடம் - இடைமருதே.*

pori paTu mutuku uRa muLi kaLi puTai pulku
nari vaLar cuTalaiyuL naTam en2a navilvOn2,
vari vaLar kuLirmati oLi peRa miLirvatu or
eri vaLarcaTai aNal, iTam--iTaimarutE.

**பொருள்:** சிவபெருமானார், நன்கு காய்ந்து பொரிந்த முதுகினை உடைய நரிகள், களிப்புடன் நிறைந்து தோன்றும் சுடுகாட்டில், நடனம் ஆடுபவர். அழகிய கலைகளை கோடாகத் தோன்றி பின் வளரும் தன்மையை உடைய குளிர்ந்த பிறை மதியை ஒளிபெற அணிந்த எரிபோன்று வளரும் சடைமுடியை உடைய தலைமையாளர். இச்சிவபெருமான் எழுந்தருளிய இடம் திருஇடை மருதூர் ஆகும்.

**குறிப்புரை:** இடுகாட்டுள் நடமாடுவோன், மதி புனைந்த சடையண்ணல் இடம் இது என்கின்றது. பொரி படு முதுகு உற முளி களி புடை புல்கு நரி – பொரிந்த முதுகிற் பொருந்தக் காய்ந்த களிப்போடுகூடிய நரி. வரி – கோட்டு அளவாக அதாவது கீற்றாக.

Lord Civan dances in the burning ghat where a number of foxes with dried and parched backs happily appear near Him. On His 'fire like' matted hair He bedecks the shining cool crescent moon, which looks like a thin line in the beginning, but starts growing day by day. This pre-eminent Lord Civan is entempled in Thiru-idai-maru-thoor.

வருநலமயிலனமடநடைமலைமகள்
பெருநலமுலையிணைபிணைசெய்தபெருமான்
செருநலமதிலெய்தசிவனுறைசெழுநகர்
இருநலபுகழ்மல்குமிடமிடைமருதே. 5

வரு நல மயில் அன மடநடை மலைமகள்
பெருநலமுலைஇணை பிணைசெய்த பெருமான்,
செரு நல மதில் எய்த சிவன், உறை செழுநகர்
இரு நல புகழ் மல்கும் இடம் - இடைமருதே.

varu nala mayil an2a maTanaTai malaimakaL
peru nala mulai iNai piNaiceyta perumAn2,
ceru nala matil eyta civan2, uRai cezu nakar
iru nala pukaz malkum iTam--iTaimarutE.

**பொருள்:** சிவபெருமான் அழகோடு அசைந்து வரும் மட நடையினளாகிய மலையரையனின் மகளும், பெருநல முலையாள் என்ற திருப்பெயரையும் உடையவளுமாகிய அம்மையின்

இரு தனபாரங்களைக் கூடி இருப்பவர். போர் செய்தற்கு உரிய தகுதியோடு விளங்கிய அசுரர்களின் மும்மதில்களை எய்து அழித்தவர். இச்சிவபெருமான் உறையும் செழுமையான நகரம் விரிந்த புகழால் நிறைந்த திரு இடை மருதூர் ஆகும்.

***குறிப்புரை:*** பெருநலமுலையம்மையோடு கூடிய பெருமான் நகர் இடைமருது என்கின்றது. வருநல மயில் அன மடநடை மலைமகள் – வருகின்ற மயிலன்ன சாயலையும் அன்னம் போன்ற மடநடையையும் உடைய மலைமகள், பெருநலமுலையாள் இத்தலத்து இறைவியின் திருநாமம். செருநலமதில் – போர் நலம் வாய்ந்த முப்புரம்.

Lord Civan is affiliated with Umaa Devi, the daughter of mountain king. She resembles in her features, a peacock and walks like a swan. One of her holy names is Peru-nala-mulaiyaal (*பெருநலமுலையாள்*) (This is the name of the goddess of Thiru-idai-maru-thoor) with whose breasts Lord Civan is united. He destroyed the war like efficient three fortresses of Asuraas by discharging an arrow. This Lord Civan is entempled in Thiru-idai-maru-thoor which is a fertile city having wide spread reputation.

கலையுடைவிரிதுகில்கமழ்குழலகில்புகை
மலையுடைமடமகள்தனையிடமுடையோன்
விலையுடையணிகலனிலனெனமழுவினோ
டிலையுடைபடையவனிடமிடைமருதே. 6

*கலை உடை விரி துகில், கமழ்குழல், அகில்புகை,*
*மலை உடை மடமகள்தனை இடம் உடையோன்;*
*விலை உடை அணிகலன் இலன் என மழுவினோடு*
*இலைஉடைபடையவன்; இடம் - இடைமருதே.*

kalai uTai viri tukil, kamazkuzal, akilpukai,
malai uTai maTamakaL tan2ai iTam uTaiyOn2;
vilai uTai aNikalan2 ilan2 en2a mazuvin2oTu
ilai uTai paTaiyavan2; iTam--iTaimarutE.

**பொருள்:** மேகலை சூழ்ந்த விரிந்த ஆடையை தன் இடுப்பில் அணிந்தவளும், அகிலின் புகை கமழும் கூந்தலை உடையவளுமான மலை அரசனின் மடமகளாகிய பார்வதி தேவியை சிவபெருமானார் தனது இடப்பாகத்தில் வைத்திருப்பவர். விலைமதிப்புள்ள அணிகலன்கள் எவையும் இல்லாதவர் என்று சொல்லுமாறு, மழு, எலும்பு முதலியன பூண்டு இலை வடிவான

சூலப்படையையும் வைத்திருப்பவர். இச்சிவபெருமான் எழுந்தருளிய இடம் திருஇடைமருதூர் ஆகும்.

**குறிப்புரை:** உமாதேவியை இடப்பாகம் உடையோன். மழு சூலம் இவற்றை உடையவன் இடம் இது என்கின்றது. துகிலையும், அகில் புகை கமழ் குழலையும் உடைய மடமகள் எனக் கூட்டுக. விலையுடை அணிகலன் இலன் என – விலைமதிப்புடைய உயர்ந்த ஆபரணங்கள் இல்லாதவன் என. இலையுடை படையவன் – இலைவடிவாகிய சூலப்படையை உடையவன்.

The sincere and simple Paarvathi Devi, daughter of mountain king, whose hair is fragrant with the smoke of Eaglewood, wears a wide waist corset. Lord Civan accommodates her on the left portion of His body. He wears skulls, tortoise shells etc., as if He has no costly ornaments to wear. He holds the battle axe and the trident in His hands as war weapons. This Lord Civan's place of residence is Thiru-idai-maru-thoor.

வளமெனவளர்வனவரிமுரல்பறவைகள்
இளமணலணைகரையிசைசெயுமிடைமரு
துளமெனநினைபவரொலிகழலிணையடி
குளமணலுறமுழ்கிவழிபடல்குணமே. 7

**வளம் என வளர்வன வரி முரல் பறவைகள்**
**இளமணல் அணை கரை இசைசெயும் இடைமருது**
**உளம் என நினைபவர் ஒலிகழல் இணைஅடி,**
**குளம் அணல் உற முழ்கி, வழிபடல் குணமே.**

vaLam en2a vaLarvan2a vari mural paRavaikaL
iLa maNal aNai karai icaiceyum iTaimarutu
uLam en2a nin2aipavar olikazal iNai aTi,
kuLam aNal uRa mUzki, vazipaTal kuNamE.

**பொருள்:** இடைமருதூர் என்னும் திருத்தலமானது வளமுடைய இடமாகும். நாம் வாழ்வதற்கு ஏற்ற இடமாகும் என்று எண்ணி அழகிய பறவைகளும் வண்டுகளும் இணைந்து, இளமையான மணல் அணைந்த கரையில் இசை செய்யும் இடமாகும். இத்தகைய இடைமருதை மனமார நினைப்பவர் அந்நகரை அடைந்து, ஆங்குள்ள தீர்த்தத்தில் கழுத்தளவிருந்து மூழ்கி வீரக்கழல் அணிந்த மருதவாணனை வழிபடுவதைப் பண்பாகக் கொள்க.

**குறிப்புரை:** வண்டுகள் இசைமுரலும் இடைமருதுறைபவன் இணையடியைக் குளத்தில் மூழ்கி வழிபடல் குணமாம் என்கின்றது. வளம் என வளர்வன – இது வளமான இடம் என்று வளர்வனவாகிய. வரி முரல் பறவைகள் – வரிகளோடு ஒலிக்கின்ற வண்டுகள். மனம் நினைத்த பொருள் வடிவாக அமையும் இயல்பிற்றாதலின் 'இடைமருது உளமென நினைபவர்' என்றார். குளம் அணல் உற மூழ்கி – குளத்தில் கழுத்தளவிருந்து மூழ்கி. அணல் – தாடி.

The birds and beetles feel that Thiru-idai-maru-thoor is a fertile place and so fit for their settlement. With this idea, they gather here and make humming sound and other noise which resembles the musical note called Vari-p-paadal (*வரிப்பாடல்*). People happily think that they do live in such a good place. They contemplate on and praise in the minds the heroic ankleted Holy Feet of Lord Civan. It is a deed of virtuous to take bath in the holy tank, where the depth is up to the neck level and offer worship to Lord Civan, who is enshrined in this city.

மறையவனுலகவன்மதியவன்மதிபுல்கு
துறையவனெனவலவடியவர்துயரிலர்
கறையவன்மிடறதுகனல்செய்தகமழ்சடை
இறையவனுறைதருமிடமிடைமருதே. 8

*"மறை அவன், உலகு அவன், மதியவன், மதி புல்கு*
*துறையவன்" என வல அடியவர் துயர் இலர்;*
*கறையவன் மிடறுஅது, கனல்செய்த கமழ் சடை*
*இறையவன் உறை தரும் இடம் - இடைமருதே.*

"maRai avan2, ulaku avan2, matiyavan2, mati pulku
tuRaiyavan2" en2a vala aTiyavar tuyar ilar;
kaRaiyavan2 miTaRu atu, kan2al ceyta kamaz caTai
iRaiyavan2, uRaitarum iTam--iTaimarutE.

**பொருள்:** வேதங்களை அருளியவர். அனைத்து உலகங்களாக விளங்குபவர். திங்களாய்த் திகழ்பவர். அறிவோடு பட்ட கலைத்துறைகளாக விளங்குபவர். நீலகண்டத்தை உடையவர். கனல் போன்று விளங்கும் சடையை உடையவர். எல்லோருக்கும் தலைவனாக இருப்பவர். இப்பெருமான் சிவபெருமானே என்று போற்ற வல்ல அடியவர்கள் துன்பம் இல்லாதவர்களாக ஆகுவர். இப்பெருமான் எழுந்தருளிய இடம் திருஇடை மருதூர் ஆகும்.

**குறிப்புரை:** வேதியன். உலகெலா மாயவன் என்றெல்லாம் சொல்ல வல்ல அடியவர்கள் துயரிலர் என்கின்றது. செந்தீக் கொழுந்துபோலச் சுடர்விடும் சடையவன் என்க. மிடறது கறையவன் என மாறிக் கூட்டுக.

Devotees of Lord Civan extol Him by declaring: "Oh Lord, You gave out the four Vedas! You are the entire universe! You are the moon! You are wisdom and the repository of all its associated learning". These devotees adoring Him as above will have no sorrows in their life. He shines with His dark blue coloured neck and fiery matted hair. He is the master of all. This Lord Civan is entempled in Thiru-idai-maru-thoor.

மருதிடைநடவியமணிவணர்பிரமரும்
இருதுறையகலமொடிகலினரினதெனக்
கருதிடலரியதொருருவொடுபெரியதொர் 9
எருதுடையடிகள்தமிடமிடைமருதே.

மருது இடை நடவிய மணிவணர், பிரமரும்,
இருது உறை அகலமொடு இகலினர், இனது எனக்
கருதிடல் அரியது ஓர் உருவொடு பெரியது ஓர்
எருது உடை அடிகள்தம் இடம் - இடைமருதே.

marutu iTai naTaviya maNivaNar, piramarum
irutu uTai akalamoTu ikalin2ar, in2atu en2ak
karutiTal ariyatu or uruvoTu periyatu or
erutu uTai aTikaL tam iTam--iTaimarutE.

**பொருள்:** மருத மரங்களின் இடையே கட்டிய உரலோடு தவழ்ந்த நீலமணி போன்ற நிறத்தை உடைய திருமாலும், பிரமனும் தம்முள் மிக்க பெருமை உடையவர் யார் என மாறுபட்டவராய் நிற்க இன்னது என்று கருதுவதற்கு இயலாத பெரிய ஒளி உருவோடு நின்றவர் சிவபெருமானாகும். இச்சிவபெருமான் இடப வாகனத்துடன் எழுந்தருளிய இடம் இடை மருதூர் ஆகும்.

**குறிப்புரை:** திருமாலும் பிரமனும் மாறுபட இன்னதென அறிய முடியா வடிவத்தோடு எழுந்த பெருமானிடம் இது என்கின்றது. மருதிடை நடவிய மணிவணர் – மருதமரங்களினிடையே கட்டிய உரலோடு புகுந்த கண்ணன், இனது எனக் கருதிடல் அரியது – இன்னது என்னக் கருதமுடியாத. எருது – இடபம்.

Thirumaal in one of his avataars as Kannan (Krishnan) used to crawl in his childhood days all around and in between two Arjun trees (மருதமரம்) with a wooden mortar attached to his waist by a rope. The body of Thirumaal reflects dark blue colour like that of sapphire gem. He and Brahma had difference of opinion on the subject as to who is the more widely reputed. Then Lord Civan stood before them as a tall and big column of fire, whose nature they could not discern. This Lord Civan who rides on a big bull is entempled in Thiru-idai-maru-thoor.

துவருறுவிரிதுகிலுடையருமமணரும்
அவருறுசிறுசொலைநயவன்மினிடுமணல்
கவருறுபுனலிடைமருதுகைதொழுதெழும்
அவருறுவினைகெடலணுகுதல்குணமே. 10

துவர் உறு விரிதுகில் உடையரும் அமணரும்
அவர் உறு சிறுசொலை நயவன்மின்! இடு மணல்
கவர்உறு புனல் இடைமருது கைதொழுது எழும்-
அவர் உறு வினை கெடல் அணுகுதல் குணமே.

tuvar uRu viritukil uTaiyarum amaNarum
avar uRu ciRucolai nayavan2min2! iTu maNal
kavar uRu pun2al iTaimarutu kaitozutu ezu-
mavar uRu vin2ai keTal aNukutal kuNamE.

**பொருள்:** நீண்ட துவர் ஆடையை உடுத்தும் புத்தரும், சமணரும் கூறும் சிறுமையான சொற்களை விரும்பாதீர்கள். காவிரி நதி பல கிளைகளாகப் பிரிந்து செல்லும் வாய்க்கால்களை உடைய இடைமருதூரைக் கைகளால் வணங்குபவர்களுக்கு வினைகள் கெடுதலும் நல்ல குணங்கள் உண்டாதலும் கூடும்.

**குறிப்புரை:** புறச்சமயிகள் பேச்சை விரும்பாதீர்கள். இடைமருதினைக் கைதொழும்; அவர்களின் வினை கேட்டையணுகுதல் குணம் என்கின்றது. துவர் உறு உடையர் – புத்தர்.

Ye devotees! Do not desire to heed to the meaningless words of Samanars and the words of the Buddhists who wear and cover their body with the wide cloth dyed in red ochre. Please go to Thiru-idai-maru-thoor where the Cauvery river divides itself and runs into several canals and reaches this place. You worship Lord Civan enshrined

therein with both of your hands. Your bad karma will vanish and you will attain all virtue.

தடமலிபுகலியர்தமிழ்கெழுவிரகினன்
இடமலிபொழிலிடைமருதினையிசைசெய்த
படமலிதமிழிவைபரவவல்லவர்வினை 11
கெடமலிபுகழொடுகிளரொளியினரே.

தட மலி புகலியர் தமிழ் கெழு விரகினன்,
இடம் மலி பொழில் இடைமருதினை இசை செய்த,
படம் மலி, தமிழ்இவை பரவ வல்லவர் வினை
கெட, மலி புகழொடு கிளர் ஒளியினரே.

taTa mali pukaliyar tamiz kezu virakin2an2,
iTam mali pozil iTaimarutin2ai icai ceyta,
paTam mali, tamiz ivai parava vallavar vin2ai
keTa, mali pukazoTu kiLar oLiyin2arE.

**பொருள்:** நீர் நிலைகள் பலவற்றை உடைய புகலிப்பதியில் தோன்றிய தமிழ் வல்லுனர் ஞானசம்பந்தனாகும். இவர் விரிந்த பொழில்களால் சூழப்பட்ட இடை மருதூரில் எழுந்தருளிய இடைமருதீசனை இசையால் பரவிய, சொல் ஓவியமாக இத்திருப்பதித் தமிழைப் பாடிப் பரவ வல்லவர்களின் வினைகள் அழிந்துவிடும். அவர்கள் புகழோடு ஒளிமிகுந்து விளங்குபவர்.

**குறிப்புரை:** தமிழ் விரகினனாய ஞானசம்பந்தப் பெருமான், இடைமருதைப் பற்றி இயம்பிய தமிழை வல்லவர் வினைகெடப் புகழோடு ஒளியுமிக விளங்குவர் என்கின்றது. படம் மலி தமிழ் – படமெடுத்தாற்போலச் சிறந்த தமிழ். கிளர் – மிகுகின்ற.

Gnaanasambandan is a versatile Tamil scholar. He hails from Pukali town which is rich in water resources. With wordy pictures he has sung this rhythmic verse on Lord Civan of Thiru-idai-maru-thoor. Those who sing these verses and hail the Lord will find their karma perish. They will lead lives of fame and prosperity.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*121ஆம் பதிகம் முற்றிற்று*
End of 121st Hymn

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# 122. திருஇடைமருதூர்

## திருத்தல வரலாறு

32ஆம் திருப்பதிகம் பார்க்க.

# 122. THIRU-IDAI-MARU-THOOR

## HISTORY OF THE PLACE

See 32nd Hymn.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 122. திருஇடைமருதூர்

## 122. THIRU-IDAI-MARU-THOOR

பண் : வியாழக்குறிஞ்சி
ராகம் : சௌராஷ்டிரம்

*Pann: Viyazha-k-kurinji*
*Raagam : Saurashtram*

விரிதரு புலியுரிவிர வியஅரையினர்
திரிதரு மெயிலவைபுனை கணையினிலெய்த
எரிதரு சடையினரிடை மருதடைவுனல்
புரிதரு மனனவர்புகழ் மிகவுளதே. 1

விரிதரு புலிஉரி விரவிய அரையினர்,
திரிதரும் எயில்அவை புனை கணையினில் எய்த
எரிதரு சடையினர், இடைமருது அடைவு உனல்
புரிதரும் மனன் அவர் புகழ் மிக உளதே.

viritaru puliuri viraviya araiyin2ar,
tiritarum eyil avai pun2ai kaNaiyin2il eyta
eritaru caTaiyin2ar, iTaimarutu aTaivu un2al
puritarum man2n2avar pukaz mika uLatE.

பொருள்: சிவபெருமான் விரிந்த புலித்தோலை ஆடையாக இடையில் கொண்டிருப்பவர். வானில் திரிந்துகொண்டு துன்பம் செய்த முப்புரங்கள் எரிந்து அழியுமாறு தனது ஆற்றல் மிகுந்த கணையை எய்தவர். நெருப்புப் போன்ற சிவந்த சடை முடியை உடையவர். இப்பெருமான் எழுந்தருளியிருக்கும் இடை மருதூரை அடைய வேண்டும் என்று நினைக்கும் மனத்தினை உடையவர்களுக்கு மிகுந்த புகழ் உண்டாகும்.

**குறிப்புரை:** புலித்தோல் அரையினராகிய இறைவனது திருஇடைமருதினை அடைய விரும்பிய மனத்தவர்க்குப் புகழ் மிகவுளது என்கின்றது. திரிதரும் எயில் – திரிபுரம்.

Lord Civan wears tiger skin at waist as garment. He is the one who destroyed the three fortresses with powerful arrow. His matted hair is reddish like fire. He is enshrined in Thiru-idai-maru-thoor. Those who deeply feel in their minds a desire to go to Thiru-idai-maru-thoor and worship Lord Civan therein, will become famous.

மறிதிரை படுகடல்விட மடைமிடறினர்
எறிதிரை கரைபொருமிடை மருதெனுமவர்
செறிதிரை நரையொடுசெல விலருலகினில் 2
பிறிதிரை பெறுமுடல் பெறுகுவதரிதே.

"மறிதிரை படு கடல் விடம் அடை மிடறினர்
எறிதிரை கரை பொரும் இடைமருது" எனும் அவர்
செறி திரை நரையொடு செலவு இலர், உலகினில்;
பிறிது இரை பெறும் உடல் பெறுகுவது அரிதே.

"maRitirai paTu kaTal viTam aTai miTaRin2ar
eRitirai karai porum iTaimarutu" en2umavar
ceRi tirai naraiyoTu celavu ilar, ulakin2il;
piRitu irai peRum uTal perukuvatu aritE.

**பொருள்:** சிவபெருமான் பெரிய அலைகள் சுருண்டு வீசுகின்ற திருப்பாற்கடலில் தோன்றிய விடத்தை விழுங்கி கண்டத்தில் தடுத்து நிறுத்தியவர். இப்பெருமான், காவிரி ஆற்றின் அலைகள் கரைகளை முட்டுகின்ற இடைமருதூர் என்னும் தலத்தில் எழுந்தருளியுள்ளார். இத்தலத்தின் பெயரைச் சொல்லுபவர்களை மூப்பினை உணர்த்தும் தோல் சுருக்கம், நரைமயிர் ஆகியன அணுகாது. மீண்டும் உலகில் பிறந்து உணவை உண்டு உடலை வளர்க்கும் பிறவியை எடுக்கமாட்டார்கள் (பிறவாமை எய்துவர்).

**குறிப்புரை:** நீலகண்டர் எழுந்தருளிய இடைமருது என்று கூறுபவர் நரைதிரை எய்தார். மீட்டும் இவ்வுடலையும் எய்தார் என்கின்றது. பிறிது இரை பெறும் உடல் பெறுகுவது அரிது. வேறு உணவை உட்கொளும் இந்த அன்மையகோசத்தை அடைவது அரிது. பிறவியில்லை என்பதாம்.

Lord Civan is the one who, without swallowing the poison which arose in the ocean of milk, where the rolling waves dash against the shores, has positioned it in His throat. The surging waves of river Cauvery dash against the banks in Thiru-idai-maru-thoor. Those who recite the very name of this place will be freed from physical

deformities that appear like waves brought by age shrinking of the skin, greying of hair and such others. They also will never be born in this world with physical body which has to eat food for survival.

சலசலசொரி புனல்சடை யினர்மலைமகள்
நிலவியவுடலி னர்நிறைமறை மொழியினர்
இலரெனவிடு பலியவரி டைமருதினை
வலமிடவுடல் நலிவில துளவினையே. 3

*சலசல சொரி புனல் சடையினர், மலைமகள்*
*நிலவிய உடலினர், நிறை மறைமொழியினர்,*
*இலர் என இடு பலியவர், இடைமருதினை*
*வலம்இட, உடல் நலிவு இலது உள வினையே.*

calacala cori pun2al caTaiyin2ar, malaimakaL
nilaviya uTalin2ar, niRai maRaimoziyin2ar,
ilar en2a iTu paliyavar, iTaimarutin2ai
valam iTa, uTal nalivu ilatu, uLa vin2aiyE.

***பொருள்:*** சிவபெருமான் சல சல என்று சொரியும் கங்கையைச் சடையில் அணிந்திருப்பவர். மலைமகளை ஒரு பாகமாகக் கொண்டிருப்பவர். நிறைவான வேதங்களை அருளி மொழிபவர். உணவின்மையால் பசியோடு உள்ளார் என மகளிர் இடும் பலியை ஏற்பவர். இப்பெருமான் எழுந்தருளியுள்ள இடைமருதூரை வலம் வர, வினைகளால் வரும் உடல் நலிவு இல்லாமற் போகும்.

***குறிப்புரை:*** இடைமருதை வலம் வர வினைகளால் உடல் நலிவு இல்லையாம் என்கின்றது. புனல் – கங்கை. நிலவிய – விளங்கிய. உளவினையால் உடல் நலிவு இலது என இயைக்க.

Lord Civan is the one who holds in His matted hair, the river Ganges which revolves and flows with heavy tinkling noise. He embeds the daughter of mountain king on the left half of His body. He pronounces the perfect Vedas. He accepts food offered by women who feel that He is hungry without food. This Lord Civan is enshrined at the temple in Thiru-idai-maru-thoor and those who circumambulate this temple will have no physical ailments caused by their past karma.

விடையினர் வெளியதொர் தலைகலனெனநனி
கடைகடை தொறுபலியிடு கெனமுடுகுவர்
இடைவிட லரியவரிடை மருதெனுநகர் 4
உடையவரடி யிணைதொழுவ தெம்முயர்வே.

விடையினர், வெளியதுஓர் தலை கலன் என நனி
கடைகடைதொறு, "பலி இடுக!" என முடுகுவர்,
இடைவிடல் அரியவர் - இடைமருது எனும் நகர்
உடையவர்; அடிஇணை தொழுவது எம் உயர்வே.

viTaiyin2ar, veLiyatu or talai kalan2 en2a nan2i
kaTai kaTai toRu, "pali iTuka!" en2a muTukuvar,
iTaiviTal ariyavar--iTai marutu en2um nakar
uTaiyavar; aTi iNai tozuvatu em uyarvE.

**பொருள்:** சிவபெருமான் விடையூர்தியை உடையவர். வெண்மையான தலையோட்டை உண்கலனாகக் கொண்டு பலகாலம் வீடுகள் தோறும் சென்று, 'பலி இடுக' என விரைந்து செல்பவர். மண்ணுயிர்களால் இடைவிடாது தியானிக்கப்படுபவர். இப்பெருமான் இடைமருதூர் என்னும் நகருக்கு உரியவர். இப்பெருமானின் திருவடிகளைத் தொழுவதே எமக்கு உயர்வைத் தருவதாகும்.

**குறிப்புரை:** இடைமருதினை உடையவர் அடியிணை தொழுவது எம்முயர்வுக்கு வழியாம் என்கின்றது. வெளியது ஓர் தலை – பிரம கபாலம். கலன் – உண்கலன். முடுகுவர் – விரைவர். இடைவிடல் அரியவர் – ஆன்மாக்களால் இடைவிடாமல் எண்ணுதற்குரியவர் என்பது கருத்து.

Lord Civa owns a bull for His movements. He carries the skull of Brahma as His eating bowl and goes very often to a number of houses and begs for alms. He is the one who is the most desirable and the most benevolent Lord to think and adore, for ever, by all souls without any break. This Lord Civan belongs to Thiru-idai-maru-thoor city. To worship His Holy Feet will give us redemption.

உரையருமுரு வினருணர்வரு வகையினர்
அரைபொரு புலியதளுடை யினரதன்மிசை
இரைமருமர வினரிடைமரு தெனவுளம் 5
உரைகளது துடையவர் புகழ்மிகவுளதே.

"உரைஅரும் உருவினர், உணர்வுஅரு வகையினர்,
அரை பொரு புலிஅதள் உடையினர், அதன்மிசை
இரை மரும் அரவினர் இடைமருது" என உளம்
உரைகள்அது உடையவர் புகழ் மிக உளதே.

"urai arum uruvin2ar, uNarvu aru vakaiyin2ar,
arai poru puli ataL uTaiyin2ar, atan2micai
irai marum aravin2ar, iTaimarutu" en2a uLam
uraikaL atu uTaiyavar pukaz mika uLatE.

**பொருள்:** சிவபெருமானார் வார்த்தைகளால் விவரிக்க இயலாத உருவத்தை உடையவர். மனத்தால் உணர்ந்து கொள்வதற்கு அரியவர். இடையில் பொருந்திய புலித்தோல் ஆடையினர். அதன்மேல் இரையை விழுங்கும் பாம்பை கச்சையாகக் கட்டி இருப்பவர். இப்பெருமான் எழுந்தருளியுள்ள இடைமருதூரை உள்ளத்தில் நினைந்து தியானிப்பவர்களுக்கு மிகந்த புகழ் உளதாகும்.

**குறிப்புரை:** சொல்லுதற்குரிய உருவினரும், உணர்தற்கரிய தன்மைகளை உடையவரும், புலித்தோலாடையினரும் ஆன இறைவனது இடைமருதென நினைக்கவும் பேசவும் வல்லவர்கட்குப் புகழ் மிக உளதாம் என்கின்றது. இரை மரும் அரவினர் - உணவை உட்கொள்ளும் பாம்பினை உடையவர். உளம் உடையவர். உரைகளது உடையவர்(க்குப்) புகழ் உளது என முடிக்க.

Lord Civan's beauty is indescribable. It is very difficult to make out His nature. He wears the tiger skin as His waist dress. And a serpent over that as a waist band. This Lord Civan is entempled in Thiru-idai-maru-thoor. Those who adore and worship many times Lord Civan and the temple city Thiru-idai-maru-thoor in which He is enshrined will get endless fame.

ஒழுகிய புனல்மதியர வமொடுறைதரும்
அழகிய முடியுடையடி களதறைகழல்
எழிலின ருறையிடைமரு தினைமலர்கொடு
தொழுதல் செய்தெழுமவர் துயருறவிலரே. 6

*ஒழுகிய புனல் மதி அரவமொடு உறைதரும்*
*அழகிய முடி உடை அடிகளது, அறைகழல்*
*எழிலினர் உறை, இடைமருதினை மலர்கொடு*
*தொழுதல்செய்து எழுமவர் துயர் உறல் இலரே.*

ozukiya pun2al mati aravamoTu uRaitarum
azakiya muTi uTai aTikaLatu, aRaikazal
ezilin2ar uRai, iTaimarutin2ai malarkoTu
tozutal ceytu ezumavar tuyar uRal ilarE.

*பொருள்:* சிவபெருமானின் அழகிய சடைமுடியில், வழிந்து ஒழுகும் கங்கைநதி, இளம்பிறை பாம்பு ஆகியன உறைகின்றன. ஒலிக்கின்ற வீரக்கழல் அணிந்துள்ள அழகர் அவர்.

இப்பெருமான் உறைகின்ற இடைமருதூரை மலர் கொண்டு தொழுது போற்றுபவர்களின் மனதில் துன்பம் இல்லாதது ஆகும்.

**குறிப்புரை:** இடைமருதை மலர்கொண்டு தொழுவார் துயருறுதல் இலர் என்கின்றது. அடிகளது இடைமருது, அறைகழல் எழிலினர் உறையிடைமருது எனத் தனித்தனி இயைக்க.

Lord Civan has a very attractive matted hair wherein the over flowing river Ganges, the crescent moon and the snake rest. He is the handsome Lord wearing the tinkling warrior's anklet on His Feet. Those who approach this Civan in Thiru-idai-maru-thoor and hail Him with flowers and prostrate before Him will have no sufferings.

கலைமலி விரலினர்கடிய தொர்மழுவொடும்
நிலையினர் சலமகளுலவிய சடையினர்
மலைமகள் முலையிணை மருவியவடிவினர்
இலைமலி படையவரிட மிடைமருதே. 7

கலை மலி விரலினர், கடியது ஓர் மழுவொடும்
நிலையினர், சலமகள் உலவிய சடையினர்,
மலைமகள் முலைஇணை மருவிய வடிவினர்,
இலைமலிபடையவர், இடம் - இடைமருதே.

kalai mali viralin2ar, kaTiyatu or mazuvoTum
nilaiyin2ar, calamakaL ulaviya caTaiyin2ar,
malaimakaL mulai iNai maruviya vaTivin2ar,
ilai mali paTaiyavar, iTam--iTaimarutE.

**பொருள்:** சிவபெருமான் இன்னிசைக் கலையை எழுப்பும் வீணையை மீட்டுகின்ற விரலை உடையவர். அழிக்கும் தன்மையை உடைய மழு ஆயுதத்தோடு விளங்குபவர். கங்கை உலாவும் சடை முடியை உடையவர். மலைமகளின் முலைத்தழும்பு பொருந்திய வடிவத்தை உடையவர். இலைவடிவான சூலத்தை ஏந்தியிருப்பவர். இப்பெருமான் எழுந்தருளியிருக்கும் தலம் இடைமருதூர் ஆகும்.

**குறிப்புரை:** கங்கையுலாவிய சடையையும், உமாதேவியார் முலைத்தழும்பு சேர்ந்த வடிவினையும் உடையவர் இடம் இடைமருது என்கின்றது. வீணை வாயிலாக இசைக்கலையை வெளிப்படுத்துதலின் கலைமலி விரலினர் எனக் கூறப்பெற்றார்.

To make the knowledge of musical art excel, Lord Civan has skilled fingers with which to play on the Indian lute. He appears with a fierce battle axe in one of His hands. His matted hair is the living space of the river Ganges. He embraces His consort Umaa Devi, daughter of the mountain king in affection. He appears holding a trident, battle weapon, in one of His hands. This Lord Civan is entempled in Thiru-idai-maru-thoor.

செருவடை யிலவலசெயல் செயத்திறலொடும்
அருவரை யினிலொருபது முடிநெரிதர
இருவகை விரனிறிய வரிடைமருதது
பரவுவரரு வினையொரு வுதல்பெரிதே. 8

செருவு அடை இல வல செயல் செய் அத் திறலொடும்
அரு வரையினில் ஒருபதுமுடி நெரிதர,
இருவகை விரல் நிறியவர் இடைமருதுஅது
பரவுவர் அருவினை ஒருவுதல் பெரிதே

ceruvu aTai ila vala ceyal cey at tiRaloTum
aru varaiyin2il orupatu muTi neritara,
iruvakai viral niRiyavar iTaimarutu atu
paravuvar aruvin2ai oruvutal peritE?

**பொருள்:** இராவணன் முறையற்ற வலிய செயல்களைப் போரில் செய்பவன். அத்தகைய வலிமையுடன் அவன் சிவபெருமான் வீற்றிருக்கும் கயிலை மலையைப் பெயர்த்தான். அவனின் உடல் வலிமையும் உள்ளத்தின் செருக்கும் கெடுமாறு சினம், கருணை ஆகிய உள்ளக் குறிப்போடு, சிவபெருமான் அவனுடைய பத்துத் தலைகளையும் விரலை ஊன்றி நெரித்தவர். இப்பெருமான் எழுந்தருளியுள்ள இடைமருதூரை போற்றித் துதிப்பவர்களின் அருவினைகள் நீங்குதல் பெரிதாகுமோ? வினை எளிதில் நீங்கிவிடும் என்பது குறிப்பு.

**குறிப்புரை:** இடைமருதைப் பரவுவார் வினை நீங்குதல் பெரிதாமோ என்கின்றது. செருவு அடையில வல செயல் செய் அத்திறலொடும் – போரில் முறையற்ற வலிய செயல்களைச் செய்யும் அத்தகைய வலிமையோடும். இருவகை விரல் நிறியவர் – அவன் வலிமையும் முடியும் ஆகிய இரண்டும் நெரியும்படியான இருவகைத் திருவுள்ளக்குறிப்போடு விரலை ஊன்றியவர். அதாவது அவன் அழியப்படாது அடங்க வேண்டும் என்ற திருவுள்ளக் குறிப்புடன் என்பது கருத்து.

Raavanan, of disorderly way in the battle field, tried to move aside mount Kailas, the abode of Lord Civan. Without having any intention to annihilate Raavanan, Lord Civan slightly pressed the mountain by His toe and extinguished his valour. This Lord Civan is entempled in Thiru-idai-maru-thoor. Those who hail Thiru-idai-maru-thoor and adore Lord Civan therein will get rid of their karma.

அரியொடு மலரவனென விவரடிமுடி
தெரிவகை யரியவர்திருவடி தொழுதெழ
எரிதரு முருவர்தமிடை மருதடைவுறல்
புரிதரு மனனவர்புகழ் மிகவுளதே. 9

அரியொடு மலரவன் என இவர் அடி முடி
தெரி வகை அரியவர், திருவடி தொழுது எழ,
எரிதரும் உருவர்தம் இடைமருது அடைவுஉறல்
புரிதரும் மனன்அவர் புகழ் மிக உளதே.

ariyoTu malaravan2 en2a ivar aTi muTi
teri vakai ariyavar, tiruvaTi tozutu eza,
eritarum uruvartam iTaimarutu aTaivu uRal
puritarum man2n2avar pukaz mika uLatE.

**பொருள்:** திருமாலுடன் பிரமனும் அடிமுடியைக் காண முயன்றபோது, அவர்களுக்குத் தெரிய முடியாதவாறு அரியவராக நின்றவர். அவர்கள் பணிந்து தொழுது எழுந்தபோது சோதிவடிவாகக் காட்சி தந்தவர். இப்பெருமான் எழுந்தருளிய இடைமருதூரை அடைய வேண்டும் என்ற உறுதியான மனம் உடையவர்களுக்கு மிகுந்த புகழ் உண்டு.

**குறிப்புரை:** இடைமருதை எய்த வேண்டும் என்ற சித்தம் உடையார்க்குப் புகழ் உண்டாம் என்கின்றது. தெரிவகை – ஆராய்ந்து அறிவதற்கு.

Both Thirumaal and Brahma attempted to see the Holy Feet of Lord Civan and failed, even as He was standing before them as a big column of fire. Later when they both repented for their haughtiness and worshipped Him, Civa graced them. Those who desire to reach Thiru-idai-maru-thoor offer worship to Lord Civan therein will get great fame.

குடைமயி லினதழை மருவிய வுருவினர்
உடைமரு துவரினர் பலசொல வுறவிலை
அடைமரு திருவினர் தொழுதெழு கழலவர்
இடைமரு தெனமனம் நினைவது மெழிலே. 10

குடை மயிலினதழை மருவிய உருவினர்,
உடை மரு துவரினர், பல சொல உறவுஇலை;
அடை மரு திருவினர் தொழுது எழு கழலவர்
இடைமருது என மனம் நினைவதும் எழிலே.

kuTai mayilin2a tazai maruviya uruvin2ar,
uTai maru tuvarin2ar, pala cola uRavu ilai;
aTai maru tiruvin2ar tozutu ezu kazulavar
iTai marutu en2a man2am nin2aivatum ezilE.

**பொருள்:** சமணர்கள் குடையையும், மயில் தோகையையும் கையில் வைத்திருப்பவர்கள். புத்தர்கள் காவி உடைய அணிந்திருப்பவர்கள். அவர்களின் பொருளற்ற சொற்களிடம் நமக்கு உறவு இல்லை என ஒதுக்கி விடுங்கள். இறை அருளை முழுமையாகப் பெற்ற அடியவர்களால் தொழப்பெறும் திருவடிகளை அடையது, சிவபெருமான் எழுந்தருளியுள்ள இடைமருதூர் ஆகும் என மனதில் நினைப்பது அழகைத் தரும்.

**குறிப்புரை:** புறச்சமயிகள் பலபேச அவற்றோடு நமக்கு உறவே இல்லை என்று அடைகின்ற சில புண்ணியசீலர்கள் வணங்குகின்ற திருவடியை உடையார் இடைமருது என எண்ணுவதே அழகு என்கின்றது. குடை மயிலினதழை மருவிய உருவினர் – குடையையும் மயில்பீலியையும் தழுவிய வடிவத்தை உடையவர்களாகிய சமணர்கள். துவர் – காவி. பல சொல என்றது அவற்றில் பொருளற்ற தன்மையையும் பொருந்தாக்கோளையும் புலப்படுக்க.

Samanars carry an umbrella and peacock feathers while the Buddhists wear cloth dyed in red ochre. They speak several diverse insignificant sayings. Eh virtuous devotees, please neglect their company. They possess natural resources because of the grace of Lord Civan. Please come and offer worship on the Holy Feet of Lord Civan of Thiru-idai-maru-thoor. To think and hail in your mind that Thiru-idai-maru-thoor is the famed town of Lord Civan will itself give you a radiant look and good appearance.

பொருகட லடைதருபுக லியர்தமிழொடு
விரகினன் விரிதருபொழி லிடைமருதினைப்
பரவிய வொருபதுப யிலவல்லவரிடர்
விரவிலர் வினையொடு வியனுலகுறவே. 11

பொருகடல் அடைதரு புகலியர் தமிழொடு
விரகினன், விரிதரு பொழில் இடைமருதினைப்
பரவிய ஒருபது பயிலவல்லவர் இடர்
விரவிலர், வினையொடு; வியன்உலகு உறவே.

porukaTal aTaitaru pukaliyar tamizoTu
virakin2an2, viritaru pozil iTaimarutin2aip
paraviya orupatu payila vallavar iTar
viravilar, vin2aiyoTu; viyan2 ulaku uRavE.

**பொருள்:** கரையைப் பொருதுகின்ற கடலை அணித்தாக உள்ள புகலிப்பதியில் தோன்றியவர். தமிழ் விரகனான ஞானசம்பந்தன் ஆகும். இவர் விரிந்த பொழில்களால் சூழப்பட்ட இடைமருதூரில் எழுந்தருளிய சிவபெருமானைப் போற்றிப் பாடினார். இத்திருப்பதிகத்தின் பத்துப் பாடல்களையும் ஓத வல்லவர்களுக்குத் துன்பம் வராது, வினையும் இராது. அவர்களுக்கு அகன்ற தேவர் உலகம் வாய்க்கப் பெறும்.

**குறிப்புரை:** திருஞானசம்பந்தப் பெருமான் இடைமருதைப் பரவிய இப்பாடல் பத்தும் பயிலவல்லார் வினையும் இலர்; அவற்றால் வரும் துன்பமும் இலர் எனப் பயன் விளக்கிற்று. வியன் உலகு – அகன்ற சுவர்க்கபூமி.

Pukali is the town where the waves of the seas nearly dash against the shores. Here the Tamil scholar Gnaanasambandan was born. He has sung this hymn on the Lord enshrined in Thiru-idai-maru-thoor which is surrounded by groves grown naturally. Those who can chant these ten verses will have no karma and sufferings. Also the broad eternal world will be theirs.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*122ஆம் பதிகம் முற்றிற்று*
End of 122nd Hymn

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

## 123. திருவலிவலம்

### திருத்தல வரலாறு:

50ஆம் பதிகம் பார்க்க.

### பதிக வரலாறு:

திருவாரூரை அடைந்த பிள்ளையார் புற்றிடங்கொண்ட புனிதரை வழிபட்டு, பற்றும் அன்பொடு பணிந்து இசைப்பதிகங்கள் பாடி, அடியார் கூட்டத்தோடும் அங்கிருந்தும் புறப்பட்டு, வளம் நிறைந்த வலிவலத்தை அடைந்து, மனத்துணை நாதரை வழிபட்டனர். 'பூவியல் புரிகுழல்' என்னும் இப்பதிகத்தை அருளிச் செய்தனர்.

## 123. THIRU-VALI-VALAM

### HISTORY OF THE PLACE

See 50th Hymn.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 123. திருவலிவலம் — 123. THIRU-VALI-VALAM

பண் : வியாழக்குறிஞ்சி
ராகம் : சௌராஷ்டிரம்

*Pann: Viyazha-k-kurinji*
*Raagam : Saurashtram*

பூவியல் புரிகுழல்வரி சிலைநிகர்நுதல்
ஏவியல் கணைபிணை யெதிர்விழி யுமையவள்
மேவிய திருவுருவுடை யவன்விரைமலர்
மாவியல் பொழில்வலி வலமுறை யிறையே. 1

பூ இயல் புரிகுழல்; வரிசிலை நிகர் நுதல்;
ஏ இயல் கணை, பிணை, எதிர் விழி; உமையவள்
மேவிய திருஉரு உடையவன் - விரைமலர்
மா இயல் பொழில் வலிவலம் உறை இறையே.

pU iyal purikuzal; varicilai nikar nutal;
E iyal kaNai, piNai, etir vizi; umaiyavaL
mEviya tiru uru uTaiyavan2--viraimalar
mA iyal pozil valivalam uRai iRaiyE.

**பொருள்:** உமையம்மை மலர்களை அணிந்த சுருண்ட கூந்தலை உடையவள். வரிந்து கட்டப்பெற்ற வில்லைப் போன்ற நெற்றியை உடையவள். செலுத்துதற்கு உரிய அம்பினைப் போலவும், மருட்சியை உடைய மானைப் போலவும் கண்களைப் பெற்றவள் உமையம்மை. இவ்வம்மையோடு கூடிய திருமேனியை உடையவர் சிவபெருமான் ஆவார். இப்பெருமான் மணம் கமழும் மலர்களையும் அவற்றில் தேன் உண்ணும் வண்டுகளையும் உடைய பொழில் சூழ்ந்த திருவலிவலத்தில் உறைகின்றார்.

**குறிப்புரை:** உமாதேவி விரும்பி எழுந்தருளிய திருமேனி உடையவன், வலிவம் உறை இறைவன் ஆவான் என்கின்றது. பூ இயல் புரி குழல் – பூக்களை அணிந்த பின்னப் பெற்ற கூந்தலையும், வரி சிலை நிகர் நுதல் – கட்டுக்களோடு கூடிய வில்லையொத்த நெற்றியையும் உடைய உமையவள் எனத் தனித்தனி கொண்டு இயைக்க. ஏவு இயல் கணை – செலுத்தப் பெற்ற பாணம். இதனைக் கண்ணுக்கு ஒப்பாகியது சென்று தைத்திடும் இயல்பு பற்றி. பிணை – பெண் மான் நோக்கு, ஆகு பெயர்; இதனைக் கூறியது மருட்சி பற்றி. மா இயல் பொழில் – மாமரங்கள் செறிந்த சோலை. வண்டு நிறைந்த சோலையுமாம்.

Umaa Devi, consort of Lord Civan desires and enjoys to be embedded on the left half of His body. This Lord Civan is enshrined at the temple in Thiru-vali-valam, which is surrounded by groves, full of rich mango trees and/or beetles. Umaa Devi wears fragrant flowers in her curling braided hair; her forehead resembles a bow. Her eyes are similar to the arrows which are ready to be shot. They look like the eyes of a deer.

இட்டமத மர்பொடியிசை தலினசைபெறு
பட்டவிர் பவளநன்மணி யெனஅணிபெறு
விட்டொ ளிர்திருவுருவுடை யவன்விரைமலர்
மட்டமர் பொழில்வலி வலமுறையிறையே. 2

இட்டம்அது அமர் பொடி இசைதலின், நசை பெறு
பட்டு அவிர் பவள நல்மணி எனஅணி பெறு
விட்டுஒளிர் திருஉரு உடையவன் - விரைமலர்
மட்டு அமர் பொழில் வலிவலம் உறை இறையே.

iTTam atu amar poTi icaitalin2, nacai peRu
paTTu avir pavaLa nalmaNi en2a aNi peRu
viTTu oLir tiru uru uTaiyavan2--viraimalar
maTTu amar pozil valivalam uRai iRaiyE.

**பொருள்:** சிவபெருமான் தனது திருமேனியில் விருப்பத்துடன் திருநீற்றை அணிந்துள்ளார். விரும்பி அணிகின்ற பட்டோடு, விளங்குகின்ற பவள மணி போன்று ஒளிவிடும் அழகிய ஒளிவீசுகின்ற திருமேனியை உடையவர். இப்பெருமான் மணம் கமழும் மலர்களில் தேனுடன் விளங்கும் பொழில் சூழ்ந்த திருவலிவலத்தில் உறைந்திருக்கின்றார்.

**குறிப்புரை:** செம்மேனியில் திருநீறு அணியப் பெற்றமையால் பட்டோடு விளங்குகின்ற பவளமணிபோல ஒளிவிடுகின்ற திருவுருவுடையவர் இந்நகர் இறை என்கின்றது. இட்டம் – விருப்பம். நசை – விருப்பம். பட்டு அவிர் பவள நன்மணி என – பட்டோடு விளங்குகின்ற பவழமணி என்று சொல்ல.

Lord Civan resides in Thiru-vali-valam, which is surrounded by fragrant and nectar filled flower groves. With much desire He smears the holy ashes all over His reddish body. This gives an appearance to His body as though He has worn silk dress over which coral gems have been embedded.

உருமலி கடல்கடைவுழி யுலகமருயிர்
வெருவுறு வகையெழுவிடம் வெளிமலையணி
கருமணி நிகர்களமுடை யவன்மிடைதரு
மருமலி பொழில்வலிவல முறையிறையே. 3

*உரு மலி கடல் கடைவுழி உலகு அமர் உயிர்*
*வெருஉறு வகை எழு விடம், வெளிமலை அணி*
*கருமணி நிகர் களம் உடையவன் - மிடைதரு*
*மரு மலி பொழில் வலிவலம் உறை இறையே.*

uru mali kaTal kaTaivuzi ulaku amar uyir
veru uRu vakai ezu viTam, veLimalai aNi
karumaNi nikar kaLam uTaiyavan2--miTaitaru
maru mali pozil valivalam uRai iRaiyE.

*பொருள்:* திருப்பாற்கடலைக் கடைந்தபோது, தேவர்களும் உலக உயிர்களும் அஞ்சுமாறு கடலிலிருந்து விடம் எழுந்தது. அந்த விடத்தை சிவபெருமான் விழுங்கினான். அதனால் அவனது கண்டம் நீலநிறமாக மாறியது. அவர் தனது திருமேனி முழுவதும் திருநீறு பூசி உள்ளதால் பட்டோடு விளங்கும் பவள மணி போல ஒளிவீசும் திருமேனியை உடையவனாகத் தோன்றுகின்றான். இவர் மணம் கமழும் பொழில்கள் நிறைந்துள்ள திருவலிவலத்தில் உறைந்திருக்கின்றார். வெள்ளிமலை நீறு தோய்ந்த திருமேனிக்கும் நீலமணி அவன் கழுத்தில் விளங்கும் கறைக்கும் உவமையாக அமைந்துள்ளது.

***குறிப்புரை:*** பாற்கடலைக் கடைந்த காலத்து, உலகத்து உயிர்கள் யாவும் அஞ்சும்படித் தோன்றிய விடத்தை அமுது செய்தமையால் வெள்ளி மலையணிந்த நீலமணியை ஒத்த கழுத்தை உடையவன் இந்நகர் இறை என்கின்றது. வெள்ளிமலை நீறு தோய்ந்த இறைவன் திருமேனிக்கும் நீலமணி அவன் கழுத்தில் விளங்கும் கறைக்கும் உவமை. மிடைதரு – நெருங்கிய. மரு – மணம்.

Lord Civan resides in Thiru-vali-valam which is surrounded by much fragrant smelling groves. He smears His body with holy ashes giving an appearance, as through He is a silver mountain. When the Devaas churned the ocean of milk there arose a very cruel and oppressive poison which made all the souls in the world tremble and fear death. At that, Lord Civan (without swallowing the poison) put it in His mouth and positioned it in His throat. This caused His neck to appear always in dark blue colour – the same as that of sapphire gem. Lord Civan now appeared as though He is a silver mountain wherein a blue sapphire gem has been fixed firmly in position in the neck area.

அனல்நிகர் சடையழல்வியுற வெனவரு
புனல்நிகழ் வதுமதிநனைபொறி யரவமும்
எனநினை வொடுவருமிது மெலமுடிமிசை
மனமுடை யவர்வலிவல முறையிறையே. 4

*அனல் நிகர் சடை அழல் அவி உற என வரு*
*புனல் நிகழ்வதும், மதி நனை பொறி அரவமும்*
*என நினைவொடு வரும்இதும், மெல முடிமிசை*
*மனம் உடையவர் - வலிவலம் உறை இறையே.*

an2al nikar caTai azal avi uRa en2a varu
pun2al nikazvatum, mati nan2ai poRi aravamum
en2a nin2aivoTu varum itum, mela muTimicai
man2am uTaiyavar--valivalam uRai iRaiyE.

**பொருள்:** செந்தழல் போன்ற சடையின் தீயை அவிக்க வருவது போன்ற தோற்றமுடைய கங்கையைக் கொண்டிருப்பவர் சிவபெருமான். அக்கங்கையில் நனைந்த புள்ளிகளை உடைய அரவமானது, பிறை மதியை விழுங்குவது போன்ற நினைப்புடன் உள்ளது. இந்தக் கோலத்துடன் விளங்கும் திருமுடியை உடையவர் சிவபெருமானே ஆகும் என்ற நினைப்புடன் அடியவர்கள் வாழும் சிறப்பினை உடையது திருவலிவலம் என்ற தலம்.

**குறிப்புரை:** முடிமீது மனமுடையவர் வலிவலமுறை இறைவர் என்கின்றது. அதற்குரிய ஏது கங்கையோ செந்தழல்போன்ற சடையின் தீயை அவிக்க வருவதுபோலப் பெருகிக் கொண்டிருக்கிறது. அக்கங்கையில் நனைந்த அரவமும் நம்மால் விழுங்கத்தக்க மதி என நினைவொடும் வருகின்றது. ஆதலால் இவை தருக்கும் பகையுமாறித் தத்தம் எல்லையில் ஒடுங்க இறைவன் எப்போதும் தலைமேற் சிந்தையராக இருக்கின்றார் என்ற நயந்தோன்றக் கூறியது, அனல் நிகர் சடை அழல் அவியுற – நெருப்பை ஒத்த சடையின் தீயானது தணிய. நனை பொறி அரவம் – நனைந்த படப்புள்ளிகளோடு கூடிய பாம்பு. நனை – கூரிய என்றுமாம்.

Lord Civan's matted hair looks like fire. Therefore the river Ganges flows into His head with intention to douse the fire. Dots like flower buds fill the hood of the snake which is fully drenched in the Ganges river, moves about to find and devour the moon. However the river and the snake remain calm and unmoved because of Lord Civan's grace. The sincere devotees who have in their minds these facts do live in large numbers in Thiru-vali-valam.

பிடியதனு ருவுமைகொள மிகுகரியது
வடிகொடு தனதடிவழிபடு மவரிடர்
கடிகணப திவரவருளினன் மிகுகொடை
வடிவினர் பயில்வலிவல முறையிறையே. 5

*பிடி அதன்உரு உமை கொள, மிகு கரி அது*
*வடிகொடு, தனது அடி வழிபடுமவர் இடர்*
*கடி, கணபதி வர அருளினன் - மிகு கொடை*
*வடிவினர் பயில் வலிவலம் உறை இறையே.*

piTi atan2 uru umai koLa, miku kari atu
vaTikoTu, tan2atu aTi vazipaTumavar iTar
kaTi, kaNapati vara aruLin2an2--miku koTai
vaTivin2ar payil valivalam uRai iRaiyE.

**பொருள்:** உமாதேவி பெண் யானை உருவம் கொள்ள, சிவபெருமான் ஆண் யானை உருவம் கொண்டார். இவர்களுக்குத் தம்மை வழிபடும் அடியவர்களின் துன்பத்தைப் போக்குவதற்கென்றே தெய்வத்தன்மை உடைய கணபதியைத் தோற்றுவித்து அருளினர். மிகுந்த வள்ளல் தன்மையே நமக்கு அழகைத் தரும் என நினைக்கும் வள்ளற் பெருமக்கள் வாழும் திருவலிவலத்தில் இப்பெருமான் உறைந்திருக்கின்றார்.

**குறிப்புரை:** உமாதேவி பெண் யானையின் வடிவுகொள்ள, ஆண் யானையின் வடிவத்தைத் தாம்கொண்டு விநாயகப் பெருமான் அவதரிக்கத் திருவுள்ளம்பற்றிய இறைவன் வலிவலநகரான் என்கின்றது. பிடி – பெண்யானை. கரி – ஆண்யானை. வடிகொடு – வடித்தைக் கொண்டு. கடி கணபதி – தெய்வத்தன்மையுடைய விநாயகப் பெருமான். கொடைவடிவினர் – வள்ளற் பெருமக்கள்.

To alleviate the sufferings of His devotees Lord Civan decided to create Lord Ganesa. With that intention, Umaa Devi converted herself into a female elephant and Lord Civa took the form of a male elephant. With this union, Lord Ganesa got incarnated. This Lord Civan resides in Thiru-vali-valam. In this city, virtuous philanthropists do live in large numbers who are firm in their conviction that charity will give them all happiness in their life without any sufferings.

தரைமுதலு லகினிலுயிர் புணர்தகைமிக
விரைமலி குழலுமையொடு விரவதுசெய்து
நரைதிரை கெடுதகையது அருளினனெழில்
வரைதிகழ் மதில்வலிவல முறையிறையே. 6

*தரை முதல் உலகினில் உயிர் புணர் தகை மிக,*
*விரை மலி குழல் உமையொடு விரவு அது செய்து,*
*நரைதிரை கெடு தகைஅது அருளினன் - எழில்*
*வரைதிகழ் மதில் வலிவலம் உறை இறையே.*

tarai mutal ulakin2il uyir puNar takai mika,
virai mali kuzal umaiyoTu viravu atu ceytu,
narai tirai keTu takai atu aruLin2an2--ezil
varai tikaz matil valivalam uRai iRaiyE.

**பொருள்:** மண் முதல் அனைத்து அண்டங்களில் வாழும் உயிர்கள் யாவும் ஆணும் பெண்ணுமாய்க்கூடி போகம் நுகரத் தாம் போகியாய் இருந்து மணம் மிக்க கூந்தலை உடைய உமாதேவியோடு பொருந்துகின்றான் சிவபெருமான். தன்னை வழிபடும் அடியவர்களுக்கு நரை, திரை, மூப்பு வராதவாறு என்றும் இளமையோடு இருக்க அருளுகின்றார். இப்பெருமான் அழகிய மலை போன்றுத் திகழும் மதில் சூழ்ந்த திருவலிவலத்தில் உறைந்திருக்கின்றார்.

**குறிப்புரை:** பிருதிவியண்டம் முதலான பல்வேறு அண்டங்களில் வாழும் உயிர்கள் யாவும் போகம் நுகரத் தாம் போகியாயிருந்து உமாதேவியோடு பொருந்துகின்ற இறைவன் இவன் என்கின்றது. சென்ற

திருப்பாடலில் உமை பெண் யானையாக, இவர் ஆண்யானையானார் என்ற வரலாற்றுக்கு ஏது கூறி ஐயம் அகற்றியது. புணர்தகை – புணர்ச்சியை எய்துவதற்காக. விரை – மணம். விரவது – கலத்தலை. தன்னை வழிபடுகின்ற அடியார்களுக்கு நரைதிரை முதலியனகெட என்றும் இளமையோடிருக்க அருளினன் என்பதாம்.

With the sole intention that all souls in the cosmos including this earth should enjoy fruition, Lord Civan conspicuously united with Umaa Devi, who has a very fragrant hair. This Lord Civan resides in Thiru-vali-valam, where the walls around the city are so tall as to resemble an attractive mountain. Those who offer worship to this Lord Civan enshrined in Thiru-vali-valam will be graced by Him. Their grey hair and skin wrinkling will perish from their body. They will be ever young.

நலிதரு தரைவரநடை வருமிடையவர்
பொலிதரு மடவரலியர் மனையதுபுகு
பலிகொள வருபவனெழில் மிகுதொழில்வளர்
வலிவரு மதில்வலிவல முறையிறையே. 7

*நலிதரு தரை வர நடை வரும் இடையவர்*
*பொலிதரு மடவரலியர் மனைஅது புகு*
*பலி கொள வருபவன்-எழில் மிகு தொழில் வளர்*
*வலி வரு மதில் வலிவலம் உறை இறையே.*

nalitaru tarai vara naTai varum iTaiyavar
politaru maTavaraliyar man2ai atu puku
pali koLa varupavan2--ezil miku tozil vaLar
vali varu matil valivalam uRai iRaiyE.

**பொருள்:** தரையில் நடந்து செல்வதற்கே அஞ்சுகின்ற மென்மையான பாதங்களையும், அசைகின்ற இடையையும் உடைய அழகிய தாருகாவன மகளிர் உறையும் வீடுகள் தோறும் சென்று பலியேற்க பிட்சாடனராய் வருபவர் சிவபெருமான் ஆகும். இப்பெருமான் எழில் மிகுந்ததும், கலை முதலான தொழில்கள் வளர்வதும், வலிமை மிகுந்ததுமான மதில்களால் சூழப்பட்டதுமான வலிவலத்தில் உறைந்திருக்கின்றார்.

*குறிப்புரை:* பூமியை மிதிப்பதற்கு அஞ்சும் மெல்லிய பாதமுடைய முனிபன்னியர் வீடுகள்தோறும் சென்று பலியேற்க வருபவன் வலிவலம் உறை இறை என்கின்றது. தரைவர நலிதரும் நடைவரும் இடையவர் எனக் கொண்டு கூட்டுக. மடவரலியர் – பெண்கள்.

Lord Civan is enshrined in Thiru-vali-valam. The walls all around this city are very strong and impregnable. Inside the city all kinds of creative and graceful art, science and skilled industry flourish, which gives the highest degree of aesthetic pleasure to the senses. Lord Civan of this place goes out as mendicant to the houses of Darukaa forest sages and begs for alms from their ladies. The wives of these sages are very handsome. Their swinging waist is so slender that their soft feet seem to be afraid even of treading on the ground (lest they should hurt).

இரவண னிருபதுகர மெழில்மலைதனின்
இரவண நினைதரவ வன்முடிபொடிசெய்து
இரவண மமர்பெயரருளின னகநெதி
இரவண நிகர்வலிவல முறையிறையே. 8

இரவணன் இருபதுகரம் எழில் மலைதனின்
இர வணம் நினைதர அவன் முடி பொடிசெய்து,
இரவணம் அமர் பெயர் அருளினன் - நகநெதி
இரவு அண நிகர் வலிவலம் உறை இறையே.

iravaNan2 irupatukaram ezil malaitan2in2
iravaNam nin2aitara avan2 muTi poTi ceytu,
iravaNam amar peyar aruLin2an2--nakaneti
iravu aNa nikar valivalam uRai iRaiyE.

**பொருள்:** இராவணன் தனது இருபது கரங்களைக் கொண்டு எழில் மிகுந்த கயிலை மலையை நகர்த்தி வைக்க எண்ணி, அதனைப் பெயர்த்தான். அவனுடைய இருபது கரங்களும் பத்துத் தலைகளும் பொடியாகுமாறு சிவபெருமான் அவனை நெரித்தார். அவன் பணிந்து இரந்து வேண்டி நின்றபோது, அவனுக்கு அருள் செய்து, இராவணன் என்ற பெயரையும் அருளிச் செய்தார். இப்பெருமான் தன்னைப் பணிந்து வழிபட்டு இரந்து நிற்கும் அடியவர்களுக்குக் கருணையாளனாக அருள் செய்ய, திருவலிவலத்தில் உறைந்திருக்கின்றார்.

**குறிப்புரை:** இராவணன் செருக்கடங்க, விரல் நுதியை யூன்றி அவன் இரக்க. மீட்டும் அருள் செய்தவன் இவன் என்கின்றது. இரவணன் – இராவணன்; எதுகை நோக்கி இடைகுறுகிற்று. இராவண்ணம் – இருக்காத வண்ணம். இரவணம் அமர் – அவன் அழுதலைப் பொருந்த. இரவு அண்ண நிகர் . . . . இறை – அடியார்கள் தத்தம் குறைகளைச் சொல்லி யாசிக்க அருளும் இறைவன்.

Whenever His devotees worship Him and communicate their deficiency (shortcomings) to Lord Civan and solicit His grace, He readily removes their sufferings and graces them. This Lord Civan is entempled in Thiru-vali-valam. He crushed Raavanan's twenty hands and ten heads and held him immovable under His beautiful mount Kailaas. Later when Raavanan repented and begged for pardon, Lord Civan graced him, granted him boons and conferred on him a new name Raavanan (He that cried out).

தேனமர் தருமலரணை பவன்வலிமிகும்
ஏனமதாய் நிலமகழரி யடிமுடி
தானணை யாவுருவுடை யவன்மிடைகொடி
வானணை மதில்வலிவல முறையிறையே. 9

*தேன் அமர்தரு மலர் அணைபவன், வலி மிகும்*
*ஏனம் அதுஆய் நிலம் அகழ் அரி, அடிமுடி*
*தான் அணையா உரு உடையவன்-மிடை கொடி*
*வான் அணை மதில் வலிவலம் உறை இறையே.*

tEn2 amartaru malar aNaipavan2, vali mikum
En2am atu Ay nilam akaz ari, aTi muTi
tAn2 aNaiyA uru uTaiyavan2--miTai koTi
vAn2 aNai matil valivalam uRai iRaiyE.

***பொருள்:*** தேன் நிறைந்த தாமரை மலர்மேல் உறைபவர் நான்முகன். வலிமை மிக்க பன்றி உருவினனாக நிலத்தை ஆழ்ந்து அகழ்ந்தவன் திருமால். இவர்கள் இருவரும் முடியையும் அடியையும் காண முடியாதவாறு ஓங்கி உயர்ந்த திருஉருவை உடையவர் சிவபெருமான் ஆகும். இப்பெருமான் வானத்தைச் சென்றடையுமாறு, நெருக்கிக் கட்டப்பட்ட கொடிகளை உடைய மதில்களால் சூழப்பட்ட திருவலிவலத்தில் உறைந்திருக்கின்றார்.

***குறிப்புரை:*** அயனும் மாலும் அறியாத வடிவுடையான் வலிவல நாதன் என்கின்றது. ஏனம் – பன்றி. மிடை – நெருங்கிய.

Though Brahma seated in the honey bearing lotus flower and Thirumaal who took the form of a very valiant boar and went on digging the earth, they both could not observe the head and feet of Lord Civan. This Civan is the one who then took the form of a big column of total fire. He is entempled in Thiru-vali-valam, where a good

number of flags have been closely fixed on the walls all around the city; the flags appear as though they are touching the sky.

இலைமலி தரமிகுதுவரு டையவர்களும்
நிலைமையிலு ணலுடையவர்களு நினைவது
தொலைவலி நெடுமறைதொ டர்வகையுருவினன்
மலைமலி மதில்வலிவல முறையிறையே. 10

*இலை மலிதர மிகு துவர்உடையவர்களும்,*
*நிலைமையில் உணல் உடையவர்களும், நினைவது*
*தொலை வலி நெடுமறை தொடர் வகை உருவினன் -*
*மலை மலி மதில் வலிவலம் உறை இறையே.*

ilai malitara miku tuvar uTaiyavarkaLum,
nilaimaiyil uNal uTaiyavarkaLum, nin2aivatu
tolai vali neTumaRai toTar vakai uruvin2an2--
malai mali matil valivalam uRai iRaiyE.

**பொருள்:** வாயில் வெற்றிலை மிகுந்து, துவர் ஆடையை உடுத்த புத்தர்களும், நின்று கொண்டு உண்ணும் சமணர்களும் நினைக்கும் நினைப்புக்கள் அழிந்துவிடுமாறு செய்தவர் சிவபெருமான். பெருமை மிக்க வேதங்கள் தன்னைத் தொடருமாறு செய்தருளிய உருவினனான சிவபெருமான் மலைபோன்ற மதில்களால் சூழப்பட்ட திருவலிவலத்தில் உறைந்திருக்கின்றார்.

**குறிப்புரை:** சமணர் புத்தர்களுடைய நினைப்புத் தொலைய. வேதம் தேடும் வடிவினன் வலிவலநாதன் என்கின்றது. இலை மலிதர மிகு துவர் உடையவர்கள் – வாயில் வெற்றிலை மிக. காவியுடுத்த புத்தர்கள். நிலைமையில் உணலுடையவர்கள் – நின்றபடியே விழுங்கும் தேரர்கள்.

Lord Civan is the one who quelled the bad thoughts and impressions of Buddhists who wore clothes dyed and squeezed in red ochre and that of Samanars who are in the habit of eating their food in a standing posture. But He is the one who made the famed Vedas follow His footsteps.

மன்னியவலி வலநகருறை யிறைவனை
இன்னியல்கழு மலநகரிறை யெழில்மறை
தன்னியல்கலை வலதமிழ் விரகனதுரை
உன்னியவொரு பதுமுயர் பொருள்தருமே. 11

மன்னிய வலிவலநகர் உறை இறைவனை,
இன் இயல் கழுமலநகர் இறை-எழில் மறை
தன் இயல் கலை வல தமிழ் விரகனது-உரை
உன்னிய ஒருபதும் உயர்பொருள் தருமே.

man2n2iya vali vala nakar uRai iRaivan2ai,
in2 iyal kazumala nakar iRai--ezil maRai
tan2 iyal kalai vala tamiz virakan2atu--urai
un2n2iya orupatum uyarporuL tarumE.

***பொருள்:*** அழகிய வேதங்களையும், எல்லாவித கலைகளையும் திருவருளால் தன்னியலாலேயே உணர்ந்த தமிழ் விரகன், கழுமல நாதனான ஞானசம்பந்தன் ஆகும். இவர் நிலைபேறுடைய வலிவலம் நகரில் உறையும் சிவபெருமானை எண்ணிப் பாடிய இத்திருப்பதிகப் பாடல்கள் பத்தும், உயர்வான வீடுபேறாகிய செல்வத்தைத் தரும்.

***குறிப்புரை:*** வலிவல நாதனைக் கழுமல நாதனாகிய ஞானசம்பந்தன் சொல்லிய இந்தப் பத்து உரைகளும் உயர்ந்த பொருளைத் தரும் என்கின்றது. எழில்மறை தன்னியல் கலைவல தமிழ்விரகன் – அழகிய வேதத்தையும், கலைகளையும் ஓதாதே தன்னியலாலலேயே திருவருள் துணைகொண்டு உணர்ந்த தமிழ் விரகன். உன்னிய – எண்ணிச் சொன்ன. உயர்பொருள் – வீடு.

Gnaanasambandan is a person of good conduct with agreeable nature, and is a skilled chief of Kazhumalam. By divine grace he became knowledgeable on all the famous four Vedas and other divine revelations without being consecrated by any outsider. He is a talented Tamil scholar. He sang this high divine hymns on Lord Civan of the eternal Thiru-vali-valam which will lead to ultimate salvation.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*123ஆம் பதிகம் முற்றிற்று*
End of 123rd Hymn

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# 124. திருவீழிமிழலை

## திருத்தல வரலாறு:

4ஆம் பதிகம் பார்க்க.

# 124. THIRU-VEEZHI-MIZHALAI

## HISTORY OF THE PLACE

See 4th Hymn.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 124. திருவீழிமிழலை

## 124. THIRU-VEEZHI-MIZHALAI

பண் : வியாழக்குறிஞ்சி
ராகம் : சௌராஷ்டிரம்

*Pann: Viyazha-k-kurinji*
***Raagam : Saurashtram***

அலர்மகள் மலிதரஅவனி யில்நிகழ்பவர்
மலர்மலி குழலுமைதனை யிடமகிழ்பவர்
நலமலி யுருவுடையவர் நகர்மிகுபுகழ்
நிலமலி மிழலையை நினையவலவரே. 1

*அலர்மகள் மலிதர, அவனியில் நிகழ்பவர் -*
*மலர் மலி குழல் உமைதனை இடம் மகிழ்பவர்,*
*நலம் மலி உரு உடையவர், நகர் மிகு புகழ்*
*நிலம் மலி மிழலையை நினைய வலவரே.*

alarmakaL malitara, avan2iyil nikazpavar--
malar mali kuzal umaitan2ai iTam makizpavar,
nalam mali uru uTaiyavar, nakar miku pukaz
nilam mali mizalaiyai nin2aiya vallavarE.

**பொருள்:** அழகு மிகுந்த வடிவினராகிய சிவபெருமான், மலர் நிறைந்த கூந்தலை உடைய உமையம்மையை தனது இடது பக்கத்தில் கொண்டு மகிழ்ந்திருப்பவர். இப்பெருமான் எழுந்தருளியுள்ள நகரமானது, பூமியில் மிகுந்த புகழுடைய திருவீழிமிழலை ஆகும்.

இத்தலத்தை நினைந்து வணங்க வல்லவர்கள், மலர்மீது வீற்றிருக்கும் திருமகள் அம்சமாக, உலகில் செல்வம் மிகுந்து விளங்குவார்கள்.

**குறிப்புரை:** திருவீழிமிழலையை நினையவல்லவரே சீதேவி சிறக்க இப்பூமியில் வாழ்பவராவர் என்கின்றது. அலர்மகள் – லக்ஷ்மி. அவனி – பூமி. இடம் – இடப்பாகம். நலம் – அழகு. உமைதனை இடம் மகிழ்பவர் உருவுடையவர் நகராகிய வீழிமிழலையை நினைபவர் அலர் மகள் மலிதர அவனியில் நிகழ்பவர் எனக்கூட்டிப் பொருள் காண்க.

Lord Civan with His handsome sacred body is very happy to accommodate His consort Umaa Devi on the left half of His body. Her hair is fully decorated with myriads of fragrant blooming flowers. He is housed in Thiru-veezhi-mizhalai, the most famous city of this world. Those who contemplate in their minds about Thiru-veezhi-mizhalai and hail the Lord therein will acquire plenty of personal riches by the grace of Lakshmi, the goddess of wealth.

இருநில மிதன்மிசையெழில் பெறுமுருவினர்
கருமலி தருமிகுபுவி முதலுலகினில்
இருளறு மதியினரிமை யவர்தொழுதெழு
நிருபமன் மிழலையை நினையவலவரே.

2

இரு நிலம் இதன்மிசை எழில் பெறும் உருவினர் -
கரு மலிதரு மிகு புவி முதல் உலகினில்
இருள் அறு மதியினர், இமையவர் தொழுது எழு
நிருபமன், மிழலையை நினைய வலவரே.

iru nilam itan2 micai ezil peRum uruvin2ar--
karu malitaru miku puvi mutal ulakin2il
iruL aRu matiyin2ar, imaiyavar tozutu ezu
nirupaman2, mizalaiyai nin2aiya vallavarE.

**பொருள்:** எண்ணற்ற பிறப்புக்கள் கொண்ட இந்தப் பூமியிலும், மற்ற அண்டங்களில் உள்ள உலகங்களிலும், ஆணவத்தால் வரும் மல இருளைச், சந்திரனின் ஒளியைப்போல் மல நீக்கம் செய்பவர் சிவபெருமான் ஆகும். ஒப்பற்ற இப்பெருமானை ஆணவ மலம் நீக்கப் பெற்ற ஞானிகளும் தேவர்களும் தொழுது எழுகின்றனர். இப்பெருமான் எழுந்தருளி இருக்கும் திருவீழிமிழலையை நினைந்து வணங்க வல்லவர்கள் பரந்த இவ்வுலகில் அழகிய உருவத்துடன் விளங்குவார்கள்.

**குறிப்புரை:** மண் முதலாகிய அண்டத்தில் மயக்கமலமற்ற உண்மை ஞானிகளும் தேவர்களும் தொழும் உவமனிலியாகிய இறைவன் மிழலையை நினைய வல்லவர்களே இவ்வுலகத்து அழகான உருவுடையவர்கள் என்கின்றது. எழில் – அழகு. கரு மலி தரு மிகு புவி – பிறவி மிக்க இப்பூமி. இருள் – ஆணவம். நிருபமன் – உவமம் இல்லாதவர், ஒப்பிலி என்பதாம்.

Venerable sages are free from the impurities of their souls; and have clarity of mental vision. These sages of this world as well as sages from other cosmos and the Devaas, worship the incomparable Lord Civan enshrined in Thiru-veezhi-mizhalai. Those devotees who are capable to contemplate in their minds on Thiru-veezhi-mizhalai and hail the Lord therein will be the best looking persons in the entire cosmos.

கலைமகள் தலைமகனி வனெனவருபவர்
அலைமலி தருபுனலர வொடுநகுதலை
இலைமலி யிதழியுமிசை தருசடையினர் 3
நிலைமலி மிழலையை நினையவலவரே.

"கலைமகள் தலைமகன், இவன்" என வருபவர் -
அலை மலிதரு புனல், அரவொடு, நகுதலை,
இலை மலி இதழியும், இசைதரு சடையினர்
நிலை மலி மிழலையை நினைய வலவரே.

"kalaimakaL talaimakan2, ivan2" en2a varupavar--
alai malitaru pun2al, aravoTu, nakutalai,
ilai mali itaziyum, icaitaru caTaiyin2ar
nilai mali mizalaiyai nin2aiya vallavarE.

**பொருள்:** அலைகள் நிறைந்த கங்கை நதி, பாம்பு, ஒளிவிடும் மண்டை ஓடு, வில்வ இலை மிகுதியான கொன்றை மலர் ஆகியன பொருந்திய சடையை உடையவர் சிவபெருமானாகும். இப்பெருமான் நிலை பெற்று விளங்கும் திருவீழிமிழலைய நினைந்து வணங்க வல்லவர்கள் கல்விநலம் சிறப்பாக வாய்க்கப் பெற்று, 'கலைமகளின் தலைமகன் இவன்' என்று ஒவ்வொருவரும் சொல்லத்தக்கத் தகுதியைப் பெறுவர்.

**குறிப்புரை:** மிழலையை நினைவார் கலைமகள் கணவனாவார் என்கின்றது. நகுதலை – கபாலம். இலைமலி இதழி – இலைகளோடு நிறைந்த கொன்றை. இலை – இதழுமாம். நிலை – நிலைபேறு; அழியாமை.

Lord Civan bedecks His matted hair with river Ganges full of waves, snake, skull, bael leaves and myriads of cassia flowers and is entempled in the eternal city of Thiru-veezhi-mizhalai. Those devotees who are able to contemplate in their minds on the permanency of Thiru-veezhi-mizhalai and hail the Lord therein, will be praised by one and all as the Chief follower of Saraswathi, the goddess of all knowledge; they will become erudite scholars in all branches of learning.

மாடமர்சன மகிழ்தருமன முடையவர்
காடமர்கழு துகளவைமுழ வொடுமிசை
பாடலின்நவில் பவர்மிகுதரு முலகினில்
நீடமர்மிழ லையைநினைய வலவரே. 4

*மாடு அமர் சனம் மகிழ்தரு மனம் உடையவர் -*
*காடு அமர் கழுதுகள் அவை முழவொடும் இசை*
*பாடலின் நவில்பவர் மிகுதரும் உலகினில்*
*நீடு அமர் மிழலையை நினைய வலவரே.*

mATu amar can2am makiztaru man2am uTaiyavar--
kATu amar kazutukaL avai muzavoTum icai
pATalin2 navilpavar mikutarum ulakin2il
nITu amar mizalaiyai nin2aiya vallavarE.

**பொருள்:** சுடுகாட்டில், பேய்கள் இரைச்சலிடவும், முழவு முதலிய கருவிகள் ஒலிக்கவும் இசை பாடி, நடனம் ஆடுவதை விரும்புகின்றவர் சிவபெருமான் ஆகும். இப்பெருமான் இனிமையாக எழுந்தருளியிருப்பதும், இவ்வுலகில் பெருமையோடு நீண்ட காலமாக விளங்கும் தலம் திருவீழிமிழலை ஆகும். இதனை நினைந்து வணங்க வல்லவர்கள் அன்புடைய மனமுடையவர்களாகவும், அருகில் விரும்பி உறையும் மகிழும் மனம் உடையவராகவும், சுற்றத்தாருடன் நீண்ட காலம் மகிழ்வுடன் வாழ்வர்.

**குறிப்புரை:** பேயோடாடும் பெம்மான், இவ்வுலகில் இனிதமரும் மிழலையை நினைபவர் சுற்றம் மகிழ இருப்பர் என்கின்றது. மாடு – பக்கம். மாடமர்சனம் – சுற்றல். காடு – சுடுகாடு. கழுது – பேய்.

Lord Civan performs dance with songs in the burning ground; the ghouls living therein make heavy noise; the large loud drums and such sound instruments roar. This Lord Civan is attracted by and is entempled in the city of Thiru-veezhi-mizhalai, which

is remaining as a famous and stable city (for long in this world). Those relative who willingly live nearly will be delegated to come to know about the devotees, who are capable of contemplating in their minds about the famous city of Thiru-veezhi-mizhalai and hail the Lord therein.

புகழ்மகள் துணையினர்புரி குழலுமைதனை
இகழ்வுசெய் தவனுடையெழின் மறைவழிவளர்
முகமதுசிதை தரமுனிவுசெய் தவன்மிகு 5
நிகழ்தரு மிழலையை நினையவலவரே.

புகழ்மகள் துணையினர் - புரிகுழல் உமைதனை
இகழ்வு செய்தவன் உடை எழில் மறைவழி வளர்
முகம்அது சிதைதர முனிவு செய்தவன் மிகு
நிகழ்தரு மிழலையை நினைய வலவரே.

pukazmakaL tuNaiyin2ar--purikuzal umaitan2ai
ikazvu ceytavan2 uTai ezil maRaivazi vaLar
mukam atu citaitara mun2ivu ceytavan2 miku
nikaztaru mizalaiyai nin2aiya vallavarE.

**பொருள்:** சுருண்ட கூந்தலை உடைய உமையம்மையைப் பிரமன் இகழ்வு செய்தான். அழகிய வேதஞ் சொல்லும் வாயை உடைய பிரமனுடைய தலையைச் சிதைக்கச் செய்தவர் சிவபெருமானாகும். இப்பெருமான் எழுந்தருளியிருக்கும் திருவீழிமிழலையை நினைந்து வணங்க வல்லவர்கள், புகழ் பெற்ற மகளைப் பொருந்துவர்.

**குறிப்புரை:** உமாதேவியை இகழ்ந்த பிரமனது சிரத்தைக் கொய்த சிவபெருமான் எழுந்தருளிய இத்தலத்தை நினையவல்லவர் கீர்த்தி மாதைப் பொருந்துவர் என்கின்றது. இகழ்வு செய்தவன் உடை எழில் மறைவழி வளர்முகம் - இகழ்ந்த பிரமனது அழகிய வேதநெறி வளரும் முகத்தை; என்றது வேதஞ்சொல்லும் வாயையுடைய தலையை என்பதாம்.

Umaa Devi, the illustrious daughter of Himaalayan King is the Consort of Lord Civan. Her curved hair gives an extraordinary beauty of her stature. Brahma, the creator of the world, despised Umaa Devi due to his egoism and forgot that he is only a tutelage of Lord Civa. Lord Civa could not bear this insult to His Consort. He, therefore, wanted to teach him a lesson and correct Him. He, therefore, plucked one of

his five heads from his body and used it as his begging bowl. Brahma lost his head and face which was till then chanting the Vedaas. He lost everything of his goodhood. He realized his mistake and apologised. He is, thereafter called four headed creator (நான்முகப் படைப்புக் கடவுள்). Those who praise this city of Thiru-veezhi-mizhalai and offer worship to Lord Civan entempled therein will lead a noble life having a virtuous consort of divine knowledge.

அன்றினரரி யெனவருப வரிதினில்
ஒன்றியதிரி புரமொருநொடி யினிலெரி
சென்றுகொள் வகைசிறுமுறுவல் கொடொளிபெற
நின்றவன் மிழலையை நினையவலவரே. 6

*அன்றினர் அரி என வருபவர்-அரிதினில்*
*ஒன்றிய திரிபுரம் ஒருநொடியினில் எரி*
*சென்று கொள் வகை சிறுமுறுவல்கொடு ஒளி பெற*
*நின்றவன் மிழலையை நினைய வலவரே.*

an2Rin2ar ari en2a varupavar-aritin2il
on2Riya tiripuram orunoTiyin2il eri
cen2Ru koL vakai ciRu muRuvalkoTu oLi peRa
nin2Ravan2 mizalaiyai nin2aiya vallavarE.

**பொருள்:** தவம் செய்து அரிதாகப் பெற்ற ஒன்றுபட்ட முப்புரங்களைத் தேவர்களின் வேண்டுகோளின்படி, ஒரு நொடியில் எரிந்து சாம்பலாகிப் போகுமாறு, புன்முறுவல் செய்து, ஒளி பெற நின்று புகழ் பெற்றவர் சிவபெருமான் ஆகும். இப்பெருமான் எழுந்தருளியுள்ள திருவீழிமிழலையை நினைந்து வணங்க வல்லவர்கள், பகைவர்களாகிய யானைகட்குச் சிங்கம் போன்று கம்பீரமாக வலிமையோடு விளங்குவர்.

**குறிப்புரை:** திரிபுரம் எரித்த சிவபெருமானுடைய இந்நகரை நினைய வல்லவர் பகைவர்களாகிய யானைகட்குச் சிங்கம் போல்பவர் என்கின்றது. அன்றினர் – பகைவர். அரி – சிங்கம். சிறுமுறுவல் – புன்னகை.

The hostile Asuraas by performing a lot of penance and prayer obtained the rare three citadels coupled with one another. They were then doing a lot of havoc to Devaas. Therefore, the Devaas solicited protection against these Asuraas, by praying to Lord Civan. Lord Civan just saw the citadels and laughed. Within a matter of a second,

they were burnt and completely destroyed. This famous Lord Civan is entempled in Thiru-veezhi-mizhalai. Those devotees who are capable of contemplating in their minds about the fame of the Thiru-veezhi-mizhalai city and hail Lord Civan therein, will become skilled and pwerful persons to their enemies much like a male lion.

கரம்பயில் கொடையினர் கடிமலரயனதொர்
சிரம்பயில் அறவெறிசிவ னுறைசெழுநகர்
வரம்பயில்கலை பலமறைமுறை யறநெறி
நிரம்பினர் மிழலையை நினையவலவரே. 7

*கரம் பயில் கொடையினர்-கடிமலர் அயனது ஓர்*
*சிரம் பயில் அற எறி சிவன் உறை செழு நகர்,*
*வரம் பயில் கலைபல மறை முறை அறநெறி*
*நிரம்பினர், மிழலையை நினைய வலவரே.*

karam payil koTaiyin2ar--kaTimalar ayan2atu or
ciram payilvu aRa eRi civan2 uRai cezu nakar,
varam payil kalaipala maRai muRai aRaneRi
nirampin2ar, mizalaiyai nin2aiya vallavarE.

**பொருள்:** மலர்மேல் வீற்றிருக்கும் பிரமனின் தலைகளில் ஒன்றை அவனது உடலில் பொருந்தாவண்ணம் கொய்தவர் சிவபெருமான் ஆகும். இப்பெருமான் எழுந்தருளி இருக்கும் வளமையான நகரம் திருவீழிமிழலை ஆகும். இங்கு, மேன்மை மிக்கக் கலைகள் பலவற்றோடு, வேதநெறிகளையும், அறநெறிகளையும் முறையாகப் பயின்ற சான்றோர்கள் நிரம்பி உள்ளனர். இத்தலத்தை நினைந்து வணங்க வல்லவர்கள், பலகாலம் இடைவிடாது கொடுக்கும் வள்ளல் தன்மை உடைய உள்ளத்தைப் பெறுவர்.

**குறிப்புரை:** மிழலை நினைவார் வள்ளலாவார் என்கிறது. கரம் பயில் கொடையினர் – கை பலகாலும் பயின்ற வள்ளன்மையை உடையவர் ஆவர். கடிமலர் – மணமுள்ள மலர். பயில்வு அற எறி சிவன் எனப் பிரிக்க. வரம் – மேன்மை.

Lord Civan once chopped off and completely severed one head of Brahma who is seated in fragrant blooming lotus flower, and annulled his ego. This Lord Civan is entempled in the fertile and flourishing city Thiru-veezhi-mizhalai. Scholars who are well versed in all famous treatises and in the rules of Vedas and who follow the path of virtue and righteousness do live here in large numbers. Those devotees who are

capable of contemplating in their minds on all good things about Thiru-veezhi-mizhalai and adore Lord Civan therein, will become very munificent in their heart and practise charity all the time.

ஒருக்கியவுணர் வினோடொளி நெறிசெலுமவர்
அரக்கனன்மணி முடியொரு பதுமிருபது
கரக்கனநெரி தரமலரடி விரல்கொடு
நெருக்கினன் மிழலையை நினையவலவரே. 8

*ஒருக்கிய உணர்வினோடு ஒளிநெறி செலுமவர் -*
*அரக்கன் நல்மணிமுடிஒருபதும் இருபது-*
*கரக்கனம் நெரிதர, மலர் அடிவிரல்கொடு*
*நெருக்கினன் மிழலையை நினைய வலவரே.*

orukkiya uNarvin2oTu oLineRi celumavar--
arakkan2 nalmaNi muTi orupatum irupatu-
karakkan2am neritara, malar aTiviral koTu
nerukkin2an2 mizalaiyai nin2aiya vallavarE.

**பொருள்:** அரக்கனான இராவணனின் கிரீடம் அணிந்த பத்துத் தலைகளும், இருபது தோள்களும் நெரியுமாறு, தனது மலர் போன்ற திருவடி விரலால் ஊன்றியவர் சிவபெருமான் ஆகும். இப்பெருமான் எழுந்தருளியிருக்கும் திருவீழிமிழலையை நினைந்து வணங்க வல்லவர்கள் ஒன்றுபட்ட சிந்தனை உடையவர்களாய் ஒளி நெறியாகிய ஞான மார்க்கத்தில் திகழ்பவர் ஆவார்கள்.

**குறிப்புரை:** மிழலையை நினைவார் ஒன்றுபட்ட உணர்வோடு ஞானமார்க்கத்தை நாடுவர் என்கின்றது. ஒருக்கிய – ஒன்றுபட்ட ஒளிநெறி – சிவஞானமார்க்க. கரக்கனம் – கைகளாகிய கூட்டம்.

Lord Civan slightly pressed His mount Kailas by His tender flower like toe and crushed Raavanan's ten heads crowned with gems and his twenty hands. This Lord Civan is entempled in Thiru-veezhi-mizhalai. Those devotees who are capable of contemplating on this, and praising in their minds on this famed city Thiru-veezhi-mizhalai, and adore Lord Civan entempled therein will proceed unitedly with single minded consciousness through the bright religious course, to acquire the knowledge of god (*சிவஞானம்*).

அடியவர்குழு மிடஅவனியில் நிகழ்பவர்
கடிமலரய னரிகருதரு வகைதழல்
வடிவுருவியல் பினொடுலகுகள் நிறைதரு
நெடியவன் மிழலையை நினையவலவரே. 9

*அடியவர் குழுமிட அவனியில் நிகழ்பவர் -*
*கடிமலர் அயன் அரி கருது அருவகை தழல்-*
*வடிவு உருஇயல்பினொடு உலகுகள் நிறைதரு*
*நெடியவன் மிழலையை நினைய வலவரே.*

aTiyavar kuzumiTa avan2iyil nikazpavar--
kaTimalar ayan2 ari karuta(a)ru vakai tazal-
vaTivu uru iyal pin2oTu ulakukaL niRaitaru
neTiyavan2 mizalaiyai nin2aiya vallavarE.

**பொருள்:** மணம் மிக்க தாமரை மலர்மேல் வீற்றிருக்கும் பிரமனும், திருமாலும் நினைதற்கு அரியா வகையில், சிவபெருமான் சோதி வடிவினராக அனைத்து உலகமும் நிறைந்தருளிய பெரியோனாக விளங்கினார். இப்பெருமான் எழுந்தருளியிருக்கும் திருவீழிமிழலையை நினைந்து வணங்க வல்லவர்கள், சிவனடியார்கள் பலர், தங்களைச் சூழ உலகில் இனிது வாழ்வர்.

**குறிப்புரை:** இந்நகரை நினைவார் அடியார் கூட்டத்தோடு அவனியில் நிகழ்பவர் என்கின்றது. குழுமிட – கூட. கருதருவகை – தியானிக்க முடியாத வண்ணம். உலகுகள் நிறைதரு நெடியவன் என்றது திருமாலும் நெடியவனாயினும் அவன் நின்ற இடமும் காலமும் நீங்க ஏனைய இடத்தும் எக்காலத்தும் நிறைந்தான் அல்லன்; சிவன் என்றும் எங்கும் பேரொளியாய் நிறைந்தான் என்பது விளக்க வந்தது.

The Supreme Lord Civan pervaded all the worlds in the form of a big blaze. Brahma residing in fragrant lotus flower and Thirumaal were unable to comprehend and reach at Him. This Lord Civan abides in Thiru-veezhi-mizhalai. Those devotees who are capable of contemplating on this city and praising in their minds about this famed Thiru-veezhi-mizhalai and adore Lord Civan entempled therein will lead an affluent and blessed life surrounded by many servitors.

மன்மதனென வொளிபெறுமவர் மருதமர்
வன்மலர்துவ ருடையவர் களுமதியிலர்
துன்மதியம ணர்கள்தொடர் வருமிகுபுகழ்
நின்மலன் மிழலையை நினையவலவரே. 10

***மன்மதன் என ஒளி பெறுமவர்-மருது அமர்***
***வன் மலர் துவர்உடையவர்களும், மதிஇலர்***
***துன்மதி அமணர்கள், தொடர்வு அரு மிகு புகழ்***
***நின்மலன் மிழலையை நினைய வலவரே.***

man2matan2 en2a oLi peRumavar--marutu amar
van2 malar tuvar uTaiyavarkaLum, mati ilar
tun2mati amaNarkaL, toTarvu aru miku pukaz
nin2malan2 mizalaiyai nin2aiya vallavarE.

**பொருள்:** மருத மரத்தின் வலிய மலரால் ஊட்டப் பெற்ற காவி ஆடை உடுத்திய புத்தர்கள் மதியற்றவர்கள். சமணர்கள் துன்மதியாளர்கள். இவர்களால் தொடர்பு கொள்ள முடியாத அரியவர் சிவபெருமான் ஆகும். மிகுந்த புகழுடைய இப்பெருமான் எழுந்தருளியிருக்கும் திருவீழிமிழலையை நினைந்து வணங்க வல்லவர்கள் மன்மதனைப் போன்று ஒளிவீசுகின்ற அழகினைப் பெறுவார்கள்.

**குறிப்புரை:** புத்தர்கள் மதியிலிகள்; சமணர்களோ துன்மதிகள்; இந்த இருவகையாராலும் தொடர்பரிய புகழுடைய இறைவன் மிழலையை நினையவல்லவர் மன்மதன்போல அழகு பெறுவர் என்கின்றது. மருது அமர் வன்மலர் துவர் உடையவர் – மருத மலரால் ஊட்டிய காவியாடையை உடையவர்கள்.

Buddhists wearing the ruddy ochre hued robe are senseless folks. Jains are unintelligent. Lord Civan, the most famous Supreme Being, is well beyond the comprehension of these two. This Lord Civan is entempled in Thiru-veezhi-mizhalai. Those devotees who are capable of contemplating on this city, extolling it in their minds and adore Lord Civan entempled therein will shine brightly like Manmathan, the god of love (cupid – *மன்மதன்*).

நித்திலன் மிழலையை நிகரிலிபுகலியுள்
வித்தகமறைமலி தமிழ்விர கனமொழி
பத்தியில்வரு வனபத்திவை பயில்வொடு
கற்றுவல் லவருலகினி லடியவரே. 11

நித்திலன் மிழலையை, நிகர்இலி புகலியுள்
வித்தகமறை மலி தமிழ்விரகன மொழி
பத்தியில் வருவன பத்துஇவை பயில்வொடு
கற்று வல்லவர் உலகினில் அடியவரே.

nittilan2 mizalaiyai, nikar ili pukaliyuL
vittakamaRai mali tamizvirakan2a mozi
pattiyil varuvan2a pattu ivai payilvoTu
kaRRu vallavar ulakin2il aTiyavarE.

**பொருள்:** நிகரற்ற புகலிப் பதியில் வேதங்களிலும், தமிழ் இலக்கண இலக்கியங்களிலும் வல்ல தமிழ் விரகனான ஞான சம்பந்தன், முத்தைப் போன்று ஒளிவீசும் சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் திருவீழிமிழலையைப் போற்றிப் பாடினார். பேரன்பு நிறைந்து பக்தியுடன் அருளிய இத்திருப்பதிகத்தை மனதில் பதித்து ஓதவல்லவர்கள் உலகத்தில் சிறந்த சிவனடியார்கள் ஆவார்கள்.

**குறிப்புரை:** அன்பால் விளைந்த இப்பாடல்கள் பத்தையும் வல்லவர் உலகில் சிறந்த அடியாராவர் என்கின்றது. நித்திலன் – முத்துப் போன்றவன். பத்தியில் வருவன என்பது பிறப்பால் விளைந்தன அன்று; அன்பால் வருவன என்றதாம். அடியவராதலைக் காட்டிலும் சிறந்த பேறு இல்லாமையால் ஒவ்வொரு பாடல்தோறும் ஒவ்வொரு பயன் கூறிவந்த சுவாமிகள் இப்பதிகப் பயனாக அடியராவார் என்றார்கள். இதனைக் காட்டிலும் சிறந்த பேறு இல்லை என்பதனைத் தெரிவிக்க.

Lord Civan shines bright like a pearl (gem). He resides in Thiru-veezhi-mizhalai. This Lord is celebrated by Gnaanasambandan who hails from the incomparable Pukali city. He is an adept in the four Vedas, in Tamil literature and in Tamil grammar. With sincere devotion he sang this hymn on Lord Civan of Thiru-veezhi-mizhalai. Those who can study and practise these ten verses will become the most blessed devotees of Lord Civan.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*124ஆம் பதிகம் முற்றிற்று*
End of 124th Hymn

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# 125. திருச்சிவபுரம்

## திருத்தல வரலாறு:

21ஆம் பதிகம் பார்க்க.

# 125. THIRU-CH-CHIVA-PURAM

## HISTORY OF THE PLACE

See 21st Hymn.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 125. திருச்சிவபுரம்

## 125. THIRU-CH-CHIVA-PURAM

பண் : வியாழக்குறிஞ்சி – திருவிராகம்
ராகம் : சௌராஷ்டிரம்

*Pann: Viyazha-k-kurinji*
*Raagam : Saurashtram*

கலைமலியக லல்குலரிவை தனுருவினன்
முலைமலிதரு திருவுருவ மதுடையவன்
சிலைமலிமதில் பொதிசிவபுர நகர்தொழ
இலைநலிவினை யிருமையு மிடர்கெடுமே. 1

கலை மலி அகல் அல்குல் அரிவைதன் உருவினன்
முலை மலிதரு திருஉருவம்அது உடையவன்,
சிலை மலி மதில் பொதி சிவபுரநகர் தொழ,
இலை, நலி வினை; இருமையும் இடர் கெடுமே.

kalai mali akal alkul arivaitan2 uruvin2an2,
mulai malitaru tiru uruvam atu uTaiyavan2,
cilai mali matil poti civapuranakar toza,
ilai, nali vin2ai; irumaiyum iTar keTumE.

**பொருள்:** மேகலை பொருந்திய அகன்ற அல்குலை உடையவள் உமையம்மை. இறைவன் அவளை இடப்பாகமாக பொருந்திய திருவினன். அதனால் ஒரு கூறில் நகில் தோன்றும் திருவுருவை உடையவன். அச்சிவபிரான் கருங்கற்களால் இயன்ற மதில்களால் பொதியப்பட்டுள்ள சிவபுரநகரில் எழுந்தருளியுள்ளான். அந்நகரைத் தொழுதால் நம்மை நலியும் வினைகள் இல்லை. இருமையிலும் இடர் கெடும்.

**குறிப்புரை:** தனது திருமேனியிலேயே உமையையும் உடையவன்; அதனால் ஒருபாகத்தை முலை விளங்கும் உருவம் உடையவன். அவனது சிவபுரநகரைத் தொழ வருத்தும் வினை இல்லை. இருமையும் இடர்கெடும் என்கின்றது. கலை – ஆடை. அரிவை – உமாதேவி. நலிவினை இலை இடர் இருமையும் கெடும் எனக் கூட்டுக.

Lord Civan holds on the left half of His body, His consort Umaa Devi whose waist covered over with jewels. Therefore on His body at one side He has the breast of a woman. This Lord is enshrined in Thiru-ch-chiva-puram, encircled by fort walls constructed by black granite boulders. If we hail this city and adore Lord Civan therein, we will not be tortured by our karma. In both our births our hardships will cease.

படரொளிசடை யினன்விடையி னன்மதிலவை
சுடரெரிகொளு வியசிவனவ னுறைபதி
திடலிடுபுனல் வயல்சிவபுர மடையநம் 2
இடர்கெடு முயர்கதிபெ றுவதுதிடனே.

படர் ஒளி சடையினன், விடையினன், மதில்அவை
சுடர் எரி கொளுவிய சிவன்அவன், உறை பதி
திடல் இடு புனல் வயல் சிவபுரம் அடைய, நம்
இடர் கெடும்; உயர்கதி பெறுவது திடனே.

paTar oLi caTaiyin2an2, viTaiyin2an2, matil avai
cuTar eri koLuviya civan2 avan2, uRai pati
tiTal iTu pun2al vayal civapuram aTaiya, nam
iTar keTum; uyarkati peRuvatu tiTan2E.

**பொருள்:** சிவபிரான் ஒளி விரிந்த சடையினன். விடை ஊர்தியன். அசுரர்களின் மும்மதில்களை எரிகொள்ளுமாறு செய்தழித்தவன். அவன் உறையும் பதியானது, இடையிடையே திடலைக் கொண்டதும், நீர் சூழ்ந்த வயல்களை உடையதும் ஆகிய சிவபுரமாகும். அதனை அடைந்து தொழுதால் நம் இடர் கெடும். உயர்கதி பெறுவது உறுதி.

**குறிப்புரை:** ஒளி பொருந்திய சடையினன். இடபத்தை உடையவன். திரிபுரமெரித்த வீரன் உறைபதி சிவபுரம். அதனை அடைய நம் துன்பம் தொலையும். உயர்கதி பெறுவது உறுதி என்கின்றது. திடல் – மேடு.

Lord Civan has bright and expansive matted hair. The bull is His vehicle. He destroyed the three forts of the (adversary) Asuraas in fire. This Lord Civan is entempled in Thiru-ch-chiva-puram. This city has a number of fertile and water filled

fields. In between the fields mounds are there. If we reach this city and hail Lord Civan entempled therein, we will be freed from any hardship. It is definite we will reach salvation.

வரைதிரிதர வரவகடழ லெழவரு
நுரைதருகடல் விடநுகர்பவ னெழில்திகழ்
திரைபொருபுன லரிசில தடைசிவபுரம்
உரைதரு மடியவருயர் கதியினரே. 3

வரை திரிதர, அரவு அகடு அழல் எழ, வரு
நுரைதரு கடல்விடம் நுகர்பவன் - எழில் திகழ்
திரை பொரு புனல் அரிசிலது அடை - சிவபுரம்
உரைதரும் அடியவர் உயர்கதியினரே.

varai tiritara, aravu akaTu azal eza, varu
nurai taru kaTal viTam nukarpavan2--ezil tikaz
tirai poru pun2al aricil atu aTai--civapuram
urai tarum aTiyavar uyarkatiyin2arE.

**பொருள்:** மந்தரமலை மத்தாகச் சுழன்றது. அதில் கயிறாகச் சுற்றியது வாசுகி என்னும் பாம்பு. அதன் வயிற்றிலிருந்து அழலாகத் தோன்றி நுரையுடன் வெளிப்பட்டது விடம். ஆலகாலம் என்னும் அந்நஞ்சினை உண்டவன் சிவபெருமான். அவன் விளங்கும் தலம் சிவபுரம் ஆகும். அழகு விளங்கக் கரையில் மோதும் நீர் நிறைந்த அரிசிலாற்றங்கரையில் விளங்குவது. சிவபுரம் ஆகும். அதன் பெயரைக் கூறுபவர் உயர்கதிகளைப் பெறுவர்.

**குறிப்புரை:** மந்தர மலை சுற்ற, வாசுகியுன் உடல் அழலெழ வந்த நுரையோடு கூடிய விடத்தை நுகர்ந்தவனது சிவபுரத்தைப் புகழ்பவர் உயர்கதியினர் என்கின்றது. வரை – மந்தரமலை. வரைதிரிதர அரவு அகடு அழல் எழ வரு நுரை தரு கடல் விடம் நுகர்பவன் எனவும், எழில் திகழ் திரைபொரு புனல் அரிசிலது அடை சிவபுரம் எனவும் பிரித்துப் பொருள் கொள்க.

Asuraas and Devas went on churning the ocean of milk, using the mount Mēru (மேருமலை) as the churning staff and the snake called Vaasuki (வாசுகி என்ற பாம்பு) as the rope with which to churn the ocean. The pain experienced by the snake in its body caused it to vomit foam containing poison that looked like fire. This poison combined with the poison that come out of the ocean called Aalakaala poison (ஆலகால விடம்) posed a view as though it will destroy the whole world. The Asuraas and Devas ran helter-skelter on all directions and prostrated before Civan and prayed to save them.

Lord Civan then asked Sundarar to bring the poison and placed it in His mouth, and without swallowing, He positioned it in His throat. Every body was saved from death. This Lord Civan is entempled in Thiru-ch-chiva-puram, where the river Arisilaaru (அரிசிலாறு) is flowing always with full of water. The waves of the river dash against the banks giving beautiful scenery to the entire area. Those who utter the name of this city and offer worship to Lord Civan therein will attain final beatitude.

துணிவுடைய வர்சுடுபொடியி னருடலடு
பிணியடைவி லர்பிறவியு மறவிசிறுவர்
தணிவுடைய வர்பயில்சிவ புரமருவிய
மணிமிடன தடியிணை தொழுமவரே. 4

துணிவு உடையவர்; சுடுபொடியினர்; உடல் அடு
பிணி அடைவு இலர்; பிறவியும் அற விசிறுவர் -
தணிவு உடையவர் பயில் சிவபுரம் மருவிய
மணிமிடனது அடி இணை தொழும் அவரே.

tuNivu uTaiyavar; cuTupoTiyin2ar; uTal aTu
piNi aTaivu ilar; piRaviyum aRa viciRuvar--
tiNivu uTaiyavar payil civapuram maruviya
maNimiTaRan2atu aTi iNai tozumavarE.

**பொருள்:** அடக்கமுடைய மக்கள் வாழுமிடம் சிவபுரம் ஆகும். அங்கு எழுந்தருளியவன் நீலமணி போலும் மிடற்றினை உடைய சிவபிரான். அவன் திருவடிகளை வணங்குவோர் துணிபுடையவர் ஆவார். திருநீறு பூசும் அடியவர் ஆவர். உடலை வருத்தும் பிணிகளை அடையார். பிறவியும் நீங்கப் பெறுவர்.

**குறிப்புரை:** அடங்கிய மனத்து அடியவர்கள் பயில்கின்ற சிவபுரஞ் சேர்ந்த நீலகண்டப் பெருமானது திருவடியைத் தொழுபவர்கள் துணிவு உடையவர்; நீற்றினர்; பிணியிலர்; பிறவியும் அறப்பெறுவர் என்கின்றது. உடல் அடு பிணி – உடலில் வருத்துகின்ற நோய். விசிறுவர் – வீசுவர். தணிவு – பணிவு. மணி – நீலம்.

Devotees well known for humility reside in Thiru-ch-chiva-puram. They are courageous too. They smear the holy ashes on all the specified sixteen places in their body. They will have no disease that hurts the body. They will have no next births. They will have high status in their life. They are people who worship the Holy Feet of the dark blue throated Lord Civan.

மறையவன்மதி யவன்மலைய வன்நிலையவன்
நிறையவனுமை யவள்மகிழ் நடநவில்பவன்
இறையவனி மையவர்பணி கொடுசிவபுரம்
உறைவெனவுடை யவனெமையு டையவனே. 5

*மறையவன், மதியவன், மலையவன், நிலையவன்,*
*நிறையவன், உமையவள் மகிழ் நடம் நவில்பவன்,*
*இறையவன் - இமையவர் பணிகொடு சிவபுரம்*
*உறைவு என உடையவன், எமை உடையவனே.*

maRaiyavan2, matiyavan2, malaiyavan2, nilaiyavan2,
niRaiyavan2, umaiyavaL makiz naTam navilpavan2,
iRaiyavan2--imaiyavar paNikoTu civapuram
uRaivu en2a uTaiyavan2, emai uTaiyavan2E.

**பொருள்:** தேவர்கள் செய்யும் பணிவிடைகளை ஏற்றவன் சிவபிரான். சிவபுரத்தைத் தனது உறைவிடமாகக் கொண்டு, எம்மை அடிமையாகக் கொண்டவன். அவன் வேதங்களை அருளியவன். பிறை சூடியவன். கயிலை மலையைத் தனது இடமாகக் கொண்டவன். நிலைபேறு உடையவன். எங்கும் நிறைந்தவன். உமையம்மை கண்டு மகிழும் நடனத்தைப் புரிபவன். எல்லோருக்கும் தலைவன் ஆவான்.

**குறிப்புரை:** சிவபுரம் உறைபவன் எம்மையும் ஆளாக உடையவன் என்கின்றது. நிலை – அழியாமை. உறைவு – உறையும் இடம்.

Lord Civan who is entempled in Thiru-ch-chiva-puram accepts the services of Devas. He took us as His servitors. He was the one who composed the Vedas. He wears the crescent moon on His matted hair. He has the mount Kailas as His abode. He is omnipotent and omnipresent in His nature. He performs the cosmic dance while Umaa Devi looks on and enjoys it with happiness. He is our Lord Supreme.

முதிர்சடையிள மதிநதிபுனல் பதிவுசெய்
ததிர்கழலொலி செயவருநட நவில்பவன்
எதிர்பவர்புர மெய்தஇணையி லியணைபதி
சதிர்பெறு முளமுடையவர் சிவபுரமே. 6

*முதிர்சடை இளமதி நதிபுனல் பதிவுசெய்து;*
*அதிர்கழல் ஒலிசெய, அருநடம் நவில்பவன்;*
*எதிர்பவர் புரம் எய்த இணைஇலி; அணை பதி -*
*சதிர் பெறும் உளம் உடையவர் சிவபுரமே.*

mutir caTai iLamati natipun2al pativuceytu,
atirkazal oliceya, arunaTam navilpavan2;
etirpavar puram eyta iNai ili; aNai pati--
catir peRum uLam uTaiyavar civapuramE.

**பொருள்:** சிவபெருமான் தனது முதிர்ந்த சடையின்மீது இளம்பிறை, கங்கை நதி ஆகியவற்றைப் பொருந்த அணிந்தவன். காலில் அசையும் கழல்களை அணிந்தவன். அவை ஒலிக்குமாறு அரிய நடனம் புரிபவன். தன்னை எதிர்த்த அசுரர்களின் முப்புரங்களை எய்து அளித்த ஒப்பற்றவன். இந்தச் சிவபிரான் எழுந்தருளிய தலம், திறமையான மனம் உடைய அடியவர்கள் வாழும் சிவபுரம் ஆகும்.

**குறிப்புரை:** முதிர் சடையிலே மதியையும் கங்கையையும் பதியச் செய்து நடம் செய்பவன். திரிபுரம் எரித்த சிவன்; அவன் உறைபதி சிவபுரம் என்கின்றது. எதிர்பவர் – பகைவர். இணையிலி – ஒப்பற்றவன். சதிர் – சாமர்த்தியம்.

Lord Civan bedecks His hoary matted hair with the young crescent moon as well as the river Ganges. He performs the rare cosmic dance with resounding anklets on His Holy Feet. He is the peerless Lord who destroyed the three citadels of the hostile Asuraas with His arrow. He is enshrined in Thiru-ch-chiva-puram where accomplished devotees do live in large numbers.

வடிவுடைமலை மகள்சலமக ளுடனமர்
பொடிபடுமுழை யதள்பொலி திருவுருவினன்
செடிபடுபலி திரிசிவனுறை சிவபுரம் 7
அடைதரு மடியவரரு வினையிலரே.

வடிவு உடை மலைமகள் சலமகள்உடன் அமர் -
பொடிபடும் உழை அதள் பொலி - திருஉருவினன்,
செடி படு பலி திரி சிவன், உறை சிவபுரம்
அடைதரும் அடியவர் அருவினை இலரே.

vaTivu uTai malaimakaL calamakaL uTan2 amar--
poTipaTum uzai ataL poli--tiru uruvin2an2,
ceTi paTu pali tiri civan2, uRai civapuram
aTaitarum aTiyavar aruvin2ai ilarE.

**பொருள்:** அழகிய வடிவினைக் கொண்டவள் மலை மகள். அவளுடன் நீர்மகளாகிய கங்கையையும் உடனாகக் கொண்டவன். புள்ளி பொருந்திய மானினது தோல் விளங்கும் அழகிய வடிவினை உடையவன். முடை நாற்றம் வீசும் மண்டையோட்டில் பிச்சை ஏற்றுத்

திரிபவன். அத்தகைய சிவபிரான் உறையும் சிவபுரத்தை அடையும் அடியவர்கள் நீங்குதற்குரிய வினைகள் இலர் ஆவர்.

**குறிப்புரை:** மலைமகளும் அலைமகளும் உடனுறையும் உருவுடையவன். பலிக்குத்திரிபவன் உறைபதி சிவபுரம்; அதனை அடைபவர் வினையிலர் ஆவர் என்கின்றது. சலமகள் – கங்கை. உழை அதள் – மான்தோல். செடிபடு பலி – முடைநாற்றம் கமழும் பிச்சை. செடி – ஆகு பெயராய்த் தலைஓட்டைக் குறித்தது.

Lord Civan wearing the skin of a dotted deer appears very handsome especially when He is joined with the good-looking daughter of the mountain and Ganga Devi (River Ganges). He goes round and accepts alms in the human skull which emits stench. This Lord Civan resides in Thiru-ch-chiva-puram. Those devotees who reach this place and worship Him will not be affected by their bad karma, the effect of which does not easily leave one otherwise (ordinarily).

கரமிருபதுமுடி யொருபது முடையவன்
உரநெரிதர வரையடர்வு செய்தவனுறை
பரனென அடியவர்பணி தருசிவபுர
நகரதுபுகு தல்நம்மு யர்கதியதுவே. 8

*கரம் இருபதும் முடிஒருபதும் உடையவன்*
*உரம் நெரிதர, வரை அடர்வு செய்தவன், உறை*
*பரன் என அடியவர் பணிதரு, சிவபுர-*
*நகர்அது புகுதல் நம் உயர்கதி அதுவே.*

karam irupatum muTi orupatum uTaiyavan2
uram neritara, varai aTarvu ceytavan2, uRai
paran2 en2a aTiyavar paNitaru, civapura-
nakar atu pukutal nam uyarkati atuvE.

***பொருள்:*** இருபது கரங்களையும், பத்துத் தலைகளையும் உடையவன் இராவணன். அவன் மார்பு நெரியுமாறு கயிலை மலையில் அடர்த்தருளியவன் சிவபிரான். அவன் உறைவது சிவபுரம். "மேலான பரம்பொருள் இவனே ஆவான்" என அடியவர் வழிபாடு செய்வதும் இவனே ஆவான். அச்சிவபுரத்தை அடைதல் நமக்கு உயர்கதியைத் தரும்.

**குறிப்புரை:** சிவபுரம் புகுதலே நமக்கு உயர்கதியாம் என்கின்றது. உரம் – மார்பு. அடர்வு – நெருக்குதல். சிவபுரநகர் அது புகுதல் நம் உயர் கதியதுவே எனப்பிரிக்க.

Lord Civan slightly pressed His mount Kailas by His toe. The ten headed and twenty handed Raavanan who was then lifting the mountain got his chest squeezed and crushed. Devotees of Lord Civan hail Him declaring that He is the only one who is the highest (Supreme) Being, and offer worship to Him. This Lord Civan resides in Thiru-ch-chiva-puram. Reaching this place and adoring Him will give us the highest state of salvation.

அன்றியலுருவு கொளரியய னெனுமவர்
சென்றளவிட லரியவனுறை சிவபுரம்
என்றிருபொழு துமுன்வழிபடு மவர்துயர்
ஒன்றிலர்பு கழொடுமுடை யரிவ்வுலகே. 9

"அன்று இயல் உருவு கொள் அரி அயன் எனுமவர்
சென்று அளவிடல் அரியவன் உறை சிவபுரம்"
என்று இருபொழுது முன் வழிபடுமவர் துயர்
ஒன்று இலர்; பு கழொடும் உடையர், இவ் உலகே.

"an2Ru iyal uruvu koL ari ayan2 en2umavar
cen2Ru aLaviTal ariyavan2 uRai civapuram"
en2Ru iru pozutum mun2 vazipaTumavar tuyar
on2Ru ilar; pukazoTum uTaiyar, iv ulakE.

**பொருள்:** தங்கள் செயலுக்கு மாறுபட்ட தன்மையோடு கூடிய பன்றி, அன்னம் ஆகிய வடிவங்களைக் கொண்டனர் திருமால் மற்றும் பிரமன் ஆகியோர். அவர்கள் சென்று அளவிடுதற்கு அரியவனாய் ஓங்கி நின்றவன் சிவபிரான். அவன் உறையுமிடம் சிவபுரம் என்று இரு பொழுதுகளிலும் நினைந்து வழிபடும் அடியவர்கள் ஒரு துன்பமும் இலராவர். இவ்வுலகில் புகழோடும் பொருந்தி வாழ்வர்.

**குறிப்புரை:** சிவபுரத்தை இருவேளையிலும் வழிபடுவார் துன்பஞ்சேரார். இவ்வுலகிற் புகழொடும் பொருந்துவர் என்கின்றது. அன்று இயல் உருவு – கோபித்த இயல்பினை உடைய வடிவம், சென்று அளவிடல் அரியவன் உறை சிவபுரம் எனப் பிரிக்க.

Contrary to their normal nature, Thirumaal and Brahma took the forms of a hog and swan with anguished minds and went out in search of Lord Civan's feet and head. They both were unable to comprehend Civapiraan who stretched Himself into an indefinable heights. Those who think, both in the morning and in the evening, that

Thiru-ch-chiva-puram is the place where Lord Civan is enshrined and offer worship to Him will have no sufferings at all. They will also earn good fame in this world.

புத்தரொட மணர்களறவு ரைபுறவுரை
வித்தகமொழி கிலவிடையுடை யடிகள்தம்
இத்தவமுயல்வு றிலிறைவன சிவபுரம்
மெய்த்தகவழி படல்விழு மியகுணமே. 10

புத்தரொடு அமணர்கள் அறஉரை புறஉரை
வித்தகம் ஒழிகில; விடை உடையடிகள்தம்
இத் தவம் முயல்வு உறில், இறைவன சிவபுரம்
மெய்த்தக வழிபடல் விழுமிய குணமே.

puttaroTu amaNarkaL aRa urai puRa urai
vittakam ozikila; viTai uTai aTikaL tam
it tavam muyalvu uRil, iRaivan2a civapuram
meyttaka vazipaTal vizumiya kuNamE.

**பொருள்:** புத்தர்களும், சமணர்களும் கூறுவன அறவுரைக்குப் புறம்பான உரைகளாகும். அவை அறிவுடைமைக்கு ஏற்ப மொழியாதவை. அவற்றை விடுக. விடையூர்தியை உடைய தலைவன் சிவபெருமான். அவனை நோக்கிச் செய்யும் தவத்தை முயற்சியோடு மேற்கொள்ளுங்கள். அவ்விறைவனது சிவபுரத்தைச் சென்றடைந்து வழிபடுதல் சிறந்த குணங்களை உங்கட்குத் தரும்.

**குறிப்புரை:** புறச் சமயிகளுடைய புறவுரைகள் வித்தகம் ஒழியா; ஆதலால் சிவபுரத்தைத் தொழுதல் உங்கட்குச் சிறந்த குணமாம் என்கின்றது. அவர்களது அறவுரையாகத் தோன்றுவன யாவும் புறம்பான உரைகளாம். அதுவேயும் அன்றிச் சதுரப்பாடு உடையனவும் அல்ல. மெய்த்தக – உண்மையாக.

The Buddhists and the Jains speak words which are negative to religious and moral instructions. Their preachings are not conducive to virtue. Do not listen to the words of those people. Shun them. Then if you take up the efforts to do penance and prayer on Civan who is our Lord having the bull as His vehicle, thereafter you go to Thiru-ch-chiva-puram where He is enshrined and worship Him. This will give you very much help and good admirable character in your life.

புந்தியர்மறை நவில்புகலி மன்ஞானசம்
பந்தனதமிழ் கொடுசிவ புரநகருறை
எந்தையையுரை செய்தவிசை மொழிபவர்வினை
சிந்திமுனுறவு யர்கதி பெறுவர்களே. 11

புந்தியர் மறை நவில் புகலி மன் ஞானசம்-
பந்தன தமிழ்கொடு, சிவபுரநகர் உறை
எந்தையை உரை செய்த இசை மொழிபவர், வினை
சிந்தி முன் உற உயர்கதி பெறுவர்களே.

puntiyar maRai navil pukali man2 njAn2acam-
pantan2a tamizkoTu, civapuranakar uRai
entaiyai uraiceyta icai mozipavar, vin2ai
cinti mun2 uRa, uyarkati peRuvarkaLE.#

**பொருள்:** அறிவுடையவர்கள் ஓதும் வேதங்களை ஓதி உணர்ந்த புகலி மன்னன் ஞானசம்பந்தன். இவன் தமிழைக் கொண்டு சிவபுர நகரில் உறையும் எந்தையைப் போற்றி உரைசெய்த இசைமாலையாகும். இதுவே இப்பதிகத்தை இசையோடு ஓதி வழிபடுபவர் வினைகள் நீங்கும். உயர்கதியும் பெறுவார்கள்.

**குறிப்புரை:** திருஞானசம்பந்தப் பெருமான் சிவபுர நகருறை எந்தையைச் சொன்ன இப்பதிகத்தை இசையோடு மொழிபவர்கள் வினையைக் கெடுத்து உயர்கதி அடைவார்கள் என்கின்றது. புந்தியர் – புத்தியை உடையவர்கள். சிந்தி – கெடுத்து.

Divine scholars in Pukali city chant the Vedas every day. This same Vedas was well known to Gnaanasambandan who also sang this during long periods. Now Gnaanasambandan hailed Lord Civan of Thiru-ch-chiva-puram and sang this holy hymn on Him in Tamil in the proper musical note. Those who recite this garland of verses will find their karma dissipating and they will attain the eternal salvation.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*125ஆம் பதிகம் முற்றிற்று*
End of 125th Hymn

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# 126. திருக்கழுமலம்

## திருத்தல வரலாறு:

1ஆம் பதிகம் பார்க்க.

# 126. THIRU-K-KAZHU-MALAM

## HISTORY OF THE PLACE

See 1st Hymn.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 126. திருக்கழுமலம் — 126. THIRU-K-KAZHU-MALAM

பண் : வியாழக்குறிஞ்சி – திருத்தாளச்சதி — *Pann: Viyazha-k-kurinji*
ராகம் : சௌராஷ்டிரம் — *Raagam : Saurashtram*

பந்தத்தால்வந் தெப்பால்பயின்று நின்றவும்பரப்
பாலேசேர்வாயேனோர் கான்பயில்கண முநிவர்களுஞ்
சிந்தித்தேவந்திப் பச்சிலம்பின்மங் கைதன்னொடுஞ்
சேர்வார்நாள் நாள்நீள்கயிலைத் திகழ்தருபரிசதெலாஞ்
சந்தித்தேயிந்தப் பார்சனங்கள் நின்றுதங்கணாற்
றாமேகாணாவாழ் வாரத்தகவு செய்தவனதிடங்
கந்தத்தாலெண்டிக் குங்கமழ்ந்தி லங்குசந்தனக்
காடார்பூவார் சீர்மேவுங்கழு மலவளநகரே. 1

பந்தத்தால் வந்து எப்பால் பயின்று நின்ற உம்பர், அப்
பாலே சேர்வு ஆய் ஏனோர், கான் பயில் கணமுனிவர்களும்,
சிந்தித்தே வந்திப்பச், சிலம்பின்மங்கைதன்னொடும்
சேர்வார், நாள்நாள் நீள்கயிலைத் திகழ்தரு பரிசுஅதுஎலாம்
சந்தித்தே, இந்தப் பார்சனங்கள் நின்று தம் கணால்-
தாமே காணா வாழ்வார் அத் தகவு செய்தவனது இடம் -
கந்தத்தால் எண்திக்கும் கமழ்ந்து இலங்கு சந்தனக் -
காடு ஆர், பூ ஆர், சீர் மேவும் கழுமல வள நகரே.

pantattAl vantu eppAl payin2Ru nin2Ra umpar, ap
pAlE cErvu Ay En2Or, kAn2 payil kaNamun2ivarkaLum,
cintittE vantippa, cilampin2 magkai tan2n2oTum
cErvAr, nALnAL nILkayilait tikaztaru paricu atu elAm
cantittE, intap pArcan2agkaL nin2Ru tam kaNAl--
tAmE kANA vAzvAr at takavu ceytavan2atu iTam--
kantattAl eNtikkum kamazntu ilagku cantan2ak
kATu Ar, pU Ar, cIr mEvum kazumala vaLa nakarE.

***பொருள்:*** வினைவயத்தால் பந்தப்பட்டு மண்ணுலகம் வந்து எல்லா இடங்களிலும் பொருந்தி, அவ்விடமே தமக்கு இருப்பிடமாய் வாழும் தேவர்களும், காடுகளில் வாழும் முனிவர்களும் தங்கள் மனத்தால், சிவபெருமானாரை ஆழ்ந்து தியானிக்கின்றனர். இப்பெருமான் சிலம்பினை அணிந்துள்ள உமையம்மையுடன் நாளும் நாளும் நீண்டு உயர்ந்த திருக்கயிலை மலையில் எழுந்தருளுகின்றார். இந்தத் திருக்கோலக் காட்சிகளைப் பெருங்கருணையோடு இப்பெருமான் அருளுவது எதற்கு என்றால், இவ்வுலகத்து மக்கள் தங்கள் கண்களால் நேரிலேயே தம்மைக் காணும் சிறப்பினைப் பெறுவதற்காகவே! இந்தக் காட்சியைக் கண்டு தாம் எடுத்தப் பிறவியின் பயனை அடைந்து தகவினைப் புரியும் இறைவனது இடம் எது என்றால், அது, வளமையான கழுமலம் என்ற சீகாழிப்பதி ஆகும். இந்த நகரம் எட்டுத் திசைகளிலும் மணம் கமழ்ந்து விளங்கும் மலர்களை உடைய சந்தனக் காடுகள் நிறைந்து செழிக்கும் புகழ் பெற்ற நகரமாகும்.

***குறிப்புரை:*** தேவர்களும் முனிவர்களும் தியானிக்க உமையோடு பொருந்தி, கயிலையில் எழுந்தருளியிருக்கின்ற காட்சியை இந்த மண்ணுலகத்தவர்களும் தம் கண்ணாலே கண்டு வாழ அருளியவனது இடம் கழுமல வளநகர் என்கின்றது. பந்தத்தால் வந்து எப்பால் பயின்று நின்ற உம்பர் என்றது ஆணவமலக் கட்டினால் வந்து எவ்விடத்தும் உறைகின்ற தேவர்கள் வினையால் பந்திக்கப் பெற்ற இந்திரன் பிரமன் முதலியோர் கழுமலம் வந்து பூசித்தமை போல்வன. அப்பாலே சேர்வாய் ஏனோர் – அப்பாலும் அடிசேர்ந்தார்களாய சிவஞானிகள். புறம்பான நெறிகளிற் சேர்ந்த பிறர் என்றுமாம். கான் பயில் கண முனிவர்கள் – காட்டுறை வாழ்க்கையை உடைய கூட்டமான முனிவர்கள். சிலம்பு – மலை. ஈண்டு இமயம். நாள்நாள் நீள் கயிலைத் திகழ்தரு பரிசது எலாம் – நாள்தோறும் திருக்கயிலை மலையில் வீற்றிருக்கும் திருவோலக்கச் சிறப்பெல்லாவற்றையும். பார் – பூமி. தாமே காணா – தாங்களே கண்டு; என்றது அவ்வளவு எளிமை காட்டி நின்றது. கந்தம் – மணம்.

Devaas descend down to the earth because of their past bad karma and loiter around many places and finally settle down in certain cities as their abode. The other

saints living in forest area join hands with these Devas and contemplate in their minds on Lord Civan and worship Him. This Lord Civan's permanent abode is mount Kailas where He is enshrined along with His consort, the ankleted Paarvathi Devi, daughter of the mountain king and holds a durbar (திருவோலக்கம்) daily to enable the celestial devotees to worship Him in an orderly manner. In a compassionate ground Lord Civan decided that all the divine celebrations of His durbar should also be seen and enjoyed and worshipped by the people on this earth, by themselves and by their own eyes. With such a merciful decision He came to the earth and is gracefully enshrined in the Thiru-k-kazhu-malam city. This highly fertile and developing city is surrounded by groves full of a variety of fragrant flower plants and trees. The forest groves full of sandalwood trees also flourish in the adjacent areas of this city. The fragrance arising from these groves spread out in all the eight directions of this city.

**Note:** Thiru-volak-kam (திருவோலக்கம்) = Durbar; the assembly of devotees in rows before a deity.

பிச்சைக்கேயிச் சித்துப்பிசைந் தணிந்தவெண்பொடிப்
பீடார்நீடார் மாடாரும்பிறை நுதலரிவையொடும்
உச்சத்தானச்சிப் போல்தொடர்ந்த டர்ந்தவெங்கணே
றூராவூராநீள் வீதிப்பயில்வொடு மொலிசெயிசை
வச்சத்தானச்சுச் சேர்வடங்கொள் கொங்கைமங்கைமார்
வாராநேரேமாலா கும்வசிவல வவனதிடங்
கச்சத்தான்மெச் சிப்பூக்கலந்திலங்கு வண்டினங்
காரார்காரார் நீள்சோலைக் கழுமலவளநகரே. 2

பிச்சைக்கே இச்சித்து, பிசைந்து அணிந்த வெண்பொடிப்
பீடு ஆர் நீடு ஆர் மாடு ஆரும் பிறைநுதல் அரிவையொடும்,
உச்சத்தான் நச்சிப் போல் தொடர்ந்து அடர்ந்த வெங் கண் ஏறு
ஊராஊரா, நீள்வீதிப் பயில்வொடும் ஒலிசெய் இசை
வச்சத்தால் நச்சுச் சேர் வடம் கொள் கொங்கை மங்கைமார்
வாரா, நேரே மால் ஆகும் வசி வல அவனது இடம் -
கச்சத்தான் மெச்சிப் பூக் கலந்து இலங்கு வண்டுஇனம்
கார் ஆர் கார் ஆர் நீள் சோலைக் கழுமல வள நகரே.

piccaikkE iccittu, picaintu aNinta veNpoTip
pITu Ar nITu Ar mATu Arum piRainutal arivaiyoTum,
uccattAn2 naccip pOl toTarntu aTarnta veg kaN ERu
UrAUrA, nILvItip payilvoTum olicey icai
vaccattAl naccuc cEr vaTam koL kogkai magkaimAr
vArA, nErE mAl Akum vaci vala avan2atu iTam--
kaccattAn2 meccip pUk kalantu ilagku vaNTu in2am kAr Ar
kAr Ar nIL cOlaik kazumala vaLa nakarE.

**பொருள்:** சிவபெருமான் பிச்சை ஏற்பதை விரும்புகின்றவர். திருவெண்ணீற்றை நீரில் குழைத்துப் பூசியிருப்பவர். மிகுந்த பெருமை பொருந்தியவர். புகழால் விரிந்திருப்பவர். பிறை போன்ற நெற்றியை உடைய உமையம்மையை இடப்பாகத்தில் கொண்டிருப்பவர். உச்சிப் பொழுதினை விரும்பி விடையேற்றின்மீது அமர்ந்து, ஊர்ந்து ஊர்ந்து, சிவந்த கண்களுடன் ஊர்களில் உள்ள நீண்ட வீதிகளில் இசை பாடிக்கொண்டு திரிபவர். இவ்விதம் செய்வதால், நச்சுதலுக்குரியனவும் முத்து வடங்கள் அணிந்தனவுமாகிய கொங்கைகளை உடைய மகளிர் விருப்பத்தோடு அந்த இசையைக் கேட்டு வந்து, தமக்கு முன்னே விரக மயக்கம் கொள்ளுமாறு வசீகரிக்கும் வன்மை பொருந்திய சிவபெருமான் எழுந்தருளி இருக்கும் இடமானது, மேலைக் காற்றினால் பூக்களோடு கலந்து விளங்கும் வண்டினங்களோடு கருமை நிறம் படிந்த மேகங்கள் தவழும் நீண்ட சோலைகளால் நிறைந்த வளமையான கழுமலம் என்ற சீகாழி நகரமாகும்.

**குறிப்புரை:** பிச்சையை விரும்பி, நீரிற்குழைத்த நீற்றையணிந்து, உமாதேவியோடும் உச்சிப்போதில் விடையேறி, வீதியில் பாடிச் செல்லும் தமது இசையைக் கேட்ட மகளிர் மால் கொள்ளச் செய்பவனது இடம் கழுமலம் என்கின்றது. பீடு – பெருமை. நீடு ஆர் – புகழான் நீடுதலைப் பொருந்தும். மாடு ஆரும் – இடப்பக்கத்து இருக்கும். உச்சத்தான் நச்சி – உச்சிப் போதினனாக விரும்பி. போல்; அசை. ஊரா – ஊர்ந்து. ஊர் ஆம் நீள் விதி – ஊரின் கண்ணதாகிய நீண்ட திருவீதியில் ஒலி செய் இசை வச்சத்தால் – பாடலை வைத்ததால், மங்கைமார் – முனிபன்னியர். வாரா – வந்து. மாலாகும் – மயக்கமுறும் வண்ணம் வசிவலஅவன் – வசீகரிக்கும் வன்மை உடையவன். கார்ஆர்கார்ஆர் – கருமை நிறம் பொருந்திய மேகங்கள் படிந்த.

Lord Civan mixes the holy ash in water and then smears His body with this paste. He desires to beg for alms. This glorious and wide famed Lord Civan with His consort Umaa Devi whose forehead is like the crescent moon, and whom He holds on the left portion of His body, desired to move about during midday. The bull He uses

for His transport has very fearsome eyes. This valiant bull has power enough to run with and follow, and kill its enemy. Lord Civan rides on this bull and moves slowly and slowly through the long streets, where, with a desire, He goes on singing songs very harmoniously. Hearing His sweet music, women-folk wearing pearl bracelets over their breasts come near Lord Civan. By the hypnotic power of Civa the women-folk instantly become unconscious. This Lord Civan resides in the fertile Thiru-k-kazhu-malam which is surrounded by long groves where dark blue coloured clouds pushed by westerly winds or by the bees jointly humming in large numbers around the flowers in the groves.

திங்கட்கே தும்பைக்கே திகழ்ந்திலங்க குமத்தையின்
சேரேசேரேநீராகச் செறிதரு சுரநதியோ
டங்கைச்சேர்வின்றிக் கேயடைந்துடைந் தவெண்டலைப்
பாலேமேலேமாலே யப்படர்வு றுமவனிறகும்
பொங்கப்பேர்நஞ்சைச் சேர்புயங்கமங்கள் கொன்றையின்
போதார்தாரே தாமேவிப் புரிதருசடையனிடங்
கங்கைக்கேயும் பொற்பார்கலந்து வந்தபொன்னியின்
காலேவாரா மேலேபாய்கழு மலவளநகரே. 3

திங்கட்கே-தும்பைக்கே-திகழ்ந்து-இலங்கு மத்தையின்
சேரேசேரே, நீர்ஆகச் செறிதரு சுர நதியோடு,
அங்கைச் சேர்வு இன்றிக்கே அடைந்து உடைந்த வெண்தலைப்
பாலே மேலே மால் ஏயப் படர்வுஉறும் அவன் இறகும்,
பொங்கப் பேர் நஞ்சைச் சேர் புயங்கமங்கள், கொன்றையின்
போது ஆர் தாரேதாம், மேவிப் புரிதரு சடையன் இடம் -
கங்கைக்கு ஏயும் பொற்பு ஆர் கலந்து வந்த பொன்னியின்
காலே வாரா மேலே பாய் கழுமல வள நகரே.

tigkaTkE tumpaikkE tikazntu-ilagku mattaiyin2
cErEcErE, nIr Akac ceRitaru cura natiyOTu,
agkaic cErvu in2RikkE aTaintu uTainta veNtalaip
pAlE mElE mAl Eyap paTarvu uRum avan2 iRakum,
pogkap pEr nanjcaic cEr puyagkamagkaL, kon2Raiyin2
pOtu Ar tArEtAm, mEvip puritaru caTaiyan2 iTam--
kagkaikku Eyum poRpu Ar kalantu vanta pon2n2iyin2
kAlE vArA mElE pAy kazumala vaLa nakarE.

பொருள்: சிவபெருமான், பிறைச்சந்திரன், தும்பை, விளங்கும் ஊமத்தம்பூ ஆகியவற்றுடன், தெளிந்த நீரை உடைய கங்கை நதியையும் தமது திருக்கரத்தில் ஏந்தாமல், தமது

திருமுடியில் சூடியுள்ளார். அத்துடன் உடைந்த கபாலத்தின் பக்கத்தில், பிரமன் தனது அஞ்ஞான மயக்கத்தால் எடுத்த அன்னத்தின் இறகு, நஞ்சு பொங்கும் பாம்பு, கொன்றை மலர் மாலை ஆகியன அணிந்து விளங்கும் சடையையும் உடையவர். இப்பெருமான் எழுந்தருளியிருக்கும் இடமானது, கங்கைக்கு நிகரான புனிதத்துடன், அழகுடன் கலந்து வந்த பொன்னியாகிய காவிரி நதியின் வாய்க்கால்கள் வழியாகப் பாயும் நீரினால், வளம் சேர்க்கும் கழுமலம் என்ற நகரமாகும்.

**குறிப்புரை:** பிறை, தும்பை, ஊமத்தை இவைகள் சேர்ந்து சேர்ந்து, தேவ கங்கையோடு, திருக்கரத்திற்சேராதே திருமுடியிற்சூடப் பெற்ற உடையந்த கபாலத்தின்பக் கல். அன்னத்தின் இறகையும், பாம்பையும், கொன்றை மாலையையும் அணிந்த புரிசடைப் பெருமானிடம் கழுமலம் என்கின்றது. திங்கட்கு தும்பைக்கு என்ற நான்கன் உருபுகள் ஏழாம் வேற்றுமைப் பொருளில் வந்தன. திங்களிலும் தும்பையிலும் ஊமத்தத்திலும் சேர்ந்து சேர்ந்து புனலாகப் பொருந்திய சுரநதி எனப் பொருள் முடிபு காண்க. மேலே மால் ஏயப் படர்வுறும் அவன் இறகும் – மேலே மயக்கம் பொருந்தப் பறந்து செல்லும் மகாசூரனுடைய இறகும். புயங்கமங்கள் – பாம்புகள். தார் – மாலை. கங்கைக்கு ஏயும் பொற்பு ஆர் கலந்து வந்த பொன்னி – கங்கைக்குப் பொருந்திய புனிதமாகிய அழகைப் பொருந்திக் கலந்து ஒழுகும் காவிரி. கால் – வாய்க்கால்.

Lord Civan bedecks His matted hair with the following and circumscribe it around the **crescent moon**; **Thumbai flower** (White dead mettle leucas); fully blossomed **datura flowers**; all the three joined together and got united with the **river Ganges**; **broken skull** different from the one He holds in His fair hand; The mentally deluded Brahma took the form of a swan and flew over the cosmos to reach and see Lord Civan's head but in vain. The **wing** of this swan also finds a place in Civa's head; the **snake** with the bubbling poison; garland woven out of **cassia flowers**. This Lord Civan is entempled in Thiru-k-kazhu-malam. Here the canals of the imposing Ponni river similar to river Ganges flow and make the city fertile.

அண்டத்தாலெண்டிக் குமமைந்தடங் குமண்டலத்
தாறேவேறேவா னாள்வாரவரவ ரிடமதெலாம்
மண்டிப்போய்வென் றிப்போர்மலைந் தலைந்தவும்பரு
மாறேலாதார் தாமேவும் வலிமிகுபுரமெரிய
முண்டத்தே வெந்திட்டேமுடிந் திடிந்தஇஞ்சிசூழ்
மூவாமூதூர்மூதூ ராமுனிவுசெய் தவனதிடங்
கண்டிட்டேசெஞ் சொற்சேர்கவின் சிறந்தமந்திரக்
காலேயோவா தார்மேவுங் கழுமலவளநகரே. 4

அண்டத்தால் எண்திக்கும் அமைந்து அடங்கும் மண்தலத்து
ஆறே, வேறே வான்ஆள்வார் அவர்அவர் இடம்அதுஎலாம்
மண்டிப் போய் வென்றிப் போர் மலைந்து அலைந்த உம்பரும்
மாறு ஏலாதார்தாம் மேவும் வலி மிகு புரம் எரிய,
முண்டத்தே வெந்திட்டே முடிந்து இடிந்த இஞ்சி சூழ்
மூவா மூதூர் மூதூரா முனிவு செய்தவனது இடம்
கண்டிட்டே செஞ்சொல் சேர் கவின் சிறந்த மந்திரக்
காலே ஓவாதார் மேவும் கழுமல வள நகரே.

aNTattAl eNtikkum amaintu aTagkum maNtalattu
ARE, vERE vAn2 ALvAr avar avar iTam atu elAm
maNTip pOy ven2Rip pOr malaintu alainta umparum
mARu ElAtArtAm mEvum vali miku puram eriya,
muNTattE ventiTTE muTintu iTinta injci cUz
mUvA mUtUr mUtUrA mun2ivu ceytavan2atu iTam--
kaNTiTTE cenjcol cEr kavin2 ciRanta mantirak
kAlE OvAtAr mEvum kazumala vaLa nakarE.

*பொருள்:* முப்புரத்தில் உள்ள அசுரர்கள், இம்மண்ணுலகில் இருந்து கொண்டே எண்திசைகளையும் உள்ளடக்கி அனைத்து உலகங்களுக்கும் சென்று, அவைகளையும் வெற்றி கொண்டனர். வான் உலகை ஆளும் தேவர்களையும் நெருங்கிச் சென்று வெற்றிப் போர் செய்தனர். அத்தேவர்களாலும் எதிர்க்க இயலாத இந்த அசுரர்களின் பலம் மிகுந்த முப்புரத்தைத் தனது நெற்றிக் கண்ணால் வெந்து இடிந்து, அழிந்து போகுமாறு செய்தவர் சிவபெருமானாகும். இப்பெருமான் முதுமை உடைய வில் அழியுமாறு சினந்தவர். அந்த இஞ்சி சூழ்ந்த அழியாத பழமையான மூன்று ஊர்களும் இவர் எழுந்தருளி இருக்கும் இடமானது மதில்கள் சூழ்ந்ததும், என்றும் முதுமை அடையாததும், இன்றும் முதுமையாகாமல் இருக்கும் கழுமலம் என்ற சீகாழி ஆகும். இந்த நகரமானது, செம்மையான சொற்களைக் கொண்டு, தேர்ந்து தொடுத்த மந்திரங்களை மூச்சுக்காற்றாகக் கொண்டு உருவேற்றி வாழும் சான்றோர்களைக் கொண்டுள்ள வளமையான நகரமாகும்.

**குறிப்புரை:** இம்மண்ணுலகிலிருந்து வானாள்வார் இடம் எல்லாம் போய்ச் சண்டை செய்த தேவர்களும் மாறு ஏற்றுப் பொருதலாகாத திரிபுராதிகள் மேவிய முப்புரம் எரிய நெற்றிக் கண்ணால் எரித்து, மூதூர் மூதூராகா வண்ணம் முடிவு செய்தவன் இடம் கழுமலம் என்கின்றது. அண்டத்தால் எண்திக்கும் அமைந்து அடங்கும் மண் தலத்து ஆறே – இவ்வண்டத்தில் எட்டுத் திக்கும் பொருந்திய அடங்கிய பூமியின் வழியாக. வேறேவான் ஆள்வராது இடம் எலாம் – தனித்த தேவர்களிடம் எல்லாவற்றையும். மண்டிப் போய் – நெருங்கிச் சென்று. உம்பரும் மாறு ஏலாதார் – தேவர்களாலும் எதிர்க்க இயலாத அசுரர்கள். வலிமிகுபுரம் – வரபலமிக்க முப்புரம். முண்டத்தே வெந்திட்டே முடிந்து இடிந்த – நெற்றியால் வெந்து அழிந்த இடிந்த. முண்டம் ஆகுபெயராக நெற்றிக் கண்ணை உணர்த்தியது. இஞ்சி – மதிள். மூவர் மூதூர் மூதூரா முனிவு செய்தவனது இடம் – மூப்பை அடையாத தொன்மையான நகர். இன்றும் தொன்மையானதாகா வண்ணம் கோபித்தவனது இடம். செஞ்சொல் – நேரே பொருள் பயக்கும் சொல்.

The Devaas staying in this earthly region invaded the many cities that were under the control of the eight directions and came out victorious and are ruling the upper world. But the valiant Asuraas fought against these brave Devas and defeated them. The Devaas could not resist the attack of Asuraas, and succumbed. These Asuraas always fly in the air living in their three very strong citadels and do a lot of havoc to Devas. These three citadels fortified by strong walls all around were completely destroyed by fire that emanated from Lord Civan's third eye in His forehead. These three fortresses are very ancient and old and invincible. But now, they were totally destroyed by Lord Civan who is enshrined in the fertile city Thiru-k-kazhu-malam. Scholars who live in this city select apt divine incantations from the scriptures and sum up them all, and inhale them as breathing air. They rehearse this by repeating them frequently.

திக்கிற்றேவற் றற்றேதிகழ்ந்தி லங்குமண்டலச்
சீறார்வீறார் போரார்தாருகனு டலவனெதிரே
புக்கிட்டேவெட் டிட்டேபுகைந்தெ ழுந்தசண்டத்தீப்
போலேபூதீர்தீகான் மீப்புணர்தரு முயிர்கள்ளதிறஞ்
சொக்கத்தேநிர்த் தத்தேதொடர்ந்த மங்கைசெங்கதத்
தோடேயாமே மாலோகத்துயர் களைபவனதிடங்
கைக்கப்போயுக் கத்தேகனன்று மிண்டுதண்டலைக்
காடேயோடா வூரேசேர்கழு மலவளநகரே. 5

திக்கில்-தேவு அற்று அற்றே திகழ்ந்து இலங்கு மண்டலச்
சீறு ஆர் வீறு ஆர் போர் ஆர் தாருகன்உடல் அவன் எதிரே
புக்கிட்டே வெட்டிட்டே, புகைந்து எழுந்த சண்டத்தீப்
போலே, பூ, நீர், தீ, கால் மீ புணர்தரும் உயிர்கள் திறம்
சொக்கத்தே நிர்த்தத்தே தொடர்ந்த மங்கை செங்கதத்-
தோடு ஏயாமே, மா லோகத் துயர் களைபவனது இடம் -
கைக்கப் போய் உக்கத்தே கனன்று மிண்டு தண்டலைக்
காடே ஓடா ஊரே சேர் கழுமல வள நகரே.

tikkil-tEvu aRRu aRRE tikazntu ilagku maNTalac
cIRu Ar vIRu Ar pOr Ar tArukan2 uTal avan2 etirE
pukkiTTE veTTiTTE, pukaintu ezunta caNTattIp
pOlE, pU, nIr, tI, kAl, mI, puNartarum uyirkaL tiRam
cokkattE nirttattE toTarnta magkai cegkatat
tOTu EyAmE, mA lOkat tuyar kaLaipavan2atu iTam--
kaikkap pOy ukkattE kan2an2Ru miNTu taNTalaik
kATE OTA UrE cEr kazumala vaLa nakarE.

***பொருள்:*** எட்டுத் திசைகளுக்கும், காவலர்களாகிய அட்டதிக்குப் பாலகர்கள் ஆங்காங்கே இருந்து இம்மண்ணுலகைக் காவல் செய்கின்றனர். இந்த மண்ணுலகை அழிப்பதற்குத் தாருகன் சீற்றமுடனும், வீறு கொள்ளும் எழுச்சியுடனும் போர்த்தன்மையுடனும் வந்தான். அந்தத் தாருகனை அவன் எதிரிலேயே புகுந்து வெட்டி வீழ்த்தியவர் சிவபெருமானாகும். அப்பொழுது, புதைந்து எழுந்த ஊழித் தீப்போல் காளி தோன்றினாள். ஐம்பூதங்களான மண், நீர், தீ, காற்று, ஆகாயம் ஆகியவற்றை அழிக்கச் சிவந்த கோபத்தோடு சொக்க நிருத்தத்தில் நடனம் ஆடி வந்த காளியின் கோபத்தை இப்பெருமான் அவளோடு எதிர் நடனம் ஆடி, அவளை வென்று இவ்வுலகத்தின் துயரங்களைத் துடைத்தார். இப்பெருமான் எழுந்தருளி இருக்கும் இடமானது, பெரிய ஊழிக் காலத்தில் எரிவதற்கு வந்த தீயிலும் அழியாமல் பிழைத்ததும், குளிர்ந்த காடுகள் நிறைந்துள்ளதுமான வளமையான கழுமலம் என்ற சீகாழி நகரமாகும்.

**குறிப்புரை:** திக்குப் பாலகர்கள் ஆங்காங்கே விளங்க, இவ்வுலகத்துச் சீறி வந்த தாரகன் உடலை அவனெதிரிலேயே வெட்டி, விளைந்த ஊழித்தீயைப் போன்ற காளியின் கோபமானது ஐம்பூதச் சேர்க்கையாலான உலகத்துற்ற உயிர்களுக்குப் பொருந்தாதபடி உலகத்துயரைக் களைபவனது இடம் கழுமலநகர் என்கின்றது. திக்கில் தேவு அற்று அற்றே திகழ்ந்திலங்கு மண்டலம் – திக்குப் பாலகர்கள் ஆங்காங்கே அத்தன்மையோடு விளங்குகின்ற உலகம். சீறு ஆர் – கோபித்தலைப் பொருந்திய. சீறு ஆர் முதலியவற்றைத் தனித்தனி தாரகனோடு ஒட்டுக. வீறு – தனித்திருத்தல். சண்டத்தீப் போலத் தொடர்ந்த மங்கையினது எனக்கூட்டுக. உயிர்கள் திறம் ஏயாமே துயர் களைபவன் என இயைக்க. சொக்கத்தே;

சொக்கம் என்ற நிருத்தம். நிர்த்தத்தே தொடர்ந்த மங்கை – சொக்க நிருத்தத்தில் தோற்றுத் தொடர்ந்த காளி. செம்கதத்தோடு ஏயாமே – சிவந்த கோபத்தோடு பொருந்தாதபடி. கைக்க – வெறுக்க. பேர்யுக்கத்தே கனன்றும் – பெரிய ஊழித்தீயில் கனன்றும். மிண்டு தண்டலைக் காடே ஓடா – அழியாது மிண்டிய குளிர்ந்த காடுகள் அகலாத. இது நெருப்பூழியிலும் நிலைத்த நகரம் என்பதறிவித்தது.

This earthy world is guarded on all the eight directions by the respective presiding deities. The valiant Thaarukaa Asuran (*தாருகா அசுரன்*) a very brave warrior, approached this earth very angrily with intent to destroy it. He could not be killed by any man. Lord Civan, therefore, asked His consort, the embodiment of energy to create a woman, form out of her different energies to kill this Asuran. This creation called Kaali (*காளி*) the most courageous woman, a demy goddess, approached the Asura face to face, fought with him and chopped off his body and killed him. By killing this Asura, she became very furious and looked like submarine fire in the shape of a mare's head that came out of earth at the end of a yuga, to consume the entire world at the end of a yuga. With this ferocious red appearance, she was dancing the fearful Chokkaa dance (*சொக்க நிருத்தம்*) and it looked as though she is going to devour the entire souls on earth formed out of earth, water, fire, wind and sky. Lord Civan appeared before her and dancing a better typical dance suppressed her anger and made her calm down. Thereby Lord Civan saved all the souls on earth from destruction. This Lord Civan is enshrined in Thiru-k-kazhu-malam. Even during the great deluge, when every one in the universe got terrified by seeing the mass destruction of the entire world, this city Thiru-k-kazhu-malam with its dense forests and other groves stood very firm without any destruction.

செற்றிட்டேவெற்றிச் சேர்திகழ்ந்ததும்பி மொய்ம்புறுஞ்
சேரேவாராநீள் கோதைத்தெரி யிழைபிடியதுவாய்
ஒற்றைச்சேர் முற்றற்கொம்புடைத் தடக்கைமுக்கண்மிக்
கோவாதேபாய் மாதானத்துறுபுகர் முகவிறையைப்
பெற்றிட்டேமற் றிப்பார்பெருத்து மிக்கதுக்கமும்
பேராநோய்தாமேயா மைப்பிரிவுசெய் தவனதிடங்
கற்றிட்டேயெட் டெட்டுக்கலைத் துறைக்கரைச்செலக்
காணாதாரேசேரா மெய்க்கழுமல வளநகரே. 6

செற்றிட்டே வெற்றிச் சேர் திகழ்ந்த தும்பி மொய்ம்புஉறும்
சேரே வாரா, நீள் கோதைத் தெரியிழை பிடிஅது வாய்,
ஒற்றைச் சேர் முற்றல்கொம்பு உடைத் தடக்கை முக்கண் மிக்கு
ஓவாதே பாய் மா தானத்து உறு புகர்முக இறையைப்
பெற்றிட்டே, மற்று இப் பார் பெருத்து மிக்க துக்கமும்
பேரா நோய்தாம் ஏயாமைப் பிரிவு செய்தவனது இடம் -
கற்றிட்டே எட்டு-எட்டுக்கலைத்துறைக் கரைச் செலக்
காணாதாரே சேரா மெய்க் கழுமல வள நகரே.

ceRRiTTE veRRic cEr tikaznta tumpi moympu uRum
cErE vArA, nIL kOtait teriyizai piTi atu Ay,
oRRaic cEr muRRalkompu uTait taTakkai mukkaN mikku
OvAtE pAy mA tAn2attu uRu pukarmuka iRaiyaip
peRRiTTE, maRRu ip pAr peruttu mikka tukkamum
pErA nOytAm EyAmaip pirivu ceytavan2atu iTam--
kaRRiTTE eTTu-eTTukkalaittuRaik karaic celak
kANAtArE cErA meyk kazumala vaLa nakarE.

**பொருள்:** அசுரர்களாகிய சலந்தரன், திரிபுராதிகள் ஆகியவர்களைக் கொன்று வெற்றி அடைந்த சிவபெருமான், ஆண் யானை வடிவங் கொண்டார். நீண்ட மாலை அணிந்த உமாதேவியார் தன்னைச் சேரும் பொருட்டு பெண் யானை வடிவம் கொண்டார். அதன் விளைவாக ஒற்றைக் கொம்பினை உடைய துதிக்கையும், மூன்று கண்களையும் இடைவிடாது மிகுந்து பொழியும் மத நீரையும், புள்ளிகளோடு கூடிய முகத்தையும் உடைய வினாயகப் பெருமான் தோன்றினார். அதனால், இவ்வுலகில் வாழும் மக்களுக்குப் பெரும் துன்பங்களும் நீங்காத நோய்களும் வராமல் காக்கப்பட்டது. இதனை நல்கிய பெருமான் எழுந்தருளி இருக்கும் இடமானது, அறுபத்தி நான்கு கலைகள் முற்றும் முடியக் கற்று விளங்கவும், கற்றவர்கள் கற்றபடி நின்று ஒழுகி, சேர்ந்து உறைவதும், அவ்வாறு செய்யாதவர்கள் அடைய முடியாததுமான வளமையான கழுமலம் என்ற நகரமாகும்.

**குறிப்புரை:** உமாதேவி பெண் யானையின் வடிவாய், அசுரர்களைக் கொன்று வெற்றி சேர்ந்த ஆண் யானையிது தோள்களைச் சேர்ந்து ஒற்றைக் கொம்புடைய யானைமுகக் கடவுளைப் பெற்று இவ்வுலகம் துன்பம் எய்தாவகை பிரிவு செய்தவனது இடம் கழுமல வளநகர் என்கின்றது. செற்றிட்டே வெற்றிச் சேர் திகழ்ந்த தும்பி – சலந்தரன். திரிபுராதிகள் முதலிய அசுரர்களைக் கொன்று வெற்றியடைந்து விளங்கிய ஆண் யானையினது, மொய்ம்புறும் சேரே வாரா – தோளைப் பொருந்தும் புணர்ச்சியில் வந்து; நீள் கோதைத் தெரியிழை – நீண்ட மாலையணிந்த உமாதேவியார். பிடியது வாய் – பெண் யானையின் வடிவாய. ஒற்றைச்சேர் முற்றல் கொம்புடைத்தடக்கை – ஒற்றையாகச் சேர்ந்த முற்றிய கொம்பினை

உடைய துதிக்கையையும், மிக்கு ஓவாதேபாய் மாதானத்து உறு புகர் முக இறையைப் பெற்றிட்டு – மிகுந்து இடைவிடாது பாய்கின்ற பெரிய மதநீரோடு கூடிய யானைமுகக் கடவுளைப் பெற்று. இப்பார் பெருத்து மிக்க துக்கமும் – இவ்வுலகம் மிகப் பெரிய துக்கத்தையும், பேரா நோய் தாம் ஏயாமை – நீங்காத நோயையும் பொருந்தாதபடி. எட்டெட்டுக் கலைத்துறை கரை செலக்கற்றிட்டு – அறுபத்து நான்கு கலைகளையும் முடிவு போகக் கற்று. காணாதார் – கரை காணாதார். சேரா – அடையாத.

Lord Civan killed Chalantharan (சலந்தரன்) and Thiru-puraantha-asurar (திரிபுராந்தசுரர்). He became victorious and took the form of a male elephant. His consort Umaa Devi then wanted to have union with Him. She, therefore, wearing a long flower garland took the form of a female elephant and approached Him. Out of their union Lord Vinaayakar was born, with many peculiar features. He has a single and well developed tusk (ஒற்றைக்கொம்பு), a very long trunk (hand - தும்பிக்கை), three eyes, Must (மதநீர்) flowing in large quantities without any stoppage, from three spots of his body and the face has three dots. Civan and Umaa Devi gave birth to Vinaayaka with the sole intention to protect the people of this world from getting any disease and miseries. This Lord Civan is enshrined in Thiru-k-kazhu-malam. Here live scholars who have mastered the sixty four arts and follow them in their life. Those who do not follow these principles cannot reach Thiru-k-kazhu-malam.

பத்திப்பேர்வித் திட்டேபரந்தஐம் புலன்கள்வாய்ப்
பாலேபோகாமே காவாப்பகையறும் வகைநினையா
முத்திக்கேவிக் கத்தேமுடிக்குமுக் குணங்கள்வாய்
மூடாவூடாநாலந் தக்கரணமு மொருநெறியாய்ச்
சித்திக்கேயுய்த் திட்டுத்திகழ்ந்த மெய்ப்பரம்பொருள்
சேர்வார்தாமே தானாகச்செயு மவனுறையுமிடங்
கத்திட்டோர்சட்டங் கங்கலந்திலங்கு நற்பொருள்
காலேயோவா தார்மேவுங்கழு மலவளநகரே. 7

பத்திப்பேர் வித்திட்டே, பரந்த ஐம்புலன்கள்வாய்ப்
பாலே போகாமே காவா, பகை அறும் வகை நினையா,
முத்திக்கு ஏவி, கத்தே முடிக்கும் முக்குணங்கள் வாய்
மூடா, ஊடா, நால் அந்தக்கரணமும் ஒரு நெறிஆய்,
சித்திக்கே உய்த்திட்டு, திகழ்ந்த மெய்ப் பரம்பொருள்
சேர்வார்தாமே தான்ஆகச் செயுமவன் உறையும் இடம் -
கத்திட்டோர் சட்டங்கம் கலந்து இலங்கும் நல்பொருள்
காலே ஓவாதார் மேவும் கழுமல வள நகரே.

pattip pEr vittiTTE, paranta aimpulan2kaLvAyp
pAlE pOkAmE kAvA, pakai aRum vakai nin2aiyA,
muttikku Evi, kattE muTikkum mukkuNagkaL vAy
mUTA, UTA, nAl antakkaraNamum oru neRi Ay,
cittikkE uyttiTTu, tikaznta meyp paramporuL
cErvArtAmE tAn2Akac ceyumavan2 uRaiyum iTam--
kattiTTOr caTTagkam kalantu ilagkum nalporuL
kAlE OvAtAr mEvum kazumala vaLa nakarE.

***பொருள்:*** பெருமையுடைய முத்தி நெறியை அடைய விரும்புபவர்கள், அன்பாகிய விதையை மனதில் ஊன்ற வேண்டும். சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்ற ஐம்புலன்களின் வழி ஒழுகாது தம்மைக் காத்துக் கொள்ள வேண்டும். காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மாச்சரியம் என்ற ஆறுவகை உட்பகை நீங்கும்படி செய்ய வேண்டும். முத்திக்கு இடையூறாக இருக்கும் முக்குணங்களான சத்துவம், ராஜசம், தாமசம் ஆகியவற்றின் வழி ஒழுகாது. நான்கு அந்தக் கரணங்களான மனம், புத்தி, சித்தம், அகங்காரம் ஆகியவற்றை ஒருநெறிப்படுத்திச் சிந்தனையில் விளங்கும் மெய்ப்பரம் பொருளாகிய தன்னையே எண்ணுபவர்களைத் தானாகச் செய்யும் சிவபெருமான் உறையும் இடம் எது என்றால், அது, ஆறு வேதங்களையும் ஓதி உணர்ந்தவர்கள் எக்காலத்திலும் சிவம் என்ற நற்பொருளைத் தியானிக்கும் கழுமலம் என்ற வளமையான நகரம் ஆகும்.

***குறிப்புரை:*** அன்பாகிற விதையை இட்டு, புலன்வழி பொருந்தாது, பகையாறையும் கடிந்து, முத்திக்கு இடையூறாகிய சாத்வீக, இராஜஸ, தாமஸங்களாகிய மூன்று குணங்கள் மூடாதபடி அந்தக்கரணம் ஒரு நெறிப்பட சிந்திக்க, மெய்ப்பொருளையே தியானிக்கின்ற சிவஞானிகளைச் சிவமாகவே செய்யும் சிவன் உறையும் இடம் கழுமல வளநகர் என்கின்றது. பரந்த ஐம்புலன்கள் வாய்ப்பாலே போகா மேகாவா – எங்கும் பரவியுள்ள சுவை முதலாகிய ஐம்புலன்களிடம் சென்று பற்றாதபடி காத்து, பகை அறும் வகை நினையா – காமமாகிய உட்பகை ஆறையும் நீங்கும் வகை நினைத்து. முத்திக்கே விக்கத்தே முடிக்கும் முக்குணங்கள் வாய்மூடாவூடா – முத்திக்கு இடையூறாக முடிக்கும் முக்குணங்களின் வழியை மூடிப் பிணங்கி. நால் அந்தக்கரணமும் ஒரு நெறியாய்ச் சித்திக்கே உய்த்திட்டு – மனம் புத்தி சித்தம் அகங்காரம் என்னும் அந்தக் கரணங்கள் நான்கையும் ஒருநெறிப் படுத்திச் சிந்தனையில் செலுத்தி. திகழ்ந்த மெய்ப்பொருள் சேர்வார் – விளங்கிய சிவபரம் பொருளைத் தியானிப்பவர்கள். தாமே தானாகச் செயுமவன் – அவர்கள் அனைவரையும் சிவமாகச் செய்யும் இறைவன். சட்டங்கம் கத்திட்டோர் கலந்திலங்கும் காலே ஓவாதார் – ஆறு வேதாங்கங்களையும் ஓதி உணர்ந்தோர்கள் ஒன்றி விளங்கும் சிவமாய நற்பொருளின் திருவடியை இடைவிடாது தியானிப்பவர்கள்.

The sages who are followers of Civa always

1) sow the seed of Love (அன்பே சிவம்)
2) defend themselves firmly against being carried away by the various wide ways of sensation of the five sensory organs
    a) Taste or flavour (சுவை)
    b) Light or brightness (ஒளி)
    c) Sense of touch (ஊறு)
    d) Sound (ஓசை) and
    e) Smell or odour (நாற்றம்)
3) renounce the hateful six traits such as
    a) sexual pleasure (காமம்)
    b) anger, hate, dislike (வெகுளி) (pugnacity)
    c) mental delusion, stupor, bewilderment (மயக்கம்)
    d) arrogance (மதம்)
    e) malice (மாச்சரியம்)
    f) stinginess (லோபம்)
4) do not follow the ways of the three fundamental qualities such as
    a) Absolute goodness or virtue (சாத்துவிகம்)
    b) Passion (இராஜஸம்) and
    c) Lust (தாமஸம்)

    because they hinder the pathway to salvation.
5) regulate and command the four inner seats in our body such as
    a) mind; will (மனம்)
    b) reasoning (புத்தி)
    c) determinative faculty (சித்தம்) and
    d) egotism (அகங்காரம்)

and become fully absorbed in the contemplation of Civanï the truest and the eternal. Then they are graced by Civan to so realise that He indwells in their self itself as to merge morally in Him (தானாகச் செய்யும் சிவபெருமான்).

This gracious Lord Civan is enshrined in Thiru-k-kazhu-malam. Here many scholars live, who have studied, mastered and understood the six subsidiaries of the four Vedas. They pray to and worship without any break, the holy feet of Lord Civan who also shines along with them in their body (தம்மோடு கலந்து விளங்கும் சிவ பரம்பொருள்). Ye! devotees - all of you go to Thiru-k-kazhu-malam, offer worship to Lord Civa therein and get His grace.

**Note:** This hymn will appear a difficult one to chant and understand the meaning, as it was sung in a particular time measure (தாளம் - திருத்தாளச்சதி). Verse number seven is more difficult in this hymn than other verses. We have, therefore, tried our best and have given a more elaborate transcreation and we do hope readers will enjoy and understand it well.

செம்பைச்சேரிஞ் சிச்சூழ்செறிந்தி லங்குபைம்பொழிற்
சேரேவாராவாரீ சத்திரையெறி நகரிறைவன்
இம்பர்க்கேதஞ் செய்திட்டிருந் தரன்பயின்றவெற்
பேரார்பூநேரோர் பாதத்தெழில் விரலவணிறுவிட்
டம்பொற்பூண்வென்றித் தோளழிந்துவந்த னஞ்செய்தாற்
காரார்கூர்வாள் வாணாளன்றருள் புரிபவனதிடங்
கம்பத்தார்தும்பித் திண்கவுட்சொ ரிந்தமும்மதக்
காரார்சேறார் மாவீதிக்கழு மலவளநகரே. 8

செம்பைச் சேர் இஞ்சிச் சூழ் செறிந்து இலங்கு பைம்பொழில்
சேரே வாரா வாரீசத்திரை எறி நகர் இறைவன்,
இம்பர்க்கு ஏதம் செய்திட்டு இருந்து, அரன் பயின்ற வெற்பு
ஏர் ஆர், பூ நேர் ஓர் பாதத்து எழில் விரல் அவண் நிறுவிட்டு
அம் பொன்பூண் வென்றித் தோள் அழிந்து வந்தனம் செய்தாற்கு
ஆர் ஆர் கூர்வாள் வாழ்நாள் அன்று அருள்புரிபவனது இடம் -
கம்பத்து ஆர் தும்பித் திண் கவுள் சொரிந்த மும்மதக்
கார் ஆர், சேறு ஆர், மா வீதிக் கழுமல வள நகரே.

cempaic cEr injcic cUz ceRintu ilagku paimpozil
cErE vArA vArIcattirai eRi nakar iRaivan2,
imparkku Etam ceytiTTu iruntu, aran2 payin2Ra veRpu
Er Ar, pU nEr OrpAtattu ezil viral avaN niRuviTTu
am pon2 pUN ven2Rit tOL azintu vantan2am ceytARku
Ar Ar kUrvAL vAznAL an2Ru aruLpuripavan2atu iTam–
kampattu Ar tumpit tiN kavuL corinta mummatak
kAr Ar, cERu Ar, mA vItik kazumala vaLa nakarE.

**பொருள்:** செம்புத் தகடுகள் வேய்ந்த மதில்கள் சூழ்ந்ததும, பொழில்கள் சேர்ந்ததும், பசுமையான நீண்ட கடல்களின் அலைகளால் மோதப் பெறுவதுமாகிய இலங்காபுரி இறைவனாகியவன் இராவணன் ஆவான். இவன், இவ்வுலக மனிதர்களுக்கு தீங்கு செய்தது மட்டுமன்றி, சிவபெருமான் உறையும் கயிலை மலையையும் பெயர்க்க முற்பட்டான். அப்பொழுது சிவபெருமான் தமது அழகிய மலர் போன்ற ஓர் திருவடி விரல் ஒன்றை ஊன்றி, அழகிய பொன் அணிகலன்கள் பூண்ட அவனது வெற்றி நிறைந்த தோள் வலிமையை அழித்தார். அவன் தனது பிழையை உணர்ந்து பணிந்து வந்தனம் செய்த அளவில் அவனுக்கு அரிய கூரிய வாளையும் நீண்ட வாழ்நாளையும் அப்பொழுதே அருள்புரிந்தார். இப்பெருமான் உறையும் இடமானது, கம்பத்தில் கட்டப்பெற்ற யானைகளின் வலிய கன்னங்கள் முதலியன பொழிந்த மும்மதங்களால் நிலம் , கரிய சேற்றுடன் விளங்கும் சிறந்த வீதிகளை உடைய கழுமலம் என்ற வளமையான நகரம் ஆகும்.

**குறிப்புரை:** செம்பினால் இயன்ற மதில் சூழ்ந்த, மிகச் செறிவாக விளங்கும் பசிய பொழில் சேர்ந்து வரும் கடற்றிரைவந்து மோதும் நகருக்குத் தலைவனாகிய இராவணன்; இவ்வுலக மக்களுக்குத் துன்பம் விளைத்ததோடு மட்டுமன்றி, சிவனுறையும் கயிலை மலையையும் எடுத்தலைச் செய்ய, மலர்போன்ற திருவடியின் விரல் ஒன்றால் ஊன்றி, பொன்னணிகள் பூண்ட தோளை நெரியச் செய்து, அவன் வணங்க வாளும் வாழ்நாளும் அருள்செய்தவனது இடம் கழுமலம் என்கின்றது. செம்பைச் சேர் இஞ்சி – செப்புத் தகடு வேய்ந்த முகட்டினை உடைய மதில். வாரிசம் – கடல். இம்பர் – இவ்வுலகத்தவர். ஏர் ஆர் – எழுச்சியை அடையச் செய்து; அதாவது எடுக்க என்பதாகும். வந்தனம் செய்தாற்கு ஆர் ஆர் கூர்வாள் வாழ்நாள் அன்று அருள்புரிபவர் எனப் பிரிக்க. கம்பத்து ஆர் தும்பி திண் கவுள் சொரிந்த மும்மதக் கார்ஆர் சேறு ஆர் மாவீதி – கம்பத்திற்கட்டிய யானையினது திண்ணிய கன்னத்தினின்று சொரிந்த மும்மதத்தாலாகிய கரிய சேறு பொருந்திய பெரிய வீதி.

Raavanan was the king of Sri Lanka, a very fertile country encircled by very strongly built walls, constructed out of copper metal. This land has many green lush

groves. The nearby sea shores are very long and are washed by sea waves. Raavanan, besides causing suffering to his subjects, also attempted to lift the mount Kailas, the abode of Lord Civan. The Lord at once pressed the mountain by His beautiful flower like toe and destroyed the strength of the valiant Raavanan and crushed his gold jewelled shoulders. Raavanan regretted over his folly and prayed to Civa to forgive him. Lord Civa took pity on him, and granted him may boons and also a rare sharp sword. He also graced him to live long. This Civan dwells in Thiru-k-kazhu-malam. In this town, the soil in certain areas became blackish mud because of the Must oozing out from the check and other parts of the elephant that are tied to the elephant pillars (கம்பம்). Such is the richness of the place in which our Lord Civan is enshrined. Ye devotees go to this place, worship Lord Civan therein and get His grace.

பன்றிக்கோலங் கொண்டப்படித் தடம்பயின்றிடப்
பானாமால்தானா மேயப்பறவையி னுருவுகொள
ஒன்றிட்டேயம்புச் சேருயர்ந்த பங்கயத்தவ
னோதானோதா னஃதுணராதுரு வினதடிமுடியுஞ்
சென்றிட்டேவந்திப் பத்திருக்களங் கொள்பைங்கணின்
றேசால்வேறாரா காரந்தெரிவு செய்தவனதிடங்
கன்றுக்கேமுன் றிற்கேகலந்தி லந்நிறைக்கவுங்
காலேவாரா மேலேபாய்கழு மலவளநகரே. 9

பன்றிக்கோலம் கொண்டு இப் படித்தடம் பயின்று இடப்-
பான் ஆம்மால் ஆனாமே, அப்பறவையின் உருவு கொள
ஒன்றிட்டே அம்புச் சேர் உயர்ந்த பங்கயத்து அவனோ
தானோ ஓதான், அஃது உணராது, உருவினது அடி முடியும்
சென்றிட்டே வந்திப்பத், திருக்களம் கொள் பைங்கணின்
தேசால், வேறு ஓர் ஆகாரம் தெரிவு செய்தவனது இடம் -
கன்றுக்கே முன்றிற்கே கலந்து இலம் நிறைக்கவும்,
காலே வாரா, மேலே பாய் கழுமல வள நகரே.

pan2RikkOlam koNTu ip paTittaTam payin2Ru iTap
pAn2 Am ARu An2AmE, ap paRavaiyin2 uruvu koLa
on2RiTTE ampuc cEr uyarnta pagkayattu
avan2O tAn2 OtAn2, aHtu uNarAtu, uruvin2atu aTimuTiyum
cen2RiTTE vantippa, tirukkaLam koL paigkaNin2
tEcAl, vERu Or AkAram terivu ceytavan2atu iTam--
kan2RukkE mun2RiRkE kalantu ilam niRaikkavum,
kAlE vArA, mElE pAy kazumala vaLa nakarE.

**பொருள்:** திருமால் பன்றி உருவம் எடுத்துப் பூமியைத் தோண்டிப் பாதாளம் வரைத் தேடினான். நீரில் தோன்றிய தாமரை மலரில் உறையும் நான்முகன் வேதங்களை ஓதுபவனாக இருந்தும் அதன் உண்மைப் பொருளை உணராது அன்னப் பறவை வடிவம் எடுத்து வானவெளியில் பறந்து சென்று தேடியும் எதிரே தோன்றிய சிவபெருமானின் அடியையும் முடியையும் காண முடியாமல் அயர்ந்து சென்று பணிந்து வணங்கினர். அவர்களின் அழகிய பசுமையான கண்களுக்கு, அழகிய நீலகண்டத்தோடு தனது வல்லமையால் வேறொரு உருவத்தைக் காட்டிய இறைவன் சிவபெருமானாகும். இப்பெருமான் உறையும் இடம் எது என்றால், அது இல்லங்களில் முன்றிலில் ஆண் கன்றுகள் நிறைந்து கலந்து நின்று நிலைக்கும், வயல்களில் வாய்க்கால்களின் வழியாக பாய்கின்ற நீர் மேல் ஏறிப் பாயவும் வளத்தால் நிறைந்து விளங்கும் கழுமல வள நகரம் ஆகும்.

**குறிப்புரை:** திருமால் பன்றி உருவெடுத்துப் பூமியைத் தோண்டியும், பங்கயத்தவன் அன்னமாய்ப் பறந்தும் அடிமுடி தேடியும் அறியாதே வணங்க, அக்கினிப் பிழம்பாகிய வேறோர் வடிவம் காட்டிய இறைவனிடம் கழுமலம் என்கின்றது. மால் தான் பன்றிக் கோலம் கொண்டு, இப்படித்தடம் பயின்று இடப்பான் ஆம் அம்புசேர் உயர்ந்த பங்கயத்தவனோ தான் மேய பறவையின் உருவுகொள ஒன்றிட்டு உருவினது அடிமுடியும் அஃது உணராது சென்றிட்டே வந்திப்ப, திருக்களம் கொள் பைங்கண் நின்று ஏசால், வேறு ஓர் ஆகாரம் தெரிவு செய்தவனிடம் எனப் பிரித்துக் கூட்டிப் பொருள் கொள்க. படித்தடம் – பூமி. இடப்பானாம் – தோண்டுவானாம். மால் – திருமால். தான்மேய பறவை – தான் ஊர்தியாக விரும்பிய பறவை. அம்பு – நீர். தான் ஓதான் – தான் வேதங்களை ஓதியவனாக இருந்தும் அடிமுடியும் உணராது எனக் கூட்டுக. ஏசால் – வல்லமையால். ஆகாரம் – வடிவம். முன்றிற்கே கன்றுக்கே கலந்து இல்லம் நிறைக்கவும் – முன்றிலில் கன்று கலந்து வீட்டை வளத்தால் நிறைக்கவும், காலே வாரா மேலே பாய் – வாய்க்கால் வந்து மேலேறிப் பாயும் கழுமலம் என்க.

Thirumaal took the form of a hog, started splitting the earth and plunged deep into the underworld in order to find the holy feet of Lord Civan, but in vain. He became weary, being unable to see the Lord's Holy Feet. The four faced Brahma who resides in the Lotus flower which comes into view in water pools, is in the habit of chanting the Vedas. However, he did not understand its real message. He took the form of a swan and flew into the sky for long, but could not see the head of Lord Civan who appeared just before him in a different form (as fire). He became exhausted and they both prayed

to Lord Civa and begged for pardon for their egoism. Then Lord Civa by His omnipotent quality, took another form, and appeared before them having a beautiful dark blue coloured neck. They both were then able to see this form by their cool natural eyes. This Lord Civan is enshrined in Thiru-k-kazhu-malam. In this city calves gather in large numbers and fill up the residential houses in the front yard. The heavy inflow of water in the canals over flows the banks and creates fertility to the entire city. Ye devotees! go to Thiru-k-kazhu-malam and offer worship to Lord Civan enshrined therein.

தட்டிட்டேமுட்டிக் கைத்தடுக்கி டுக்கிநின்றுணாத்
        தாமேபேணாதே நாளுஞ்சமணோடு முழல்பவரும்
இட்டத்தாலத்தந் தானிதன்ற தென்றுநின்றவர்க்
        கேயாமேவா யேதுச்சொலிலை மலிமருதம்பூப்
புட்டத்தேயட்டிட்டுப் புதைக்குமெய்க் கொள்புத்தரும்
        போல்வார்தாமோ ராமேபோய்ப்புணர்வு செய்தவனதிடங்
கட்டிக்கால்வெட் டித்தீங்கரும்பு தந்தபைம்புனற்
        காலேவாரா மேலேபாய்கழு மலவளநகரே. 10

தட்டு இட்டே முட்டிக்கைத் தடுக்கு இடுக்கி, நின்று உணாத்,
        தாமே பேணாதே நாளும் சமணோடும் உழல்பவரும்;
இட்டத்தால், "அத்தம்தான் இது அன்று; அது" என்று நின்றவர்க்கு
        ஏயாமே வாய் ஏதுச்சொல், இலை மலி மருதம்பூப்
புட்டத்தே அட்டிட்டுப் புதைக்கும் மெய்க் கொள் புத்தரும்;
        போல்வார் தாம் ஓராமே போய்ப் புணர்வு செய்தவனது இடம் -
கட்டிக் கால் வெட்டித் தீம்கரும்பு தந்த பைம்புனல்
        காலே வாரா, மேலே பாய் கழுமல வள நகரே.

taTTu iTTE muTTikkait taTukku iTukki, nin2Ru uNA,
        tAmE pENAtE nALum camaNoTum uzalpavan2um;
iTTattAl, "attamtAn2 itu an2Ru; atu" en2Ru nin2Ravarkku
        EyAmE vAy Etuccol, ilai mali marutampUp
puTTattE aTTiTTup putaikkum meyk koL puttarum;
        pOlvArtAm OrAmE pOyp puNarvu ceytavan2atu iTam--
kaTTik kAl veTTit tImkarumpu tanta paimpun2al
        kAlE vArA, mElE pAy kazumala vaLa nakarE.

பொருள்: மண்டை என்ற உணவு உண்ணும் தட்டை கையில் ஏந்தியும், வளைந்த கையில் தடுக்கை இடுக்கி நின்று உண்டு ஆசைகளால் தம்மைப் பேணாது நாள்தோறும் வருந்தி நிந்திப்பவர்கள் சமணர்கள். புத்தர்கள் தங்களின் விருப்பத்தின்படி, கேட்பவர்களுக்குத்

தெளிவு ஏற்படாதவாறு, இதனுடைய பொருள் இது அல்ல, அது என பொருந்தாதபடி வாயில் வந்தபடி கூறுகின்றனர். இலைகள் நெருங்கிய மருத மரத்தின் பூவை அரைத்துச் சாயம் ஊட்டிய ஆடையைத் தம் உடலில் சுற்றிக் கொண்டு உடலை மறைப்பவர்கள் இந்த புத்தர்கள். இவர்களால் உணர முடியாதவர் சிவபெருமான் ஆவார். வெல்லக் கட்டிகளைத் தரும் இனிய கரும்பை வெட்டுகின்ற காலத்து, அதிலிருந்து வடிகின்ற சாறானது, வாய்க்கால் வழியே வந்து மேல்ஏறிப் பாயும் வளமுடைய கழுமல வளநகர் இச்சிவபெருமானது இடம் ஆகும்.

**குறிப்புரை:** சமணரும், புத்தரும், போல்வார் தம்மை அறியா வண்ணம் மறைப்பித்த இறைவனிடம் இது என்கின்றது. தட்டு இட்டே, முட்டிக்கை தடுக்கு இடுக்கி நின்று உணா தாமே பேணாதே நாளும் சமணொடும் உழல்பவரும் – மண்டையை ஏந்தி கைமுட்டியில் தடுக்கை இடுக்கிக் கொண்டு, நின்றுகொண்டு உண்டு, தாம் ஒன்றையும் பேணாதவர்கள்போல நாளும் சமண் கொள்கையோடு சுற்றுபவர்களும், இட்டத்தால் அத்தம் தான் இது அன்று அது என்று நின்றவர்க்கு ஏயாமே வாய் ஏது சொல் – விருப்பப்படி பொருள் இது அன்று அதுதான் என்று கேட்பவர்க்குப் பொருந்தாமல் வாயில் வந்தபடி காரணம் சொல்லும் (புத்தர்). இலை மலி மருதம்பூப் புட்டத்தே அட்டு இட்டு புதைக்கும் மெய் கொள் புத்தர் – மருதமரப் பூவை அரைத்து பின்பக்கத்துப் பூசி உடலை மறைக்கும் புத்தர்கள். ஓராமே – ஆராயாமல். புணர்வு – சூழ்ச்சி. கால் வெட்டி கட்டித் தீங்கரும்பு தந்த பைம்புனல் காலேவாரா மேலேயாய் – அடியை வெட்டிக் கட்டி இனிய கரும்புகள் தந்த சுவைநீர் கால்வழி வந்து மேலேறிப் பாயும் நகர் என்க.

The Samanars eat food from plates, in standing posture, by holding their mat in their armpit and daily wander about all places in the city without any purpose. Then some members of the public, approach them and request them to clear their doubts. Unable to clear their doubts, they simply tell them whatever comes in their mouth - that this is not the meaning and that is not and so on aimlessly. The Buddhists dress themselves from their back and cover their body. They dye their cloth in the essence of the red ochre on one side of their cloth. Lord Civan reached the fertile Thiru-k-kazhu-malam and got enshrined there. He was obscure and could not be seen by the Samanars and Buddhists. In this city the sugarcane candy manufacturers cut the sugarcane stalks into prices for further processing. While they do so, the cane juice that drops on to ground, gathers and flows into the canal. As the quantity is heavy, the juice

overflows on all directions and makes the land fertile. Ye devotees! reach this fertile city Thiru-k-kazhu-malam and worship Lord Civan therein and get His grace.

கஞ்சத்தேனுண் டிட்டேகளித்து வண்டுசண்பகக்
கானேதேனே போராருங்கழு மலநகரிறையைத்
தஞ்சைசார்சண்பைக் கோன்சமைத்த நற்கலைத்துறை
தாமேபோல்வார் தேனோரார்தமிழ் விரகனமொழிகள்
எஞ்சத்தேய்வின்றிக் கேயிமைத்திசைத் தமைத்தகொண்
டேழேயேழேநாலே மூன்றியலிசை யிசையியல்பா
வஞ்சகத்தேய்வின்றிக் கேமனங்கொளப் யிற்றுவோர்
மார்பேசேர்வாள் வானோர்சீர்மதி நுதல்மடவரலே. 11

கஞ்சத்தேன் உண்டிட்டே களித்து வண்டு, சண்பகக்-
கானே தேனே போர் ஆரும் கழுமலநகர் இறையைத்
தஞ்சைச் சார் சண்பைக் கோன் சமைத்த நல் கலைத் துறை,
தாமே போல்வார் தேன் நேர் ஆர் தமிழ்விரகன மொழிகள்,
எஞ்சத் தேய்வு இன்றிக்கே இமைத்து இசைத்து அமைத்த கொண்டு,
ஏழேஏழேநாலேமூன்றுஇயல்இசை இசை இயல்பா,
வஞ்சகத்து ஏய்வு இன்றிக்கே மனம் கொளப் பயிற்றுவோர்
மார்பே சேர்வாள், வானோர் சீர் மதிநுதல் மடவரலே.

kanjcattEn2 uNTiTTE kaLittu vaNTu, caNpakak
kAn2E tEn2E pOr Arum kazumala nakar iRaiyait
tanjcaic cAr caNpaik kOn2 camaitta nal kalait tuRai,
tAmE pOlvAr tEn2 nEr Ar tamiz virakan2 mozikaL,
enjcat tEyvu in2RikkE imaittu icaittu amaitta koNTu,
EzE EzE nAlE mUn2Ru iyal icai icai iyalpA,
vanjcattu Eyvu in2RikkE man2am koLap payiRRuvOr
mArpE cErvAL, vAn2Or cIr matinutal maTavaralE.

**பொருள்:** தாமரை மலரில் உள்ள தேனைக் குடித்துக் களித்த வண்டுகள் சண்பக மரச் சோலைகளில் உள்ள தேன் வண்டுகளோடு போரிடும் தன்மையை உடையது கழுமலம் என்ற நகரமாகும். இங்கு வீற்றிருக்கும் இறைவரான சிவபெருமானை அடைக்கலமாகக் கொண்டு இருப்பவர் சண்பை நகரின் தலைவனும், தமிழ் விரகனுமாகிய ஞான சம்பந்தன். இறைவனைப் பாடி அமைந்த, தேனுக்கு நிகரான, பாடல்களைக் கொண்டது இப்பதிகம். தாமே இறைவன் என்றதைப் போன்ற நன்மைகளைத் தருவதாகும். இப்பாடல்களின் மொழிகள் வார்க்கும் தேன்போன்று எக்காலத்திலும் குறைவின்றி எஞ்சி நிற்கக் கூடியதாக விளங்கும். இப்பதிகப் பாடல்களை, நல்ல கலைகளில் துறைபோய்த் தமக்குத் தாமே நிகராய் பண் முறையினால், இயல்பான வஞ்சனை இன்றி அமைந்துள்ள இப்பதிகத்தை

மனதில் பெருவிருப்பம் கொண்டு இசைப்பவர்களிடம், தேவர்களின் சிறப்பைக் கொண்ட பிறை போன்ற நெற்றியினை உடைய திருமகள் என்றும் வாசம் செய்வாள்.

**குறிப்புரை:** கழுமல நகரிறையைத் திருஞான சம்பந்தன் சொன்ன மொழிகளை இசையோடு குறையின்றி மனங்கொளப் பயிற்றுவோர் மார்பைத் திருமகள் சேர்வாள் எனப் பயன்கூறியது. கஞ்சத்தேன் உண்டிட்டு – தாமரையில் உள்ள தேனைக் குடித்து, சண்பகக் கானே தேனே போராரும் – சண்பகக் காட்டில் உள்ள வண்டோடு பொரும். தஞ்சை சார் – அடைக்கலமாகச் சாருகின்ற. தேன் நேர் ஆர் தமிழ் விரகன மொழிகள் – தேனுக்கு ஒப்பான தமிழ் விரகருடைய சொற்கள். எஞ்ச தேய்வு இன்றி – குறைவின்றி. ஏழே ஏழே நாலே மூன்று இயல் இசை இசை இயல்பா – இருபத்தோரு பண் முறையால் வானோர் சீர்மதி நுதல் மடவரல் – தேவர்களது சிறப்போடுகூடிய மதிபோன்ற நெற்றியினை உடைய திருமகள்.

In Thiru-k-kazhu-malam honey bees after happily drinking the nectar of the lotus flowers, fly and reach the champak groves, and fight against the honeybees that are humming there. Gnaanasambandan, the chief of Chanbai city, a great Tamil scholar sang flawlessly on Lord Civa of Thiru-k-kazhu-malam. This hymn is equal to honey. Those scholars, who are adept in divine scriptures and who are incomparable to any one other than to themselves, who sing these songs wholeheartedly in the twenty one different modes will have Thiru-magal rest in their hearts. This Thiru-magal is hailed by Devaas and she is known for her beauty. Her forehead resembles the crescent moon.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*126ஆம் பதிகம் முற்றிற்று*
End of 126th Hymn

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# 127. திருப்பிரமபுரம்

## திருத்தல வரலாறு:

முதலாம் பதிகம் பார்க்க.

# 127. THIRU-P-PIRAMA-PURAM

## HISTORY OF THE PLACE

See First Hymn.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 127. திருப்பிரமபுரம்

## 127. THIRU-P-PIRAMA-PURAM

பண் : வியாழக்குறிஞ்சி – ஏகபாதம்
ராகம் : சௌராஷ்டிரம்

*Pann: Viyazha-k-kurinji*
*Raagam : Saurashtram*

பிரமபுரத்துறை பெம்மானெம்மான்
பிரமபுரத்துறை பெம்மானெம்மான்
பிரமபுரத்துறை பெம்மானெம்மான்
பிரமபுரத்துறை பெம்மானெம்மான். 1

பிரம புரத்துறை பெம்மான் எம்மான்
பிரம புரத்துறை பெம்மான் எம்மான்
பிரம புரத்துறை பெம்மான் எம்மான்
பிரம புரத்துறை பெம்மான் எம்மான்.

pirama purattuRai pemmA n2emmAn2
pirama purattuRai pemmA n2emmAn2
pirama purattuRai pemmA n2emmAn2
pirama purattuRai pemmA n2emmAn2.

பொருள்: ஞானமயமாக விளங்கும் பராசக்தியான பரிபூரணத்தை மிக வியந்து, அந்தப் பராசக்திக்கும் பரமானந்த வடிவினனாக இருப்பவன் சிவபெருமான் ஆவான். அவன் முதல், நடு, இறுதி காண இயலாத பெரியோன் ஆவான். இப்பெருமான், மேல் நிலமாகிய ஆகாயத்தின்கண் ஓடும் கங்காதேவியை விரும்பித் திருமுடியில் வைத்திருப்பவன். மேலும் அவன் எம்மைவிட்டு நீங்காத நிலைமையை உடைய எமது உயிரில் பிரம்ம ரூபத்தில்

எண்ணப்பட்ட என்னை முத்து விடுகைக்கு அமையாத விருப்பமுள்ளவன். என்னை ஒக்க வந்தவன். அவனே பிரமபுரம் என்ற சீகாழிப் பதியில் வீற்றிருக்கும் கர்த்தாவான எனது சுவாமி ஆவார்.

a) He pervades everywhere in the cosmos with complete fullness of His wisdom and supreme energy. We admire this; "over and above" fullness He is the embodiment of bliss. Also He shines as the greatest merciful Supreme Being having no beginning, middle or end.
b) He lodges the personified lady of river Ganges in His head, which flows abundantly in the upper world. He is the Supreme Soul who never depends from us.
c) To remove my bodily attachment, He contacted me as a human being like me and graced me to enjoy the Supreme Bliss known as Brahma's bliss. (If you ask who such a person is?)
d) He is Lord Civan the Supreme Being who is entempled in the holy city of Thiru-p-pirama-puram.

**Note:** The first line of each stanza of this Decad is repeated in the remaining three stanzas of the Decad. Such composition is known as Aeha Paadham (*ஏக பாதம்*) It probably because, there is but one line (a single line) which repeats itself in the rest of the verse. However, the full meaning in each line is somewhat obscure. Hence, an insight can be had from the paraphrase and notes furnished by Mahavidwan Dandapani Desikar of Thiruvaavaduthurai Aadheenam.

விண்டலர்பொழிலணி வேணுபுரத்தான்
விண்டலர்பொழிலணி வேணுபுரத்தான்
விண்டலர்பொழிலணி வேணுபுரத்தான்
விண்டலர்பொழிலணி வேணுபுரத்தான். 2

விண்டலர் பொழிலணி வேணு புரத்தான்
விண்டலர் பொழிலணி வேணு புரத்தான்
விண்டலர் பொழிலணி வேணு புரத்தான்
விண்டலர் பொழிலணி வேணு புரத்தான்.

viNTalar pozilaNi vENu purattaran2
viNTalar pozilaNi vENu purattaran2
viNTalar pozilaNi vENu purattaran2
viNTalar pozilaNi vENu purattaran2.

**பொருள்:** எட்டுத் திக்குகளிலும் உள்ள பர்வதங்களுள் ஒலிசிறந்த தரிசனை மணியாகவும், அகில உலகங்களையும் தன்னுள் அகப்படுத்தும் தன்மையுள்ளதும், பெரிதாகவும் உள்ள திருச்சிலம்பினைத் தரித்துள்ளவன் சிவபெருமான் ஆவான். இப்பெருமான் திருமாலின் சிவதூஷணத்தைக் கேட்ட அசுரர்களின் முப்புரங்களைச் சங்கரித்தவன். கற்பகப் பூஞ்சோலை மலர் கொண்டு தேவர்களது அர்ச்சனை செய்யும் சோலைகள் சூழ்ந்ததும், தேவேந்திரன் மூங்கில் வழியாக வந்து பூசித்ததால் வேணுபுரம் என்ற பெயரை உடையதுமான சீகாழியில் வீற்றிருக்கும் இறைவர் சிவபெருமான் ஆவான்.

a) He wears an anklet in which eight gems representing the eight mountains are embedded (The eight mountains are

1. Neela – *நீல*
2. Nishatha – *நிஷத*
3. Vindhya – *விந்திய*
4. Maalayavaan – *மால்யவான்*
5. Malaya – *மலய*
6. Kanthamaathana – *கந்தமாதன*
7. Hēma Kooda – *ஹேமகூட*
8. Himaya – *ஹிமய*

b) The three Asuraas listened and gave attention to the advice imparted by Puth-than (*புத்தன்*) who is an incarnation of Thirumaal and created hostility towards Civan, who destroyed by fire their three impregnable fortresses.

c) Indiran, the chief of Devas wears the ceremonious flower known as Karpagam that grows in the world of celestials. Afraid of the onslaught of Asuraas, Indra ran away and hid himself in the bamboo trees that grow in Venupuram (வேணுபுரம் - வேணு - மூங்கில்) groves and worshipped Lord Civan in that city.

d) It is venupuram (வேணுபுரம் - another name of Seekaazhi) where Civan desires to be entempled with a great liking, where flowers blossom in large numbers in the flower gardens of this place.

புண்டரிகத்தவன்மேவிய புகலியே
புண்டரிகத்தவன்மேவிய புகலியே
புண்டரிகத்தவன்மேவிய புகலியே 3
புண்டரிகத்தவன்மேவிய புகலியே.

புண்டரி கத்தவன் மேவிய புகலியே
புண்டரி கத்தவன் மேவிய புகலியே
புண்டரி கத்தவன் மேவிய புகலியே
புண்டரி கத்தவன் மேவிய புகலியே.

puNTari kattavan2 mEviya pukaliyE
puNTari kattavan2 mEviya pukaliyE
puNTari kattavan2 mEviya pukaliyE
puNTari kattavan2 mEviya pukaliyE.

**பொருள்:** என் இதயக் கமலத்தில் வீற்றிருந்து இடைவிடாத ஆனந்தம் அருளி என்னை மலபோகத்தில் தள்ளாமல் காத்தருளி எனக்கு அடைக்கலம் தருபவன். அவனே ஆன்மாக்களை காக்கும் திருநீற்றை அணிந்திருப்பவன். மிகுந்த கருணையான அவன் யான் பாடிய பாடல்களை உவந்து ஏற்றுக் கொள்பவன். புலிக்காலும் புலிக்கையும் கொண்ட வியாக்கிரபாத முனிவருக்கு ஞான ஆனந்த நடனத்தைக் கனக சபையில் ஆடும் வித்தையைக் கற்றவன். இந்த அற்புதங்களைச் செய்யும் சிவபெருமான் பெரும் விருப்பத்துடன் எழுந்தருளியுள்ள தலமானது, பிரமன் பூசித்த புகலி என்ற சீகாழியாகும்.

a) To remove my perturbation of mind, He revealed His appearance in my heart. Thereby I enjoyed His bliss uninterruptedly. He became my refuge.

b) He smears His body with holy ashes. He is the embodiment of grace. He is delighted to hear my divine musical songs.

c) He is an adept in acting and dancing according to Bharata Saastra. He graced the tiger footed sage (புலிக்கால் முனிவர்) to worship and to take divine pleasure in witnessing His dance which He performed in the golden hall of the temple in Chidambaram.

d) With these aspects, our Chief Lord is entempled in the holy city of Pukali. Pukali is the city where the four faced Brahma once adored and worshipped Lord Civan with all his wisdom.

விளங்கொளிதிகழ்தருவெங்குருமேவினன்
விளங்கொளிதிகழ்தருவெங்குருமேவினன்
விளங்கொளிதிகழ்தருவெங்குருமேவினன்
விளங்கொளிதிகழ்தருவெங்குருமேவினன். 4

விளங்கொளி திகழ்தரு வெங்குரு மேவினன்
விளங்கொளி திகழ்தரு வெங்குரு மேவினன்
விளங்கொளி திகழ்தரு வெங்குரு மேவினன்
விளங்கொளி திகழ்தரு வெங்குரு மேவினன்.

viLagkoLi tikaztaru vegkuru mEvin2an2
viLagkoLi tikaztaru vegkuru mEvin2an2
viLagkoLi tikaztaru vegkuru mEvin2an2
viLagkoLi tikaztaru vegkuru mEvin2an2.

**பொருள்:** கன்றாகவும், விளாமரமும் ஆக நின்ற அரக்கர்களை கன்றால் விளாமரத்தை எறிந்து அந்த அரக்கர்களை அழித்தவன் திருமால். அந்த மாலை மேனியில் ஒரு பாகத்தில் வைத்தவன். உருமு என்னும் இடியாக வந்து உலகை ஆள்பவன். தனது பரிபூரணத்தில் இருந்து தன்னை இழந்து வேறுபட்டு நிற்கின்ற கீழாயினவனான எனக்கும் குருமூர்த்தியாக வந்து எனது பிறவியை ஒழித்தவன். தனது பரிபூரணமான பேரின்பத்தில் எனது அடிமை குலையாமல் இரண்டறக் கலக்க வைத்தவன். இப்பெருமான் எத்தன்மையானவன் என்றால், எங்கும் பிரகாசமாக நிற்கும் கீர்த்தியை உடையவன். இயமனால் பூசிக்கப்பட்ட வெங்குரு என்னும் சீகாழிப் பதியை விரும்பி, அங்கு எழுந்தருளியிருப்பவன்.

a) Thirumaal in one of his incarnation as Krishna faced an Asura, who came near him in disguise as a calf to kill Krishna. Krishna was able to recognise and identify the calf as Asuraa. Immediately he lifted the calf, and using it as a cudgel dashed it against the wood apple tree and killed the calf (Asura). Then he picked up the wood apple fruits that fell down from the tree and distributed them to his gopi devotees. This Thirumaal is embedded by Lord Civan in one half portion of His huge, pure and supreme body.

b) Lord Civan commanded the thunder to fall on the heads of Buddhists and killed them even as they were arguing and quarreling with His devotees.

c) Accursed as I am, Lord Civan came to me as my preceptor and helped me join in His pervasion and to enjoy "His Supreme Bliss".

d) Yaman once came to this city and worshipped Lord Civan therein. This bright city is the one very much liked by Lord Civan.

சுடர்மணிமாளிகைத்தோணிபுரத்தவன்
சுடர்மணிமாளிகைத்தோணிபுரத்தவன்
சுடர்மணிமாளிகைத்தோணிபுரத்தவன்
சுடர்மணிமாளிகைத்தோணிபுரத்தவன். 5

*சுடர்மணி மாளிகைத் தோணி புரத்தவன்*
*சுடர்மணி மாளிகைத் தோணி புரத்தவன்*
*சுடர்மணி மாளிகைத் தோணி புரத்தவன்*
*சுடர்மணி மாளிகைத் தோணி புரத்தவன்.*

cuTarmaNi mALikait tONi purattavan2
cuTarmaNi mALikait tONi purattavan2
cuTarmaNi mALikait tONi purattavan2
cuTarmaNi mALikait tONi purattavan2.

**பொருள்:** சுடுநிலமாகிய மயானத்தை நடமாடும் இடமாகக் கொண்டவன். முப்புரங்களைப் புன்சிரிப்பால் சுட்டு வெற்றியை அடைந்து தும்பை மாலையை அணிந்தவன். என் உச்சிக்குச் சூடாமணியாய் இருப்பவன். ஆன்மாக்களை ஈடேற்றும் பித்துக் கொண்டவன். யாகத்தில் வந்த துதிக்கையினை உடைய யானையின் தோலை உரித்து வடிவிழக்கச் செய்தவன். சூரியனுடைய களங்கத்தைக் கழுவும் கடல்போன்ற பிறவியில் விழுந்த ஆன்மாக்களுக்குக் கரையேறக்கூடிய தெப்பமாக இருப்பது பிரணவ மந்திரம். அந்தப் பிரணவ மந்திரத்தைச் செவியில் உண்டாக்குபவன். ஒளி பொருந்திய நவரத்தினங்களால் அலங்கரிக்கப்பட்ட மாளிகைகள் சூழ்ந்துள்ள திருத்தோணிபுரம் என்ற சீகாழியில் வீற்றிருக்கும் சிவபெருமான் இத்தகைய பெருமைகள் உடையவன் ஆவான்.

The burning burial ground is the place for His dance. He wears the garland woven out of white dead nettle flowers (*தும்பைப்பூ* - Leucas) before proceeding to wage war against the Asuraas to destroy their three citadels. He is like the celestial gem (*சூடாமணி*) for me that I wish to wear on my head. He has developed a great fascination

of love for me. He skinned the elephant that came out of the sacrificial fire performed by the sages of Darukaa Vanam (தாருகாவனத்து இருடிகள்) and covered His body with that skin. He is the Chief Lord who imparts the incantation – the single mystical word 'Om' (ஓம் என்னும் பிரணவ மந்திரத்தை உபதேசிக்கிறவன்) to enable the souls to cross the ocean of birth and death cycle. This Lord Civan desires to be entempled in Thonipuram where He is the Chief Lord. This city has many mansions implanted with all kinds of gems.

பூசுரர்சேர்பூந்தராயவன்பொன்னடி
பூசுரர்சேர்பூந்தராயவன்பொன்னடி
பூசுரர்சேர்பூந்தராயவன்பொன்னடி
பூசுரர்சேர்பூந்தராயவன்பொன்னடி. 6

பூசுரர் சேர் பூந்தராய் அவன் பொன்னடி
பூசுரர் சேர் பூந்தராய் அவன் பொன்னடி
பூசுரர் சேர் பூந்தராய் அவன் பொன்னடி
பூசுரர் சேர் பூந்தராய் அவன் பொன்னடி.

pUcurar cErpUn tarAyavan2 pon2n2aTi
pUcurar cErpUn tarAyavan2 pon2n2aTi
pUcurar cErpUn tarAyavan2 pon2n2aTi
pUcurar cErpUn tarAyavan2 pon2n2aTi.

**பொருள்:** பூமியில் உள்ளாரையும் வானுலகத்தில் உள்ளாரையும் தனது நாபிக் கமலத்தில் இருந்து பிரம்மன் தோற்றுவித்தான். இந்தப் பிரமன், திருமாலின் ஞானத்தில் கண்ணாடியும் நிழலும்போல், பிரதிபலிக்கும் பிம்பமாக இருப்பவன். மும்மலங்களையும் கழுவிய சிவஞானிகள் பொலிவு பெறுமாறு, அழகுடைய ஆனந்த நடனம் செய்பவன் சிவபெருமான் ஆகும். இப்பெருமான் திருநீறு பூசும் மார்புடைய சிவஞானிகளுக்கும், புண்ணியம் பாவம் என்ற இருவினைகளை அறுத்த சிறப்பினை உடையவர்களுக்கும் மூலமாய் உள்ளவன். குற்றமற்ற சான்றோர்கள் வாழும் பூந்தராய் என்னும் சீகாழிப் பதியில் வீற்றிருக்கும் சிவபெருமானின் அழகிய திருவடித் தாமரை என்னை ஆண்டுகொள்ளுவதாக.

Brahma is the creator of both the people in the earth and the Devas in the celestial world. This Brahma and Thirumaal are only the mirrored images of Lord Civan seen in the mirror formed out of the benevolent energy (அருட்சத்தியாகிய

*கண்ணாடியில் இருவருடைய பிரதி பிம்பத்தைக் கண்டவன் சிவபெருமான்).* Civa is the original form (*பிம்பம்*). The other two are mirrored images – *பிரதிபிம்பம் (தானே பிம்பம்; மற்ற இருவரும் பிரதிபிம்பம் ஆவார்கள்).* He performs the ecstatic divine dance (*ஆனந்தத் தாண்டவம்*) for the benefit of saiva saints. Civa is the beautiful primal Being shining in the experiences of sages, who have smeared their body with holy ashes. Flawless Vedic scholars live in large numbers in Poontharaai (*பூந்தராய்* – another name of Seekaazhi). Lord Civan, the Divine Being is entempled in such a famous city. Let His fascinating and holy feet accept me as His slave and admit me into His pervasion to enjoy the benefit of His good grace.

செருக்குவாய்ப்புடையான்சிரபுரமென்னில்
செருக்குவாய்ப்புடையான்சிரபுரமென்னில்
செருக்குவாய்ப்புடையான்சிரபுரமென்னில்
செருக்குவாய்ப்புடையான்சிரபுரமென்னில். 7

*செருக்கு வாய்ப்பு உடையான் சிரபுரம் என்னில்*
*செருக்கு வாய்ப்பு உடையான் சிரபுரம் என்னில்*
*செருக்கு வாய்ப்பு உடையான் சிரபுரம் என்னில்*
*செருக்கு வாய்ப்பு உடையான் சிரபுரம் என்னில்.*

cerukkuvAyp puTaiyAn2 cirapura men2n2il
cerukkuvAyp puTaiyAn2 cirapura men2n2il
cerukkuvAyp puTaiyAn2 cirapura men2n2il
cerukkuvAyp puTaiyAn2 cirapura men2n2il.

**பொருள்:** தமது திருவருள் ஞானம் வாய்க்கப் பெறாதார்க்கு மலத்தைக் கெடச் செய்யாத சிவபெருமானுக்கு இருப்பிடம் எனது அறிவே. ஐம்பூதங்களால் உருவான உலகத்தை உண்ட திருமாலின் எலும்பினைத் தன் திருமேனியில் தரித்திருப்பவன் சிவபெருமானாகும். இப்பெருமான் 'யான்' 'எனது' என்னும் செறுக்கு அறுமாறு செய்பவன். செறுக்கினால் ஆணவ மலம் தோன்ற நின்ற பிரமனின் சிகரத்தை அறுத்தவன். மண்ணுயிர்கள் செறுக்குற்று நலியாதவாறு, அவர் தம் சிரசில் பதித்து காத்தருளுபவன். ஆத்தும விசாரமாகிய கர்மத்தில் ஐந்து இந்திரியங்களில் இச்சைகளை அவித்து அழித்தால் சிவபெருமானின் இருப்பிடமான சிவபுரத்தை அடையலாம்.

He is the one who does not exterminate the haughtiness of those who do not adore His Holy Feet; But I adore and worship His holy feet; therefore He has selected my soul as His permanent place of residence. He wears a garland made up of bones of Thirumaal who once swallowed the earth during his incarnation as Krishna. For those who do penance and prayer and wish to enjoy the pleasures of the celestial world, He is capable of satisfying their wish. Those devotee who never follow but fight against the ways of the five senses and chant the word 'Chira-puram' once (*சிரபுரம்* - one of the twelve names of Seekaazhi). To them, Lord Civan comes forward, and nullifies the ways of the five sense and showers grace on them to be in unison with His Holy Feet.

பொன்னடிமாதவர்சேர்புறவத்தவன்
பொன்னடிமாதவர்சேர்புறவத்தவன்
பொன்னடிமாதவர்சேர்புறவத்தவன்
பொன்னடிமாதவர்சேர்புறவத்தவன். 8

பொன்னடி மாதவர் சேர்புற வத்தவன்
பொன்னடி மாதவர் சேர்புற வத்தவன்
பொன்னடி மாதவர் சேர்புற வத்தவன்
பொன்னடி மாதவர் சேர்புற வத்தவன்.

pon2n2aTi mAtavar cErpuRa vattavan2
pon2n2aTi mAtavar cErpuRa vattavan2
pon2n2aTi mAtavar cErpuRa vattavan2
pon2n2aTi mAtavar cErpuRa vattavan2.

***பொருள்:*** அழகுடன் மாய நடனம் புரியும் பத்திர காளியும் பூத பிசாசுகளும் நிறைந்த மயானத்தைத் திருக்கோயிலாகக் கொண்டவன் சிவபெருமானாகும். இப்பெருமான் மகாரிஷிகள் தவம் செய்யும் ஆரணியக் காட்டில் தனித்துத் தவம் புரியும் முனிவன் இவன். அழகிய ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்டு இலக்குமியைப் போன்ற அழகுடைய இருடி பத்தினிகள் பிச்சையிட வந்து அணைந்தபோது பெருமானின் அழகில் மயங்கி தங்கள் கற்பைக் குலைத்தனர். பொன்னால் செய்யப்பட்ட கால் சிலம்புகளை பாதங்களில் அணிந்துள்ள கன்னியர் திரண்டு விளையாடும் புறவம் என்னும் சீகாழிப் பதியில் வாழ்கின்ற பெருமான் இவன் ஆவான்.

Lord Civan keeps the burning ground as His place of temple where the courageous Kaali with her blooming countenance, and a host of ghouls doth live. The holy saints who adhere to disciplined way of life do penance in the forest area, where Lord Civan also does His special acts of divinity. The wives of sages who live in the Daarukaa forest area (*தாருகாவனத்து இருடி பத்தினியர்கள்*) wearing jewelry similar to that of goddess (Lakshmi) (of wealth), come forward to give alms to the mendicant Lord Civan. When He reveals His perfect beatitude and showers His grace on them. This Lord Civan is entempled in the sacred city of Puravam (*புறவம்* - one of the twelve names of Seekaazhi), where damsels wearing golden jewelry join together and play and enjoy their life.

தசமுகனெரிதரவூன்றுசண்பையான்
தசமுகனெரிதரவூன்றுசண்பையான்
தசமுகனெரிதரவூன்றுசண்பையான்
தசமுகனெரிதரவூன்றுசண்பையான். 9

*தசமுகன் எரிதர ஊன்று சண்பையான்*
*தசமுகன் எரிதர ஊன்று சண்பையான்*
*தசமுகன் எரிதர ஊன்று சண்பையான்*
*தசமுகன் எரிதர ஊன்று சண்பையான்.*

tacamuka neRitara Un2Ru caNpaiyAn2
tacamuka neRitara Un2Ru caNpaiyAn2
tacamuka neRitara Un2Ru caNpaiyAn2
tacamuka neRitara Un2Ru caNpaiyAn2.

**பொருள்:** உயிர்களிடம் தயவுடையவன் அரையிலே அக்கினி வீசுகின்ற விரிந்த படத்தினை உடைய பாம்பை அரைஞானாகக் கட்டி இருப்பவன். சிவஞானிகளின் கூட்டத்திற்கு 'அது' என்ற மெய்ப்பொருளைத் தோற்றுவிப்பவன். புலியின் ஊன்பொருந்திய தோல் ஆடையை அரையிலே உடுத்தி இருப்பவன். ஆத்தும அறிவிற்கு எதிரியான அகங்காரம் அழியும்படி எனது அறிவில் எதிர்ப்பட்டவன். கயிலாய மலையில் எழுந்தருளி இருந்து ஆத்துமாக்களை இரட்சிப்பவன். 'விசேடத்தை உடையது' என்று போற்றும் எல்லாச் சமயங்களுக்கும், அதற்கு ஏற்றபடி அருளுபவன். பத்துத் தலைகளை உடைய இராவணன் நெரியும்படி திருவிரலால் அடர்த்தவன் யாரென்றால் சண்பை என்னும் சீகாழியில் வீற்றிருக்கும் சிவபெருமானே அவன்.

He is the compassionate Lord on all souls. He has tied around His waist the most ferocious hooded snake which emits fire. He wears the tiger skin as His loin cloth. He imparted virtuous knowledge in my mind by which my haughtiness disappeared under his benign grace. He created mount Kailas. Entempled there, He has the special energy of wisdom which has the virtue of liberating the souls from the bondage of karma and establishing them in bliss. For the followers of all the six different religions, He is the renowned Supreme Being, and shines separately in their six respective faiths. He is the one who pressed slightly the top of mount Kailas by His soft toe, when the ten headed Raavanan got crushed under the mountain. This our Lord Civan is entempled in the holy city of Chanbai (*சண்பை* - one of the twelve names of Seekaazhi).

காழியானயனுள்ளவாகாண்பரே
காழியானயனுள்ளவாகாண்பரே
காழியானயனுள்ளவாகாண்பரே
காழியானயனுள்ளவாகாண்பரே. 10

*காழி யானய னுள்ளவா காண்பரே*
*காழி யானய னுள்ளவா காண்பரே*
*காழி யானய னுள்ளவா காண்பரே*
*காழி யானய னுள்ளவா காண்பரே.*

kAzi An2aya uLLavA kANparE
kAzi An2aya uLLavA kANparE
kAzi An2aya uLLavA kANparE
kAzi An2aya uLLavA kANparE.

**பொருள்:** நிலைபெற்ற நிர்மலமான சித்தத்தை உடைய பக்தர்களுக்கு சத்தியப் பொருள் விளையும் பொருட்டு அருட்கண்ணால் நோக்குபவர் சிவபெருமான் ஆவார். நீலகண்டனின் கருணையை நினைத்து ஞானமார்க்கத்தை விரும்பும் சிவஞானிகள், 'தங்களின் ஆணவ மலம் அழிக்கப்படுவதே சிவபெருமானின் விருப்பம்' என்பதை தங்களின் அறிவிலே கருதுவார்கள். திருமாலும் பிரம்மாவும் திருவடியும் திருமுடியும் காணும் பொருட்டு வராக உருவமும் அன்னத்தில் உருவமாகவும் வடிவு கொண்டனர். அவர்கள் கருதியபடி சிவபெருமானைக் காண முடியவில்லை. அன்னியமே கண்டனர். என் பொருட்டு காழி

என்னும் திருப்பதியைப் படைத்தவனை என் ஐயனை, எனது ஆசையை, அவர்கள் இருவரும் தேடி மறத்தல் ஒழிந்து எவ்வாறு காண்பர்?

To those devotees who have firm conviction about Divinity, He desires to impart Reality (*சத்தியப்பொருள்*) in their minds. With this view, He graces them through His divine eye (*ஞானக்கண் பாவித்தல்*). He is our God. His sacred dark blue throat shines because of His benignity. By witnessing and adoring His throat, devotees were able to destroy their haughtiness and long for reaching His Holy Feet. Thirumaal and Brahma could not see the Holy Feet and head of our Divine Being; but saw only that which is transience. He created the city of Seekaazhi for my sake. He is my preceptor (*ஐயன்*). Those who are spiritually ignorant search for Him in vain. He is an invisible Supreme Being. Then how could Brahma and Thirumaal see this Lord of mine?

கொச்சையண்ணலைக்கூடகிலாருடன்மூடரே
கொச்சையண்ணலைக்கூடகிலாருடன்மூடரே
கொச்சையண்ணலைக்கூடகிலாருடன்மூடரே
கொச்சையண்ணலைக்கூடகிலாருடன்மூடரே. 11

*கொச்சையண் ணலைக்கூட கிலாருடன் மூடரே*
*கொச்சையண் ணலைக்கூட கிலாருடன் மூடரே*
*கொச்சையண் ணலைக்கூட கிலாருடன் மூடரே*
*கொச்சையண் ணலைக்கூட கிலாருடன் மூடரே.*

koccaiyan2 alaikkUTa kilAruTan2 mUTarE
koccaiyan2 alaikkUTa kilAruTan2 mUTarE
koccaiyan2 alaikkUTa kilAruTan2 mUTarE
koccaiyan2 alaikkUTa kilAruTan2 mUTarE.

***பொருள்:*** ஆணவ மலத்தோடு கூடிய மயக்கத்தை வென்றவர்கள் பிறவி பெறமாட்டார்கள். புலால் நாற்றமுடைய அழுக்கு உடம்பை பொய் என்று கருதாமல் அதுவே தமது நிலைபெற்ற உருவம் என்று எண்ணி துவர் ஆடையால் மூடும் உடம்பை பௌத்தர்களும், மூடாத சமணர்களும் சிவபெருமானை அணுகார். பேதைத் தன்மை உடையதும், மீன் நாற்றமும் உடைய மச்சகந்தியின் உடம்பை விரும்பி, அவளுடைய சரீரத்தைச் சுகந்த மணம் வீசும்படி செய்து, பராசரன் அவளைப் பொருந்தினான். பராசர முனிவரால் பூசிக்கப்பட்டதால் கொச்சை என்ற பெயரைக் கொண்ட சீகாழிப் பதியில் எழுந்தருளியிருப்பவர் சிவபெருமான் ஆவான். இந்தத் தலைமையான பெருமானை உள்ளபடி தரிசனம் செய்து வழிபட

மாட்டார்கள். நினைவு எவ்வாறு இருக்கும் எனில் அது, மழைக்காலத்து இருளையும் வெளிச்சம் என்று மயங்கி நிற்கும் இருண்ட மயக்கத்தை உடைய நினைவாக இருக்கும்.

Those souls who are full of Ego are veiled by their physical body and/or subtle body. Due to attachment to their physical body, the Buddhists have a mental delusion that the pungent smell of raw meat and/or fish emitting from their physical body is natural and permanent. Therefore, they wear salmon coloured cloth over their body. The body Mach-cha-gandhi (*மச்சகந்தி*) daughter of the headman of fishermen community. She emits a very pungent bad smell of dead fish from her body. Sage Paraasaran (*பராசர முனிவர்*) came to Seekaazhi and prayed to Lord Civa therein to bless her, so that she may hereafter emit fragrant odor from her body. Since sage Paraasaran prayed thus in Seekaazhi, this city came to be called as 'Kochai-nagar (*கொச்சை நகர்* – one of the twelve names of Seekaazhi). Those who do not offer worship to the Supreme Being of this holy town will not recover from the delusion of the three bondages of the soul.

கழுமலமுதுபதிக்கவுணியன்கட்டுரை
கழுமலமுதுபதிக்கவுணியன்கட்டுரை
கழுமலமுதுபதிக்கவுணியன்கட்டுரை
கழுமலமுதுபதிக்கவுணியன்கட்டுரை. 12

*கழுமல முதுபதிக் கவுணியன் கட்டுரை*
*கழுமல முதுபதிக் கவுணியன் கட்டுரை*
*கழுமல முதுபதிக் கவுணியன் கட்டுரை*
*கழுமல முதுபதிக் கவுணியன் கட்டுரை.*

kazumala mutupatik kavuNiyan2 kaTTurai
kazumala mutupatik kavuNiyan2 kaTTurai
kazumala mutupatik kavuNiyan2 kaTTurai
kazumala mutupatik kavuNiyan2 kaTTurai.

பொருள்: மிகுதிப்பட்ட தோஷமாக உள்ள சுக்கிலம் மற்றும் சுரோணிதம் என்ற நீரினால் பூமியில் உள்ள எல்லா உயிர்களும், பிறந்து, வளர்ந்து பின்பு தேய்ந்து மரிக்கின்றன. இந்தப் பிறப்புக்களைக் கொண்ட ஜென்மங்களை மலம் அறுத்து, கழுவி அருள்பவர் சிவபெருமான் ஆவான். இப்பெருமான் தனது பாதியாகிய திருவருளால் என்னைச் சுவீகரித்து, அந்த

அருள்வழியாக என்னில் இடையறாது வாழ்கின்றனர். தம்மை எனக்குத் தந்த அடிமை குலையாமலும் என்னை விட்டு விலகாத கருத்தரும் அவரே. மாயா மயக்கத்தில் மூழ்கி, பந்தம் எது, முத்தி எது என்று இரண்டுமே தெரியாமல் திண்டாடும் உயிர்களுக்கு அமுதம் போன்று அரியவனாக இருக்கின்றான். பொன்னைப் போன்ற ஒளி உருவினனாக சிருஷ்டிக்குக் கருத்தாவான பிரம்மனின் கபாலத்தில் பிச்சை கொண்டு நுகரும் கருணையாளன் அவன். திருக்கழுமலம் என்ற பழமையானதும் பன்னிரு பெயர் கொண்டதுமான அனாதிமூலமாகிய பதி சீகாழி. இதில் கவுணிய கோத்திரத்தில் தோன்றிய ஞானசம்பந்தன் கடவுளுக்குப் படைக்கும் அமுதமாக வெளிப்படுத்திய இப்பதிகப் பாடல்களை மலத்தில் அழுந்தாத ஒருவராகிலும், பலராகிலும் உரை செய்பவர்கள் உயர்ந்த நிலையை அடைவது உறுதி. ஆதலால் இடைவிடாது உரை செய்வீர்களாக.

He ended my cycle of births and deaths. He also uprooted the three evil passions of my soul. By His grace, He gave Himself to me and accepted me as His servitor. He is very rare to those who do not have any spiritual wisdom. His body frame is dazzling like gold. He accepts alms in the dried skull bone of Brahma. Myself was born in this sacred city of Thiru-k-kazhu-malam in the lineage known as Kaunya gothram (*கவுணிய குலத்தில் பிறந்த யான்*). This city is called by twelve different names. On Lord Civa enshrined in the temple in this city, I sang this 'E-ke—paatham' holy hymn with utmost devotion. If any devotee individually or in a gathering collectively can chant this holy hymn with sincere devotion he will shine bright and effulgent in spiritual wisdom. Therefore chant this hymn uninterruptedly.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*127ஆம் பதிகம் முற்றிற்று*
End of 127th Hymn

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# 128. திருப்பிரமபுரம்

## திருத்தல வரலாறு:

முதலாம் பதிகம் பார்க்க.

# 128. THIRU-P-PIRAMA-PURAM

## HISTORY OF THE PLACE

See First Hymn.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 128. திருப்பிரமபுரம்

## 128. THIRU-P-PIRAMA-PURAM

பண் : வியாழக்குறிஞ்சி –
திருவெழுகூற்றிருக்கை
ராகம் : சௌராஷ்டிரம்

*Pann : Viyazha-k-kurinji –*
*Thiru-ezhu-kuur-rirukkai*
*Raagam : Saurashtram*

ஓருருவாயினைமானாங்காரத்
தீரியல்பாயொருவிண்முதல்பூதலம்
ஒன்றியவிருசுடரும்பர்கள்பிறவும்
படைத்தளித்தழிப்பமும்மூர்த்திகளாயினை
இருவரோடொருவனாகிநின்றனை

ஓரால்நீழலுன்கழலிரண்டும்
முப்பொழுதேத்தியநால்வர்க்கொளிநெறி
காட்டினைநாட்டமூன்றாகக்கோட்டினை
இருநதிஅரவமோடொருமதிசூடினை
ஒருதாளீரயின்மூவிலைச்சூலம்

நாற்கால்மான்மறிஐந்தலையரவம்
ஏந்தினைகாய்ந்தநால்வாய்மும்மதத்
திருகோட்டொருகரியீடழித்துரித்தனை
ஒருதனுவிருகால்வளையவாங்கி
முப்புரத்தோடுநானிலமஞ்சக்

கொன்றுதலத்துற அவுணரையறுத்தனை
ஐம்புலன்நாலாம்அந்தக்கரணம்
முக்குணமிருவளியொருங்கியவானோர்
ஏத்தநின்றனையொருங்கியமனத்தோ
டிருபிறப்போர்ந்துமுப்பொழுதுகுறைமுடித்து

நான்மறையோதிஐவகைவேள்வி
அமைத்தாறங்கமுதலெழுத்தோதி
வரன்முறைபயின்றெழுவான்றனைவளர்க்கும்
பிரமபுரம்பேணினை
அறுபதமுரலும்வேணுபுரம்விரும்பினை

இகலியமைந்துணர்புகலியமர்ந்தனை
பொங்குநாற்கடல்சூழ்வெங்குருவிளங்கினை
பாணிமூவுலகும்புதையமேல்மிதந்த
தோணிபுரத்துறைந்தனைதொலையாவிருநிதி
வாய்ந்தபூந்தராயேய்ந்தனை

வரபுரமென்றுணர்ச்சிரபுரத்துறைந்தனை
ஒருமலையெடுத்தவிருதிறலரக்கன்
விறல்கெடுத்தருளினைபுறவம்புரிந்தனை
முந்நீர்த்துயின்றோன்நான்முகனறியாப்
பண்பொடுநின்றனைசண்பையமர்ந்தனை

ஐயுறுமமணருமறுவகைத்தேரரும்
ஊழியுமுணராக்காழியமர்ந்தனை
எச்சனேழிசையோன்கொச்சையைமெச்சினை
ஆறுபதமுமைந்தமர்கல்வியும்
மறைமுதல்நான்கும்

மூன்றுகாலமுந்தோன்றநின்றனை
இருமையின்ஒருமையும்ஒருமையின்பெருமையும்
மறுவிலாமறையோர்
கழுமலமுதுபதிக்கவுணியன்கட்டுரை
கழுமலமுதுபதிக்கவுணியனறியும்

அனையதன்மையையாதலின்நின்னை
நினையவல்லவரில்லைநீணிலத்தே.

ஓர்உரு ஆயினை; மான் ஆங்காரத்து
ஈர் இயல்புஆய்; ஒரு விண் முதல் பூதலம்
ஒன்றிய இரு சுடர் உம்பர்கள் பிறவும்
படைத்து, அளித்து, அழிப்ப, மும்மூர்த்திகள் ஆயினை
இருவரோடு ஒருவன் ஆகி நின்றனை;

ஓர் ஆல் நிழல், ஒண் கழல் இரண்டும்
முப்பொழுது ஏத்திய நால்வர்க்கு ஒளிநெறி
காட்டினை; நாட்டம் மூன்றுஆகக் கோட்டினை;
இருநதி அரவமோடு ஒருமதி சூடினை;
ஒருதாள் ஈர் அயில் மூஇலைச்சூலம்,

நால்கால், மான்மறி, ஐந்தலை அரவம்,
ஏந்தினை; காய்ந்த நால் வாய் மும்மதத்து
இருகோட்டு ஒருகரி ஈடு அழித்து உரித்தனை;
ஒருதனு இருகால் வளைய வாங்கி,
முப்புரத்தோடு நானிலம் அஞ்சக்,

கொன்று தலத்து உற அவுணரை அறுத்தனை;
ஐம்புலன், நால்ஆம் அந்தக்கரணம்,
முக்குணம் இருவளி, ஒருங்கிய வானோர்
ஏத்த நின்றனை; ஒருங்கிய மனத்தோடு
இருபிறப்பு ஓர்ந்து, முப்பொழுது குறை முடித்து,

நால்மறை ஓதி, ஐவகை வேள்வி
அமைத்து, ஆறுஅங்கம் முதல் எழுத்து ஓதி,
வரல் முறை பயின்று, எழு வான்தனை வளர்க்கும்
பிரமபுரம் பேணினை;
அறுபதம் முரலும் வேணுபுரம் விரும்பினை;

இகலி அமைந்து உணர் புகலி அமர்ந்தனை;
பொங்கு நால்கடல் சூழ் வெங்குரு விளங்கினை;
பாணி மூஉலகும் புதைய, மேல் மிதந்த
தோணிபுரத்து உறைந்தனை; தொலையா இருநிதி
வாய்ந்த பூந்தராய் ஏய்ந்தனை;

வர புரம் ஒன்று உணர் சிரபுரத்து உறைந்தனை;
ஒருமலை எடுத்த இருதிறல் அரக்கன்
விறல் கெடுத்து அருளினை; புறவம் புரிந்தனை;
முந்நீர்த் துயின்றோன், நான்முகன், அறியாப்
பண்பொடு நின்றனை; சண்பை அமர்ந்தனை;

ஐயுறும் அமணரும் அறுவகைத் தேரரும்
ஊழியும் உணராக் காழி அமர்ந்தனை;
எச்சன் ஏழ் இசையோன் கொச்சையை மெச்சினை;

ஆறுபதமும் ஐந்து அமர் கல்வியும்,
மறை முதல் நான்கும்,

மூன்றுகாலமும், தோன்ற நின்றனை;
இருமையின் ஒருமையும், ஒருமையின் பெருமையும்,
மறு இலா மறையோர்
கழுமல முது பதிக் கவுணியன் கட்டுரை
கழுமல முதுபதிக் கவுணியன் அறியும்;

அனைய தன்மையை ஆதலின், நின்னை
நினைய வல்லவர் இல்லை, நீள் நிலத்தே.

Or uru Ayin2ai; mAn2 AgkArattu
Ir iyalpu Ay, oru viN mutal pUtalam
on2Riya irucuTar umparkaL piRavum
paTaittu, aLittu, azippa, mummUrttikaL Ayin2ai;
iruvarOTu oruvan2 Aki nin2Ran2ai;

Or Al nIzal, oN kazal iraNTum
muppozutu Ettiya nAlvarkku oLineRi
kATTin2ai; nATTam mUn2Rum Akak kOTTin2ai;
iru nati aravamOTu orumati cUTin2ai;
orutAL Ir ayil mU ilaic cUlam,

nAlkAl mAn2maRi, aintalai aravam,
Entin2ai; kAynta nAl vAy mum matattu
iru kOTTu orukari ITu azittu urittan2ai;
oru tan2u irukAl vaLaiya vAgki,
muppurattOTu nAn2ilam anjca,

kon2Ru talattu uRa avuNarai aRuttan2ai;
aimpulan2, nAl Am antakkaraNam,
mukkuNam, iruvaLi, orugkiya vAn2Or
Etta nin2Ran2ai; orugkiya man2attOTu,
iru piRappu Orntu, muppozutu kuRai muTittu,

nAlmaRai Oti, aivakai vELvi
amaittu, ARu agkam mutal ezuttu Oti,
varal muRai payin2Ru, ezu vAn2tan2ai vaLarkkum
piramapuram pENin2ai;
aRupatam muralum vENupuram virumpin2ai;

ikali amaintu uNar pukali amarntan2ai;
pogku nAlkaTal cUz vegkuru viLagkin2ai;
pANi mUulakum putaiya, mEl mitanta

tONipurattu uRaintan2ai; tolaiyA iruniti
vAynta pUntarAy Eyntan2ai;

vara puram on2Ru uNar cirapurattu uRaintan2ai;
orumalai eTutta irutiRal arakkan2
viRal keTuttu aruLin2ai; puRavam purintan2ai;
munnIrt tuyin2ROn2, nAn2mukan2, aRiyAp
paNpoTu nin2Ran2ai; caNpai amarntan2ai;

aiyuRum amaNarum aRuvakait tErarum
Uziyum uNarAk kAzi amarntan2ai;
eccan2 Ez icaiyOn2 koccaiyai meccin2ai;
ARupatamum, aintu amar kalviyum,
maRai mutal nAn2kum,

mUn2Ru kAlamum, tOn2Ra nin2Ran2ai;
irumaiyin2 orumaiyum, orumaiyin2 perumaiyum,
maRu ilA maRaiyOr
kazumala mutu patik kavuNiyan2 kaTTurai
kazumala mutupatikka uNiyan2 aRiyum;

an2aiya tan2maiyai Atalin2, nin2n2ai
nin2aiya vallavar illai, nIL nilattE.

**வரிகள் 1 – 5**

சிவபெருமான் எல்லாத் தத்துவங்களையும் கடந்து நிற்பவன். மனம் மெய் வாக்குகளுக்கு எட்டாதவன். ஏகரூபமாக இருப்பவன். அவன் ஐந்தொழில்களை நிகழ்த்த வேண்டி சிவம், சக்தி என்ற இரண்டுவித உருவாகின்றவன். விண்ணில் தொடங்கி பூமி ஈறாக உள்ள பஞ்ச பூதங்களையும் இருசுடர்களாகிய சூரியன் சந்திரனையும் மற்றும் தேவர்களையும் உலக நுகர்ச்சிப் பொருள்களையும் படைத்து, அவர்களை காக்கவும் அழிக்கவும் வல்ல, பிரம்மா, விஷ்ணு, உருத்திரன் ஆகிய மும்மூர்த்திகளாகவும் ஆகின்றவன். பிரம்மாவையும், விஷ்ணுவையும் உடனாக்கிச் சேர்த்து, உருத்திரத் தன்மையைத் தன்பால் தேக்கி, ஒப்பற்ற ஒருவனாய் நிற்பவன்.

**வரிகள் 6 – 8**

மரங்களுக்கு எல்லாம் தலைமையாக இருக்கும் ஆலமரத்தின் நிழலிலே எழுந்தருளியிருந்து, அவனது அழகிய பாதங்களை, உதயம், மத்தியானம், அஸ்தமனம் என்கின்ற மூன்று காலங்களிலும் தோத்திரம் செய்த, சனகர், சனந்தனர், சனற்குமாரர், சத்தியஞானதரிசினி

என்னும் நால்வர்க்கு உயர்ந்த உண்மை நெறியைச் சின்முத்திரையால் உணர்த்தி அருளியவர். பிரம்மா முதல் ஆத்மாக்கள் தங்களின் காட்சி என்ற புலனால் எல்லாவற்றையும் காண முடியாததால், சூரியன், சந்திரன், அக்கினி ஆகிய மூவர்களையும் முக்கண்களாகக் கொண்டருளி அந்தகாரமாகிய இருளைப் போக்கியவர்.

**வரிகள் 9 – 16**

பெரிதாகிய கங்கை நதியையும், ஒப்பில்லாத பாம்பினையும், ஒருகாலத்திலும் முதிர்ச்சி அடையாத பிறைச் சந்திரனையும் சூடியிருப்பவன். பிரணவமாய் இருந்துள்ள ஒரு காம்பினையும் ஈர்க்கும் கூர்மையினையும், பிரம்மா, விஷ்ணு, உருத்திரன் என்ற மூன்று இலைகளை உடைய சூலத்தையும், நான்கு வேதங்களையும் நான்கு கால்களை உடைய மான் மன்றினையும், பஞ்சாட்சரமாகிய ஐந்து தலைகளை உடைய அரவத்தையும் கைகளில் தரித்திருப்பவன். நீர் வற்றித் தொங்கும் வாயை உடையதும் மதம் பொருந்திய இரண்டு தந்தங்களை உடையதுமான ஒப்பற்ற யானையின் பெருமையை அழித்து அதன் தோலை உரித்தவன். ஒப்பில்லாத மேருமலையாகிய வில்லை இருதலையும் வளைய வாங்கி நானிலத்தோர் அஞ்சி வியக்குமாறு முப்புரத்தையும் அழித்து அதில் இருந்த அசுரர்களையும் அறுத்தனை.

**வரிகள் 17 – 20**

ஐம்புலன்களான சத்த, பரிச, ரூப, ரச, கந்த ஆகிய வகைகளையும், அந்தக்கரணங்களான மனம், புத்தி, சித்தம், அகங்காரம் ஆகிய நான்கினையும், முக்குணங்களான சாத்வீகம், ராஜசம், தாமசம் ஆகிய மூன்றினையும், இரு காற்றுக்களான பிராணன், அபானன் ஆகியவற்றினையும் மூலாதாரத்தில் ஒடுக்கிய தேவர்கள் ஏத்த நின்றனை. ஒருமைப்பட்ட மனத்துடன் சிவபெருமானின் பாதங்களை நினைந்து, உபநயத்தில் முன்பிருந்த பிறப்பையும் அதன்பின் உண்டான பிறப்பையும் உணர்ந்து, மூன்று வேளைகளிலும் செய்யப்படும் செபம், அனுட்டானம், ஓமங்கள் ஆகியவற்றைச் செய்து,

**வரிகள் 21 – 24**

நான்கு வேதங்களையும் ஓதி, ஐந்து வகை வேள்விகளான சிவபூசை, குருபூசை, மாகேசுர பூசை, சான்றோர் உபசரிப்பு, அதிதி உபசரிப்பு ஆகியவற்றை முடித்து, ஆறு அங்கங்களான ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் ஆகியவற்றை நடத்தி, இவைகளுக்கு ஆதாரமான பிரணவத்தையும் உச்சரித்து, ஒழுங்குமுறைப்படி பயின்று,

தேவர்களுக்குக் கொடுக்கும் அவிர்பாகத்தைக் கொடுத்து, மழைபெய்விக்கும் சான்றோர்களால் பூசிக்கப்பட்ட பிரமபுரம் என்ற திருப்பதியில் விரும்பி எழுந்தருளி இருப்பவன்.

**வரி 25**

ஆறுகால்களை உடைய வண்டுகள் இசைபாடும் பொழில் சூழ்ந்த வேணுபுரம் என்னும் திருப்பதியில் எழுந்தருளி இருப்பவன். வேணுபுரம் என்ற பெயர் வரக் காரணமாவது: வேணு என்பவன் ஒரு இந்திரன். அவனுடன் கெஜமுகன் என்ற அசுரன் போர் செய்ய அசுரனிடம் தோற்றுவிடுகிறான். அதனால் அவன் பிரமபுரத்தில் எழுந்தருளி உள்ள சிவபெருமானிடம் விண்ணப்பம் செய்தான். சிவபெருமான் விநாயகப் பெருமானை நோக்கி, 'நீ, யானை உருவம் கொண்டு உனது வலது கொம்பை முறித்தெறிந்து கசமுகாசுரனைக் கொன்று, வேணு என்கின்ற இந்திரனைச் சுவர்க்க லோகத்தில் குடிபுக விட்டுவா' என்று திருவுளம்பற்ற, கணேச மூர்த்தியும் அவ்வாறே செய்தார். அதனால் வேணுபுரம் என்ற பெயர் உண்டாயிற்று.

**வரி 26**

தேவர்கள் முன்பு புகலிடம் என்று புகுந்ததால் திருப்புகலி என்னும் பெயர் பெற்ற பதியில் எழுந்தருளி இருப்பவன். புகலி என்னும் பெயர் வரக்காரணமாவது: தேவலோகமான அமராபதியைச் சூரபத்மன் என்ற அசுரன் சங்காரம் செய்தான். அந்த அசுரனுடன் தேவேந்திரன் முதலான தேவர்கள் யுத்தம் செய்தும் அவனை வெல்ல முடியாமல் வேணுபுரத்திற்கு வந்து சிவபெருமானைச் சரணடைந்தார்கள். சிவபெருமான் கருணை கூர்ந்து சுப்பிரமணியப் பெருமானை வரவழைத்து, 'நீ ஆறுமுகமும் பன்னிரண்டு கைகளுமாய் போய் சூரபத்மனை செயித்து, தேவலோகத்தில் தேவர்களை குடிபுகவிட்டு வா' திருவாய் மலர்ந்தருள, முருகப் பெருமானும் அவ்வாறு செய்ததால் புகலி என்னும் பெயர் உண்டாயிற்று.

**வரி 27**

மிகவும் கோபிக்கப்பட்ட கடல்சூழ்ந்த வெங்குரு என்னும் திருப்பதியில் எழுந்தருளி இருப்பவன். வெங்குரு என்னும் பெயர் வரக்காரணமாவது: தேவகுருவான பிரகஸ்பதி தன்னைவிட வேறு கர்த்தா எவரும் இல்லை என கர்வம் அடைந்தான். சிவபெருமான் இவனது கர்வத்தை அடக்க வேண்டி, இவனுடைய அதிகாரங்களை மாற்றி அமைத்தார்.

பிரகஸ்பதி பயத்துடன் புகலி என்னும் திருப்பதியில் சிவபெருமானைச் சரணடைந்தார். சிவபெருமான் கருணை கூர்ந்து அவனை மன்னித்து திரும்பவும் அவனுக்கு தேவர்களின் குருவாகிய அதிகாரத்தைக் கொடுத்தார். இதனால் வெங்குரு என்னும் பெயர் உண்டாயிற்று.

**வரிகள் 28–29**

பாணி என்ற பிரளய வெள்ள நீரானது, பூமி, அந்தரம், சுவர்க்கம் என்கின்ற மூவுலகையும் மூழ்கடித்த போது, அந்த பிரளய நீரைச் சங்காரம் பண்ணி அருளை அதன்மேலே தோணி போல் மிதந்த வெங்குருவாகிய தோணிபுரம் என்ற திருப்பதியில் எழுந்தருளி இருப்பவன்.

**வரி 30**

வேண்டினார் வேண்டியதை அவர்கள் வேண்டியபடியே கொடுக்கும்வண்ணம் சங்கநிதி, பதுமநிதி என்ற இரண்டு நிதிகளும் பூவும் தராயுமாக எம்பெருமானைப் பூசித்தமையால் பூந்தராய் எனப்பட்டது. இத்திருப்பதியில் எழுந்தருளி இருப்பவன். பூந்தராய் என்னும் பெயர் வரக்காரணமாவது: ஒரு காலத்தில் 'தொலையாத வரம்' வேண்டி திருத்தோணிபுரத்தில் சிவபெருமானை இரண்டு நிதிகளும் பூசித்தனர். சிவபெருமானும் அவ்வரத்தைக் கொடுத்து அருளி மகா சங்காரத்தில் தம்முடைய திருக்கைகளில் தரித்தருளும் வரமும் கொடுத்ததால் பூந்தராய் என்னும் பெயர் உண்டாயிற்று.

**வரி 31**

வரத்தைத் தருவதான புரம் என்று உணரத்தக்க சிரபுரம் என்னும் திருப்பதியில் எழுந்தருளி இருப்பவன். சிரபுரம் என்ற பெயர் வரக் காரணமாவது: தேவர்களும் பிரம்ம விஷ்ணுவும் கூடி, கிடைத்த அமிர்தத்தை பங்கிடும் முகமாக தேவர்களை வரிசையாக இருத்தினார். அமிர்தம் படைத்துக் கொண்டு வரும்போது, இராகுவும் கேதுவும் அந்தப் பந்தியில் கள்ளத்தனமாய் இருப்பதைக் கண்டு, விஷ்ணுவானவர் பரிமாறும் சட்டுவத்தை வைத்து அவர்களின் தலைகளை வெட்டிவிட்டார். உடலை இழந்த பாம்புகள் இரண்டும் பூந்தராயில், எழுந்தருளியிருக்கும் சிவபெருமானைச் சரணடைந்து, தங்களின் வெட்டுண்ட இரண்டு சிரங்களுடன் பூசித்தனர். இதனால் சிரபுரம் என்ற பெயர் உண்டாயிற்று.

**வரிகள் 32 – 33**

பெருமையுடைய கயிலாயம் என்ற சிவபெருமானின் ஆலயமான கயிலைமலையை புஜபலத்தால் எடுத்த இராவணனின் கர்வத்தை அடக்கியவன்.

**வரி 33**

பிரஜாபதி என்ற பிரம்மரிஷி, கௌதம ரிஷியை நோக்கி, 'நீ காம இச்சையை இன்னும் வெற்றி கொள்ளவில்லையே' என்று ஏளனம் செய்தார். இவர் பிரம்மரிஷியை நோக்கி 'நீ புறா வடிவம் எடுத்து நரமாமிசம் புசிப்பாயாக' என்று சபித்தார். ஒருநாள் பிரஜாபதி புறாவடிவத்தில் மாமிசம் தேடி சோழ வம்சத்தின் அரசன் ஒருவனிடம் சென்று தனக்கு மாமிசம் தரும்படி கேட்டார். அரசனும் புறாவுக்கு தன் உடலையே மாமிசமாகக் கொடுத்து சோர்ந்து விழுந்தான். பிரஜாபதியான புறா, ராசா சரீரம் பெறும்படியும், தன் சாப தோஷம் நீங்கவும், சிரபுரத்தில் எழுந்தருளியுள்ள சிவபெருமானைச் சரணடைந்தார். சிவபெருமான் கருணை கூர்ந்து புறாவுக்கு சாப விமோசனம் கொடுத்து அரசனையும் உயிர்ப்பித்தார். இதனால் புறவம் என்ற பெயர் உண்டாயிற்று.

**வரிகள் 34 – 35**

ஆற்று நீர், வேற்று நீர், ஊற்று நீர் என்று சொல்லப்படுகின்ற முந்நீராகிய சமுத்திரத்தில் துயில்கின்ற நாராயணனும் நான்முகனான பிரம்மாவும் அடியும் முடியும் தேடியும் காண முடியாத பண்பினனாய் எழுந்தருளி இருந்தனை.

**வரி 35**

சண்பை என்னும் பெயர் வரக்காரணமாவது: துர்வாச முனிவரின் ஆசிரமத்தில் கிருஷ்ணர் அவதாரத்தில் உள்ள கோபாலப் பிள்ளைகளை தங்களின் ஒருவனை கர்ப்பிணியாக பாவனை செய்வித்து, அவள் பெற்றெடுப்பது ஆண்பிள்ளையா அல்லது பெண்பிள்ளையா என்று வேடிக்கையாக துர்வாச முனிவரைக் கேட்டனர். முனிவர் கோபமடைந்து இவள் உங்கள் வம்சத்தைச் சங்கரிக்கும்' இரும்பு உலக்கையைப் பெறுவாள் என்று சபித்தார். அவ்வாறே உலக்கை வெளிவந்தது. கிருஷ்ணர் அந்தச் செய்தியைக் கேட்டு அந்த இரும்பு உலக்கையைப் பொடியாகும்படி செய்து அவற்றைச் சமுத்திரத்தில் போட்டுவிட்டார். அந்தப் பொடியில் ஒரு வேப்பம் விதை அளவுள்ள ஒரு இரும்புத்துண்டை ஒரு மீன் விழுங்கியது. அந்த மீனைப் பிடித்த மீன்வேடன் ஒருவன், அந்த இரும்புத்துண்டை தனது அம்பில் பொருத்தினான். மற்ற இரும்புத் துண்டுகள் கடல் அலையால் ஒதுக்கப்பட்டு சண்பைக் கதிர்களாக முளைத்தன. கோபாலப் பிள்ளைகள் அந்தக் கதிர்களை விளையாட்டாக பிடுங்கியபோது, அதனால் அவர்கள் காயப்பட்டு இறந்தார்கள். கிருஷ்ணர் இதைக் கேள்விப்பட்டு ஆலமரத்தின் ஒரு இலையிலே யோகாசனமாக ஒரு பாதத்தை

மடித்து மற்றொரு காலை தூக்கி அமர்ந்திருந்தார். அந்த சமயத்தில் வேடனுக்கு அந்தப் பாதம் ஒரு செம்பருந்துபோல் தோற்றமளித்ததால் அதன்மேல் அம்பை எய்தான். அதனால் கிருஷ்ணரும் பரமபதத்தை அடைந்தார். இந்தச் சாபம் துர்வாச முனிவரை சென்றடைந்தது. சாப விமோசனம் பெற முனிவர் புறவம் என்ற திருப்பதியில் எழுந்தருளிய சிவபெருமானிடம் சரணடைந்தார். சிவபெருமான் கருணைகூர்ந்து சண்பை சாபத்தை நீக்கி, சண்பை முனி என்ற பெயரையும் தந்தருளினார். இதனால் சண்பை என்ற பெயர் உண்டாயிற்று.

### வரிகள் 36 – 37

வேதாகம புராணங்களிலும் சாத்திரங்களிலும் உள்ள உண்மைகளைப் பற்றி ஐயமுற்றிருக்கின்ற அமரர்களும் அறுவகைச் சுவைகளான கைப்பு, புளிப்பு, கார்ப்பு, உவர்ப்பு, துவர்ப்பு, தித்திப்பு என்னும் சுவைகளை உச்சிக் காலத்திற்கு முன்னரே புசிக்கும் புத்தர்களும், ஊழிக்காலத்தும் சிவபெருமானை உணராமல் இருக்கின்றனர். மிகவும் விஷத்தையுடைய காளி என்கின்ற நாகம் பூசித்ததால் சீகாழி என்னும் பெயரை உடைய திருப்பதியில் எம்பெருமான் எழுந்தருளி இருக்கின்றான்.

### வரி 38

ஏழிசை என்பது குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் ஆகியன. குரல் என்பது சங்கின் ஒலி, துத்தம் என்பது ஆண்மீனின் பிளிறு, கைக்கிளி என்பது குதிரையின் குரல். இளி என்பது மயிலின் குரல். விளரி என்பது கடலின் ஓசை. தாரம் என்பது காடை என்ற பட்சியின் குரல். இந்த ஏழுவித நாதங்களையும் புகழ்ந்தனை. கொச்சை என்ற திருப்பதியில் எழுந்தருளினை. கொச்சை என்ற பெயர் வரக் காரணமாவது: பராசரர் என்ற பிரம்மரிஷி, மற்ற ரிஷிகளை நோக்கி, 'நீங்கள் பிரம்மச்சரியத்தைக் கடைபிடிக்காமல் குடும்ப வாழ்க்கை அனுசரிக்கின்றீர்கள்' என்று தூஷித்தார். மற்ற முனிவர்கள், 'நீ மச்ச கந்தியைப் புணர்ந்து மச்சகந்தம் நீக்க முடியாமல் அது உன்னைப் பற்றுவதாக' என்று பராசர ரிஷியை சபித்தனர். அதன்படியே மச்ச கந்தியைப் புணர்ந்து, துர்க்கந்தத்தால் வருந்தினார். இந்தச் சாபத்தை நீக்க வல்லவர் சண்பைத் திருப்பதியில் எழுந்தருளியுள்ள சிவபெருமானே என்று உணர்ந்து அப்பெருமானைச் சரணடைந்தார். பெருமான் கருணை கூர்ந்து துர்க்கந்தத்தை நீக்கி, கொச்சை முனி என்கின்ற சந்தான நாமத்தையும் தந்தருளினார். இதனால் கொச்சை என்ற பெயர் உண்டாயிற்று.

**வரிகள் 39 – 41**

அறுபதங்களான, பிரத்தி - பிரத்தியாகாரம், துல்லியம் - துல்லியாதீதம், வித்தை - அவித்தை என்கின்ற பதங்களிலும், கல்வியான ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம், விரையம் என்கின்ற ஐந்திலும், நான்கு வேதங்களான இருக்கு, யசூர், சாமம், அதர்வனம் என்பதிலும், இறந்தகாலம், நிகழ்காலம், வருங்காலம் என்கின்ற மூன்று காலங்களிலும் தோன்றி நிற்கின்ற திரிமூர்த்தி ஆயினை.

**வரி 42**

சக்தி சிவம் என்ற இரண்டும் ஒன்றாகிய அர்த்த நாரீசுவரர் வடிவமும், தானே ஒரு எல்லையில்லாத சிவமாயிருந்த பெருமையும்,

**வரிகள் 43 – 45**

மறுபிறப்பு இல்லாத பிரம்ம வம்சத்தில் தோன்றி, தீக்கைகளால் மும்மலங்களை கழுவப்பட்ட கவுணியர் கோத்திரத்தில் தோன்றியவர் ஞானசம்பந்தன். அவர் அருளிய இப்பதிகத்தை கழுமலம் என்ற முதுபதியிலே எழுந்தருளியுள்ள பிரமனது மண்டை ஓட்டில் உண்ணும் பெருமானே அறிவார்.

**வரி 46**

அத்தன்மையான இயல்புடையது ஆதலின்

**வரி 47**

நின்னை நினைக்க வல்லவர்களுக்கு மறுபிறப்பு என்பது இல்லை.

சொரூப நிலையில் விளங்கும் பரசிவம் ஆகிய நீ உனது இச்சையால் ஐந்தொழில்களை நிகழ்த்த வேண்டி எடுத்துக் கொண்ட ஒருருவமாகிய திருமேனியை உடையை ஆயினை. உன் சக்தியைக் கொண்டு அந்த ஐந்தொழில்களை நடத்துத் திருவுளக் குறிப்போடு சத்தி சிவம் என்னும் இரு உருவாயினை. விண் முதலிய பூதங்களையும் சந்திர சூரியர்களையும் தேவர்கள் மக்கள் முதலியோரையும் படைத்துக் காத்து அழிக்க அயன் அரி அரன் என்னும் மும்மூர்த்திகள் ஆயினை. பிரமன் திருமால் ஆகிய இருவரையும் வலத்திலும், இடத்திலும் அடக்கி ஏக மூர்த்தியாக நின்றாய்.

ஒப்பற்ற கல்லால மரநிழலில் உனது இரண்டு திருவடிகளை முப்பொழுதும் ஏத்திய சனகர், சனந்தனர் முதலிய நால்வர்க்கு ஒளிநெறியைக் காட்டினாய். சூரியன் சந்திரன், அக்கினி ஆகியோரை மூன்று கண்களாகக் கொண்டு உலகை விழுங்கிய பேரிருளை ஓட்டினாய். கங்கையையும் பாம்பையும் பிறைமதியையும் முடிமிசைச் சூடினாய். ஒரு தாளையும் ஈருகின்ற கூர்மையையும் முத்தலைகளையும் உடைய சூலத்தையும் நான்கு கால்களையும் உடைய மான் கன்று, ஐந்து தலை அரவம் ஆகியவற்றையும் ஏந்தினாய். சினந்து வந்த, தொங்கும் வாயையும் இரு கோடுகளையும் கொண்ட ஒப்பற்ற யானையை அதன் வலி குன்றுமாறு அழித்து அதன் தோலை உரித்துப் போர்த்தாய். ஒப்பற்ற வில்லின் இருதலையும் வளையுமாறு செய்து கணை தொடுத்து முப்புரத்தசுரர்களை இவ்வுலகம் அஞ்சுமாறு கொன்று தரையில் அவர்கள் இறந்து கிடக்குமாறு அழித்தாய். ஐம்புலன்கள் நான்கு அந்தக் கரணங்கள், முக்குணங்கள் இருவாயுக்கள் ஆகியவற்றை ஒடுக்கியவர்களாய தேவர்கள் ஏத்த நின்றாய்.

ஒருமித்த மனத்தோடு, இரு பிறப்பினையும் உணர்ந்து முச்சந்திகளிலும் செய்யத் தக்க கடன்களை ஆற்றி நான்மறைகளை ஓதி ஐவகை வேள்விகளையும் செய்து ஆறு அங்கங்களையும் ஓதி பிரணவத்தை உச்சரித்து தேவர்களுக்கு அவி கொடுத்து மழை பெய்விக்கும் அந்தணர் வாழும் பிரமபுரத்தை விரும்பினாய். ஆறுகால்களை உடைய வண்டுகள் இசைபாடும் பொழில் சூழ்ந்த வேணுபுரத்தை விரும்பினாய். தேவர்கள் புகலிடம் என்று கருதி வாழ்ந்த புகலியை விரும்பினாய். நீர் மிகுந்த கடல் சூழ்ந்த வெங்குரு என்னும் தலத்தை விரும்பினாய். மூவுலகும் நீரில் அழுந்தவும் தான் அழுந்தாது மிதந்த தோணிபுரத்தில் தங்கினாய். வழங்கக் குறையாத செல்வ வளம் மிக்க பூந்தராயில் எழுந்தருளினாய். வரத்தருவதான சிரபுரத்தில் உறைந்தாய். ஒப்பற்ற கயிலை மலையைப் பெயர்த்த பெருந்திறல் படைத்த இராவணனின் வலிமையை அழித்தாய். புறவம் என்னும் தலத்தை விரும்பினாய். கடலிடைத் துயிலும் திருமால் நான்முகன் ஆகியோர் அறிய முடியாத பண்பினை உடையாய். சண்பையை விரும்பினாய். ஐயுறும் சமணரும் அறுவகையான பிரிவுகளை உடைய புத்தரும் ஊழிக்காலம் வரை உணராது வாழ்நாளைப் பாழ்போக்கக் காழிப்பதியில் எழுந்தருளியுள்ளாய்.

வேள்வி செய்வோனாகிய ஏழிசையோன் வழிபட்ட கொச்சை வயத்தை விரும்பி வாழ்கின்றாய். ஆறு பதங்கள், ஐந்து வகைக் கல்வி, நால்வேதம், மூன்று காலம், ஆகியன தோன்ற நிற்கும் மூர்த்தியாயினாய். சத்தி சிவம் ஆகிய இரண்டும் ஒருருவமாய் விளங்கும் தன்மையையும் இவ்விரண்டு நிலையில் சிவமாய் ஒன்றாய் இலங்கும் தன்மையையும்

உணர்ந்த குற்றமற்ற அந்தணாளர் வாழும் கழுமலம் என்னும் பழம்பதியில் தோன்றிய கவுணியன்குடித் தோன்றலாகிய ஞானசம்பந்தன் கட்டுரையை விரும்பிப் பிரமன் மண்டையோட்டில் உண்ணும் பெருமானே அறிவான். அத்தன்மையை உடைய நின்னை உள்ளவாறு அறிவார், நீண்ட இவ்வுலகிடை இனிப் பிறத்தல் இலர்.

**குருவருள்:** ஞானசம்பந்தர் அருளிய சித்திரக் கவிகளுள் ஒன்றாகிய திருவெழுகூற்றிருக்கை ஒன்றை மட்டுமே பாராயணம் செய்பவருககும், அவர் அருளிய தேவாரத் திருப்பதிகங்கள் அனைத்தையும் ஓதிய பயன் கிட்டும் என்பது மரபு. சிவபாத இருதயர், திருஞான சம்பந்தர் ஓதி வரும் திருப்பதிகங்களை நாள்தோறும் பாராயணம் செய்வதை நியமமாகக் கொண்டிருந்தார். பதிகம் பெருகப் பெருகப் பாராயணம் செய்வதில் தம் தந்தையார் இடர்ப்படுதலைக் கண்ட திருஞானசம்பந்தர் இத்திருவெழுகூற்றிருக்கையை அருளி இதனை ஓதி வந்தாலே அனைத்துத் திருப்பதிகங்களையும் ஓதிய பயனைப் பெறலாம் எனக் கூறினார் என்பர்.

Civan is 'Pure Intelligence'. He is beyond our thought and word - Beyond the Evolution (Tatvas). Civan's consort is addressed in many names, the most important being (1) Paarvathi and (2) Umaa Devi. She is 'Pure Energy' or 'Sakthi'. We have used the words 'Civan' and 'Sakthi' in this hymn to represent the Supreme Being.

Civan's body itself is made up of Sakthi. Having this energy in HIS body, HE has ONE physical frame only (ஓர் உரு ஆயினை).

Whenever necessary the energy takes a separate form. Then Civan and Sakthi shine as TWO separate entities (மான் ஆங்காரத்து ஈர் இயல்பாய்).

For the three fold activities such as creation, sustenance and dissolution of the incomparable five elements such as Earth, Water, Fire, Air and Sky as well the Sun, Moon, Devas and all others in the cosmos HE took the three forms known as "Ayan, Ari and Aran", i.e., Brahma, Vishnu and Guna Rudran. Therefore, HE is THREE (மும்மூர்த்திகள் ஆயினை).

Lord! YOU concealed the TWO, Brahma and Vishnu in YOURSELF and stood in ONE Single form - (i.e.) two (இருவரோடு ஒருவன் ஆகி நின்றனை). Two forms merged in One.

Under ONE Banyan Tree (கல் ஆலம்) YOUR TWO Holy Feet were worshipped THREE times a day by FOUR saints known as Sanakar, Sananthanar, Sanaathanar and Sanarkumaarar. To them YOU imparted divine wisdom (ஓர் ஆல்நீழல் ஒண் கழல் இரண்டும் முப்பொழுது ஏத்திய நால்வர்க்கு ஒளிநெறி காட்டினை).

The three lights such as the Sun, Moon and Fire were allowed to be bedecked in YOUR body frame THREE eyes of YOURS (நாட்டம் மூன்றாகக் கோட்டினை).

Along with the big river Ganges YOU have accommodated TWO more entities – i.e., the snake and the crescent moon in YOUR matted hair (இரு நதி அரவமோடு ஒரு மதி சூடினை).

YOU are holding in one of YOUR hands the trident. It has ONE stem. This stem is the incomparable principal incantation (மந்திரம்) formed out of the mystic word 'OM' (ஓம் என்ற பிரணவ மந்திரம்). You hold the trident symbolic of the three entities - Brahma, Vishnu and Rudra. You revealed Thy form to the four saints. You hold the five headed snake.

காய்ந்த நால்வாய் மும்மதத்து இரு கோட்டு ஒரு கரி ஈ(டு) அழித்து உரித்தனை.

YOU annihilated the valour of the incomparable ONE elephant, peeled its skin and covered YOUR body with that skin.

This elephant has TWO tuskers. This rutting elephant has THREE places in its body wherefrom its must water flows (மதநீர் பொழியும் மூன்று இடங்கள் – Check, Temple and Penis). This elephant has a long trunk - long and dangling mouth. நால்வாய் means (dangling mouth). c.f. நான்றமலர்ப்பதத்தை நாடு. Civan's raised fort in நான்ற.

ஒரு தனு இருகால் வளைய வாங்கி முப்புரத்தோடு நானிலம் அஞ்சக் கொன்று தலத்துற அவுணரை அறுத்தனை.

YOU held in YOUR hand the incomparable, huge mount Mēru (மேருமலை) as ONE bow and bent its TWO ends and then fixed the arrow and shot at the THREE citadels and destroyed all the Asuraas who lived therein.

Devaas who have subdued their FIVE sensory organs, FOUR organs of consciousness (internal organs), the THREE fundamental qualities (temperaments) and compressed the TWO breathing air (பிராணன் மற்றும் அபானன்) in the bottom portion of their body known as Moolaathaaram (மூலாதாரத்தில் ஒடுக்கி - The nerve plexus in the body described as a four petalled lotus situate between the base of the sexual organ and the anus is called Moolathaaram).

**Note:** Five sensory organs are taste, sight, sensation, sound and smell - சுவை, ஒளி, ஊறு, ஓசை மற்றும் நாற்றம்.

Four organs of consciousness are the intellectual faculties embracing 1. மனம், the mind or organ of thought; 2. புத்தி, reason, the organ of consciousness or apprehension; 3. ஆங்காரம், energy, any one of the passions; 4. சித்தம், will, resolution, desire.

Three fundamental qualities are 1. சத்துவம், wisdom, ஞானம்; 2. இராசத்தம், mental exertion, மனஊக்கம்; 3. தாமதம், rioting, banquating, பேருண்டி.

Vedic scholars do live in large numbers in Piramapuram who offer worship daily to the Lord in the temple. They also perform the sacrificial fire without any alteration tot he traditional caste conventions. They drop food in the sacrificial fire to be forwarded to the Devas for their happy life in their upper world. These Vedic scholars do observe and adhere to the following:

a) They concentrate with ONE mindedness on Lord Civan.
b) They carry on research work on the TWO types of births (இரு பிறப்பாகிய துவிஜத்துவம்).
c) THREE times per day they carry out the due observance of the very important religious duties and rites.
d) They chant the FOUR Vedas daily.
e) They perform the FIVE different kinds of sacrificial fire daily.
f) They chant the SIX Angas (அங்கம்) of the Vedas also daily.

Oh! Lord Civa! YOU are enshrined in such a famous city Piramapuram!

Oh! Lord Civan YOU desired to be entempled in the city of Venupuram where the SIX legged bees are humming.

The Devas fought against the Asura Soora-Panman and his army, but got defeated in the battle. They had to leave and run away from their own upper world and extended into the city Pukali as refugees. Oh! Lord Civa! YOU loved to be enshrined in this Pukali city.

At the time of great final deluge, the entire world got drowned under the water of the FOUR seas. But the city Venkuru alone did not get submerged under water. Oh! Lord Civa! YOU glimmered in the temple in this famous city Venkuru.

At the time of final great deluge, all the THREE worlds went under the sea. However, the town Thonipuram alone did not get submerged. It floated as a boat. Therefore, it earned the name as Thonipuram (தோணிபுரம்). Oh! Lord Civa! YOU have dwelled at the temple in the holy city Thonipuram (திருத்தோணிபுரம்).

The town Poontharai (பூந்தராய்) is a very rich place where wealth known as Sanga Nithi (சங்கநிதி) and paduma Nithi (பதும நிதி). Oh! Lord Civa! YOU have selected this city as YOUR abode.

The natural resources of this ONE Puram called as Cirapuram (சிரபுரம்) is so plentiful that it will bestow anything wanted by anybody. Oh! Lord Civa! YOU have reached such a famed city.

Note: Once Thirumaal was apportioning nectar to all Devas. At that moment one Asura incognito entered the crowd and stretched his hand to receive the nectar. But Thirumaal identified him and threw the ladle he had in his hand with violence over his head. The head was cut off. The beheaded came to Seekaazhi and prayed to restore his life. Lord Civa of Seekaazhi granted him this boon - the ascending and descending modes of the moon called Raahu and Kēthu (இராகு மற்றும் கேது என்ற சாயாக் கிரகங்கள்). These two are among the nine planets. This mythological story is related to this town 'Chirapuram'.

Raavanan once tried to uproot the incomparable mount Kailas but in vain. Lord Civa destroyed his energy and nullified his TWO fold valiant effects. Later HE graced and gave him the divine sword besides other boons.

A sage by name Gouthamar (கௌதமர்) took the form of a dove (புறா) and came to Seekaazhi and did penance for long. Lord Civan was pleased with his penance and pitied on him and graced him by giving boons that he desired. Hence the city came to be called Puravam (புறவம்).

Thirumaal who abides, takes rest and sleeps in the THREE oceans of milk and the FOUR faced Brahma tried their best to see YOUR holy feet, but failed. YOU stood as a tall and big flame of fire which they could not identify.

The sage Durvaasa Maharishi (துர்வாச மகரிஷி) once pronounced a curse on the family members of Krishna. By the result, Krishna and his entire family members died. To obliterate the curse, he came to Seekaazhi and worshipped Lord Civan therein. Lord Civa graced him and released the effect of the curse and also renamed was called 'Shanbai', where Lord Civan was enshrined.

The skeptic Samanars do not believe in god and in Vedas - FIVE. The Buddhists eat food in SIXTH different tastes and become obese. Even during the time of the great deluge the poisonous snake called KAALI survived and worshipped Lord Civan therein. Therefore the city is called Seekaazhi.

The Paraasara Rishi (பராசர பிரம்மரிஷி) performs the sacrificial fire ritual regularly. He is an adept in the SEVEN kinds of musical mode. He was cursed by all other Rishis by which his body was emitting a very bad smell permanently for a long distance around him. To obliterate this curse, he came to Seekaazhi and worshipped Lord Civan therein and prayer for HIS grace. Civan removed the curse and named him as Koch-chai muni. Thereafter the city came to be called as 'Koch-chai-vayam' in which Lord Civa is entempled.

YOU have authored and graciously favoured the SIX kinds of musical composition, FIVE different kinds of erudition the FOUR Vedas, and the THREE divisions of time such as present, past and future.

YOU are considered as TWO separate entities such as Sakthi and Civan; but YOU also stood united in ONE form as Artha Naareeswarar (அர்த்த நாரீஸ்வரர்). YOU are an indivisible ONE omnipotent being as Civan.

I (Gnaanasambandan) was born in the family of flawless Vedic scholars in the very ancient and permanent city of Kazhu-malam in the ancestry known as Kaunya Gothram (கௌண்ய கோத்திரம்). I have enjoyed fully the grace of Lord Civan. I sang on Lord Civan, the Chief of this ancient city who begs for alms in Brahma's skull and eats it; HE knows my adoration on HIM through this hymn.

Oh! Noble Lord of Kazhumalam - YOU are the Supreme Being with self-dependency in all these distinguishing features.

Those devotees who perform religious meditation with uninterrupted contemplation on YOU, will never be born again in this vast world.

**Note:** Of the many exploits referred to here, there could be some that can admit of a different interpretation. Therefore, readers and research scholars may contemplate on the inner meaning of these lines, and the context in which they were said.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*128ஆம் பதிகம் முற்றிற்று*
End of 128th Hymn

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# 129. திருக்கழுமலம்

## திருத்தல வரலாறு:

முதலாம் பதிகம் பார்க்க.

# 129. THIRU-KAZHU-MALAM

## HISTORY OF THE PLACE

See First Hymn.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 129. திருக்கழுமலம் 129. THIRU-KAZHU-MALAM

பண் : மேகராகக்குறிஞ்சி *Pann: Mēgaraaga-k-kurinji*
ராகம் : நீலாம்பரி *Raagam : Neelaambari*

சேவுயருந்திண் கொடியான்திருவடி யேசரணென்று சிறந்தஅன்பால்
நாவியலுமங்கை யொடுநான்முகன் றான்வழிபட்ட நலங்கொள்கோயில்
வாவிதொறும் வண்கமலமுகங் காட்டசெங்குமுதம் வாய்கள்காட்டக்
காவியிருங்கருங் குவளைகருநெய்தல் கண்காட்டுங் கழுமலமே. 1

"சே உயரும் திண் கொடியான் திருவடியே சரண்" என்று சிறந்த அன்பால்
நா இயலும் மங்கையொடு நான்முகன்தான் வழிபட்ட நலம் கொள் கோயில் -
வாவிதொறும் வண்கமலம் முகம் காட்ட, செங்குமுதம் வாய்கள் காட்டக்,
காவி இருங்கருங்குவளை கருநெய்தல் கண் காட்டும் கழுமலமே.

"cE uyarum tiN koTiyAn2 tiruvaTiyE caraN" en2Ru ciRanta an2pAl
nA iyalum magkaiyoTu nAn2mukan2 tAn2 vazipaTTa nalam koL kOyil--
vAvitoRum vaNkamalam mukam kATTa, cegkumutam vAykaL kATTa,
kAvi irugkarugkuvaLai karu neytal kaN kATTum kazumala(m)mE.

பொருள்: விடை வடிவம் எழுதி உயர்த்திய வலிமையான கொடியை உடைய சிவபெருமானின் திருவடிகளே நமக்குச் சரண் என்று தன் நாவினில் பொருந்திய கலைமகளுடன் இணைந்து நான்முகனான பிரமன் சிறந்த அன்போடு வழிபட்ட கோயில் திருக்கழுமலம் ஆகும். இங்குள்ள வாவிகளில் மலரும் தாமரை மலர்கள் மகளிர்தம் முகங்களைப் போலவும், செம்மையான குமுத மலர்கள் அவர்களின் வாய்களைப் போலவும்,

காவி மலர்கள், கருங்குவளை மலர்கள் மற்றும் கரிய நெய்தல் மலர்கள் ஆகிய இவைகள் அவர்களின் கண்களைப் போலவும் தோன்றி மலரும் வளத்தை உடையது கழுமலம் ஆகும்.

**குறிப்புரை:** விடையுயர்ந்த பெருமான் திருவடியே சரண் என்று பிரமன் வழிபட்ட கோயில், நீர்ப்பூக்கள் நேரிழையார் அவயவங்களைக் காட்டும் கழுமலம் என்கின்றது. சே – இடபம். நா இயலும் மங்கை – சரஸ்வதி.

The four faced Brahma along with his consort Saraswathi abiding in his tongue went to the famous temple of Kazhu-malam and worshipped Lord Civan therein with deep devotion. He knew well that only the holy feet of this Lord, raising His power packed flag bearing the bull's figure as the insigne, could redeem him. Thiru-kazhu-malam is a very fertile, arable and flowering place. Here a number of water storage tanks flourish where lotus flowers having a long stalk resembling damsel's faces, red lilies resembling their mouths, and ochre coloured flowers as well the black Indian lily flowers (*குவளை மலர்கள்*) resembling their eyes bloom. Such is the fertile and famed city Thiru-kazhu-malam.

பெருந்தடங்கண் செந்துவர்வாய்ப் பீடுடையமலைச் செல்விபிரியாமேனி
அருந்தகையசுண் ணவெண்ணீறலங் கரித்தானமரர் தொழஅமருங்கோயில்
தருந்தடக்கை முத்தழலோர்மனை கள்தொறுமிறைவ னதுதன்மைபாடிக்
கருந்தடங்கண் ணார்கழல்பந்தம் மானைப்பாட்ட யருங்கழுமலமே. 2

பெருந்தடங்கண் செந்துவர்வாய்ப் பீடு உடைய மலைச்செல்வி பிரியா மேனி
அருந்தகைய சுண்ணவெண்நீறு அலங்கரித்தான், அமரர் தொழ, அமரும் கோயில் -
தரும் தடக்கை முத்தழலோர் மனைகள்தொறும் இறைவனது தன்மை பாடி,
கருந்தடங்கண்ணார் கழல் பந்து அம்மானைப்பாட்டு அயரும் கழுமலமே.

peruntaTagkaN centuvarvAyp pITu uTaiya malaic celvi piriyA mEn2i
aruntakaiya cuNNaveN nIRu alagkarittAn2, amarar toza, amarum kOyil--
tarum taTakkai muttazalOr man2aikaL toRum iRaivan2atu tan2mai pATi,
karuntaTagkaNNAr kazal pantu ammAn2aip pATTu ayarum kazumala(m)mE.

**பொருள்:** அகன்ற விழிகளையும், பவளம் போன்ற சிவந்த வாயையும் உடைய பெருமை மிக்க மலைமகளாகிய உமையம்மையைப் பிரியாத திருமேனியை உடையவன் சிவபெருமான். அவன் அருமையான திருவெண்ணீற்றுப் பொடியை அழகுறப் பூசியவன். தேவர்கள் தன்னை வணங்க அவன் எழுந்தருளிய கோயில் உள்ள இடம் திருக்கழுமலம் ஆகும். இங்கு

வள்ளல் தன்மை மிகுந்த விசாலமான கைகளை உடைய அந்தணர்கள், மூன்று விதமான அக்கினியை வளர்க்கின்றனர். அத்தகைய வீடுகள்தோறும் கரிய பெரிய கண்களை உடைய மகளிர் தாங்கள் கழற்சிக் காய் அம்மானை பந்து போன்ற விளையாட்டுக்களை ஆடும்போதும் இறைவனின் பெருமைகளைப் பாடியே ஆடி மகிழ்கின்றனர்.

**குறிப்புரை:** பெரியநாயகி பிரியாத மேனியில் திருநீற்றால் அலங்கரித்தான் கோயில் இது என்கின்றது. துவர் – பவளம். பீடு – பெருமை. தரும் தடக்கை – வழங்கும் விசாலமான கை. முத்தழலோர் – முத்தழல் ஓம்பும் அந்தணர். அந்தணர் வீட்டில் மகளிர் இறைவன் புகழைப்பாடி அம்மானை பந்து கழங்கு ஆடுகின்றார்கள் என்பதாம்.

Umaa Devi, daughter of the famous Himaalayan mountain king having large broad eyes and coral-like mouth is incorporated in Civan's body and is inseparable from Him. In that body frame, Lord Civan smears holy ashes and appears very attractive. He is entempled in the holy temple in Thiru-kazhu-malam. Devas reach this place and offer worship to Lord Civan therein in the temple. In this city philanthropic Vedic scholars having broad hands do live in large numbers and perform rituals of fire daily. In their houses young girls having large and black eyes gather and plays indoor games with balls and Molucca beans (*கழற்சிக்காய்*) called Ammaanai (*அம்மானை*). While playing they chant hymns and sing in praise of the nature of Lord Civan and enjoy life.

அலங்கல்மலிவானவருந்தானவருமலைகடலைக்கடையப்பூதங்
கலங்கஎழுகடுவிடமுண்டிருண்டமணிகண்டத்தோன்கருதுங்கோயில்
விலங்கலமர்புயன்மறந்துமீன்சனிபுக்கூன்சலிக்குங்காலாந்தானுங்
கலங்கலிலாமனப்பெருவண்கையுடையமெய்யர்வாழ்கழுமலமே. 3

அலங்கல் மலி வானவரும் தானவரும் அலைகடலைக் கடைய, பூதம்
கலங்க, எழு கடுவிடம் உண்டு இருண்ட மணிகண்டத்தோன் கருதும் கோயில் -
விலங்கல் அமர் புயல் மறந்து, மீன் சனி புக்கு, ஊன் சலிக்கும் காலாந்தானும்
கலங்கல் இலா மனப் பெரு வண்கை உடைய மெய்யர் வாழ் கழுமலமே.

alagkal mali vAn2avarum tAn2avarum alaikaTalaik kaTaiya, pUtam
kalagka, ezu kaTuviTam uNTu iruNTa maNikaNTattOn2 karutum kOyil--
vilagkal amar puyal maRantu, mIn2 can2i pukku, Un2 calikkum kAlattAn2um
kalagkal ilA man2ap peru vaNkai uTaiya meyyar vAz kazumala(m)mE.

பொருள்: மலர் மாலைகள் அணிந்த தேவர்களும், அசுரர்களும் அலைகள் பொருந்திய திருப்பாற்கடலைக் கடைந்தனர். அப்பொழுது பஞ்ச பூதங்களும் கலங்குமாறு எழுந்த

கொடிய நஞ்சை சிவபெருமான் வாயில் போட்டுக் கொண்டார். இதனால் கரிய மணி போன்ற கண்டத்தை உடையவரானார். தனது உறைவிடம் என்று மகிழ்வோடு கருதுகின்ற கோயில் உள்ள இடம் திருக்கழுமலம் ஆகும். மகர இராசியில் சனிக்கோள் புகுதலால் மலையின்மேல் தவழும் மேகங்கள் மழை பொழிதலை மறக்க உணவு கிடைக்காமல் மக்கள் பஞ்ச காலத்தில் உடல் இளைப்பர். இப்படி ஒரு நிலைமை வந்தாலும், மனம் கலங்காது பெரிய வள்ளல் தன்மையோடு மக்களைக் காக்கும் உண்மையாளர் வாழ்கின்ற ஊர் இக்கழுமலம் ஆகும்.

**குறிப்புரை:** தேவரும் அசுரரும் பாற்கடலைக் கடைய எழுந்த விடத்தை வாயில் போட்டு கறுத்த கண்டன் உறைகோயில் இது என்கின்றது. அலங்கல் – மாலை. விலங்கல் – மலை. புயல் – மேகம். மீன்சனி புக்கு – மகர ராசியில் சனி புகுந்து. ஊன் சலிக்கும் காலத்தாலும் – உடல் வாடிய காலத்திலும், பஞ்சகாலத்தும் கலங்காத வள்ளல்கள் வாழும் நகர் என்க.

The Devas and Asuraas wearing flower garlands started churning the ocean of milk to get nectar. But the deadly poison that foamed on the top of the ocean created a great terror on all, everywhere in the universe including the goblins of Lord Civan. Being the repository of mercy, grace and love, Lord Civan came forward to save one and all in the universe (the entire humanity in the universe) from death. He, therefore, without swallowing the poison, put it in His mouth and positioned it in His throat permanently; His neck therefore is always in dark blue colour, similar to that of sapphire gem. In certain seasons of the year the planet Saturn (*சனிக்கிரகம் - சனி பகவான்*) enters into the tenth zodiac known as Capricorn (*பத்தாவது மகர ராசி*) and stays there for some period. During this period rain bearing clouds could not gather on mountaintop and shower rain. As there was no rainfall in the city, the country got afflicted with famine for want of food materials. Even in such times of draught and famine, the philanthropic and virtuous people of the city in large numbers came forward and helped the people and saved them from the devastating effect of the famine. Lord Civan is happily entempled in this famed city of Thiru-kazhu-malam.

பாரிதனைநலிந்தமரர்பயமெய்தச்சயமெய்தும்பரிசுவெம்மைப்
போரிசையும்புரமூன்றும்பொன்றவொருசிலைவளைத்தோன்பொருந்துங்கோயில்
வாரிசைமென்முலைமடவார்மாளிகையின்சூளிகைமேல்மகப்பாராட்டக்
காரிசையும்விசும்பியங்குங்கணங்கேட்டுமகிழ்வெய்துங்கழுமலமே. 4

பார்இதனை நலிந்து, அமரர் பயம் எய்தச் சயம் எய்தும் பரிசு வெம்மைப்
போர் இசையும் புரம்மூன்றும் பொன்ற ஒருசிலை வளைத்தோன் பொருந்தும் கோயில் -
வார் இசை மென்முலை மடவார் மாளிகையின் சூளிகைமேல் மகப் பாராட்டக்,
கார் இசையும் விசும்பு இயங்கும் கணம் கேட்டு மகிழ்வு எய்தும் கழுமலமே.

pAr itan2ai nalintu, amarar payam eytac cayam eytum paricu vemmaip
pOr icaiyum purammUn2Rum pon2Ra oru cilai vaLaittOn2 poruntum kOyil--
vAr icai men2mulai maTavAr mALikaiyin2 cULikaimEl makap pArATTa
kAr icaiyum vicumpu iyagkum kaNam kETTu makizvu eytum kazumala(m)mE.

***பொருள்:*** அன்று மண்ணுலக மக்கள் வருந்துமாறும், தேவர்கள் அச்சம் கொள்ளுமாறும், வெற்றி பெறும் இயல்பினராய் முப்புர அசுரர்கள் கொடிய போரை நிகழ்த்தினர். அவர்களின் முப்புரங்களும் அழிந்து போகுமாறு, ஒப்பற்ற வில்லை வளைத்த சிவபெருமான் உறையும் கோயில் உள்ள இடம் கழுமலம் ஆகும். இங்கு கச்சணிந்த மென்மையான தனங்களை உடைய மகளிர் தங்கள் மாளிகைகளின் மேல்தளத்தில் நின்று தம் குழந்தைகளைப் பாடிப் பாராட்டுகின்றனர். அந்த இசையை மேகங்கள் தவழும் வான் வெளியில் உலாவுகின்ற கந்தர்வர்கள் கேட்டு மகிழ்கின்றனர்.

***குறிப்புரை:*** உலகை வருத்தி, தேவர் அஞ்ச, வெல்லும் வகை வில்லை வளைத்து புரம் எரித்த இறைவன் கோயில் இது என்கின்றது. பார் – பூமி. நலிந்து – வருத்தி. வார் – கச்சு. குளிகை – உச்சி. மகளிர் மாளிகையின்மேல் குழந்தைகளைத் தாலாட்ட அதனைத் தேவர் கேட்டு மகிழும் கழுமலம் என்க.

The Asuraas tortured the people on earth and threatened the Devas also by waging war against them. It is Lord Civan who bent His unique bow and destroyed their three fortresses and killed all of them. This Lord Civan is entempled in Thiru-kazhu-malam city. In this city lovely young women wear corset over their soft breasts. In the evening hours they gracefully reach the top of their mansions carrying their child and start singing melodiously from their terrace. Their music is very superb enough to attract the celestials who pass through in the sky. They immediately stop in the sky and enjoy the melodious music. In such a famed city Lord Civan is entempled.

ஊர்கின்றஅரவமொளிவிடுதிங்களோடுவன்னிமத்தமன்னும்
நீர்நின்றகங்கைநகுவெண்டலைசேர்செஞ்சடையான்நிகழுங்கோயில்
ஏர்தங்கிமலர்நிலவியிசைவெள்ளிமலையென்னநிலவிநின்ற
கார்வண்டின்கணங்களாற்கவின்பெருகுசுதைமாடக்கழுமலமே. 5

ஊர்கின்ற அரவம், ஒளிவிடு திங்களோடு, வன்னி மத்தம், மன்னும்
நீர் நின்ற கங்கை, நகுவெண்தலை, சேர் செஞ்சடையான் நிகழும் கோயில் -
ஏர் தங்கி, மலர் நிலவி, இசை வெள்ளிமலை என்ன நிலவி நின்ற,
கார்வண்டின் கணங்களால், கவின் பெருகு சுதை மாடக் கழுமலமே.

Urkin2Ra aravam, oLiviTu tigkaLoTu, van2n2i, mattam, man2n2um
nIr nin2Ra kagkai, nakuveNtalai, cEr cenjcaTaiyAn2 nikazum kOyil--
Er tagki, malar nilavi, icai veLLimalai en2n2a nilavi nin2Ra,
kAr vaNTin2 kaNagkaLAl, kavin2 peruku cutai mATak kazumala(m)mE.

**பொருள்:** ஊர்ந்து செல்லும் அரவு ஒளிவிடும் திங்கள், வன்னி, ஊமத்தமலர், நீர்நிறைந்த கங்கை, சிரிக்கும் கபாலம் ஆகியன சேர்ந்து இருக்கும் செஞ்சடையை உடைய சிவபெருமான் எழுந்தருளியுள்ள கோயில் உள்ள ஊர் திருக்கழுமலம் ஆகும். இங்கு வெண்மையான சுதையால் அமைந்த மாடவீடுகள் அழகு பொருந்திய வெள்ளி மலைகள் போன்று விளங்குகின்றன. அந்த வீடுகளை அலங்கரிக்கும் மலர்களின்மேல் கரிய வண்டுகள் மொய்க்கின்றன. இத்தகு அழகுடன் திகழ்வது கழுமலம் ஆகும்.

**குறிப்புரை:** அரவம், மதி, வன்னி, ஊமத்தம், கங்கை, கபாலம் இவை பொருந்திய செஞ்சடையான் கோயில் கழுமலம் என்கின்றது. ஏர் – அழகு.

Lord Civan's red matted hair is decorated with the following: The crawling snake, the crescent moon shedding its brightness, the suma leaves, the datura flowers, the river Ganges with plenty of water, the white human skull having a grinning look. Decorated with these, Lord Civan is entempled in Thiru-kazhu-malam. This city has a number of tall storied mansions built out of pure white Chunnam (Calcium) and resemble like imposing silver mountains. These mansions are decorated with a number of stringed flowers all over the building. The black honey bees, in large numbers, are humming around these flower strings. Thiru-kazhu-malam is such an aesthetic and good looking city where Lord Civan is entempled.

தருஞ்சரதந்தந்தருளென்றடிநினைந்துதழலணைந்துதவங்கள்செய்த
பெருஞ்சதுரர்பெயலர்க்கும்பீடார்தோழமையளித்தபெருமான்கோயில்
அரிந்தவயலரவிந்தம்மதுவுகுப்பஅதுகுடித்துக்களித்துவாளை
கருஞ்சகடமிளகவளர்கரும்பிரியஅகம்பாயுங்கழுமலமே. 6

"தரும் சரதம் தந்தருள்!" என்று அடி நினைந்து, தழல் அணைந்து, தவங்கள் செய்த
பெருஞ் சதுரர் பெயலர்க்கும் பீடு ஆர் தோழமை அளித்த பெருமான் கோயில் -
அரிந்த வயல் அரவிந்தம் மது உகுப்ப, அது குடித்துக் களித்து வாளை,
கருஞ் சகடம் இளக வளர் கரும்பு இரிய, அகம் பாயும் கழுமலமே.

"tarum caratam tantaruL!" en2Ru aTi nin2aintu, tazal aNaintu, tavagkaL ceyta
perunj caturar peyalarkkum pITu Ar tOzamai aLitta perumAn2 kOyil--
arinta vayal aravintam matu ukuppa, atu kuTittuk kaLittu vALai,
karunj cakaTam iLaka vaLar karumpu iriya, akam pAyum kazumala(m)mE.

**பொருள்:** எம்பெருமானின் திருவடிகளை நினைந்து தீ நடுவில் நின்றும், மழைநீரில் நின்றும் தவம் செய்பவர்கள் பெரிய சதுரப்பாடு உடையவர்கள். அவர்கள் 'மெய்ஞ்ஞானத்தை எங்களுக்கும் தந்தருளுக' என்று வேண்டி நிற்கின்றனர். அவர்களுக்குப் பெருமை மிக்க தன் தோழமையை வழங்கி அருள்கின்றான் எம்பெருமான். அவன் உறையும் கோயில் கழுமலத்தில் உள்ளது. நெல் அறுவடை செய்த வயலில் முளைத்த தாமரை மலர்கள் தேனைச் சொரிகின்றன. வாளைமீன்கள் அதனைக் குடித்துக் களிக்கின்றன. அந்தக் களிப்பால் வயற்கரைகளில் நிற்கும் கரும்புகள் ஏற்றப்பட்ட பெரிய வண்டிகள் மீது துள்ளிப் பாயவும், அவைகள் நிலைபெயரவும் கரும்புகள் ஒடிகின்றன. இத்தகு வளத்தினை உடையது கழுமலம் ஆகும்.

**குறிப்புரை:** அருளுக என்று அடிநினைந்து, தீ நடுவில் தவஞ்செய்யும் சதுரர்க்கும், தோழமை தந்த பெருமான் கோயில் இது என்கின்றது. சரதம் – துணிவு. பீடு – பெருமை. அரிந்த வயல் – அறுத்த வயலிலே. அரவிந்தம் – தாமரை. வாளைமீன் தாமரைத் தேனைக் குடித்துப் பெரிய வண்டி இளக, கருப்பங்காடு விலகப் பாயும் கழுமலம் என்க.

Very able and clever people (*சதுரர்கள்*) stand over fire and perform penance with single mindedness on Civan's holy feet praying for grant them also, the real divine wisdom that is also granted to persons possessing true spiritual wisdom (*மெய்ஞ்ஞானிகள்*). For these people as well to those who perform penance by standing in the open under showering rain, Lord Civan imparts gracefully the well renowned

companionship. This Lord Civan is entempled in Thiru-kazhu-malam. In the harvested fields of this city, lotus flowers have bloomed in large numbers. The sword fishes in large numbers drink the honey dripping from these flowers. Then, they jump and dance all around the *fields*. They also dash against the sugarcane loaded wagons that are waiting near the ridge of the fields and topple them down breaking the sugarcane. Such is the fertility of Thiru-kazhu-malam where Lord Civan is enshrined.

புவிமுதலைம்பூதமாய்ப்புலனைந்தாய்நிலனைந்தாய்க்கரணநான்காய்
அவையவைசேர்பயனுருவாயல்லவுருவாய்நின்றானமருங்கோயில்
தவமுயல்வோர்மலர்பறிப்பத்தாழவிடுகொம்புதைப்பக்கொக்கின்காய்கள்
கவணெறிகற்போற்சுனையிற்கரைசேரப்புள்ளிரியுங்கழுமலமே. 7

புவி முதல் ஐம்பூதம்ஆய், புலன்ஐந்துஆய், நிலன்ஐந்துஆய், கரணம் நான்குஆய்,
அவைஅவை சேர் பயன்உருஆய், அல்ல உருஆய், நின்றான் அமரும் கோயில் -
தவம்முயல்வோர் மலர் பறிப்பத் தாழவிடு கொம்பு உதைப்ப, கொக்கின் காய்கள்
கவண் எறி கல் போல் சுனையின் கரை சேரப், புள் இரியும் கழுமலமே.

puvi mutal aimpUtam Ay, pulan2 aintu Ay, nilan2 aintu Ay, karaNam nAn2ku Ay,
avai avai cEr payan2 uru Ay, alla uru Ay, nin2RAn2 amarum kOyil--
tavam muyalvOr malar paRippat tAza viTu kompu utaippa, kokkin2 kAykaL
kavaN eRi kal pOl cun2aiyin2 karai cEra, puL iriyum kazumala(m)mE.

**பொருள்:** நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் என்பன ஐந்து பூதங்களாகும். சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்பன ஐந்தும் புலன்களாகும். அவற்றுக்கு இடமான மெய், வாய், கண், மூக்கு, செவி என்பன ஐந்து அறிவுப் பொறிகளாகும். நாக்கு, கால், கை, கருவாய், எருவாய் என்பன ஐந்தும் செயல் கருவிகளாகும். மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்பன உட்கருவிகள் ஆகும். இந்த இருபத்து நான்கு ஆன்ம தத்துவங்களாகவும், அவற்றின் பயனாகவும், உருவமாகவும், அருவமாகவும் நிற்கின்றவரான சிவபெருமான் எழுந்தருளிய கோயில் உள்ள இடம் திருக்கழுமலம் ஆகும். இங்கு தவம் செய்ய முயல்வோர் இறைவனை அர்ச்சிக்க மரங்களில் பூத்த மலர்களைப் பறிக்கின்றனர். அதனால் விடுபட்ட கிளைகள் வேகமாக நிமிர்ந்து அருகில் உள்ள மாமரத்தைத் தாக்குகின்றன. மாமரத்தின்மீது விண்டு கவணிலிருந்து வீசும் கற்களைப் போன்று அங்கு காய்ந்த காய்கள் சுனைகளில் விழுகின்றன. இதனால் அங்கு வீற்றிருக்கும் பறவைகள் அஞ்சி அகலுகின்றன. இத்தகைய வளத்தை உடையது கழுமலம் ஆகும்.

**குறிப்புரை:** ஐம்பூதமாய், ஐம்புலனாய், ஐம்பொறியாய், நாற்கரணமாய், அவற்றின்பயனாய், உருவாய், அருவாய் நின்றான் அமரும் கோயில் இது என்கின்றது. நிலன் ஐந்து – புலன்கள் தோன்றுதற்கு இடமாய ஐம்பொறிகள். கரணம் நான்கு – மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்பன. அவை அவை சேர்பயன் உருவாய் – பூத முதலியவற்றைச் சேர்ந்த பயனே வடிவாய்; என்றது பூதப்பயனாய சுவை முதலியதன் மாத்திரை ஐந்தும், புலனைந்தின் பயனாய பொறியின்பம் ஐந்தும், நிலனைந்தின் பயனாய புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல் ஊடல் என்ற ஒழுக்கம் ஐந்தும், கரணம் நான்கின் பயனாய நினைத்தலும், புத்தி பண்ணலும் சிந்தித்தலும் இது செய்வேன் என அகங்கரித்து எழுதலுமாகிய நான்கும் கொள்ளப்பெறும். அல்லவுருவாய் – இவையல்லாத அருவாய ஞானமாய். பூப்பறிப்போர் விட்ட பூங்கொம்புகள் சென்று தாக்க. மாங்காய்கள் கவண்கல்லைப் போலச் சுனைக் கரையில் விழப் பறவைகள் அஞ்சியகலும் நகர் என்க.

Lord Civan manifests

a) In the FIVE elements (Earth, Water, Fire, Air and Sky – *நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம்*).
b) In the sensation of the five sensory organs (Taste, Sight, Sensation, Sound and Smell – *சுவை, ஒளி, ஊறு, ஓசை மற்றும் நாற்றம்*).
c) In the relative places for the five sensory organs (Body, Mouth, Eye, Nose and Ear – *மெய், வாய், கண், மூக்கு மற்றும் செவி*).
d) Organs of action (Mouth, Leg, Hand - *நாக்கு, கால், கை, கருவாய், எருவாய்*)
e) In the respective four inner seats (*அந்தக்கரணம்*) such as Thought, Mind, Feeling and Volition (*மனம், புத்தி, சித்தம் மற்றும் அகங்காரம்*).
f) In the significance of all these above five.
g) In a visible form.
h) In a state of formlessness – i.e., state of wisdom.

The devotees who desire to do penance and offer worship by doing the relative Archana (*அருச்சினை*) to this Lord in Thiru-kazhu-malam; reach the flower garden and bend the big branch of a flower tree. They pluck all the flowers in that branch and release it. The released big and heavy branch suddenly rises up and dashes against another branch close by. That one is a mango branch with full of mango fruits. Instantaneously like stone discharged from catapult, a good number of mango fruits fall

down into the tank below where a number of birds are nesting. The birds immediately fly away, from the tanks. Such is the fertility of the city Thiru-kazhu-malam, where our Lord Civan is entempled.

அடல்வந்தவானவரையழித்துலகுதெழித்துழலும்அரக்கர்கோமான்
மிடல்வந்தஇருபதுதோள்நெரியவிரற்பணிகொண்டோன்மேவுங்கோயில்
நடவந்தவுழவரிதுநடவொணாவகைபரலாய்த்தென்றுதுன்று
கடல்வந்தசங்கீன்றமுத்துவயற்கரைகுவிக்குங்கழுமலமே. 8

அடல் வந்த வானவரை அழித்து, உலகு தெழித்து உழலும் அரக்கர் கோமான்
மிடல் வந்த இருபதுதோள் நெரிய, விரல் பணிகொண்டோன் மேவும் கோயில் -
நட வந்த உழவர், "இது நடவு ஒணா வகை பரலாய்த்து" என்று துன்று
கடல் வந்த சங்கு ஈன்ற முத்து வயல் கரை குவிக்கும் கழுமலமே.

aTal vanta vAn2avarai azittu, ulaku tezittu uzalum arakkarkOmAn2
miTal vanta irupatu tOL neriya, viral paNikoNTOn2 mEvum kOyil--
naTa vanta uzavar, "itu naTavu oNA vakai paralAyttu" en2Ru tun2Ru
kaTal vanta cagku In2Ra muttu vayal karai kuvikkum kazumala(m)mE.

**பொருள்:** வலிமை பொருந்திய தேவர்கள் பலரை அழித்து உலகை அச்சுறுத்தித் திரிந்தவன் அரக்கர் தலைவனான இராவணன் ஆவான். இவனின் வலிமை மிக்க இருபது தோள்களையும் தமது கால் விரலால் நெரிய ஊன்றி, பணி கொண்டார் சிவபெருமான். இப்பெருமான் எழுந்தருளியுள்ள கோயில் திருக்கழுமலம் ஆகும். நாற்று நட வந்த உழவர்கள் 'இவை நாற்று நடுவதற்கு இடையூறாக கற்கள் போலத் தோன்றுகின்றனவே' என்று கூறுகின்ற அளவுக்கு கடலில் இருந்து வந்த சங்குகள் முத்துக்களை வயல்களில் ஈன்று குவிக்கின்ற வளத்தை உடையது இக்கழுமலம் ஆகும்.

**குறிப்புரை:** தேவர்களை அழித்து உலகை வருத்தி உழலும் இராவணனது இருபது தோள்களும் நெரிய விரலூன்றிய சிவபெருமான் உறையுங்கோயில் நாற்று நடவந்த உழவர்கள் பருக்கைக் கல்லாக இருக்கிறதென்று எண்ணி முத்துக்களை வரப்பில் குவிக்கும் கழுமலம் என்கின்றது. அடல் – வலிமையோடு. ஒழித்து – கொன்று. மிடல் – வலிமை. பரல் ஆய்த்து – பருக்கைக் கல்லாயிற்று. துன்று – நெருங்கிய. இது நெய்தலோடு தழீஇய மருதம் என்பதை விளக்கிற்று.

Raavanan, the Chief of Asuraas was a terror to the people of this earth. He killed a good number of Devaas and did havoc to one and all. Lord Civan of Thiru-kazhu-malam crushed his mighty twenty shoulders by slightly pressing the top of mount

Kailas by His toe and made him to realise his fault. This Lord Civan is entempled in Thiru-kazhu-malam temple. In this city the farmers who came for transplanting the seedlings in their fields saw a large quantity of conches and pearls inside their fields. Thinking that all these pearls are all just pebbles of no use, and will be a hindrance for their transplanting work, they gather them and throw them away in the ridges of their fields. Whereas these conches and pearls were washed ashore by the waves of the sea near by and collect in the fields. Such is the prosperity of Thiru-kazhu-malam where our Lord Civan is entempled.

பூமகள்தன்கோனயனும்புள்ளினோடுகேழலுருவாகிப்புக்கிட்
டாமளவுஞ்சென்றுமுடியடிகாணாவகைநின்றானமருங்கோயில்
பாமருவுங்கலைப்புலவோர்பன்மலர்கள்கொண்டணிந்துபரிசினாலே
காமனைகள்பூரித்துக்களிகூர்ந்துநின்றேத்துங்கழுமலமே. 9

பூமகள்தன் கோன், அயனும், புள்ளினோடு கேழல் உருஆகிப் புக்கிட்டு,
ஆம் அளவும் சென்று, முடி அடி காணா வகை நின்றான் அமரும் கோயில் -
பா மருவும் கலைப் புலவோர் பல்மலர்கள் கொண்டு அணிந்து, பரிசினாலே
காமனைகள் பூரித்துக் களி கூர்ந்து நின்று, ஏத்தும் கழுமலமே.

pUmakaL tan2 kOn2, ayan2um, puLLin2oTu kEzal uru Akip pukkiTTu,
Am aLavum cen2Ru, muTi aTi kANA vakai nin2RAn2 amarum kOyil--
pA maruvum kalaip pulavOr palmalarkaL koNTu aNintu, paricin2AlE
kAman2aikaL pUrittuk kaLi kUrntu nin2Ru, Ettum kazumala(m)mE.

***பொருள்:*** திருமகளின் தலைவனான திருமாலும், பிரமனும் முறையே பன்றியும் அன்னப் பறவையும் ஆகி தங்களால் முடிந்த அளவு சென்றும் சிவபெருமானின் அடியும் முடியும் காண முடியாதவராகத் தோல்வியுற்று நின்றனர். இத்தகைய பெருமை கொண்ட சிவபெருமான் அமர்ந்திருக்கும் கோயில் இருப்பது திருக்கழுமலம் ஆகும். இங்கு பல்வேறு பாக்களில் அமைந்துள்ள அருங்கலைகள் அறிந்த புலவர்கள் பலவிதமான மலர்களைக் கொண்டு அர்ச்சனை செய்து சிவபெருமானிடம் பரவுகின்றனர். அவர்களின் முறையான விருப்பங்கள் நிறைவேறுவதைக் கண்டு மேலும் களிகூர்ந்து அவர்கள் பெருமானைப் போற்றுகின்றனர். இத்தகையோர் வாழும் இடம் கழுமலம் ஆகும்.

**குறிப்புரை:** பிரமனும் திருமாலும் அன்னமாயும், பன்றியாயும் அடிமுடிகாணப் பெறாதான் அமருங்கோயில் புலவர்கள் பூக்கொண்டு அணிந்து இஷ்டத்தை நிறைவேற்ற வழிபாடு செய்யும் கழுமலம் என்கின்றது. பூ

மகள் தன் கோன் – இலக்குமி நாயகனாகிய திருமால். புள் – பறவையாகிய அன்னம். கேழல் – பன்றி. ஆம் அளவும் – ஆணவத்தால் விளைந்த தற்போதம் கெடுமளவும். காமனை – விருப்பம்.

Thirumagal's consort Thirumaal and the four faced Brahma took the form of a hog and swan respectively and did their best to reach and see the holy feet and the head of Lord Civan and got disappointed, though Lord Civa stood before them in a huge and tall flame of fire. This Lord Civan is entempled in Thiru-kazhu-malam. Poets of outstanding knowledge in the rare arts of different spiritual songs do the virtual chanting of mystical words with all kinds of fragrant flowers. All their wishes successfully ended in the desired way. They adore Lord Civan in Thiru-kazhu-malam happily.

**Note:** This and many other exploits are repeated in puraanaas and epics / chronicles again and again. They stress on the glories of Lord Civa.

குணமின்றிப்புத்தர்களும்பொய்த்தவத்தைமெய்த்தவமாய்நின்றுகையில்
உணல்மருவுஞ்சமணர்களுமுணராதவகைநின்றானுறையுங்கோயில்
மணமருவும்வதுவையொலிவிழவினொலியிவையிசையமண்மேற்றேவர்
கணமருவுமறையினொலிகீழ்ப்படுக்கமேற்படுக்குங்கழுமலமே. 10

குணம் இன்றிப் புத்தர்களும், பொய்த்தவத்தை மெய்த்தவம்ஆய் நின்று கையில்
உணல் மருவும் சமணர்களும், உணராத வகை நின்றான் உறையும் கோயில் -
மணம் மருவும் வதுவை ஒலி, விழவின் ஒலி, இவை இசைய மண்மேல்-தேவர்
கணம் மருவும் மறையின்ஒலி கீழ்ப்படுக்க, மேற்படுக்கும் கழுமலமே.

kuNam in2Rip puttarkaLum, poyttavattai meyttavam Ay nin2Ru kaiyil
uNal maruvum camaNarkaLum, uNarAta vakai nin2RAn2 uRaiyum kOyil--
maNam maruvum vatuvai oli, vizavin2 oli, ivai icaiya maNmEl-tEvar
kaNam maruvum maRaiyin2 oli kIzppaTukka, mElpaTukkum kazumala(m)mE.

**பொருள்:** அறிவுத் தெளிவு இல்லாத புத்தர்களும், பொய்த்தவத்தை மெய்த்தவமாக எண்ணி, கையில் உணவு ஏற்று உண்ணும் சமணர்களும் அறியவும் உணரவும் முடியாதவாறு நின்ற சிவபெருமான் உறையும் கோயில் உள்ள இடம் திருக்கழுமலம் ஆகும். இங்கு திருமண விழாவின் எழும் ஆரவாரமும், திருவிழாக்களின் ஒலியும், பூவுலகில் தேவர்கணங்கள் ஓதும் வேத ஒலியை மிஞ்சுமாறு ஒலிக்கின்றன.

**குறிப்புரை:** கழுமலத்தீசன் திருவடிமேல், கற்றவர் நற்றுணையாகிய ஞானசம்பந்தன் சொன்ன திருப்பாடல் பத்தும் வல்லார் திருமகள் துணையுடன் உலகமுழுதாண்டு சிவபெருமான் திருவடிசேர முயல்கின்றார் என்கின்றது. சொல்துணை – ஓதுவார்க்குத் துணையான சொல்.

Buddhists are lacking in virtue. Jains mistake their false penance as though it is true one and accept alms in their hands and eat it for their livelihood. These two groups were unable to recognise Lord Civan who is enshrined in Thiru-kazhu-malam. In this city very heavy noise is produced when marriages take place between men and women because of the heavy crowd of people gathered there. Also the noise heard during temple festivals is also very high. These two noises deaden the sound of the Vedic recitation that arise on the arrival of Devas to this town. The earlier two noises are more conspicuous than the last one in the city of Thiru-kazhu-malam.

**Note:** This shows the 'intensity' of population ever in those days. Saivism has always been the most prominent theology.

கற்றவர்கள்பணிந்தேத்துங்கழுமலத்துளீசன்றன்கழல்மேல்நல்லோர்
நற்றுணையாம்பெருந்தன்மைஞானசம்பந்தன்றான்நயந்துசொன்ன
சொற்றுணையோரைந்திினொடைந்திவைவல்லார்தூமலராள்துணைவராகி
முற்றுலகமது ஆண்டுமுக்கணானடிசேரமுயல்கின்றாரே. 11

கற்றவர்கள் பணிந்து ஏத்தும் கழுமலத்துள் ஈசன்தன் கழல்மேல், நல்லோர்
நல்-துணை ஆம் பெருந்தன்மை ஞானசம்பந்தன்தான் நயந்து சொன்ன
சொல்-துணை ஓர்ஐந்தினொடு ஐந்துஇவை வல்லார், தூ மலராள் துணைவர் ஆகி,
முற்று உலகம்அது ஆண்டு, முக்கணான் அடி சேர முயல்கின்றாரே.

kaRRavarkaL paNintu Ettum kazumalattuL Ican2tan2 kazalmEl, nallOr
nal-tuNai Am peruntan2mai njAn2acampantan2tAn2 nayantu con2n2a
col-tuNai Or aintin2oTu aintu ivai vallAr, tU malarAL tuNaivar Aki,
muRRu ulakam atu kaNTu, mukkaNAn2 aTi cEra muyalkin2RArE.

**பொருள்:** கற்றுணர்ந்தவர்கள் பணிந்து போற்றுகின்ற கழுமலத்துள் விளங்குகின்றான் சிவபெருமான். அவனுடைய திருவடிகளை விரும்பி, நல்லோர்க்கு நல்துணையாகும் பெருந்தன்மையுடைய ஞானசம்பந்தன் இப்பதிகத்தைப் பாடினார். ஓதுவார்களுக்குத் துணையாய் அமைந்த சொற்றொடர்கள் உடையது இப்பாடல்கள். உலகம் முழுவதையும்

அரசாளும், முக்கண்களை உடைய சிவனடியைச் சேர முயற்சிப்பவர்கள் திருமகளின் துணை கொண்டு இப்பாடல்களைப் பாடுவார்கள்.

**குறிப்புரை:** கழுமலத்தீசன் திருவடிமேல், கற்றவர் நற்றுணையாகிய ஞானசம்பந்தன் சொன்ன திருப்பாடல் பத்தும் வல்லார் திருமகள் துணை கொண்டு உலகமுழுதாண்டு சிவபெருமான் திருவடி சேர முயல்கின்றார் என்கின்றது. சொல்துணை – ஓதுவார்க்குத் துணையான சொல்.

Great learned scholars worship the holy feet of Lord Civan enshrined in Thiru-kazhu-malam with humility in their hearts. Gnaanasambandan of Seekaazhi with his noble character (*பெருந்தன்மை*) is a companion to virtuous scholars. He adored the holy feet of Lord Civan in Thiru-kazhu-malam and recited this hymn. This hymn consists of easy and helpful words for recitation by saiva scholars, appointed to recite sacred Tamil hymns in saiva temples and monasteries (*ஓதுவார்கள்*). Those who are capable of singing these ten verses of this hymn will rule over all the worlds. They will receive the blessings of goddess Lakshmi also. They will also become eligible to perform the sacred and ritual efforts to reach the holy feet of Lord Civa to achieve final salvation.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*129ஆம் பதிகம் முற்றிற்று*
End of 129th Hymn

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# 130. திருவையாறு

## திருத்தல வரலாறு:

36ஆம் பதிகம் பார்க்க.

# 130. THIRU-VAI-YAARU

## HISTORY OF THE PLACE

See 36th Hymn.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 130. திருவையாறு

## 130. THIRU-VAI-YAARU

பண் : மேகராகக்குறிஞ்சி
ராகம் : நீலாம்பரி

*Pann: Mēgaraaga-k-kurinji*
*Raagam : Neelaambari*

புலனைந்தும்பொறிகலங்கி நெறிமயங்கியறிவழிந்திட்டைம்மேலுந்தி
அலமந்தபோதாகஅஞ்சேலென்றருள்செய்வானமருங்கோயில்
வலம்வந்தமடவார்கள்நடமாடமுழவதிரமழையென்றஞ்சிச்
சிலமந்தியலமந்துமரமேறிமுகில்பார்க்குந்திருவையாறே. 1

புலன்ஐந்தும் பொறி கலங்கி, நெறி மயங்கி அறிவு அழிந்திட்டு, ஐம் மேல் உந்தி,
அலமந்தபோதுஆக, "அஞ்சேல்!" என்று அருள்செய்வான் அமரும் கோயில் -
வலம்வந்த மடவார்கள் நடம்ஆட, முழவு அதிர, மழை என்று அஞ்சி,
சிலமந்தி அலமந்து, மரம் ஏறி, முகில் பார்க்கும் திரு ஐயாறே.

pulan2 aintum poRi kalagki, neRi mayagki, aRivu azintiTTu, aim mEl unti,
alamanta pOtu Aka, "anjcEl!" en2Ru aruL ceyvAn2 amarum kOyil--
valam vanta maTavArkaL naTam ATa, muzavu atira, mazai en2Ru anjci,
cilamanti alamantu, maram ERi, mukil pArkkum tiru aiyARE.

பொருள்: ஐம்புலன்களும் தமது பொறிகளின் இயல்பில் இருந்து வழிமாறி, அதற்குரிய அறிவையும் இழந்து, பித்தம், வாயு, சிலேத்துமம் என்ற நாளங்களின் மாறுபாட்டால் கபம் பெருகி, மனம் நிலையற்று வருந்தும் மரண காலத்திலும் 'அஞ்சேல்' என்று அருள் செய்பவன் சிவபெருமான் ஆவான். இப்பெருமான் அமர்ந்திருக்கும் கோயில் திருவையாறு ஆகும். நடனக்கலையில் வல்ல பெண்கள் நடனம் ஆடுகின்றனர். அவ்வாடலுக்கு ஏற்றவாறு

முழவுகள் அதிர்கின்றன. அவற்றைக் கேட்ட சில மந்திகள் அதை இடிமுழக்கம் என அஞ்சி, மரங்களில் ஏறி மேகங்களைப் பார்க்கின்றன. இத்தகைய வளம் பொருந்தியது திருவையாறாகும்.

**குறிப்புரை:** ஐம்புலன்களும் தத்தம் பொறிகளை விட்டு வழிமாறி அறிவழிந்து கபம் மேலிட்டு வருந்தும் காலத்து அபயப் பிரதானம் செய்பவன் கோயில், வலம் வரும் பெண்கள் நடனம் செய்ய, அதற்குப் பக்கவாத்தியமாக முழவு அதிர, அவ்வொலியை மேகத்திடியோசையென மயங்கி, மந்திகள் மரம் ஏறி முகில் பார்க்கும் ஐயாறு என்கின்றது. ஐ – கபம். அலமந்து – சுழன்று. முகில் – மேகம்.

When a person is overwhelmed by many ailments during his final days of life, he will fee£ perturbed and agitated mentally. His five senses will get confounded; mind will get confused; memory will fail; and phlegm will also originate. At this stage, Lord Civan provides consolation and graces him. This Lord Civan abides in Thiru-vai-yaaru temple. Young girls of this town, eminent in Bharatha Naattiyam are dancing and circumambulating the temple from left to right (*வலம் வருதல்*). Drums play as an accompaniment and in tune with beats of dances. By hearing the heavy noise of drums, some monkeys that are moving near by get scared and imagine that the noise is that of thunder and that rain might follow. Therefore, the monkeys soon climb to the top of near by tall trees and look up and down the sky to find out if any dark rain bearing clouds are approaching. Such is this heavenly glorious city Thiru-vai-yaaru.

விடலேறுபடநாகமரைக்கசைத்துவெற்பரையன்பாவையோடும்
அடலேறொன்றதுவேறியஞ்சொலீர்பலியென்னுமடிகள்கோயில்
கடலேறித்திரைமோதிக்காவிரியினுடன்வந்துகங்குல்வைகித்
திடலேறிச்சுரிசங்கஞ்செழுமுத்தங்கீன்றலைக்குந்திருவையாறே. 2

விடல் ஏறு படநாகம் அரைக்கு அசைத்து, வெற்புஅரையன்பாவையோடும்
அடல் ஏறுஒன்றுஅது ஏறி, "அம் சொலீர் பலி!" என்னும் அடிகள் கோயில் -
கடல் ஏறித் திரை மோதிக் காவிரியின் உடன் வந்து கங்குல் வைகி,
திடல் ஏறிச் சுரிசங்கம் செழு முத்து அங்கு ஈன்று அலைக்கும் திரு ஐயாறே.

viTal ERu paTanAkam araikku acaittu, veRpu araiyan2 pAvaiyOTum
aTal ERu on2Ru atu ERi, "am collr, pali!" en2n2um aTikaL kOyil--
kaTal ERit tirai mOtik kAviriyin2 uTan2 vantu kagkul vaiki,
tiTal ERic curicagkam cezu muttu agku In2Ru alaikkum tiru aiyARE.

**பொருள்:** கொல்லும் தன்மை வாய்ந்த படத்தினை உடைய நாகத்தை அரையினில் கட்டியிருப்பவரும், மலையரசன் மகளான பார்வதிதேவியோடு வலிமையான விடையின்மீது ஏறியிருப்பவரும், சிவபெருமான் ஆவார். அவர் 'அழகிய சொற்களைப் பேசும் மகளிரே! பிச்சையிடுங்கள்!' என்று பலி கேட்பவர். இப்பெருமானின் கோயிலை உடையது திருவையாறாகும். இத்தலத்தில், வளைந்த மூக்கினை உடைய கடல் சங்குகள் அலைகள் வாயிலாக காவிரி ஆற்றுடன் வருகின்றன. அவைகள் இரவு நேரத்தில் மேடுகளில் ஏறி, செழுமையான முத்துக்களை ஈனுகின்றன.

**குறிப்புரை:** பாம்பைத் திருவரையிற்கட்டி, மலையரசன் மகளோடும் விடையேறி, அம்மா பிச்சையிடுங்கள் என்னும் அடிகள் கோயில், கடற்சங்கம் காவிரியோடு மேல் ஏறி வந்து முத்தம் என்றழைக்கும் ஐயாறு என்கின்றது. விடல் – வலிமை. வீடல் என்பதன் விகாரம் எனக்கொள்ளினும் அமையும். அஞ்சொலீர் – அழகிய சொற்களை உடையவர்களே. கங்குல் – இரவு. திடல் – மேடு. கரி சங்கம் – கரிந்த மூங்கிலை உடைய சங்குகள்.

Lord Civa has fastened to His waist, a murderous, hooded cobra. He sits mounted on the sturdy bull along with His consort Paarvathi Devi, daughter of the Himaalayan mountain (King) and moves around the residential area and yelling like thus "Oh! Ye! Beautiful maidens - you speak pleasing words in sweet sounding voice! Give me alms!" This Lord Civan is entempled in the city of Thiru-vai-yaaru. A special type of conch shell of the sea having curved black tips are carried by the waves in large numbers enters into the Cauvery river through its estuary. They are carried forward by the ebb, and reaches the river banks in Thiru-vai-yaaru town. These shells are thus spread all over during night hours and bring forth splendid pearls in large numbers to that area and shining bright. Such is the prosperity of the city Thiru-vai-yaaru.

கங்காளர்கயிலாயமலையாளர்கானப்பேராளர்மங்கை
பங்காளர்திரிசூலப்படையாளர்விடையாளர்பயிலுங்கோயில்
கொங்காளப்பொழில்நுழைந்துகூர்வாயாலிறகுலர்த்திக்கூதனீங்கிச்
செங்கானல்வெண்குருகுபைங்கானலிரைதேருந்திருவையாறே. 3

*கங்காளர், கயிலாயமலையாளர், கானப்பேராளர், மங்கை-*
*பங்காளர், திரிசூலப்படையாளர், விடையாளர், பயிலும்கோயில் -*
*கொங்கு ஆள் அப்பொழில் நுழைந்து, கூர்வாயால் இறகு உலர்த்தி, கூதல் நீங்கிச்,*
*செங்கால் நல் வெண்குருகு, பைங்கானல் இரை தேரும் திரு ஐயாறே.*

kagkALar, kayilAyamalaiyALar, kAn2appErALar, magkai-
pagkALar, tiricUlappaTaiyALar, viTaiyALar, payilum kOyil--
kogku AL ap pozil nuzaintu, kUrvAyAl iRaku ulartti, kUtal nIgki,
cegkAl nal veNkuruku, paigkAn2al irai tErum tiru aiyARE.

**பொருள்:** சிவபெருமான், மண்டை ஓட்டை மாலையாக அணிந்திருப்பவர். கயிலை மலையில் உறைபவர். திருக்கானப்பேர் என்னும் தலத்தில் உறைபவர். உமை பங்காளர். முத்தலைச் சூலப்படையை ஏந்தியிருப்பவர். விடை ஊர்தியை உடையவர். இத்தகைய பெருமான் எழுந்தருளிய கோயில் திருவையாறு ஆகும். இத்தலத்தில் சிவந்த கால்களை உடைய வெண்ணிறக் குருகுப் பறவைகள் தேன் நிறைந்த சோலைகளில் நுழைகின்றன. தமது கூரிய அலகுகளால் இறகுகளைக் கோதி குளிரை நீக்குகின்றன. அந்தப் பசுமையான சோலைகளில் தமக்கு வேண்டிய இரைகளைத் தேடும் திருவையாறாகும்.

**குறிப்புரை:** கங்காளர் மங்கை பங்காளர் பயிலுங் கோயில், வெண்குரு பொழிலில் நுழைந்து அலகால் சிறகைக் கோதி, உலர்த்தி, குளிர்நீங்கி இரைதேடும் ஐயாறு என்கின்றது. கொங்கு ஆள் அப்பொழில் – தேன் நிறைந்த அச்சோலை. கூதல் – குளிர் செங்கால் நல் வெண் குருகு எனப் பிரிக்க. கானல் – கடற்கரைச் சோலை. இது திணை மயக்கம் கூறியது.

Lord Civan wears the skull; His permanent abode is mount Kailas. He is entempled in the town called Kaaneppēr (*திருக்கானப்பேர்*); He shares His body with His consort Umaa Devi; He holds the weapon trident in one of His hands; He has a bull as His vehicle. This Lord is enshrined in Thiru-vai-yaaru. In this town, white herons having red claw fly to the posh groves where bee hives are in good number. The herons dry their wet feathers by their sharp break and get rid of their coldness. Thereafter they seek the food they like in that grove and enjoy. Such fertile place is Thiru-vai-yaaru.

ஊன்பாயுமுடைதலைகொண்டூரூரின்பலிக்குழல்வாருமையாள்பங்கர்
தான்பாயும்விடையேறுஞ்சங்கரனார்தழலுருவர்தங்குங்கோயில்
மான்பாயவயலருகேமரமேறிமந்திபாய்மடுக்கள்தோறும்
தேன்பாயமீன்பாயச்செழுங்கமலமொட்டலருந்திருவையாறே. 4

ஊன் பாயும் உடைதலை கொண்டு ஊர்ஊரன் பலிக்கு உழல்வார், உமையாள்பங்கர்,
தான் பாயும் விடை ஏறும் சங்கரனார், தழல்உருவர், தங்கும் கோயில் -
மான் பாய, வயல் அருகே மரம் ஏறி மந்தி பாய் மடுக்கள்தோறும்
தேன் பாய, மீன் பாய, செழுங்கமலமொட்டு அலரும் திரு ஐயாறே.

Un2 pAyum uTaitalaik koNTu Ur Uran2 palikku uzalvAr, umaiyAL pagkar,
tAn2 pAyum viTai ERum cagkaran2Ar, tazal uruvar, tagkum kOyil--
mAn2 pAya, vayal arukE maram ERi, manti pAy maTukkaL tORum
tEn2 pAya, mIn2 pAya, cezugkamalamoTTu alarum tiru aiyARE.

***பொருள்:*** ஊன் பொருந்தியதும் முடைநாற்றம் உடையதுமான தலை ஓட்டைக் கைகளில் ஏந்தி ஊர்கள்தோறும் சென்று பலியேற்று உழல்பவர். உமை பங்கர். பாய்ந்து செல்லும் விடையேற்றை உடையவர். நன்மைகளைச் செய்வதனால் சங்கரன் என்னும் பெயரை உடையவர். தழல் உருவினர். இத்தகையப் பெருமைகளை உடைய சிவபெருமான் தங்கியிருக்கும் கோயில் திருவையாறு ஆகும். இத்தலத்தில் மான்கள் துள்ளிப் பாய வயலின் அருகே உள்ள மரங்களில் ஏறி மந்திகள் பாய, அதில் இருக்கும் தேன் கூடுகளில் இருந்து தேன் ஆற்றில் பாய, அதனால் மீன்கள் துள்ளி தாமரை மொட்டை, மலர வைக்கின்றன. இத்தகைய இயற்கை வளத்தை உடையது திருவையாறு ஆகும்.

***குறிப்புரை:*** பிரம கபாலத்தை ஏந்தி ஊர்தோறும் பலிக்கு உழல்வாராகிய தழல் உருவர் தங்கும் கோயில். மான்பாய, வயலருகேயுள்ள மரத்தில் ஏறி மந்திகள் மடுக்கள் தோறும் பாய்வதால் தேன்பாய, மீன்பாய, தாமரைகள் மலரும் ஐயாறு என்கின்றது. மான் – முல்லைக் கருப்பொருள்.

The skull of Brahma stinks, because small quantities of rotten flesh still stick to the bone. Lord Civan carries this skull in His hand as His begging bowl and moves from one town to another and accepts the alms and roams about here and there. He is concorporated with His consort Umaa Devi and moves about riding on His bull which runs fast. He is the dispenser of happiness; therefore He is called 'Sankaran'. His ruddy fame glows like that of fire. This Civan is enshrined in Thiru-vai-yaaru. In this city of Thiru-vai-yaaru lush groves are there in large numbers. In these groves, deer in large numbers jumps about happily. By seeing the jumping deer, the monkeys rush towards the trees near the fields and climb to the top. While climbing they dash against the honeycombs in the trees and damage them. Honey starts dripping and falls into the pool near the trees. As the honey drips, the fishes in the pool are terrified and jump here and there. While jumping they dash against the tender lotus flower-bud, and make them blossom. Such is the beauty and fertility of Thiru-vai-yaaru.

நீரோடுகூவிளமும்நிலாமதியும்வெள்ளெருக்கும்நிறைந்தகொன்றைத்
தாரோடுதண்கரந்தைசடைக்கணிந்ததத்துவனார்தங்குங்கோயில்
காரோடிவிசும்பளந்துகடிநாறும்பொழிலணைந்தகமழ்தார்வீதித்
தேரோடுமரங்கேறிச்சேயிழையார்நடம்பயிலுந்திருவையாறே. 5

நீரோடு கூவிளமும், நிலாமதியும், வெள்எருக்கும், நிறைந்த கொன்றைத்
தாரோடு, தண்கரந்தை, சடைக்கு அணிந்த தத்துவனார் தங்கும் கோயில் -
கார் ஓடி விசும்பு அளந்து, கடி நாறும் பொழில் அணைந்த கமழ் தார் வீதித்
தேர் ஓடும் அரங்கு ஏறி, சேயிழையார் நடம் பயிலும் திரு ஐயாறே.

nIrOTu kUviLamum, nilAmatiyum, veL erukkum, niRainta kon2Rait--
tArOTu, taNkarantai, caTaikku aNinta tattuvan2Ar tagkum kOyil--
kAr OTi vicumpu aLantu, kaTi nARum pozil aNainta kamaz tAr vItit
tEr OTum aragku ERi, cEyizaiyAr naTam payilum tiru aiyARE.

**பொருள்:** கங்கை நதி, வில்வம், பிறைமதி, வெள்ளெருக்கு, கொன்றை மலர்கள் நிறைந்த மாலை, குளிர்ச்சியான கரந்த மலர் ஆகியவற்றை அணிந்திருக்கும் தத்துவனானவன் சிவபெருமான் தத்துவன் ஆவான். இப்பெருமான் தங்கியிருக்கும் கோயில் திருவையாறு ஆகும். இத்தலத்தில் நிறைந்துள்ள பொழில்களின் நறுமணம், மேக மண்டலம் வரை உயர்ந்து வானத்தை அளந்து பரவிநிற்கின்றது. தேர் ஓடும் வீதிகளில் மணம் கமழும் வீடுகள் உள்ளன. வீதிகளில் உள்ள அரங்குகளில் அணிகலன்களை அணிந்த இளம் பெண்கள் நடனம் ஆடுகின்றனர். இத்தகு மகிழ்ச்சியான மக்கள் வாழும் தலம் திருவையாறாகும்.

**குறிப்புரை:** கங்கையோடு வில்வம் எருக்கம்பூ முதலியவற்றைச் சடையில் அணிந்த தத்துவனார் தங்கும் கோயில், மேக மண்டலத்தை அளாவி, விண்ணை அளந்த பொழில்கள் சேர்ந்துள்ள தேரோடும் வீதியிலே உள்ள அரங்குகளில் மகளிர் நடமாடும் ஐயாறு என்கின்றது. கூவிளம் – வில்வம். கார் ஓடி – மேகம் பரந்து.

Lord Civan retains the crescent moon in His matted hair. He also supports the river Ganges on His head. He wears the garland made up of cassia flowers, Bael leaves, white madar flowers (*வெள்ளெருக்கு*) and the cool and fragrant Basil leaves (*திருநீற்றுப்பச்சை* - Ocinum basilicum). This Civan, Lord of all powers (*தத்துவனார்*) is enshrined at the temple in the city of Thiru-vai-yaaru. In the natural gardens of this city very tall and sweet smelling flower trees are many in number. They grow very tall so as to reach and measure the sky where the clouds are moving and spread their

fragrance up in the air. Fragrance from flower and other things also spreads from the mansions into the streets where the temple chariot runs on. Young girls wearing all sorts of jewellery climb up the dancing halls located in these streets and perform beautiful dance, in the stage to the enjoyment of every one assembled there. Such is the fame of this town Thiru-vai-yaaru.

வேந்தாகிவிண்ணவர்க்கும்மண்ணவர்க்கும்நெறிகாட்டும்விகிர்தனாகிப்
பூந்தாமநறுங்கொன்றைசடைக்கணிந்தபுண்ணியனார்நண்ணுங்கோயில்
காந்தாரமிசையமைத்துக்காரிகையார்பண்பாடக்கவினார்வீதித்
தேந்தாமென்றரங்கேறிச்சேயிழையார்நடமாடுந்திருவையாறே. 6

வேந்துஆகி, விண்ணவர்க்கும் மண்ணவர்க்கும் நெறி காட்டும் விகிர்தன்ஆகிப்,
பூந்தாமநறுங்கொன்றை சடைக்கு அணிந்த புண்ணியனார் நண்ணும் கோயில் -
காந்தாரம் இசைஅமைத்துக் காரிகையார் பண் பாட, கவின் ஆர் வீதித்,
"தேம்தாம்" என்று, அரங்கு ஏறிச் சேயிழையார் நடம்ஆடும் திரு ஐயாறே.

vEntu Aki, viNNavarkkum maNNavarkkum neRi kATTum vikirtan2 Aki,
pUntAma naRugkon2Rai caTaikku aNinta puNNiyan2Ar naNNum kOyil--
kAntAram icai amaittuk kArikaiyAr paN pATa, kavin2 Ar vIti,
"tEmtAm" en2Ru, aragku ERic cEyizaiyAr naTam ATum tiru aiyARE.

**பொருள்:** அனைத்து உலகங்களுக்கும் அரசன் ஆனவன். விண்ணவர்களுக்கும் மண்ணவர்களுக்கும் நல்ல நெறியைக் காட்டும் வள்ளல் சிவபெருமான். மணம் கமழும் கொன்றை மாலையைச் சடையில் அணிந்த புண்ணிய வடிவினன். இத்தகையப் பெருமைகளை உடையவன் சிவபெருமான் ஆவான். இப்பெருமான் எழுந்தருளி இருக்கும் கோயில் திருவையாறு ஆகும். இத்தலத்தில் பெண்கள் காந்தாரப் பண் அமைந்த இசையைப் பாடுகின்றனர். வீதிகளில் அமைந்திருக்கும் அழகிய அரங்களில் ஏறி, அணிகலன்களை அணிந்திருக்கும் இளம் பெண்கள், 'தேம்' 'தாம்' என்ற ஒலிக்குறிப்போடு இசைக்கு ஏற்றவாறு நடனம் ஆடுகின்றனர்.

**குறிப்புரை:** அரசாகி, வழிகாட்டும் வள்ளலாகிய பூங்கொன்றை சடைக்கணிந்த புண்ணியர் கோயில் காந்தாரப் பண்ணமைத்து மகளிர் இசைபாட, சேயிழையார் சிலர் அரங்கேறி நடமாடும் ஐயாறு என்கின்றது. தாமம் – மாலை.

Civan is the Supreme Lord of all the universe. He is the pre-eminent Supreme Head (*விகிர்தன்*), who reveals virtuous deeds to celestial folk as well to the people on

earth. He is righteous Lord (*புண்ணியனார்*) who wears the sweet smelling cassia flowers on His matted hair. This Civan is entempled in the city of Thiru-vai-yaaru. In this city young and good looking girls wearing all sorts of ornaments get into the dancing stage fixed in the sightly streets and dance to the tune of 'Thēm'-'thaam' (*தேம்-தாம்*) sung by the songster women who sing songs in the third metre of the gamut (*காந்தாரப்பண்ணில் இசையமைத்தல்*) to the enjoyment of the audience. Such glorious is the town Thiru-vai-yaaru.

**Note:** Kaanthaara-p-pann – *காந்தாரப்பண்* – An ancient secondary melody-type of the Paalai class (*பாலை வகுப்பைச் சேர்ந்த பண்*).

நின்றுலாநெடுவிசும்பினெருக்கிவருபுரமூன்றும்நீள்வாயம்பு
சென்றுலாம்படிதொட்டசிலையாளிமலையாளிசேருங்கோயில்
குன்றெலாங்குயில்கூவக்கொழும்பிரசமலர்பாய்ந்துவாசமல்கு
தென்றலாரடிவருடச்செழுங்கரும்புகண்வளருந்திருவையாறே. 7

நின்று உலாம் நெடுவிசும்பில் நெருக்கி வரு புரம்மூன்றும் நீள்வாய்அம்பு
சென்று உலாம்படி தொட்ட சிலையாளி, மலையாளி, சேரும் கோயில் -
குன்றுஎலாம் குயில் கூவக், கொழும் பிரசமலர் பாய்ந்து வாசம் மல்கு
தென்றலார் அடி வருடச், செழுங் கரும்பு கண்வளரும் திரு ஐயாறே.

nin2Ru ulAm neTuvicumpil nerukki varu puram mUn2Rum nILvAy ampu
cen2Ru ulAmpaTi toTTa cilaiyALi, malaiyALi, cErum kOyil--
kun2Ru elAm kuyil kUva, kozum piracamalar pAyntu vAcam malku
ten2RalAr aTi varuTa, cezug karumpu kaNvaLarum tiru aiyARE.

**பொருள்:** நீண்ட வான வெளியில் நின்று உலாவி தேவர்களை துன்புறுத்திய அசுரர்களின் முப்புரங்களை, நீண்டதும் கூரியதுமான அம்பு சென்று தைக்குமாறு கணை தொடுத்த வில்லாளன். கயிலை மலையை உடையவன். இத்தகு பெருமைகளை உடைய சிவபெருமான் சேர்ந்து இருக்கும் கோயில் திருவையாறு ஆகும். இத்தலத்தில் உள்ள குன்றுகளில் குயில்கள் கூவுகின்றன. தென்றல் காற்று தேன் நிறைந்து மலர்களைத் தீண்டி வருவதால் மணம் நிறைந்து வீசுகின்றது. அத்தென்றல் அடிவருட அவற்றால் செழுமையான கரும்புகள் கண் வளரும் வளமுடையது திருவையாறாகும்.

**குறிப்புரை:** வானவீதியில் நெருங்கி வரும் முப்புரங்களையும் அம்புதைக்கும் வண்ணம் வளைத்த வில்லாளி, மலையில் குயில் கூவத்தேன்பாய்ந்து மணம் நிறைந்த தென்றற்காற்று அடிவருடக் கரும்பு

தூங்கும் ஐயாறு என்கின்றது. பிரசம் – தேன். இதனால் தென்றற்காற்றின் சௌரப்யம், மாந்தியம் என்ற இருகுணங்களும் கூறப்பட்டன. கண் வளரும் – கணுக்கள் வளரும் என்றுமாம்.

Civan is the greatest archer who shot a long and sharp arrow on the three fortresses of the Asuraas who were wandering in the sky, destroying the living places of Devas and doing all havoc to them. He is the ruler and controller (ஆளி) of the great Himaalayan mountain. He prefers to be entempled in Thiru-vai-yaaru city. In the small hills of this city the Indian cuckoos create cooing noise and flies all around happily. The southerly wind (தென்றல்) passes on its way through flower gardens full of good quality honey, and carries the fragrance of the flowers. When this wind passes through the Thiru-vai-yaaru city it gives pleasantness to one and all of this place. This southerly wind also passes through sugarcane fields in this city, back up the growth of the sturdy sugarcane and make them to blossom. Such a fertile and enchanting city is Thiru-vai-yaaru.

அஞ்சாதேகயிலாயமலையெடுத்தஅரக்கர்கோன்தலைகள்பத்தும்
மஞ்சாடுதோள்நெரியஅடர்த்தவனுக்கருள்புரிந்தமைந்தர்கோயில்
இஞ்சாயலிளந்தெங்கின்பழம்வீழஇளமேதியிரிந்தங்கோடிச்
செஞ்சாலிக்கதிருழக்கிச்செழுங்கமலவயல்படியுந்திருவையாறே. 8

*அஞ்சாதே கயிலாயமலை எடுத்த அரக்கர்கோன் தலைகள்பத்தும்,*
*மஞ்சு ஆடு தோள், நெரிய அடர்த்து, அவனுக்கு அருள்புரிந்த மைந்தர் கோயில் -*
*இஞ்சாயல் இளந் தெங்கின் பழம் வீழ, இள மேதி இரிந்து அங்கு ஓடிச்,*
*செஞ்சாலிக்கதிர் உழக்கி, செழுங் கமல வயல் படியும் திரு ஐயாறே.*

anjcAtE kayilAyamalai eTutta arakkarkOn2 talaikaL pattum,
manjcu ATu tOL, neriya aTarttu, avan2ukku aruLpurinta maintar kOyil--
injcAyal iLan tegkin2 pazam vIza, iLa mEti irintu agku OTi,
cenjcAlikkatir uzakki, cezug kamala vayal paTiyum tiru aiyARE.

**பொருள்:** கயிலை மலையை சிறிதும் பயம் இன்றி அரக்கர் தலைவனான இராவணன் எடுத்தான். அவனுடைய பத்துத் தலைகளையும் வலிமையான தோள்களோடு நெரியுமாறு அடர்த்தவர் சிவபெருமான் ஆவார். பின்னர் அவனுக்கு அருள் புரிந்தவரும் அவரே. இப்பெருமான் எழுந்தருளிய கோயில் திருவையாறு ஆகும். இத்தலத்தில் இனிய நிழலைத் தரும் தென்னை மரத்தில் இருந்து காய்ந்த நெற்று கீழே விழுகின்றது. அதனைக் கண்டு

பயந்த எருமையின் கன்று, ஓடிச் சென்று செந்நெற்கதிர்களைக் காலால் மிதித்துச் செழுமையான தாமரை மலர்கள் களையாகப் பூத்திருக்கும் வயல்களைச் சென்றடைகின்றது. இத்தகு இயற்கை வளமுடையது திருவையாறு ஆகும்.

**குறிப்புரை:** சிறிதும் அஞ்சாது கயிலையைத் தூக்கிய இராவணன் தலைகள் பத்தையும் நெரித்து அவனுக்கு அருள்செய்த மைந்தர் கோயில், தேங்காய் நெற்று வீழ, எருமைக் கன்று பயந்தோடி நெல் வயலை மிதித்துத் தாமரை முளைத்திருக்கின்ற வயலிலே படியும் ஐயாறு என்கின்றது. மஞ்சு – வலிமை. மைந்து என்பதன் திரிபு இன்சாயல் – இனிய நிழல். இஞ்சாயல் என ஆயிற்று எதுகை நோக்கி. இளமேதி – ஈனாக்கன்றாகிய எருமை. செஞ்சாலி – செந்நெல்.

The Asuraa king Raavanan, without fear tried to lift and move aside mount Kailas, the abode of Lord Civan. But Civan slightly pressed the mountain top by His toe and lo! Raavanan's ten heads and strong shoulders got crushed. Raavanan repented and begged for pardon. Civan pardoned him and granted him boons. This Civan is entempled in Thiru-vai-yaaru town. In this town, elegant coconut trees shed ripe fruits on to the ground. Young calves of buffaloes grazing nearby, get frightened of the falling fruits, run into the red paddy fields, smashing the panicles and rest there where lotus flowers also grow as weeds.

மேலோடிவிசும்பணவிவியன்நிலத்தைமிகஅகழ்ந்துமிக்குநாடும்
மாலோடுநான்முகனுமறியாதவகைநின்றான்மன்னுங்கோயில்
கோலோடக்கோல்வளையார்கூத்தாடக்குவிமுலையார்முகத்தினின்று
சேலோடச்சிலையாடச்சேயிழையார்நடமாடுந்திருவையாறே. 9

மேல் ஓடி விசும்பு அணவி, வியன்நிலத்தை மிக அகழ்ந்து, மிக்கு நாடும்
மாலோடு நான்முகனும் அறியாத வகை நின்றான் மன்னும் கோயில் -
கோல் ஓடக், கோல்வளையார் கூத்தாடக், குவிமுலையார் முகத்தில் நின்று
சேல் ஓடச், சிலை ஆடச், சேயிழையார் நடம்ஆடும் திரு ஐயாறே.

mEl OTi vicumpu aNavi, viyan2 nilattai mika akazntu, mikku nATum
mAlOTu nAn2mukan2um aRiyAta vakai nin2RAn2 man2n2um kOyil--
kOl OTa, kOlvaLaiyAr kUttATa, kuvimulaiyAr mukattil nin2Ru
cEl OTa, cilai ATa, cEyizaiyAr naTam ATum tiru aiyARE.

**பொருள்:** நான்முகனும், திருமாலும் முறையே அன்னமாய் மேலே பறது வானத்தில் கலந்தும், அகன்ற நிலத்தைப் பன்றியாக ஆழமாக அகழ்ந்தும் மிகுந்த முயற்சியோடு தேடியும் அறியமுடியாதபடி ஓங்கி நின்றவர் சிவபெருமான் ஆவான். இப்பெருமான் நிலைபெற்று இருக்கும் கோயில் திருவையாறு ஆகும். இத்தலத்தில் தங்கள் கைகளில் அபிநயக் கோலுடன் கூத்தர்கள் நிற்க, திரண்ட வளையல்களை அணிந்த மகளிர் கூத்தாடுகின்றனர். திரண்ட தனங்களை உடைய அம்மகளிர்களின் கண்கள் சேல்மீன்களைப் போல் அசைந்தாடுகின்றன. அவர்களின் வில் போன்ற புருவங்கள் மேலும் கீழுமாக அசைகின்றன. இவ்வாறு கலைகள் மலிந்த ஊர் திருவையாறு ஆகும்.

**குறிப்புரை:** மேலே பறந்தும் நிலத்தைத் தோண்டியும் தேடிய அயனும் மாலும் அறியாத வண்ணம் அழலுருவானான் அமருங் கோயில். ஐயாறு என்கின்றது. அணவி – கலந்து. கோல் – கூத்தர் கையிற் கொள்ளும் அவிநயக் கோல். கோல் வளை – திரண்ட வளை.

Brahma took the form of a swan and flew high in the sky to reach Civa's head. Thirumaal took the form of a hog and dug the earth deeply to find out the holy feet of Civan. Both could not succeed, while Civa was standing very tall before them as a column of fire. This Civan is enshrined in the temple at Thiru-vai-yaaru. In this city, young damsels wearing heavy bangles dance to match the gesticulative movements of the rod held by the dance master. The eyes of these richly adorned fair girls have the resemblance of carp fish. While dancing they rotate the apple of their eyes. Their eyebrows resemble like the bow. They move their eyebrows up and down. Thus they make their audience to enjoy their superb dancing. Such famous dancers do live in Thiru-vai-yaaru town in large numbers.

குண்டாடுகுற்றுடுக்கைச்சமணரொடுசாக்கியருங்குணமொன்றில்லா
மிண்டாடுமிண்டருரைகேளாதேயாளாமின்மேவித்தொண்டீர்
எண்டோளர்முக்கண்ணரெம்மீசரிறைவரினிதமருங்கோயில்
செண்டாடுபுனற்பொன்னிச்செழுமணிகள்வந்தலைக்குந்திருவையாறே. 10

*குண்டாடு குற்றுஉடுக்கைச் சமணரொடு சாக்கியரும் குணம் ஒன்று இல்லா*
*மிண்டாடும் மிண்டர் உரை கேளாதே, ஆள்ஆமின், மேவித் தொண்டீர்!*
*எண்தோளர், முக்கண்ணர், எம் ஈசர், இறைவர், இனிது அமரும் கோயில் -*
*செண்டு ஆடு புனல் பொன்னிச் செழு மணிகள் வந்து அலைக்கும் திரு ஐயாறே.*

kuNTATu kuRRu uTukkaic camaNaroTu cAkkiyarum kuNam on2Ru illA
miNTATum miNTar urai kELAtE, AL Amin2, mEvit toNTIr!
eNtOLar, mukkaNNar, em Icar, iRaivar, in2itu amarum kOyil--
ceNTu ATu pun2al pon2n2ic cezu maNikaL vantu alaikkum tiru aiyARE.

**பொருள்:** இழி செயல்களில் ஈடுபடுவோராய், சிறிய ஆடையுடன் திரியும் சமணர்களும், புத்தர்களும் சொல்கின்ற நன்மைகள் இல்லாத சொற்களையும், வஞ்சனை உடைய உரைகளையும் கேளாதீர்கள். தொண்டர்களே! நீவிர் எம்பெருமானுக்கு ஆட்படுவீர்களாக. எண் தோள்களையும் முக்கண்களையும் உடைய எம் ஈசனாகிய சிவபெருமான் இனிதாக எழுந்தருளி இருக்கும் கோயில் திருவையாறாகும். இத்தலத்தில் பூக்களைச் செண்டுகள்போல் உருட்டி ஆட்டிக் கொண்டு வரும் நீர்நிறைந்த காவிரி ஆறு, செழுமையான மணிகளையும் கரையில் கொண்டு வந்து சேர்க்கின்றது.

**குறிப்புரை:** தொண்டர்களே! புறச் சமயிகளின் மொழிகளைக் கேளாதே ஆட்படுங்கள்; எம் இறைவர் அமருங்கோயில் காவிரி மணிகளைக் கொணர்ந்து எற்றும் திருவையாறு என்கின்றது. குற்றுடுக்கை – சிற்றாடை. மிண்டு – குறும்பான உரை. மேவி – விரும்பி. செண்டு – பூ உருண்டை.

Oh! Ye Devotees! Do not listen to the worthless words, and deceitful speech of the Jains and Buddhists who are scantily dressed and who involve themselves in base acts. But reach the Holy Feet of Civan and become His servitors. This Civan is the Lord of the universe. He has eight shoulders and three eyes (The third eye is in His fore head). He is joyously enshrined at the temple in Thiru-vai-yaaru town. The river Cauvery having plenty of water carries bunches of flowers looking like a bouquet and rolls down moving and waving and swinging. The river also carries abundant gems and deposits them on the banks of the river which flows through this city Thiru-vai-yaaru.

அன்னமலிபொழில்புடைசூழையாற்றெம்பெருமானையந்தண்காழி
மன்னியசீர்மறைநாவன்வளர்ஞானசம்பந்தமருவுபாடல்
இன்னிசையாலிவைபத்துமிசையுங்காலீசனடியேத்துவார்கள்
தன்னிசையோடமருலகில்தவநெறிசென்றெய்துவார்தாழாதன்றே. 11

அன்னம் மலி பொழில் புடை சூழ் ஐயாற்று எம்பெருமானை அம் தண் காழி
மன்னிய சீர் மறைநாவன்-வளர் ஞானசம்பந்தன்-மருவு பாடல்
இன்இசையால் இவைபத்தும் இசையுங்கால் ஈசன்அடி ஏத்துவார்கள்
தன் இனிசையோடு அமருலகில் தவநெறி சென்று எய்துவார், தாழாது அன்றே!

an2n2am mali pozil puTai cUz aiyARRu emperumAn2ai, am taN kAzi
man2n2iya cIr maRai nAvan2--vaLar njAn2acampantan2--maruvu pATal
in2 icaiyAl ivaipattum icaiyugkAl, Ican2 aTi EttuvArkaL
tan2 icaiyOTu amarulakil tavaneRi cen2Ru eytuvAr, tAzAtu an2RE!

***பொருள்:*** அன்னப் பறவைகள் நிறைந்த பொழில்கள் சூழ்ந்து விளங்கும் திருவையாற்றுப் பெருமானை, அழகிய குளிர்ந்த சீகாழிப் பதியில் வாழ்பவனும், சிறப்பு மிக்க வேதங்களில் சிறந்து விளங்குபவனுமான ஞான சம்பந்தன் போற்றிப் பாடிய இனிமையான இசையால் அமைந்துள்ள இந்தப் பத்துப் பாடல்களை ஓதி, ஈசனைப் போற்றிப் பாடுபவர்கள் தவ நெறியின் பயனாக அமரர் உலகத்தைத் தாமதியாது புகழுடன் எய்துவர்.

***குறிப்புரை:*** ஐயாற்றெம்பெருமானைச் சம்பந்த சுவாமிகள் பாடல்களால் தோத்திரிப்பவர்கள் புகழோடு தேவருலகிற் செல்வார்கள் என்கின்றது. இசையோடு அமர் உலகு – தேவருலகு. தாழாது – தாமதியாது.

Thiru-vai-yaaru city is surrounded by large and lush gardens full of trees and flower plants. Here a large number of swans joyfully move about and seek their prey. In this city Lord Civan is entempled. Gnaanasambandan hails from Seekaazhi. His fame is growing day-by-day. The scholars who are chanting the very famous Vedas by their tongue do live in this city in large numbers. Gnaanasambandan adored and worshipped the noblest and greatest Lord Civan of Thiru-vai-yaaru and sang this hymn in melodious tone. Those devotees who can sing these ten verses of this hymn in good musical tone and adore Civan, the Lord of the Universe enshrined in Thiru-vai-yaaru will achieve all fame in their life. They will also reach the world of Devas without any delay. The Devas were able to live and enjoy life in Deva Loka after doing virtuous penance for long in their life.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*130ஆம் பதிகம் முற்றிற்று*
End of 130th Hymn

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# 131. திரு முதுகுன்றம்

## திருத்தல வரலாறு:

12ஆம் பதிகம் பார்க்க.

# 131. THIRU-MUTHU-KUNDRAM

## HISTORY OF THE PLACE

See 12th Hymn.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 131. திரு முதுகுன்றம்

## 131. THIRU-MUTHU-KUNDRAM

பண் : மேகராகக்குறிஞ்சி
ராகம் : நீலாம்பரி

*Pann: Mēgaraaga-k-kurinji*
*Raagam : Neelaambari*

மெய்த்தாறுசுவையுமேழிசையுமெண்குணங்களும்விரும்புநால்வே
தத்தாலுமறிவொண்ணாநடைதெளியப்பளிங்கேபோலரிவைபாகம்
ஒத்தாறுசமயங்கட்கொருதலைவன்கருதுமூருலவுதெண்ணீர்
முத்தாறுவெதிருதிரநித்திலம்வாரிக்கொழிக்கும்முதுகுன்றமே. 1

மெய்த்து ஆறுசுவையு(ம்), ஏழ்இசையு(ம்), எண்குணங்களும், விரும்பும் நால்வே-
தத்தாலும் அறி ஒண்ணா நடை தெளியப் பளிங்கே போல் அரிவை பாகம்
ஒத்து, ஆறுசமயங்கட்கு ஒரு தலைவன் கருதும் ஊர் - உலவு தெண்நீர்
முத்தாறு வெதிர் உதிர நித்திலம் வாரிக் கொழிக்கும் முதுகுன்றமே.

meyttu ARucuvaiyum(m), Ez icaiyum(m), eNkuNagkaLum, virumpum nAlvE-
tattAlum aRivu oNNA naTai teLiyap paLigkE pOl arivai pAkam
ottu, ARucamayagkaTku oru talaivan2 karutum Ur--ulavu teNnIr
muttARu vetir utira nittilam vArik kozikkum mutu kun2Ra(m)mE.

**பொருள்:** சிவபெருமானை, நமது மெய்யினால் அறியப்படும் அறு சுவைகளாலும், ஏழிசைகளாலும், எண் குணங்களினாலும், எல்லோராலும் விரும்பப் பெறும் நான்கு வேதங்களாலும் அறிய இயலாது. அவன் தெளிவான மனத்தால் அறியப்படும் பளிங்கு போன்றவன். அவன் உமையம்மையை பாகமாக உடையவனும் ஆறு சமயத்தினராலும்

மாறுபாடின்றி ஏற்றுக் கொள்ளப்பெறும் ஒரே தலைவன் ஆவான். அப்பெருமான் விரும்பி அமர்ந்திருக்கும் ஊர் திருமுதுகுன்றம் ஆகும். இத்தலத்தில் தெளிந்த நீர் நிறைந்த மணிமுத்தாறு நதியானது, மலையில் உள்ள மூங்கில்கள் உதிர்க்கும் முத்துக்களை வாரிக்கொண்டு வந்து கரையில் குவிக்கின்றது.

***குறிப்புரை:*** சுவைகளும், இசையும், எண்குணங்களும், வேதமும் அறியவொண்ணாத தலைவன், அகச்சமயமாறுக்கும் ஒரே தலைவன் திருவுளங்கொண்ட ஊர், மணிமுத்தாறு மூங்கில் உதிர்த்த முத்துக்களைக் கொழிக்கும் திருமுதுகுன்றமே என்கின்றது. மெய்த்து ஆறு சுவை – உடற்கண்ணதாகிய உப்பு, புளிப்பு, கார்ப்பு, கைப்பு, தித்திப்பு, துவர்ப்பு என்னும் ஆறுசுவைகள். சுவை, இசை, வேதம் முதலியன மாயா காரியங்கள் ஆதலின் அவற்றால் அறியப் பெறாதவன் ஆயினன் இறைவன். பளிங்கே போல் – வெண்பளிங்கு போல், "சுத்த ஸ்படிக சங்காசம்" என்று இறைவனுக்கு நிறம் கூறுகின்றது சிவாகமம். வெதிர் – மூங்கில்.

Lord Civan cannot be comprehended by any of the following four which are felt by parts of human body.

a) The six tastes such as salty, sour, spicy hot, bitter, sweet and astringent [*உப்பு, புளிப்பு, கார்ப்பு (காரம் அல்லது எரிப்பு), கைப்பு (கசப்பு), தித்திப்பு (இனிப்பு) மற்றும் துவர்ப்பு*].

b) The seven notes of the diatonic scale (*குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என்ற ஏழு சுரங்கள்*).

c) The eight attributes of the soul in bonded stage.

d) Even the most respected Vedas such as Rig, Yajur, Saama and Atharvana (*ருக், யஜுர், சாம மற்றும் அதர்வண*) cannot comprehend Lord Civan, as they are all of illusionary things (*மாயா காரியங்கள்*).

However, He could be comprehended by those virtuous people who show love to God and fellow beings. He is transparent as crystal quartz. He accommodates His consort Umaa Devi on the left half of His body. He is the only Supreme Being accepted without any controversy by all the six Vedic religious systems (Saivam, Vainavam, Saaktham, Souram, Ganapathyam and Kaumaaram – *சைவம், வைணவம், சாக்தம், சௌரம், கணபத்யம் மற்றும் கௌமாரம்*). This Lord Civan's favourite resort is Thiru-muthu-kundram. In this city, the river Mani-muthaaru (*மணிமுத்தாறு நதி*) while flowing through the mountains

collects the pearls falling from the bamboo trees and drops them on the banks of the river in Thiru-muthu-kundram city.

வேரிமிகுகுழலியொடுவேடுவனாய்வெங்கானில்விசயன்மேவு
போரின்மிகுபொறையளந்துபாசுபதம்புரிந்தளித்தபுராணர்கோயில்
காரின்மலிகடிபொழில்கள்கனிகள்பலமலருதிர்த்துக்கயமுயங்கி
மூரிவளங்கிளர்தென்றல்திருமுன்றிற்புகுந்துலவும்முதுகுன்றமே. 2

வேரி மிகு குழலியொடு வேடுவனாய், வெங்கானில் விசயன் மேவு
போரின் மிகு பொறை அளந்து, பாசுபதம் புரிந்து அளித்த புராணர் கோயில் -
காரின் மலி கடிபொழில்கள் கனிகள்பல மலர் உதிர்த்து, கயம் முயங்கி,
மூரி வளம் கிளர் தென்றல் திருமுன்றில் புகுந்து உலவும் முதுகுன்றமே.

vEri miku kuzaliyoTu vETuvan2Ay, vegkAn2il vicayan2 mEvu
pOrin2 miku poRai aLantu, pAcupatam purintu aLitta purANar kOyil--
kArin2 mali kaTipozilkaL kan2ikaL pala malar utirttu, kayam muyagki,
mUri vaLam kiLar ten2Ral tirumUn2Ril pukuntu ulavu mutukun2Ra(m)mE.

**பொருள்:** தேன் மணம் நிறைந்த கூந்தலை உடைய உமையம்மையுடன் வேடன் உருவத்தை எடுத்து, அருச்சுனன் தவம் புரியும் கொடிய காட்டிற்குச் சென்று, அவனுடன் போர் செய்து, அவனுடைய பொறுமையை அளந்து பின்னர் அவனுக்குப் பாசுபதத்தை விரும்பி அளித்த பழையோன் சிவபெருமான் ஆவான். இப்பெருமானின் கோயில் திருமுதுகுன்றம் ஆகும். இத்தலத்தில் மழையினால் செழித்த மணமுடைய சோலைகளில் கனிகளும் பலவித மலர்களும் உதிர்கின்றன. நீர் நிலைகளைப் பொருந்தி குளிர்ச்சியானதும் வலிமையானதுமான தென்றல் காற்று அழகிய வீடுகள் தோறும் புகுந்து உலவும் இயற்கை வளம் உடையது திருமுதுகுன்றம் ஆகும்.

**குறிப்புரை:** விசயனது பொறுமையை அளந்து பாசுபதம் அருளிய பரமன் கோயில், தென்றற்காற்று பொழிலில் கனியுதிர்த்து, மலர் சிந்தி, முன்றிலில் உலாவும் முதுகுன்றம் என்கின்றது. வேரி – தேன். மலர் உதிர்த்து என்றது தென்றலின் மணமுடைமையையும், கயம் முயங்கி என்பது குளிர்மையையும் உணர்த்தின. கயம் – குளம். மூரி – வலிமை.

Lord Civan took the form of a hunter and accompanied by His consort Umaa Devi went into the dense forest area where Arjuna was doing penance. Civa started purposely an imaginary quarrel with Arjuna and fought against him and defeated him, for testing his endurance. Lord Civan then showed His real form and Arjuna

worshipped Him and begged for pardon. The ever first Supreme Being Lord Civan graced him and gave him the mystical divine arrow known as Paasupatham (பாசுபதம்). This Lord Civan is entempled in Thiru-muthu-kundram. In this city the strong and lush southerly wind sweeps through the sweet smelling gardens, enriched by good rain and casts off the flowers and fruits in the garden. Then the wind flows through water expanse areas and thereafter reaches the big and good looking mansions of Thiru-muthu-kundram providing cool and fragrant air to all the residents.

தக்கனதுபெருவேள்விச்சந்திரனிந்திரனெச்சனருக்கனங்கி
மிக்கவிதாதாவினொடும்விதிவழியேதண்டித்தவிமலர்கோயில்
கொக்கினியகொழும்வருக்கைகதலிகமுகுயர்தெங்கின்குவைகொள்சோலை
முக்கனியின்சாறொழுகிச்சேறுலராநீள்வயல்சூழ்முதுகுன்றமே. 3

தக்கனது பெருவேள்வி, சந்திரன், இந்திரன், எச்சன், அருக்கன், அங்கி,
மிக்க விதாதாவினொடும், விதிவழியே தண்டித்த விமலர் கோயில் -
கொக்கு, இனிய கொழும் வருக்கை, கதலி, கமுகு, உயர் தெங்கின், குவை கொள் சோலை,
முக்கனியின் சாறு ஒழுகிச் சேறு உலரா நீள் வயல் சூழ் முதுகுன்றமே.

takkan2atu peruvELvi, cantiran2, intiran2, eccan2, arukkan2, agki,
mikka vitAtAvin2oTum, vitivaziyE taNTitta vimalar kOyil--
kokku, in2iya kozum varukkai, katali, kamuku, uyar tegkin2, kuvai koL cOlai,
mukkan2iyin2 cARu ozukic cERu ularA nIL vayal cUz mutukun2Ra(m)mE.

**பொருள்:** தக்கன் செய்த பெரிய வேள்வியில் சந்திரன், இந்திரன், எச்சன், சூரியன், அக்கினி, பிரமன் ஆகியவர்களை முறைப்படி வீரபத்திரனைக் கொண்டு தண்டனை கொடுத்த விமலன் சிவபெருமான் ஆவான். இப்பெருமானின் கோயில் திருமுதுகுன்றம் ஆகும். இத்தலத்தில் முக்கனிகளான இனிய மாங்கனிகள் வளமான பலாக்கனிகள் வாழைக்கனிகள் ஆகியவற்றின் சாறு நீண்ட வயல்களில் ஒழுகி விழுகின்றன. அதனால் வயல்கள் அவைகளின் சேறு உலராதவைகளாக இருக்கின்றன. இங்குள்ள சோலைகளில் உள்ள கமுக மரங்களிலும் தென்னை மரங்களிலும் குலைகள் நிறைந்துள்ளன. இத்தகைய செழுமை நிறைந்த ஊர் திருமுதுகுன்றம் ஆகும்.

**குறிப்புரை:** சிவத் துரோகியான தக்கன் யாகத்திற்குச் சென்ற குற்றத்திற்காகச் சந்திரன் முதலியோரை முறைப்படி தண்டித்த இறைவன் கோயில், முக்கனியின் சாறொழுகிச் சேறுலரா வயல்சூழ்ந்த முதுகுன்றம்

என்கின்றது. எச்சன் – யாகபுருஷன். அருக்கன் – சூரியன். அங்கி – அக்கினி. விதாதா – பிரமன். கொக்கு – மாமரம். வருக்கை – பலா. கதலி – வாழை.

Thakkan (தக்கன் - தட்சன் - Dakshan) was *immaculate offspring* of Brahma. He performed great penance and got Umaa Devi to be as his immaculate daughter and gave her to Lord Civa as His consort. She is known as Dakshaayini (தக்ஷயாணி). Dakshan developed some animosity towards Lord Civan and did not invite him to a very large sacrifice he had planned. Also he ill-treated his own daughter Dakshaayini who came to the sacrificial ceremony though uninvited. She felt very bad and went back and reported the matter to Lord Civan. He created one Aide known as Veerabadran (வீரபத்திரன்) and commanded him to go to the sacrificial hall of Dakhan and to punish him. Veerabadran carried out Lord Civan's orders and punished everybody assembled in the sacrificial hall of Dakshan. This flawless holy God Lord Civan is entempled in Thiru-muthu-kundram. This Thiru-muthu-kundram city is surrounded by large fields where the soil never become dry and is always (loamy) muddy, because of juices dripping from sweet mango fruits, very rich Jack fruits and from well ripped banana fruits – all these three fruits are called as Muk-kani (முக்கனி). Also the city has a large number of garden groves having areca nut trees with big bunches of fruits and a large number of lush coconut trees. Such fertile city is Thiru-muthu-kundram.

வெம்மைமிகுபுரவாணர்மிகைசெய்யவிறலழிந்துவிண்ணுளோர்கள்
செம்மலரோனிந்திரன்மால்சென்றிரப்பத்தேவர்களேதேரதாக
மைம்மருவுமேருவிலுமாசுணநாணரியெரிகால்வாளியாக
மும்மதிலும்நொடியளவிற்பொடிசெய்தமுதல்வனிடம்முதுகுன்றமே. 4

வெம்மை மிகு புரவாணர் மிகை செய்ய; விறல் அழிந்து, விண்உளோர்கள்,
செம்மலரோன், இந்திரன், மால், சென்று இரப்பத்; தேவர்களே தேர் அதுஆக,
மைம் மருவு மேரு விலு, மாசுணம் நாண், அரிஎரிகால் வாளிஆக,
மும்மதிலும் நொடிஅளவில் பொடிசெய்த முதல்வன் இடம் - முதுகுன்றமே.

vemmai miku puravANar mikai ceyya; viRal azintu, viN uLOrkaL,
cemmalarOn2, intiran2, mAl, cen2Ru irappa; tEvarkaLE tEr atu Aka,
maim maruvu mEru vilu, mAcuNam nAN, ari erikAl vALi Aka,
mummatilum noTi aLavil poTiceyta mutalvan2 iTam--mutukun2Ra(m)mE.

**பொருள்:** கொடுமை மிகுந்த முப்புரங்களில் வாழும் அசுரர்கள் செய்யும் தீமைகளால், தங்களின் வலிமை இழந்தனர் தேவர்கள். பிரமனும், இந்திரனும், திருமாலும் மற்றுமுள்ள தேவர்களும் சிவபெருமானிடம் சென்று தங்களைக் காத்தருள வேண்டினர். இப்பெருமான், தேவர்களைத் தேராகவும், மேகங்கள் தவழும் மேரு மலையை வில்லாகவும், வாசுகி என்னும் பாம்பை நாணாகவும், திருமால், அக்கினி, வாயு ஆகியோரை அம்பாகவும் கொண்டு அசுரர்களின் மும்மதில்களை ஒரு நொடிப் பொழுதில் பொடி செய்தார். எல்லோருக்கும் தலைவனான இப்பெருமானின் இடம் திருமுதுகுன்றம் ஆகும்.

**குறிப்புரை:** முப்புராதிகள் தீங்கு செய்ய, தேவர்கள் வேண்டுகோளின் வண்ணம், அவர்களைத் தேர் முதலிய சாதனங்களாகக் கொண்டு எரித்த முதல்வனிடம் முதுகுன்றம் என்கின்றது. விறல் – வலிமை. மாசுணம் – வாசுகியென்னும் பாம்பு. அரி, எரி, கால், வாளியாக – திருமாலும், அங்கியும், காற்றுமாகிய முத்தேவர்களும் அம்பாக.

A section of cruel Asuraas built three aerial cities in gold, silver and iron and lived there, wandering in the sky. They were highly tyrannical towards Devas and caused all havoc to them. The Devas lost their valour and suffered a lot. Therefore the Devas, Brahma, Indira and Thirumaal - all approached Lord Civa and entreated Him to save them from the cruelty of Asuraas. Lord Civa agreed and utilising the Devas as His chariot, the Mēru mountain as His bow, the famous snake Vaasuki (*வாசுகி என்ற பாம்பு*) as the bow-string and the three Devas viz., Thirumaal, Fire-god and Wind-god as the arrow, He shot with bow and arrow and in a second crushed the three fortresses into pieces. This Master Lord Civan abides in Thiru-muthu-kundram.

இழைமேவுகலையல்குலேந்திழையாளொருபாலாயொருபாலெள்கா
துழைமேவுமுரியுடுத்தவொருவனிருப்பிடமென்பரும்பரோங்கு
கழைமேவுமடமந்திமழைகண்டுமகவினொடும்புகவொண்கல்லின்
முழைமேவும்மால்யானையிரைதேரும்வளர்சாரல்முதுகுன்றமே. 5

இழை மேவு கலை அல்குல் ஏந்திழையாள் ஒருபால்ஆய், ஒருபால் எள்காது
உழை மேவும் உரி உடுத்த ஒருவன் இருப்புஇடம் என்பர்-உம்பர் ஓங்கு
கழை மேவு மடமந்தி மழை கண்டு, மகவினொடும் புக, ஒண் கல்லின்
முழை மேவும் மால்யானை இரை தேரும் வளர் சாரல் முதுகுன்றமே.

izai mEvu kalai alkul EntizaiyAL orupAl Ay, orupAl eLkAtu
uzai mEvum uri uTutta oruvan2 iruppu iTam en2par--umpar Ogku
kazai mEvu maTamanti mazai kaNTu, makavin2oTum puka, oN kallin2
muzai mEvu mAlyAn2ai irai tErum vaLar cAral mutukun2Ra(m)mE.

**பொருள்:** மேகலை என்னும் அணிகலன் பொருந்திய அல்குலையும் முத்துவடம் முதலியவை அணிந்த மேனியை உடையவளான உமையம்மையை ஒருபாகமாகவும், தனது பாகத்தில் மானின் தோலை இகழாது உடுத்தியிருக்கும் ஒப்பற்ற சிவபெருமானின் இருப்பிடம் திருமுதுகுன்றம் ஆகும். இத்தலத்தில் ஊரின் நடுவே உயர்ந்த மூங்கில் மேல் அமர்ந்திருக்கும் பெண் குரங்கானது மழை வருகின்றதைக் கண்டு பயந்து தன் குட்டியுடன் மலைக் குகையில் ஒதுங்குகின்றது. வளமையான மலைச் சாரலில் பெரிய யானைகள் இரை தேடித் திரிகின்றன. இவ்வாறு மழை வளமும், மலை வளமும் உடையது திருமுதுகுன்றம் ஆகும்.

**குறிப்புரை:** ஒருபால் உமை விளங்க, ஒருபால் மான்தோலை உடுத்திய ஒருவன் இருப்பிடம் மந்தி மழையைக் கண்டு குட்டியோடு குகையை உடைய, யானை இரைதேடும் முதுகுன்றம் என்கின்றது. இழை – அணி. எள்காது – இகழாது. உழை மேவும் உரி – மானினது தோல். கழை – மூங்கில். மந்தி – பெண் குரங்கு. முழை – குகை.

Goddess Umaa Devi wearing the jewelled girdle around her waist and an attractive pearl chain and other ornaments in her body is accommodated on the left half of Civan's body. Whereas Civa wears without negligence the deer skin on His part of the body. This incomparable Civa's place of abode is Thiru-muthu-kundram. In the central place of this city, the female monkey sitting on the top of tall bamboo trees noticed the incoming rain and got frightened. Immediately, along with her young ones she ran to the safe mountain caves and took rest there. Large sized elephants roam about searching for food on the slopes of the mountain where drizzling rain from clouds gather on hilltops. Such a lush city is Thiru-muthu-kundram.

நகையார்வெண்டலைமாலைமுடிக்கணிந்தநாதனிடநன்முத்தாறு
வகையாரும்வரைப்பண்டங்கொண்டிரண்டுகரையருகுமறியமோதித்
தகையாரும்வரம்பிடறிச்சாலிகழுநீர்குவளைசாயப்பாய்ந்து
முகையார்செந்தாமரைகள்முகமலரவயல்தழுவுமுதுகுன்றமே. 6

நகை ஆர் வெண்தலைமாலை முடிக்கு அணிந்த நாதன் இடம்-நல் முத்தாறு
வகை ஆரும் வரைப்பண்டம் கொண்டு இரண்டுகரை அருகும் மறிய மோதி,
தகை ஆரும் வரம்பு இடறி, சாலி கழுநீர் குவளை சாயப் பாய்ந்து,
முகை ஆர் செந்தாமரைகள் முகம்மலர, வயல் தழுவு முதுகுன்றமே.

nakai Ar veN talaimAlai muTikku aNinta nAtan2 iTam--nal muttARu
vakai Arum varaippaNTam koNTu iraNTukarai arukum maRiya mOti,
takai Arum varampu iTaRi, cAli kazunIr kuvaLai cAyap pAyntu,
mukai Ar centAmaraikaL mukammalara, vayal tazuvu mutukun2Ra(m)mE.

**பொருள்:** சிரித்தலைப் பொருந்திய வெண்மையான தலைமாலை அணிந்த நாதனாகிய சிவபெருமானின் இருப்பிடம் திருமுதுகுன்றம் ஆகும். இத்தலத்தில் மணிமுத்தாறு நதியானது மலையில் விளையும் பொருட்களை வாரிக் கொண்டும் தனது இருகரைகளையும் உடைத்துக் கொண்டும் வருகின்றது. அது நெற்கதிர்களும், கழுநீர் மலர்களும், குவளை மலர்களும் சாய்ந்து போகுமாறு வேகமாகப் பாய்ந்து தாமரைகள் மலர்ந்த வயலைத் தழுவும். இத்தகு நீர்வளமும் நிலவளமும் உடையது திருமுதுகுன்றம் ஆகும்.

**குறிப்புரை:** தலை மாலை அணிந்த தலைவனிடம், மணிமுத்தாறு மலைப்பண்டங்களைக் கொண்டு இருகரையிலும் எடுத்து எறிந்து கரையை உடைத்துக் கொண்டு, நெல்லும் கழுநீரும் குவளையும் சாயப் பாய்ந்து, தாமரை மலர வயலைத் தழுவும் முதுகுன்றம் என்கின்றது. நகை – பல். வரைப்பண்டம் – மலைபடுதிரவியம்.

Civan, wearing on His head, the garland of skulls with seeming smiles is enshrined in Thiru-muthu-kundram. This place is very fertile because of the profuse waters of the river Mani-muthaaru which flows sweepingly carrying may different kinds of mountain products and dashes against the paddy plants, sweet smelling red water lily, the blue Indian water lily and such other things making them to bend and turn down. They proceed and also dashes against the lotus bud and make them to blossom. Such is the fertility of Thiru-muthu-kundram.

Note: Saint Gnaanasambandar's verses are always replete with descriptions of the environment and this verse is a typical example.

அறங்கிளரும்நால்வேதமாலின்கீழிருந்தருளியமரர்வேண்ட
நிறங்கிளர்செந்தாமரையோன்சிரமைந்திலொன்றறுத்தநிமலர்கோயில்
திறங்கொள்மணித்தரளங்கள்வரத்திரண்டங்கெழிற்குறவர்சிறுமிமார்கள்
முறங்களினாற்கொழித்துமணிசெலவிலக்கிமுத்துலைப்பெய்முதுகுன்றமே. 7

அறம் கிளரும் நால்வேதம் ஆலின்கீழ் இருந்துஅருளி, அமரர் வேண்ட,
நிறம் கிளர் செந்தாமரையோன் சிரம்ஐந்தின் ஒன்று அறுத்த நிமலர் கோயில் -
திறம் கொள் மணித்தரளங்கள் வரத், திரண்டு அங்கு எழில் குறவர்சிறுமிமார்கள்
முறங்களினால் கொழித்து, மணி செல விலக்கி, முத்து உலைப் பெய் முதுகுன்றமே.

aRam kiLarum nAlvEtam Alin2 kIz iruntu aruLi, amarar vENTa,
niRam kiLar centAmaraiyOn2 ciram aintin2 on2Ru aRutta nimalar kOyil--
tiRam koL maNittaraLagkaL vara, tiraNTu agku ezil kuRavar ciRumimArkaL
muRagkaLin2Al kozittu, maNi cela vilakki, muttu ulaip pey mutukun2Ra(m)mE.

**பொருள்:** ஆலமரத்தின் கீழ் வீற்றிருந்து, அறநெறிகள் விளங்கும் நான்கு வேதங்களையும் சனகாதியருக்கு அருளியவர் சிவபெருமான் ஆவான். தேவர்களின் வேண்டுகோளுக்கு இணங்கி சிவந்த தாமரை மலர் மேல் வீற்றிருக்கும் பிரமனின் ஐந்து தலைகளில் ஒன்றைக் கொய்த நிமலனான சிவபெருமான் உறையும் கோயில் திருமுதுகுன்றம் ஆகும். இத்தலத்தில் குறவர் குடிச் சிறுமியர்கள் ஆற்றில் மாணிக்கங்களும் முத்துக்களும் வருவதைக் காணுகின்றனர். அவற்றை முறங்களால் வாரி எடுக்கின்றனர். மணிகளைப் புடைத்து விலக்கி முத்துக்களைச் சிறு உலைகளில் கொட்டி சிற்றில் இழைத்து விளையாடி மகிழும் ஊராகும்.

**குறிப்புரை:** ஆலின் கீழிருந்து சனகாதியர்க்கு வேதப் பொருளை அருளிச் செய்து, தேவர் வேண்டுகோட்கிரங்கிப் பிரமன் சிரங்கொய்த நிமலர் கோயில், குறச்சிறுமியர் முறத்தால் முத்தைக் கொழித்துச் சிற்றுலையிற் கொட்டும் முதுகுன்றம் என்கின்றது. தரளம் – முத்து. மணி – மாணிக்கங்கள்.

The four Vedas express the divine knowledge explicitly. Lord Civan sitting under a banyan tree (*கல்லால மரம்*) expounded the inner meaning to the four saints known as Sanakaathiars (*சனகாதியர்கள்*). Civa the pure Supreme Being chopped off at the Devas request one of the five heads of Brahma who is seated on a red lotus flower. This Lord Civan is entempled in Thiru-muthu-kundram. In this town the young and good looking kurava girls in groups collect the well developed ruby gem stones along with the pearls that are coming down the river. They collect this in winnows and sift them to remove the gems. They then gather the pearls and drop them in the pot kept in

the oven and boil them as rice. This is child's play to build toy house out of sand (imaginary) cooking called Cittil (*சிற்றில்*) enacting a vicarious play playful act of cooking.

கதிரொளியநெடுமுடிபத்துடையகடலிலங்கையர்கோன்கண்ணும்வாயும்
பிதிரொளியகனல்பிறங்கப்பெருங்கயிலைமலையைநிலைபெயர்த்தஞான்று
மதிலளகைக்கிறைமுரலமலரடியொன்றூன்றிமறைபாடஆங்கே
முதிரொளியசுடர்நெடுவாள்முன்னீந்தான்வாய்ந்தபதிமுதுகுன்றமே. 8

*கதிர் ஒளிய நெடுமுடிபத்து உடைய கடல் இலங்கையர்கோன் கண்ணும் வாயும்*
*பிதிர் ஒளிய கனல் பிறங்கப், பெருங்கயிலைமலையை நிலைபெயர்த்தஞான்று,*
*மதில் அளகைக்கு இறை முரல, மலர்அடிஒன்று ஊன்றி, மறை பாட, ஆங்கே*
*முதிர் ஒளிய சுடர் நெடுவாள் முன் ஈந்தான் வாய்ந்த பதி - முதுகுன்றமே.*

katir oLiya neTumuTipattu uTaiya kaTal ilagkaiyarkOn2 kaNNum vAyum
pitir oLiya kan2al piRagka, perugkayilaimalaiyai nilaipeyartta njAn2Ru,
matil aLakaikku iRai murala, malar aTi on2Ru Un2Ri, maRai pATa, AgkE
mutir oLiya cuTar neTuvAL mun2 IntAn2 vAynta pati--mutukun2Ra(m)mE.

**பொருள்:** கதிரவன் போன்ற ஒளியை உடைய நீண்ட மகுடங்களைத் தனது பத்துத் தலைகளில் சூடியிருப்பவன் இராவணன் ஆவான். இவன் தனது கண்களும், வாயும் தீக்கனலை கக்குவதுபோல் சினம் கொண்டு பெரிய கயிலை மலை நிலை பெயருமாறு பெயர்த்தான். அப்போது மதில்கள் சூழ்ந்த அளகாபுரிக்குத் தலைவனான குபேரன் மகிழுமாறு, சிவபெருமான் தமது மலர்போன்ற மென்மையான திருவடியை ஊன்றி இராவணனைத் தண்டித்தார். பின்னர் அவன் மறைபாடித் துதித்தான். அவனுக்கு சிவபெருமான் ஒளிமிகுந்த வாளை முன்னின்று தந்தார். இப்பெருமான் எழுந்தருளி இருக்கும் தலம் திருமுதுகுன்றம் ஆகும்.

**குறிப்புரை:** இராவணனுக்கு மறக்கருணையும் அறக்கருணையும் காட்டியாட் கொண்டவனிடம் முதுகுன்றம் என்கின்றது. அளகைக்கு இறை முரல – குபேரன் தன் பகைவனாகிப் புஷ்பக விமானத்தைக் கவர்ந்த இராவணன் ஒழிந்தான் என்று மகிழ்ச்சி ஒலிக்க.

Raavanan had impressive crowns on his ten heads, which were dazzling like the rays of the sun. Once, while he was traveling by air, he faced the big mount Kailas, abode of Lord Civan on his straight pathway. He could not proceed on his journey further. Therefore, he became furious and started fuming through his mouth and eyes

as in bright fire. He got down from his Pushpa Vimaanam (Flower Plane) and started lifting the mount by his hands and shoulders to keep it at a farther place so that he can continue his journey on his straight pathway. Alas! the moment he tried to lift it Lord Civan pressed the top of the mountain by the toe of his flowery feet and punished him by crushing him under the mountain. By witnessing this incident Kubēran (குபேரன்) the god of wealth who was the king of the city of Alagapuri having arcade walls all around, became joyous. Raavanan realised his fault and begged for pardon by singing Lord Civan's praise, in a melodious tone - Civa was pleased, forgave him and gave him a long dazzling divine mystic sword for his self-defence. This Lord Civan is entempled in Thiru-muthu-kundram.

**Note:** The king of Alagapuri was enemy of Ravana and so was overjoyed at this sight of Ravana being perished.

பூவார்பொற்றவிசின்மிசையிருந்தவனும்பூந்துழாய்புனைந்தமாலும்
ஓவாதுகழுகேனமாயுயர்ந்தாழ்ந்துறநாடியுண்மைகாணத்
தேவாருந்திருவுருவன்சேருமலைசெழுநிலத்தைமூடவந்த
மூவாதமுழங்கொலிநீர்கீழ்தாழமேலுயர்ந்தமுதுகுன்றமே. 9

பூ ஆர் பொன்-தவிசின்மிசை இருந்தவனும், பூந்துழாய் புனைந்த மாலும்,
ஓவாது கழுகு ஏனம்ஆய், உயர்ந்து ஆழ்ந்து, உற நாடி, உண்மை காணத்
தே ஆரும் திருஉருவன் சேரும் மலை - செழு நிலத்தை மூட வந்த
மூவாத முழங்கு ஒலிநீர் கீழ் தாழ, மேல் உயர்ந்த முதுகுன்றமே.

pU Ar pon2-tavicin2micai iruntavan2um, pUntuzAy pun2ainta mAlum,
OvAtu kazuku En2am Ay, uyarntu Azntu, uRa nATI, [illegible]mai kANAt
tE Arum tiru uruvan2 cErum malai--cezu nilattai mUTa vanta
mUvAta muzagku oli nIr kIz tAza, mEl uyarnta mutukun2Ra(m)mE.

**பொருள்:** தாமரை மலரைத் தனது ஆசனமாகக் கொண்டவன் பிரமன் ஆவான். திருமால் அழகிய துளசி மாலையை அணிந்தவன். இவர்கள் அன்னமாகவும், பன்றியாகவும் உருமாறி, உயர்ந்த வானத்திலும் தாழ்ந்த பூமியிலும் தேடியும் காண இயலாத தெய்வ ஒளி பொருந்திய திருஉருவை உடையவர் சிவபெருமான். இப்பெருமான் எழுந்தருளிய மலை திருமுதுகுன்றம் ஆகும். இத்தலமானது, ஊழிக் காலத்தில் உலகத்தை மூடுமாறு ஆரவாரத்துடன் வந்த கடல் நீரானது, கீழே தாழ்ந்து போகுமாறும் தான் மேலே உயர்ந்து நின்றதுமான திருத்தலம் ஆகும்.

**குறிப்புரை:** அயனும், மாலும் ஆழ்ந்தும் உயர்ந்தும் தேடியும் அறிய முடியாத இறைவனிடம், ஊழியில் உயர்ந்த முதுகுன்றம் என்கின்றது. தவிசு – ஆசனம், துழாய் – துளசி. ஓவாது – இடைவிடாது. கழுகு – பறவையின் பொதுப் பெயராய் அன்னத்தை உணர்த்தியது. ஏனம் – பன்றி.

Brahma seated on the beautiful throne of Lotus flower. Thirumaal wearing an attractive garland made of sacred basil leaves. Brahma took the form of a swan and flew up and up in the sky for long. Thirumaal went on digging the earth down and down for long. However, they both could not witness the reality for which they tried hard. Lord Civan was then in the form of a divine light which they both could not recognise. This Lord Civan is enshrined at the temple on top of the mountain in Thiru-muthu-kundram. This temple was visibly seen even during the time of the great deluge when everything went under water.

மேனியிற்சீவரத்தாரும்விரிதருதட்டுடையாரும்விரவலாகா
ஊனிகளாயுள்ளார்சொற்கொள்ளாதுமுள்ளுணர்ந்தங்குய்மின்தொண்டீர்
ஞானிகளாயுள்ளார்கள்நான்மறையைமுழுதுணர்ந்தைம்புலன்கள்செற்று
மோனிகளாய்முனிச்செல்வர்தனித்திருந்துதவம்புரியும்முதுகுன்றமே. 10

மேனியில் சீவரத்தாரும், விரிதரு தட்டுஉடையாரும், விரவல் ஆகா
ஊனிகளாய் உள்ளார் சொல் கொள்ளாது உம் உள் உணர்ந்து, அங்கு உய்மின், தொண்டீர்!
ஞானிகளாய் உள்ளார்கள் நால்மறையை முழுது உணர்ந்து, ஐம்புலன்கள் செற்று,
மோனிகளாய் முனிச்செல்வர் தனித்து இருந்து தவம் புரியும் முதுகுன்றமே.

mEn2iyil cIvarattArum, viritaru taTTu uTaiyArum, viraval AkA
Un2ikaLAy uLLAr col koLLAtu um uL uNarntu, agku uymin2, toNTIr!--
njAn2ikaLAy uLLArkaL nAlmaRaiyai muzutu uNarntu, aimpulan2kaL ceRRu,
mOn2ikaLAy mun2iccelvar tan2ittu iruntu tavam puriyum mutukun2Ra(m)mE.

**பொருள்:** உடம்பில் துவர் ஆடை அணிந்த புத்த மதத்தினரும், விரிந்த ஓலைத் தடுக்கை உடையாகக் கொண்ட சமணர்களும் தங்களின் உடலை மட்டுமே பேணுபவர்கள் ஆவர். நட்பு கொள்ள இயலாதவரான அவர்களின் சொற்களைக் கேளாதீர்கள். தொண்டர்களே! நீங்கள் ஞானிகளாக உள்ளவர்களும், நான்மறையை உணர்ந்தவர்களும், ஐம்புலன்களை வென்ற மௌனிகளும், முனிவர்களான செல்வர்களும் தனித்திருந்து தவம் புரியும் திருமுதுகுன்றத்தை உள்ளத்தில் உணர்ந்து உய்வீர்களாக!

**குறிப்புரை:** தொண்டர்களே! புத்தரும் *சமணருமாகிய ஊனிகளின்* சொற்கொள்ளாது உள்ளுணர்ந்து உய்யுங்கள். ஞானிகள் வேதத்தை உணர்ந்து ஐம்புலன்களையும் அடக்கி, மோனிகளாய்த் தனித்திருந்து தவம் புரியும் இடம் முதுகுன்றம் என்கின்றது. ஞானி – அறிவை வளர்ப்பவன். ஊனி – உடம்பை வளர்ப்பவன்.

The Buddhists wearing a red ochre cloth on their body, and the Samanar wearing mats made of palmyrah leaf. These people were unable to comprehend on our Lord Civan. Their only aim is about the growth of their physical body. Ye servitors! Do not listen to the words of these people. But get yourselves redeemed from all your troubles by adoring and listening to saints, Vedic scholars, those who control their five senses, and sages with perfect behaviour observing penance and solely contemplating on the greatness of Thiru-muthu-kundram in their mind.

முழங்கொலிநீர்முத்தாறுவலஞ்செய்யுமுதுகுன்றத்திறையைமூவாப்
பழங்கிழமைப்பன்னிருபேர்படைத்துடையகழுமலமேபதியாக்கொண்டு
தழங்கெரிமூன்றோம்புதொழில்தமிழ்ஞானசம்பந்தன்சமைத்தபாடல்
வழங்குமிசைகூடும்வகைபாடுமவர்நீடுலகமாள்வர்தாமே. 11

முழங்கு ஒலி நீர் முத்தாறு வலம்செய்யும் முதுகுன்றத்து இறையை, மூவாப்
பழங்கிழமைப் பன்னிருபேர் படைத்து உடைய கழுமலமே பதியாக் கொண்டு,
தழங்கு எரிமூன்று ஓம்பு தொழில் - தமிழ் ஞானசம்பந்தன் சமைத்த பாடல்
வழங்கும் இசை கூடும் வகை பாடுமவர் நீடு உலகம் ஆள்வர் தாமே.

muzagku oli nIr muttARu valamceyyum mutukun2Rattu iRaiyai, mUvAp
pazagkizamaip pan2n2irupEr paTaittu uTaiya kazumalamE patiyAk koNTu,
tazagku erimUn2Ru Ompu tozil-tamiz njAn2acampantan2 camaitta pATal
vazagkum icai kUTum vakai pATumavar nITu ulakam ALvartAmE.

**பொருள்:** ஆரவாரத்துடனும் நீர் நிறைந்தும் வருகின்ற மணிமுத்தாறு வலம் வந்து வணங்கும் திருமுதுகுன்றத்தின் இறைவனான சிவபெருமானை, என்றுமே மூப்பு அடையாததும், பன்னிரண்டு பெயர்களை உடையதுமான கழுமலப் பதியில் முத்தீ வேட்கும் தொழிலை உடைய தமிழ் ஞானசம்பந்தன் போற்றிப் பாடினார். இப்பதிகப் பாடல்களை அதற்குப் பொருந்தும் இசையுடன் இயன்ற அளவு பாடி வழிபட வல்லவர், நீடுலகத்தை ஆட்சி செய்வார்.

**குறிப்புரை:** முதுகுன்ற நாதனைப் பன்னிருநாமம் படைத்த பழம் பதியாகிய காழியை இடமாகக் கொண்ட, தழலோம்பு தொழிலை உடைய தமிழ் ஞானசம்பந்தன் அமைத்த பாடல்களை, இசைகூடும் வகை பாடுபவர்கள் உலகத்தை நெடுங்காலம் ஆள்வர் என்கின்றது. தழங்கு – ஒலிக்கின்ற. எரிமூன்று – ஆகவனீயம், காருகபத்யம், தக்ஷிணாக்கினி என்பன.

The tumultuous river Mani-muthaaru encircles the temple in Thiru-muthu-kundram from the right hand side. Gnaanasambandan belongs to the city Kazhumalam which carries twelve names such as Seekaazhi, Piramapuram etc. These twelve names are not new ones. They exist from ancient times. In this city, Tamil Gnaanasambandan performed the three sacrificial ritual fires. He sang this hymn on Lord Civan of Thiru-muthu-kundram. Those who can sing these ten verses in the proper musical note and offer worship to Lord Civan of Thiru-muthu-kundram will rule over the world for long.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*131ஆம் பதிகம் முற்றிற்று*
End of 131st Hymn

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# 132. திரு வீழிமிழலை

## திருத்தல வரலாறு

4ஆம் பதிகம் பார்க்கவும்.

# 132. THIRU-VEEZHI-MIZHALAI

## HISTORY OF THE PLACE

See 4th Hymn.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 132. திருவீழிமிழலை 132. THIRU-VEEZHI-MIZHALAI

பண் : மேகராகக்குறிஞ்சி
ராகம் : நீலாம்பரி

*Pann: Mēgaraaga-k-kurinji*
*Raagam : Neelaambari*

ஏரிசையும்வடவாலின்கீழிருந்தங்
கீரிருவர்க்கிரங்கிநின்று
நேரியநான்மறைப்பொருளையுரைத்தொளிசேர்
நெறியளித்தோன்நின்றகோயில்
பாரிசையும்பண்டிதர்கள்பன்னாளும்
பயின்றோதுமோசைகேட்டு
வேரிமலிபொழிற்கிள்ளைவேதங்கள்
பொருட்சொல்லும்மிழலையாமே. 1

ஏர் இசையும் வட-ஆலின்கீழ் இருந்து, அங்கு
ஈர்-இருவர்கு இரங்கி நின்று,
நேரிய நால்மறைப்பொருளை உரைத்து, ஒளி சேர்
நெறி அளித்தோன் நின்ற கோயில் -
பார் இசையும் பண்டிதர்கள் பல்-நாளும்
பயின்று ஓதும் ஓசை கேட்டு,
வேரி மலி பொழில், கிள்ளை வேதங்கள்
பொருள் சொல்லும் மிழலைஆமே.

Er icaiyum vaTa-Alin2kIz iruntu, agku
Ir-iruvarkku iragki nin2Ru,
nEriya nAlmaRaipporuLai uraittu, oLi cEr
neRi aLittOn2 nin2Ra kOyil--
pAr icaiyum paNTitarkaL pal-nALum
payin2Ru Otum Ocai kETTu,
vEri mali pozil, kiLLai vEtagkaL
poruL collum mizalai AmE.

***பொருள்:*** அழகிய கல்லால மரத்தின்கீழ் இருந்து, சனகாதி முனிவர்கள் நால்வர்க்கும் கருணையோடு, நான்கு வேதங்களின் உண்மைப் பொருளை உரைத்தும், ஒளிசேரும் மெய்ந்நெறியையும் அருளியவர் சிவபெருமான் ஆவார். இப்பெருமான் எழுந்தருளி இருக்கும் கோயில் திருவீழிமிழலை ஆகும். நிலவுலகில் வாழும் வேதப் பண்டிதர்கள் பலநாட்களாகத் தொடர்ந்து வேதத்தை ஓதும் ஓசையை நன்கு கேட்டுத், தேன்நிறைந்த பொழில்களில் வாழும் கிளிகளும், அவற்றின் பொருளைச் சொல்லுகின்ற சிறப்பினை உடையது திருவீழிமிழலை ஆகும்.

***குறிப்புரை:*** வடவால மரத்தின்கீழ் நால்வர்க்கு அறம் உரைத்து ஒளிநெறியளித்த இறைவன் கோயில், பண்டிதர்கள் பலகாற் பயிலும் ஓசையைக் கேட்டு, கிளிகள் வேதப் பொருள் சொல்லும் திருவீழிமிழலையாம் என்கின்றது. ஏர் – அழகு, எழுச்சியுமாம். ஈரிருவர் – சனகர் முதலிய தேவமுனிவர் நால்வர். 'நேரிய நான்மறைப் பொருள்' எனவே இங்ஙனம் இறைவன்முன் உணராத பரம்பரையினர் தற்போத முனைப்பால் நேர்மையற்ற பொருளும் கொள்வர் என்பது அமைந்து கிடந்தது. ஒளிசேர்நெறி – சிவஞான நெறி. வேரி – தேன்.

Lord Civan sitting under a big shady and cool stone banyan tree (*கல்லாலமரம்*) unravelled all the complex, baffling and intricate elements of the four Vedas to the four saints who approached Civan and solicited Him to clear their doubts. He also explained to them the pathway to obtain divine beatitude. This Civan is entempled in the town Thiru-veezhi-mizhalai. In this city Vedic scholars teach their students all about Vedas and their meaning for long periods. By hearing very often the words of Vedic scholars, parrots living in the nearby lush gardens full of honeycombs, also were able to repeat the explanation of the Vedas. This is the speciality of this town.

பொறியரவமதுசுற்றிப்பொருப்பேமத்தாகப்
புத்தேளிர்கூடி
மறிகடலைக்கடைந்திட்டவிடமுண்ட
கண்டத்தோன்மன்னுங்கோயில்
செறியிதழ்த்தாமரைத்தவிசில்திகழ்ந்தோங்கு
மிலைக்குடைக்கீழ்ச்செய்யார்செந்நெல்
வெறிகதிர்ச்சாமரையிரட்டஇளவன்னம்
வீற்றிருக்கும்மிழலையாமே. 2

பொறிஅரவம்அதுசுற்றி, பொருப்பே மத்துஆகப்,
புத்தேளிர் கூடி,
மறிகடலைக் கடைந்திட்ட விடம் உண்ட
கண்டத்தோன் மன்னும் கோயில் -
செறி இதழ்த் தாமரைத்தவிசில் - திகழ்ந்து ஓங்கும்
இலைக்குடைக்கீழ், செய்ஆர் செந்நெல்
வெறி கதிர்ச்சாமரை இரட்ட, இள அன்னம்
வீற்றிருக்கும் மிழலைஆமே.

poRi aravam atu cuRRi, poruppE mattu Aka,
puttELir kUTi,
maRi kaTalaik kaTaintiTTa viTam uNTa
kaNTattOn2 man2n2um kOyil--
ceRi itazt tAmaraittavicil-tikazntu Ogkum
ilaikkuTaikkIz, cey Ar cennel
veRi katirccAmarai iraTTa, iLa an2n2am
vIRRirukkum mizalai AmE.

**பொருள்:** தேவர்கள் அனைவரும் கூடி, மந்தர மலையை மத்தாக நாட்டி, புள்ளிகளை உடைய வாசுகி என்னும் பாம்பைக் கயிறாகச் சுற்றி, அலைகள் மிகுந்த பாற்கடலைக் கடைந்தனர். அப்பொழுது எழுந்த நஞ்சினை உண்ட கண்டத்தை உடையவர் சிவபெருமான் ஆவார். இப்பெருமான் நிலைபெற்று இருக்கும் கோயில் திருவீழிமிழலை ஆகும். இத்தலத்தில் நெருங்கிய இதழ்களை உடைய தாமரை மலரைத் தனது இருப்பிடமாகவும், தாமரை இலையைக் குடையாகவும் கொண்டு இள அன்னங்கள், நெற்கதிர்கள் சாமரம் வீச வீற்றிருக்கின்றன.

**குறிப்புரை:** வாசுகியை கடைகயிறாகச் சுற்றி, மந்தரமே மத்தாக, தேவர்கள்கூடி பாற்கடலைக் கடைந்த காலத்து எழுந்த விடத்தை உண்ட கண்டன் மன்னுங்கோயில், தாமரை ஆசனத்தில் இலை குடையாக. செந்நெற்கற்றை சாமரையாக, இள அன்னம் வீற்றிருக்கும் மிழலையாம் என்கின்றது. பொறியரவம் – படப் பொறிகளோடு கூடிய வாசுகி என்னும் பாம்பு. மறி கடல் – அலைகள் மறிகின்ற கடல். செய் – வயல். வெறி – மணம்.

All the Devas joined together and brought the Mēru mountain to use it as a churning rod to churn the sea and get nectar out of it. They also took the spotted Vaasuki snake and used it as the rope with which to churn. When they started churning the sea full of rolling waves, a very strong poison came out of the sea, the aroma of which threatened to kill all the Devas and Asuraas and every one else in the universe. Lord Civan entempled in Thiru-veezhi-mizhalai being the repository of mercy, grace and love came forward to save one and all. He without swallowing the poison, put it in His mouth and positioned it firmly in His throat; this resulted in His neck appearing always in dark blue colour similar to that of sapphire gem. Thus He saved the Devas and all others from death. In the lotus ponds of this town, young baby swans sit on the lotus flowers. The lotus leaf grown over the flower appeared as though it gives protection for the swans much like to an umbrella. At the same time the grass of red paddy in the adjoining fields moves up and down in the wind. This appears as though it fans (*சாமரம் வீச*) the young swans seated in the lotus flower to get a steady and light current of air.

**Note:** *சாமரம்* - Saamaram = Lush tail of the yak, used as a fly flapper for deities or as a royal insignia.

எழுந்துலகைநலிந்துழலுமவுணர்கள்தம்
புரமூன்றுமெழிற்கணாடி
உழுந்துருளுமளவையினொள்ளெரிகொள
வெஞ்சிலைவளைத்தோனுறையுங்கோயில்
கொழுந்தரளம்நகைகாட்டக்கோகநதம்
முகங்காட்டக்குதித்துநீர்மேல்
விழுந்தகயல்விழிகாட்டவிற்பவளம்
வாய்காட்டும்மிழலையாமே. 3

எழுந்து உலகை நலிந்து உழலும் அவுணர்கள்தம்
புரம்மூன்றும், எழில் கணாடி
உழுந்து உருளும் அளவையின், ஒள்எரி கொள,
வெஞ்சிலை வளைத்தோன் உறையும் கோயில்
கொழுந் தரளம் நகை காட்ட, கோகநதம்
முகம் காட்டக், குதித்து நீர்மேல்
விழுந்த கயல் விழிகாட்ட, வில் பவளம்
வாய் காட்டும் மிழலைஆமே.

ezuntu ulakai nalintu uzalum avuNarkaL tam
puram mUn2Rum, ezil kaNNATi
uzantu uruLum aLavaiyin2, oLeri koLa,
venjcilai vaLaittOn2 uRaiyum kOyil--
kozun taraLam nakai kATTa, kOkanatam
mukam kATTa, kutittu nIrmEl
vizunta kayal vizi kATTa, vil pavaLam
vAy kATTum mizalai AmE.

**பொருள்:** வானத்தில் பறந்து, திரிந்து உலக மக்களை நலிவுறச் செய்பவர்கள் முப்புர அசுரர்கள் ஆவர். அவர்கள் வாழும் முப்புரங்களை, அழகிய கண்ணாடியில் உளுந்து உருளக் கூடிய நொடிப் பொழுதில், ஒளிமிகுந்த தீயினால் எரிந்து போகுமாறு, கொடிய வில்லை வளைத்தவர் சிவபெருமான் ஆவார். இப்பெருமான் உறைந்திருக்கும் கோயில் திருவீழிமிழலை ஆகும். இத்தலத்தில் செழுமையான முத்துக்கள் பெண்களின் வெண்மையான பற்களைப் போலவும், தாமரை மலர்கள் அவர்களின் மலர்ச்சியான முகம் போலவும், நீர் நிலைகளின் மேல் குதித்து விளையாடும் கயல் மீன்கள் அவர்களின் கண்விழிகளைப் போலவும், சிவந்த பவளங்கள் அவர்களின் சிவந்த உதடுகள் போன்றும் தோற்றமளிக்கின்றன.

**குறிப்புரை:** உலகை வருத்தும் அவுணர்தம் புரத்தைக் கண்ணாடியில் உழுந்துருளும் காலத்தில் எரித்த இறைவன்கோயில், முத்து, மகளிர் பல்காட்ட, தாமரை, முகங்காட்ட துள்ளுங்கயல், விழிகாட்ட, பவளம் வாய்காட்டும் வீழிமிழலையாம் என்கின்றது. நலிந்து – வருத்தி. உழுந்து உருளும் அளவை – ஓர் உளுந்து உருளக்கூடிய காலச் சிறுமையில். தரளம் – முத்து. கோகநகம் – தாமரை. வில் – ஒளி.

The Asuraas had built three very strong fortresses in the sky and roam about all over the sky. Every now and then they attack the Devas and the worldly people also and crush them and make them suffer hardship. Lord Civan bent the strong bright bow and burnt the three fortresses and turned them into ashes just in a very short span of time - just in the time taken for a piece of black gram to roll down upon a good looking mirror. This Lord Civan abides in the temple in Thiru-veezhi-mizhalai city. Young maidens living in this city are so very beautiful that their body parts appear as under:

a) Their teeth - appear like well grown pearls.
b) Their face - appears as lotus flowers.

c) Their eyes – appear as carp fish jumping and playing in the watershed.

d) Their mouth – appears as bright red coral gems.

Such is the greatness of this city.

உரைசேருமெண்பத்துநான்குநூறாயிரமாம்
யோனிபேதம்
நிரைசேரப்படைத்தவற்றினுயிர்க்குயிரா
யங்கங்கேநின்றான்கோயில்
வரைசேரும்முகில்முழவமயில்கள்பல
நடமாடவண்டுபாட
விரைசேர்பொன்னிதழிதரமென்காந்தள்
கையேற்கும்மிழலையாமே. 4

உரை சேரும் எண்பத்துநான்குநூறுஆயிரம் ஆம்
யோனி பேதம்
நிரை சேரப் படைத்து, அவற்றின் உயிர்க்கு உயிர்ஆய்,
அங்குஅங்கே நின்றான் கோயில் -
வரை சேரும் முகில் முழவ, மயில்கள்பல
நடம்ஆட, வண்டு பாட,
விரை சேர் பொன் இதழி தர, மென்காந்தள்
கை ஏற்கும் மிழலைஆமே.

urai cErum eNpattu nAn2ku nURu Ayiram Am
yOn2i pEtam
nirai cErap paTaittu, avaRRin2 uyirkku uyir Ay,
agku agkE nin2RAn2 kOyil--
varai cErum mukil muzava, mayilkaL pala
naTam ATa, vaNTu pATa,
virai cEr pon2 itazi tara, men2kAntaL
kai ERkum mizalai AmE.

**பொருள்:** நூல்களில் உரைக்கப்படுகின்ற எண்பத்தி நான்கு லட்சம் பிறப்பு வேறுபாடுகளை நேர்த்தியாகப் படைத்து, அவற்றின் ஒவ்வொன்றிலும் உயிருக்கு உயிராய் உள்நிற்கின்றவர் சிவபெருமான் ஆவார். இப்பெருமான் உறையும் கோயில் திருவீழிமிழலை ஆகும். இத்தலத்தில், மலைகளில் தங்கியிருக்கும் மேகங்கள் மேலே எழும்பி, முழவின் ஒலிபோல் அதிர்கின்றன. அதனைக் கேட்கும் ஆண் மயில்கள் மழை வருவதை எதிர்பார்த்து நடனம் ஆடுகின்றன. வண்டுகள் இசை பாடுகின்றன. மணம் நிறைந்த கொன்றை மலர் இதழ்களாகிய பொன்னைத் தர, காந்தள் மலர்கள் கையேந்தி வாங்குவது போன்று தோன்றும் வளம் நிறைந்த தலம் திருவீழிமிழலை ஆகும்.

**குறிப்புரை:** எண்பத்து நான்கு லட்சம் யோனிபேதங்களையும் படைத்து, அவற்றின் உயிர்க்குயிராக நிற்கும் இறைவன் கோயில் முகிலாகிய முழவம் ஒலிக்க, மயில் நடமாட, வண்டு பாட, கொன்றை மரம் பொற்பரிசில் வழங்க, காந்தள் கையேற்று வாங்கும் மிழலையாம் என்கின்றது. உரைசேரும் – நூல்களில் உரைக்கப் பெறுகின்ற. முகில் – மேகம். விரை – மணம். இதழி கொன்றை.

The scriptures declare that there exists in the universe eighty four lakhs different forms of life. Lord Civan creates all these forms of life in an orderly manner. Also He becomes a part of each and every life. He is also immanent everywhere. This Lord Civan is entempled in Thiru-veezhi-mizhalai. In the mountain tops of the city clouds gather, and create thunderous noise, similar to the large and loud sounding drums. By hearing this noise, the male peacocks start dancing, the beetles start humming; the cassia tree showers its fragrant golden flowers; the malabar glory lily flowers open their petals and appear as though they open their hands to receive the golden cassia flowers.

காணுமாறரியபெருமானாகிக்
காலமாய்க்குணங்கள்மூன்றாய்ப்
பேணுமூன்றுருவாகிப்பேருலகம்
படைத்தளிக்கும்பெருமான்கோயில்
தாணுவாய்நின்றபரதத்துவனை
யுத்தமனையிறைஞ்சீரென்று
வேணுவார்கொடிவிண்ணோர்தமைவிளிப்
போலோங்குமிழலையாமே. 5

காணும்ஆறு அரிய பெருமான்ஆகி,
காலம்ஆய், குணங்கள்மூன்றுஆய்,
பேணு மூன்று உருஆகி, பேர்உலகம்
படைத்து அளிக்கும் பெருமான் கோயில் -
"தாணுஆய் நின்ற பரதத்துவனை,
உத்தமனை, இறைஞ்சீர்!" என்று
வேணு வார்கொடி விண்ணோர்தமை விளிப்ப
போல் ஓங்கு மிழலைஆமே.

kANum ARu ariya perumAn2 Aki,
kAlam Ay, kuNagkaL mUn2Ru Ay,
pENu mUn2Ru uruAki, pEr ulakam
paTaittu aLikkum perumAn2 kOyil--

"tANu Ay nin2Ra paratattuvan2ai,
uttaman2ai, iRainjclr!" en2Ru
vENu vArkoTi viNNOrtamai viLippa
pOl Ogku mizalai AmE.

***பொருள்:*** காண்பதற்கு அரிய கடவுளாகி, மூன்று காலங்களாகவும், மூன்று குணங்களாகவும் ஆகி, உலகைப் படைத்தும், காத்தும், அழித்தும், மூன்று உருவும் உடையாராகி, அண்டசராசரங்கள் யாவற்றையும் படைத்து அளிப்பவர் சிவபெருமான் ஆவார். இப்பெருமானின் கோயில் திருவீழிமிழலை ஆகும். என்றும் நிலைத்திருக்கும் பொருளாகவும், பரதத்துவன் ஆகவும், உத்தமன் ஆகவும் இருப்பவன் சிவபெருமான். இத்தகையவனை நீங்கள் வணங்குங்கள் என்று உயர்ந்து ஓங்கிய மூங்கில் கொடிகள் தேவர்களை அழைப்பது போல் அசையும் காட்சிகளை உடையது திருவீழிமிழலை ஆகும்.

***குறிப்புரை:*** காணுதற்கரிய கடவுளாகி, காலம் குணம் இவையுமாகி, எல்லாராலும் போற்றப் பெறும் பிரம விஷ்ணு ருத்ரனாகி, பெரிய உலகத்தைப் படைத்தும அளிக்கும் பெருமான் கோயில், இறைவனை வணங்குங்கள் என்று கொடிகள் தேவரை அழைக்கும் வீழிமிழலை என்கின்றது. காலமாய் – இறப்பு, நிகழ்வு, எதிர்வு என்ற மூன்று காலமாய்; என்றது எல்லாவற்றையும் அடக்கித் தம் எல்லைக்குள் இன்பத்துன்பங்களை எய்தி நடக்கச் செய்தலின், குணங்கள் மூன்றாய் – சாத்வீகம் முதலிய குணங்கள் மூன்றாய், பேணும் – போற்றப் பெறுகின்ற, படைத்து அளித்த எனவே அழித்தலாகிய இவர் தொழில் சொல்லாமலே பெறப்பட்டது. தாணு – நிலைத்த பொருள். தூண் வடிவு என்றுமாம். வேணுவார்கொடி – மூங்கிற்றண்டில் கோக்கப்பெற்ற நீளமான கொடிகள். விண்ணோர்கள் போகத்தால் மோகித்து மறந்திருத்தலின் கொடிகள் நினைவூட்டி அழைக்க வேண்டியதாயிற்று.

It is very difficult to see Lord Civan with our eyes; or comprehend Him by any body. He is the three parts of period - past, present and future; He is the three dominant qualities saatvikam etc. He is all the three - Ari - Ayan - Aran - i.e., Brahma, Vishnu and Guna Rudran (*அரி, அயன், அரன் என்ற மும்மூர்த்திகள்*) praised and adored by one and all. He does the three important functions - creation, sustenance and dissolution in this great universe. This Lord Civan is entempled in Thiru-veezhi-mizhalai. In this town the flags fixed on long bamboo poles oscillate in the wind. They do this as though they invite the Devas to come down to earth and offer worship to the Supreme and permanently lasting Being and who is the preserver of every one.

அகனமர்ந்தஅன்பினராயறுபகைசெற்
றைம்புலனுமடக்கிஞானம்
புகலுடையோர்தம்முள்ளப்புண்டரிகத்துள்
ளிருக்கும்புராணர்கோயில்
தகவுடைநீர்மணித்தலத்துச்சங்குளவர்க்கந்
திகழச்சலசத்தியுள்
மிகவுடையபுன்குமலர்ப்பொரியட்ட
மணஞ்செய்யும்மிழலையாமே. 6

அகன் அமர்ந்த அன்பினராய், அறுபகை செற்று,
ஐம்புலனும் அடக்கி, ஞானம்
புகல் உடையோர்தம் உள்ளப்புண்டரிகத்துள்
இருக்கும் புராணர் கோயில் -
தகவு உடை நீர் மணித்தலத்து, சங்கு உள வர்க்கம்
திகழ, சலசத்தியுள்,
மிக உடைய புன்கு மலர்ப்பொரி அட்ட,
மணம் செய்யும் மிழலைஆமே.

akan2 amarnta an2pin2arAy, aRupakai ceRRu,
aimpulan2um aTakki, njAn2ap
pukal uTaiyOrtam uLLap puNTarikattuL
irukkum purANar kOyil--
takavu uTai nIr maNittalattu, cagku uLa varkkam
tikaza, calacattIyuL,
mika uTaiya pun2ku malarppori aTTa,
maNam ceyyum mizalai AmE.

**பொருள்:** உள்ளத்தில் பொருந்திய அன்புடையவராகவும், ஆறுவித அகப்பகைகளை நீக்கி, ஐம்புலன்களை அடக்கி, சிவஞானத்தில் திளைத்திருக்கும் துறவிகளின் இதயத் தாமரையில் எழுந்தருளி விளங்குபவர் பழையோனான சிவபெருமான் ஆவான். அவன் உறைந்திருக்கும் கோயில் திருவீழிமிழலை ஆகும். இத்தலத்தில் உள்ள தூய நீர் நிலைகளில் மணிகளும், சங்குகளும் விதவிதமான இனங்களும் சுற்றத்தார்போல சூழ்ந்திருக்க நீர்நிலைகளில் சிவந்த தாமரை மலர்கள் அக்கினி போன்று தோன்ற அடர்த்தியாக வளர்ந்த புங்க மரங்கள் மலர்களாகிய பொரியை அத்தீயில் தூவுகின்றன. இவ்வாறு திருமண நிகழ்வினை நினைவுறுத்தும் இயற்கை வளம் நிரம்பியது திருவீழிமிழலை ஆகும்.

**குறிப்புரை:** உள்ளம்புடையாராக அரிஷட்வர்க்கங்களை அழித்து, ஐம்புலன்களையும் அடக்கிய சிவஞானச் சேர்க்கையுடையோர்களின் இதயத் தாமரையில் எழுந்தருளி இருக்கும் இறைவன் கோயில் அழகிய இடத்தில் சங்குகளாகிற சுற்றம் விளங்க தாமரையாகிய தீயில் புன்கம் பொரிதூவி மணங்களைச் செய்யும்

மிழலை என்கின்றது. உள்ளப் புண்டரிகம் – இதய தாமரை. தகவு – தகுதி. நீர் மணித்தலத்து – நீரோட்டத்தோடு கூடிய இரத்தினங்கள் அழுத்தப்பெற்ற இடத்து. சங்கு உளவர்க்கம் திகழ – சங்குகளாகிய உள்ள சுற்றம் விளங்க. சலசத்தீயில் – தாமரைப்பூவாகிய தீயில். மலர்ந்த தாமரையைத் தீக்கு ஒப்பிடுவது மரபு.

The ascetics are those who renounced all the worldly pleasure and who have divine love in their minds; who have subjugated the five senses and all desires; who have controlled the five sensory organs and those who contemplate on the knowledge of god. Civan the most ancient, attaches Himself with the lotus heart of these ascetics. This Civan is entempled in Thiru-veezhi-mizhalai. In the pure watersheds of this town gems and chank shells (*சங்கு*) flourish. In these watersheds lotus flowers blossom in good number and they look like fire. Along the banks of these watersheds old tall Alexandria laurel trees have grown. These trees shed their white flowers on the lotus flowers. These white flowers look like parched rice. Lotus flower looks like fire. Therefore rice falling over fire reminds one about the marriage ceremony where parched rice grains are dropped in the sacrificial fire to the chanting of mantras.

ஆறாடுசேடைமுடியனனலாடு
மலர்க்கையனிமயப்பாவை
கூறாடுதிருவுருவன்கூத்தாடுங்
குணமுடையோன்குளிருங்கோயில்
சேறாடுசெங்கழுநீர்த்தாதாடி
மதுவுண்டுசிவந்தவண்டு
வேறாயவுருவாகிச்செவ்வழிநற்பண்
பாடும்மிழலையாமே. 7

*ஆறு ஆடு சடைமுடியன், அனல் ஆடு*
*மலர்க்கையன், இமயப்பாவை*
*கூறு ஆடு திருஉருவன், கூத்துஆடும்*
*குணம் உடையோன் குளிரும் கோயில் -*
*சேறு ஆடு செங்கழுநீர்த் தாதுஆடி,*
*மது உண்டு, சிவந்த வண்டு*
*வேறு ஆய உருஆகி, செவ்வழிநல்பண்*
*பாடும் மிழலைஆமே.*

ARu ATu caTaimuTiyan2, an2al ATu
malarkkaiyan2, imayappAvai
kURu ATu tiru uruvan2, kUttu ATum
kuNam uTaiyOn2, kuLirum kOyil--
cERu ATu cegkazunIrt tAtu aTi,
matu uNTu, civanta vaNTu
vERu Aya uruAki, cevvazi nalpaN
pATum mizalai AmE.

**பொருள்:** கங்கையை அணிந்த சடைமுடியை உடையவன். மலர் போன்ற கரத்தில் அனலை ஏந்தியிருப்பவன். இமவான் மகளாகிய பார்வதி தேவியை ஒரு கூறாக உடையவன். கூத்தாடும் குணம் உடையவன்! இத்தகைய பெருமைகளை உடைய சிவபெருமான் மனம் குளிர்ந்து எழுந்தருளி இருக்கும் கோவில் திருவீழிமிழலை ஆகும். இத்தலத்தில் சேற்றில் முளைத்த செங்கழுநீர் மலர்களில் உள்ள மகரந்தப் பொடியில் விளையாடி, சிவந்த நிறத்தை அடைகின்றன வண்டுகள். தேனைக் குடித்த இந்த வண்டுகள் செவ்வழிப் பண் இசையைப் பாடிக் களிக்கின்ற தலம் திருவீழிமிழலை ஆகும்.

**குறிப்புரை:** ஆறுசேர் முடியன், அனல்சேர் கையன், உமையொரு கூறன், கூத்தன்கோயில், செங்கழுநீர்ப் பூவின் மகரந்தத்தில் ஆடி, தேன்குடித்துச் சிவந்த வண்டு வேற்றுவடிவு கொண்டு செவ்வழிப் பண்ணைப் பாடும் மிழலையாம் என்கின்றது. தாது – மகரந்தம்.

Lord Civan entertains the river Ganges in His matted hair. He holds fire in His soft flowery hand. He concorporates His consort Paarvathi Devi daughter of Himaalayan King on His body which shines bright giving a splendorous appearance. He is in the habit of dancing. This Civan is wholeheartedly entempled in Thiru-veezhi-mizhalai. In the watershed areas of this town, the sweet smelling red water lily flourishes in large numbers. Black beetles fly to these flowers and suck the honey and get smeared by the red pollen grains all over their body and look like red coloured beetles. Their humming noise resembles singing in the primary melody type of the Mullai class (பெரும்பண்களில் ஒன்றாகிய முல்லைப்பண் செவ்வழிப்பண்).

கருப்பமிகுமுடலடர்த்துக்காலூன்றிக்கை
மறித்துக்கயிலையென்னும்
பொருப்பெடுக்கலுறுமரக்கன்பொன்முடிதோள்
நெரித்தவிரற்புனிதர்கோயில்
தருப்பமிகுசலந்தரன்றனுடல்தடிந்த
சக்கரத்தைவேண்டியீண்டு
விருப்பொடுமால்வழிபாடுசெய்யவிழி
விமானஞ்சேர்மிழலையாமே. 8

கருப்பம் மிகும் உடல் அடர்த்துக், கால் ஊன்றிக்,
கை மறித்துக், கயிலை என்னும்
பொருப்பு எடுக்கல்உறும் அரக்கன் பொன்முடி தோள்
நெரித்த விரல் புனிதர் கோயில் -
தருப்பம் மிகு சலந்தரன்தன் உடல் தடிந்த
சக்கரத்தை வேண்டி, ஈண்டு
விருப்பொடு மால் வழிபாடு செய்ய, இழி
விமானம் சேர் மிழலைஆமே.

karuppam mikum uTal aTarttu, kAl Un2Ri,
kai maRittu, kayilai en2n2um
poruppu eTukkal uRum arakkan2 pon2 muTi tOL
neritta viral pun2itar kOyil--
taruppam miku calantaran2 tan2 uTal taTinta
cakkarattai vENTi, INTu
viruppoTu mAl vazipATu ceyya, izi
vimAn2am cEr mizalai AmE.

***பொருள்:*** கர்வம் மிகுந்த உடலை வருத்திக், காலை ஊன்றி, கைகளை வளைத்துக், கயிலை என்னும் மலையைப் பெயர்த்து எடுக்க முயன்ற அரக்கன் இராவணன் ஆவான். இந்த அரக்கனின் பொற்கிரீடம் அணிந்த தலைகளையும், தோள்களையும் நெரித்த கால்விரலை உடைய புனிதரான சிவபெருமானின் கோயில் திருவீழிமிழலை ஆகும். இத்தலம், செருக்கு மிக்க சலந்தரன் என்னும் அசுரனின் உடலைப் பிளந்த, 'சக்கரம்' என்ற ஆயுதத்தைப் பெறத் திருமால் பெருவிருப்பத்துடன் வழிபட்ட தலமாகும். அதற்காகவே, இத்தலத்தில் விண்ணில் இருந்து இறக்கப்பட்ட விமானம் உள்ளது.

***குறிப்புரை:*** கயிலையை எடுக்கலுற்ற இராவணனை நெரித்த விரலை உடைய பெருமான் கோயில், சலந்தரன் உடலை அழித்த சக்கரத்தைத் திருமால் வழிபட்டுப் பெற்ற திருவீழிமிழலை என்கின்றது. கருப்பமிகும் உடல் – கருவம் மிகுந்த உடல் என்றது அப்பிராயகிருதமான கயிலையைத் தீண்டும் உரிமையுங்கூட, பிராகிருதமேனி தாங்கிய இவற்கில்லை என்பது, உணர்த்தியவாறு. தருப்பம் – செருக்கு.

மால் வழிபாடு செய்த வரலாறு இத்தலத்து நிகழ்ச்சி. இழிவிமானம் - விண்ணிழி விமானம். இது இத்தலத்து விமானம்.

Full of pride, Raavanan the Asura King exerted his body and went very near mount Kailas, the abode of Civan. He placed his feet firmed on the ground and by twisting his hands tried to lift mount Kailas to keep it aside. The pure and holy Civan pressed down on the mountain top by his toe and crushed his golden crowned heads and shoulders. Such Supreme Civan is entempled in Thiru-veezhi-mizhalai. Thirumaal desired to acquire the divine wheel weapon known as Chakraayutham (சக்ராயுதம்) from Lord Civan. Once Lord Civan split the body of Chalandaran (சலந்தரன்) an Asuraa and killed him by this weapon, and safely kept the weapon with him. Therefore, Thirumaal came to this town Thiru-veezhi-mizhalai and with extreme liking worshipped Lord Civan and requested him to give the wheel weapon (He got it finally). Also the turret of this temple is the one which came from Deva Loka through the sky and installed by Maha Vishnu.

**Note:** Turret - *விமானம்.* This is the dome like structure built over the sanctum sanctorum of temples. Tower is different from turret. Towers are built over the compound walls of the temples.

செந்தளிர்மாமலரோனுந்திருமாலு
மேனமோடன்னமாகி
அந்தமடிகாணாதேயவரேத்த
வெளிப்பட்டோனமருங்கோயில்
புந்தியினால்மறைவழியேபுற்பரப்பி
நெய்சமிதைகையிற்கொண்டு
வெந்தழிலின்வேட்டுலகின்மிகஅளிப்போர்
சேருமூர்மிழலையாமே. 9

செந்தளிர் மா மலரோனும் திருமாலும்,
ஏனமோடு அன்னம் ஆகி,
அந்தம் அடி காணாதே, அவர் ஏத்த,
வெளிப்பட்டோன் அமரும் கோயில் -
புந்தியின் நால்மறைவழியே புல் பரப்பி,
நெய் சமிதை கையில் கொண்டு,
வெந்தழலின் வேட்டு, உலகின் மிக அளிப்போர்
சேரும் ஊர் மிழலைஆமே.

centaLir mA malarOn2um tirumAlum,
En2amoTu an2n2am Aki,
antam aTi kANAtE, avar Etta,
veLippaTTOn2 amarum kOyil--
puntiyin2 nAlmaRaivaziyE pul parappi,
ney camitai kaiyil koNTu,
ventazalin2 vETTu, ulakil mika aLippOr
cErum(m) Ur mizalai AmE.

**பொருள்:** சிவந்த இதழ்களை உடைய பெரிய தாமரை மலர்மேல் உறையும் பிரமனும் திருமாலும் முறையே அன்னமும் பன்றியாகவும் மாறி சிவபெருமானின் முடியையும் அடியையும் தேடினர். தேடியும், காணமுடியாமல் பணிந்து வழிபட்டனர். அவர்களுக்கு காட்சி அளித்த பெருமான் அமர்ந்திருக்கும் கோயில் திருவீழிமிழலை ஆகும். தாங்கள் பெற்ற அறிவில் வேதவிதிப்படி தருப்பைப் புற்களைப் பரப்பி, நெய், சமித்து ஆகியவற்றைக் கையில் கொண்டு அழல் வளர்த்து வேள்வி செய்பவர்கள் அந்தணர்கள். உலகைக் காப்பவர்களாகிய அந்த அந்தணர்கள் சேரும் ஊர் திருவீழிமிழலை ஆகும்.

**குறிப்புரை:** அயனும் மாலும், அன்னமும் ஏனமுமாகித் தேடியறிய முடியாது வணங்க வெளிப்பட்ட இறைவன்கோயில், வேதவிதிப்படி தருப்பையைப் பரப்பி, நெய் சமித்து இவைகளைக் கொண்டு வேள்வி செய்து, உலகைக் காக்கும் அந்தணர் வாழும் மிழலையாம் என்கின்றது. அந்தம் – முடி. புத்தியினர் – அறிவால். வேட்டு – வேள்வி செய்து.

Brahma seated in the big red petalled lotus flower and Thirumaal took the form of a swan and hog respectively and started searching for the holy head and feet of Lord Civan. They failed in their attempt. Then they shed their arrogance and prayed to Lord Civan to forgive them. Thereafter Civa gave darshan to both of them. This Civan is entempled in Thiru-veezhi-mizhalai. In this city, Vedic scholars who always wish to help the world, do live in large numbers. They perform the sacrificial fire ritual as per the rules and regulations of the Vedas. They spread the sacred grass called Kaus (*தருப்பைப்புல்*), carry in their hand ghee and sacrificial fuel (*சமித்து*) start the fire, and perform the five kinds of sacrificial fire which a households is required to perform daily.

எண்ணிறந்தஅமணர்களுமிழிதொழில்சேர்
சாக்கியருமென்றுந்தன்னை
நண்ணரியவகைமயக்கித்தன்னடியார்க்
கருள்புரியும்நாதன்கோயில்
பண்ணமரும்மென்மொழியார்பாலகரைப்
பாராட்டுமோசைகேட்டு
விண்ணவர்கள்வியப்பெய்திவிமானத்தோடும் 10
மிழியும்மிழலையாமே.

எண் இறந்த அமணர்களும், இழி தொழில் சேர்
சாக்கியரும், என்றும் தன்னை
நண்ண (அ)ரிய வகை மயக்கித், தன் அடியார்க்கு
அருள்புரியும் நாதன் கோயில் -
பண் அமரும் மென்மொழியார் பாலகரைப்
பாராட்டும் ஓசை கேட்டு,
விண்ணவர்கள் வியப்பு எய்தி, விமானத்தோடும்(ம்)
இழியும் மிழலைஆமே.

eN iRanta amaNarkaLum, izi tozil cEr
cAkkiyarum, en2Rum tan2n2ai
naNNa (a)riya vakai mayakki, tan2 aTiyArkku
aruLpuriyum nAtan2 kOyil--
paN amarum men2moziyAr pAlakaraip
pArATTum Ocai kETTu,
viNNavarkaL viyappu eyti, vimAn2attOTum(m)
iziyum mizalai AmE.

**பொருள்:** எண்ணற்ற சமணர்களும், இழிதொழில் செய்யும் சாக்கியரும், எக்காலத்திலும் தம்மை நெருங்க இயலாதபடி, அவர்களின் அறிவை மயக்கி, தமது அடியார்களுக்கு அருள் செய்யும், சிவபெருமான் எழுந்தருளி இருக்கும் கோயில் திருவீழிமிழலை ஆகும். இத்தலத்தில பண் இசைபோன்று மென்மையான மொழிபேசும் பாவையர்கள் தாங்கள் பெற்ற புதல்வர்களை தாலாட்டுப் பாடிப் பாராட்டுகின்றனர். இந்தத் தாலாட்டு இசையைத் தேவர்கள் கேட்டு வியந்து, தங்கள் விமானங்களுடன் இங்கு வந்து இறங்குகின்றனர்.

**குறிப்புரை:** புத்தரும் சமணரும் தம்மை அறியா வகையாக அவர்களை மயக்கித் தன் அடியார்க்கு அருள்புரியும் நாதன்கோயில், பண்மொழிப் பாவைமார்கள் பாலகரைப் பாராட்டும் ஓசை கேட்டு விண்ணவர்கள் விமானத்தோடு வந்திறங்கும் வீழிமிழலை என்கின்றது.

Numerous Samanars and Buddhists are engaged in mean jobs. Lord Civan denied them knowledge and made Himself ever beyond their reach. However, He

graced His sincere devotees. This Lord Civan is entempled in Thiru-veezhi-mizhalai. The maidens of this town while lulling their babies to sleep in cradles, used to go on singing many melodious songs in a harmonious musical mode for their children. The Devas heard these sweet music and were amazed curious about wherefrom they were hearing such good music. They realised that these songs are emanating from Thiru-veezhi-mizhalai. Immediately they left their homes and came down to earth in their aerial car and landed in Thiru-veezhi-mizhalai and went on enjoying the music of the maidens of this town. Such an attractive and famous town is Thiru-veezhi-mizhalai.

மின்னியலும்மணிமாடமிடைவீழி
    மிழலையான்விரையார்பாதம்
சென்னிமிசைக்கொண்டொழுகுஞ்சிரபுரக்கோன்
    செழுமறைகள்பயிலுநாவன்
பன்னியசீர்மிகுஞானசம்பந்தன்
    பரிந்துரைத்தபத்துமேத்தி
இன்னிசையாற்பாடவல்லாரிருநிலத்தி
    லீசனெனுமியல்பினோரே. 11

*மின் இயலும் மணிமாடம் மிடை வீழி-*
    *மிழலையான் விரை ஆர் பாதம்*
*சென்னிமிசைக் கொண்டு ஒழுகும் சிரபுரக் கோன்-*
    *செழுமறைகள் பயிலும் நாவன்*
*பன்னிய சீர் மிகு ஞானசம்பந்தன்-*
    *பரிந்து உரைத்த பத்தும் ஏத்தி,*
*இன் இசையால் பாடவல்லார், இருநிலத்தில்*
    *ஈசன் எனும் இயல்பினோரே.*

min2 iyalum maNi mATam miTai vIzi--
    mizalaiyAn2 virai Ar pAtam
cen2n2imicaik koNTu ozukum cirapurak kOn2--
    cezumaRaikaL payilum nAvan2,
pan2n2iya cIr miku njAn2acampantan2--
    parintu uraitta pattum Etti,
in2 icaiyAl pATa vallAr, irunilattil
    Ican2 en2um iyalpin2OrE.

*பொருள்:* மின்னல் போன்ற ஒளியுடைய மணிகள் இசைத்த மாடவீடுகள் நிறைந்த திருவீழிமிழலையில் வீற்றிருப்பவர் சிவபெருமான் ஆவார். இப்பெருமானின் மணம் கமழுகின்ற திருவடிகளைச் சென்னியில் கொண்டு ஒழுகுகின்ற இயல்புடையவர் சிரபுரத்தின்

தலைவராகிய ஞானசம்பந்தன் ஆவார். இவர் மறைகள் பயின்ற நாவினையும், பலர் போற்றும் சிறப்புகளையும் உடையவர். இத்தகு ஞானசம்பந்தன் இறைவனை அன்புடன் போற்றிப் பாடிய இப்பதிகப் பாடல்கள் பத்தையும், இனிய இசையுடன் பாட வல்லவர்கள், பெரிதான இந்நில உலகத்தில் ஈசன் என்று போற்றப்பபடும் இயல்புடையவர்கள் ஆவார்கள்.

**குறிப்புரை:** வீழிநாதன் திருவடியைச் சிரமேற்கொண்டு ஒழுகும் திருஞானசம்பந்தர் பரிந்துரைத்த பாடல் வல்லார் பெரியபூமியில் ஈசன் எனும் இயல்புடையோர் ஆவர் என்கின்றது. பரிந்து – அன்புகொண்டு.

Gnaanasambandan is ingenious lord of Chirapuram habitually holds at heart, the Holy Feet of the Lord of Thiru-veezhi-mizhalai (This means that he will be adoring the Lord always in his mind). He has mastered all the rich four Vedas. He was praised by one and all and became very famous. This Gnaanasambandan sang this hymn with all sincerity on the Lord of Thiru-veezhi-mizhalai. In this town closely well built mansions are many. They will be dazzling like lightning by virtue of the various gems set in their walls. Those who cherish and glorify this hymn and chant these ten verses in sweet music, will become great so as to be praised by one and all as the Lord of this earth (ஈசன்).

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*132ஆம் பதிகம் முற்றிற்று*
End of 132nd Hymn

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# 133. திருக்கச்சியேகம்பம்

## திருத்தல வரலாறு:

திருக்கச்சியேகம்பம் தொண்டை நாட்டுத் தலங்களில் முதலாவதாக விளங்கும் பெருநகர். சென்னை செங்கல்பட்டு முதலிய பல நகரங்களில் இருந்தும் பேருந்துகளில் வரலாம். கயிலாயத்தினின்றும் இறைவனது ஆணையால் இங்கு எழுந்தருளிய இறைவி, இறைவனை மீண்டும் அடைதற்பொருட்டுத் தவம் செய்தனர். எண்ணான்கு அறங்களையும் வழுவாது இயற்றினர். கம்பையாற்றங்கரையில் ஒற்றை மாமரத்தடியில், மணலால் சிவலிங்கம் செய்து வழிபட்டனர். இறைவன் ஆணையால் கம்பையாற்றில் திடீரென பெருவெள்ளம் பெருக்கெடுத்து வந்தது. அம்மையைச் சூழ்ந்தது. இறைவி தான் வழிபட்டு வந்த மணலால் ஆன சிவலிங்கத்தைத் தழுவுவதைத் தவிர வேறு தப்பிக்க வழி இல்லாது போயிற்று. அவ்வாறு தழுவிய காரணத்தால் இறைவனது திருமேனியில் வளைத்தழும்பும், முலைத்தழும்பும் ஏற்பட்டன என்பது புராண வரலாறு. பஞ்சபூத தலங்களுள் ஒன்றாகிய மண் – பூமி (பிருதிவித்தலங்களுள் ஒன்று). முத்தி தரும் நகர் ஏழனுள் "முக்கியமாம் முதற்காஞ்சி" என்றதற்கேற்ப முத்தி தரும் நகருள் முதன்மை பெற்றது. இத்தலத்து அமைந்துள்ள சிவ, விஷ்ணு, தேவி, கணபதி, முருகன் ஆலயங்கள் அளவிடற்கரிய புகழுடையன. ஐயடிகள் காடவர்கோன் நாயனார் ஆட்சி செய்த தலம். சுந்தரர் இடக்கண் பெற்ற தலம். திருக்குறிப்புத் தொண்ட நாயனார், சாக்கிய நாயனார் ஆகிய இவர்கள் முத்தி பெற்ற தலம். இறைவன் ஏகாம்பர நாதர். பெரிய கம்பர். இறைவி காமாட்சியம்மை, ஏலவார் குழலி, விநாயகர் விகடசக்கர விநாயகர். முருகன் மாவடிக் கந்தர். தலவிருட்சம் மாமரம். தீர்த்தம் சிவகங்கை, கம்பாநதி, ஸர்வதீர்த்தம். இடம் காஞ்சிபுரம் இரயில் நிலையித்திலிருந்து மேற்கே 2 கி.மீ. தூரத்தில் உள்ளது.

## கல்வெட்டு:

இத்தலத்தைப் பற்றிய கல்வெட்டுக்கள் பலவாயினும் ஏகாம்பர நாதர் கோயிலைப் பற்றியன சிலவே. இங்குள்ள கல்வெட்டில் குறிக்கப் பெற்றுள்ளவர்கள் முறையே திரிபுவனச் சக்கரவர்த்தி இராஜராஜன், கோப்பரகேசரி இராஜராஜன், திரிபுவனச் சக்கரவர்த்தி மூன்றாம் குலோத்துங்கன், இராஜகேசரி குலோத்துங்கன், கோராஜகேசரி குலோத்துங்கன், பரகேசரி உத்தம சோழன் ஆகிய

இவர்களும், புவனேகவீரனும், விஜயநகர சதாசிவதேவன், வீரமல்லிகார்ச்சுனன், புக்கராயன் ஆகிய இவர்களும் காகதீய அரசன் கணபதியும், சண்ட கோபாலனுமாகிய இவர்களும் ஆவார்கள்.

முதலாம் இராஜராஜதேவன் 27ஆம் ஆண்டில் ஒரு மாறன் தேவடிகளால் 5 கழஞ்சு பொன் படையலுக்காகக் கோயில் பொக்கிஷத்தில் சேர்க்கப்பட்டது. புவநேகவீரன் என்ற சமரலோகன். சகம் 1391இல் பாண்டிய நாட்டில் உள்ள இரண்டு கிராமங்களை ஏகாம்பரநாதர் கோயிலுக்கும் காமாட்சியம்மன் கோயிலுக்கும் கொடுத்தமை குறிக்கப் பட்டுள்ளது. காகதீய அரசன் கணபதி காலத்து (சகம் 1172) மந்திரியாக ஆண்ட சாமந்தக போஜனால் ஒரு கிராமம் கொடுக்கப்பட்டது.

## 133. THIRU-K-KACHCHI-ĒKAMBAM

### HISTORY OF THE PLACE

This sacred place is the foremost among the temples of Thondai Naadu. It is a big town and can be reached by bus from Chennai, Chengalpattu etc. The temple is located 2 km west of the railway station.

God is here known by the names of Ekaambaranaathar and Periya Kambar. The Goddes has the names of Kaamakshi Ammai and Elavaarkuzhali. Vinaayakar is Vikatachakkara Vinaayakar. Murugan is known as Maavadik Kandhar. The sacred tree is the mango tree. Sacred fords are Sivagangai, Kampaanadhi and Sarva Theerththam.

According to the legends of the Puraana, the Goddess came down from Kayilaayam to this place to get rid of a curse by Lord and performed 'thavam' for attaining the Lord. She followed the 84 virtues without fail. Making a Sivalingam out of sand in the river bed of Kambai. She worshipped it. God's grace caused a flood to arise and she held fast to the Lord. Thus, the Lord bears on his holy body the mark of the Goddesses breasts and bangles.

The word Kambam means trembling and Ekaam(ba)ram means a single mango tree. Of the five sacred temples representing the five elements, this one stands for the Earth. This town is celebrated as the foremost of the seven towns which are capable of granting salvation. The number of temples dedicated to Civa, Vishnu, Dhevi,

Ganapathi and Murugan are immensely famous. The Saint Iyadikal Kaadvar Kone ruled from here. Saint Sundarar got back vision to his left eye here. Saints Thiru-k-kuriputh Thondanaayanar and Saakkiya Naayanaar attained salvation here.

Although there are many inscriptions about this town, only a few pertain to this temple. Many Chola monarchs, from Raajaraajan I to Kuloththungan III; some of the Viyayanagaram and Kaakatheeya Kings are referred to in the inscriptions. Gifts of villages, land and gold for the temple are noted.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 133. திருக் கச்சி யேகம்பம் — 133. THIRU-K-KACHCHI-ĒKAMBAM

பண் : மேகராகக்குறிஞ்சி
ராகம் : நீலாம்பரி

*Pann: Mēgaraaga-k-kurinji*
*Raagam : Neelaambari*

வெந்தவெண்பொடிப்பூசுமார்பின்விரிநூலொருபால்பொருந்தக்
கந்தமல்குகுழலியோடுங்கடிபொழிற்கச்சிதன்னுள்
அந்தமில்குணத்தாரவர்போற்றஅணங்கினொடாடல்புரி
எந்தைமேவியஏகம்பந்தொழுதேத்தஇடர்கெடுமே. 1

வெந்தவெண்பொடிப் பூசும் மார்பின் விரிநூல் ஒருபால் பொருந்தக்,
கந்தம் மல்கு குழலியோடும் கடிபொழில் கச்சிதன்னுள்,
அந்தம் இல் குணத்தார் அவர் போற்ற, அணங்கினொடு ஆடல் புரி
எந்தை மேவிய ஏகம்பம் தொழுது ஏத்த, இடர் கெடுமே.

venta veNpoTip pUcum mArpin2 virinUl orupAl porunta,
kantam malku kuzaliyOTum kaTipozil kacci tan2n2uL,
antam il kuNattAr avar pORRa, aNagkin2oTu ATal puri
entai mEviya Ekampam tozutu Etta, iTam keTumE.

**பொருள்:** நன்றாக வெந்ததும், வெண்மையானதுமான திருநீற்றுப் பொடியைப் பூசியிருப்பவர்; திருமார்பில் விரிந்த பூணூல் ஒரு பாகத்தில் விளங்குமாறு தோற்றம் அளிப்பவர்; மணம் கமழும் கூந்தலை உடைய உமையம்மையோடு இருப்பவர். விளங்கும் பொழில்களால் சூழப்பட்ட திருக்கச்சி என்னும் தலத்தில் எல்லையற்ற நற்குணங்களை உடைய அடியவர்கள் போற்றி வணங்குமாறு நடனம் செய்யும் இவர், எம் தந்தையாகிய சிவபெருமான் ஆவார். இப்பெருமான் விருப்பத்துடன் எழுந்தருளி உள்ள ஏகம்பம் என்னும் திருக்கோயிலைத் தொழுது போற்றினால் நமது துன்பங்கள் இல்லாமல்போய்விடும்.

**குறிப்புரை:** திருநீறு பூசிய திருமார்பிற் பூணூல் கிடந்திலங்க, உமாதேவியோடு எழுந்தருளிய கச்சியுள் எல்லையற்ற குணங்களை உடைய அடியார்கள் போற்ற எந்தை மேவிய ஏகம்பம் தொழுதேத்த இடர்கெடும் என்கின்றது. அந்தம் – முடிவு. அணங்கினொடு – பார்வதியோடு.

Lord Civan smears His chest with the holy ashes very well burnt in the fire. On one side of His body shines the bright sacred thread. Along with His consort Umaa Devi, whose hair is ever smelling sweet, He is enshrined in the temple known as Ēkambam (*ஏகம்பம்*) in the city of Kachchi (*கச்சி*). This city is surrounded by plenty of natural gardens on all sides. Here live devotees with good virtuous character. They always adore our Lord who is dancing in this temple and worship Him. Our worldly attachments will vanish if we worship this Lord in all sincerity.

வரந்திகழுமவுணர்மாநகர்மூன்றுடன்மாய்ந்தவியச்
சரந்துரந்தெரிசெய்ததாழ்சடைச்சங்கரன்மேயஇடம்
குருந்தமல்லிகைகோங்குமாதவிநல்லகுராமரவம்
திருந்துபைம்பொழிற்கச்சியேகம்பஞ்சேரஇடர்கெடுமே. 2

வரம் திகழும் அவுணர் மா நகர்மூன்று உடன்மாய்ந்து அவியச்
சரம் துரந்து, எரிசெய்த தாழ்சடைச் சங்கரன் மேய இடம் -
குருந்தம், மல்லிகை, கோங்கு, மாதவி, நல்ல குரா, மரவம்,
திருந்து பைம்பொழில் - கச்சி ஏகம்பம் சேர, இடர் கெடுமே.

varam tikazum avuNar mA nakarmUn2Ru uTan2 mAyntu aviyac
caram turantu, ericeyta tAzcaTaic cagkaran2 mEya iTam--
kuruntam, mallikai, kOgku, mAtavi, nalla kurA, maravam,
tiruntu paimpozil--kacci Ekampam cEra, iTar keTumE.

**பொருள்:** வரம் பெற்ற அசுரர்களின் பெரிய நகரங்களான முப்புரங்களும் ஒன்றாய்ச் சேர்ந்து அழிந்து போகுமாறு சரம் தொடுத்து எரித்த நீண்ட சடைகளை உடைய சங்கரன் சிவபெருமான் ஆவார். இப்பெருமான் விரும்பி எழுந்தருளிய இடம் திருக்கச்சி ஏகம்பம் ஆகும். குருந்த மரம், மல்லிகை மலர், கோங்கு மரம், குருக்கத்தி மரம், நல்ல குரா மரம், கடம்ப மரம் ஆகியவற்றால் அழகுடன் விளங்கும் பசுமையான பொழில்கள் சூழ்ந்துள்ள கச்சி மாநகரில் உள்ள திருஏகம்பத்தை அடைந்து தொழ, நமது துன்பங்கள் இல்லாமல் போய்விடும்.

**குறிப்புரை:** திரிபுரம் எரியச் சரம்விட்ட சங்கரன் மேவிய இடமாகிய பொழில் சூழ்ந்த ஏகம்பம்சேர, இடர்கெடும் என்கின்றது. துரந்து – செலுத்தி. மாதவி – குருக்கத்தி. மரவம் – வெண்கடம்பு.

The Asuraas did a lot of penance and got boons by which they built and owned three big cities in the sky and were moving about all over the universe. Lord Civan (Sankaran) with his dangling matted hair which hangs on the back side of His head, shot an arrow and burnt all the three fortresses at one stroke and they were all completely destroyed. This Lord Civan is entempled in the temple known as Ēkambam in the city of Kachchi. This city is well renowned and surrounded by lush cool natural gardens full of flower plants and trees such as:

| | | |
|---|---|---|
| Kuruntham (*குருந்தம்*) | - | Wild lime plant |
| Malligai (*மல்லிகை*) | - | Himalayan heart leaved smooth Jasmine |
| Kōngu (*கோங்கு*) | - | Silk cotton tree |
| Maadhavi (*மாதவி*) | - | Common delight of the wood |
| Kadambam (*கடம்பம்*) | - | The seaside Indian oak |
| Nalkura (*நல்குரா*) | - | Common bottle flower |

If we reach this temple in the city of Kachchi and offer worship, our afflictions will all vanish.

வண்ணவெண்பொடிப்பூசுமார்பின்வரியரவம்புனைந்து
பெண்ணமர்ந்தெரியாடல்பேணியபிஞ்ஞகன்மேயவிடம்
விண்ணமர்நெடுமாடமோங்கிவிளங்கியகச்சிதன்னுள்
திண்ணமாம்பொழில்சூழ்ந்தஏகம்பஞ்சேரஇடர்கெடுமே. 3

***வண்ண வெண்பொடிப் பூசும் மார்பின் வரிஅரவம் புனைந்து,***
***பெண் அமர்ந்து, எரிஆடல் பேணிய பிஞ்ஞகன் மேய இடம்,***
***விண் அமர் நெடுமாடம் ஓங்கி விளங்கிய கச்சி தன்னுள்-***
***திண்ண மாம்பொழில் சூழ்ந்த ஏகம்பம் சேர, இடர் கெடுமே.***

vaNNa veNpoTip pUcum mArpin2 vari aravam pun2aintu,
peN amarntu, eri ATal pENiya pinjnjakan2 mEya iTam,
viN amar neTumATam Ogki viLagkiya kacci tan2n2uL-
tiNNa mAmpozil cUznta Ekampam cEra, iTar keTumE.

**பொருள்:** வெண்மை நிறம் உடைய திருநீற்றை மார்பில் பூசியிருப்பவன். உடலில் வரிகளை உடைய பாம்பை அணிந்திருப்பவன். உமையம்மையை ஒரு பாகத்தில் விரும்பி ஏற்றியிருப்பவன். சுடுகாட்டில் எரிஆடல் புரியும் தலைக்கோலம் உடையவன். இத்தகைய பெருமைகளை உடைய சிவபெருமான் விரும்பிய இடம் திருக்கச்சியேகம்பம் ஆகும். அது விண்ணைத் தொடும் மாடவீடுகள் ஓங்கி விளங்குவதும், என்றும் நிலைபெற்ற பொழில்களால் சூழப்பட்டதும் ஆகும். இத்திருக்கச்சி ஏகம்பத்தை அடைந்து விட்டால் நமது துன்பங்கள் இல்லாமல் போய்விடும்.

**குறிப்புரை:** திருநீறணிந்த மார்பில் அரவம் அணிந்து, பெண்ணை ஒருபால் விரும்பி, எரிக்கண் திருநடனத்தை விரும்பிய பிஞ்ஞகன் இடம். விண்ணளாவிய மாடமோங்கிய கச்சியுள் ஏகம்பம் ஆம்; அதனைச்சேர இடர்கெடும என்கின்றது. பிஞ்ஞகன் – மயிற்பீலியை உடையான்.

Lord Civa smears His body with pure white coloured holy ashes. He has worn on His body a fair snake also. With much affection He has joined hands with Umaa Devi. He dances in the burning ghat. He is bedecked with head ornament. This Lord Civan is entempled in the Ēkambam temple situated in the town Kachchi. This city has many tall mansions which stand out prominently and impressively there. The city is also surrounded by very old natural gardens full of trees. Those who reach the Ēkambam temple and offer worship will get all their afflictions washed off.

தோலுநூலுந்துதைந்தவரைமார்பிற்சுடலைவெண்ணீறணிந்து
காலன்மாள்வுறக்காலாற்காய்ந்தகடவுள்கருதுமிடம்
மாலைவெண்மதிதோயுமாமதிற்கச்சிமாநகருள்
ஏலநாறியசோலைசூழேகம்பமேத்தஇடர்கெடுமே. 4

தோலும் நூலும் துதைந்த வரைமார்பில் சுடலை வெண்நீறு அணிந்து,
காலன் மாள்உறக் காலால் காய்ந்த கடவுள் கருதும் இடம்,
மாலை வெண்மதி தோயும் மா மதில் கச்சி மா நகருள்,
ஏலம் நாறிய சோலை சூழ் ஏகம்பம் ஏத்த, இடர் கெடுமே.

tOlum nUlum tutainta varai mArpil cuTalai veN nIRu aNintu,
kAlan2 mAL uRak kAlAl kAynta kaTavuL karutum iTam,
mAlai veNmati tOyum mA matil kacci mA nakaruL,
Elam nARiya cOlai cUz Ekampam cEra, iTar keTumE.

**பொருள்:** மான்தோலும், பூணூலும் பொருந்திய மலை போன்ற திருமார்பில் சுடலையில் எடுத்த வெண்மையான திருநீற்றை அணிந்திருப்பவன் சிவபெருமான். காலனான எமனை மார்க்கண்டேயருக்காக தமது திருக்காலால் உதைத்த கடவுளான சிவபெருமான் விரும்பி இருக்கும் இடம் திருக்கச்சி ஏகம்பம் ஆகும். மாலைக் காலத்தில் தோன்றும் வெண்மையான மதியை மறைக்கும்படி உயர்ந்த பெரிய மதில்களை உடைய கச்சி மாநகரில், மணம் வீசும் சோலைகளால் சூழப்பட்ட ஏகம்பம் என்னும் திருக்கோயிலைப் போற்றி வழிபட்டால் நமது துன்பங்கள் இல்லாமல் போய்விடும்.

**குறிப்புரை:** கருமான்தோலும் பூணூலும் நெருங்கிய மார்பில் நீறணிந்து காலனைக் காய்ந்த கடவுள் கருதுமிடம். கச்சியுள் ஏகம்பம்; அதனை ஏத்த இடர்கெடும் என்கின்றது.

Lord Civan wears in His hill like chest the skin of the deer and also the sacred thread. He smears His body with holy ashes removed from the burning ground. To save His devotee Maarkandeya, He kicked down the god of death (Kaalan - *காலன்*) to death. This Civan desires to be enshrined in the Ēkambam temple situated in Kachchi town. The fortification wall of this city is so tall that the white crescent moon which appears in the sky during evening hours, seems to rest on these walls. This city is surrounded by fragrant smelling natural gardens. If we can reach this temple our afflictions will vanish.

**தோடணிம்மலர்க்கொன்றைசேர்சடைத்தூமதியம்புனைந்து**
**பாடல்நான்மறையாகப்பல்கணப்பேய்களவைசூழ**
**வாடல்வெண்டலையோடனலேந்திமகிழ்ந்துடனாடல்புரி**
**சேடர்சேர்கலிக்கச்சியேகம்பஞ்சேரஇடர்கெடுமே.** 5

தோடு அணி(ம்) மலர்க்கொன்றை சேர் சடைத் தூ மதியம் புனைந்து,
பாடல் நால்மறைஆகப், பல்கணப்பேய்கள் அவை சூழ,
வாடல்வெண் தலைஓடு, அனல் ஏந்தி, மகிழ்ந்து உடன் ஆடல் புரி
சேடர்சேர் - கலிக் கச்சி ஏகம்பம் சேர இடர் கெடுமே.

tOTu aNi(m) malarkkon2Rai cEr caTait tU matiyam pun2aintu,
pATal nAlmaRai Aka, palakaNap pEykaL avai cUza,
vATal veN talai OTu, an2al, Enti, makiznt uTan2 ATal puri--
cETar cEr--kalik kacci Ekampam cEra, iTar keTumE.

**பொருள்:** அழகிய இதழ்களோடு கூடிய கொன்றை மலர் மாலை சூடிய சடையின்மேல் தூய மதியை அணிந்திருப்பவன். நான்மறைகளைப் பாடல்களாகக் கொண்டிருப்பவன். பேய்க் கணங்கள் பலசூழ வீற்றிருப்பவன். புலால் வற்றிய வெண்மையான தலையோட்டையும் அனலையும் கையில் ஏந்தியிருப்பவன். மகிழ்வுடன் உமையம்மையுடன் ஆடல் புரிபவன். இத்தகைய பெருமைகளைக் கொண்டு உலகம் அழிய தான்மட்டும் எஞ்சி நிற்கும் பெரியோனாகிய சிவபெருமான் எழுந்தருளி இருக்கும், ஆரவாரம் மிகுந்த கச்சியில் விளங்கும் திருஏகம்பத்தைத் தியானித்தால் நமது துன்பங்கள் இல்லாமல் போய்விடும்.

**குறிப்புரை:** இதழோடு கூடிய அழகிய கொன்றை மலரை அணிந்த சடையிலே பிறைமதியைச் சூடி, நான்மறை பாடலாக, பேய்க்கணம் புடைசூழ, அனலேந்தி ஆடும் பெரியோன் சேரும் இடம் கச்சியுள் ஏகம்பம் என்கின்றது. சேடர் – உலகம் அழியத் தான் எஞ்சி நிற்பவர். சேர – தியானிக்க.

Lord Civan wears on His matted hair a garland made up of cassia flowers with full of attractive petals. He sustains the crescent moon also in His matted hair. Accompanied by His retinue of goblins, He carries the white human skull in which dried raw meat is sticking; in another hand He carries the fire. With all this paraphernalia, Civan the great, happily dances along with His retinue. This Civan is entempled in the bustling temple of Ēkambam in the city of Kachchi. If we contemplate on the Lord at Ēkambam and adore Him, all our afflictions will vanish.

சாகம்பொன்வரையாகத்தானவர்மும்மதில்சாயவெய்து
ஆகம்பெண்ணொருபாகமாகஅரவொடுநூலணிந்து
மாகந்தோய்மணிமாடமாமதிற்கச்சிமாநகருள்
ஏகம்பத்துறையீசன்சேவடியேத்தஇடர்கெடுமே. 6, 7

சாகம் பொன்வரை ஆகத் தானவர் மும்மதில் சாய எய்து,
ஆகம் பெண் ஒருபாகம்ஆக, அரவொடு நூல் அணிந்து,
மாகம் தோய் மணி மாட மா மதில் கச்சி மா நகருள்,
ஏகம்பத்து உறை ஈசன் சேவடி ஏத்த, இடர் கெடுமே.

cAkam pon2varai Akat tAn2avar mummatil cAy eytu,
Akam peN orupAkam Aka, aravoTu nUl aNintu,
mAkam tOy maNi mATa mA matil kacci mA nakaruL,
Ekampattu uRai Ican2 cEvaTi Etta, iTar keTumE.

**பொருள்:** மேருமலையை வில்லாகக் கொண்டு, அசுரர்களின் மூன்று மதில்களும் அழிந்து போகுமாறு கனை தொடுத்தவர். தமது திருமேனியில் உமையம்மையை ஒருபாகமாகக் கொண்டிருப்பவர். தமது திருமார்பில் பாம்பையும் முப்புரிநூலையும் அணிந்திருப்பவர். இத்தகைய பெருமைகளைக் கொண்ட சிவபெருமான், விண்ணை முட்டும் மணிமாடங்களையும், உயர்ந்த மதில்களையும் உடைய கச்சி மாநகரில் உள்ள திருஏகம்பத்தில் உறைகின்றார். இப்பெருமானின் திருவடிகளைப் போற்றித் தொழுதால் நமது துன்பங்கள் விலகிவிடும்.

**குறிப்புரை:** மேருமலை வில்லாக முப்புரம் எரித்து, உடலில் ஒரு பாகம் பெண்ணாக ஏற்று, அரவையும் நூலையும் அணிந்து கச்சியேகம்பத்துள் அமர்ந்த ஈசன் திருவடி ஏத்த இடர்கெடும் என்கின்றது. சாகம் – வில். சாபம் எதுகை நோக்கிச் சாகம் ஆயிற்று. தானவர் – அசுரர். ஆகம் – உடல். மாகம் – ஆகாயம்.

Lord Civan has His consort Umaa Devi on the left half of His holy body. He wears in His chest the snake and the three ply sacred thread. Holding Mēru mountain as His bow, He shot an arrow and destroyed the three fortresses of the Asuraas. This Civan abides in the sacred temple at Ēkambam in the city of Kachchi, where the fortification walls and many sky tall good looking mansions are to be found everywhere. If we adore the Holy Feet of this Lord of the Universe (ஈசன்) our affliction will vanish.

வாணிலாமதிபுல்குசெஞ்சடைவாளரவம்மணிந்து
நாணிடத்தினில்வாழ்க்கைபேணிநகுதலையிற்பலிதேர்ந்
தேணிலாஅரக்கன்றன்நீள்முடிபத்துமிறுத்தவனூர்
சேணுலாம்பொழிற்கச்சியேகம்பஞ்சேரஇடர்கெடுமே. 8

வாள் நிலாமதி புல்கு செஞ்சடை வாள் அரவம் அணிந்து,
நாண் இடத்தினில் வாழ்க்கை பேணி, நகுதலையில் பலி தேர்ந்து,
ஏண் இலா அரக்கன் தன் நீள் முடிபத்தும் இறுத்தவன் ஊர்,
சேண் உலாம் பொழில் கச்சி ஏகம்பம் சேர, இடர் கெடுமே.

vAL nilAmati pulku cenjcaTai vAL aravam aNintu,
nAN iTattin2il vAzkkai pENi, nakutalaiyil pali tErntu,
EN ilA arakkan2 tan2 nIL muTi pattum iRuttavan2 Ur,
cEN ulAm pozil kacci Ekampam cEra, iTar keTumE.

**பொருள்:** பிறையை அணிந்த செஞ்சடையில் அரவத்தை அணிந்திருப்பவர் சிவபெருமான். இடப்பாகத்தில் நாணோடு கூடியவளும் இல்வாழ்க்கைக்கு உரியவளுமான உமையம்மையை விரும்பி ஏற்றிருப்பவர். சிரிப்பது போன்று தோற்றமளிக்கும் தலையோட்டில் பிச்சை ஏற்பவர். மன உறுதி இல்லாத அரக்கனான இராவணனின் நீண்ட கிரீடம் தரித்த பத்துத் தலைகளையும் நெரித்தவர். இத்தகைய பெருமைகளை உடைய சிவபெருமானின் ஊர் திருக்கச்சி ஏகம்பம் ஆகும். வானளாவி ஓங்கி உயர்ந்த பொழில்களை உடைய கச்சி மாநகரில் உள்ள திருஏகம்பத்தை அடைந்துவிட்டால் நமது துன்பங்கள் நீங்கிவிடும்.

**குறிப்புரை:** பிறை அணிந்த செஞ்சடையில் அரவத்தையும் அணிந்து, இடப்பாகத்து நாணோடு வடிய இல்வாழ்க்கைக்குரிய உமாதேவியை வைத்து, மண்டையோட்டில் பிச்சை ஏற்று, இராவணன் சிரம் பத்தும் இறுத்தவனூர் கச்சி ஏகம்பம் என்கின்றது. வாள் நிலா – ஒளி பொருந்திய நிலா. புல்கு – தழுவிய. இல்வாழ்க்கை – மனையில் வாழ்தலை உடையாளாகிய உமாதேவி; தொழிலாகுபெயர். ஏண் – உறுதி. சேண் – ஆகாயம்.

Lord Civan wears a bright crescent moon in His ruddy matted hair wherein He holds a dazzling snake also. With much desire, He happily concorporated His consort Umaa Devi on the left side of His body frame. He accepts *alms in a skull that appears* smiling ever. He crushed the ten large heads of the firm minded Raavanan. His place of residence is Ēkambam where natural gardens flourish, full of sky tall trees. If we reach this Ēkambam and offer worship to Lord Civan therein our afflictions will vanish.

பிரமனுந்திருமாலுங்கைதொழப்பேரழலாயபெம்மான்
அரவஞ்சேர்சடையந்தணனணங்கினொடமருமிடம்
கரவில்வண்கையினார்கள்வாழ்கலிக்கச்சிமாநகருள்
மரவஞ்சூழ்பொழிலேகம்பந்தொழவல்வினைமாய்ந்தறுமே. 9

பிரமனும் திருமாலும் கைதொழப் பேர் அழல் ஆய பெம்மான்,
அரவம் சேர் சடை அந்தணன், அணங்கினொடு அமரும் இடம்,
கரவு இல் வண்கையினார்கள் வாழ் கலிக் கச்சி மா நகருள்,
மரவம் சூழ் பொழில் ஏகம்பம் தொழ, வல்வினை மாய்ந்து அறுமே.

piraman2um tirumAlum kaitozap pEr azal Aya pemmAn2,
aravam cEr caTai antaNan2, aNagkin2oTu amarum iTam,
karavu il vaNkaiyin2ArkaL vAz kalik kacci mA nakaruL,
maravam cUz pozil Ekampam toza, vilvin2ai mAyntu aRumE.

**பொருள்:** பிரமனும் திருமாலும் கைகூப்பி பணிந்து தொழுதபோது பெரிய அனல் உருவாக நின்ற பெருமான் சிவபெருமான் ஆவான். பாம்பை அணிந்த சடையை உடைய அந்தணனும் ஆகிய இப்பெருமான் தன் தேவியோடு அமர்ந்திருக்கும் இடம் திருக்கச்சி ஏகம்பம் ஆகும். உள்ளத்தில் வஞ்சகம் இல்லாத வள்ளல் தன்மை உடைய கைகளும் உள்ள சான்றோர்கள் வாழ்கின்ற ஆரவாரமுடைய மாநகர் கச்சி ஆகும். இங்குள்ள குங்கும மரங்கள் சூழ்ந்த பொழில்களை உடைய இந்த ஏகம்பத்தைத் தொழுதால் நம்மைத் துன்புறுத்தும் கொடிய வினைகள் மாய்ந்து அறுபட்டுப் போகும்.

**குறிப்புரை:** அயனும் மாலும் அடிவணங்க அழல் வண்ணமாகிய பெருமான் உமாதேவியோடு உறையுமிடம், வள்ளல்கள் வாழ்கின்ற கச்சியில் ஏகம்பமாம். அதனைத் தொழ வல்வினையறும் என்கின்றது. கரவு – உள்ளதை மறைக்கும் வஞ்சகம். மரவம் – மல்லிகை.

When Civan stood as a tall and big ball of fire, Brahma and Thirumaal worshipped Him with their hands. Civa the gracious one, has worn a snake in His matted hair. This Civan is enshrined along with His consort in the Ēkambam temple situated in the city of Kachchi. In this bustling city of Kachchi munificent people having good philanthropic hands do live in large numbers. These people have no slyness in their minds. This city is surrounded by natural gardens full of lush green trees of a special fragrant species (குங்கும மரம் - Crocus sativus). If we go to the Ēkambam temple of Kachchi city and worship Lord Civan therein, all our afflictions will vanish.

குண்டுபட்டமணாயவரொடுங்கூறைதம்மெய்போர்க்கும்
மிண்டர்கட்டியகட்டுரையவைகொண்டுவிரும்பேன்மின்
விண்டவர்புரமூன்றும்வெங்கணையொன்றினாலவியக்
கண்டவன்கலிக்கச்சியேகம்பங்காணஇடர்கெடுமே. 10

குண்டுபட்ட அமணஆயவரொடும், கூறை தம் மெய் போர்க்கும்
மிண்டர், கட்டிய கட்டுரை அவை கொண்டு விரும்பேன்மின்!
விண்டவர் புரம்மூன்றும் வெங்கணை ஒன்றினால் அவியக்
கண்டவன் கலிக் கச்சி ஏகம்பம் காண, இடர் கெடுமே.

kuNTupaTTu amaNa AyavaroTum, kURai tam mey pOrkkum
miNTar, kaTTiya kaTTurai avai koNTu virumpEn2min2!
viNTavar puram mUn2Rum vegkaNai on2Rin2Al aviyak
kaNTavan2 kalik kacci Ekampam kANa, iTar keTumE.

**பொருள்:** தடித்த உடலமைப்பும், ஆடையில்லாமல் திரியும் சமணர்களும், ஆடையை உடலில் போர்த்து வலியவராகத் திரியும் புத்தர்களும் புனைந்து கூறும் உரைகளை விரும்பாதீர்கள். பகைவர்களான அசுரர்களின் மூன்று புரங்களையும் கொடிய கணை ஒன்றால் எரித்து அழித்த சிவபெருமான் எழுந்தருளி இருக்கும் கச்சி நகரில் உள்ள ஏகம்பத்தைச் சென்று அடைந்தால் நமது துன்பங்கள் இல்லாமற்போகும்.

**குறிப்புரை:** புறச் சமயிகள் கூறும் கட்டுரைகளை நம்பாதீர்கள்; அவை அவர்கள் கட்டிய கட்டுக்கள்; பகைவரது முப்புரங்களும் ஓரம்பினால் உடையச் செய்தவனூர் கச்சி ஏகம்பம் என்கின்றது. குண்டுபட்டு – உடல்பருத்து. கூறை – ஆடை. விண்டவர் – பகைவர்.

The Samanars with their obese and naked body roam about all places. The strong and street Buddhists cover their body with one piece of cloth and move all around. These two groups proclaim rhetoric messages. Do not believe their words. Do not consider their words as virtuous, but ignore them. It is Lord Civan, who shot a fierceful arrow and destroyed the three fortresses of the hostile Asuraas. He is enshrined in the Ēkambam temple in the city of Kachchi. Proceed to this temple and offer worship to Lord Civan therein, your affliction will get destroyed.

ஏரினார்பொழில்சூழ்ந்தகச்சியேகம்பமேயவனைக்
காரினார்மணிமாடமோங்குகழுமலநன்னகருள்
பாரினார்தமிழ்ஞானசம்பந்தன்பரவியபத்தும்வல்லார்
சீரினார்புகழோங்கிவிண்ணவரோடுஞ்சேர்பவரே. 11

ஏரின் ஆர் பொழில் சூழ்ந்த கச்சி ஏகம்பம் மேயவனைக்,
காரின் ஆர் மணி மாடம் ஓங்கு கழுமல நன் நகருள்,
பாரின் ஆர் தமிழ் ஞானசம்பந்தன் பரவிய பத்தும் வல்லார்,
சீரின் ஆர் புகழ் ஓங்கி, விண்ணவரோடும் சேர்பவரே.

Erin2 Ar pozil cUznta kacci Ekampam mEyavan2ai,
kArin2 Ar maNi mATam Ogku kazumala nan2nakaruL,
pArin2 Ar tamiz njAn2acampantan2 paraviya pattum vallAr,
cIrin2 Ar pukaz Ogki, viNNavarOTum cErpavarE.

**பொருள்:** அழகு நிறைந்த பொழில்கள் சூழ்ந்த கச்சி ஏகம்பத்துள் விளங்கும் சிவபெருமானை, மேகங்கள் தவழும் அழகிய மணிமாடங்கள் ஓங்கிய கழுமல நன்னகருள் தோன்றிய தமிழ் வல்ல ஞானசம்பந்தன் போற்றிப் பாடினார். இவர் துதித்துப் போற்றிய இந்தப் பத்துப்

**பாடல்களையும் ஓதவல்லவர்கள் இவ்வுலகில் சிறந்த புகழுடையவராக ஓங்கி இருப்பார்கள். பின்னர் வானவர்களோடு சேர்ந்து வாழ்வார்கள்.**

***குறிப்புரை:*** இப்பதிகம் வல்லவர்கள் புகழ் ஓங்கித் தேவர்களோடும் சேர்வர் என்கின்றது. ஏரின் ஆர் பொழில் – அழகு நிறைந்த சோலை. காரின் ஆர் – மேகங்கள் கவிந்த.

The city Kachchi is surrounded by lush natural gardens full of trees. Lord Civan is enshrined in the Ēkambam temple situated in this city. Gnaanasambandan hails from the famous Kazhumala-valanagar (*கழுமல வளநகர்* – also known as Seekaazhi) where the clouds crawl on the top of the very tall and attractive mansions. Gnaanasambandan is an adept in Tamil language extolled and adored Lord Civan of this temple with this hymn of ten verses. Those who are capable of chanting these ten verses with all sincerity and worship Lord Civan of this temple will become great with all fame in this world and later will live along with the celestials in their world.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*133ஆம் பதிகம் முற்றிற்று*
End of 133rd Hymn

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# 134. திருப்பறியலூர் வீரட்டம்

## திருத்தல வரலாறு:

திருப்பறியலூர் வீரட்டம் சோழ நாட்டுக் காவிரித் தென்கரைத் தலம். மயிலாடுதுறை (செம்பொனார் கோயில் வழி) சங்கரன்பந்தல் செல்லும் பேருந்துகளில் பறியலூர் செல்லலாம். இப்பொழுது பரசலூர் என வழங்கும். அட்டவீரட்டத்தில் ஒன்று. தக்கன் செய்த யாகத்திற்குப் போந்த மாயன் முதலிய விண்ணவர்களின் வேதனையைத் தீர்த்த தலம். இறைவன் பெயர் வீரட்டேசுரர். இறைவியின் பெயர் இளம் கொம்பனையாள். தீர்த்தம் சிவகங்கை. தருமை ஆதீன அருளாட்சியில் உள்ளது.

## கல்வெட்டு:

இத்தலம் சுந்தர பாண்டியன் 5ஆம் ஆட்சி ஆண்டில் ஜெயங்கொண்ட சோழவள நாட்டு வீழை நாட்டு ராஜநாராயண சதுர்வேதி மங்கலமான பறியலூர் என வழங்கப் படுகிறது. இறைவன் தட்சேசுவரமுடையார் எனவும், திருவீரட்டானமுடையார் எனவும் வழங்கப்படுகிறார். கிருஷ்ணப்ப தேவமகாராயரால் குறிப்பிட்ட சில கிராமங்கள் (பறியலூர் உட்பட) சூலவரி வசூலிக்கப் பெற்றுச் சிவ விஷ்ணு கோயிலுக்கு அளிக்கப்பட்டது. இதில் யாத்ரீகர்களுக்கும் உணவளிக்க ஏற்பாடு செய்யப் பெற்றது. பூங்காக் குடியான பரராஜ பயங்கர நல்லூரில் 30 வேலி நிலத்தை இறையிலி செய்தளிக்கப்பட்டது. இங்கே ஏழுலக முழுதுடைய சதுர்வேதி மங்கலத்து ஒரு அக்ரகாரம் அமைக்க நிலம் ஒதுக்கப்பட்டது.

## பதிக வரலாறு:

திருச்செம்பொன்பள்ளி திருவிளநகர் முதலிய தலங்களை வணங்கிக் கொண்டு, பிள்ளையார் பரமர்தம் திருப்பறியலூரைப் பரவி, இப்பதிகத்தை அருளிச்செய்தார்கள்.

## 134. THIRU-P-PARIYALOOR-VEERATTAM

### HISTORY OF THE PLACE

This sacred place is to the south of river Cauvery in Chola Naadu. It is known now-a-days as Parasaloor. It can be reached by buses going to Mayilaaduthurai (via Semponaarkoyil) and Sankaranpandhal.

The Lord is known as Veerattesurar and the Goddess as Ilamkombanaiyaal (இளங்கொம்பனையாள்). The sacred ford is Sivagangai. This is one of the eight Veerattam temples. It is here that the celestial gods, Mayan and others, who attended the sacrifice of Thakkan, had their suffering relieved. The temple is under the spiritual administration of Dharumai Aadheenam.

The inscriptions here speak of grants for feeding pilgrims and of the gift of tax free land. Land was also allotted here to build an agrahaaram.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 134. திருப்பறியலூர் வீரட்டம் — 134. THIRU-P-PARIYALOOR-VEERATTAM

பண் : மேகராகக்குறிஞ்சி
ராகம் : நீலாம்பரி

*Pann: Mēgaraaga-k-kurinji*
*Raagam : Neelaambari*

கருத்தன்கடவுள்கனலேந்தியாடும்
நிருத்தன்சடைமேல்நிரம்பாமதியன்
திருத்தமுடையார்திருப்பறியலூரில்
விருத்தனெனத்தகும்வீரட்டத்தானே. 1

கருத்தன், கடவுள், கனல் ஏந்தி ஆடும்
நிருத்தன், சடைமேல் நிரம்பா மதியன் -
திருத்தம் உடையார் திருப் பறியலூரில்,
விருத்தன் எனத் தகும் வீரட்டத்தானே.

karuttan2, kaTavuL, kan2al Enti ATum
niruttan2, caTaimEl nirampA matiyan2--
tiruttam uTaiyAr tirup paRiyalUril,
viruttan2 en2at takum vIraTTattAn2E.

**பொருள்:** திருந்திய மனத்தை உடைய சான்றோர்கள் வாழும் திருப்பறியலூரில் தொன்மையானவனாக விளங்கும் வீரட்டானத்து இறைவன் சிவபெருமான் ஆவான். இப்பெருமான் எல்லா உயிர்களுக்குத் தலைவனாகவும் கடவுளாகவும் இருப்பவன். கையில் கனல் ஏந்தி நடனம் ஆடுபவன். சடைமுடிமீது இளம்பிறையை அணிந்திருப்பவன்.

**குறிப்புரை:** இப்பதிகம் முழுவதும் எல்லாவுயிர்கட்கும் கருத்தனாய், கடவுளாய், விருத்தனாய் இருப்பவன் திருப்பறியலூர் வீரட்டத்தான் என இறைவனியல்பு அறிவிக்கின்றது. திருத்தம் உடையார் – பிழையோடு பொருந்தாதே திருந்திய மனமுடைய அடியார். விருத்தன் – தொன்மையானவன்.

Flawless, well reformed and virtuous minded people live in large numbers in Thiru-p-pariyaloor-veerattam. In this Veerattanam city the (Time Honoured) Lord Civan is enshrined. He is the Supreme Lord of the entire universe. He dances holding fire in His hand. He sustains the young crescent moon on His matted hair. Go and worship Him.

Note: *விருத்தன்* – The Lord is young and is also old as desired by Himself on occasions – விருத்தனாய் பாலனாகி.

மருந்தமுதன்மயானத்துள்மைந்தன்
பெருந்தண்புனற்சென்னிவைத்தபெருமான்
திருந்துமறையோர்திருப்பறியலூரில்
விரிந்தமலர்ச்சோலைவிரட்டத்தானே. 2

**மருந்தன், அமுதன், மயானத்துள் மைந்தன்,**
**பெருந்தண்புனல் சென்னி வைத்த பெருமான் -**
**திருந்து மறையோர் திருப் பறியலூரில்,**
**விரிந்த மலர்ச்சோலை வீரட்டத்தானே.**

maruntan2, amutan2, mayAn2attuL maintan2,
peruntaNpun2al cen2n2i vaitta perumAn2--
tiruntu maRaiyOr tirup paRiyalUril,
virinta malarccOlai vIraTTattAn2E.

**பொருள்:** ஒழுக்கத்தில் சிறந்த அந்தணர்கள் வாழும் விரிந்த மலர்ச் சோலைகளை உடைய திருப்பறியலூரில் விளங்குபவன் வீரட்டானத்து இறைவனான சிவபெருமான். இப்பெருமான் பிறப்பு என்னும் நோய்க்கு மருந்தாக இருப்பவன். உயிர் காக்கும் அமுதமாக

இருப்பவன். மயானத்துள் நின்று ஆடும் வலியவன். மிகப் பெரியதாகப் பரந்து வந்த குளிர்ச்சியான கங்கையைத் தன் சென்னியில் வைத்துள்ள பெருமான் ஆவான்.

**குறிப்புரை:** மருந்தன் – பிணி தீர்க்கும் மருந்தானவன்.

Thiru-p-pariyaloor-veerattam is encircled by green, cool and flower rich gardens. In this city, very well disciplined Vedic scholars, do live in large numbers. Lord Civan entempled in this Thiru-p-pariyaloor-veerattam town is the remover of all diseases. He is the nectar that saves every one's life from death and birth. He is the powerful dancer in the burning ground. He is the noble one that entertains the cool, broad and big river Ganges in His head. Go and worship Him.

குளிர்ந்தார்சடையன்கொடுஞ்சிலைவிற்காமன்
விளிந்தானடங்கவீந்தெய்தச்செற்றான்
தெளிந்தார்மறையோர்திருப்பறியலூரில்
மிளிர்ந்தார்மலர்ச்சோலைவீரட்டத்தானே. 3

*குளிர்ந்து ஆர் சடையன், கொடுஞ்சிலை வில் காமன்*
*விளிந்தான் அடங்க வீந்து எய்தச் செற்றான் -*
*தெளிந்தார் மறையோர் திருப் பறியலூரில்,*
*மிளிர்ந்து ஆர் மலர்ச்சோலை வீரட்டத்தானே.*

kuLirntu Ar caTaiyan2, koTunjcilai vil kAman2
viLintAn2 aTagka vIntu eytac ceRRAn2--
teLintAr maRaiyOr tirup paRiyalUril,
miLirntu Ar malarccOlai vIraTTattAn2E.

**பொருள்:** அறிவில் தெளிந்த அந்தணர்கள் சான்றோர்கள் வாழும் மலர்ச் சோலைகளால் சூழப்பட்ட திருப்பறியலூரில் விளங்கும் வீரட்டானத்து இறைவன் சிவபெருமான் ஆவான். இப்பெருமான் குளிர்ச்சியான சடைமுடியை உடையவர். மன்மதன் தனது மலர் வில்லை வளைத்து சிவபெருமான் மீது மலர்க்கணை தொடுத்தபோது அவனை எரித்து இறந்து போகச் செய்தவர். பின்னர் இரதிதேவி வேண்டுதல் செய்ய அவனை அவள் கண்ணிற்கு மட்டும் காணும்படியாகத் தோற்றுவித்தவர்.

**குறிப்புரை:** கொடுஞ்சிலை – வளைந்த வில். விளிந்தான் – இறந்தான். வீந்து எய்த – இறந்து பின்னரும் வர. செற்றான் – கொன்றவன்.

Highly knowledgeable Vedic scholars do live here in large numbers, where lush flower gardens encircle the city. Here the Lord of Veerattanam resides, whose hair is cool and matted. He burnt to death Manmathan, the god of love (cupid) who bent the (awesome) bow and shot an arrow carrying flower against Him. Later at the request of his wife Rathi Devi, got back his life visible only to his wife. Such is the greatness of the Lord who resides in this town.

பிறப்பாதியில்லான்பிறப்பார்பிறப்புச்
செறப்பாதியந்தஞ்செலச்செய்யுதேசன்
சிறப்பாடுடையார்திருப்பறியலூரில்
விறற்பாரிடஞ்சூழவீரட்டத்தானே. 4

*பிறப்பு ஆதி இல்லான், பிறப்பார் பிறப்புச்*
*செறப்பு ஆதி அந்தம் செலச் செய்யும் தேசன் -*
*சிறப்பாடு உடையார் திருப் பறியலூரில்*
*விறல் பாரிடம் சூழ, வீரட்டத்தானே.*

piRappu Ati illAn2, piRappAr piRappuc
ceRappu Ati antam celac ceyyum tEcan2--
ciRappATu uTaiyAr tirup paRiyalUril,
viRal pAriTam cUza, vIraTTattAn2E.

***பொருள்:*** சிறப்புடைய பெருமக்கள் வாழ்கின்ற திருப்பறியலூரில் வலிமை பொருந்திய பூதகணங்கள் சூழ வீரட்டானத்து இறைவனான சிவபெருமான் விளங்குகின்றார். இப்பெருமான் பிறப்பும் இறப்பும் இல்லாதவர். இப்பெருமான் இவ்வுலகில் பிறவி எடுக்கும் உயிர்கள் அடையும் பிறப்புக்கும், பின் முத்திப்பேறு என்ற சிறப்புக்கும் முதலும் முடிவும் காணச் செய்யும் ஒளிவடிவினனாக விளங்குகின்றார்.

***குறிப்புரை:*** பிறப்பாதி எனவே இறப்புமில்லான் என்பதுணர்த்தியவாறு. பிறப்பார் பிறப்பு செறுப்பு ஆதி அந்தம் செலச் செய்யுந்தேசன் – பிறவியெடுக்கும் உயிர்கள் எய்தும் பிறப்பிற்கும் சிறப்பிற்கும் முதலும் முடிவும் அடையச் செய்யும் ஒளிவடிவானவன். சிறப்பாடு – சிறப்பு. பாடு தொழிற்பெயர் விகுதி. விறல் பாரிடம் – வலிய பூதகணம்.

In the city of Thiru-p-pariyaloor-veerattam very famous virtuous people do live in large numbers. Here the mighty hosts of goblins form a guard around Lord Civan,

who is the Lord of Veerattanam. He has no birth and death. He is the cause for the birth and sustenance of all the souls in this world. In the form of Light He graces the beginning and end of all souls.

கரிந்தாரிடுகாட்டிலாடுங்கபாலி
புரிந்தார்படுதம்புறங்காட்டிலாடும்
தெரிந்தார்மறையோர்திருப்பறியலூரில்
விரிந்தார்மலர்ச்சோலைவீரட்டத்தானே. 5

*கரிந்தார் இடுகாட்டில் ஆடும் கபாலி,*
*புரிந்தார் படுதம் புறங்காட்டில் ஆடும் -*
*தெரிந்தார் மறையோர் திருப் பறியலூரில்,*
*விரிந்தார் மலர்ச்சோலை வீரட்டத்தானே.*

karintAr iTukATTil ATum kapAli,
purintAr paTutam puRagkATTil ATum--
terintAr maRaiyOr tirup paRiyalUril,
virintu Ar malarccOlai vIraTTattAn2E.

***பொருள்:*** வேதங்களையும் அதன் உட்பொருளையும் ஆராய்ந்து அறிந்த மறையவர்கள் வாழும் விரிந்த மலர்ச் சோலைகள் உள்ள திருப்பறியலூரில் விளங்கும் வீரட்டானத்து இறைவன் சிவபெருமான் ஆகும். இப்பெருமான் இறந்தவர்களைக் கரிந்தவர்களாக எரிக்கும் இடுகாட்டில் கபாலத்தைக் கையில் ஏந்தி ஆடுபவர்.

***குறிப்புரை:*** கரிந்தார் – இறந்தவர். புரிந்தார் – வினைகளைப் புரிந்தவர். படுதம் – கூத்துவகை. அக்கூத்தினைச் சுடுகாட்டில் விரும்பி ஆடுபவன். புறங்காடு – சுடுகாடு. தெரிந்து ஆர் மறையோர் – ஆராய்ந்தறிந்த அந்தணர்.

Scholars who have studied and mastered all the four Vedas do live in large numbers of Thiru-p-pariyaloor-veerattam. Fully blossomed flowers are many in the groves which encircle the city. This mighty Lord Civa who did one of His eight exploits in this town carries a skull in His hand and dances in the burning ground where the dead are burnt to convert them into ashes.

அரவுற்றநாணாஅனலம்பதாகச்
செருவுற்றவர்புரந்தீயெழச்செற்றான்
தெருவிற்கொடிசூழ்திருப்பறியலூரில்
வெருவுற்றவர்தொழும்வீரட்டத்தானே. 6

அரவு உற்ற நாணா, அனல் அம்புஅது ஆக,
செருஉற்றவர் புரம் தீ எழச் செற்றான் -
தெருவில் கொடி சூழ் திருப் பறியலூரில்,
வெருஉற்றவர் தொழும் வீரட்டத்தானே.

aravu uRRa nANA, an2al ampu atu Aka,
ceru uRRavar puram tI ezac ceRRAn2--
teruvil koTi cUz tirup paRiyalUril,
veru uRRavar tozum vIraTTattAn2E.

**பொருள்:** தெருக்களில் தோரணங்களால் அலங்கரிக்கப்பட்ட திருப்பறியலூரில் விளங்கும் வீரட்டானத்து இறைவன் சிவபெருமான் ஆவான். இப்பெருமானைப் பிறவிப் பிணிக்கு அஞ்சுபவர்கள் தொழுகின்றனர். இப்பெருமான் வாசுகி என்னும் பாம்பை நாணாக இணைத்து அனலை அம்பாகக் கொண்டு தன்னுடன் போர்புரிந்த முப்புரத்து அசுரர்களைத் தீ எழுமாறு செய்து அழித்தவன்.

**குறிப்புரை:** அரவு உற்ற நாணா(க) அனல் அம்பு அது ஆக செரு உற்றவர் புரம் தீ எழச் செற்றான் எனப்பிரிக்க. செரு – போர். வெருவுற்றவர் – அஞ்சியவர்.

Flag posts are fixed all over the city of Thiru-p-pariyaloor-veerattam. Into this city, devotees who are afraid of their ailments go and worship Lord Civan enshrined in the temple of this town. Holding the Mēru mountain as His bow, Civa used the snake Vaasuki as the bowstring, and Agni, i.e., fire as its arrow, shot at the three fortresses and destroyed them by fire, which belonged to the hostile Asuraas who fought against Him.

நரையார்விடையான்நலங்கொள்பெருமான்
அரையாரரவமழகாஅசைத்தான்
திரையார்புனல்சூழ்திருப்பறியலூரில்
விரையார்மலர்ச்சோலைவீரட்டத்தானே. 7

நரை ஆர் விடையான், நலம் கொள் பெருமான்,
அரைஆர் அரவம் அழகா அசைத்தான் -
திரை ஆர் புனல் சூழ் திருப் பறியலூரில்,
விரை ஆர் மலர்ச்சோலை வீரட்டத்தானே.

narai Ar viTaiyAn2, nalam koL perumAn2,
arai Ar aravam azakA acaittAn2--
tirai Ar pun2al cUz tirup paRiyalUril,
virai Ar malarccOlai vIraTTattAn2E.

**பொருள்:** அலைகளை உடைய நீர்நிலைகளால் சூழப்பட்டதும் மணம் பொருந்திய மலர்ச் சோலைகளை உடையதுமான திருப்பறியலூரில் விளங்கும் வீரட்டானத்து இறைவன், சிவபெருமான் ஆவான். இப்பெருமான் வெண்மை நிறம் பொருந்திய விடையேற்றை உடையவன். அடியவர்களுக்கு நலன்களையே அருள்புரியும் பெருமான். அரவத்தை அரையில் அழகாகக் கட்டியிருப்பவன்.

**குறிப்புரை:** நரை – வெண்மை.

The city of Thiru-p-pariyaloor-veerattam has many watersheds where waves are roaring loud. Also the city is enclosed by groves full of fragrant flowers. This Civan owns a white coloured bull as His transport vehicle. He is the Lord of all good deeds. He wears a snake in His waist as His corset which looks good and impressive.

வளைக்கும்மெயிற்றின்னரக்கன்வரைக்கீழ்
இளைக்கும்படிதானிருந்தேழையன்னம்
திளைக்கும்படுகர்த்திருப்பறியலூரில்
விளைக்கும்வயல்சூழ்ந்தவீரட்டத்தானே. 8

வளைக்கும் எயிற்றின் அரக்கன் வரைக்கீழ்
இளைக்கும்படி தான் இருந்து, ஏழைஅன்னம்
திளைக்கும் படுகர்த் திருப் பறியலூரில்
விளைக்கும் வயல் சூழ்ந்த வீரட்டத்தானே.

vaLaikkum eyiRRin2 arakkan2 varaikkIz
iLaikkumpaTi tAn2 iruntu, Ezai an2n2am
tiLaikkum paTukart tirup paRiyalUril,
viLaikkum vayal cUznta vIraTTattAn2E.

**பொருள்:** பெண் அன்னங்கள் ஆண் அன்னங்களோடு கூடித் திளைக்கும் ஆழமான ஆற்றுப் படுக்கைகளை உடையதும், மிகுதியான நெல் விளைச்சலைத் தரும் வயல்களால் சூழப்பட்டு விளங்குவதுமான வீரட்டானத்து இறைவன் சிவபெருமான். இப்பெருமான் வளைந்ததும் கூரியதுமான பற்களை உடைய இராவணனைக் கயிலை மலையின் கீழ் அகப்படுத்தி அவன் தன் வலிமை குன்றிப் போகுமாறு தமது கால்விரலால் அடர்த்தவர்.

**குறிப்புரை:** வளைக்கும் எயிறு – கோரப்பல். அரக்கன் என்றது இராவணனை, ஏழை அன்னம் திளைக்கும் படுகர் – பெண்ணன்னம் புணரும் ஆற்றுப்படுகர்.

In the city of Thiru-p-pariyaloor-veerattam very deep ponds exist, where the female swans join with their male ones and enjoy life. Rich paddy fields having a very high yield of paddy are to be found all over the city. Lord Civan of this town (one of His eight exploits took in this town) crushed Raavanan who was lying beneath mount Kailas, by pressing the top of this mountain with His toe. His curved tooth was crushed and his valour reduced. Such is the greatness (wise) of Lord Civan of this place.

வளங்கொள்மலர்மேலயன்ஓதவண்ணன்
துளங்கும்மனத்தார்தொழத்தழலாய்நின்றான்
இளங்கொம்பனாளோடிணைந்தும்பிணைந்தும்
விளங்குந்திருப்பறியல்வீரட்டத்தானே. 9

வளம் கொள் மலர்மேல் அயன், ஓதவண்ணன்,
துளங்கும் மனத்தார் தொழ, தழல்ஆய் நின்றான் -
இளங்கொம்பு அனாளோடு இணைந்தும் பிணைந்தும்
விளங்கும் திருப் பறியல் வீரட்டத்தானே.

vaLam koL malarmEl ayan2, OtavaNNan2,
tuLagkum man2attAr toza, tazal Ay nin2RAn2--
iLagkompu an2ALOTu iNaintum piNaintum
viLagkum tirup paRiyal vIraTTattAn2E.

**பொருள்:** இளம்பூங்கொம்பு அனையாள் என்னும் திருநாமம் தாங்கிய உமையம்மையுடன் இணைந்தும், கூறுடைய அர்த்த நாரியாய்ப் பிணைந்தும் திருப்பறியலூரில் விளங்கும் வீரட்டானத்து இறைவன் சிவபெருமான் ஆவான். இப்பெருமான், ஒளிவிளங்கும் தாமரை மலர்மேல் உறையும் பிரமனும் கடல் வண்ணனாகிய திருமாலும் அச்சத்தால் நடுங்கும் மனத்தை உடையவராகத் தம்மைப் பணிந்து தொழுதபோது தழல் உருவாக ஓங்கி நின்றான்.

**குறிப்புரை:** விளங்கு ஒண்மலர் – விளங்குகின்ற ஒளிபொருந்திய தாமரை மலர், ஓதவண்ணன் – கடல்வண்ணனாகிய திருமால். துளங்கும் – நடுங்கும். மனத்தார் என்றது அயனையும் மாலையும் இணைந்து – ஒரு திருமேனிக் கண்ணே ஒன்றாய், பிணைந்து – இடப்பாகத்து உடனாய்க்கூடி.

Young flowering creeper like Umaa Devi, consort of Civan joined hands with Him and got seated on the left half of His body. Brahma seated on the bright shining lotus flower, and Thirumaal in his reclining posture on the sea - both were terrified and with shivering mind worshipped Civan even as He stood as a big and tall flame of fire.

சடையன்பிறையன்சமண்சாக்கியரோ
டடையன்பிலாதானடியார்பெருமான்
உடையன்புலியினுரிதோலரைமேல்
விடையன்திருப்பறியல்வீரட்டத்தானே. 10

*சடையன்; பிறையன்; சமண்சாக்கியரோடு*
*அடை அன்பு இலாதான்; அடியார்பெருமான்;*
*உடையன்; புலியின்உரி-தோல் அரைமேல்;*
*விடையன் - திருப் பறியல்வீரட்டத்தானே.*

caTaiyan2; piRaiyan2; camaN cAkkiyarOTu
aTai an2pu ilAtAn2; aTiyAr perumAn2;
uTaiyan2, puliyin2 uri-tOl araimEl;
viTaiyan2--tirup paRiyal vIraTTattAn2E.

**பொருள்:** புலியின் தோலை அரையில் உடையாகக் கொண்டவன். விடையேற்றை உடையவன். சடையில் பிறை அணிந்தவன். இப்பெருமான் திருப்பறியலூரில் விளங்கும் வீரட்டானத்து சிவபெருமான் ஆவான். சமணர், சாக்கியர் ஆகியோருக்கு அருள்புரிதற்குரிய அன்பிலாதவன் தம்மை அன்புடன் வணங்கும் அடியவர்களுக்கு அருள் புரிபவன்.

**குறிப்புரை:** சமண் சாக்கியரோடு அடைதற்கு அன்பிலாதான் என்க. பெருமான் – பெருமகன் என்பதன் திரிபு. புலியின் உரிதோல் அரைமேல் உடையன் எனக்கூட்டுக.

Civan residing in Thiru-p-pariyaloor-veerattam sustains the crescent moon in His matted hair. He has no love for the Samanars and Buddhists for they fail to glorify Him. He wears the tiger skin hide on His waist. He uses the bull for His travels.

நறுநீருகுங்காழிஞானசம்பந்தன்
வெறிநீர்த்திருப்பறியல்வீரட்டத்தானைப்
பொறிநீடரவன்புனைபாடல்வல்லார்க்
கறுநீடவலமறும்பிறப்புத்தானே. 11

நறு நீர் உகும் காழி ஞானசம்பந்தன்,
வெறிநீர்த் திருப் பறியல்வீரட்டத்தானைப்,
பொறி நீடு அரவன், புனை பாடல் வல்லார்க்கு
அறும், நீடு அவலம்; அறும் பிறப்புத்தானே.

naRu nIr ukum kAzi njAn2acampantan2,
veRi nIrt tirup paRiyal vIraTTattAn2ai,
poRi nITu aravan2, pun2ai pATal vallArkku
aRum, nITu avalam; aRum, piRapputtAn2E.

**பொருள்:** நல்ல நீர் பாய்கின்ற சீகாழிப் பதியில் தோன்றிய ஞானசம்பந்தன் மணம் மிகுந்த நீர்வளம் உடைய திருப்பறியலூரில் விளங்கும் வீரட்டானத்து இறைவனான, அரவம் தரித்த சிவபெருமானைப் போற்றிப் பாடினார். இவர் புனைந்து பாடிய இப்பதிகப் பாடல்கள் பத்தையும் பாட வல்லவர்க்கு பெரிய துன்பங்கள் எல்லாம் நீங்கிவிடும். பிறப்பற்ற நிலையையும் எய்திவிடுவர்.

**குறிப்புரை:** நறுநீர் – நல்லநீர். வெறிநீர் – மணம் பொருந்திய தேன். நீடவல்ல மறுபிறப்பும் அறும் எனக்கூட்டுக.

Gnaanasambandan was born in Seekaazhi where pure and clear water flows everywhere in plenty. He sang on Lord Civan of Thiru-p-pariyaloor-veerattam where watersheds full of fragrant flowers flourish. Civan of this town wears the long dotted snake in His body. Those who can sing this hymn as composed by Gnaanasambandan adoring Lord Civan of Thiru-p-pariyaloor-veerattam will get rid of their afflictions. Also their cycle of rebirth will come to an end.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*134ஆம் பதிகம் முற்றிற்று*
End of 134th Hymn

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# 135. திருப் பராய்த் துறை

## திருத்தல வரலாறு:

திருப்பராய்த்துறை சோழ நாட்டுக் காவிரித் தென்கரைத் தலம். திருச்சிராப்பள்ளியில் இருந்து குளித்தலை செல்லும் பேருந்து வழியில் உள்ளது. இத்தலம் இந்திரன், குபேரன், சப்தரிஷிகள் இவர்களால் பூசிக்கப் பெற்றது. அகண்ட காவிரித் துறையில் உள்ளது. இதனை அப்பர் சுவாமிகள் 'பரக்குநீர்ப் பொன்னி மன்னுபராய்த்துறை' என்று அருளுவார்கள். இறைவன் பெயர் பராய்த்துறை நாதர். தேவியார் பெயர் மயிலம்மையார். தீர்த்தம் காவிரி. விருட்சம் பராய் (Paper Tree). விருட்சத்தினால் இத்தலத்திற்குப் இப்பெயராயிற்று. திருச்சி – ஈரோடு இரயில் பாதையில் இரயில் நிலையம் உள்ளது.

## கல்வெட்டு:

மதுரை கொண்ட கோப்பரகேசரி வர்மரான முதற்பராந்தகன் காலத்திய கல்வெட்டுக்கள் மிகுதியாக உள்ளன. இன்னாரது என்றறிய முடியாத இராஜகேசரி வர்மன் காலத்திய கல்வெட்டுக்களும் சில உள்ளன. அவையன்றிச் சுந்தரபாண்டியத் தேவர், கோநேரின்மை கொண்டான், கிருஷ்ணதேவ மகாராயர் கல்வெட்டுக்களும் இன்னாரென்று அறியமுடியாத சில கல்வெட்டுக்களும் உள்ளன. எல்லாமாக அரசியலார் படியெடுத்த கல்வெட்டுக்கள் 83. அவற்றால் அறியப்படும் கோயிலைப் பற்றிய உண்மைகள். கோயிலுக்கு விளக்கு எரிக்க ஆடும், பொன்னும், நிலமும் அளித்த செய்திகளாகும். சுந்தர பாண்டியத் தேவன் தன்னுடைய ஆட்சி ஒன்பதாம் ஆண்டில் தங்க ஆபரணங்கள் அளித்தான். குலோத்துங்கன் கருப்பக்கிருகத்துக்குப் பொன் வேய்ந்தான். சோமாஸ்கந்தர் கோயில் முன் மண்டபம், சிறைமீட்டான் திரிவிக்ரம உதயனால் கட்டப்பெற்றது. தல விநாயகருக்கு ஏகாம்பர உதயன் ஆட்சியில் நிலம் வழங்கப்பட்டது. இறைவன் திருப்பராய்த் துறை மகாதேவர், பராய்த்துறை பரமேசுவரன் என்று வழங்கப் பெறுகிறார். இத்தலம் உத்தமசீலிச்சதுர்வேதி மங்கலத்துத் திருப்பராயத்துறை என்று குறிக்கப்படுகிறது. இங்கே தக்ஷிணாயன புண்ணிய காலத்திலும் சங்கராந்தியிலும் நீராட்டு விழா நடைபெற்றதாகத் தெரிகின்றது.

**பதிக வரலாறு:**

திருக்கருவூர் ஆனிலையைப் போற்றி, திருஞான சம்பந்தப் பிள்ளையார் திருப்பராய்த் துறையை அடைந்தார்கள். அங்கே நெற்றித் தனிக்கண்ணர் கோயிலை நண்ணிக் கும்பிட்டுக் கோதில் தமிழ்ச்சொல் மாலையாகிய நீறு சேர்வதோர் என்னும் இப்பதிகத்தை அருளிச் செய்தார்கள்.

## 135. TIRU-P-PARAAI-TH-THURAI

**HISTORY OF THE PLACE**

This sacred place is to the south of river Cauvery in Chola Naadu. It is on the bus route from Thiruchchiraappalli to Kuliththalai. There is also a railway station for this place on the Thiruchchi - Erode railway line. It is on the banks of the undivided expanse of the Cauvery river. Saint Appar Suvaami has called this place, 'parakku neerp ponni mannu parAittuRai' (Paraaiththurai on the enduring river Cauvery of expanse of waters).

God is known as Paraaiththurainaathar and the Goddess as Mayilammaiyaar. The sacred ford is river Cauvery. The sacred tree is Paraai (Paper Tree), after which the place is named. Indhiran, Kuberan and Seven Sages offered worship here.

There are 83 inscriptions here pertaining to kings of the Chola and Paandiya dynasties as also from Krishnadheva Maharaayar. Most of them give information on grants of sheep, gold and land for lamps.

Sundhara Paandiya Thevan donated gold ornaments, Kuloththungkan had the roof paved with gold. Siraimeettaan Thirivikkirama Udhayan built the mandapam in front of the Somaskandhar shrine. During the reign of Ekaambara Udhayan, land was gifted for the Vinaayaka shrine of the temple. It appears that bathing festivals were held here on two occasions: one at Sankaraanthi and the other at Dakshinaayana Punniya Kaalam.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 135. திருப்பராய்த்துறை 135. TIRU-P-PARAAI-TH-THURAI

பண் : மேகராகக்குறிஞ்சி
ராகம் : நீலாம்பரி

*Pann: Mēgaraaga-k-kurinji*
*Raagam : Neelaambari*

நீறுசேர்வதொர்மேனியர்நேரிழை
கூறுசேர்வதொர்கோலமாய்ப்
பாறுசேர்தலைக்கையர்பராய்த்துறை
ஆறுசேர்சடைஅண்ணலே. 1

நீறு சேர்வது ஓர் மேனியர், நேரிழை
கூறு சேர்வது ஓர் கோலம்ஆய்ப்,
பாறு சேர் தலைக் கையர் - பராய்த்துறை
ஆறு சேர் சடை அண்ணலே.

nIRu cErvatu or mEn2iyar, nErizai
kURu cErvatu or kOlam Ay,
pARu cEr talaik kaiyar--parAyttuRai
ARu cEr caTai aNNalE.

**பொருள்:** சிவபெருமான் கங்கையை சடையில் அணிந்தவராகவும், திருநீற்றை அணிந்த திருமேனியராகவும், உமையம்மையை ஒரு பாகமாகக் கொண்டவராகவும், திருப்பராய்த் துறையில் விளங்குகின்றார். இப்பெருமான் தமது கையில் பருந்துகள் தொடரத்தக்கதாய்ப் புலால் நாற்றம் கொண்ட பிரமனது தலையோட்டை வைத்திருக்கின்றார்.

**குறிப்புரை:** இப்பதிகம், திருப்பராய்த்துறைசேர் அண்ணல் நீறணிந்தவர், நேரிழை வைத்தவர், கொன்றை அணிந்தவர், வேதர், வேதம் விரித்தவர் என அவரது பல இயல்புகளை எடுத்து விளங்குவது. கூறு – மேனியில் ஒருபாதி. பாறு – பருந்து.

Lord Civan who is entempled in Tiru-p-paraai-th-thurai entertains the river Ganges on His matted hair. He smears His body with holy ashes. His appearance is unique with Umaa Devi on His left. He holds in His hand Brahma's skull which attracts kites due to the smell of flesh sticking on to the skull.

கந்தமாமலர்க்கொன்றைகமழ்சடை
வந்தபூம்புனல்வைத்தவர்
பைந்தண்மாதவிசூழ்ந்தபராய்த்துறை
அந்தமில்லஅடிகளே. 2

கந்தம் ஆம் மலர்க்கொன்றை, கமழ் சடை,
வந்த பூம்புனல், வைத்தவர் -
பைந்தண் மாதவி சூழ்ந்த பராய்த்துறை
அந்தம் இல்ல அடிகளே.

kantam Am malarkkon2Rai, kamaz caTai,
vanta pUmpun2al, vaittavar--
paintaN mAtavi cUznta parAyttuRai
antam illa aTikaLE.

**பொருள்:** பசுமையான குளிர்ந்த குருக்கத்திக் கொடிகள் சூழ்ந்த திருப்பராய்த்துறையில் விளங்கும் அழிவற்றவராகிய இறைவர், மணங்கமழும் சிறந்த மலர்களும், கொன்றையும் மணக்கும் சடைமுடியின்மேல் பெருக்கெடுத்து வந்த கங்கை நதியை வைத்துள்ளவர்.

**குறிப்புரை:** அந்தமில்ல அடிகள் – தாம் எல்லாவற்றிற்கும் அந்த மாதலேயன்றித் தமக்கு அந்தம் இல்லாத அடிகள்.

Lord Civan of endless existence resides in Tiru-p-paraai-th-thurai. This town is encircled by green cool creepers known as common delight of the woods (குருக்கத்தி அல்லது மாதவி). He wears in His matted hair many kinds of excellent and fragrant flowers as well cassia flowers. In the same hair He sustains the river Ganges which was gushing down in torrential flow.

வேதர்வேதமெல்லாமுறையால்விரித்
தோதநின்றவொருவனார்
பாதிபெண்ணுருவாவர்பராய்த்துறை
ஆதியாயஅடிகளே. 3

வேதர் வேதம்எல்லாம் முறையால் விரித்து
ஓத நின்ற ஒருவனார்;
பாதி பெண்உரு ஆவர் - பராய்த்துறை
ஆதி ஆய அடிகளே.

vEtar vEtam ellAm muRaiyAl virittu
Ota nin2Ra oruvan2Ar;
pAti peN uru Avar--parAyttuRai
Ati Aya aTikaLE.

***பொருள்:*** திருப்பராய்த்துறையில் எல்லா உலகங்களுக்கும் ஆதியாக விளங்குபவராய் எழுந்தருளியுள்ள இறைவர், வேதங்களை அருளிச் செய்தவர். எல்லா வேதங்களையும் முறையாக விரித்துப் பொருள் விளக்கம் அருளிய ஒப்பற்றவர். தம் திருமேனியில் பாதிப் பெண்ணுருவாக விளங்குபவர்.

***குறிப்புரை:*** முறையால் விரித்து – இன்னவேதத்தின்பின் இன்னது என முறைப்படி விரித்து.

Lord Civan is enshrined in Tiru-p-paraai-th-thurai and is the origin of all the world. He composed all the four Vedas. Also He is the unique God who explained the right commentary to all the above Vedas. He appears with His consort Umaa Devi on the left half of His body.

தோலுந்தம்மரையாடைசுடர்விடு
நூலுந்தாமணிமார்பினர்
பாலுநெய்பயின்றாடுபராய்த்துறை
ஆலநீழலடிகளே. 4

**தோலும் தம் அரை ஆடை, சுடர்விடு**
**நூலும் தாம் அணி மார்பினர் -**
**பாலும் நெய் பயின்று ஆடு, பராய்த்துறை**
**ஆலநீழல் அடிகளே.**

tOlum tam arai ATai, cuTarviTu
nUlum tAm aNi mArpin2ar--
pAlum ney payin2Ru ATu, parAyttuRai,
Ala nIzal aTikaLE.

***பொருள்:*** திருப்பராய்த்துறையில் ஆலநீழலில் எழுந்தருளிப் பால், நெய் முதலியவற்றை விரும்பி ஆடும் இறைவர், புலித்தோலைத் தம் இடையிலே ஆடையாக உடுத்தவர். ஒளி பொருந்திய பூணூல் அணிந்த மார்பினை உடையவர்.

**குறிப்புரை:** தோல் – புலித்தோல்.

Lord Civan is seated in the shadow of a big banyan tree in Tiru-p-paraai-th-thurai. He likes to be anointed with milk and ghee besides the usual water. He wears the tiger hide in His waist as His apparel. He wears the bright sacred thread on His chest.

விரவிநீறுமெய்பூசுவர்மேனிமேல்
இரவில்நின்றெரியாடுவர்
பரவினாரவர்வேதம்பராய்த்துறை
அரவமார்த்தஅடிகளே. 5

விரவி நீறு மெய் பூசுவர், மேனிமேல்;
இரவில் நின்று எரிஆடுவர்;
பரவினார்அவர் வேதம் - பராய்த்துறை
அரவம் ஆர்த்த அடிகளே.

viravi nIRu mey pUcuvar, mEn2imEl;
iravil nin2Ru eri ATuvar;
paravin2Ar avar vEtam--parAyttuRai
aravam Artta aTikaLE.

**பொருள்:** திருப்பராய்த்துறையில் பாம்பை இடையில் கட்டியவராய் விளங்கும் பரமர். திருநீற்றைத் தம் மேனிமேல் விரவப் பூசியவர். நள்ளிரவில் சுடுகாட்டுள் நின்று எரி ஆடுபவர். வேதங்களால் பரவப் பெற்றவர்.

**குறிப்புரை:** அவர் வேதம் பரவினார் – அவர் வேதங்களாற் பரவப் பெற்றவர்.

Lord Civan is enshrined in Tiru-p-paraai-th-thurai and wears a snake in His waist to tighten His dress. He smears His body with holy ashes all over. In the midnight He dances in the burning ground holding fire in His head. He is worshipped by all the four Vedas.

மறையுமோதுவர்மான்மறிக்கையினர்
கறைகொள்கண்டமுடையவர்
பறையுஞ்சங்குமொலிசெய்பராய்த்துறை
அறையநின்றஅடிகளே. 6

மறையும் ஓதுவர்; மான்மறிக் கையினர்;
கறை கொள் கண்டம் உடையவர் -
பறையும் சங்கும் ஒலிசெய் பராய்த்துறை
அறைய நின்ற அடிகளே.

maRaiyum Otuvar; mAn2maRik kaiyin2ar;
kaRai koL kaNTam uTaiyavar--
paRaiyum cagkum olicey parAyttuRai
aRaiya nin2Ra aTikaLE.

**பொருள்:** பறை, சங்கு முதலியன முழங்கும் திருவிழாக்கள் நிகழும் திருப்பராய்த்துறையில் எல்லோரும் புகழ்ந்து போற்ற எழுந்தருளிய இறைவர், வேதங்களை ஓதுபவர், மான் கன்றைக் கையின்கண் உடையவர், விடக்கறை கொண்ட கண்டத்தை உடையவர்.

***குறிப்புரை:*** மறி – குட்டி. கறை – விடம்.

Lord Civan who is entempled in Tiru-p-paraai-th-thurai is adorned, praised and worshipped by all people in this town. He chants the Vedas. He holds in one of His hands a young deer. His neck looks dark blue in colour because of the venom He positioned in His throat.

விடையுமேறுவர்வெண்பொடிப்பூசுவர்
சடையிற்கங்கைதரித்தவர்
படைகொள்வெண்மழுவாளர்பராய்த்துறை
அடையநின்றஅடிகளே. 7

விடையும் ஏறுவர்; வெண்பொடிப் பூசுவர்;
சடையில் கங்கை தரித்தவர்;
படை கொள் வெண்மழுவாளர் - பராய்த்துறை
அடைய நின்றஅடிகளே.

viTaiyum ERuvar; veNpoTip pUcuvar;
caTaiyil kagkai tarittavar;
paTai koL veNmazuvALar--parAyttuRai
aTaiya nin2Ra aTikaLE.

**பொருள்:** திருப்பராய்த்துறையில் பொருந்தி விளங்கும் இறைவர், விடையேற்றினை ஊர்ந்து வருபவர். வெண்மையான திருநீற்றைப் பூசுபவர். சடையின்மேல் கங்கையைத் தரித்தவர். வெண்மையான மழுவைப் படைக்கருவியாகக் கொண்டவர்.

**குறிப்புரை:** அடைய – எங்குமாய். பொருந்த என்றும் ஆம்.

Lord Civan who is enshrined in the temple of Tiru-p-paraai-th-thurai moves about in His bull vehicle. He smears His body with holy ashes. He sustains the river Ganges in His matted hair. He holds in one of His hands the battle axe as His war weapon.

தருக்கின்மிக்கதசக்கிரிவன்றனை
நெருக்கினார்விரலொன்றினால்
பருக்கினாரவர்போலும்பராய்த்துறை
அரக்கன்றன்னைஅடிகளே. 8

*தருக்கின் மிக்க தசக்கிரிவன் தனை*
*நெருக்கினார், விரல்ஒன்றினால்;*
*பருக்கினார்அவர்போலும் - பராய்த்துறை -*
*அரக்கன் தன்னை, அடிகளே.*

tarukkin2 mikka tacakkirivan2 tan2ai
nerukkin2Ar, viral on2Rin2Al;
parukkin2Ar avar pOlum--parAyttuRai--
arukkan2 tan2n2ai, aTikaLE.

**பொருள்:** திருப்பராய்த்துறையில் எழுந்தருளிய இறைவர், வலிமைமிக்க பத்துத் தலைகளை உடைய இராவணனைத் தம் கால் விரல் ஒன்றினால் நெரித்தவர். தக்கன் வேள்வியில் கதிரவனின் பற்களைத் தகர்த்தவர்.

**குறிப்புரை:** தசக்கிரிவன் – இராவணன்.

Lord Civan entempled in Tiru-p-paraai-th-thurai crushed the valorous Raavanan's ten heads by one of the fingers of his leg (toe). In Thakkan's sacrificial ceremony He got the teeth of the sun god broken through His commander Veerabadran.

**Note:** Lord Civan did not break the teeth of the sun god. Under His command His aide Verabadra went to Thakkan's sacrificial hall and destroyed many things. At that time Veerabadra broke the teeth of the sun god.

நாற்றமாமலரானொடுமாலுமாய்த்
தோற்றமும்மறியாதவர்
பாற்றினார்வினையானபராய்த்துறை
ஆற்றல்மிக்கஅடிகளே. 9

நாற்றமாமலரானொடு மாலும்ஆய்த்
தோற்றமும் அறியாதவர்;
பாற்றினார், வினைஆன; - பராய்த்துறை
ஆற்றல் மிக்க அடிகளே.

nARRa mAmalarAn2oTu mAlum Ayt
tORRamum aRiyAtavar;
pARRin2Ar, vin2ai An2a;--parAyttuRai
ARRal mikka aTikaLE.

**பொருள்:** திருப்பராய்த்துறையில் ஆற்றல் மிக்கவராய் விளங்கும் அடிகள், மணம் பொருந்திய தாமரை மலரில் விளங்கும் பிரமன், திருமால் ஆகியோரால் அடிமுடி அறியப் பெறாத தோற்றத்தினை உடையவர். தம்மை வழிபடுபவர்களின் வினைகளைப் போக்குபவர்.

**குறிப்புரை:** நாற்றம் – மணம். பாற்றினார் – சிதற அடித்தார்.

Lord Civan the hero who is enshrined in Tiru-p-paraai-th-thurai took a special post of a tall flame of fire. Brahma who is seated in the fragrant smelling lotus flower and Thirumaal could not discern the head and foot of Him in the special pose. Civa of this town annuls the karma of His devotees.

**Note:** Karma is the accumulated result of deeds done in former births. There are two kinds of karma - one is bad action and the other is good action (தீவினை - நல்வினை).

திருவிலிச்சிலதேரமணாதர்கள்
உருவிலாவுரைகொள்ளேலும்
பருவிலாலெயிலெய்துபராய்த்துறை
மருவினான்றனைவாழ்த்துமே. 10

*திருஇலிச் சிலதேர், அமண் ஆதர்கள்,*
*உரு இலா உரை கொள்ளேலும்!*
*பரு விலால் எயில் எய்து, பராய்த்துறை*
*மருவினான் தனை வாழ்த்துமே!*

tiru ilic cilatEr, amaN AtarkaL,
uru ilA urai koLLElum!
paru vilAl eyil eytu, parAyttuRai
maruvin2An2 tan2ai vAzttumE!

**பொருள்:** புண்ணியமில்லாத சிலராகிய புத்தர்களும், சமணர்களாகிய கீழ்மக்களும், கூறும் பொருளற்ற அறவுரைகளைக் கேளாதீர். பெரிய மேருமலையாகிய வில்லால் முப்புரங்களை எய்தழித்து உலகைக் காத்துத் திருப்பராய்த்துறையில் எழுந்தருளி இருக்கும் இறைவனை வாழ்த்துவீர்களாக.

**குறிப்புரை:** திரு – சிவஞானம். தேரர் – புத்த சமயத்தினர். ஆதர் – கீழ்மக்கள். பருவில் – (மலையாகிய) பெருத்த வில். எயில் – திரிபுரம். வாழ்த்தும் – வாழ்த்துங்கள்.

Buddhists are non-virtuous. The Samanars are base people. Do not listen to the meaningless moral speeches of these two groups of people. You adore, praise and worship Lord Civan enshrined in this town who by using the big Mēru mountain as His bow, shot an arrow and destroyed the three fortresses of the Asuraas and saved the world.

செல்வமல்கியசெல்வர்பராய்த்துறைச்
செல்வமேற்சிதையாதன
செல்வன்ஞானசம்பந்தனசெந்தமிழ்
செல்வமாமிவைசெப்பவே. 11

*செல்வம் மல்கிய செல்வர் பராய்த்துறைச்*
*செல்வமேல், சிதையாதன*
*செல்வன் ஞானசம்பந்தன செந்தமிழ்,*
*செல்வம்ஆம், இவை செப்பவே.*

celvam malkiya celvar parAyttuRaic
celvarmEl, citaiyAtan2a
celvan2 njAn2acampantan2a centamiz,
celvam Am, ivai ceppavE.

**பொருள்:** செல்வங்கள் நிறைந்து விளங்கும் திருப்பராய்த் துறையில் சிவஞானச் செல்வர்கள் நிறைந்து வாழ்கின்றனர். இத்தலத்தில் வீடுபேறாகிய செல்வத்தை நல்கும் சிவபெருமான் எழுந்தருளி உள்ளார். இந்தச் செல்வப் பெருமானைப் போற்றி அருட்செல்வரான ஞானசம்பந்தன் பாடி அருளிய அழிவற்ற இந்தச் செந்தமிழ்ப் பாடல்களைப் பொருள் உணர்ந்து பாட வல்லவர்க்கு எல்லாச் செல்வங்களும் தாமாகவே வந்தடையும்.

**குறிப்புரை:** சிதையாதன செந்தமிழ் இவை செப்பச் செல்வமாம் எனக்கூட்டுக.

Scholars having spiritual wisdom as also material wealth do live in Tiru-p-paraai-th-thurai in good number. Lord Civan enshrined in this town is the repository of the ultimate salvation of all the souls. Gnaanasambandan who owns a wealth of divine grace, sang this hymn on the Lord of Tiru-p-paraai-th-thurai. Those who can recite this everlasting pure Tamil hymn will enjoy all material wealth in this world and divine grace as well.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*135ஆம் பதிகம் முற்றிற்று*
End of 135th Hymn

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# 136. திருத் தரும புரம்

## திருத்தல வரலாறு:

திருத்தருமபுரம் என்ற திருத்தலமானது சோழ நாட்டுக் காவிரித் தென்கரைத் தலம் ஆகும். காரைக்கால் – திருநள்ளாறு பேருந்து வழியில் உள்ளது. பாண்டவர்களில் தருமன் பூசித்துப் பேறு பெற்றமையின் இப்பெயர் எய்தியது. பிரமதேவரும் பூசித்துப் பேறு பெற்றுள்ளார். திருநீலகண்ட யாழ்ப்பாணரது தாயார் பிறந்த இடமாதலின் திருஞானசம்பந்தர் இங்கு எழுந்தருளியபோது, பாணரது சுற்றத்தவர்கள் இவர் யாழ்கொண்டு வாசிக்காவிடில் திருஞான சம்பந்தர் பாடல் சிறக்காது என்றனர். கேட்ட பாணர் வருந்தித் திருஞான சம்பந்தரிடம் முறையிட்டனர். அவரும் 'மாதர் மடப்பிடி' என்னும் பதிகத்தை ஓதினர். பாணனார் யாழிலிட்டு வாசிக்க இயலாமையை உறவினர்க்கு உணர்த்தினர். யாழையும் உடைக்கச் சென்றனர். திருஞான சம்பந்தர் தடுத்து, இயன்ற அளவில் வாசிக்கச் சொன்னார். இறைவன் பெயர் யாழ்மூரி நாதர். இறைவியின் பெயர் மதுரமின்னம்மை, தேனமிர்தவல்லி, சதாமதுராம்பிகை. தீர்த்தம் தர்மதீர்த்தம். தருமை ஆதீன அருளாட்சியில் விளங்குவது. இடம் காரைக்காலில் இருந்து மேற்கே 1 கி.மீ. தூரத்தில் உள்ளது. மயிலாடுதுறைக்கு அருகாமையில் உள்ள தருமை ஆதீன மடத்தின் தலைமடமும், ஞானபுரீசுவரர் திருக்கோவிலும் உள்ள 'தருமபுரம்' என்கிற தலம் வேறு. திருநள்ளாறு – காரைக்கால் பேருந்து வழியில் உள்ள திருத்தருமபுரம் என்ற ஊர் முற்றிலும் வேறு என்று உணர்க. இந்த திருத்தருமபுரம் என்ற ஊர் தான் திருநீலகண்ட யாழ்ப்பாணரின் தாயார் பிறந்த ஊர் என்பதை அறிக.

## பதிக வரலாறு:

திருவேட்டக்குடியை வணங்கிய ஆளுடைய பிள்ளையார் திருத்தருமபுரத்தை அடைந்தபோது, திருநீலகண்ட யாழ்ப்பாணரது தாய்வழிச் சுற்றத்தார் அனைவரும் அவரை எதிர்கொண்டு வணங்கினார்கள். பாணனார், சுவாமிகள் திருப்பாடல்களை யாழிலிட்டு வாசிக்கும் புண்ணியப்பேறு பொருந்தினேன் என்று புகன்றார். அவர்கள், நீர் யாழில் இட்டு வாசிப்பதால்தான் அப்பாடலின் சிறப்பு உலகத்தில் பரவுவதாயிற்று என்றார்கள். இதனைக் கேட்ட பாணர் மனம் நடுநடுங்கி அவர்கள் உண்மை உணர்ந்து உய்ய வேண்டும் என்ற திருவுள்ளத்தால் சம்பந்த

சுவாமிகளின் திருவடியை வணங்கி, யாழில் அடங்காத திருப்பதிகம் ஒன்று அருளிச் செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொண்டார்.

பிள்ளையார் மக்களது கண்டத்திலும் யாழிலும் இசைநூலில் சொல்லப்பட்ட எல்லா முயற்சியிலும் அடங்காத 'மாதர் மடப்பிடி' என்னும் இத்திருப்பதிகத்தை அருளிச் செய்தார். பாணர் இதனை யாழிலிட்டு வாசிக்கத் தொடங்கி முடியாமை கண்டு, மனம் உளைந்து, இக்கருவியன்றோ இவர்களுக்கு இத்தகைய எண்ணத்தை அளித்து என்னையும் ஈடழித்தது என, அதனை உடைக்கப்புக்கார்.

பிள்ளையார் அதனைத் தடுத்து, 'ஐயரே! சிவசக்தியின் திருவிளையாட்டெல்லாம் இக்கருவியில் அமையுமோ? முடிந்த அளவு முயறலே முறை' என்று அமைதிகூறி, யாழை அவர் கையில் தந்தார். அதனால் இப்பதிகம் யாழ்மூரியாயிற்று (மூரி – வலிமை. யாழ்மூரி யாழைக் காட்டிலும் இசை வன்மை வாய்ந்தது என்பது பொருள்).

## 136. THIRU-TH-DARUMA-PURAM

### HISTORY OF THE PLACE

This sacred place is to the south of river Cauvery in Chola Naadu and is on the bus route connecting Kaaraikkaal and Thirunallaaru. It is one km west of Kaaraikkaal. It got its name as Tharuman of the Paandavars offered worship here. Biraman also had offered worship here.

God is known as Yaazhmoorinaathar and the Goddess exists with the names Madhuraminnammai, Thenamirthavalli and Sadhaamadhuraambikai (மதுரமின்னம்மை, தேனமிர்தவல்லி, சதாமதுராம்பிகை). The sacred ford is Tharuma Theerththam.

This is the birthplace of Thiruneelakanda Yaazh-p-paanar's mother. When the saint Thiru-Gnaana-Sambandar came here, relatives of Paanar made claims that the saint's hymns will not be musically sweet unless Paanar plays the verses of Thiru-Gnaanasambandar in his instrument - Yaazh. Paanar mentally pained to hear such a statement from his relatives. He, therefore, appealed to Sambandar about the wrong misunderstanding for which he regretted. He, therefore, requested Sambandar to sing a special hymn, which could not be played in his Yaazh. Saint Thiru-Gnaana-Sambandar then sang the hymn beginning with, 'Maatar Madappidi'. Paanar demonstrated to his

relatives his inability to accompany the singing with his yaazh and was about to smash his instrument. Saint Thiru-Gnaana-Sambandar stopped Paanar from breaking his Yaazh and asked him to play it to the best of his ability.

This temple is under the spiritual administration of the holy Dharumai Aadheenam.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 136. திருத்தருமபுரம் / 136. THIRU-TH-DARUMA-PURAM

பண் : யாழ்மூரி
ராகம் :

*Pann: Yaazhmuri*
*Raagam :*

மாதர்மடப்பிடியும்மட அன்னமுமன்னதோர்
நடையுடைம்மலைமகள்துணையெனமகிழ்வர்
பூதஇனப்படைநின்றிசைபாடவுமாடுவர்
அவர்படர்சடைந்நெடுமுடியதொர்புனலர்
வேதமொடேழிசைபாடுவராழ்கடல்வெண்டிரை
யிரைந்நுரைகரைபொருதுவிம்மிநின்றயலே
தாதவிழ்புன்னைதயங்குமலர்ச்சிறைவண்டறை
யெழில்பொழில்குயில்பயில்தருமபுரம்பதியே. 1

மாதர் மடப்பிடியும் மடஅன்னமும் அன்னது ஓர்
நடை உடை(ம்) மலைமகள் துணை என மகிழ்வர்,
பூதஇனப்படை நின்று இசை பாடவும் ஆடுவர்,
அவர் படர்சடை(ந்) நெடுமுடியது ஓர் புனலர்,
வேதமொடு ஏழ்இசை பாடுவர் - ஆழ்கடல் வெண்திரை
இரை(ந்) நுரை கரை பொருது, விம்மி நின்று, அயலே
தாது அவிழ் புன்னை தயங்கு மலர்ச் சிறைவண்டு அறை
எழில் பொழில் குயில் பயில் தருமபுரம்பதியே.

mAtar maTappiTiyum maTa an2n2amum an2n2atu Or
naTai uTai(m) malaimakaL tuNai en2a makizvar,
pUta in2appaTai nin2Ru icai pATavum ATuvar,
avar paTar caTai(n) neTumuTiyatu or pun2alar,
vEtamoTu Ezicai pATuvar--AzkaTal veNtirai
irai(n) nurai karai porutu, vimmi nin2Ru, ayalE
tAtu aviz pun2n2ai tayagku malarc ciRaivaNTu aRai
ezil pozil kuyil payil tarumapurampatiyE.

**பொருள்:** திருத்தருமபுரத்தைத் தமது பதியாகக் கொண்டு வீற்றிருக்கும் சிவபெருமான், இளம் பெண் யானையையும் இள அன்னத்தையும் போன்ற பெருமித, மென்மையான நடையினை உடைய மலைமகளான உமையம்மையைத் தமது துணைவியாகக் கொண்டு மகிழ்ந்திருப்பவர். இவர் பூதப் படைகள் நின்று இசைபாட திருநடனம் ஆடுபவர். விரிந்த சடைகளை உடைய நீண்ட முடிமீது கங்கையை அணிந்திருப்பவர். வேதகீதங்களையும் ஏழிசைகளையும் பாடுபவர். இந்தப் பதியில் ஆழ்கடலில் வெண்மையான அலைகள் ஆரவாரத்துடன் நுரைகளோடு கரையில் மோதுகின்றன. அந்தக் கடற்கரையில் வளர்ந்து நிற்கும் புன்னை மரங்களில் பூத்த மகரந்தம் பொருந்திய மலர்களில் வண்டுகள் பாடுகின்றன. அழகிய பொழில்களில் குயில்கள் கூவுகின்றன..

**குறிப்புரை:** மலைமகளைத் துணையாகக் கொண்டு மகிழ்ந்தவரும், பூதப்படை இசைபாட ஆடுபவரும், கங்கைச் சடையரும், வேதத்தையும் இசையையும் பாடுபவரும் ஆகிய இறைவர் இடம் தருமபுரம் என்கின்றது. பிடி – பெண் யானை. உமாதேவியின் பெருமித நடைக்குப் பெண்யானையும், நடையின் மென்மைக்கு அன்னமும் உவமமாயிற்று. தருமபுரம் நெய்தனிலச் சார்புடையதாதலின் புன்னை கூறப்பட்டது.

Lord Civan rejoices in having Paarvathi Devi as His helpmate consort. Her walking steps coincide with the step of a young and alluring female elephant as well that of young swan. He dances while His goblin hosts stand around and recite musical songs. He sustains in His long and broad matted hair the river Ganges. He Himself sings the Vedas in seven different modes. This Civan's place of residence is Thiru-th-daruma-puram. Here the white waves in the nearby deep sea, are roaring and dash against the shores with all the foam. In the surrounding place the Alexandrian laurel trees flourish with full blossomed flowers with pollen grains, are flourishing honeybees humming and flying, reach these flowers. The attractive Indian cuckoos are cooing in the groves. These two alluring notes are heard all around, to the enjoyment of the people in this city. Such fertile and famed city is Thiru-th-daruma-puram.

Note: The comparison of elephant's walking is to reveal her greatness; while that of swan is for her softness in nature.

பொங்குநடைப்புகலில்விடையாமவர்ஊர்திவெண்
பொடியணிதடங்கொள்மார்புபூணநூல்புரள
மங்குலிடைத்தவழும்மதிசூடுவராடுவர்
வளங்கிளர்புனலரவம்வைகியசடையர்
சங்குகடற்றிரையாலுதையுண்டுசரிந்திரிந்
தொசிந்தசைந்திசைந்துசேரும்வெண்மணற்குவைமேல்
தங்குகதிர்ம்மணிநித்திலமெல்லிருளொல்கநின்
றிலங்கொளிந்நலங்கெழில்தருமபுரம்பதியே. 2

பொங்கும் நடைப் புகல் இல் விடைஆம் அவர் ஊர்தி, வெண்-
பொடி அணி தடம் கொள் மார்பு பூணநூல் புரள,
மங்குல் இடைத் தவழும் மதி சூடுவர், ஆடுவர்,
வளம் கிளர்புனல் அரவம் வைகிய சடையர் -
சங்கு கடல்-திரையால் உதையுண்டு, சரிந்து இரிந்து
ஒசிந்த அசைந்து, இசைந்து சேரும் வெண்மணல்குவைமேல்
தங்கு கதிர்(ம்) மணிநித்திலம் மெல்இருள் ஒல்க நின்று,
இலங்கு ஒளி(ந்) நலங்கு எழில்-தருமபுரம்பதியே.

pogkum naTaip pukal il viTai Am avar Urti, veN–
poTi aNi taTam koL mArpu pUNanUl puraLa,
magkul iTait tavazum mati cUTuvar, ATuvar,
vaLam kiLarpun2al aravam vaikiya caTaiyar-
cagku kaTal-tiraiyAl utaiyuNTu, carintu irintu,
ocintu acaintu, icaintu cErum veNmaNal kuvaimEl
tagku katir(m) maNi nittilam mel iruL olka nin2Ru,
ilagku oLi(n) nalagku ezil-tarumapuram patiyE.

**பொருள்:** சிவபெருமானார் தமது ஊர்தியாக, சினம் பொங்கிய நடையும் உவமை சொல்ல முடியாததாயும் உள்ள விடையை வைத்திருப்பவர். திருநீறு அணிந்த அகன்ற மார்பில் பூணுநூல் துலங்க, ஆகாயத்தில் தவழும் பிறைமதியைச் சூடி ஆடுபவர். வளமை தரும் கங்கையும் கிளர்ந்து எழும் அரவமும் தங்கும் சடையை உடையவர். இப்பெருமான் எழுந்தருளி இருக்கும் பதியானது திருத்தருமபுரம் ஆகும். இப்பதியில், கடல் அலைகளால் அலைக்கப்பட்ட சங்குகள், சரிந்தும், இரிந்தும், ஒருந்தும், அசைந்தும், இசைந்துமாக வெண்மையான மணல் குவியல்கள் மேல் தங்குகின்றன. அங்கு அவை ஒளிமிகுந்த முத்துக்களை ஈனுகின்றன. அந்த ஒளியால் மெல்லிய இருள் அகன்று, இந்தப் பதியானது ஒளியால் மிளிர்கின்றது.

**குறிப்புரை:** ஊர்தி விடையாம் நீறணிந்த மார்பில் பூணுநூல் புரள மதிசூடுவர், ஆடுவர், கங்கையும் அரவும் தங்கிய சடையர் பதி தருமபுரம் என்கின்றது. பொங்கிய நடையோடு, வேறு அடைக்கலத்

தானமில்லாத விடையாம் அவர் வாகனம் என்பதாம். மங்குல் – ஆகாயம். சங்கு கடல் அலையால் மோதப்பெற்று மணற் குவியல்மேல் தங்கியதால் 'ஈனப்பெற்ற முத்துக்கள் இருளோட்டி விளங்கும் நலங்கெழுமும் தருமபுரம்' என்க. சங்கு சரிந்து இரிந்து ஒசிந்து அசைந்து இசைந்து சேரும் மணல் எனக் கூட்டுக. இது மணல் மேட்டின்மேல் சங்கு ஏறிய அருமைப்பாட்டை அறிவிக்கின்றது.

Lord Civan owns a peerless bull for His transport, a bull that in all fury moves in majestic steps. In His broad chest He smears the holy ashes, over which the sacred thread rolls as waves. The crescent moon normally crawls in the sky. Civan dances sustaining this moon on His head. Along with the snake, He entertains in His matted hair the river Ganges which confers prosperity on all. This Civan's resting place is Thiru-th-daruma-puram. In the sea adjoining this town the chanks (*சங்கு* – Shells) brought by the waves, dashes against the sand dunes and drops a good number of chanks. These chanks move (*சரிந்து*) here and there creating a sound (*இசைந்து*) and start shaking (*அசைந்து*); then they crack (*இரிந்து*) and finally they break (*ஒசிந்து*) and deliver the pure white pearls over the sand dunes. The dazzling brightness of these pearls drives away the darkness. Bright light spreads all over the area.

விண்ணுறுமால்வரைபோல்விடையேறுவராறுசூ
    டுவர்விரிசுரியொளிகொள்தோடுநின்றிலங்கக்
கண்ணுறநின்றொளிருங்கதிர்வெண்மதிக்கண்ணியர்
    கழிந்தவரிழிந்திடும்முடைதலைகலனாப்
பெண்ணுறநின்றவர்தம்முருவம்மயன்மால்தொழவ்
    வரிவையைப்பிணைந்திணைந்தணைந்ததும்பிரியார்
தண்ணிதழ்முல்லையொடெண்ணிதழ்மௌவல்மருங்கலர்
    கருங்கழிந்நெருங்குநல்தருமபுரம்பதியே. 3

விண்உறு மால்வரை போல் விடை ஏறுவர், ஆறு
    சூடுவர், விரி சுரி ஒளி கொள் தோடு நின்று இலங்கக்
கண்உற நின்று ஒளிரும் கதிர் வெண்மதிக்கண்ணியர்,
    கழிந்தவர் இழிந்திடும் முடைதலை கலனாப்
பெண் உற நின்றவர், தம் உருவம்(ம்) அயன் மால் தொழ(வ்)
    அரிவையைப் பிணைந்து இணைந்து அணைந்ததும் பிரியார் -
தண்இதழ் முல்லையொடு, எண்இதழ் மௌவல், மருங்கு அலர்
    கருங்கழி(ந்) நெருங்கு நல் - தருமபுரம்பதியே.

viN uRu mAlvarai pOl viTai ERuvar, ARu
cUTuvar, viri curi oLi koL tOTu nin2Ru ilagkak
kaN uRa nin2Ru oLirum katir veNmatikkaNNiyar,
kazintavar izintiTum(m) uTaitalai kalan2Ap
peN uRa nin2Ravar, tam uruvam(m) ayan2 mAl toza(v)
arivaiyaip piNaintu iNaintu aNaintatum piriyAr--
taN itaz mullaiyoTu, eN itaz mauval, marugku alar
karugkazi(n) nerugku nal-tarumapurampatiyE.

**பொருள்:** சிவபெருமான் வானளாவி நிற்கும் பெரிய மலை போன்ற விடை ஊர்தியில் ஏறிவருபவர். கங்கையை அணிந்தவர். விரிந்தும் மிளிர்ந்தும் சுருண்டும் ஒளியால் விளங்கும் தோடு காதில் திகழ, கண்ணைக் கவரும் வெண்மையாக ஒளிரும் பிறைமதியைத் தலையில் சூடியிருப்பவர். முடைநாற்றம் நாறும் தலையோட்டை உண்கலனாகக் கொண்டிருப்பவர். பிரமனும் திருமாலும் தொழுமாறு விளங்குபவர். உமையம்மையைக் கூடிப் பிணைந்தும், இணைந்தும், அணைத்தும் தம்திருமேனியின் ஒருகூறாகவும் கொண்டிருப்பவர். இப்பெருமான் எழுந்தருளி இருக்கும் பதியானது திருத்தருமபுரம் ஆகும். இத்தலத்தில் கரிய உப்பங்கழிகள் நிறைந்து இருக்கின்றன. குளிர்ந்த இதழ்களை உடைய முல்லை மலர்களும், எட்டு இதழ்களை உடைய மல்லிகை மலர்களும் மணம் வீசுகின்றன.

**குறிப்புரை:** விண்ணளாவிய மலைபோன்ற விடையை ஊர்தியாக ஏறுவர்; கங்கையைச் சூடுவர்; தோடு விளங்க, பிறைக்கண்ணி சூடுவர்; பிரமகபாலத்தை உண்கலனாகக் கொண்டு, பெண் பாதியாக நின்றவர்; தம் வடிவத்தை அயனும் மாலும் தொழ நின்றவர். இவர் பதி தருமபுரம் என்கின்றது. மால்வரை – பெரிய மலை. கண்ணியர் – தலை மாலையை உடையவர். கழிந்தவர் – இறந்தவர். மௌவல் – மல்லிகை. மல்லிகைக்கு எட்டிதழ் உண்மை உணர்த்தப் பெறுகின்றது.

Lord Civan rides on His bull vehicle and moves around. This bull is sky tall and appears like a big mountain. He entertains the river Ganges on His matted hair. His expanded ear-ring is round and conspicuously dazzling in His ear lobe. He sustains the crescent moon on His matted hair. This moon is bright and dazzling so as to attract the eyes. He holds the skull as His food bowl which stenches. He embraces His consort Umaa Devi, gets united with her, and keeps her on the left half of His body and never parts with her. He exposed His visible form to enable Brahma and Vishnu to worship Him. This Civan is entempled in the famed city of Thiru-th-daruma-puram. In this

town the Arabian jasmine having cool petals as well as the Himalayan heart leaved smooth jasmine flowers having eight petals blossom and spread their fragrance all around. There are plenty of saltpans in this town. Such a famed town is Thiru-th-daruma-puram.

வாருறுமென்முலைநன்னுதலேழையொடாடுவர்
வளங்கிளர்விளங்குதிங்கள்வைகியசடையர்
காருறநின்றலரும்மலர்க்கொன்றையங்கண்ணியர்
கடுவ்விடைகொடிவெடிகொள்காடுறைபதியர்
பாருறவிண்ணுலகம்பரவப்படுவோரவர்
படுதலைப்பலிகொளல்பரிபவந்நினையார்
தாருறுநல்லரவம்மலர்துன்னியதாதுதிர்
தழைபொழில்மழைந்நுழைதருமபுரம்பதியே. 4

வார் உறு மென்முலை நன்நுதல் ஏழையொடு ஆடுவர்,
வளம் கிளர் விளங்கு திங்கள் வைகிய சடையர்,
கார் உற நின்று அலரும் மலர்க்கொன்றைஅம்கண்ணியர்,
கடு(வ்) விடை கொடி, வெடிகொள் காடு உறை பதியர்,
பார் உற விண்ணுலகம் பரவப்படுவோர், அவர்
படுதலைப் பலி கொளல் பரிபவம் நினையார் -
தார் உறு நல் அரவம் மலர் துன்னிய தாது உதிர்
தழை பொழில் மழை(ந்) நுழை தருமபுரம்பதியே.

vAr uRu men2mulai nan2nutal EzaiyoTu ATuvar,
vaLam kiLar viLagku tigkaL vaikiya caTaiyar,
kAr uRa nin2Ru alarum malarkkon2Rai am kaNNiyar,
kaTu(v) viTai koTi, veTikoL kATu uRai patiyar,
pAr uRa viNNulakam paravapaTuvOr, avar
paTutalaip pali koLal paripavam nin2aiyAr--
tAr uRu nal aravam malar tun2n2iya tAtu utir
tazai pozil mazai(n) nuzai tarumapurampatiyE.

*பொருள்:* சிவபெருமான் கச்சணிந்த மென்மையான தனங்களை உடைய உமையம்மையுடன் திருநடனம் ஆடுபவர். வளமையைக் கொடுக்கும் ஒளியை உடைய பிறைமதியைச் சூடியிருப்பவர். கார்காலத்தே மலரும் கொன்றை மாலையைச் சூடியவர். விரைந்து செல்லும் விடையைக் கொடியாகக் கொண்டிருப்பவர். அச்சந்தரும் இடுகாட்டைத் தமது இருப்பிடமாகக் கொண்டிருப்பவர். மண்ணுலகத்தாராலும் விண்ணுலகத்தாராலும் வணங்கப்படுபவர். கபாலத்தில் பலிகொள்வதைக் கீழ்மையாகக் கருதாதவர். பாம்பை மாலையாக அணிந்திருப்பவர். இப்பெருமான் எழுந்தருளி இருக்கும் பதியானது,

